பண்ணிலாவுமறைபாடலினானிறைசேரும்வளையங்கைப்
பெண்ணிலாவுடையான்பெரியார்கழலென்றுந்தொழுதேத்த
வுண்ணிலாவியவர்சிந்தையுணீங்காவொருவற்கிடமென்பர்
மண்ணிலாவுமடியார்குடிமைத்தொழில்மல்கும்புகலூரே. (௩)

நீரின்மல்குசடையன்விடையன்னடையார்தம்மரண்மூன்றுஞ்
சீரின்மல்குமலையேசிலையாகமுனிந்தன்றுலகுய்யக்
காரின்மல்குகடனஞ்சமதுண்டகடவுள்ளிடமென்ப
ரூரின்மல்கிவளர்செம்மையினாலுயர்வெய்தும்புகலூரே. (௪)

செய்யமேனிவெளியபொடிப்பூசுவர்சேருமடியார்மேற்
பையநின்றவினைபாற்றுவர்போற்றிசைத்தென்றும்பணிவாரை
மெய்யநின்றபெருமானுறையுமிடமென்பரருள்பேணிப்
பொய்யிலாதமனத்தார்பிரியாதுபொருந்தும்புகலூரே. (௫)

கழலினோசைசிலம்பினொலியோசைகலிக்கப்பயில்கானிற்
குழலினோசைகுறட்பாரிடம்போற்றக்குனித்தாரிடமென்பர்
விழவினோசையடியார்மிடைவுற்றுவிரும்பிப்பொலிந்தெங்கும்
முழவினோசைமுந்நீரயர்வெய்தமுழங்கும்புகலூரே. (௬)

வெள்ளமார்ந்துமிளிர்செஞ்சடைதன்மேல்விளங்கும்மதிசூடி
யுள்ளமார்ந்தவடியார்தொழுதேத்தவுகக்குமருள்தந்தெங்
கள்ளமார்ந்துகழியப்பழிதீர்த்தகடவுட்கிடமென்பர்
புள்ளையார்ந்தவயலின்விளைவாலவளமல்கும்புகலூரே. (௭)

தென்னிலங்கையரையன்வரைபற்றியெடுத்தான்முடிதிண்டோள்
தன்னிலங்குவிரலானெரிவித்திசைகேட்டன்றருள்செய்த
மின்னிலங்குசடையான்மடமாதொடுமேவுமிடமென்பர்
பொன்னிலங்குமணிமாளிகைமேன்மதிதோயும்புகலூரே (௮)

நாகம்வைத்தமுடியானடிகைதொழுதேத்துமடியார்க
ளாகம்வைத்தபெருமான்பிரமனொடுமாலுந்தொழுதேத்த
வேகம்வைத்தவெரியாய்மிகவோங்கியவெம்மானிடம்போலும்
போகம்வைத்தபொழிலின்னிழலான்மதுவாரும்புகலூரே. (௯)

செய்தவத்தர்மிகுதேரர்கள்சாக்கியர்செப்பிற்பொருளல்லாக்
கைதவத்தர்மொழியைத்தவிர்வார்கள்கடவுள்ளிடம்போலுங்
கொய்துபத்தர்மலரும்புனலுங்கொடுதூவித்துதிசெய்து
மெய்தவத்தின்முயல்வாருயர்வானகமெய்தும்புகலூரே (௧௦)

புற்றில்வாழுமரவம்மரையார்த்தவன்மேவும்புகலூரைக்
கற்றுநல்லவர்காழியுண்ஞானசம்பந்தன்றமிழ்மாலை
பற்றியென்றுமிசைபாடியமாந்தர்பரமனடிசேர்ந்து
குற்றமின்றிக்குறைபாடொழியாப்புகழோங்கிப்பொலிவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

சுவாமிபெயர் - அக்கினீசுவரர் - தேவியார் - கருந்தார்க்குழலியம்மை.

## திருவலிதாயம் - பண் - நட்டபாடை.

### திருச்சிற்றம்பலம்.

பத்தரோடுபலரும்பொலியம்மலரங்கைப்புனல்தூவி
யொத்தசொல்லியுலகத்தவர்தாந்தொழுதேத்தவுயர்சென்னி
மத்தம்வைத்தபெருமான்பிரியாதுறைகின்றவலிதாயஞ்
சித்தம்வைத்தவடியாரவர்மேலடையாமற்றிடர்நோயே (௧)

படையிலங்குகரமெட்டுடையானபடிறாகக்கனலேந்திக்
கடையிலங்குமனையிற்பலிகொண்டுணுங்கள்வனுறைகோயில்
மடையிலங்குபொழிலின்னிழல்வாய்மதுவீசும்வலிதாயம்
அடையநின்றவடியார்க்கடையாவினையல்லற்றுயர்தானே. (௨)

ஐயனொய்யனணியனபிணியில்லவரென்றுந்தொழுதேத்தச்
செய்யனவெய்யபடையேந்தவல்லான்றிருமாதோடுறைகோயில்
வையமவந்துபணியப்பிணிதீர்த்துயர்கின்றவலிதாயம்
உய்யும்வண்ணநினைமினினைந்தாலவினைதீருநலமாமே (௩)

[illegible]

[illegible] (௫)

ஊனியன்றதலையிற்பலிகொண்டுலகத்துள்ளவரேத்தக்
கானியன்றகரியின்னுரிபோர்த்துழல்கள்வன்சடைதன்மேல்
வானியன்றபிறைவைத்தவெம்மாதிமகிழும்வலிதாயந்
தேனியன்றநறுமாமலர்கொண்டுநின்றேத்தத்தெளிவாமே. (௬)

கண்ணிறைந்தவிழியின்னழலால்வருகாமனுயிர்வீட்டிப்
பெண்ணிறைந்தவொருபால்மகிழ்வெய்தியபெம்மானுறைகோயில்
மண்ணிறைந்தபுகழ்கொண்டடியார்கள்வணங்கும்வலிதாயத்
துண்ணிறைந்தபெருமான்கழலேத்தநம்முன்னைப்பங்கறியாமே (௭)

கடலினஞ்சமமுதுண்டிமையோர்தொழுதேத்தநடமாடி
யடலிலங்கையரையன்வலிசெற்றருளம்மானுறைகோயில்
மடலிலங்குகமுகின்பலவின்மதுவிம்மும்வலிதாயம்
முடலிலங்குமுயிருள்ளளவுந்தொழவுள்ளத்துயர்போமே. (௮)

பெரியமேருவரையேசிலையாமலைவுற்றாரெயில்மூன்று
மெரியவெய்தவொருவன்னிருவர்க்கறிவொண்ணாவடிவாகு

## தேவாரப்பதிகங்கள்.

யாறார்சுவையேழோசையொடெட்டுத்திசைதானாய்
வேறாயுடனானானிடம்வீழிமிழலையே

வம்மின்னடியீர்நாண்மலரிட்டுத்தொழுதுய்ய
வும்மன்பினொடெம்மன்புசெய்தீசனுறைகோயில்
மும்மென்றிசைமுரல்வண்டுகள்கொண்டித்திசையெங்கும்
விம்மும்பொழில்சூழ்தண்வயல்வீழிமிழலையே.

பண்ணும்பதமேழும்பலவோசைத்தமிழவையு
முண்ணின்றதோர்சுவையுமுறுதாளத்தொலிபலவு
மண்ணும்புனலுயிரும்வருகாற்றுஞ்சுடர்மூன்றும
விண்ணும்முழுதானானிடம்வீழிமிழலையே

ஆயாதனசமயம்பலவறியாதவன்னெறியின
ளாயானவனுயிர்கட்குமன்றலையானவன்மறைமுந்
தீயானவன்சிவனெம்மிறைசெல்வத்திருவாரூர்
மேயானவனுறையும்மிடம்வீழிமிழலையே.

கல்லானிழற்கீழாயிடர்காவாயெனவானோ
ரெல்லாமொருதேராயயன்மறைபூட்டிநின்றுய்ப்ப
வல்வாயெரிகாற்றீர்க்கரிகோல்வாசுகிநாண்கல்
வில்லாலெயிலெய்தானிடம்வீழிமிழலையே.

கரத்தான்மலிசிரத்தான்கரியுரித்தாயதொர்படத்தான
புரத்தார்பொடிபடத்தன்னடிபணிமூவர்கட்கோவா
வரத்தான்மிகவளித்தானிடம்வளர்புன்னைமுத்தரும்பி
விரைத்தாதுபொன்மணியீன்றணிவீழிமிழலையே.

முன்னிற்பவரில்லாமுரணரக்கன்வடகயிலை
தன்னைப்பிடித்தெடுத்தான்முடிதடந்தோளிறவூன்றிப்
பின்னைப்பணிந்தேத்தப்பெருவாள்பேரொடுகொடுத்த
மின்னிற்பொலிசடையானிடம்வீழிமிழலையே.

பண்டேழுலகுண்டானவைகண்டானுமுன்னறியா
வொண்டீயுருவானானுறைகோயில்நிறைபொய்கை
வண்டாமரைமலர்மேன்மடவன்னந்நடைபயில
வெண்டாமரைசெந்தாதுதிர்வீழிமிழலையே.

மசங்கற்சமண்மண்டைக்கையர்குண்டக்குணமிலிக
ளிசங்கும்பிறப்பறுத்தானிடமிருந்தேன்களித்திரைத்துப
பசும்பொற்கிளிகளிமஞ்ஞைகளொளிகொண்டெழுபகலோன
விசும்பைப்பொலிவிக்கும்பொழில்வீழிமிழலையே

வீழிம்மிழலைம்மேவியவிகிர்தன்றனைவினைசோ
காழிந்நகர்க்கலைஞானசம்பந்தன்றமிழ்பத்தும்

எண்ணார்தருபயனாயயனவனாய்மிகுகலையாய்ப்
பண்ணார்தருமறையாயுயர்பொருளாயிறையவனாய்க்
கண்ணார்தருமுருவாகியகடவுள்ளிடமெனலாம்
விண்ணோரொடுமண்ணோர்தொழுவிரிநீர்வியலூரே. (௫)

வசைவிற்கொடுவருவேடுவனவனாய்நிலையறிவான்
றிசையுற்றவர்காணச்செருமலைவானிலையவனை
யசையப்பொருதசையாவணமவனுக்குயர்படைகள்
விசையற்கருள்செய்தானிடமவிரிநீர்வியலூரே (௬)

மானாரரவுடையானிரவிடையான்பகல்நட்ட
மூனார்தருமுயிரானுயர்விசையானவிளைபொருள்கள்
தானாகியதலைவன்னெனநினைவாரவரிடமா
மேனாடியவிண்ணோர்தொழுமவிரிநீர்வியலூரே. (௭)

பொருவாரெனக்கெதிராரெனப்பொருப்பையெடுத்தான்றன்
கருமால்வரைகரந்தோளுரங்கதிர்நீண்முடிநெரிந்து
சிரமாயினகதறச்செறிகழல்சேர்திருவடியின்
விரலாலடர்வித்தானிடமவிரிநீர்வியலூரே. (௮)

வளம்பட்டலர்மலர்மேலயன்மாலுமொருவகையா
லளம்பட்டறிவொண்ணாவகையழலாகியவண்ணன்
லொளம்பட்டெழுதழல்தூணதனடுவேயொருவுருவம்
விளம்பட்டருள்செய்தானிடமவிரிநீர்வியலூரே. (௯)

தடுக்காலுடன்மறைப்பாரவர்தவர்சீவரமூடிப்
பிடகேயுரைசெய்வாரொடுபேணாரமர்பெரியோர்
கடற்சேர்தருவிடமுண்டமுதமரர்க்கருள்செய்த
விடைச்சேர்தருகொடியானிடமவிரிநீர்வியலூரே. (௧௦)

விளங்குமபிறைசடைமேலுடைவிகிர்தன்வியலூரைத்
தளங்கொண்டதொர்புகலித்தகுதமிழ்ஞானசம்பந்தன்
றுளங்கில்தமிழ்பரவித்தொழுமடியாரவரென்றும்
விளங்கும்புகழதனோடுயர்விண்ணுலுமுடையாரே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

இது சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - யோகாநந்தேசுவரர், தேவியார் - சவுந்தரநாயகியம்மை.

## திருக்கொடுங்குன்றம் - பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

வானிற்பொலிவெய்துமமழைமேகங்கிழித்தோடிக்
கூனற்பிறைசேருங்குளிர்சாரற்கொடுங்குன்றம்

ஆனிற்பொலிவைந்துமமர்ந்தாடியுலகேத்தத்
தேனிற்பொலிமொழியாளொடுமேயான்திருநகரே. (க)

மயில்புல்குதண்பெடையோடுடனாடும்வளர்சாரற்
குயிலின்னிசைபாடுங்குளிர்சோலைக்கொடுங்குன்றம்
அயில்வேல்மலிநெடுவெஞ்சுடரனலேந்திநின்றாடி
எயிலார்படவெய்தானவன்மேயவெழினகரே. (உ)

மிளிரும்மணிபைம்பொன்னொடுவிரைமாமலருந்திக்
குளிரும்புனல்பாயுங்குளிர்சாரற்கொடுங்குன்றம்
கிளருங்கங்கையொடுவெண்மதிகெழுவுஞ்சடைதன்மேல்
வளர்கொன்றையுமதமத்தமும்வைத்தானவளநகரே (ங)

பருமாமதகரியோடரியிழியும்விரிசாரற்
குருமாமணிபொன்னோடிழியருவிக்கொடுங்குன்றம்
பொருமாவெயில்வரைவிற்றருகணையிற்பொடிசெய்த
பெருமானவனுமையாளொடுமேவும்பெருநகரே. (ச)

மேகத்திடிகுரலவெங்குரலினவெருவிவரையிழியுஞ்
சூகைக்குலமோடித்திரிசாரற்கொடுங்குன்றம்
நாகத்தொடுமிளவெண்பிறைசூடுநலமங்கை
பாகத்தவனிமையோர்தொழமேவும்பழநகரே (ரு)

கைம்மாமதகரியின்னினமிடியின்குரலதிரக்
கொய்ம்மாமலர்ச்சோலைபுகமண்டுங்கொடுங்குன்றம்
அம்மானெனவுள்கித்தொழுவார்கட்கருள்செய்யும்
பெம்மானவனிமையோர்தொழமேவும்பெருநகரே. (சா)

மரவந்தொடுமணமாதவிமவ்வல்லதுவின்ட
குரவந்தொடுவிரவும்பொழில்சூழ்ந்தகொடுங்குன்றம்
அரவத்தொடுமிளவெண்பிறைவிரவும்மலர்க்கொன்றை
நிரவச்சடைமுடிமேலுடன்வைத்தானெடுநகரே (எ)

முட்டாமுதுகரியின்னினமுதுவேய்களைமுனிந்து
குட்டாச்சுனையவைமண்டிநின்றாடுங்கொடுங்குன்றம்
ஒட்டாவரக்கன்றன்முடியொருபஃதவையுடனே
பிட்டானவனுமையாளொடுமேவும்பெருநகரே. (அ)

அறையும்மரிகுரலோசையையஞ்சியடுமானை
குறையும்மனமாகிமுழைவைகுங்கொடுங்குன்றம்
மறையும்மவையுடையானெனநெடியானெனவிவர்க
ளிறையும்மறிவொண்ணாதவன்மேயவெழினகரே. (கூ)

மத்தக்களிறாளிவ்வரவஞ்சிமலைதன்னைக்
குத்திப்பெருமுழைதன்னிடைவைகுங்கொடுங்குன்றம்

புத்தரொடுபொல்லாமனச்சமணர்புறங்கூறப்
பத்தர்க்கருள்செய்தானவன்மேயபழுநகே. (௧௦)

கூனற்பிறைசடைமேன்மிகவுடையான்கொடுங்குன்றைக்
கானற்கழுமலமாநகர்த்தலைவன்னலகவுணி
ஞானத்துயர்சம்பந்தனலங்கொள்தமிழ்வல்லா
ரூனத்தொடுதுயர்தீர்ந்துலகேத்துமெழிலோரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

இது பாண்டிநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - கொடுங்குன்றேசுவரர், தேவியார் - அமுதவல்லி.

## திருநெய்த்தானம் - பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்

மையாடியகண்டன்மலைமகள்பாகமதுடையான்
கையாடியகேடில்கரியுரிமூடியவொருவன்
செய்யாடியகுவளைம்மலர்நயனத்தவளோடும்
நெய்யாடியபெருமானிடநெய்த்தானமெனீரே (௧)

பறையும்பழிபாவம்படுதுயரம்பலதீரும்
பிறையும்புனலரவும்படுசடையெம்பெருமானூ
ரறையும்புனல்வருகாவிரியலைசேர்வடகரைமேல்
நிறையும்புனைமடவார்பயில்நெய்த்தானமெனீரே (௨)

பேயாயினபாடப்பெருநடமாடியபெருமான்
வேயாயினதோளிக்கொருபாகமமிகவுடையான்
தாயாகியவுலகங்களைநிலைபேறுசெய்தலைவ
னேயாடியபெருமானிடநெய்த்தானமெனீரே (௩)

சுடுநீறணியண்ணல்சுடர்சூலமனலேந்தி
நடுநள்ளிருணடமாடியநம்பனுறையிடமாங்
கடிவாளிளவரவாடுமிழ்கடனஞ்சமதுண்டா
னெடுவாளைகள்குதிகொள்ளுயர்நெய்த்தானமெனீரே (௪)

நுகராரமொடேலம்மணிசெம்பொன்னுரையுந்திப்
பகராவருபுனற்காவிரிபரவிப்பணிந்தேத்தும்
நிகரான்மணலிடுதண்கரைநிகழ்வாயநெய்த்தான
நகரானடியேத்தந்நமைநடலையடையாவே (௫)

விடையார்கொடியுடையவ்வணல்வீந்தார்வெள்ளையெலும்பும்
உடையார்நறுமாலைச்சடையுடையாரவர்மேய
புடையேபுனல்பாயும்வயல்பொழில்சூழ்ந்தநெய்த்தான
மடையாதவரொன்றுமமருலகமடையாரே. (௬)

## திரு இடும்பாவனம் - பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்

மனமார்தருமடவாரொடுமகிழ்மைந்தர்கண்மலர்தூய்த்
தனமாதருசங்கக்கடல்வங்கத்திரளுந்திச்
சினமார்தருதிறல்வாளெயிற்றரக்கனமிகுகுன்றில்
இனமாதவரிறைவர்க்கிடமிடும்பாவனமிதுவே (க)

மலையார்தருமடவாளொருபாகம்மகிழ்வெய்தி
நிலையார்தருநிமலன்வலிநிலவும்புகழொளிசேர்
கலையார்தருபுலவோரவர்காவலமிகுகுன்றில்
இலையார்தருபொழில்சூழ்தருமிடும்பாவனமிதுவே. (உ)

சீலம்மிகுசித்தத்தவர்சிந்தித்தெழுமெந்தை
ஞாலம்மிகுகடல்சூழ்தருமுலகத்தவர்நலமார்
கோலம்மிகுமலர்மென்முலைமடவார்மிகுகுன்றில்
ஏலங்கமழ்பொழில்சூழ்தருமிடும்பாவனமிதுவே. (ங)

பொழிலார்தருகுலைவாழைகளெழிலார்திகழ்போழ்தின்
தொழிலானமிகுதொண்டரவர்தொழுதாடியமுன்றிற்
குழலார்தருமலர்மென்முலைமடவார்மிகுகுன்றில்
எழிலார்தருமிறைவர்க்கிடமிடும்பாவனமிதுவே (ச)

பந்தார்விரலுமையாளொருபங்கர்கங்கைமுடிமேற்
செந்தாமரைமலர்மல்கியசெழுநீர்வயற்கரைமேற்
கொந்தார்மலர்புன்னைமகிழ்குரவங்கமழ்குன்றில்
எந்தாயெனவிருந்தானிடமிடும்பாவனமிதுவே (ரு)

நெறிநீர்மையர்நீள்வானவர்நினையுந்நினைவாகி
அறிநீர்மையிலெய்தும்மவர்க்கறியும்மறிவருளிக்
குறிநீர்மையர்குணமார்தருமணமார்தருகுன்றில்
எறிநீர்வயல்புடைசூழ்தருமிடும்பாவனமிதுவே (சா)

நீறேறியதிருமேனியர்நிலவும்முலகெல்லாம்
பாறேறியபடுவெண்டலைகையிற்பலிவாங்காக்
கூறேறியமடவாளொருபாகம்மகிழ்வெய்தி
யேறேறியவிறைவர்க்கிடமிடும்பாவனமிதுவே. (எ)

தேரார்தருதிகழ்வாளெயிற்றரக்கன்சிவன்மலையை
யோராதெடுத்தார்த்தான்முடியொருபஃதவைநெரித்துக்
கூரார்தருகொலைவாளொடுகுணநாமமுங்கொடுத்த
வீரார்தருமிறைவர்க்கிடமிடும்பாவனமிதுவே. (அ)

பொருளார்தருமறையோர்புகழ்விருந்தாபொலிமலிசேர்த்
தெருளார்தருசிந்தையொடுசந்தம்மலர்பலதூய்

மருளார்தருமாயனுமயன்காணாமயலெய்த
விருளார்தருகண்டர்க்கிடமிடும்பாவனமிதுவே. (௯)

தடுக்கையுடனிடுக்கித்தலைபறித்துச்சமணடப்பர்
உடுக்கைபலதுவர்க்கூறைகளுடம்பிட்டுழல்வாரும்
மடுக்கண்மலர்வயல்சேர்செந்நெல்மலிநீர்மலர்க்கரைமேல்
இடுக்கண்பலகளைவானிடமிடும்பாவனமிதுவே (௰)

கொடியார்நெடுமாடக்குன்றளூரிற்கரைக்கோல
விடியார்கடலடிவீழ்தருமிடும்பாவனத்திறையை
யடியாருடந்தணர்காழியுண்ஞானசம்பந்தன
படியார்சொன்னபாடல்சொலப்பறையும்வினைதானே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - சற்குணநாதர், தேவியார் - மங்களநாயகி

---

## திருநின்றியூர் - பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

சூலம்படைசுண்ணப்பொடிசாந்தஞ்சுடுநீறு
பாலம்மதிபவளச்சடைமுடிமேலதுபண்டைக்
காலன்வலிகாலினொடுபோக்கிக்கடிகமழும்
நீலம்மலர்ப்பொய்கைநின்றியூரினிலையோர்க்கே (௧)

அச்சமிலர்பாவமிலர்கேடுமிலரடியார்
நிச்சமுறுநோயுமிலர்தாமுந்நின்றியூரில்
நச்சம்மிடறுடையார்நறுங்கொன்றைநயந்தாளும்
பச்சமுடையடிகள்திருப்பாதம்பணிவாரே. (௨)

பறையின்னொலிசங்கின்னொலிபாங்காரவுமார
அறையும்மொலியெங்குமவையறிவாரவர்தம்மை
நிறையும்புனல்சடைமேலுடையடிகணின்றியூரில
உறையுமிறையல்லதெனதுள்ளமுணராதே. (௩)

பூண்டவ்வரைமார்பிற்புரிநூலன்விரிகொன்றை
ஈண்டவ்வதனோடும்மொருபான்மதியந்தனைத்
தீண்டும்பொழில்சூழ்ந்ததிருநின்றியதுதன்னில
ஆண்டகழல்தொழலல்லதுவறியாரவரறிவே. (௪)

குழலின்னிசைவண்டின்னிசைகண்டுகுயில்கூவும்
நிழலின்னெழில்தாழ்ந்தபொழில்சூழ்ந்தநின்றியூரில
அழலின்வலனங்கையதுவேந்தியனலாடுங்
கழலின்னொலியாடும்புரிகடவுள்களைகண்ணே. (௫)

மூரல்முறுவல்வெண்ணகையுடையாளொருபாகஞ்
சாரன்மதியதனோடுடன்சலவஞ்சடைவைத்த
வீரன்மலியழகார்பொழின்மிடையுந்திருநின்றி
யூரன்கழலல்லாதெனதுள்ளமுணராதே. (௬)

பற்றியொருதலைகையினிலேந்திப்பலிதேரும்
பெற்றியதுவாகித்திரிதேவர்பெருமானார்
சுற்றியொருவேங்கையதளோடும்பிறைசூடு
நெற்றியொருகண்ணார்நின்றியூரினிலையாரே. (௭-௮)

நல்லமலர்மேலானொடுஞாலமதுவுண்டான
அல்லரெனவாவரெனநின்றுமறிவரிய
நெல்லின்பொழில்சூழ்ந்தநின்றியூரினிலையாரெஞ்
செல்வரடியல்லாதெனசிந்தையுணராதே. (௯)

நெறியில்லவருபேராவகைநினையாநினைவொன்றை
யறிவில்சமணாதருரைகேட்டுமயராதே
நெறியில்லவர்குறிகண்ணினையாதேநின்றியூரின
மறியேந்தியகையானடிவாழ்த்துமதுவாழ்த்தே (௧௦)

குன்றமதுவெடுத்தானுடலந்தோளுநெரிவாக
நின்றங்கொருவிரலாலுறவைத்தானின்றியூரை
நன்றார்தருபுகலித்தமிழ்ஞானமிகுபந்தன
குன்றாத்தமிழ்சொல்லக்குறைவின்றிநிறைபுகழே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

இதுசோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - லட்சுமியீசுவரர், தேவியார் - உலகநாயகி.

---

## திருக்கழுமலம் - திருவிராகம்-பண்-நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

பிறையணிபடர்சடைமுடியிடைபெருகியபுனலுடையவனிறை
யிறையணிவளையிணைமுலையவளிணைவனதெழிலுடையிடவகை
கறையணிபொழினிறைவயலணிகழுமலமமர்கனலுருவின
னறையணிமலர்நறுவிரைபுல்குநலமலிகழல்தொழமருவுமே. (௧)

பிணிபடுகடல்பிறவிகளறலெளிதுளததுபெருகியதிரை
அணிபடுகழுமலமினிதமரனலுருவினனவிர்சடையிசை
தணிபடுகதிர்வளரிளமதிபுனைவனையுமைதலைவனைநிற
மணிபடுகறைமிடறனைநலமலிகழலிணைதொழன்மருவுமே. (௨)

வரியுறுபுலியதளுடையினன்வளர்பிறையொளிகிளர்கதிர்பொதி
விரியுறுசடைவிரைபுரைபொழில்விழவொலிமலிகழுமலமம

ரியுறுதிறவிறைவனதடியிரவொடுபகலபரவுவர்தம
தெரியுறுவினைசெறிகதிர்முனையிருள்கெடநனிநினைவெய்துமதே. (௩)

வினைகெடமனநினைவதுமுடிபெறினனிதொழுதெழுகுலமதி
புனைகொடியிடைபொருட்குபடுகளிறினதுரிபுதையுடலினன்
மனைகுடவயிறுடையனசிலவருகுறளபடையுடையவன்மலி
கனைகடலடைகழுமலமமர்கதிர்மதியினனதிகழலகளே. (௪)

தலைமதிபுனல்விடவரவிவைதலைமையதொருசடையிடையுட
னிலைமருவவொர்பிறமருளினனிழனமழுவினொடழலகலையினன்
மலைமருவியசிலைதனின்மதிளெரியுணமனமருவினநல
கலைமருவியபுறவணிதருகழுமலமினிதமர்தலைவனே. (௫)

வரைபொருதிழிதருவிகள்பலபருகொருகடல்வரிமணலிடை
கரைபொருதிரைபொலிகெழுமியகழுமலமமர்கனலுருவின
னரைபொருபுலியதளுடையினனடியிணைதொழவருவினையெனு
முரைபொடிபடவுறுதுயர்கெடவுயருலகெய்தலொருதலைமையே. (௬)

முதிருறுகதிர்வளரிளமதிசடையனெறநிறைதலைதனி
லுதிருறுமயிர்பிணைதவிர்தசையுடைபுலியதளிடையிருள்கடி
கதிருறுசுடரொளிகெழுமியகழுமலமமர்மழுமலிபடை
யதிருறுகழலடிகளதடிதொழுமறிவலதறிவறியமே. (௭)

கடலெனநிறநெடுமுடியவனடுதிறல்தெறவடிசரணென
வடனிறைபடையருளியபுகழரவனையினனணிகிளர்பிறை
விடநிறைமிடறுடையவன்விரிசடையவன்விடையுடையவனுமை
யுடனுறைபதிகடன்மறுகுடையுயர்கழுமலவியனகரமே. (௮)

கொழுமலருறைபதியுடையவனெடியவனெனவிவர்களுமவன்
விழுமையையளவறிகிலரிறைவினைபுணர்பொழிலணிவிழவமர்
கழுமலமமர்கனலுருவினனடியிணைதொழுமவரருவினை
யெழுமையுமிலநிலவகைதனிலெளிதிமையவர்வியனுலகமே. (௯)

அமையனதுவரிழுகியதுகிலணியுடையினரமணுருவர்கள்
சமையமுமொருபொருளெனுமவைசலநெறியனவறவுரைகளு
மிமையவர்தொழுகழுமலமமரிறைவனதடிபரவுவர்தமை
நமையலவினைநலனடைதலிலுயர்நெறிநனிநணுகுவர்களே. (௧௦)

பெருகியதமிழ்விரகினன்மலிபெயரவனுறைபிணர்திரையொடு
கருகியநிறவிரிகடலடைகழுமலமுறைவிடமெனநனி
பெருகியசிவனடிபரவியபிணைமொழியனவொருபதுமுடன்
மருவியமனமுடையவர்மதியுடையவர்விதியுடையவர்களே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

கழுமலம் என்பதும் - சீகாழிக்கொருபெயர்.

## திருவீழிமிழலை - திருவிராகம் - பண் - நட்டபாடை

திருச்சிற்றம்பலம்.

தடநிலவிய மலைநிறுவியொர் தழலுமிழ்தரு படவரவுகொ
டடலசுரரொ டமரர்களலை கடல்கடைவுழி யெழுமிகுசின
விடமடைதரு மிடறுடையவன் விடைமிசைவரு மவனுறைபதி
திடமலிதரு மறைமுறையுணர் மறையவர்நிறை திருமிழலையே. (க)

தரையொடுதிவி தலநலிதரு தகுதிறலுறு சலதரனது
வரையனதலை விசையொடுவரு திகிரியையரி பெறவருளினன்
உரைமலிதரு சுரநதிமதி பொதிசடையவ னுறைபதிமிகு
திரைமலிகடன் மணலணிதரு பெறுதிடர்வளர் திருமிழலையே (உ)

மலைமகடனை யிகழ்வதுசெய் மதியறுசிறு மனவனதுயர்
தலையினொடழ லுருவனகர மறமுனிவுசெய் தவனுறைபதி
கலைநிலவிய புலவர்களிடர் களைதருகொடை பயில்பவர்மிகு
சிலைமலிமதில் புடைதழுவிய திகழ்பொழில்வளர் திருமிழலையே (ங)

மருவலர்புர மெரியினின்மடி தரவொருகணை செலநிறுவிய
பெருவலியினன் நலமலிதரு கரனுரமிகு பிணமமர்வன
இருளிடையடை யுறவொடுநட விசையுறுபரன் இனிதுறைபதி
தெருவினில்வரு பெருவிழவொலி மலிதரவளர் திருமிழலையே (ச)

அணிபெறுவட மரநிழலினி லமர்வொடுமடி யிணையிருவர்கள்
பணிதரவறநெறிமறை யொடுமருளிய பரனுறைவிடம்
மணிபொருவரு மரகதநில மலிபுனலணை தருவயலணி
திணிபொழில்தரு மணமதுநுகர் அறுபதமுரல் திருமிழலையே (ரு)

வசையறுவலி வனசரவுரு வதுகொடுநினை வருதவமுயல்
விசையனதிற லமர்மலைமகள் அறிவுறுதிற லமர்மிடல்கொடு
அசைவில்படை யருள்புரிதரு மவனுறைபதி யதுமிகுதரு
திசையினிலுள மலர்குலவிய செறிபொழின்மலி திருமிழலையே (சு)

நலமலிதரு மறைமொழியொடு நதியுறுபுனல் புகையொளிமுதல்
மலரவைகொடு வழிபடுதிறன் மறையவனுயிர் அதுகொளவரு
சலமலிதரு மறலிதனுயிர் கெடவுதைசெய்த அரனுறைபதி
திலகமிதென வுலகுகள்புக ழுதருபொழிலணி திருமிழலையே. (எ)

அரனுறைதரு கயிலையைநிலை குலைவதுசெய்த தசமுகனது
கரமிருபது நெரிதரவிரல் நிறுவியகழ லடியுடையவன்
வரன்முறையுல கவைதருமலர் வளர்மறையவன் வழிவழுவிய
சிரமதுகொடு பலிதிரிதரு சிவனுறைபதி திருமிழலையே. (அ)

அயனொடுமெழி லமர்மலர்மகள் மகிழ்கணனள விடலொழியவொர்
பயமுறுவகை தழல்நிகழ்வதொர் படியுருவது வரவரன்முறை

கதமிகுகருவுருவொடுவுகிரிடைவடவரைகணகணவென
மதமிகுநெடுமுகனமர்வளைமதிதிகழெயிறதனுதிரிசை
யிதமமர்புவியதுநிறுவியவெழிலரிவழிபடவருள்செய்த
பதமுடையவனமர்சிவபுரநினைபவர்நிலவுவர்படியிலே (எ)

அசைவுறுதவமுயல்வினிலயனருளினில்வருவலிகொடுசிவ
னிசைகயிலையையெழுதருவகையிருபதுகரமவைநிறுவிய
நிசிசரன்முடியுடைதரவொருவிரலவணிகொளுமவனுறைபதி
திசைமலிசிவபுரநினைபவர்செழுநிலனினினிலைபெறுவரே (அ)

அடன்மலிபடையரியயனொடுமறிவரியதோரழலுருவுரு
சுடருருவொடுநிகழ்தரவவர்வெருவொடுதுதியதுசெயவெளி
விடமலிகளநுதலமர்கணதுடையுருவெளிபடுமவனகர்
திடமலிபொழிலெழில்சிவபுரநினைபவர்வழிபுவிதிகழுமே. (௯)

குணமறிவுகணிலையிலபொருளுரைமருவியபொருள்களுமில
திணமெனுமவரொடுசெதுமதிமிகுசமணருமலிதகவுதுகை
யுணலுடையவருணர்வருபரனுறைதருபதியுலகினினலை
கணமருவியசிவபுரநினைபவரெழிலுருவுடையவர்களே. (௰)

திகழ்சிவபுரநகர்மருவியசிவனடியிணைபணிசிரபுர
நகரிறைதமிழ்விரகனதுரைநலமலிவொருபதுநவில்பவர்
நிகழ்குலநிலநிறைதிருவுருநிகரிலகொடைமிகுசயமகர்
புகழ்புவிவளர்வழியடிமையினிலைபுணர்தரநலமிகுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது
சுவாமிபெயர் - பிரமபுரிநாயகர், தேவியார் - பெரியநாயகி
ஆ பதிகம் - உ௧

## திருமறைக்காடு - திருவிராகம் பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

சிலைதனைநடுவிடைநிறுவியோர்சினமலியரவதுகொடுதிவி
தலமலிசுரநகரர்கள்பொரவிசலசலகடல்கடைவுழிமிகு
கொலைமலிவிடமெழவவருடல்குலைதரவதுநுகர்பவனெழி
மலைமலிமதிள்புடைதழுவியமறைவனமமர்தருபரமனே (௧)

கரமுதலியவவயவமவைகடுவிடவரவதுகொடுவரு
வரன்முறையணிதருமவனடல்வலிமிகுபுலியதளுடையினன்
னிரவலர்துயர்கெடுவகைநினையிமையவர்புரமெழில்பெறவள
மரநிகர்கொடைமனிதர்கள்பயில்மறைவனமமர்தருபரமனே (உ)

இழைவளர்தருமுலைமலைமகளினிதுறைதருமெழிலுருவினன்
முழையினின்மிகுதுயிலுறுமரிமுசிவொடுமெழமுளரியொடெழு

கொங்குசெருந்திகொன்றைமலர்கூடக்
கங்கைபுனைந்தசடையார்காழியா
ரங்கணரவமாட்டுமவர்போலாஞ்
செங்கணரக்கர்புரத்தையெரித்தாரே. (௬)

கொல்லைவிடைமுன்பூதங்குனித்தாடுங்
கல்லவடத்தையுகப்பார்காழியா
ரல்லவிடத்துநடந்தாரவர்போலாம்
பல்லவிடத்தும்பயிலும்பரமரே. (௭)

எடுத்தவரக்கனெரியவிரலூன்றிக்
கடுத்துமுரியவடர்த்தார்காழியா
ரெடுத்தபாடற்கிரங்குமவர்போலாம்
பொடிக்கணீறுபூசும்புனிதரே. (௮)

ஆற்றலுடையவரியும்பிரமனுந்
தோற்றங்காணவென்றிக்காழியா
ரேற்றமேறங்கேறுமவர்போலாங்
கூற்றமறுக்குமைந்தகுழகரே. (௯)

பெருக்கப்பிதற்றுஞ்சமணசாக்கியர்
கரக்கும்முரையைவிட்டார்காழியா
ரிருக்கின்மலிந்தவிறைவரவர்போலா
மருப்பின்முலையாள்பங்கத்தையரே. (௧௦)

காராரவயல்சூழ்காழிக்கோன்றனைச
சீரார்ஞானசம்பந்தனசொன்ன
பாரார்புகழப்பரவவல்லவ
ரேராவானத்தினிதாவிருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருச்செம்பொன்பள்ளி - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

மருவார்குழலிமாதோர்பாகமாய்த்
திருவார்செம்பொன்பள்ளிமேவிய
கருவார்கண்டத்தீசன்கழல்களை
மருவாதவர்மேன்மன்னுமபாவமே. (௧)

வாரார்கொங்கைமாதோர்பாகமாய்ச்
சீரார்செம்பொன்பள்ளிமேவிய
வேரார்புரிபுன்சடையெம்மீசனைச
சேராதவர்மேற்சேரும்வினைகளே. (௨)

தெரிந்திலங்குகழுநீர்வயற்செந்நெல்
திருந்தநின்றவயல்சூழ்திருப்புன்கூர்ப்
பொருந்திநின்றவடிகளவர்போலும்
விரிந்திலங்குசடைவெண்பிறையாரே (௬)

பாருமின்னும்பரவித்தொழுதேத்துந்
தேர்கொள்வீதிவிழவார்திருப்புன்கூ
ராரநின்றவடிகளவர்போலுங்
கூரநின்றவெயின்மூன்றெரித்தாரே (௭)

மலைப்பதனாருடையமதின்மூன்றுஞ்
சிலையதனாலெரித்தார்திருப்புன்கூர்த்
தலைவர்வல்லரக்கன்றருக்கினை
மலையதனாலடர்த்துமகிழ்ந்தாரே (௮)

நாடவல்லமலரானுமாலுமாய்த்
தேடநின்றாருறையுந்திருப்புன்கூ
ராடவல்லவடிகளவர்போலும்
பாடலாடல்பயிலும்பரமரே. (௯)

குண்டுமுற்றிக்கூறையின்றியே
பிண்டமுண்ணும்பிராந்தர்சொற்கொளேல்
வண்டுபாடமலரார்திருப்புன்கூர்க்
கண்டுதொழுமின்கபாலிவேடமே (௰)

மாடமல்குமதில்சூழ்காழிமன்
சேடர்செல்வருறையுந்திருப்புன்கூர்
நாடவல்லஞானசம்பந்தன்
பாடல்பத்தும்பரவிவாழ்மினே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - சிவலோகநாதர், தேவியார் - சொக்கநாயகி.

## திருச்சோற்றுத்துறை - பண் - தக்கராகம்.

### திருச்சிற்றம்பலம்

செப்பநெஞ்சேநெறிகொள்சிற்றின்பந்
துப்பனென்னாதருளேதுணையாக
வொப்பரொப்பர்பெருமானொளிவெண்ணீற்
றப்பர்சோற்றுத்துறைசென்றடைவோமே (௧)

பாலுநெய்யுந்தயிரும்பயின்றாடித்
தோலுநூலுந்துதைந்தவரைமார்பர்
மாலுஞ்சோலைபுடைசூழ்மடமஞ்ஞை
யாலுஞ்சோற்றுத்துறைசென்றடைவோமே. (௨)

சூழுநேடவெரியாமொருவன்சீர்
நீழலசித்தீச்சரமேநினைநெஞ்சே. (௯)

மெய்யினமாசர்விரிதுண்டுகிலினார்
கையிலுண்டுகழறுமுரைகொள்ளே
லுய்யவேண்டிலிறைவஞ்சறையூரிற்
செய்யுஞ்சித்தீச்சரமேதவமாமே (௧௦)

நெய்த்தலாவுமறையோர்நறையூரிற்
சித்தன்சித்தீச்சரத்தையுயர்காழி
யத்தன்பாதமணிஞானசம்பந்தன
பத்தும்பாடப்பறையும்பாவமே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது

சுவாமிபெயர் - சித்தநாதேசர், தேவியார் - அழகாம்பிகை.

## ஸ்ரீபுகலி பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

விதியாயவினையாய்விளைவின்பயனாகிக்
கொதியாவருகூற்றையுதைத்தவர்சேரும
பதியாவதுபங்கயநின்றலர்தேன
பொதியார்பொழில்சூழ்புகலிநகர்தானே. (௧)

ஒன்னார்புரமூன்றுமெரித்தவொருவன்
மின்னாரிடையாளொடுங்கூடியவேடந்
தன்னாலுறைவாவதுதண்கடல்சூழ்ந்த
பொன்னார்வயற்பூம்புகலிநகர்தானே. (௨)

வலியின்மதிசெஞ்சடைவைத்தமணாளன்
புலியின்னதள்கொண்டரையார்த்தபுனிதன்
மலியும்பதிமாமறையோர்நிறைந்தீண்டிப்
பொலியும்புனற்பூம்புகலிநகர்தானே. (௩)

கயலார்தடங்கண்ணியொடுமெருதேறி
யயலார்கடையிற்பலிகொண்டவழகன்
னியலாலுறையுமிடமெண்டிசையோர்க்கும
புயலார்கடற்பூம்புகலிநகர்தானே. (௪)

காதார்கனபொற்குழைதோடதிலங்கத்
தாதாரமலர்தண்சடையேறமுடித்து
* நாதானுறையுமிடமாவதுநாளும்
போதார்பொழிற்பூம்புகலிநகர்தானே. (௫)

* நாதன்-நாதான் என நீண்டது.

கோலப்பொழில்சூழ்ந்தகுரங்கணின்முட்டத்
தேலங்கமழ்புன்சடையெந்தைபிரானே (௩)

வாடாவிரிகொன்றைவலத்தொருகாதிற்
றோடார்குழையானலபாலனைநோக்கிக்
கூடாதனசெய்தகுரங்கணின்முட்ட
மாடாவருவாரவரன்புடையாரே (௪)

இறையார்வளையாளையொர்பாகத்தடக்கிக்
கறையார்மிடற்றான்கரிகீறியகையான்
குறையார்மதிசூடிகுரங்கணின்முட்டத்
துறைவானெமையாளுடையொண்சுடரானே (௫)

பலவும்பயனுள்ளனபற்றுமொழிந்தோங்
கலவம்மயில்காமுறுபேடையொடாடிக்
குலவும்பொழில்சூழ்ந்தகுரங்கணின்முட்ட
நிலவும்பெருமானடிநித்தனினைந்தே (௬)

மாடார்மலர்க்கொன்றைவளர்சடைவைத்துத்
தோடார்குழைதானொருகாதிலிலங்கக்
கூடாமதிலெய்துகுரங்கணின்முட்டத்
தாடாரரவம்மணையார்த்தமர்வானே (௭)

மையார்நிறமேனியரக்கர்தங்கோனை
யுய்யாவகையாலடர்த்தின்னருள்செய்த
கொய்யார்மலர்சூடிகுரங்கணின்முட்டங்
கையாற்றொழுவார்வினைகாண்டலரிதே. (௮)

வெறியார்மலர்த்தாமரையானொடுமாலு
மறியாதசந்தேத்தவோராரழலாகுங்
குறியானிமிர்ந்தானறன்குரங்கணின்முட்டம்
நெறியாற்றொழுவார்வினைநிற்கிலவே. (௯)

கழுவார்துவராடைகலந்துமெய்போர்க்கும்
வழுவாச்சமண்சாக்கியர்வாக்கவைகொள்ளேல்
குழுமின்சடையண்ணல்குரங்கணின்முட்டத்
தெழில்வெண்பிறையானடிசேர்வதியல்வே (௧௦)

கல்லார்மதிற்காழிஞானசம்பந்தன்
கொல்லார்மழுவேந்திகுரங்கணின்முட்டஞ்
சொல்லார்தமிழ்மாலைசெவிக்கினிதாக
வல்லார்க்கெளிதாம்பிறவாவகைவீடே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

தொண்டைநாட்டிலுள்ளது
சுவாமிபெயர் - வாலீசுவரர், தேவியார் - இறையார்வளையம்மை.

ஆ பதிகம் - ௩௧.

துளங்குநெறியா ரவர்தொன்மை, வளங்கொள்ளன்மின் புல்லமண்டேரை
விளங்கும்பொழில்வீ ழிம்மிழலை, யுளங்கொள்பவர் தம்வினையோய்வே. (௧௰)

நளிர்காழியுண் ஞானசம்பந்தன், குளிரார்சடையா னடிகூற
மிளிரார்பொழில்வீ ழிம்மிழலை, கிளர்பாடல்வல்லார்க் கில்லைகேடே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருஐயாறு - பண் - தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

கலையார்மதியோ டுரநீரும், நிலையார்சடையா ரிடமாகும்
மலையாரமுமா மணிசந்தோ, டலையார்புனல்சே ருமையாறே. (௧)

மதியொன்றியகொன் றைவடத்தன், மதியொன்றவுதைத் தவர்வாழ்வும்
மதியின்னொடுசேர் கொடிமாடம், மதியம்பயில்கின் றவையாறே. (௨)

கொக்கின்னிறகின் னொடுவன்னி, புக்கசடையா ரிடமாகும்
திக்கின்னிசைதே வர்வணங்கும், அக்கின்னரையா ரதையாறே. (௩)

சிறைகொண்டபுர மவைசிந்தக், கறைகொண்டவர்கா தல்செய்கோயில்
மறைகொண்டநல்வா னவர்தம்மில், லறையும்மொலிசே ருமையாறே. (௪)

உமையாளொருபா கமதாகச், சமைவாரவர்சார் விடமாகும்
மமையாருடல்சோர் தரமுத்தம், மமையாவருமந் தணையாறே. (௫)

தலையின்தொடைமா லையணிந்து, கலைகொண்டதொர்கை யினர்சேர்வாம்
நிலைகொண்டமனத் தவர்நித்தம், மலர்கொண்டுவணங் குமையாறே. (௬)

வரமொன்றியமா மலரோன்றன், சிரமொன்றையறுத் தவர்சேர்வாம்
வரையின்றிழிவார் தருபொன்னி, யரவங்கொடுசே ருமையாறே. (௭)

வரையொன்றதெடுத் தவரக்கன், சிரமங்கநெரித் தவர்சேர்வு
விரையின்மலர்மே தகுபொன்னித், திரைதன்னொடுசே ருமையாறே. (௮)

சங்கக்கயனு மறியாமைப், பொங்குஞ்சுடரா னவர்கோயில்
கொங்கிற்பொலியும் புனல்கொண்டு, அங்கிக்கெதிர்கா ட்டுமையாறே (௯)

துவராடையர்தே ரலுடையார்கள், கவர்வாய்மொழிகா தல்செய்யாதே
தவராசர்கடா மரையானோ, டவர்தாமணையந் தணையாறே. (௧௰)

கலையார்கலிக்கா ழியர்மன்னன், நலமார்தருஞா னசம்பந்தன்
னலையார்புனல்சூ ழுமையாற்றைச், சொலுமாலைவல்லார் துயர்வீடே. (௧௧

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - செம்பொன்சோதீசுரர், தேவியார் - அறம்வளர்த்தநாயகி.

## திருப்பனையூர் - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

அரவச்சடைமேல் மதிமத்தம், விரவிப்பொலிகின் றவனூராம்
நிரவிப்பலதொண் டர்கள்நாளும், பரவிப்பொலியும் பனையூரே. (௧)

தனையார்கமலமலர்மேலுறைவானறலையோடனலேந்து
மெனையாளுடையானுமையாளோடுமீங்கோய்மலையாரே· (௭

பரக்குமபெருமையிலங்கையெனனுமபதியிற்பொலிவாய
வரக்கர்க்கிறைவன்முடியுந்தோளுமணியார்விரல்ரனு
னெருக்கியடாத்துதிமலாபோற்றியெனறுநின்றேதந
விரககமபுரிந்தாருமையாளோமீங்கோய்மலையாரே· (அ)

வரியார்புலியினுரிதோலுடையான்மலையான்மகளோடும
பிரியாதுடனாயாடல்பேணுமபெம்மான்றிருமேனி
யரியோடயனுமறியாவண்ணமனலில்பெருமையோ
டெரியாய்நிமிர்ந்தவெங்கள்பெருமானீங்கோய்மலையாரே· (௯)

பிண்டியென்றுபெயராநிற்குமபிணங்குஞ்சமணரு
மண்டைகலனுக்கொண்டுதிரியுமதிலதேரரு
முண்டிவயிறுருநாகள்கொள்ளாதுமையோடுடனாகி
இண்டைச்சடையானிமையோர்பெருமானீங்கோய்மலையாரே· (௧0)

விழவாரொலியுமுழவுமோவாவேணுபுரந்தன்னு
ளழலார்வண்ணததடிகளருள்சேரணிகொள்சமபந்த
னெழிலார்சுனையும்பொழிலும்புடைசூழீங்கோய்மலையீசன்
கழல்சேர்பாடல்பத்தும்வல்லாரவலைகழல்வாரே· (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநறையூர்ச்சித்தீச்சரம் - பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

பிறைகொள்சடையர்புலியினுரியர்பேழ்வாய்நாகத்தா
கறைகொள்கண்டர்கபாலமேந்துங்கையர்கங்காளர்
மறைகொள்கீதம்பாடச்சேடர்மனையில்மகிழ்வெய்திச்
சிறைகொள்வண்டுதேனார்நறையூர்ச்சித்தீச்சரத்தாரே. (௧)

பொங்காசடையர்புனலரனலர்பூதம்பாடவே
தங்காதலியுந்தாமுமுடனாய்த்தனியோர்விடையேறிக
கொங்காகொன்றைவன்னிமத்தஞ்சூடிக்குளிர்பொய்கைய
செங்கால்னனமபெடையுஞ்சேருஞ்சித்தீச்சரத்தாரே· (௨)

முடிகொள்சடையர்முளைவெண்மதியர்மூவாமேனிமே
பொடிகொணூலர்புலியினதளர்புரிபுனசடைதாழக
கடிகொள்சோலைவயல்சூழ்மடுவிற்கயலாரினமபாயக
கொடிகொள்மாடக்குழாமார்நறையூர்ச்சித்தீச்சரத்தாரே. (௩)

பின்றாழ்சடைமேனகுவெண்டலையர்பிரமன்றலையேந்தி
மின்றாழுருவிற்சங்கார்குழைதான்மிளிருமொருகாதா
பொனறாழ்கொன்றைசெருந்திபுன்னைபொருந்துசெண்பகஞ்
சென்றார்செல்வத்திருவார்நறையூர்ச்சித்தீச்சரத்தாரே· (௪)

னுருவார்செஞ்சொன்மாலையிவைபடித்துணைப்பாருலகத்துக்
கருவார்கின்றவடைபடபிறப்பதறுத்துக்கவலைகழிவாரே.

திருச்சிற்ற

சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர் - சோமநாதர், தேவியார் - தேனார்மொழியம்மை
- ஆ பதிகம் - எஉ

## திருக்கானூர் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

வானார்சோதிமன்னுசென்னிவன்னிபுனங்கொன்றைத்
தேனார்போதுதானார்கங்கைதிங்களொடுசூடி
மானேர்நோக்கிகண்டங்குவப்பமாலையாடுவார்
கானூர்மேயகண்ணார்நெற்றியானூர்செல்வரே.

நீந்தலாகாவெள்ளமூழ்குநீள்சடைதன்மேலோர்
ஏய்ந்தகோணற்பிறையோடரவுகொன்றையெழிலாரப்
போந்தமென்சொல்லின்பமெய்யத்தமைந்தரவர்போலாங்
காந்தள்விம்முகானூர்மேயசாந்தநீற்றாரே.

சிறையார்வண்டுந்தேனும்விம்முசெய்யமலர்க்கொன்றை
மறையார்பாடலாடலோடுமால்விடைமேல்வருவார்
இறையார்வந்தெனில்புகுந்தென்னெழில்நலமுங்கொண்டார்
கறையார்சோலைக்கானூர்மேயபிறையார்சடையாரே.

விண்ணார்திங்கட்கண்ணிவெள்ளைமாலையதுசூடித்
தண்ணாரக்கோடாமைபூண்டுதழைபுன்சடைதாழ
வெண்ணாவந்தெனில்புகுந்தகமேவவநோய்செய்தான்
கண்ணார்சோலைக்கானூர்மேயவிண்ணோர்பெருமானே.

நாற்றமிகார்கொன்றைக்கண்ணியோடுதண்மதியஞ்சூடிச்
சீர்கொள்பாடலாடலோடுசேடராய்வந்து
ஊர்கூடாருமையமேற்றென்னுள்ளம்வெவ்வேநோய்செய்தார்
கார்கொள்சோலைக்கானூர்மேயகறைக்கண்டத்தாரே.

முளிவெள்ளெலும்புநீறுநூலுமுழுகுமார்பரா
எளிவந்தார்போலையமென்றென்னில்லேபுகுந்துள்ளந்
தெளிவுநாணுங்கொண்டகள்வர்தேறலார்பூவிற்
களிவண்டியாழ்செய்கானூர்மேயவொளிவெண்பிறையாரே.

ஏலவண்ணார்முளைவெண்பிறையார்முறுவல்செய்திங்கே
பூவார்கொன்றைபுனைந்துவந்தார்பொக்கம்பலபேசிப்
போவார்போலமால்செய்துள்ளம்புக்கபுரிநூலர்
தேவார்சோலைக்கானூர்மேயதேவதேவரே.

தமிழின்நீர்மைபேசித்தாளம்வீணைபண்ணிநல்ல
முழவமொந்தைமல்குபாடல்செய்கையிடமோவார்
குமிழின்மேனிதந்துகோலநீர்மையதுகொண்டார்
கமழுஞ்சோலைக்கானூர்மேயபவளவண்ணரே.

அந்தமாதியயனுமாலுமார்க்குமறிவரியான்
சிந்தையுள்ளுநாவின்மேலுஞ்சென்னியுமன்னினான்
வந்தென்னுள்ளம்புகுந்துமாலைகாலையாடுவான
கந்தமல்குகானூர்மேயவெந்தைபெம்மானே.

ஆமையரவோடேனவெண்கொம்பக்குமாலைபூண்
டாமோர்கள்வர்வெள்ளர்போலவுள்வெந்நோய்செய்தா
ரோமவேதநான்முகனுங்கோணாகணையானுஞ்
சேமமாயசெல்வர்கானூர்மேயசேடரே.

கழுதுதுஞ்சுங்கங்குலாடுங்கானூர்மேயானைப்
பழுதில்ஞானசம்பந்தன்சொற்பத்தும்பாடியே
தொழுதுபொழுதுந்தோத்திரங்கள்சொல்லித்திரிந்துநின்
றழுதுநக்குமன்புசெய்வாரல்லலறுப்பாரே.

திருச்சிற்றம

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - செம்மேனிநாயகர், தேவியார் - சிவயோகநாயகியம்மை.

## திருப்புறவம் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்

நறவநிறைவண்டறைதார்க்கொன்றைநயந்துநயனத்தாற்
சுறவஞ்செறிவண்கொடியோனுடலம்பொடியாவிழிசெய்தோன்
புறவமறைவண்பதியாமதியார்புரமூன்றெரிசெய்த
விறைவனறவனிமையோரேத்தவுமையோடிருந்தானே

உரவன்புலியினுரிதோலாடையுடைமேற்படநாகம்
விரவிவிரிபூங்கச்சாவசைத்தவிகிர்தனுகிர்தன்னாற்
பொருவெங்களிறுபிளிறவுரித்துப்புறவம்பதியாக
விரவும்பகலுமிமையோரேத்தவுமையோடிருந்தானே

பந்தமுடையபூதம்பாடப்பாதஞ்சிலம்பார்க்கக்
கந்தமல்குகுழலிகாணக்கரிகாட்டெரியாடி
யந்தண்கடல்சூழ்ந்தழகார்புறவம்பதியாவமர்வெய்தி
யெந்தம்பெருமானிமையோரேத்தவுமையோடிருந்தானே

நினைவார்நினையவினியான்பனியார்மலர்தூய்நித்தலுங்
கனையார்விடையொன்றுடையான்கங்கைதிங்கள்கமழ்கொன்றை
புனைவார்சடையின்முடியான்கடல்சூழ்புறவம்பதியாக
வெனையாளுடையானிமையோரேத்தவுமையோடிருந்தானே

விண்ணியல்விமானமவிரும்பியபெருமான்வெங்குரு மேவியுள்வீற்றிருந்தானை, நண்ணியநூலனஞானசம்பந்தனவினறவாய்மொழிநலமிகுபத்தும், பண்ணியல்பாகபபத்திமையாலேபாடியுமாடியுமபயிலவல்லார்கள், விண்ணவர்விமானங்கொடுவரவேறிவியனுலகாணடுவீற்றிருப்பவாதாமே. (கக)

திருச்சிற்றம்பலம்

இதுவுஞ சீகாழிக்குப்பெயர்

---

## திரு இலம்பையங்கோட்டூர் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

மலையினார்பருப்பதந்துருத்திமாற்பேறு மாசிலாசசீர்மறைக்காடுநெய்த்தான, நிலையினானெனதுரைதனதுரையாகநீறணிந்தேறுகந்தேறியநிமலன, கலையினார்மடப்பிணைதுணையொடுந்துயிலககானலமபெடைபுல்கிக்கணமயிலாலு, மிலையினார்பைம்பொழிலிலம்பையங் கோட்டூரிருக்கையாபபேணியென்னெழில்கொளவதியல்பே. (க)

திருமலர்க்கொன்றையானின்றியூர்மேயானதோவாகடலைமகன்றிருக் கழிப்பாலே, திருமனெனதுரைதனதுரையாகநீறணிந்தேறுகந்தேறியநிமலன், கருமலர்க்கமழ்சுனைநீண்மலர்க்குவளைகதிர்முலையிளையவர்மதிமுகத்துலவு, மிருமலர்த்தணபொய்கையிலம்பையங்கோட்டூ ரிருக்கையாபபேணியெனனெழில்கொளவதியல்பே. (உ)

பாலனும்விருத்தனுமபசுபதிதானுமபணடுவெங்கூற்றுதைத்தடியவர்க்கருளுங், காலனுமெனதுரைதனதுரையாகககனலெரியங்கையிலேந்தியகடவுள் நீலமாமலர்ச்சுனைவண்டுபண்செய்யநீர்மலர்க்குவளைகடாதுவிண்டெங்கு, மேலநாறும்பொழிலிலம்பையங்கோட்டூரிருக்கையாபபேணியெனனெழில்கொள்வதியல்பே. (ந)

உளங்கொள்வாருச்சியார்கச்சியேகமபனொற்றியூருறையுமண்ணாமலையண்ணல், விளம்புவானெனதுரைதனதுரையாகவெள்ளநீர்விரிசடைதாங்கியவிமலன், குளம்புறக்கலைதுள்ளமலைகளுஞ்சிலம்பக்கொழுங்கொடியெழுந்தெங்குங்கூவிளங்கொள்ள, விளம்பிறைதவழ்பொழிலிலம்பையங்கோட்டூரிருக்கையாப்பேணியென்னெழில்கொளவதியல்பே. (ச)

தேனுமாயமுதமாய்த் தெய்வமுந்தானாய்த்தீயொடு நீருடன்வாயுவாந்தெரியில, வானுமாமெனதுரைதனதுரையாக வரியராவரைக்கசைத்துழிதருமைந்தன், கானமான்வெருவுறக்கருவிரலூகங்கடுவனொடுகளுமூர்கற்கடுஞ்சாரலேனமானுழிதருமிலம்பையங்கோட்டூரிருக்கையாப்பேணியெனனெழில்கொள்வதியல்பே. (ரு)

மனமுலாமடியவர்க்கருள்புரிகின்றவகையலாற்பலிதிரிந் துண்பிலான்மற்றோர், தனமிலானெனதுரைதனதுரையாகத்தாழ்சடையிளமதி தாங்கியதலைவன், புனமெலாமருவிகளிருவிசேர்முத்தமபொன்னொடுமணிகொழித் தீண்டிவந்தெங்கு, மினமெலாமடைகரையிலம்பையங்கோட்டூரிருக்கையாப்பேணியென்னெழில்கொள்வதியல்பே (சா)

நிதியான்மிகுசெல்வர்நித்தநியமங்கள்
விதியானிற்கின்றார்வீழிமிழலையே (எ)

எடுத்தான்றருக்கினையிழித்தான்விரலூன்றிக
கொடுத்தான்வாளாளாகக்கொண்டானுறைகோயில்
படித்தார்மறைவேள்வியயின்றார்பாவத்தை
விடுத்தார்மிகவாழுமவீழிமிழலையே. (அ)

கிடந்தானிருந்தானுங்கீழ்மேல்காணாது
தொடர்ந்தாங்கவரேத்தச்சுடரானவன்கோயில்
படந்தாங்கரவல்குற்பவளத்துவர்வாய்மேல
விடந்தாங்கியகண்ணார்வீழிமிழலையே. (கூ)

சிக்கார்துவராடைச்சிறுதட்டுடையாரு
நக்காங்கலர்தூற்றுநம்பனுறைகோயில்
தக்காமறைவேள்வித்தலையாயுலகுக்கு
மிக்காரவர்வாழும்வீழிமிழலையே (கo)

மேனின்றிழிகோயில்வீழிமிழலையு
ளேனத்தெயிற்றானையெழிலார்பொழிற்காழி
ஞானத்துயர்கின்றநலங்கொள்சம்பந்தன்
வாய்மைத்திவைசொல்லவல்லோர்நல்லோரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

ஆ பதிகம் - அ௨

## திருஅம்பர்மாகாளம் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

அடையார்புரமூன்றுமனலாய்விழவெய்து
மடையார்புனலம்பர்மாகாளமமேய
விடையார்கொடியெந்தைவெள்ளைப்பிறைசூடுஞ்
சடையான்கழலேத்தச்சாராவினைதானே. (க)

தேனாமதமத்தந்திங்கள்புனல்சூடி
வானார்பொழிலம்பர்மாகாளம்மேய
வூனார்தலைதன்னிற்பலிகொண்டுழல்வாழ்க்கை
யானன்கழலேத்தவல்லலடையாவே. (௨)

திரையார்புனலோடுசெல்வமதிசூடி
விரையார்பொழிலம்பர்மாகாளமமேய
நரையார்விடையூருநம்பான்கழல்நாளு
முரையாதவர்கள்மேலொழியாவூனமே. (ங)

கொந்தண்பொழிற்சோலைக்கோலவரிவண்டு
மந்தம்மலியம்பர்மாகாளம்மேய

கந்தங்கமழ்கொன்றைகமழ்புன்சடைவைத்த
வெந்தைகழலேத்தவிடர்வந்தடையாவே (ச)

அணியார்மலைமங்கையாகம்பாகமாய்
மணியார்புனலம்பர்மாகாளமமேய
துணியாருடையினனாடொறும்பொற்கழனும்
பணியாதவர்தம்மேற்பறையும்பாவமே. (ரு)

பண்டாழ்கடல்நஞ்சையுண்டுகளிமாந்தி
வண்டார்பொழிலம்பர்மாகாளமமேய
விண்டார்புரம்வேவமேருச்சிலையாகக்
கொண்டானகழலேத்தக்குறுகாகுற்றமே. (சா)

மிளிருமரவோடுவெள்ளைப்பிறைசூடி
வளரும்பொழிலம்பர்மாகாளமமேய
கிளருஞ்சடையண்ணல்கேடில்கழலேத்தத்
தளருமுறுநோய்கள்சாருந்தவந்தானே. (எ)

கொலையார்மழுவோடுகோலச்சிலையேந்தி
அலையார்புனலம்பர்மாகாளம்மேய
விலையாத்திரிசூலப்படையான்கழனாளும்
நிலையாநினைவார்மேலில்லாவினைதானே. (அ)

சிறையார்வரிவண்டுதேனுண்டிசைபாட
மறையார்நிறையம்பர்மாகாளமமேய
நறையார்மலரானுமாலுங்காண்பொண்ணா
விறையான்கழலேத்தமெய்துமின்பமே. (சு)

மாசூர்வடிவினர்மண்டையுணல்கொள்வார்
கூசாதுரைக்குஞ்சொற்கொள்கைகுணமல்ல
வாசார்பொழிலம்பர்மாகாளமமேய
வீசாவெனவார்கட்கில்லையிடர்தானே. (க0)

வெருநீர்கொளவோங்குவேணுபுரந்தன்னுட்
டிருமாமறைஞானசம்பந்தன்சேரார்
பெருமானமரம்பர்மாகாளமபேணி
யுருகாவுரைசெய்வாருயர்வானடைவாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர் - காளகண்டேசுவரர், தேவியார் - பக்ஷநாயகியம்மை.

## திருக்கடனாகைக்காரோணம் - பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

புனையும்விரிகொன்றைக்கடவுள்புனல்பாய
நனையுஞ்சடைமேலோர்நகுவெண்டலைசூடி

கரையார்கடனாகைக்காரோணமமேய
நரையார்விடையானைநவிலுஞ்சம்பந்த
னுரையார்தமிழ்மாலைபாடுமவரெல்லாங்
கரையாவுருவாகிக்கலிவானடைவாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர் - காயாரோகணேசுவரர், தேவியார் - நீலாயதாக்ஷியம்மை

## திருநல்லம் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

கல்லானிழல்மேயகறைசேர்கண்டாவென
றெல்லாமொழியாலுமிமையோர்தொழுதேத்த
வில்லாலரணமூன்றும்வெந்துவிழவெய்த
நல்லானமையாள்வானல்லநகரானே. (க)

தக்கன்பெருவேள்விதன்னிலமரரைத்
துக்கம்பலசெய்துசுடர்பொற்சடைதாழக்
கொக்கின்னிறகோடுகுளிர்வெண்பிறைசூடி
நக்கனமையாள்வானல்லநகரானே (உ)

அந்திமதியோடுமரவச்சடைதாழ
முந்தியனலேந்திமுதுகாட்டெரியாடிச்
சிந்தித்தெழவல்லார்தீராவினைதீர்க்கு
நந்திநமையாள்வானல்லநகரானே. (ங)

குளிருமமதிசூடிகொன்றைச்சடைதாழ
மிளிருமரவோடுவெண்ணூலதிகழ்மார்பிற்
றளிருந்திகழ்மேனித்தையல்பாகமாய்
நளிருமவயல்சூழ்ந்தநல்லநகரானே (ச)

மணியார்திகழகண்டமுடையான்மலர்மல்கு
பிணிவார்சடையண்ணல்பெருமானகழல்பேணித்
துணிவார்மலர்கொண்டுதொண்டர்தொழுதேத்த
நணியானமையாள்வானல்லநகரானே (ரு)

வாசமலர்மல்குமலையான்மகளோடு
பூசுஞ்சுடுநீறுபுனைந்தானவிரிகொன்றை
யீசனெனவுள்கியெழுவார்வினைகட்கு
நாசனமையாள்வானல்லநகரானே. (சா)

அங்கோல்வளைமங்கைகாணவனலேந்திக்
கொங்கார்நறுங்கொன்றைசூடிக்குழகாக
வெங்காடிடமாகவெந்தீவிளையாடு
நங்கோனமையாள்வானல்லநகரானே. (எ)

பெண்ணார்திருமேனிப்பெருமான்பிறைமல்கு
கண்ணார்நுதலினான்கயிலைகருத்தினா
லெண்ணாதெடுத்தானையிறையேவிரலூன்றி
நண்ணார்புரமெய்தானல்லநகரானே (அ)

நாகத்தணையானுநளிர்மாமலரானும்
போகத்தியல்பினாற்பொலியவழகாகு
மாகத்தவளோடுமமர்ந்தங்கழகாரு
நாகமரையார்த்தானல்லநகரானே. (௯)

குறியிலசமணோடுகுண்டர்வண்டேர
ரறிவிலுரைகேட்டங்கவமேயழியாதே
பொறிகொள்ளரவார்த்தான்பொல்லாவினைதீர்க்கு
நறைகொள்பொழில்சூழ்ந்தநல்லநகரானே. (௧0)

நலமார்மறையோர்வாழ்நல்லநகர்மேய
சொலைசேர்மழுவானைக்கொச்சையமாநகரோங்கு
தலமார்தமிழ்ஞானசம்பந்தன்சொன்ன
கலைகளிவைவல்லார்கவலைகழிவாரே· (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - உமாமகேசுவரர், தேவியார் - மங்களநாயகியம்மை.



## திருநல்லூர் - பண் - குறிஞ்சி·

திருச்சிற்றம்பலம்

கொட்டும்பறைசீராற்குழுமவனலேந்தி
நட்டம்பயின்றாடுநல்லூர்ப்பெருமானை
முட்டின்றிருபோதுமுனியாதெழுந்தன்பு
பட்டமனத்தார்களறியார்பாவமே (க)

ஏறிலெருதேறுமெழிலாயிழையோடும
வேறுமுடனாமாமவிகிர்தரவரென்ன
நாறுமலர்ப்பொய்கைநல்லூர்ப்பெருமானைக்
கூறுமடியார்கட்கடையாகுற்றமே. (உ)

சூடுமிளந்திங்கட்சுடர்பொற்சடைதாழ
வோடுங்கலனாகவூரூரிடுபிச்சை
நாடுநெறியானைநல்லூர்ப்பெருமானைப்
பாடுமடியார்கட்கடையாபாவமே. (௩)

நீத்தநெறியானைநீங்காத்தவத்தானை
நாத்தநெறியானைநல்லூர்ப்பெருமானைக்
காத்தநெறியானைக்கைகூப்பித்தொழு
தேத்துமடியார்கட்கில்லையிடர்தானே (௪)

படிநோன்பவையாவர்பழியில்புகழான
கடிநாணிகழ்சோலைகமழும்வடுகூரைப்
படியானசிந்தைமொழியார்சம்பந்த
னடிஞானம்வல்லாரடிசேர்வார்களே. (கக)

திருச்சிற்றம்பலம்.

நடுநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர் - வடுகேசுவரர், தேவியார்-வடுவகிர்க்கண்ணியம்மை.
ஆ பதிகம் - அஎ

## திருவாப்பனூர் - பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்.

முற்றுஞ்சடைமுடிமேன்முதிராவிளம்பிறைய
னொற்றைப்படவரவமதுகொண்டரைக்கணிந்தான்
செற்றமல்சீரானைத்திருவாப்பனூரானைப்
பற்றுமனமுடையார்வினைபற்றறுப்பாரே. (க)

குரவங்கமழ்குழலாள்குடிகொண்டுநின்றுவிண்ணோர்
விரவுந்திருமேனிவிளங்குமவளையெயிற்றி
னரவமணிந்தானையணியாப்பனூரானைப்
பரவுமனமுடையார்வினைபற்றறுப்பாரே. (உ)

முருகுவிரிகுழலார்மனங்கொளனங்கனைமுன்
பெரிதுமுனிந்துகந்தான்பெருமான்பெருங்காட்டி
னரவமணிந்தானையணியாப்பனூரானைப்
பரவுமனமுடையார்வினைபற்றறுப்பாரே (௩)

பிணியும்பிறப்பறுப்பான்பெருமானபெருங்காட்டிற்
றுணியினுடைதாழச்சுடரேந்தியாடுவா
னணியும்புனலானையணியாப்பனூரானைப்
பணியுமனமுடையார்வினைபற்றறுப்பாரே. (௪)

தகரமணியருவித்தடமால்வரைசிலையா
நகரமொருமூன்றுநலங்குன்றவென்றுகந்தான்
அகரமுதலானையணியாப்பனூரானைப்
பகருமனமுடையார்வினைபற்றறுப்பாரே. (௫)

ஓடுந்திரிபுரங்களுடனேயுலந்தவியக்
காட்டிடமாகக்கனல்கொண்டுநின்றிரவி
லாடுந்தொழிலானையணியாப்பனூரானைப்
பாடுமனமுடையார்வினைபற்றறுப்பாரே (௬)

இயலும்விடையேறியெரிகொண்மழுவீசிக்
கயலினைக்கண்ணாளொருபாலகலந்தாட
வியலுமிசையானையெழிலாப்பனூரானைப்
பயிலுமனமுடையார்வினைபற்றறுப்பாரே. (எ)

கருக்குமணிமிடறன்கதநாகக்கச்சையினா
னுருக்குமடியவரையொளிவெண்பிறைசூடி
யரக்கன்றிறலழித்தானணியாப்பனூரானைப்
பருக்குமனமுடையார்வினைபற்றறுப்பாரே. (அ)

கண்ணன்கடிக்கமலமலர்மேலினிதுறையு
மண்ணற்கனைப்பரிதாய்நின்றங்கடியார்மே
லெண்ணரில்வினைகளைவானெழிலாப்பனூரானைப்
பண்ணினிசைபகர்வார்வினைபற்றறுப்பாரே. (கூ)

செய்யகலிங்கத்தார்சிறுதட்டுடையார்கள்
பொய்யர்புறங்கூறப்புரிந்தவடியாரை
யையமகற்றுவானணியாப்பனூரானைப்
பையநினைந்தெழுவார்வினைபற்றறுப்பாரே. (க0)

அந்தண்புனல்வைகையணியாப்பனூர்மேய
சந்தமலர்க்கொன்றைசடைமேலுடையானை
நந்தியடிபரவுநலஞானசம்பந்தன
சந்தமிவைவல்லார்தடுமாற்றறுப்பாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

பாண்டிநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர்-ஆப்பனூரீசுவரர் - தேவியார் - அம்பிகையம்மை.

---

## திரு எருக்கத்தம்புலியூர் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

படையார்தருபூதப்பகடாருரிபோர்வை
யுடையானுமையோடுமுடனாயிடுகங்கைச்
சடையானெருக்கத்தம்புலியூர்த்தகுகோயில்
விடையானடியேத்தமேவாவினைதானே (க)

இலையார்தருசூலப்படையெம்பெருமானாய்
நிலையார்மதின்மூன்றுநீறாய்விழவெய்த
சிலையானெருக்கத்தம்புலியூர்த்திகழ்கோயிற்
கலையானடியேத்தக்கருதாவினைதானே. (உ)

விண்ணோர்பெருமானேவிகிர்தாவிடையூர்தி
பெண்ணாணலியாகும்பித்தாபிறைசூடி
யெண்ணாரெருக்கத்தம்புலியூருறைகின்ற
வண்ணாவெனவல்லார்க்கடையாவினைதானே. (ங)

அறையார்தருநாகமணிவாளலாமாலை
நிறையார்தருகொன்றையுடையான்விடையேறி
வரையானெருக்கத்தம்புலியூர்மகிழ்கின்ற
இறையார்சடையானைச்சேரத்திருவாமே. (ச)

வீறார்முலையாளைப்பாகமிகவைத்துச்
சீறார்வருகாலன்சினத்தையழித்தா
னேறூருமொருக்கத்தம்புலியூரிறையானை
வேறாநினைவாரைவிரும்பாவினைதானே. (ரு)

நகுவெண்டலையேந்திநானாவிதம்பாடிப்
புகுவானயம்பெய்யப்புலித்தோலரைக்கிட்டுத்
தகுவானொருக்கத்தம்புலியூர்த்தகைந்தங்கே
தொகுவான்கழலேத்தத்தொடராவினைதானே. (சு-எ)

ஆவாவெனவரக்கனலறவடர்த்திட்டுத்
தேவாவெனவருளார்செல்வங்கொடுத்திட்ட
கோவேயெருககத்தம்புலியூர்மிகுகோயிற்
றேவேயெனவலலல்தீர்தல்திடமாமே. (அ)

மறையானெடுமால்காண்பரியான்மழுவேந்தி
நிறையாமதிசூடிநிகழ்முத்தின்றொத்தே
யிறையானொருக்கத்தம்புலியூரிடங்கொண்ட
கறையாமிடற்றானைக்கருதக்கெடும்வினையே. (கூ)

புத்தருகாத்தமபொய்கள்புறம்போககிச்
சுத்திதரித்துறையுஞ்சோதிமையோடு
நித்தனொருக்கததமபுலியூர்நிகழ்வாய
வத்தனறவன்றனடியேயடைவோமே. (க0)

ஏராரெருக்கத்தம்புலியூருறைவானைச்
சீரார்திகழ்காழித்திருவாசம்பந்த
ஞாராவருந்தமிழ்மாலையிவைவல்லார்
பாராரவரேத்தப்பதிவானுறைவாரே. (கக)

திருச்சிற்றம்பலம்

நடுநாட்டிலுள்ளது.
சுவாமிபெயா - நீலகண்டேசுவரர், தேவியார் - நீலமலர்க்கண்ணம்மை.

---

## திருப்பிரமபுரம்-திருவிருக்குக்குறள் - பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

அரனையுள்குவீர், பிரமனூருளெம்
பரனையேமனம், பரவியுய்மினே. (க)

காணவுள்குவீர், வேணுநற்புரத்
தாணுவின்கழல், பேணியுய்மினே. (உ)

நாதனென்பிர்காள், காதலொண்புக
லாதிபாதமே, யோதியுய்மினே. (௩)

அங்கமாதுசேர், பங்கமாயவன
வெங்குருமன்னு, மெங்களீசனே. (௪)

வாணிலாச்சடைத், தோணிவண்புரத்
தாணிநற்பொனைக், காணுமின்களே. (ரு)

பாந்தளார்சடைப், பூந்தராய்மனு
மேந்துகொங்கையாள், வேந்தனென்பரே. (சு)

கரியகண்டனைச், சிரபுரத்துளெம்
மரசைநாடொறும், பரவியுய்ம்மினே. (எ)

நறவமார்பொழிற், புரவநற்பதி
யிறைவனாமமே, மறவனெஞ்சமே. (அ)

தென்றிலரக்கனைக், குன்றிற்சண்பைம
னன்றுநெரித்தவா, நின்றுநினைமினே. (கூ)

அயனுமாலுமாய், முயலுங்காழியான்
பெயல்வையெய்திநின், றியலுமுள்ளமே. (க0)

தேரமணரைச், சேர்வில்கொச்சைமன்
னோரில்கழனினைந், தோருமுள்ளமே. (கக)

தொழுமனத்தவர், கழுமலத்துறை
பழுதிலசம்பந்தன், மொழிகள்பத்துமே. (கஉ)

திருச்சிற்றம்பலம்

பிரமபுரமென்பது-சீகாழி.

## திருஆரூர் -திருவிருக்குக்குறள் - பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

சித்தந்தெளிவீர்காள், அத்தனாரூரைப்
பத்திமலர்தூவ, முத்தியாகுமே. (க)

பிறவியறுப்பீர்காள், அறவனாரூரை
மறவாதேத்துமின், றுறவியாகுமே. (உ)

துன்பந்துடைப்பீர்காள், அன்பனணியாரூர்
நன்பொன்மலர்தூவ, வின்பமாகுமே. (ங)

உய்யலுறுவீர்காளையனாரூரைக்
கையினாற்றொழ, நையும்வினைதானே. (ச)

பிண்டமறுப்பீர்காள், அண்டனாரூரைக்
கண்டுமலர்தூவ, விண்டுவினைபோமே. (ரு)

பாசமறுப்பீர்காள், ஈசனணியாரூர்
வாசமலர்தூவ, நேசமாகுமே. (சு)

வெய்யவினைதீர, ஐயனணியாரூர்
செய்யமலர்தூவ, வையமுமதாமே. (எ)

அரக்கனாண்மையை, நெருக்கினானரா
கரத்தினான்றனெழுத், திருத்தமாகுமே. (௮)

துள்ளுமிருவர்க்கும, வள்ளலாரூரை
யுள்ளுமவர்தமமேல, விள்ளும்வினைதானே. (௯)

கடுக்கொள்சீவரை, யடக்கினாரூ
ரெடுத்துவாழ்த்துவார், விடுபவர்வேட்கையே. (௧௦)

சீரூர்சம்பந்த, ளாரூரைச்சொன்ன
பாரூர்பாடலார், பேராரின்பமே. (௧௧)

சோழநாட்டிலுள்ளது திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - வன்மீகநாதர், தேவியார் - அல்லியங்கோதையம்மை

---

## திருவீழிமிழலை-திருவிருக்குக்குறள்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

வாசிதீரவே, காசுநல்குவீர்
மாசின்மிழலையீ, ரேசலில்லையே (௧)

இறைவராயினீர், மறைகொண்மிழலையீர்
கறைகொள்காசினை, முறைமைநல்குமே (௨)

செய்யமேனியீர், மெய்கொண்மிழலையீர்
பைகொளரவினீ, ருய்யநல்குமே. (௩)

நீறுபூசினீ, ரேறதேறினீர்
கூறுமிழலையீர், பேறுமருளுமே (௪)

காமன்வேவவோர், தூமக்கண்ணினீர்
நாமமிழலையீர், சேமநல்குமே. (௫)

பிணிகொள்சடையினீர், மணிகொண்மிடற்றினீ
ரணிகொண்மிழலையீர், பணிகொடருளுமே. (௬)

மங்கைபங்கினீர், துங்கமிழலையீர்
கங்கைமுடியினீர், சங்கைதவிர்மினே. (௭)

அரக்கனெரிதர, விரக்கமெய்தினீர்
பரக்குமிழலையீர், கரக்கைதவிர்மினே (௮)

அயனுமாலுமாய், முயலுமுடியினீ
ரியலுமிழலையீர், பயனுமருளுமே (௯)

பறிகொள்தலையினா, ரறிவதறிகிலார்
வெறிகொண்மிழலையீர், பிரிவதரியதே. (௧௦)

காழிமாநகர், வாழிசம்பந்தன்
வீழிமிழலைமேல், தாழுமொழிகளே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

இது-படிக்காசுசுவாமியருளியபோது வட்டந்தீர வோதியது.

## திருமுதுகுன்றம் - திருவிருக்குக்குறள்-பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

நின்றுமலர்தூவி, யின்றுமுதுகுன்றை
நன்றுமேத்துவீர்க், கென்றுமிடரிலையே. (க)

அத்தன்முதுகுன்றைப், பத்தியாகிநீர்
நித்தமேத்துவீர்க், குய்த்தல்செல்வமே. (உ)

ஐயன்முதுகுன்றைப், பொய்கள்கெடநின்று
கைகள்கூப்புவீர், வையமுமதாமே (ங)

ஈசன்முதுகுன்றை, நேசமாகிநீர்
வாசமலர்தூவப், பாசவினைபோமே (ச)

மணியார்முதுகுன்றைப், பணிவாரவர்கண்டீர்
பிணியாயினகெட்டுத், தணிவாருலகிலே. (ரு)

மொய்யார்முதுகுன்றி, லையாவெனவல்லார்
பொய்யாரிரவோர்க்குச், செய்யாளணியாளே. (சு)

விடையான்முதுகுன்றை, யிடையாதேத்துவார்
படையாயினசூழ, வுடையாருலகமே (எ)

பத்துத்தலையோனைக், கத்தவிரலூன்று
மத்தன்முதுகுன்றை, மொய்த்துப்பணிமினே. (அ)

இருவரறியாத, வொருவன்முதுகுன்றை
யுருகிநினைவார்கள், பெருகிநிகழ்வோரே. (கூ)

தேரரமணருஞ், சேரும்வகையில்லா
னேரின்முதுகுன்றை, நீர்நின்றுள்குமே. (க0)

நின்றுமுதுகுன்றை, நன்றுசம்பந்த
னொன்றுமுரைவல்லா, ரென்றுமுயர்வோரே. (கக)

திருச்சிற்றம்பலம்

## திருஆலவாய் - திருவிருக்குக்குறள்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

நீலமாமிடற், றாலவாயிலான்
பாலதாயினார், ஞாலமாள்வரே. (க)

ஞாலமேழுமா, மாலவாயிலார்
சீலமேசொலீர், காலன்வீடவே. (உ)

ஆலநீழலா, ராலவாயிலார்
காலகாலனார், பாலதாமினே. (ங)

அந்தமில்புக, ழெந்தையாலவாய்
பந்தியார்கழல், சிந்தைசெய்ம்மினே. (ச)

ஆடலேற்றினான், கூடலாலவாய்
பாடியேமனம், நாடிவாழ்மினே (ரு)

அண்ணலாலவாய், நண்ணினான்றனை
யெண்ணியேதொழத், திண்ணமின்பமே (சா)

அம்பொனாலவாய், நம்பனார்கழல்
நம்பிவாழ்பவர், துன்பம்வீடுமே. (எ)

அரக்கனார்வலி, நெருக்கனாலவா
யுரைக்குமுள்ளத்தார்க், கிரக்கமுண்மையே. (அ)

அருவனாலவாய், மருவினான்றனை
யிருவரேத்தநின், றுருவமோங்குமே. (கூ)

ஆரநாகமாஞ், சீரனாலவாய்த்
தேரமண்செற்ற, வீரனென்பரே. (க0)

அடிகளாலவாய்ப், படிகொள்சம்பந்தன்
முடிவிலின்றமிழ்செடிகணீக்குமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

இதுவே மதுரை.

சுவாமிபெயர் - சொக்கநாதசுவாமி, தேவியார் - மீனாக்ஷியம்மை.

## திரு இடைமருது - திருவிருக்குக்குறள்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

தோடொர்காதினன், பாடுமறையினன்
காடுபேணிநின், றாடுமருதனே. (க)

கருதார்புரமெய்வ, ரொருதேயினிதூர்வர்
மருதேயிடமாகும், விருதாம்வினைதீர்ப்பே (உ)

எண்ணுமடியார்க, ளண்ணன்மருதரைப்
பண்ணினமொழிசொல்ல, விண்ணுந்தமதாமே. (ங)

விரியார்சடைமேனி, யெரியார்மருதரைத்
தரியாதேத்துவார், பெரியாருலகிலே (ச)

பந்தவிடையேறு, மெந்தைமருதரைச்
சிந்தைசெய்பவர், புந்திநல்லோரே. (ரு)

கழலுஞ்சிலம்பார்க்கு, மெழிலார்மருதரைத்
தொழலேபேணுவார்க், குழலும்வினைபோமே. (சா)

பிறையார்சடையண்ணல், மறையார்மருதரை
நிறையானினைபவர், குறையாரின்பமே. (எ)

எடுத்தான்புயந்தனை, யடுத்தார்மருதரைத்
தொடுத்தார்மலர்சூட்ட, விடுத்தார்வேட்கையே. (அ)

இருவர்க்கெரியாய், வுருவமருந்தரைப்
பரவியேத்துவார், மருவிவாழ்வரே (௯)

நினைநஞ்சமணரே, ரென்றுமருந்தரை
யனாதியுரைசொலல, நன்றுமொழியாரே. (௧௦)

கருதசம்பந்தன, மருந்தரடிபாடிய
பெரிதுந்தமிழ்சொல்லப, பொருந்தவினைபோமே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திரு அன்னியூர்-திருவிருக்குக்குறள்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

மன்னியூருறை, சென்னியார்பிறை
யன்னியூரமர், மன்னுசோதியே (௧)

பழகும்தொண்டாவம, மழகனன்னியூர
குழகன்சேவடி, தொழுதுவாழ்மினே. (௨)

நீதிபேணுவீ, ராதியன்னியூர்ச
சோதிநாமமே, யோதியுய்மினே. (௩)

பத்தராயினீ, ரத்தனன்னியூர்ச்
சித்தர்தாடொழ, முத்தராவரே. (௪)

நிறைவுவேண்டுவீ, ரறவனன்னியூர
மறையுளான்கழற், குறவுசெய்மினே. (௫)

இன்பமவேண்டுவீ, ரன்பனன்னியூர
நன்பொன்னென்னுமி, னும்பராகவே. (௬)

அந்தணார்தந், தந்தையன்னியூ
ரெந்தையேயெனப், பந்தநீங்குமே (௭)

தூர்த்தனைசசெற்ற, தீர்த்தனன்னியூ
ரார்த்துமாவடைந், தேத்தியுய்மினே (௮)

இருவர்நாடிய, வரவனன்னியூர
பரவுவாரவிண், ணொருவராவரே (௯)

குண்டர்தேரருக், கண்டனன்னியூரத்
தொண்டுளோர்வினை, விண்டுபோகுமே. (௧௦)

பூந்தராயப்பந்த, னயந்தபாடலால
வேந்தனன்னியூர், சேர்ந்துவாழ்மினே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - ஆபதசகாயர், தேவியார் - பெரியநாயகியம்மை.

௬௨ பதிகம் - ௬௩.

## திருப்புறவம் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

எய்யாவென்றித்தானவரூர்மூன்றெரிசெய்த
மையார்கண்டன்மாதுமைவைகுந்திருமேனிச்
செய்யான்வெண்ணீறணிவான்றிகழ்பொற்பதிபோலும்
பொய்யாநாவினந்தணர்வாழும்புறவம்மே. (௧)

மாதொருபாலும்மாலொருபாலும்மகிழ்கின்ற
நாதனென்றேத்தும்நம்பரனைவைகுந்நகர்போலு
மாதவிமேயவண்டிசைபாடமயிலாடப்
போதலர்செம்பொன்புன்னைகொடுக்கும்புறவம்மே. (௨)

வற்றாநதியும்மதியும்பொதியுஞ்சடைமேலே
புற்றாடரவின்படமாடவுமிப்புவனிக்கோர்
பற்றாயிடுமின்பலியென்றடைவார்பதிபோலும்
பொற்றாமரையின்பொய்கைநிலாவும்புறவம்மே. (௩)

துன்னார்புரமும்பிரமன்சிரமுந்துணிசெய்து
மின்னார்சடைமேலரவும்மதியும்விளையாட
பன்னாளிடுமின்பலியென்றடைவார்பதிபோலும்
பொன்னார்புரிநூலந்தணர்வாழும்புறவம்மே (௪)

தேவாவரனேசரணென்றிமையோர்திசைதோறுங்
காவாயென்றுவந்தடையக்கார்விடமுண்டு
பாவார்மறையும்பயில்வோருறையும்பதிபோலும்
பூவார்கோலச்சோலைசுலாவும்புறவம்மே. (௫)

கற்றறிவெய்திக்காமன்முன்னாகும்முகவெல்லா
மற்றறநின்னடிசரணென்னுமடியோர்க்குப்
பற்றதுவாயபாசுபதன்சேர்பதியென்பர்
பொற்றிகழ்மாடத்தோணிநிலாவும்புறவம்மே. (௬)

எண்டிசையோரஞ்சிடுவகைகார்சேர்வரையென்னக்
கொண்டெழுகோலமுகில்போற்பெரியகரிதன்னைப்
பண்டுரிசெய்தோன்பாவனைசெய்யும்பதியென்பர்
புண்டரிகத்தோன்போன்மறையோர்சேர்புறவம்மே. (௭)

பரக்குந்தொல்சீர்த்தேவர்கள்சேனைபவ்வத்தைத்
துரக்குஞ்செந்தீப்போலமர்செய்யுந்தொழின்மேவு
மரக்கன்றிண்டோளழிவித்தானக்காலத்திற்
புரக்கும்வேந்தன்சேர்தருமூதூர்புறவம்மே. (௮)

மீத்திகழண்டந்தயனோடுமிகுமாலு
மூர்த்தியையடிக்காணவோணாதுமுயல்விட்டாங்
கேத்தவெளிப்பாடெய்தியவன்றனிடமென்பர்
பூத்திகழ்சோலைத்தென்றலுலாவும்புறவம்மே. (௯)

பேயுபாகொள்ளிக்கைவிளக்காகப்பெருமானும்
தீயுகந்தாடிருக்குறிப்பாயிற்றுநாம் (எ)

மலைமகளுடுக்கதாளான்வலிகெடவூன்றிமலரோன்றன
றலைகலனாகப்பலிதிரிந்துணபாபழியோரா
சொலவலவேதஞ்சொலவலகீதஞ்சொல்லுங்காற்
சிலவலபோலுஞ்சிராப்பள்ளிச்சேடர்செய்கையே. (அ)

அரப்பள்ளியானுமலருறைவானுமறியாமைக்
கரப்புள்ளிநாடிககண்டிலரேனுங்கல்சூழ்ந்த
சிரப்பள்ளிமேயவார்சடைச்செல்வனையேத்தும்
பிரப்புள்ளீருய்மையேயிலாகணமாலிகழாரே. (கூ)

நாணாநாடகமநிகழ்ந்தாரகளுங்கஞ்சிகாட்காலை
யூணாப்பலவுண்டோதுவோரகளுரைகளுஞ்சொற்
பேணாதுறுசீர்பெருதுமென்பீரெம்பெருமானார்
சேணார்கோயில்சிராப்பள்ளிசென்றுசேர்மினே. (க0)

தேனயம்பாடுஞ்சிராப்பள்ளியானைத்திரைசூழ்ந்த
கானல்சங்கேறுங்கழுமலவூரிற்கவுணியன
ஞானசம்பந்தனலமிகுபாடலிவைவல்லார்
வானசம்பந்தத்தவரொடுமன்னிவாழ்வாரே (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - தாயுமானேசுவரர், தேவியார் - மட்டுவார்குழலம்மை.

---

## திருக்குற்றாலம் - பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

வம்பார்குன்றநீடுயர்சாரல்வளர்வேங்கைக்
கொம்பார்சோலைக்கோலவண்டியாழ்செய்குற்றால
மம்பானெய்யோடாடலமர்ந்தானலர்கொன்றை
நம்பானமேயநன்னகர்போலுநமரங்காள். (க)

பொடிகள்பூசித்தொண்டர்பின்செல்லப்புகழ்விம்மக்
கொடிகளோடுநாள்விழமல்குகுற்றாலங்
கடிகொள்கொன்றைக்கூவிளமாலைகாதல்செய்
யடிகண்மேயநன்னகர்போலுமடியீர்காள் (உ)

செல்வமல்குசெண்பகமவேங்கைசெனறேறிக
கொல்லைமுல்லைமெல்லருமபீனுங்குற்றாலம
வில்லின்ஒல்கமும்மதிலெய்துவினைபோக
நல்குநம்பானன்னகர்போலுநமரங்காள். (ங)

பக்கம்வாழைப்பாயகனியோடுபலவின்றேன
கொக்கின்கோட்டுப்பைங்கனிதூங்குங்குற்றால

மக்கும்பாம்புமாமையும்பூண்டோரனலேந்தி
நக்கன்மேயநன்னகர்போலுநமரங்காள் (௪)

மலையார்சாரன்மகவுடன்வந்தமடமந்தி
குலையார்வாழைத்தீங்கனிமாந்துங்குற்றால
மிலையார்சூலமேந்தியகையானெயிலெய்த
சிலையான்மேயநன்னகர்போலுஞ்சிறுதொண்டீர். (௫)

மைம்மாநீலக்கண்ணியர்சாரன்மணிவாரிக்
கொய்ம்மாவேனலுண்கிளியோப்புங்குற்றாலங்
கைம்மாவேழத்தீருரிபோர்த்தகடவுளெம்
பெம்மான்மேயநன்னகர்போலும்பெரியீர்காள் (௬)

நீலநெய்தறண்சுனைசூழ்ந்தநீள்சோலைக்
கோலமஞ்ஞைபேடையொடாடுங்குற்றாலங்
காலன்றன்னைக்காலாற்காய்ந்தகடவுளெஞ்
சூலபாணிநன்னகர்போலுந்தொழுவீர்காள் (௭)

போதும்பொன்னுமுந்தியருவிபுடைசூழக்
கூதன்மாரிநுண்டுளிதூங்குங்குற்றால
மூதூரிலங்கைமுட்டியகோனைமிறைசெய்த
நாதன்மேயநன்னகர்போலுநமரங்காள். (௮)

அரவின்வாயின்முள்ளெயிறேய்ப்பவரும்பீன்று
குரவம்பாவைமுருகமர்சோலைக்குற்றாலம்
பிரமனோடுமாலறியாதபெருமையெம்
பரமன்மேயநன்னகர்போலும்பணிவீர்காள் (௯)

பெருந்தண்சாரல்வாழ்சிறைவண்டுபெடைபுல்கிக்
குருந்தம்மேறிச்செவ்வழிபாடுங்குற்றால
மிருந்துண்டேருநின்றுண்சமணுமெடுத்தார்ப்ப
வருந்தண்மேயநன்னகர்போலுமடியீர்காள் (௧௦)

மாடவீதிவருபுனற்காழியார்மன்னன்
கோடலீன்றுகொழுமுனைகூம்புங்குற்றால
நாடவல்லநற்றமிழ்ஞானசம்பந்தன்
பாடல்பத்தும்பாடநம்பாவம்பறையுமே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

பாண்டிநாட்டிலுள்ளது

சுவாமிபெயர் - குறும்பலாவீசுவரர், தேவியார் - குழல்வாய்மொழியம்மை.

## திருப்பரங்குன்றம் - பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

நீடலர்சோதிவெண்பிறையோடுநிரைகொன்றைச்
சூடலனந்திச்சுடரெரியேந்திச்சுடுகானி

ஓங்கியமூவிலைநற்சூலமொருகையன்சென்னி
தாங்கியகங்கையொடுமதியஞ்சடைக்கணிந்து
கோங்கணவும்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர்வாய்ந்த
பாங்கனதாள்தொழுவார்வினையாயபற்றறுமே. (௬)

நீடலர்கொன்றையொடுநிமிர்புன்சடைதாழவெள்ளை
வாடலுடைதலையிற்பலிகொள்ளுமவர்க்கையர்
கோடல்வளம்புறவிற்கொடிமாடச்செங்குன்றூர்நின்ற
சேடனதாள்தொழுவார்வினையாயவைதேயுமே (௭)

மத்தநன்மாமலரும்மதியும்வளர்கொன்றையுடனேதுன்று
தொத்தலர்செஞ்சடைமேற்றுதையவுடன்சூடிக்
கொத்தலர்தண்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர்மேய
தத்துவனைத்தொழுவார்தடுமாற்றறுப்பாரே. (௮)

செம்பொனின்மேனியனாம்பிரமன்திருமாலுந்தேடநின்ற
வம்பவளத்திரள்போலொளியாயவாதிபிரானை
கொம்பணவும்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர்மேய
நம்பனதாள்தொழுவார்வினையாயநாசமே (௯)

போதியர்பிண்டியரென்றிவர்கள்புறங்கூறும்பொய்ந்நூ
லோதியகட்டுரைகேட்டுழல்வீர்வரிக்குயில்கள்
கோதியதண்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர்நின்ற
வேதியனைத்தொழநும்வினையானவீடுமே. (௧0)

அலைமலிதண்புனல்சூழ்ந்தழகார்புகலிந்நகர்பேணுந்
தலைமகனாகிநின்றதமிழ்ஞானசம்பந்தன
கொலைமலிமூவிலையானைகொடிமாடச்செங்குன்றூரேத்து
நலமலிபாடல்வல்லார்வினையானநாசமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

இது திருச்செங்கோடு என வழங்குகின்றது

ஆ பதிகம் - ௧0௭.

---

## திருப்பாதாளீச்சரம் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

மின்னியல்செஞ்சடைமேல்விளங்குமதியொடுநல்ல
பொன்னியல்கொன்றையினோடுபுனல்சூடிப்பொற்பமரு
மன்னமனநடையாளொருபாகத்தமர்ந்தருள்நாளும
பன்னியபாடலினானுறைகோயில்பாதாளே (௧)

நீடலர்கொன்றையொடுநிரம்பாமதிசூடிவெள்ளைத்
தோடமர்காதினல்லகுழையான்சுடுநீற்றா
னாடரவம்பெருகவனலேந்திக்கைவீசிவேதம்
பாடலினானுறைகோயில்பாதாளே (௨)

## திருச்சிரபுரம் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

வாருறுவனமுலைமங்கைபங்க, னீருறுசடைமுடிநிமலனிடங்
காருறுகடிபொழில்சூழ்ந்தழகார், சீருறுவளவயற்சிரபுரமே. (க)

அங்கமொடருமறையருள்புரிந்தான, றிங்களொடரவணிதிகழ்முடியன்
மங்கையொடினிதுறைவளநகரஞ், செங்கயன்மிளிர்வயற்சிரபுரமே (உ)

பரிந்தவன்பன்முடியமரர்க்காகித், திரிந்தவர்புரமவைதீயினிவேவ
வரிந்தவெஞ்சிலைபிடித்தடுசரத்தைத், தெரிந்தவன்வளநகர்சிரபுரமே. (௩)

நீறணிமேனியனீண்மதியோ, டாறணிசடையினனணியிழையோர்
கூறணிந்தினிதுறைகுளிர்நகரஞ், சேரணிவளவயற்சிரபுரமே (௪)

அருந்திறலவுணர்களரணழியச், சரந்துரந்தெரிசெய்தசங்கரனூர்
குருந்தொடுகொடிவிடுமாதவிகள், டிருந்தியபுறவணிசிரபுரமே. (௫)

கலையவன்மறையவன்காற்றொடுதீ, மலையவன்விண்ணொடுமண்ணுமவன
கொலையவன்கொடிமதில்கூட்டழித்த, சிலையவன்வளநகர்சிரபுரமே. (௬)

வானவர்மதியொடுமத்தருசூடித், தானவர்புரமெய்தசைவனிடங்
கானமர்மடமயில்பெடைபயிலுந், தேனமர்பொழிலணிசிரபுரமே. (௭)

மறுத்தவர்திரிபுரமாய்ந்தழியக், கறுத்தவன்காரரக்கன்முடிதோ
ளிறுத்தவனிருஞ்சினக்காலனைமுன், செறுத்தவன்வளநகர்சிரபுரமே. (௮)

வண்ணநன்மலருறைமறையவனுங், கண்ணனுங்கழறொழக்கனலுருவாய்
விண்ணுறவோங்கியவிமலனிடந், திண்ணநன்மதிலணிசிரபுரமே. (௯)

வெற்றரையுழல்பவர்விரிதுகிலார், கற்றிலரறவுரைபுறனுரைக்கப்
பற்றலர்திரிபுரமூன்றும்வேவச், செற்றவன்வளநகர்சிரபுரமே. (க0)

அருமறைஞானசம்பந்தனந்தண், சிரபுரநகருறைசிவனடியைப
பரவியசெந்தமிழ்பத்தும்வல்லார், திருவொடுபுகழ்மல்குதேசினரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருவிடைமருதூர் - பண் - வியாழக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்.

மருந்தவன்வானவர்தானவர்க்கும்
பெருந்தகைபிறவினோடிறவுமானா
னருந்தவமுனிவரோடானிழற்கீ
ழிருந்தவன்வளநகரிடைமருதே. (க)

தோற்றவன்கேடவன்றுணைமுலையாள
கூற்றவன்கொல்புலித்தோலசைத்த
நீற்றவனிறைபுனனீள்சடைமே
லேற்றவன்வளநகரிடைமருதே. (உ)

படையுடைமழுவினன்பால்வெண்ணீற்ற
னுடைநவிலேற்றினன்ஞாலமெலா
முடைதலையிற்பலிகொண்டுழல்வா
னிடைமருதினிதுறையெம்மிறையே. (௩)

பணைமுலையுமையொருபங்கனொன்னா
துணைமதின்மூன்றையுஞ்சுடரினின்மூழ்கக்
கணைதுரந்திடுதிறற்காலற்செற்ற
வினையிலிவளநகரிடைமருதே. (௪)

பொழிலவன்புயலவன்புயலியக்குந்
தொழிலவன்றுயரவன்றுயரகற்றுங்
கழலவன்கரியுரிபோர்த்துகந்த
வெழிலவன்வளநகரிடைமருதே. (௫)

நிறையவன்புனலொடுமதியும்வைத்த
பொறையவன்புகழவன்புகழநின்ற
மறையவன்மறிகடனஞ்சையுண்ட
விறையவன்வளநகரிடைமருதே. (௬)

நனிவளர்மதியொடுநாகம்வைத்த
பனிமலர்க்கொன்றையம்படர்சடையன்
முனிவரொடமரர்கண்முறைவணங்க
வினிதுறைவளநகரிடைமருதே. (௭)

தருக்கினவரக்கனதாளுந்தோளு
நெரித்தவனெடுங்கைமாமதகரியன்
றுரித்தவனொன்னலர்புரங்கண்மூன்று
மெரித்தவன்வளநகரிடைமருதே. (௮)

பெரியவன்பெண்ணினொடாணுமானா
வரியரவணைமறிகடற்றுயின்ற
கரியவனலரவன்காண்பரிய
வெரியவன்வளநகரிடைமருதே. (௯)

சிந்தையிலசமணொடுதேரர்சொன்ன
புந்தியிலுரையவைபொருள்கொளாதே
யந்தணர் * ஓத்தினொடரவமோவா
வெந்தைதன்வளநகரிடைமருதே. (௧௦)

இலைமலிபொழிலிடைமருதிறையை
நலமிகுஞானசம்பந்தன்சொன்ன
பலமிகுதமிழிவைபத்தும்வல்லா
ருலகுறுபுகழினொடோங்குவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

* ஓத்து - என்பது வேதம்.

வென்றிகொளெயிற்றுவெண்பன்றிமுன்னாட்
சென்றடிவீழ்தருசிவபுரமே. (௨)

மலைமகண்மறுகிட மதகரியைக்
கொலைமல்கவுரிசெய்தகுழகனக
ரலைமல்கும் * அரிசிலின்றன்னயலே
சிலைமல்குமதிலணிசிவபுரமே. (௩)

மண்புனலனலொடுமாருதமும்
விண்புனைமருவியவிகிர்தனகர்
பண்புனைகுரல்வழிவண்டுகெண்டிச்
செண்பகமலர்பொழிற்சிவபுரமே (௪)

வீறுநன்குடையவண்மேனிபாகங்
கூறுநன்குடையவன்குளிர்நகர்தா
னாறுநன்குரவிரிவண்டுகெண்டித்
தேறலுண்டெழுதருசிவபுரமே (௫)

மாறெதிர்வருதிரிபுரமெரித்து
நீறதுவாக்கியநிமலனகர்
நாறுடைநடுபவருழவரொடுஞ்
சேறுடைவயலணிசிவபுரமே. (௬)

ஆவிலைந்தமர்ந்தவனரிவையொடு
மேவினனிருந்ததோர்வியனகர்தான்
பூவிலவண்டமர்தருபொய்கையனனச்
சேவலனபெடைபுல்குசிவபுரமே. (௭)

எழின்மலையெடுத்தவலிராவணனன்
முழுவலியடக்கியமுதல்வனகர்
விழவினிலெடுத்தவெண்கொடிமிடைந்து
செழுமுகிலடுக்குமவண்சிவபுரமே. (௮)

சங்களவியகையனசதுர்முகனு
மங்களவறிவரியவனகர்தான
கங்குலும்பறவைகள்கமுகுதொறுஞ்
செங்கனிநுகர்தருசிவபுரமே. (௯)

மண்டையிற்குண்டிகைமாசுதரு
மிண்டரைவிலக்கியவிமலனகர்
பண்டமர்தருபழங்காவிரியின்
றெண்டிரைபொருதெழுசிவபுரமே. (க0)

சிவனுறைதருசிவபுரநகரைக்
கவுணியர்குலபதிகாழியர்கோன்

* அரிசில்-என்பது ஒருநதி.

றவமலருந்தமிழிவைசொல்லவல்லார்
நலமொடுசிவகதிநண்ணுவரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவல்லம்-பண் - வியாழக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

எரித்தவன்முப்புரமெரியின்மூழ்கத்
தரித்தவன்கங்கையைத்தாழ்சடைமேல்
விரித்தவன்வேதங்கள்வேறுவேறு
தெரித்தவனுறைவிடந்திருவல்லமே (க)

தாயவனுலகுக்குத்தன்னொப்பிலாத்
தூயவன்றூமதிசூடியெல்லா
மாயவனமரர்க்குமுனிவர்கட்குஞ்
சேயவனுறைவிடந்திருவல்லமே (உ)

பார்த்தவன்காமனைப்பண்பழியப்
போர்த்தவன்போதகத்தின்னுரிவை
யார்த்தவனான்முகன்றலையையன்று
சேர்த்தவனுறைவிடந்திருவல்லமே. (ங)

கொய்தவமலரடிகூடுவார்தம்
மைதவழ்திருமகள்வணங்கவைத்துப்
பெய்தவன்பெருமழையுலகமுய்யச்
செய்தவனுறைவிடந்திருவல்லமே. (ச)

சார்ந்தவர்க்கின்பங்கடழைக்கும்வண்ண
நேர்ந்தவனேரிழையோடுங்கூடித்
தேர்ந்தவர்தேடுவார்தேடச்செய்தே
சேர்ந்தவனுறைவிடந்திருவல்லமே. (ரு)

பதைத்தெழுகாலனைப்பாதத்தொன்றா
லுதைத்தெழுமாமுனிக்குண்மைநின்று
விதிர்த்தெழுதக்கனைவேள்வியன்று
சிதைத்தவனுறைவிடந்திருவல்லமே (சு-எ)

இகழ்ந்தருவரையினையெடுக்கலுற்றாங்
ககழ்ந்தவல்லரக்கனையடர்த்தபாத
நிகழ்ந்தவர்நேடுவார்நேடச்செய்தே
திகழ்ந்தவனுறைவிடந்திருவல்லமே. (அ)

பெரியவன்சிறியவர்சிந்தைசெய்ய
வரியவனருமறையங்கமானானை
கரியவனான்முகன்காணவொண்ணாத்
தெரியவன்வளநகர்திருவல்லமே. (கூ)

பாய்ந்தகங்கையொடுபடவரவ
மேய்ந்தவனிராமனதீச்சரமே (ரு)

சரிகுழலிலங்கியதையலகாணும்
பெரியவனகாளிதனபெரியகூத்தை
யரியவனுடலோனங்கையேந்து
மெரியவனிராமனதீச்சரமே (சா)

மாறிலாமாதொளிபங்சனமேனி
நீறதுவாடலோனீளசடைமே
லாறதுசூடுவானெழுகலவிடை
யேறவனிராமனதீச்சரமே. (எ)

தடவரையரககனைத்தலைநெரிதந்தோன்
படவரவாட்டிபபடாசடைய
னடமதுவாடலானமறைக்கு
மிடமவனிராமனதீச்சரமே. (அ)

தனமணிதையறன்பாகன்றன்னை
யனமணியயனணிமுடியுங்காணான்
பனமணிவரவரிபாதங்காணு
னினமணியிராமனதீச்சரமே. (கூ)

தறிபோலாஞ்சமணர்சாக்கியசொற்கொளே
லறிவோராணுமமறிந்துணாமின்
மறிகையோனறனமுடிமணியார்கங்கை
யெறிபவனிராமனதீச்சரமே. (கO)

தேனமலர்க்கொனறையோன
மூந்தமக்கூனமனறே. (கக)

திருச்சிற்றம்பலம்.

இது-சிதலமானபதிகங்களிலொன்று.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் இராமநாதேசுவரர், தேவியார் - கருவார்குழலியம்மை.

---

## திருநீலகண்டம் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

அவ்வினைகிவ்வினையாமென்றுசொல்லுமஃதறிவீ
ருய்வினைநாடாதிருப்பதுமுந்தமக்கூனமன்றே
கைவினைசெய்தெம்பிரானகழல்போற்றுதுநாமடியோஞ்
செய்வினைவந்தெமைத்தீண்டப்பெறாதிருநீலகண்டம். (க)

காவினையிட்டுங்குளம்பலதொட்டுங்கனிமனத்தா
லேவினையாலெயின்மூன்றெரித்தீரென்றிருபொழுதும்

பூவினைக்கொய்துமலரடிபோற்றுதுநாமடியோம்
தீவினைவந்தெமைத்தீண்டப்பெறா திருநீலகண்டம். (உ)

முலைத்தடமூழ்கியபோகங்களுமற்றெவையுமெல்லாம
விலைத்தலையாவணங்கொண்டெமையாண்டவிரிசடையீ
ரிலைத்தலைச்சூலமுந்தண்டுமழுவுமிவையுடையீர்
சிலைத்தெமைத்தீவினைதீண்டப்பெறா திருநீலகண்டம் (௩)

விண்ணுலகாள்கின்றவிச்சாதரர்களும்வேதியரும
புண்ணியரென்றிருபோதுந்தொழப்படும்புண்ணியரே
கண்ணிமையாதனமூன்றுடையீருங்கழலடைந்தோந்
திண்ணியதீவினைதீண்டப்பெறா திருநீலகண்டம் (ச)

மற்றிணையில்லாமலைதிரண்டன்னதிண்டோளுடையீர்
கிற்றெமையாட்கொண்டுகேளாதொழிவதுந்தன்மைகொலோ
சொற்றுணைவாழ்க்கைதுறந்துன்றிருவடியேயடைந்தோஞ்
செற்றெமைத்தீவினைதீண்டப்பெறா திருநீலகண்டம. (ரு)

மறக்குமனத்தினைமாற்றியெமாவியைவற்புறுத்திப்
பிறப்பில்பெருமானதிருந்தடிக்கீழ்ப்பிழையாதவண்ணம
பறித்தமலர்கொடுவந்துமையேத்தும்பணியடியோந்
சிறப்பிலித்தீவினைதீண்டப்பெறா திருநீலகண்டம. (சு-எ)

கருவைக்கழித்திட்டுவாழ்க்கைகடிந்துங்கழலடிக்கே
யுருகிமலர்கொடுவந்துமையேத்துதுநாமடியோந்
செருவிலரக்கனைச்சீரிலடர்த்தருள்செய்தவரே
திருவிலித்தீவினைதீண்டப்பெறா திருநீலகண்டம் (அ)

நாற்றமலர்மிசைநான்முகனாரணன்வாதுசெய்து
தோற்றமுடையவடியுமுடியுந்தொடர்வரியீர்
தோற்றினுந்தோற்றுந்தொழுதுவணங்குதுநாமடியோஞ்
சீற்றமதாம்வினைதீண்டப்பெறா திருநீலகண்டம். (கூ)

சாக்கியப்பட்டுஞ்சமணுருவாகியுடையொழிந்தும்
பாக்கியமின்றியிருதலைப்போகமும்பற்றும்விட்டார்
பூக்கமழ்கொன்றைப்புரிசடையீரடிபோற்றுகின்றோந்
தீக்குழித்தீவினைதீண்டப்பெறா திருநீலகண்டம. (க0)

பிறந்தபிறவியிற்பேணியெஞ்செல்வன்கழலடைவா
னிறந்தபிறவியுண்டாகிலிமையவர்கோனடிக்கட்
டிறம்பயில்ஞானசம்பந்தனசெந்தமிழ்பத்தும்வல்லார்
நிறைந்தவுலகினில்வானவர்கோனொடுங்கூடுவரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

இது - திருக்கொடிமாடச் செங்குன்றூரில் - அடியார்களுக்குக்கண்ட
சுரப்பிணிநீங்க வோதியருளியது.

## திருப்பிரமபுரம்-மொழிமாற்று-பண்-வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

காடதணிகலங்காரரவம்பதிகாலதனிற்
றோடதணிகுவர்சுந்தரக்காதினிற்றூச்சிலம்பர்
வேடதணிவர்விசயற்குருவம்வில்லுங்கொடுப்பர்
பீடதணிமணிமாடப்பிரமபுரத்தாரே (௧)

கற்றைச்சடையதுகங்கணமுன்கையிற்றிங்கள்கங்கை
பற்றித்துமுப்புரம்பார்படைத்தோன்றலைசுட்டதுபண்
டெற்றித்துப்பாம்பையணிந்ததுகூர்மழுவேழில்விளங்கும
வெற்றிச்சிலைமதில்வேணுபுரத்தெங்கள்வேதியரே. (௨)

கூவிளங்கையதுபேரிசடைமுடிக்கூட்டத்தது
தூவிளங்கும்பொடிபூண்டதுபூசிற்றுத்துத்திநாக
மேவிளங்குநுதலாளையும்பாகமுரித்தனரின
பூவிளஞ்சோலைப்புகலியுண்மேவியபுண்ணியரே. (௩)

உரித்ததுபாம்பையுடன்மிசையிட்டதோரொண்களிற்றை
யெரித்ததுமோராமையையின்புறப்பூண்டதுமுப்புரத்தைச்
செருத்ததுசூலத்தையேந்திற்றுத்தக்கனைவேள்விபன்னால்
விருத்தனவாழ்தருவெங்குருவில்வீற்றிருந்தவரே. (௪)

கொட்டுவரக்கரையார்ப்பதுதக்கைகுறுந்தாளன
விட்டுவர்பூதங்கலப்பிலரின்புகழென்புலவின
மட்டுவருந்தழல்சூடுவர்மத்தமுமேந்துவர்வான்
றொட்டுவருங்கொடித்தோணிபுரத்துறைசுந்தரரே. (௫)

சாத்துவர்பாசந்தடக்கையிலேந்துவர்கோவணந்தங்
கூத்தவர்கச்சுக்குலாவிநின்றாடுவர்கொக்கிறகும்
போர்த்தவராலப்படைபேயணைசூடுவர்பேரெழிலார்
பூத்தவனைகைதொழுபூந்தராயமேவியபுண்ணியரே. (௬)

காலதுகங்கைகற்றைச்சடையுள்ளாற்கழல்சிலம்பு
மாலதுவேந்தன்மழுவதுபாகம்வளர்கொழுங்கோட்
டாலதுவூர்வரடலேறிருப்பரணிமணிநீர்ச்
சேலதுகண்ணியோர்பங்கர்சிரபுரமேயவரே. (௭)

நெருப்புறுவெள்விடைமேனியரேறுவர்நெற்றியின்கண்
மருப்புறுவன்கண்ணர்தாதையைக்காட்டுவர்மாமுருகன்
விருப்புறுபாம்புக்குமெய்த்தந்தையார்விறன்மாதவர்வாழ்
பொருப்புறுமாளிகைத்தென்புறவத்தணிபுண்ணியரே. (௮)

இலங்கைத்தலைவனையேந்திற்றிறுத்ததிரலையின்னாட்
கலங்கியகூற்றுயிர்பெற்றதுமாணிகுமைபெற்றது
கலங்கிளர்மொந்தையினாடுவர்கொட்டுவர்காட்டகத்துச்
சலங்கிளர்வாழ்வயற்சண்பையுண்மேவியதத்துவரே. (௯)

அடியிணைகண்டிலனன்றுமறையோன்மாலுமுடிகண்டிலன
கொடியணியும்புலியேறுகந்தேறுவானேதோலுடுப்பர்
பிடியணியுநடையாளவெற்பிருப்பதோர்கூறுடையார்
கடியணியும்பொழிற்காழியுண்மேயகறைக்கண்டரே (கo)

கையதுவெண்குழைகாததுசூலமமணர்புத்த
ரெய்துவாதமமையடியவரெய்தாரோரெணக்கொம்பு
மெய்திகழ்கோவணமபூண்பதும்பதுமேதகைய
கொய்தலர்பூம்பொழிற்கொச்சையுண்மேவியகொற்றவரே. (கக)

கல்லுயர்கழுமலவிஞ்சியுண்மேவியகடவுடன்னை
நல்லுணாஞானசமபந்தனஞானத்தமிழ்நன்குணர்தல்
சொல்லுதல்கேட்டல்வல்லோர்தொல்லைவானவர்தங்களோடுஞ்
செல்குவர்சீரருளாற்பெறலாஞ்சிவலோகமதே (கஉ)

திருச்சிற்றம்பலம்.

மொழிமாற்றும்வகை

காட்டதணிகலங் காரரவம்பதி—இதனை-காடுபதி எனவும், அணிகலங்காரரவம்எனவும், காலதனில்தோட்டதணிகுவர் சுந்தரககாதினில் தூசசிலம்பர்—இதனை - காலதனில் தூசசிலம்பர் எனவும், சுந்தரக்காதினில தோட்டது அணிகுவர் எனவும், வேட்டதணிகுவர் விசயற்குருவம் வில்லுங்கொடுப்பர்—இதனை-வேட்டது உருவம் அணிகுவர் எனவும், விசயற்கு வில்லுங்கொடுப்பர் எனவும, மொழிமாற்றுக.—இவ்வாறே மற்றத்தேவாரங்களுக்கு மொழிமாற்றுக.

---

## திருப்பருப்பதம் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

சுடுமணியுமிழ்நாகஞ்சூழ்தரவரைக்கசைத்தா
னிடுமணியெழிலானையேறலனெருதேறி
விடமணிமிடறுடையான்மேவியநெடுங்கோட்டுப்
படுமணிவிடுசுடரார்பருப்பதம்பரவுதுமே. (க)

நோய்புல்குதோல்திரையநரைவருநுகருடம்பி
னீபுல்குதோற்றமெல்லாநினையுள்குமடநெஞ்சே
வாய்புல்குதோத்திரத்தால்வலஞ்செய்துதலைவணங்கிப
பாய்புலித்தோலுடையான்பருப்பதம்பரவுதுமே (உ)

துனியுறுதுயர்தீரத்தோன்றியோர்நல்வினையா
லினியுறுபயனாதலிரண்டுறமனமவையேற்
கனியுறுமரமேறிக்கருமுசுக்கழையுகளும
பனியுறுகதிர்மதியான்பருப்பதம்பரவுதுமே (ங)

கொங்கணிநறுங்கொன்றைத்தொங்கலர்குளிர்சடையா
னெங்கணோயகலநின்றுனைவருளீசனிட
பைங்கணைவரிசிலையானநங்கனையழகழித்த
பைங்கண்வெள்ளேறுடையானபருப்பதம்பரவுதுமே. (ச)

துறைபலசுனைமூழ்கித் தூமலர்சுமந்தோடி
மறையொலிவாயமொழியால்வானவாமகிழ்ந்தேத்தச்
சிறையொலிகிளிபயிலுந்தேனினமொலியோவாப்
பறைபடுவிளங்கருவிப்பருப்பதம்பரவுதுமே. (௫)

சீர்கெழுசிறப்போவாச்செய்தவநெறிவேண்டி
லேர்கெழுமடநெஞ்சேயிரண்டுறமனம்வையேற்
கார்கெழுநறுங்கொன்றைக்கடவுளதிடம்வகையாற்
பார்கெழுபுகழோவாப்பருப்பதம்பரவுதுமே. (௬)

புடைபுல்குபடர்கமலம்புகையொடுவிரைகமழத்
தொடைபுல்குநறுமாலைதிருமுடிமிசையேற
விடைபுல்குகொடியேந்திவெந்தவெண்ணீறணிவான்
படைபுல்குமழுவாளன்பருப்பதம்பரவுதுமே. (௭)

நினைப்பெனுநெடுங்கிணற்றைநின்றுநின்றயராதே
மனத்தினைவலிதொழிந்தேனவலம்வந்தடையாமைக்
கனைத்தெழுதிரள்கங்கைகமழ்சடைக்கரந்தான்றன்
பனைத்திரளபாயருவிப்பருப்பதம்பரவுதுமே. (௮)

மருவியவல்வினைநோயவலம்வந்தடையாமற்
றிருவுருவமர்ந்தானுந்திசைமுகமுடையானு
மிருவருமறியாமலெழுந்ததோரெரிநடுவே
பருவரையுறநிமிர்ந்தான்பருப்பதம்பரவுதுமே. (௯)

சடங்கொண்டசாத்திரத்தார்சாக்கியர்சமண்குண்டர்
மடங்கொண்டவிரும்பியராய்மயங்கியோர்பேய்த்தேர்ப்பின்
குடங்கொண்டுநீர்க்குச்செல்வார்போதுமின்குஞ்சரத்தின்
படங்கொண்டபோர்வையினான்பருப்பதம்பரவுதுமே. (௧௦)

வெண்செநெல்விளைகழனிவிழவொலிகழுமலத்தான்
பண்செலப்பலபாடலிசைமுரல்பருப்பதத்தை
நணசொலினாற்பரவுஞானசம்பந்தனல்ல
வொண்சொலினிவைமாலையுருவெணத்தவமாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

இது - ஸ்ரீசைலமென்றும், மல்லிகார்ச்சுனமென்றும், வழங்குகின்றது.

வடதேசத்திலுள்ளது.

சுவாமிபெயர் பருப்பதேசுவரர், தேவியார் - பருப்பதமங்கையம்மை.

ஆ பதிகம் - ௧௧௮.

## திருக்கள்ளில - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

முள்ளின்மேன்முதுகூகைமுரலுஞ்சோலை
வெள்ளின்மேல்விடுகூரைக்கொடிவிளைந்த
கள்ளினமேயவண்ணல்கழல்கணாளு
முள்ளுமேலுயர்வெய்தலொருதலையே. (௧)

ஆடலானபாடலானரவங்கள்பூண்டா
னோடலாற்கலனிலலானுறைபதியாற்
காடலாற்கருதாதகள்ளின்மேயான்
பாடலாம்பெரியாாகள்பரசுவாரே. (உ)

எண்ணார்முமமதிலெய்தவிமையமூக்கண்
பண்ணாநான்மறைபாடும்பரமயோகி
கண்ணார்நீறணிமார்பன்கள்ளின்மேயான
பெண்ணுமபெருமானெமபிஞ்ஞகனே. (ந)

பிறைபெற்றசடையண்ணல்பெடைவண்டாலும்
நறைபெற்றவிரிகொன்றைத்தார்நயந்த
கறைபெற்றமிடற்றண்ணல்கள்ளின்மேயா
னிறைபெற்றவடியார்தநெஞ்சுளானே (ச)

விரையாலுமலராலுமவிழுமைகுன்று
வுரையாலுமெதிர்கொளவூராரமமாக்
கரையாரபொன்புனல்வேலிக்கள்ளின்மேயா
னரையாரவெண்கோவணத்தவண்ணறானே. (ரு)

நலனாயபலகொள்கைநம்பானலல
வலனாயமழுவாளுமவேலும்வல்லான்
கலனாயதலையோட்டான்கள்ளினமேயான
மலனாயதீர்த்தெய்துமாதவத்தோர்க்கே (சு)

பொடியாரமெய்பூசினுமபுறவினறவங்
குடியாவூர்திரியினுங்கூடப்பிடினும்
கடியார்பூம்பொழிற்சோலைக்கள்ளின்மேயா
னடியார்பண்பிகழ்வாாகளாதாகளே (எ)

திருநீலமலரொண்கண்டேவிபாகம
புரிநாலுந்திருநீறுமபுலகுமார்பிற்
கருநீலமலாவிமமுகள்ளிலென்றும
பெருநீலமிடற்றண்ணல்பேணுவதே. (அ)

வரியாயமலரானுமமவையந்தன்னை
யுரிதாயவளந்தானுமுள்ளுதற்கங்
கரியானுமரியாதகள்ளினமேயான்
பெரியானென்றறிவார்கள்பேசுவரே. (கூ)

ஆச்சியப்பேய்களோடமணர்குண்டர்
பேச்சிவைநெறியல்லபேணுமினகள்
மாச்செய்தவளவயன்மல்குகள்ளி
நீச்செய்தசடையண்ணறிருந்தடியே. (க0)

திகைநான்குமபுகழ்காழிசெல்வமல்கு
பகலபோலுமபேரொளியான்பந்தனல்ல
முகைமேவுமுதிர்சடையான்கழலிலேத்த
புகழோடுமபேரின்பமபுகுதுமன்றே. (கக)

திருச்சிற்றம்பலம்.

தொண்டைநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - சிவாநந்தேசுவரர், தேவியார் - ஆனந்தவல்லியம்மை.

---

## திருவையாறு - திருவிராகம் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

பணிந்தவரருவினைபற்றறுத்தருள்செயத்
துணிந்தவன்றோலொடுநூறுதைமார்பினிற்
பிணிந்தவனரவொடுபேரெழிலாமைகொண்
டணிந்தவன்வளநகரந்தணையாறே (க)

கீர்த்திமிக்கவனகர்கிளரொளியுடனடப்
பார்த்தவன்பனிமதிபடர்சடைவைத்துப்
போர்த்தவன்கரியுரிபுலியதளாடை
யார்த்தவன்வளநகரந்தணையாறே. (உ)

வரிந்தவெஞ்சிலைபிடித்தவுணர்தம்வளநக
ரெரிந்தறவெய்தவனெழிறிகழ்மலர்மே
லிருந்தவன்சிரமதுவிமையவர்குறைகொள
வரிந்தவன்வளநகரந்தணையாறே. (ங)

வாய்ந்தவல்லவுணர்தமவளநகரெரியிடை
மாய்ந்தறவெய்தவன்வளர்பிறைவிரிபுன
றோய்ந்தெழுசடையினன்றொன்மறையாறங்க
மாய்ந்தவன்வளநகரந்தணையாறே (ச)

வானமாமதிபுல்குசடையிடையரவொடு
தேனமாம்கொன்றையன்றிகழ்தருமார்பினன்
மானினமனவிழிமங்கையோர்பாகமு
மானவன்வளநகரந்தணையாறே. (ரு)

முன்பனைமுனிவரோடமரர்கடொழுதெழு
மின்பனையிணையிலவிறைவனையெழிறிக
ழென்பொனையேதமில்வேதியர்தாந்தொழு
மன்பனன்வளநகரந்தணையாறே (சா)

வெந்திறலவுணர்தமவளநகரெரியிடை
வெந்தறவெய்தவன்விளங்கியமார்பினிற்
படர்தருமலைவிரல்பாகமதாகித
னந்தமிலவன்வளநகரந்தணையாறே. (எ)

விடைத்தவல்லரக்கனல்வெற்பினையெடுத்தலு
மடித்தலத்தாலிறையூன்றிமற்றவனது
முடித்தலைதோளவைநெரிதரமுறைமுறை
யடர்த்தவன்வளநகர்நந்தணையாறே. (௮)

விண்ணவர்தம்மொடுவெங்கதிரோனல
வெண்ணிலிதேவர்களிந்திரன்வழிபடக்
கண்ணனும்பிரமனுங்காண்பரிதாகிய
வண்ணனன்வளநகர்நந்தணையாறே. (௯)

மருளுடைமனத்துவன்சமணர்கண்மாசரு
விருளுடையிணைத்துவர்ப்போர்வையினார்களுந்
தெருளுடைமனத்தவர்தேறன்மின்றிண்ணமா
வருளுடையடிகடமந்தணையாறே. (௰)

நல்மலிஞானசம்பந்தனதின்றமி
ழலைமலிபுனன்மல்குநந்தணையாற்றினைக்
கலைமலிதமிழிவைகற்றுவல்லார்மிக
நலமலிபுகழ்மிகுநன்மையராமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருவிடைமருதூர்-திருவிராகம்-பண்- வியாழக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

நடைமருதிரிபுரமெரியுணநகைசெய்த
படைமருதழலெழமழுவலபகவன்
புடைமருதிளமுகில்வளமமர்பொதுளிய
விடைமருதடையநமிடர்கெடலெளிதே (௧)

மழைநுழைமதியமொடழிதலைமடமஞ்ஞை
கழைநுழைபுனல்பெய்தகமழ்சடைமுடியன
குழைநுழைதிகழ்செவியழகொடுமிளிர்வதோ
ரிழைநுழைபுரியணலிடமிடைமருதே (௨)

அருமையனெளிமையனழல்விடமிடறினன்
கருமையினொளிபெறுகமழ்சடைமுடியன
பெருமையன்சிறுமையன்பிணைபெணொடொருமைய
னிருமையுமுடையணலிடமிடைமருதே. (௩)

பொரிபடுமுதுகுறமுளிகளிபுடைபுல
நரிவளர்சுடலையுண்டமெனநவில்வோன்
வரிவளர்குளிர்மதியொளிபெறமிளிர்வதோ
ரெரிவளர்சடையணலிடமிடைமருதே (௪)

வருநலமயிலனமடநடைமலைமகள்
பெருநலமுலையிணைபிணைசெய்தபெருமான்

செருநலமதிலெய்தசிவனுறைசெழுநக
ரிருநலபுகழ்மல்குமிடமிடைமருதே. (ரு)

கலையுடைவிரிதுகிலகமழ்குழலகில்புகை
மலையுடைமடமகடனையிடமுடையோன்
விலையுடையணிகலனிலனெனமழுவினொ
டிலையுடைபடையவனிடமிடைமருதே. (சு)

வளமெனவளர்வனவரிமுரல்பறவைக
ளிளமணலணைகரையிசைசெயுமிடைமரு
துளமெனநினைபவரொலிகழலிணையடி
குளமணலுறமூழ்கிவழிபடலகுணமே. (எ)

மறையவனுலகவன்மதியவன்மதிபுல்கு
துறையவனெனவலவடியவர்துயரிலர்
கறையவனமிடறதுகனல்செய்தகமழ்சடை
யிறையவனுறைதருமிடமிடைமருதே. (அ)

மருதிடைநடவியமணிவணர்பிரமரு
மிருதுடையகலமோடிகலினரினதெனக்
கருதிடலரியதோருருவொடுபெரியதோ
ரெருதுடையடிகடமிடமிடைமருதே (௯)

துவருறுவிரிதுகிலுடையருமமணரு
மவருறுசிறுசொலையவன்மினிடமணல்
கவருறுபுனலிடைமருதுகைதொழுதெழு
மவருறுவினைகெடலணுகுதல்குணமே. (கo)

தடமலிபுகலியர்தமிழ்கெழுவிரகின
னிடமலிபொழிலிடைமருதினையிசைசெய்த
படமலிதமிழிவைபரவவல்லவாவினை
கெடமலிபுகழொடுகிளரொளியினரோ (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருவிடைமருதூர் - திருவிராகம் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

விரிதருபுலியுரிவிரவியவரையினர்
திரிதருமெயிலவைபுனைகணையினிலெய்த
வெரிதருசடையினரிடைமருதடைவுனல
புரிதருமனனவர்புகழ்மிகவுளதே. (க)

மறிதிரைபடுகடல்விடமடைமிடறின
ரெறிதிரைகரைபொருமிடைமருதெனுமவர்
செறிதிரைநரையொடுசெலவிலருலகினிற்
பிறிதிரைபெறுமுடல்பெறுகுவதரிதே. (உ)

சலகலசொரிபுனல்சடையினர்மலைமக
ணிலவியவுடலினர்நின்றமறைமொழியினை
ரிலனெனவிடுபலியவரிடைமருதினை
வலமிடவுடனலிவிலதுளவினையே. (ங)

விடையினர்வெளியதோர்தலைகலனெனநனி
கடைகடைதொறுபலியிடுகெனமுடுகுவ
ரிடைவிடலரியவரிடைமருதெனுநக
ருடையவரடியிணைதொழுவதெமுயர்வே. (ச)

உரையருமுருவினருணர்வருவகையின
ரரைபொருபுலியதளுடையினரதனமிசை
யிரைமருமரவினரிடைமருதெனவுள
முரைகளதுடையவர்புகழ்மிகவுளதே. (ரு)

ஒழுகியபுனன்மதியரவமோடுறைதரு
மழகியமுடியுடையடிகளதறைகழ
லெழிலினருறையிடைமருதினைமலர்கொடு
தொழுதல்செய்தெழுமவர்துயருறவிலரே. (சு)

கலைமலிவிரலினர்கடியதோர்மழுவொடு
நிலையினர்சலமகளுலவியசடையினர்
மலைமகண்முலையிணைமருவியவடிவின
ரிலைமலிபடையவரிடமிடைமருதே. (எ)

செருவடையிலவலஞ்செயல்செயத்திறலொடு
மருவலரினிலொருபதுமுடிநெரிதர
விருவகைவிரனிறியவரிடைமருதிது
பரவுவருவினையொருவுதல்பெரிதே. (அ)

அரியொடுமலரவனெனவிவரடிமுடி
தெரிவகையரியவர்திருவடிதொழுதெழ
வெரிதருமுருவர்தமிடைமருதடைவுறல்
புரிதருமனனவர்புகழ்மிகவுளதே. (கூ)

குடைமயிலினதழைமருவியவுருவின
ருடைமருதுவரினர்பலசொலவுறவிலை
படைமருதிருவினர்தொழுதெழுகழலவ
ரிடைமருதெனமனநினைவதுமெழிலே. (கo)

பொருகடலடைதருபுகலியர்தமிழொடு
விரகினன்விரிதருபொழிலிடைமருதினைப்
பரவியவொருபதுபயிலவலவரிடர்
விரவிலர்வினையொடுவியனுலகுறவே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருவலிவலம்-திருவிராகம்-பண்-வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

பூவியல்புரிகுழல்வரிசிலைநிகர்நுத
லேவியல்கணைபிணையெதிர்விழியுமையவள்
மேவியதிருவுருவுடையவன்விரைமலர்
மாவியல்பொழில்வலிவலமுறையிறையே. (௧)

இட்டமதமர்பொடியிசைதலினசைபெறு
பட்டவிர்பவளநன்மணியெனவணிபெறு
விட்டொளிர்திருவுருவுடையவன்விரைமலர்
மட்டமர்பொழில்வலிவலமுறையிறையே. (௨)

உருமலிகடல்கடைவுழியுலகமருயிர்
வெருவுறவகையெழுவிடம்வெளிமலைபணி
கருமணிநிகர்களமுடையவன்மிடைதரு
மருமலிபொழில்வலிவலமுறையிறையே. (௩)

அனனிகர்சடையழலவியுறவெனவரு
புனலிகழ்வதுமதிநனைபொறியரவமு
மெனநினைவொடுவருமிதுமெலமுடிமிசை
மனமுடையவர்வலிவலமுறையிறையே. (௪)

பிடியதனுருவுமைகொளமிகுகரியது
வடிகொடுதனதடிவழிபடுமவரிடர்
கடிகணபதிவரவருளினனமிகுகொடை
வடிவினர்பயில்வலிவலமுறையிறையே. (௫)

தரைமுதலுலகினிலுயிர்புணர்தகைமிக
விரைமலிகுழலுமையொடுவிரவதுசெய்து
நரைதிரைகெடுதகவதுவருளினனெழில
வரைதிகழ்மதில்வலிவலமுறையிறையே (௬)

நலிதருதனைவரநடைவருமிடையவர்
பொலிதருமடவரலியர்மனையதுபுகு
பலிகொளவருபவனெழினிருதொழில்வளர்
வலிவருமதில்வலிவலமுறையிறையே (௭)

இரவணனிருபதுகரமெழின்மலைதனி
னிரவணவினைவதரவன்முடிபொடிசெய்து
விரவணமமாபெயரருளினனகநெதி
யிரவணநிகர்வலிவலமுறையிறையே. (௮)

தேனமர்தருமலரணையவன்வலிமிகு
மேனமதாய்நிலமகழரியடிமுடி
தானணையாவுருவுடையவன்மிடைகொடி
வானணைமதில்வலிவலமுறையிறையே. (௯)

இலைமலிதரமிகுதுவருடையவர்களு
நிலைமையிலுணலுடையவர்களுநினைவது
தொலைவிலிகெமொறைதொடர்வகையுருவினன்
மலைமலிமதில்வலிவலமுறையிறையே. (கo)

மன்னியவலிவலநகருறையின்றவனை
யின்னியல்கழுமலநகரிறையெழின்மறை
தன்னியல்கலைவலதமிழ்விரகனதுரை
யுன்னியவொருபதுமுயர்பொருடருமே (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருவீழிமிழலை - திருவிராகம் - பண் -வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

அலர்மகண்மலிதரவவனியினிகழ்பவா
மலர்மலிகுழலுமைதனையிடமகிழ்பவா
நலமலியுருவுடையவாநகாமிகுபுகழ்
நிலமலிமிழலையைநினையவல்லவரோ. (க)

இருநிலமிதன்மிசையெழிலபெறுமுருவினர்
கருமலிதருமிகுபுவிமுதலுலகினி
லிருளறுமதியினரிமையவர்தொழுதெழு
நிருபமன்மிழலையைநினையவல்லவரே. (உ)

கலைமகடலைமகனிவனெனவருபவ
ரலைமலிதருபுனலரவொடுநகுதலை
யிலைமலியிதழியுமிசைதருசடையினா
நிலைமலிமிழலையைநினையவல்லவரே. (ரு)

மாடமர்சனமகிழ்தரமனமுடையவர்
காடமர்கழுதுகளவைமுழவொடுமிசை
பாடலினவில்பவர்மிகுதருமுலகினி
னீடமர்மிழலையைநினையவல்லவரே. (ச)

புகழ்மகடுணையினர்புரிகுழலுமைதனை
யிகழ்வுசெய்தவனுடையெழின்மறைவழிவளர்
முகமதுசிதைதரமுனிவுசெய்தவன்மிகு
நிகழ்தருமிழலையைநினையவல்லவரே. (ரு)

அன்றினொரியெனவருபவரரிதினி
னென்றியதிரிபுரமொருநொடியினிலெரி
சென்றுகொள்வகைசிறுமுறுவல்கொடொளிபெற
நின்றவர்மிழலையைநினையவல்லவரே. (சா)

கரம்பயில்கொடையினர்கடிமலரயனதோர்
சிரம்பயில்வறவெறிசிவனுறைசெழுநகர்

வரம்பயில்கலைபலமறைமுறையறநெறி
நிரம்பினர்மிழலையைநினையவல்லவரே. (எ)

ஒருக்கியவுணர்வினொடொளிநெறிசெலுமவ
ரரக்கனன்மணிமுடியொருபதுமிருபது
கரக்கனநெரிதரமலரடிவிரல்கொடு
நெருக்கினன்மிழலையைநினையவல்லவரே. (அ)

அடியவர்குழுமிடவவனியினிகழ்பவர்
கடிமலரயனரிகருதருவகைதழல்
வடிவுருவியல்பினொடுலகுகணிறைதரு
நெடியவன்மிழலையைநினையவல்லவரே. (கூ)

மன்மதனெனவொளிபெறுமவாமருதமர்
வன்மலர்துவருடையவர்களுமதியிலர்
துன்மதியமணர்கடொடர்வருமிகுபுகழ்
நின்மலன்மிழலையைநினையவல்லவரே. (கo)

நித்திலன்மிழலையைநிகரிலிபுகலியுள்
வித்தகமறைமலிதமிழ்விரகன்மொழி
பத்தியில்வருவனபத்திவைபயில்வொடு
கற்றுவல்லவருலகினிலடியவரே. (கக)

திருச்சிற்றம்பலம்

ஆ பதிகம் - கஉச.

## திருச்சிவபுரம் - திருவிராகம் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

கலைமலியகலல்குலரிவைதனுருவினன்
முலைமலிதருதிருவுருவமதுடையவன்
சிலைமலிமதில்பொதிசிவபுரநகர்தொழ
விலைநலிவினையிருமையுமிடர்கெடுமே. (க)

படரொளிசடையினன்விடையினன்மதிலவை
சுடரெரிகொளுவியசிவனவனுறைபதி
திடலிடுபுனலவயல்சிவபுரமடையநம
மிடர்கெடுமுயாகதிபெறுவதுதிடனே. (உ)

வரைதிரிதரவரவகடுழலெழுவரு
நுரைதருகடல்விடநுகர்பவனெழிறிகழ்
திரைபொருபுனலரிசிலதடைசிவபுர
முரைதருமடியவருயாகதியினரே. (ங)

துணிவுடையவாசுடுபொடியினருடலடு
பிணியடைவிலர்பிறவியுமறவிசுறுவர்
தணிவுடையவர்பயில்சிவபுரமருவிய
மணிமிடறனதடியிணைதொழுமவரே. (ச)

மறையவன்மதியவன்மலையவனிலையவ
னிறையவனுமையவன்மகிழ்நடநவில்பவ
னிறையவனிமையவர்பணிகொடுசிவபுர
முறைவெனவுடையவனெமையுடையவனே (௫)

முதிர்சடையிளமதிநதிபுனல்பதிவுசெய்
ததிர்கழலொலிசெயவருநடநவில்வோ
னெதிர்பவர்புரமெய்தவிணையிலியணைபதி
சதிர்பெறுமுளமுடையவர்சிவபுரமே (௬)

வடிவுடைமலைமகள்சலமகளுடனமா
பொடிபடுமிழையதள்பொலிதிருவுருவினன்
செடிபடுபலிதிரிசிவனுறைசிவபுர
மடைதருமடியவரருவினையிலரோ (௭)

கரமிருபதுமுடியொருபதுமுடையவ
னுரநெரிதரவரையடர்வுசெய்தவனுறை
வரனெனவடியவர்பணிதருசிவபுர
நகரதுபுகுதனம்முயர்கதியதுவே. (௮)

அன்றியலுருவுகொளரியயனெனுமவர்
சென்றளவிடலரியவனுறைசிவபுர
மென்றிருபொழுதுமுன்வழிபடுமவர்துய
ரொன்றிலர்புகழொடுமுடையரிவ்வுலகே. (௯)

புத்தரோடமணர்களறவுரைபுறவுரை
வித்தகமொழிகிலவிடையுடையடிகட
மித்தவமுயலவுறிலிறைவனசிவபுர
மெய்ந்தவழிபாடல்விழுமியகுணமே. (௧௦)

புந்தியர்மறைநவில்புகலிமன்ஞானசம்
பந்தனதமிழ்கொடுசிவபுரநகருறை
யெந்தையையுரைசெய்தவிசைமொழிபவர்வினை
சிந்திமுனுறவுயர்கதிபெறுவர்களே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருக்கழுமலம் - திருத்தாளச்சத்தி - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

பந்தத்தால்வந்தெப்பால்பயின்றுநின்றவும்பரப்-பாலேசேர்வாயேனோர்காண்பயில்கணமுனிவர்களுஞ்சிந்தித்தேவந்திப்பச்சிலம்பின்மங்கைதன்னொடுஞ்-சேர்வார்நாணுணீள்கயிலைத்திகழ்தருபரிசதெலாஞ்சந்தித்தேயிந்தப்பாரசனங்களன்றுதங்கணற் - றுமேகாணுவாழ்வாரத்தகவுசெய்தவனதிடங், கந்தத்தாலெண்டிக்குங்கமழ்ந்திலங்குசந்தனக் - காடார்பூவாசீர்மேவுங்கழுமலவளநகரே. (௧)

பிச்சைக்கேயிச்சித்துப்பிசைந்தணிந்தவெணபொடிப் - பீடார்நீடார்மாடாருமபிறைநுதலரிவையொடு, மூச்சத்தால்நச்சிப்போமொருடர்ந்தடர்ந்த வெங்கணை-றாராவூராநீள்வீதிப்பயிலவொடுமொலிசெயிசை, வசத்தானச்சுச்சேர்வடங்கொளகொங்கைமங்கைமார்-வாரா நேரேமாலாகுமவசிவலவவனதிடங், கச்சத்தான்மெச்சிப்பூக்கலந்திலங்குவண்டினங்-காரார்காரார்நீள்சோலைக்கழுமலவளநகரே. (௨)

திங்கட்கேதும்பைக்கேதிகழ்ந்திலங்குமத்தையின் - சேரேசேரேநீராகச்செறிதருசுரநதியோ, டங்கைச்சோவினறிககேயடைந்துடைந்த வெண்டலைப்-பாலைமேலேமாலேயட்படர்வுறுமவனிறகும, பொங்கபபேர்நஞ்சைச்சேர்புயங்கமங்கள கொன்றையினை, போதாதாரேதாமேவிப்புரிதருசடையனிடங், கங்கைக்கேயுமபொர்பார்கலந்துவந்தபொனனியின், காலேவாராமேலேபாய்க்கழுமலவளநகரே. (௩)

அண்டத்தாலெண்டிக்குமமைந்தடங்குமண்டலத்-தாறேவேறேவானுள்வாரவரவரிடமதெலா, மண்டிப்போய்வெனறிப் போர்மலைந்தலைந்தவும்பருமாறேலாதார்தாமேவுமவ்லிமிகுபுரமெரிய, முண்டத்தேவெந்திட்டே முடிந்திடிந்தவிஞ்சிசூழ்-மூவாமூதூர்மூதூராமுனிவுசெய்தவனதிடங்,கண்டிட்டேசெஞ்சொற்சேர்கவின்சிறந்தமந்திரக் - காலேயோவாதார்மேவுங்கழுமல வளநகரே. (௪)

திக்கிற்றேவற்றற்றேதிகழ்ந்திலங்குமண்டலச் - சீறூர்வீறூர் போரார்தாருகனுடலவனெதிரே, புகவிட்டேவெட்டிட்டேபுகைந்தெழுந்த சண்டத்தீப்- போலேபூநீதிகானமீபபுணாதருமுயிர்கடிறஞ்,சொக்கத்தேமிததத்தேதொடாந்தமங்கைசெங்கதத்- தோடேயாமேமாலோகத்துயர்களைபவனதிடங், கைக்கபபோயுககத்தேகனைறுமிணடுதண்டலைக்- காடேயோடாவூரேசோகழுமலவளநகரே. (௫)

செற்றிட்டேவெற்றிச்சேர்திகழ்ந்ததுமபிமொய்ம்புருஞ்-சேரேவாராரநீள்கோதைதெரியிழைபிடியதுவா, யொற்றைச்சோமுற்றறமகொம்புடைத்தடக்கைமுக்கண்மிக் - கோவாதேபாய்மாதானத்துறுபுகர்முகவிறையைப், பெற்றிட்டேமற்றிபபார்பெருத்துமிக்கத்துக்கமும- பேராநோய்தாமேயாமைபிரிவுசெய்தவனதிடங், கற்றிட்டேயெட்டெட்டுக்கலைத்துறைக்கறைச்செலக்- காணாதாரேசேராமெய்க்கழுமலவளநகரே. (௬)

பத்திப்போர்வித்திட்டேபரந்தவைம்புலன்கள்வாய்ப் - பாலேபோகாமேகாவாடபகையறுவகைநினையா, முத்திக்கேவிக்கத்தேமுடிக்கு முக்குணங்கள்வாய்-மூடாவூடாநாலந்தக்கரணமுமொருநெறியாய்ச்சித்திக்கேயுய்த்திட்டுத்திகழ்ந்தமெய்ப்பரம்பொருள், சேர்வார்தாமேதானாகசசெயுமவனுறையுமிடங், கத்திட்டோராசட்டங்கங்கலந்திலங்குநற்பொருள்- காலேயோவாதார்மேவுங்கழுமலவளநகரே. (௭)

செம்பைச்சேரிஞ்சிச்சூழ்செறிந்திலங்குபைம்பொழிற்- சேரேவாராவாரீசத்திரையெறிநகரிறைவ, னிம்பாகத்தேதரு செய்திட்டிருந்தரன்பயின்ற

வெற் - பேரார்பூநேரோர்பாதத்தெழில்விரலவணிறுவிட்,டம்பொற்பூண்வென்றித்தோளழிந்துவநதனஞ்செய்தாம்- காரார்கூடவாள்வாணனென்றருள்புரிபவனிடங், கம்பத்தார்துமயித்திண்கவுட்சொரிந்தமும்மதக்- காரார்சேருர்மாவீதிக்கழுமலவளநகரே. (௮)

பன்றிக்கோலங்கொண்டிப்படித்தடம்பயினறிடப்- பானுமாறுணுமேயப்பறவையினுருவுகொள, வொணறிட்டேயம்புச்சேருயாந்தபங்கயத்தவ-னுதானுதானஃதுணராதுருவினதடிமுடியுஞ் -சென்றிட்டேவந்திமபத்திருக்களங்கொள்பைங்கணின் - றேசாலவேறுராகாரந்தெரிவு செய்தவனிடங், கன்றுக்கேமுன்றிற்கேகலந்திலங்கிறைக்கவுங், காலேவாராமேலேபாய்கழுமலவளநகரே. (௯)

தட்டிட்டேமுட்டிக்கைத்தடுக்கிடுக்கினின்றுண்ணுத், தாமேபேணுதேநாணுஞ்சமணுடுமுழல்பவரு, மிட்டத்தாலத்தந்தானிதன்றதென்று நினறவர்க்-கேயாமேவாயேதுச்சொல்லிலேமலிமருதம்பூப்- புட்டத்தேயெட்டிட்டுப்புதைக்குமெய்க்கொள்புத்தரும், போல்வார்தாமோராமேபோய்ப்புணாவுசெய்தவனிடங், கட்டிக்கால்வெட்டித்தீங்கரும்புதந்தபைமபுனற்காலேவாராமேலேபாய்கழுமலவளநகரே. (௧௦)

கஞ்சத்தேனுண்டிட்டேகளித்துவண்டுசெண்பகக் - கானேதேனேபோராருங்கழுமலநகரிறையைத், தஞ்சச்சார்சண்பைக்கோன்சமைத்த நற்கலத்துறை, தாமேபோல்வார்தேனேராதமிழ்விரகன்மொழிக, ளஞ்சத்தேய்வினைறிக்கேயிமைத் திசைத்தமைத்தகொண்-டேழேயேழேநாலேமூனறியலிசையிசையியல்வா, வஞ்சத்தேய்வின்றிக்கேமனங்கொளப்பயிற்றுவோர்-மாரபேசேரவாள்வானோர்சீர்மதிநுதன்மடவரலே. (௧௧)

திருச்சிற்றமபலம்.

---

## சீகாழி-திருவகபாதம்-பண் - வியாழக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

பிரமபுரத்துறைபெமமானெம்மான்
பிரமபுரத்துறைபெமமானெமமான்
பிரமபுரத்துறைபெம்மானெமமான்
பிரமபுரத்துறைபெம்மானெம் மான். (௧)

விண்டலாபொழிலணிவேணுபுரத்தரன்
விண்டலர்பொழிலணிவேணுபுரத்தரன
விண்டலர்பொழிலணிவேணுபுரத்தரன்
விண்டலர்பொழிலணிவேணுபுரத்தரன. (௨)

புண்டரிகத்தவனமேவியபுகலியே
புண்டரிகத்தவன்மேவியபுகலியே
புண்டரிகத்தவன்மேவியபுகலியே
புண்டரிகத்தவன்மேவியபுகலியே. (௩)

விளங்கொளிதிகழ்தருவெங்குருமேவினன்
விளங்கொளிதிகழ்தருவெங்குருமேவினன்
விளங்கொளிதிகழ்தருவெங்குருமேவினன்
விளங்கொளிதிகழ்தருவெங்குருமேவினன. (ச)

சுடர்மணிமாளிகைத்தோணிபுரத்தவன்
சுடர்மணிமாளிகைத்தோணிபுரத்தவன்
சுடர்மணிமாளிகைத்தோணிபுரத்தவன்
சுடர்மணிமாளிகைத்தோணிபுரத்தவன். (ரு)

பூசுரர்சேர்பூந்தராயவன்பொன்னடி
பூசுரர்சேர்பூந்தராயவன்பொன்னடி
பூசுரர்சேர்பூந்தராயவன்பொன்னடி
பூசுரர்சேர்பூந்தராயவன்பொன்னடி. (சு)

செருக்குவாய்ப்புடையான்சிரபுரமென்னிற்
செருக்குவாய்ப்புடையான்சிரபுரமென்னிற்
செருக்குவாய்ப்புடையான்சிரபுரமென்னிற்
செருக்குவாய்ப்புடையான்சிரபுரமென்னில் (எ)

பொன்னடிமாதவர்சேர்புறத்தவன்
பொன்னடிமாதவர்சேர்புறத்தவன்
பொன்னடிமாதவர்சேர்புறத்தவன்
பொன்னடிமாதவர்சேர்புறத்தவன் (அ)

றசமுகனெரிதரவூன்றுசண்பையான்
றசமுகனெரிதரவூன்றுசண்பையான
றசமுகனெரிதரவூன்றுசண்பையான
றசமுகனெரிதரவூன்றுசண்பையான். (கூ)

காழியானயனுள்ளவாகாண்பரோ
காழியானயனுள்ளவாகாண்பரோ
காழியானயனுள்ளவாகாண்பரோ
காழியானயனுள்ளவாகாண்பரோ. (கo)

கொச்சையண்ணலைக்கூடகிலாருடன்மூடரோ
கொச்சையண்ணலைக்கூடகிலாருடன்மூடரோ
கொச்சையண்ணலைக்கூடகிலாருடன்மூடரோ
கொச்சையண்ணலைக்கூடகிலாருடன்மூடரோ. (கக)

கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை
கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை
கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை
கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை. (கஉ)

திருச்சிற்றம்பலம்.

பதிகம் - கஉஎ.

## திருஏகபாதத் திருவுள்ளக்கருத்து.

க. பிரமபுரத்துறை பெம்மானெம்மான்.

(இதன்பதப்பொருள்) பிரமம்-ஞானாகாசமாகிய பராசத்தியை, புரத்துறை-அந்தப்பரிபூரணத்தை மிகுதியாக வியக்கப்பட்டது, பெம்மான்-பெருமான், எம்மான் எந்தப்பெரியோன் என்க.

(பொழிப்பு) ஞானாகாசமாகிய பராசத்தியானபரிபூரணத்தை மிகுதியாகவியந்து அந்தப் பராசத்திக் கதீதமாகிய சுகமே வடிவாய் முதல் நடுவிறுதி காணப்படாதவஸ்து எந்தப்பெரியோன்.

பிரமபுரத்துறை பெம்மானெம்மான்.

(ப-ள்.) பிரமபுரத்து - மேல்நிலத்து, உறை - தண்ணீர், பெம் - விருப்பம், மான் - மான்போலும் விழியையுடையபெண், எம்-எம்முடைய, ஆன்-ஆன்மா என்க.

(பொ-பு.) மேல்நிலமாகிய ஆகாசத்தின்கண்ணே யோடாநின்ற கங்காதேவியை விரும்பித் திருமுடியிலே வைத்தவன், எம்மை நீங்காத நிலைமையையுடைய எமதுயிர்.

பிரமபுரத்துறை பெம்மானெம்மான்.

(ப-ள்.) பிரமம்-பிரமத்துவம், புரம்-சரீரம், உறை-எண்ணுதல், பெம்-ஆசை, ஆன்-அமையாமை, எம்மான்-என்னை யொக்கவந்தவன் என்க.

(பொ-பு.) பிரமரூபத்திலே யெண்ணப்பட்ட என்னை முத்தியிலே விடுகைக்கு அமையாத விருப்பமுள்ளவனா யென்னை யொக்கவந்தவன்.

பிரமபுரத்துறை பெம்மானெம்மான்.

(ப-ள்.) பிரமபுரத்துறை-பிரமபுரமென்கிற சீகாழிப்பதியிலே வீற்றிராநின்ற, பெம்மான்-கர்த்தாவானவன், எம்மான்-என்னுடையசுவாமி என்க.

(பொ-பு.) பிரமபுரமென்கிற சீகாழிப்பதியிலே வீற்றிராநின்ற கர்த்தாவானவன் என்னுடையசுவாமி, பெரியோனும் எனக்குயிரானவனும் என்னையொக்கவந்தவனும் சீகாழிப்பதியில் வீற்றிருக்குங் கடவுளெனக்கூட்டிப் பொருள்கொள்க.

உ. விண்டலர்பொழிலணி வேணுபுரத்தரன்

(ப-ள்.) விண்டு-மலை, அலர்-ஒலி, பொழில்-உலகம், அணிவு-அகப்படுத்தல், எண்-பெருமை, நுபுரம்-சிலம்பு, தரன்-தரித்துள்ளவன் என்க.

(பொ-பு) அஷ்டகுலபர்வதங்களும், ஒலிசிறந்த தரிசுமணியாகவும், அகிலலோகங்களையும் உள்ளேயகப்படுத்துந் தன்மையவாயும், பெரிதாயுமுள்ள திருச்சிலம்பினைத் தரித்துள்ளவன். நுபுரம் எனற்பாலது - நுபுரம் எனக் குறுகிநின்றது.

விண்டலர்பொழிலணி வேணுபுரத்தரன்.

(ப-ள்) விண்டு-விஷ்ணு, அலர்-புறனுரை, பொழில்-அரசினிழல், அணி-பொருந்தி, வேணு-விருப்பம், புரத்து அரன்-புரத்தையரித்தவன் என்க.

(பொ-பு.) விஷ்ணுவின் புறனுரையாகிய சிவதூஷணத்தை அரசமரத்தினிழலில் அவனுடனிருந்து விரும்பியுள்ள முப்புரங்களைச் சங்கரித்துள்ளவன். அண்ணியெனற்பாலது - அணியென இடைக்குறையாய் நின்றது.

விண்டலர்பொழிலணி வேணுபுரத்தரன்.

(ப-ள்.) விண்தலர்-தேவர்கள், பொழில் - கற்பகப்பூஞ்சோலை, அணிவு-சூடுதல், ஏணு-எண்ணும், புரத்தரன்-தேவேந்திரன் என்க.

(பொ-பு.) தேவர்கள் கற்பகப்பூஞ்சோலை மலர்களால் அர்ச்சிக்கப்படுகின்ற தேவேந்திரனுடைய. எனு எனற்பாலது-ஏனுவென நீண்டது.புரந்தரன் எனற்பாலது புரத்தரனென வலித்துநின்றது.

விண்டலர்பொழிலணி வேணுபுரத்தரன்.

(ப-ள்) விண்டு-இதழ்கள்விண்டு, அலர்-மலர்கின்ற, பொழில் அணி-சோலைசூழ்ந்த, வேணுபுரத்து அரன்-வேணுபுரமென்று மொருபெயருள்ள சீகாழிப்பதிக்குக்கர்த்தா என்க.

(பொ-பு.) இதழ்கள் விண்டு மலர்கின்ற சோலைசூழ்ந்த சீகாழிப்பதிக்குக் கர்த்தாவாயுள்ளவன். தேவேந்திரன் மூங்கில்வழியாகவந்து பூசித்ததால் வேணுபுரமென்னும்பெயர்பெற்றது சிலம்பினைத் தரித்துள்ளவரும், முப்புரத்தை யெரித்தவரும், தேவேந்திரனுடைய சோலைசூழ்ந்த வேணுபுரத்தில் வீற்றிருக்கும் இறைவ னெனக்கூட்டியுரைத்துக்கொள்க.

ங. புண்டரிகத்தவன் மேவியபுகலியே.

(ப-ள்) புண்டரிகத்தவன்-இதயகமலத்திலுள்ளவன், மேவியபுகலியே-எனக்கின்பந்தருவானுமாய் மீளாவழியாகிய புகலிடமாயுமுள்ளவன் என்க.

(பொ-பு) இதயகமலத்திலிருந் திடையறாத வானந்தம்பொழியப்பட்டதென்னை மலபோதத்தில் தள்ளாமல் எனக் கடைக்கலப் பொருளாயுள்ளவன.

புண்டரிகத்தவன மேவியபுகலியே.

(ப ள்.) புண்டரிகம்-திரிபுண்டரம், தவன-மிக்க பெருமையை யுடையவன், மேவிய-பொருந்திய, புகலி-சொல்லப்பட்டவன். ஏ-என்ப தீற்றசை என்க.

(பொ-பு ) ஆன்மாக்களுக்கு இரக்ஷையாக முண்டம்போலிருந்த திருநீற்றை யணியப்பட்ட மிக்க கருணையானவனே யானபாடும் பாடலை யுவந்துள்ளவன்.

புண்டரிகத்தவன் மேவியபுகலியே.

(ப-ள்.) புண்டரிகம்-புலி, தவன் - தவமுனி, மே - கூத்து, வியன் - பொன், பு-பொது, கலி-கற்றவனை என்க.

(பொ-பு ) புலிக்காலும், புலிகையும் பெற்றுள்ள வியாக்கிரபாத முனிவருக்கு ஞானனந்தமாகிய நாடகத்தைக் கனகசபையிலே யாடல்செய்யும் பரதவித்தையைக்கற்றுள்ளான். வியம் எனற்பாலது-வியவெனக் கடைகுறைந்து நின்றது.

புண்டரிகத்தவன் மேவியபுகலியே.

(ப-ள்.) புண்டரிகத்தவன-பிரமதேவன், மேவிய-தனது போதத்தாலேயணியவுற்ற, புகலியே-புகலியென்னுஞ் சீகாழிப்பதியே என்க

(பொ-பு ) கீழ்ச்சொன்ன லீலைகளெல்லாஞ்செய்கின்ற சிவன தனதிச்சையாய்ப்பொருந்தியிருக்குமூர் பிர்மாவானவன் பூசித்த புகலியென்னுந்திருப்பதி.

ச. விளங்கொளிநிகழ்தரு வெங்குருமேவினன்.

(ப-ள்.) விள-விளாம்பழத்தை, கொளி - கன்றுகுணிலாக எறிந்துகொண்டவனுகிய விஷ்ணு, நி-விட்டு விளங்காநின்ற, கழ்தரு-நின மலநீடிய,எங்கு-எவ்விடத்தில், உருமேவினன-தனது திருமேனியிலே மேவினன என்க.

(பொபு ) கன்றுகுணிலாக எறிந்து விளவின்கனியைக்கொண்ட நாரணனைப் பிரகாசஞ்செய்யப்பட்டு நின மலமாயிருந்துள்ள தனது பெரியதிருமேனியிலே ஒருபாதியாக வைத்துள்ளான் என்க. நீ எனற்பாலது - நி எனக்குறுகிநின்றது. கழுதருஎனற்பாலது-கழ்தரு எனநின்றது.

விளங்கொளிதிகழ்தரு வெங்குருமேவினன்.

(ப-ள்.) விளங்கு எனற்பாலது விளங்கு எனவும், ஒலி எனற்பாலது-ஒளி எனவுந் திரிந்துநின்றது. விலங்கு-மாறுபாடாய், ஒலி-கதறப்பட்ட பௌத்தனது தலையிலே, தி-அக்கினியைச்சொரிந்து, கழ்தரு-மிக்கபயத்தோடும் விழுகின்ற, எங்கு - ஒலிக்கும், உருமு-இடியை, ஏவினன்-விழும்படி ஏவினன் என்க.

(பொ-பு.) மாறுபாடாய்க் கதறப்பட்ட பௌத்தனது தலையிலே அக்கினியைச்சொரிந்து மிக்க பயத்தோடும் விழுகின்ற இடியை விழும்படி யேவிப் பௌத்தனை வேரறுத்தானுந் தானேயன்றி யானன்றாகும்.

தீ எனற்பாலது - தி எனவும், காழ்தரு எனற்பாலது - கழ்தரு எனவும், ஏங்கு எனற்பாலது-எங்கு எனவுங் குறுகிநின்றன.

விளங்கொளிதிகழ்தரு வெங்குருமேவினன்.

(ப-ள்.) விள்-நீங்குதல, அங்கு-அவ்விடத்தில், ஒளிது-ஒள்ளியது, இகழ்தரு-இகழப்படும், எங்குரு-எம்முடையகுரு, மேவினன்-கலந்தனன் என்க.

(பொ-பு) தனது பரிபூரணத்திலே தனனையிழந்து இரண்டாய் விசுவமுருகித் தான் விஷயாகத் தூஷணப்பட்டு நிற்கின்ற எனக்கும் குருமூர்த்தியாய் வந்து என்பிறவியையொழித்துத் தனது பேரின்பமாகிய பரிபூரணத்திலே எனதடிமை குலையாமலிரண்டற வைத்தவன்.

விளங்கொளிதிகழ்தரு வெங்குருமேவினன.

(ப-ள்.) விளங்கு ஒளி-எங்கும் பிரகாசியாநின்ற கீர்த்தி, திகழ்தரு - சிறத்தல், வெங்குரு-இயமனாற் பூசிக்கப்பட்ட திருப்பதி, மேவினன்-விரும்பினன் என்க.

(பொ-பு) கீழ்ச்சொல்லிப்போந்த செய்திகளெல்லாமுடைய னெத்தனமைய னெவெனில் எங்கும் பிரகாசியாநின்ற கீர்த்தியினாற் சிறக்கப்பட்டுள்ள இயமனாற் பூசிக்கப்பட்ட வெங்குரு வென்னும திருப்பதியை விரும்பியுள்ளான. வெங்குரு என்பதும் சீகாழி

ரு. சுடர்மணிமாளிகைத் தோணிபுரத்தவன்.

(ப-ள்) சுடர்மண்-சூடாமண், இம்-சமம், ஆளி-ஆளப்பட்டவன், கைத்தோணி-போர்தொலைத்த தும்பைமாலை, புரத்து-திரிபுரங்களையும, அவன்-அவம்பண்ணினவன என்க.

(பொ-பு.) சுடுநிலமாகிய மயானத்தை நடமாடு மிடமாககொண்டும, முப்புரங்களையும் நகைசெய்து சுடப்பட்ட வெற்றிப்போரையுடைய தும்மைமாலைக்கடவுள். சூடார் எனற்பாலது-சுடரெனவும், சமம் எனற்பாலது-இம எனவும், குறுகிநின்றன. துரோணமெனற்பாலது-தோணியென மருவிற்று.

சுடர்மணிமாளிகைத் தோணிபுரத்தவன.

(ப-ள்.) சுடாமணி-சூடாமணி, மாளி - மாலி, கைத்தோள - துதிக்கையினையுடைய யானையை, நிபுரததவன்-வடிவில்லாமற செயதோன் என்க.

(பொ-பு.) என்னுச்சிக்குச சூடாமணியுமாய் எனமேல் வைத்த மாலினையுடையனுமாய யாகத்தின்கண்வந்த யானையை வடிவொழித்தப போர்க்குந் தன்மையையுடையவன்.

சூடாமணியெனற்பாலது-சுடர்மணியெனவும், மாலியெனற்பாலது-மாளி எனவும், தோல எனற்பாலது-தோள் எனவும் நின்றன. மாலையுடையவன்-மாலி, தோல்-யானை.

(பொ-பு) அழகிய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ள இலக்குமியை யொத்தயிருடிபத்தினிகள் பிச்சையிடவந் தன்னையுமிடத்துத் தனக்குள்ள திருவாணத்தை அவர்களுக்குக்கொடுத்தவன்.

பொன்னடிமாதவர் சேர்புறத்தவன்.

(ப-ள்) பொன்-பொன்னாற்செய்யப்பட்ட பாடகநூபுர காலாழிகள் முதலியவு மிடப்பட்ட, அடி-பாதம், மாதவர்-கன்னியர், சேர்-இனமாய்விளையாடுதல், புறவத்தவன்-திருப்புறவமென்கிற திருப்பதியில் வாழ்கின்றவன் என்க.

(பொ-பு) பொன்னாற் செய்யப்பட்ட பாடக நூபுராதிகளைப் பாதங்களிலே யணிந்துள்ள கன்னியர் திரண்டு விளையாடும் புறவமென்னுந் திருப்பதியில் வாழ்கின்ற சிவன். புறவம் என்பது-சீகாழி.

௯. தசமுகனெரிதர வூன்றுசண்பையான்.

(ப-ள்) தசமுகன்-தயவையுடையான், எரிதர - எரிவீச, ஊன்று - அழுந்து, சண்-வேகம், பையான்-படம்பொருந்திய பாம்பையுடையான் என்க.

(பொ-பு) ஆத்துமாக்களிடத்துக் கருணைபிறக்கு மிடமாயுள்ளவன். அக்கினி வீசப்பட்டுக் திருவடியிலே அழுந்தச்சாத்தியுள்ள விரிந்த படத்தினையுடைய பாம்பை அணிந்துள்ளவனுடையான்.

தசமுகனெரிதர வூன்றுசண்பையான்.

(ப-ள்) த-அது, சமுகம்-திரட்சி, நெரி-நேரானவன், தர-புலி, ஊன் - மாமிசம், துசு-தூசு, அண்பையான்-விரித்துடுத்தான் என்க.

(பொ-பு) எல்லாமிறந்து அந்தமாயுள்ள சிவஞானிகள் கூட்டத்துக்கு நேரிதாகிய சூனியமாயுள்ள பொருளைத் தோற்றுவித்துள்ளானுமாய்ப்புலியின் தோலைப்பொருந்திய மேலாடையைத் திருவரையிலே விரித்துடுத்தவன். நேரி என்றபாலது - நெரி எனக் குறுகிநின்றது. தரக்கு என்றபாலது-தர எனக் குறைந்தது. தூசு என்றபாலது-துசு எனக் குறுகிநின்றது. பயான் - என்றபாலது பையானெனக் குறுகிப் போலியாயிற்று.

தசமுகனெரிதர வூன்றுசண்பையான்.

(ப-ள்) தசம்-தைசம், உக-கெட, நெரி-எதிர்ப்பட்டவன்; தரம்-மலை, ஊன் திருவுளத்தடைத்தல், து-விசேஷ ஞானமுள்ளவன், சண்-சட்சமயம், பையான்-பயனையுள்ளவன் என்க.

(பொ-பு) ஆத்துமவிகாரமான அகங்காரம்போம்படி என்னறிவி லெதிர்ப்பட்டவன். கயிலாயமலையைத் திருவுள்ளத்தடைத் தெழுந்தருளியிருந்து ஆத்துமாக்களை யிரக்ஷிக்கின்ற விசேஷத்தை யுடையவனென் றேத்தும் சட்சமயங்களுக்கும் அவரவர் கொண்ட பயனையுள்ளவன். நேரி என்றபாலது-நெரியெனக் குறுகிநின்றது.

தசமுகனெரிதர வூன்றுசண்பையான்.

(ப-ள்) தசமுகன்-பத்துத்தலைகளையுடைய இராவணன், நெரிதர-முறிய, ஊன்று-அமுக்கிய, சண்பையான்-சண்பையென்னுந் திருப்பதியில்வீற்றிருப்பவன் என்க.

(பொ-பு) பத்துத்தலையுள்ள இராவணனை முறியும்படி திருவிரலாலடர்த்தவனையானென்னில், சண்பையென்னுந் திருப்பதியிலே வீற்றிருக்குங் கடவுள்.

௰. காழியானைய னுள்ளவா காண்பரே

(ப-ள்) காழியான்-நிலைபெற்று நின்மலமான சித்தத்தையுடையபத்தரிடத்து, உள்ளவா-சத்தியம், காண்பரே-நோக்குவர் என்க.

(போ-பு) நிலைபெற்று நின்ற நினமலமாகிய சித்தத்தையுடைய பத்தரிடத்துச்சத்தி யப்பொருள்விளையும்பொருட்டுஞானநாட்டத்தினாலே அவர்களைக்கடாக்ஷிக்கின்றவன்.

காழியானய னுள்ளவாகாண்பரே

(ப-ள்) காழியான-களங்கமுள்ளவன, நயனுள்ளவா-ஞானக்கண்ணுள்ளவாறு காண்பரோ-நிலைமையாக நினைப்பரோ என்க.

(போ-பு) திருமிடற்றிற் களங்கமுடையானது கருணையை நினைத்து ஞான நாட்டத்தையுடைய சிவஞானிகள் சிவனுக்கிசைந்து தன்னடியார்க்கே அங்காரத்தைத் தகைக்கும் பணியெனத் தமதறிவிலே கருதாநிற்பர்.

காழியானய னுள்ளவாகாண்பரே.

(ப-ள்) காழியான்-விஷ்ணு, அயன-பிரமா, உள்ள-நினைக்க, ஆ-அதிசயம், கண்-கருதுதல, பரே-அந்நியம என்க

(போ-பு) விஷ்ணுவும் பிரமாவுந் திருமுடியுந் திருவடியுங்காணும்பொருட்டு வராகமும்-அன்னமுமாகக்கருதி வடிவுகொண்டார ஐயோ உள்ளபடி கருதிச் சிவனைப் பெருமல அவர்கருதிய தேதெனனில, அந்நியமகண்டனர். கண்-என்றபாலது-காண் என நீண்டது

காழியானய னுள்ளவாகாண்பரே.

(ப-ள்) காழியான்-காழிப்பதியிலுள்ளான, அயன்- ஐயன், உள் - என்னறிவி லுண்டான, அவர்-ஆசை, காண்பரோ-தரிசிப்பரோ என்க.

(போ-பு) எனபொருட்டாற் காழியெனனுந் திருப்பதியைப் படைத்தானை என்னையனை எனதாசையை-கீழ்ச்சொன்ன விருவர்களுமதாங்கள் தேடுந்தேட்டப்பிறிவில் மயக்கத்திலே தேட்டமழிந்துத் தோன்று நிற்பவனை தேடி மறந்தலொழிந்தெவ் வாறுகாணபர

கக கொச்சையண்ணலைக் கூடகிலாருடனமூடரே.

(ப-ள்) கொசசை-அறியாமையைப் பொருந்தியுள்ள ஆணவமலம் அண்ணலை பொருந்துதலை, கூடகிலார-மாறுபட்டார, உடல-உடலாமலே, மூடரே-மூடரம என்க.

(போ-பு) ஆணவமலத்தோடு கூடியுள்ள மயக்கத்துடன மாறுபட்டோர்கள் மாயாதனுவாலு மந்திரதனுவாலு மறைக்கபபடார்கள். மூடார என்றபாலது - மூடர் எனக் குறுகின்றது

கொசசையண்ணலைக் கூடகிலாருடனமூடரே.

(ப-ள்) கொச்சை-புலால நாற்றம, அண்ணல-அணுகுதல், கூடகிலார்-மனம் பொருந்தமாட்டாதார, உடலமூடரே-சரீரத்தைபபுதைபபர் என்க

(போ-பு.) புலால் நாற்றத்தைப் பொருந்தியவழுக்குமெய்யைப்பொய்யென்று மனங்கொள்ளமாட்டாமல அதுவே தமது நிலைபெற்ற வுருவாக நினைத்துத் துவராடையிலே புடைசூழப்பட்ட பௌத்தரும

கொச்சையண்ணலைக் கூடகிலாருடன்மூடரே.

(ப-ள் ,கொச்சைபள்-பேதைத்தன்மையையுடையமச்சியகந்தி, அலை-புலப்படா நின்ற அவளது நலத்தைககருதி, கூடு-சரீரம், அகிலஆர்-அகிலமணம்பொருந்தியஉடன் அதனைமையாளுடன,மூடரே-மயக்குமாறு பண்ணினது அது பொருநதுதல்என்க.

(போ-பு) பேதைத் தனமையையுடைய மச்சியகந்தியினுடைய நலத்தைக் கொள்ளும்பொருட்டு அவளது சரீரமெல்லாம சுகந்த மொய்க்கும்படி யவளுடனே பொருந்திய பராசரனாகிய மகாவிருடிவந்து சிவனைபபொருந்தி யருச்சிக்கப்படுதலால்.

கொச்சையண்ணலைக் கூடிலாருடனமூடரே.

(ப-ள்) கொச்சை - கொச்சையாகிய பராசரன் பேராலுள்ள கொச்சையென்னுந் திருப்பதி, அண்ணலை-கர்த்தாவை, கூடிலார்-சேரமாட்டார், உள்தல்-உள்ளுதல், மூடரே-அந்தகார நிறைந்த போதத்தையுடையவரே என்க.

(பொ-பு) பராசரமுனிவனாற் பூசிக்கப்பட்டு அவன் பெயரால் பெயர்பெற்றுள்ள கொச்சை நகரொன்னுந் திருப்பதியிலே எழுந்தருளியிராநின்ற தலைமையோனை உள்ளபடி தரிசனம்பண்ணி வழிபட மாட்டார்களது நினைவு எவ்வாறிருக்குமென்னில், மழைக்காலிருளும்வெளியெனஇருண்டமயக்கத்தையுடையஆணவபோதமாயிருக்கும்.

கஉ. கழுமலமுதுபதிக் கவுணியன்கட்டுரை.

(ப-ள்) கழுமல்-மிகுதிப்பட்டகுற்றம, அமுது-செலம், பதிக்க - விளைவிக்க, உள்நி-உளனீ, கட்டு-வடிவாகக் கட்டுண்டல், உரை-தேய்தல் என்க.

(பொ-பு) மிகுதிப்பட்ட தோஷமாயுள்ள சுக்கில சுரோணிதமாகியஇருவகைநீரினகண்ணே சிரமுதலாகிய அவயவமாகத் தோற்றிப்பூமியினகண்செனித்துப்பரிணமித்துப்பின்பு தேய்ந்து மரிக்கின்ற செனமத்தையும் பரிணமித்தல்-வேறுபடுதல்.

கழுமலமுதுபதிக் கவுணியன்கட்டுரை.

(ப-ள்) கழு கழுவப்படும், மலம் உது - ஆணவமலமு மற்றதனுடன் சுட்டிச்சொல்லப்பட்ட மாயாமலத்தையுங் கன்மமலத்தையும், பதி-பாதி, கவுணி - உள்ளேஅகப்படுத்திக கவுளிகரித்துக்கொள்ளுதல், அன்கண் - ஆத்துமாவினிடத்து, துரை-இறைவர் என்க

(பொ-பு) கீழ்ச்சொல்லிப்போந்த செனமத்தையுங் கழுவி மலத்திரயங்களையுங் கழுவாநிற்கும் (எனறபதம்நிற்க. இனிச இவனது நாமமுரைக்கறபாற்று.) தனதுபாதியாகிய திருவருளிலே என்னையகப்படுத்திக் கவுளிகரித்துக்கொண்டந்த அருள்வழியாக எனதிடத்தி விடையறுமல் வாழும் தன்னை யெனக்குந்தந் தடிமைகுலையாமலெக்கணும் விட்டு விளங்குங் கத்தா. பாதி எனறபாலது-பதியெனகுறுகிநின்றது.

கழுமலமுதுபதிக் கவுணியனகட்டுரை.

(ப-ள்.) கழும-மயக்கம், அலம-அலக்கண்படுதல், அமுது-அமுதம், பதி-கர்த்தர், க-சிரசு, உணியன்-உண்ணப்பட்டவர், கட்டு-விளக்கம், உரை-பொன் என்க.

(பொ-பு) மாயா மயக்கத்தின்கண்ணே மயங்கி பெத்தமுத்தி யிரண்டுந்தெரியாமல் திண்டாடப்பட்ட மலபோதர்க்கு அமுதம்போன்றுஅரிதாயுள்ளவனுமாய்விட்டு விளங்கப்படாநின்ற பொனனுருவை யுடையவனைச் சிருஷ்டிக்குக் கர்த்தாவாகிய பிரமனது சிரக்கபாலத்திலே பிச்சைகொண்டு நுகருங்கருணையாளனே.

கழுமலமுதுபதிக் கவுணியன்கட்டுரை.

(ப-ள்) கழுமலமுதுபதி-கீழ்ச்சொன்ன பதியின்கண், கவுணியன் - கவுணியகோத்திரத்துவந்த மறையோனாகிய யான, கட்டு-காட்டு, உரை-உரைப்பீராக-என்க.

(பொ-பு) திருக்கழுமல மென்னும் மூவாப் பழங்கிழமைப் பன்னிரு பெயர்பெற்ற அநாதி மூலமாகிய பதியிடத்துக் கவுணிய கோத்திரத்திலே தோன்றப்பட்டயான் நிவேதிக்கப்படும் காட்டாகிய இப்பாடலைக் கீழ்ச்சொன்னவற்றிலு மலத்திரயங்களிலும் அழுந்தா நின்ற ஒருத்தராகிலும் பலராகிலும் உரைசெய்வார் உயர்ந்தாரோயாதனை விப்பாடலை யிடைவிடாமல் நுரைசெய்வீராக. காட்டு என்பது - கட்டெனக்குறுகிநின்றது.

திருச்சிற்றம்பலம்.

உரை - முற்றியது.

## திருவெழுக்கூற்றிருக்கை.

திருச்சிற்றம்பலம்

ஓருருவாயினைமானாங்காரத்-தீரியல்பாயொரு விண்முதல்பூதல - மொன்றியவிருசுடரும்பர்கள்பிறவும-படைத்தளித்தழிப்பமும் மூர்த்திகளாயினை-யிருவரோடொருவனாகிநின்றனையோரானீழலுன்கழலிரண்டு-முப்பொழுதேத்தியநால்வர்க்கொளிநெறிகாட்டினை-நாட்டமூன்றாகக் கோட்டினை-யிருநதியரவமோடொருமதிசூடினை - யொருதாளீரயின்மூவிலைச்சூல - நாற்கான்மானமறிபைந்தலையரவ-மேந்தினைகாய்ந்தநால்வாய்மும்மதத்திருகோட்-டொருகரியீடழித்துரித்தனை-யொருதனுவிருகால்வளையவாங்கி-முப்புரத்தோடுநானிலமஞ்சக்-கொன்றுதலத்துறவவுணரையறுத்தனை-யைம்புலனாலா மந்தக்கரண-முக்குணமிருவளியொருங்கியவானோரேத்தநின்றனையொருங்கியமனத்தோ டிருபிறப்போர்ந்துமுப்பொழுதுகுறைமுடித்து - நான்மறையோதியையவகைவேள்வி-யமைத்தாறங்கமுதலெழுத்தோதி-வரன்முறைபயின்றெழுவான்றனைவளர்க்கும்பிரமபுரம்பேணினை-யறுபதமுரலும்வேணுபுரம்விரும்பினை - யிகலியமைந்துணர்புகலியமர்ந்தனை-பொங்குநாற்கடல்சூழ்வெங்குருவிளங்கினைபாணிமூவுலகும்புதையமேன்மிதந்த-தோணிபுரத்துறைந்தனை தொலையாவிருநிதி-வாய்ந்தபூந்தராயேய்ந்தனை-வரபுரமென்றுணர் சிரபுரத்துறைந்தனை-யொருமுலையெடுத்தவிருதிறலரக்கன்-விறல்கெடுத்தருளினைபுறவம்புரிந்தனை-முந்நீர்த்துயின்றோனுமுகனறியாய்ப்- பண்பொடுநின்றனைசண்பையமர்ந்தனை-யையுறுமமணருமறுவகைத்தேரரு-மூழியுமுணராக்காழி யமர்ந்தனை-யெச்சனேழிசையோன்கொச்சையைமெச்சினையாறுபதமுமைந்தமர்கல்வியுமறைமுதனான்கும்மூன்றுகாலமுந்-தோன்றநின்றனையிருமையினொருமையு-மொருமைதன்பெருமையுமறுவிலாமறையோர்-கழுமலமுதுபதிக் கவுணியன்கட்டுரை-கழுமலமுதுபதிக்கவுணியனறியு-மனையதன்மையையாதலினின்னை - நினையவல்லரில்லை நீணிலத்தே.

---

## திருவெழுக்கூற்றிருக்கை - திருவுள்ளக்கருத்து.

ஓருருவாயினை - என்றது. எல்லாத்தத்துவங்களையுங்கடந்து வாக்குமனாதிகளுக்கு மெட்டாமலிருந்துள்ள தற்சுரூபந்தான் பஞ்சகிர்த்தியங்களையும் நிகழ்த்த வேண்டி நினதிச்சையா லெடுத்துக்கொண்டிருக்குந் திருமேனியையென்றவாறு.

மானாங்காரத்தீரியல்பாய் - என்றது. மானென்பது - சத்தி-யாங்காரத்தீரியல்பாய்- தற்சத்தியைக்கொண்டு சர்வானுக்கிரகமான பஞ்சகிர்த்தியங்களைநடத்தவேண்டிச் சத்திசிவமாகிய விரண்டுருவாயினை என்றவாறு.

ஒரு - என்றது. அந்தச் சத்தியுடனே கூடியொன்றாகிநின்றனை என்றவாறு.

விண்முதல்பூதல மொன்றியவிருசுட ரும்பர்கள்பிறவும் படைத்தளித்தழிப்பமும்மூர்த்திகளாயினை - என்றது. ஆகாசமுதலாகப்பூமியீறாகவுள்ளபஞ்சபூதங்களையுஞ் சந்திராதித்தர்களையுந் தேவர்களையு மற்றுமுள்ள ஆத்மாக்களையும் படைக்கைக்கும், காக்கைக்கும், அழிக்கைக்கும், பிர்மா - விஷ்ணு-ருத்திரரென்கின்ற திரிமூர்த்திகளுமாயினை என்றவாறு.

இருவரோடொருவனாகி நின்றனை-என்றது.பிர்மாவையும் விஷ்ணுவையுமிடத்திலும் வலத்திலும் அடக்கிக்கொண்டேகமாய்த்திரிமூர்த்தியாகியநின்றனை என்றவாறு.

ஓரால்நீழலுண்கழலிரண்டு முப்பொழுதேத்தியநால்வர்க்கொளிநெறிகாட்டினை என்றது. விருக்ஷங்களுக்கெல்லாந் தலைமையாயிருப்பதொருவடவிருக்ஷத்தினீழலிலே யெழுந்தருளியிருந்து நின்னழகிய ஸ்ரீபாதங்களை யுதய - மத்தியான - மத்தமனமென்கின்ற மூன்றுகாலமுந் தோத்திரஞ்செய்யாநின்ற அகஸ்தியன் - புலத்தியன் - சனகன் சனற்குமாரனென்னும் நால்வகையிருடிகளுக்குந்தற்சுரூபமான திருமேனியைக்காட்டியருளினை என்றவாறு

நாட்டமூன்றாகக்கோட்டினை-என்றது பிர்மா முதலாயிருந்துள்ள ஆத்மாக்கள் ரூபமென்னும் புலனாலே சர்வ பதார்த்தங்களையுங் காணுதபடியாலே சந்திராதித்தர்களையு மக்கினியையு மூன்றுகண்ணாகக் கொண்டருளி அந்தகாரமான விருளை யோட்டினை என்றவாறு.

இருநதியரவமோடொருமதிசூடினை-என்றது பெரிதாகிய கங்கையையு மொப்பில்லாத பாம்பினையு மொருகாலத்தினுமுதிராத பிறைக்கண்ணியையுஞ் சூடியருளினை என்றவாறு.

ஒருதாளீரயினமூவிலைச்சூல நாற்கான்மான்மறியைந்தலை யரவமேந்தினை-என்றது. பிரணவமாயிருந்துள்ள ஒருகாம்பினையும் ஈருகின்ற கூர்மையினையும் பிர்மா - விஷ்ணு - ருத்திரனென்கின்ற மூன்றிலையினையுமுடையதொரு சூலத்தினையும்இருக்கு யசா-சாமம்-அதர்வணமென்கின்ற நாலுவேதங்களையும நாலுகாலாயிருந்துள்ள தொருமான்கன்றினையும் ஸ்ரீபஞ்சாக்ஷரங்களையு மஞ்சுதலையாகவுடையதொருமகாநாகத்தினையும் அஸ்தங்களிலேதரித்தருளினை என்றவாறு.

காய்ந்தநால்வாய் மும்மதத்திருகோட் டொருகரியீடழித் துரித்தனை-என்றது. தன்னிழலைக்காயத்தக்க கோபத்தினையும் தொங்கும்வாயினையு மிரண்டு கொம்பினையுமுடைய தொரு ஒப்பில்லாத ஆனையினுடையபெலங்களையெல்லாங்கெடுத்துஉரித்துப் போர்த்தனை என்றவாறு.

ஒருதனுவிருகால்வளையவாங்கி முப்புரத்தோடு நானிலமஞ்சக் கொன்றுதலத் துறவவுணரையறுத்தனை - என்றது ஒப்பில்லாத பொன்மலையாகியவில்லை யிருதலையும் வளையவாங்கி அஸ்திரதனைத்தொடுத்து மூனறுபுராதிகளாகிய அவுணரையறுத்தனை எனறவாறு.

ஐம்புலநாலா மந்தக்கரண முக்குணமிருவளி யொருக்கியவானோரேத்த நின்றனை-எனறது. சத்த-பரிய - ரூப - ரச - கந்தமென்னப்பட்ட ஐம்புலங்களையு, மனம் புத்தி - யாஙகார - சித்தமெனகினற அந்தக்கரணங்கள் நான்கினையும, ராசத-தாமத-சாத்துவிதமென்கின்ற மூன்றுகுணங்களையும், பிராணன-அபானனென்கின்றவிரண்டு வாயுவையும்,மூலாதாரத்திலே யொடுக்கிக்கொண்டு ஏகாக்கிரசித்தராயிருந்துள்ள தேவர்களேத்தநின்றனை என்றவாறு.

ஒருங்கியமனத்தோடிருபிறப்போர்ந்து முப்பொழுதுகுறைமுடித்து நான்மறையோதி ஐவகைவேள்வியமைத்தாறங்க முதலெழுத்தோதிவரன்முறைபயின்றெழுவான் றனைவளர்க்கும் பிரமபுரம்பேணினை - என்றது ஆசாரம் - நித்திரை - பயம்-மைதுனமிவற்றில் செல்லுகினற மனத்தைப் பரமேசுவரனுடைய ஸ்ரீபாதங்களிலேயொருக்கி முன்பு தாம் மாதாவின் உதரத்திலேபிறந்த பிறப்பும், உபநயநத்தின்பின்பு உண்டான பிறபபுமாகிய இரண்டையும் விசாரிதது மூன்றுசந்தியும், செபதர்ப்பண-அனுட்டான, ஓமங்களையுமுடித்து,இருக்கு-யசுர்-சாம-அதர்வணமென்கிற நாலுவேதஙகளையுமோதி-சிவபூசை - குருபூசை மகேசுரபூசை - பிராமணபோசனம் - அதிதி புசிப்பு எனகின்ற ஐவகைவேள்வியுமுடித்து, ஓதல் ஓதுவித்தல் - வேட்டல் - வேட்பித்தல் - ஈதல்-ஏற்றல்-என்னுமாறங்கங்களையும் நடத்திஇவைகளுக்குமுதலாயிருந்துள்ள பிரணவத்தையு

முச்சரித்துத் தேவலோகத்திலுள்ள தேவர்களுக்கு மவிகொடுத்து மழையைப்பெய்விக்கும் பிராமணராலே பூசிக்கப்பட்ட பிரமபுரமே திருப்பதியாக வெழுந்தருளியிருந்தனை என்றவாறு — ஆறங்கமாவன-மந்திரம்-வியாகரணம்-நிகண்டு-சந்தோபிசிதம்-நிருத்தம்-சோதிடம்-இவ்வாறு வழங்கப்படுகின்ற முறைமையொன்று

அறுபதமூராலும் வேணுபுரம்விரும்பினை-என்றது அறுகாலுடைய வண்டுகளிசைபாடும் பொழில்சூழ்ந்த வேணுபுரமென்பதே திருப்பதியாக எழுந்தருளினை என்றவாறு — வேணுபுரமென்பதற்குக் காரணம் - வேணு என்பானொருவன் இந்திரனுடன் கசமுகனென்பானொருவசுரன் வந்து யுத்தம்பண்ண வவனுடனே பொருது அபசெயப்பட்டுப் பிரமபுரமென்று முன்சொன்ன பதியிலேவந்து பரமேசுவரன் திருவடிகளிலே தம்பிரானே யடியேனுக்கமைத்தருளின சுவர்க்கலோகத்தைக் கசமுகன்சங்கரிக்கவவனுடன் யுத்தம்பண்ணி யபசெயப்பட்டுப் போந்தேனென்று விண்ணப்பஞ்செய்து பூசிக்கையாலே தம்பிரானுங்கணேசுரனைத் திருவுளத்தடைத்து வாராய் கணேசுரனே கசமுகன் வரப்பிரசாதமுடையவனொருவராலு மவனைச் செயிக்கப்போகாது நீயமவனை வடிவாகச்சென்று உன்வலக்கொம்பை முறித்தெறிந்து அவனைக்கொன்றுவேணுவென்கின்ற இந்திரனைச் சுவர்க்கலோகத்திலே குடிபுகவிட்டுவாவென்று திருவுளம்பற்றக், கணேசுரனு மவ்வடிவாகச்சென்று தன்வலக்கொம்பை முறித்தெறிந்து அவனையுங்கொன்று வேணுவென்கின்ற இந்திரனையும் சுவர்க்கலோகத்திலே குடிபுகவிடவுண்டானதென்க.

இகலியமைந்துணர் புகலியமர்ந்தனை-என்றது. தேவர்கள்முன் புகலிடமென்று புகுதலால் திருப்புகலியென்பதே திருப்பதியாகவெழுந்தருளியிருந்தனை என்றவாறு, தேவலோகமான வமராபதியைச் சூரபதுமா என்பானொருவசுரன்வந்து சங்காரம் பண்ண அவனுடனே தேவேந்திரன் முதலாயுள்ளார்பொருது அபசெயப்பட்டு யுத்தத்தை யொழிந்து இனி நமக்குப்பரமேசுவரன் ஸ்ரீபாதமொழிய புகலிடமில்லையென்றவேணுபுரத்திலேவந்து பரமேசுவரனைத் தெண்டம பண்ணி யவனாலுண்டான நலிகையைவிண்ணப்பஞ் செய்து எங்களை ரக்ஷித்தருளவேணுமென்னப் பரமேசுவரனும - சுப்பிரமணியனைத் திருவுளத்தடைத்து வாராய் சுப்பிரமணியனே நீ - ஆறுமுகமும் - பன்னிரண்டுகையுமாகப்போய்ச் சூரபத்மாவையுஞ் செயித்துத் தேவலோகத்திலே தேவர்களையும் குடிபுகுதவிட்டுவாவென வருகைகாரணம்

பொங்குநீர்க்கடல்சூழ்வெங்குருவிளங்கினை-என்றது. மிகவுங் கோபிக்கப்பட்ட கடல்சூழ்ந்தவெங்குருவென்றதே திருப்பதியாக எழுந்தருளி யிருந்தனை என்றவாறு.- லோகங்களுக்கெல்லாந் தேவகுருவாகிய பிரகஸ்பதிபகவான் என்னையொழிந்து காததாவுண்டோவென்று மனோகொவஞ் சொல்லுகையாலே பரமேசுவரனும இவன் மகாகெர்வியாயிருந்தா னிவனுடைய கெர்வத்தை யடக்கவேண்டுமென்று திருவுளத்தடைத்தருளித் தேவர்க்குக்குருவாகிய அதிகாரத்தை மாற்றியருளப் பயப்பட்டுப் புகலியென்கின்ற திருப்பதியிலேபோய்ப் பரமேசுவரனைத் தெண்டம்பண்ணி அடியேன்செய்த அபராதங்களைப் பொறுத்தருளி யடியேனை ரட்சித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யத் தம்பிரானும் நீமகாவேகியாயிருந்தாயென்று திருவுள்ளமாய்முன்புபோலே தேவர்களுக்குக் குருவாகிய வதிகாரத்தையும கொடுத்தகாரணத்தால் வெங்குரு என்கின்ற பெயருண்டாயது

பாணிமூவுலகும்புதையமேல்மிதந்ததோணிபுரத்துறைந்தனை-என்றது-பாணியென்கின்ற செலமபிரளயமாய்ப் பூமி - அந்தர-சுவர்க்க-மூன்றுலோகங்களையும் புதைப்ப அதைச் சங்காரம்பண்ணி யருளியதின்மேலே தோணிபோலமிதந்த வெங்குருவாகிய தோணிபுரமென்றதே திருப்பதியாக வெழுந்தருளியிருந்தனை என்தவாறு.

தொலையாவிருநிதிவாய்ந்த பூந்தராயேய்ந்தனை-என்றது. வேண்டினார்வேண்டியதுகொடுத்துத் தொலைவறச் சங்கநிதி-பதுமநிதியென்று சொல்லப்பட்ட இரண்டுநிதி

களும் பூவுந்தாராயும் பூசிக்கையாலே திருப்பூந்தாராயென்னப்பட்ட திருப்பதியிலே எழுந்தருளியிருந்தனை என்றவாறு—ஒருகாலத்துத் தொலையாதவரத்தைப் பெறுவது காரணமாகத் திருத்தோணிபுரத்திலேவந்து தம்பிரானைப்பூசித்தளவி லுங்களுக்கு வேண்டுவதெனனென்று கேட்டருள, தம்பிரானே அடியோங்களுக்குளெல்லாக்காலங்களுந் தொலையாமல் கொடுக்கத்தக்க வரத்தைப் பிரசாதித்தருளவேண்டுமென்றுவிண்ணப்பஞ்செய்ய, அவ்வாறே தொலையாதவரத்தையுங் கொடுத்தருளி மகாசங்காரத்திலுந்தம்முடைய ஸ்ரீஅஸ்தங்களிலே தரித்தருளும் வரப்பிரசாதமுங் கொடுத்தருளினதால் பூந்தாராயெனப் பெயருண்டாயது.

வரபுரமென்றுணர் சிரபுரத்துறைந்தனை-என்றது. வரத்தைத தருவதான புரமென்றுணரத்தக்க சிரபுரமென்பதே திருப்பதியாக எழுந்தருளியிருநதனை என்றவாறு — தேவர்களும்-பிரமா-விஷ்ணுக்களுமாகக்கூடி அமிர்தத்தை யுண்டாக்கித் தேவர்களையிருத்தி விஷ்ணுபகவான் அமிர்தம் படைசதுக்கொண்டு வருகிற வேளையில் ராகுகேதுவென்கின்ற இரண்டுபாயபும் கூடிக்கரந்திருநது அமிர்தபானம் பண்ணுவதாக இருப்பதுகண்டு விஷ்ணுபகவான் அமிர்தம் படைத்துவருகின்ற சட்டுவத்தைகொண்டுதலையறவெட்டுகையா லுடலிழந்து நாகமிரண்டும் நம்முடலைதரக்கடவான் பரமேசுவரனையொழிய வேறேயில்லையென்று திருப்பூந்தாராயிலேவந்து பரமேசுவரனைநோக்கி யிரண்டுசிரங்களும் பூசித்தலால் சிரபுரமென்று பெயருண்டாயது.

ஒருமலையெடுத்த விருதிறலரக்கன் விறல்கெடுத்தருளினை-என்றது.' பெருமையுள்ள கயிலாயமென்னும் பேரையுடைத்தாய் உனக்கே ஆலயமாயிருப்பதொரு வெள்ளிமலையையெடுத்த பெரிய புசபெலங்கொண்ட ராவணனுடைய கர்வத்தைக்கெடுத்தருளினை என்றவாறு.

புறவம்புரிந்தனை-என்றது பிரசாபதியென்கின்றபிர்மவிருஷி-கவுதமரிஷியைநோக்கி நீ ஸ்திரிபோகத்தைக் கைவிடாமலிருக்கிறவனல்லோவென்று தூஷணிக்கையாலே, கவுதமரிஷியும் பிரசாபதிபகவானைப்பார்த்து நீ புருவென்னும் ஒருபக்ஷியாய் நரமாமிசம புசிப்பாயாகவென்று சபிக்கப்; பிரசாபதியும் ஒரு புருவாய்ப்போய்ப் பலவிடத்திலும் நரமாமிசம் புசிக்கையிலே யொருநாள், மாமிசந்தேடிச் சோழவமிஸத்திலேயொருராசா தினசரிதனுயிருககிறவிடததிலே யிந்தப்புருவாகிய ரிஷியும்போய், ராசாவைப்பார்த்து எனக்கு அதிகதாகமாயிருக்கின்றது சற்றுநரமாமிசம்இடவல்லையோவென்ன, ராசாவு முனக்கு எவ்வளவு மாமிசம் வேண்டுமென்னப், புருவுமுன்சரீரத்திலேஒன்றுபாதி தரவேண்டுமென்ன, ராசாவுந் தன்சரீரத்திலேயொன்றுபாதியரிந்திடப், புருவுக்குநிறையப்போதாமல் சாவமாமிசத்தையு மரிந்திட்டு ராசாவுஞ் சோர்ந்துவிழ, இந்தப் புருவாகிய பக்ஷியும் நமக்குத் தன் சரீரத்தை யரிந்திட்டுப் பிழைப்பித்தராசாசரீரம்பெறும்படி யெங்ஙனேயெனறு விசாரிக்குமளவில், பரமேசுவரனொழியவேறில்லையென்று சிரபுரத்திலேவந்து பரமேசுவரனை நோக்கி அர்சசிக்கப், பரமேசுவரனுந்திருவுளத்தடைத்தருளத் தம்பிரானே* யடியேன் தாகந்தீரத் தன் சரீரத்தை யரிந்திட்ட ராசாவுக்குமுன்புபோல வுடலும் பிரசாதித்து, அடியேனுக்கு மிந்தச்சாபதோஷம் நீக்கவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, ராசாவுக்குச் சரீரமுங்கொடுத்துப் புருவுக்கு வேண்டும்வரப்பிரசாதங்களையும பிரசாதித்துச் சாபதோஷமுமாற்றியருளப்புருவும் பூசிக்கையாலே புறவமென்கின்றதே திருப்பதியாக வெழுந்தருளி யிருந்தனை என்றவாறு.

முந்நீர்த்துயின்றோ னான்முகனறியாப் பண்பொடுநின்றனை-என்றது ஆற்றுநீ வேற்றுநீ ஊற்றுநீர் என்று சொல்லப்பட்ட முந்நீராகிய சமுத்திரத்திலே துயிலாநின்றநாராயணனும நாலுமுகத்தினையுடைய பிர்மாவு மடியுமுடியுந்தேடற்கரிதாய் நின்றபண்பினையுடையையா யெழுந்தருளி யிருந்தனை என்றவாறு.

சண்பையமர்ந்தனை-என்றது. தூர்வாசமகாரிஷியாசிரமத்தே கிருஷ்ணவதாரத்திலுள்ள கோபாலப்பிள்ளைகளெல்லா மிந்த இருஷியை அசங்கதித்துத், தங்களிலேயொ

ருவனைக் கெர்ப்பிணியாகப் பாவித்துச்சென்று, இவள் பெறுவது ஆணோபெண்ணோவென்று அந்த இருஷியைக்கேட்கையாலே, அவர்கோபித்து இவள்பெறுவது ஆணுமல்ல பெண்ணுமல்ல வுங்கள் வமிசத்தாரையெல்லாஞ் சங்கரிக்கைக்கு ஒருஇருப்புலக்கை பிறக்கக்கடவதென்று சபிக்கையாலே, அவள் வயிற்றிலிருந்து ஒரு இருப்புலக்கைவிழ, அந்தச்சேதியைக் கிருஷ்ணன கேட்டுத், தூர்வாசமகாரிஷி சாபஞ் சேவலமல்லவென்று அந்த இருப்புலக்கையைப் பொடியாக அராவி, அந்தப்பொடியைச சமுத்திரத்திலே போட, அராவுதலுக்குப் பிடிபடாத ஒருவேப்பம்விதைப் பிரமாணமுள்ள விரும்பை ஒருமீன் விழுங்கி, ஒரு வலைக்காரன் கையிலே யகப்பட்டது அதின் வயிற்றில் கிடந்த இரும்பைத் தன்னமபுத் தலையிலேவைத்தான மற்றுஞ்சமுத்திரத்திற்போட்ட இரும்புப்பொடிகளெல்லாம அலையுடனேவந்து கரைசேர்ந்து சண்பையாக முளைத்துக கதிராய் நின்றவிடத்திலே, கோபாலகுமாரர்கள் விளையாடி வருவோமென்று இரண்டுவகையாகப்பிரிந்து சென்று அந்தச் சண்பைககதிரைப்பிடுங்கி யெறிந்துகொண்டுஅதனாலே பட்டு விழுந்தார்கள். இதைக் கிருஷ்ணன்கேட்டு இதனாலே நமக்கு மரணமாயிருக்குமென்று விசாரித்து, ஆலின்மேலே யொரு இலையிலே யேகாசனமாகவொருபாதத்தை மடித்து ஒருபாதத்தைத்தூக்கி யமர்ந்திருக்கிறவிடத்திலே, அந்தமீன்வேடன பக்ஷிசாலங்களைத்தேடி வருகிறபோது தூக்கியபாதத்தை யொரு செம்பருந்திருக்கிறதாகப்பாவித்து அந்த அம்பைத்தொடுத்தெய்யக், கிருஷ்ணனுமபட்டுப் பரமபதத்தைஅடைந்தான் இந்தச்சாபதோஷம் தூர்வாசமகாரிஷியைச்சென்று நலிகையாலே, யிந்தத்தோஷத்தை நீங்கப் பரமேசுவரனைநோக்கி அர்ச்சிக்கப், பரமேசுவரனுந் திருவுளத்தடைத்தருள, இருஷியுந் தெண்டனபண்ணித் தம்பிரானே அடியேனுடைய சாபத்தாலே கிருஷ்ணனுடைய வமிசத்திலுள்ள கோபாலரெல்லாருஞ் சண்பைக்கதிர்களால் சங்காரப்படுகையாலே, அந்தத்தோஷ மடியேனைவந்து நலியாதபடி திருவுளத்தடைந்தருளி ரக்ஷிக்கவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யத், தூர்வாசமகாரிஷிக்குச்சண்பைச்சாபத்தினாலுள்ள தோஷத்தை நீக்கிச் சண்பைமுனியென்கின்ற நாமத்தையுந் தரித்தருளிச்சண்பையென்கின்றதே திருப்பதியாக வெழுந்தருளியிருந்தனை என்றவாறு

ஐயுறுமமணரு மறுவகைசதேரரு மூழியுமுணராக காழியமர்ந்தனை-என்றது. வேதாகமபுராணசாத்திரங்களிலுள்ள பலத்தையில்லையென்று ஐயமுறநிற்கின்ற அமணருங், கைப்புப்-புளிப்புக - காப்புத்-துவர்ப்பு-கூர்ப்புத-தித்திப்பு-என்கின்ற ஆறுவகைரசங்களையு முச்சிக்குமுன்னே புசிக்கிறதே பொருளென்றிருக்கிற புத்தருமூழிகாலத்தது மறியாமல், மிகவுங் காளிதமான விஷத்தையுடைய காளியென்கின்ற நாகம பூசிக்கையாலே சீகாழியென்கின்றதே திருப்பதியாக வெழுந்தருளியிருந்தனை என்றவாறு.

எச்சனேழிசையோன கொச்சையைமெச்சினை-என்றது குரல்-துத்தங் - கைக்கிளை-உழை-யிளி-விளரி-தாரம்-எனபதேழிசை—குரலாவது-சங்கதத்தொனி, துத்தமாவது-ஆண்மீன்பிளிறு, கைக்கிளையாவது-குதிரையினகுரல், உழையாவது-யானினகுரல், இளியாவது-மயிலின்குரல், விளரியாவது-கடலோசை, தாரமாவது - காடையினகுரல், என்னும் நாதங்களையுமெச்சினை, மகத்தான இருடிகள் எல்லாரினும் விருத்தராயுள்ள பராசரபபிரமரிஷியானவர் மற்ற ரிஷிகளெல்லாரையுமநோக்கி நீங்கள் சமுசாரிகளொழிய விரதத்தை யனுஷ்டிப்பாரில்லையென்று அவர்களைத்தூஷிக்க, அவர்களும் நீமச்சகந்தியைப்புணர்ந்து மச்சகந்தமு முன்னைப்பற்றிவிடாம லனுபவிப்பாயென்று சபிக்கையாலே, அந்தச்சாபத்தின்படிபோய் மச்சகந்தியைப்புணர்ந்து அந்தத்தூர்க்கந்த மிவரைப்பற்றி யொருயோசனைதூரம் தூர்க்கந்தித்தபடியாலே, யிதுபோக்கவல்லவர் பரமேசுவரனை யொழியவில்லையென்று சீகாழியிலேவந்து பரமேசுவரனை அர்ச்சிக்கப், பரமேசுவரன உனக்கு வேண்டினதென்னென்று கேட்கத், தம்பிரானே அடியேனைப்பற்றின தூர்க்கந்தத்தை விடுவிக்கவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, தம்பிரானுமிவனைக் கொச்சைமுனியோவென்று திருவுளமாயிவனமேற்பற்றின தூர்க்கந்தத்தையும்போக்கிச்சுகந்தத்தையும்பிரசாதித்தருளிக்கொச்சையென்கின்ற சந்தானநாமத்தையுந் தரித்தருளிக் கொச்சையென்கின்றதே திருப்பதியாக வெழுந்தருளியிருந்தனை என்றவாறு.

ஆறுபதமுமைந்தமாகல்வியு மறைமுதல்நான்கு மூன்றுகாலமுந் தோன்ற நிறை ஹை-என்றது. பிரத்தி-பிரத்தியாகாரம்-துலவியம்-தல்லியம்-திதய-விதலை-ஆவிதலைதயெ ன்கின்ற ஆறுபதங்களும், ஆக-மதுராஞ்-சித்திரம்-விதாரம்-விளையம்-என்கின்ற வைந் தும, இருக்கு-யசுர-சாமம-அதர்வணமென்கின்ற நாலுவேதங்களுஞ், செலகாலம் வரு காலம்-நிகழ்காலமென்கின்ற மூன்றுகாலமுந்தோன்றநின்றமூர்த்தியாயினை என்றவாறு

இருமையினொருமையும்-என்றது சத்திசிவங்களாயிருந்துள்ள இரண்டுமொன்றாய் அர்த்தநாரீசுவரமாயிருந்துள்ளதை யென்றவாறு

ஒருமையின்பெருமை-என்றது தானேயொரு எல்லையில்லாத சிவமாயிருந்துள்ள தையென்றவாறு

மறுவிலாமறையோர் கழுமலமுதுபதிக் கவுணியன்கட்டுரை கழுமலமுதுபதிக்கவு ணியனறியும்-என்றது மறுவற்ற பிரமவமிசத்தில் தோன்றித் தீக்கைகளாலேமலத்தை கழுவப்பட்ட கவுணியர்கோத்திரத்திலேவந்த சீகாழிப்பிள்ளை கட்டுரைய விருப்பிச யமமென்கின்ற முதுபதியிலே யெழுந்தருளினை. கமமென்கின்ற பிரமசிரசிலே உ ணங்கிற்றவனே அறியுமென்றவாறு.

அனையதன்மையையாதலின-என்றது அந்தன்மையாகியவியல்பினையுடையையா தலின் என்றவாறு

நினைநினையவல்லவரிலலை நீணிலத்தே-என்றது, நின்னை நினைக்கவல்லார்களுக குப் பிறப்பில்லை என்றவாறு.

திருச்சிற்றமபலம்

உரை-முற்றியது

---

## திருக்கழுமலம் - பண் - மேகராகக்குறிஞ்

திருச்சிற்றம்பலம்

சேவுயருந்திண்கொடியான்றிருவடியேசரணென்றுசிறந்தவன்பா
நாவியலுமங்கையொடுபங்கயத்தோனரனாருனவழிபட்டநலங்கொள்கோயில
வாவிதொறும்வண்கமலமுகங்காட்டச்செங்குமுதம்வாய்களகாட்டக்
காவியிருங்கருங்குவளைகருநெய்தல்கண்காட்டுங்கழுமலமே. (க)

பெருந்தடங்கண்செந்துவர்வாய்ப்பீலிடையாளலைச்செலவிபிரியாமேனி
யருந்தகையசுண்ணவெண்ணீறலங்கரித்தானமரர்தொழவமருங்கோயி
றருந்தடக்கைமுத்தழலோர்மனைகடொறுமிறைவனதுதன்மைபாடிக்
கருந்தடங்கண்ணார்கழல்பந்தம்மானைப்பாட்டயருங்கழுமலமே. (உ)

அல [illegible] வியானை வரு [illegible] வருமலைகடலைக்கடையப்பூதகல
[illegible] பருகக்கொடுபுனைந்[illegible]ணிகலனாடுந்தான்கருதுங்கோயில்
[illegible] துமியைசுவர்[illegible]சவிக்குககாலந்தானும்
[illegible] மான [illegible] யுடையமெய்யாவாழ்கழுமலமே. (ங)

[illegible] மெய்சுக்சயமெய்துப்பரிசுமெய்மைப்
[illegible] பொன்றவொருசிலைவளைத்தோன்பொருந்துங்கோயில
[illegible] மடவார்மாளிகையின்சூளிகைமேன்மகப்பாராட்டக்
கானகைப்புமவிளமயிலருங்கணங்கேட்டுமகிழ்வெய்துங்கழுமலமே. (ச)

ஊர்கின்றவரவமொளிவிடுதிங்களொடுவன்னிமத்தமன்னு
நீர்நின்றகங்கைநகுவெண்டலைசேர்செஞ்சடையோனிகழுங்கோயி

மேலர்தங்குமலர்நிலவியிசைவெள்ளிமலையென்னநிலவிநின்ற
கார்வண்டினகணங்களாற்கவின்பெருகுசுதைமாடக்கழுமலமே. (௫)

தருஞ்சாதந்தந்தருளென்றடிநினைந்துதழலவனுந்தவங்கள்செய்த
பெருஞ்சதுரர்பெயலர்க்கும்பீடாரேழுமையளித்தபெருமானகோயி
லரிந்தவயலரவிந்தமதுவுகுப்பவதுகுடித்துகளித்துவாளை
கருஞ்சகடமிளகவளர்கரும்பிரியவகம்பாயுங்கழுமலமே. (௬)

புவிமுதலைம்பூதமாய்ப்புலனைந்தாய்நிலைந்தாய்க்கரணநான்கா
யவையவைசேராவயனுருவாயல்லவுருவாய்நின்றானமருங்கோயி
றவமுயல்வோர்மலர்பறிப்பத்தாழவிடுகொம்புதைப்பக்கொக்கினகாய்கள்
கவனெறிகற்போற்சுனையிற்கரைசேரப்புள்ளிரியுங்கழுமலமே. (௭)

அடல்வந்தவானவரையழித்துலகுதெழித்துழலுமரக்கர்கோமான்
மிடல்வந்தவிருபதுதோணெரியவிரற்பணிகொண்டோன்மேவுங்கோயில்
நடவந்தவுழவரிதுநடவொணாவகைபரலாய்த்தென்றுதுன்று
கடல்வந்தசங்கீன்றமுத்துவயற்கரைகுவிக்குங்கழுமலமே. (௮)

பூமகடன்கோனயனும்புள்ளினொடுகேழலுருவாகிப்புக்கிட்
டாமளவுஞ்சென்றுமுடியடிகாணாவகைநின்றானமருங்கோயில்
பாமருவுங்கலைப்புலவோர்பன்மலர்களகொண்டணிந்துபரிசினாலே
காமனைகள்பூரித்துக்களிகூர்ந்துநினைந்தேத்துங்கழுமலமே (௯)

குணமின்றிப்புத்தர்களும்பொய்த்தவத்தைமெய்த்தவமாநின்றுகையி
லுணன்மருவுஞ்சமணர்களுமுணராதவகைநின்றானுறையுங்கோயில்
மணமருவும்வதுவையொலிவிழவினொலியிவையிசையமணமேற்றேவர்
கணமருவுமறையினொலிகீழ்ப்படுக்கமேற்படுக்குங்கழுமலமே. (௧௦)

கற்றவர்கள்பணிந்தேத்துங்கழுமலத்துளீசனறனகழன்மேனல்லோர்
நற்றுணையாம்பெருந்தன்மைஞானசம்பந்தனுரையந்துசொன்ன
சொற்றுணையோரைந்தினொடைந்திவைவல்லார்தூமலராடிணைவராகி
முற்றுலகமதுவாண்டுமுக்கணனடிசேரமுயல்கின்றாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவையாறு - பண்-மேகராகக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

புலனைந்தும்பொறிகலங்கிநெறிமயங்கியறிவழிந்திட்டைமேலுந்தி
யலமந்தபோதாகவஞ்சேலென்றருள்செய்வானமருங்கோயில
வலம்வந்தமடவார்கணடமாடமுழவதிரமழையென்றஞ்சிச
சிலமந்தியலமந்துமரமேறிமுகில்பார்க்குந்திருவையாறே. (௧)

விடலேறுபடநாகமரைக்கசைத்துவெற்பரையன்பாவையோடு
மடலேறொன்றதுவேறியஞ்சொலீர்பலியெனுமடிகள்கோயில்
கடலேறித்திரைமோதிக்காவிரியினுடன்வந்துகங்குல்வைகித்
திடலேறிச்சுரிசங்கஞ்செழுமுத்தங்கீன்றலைக்குந்திருவையாறே. (௨)

கங்காளர்கயிலாயமலையாளர்கானப்பேராளர்மங்கை
பங்காளர்திரிசூலப்படையாளர்விடையாளர்பயிலுங்கோயில்
கொங்காளப்பொழினுழைந்துகூர்வாயாலிறகுலர்த்திக்கூதனீங்கிச்
செங்கானல்வெண்குருகுபைங்கானலிரைதேருந்திருவையாறே. (௩)

ஊன்பாயுமுடைதலைகொண்டூரூரின்பலிக்குழல்வாருமையாள்பங்கர்
தான்பாயும்விடையேறுசங்கரனார்தழலுருவர்தங்குங்கோயில்
மான்பாயவயலருகேமரமேறிமந்திபாய்மடுக்கடோறுந்
தேன்பாயமீன்பாயச்செங்கமலமொட்டலருந்திருவையாறே. (௪)

நீரோடுகூவிளமுநிலாமதியும்வெள்ளெருக்குநிறைந்தகொன்றைத்
தாரோடுதண்கரந்தைச்சடைக்கணிந்ததத்துவனார்தங்குங்கோயில்
காரோடிவிசும்பளந்துகடிநாறும்பொழிலணைந்தகமழ்தார்வீதித்
தேரோடுமரங்கேறிச்சேயிழையார்நடம்பயிலுந்திருவையாறே. (௫)

வேந்தாகிவிண்ணவர்க்குமண்ணவர்க்குநெறிகாட்டும்விகிர்தனாகிப்
பூந்தாமநறுங்கொன்றைச்சடைக்கணிந்தபுண்ணியனார்நண்ணுங்கோயில்
காந்தாரமிசையமைத்துக்காரிகையார்பண்பாடக்கவினார்வீதித்
தேந்தாமென்றரங்கேறிச்சேயிழையார்நடமாடுந்திருவையாறே. (௬)

நின்றுலாநெடுவிசும்பினெருங்கிவருபுரமூன்றுநீள்வாயம்பு
சென்றுலாம்படிதொட்டசிலையாளிமலையாளிசேருங்கோயில்
குன்றெலாங்குயில்கூவக்கொழும்பிரசமலர்பாய்ந்துவாசமல்கு
தென்றலாரடிவருடச்செழுங்கரும்புகண்வளருந்திருவையாறே (௭)

அஞ்சாதேகயிலாயமலையெடுத்தவரக்கர்கோன்றலைகள்பத்து
மைஞ்சாடுதோணெரியவடர்த்தவனுக்கருள்புரிந்தமைந்தர்கோயி
லிஞ்சாயலிளந்தெங்கின்பழம்வீழவிளமேதியிரிந்தங்கோடிச்
செஞ்சாலிக்கதிருழக்கிச்செங்கமலவயல்படியுந்திருவையாறே. (௮)

மேலோடிவிசும்பணவிவியனிலத்தைமிகவகழ்ந்துமிக்குநாடு
மாலோடுநான்முகனுமறியாதவகைநின்றான்மன்னுங்கோயில்
கோலோடக்கோல்வளையார்கூத்தாடக்குவிமுலையார்முகத்தினின்று
சேலோடச்சிலையாடச்சேயிழையார்நடமாடுந்திருவையாறே. (௯)

குண்டாடுங்குற்றுடுக்கைச்சமணரொடுசாக்கியருங்குணமொன்றில்லா
மிண்டாடுமிண்டருரைகேளாதேயாளாமின்மேவித்தொண்டீ
ரெண்டோளர்முக்கண்ணரெம்மீசரிறைவரினிதமருங்கோயில்
செண்டாடுபுனற்பொன்னிச்செழுமணிகள்வந்தலைக்குந்திருவையாறே. (௧௰)

அன்னமலிபொழில்புடைசூழையாற்றெம்பெருமானையந்தண்காழி
மன்னியசீர்மறைநாவன்வளர்ஞானசம்பந்தன்மருவுபாட
லின்னிசையாலிவைபத்துமிசையுங்காலீசனடியேத்துவார்க
டன்னிசையோடமருலகிற்றவநெறிசென்றெய்துவார்தாழாதன்றே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருமுதுகுன்றம் - பண் - மேகராகக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

மெய்த்தாறுசுவையுமேழிசையுமெண்குணங்களும்விரும்புநால்வே
தத்தாலுமறிவொண்ணாநடைதெளியப்பளிங்கேபோலரிவைபாக
மொத்தாறுசமயங்கட்கொருதலைவன்கருதுமூருலவுதெண்ணீர்
முத்தாறுவெதிருதிரநித்திலம்வாரிக்கொழிக்குமுதுகுன்றமே. (க)

வேரிமிகுகுழலியொடுவேடுவனாய்வெங்கானில்விசயன்மேவு
போரினமிகுபொறையளந்துபாசுபதம்புரிந்தளித்தபுராணர்கோயில்
காரினமலிகடிபொழில்கள்கனிகள்பலமலருதிர்த்துக்கயமுயங்கி
மூரிவளங்கிளர்தென்றறிருமுன்றிற்புகுந்துலவுமுதுகுன்றமே. (உ)

தக்கனதுபெருவேள்விச்சந்திரனிந்திரனெச்சனருக்கனங்கி
மிக்கவிதாதாவினொடும்விதிவழியேதண்டித்தவிமலர்கோயில்
கொக்கினியகொழும்வருக்கைகதலிகமுகுயர்தெங்கின்குலைகள்சோலை
முக்கனியின்சாறொழுகிச்சேறுலராநீள்வயல்சூழ்முதுகுன்றமே. (ங)

வெம்மைமிகுபுரவாணர்மிகைசெய்யவிறலழிந்துவிண்ணுளோர்கள்
செம்மலரோனிந்திரன்மால்சென்றிரப்பத்தேவர்களேதேரதாக
மைம்மருவுமேருவில்லுமாசுணநாணரியெரிகால்வாளியாக
மும்மதிலுமொடியவளைவிற்பொடிசெய்தமுதல்வனிடமுதுகுன்றமே. (ச)

இழைமேவுகலையல்குலேந்திழையாளொருபாலாயொருபால்வெள்கா
துழைமேவுமுரியுடுத்தவொருவனிருப்பிடமென்பரும்பரோங்கு
கழைமேவுமடமந்திமழைகண்டுமகவினொடுபுகவொண்கல்லின்
முழைமேவுமாலானையிரைதேருமவளர்சாரன்முதுகுன்றமே. (ரு)

நகையார்வெண்டலைமாலைமுடிக்கணிந்தநாதனிடநனமுத்தாறு
வகையாரும்வரைப்பண்டங்கொண்டிரண்டுகரையருகுமறியமோதித்
தகையாரும்வரம்பிடறிச்சாலிகழுநீர்குவளைசாயப்பாய்ந்து
முகையார்செந்தாமரைகண்முகமலரவயறழுவுமுதுகுன்றமே (சா)

அறங்கிளருநால்வேதமாலின்கீழிருந்தருளியமரர்வேண்ட
நிறங்கிளர்செந்தாமரையோன்சிரமைந்திலொன்றறுத்தநிமலர்கோயில்
திறங்கொண்மணித்தரளங்கள்வரத்திரண்டங்கெழிற்குறவர்சிறுமிமார்கண்
முறங்களினாற்கொழித்துமணிசெலவிலகிமித்துலைபெய்முதுகுன்றமே. (எ)

கதிரொளியநெடுமுடிபத்துடையகடலிலங்கையர்கோன்கண்ணும்வாயும்
பிதிரொளியகனலபிறங்கப்பெருங்கயிலைமலையைநிலைபெயர்த்தஞான்று
மதிலளைக்கிறைமுரலமரடியொன்றூன்றிமறைபாடவாங்கே
முதிரொளியசுடர்நெடுவாண்முன்னீந்தானவாய்ந்தபதிமுதுகுன்றமே. (அ)

பூவார்பொற்றவிசின்மிசையிருந்தவனும்பூந்துழாய்ப்புனைந்தமாலு
மோவாதுகழிகேனமாயுயர்ந்தாழ்ந்துறநாடியுண்மைகாணாத்
தேவாருந்திருவுருவனசேருமலைசெழுநிலத்தைமூடவந்த
மூவாதமுழங்கொலிநீர்கீழ்தாழமேலுயர்ந்தமுதுகுன்றமே. (கூ)

மேனியிற்சீவரத்தாரும்விரிதருதட்டுடையாரும்விரவலாகா
வூனிகளாயுள்ளார்சொற்கொள்ளாதுமுள்ளுணர்ந்தங்குய்மின்றொண்டீர்
ஞானிகளாயுள்ளார்கணான்மறையைமுழுதுணர்ந்தைம்புலன்களசெற்று
மோனிகளாய்முனிச்செல்வர்தனித்திருந்துதவம்புரியுமுதுகுன்றமே. (கo)

முழங்கொலிநீர்முத்தாறுவலஞ்செய்யுமுதுகுன்றத்திறையைமூவாப்
பழங்கிழமைப்படைனிருபேர்படைத்துடையகழுமலமேபதியாக்கொண்டு
தழங்கெரிமூன்றோம்புதொழிற்றமிழ்ஞானசம்பந்தன்சமைத்தபாடல்
வழங்குமிசைகூடும்வகைபாடுமவர்நீடுலகமாள்வர்தாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவீழிமிழலை - பண் - மேகராகக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

ஏரிசையும்வடவாலின்கீழிருந்தங்கீரிருவர்க்கிரங்கிநின்று
நேரியனூன்மறைப்பொருளையுரைத்தொளிசேர்நெறியளித்தோனின்றகோயில்
பாரிசையும்பண்டிதர்கள்பன்னாளும்பயின்றோதுமோசைகேட்டு
வேரிமலிபொழிற்கிள்ளைவேதங்கள்பொருட்சொல்லுமிழலையாமே. (க)

பொறியரவமதுசுற்றிப்பொருப்பேமத்தாகப்புத்தேளிர்கூடி
மறிகடலைக்கடைந்திட்டவிடமுண்டகண்டத்தோன்மன்னுங்கோயில்
செறிஇதழ்த்தாமரைத்தவிசிற்றிகழ்ந்தோங்குமிலைக்குடைக்கீழ்ச்செய்யாசெங்நெல்
வெறிகதிர்சாமரையிரட்டவிளவன்னமவீற்றிருக்குமிழலையாமே. (உ)

எழுந்துலகைநலிந்துழலுமவுணர்கடம்புரமூன்றுமெழிற்கணாடி [கோயில்
யுழுந்துருளுமளவையினொள்ளெருகொளவெஞ்சிலைவளைத்தோனுறையுங்
கொழுந்தரளநகைகாட்டக்கோகநகமுகங்காட்டக்குதித்துநீர்மேல
விழுந்தகயல்விழிகாட்டவிற்பவளமவாய்காட்டுமிழலையாமே (ந)

உரைச்சேருமெண்பத்துநானகுநூறாயிரமாமயோனிபேத
நிரைச்சேரப்படைத்தவற்றினுயிர்க்குயிராயங்கங்கேநின்றான்கோயில்
வரைச்சேருமுகின்முழவமயில்கள்பலநடமாடவண்டுபாட
விரைச்சேர்பொனிதழிதரமென்காந்தள்கையேறகுமிழலையாமே. (ச)

காணுமாறரியபெருமானாகிக்காலமாய்க்குணங்கண்மூன்றாய்ப்
பேணுமூன்றுருவாகிப்பேருலகம்படைத்தளிக்கும்பெருமானகோயி
றூணுவாய்நிறைபரதத்துவனையுத்தமனையிறைஞ்சீரெனறு
வேணுவார்கொடிவிண்ணோர்தமைவிளிப்பபோலோங்குமிழலையாமே. (ரு)

அகனமர்ந்தவன்பினராயறுபகைசெற்றைம்புலனுமடக்கிஞானப்
புகலுடையோர்தம்முள்ளப்புண்டரிகத்துள்ளிருக்கும்புராணர்கோயி
றகவுடைநீர்மணித்தலத்துச்சங்குளவர்க்கந்திகழச்சலசத்தீயுண்
மிகவுடையபுனகுமலர்ப்பொரியட்டமணஞ்செய்யுமிழலையாமே. (சு)

ஆறுடசடைமுடியனனலாடுமலர்க்கையனிமயப்பாவை
கூறுடிதிருவுருவன்கூத்தாடுங்குணமுடையோனகுளிருங்கோயில்

சேறுபடுசெங்கழுநீர்த்தாதாடிமதுவுண்டுசிவந்தவண்டு
வேறுபயவுருவாகிச்செவ்வழிநற்பண்பாடுமிழலையாமே. (எ)

கருப்பமிகுமுடலடர்த்துக்காலூன்றிக்கைமறித்துக்கயிலையென்னும்
பொருப்பெடுக்கலுறுமரக்கனைபொன்முடிதோளணிரித்தவிரற்புகிதர்கோயி
றருப்பமிகுசலந்தரன்றனுடறடிந்தசக்கரத்தைவேண்டியீண்டு
விருப்பொடுமால்வழிபாடுசெய்யவிழிவிமானஞ்சேர்மிழலையாமே (அ)

செந்தளிர்மாமலரோனுந்திருமாலுமேனமோடன்னமாகி
யந்தமடிகாணுதேயவரேத்தவெளிப்பட்டோனமருங்கோயில
புந்தியினைமறைவழியேபுற்பரப்பிநெய்சமிதைகையிற்கொண்டு
வெந்தழலின்வேட்டுலகின்மிகவளிப்போர்சேருமூர்மிழலையாமே. (கூ)

எண்ணிறந்தவமணர்களுமிழிதொழில்சேர்சாக்கியருமெனாறுந்தன்னை
நண்ணரியவகைமயக்கித்தனடியார்க்கருளபுரியுநாதன்கோயில்
பண்ணமருமென்மொழியார்பாலர்களைபராட்டுமோசைகேட்டு
விண்ணவர்கள்வியபபெய்திவிமானத்தோடுமிழியுமிழலையாமே. (க0)

மினனியலுமணிமாடமிடைவீழிமிழலையான்விரையாரபாதஞ்
சென்னிமிசைகொண்டொழுகுஞ்சிரபுரக்கோன்செழுமறைகள்பயிலுநாவன்
பன்னியசீர்மிகுஞானசமபந்தன்பரிந்துரைத்தபத்துமேத்தி
யினனிசையாற்பாடவல்லாரிருநிலத்திலீசனெனுமியல்பினோரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருவேகம்பம் - பண் - மேகராகக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்.

வெந்தவெண்பொடிபபூசுமார்பின்விரிநூலொருபால்பொருந்தக்
கந்தமல்குகுழலியொடுங்கடிபொழிற்கச்சிதன்னு
ளந்தமில்குணத்தாரவாபோற்றவணங்கிஞேடாடல்புரி
யெந்தமேவியவேகமபந்தொழுதேத்தவிடர்கெடுமே. (க)

வரந்திகழுமவுணாமாநகாமூன்றுடன்மாய்ந்தவியச்சரந்
துரந்தெரிசெய்ததாழ்சடைச்சஙகரன்மேயவிடங்
குருந்தமல்லிகைகோங்குமாதவிநல்லகுராமரவந்
திருந்துபைம்பொழிற்கச்சியேகம்பஞ்சேரவிடர்கெடுமே (உ)

வண்ணவெண்பொடிப்பூசிமார்பின்வரியரவம்புனைந்து
பெண்ணமர்ந்தெரியாடல்பேணியபிஞ்ஞகனமேயவிடம
விண்ணமர்நெடுமாடமோங்கிவிளங்கியகச்சிதன்னுட்
டிண்ணமாம்பொழில்சூழ்ந்தவேகம்பஞ்சேரவிடர்கெடுமே. (ங)

தோலுநூலுந்துதைந்தவரைமார்பிற்சுடலைவெண்ணீறணிந்து
காலன்மாள்வுறக்காலாற்காய்ந்தகடவுள்கருதுமிட
மாலைவெண்மதிதோயுமாமதிற்கச்சிமாநகரு
ளேலநாறியசோலைசூழேகம்பமேத்தவிடர்கெடுமே. (ச)

தோடணிமலர்க்கொன்றைசேர்சடைதூமதியம்புனைந்து
பாடலனான்மறையாகப்பல்கணப்பேய்களவைசூழ
வாடல்வெண்டலையோடனலேந்திமகிழ்ந்துடனாடல்புரி
சேடர்சேர்கலிக்கச்சியேகம்பஞ்சேரவிடர்கெடுமே. (௫)

சாகம்பொன்வரையாகத்தானவர்மும்மதில்சாயவெய்
தாகம்பெண்ணொருபாகமாமவரவொடுநூலணிந்து
மாகந்தோய்மணிமாடமாமதிற்கச்சிமாநகரு
ளேகம்பத்துறையீசன்சேவடியேத்தவிடர்கெடுமே. (௬-௭)

வாணிலாமதிபுல்குசெஞ்சடைவாளரவமணிந்து
நாணிடத்தினில்வாழ்க்கைபேணிநகுதலையிற்பலிதேர்ந்
தேணிலாவரக்கன்றனீண்முடிபத்துமிறுத்தவனூர்
சேணுலாம்பொழிற்கச்சியேகம்பஞ்சேரவிடர்கெடுமே (௮)

பிரமனுந்திருமாலுங்கைதொழப்பேரழலாயபெம்மா
னரவஞ்சேர்சடையந்தணனணங்கினோடமருமிடங்
கரவிலவண்கையினார்கள்வாழ்கலிக்கச்சிமாநகருண்
மரவஞ்சூழ்பொழிலேகம்பந்தொழவல்வினைமாய்ந்தறுமே. (௯)

குண்டுபட்டமணாயவரொடுங்கூறைதம்மெய்போர்க்கு
மிண்டர்கட்டியகட்டுரையவைகொண்டுவிரும்பேன்மின்
விண்டவர்புரமூன்றும்வெங்கணையொன்றினாலவியக்
கண்டவன்கலிக்கச்சியேகம்பங்காணவிடர்கெடுமே (௧௦)

ஏரினார்பொழில்சூழ்ந்தகச்சியேகம்பமேயவனைக்
காரினார்மணிமாடமோங்குகழுமலநன்னகருட்
பாரினார்தமிழ்ஞானசம்பந்தனபரவியபத்தும்வல்லார்
சீரினார்புகழோங்கிவிண்ணவரொடுசேர்பவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருப்பறியலூர்வீரட்டம் - பண் - மேகராகக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்.

கருத்தன்கடவுள்கனலேந்தியாடு
நிருத்தன்சடைமேனிரம்பாமதியன்
திருத்தமுடையார்திருப்பறியலூரில்
விருத்தனெனத்தகும்வீரட்டத்தானே. (௧)

மருந்தனமுதன்மயானத்துண்மைந்தன்
பெருந்தண்புனற்சென்னிவைத்தபெருமான்
திருந்துமறையோர்திருப்பறியலூரில்
விரிந்தமலர்ச்சோலைவீரட்டத்தானே. (௨)

குளிர்ந்தார்சடையன்கொடுஞ்சிலைவிற்காமன்
விளிந்தானடங்கவீந்தெய்தச்செற்றான்

றெளிந்தார்மறையோர்திருப்பறியலூரில்
மிளிர்ந்தார்மலர்ச்சோலைவீரட்டத்தானே. (௩)

பிறப்பாதியில்லான்பிறப்பார்பிறப்புச்
செறப்பாதியந்தஞ்செலச்செய்யுந்தேசன்
சிறப்பாடுடையார்திருப்பறியலூரில்
விறற்பாரிடஞ்சூழ்ந்தவீரட்டத்தானே. (௪)

கரிந்தாரிடுகாட்டிலாடுங்கபாலி
புரிந்தார்படுதம்புறங்காட்டிலாடுந்
தெரிந்தார்மறையோர்திருப்பறியலூரில்
விரிந்தார்பொழிற்சோலைவீரட்டத்தானே (௫)

அரவுற்றநாணாவனலம்பதாகச்
செருவுற்றவார்புரந்தீயெழச்செற்றான
றெருவிற்கொடிசூழ்திருப்பறியலூரில
வெருவுற்றவர்தொழுமவீரட்டத்தானே. (௬)

நரையார்விடையானலங்கொள்பெருமா
னரையாரரவம்மழகாவசைத்தான
றிரையார்புனல்சூழ்திருப்பறியலூரில்
விரையார்மலர்ச்சோலைவீரட்டத்தானே. (எ)

வளைக்குமெயிற்றினரக்கன்வரைக்கீ
ழிளைக்குமபடிதானிருந்தேழையன்னந்
திளைக்கும்படுகற்றிருப்பறியலூரில்
விளைக்குமவயல்சூழ்ந்தவீரட்டத்தானே. (அ)

வளங்கொண்மலர்மேலயனோதவண்ணனு
ளங்குமனத்தார்தொழத்தழலாய்நின்று
னிளங்கொமபனாளோடிணங்குமபிணங்கும
விளங்குந்திருப்பறியல்வீரட்டத்தானே. (௯)

சடையன்பிறையன்சமண்சாக்கியரோ
டடையன்பிலாதானடியார்பெருமா
னுடையன்புலியினுரிதோலரைமேல்
விடையன்றிருப்பறியல்வீரட்டத்தானே (க0)

நறுநீருகுங்காழிஞானசம்பந்தன்
வெறிநீர்த்திருபறியல்வீரட்டத்தானைப்
பொறிநீடரவன்புனைபாடல்வல்லார்க்
கறுநீடலைமறும்பிறப்புத்தானே. (கக)

திருச்சிற்றம்பலம்.

௬௪ பதிகம் - கரு௪.

## திருப்பராய்த்துறை-பண்-மேகராகக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

நீறுசேர்வதோர்மேனியர்நேரிழை, கூறுசேர்வதோர்கோலமாய்ப்
பாறுசேர்தலைக்கையர்பராய்த்துறை, யாறுசேர்சடையண்ணலே (க)

கந்தமாமலர்க்கொன்றைகமழ்சடை, வந்தபூம்புனல்வைத்தவர்
பைந்தணமாதவிசூழ்ந்தபராய்த்துறை, யந்தமில்லவடிகளே. (உ)

வேதர்வேதமெல்லாமுறையால்விரித், தோதநின்றவொருவனார்
பாதிபெண்ணுருவாவர்பராய்த்துறை, யாதியாயவடிகளே. (ங)

தோலுந்தம்மரையாடைசுடர்விடு, நூலுந்தாமணிமார்பினர்
பாலுநெய்பயின்றாடுபராய்த்துறை,யாலநீழலடிகளே. (ச)

விரவுநீறுமெய்பூசுவர்மேனிமே, லிரவினின்றெரியாடுவர்
பரவினாரவர்வேதம்பராய்த்துறை, யரவமார்த்தவடிகளே. (ரு)

மறையுமோதுவர்மான்மறிக்கையினர், கறைகொள்கண்டமுடையவர்
பறையுஞ்சங்குமொலிசெய்பராய்த்துறை, யறையநின்றவடிகளே. (சு)

விடையுமேறுவர்வெண்பொடிபூசுவர், சடையிற்கங்கைதரித்தவர்
படைகொள்வெண்மழுவாளர்பராய்த்துறை, யடையநின்றவடிகளே. (எ)

தருக்கின்மிக்கதசக்கிரீவன்றனை, நெருக்கினார்விரலொன்றினாற்
பருக்கினாரவர்போலும்பராய்த்துறை, யருக்கன்றன்னையடிகளே. (அ)

நாற்றமாமலரானொடுமாலுமாய்த், தோற்றமுமறியாதவர்
பாற்றினார்வினையானபராய்த்துறை, யாற்றன்மிக்கவடிகளே (கூ)

திருவிலிச்சிலதேரமணாதர்க, ளுருவிலாவுரைகொள்ளேலும்
பருவில்லாலெயிலெய்தபராய்த்துறை, மருவினான்றனைவாழ்த்துமே. (க௦)

செல்வமல்கியசெல்வர்பராய்த்துறை, செல்வமேற்சிதையாதன
செல்வஞானசம்பந்தனசெந்தமிழ், செல்வமாமிவைசெப்பவே. (கக)

திருச்சிற்றம்பலம்

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - பராய்த்துறைநாதவீசுவரர், தேவியார்-பொன்மயிலாம்பிகை.

---

## திருத்தருமபுரம் - பண் - யாழ்முரி.

திருச்சிற்றம்பலம்

மாதர்மடப்பிடியு-மட-வன்னமுமன்னதோர
நடை-யுடைம மலை மக-டுணையெனமகிழ்வர
பூதவினப்படைநின் றிசை-பாடவுமாடுவ
ரவர் படர் சடை- நெடு-முடியதோர் புனலர
வேதமோடேழிசைபா-டுவ-ராழ்கடல்வெண்டிரை
யிரை நுரை கரை பொருது-விம்மிநின்றயலே

தாதவிழ்புன்னைதயங் - கும - லர்ச்சிறைவண்டறை
யெழில பொழில குயில பயில்-தருமபுரம்பதியே. (க)

பொங்குநடைப்புகலில - விடை - யாமவரூர்திவெண்
பொடியணி தடங் கொண்மார்பு - பூணநூல்புரள
மங்குலிடைத்தவழு - மதி - சூடுவராடுவர்
வளங்கிளர் புனலரவம - வைகியசடையா
சங்குகடற்றிரையா - லுதை - யுணடுசரிந்திரிந்
தொசிந் தசைந் திசைந்து சேரும - வெண்மணற்குவைமேல்
தங்குகதிர்மணிநித் - தில - மெல்லிருளொல்கநின
றிலங் கொளிந் நலங் கெழிற்-றருமபுரமபதியே. (உ)

விண்ணுறுமால்வரைபோல் - விடை - யேறுவராருகு
டுவா விரி சுரி யொளிகொள்-தோடுநின்றிலங்கக்
கண்ணுறநின்றொளிரும் - கதிர் - வெண்மதிககண்ணியர்
கழிந தவ ரழிந்திடு-முடைதலைகலனாகப்
பெண்ணுறநின்றவர்தம் - முரு - வம்மயனமால்தொழ
வரிவையைப் பிணைந் திணைந் - தனைந்ததுமபிரியா
தண்ணிதழ்முல்லையொடெண் - ணிதழ் - மவ்வனமருங்கலர்
கருங கழிந் நெருங் குறற் - றருமபுரமபதியே. (௩)

வாருறுமென்முலைநன் - னுத - லேழையொடாடுவா
வளங் கிளர விளங்கு திங்கள் - வகியசடையா
காருறநின்றலரும - மலர்க் - கொன்றையங்கண்ணியா
கடு விடை கொடி வெடிகொள் - காடுறைபதியா
பாருறவிண்ணுலகம - பர - வப்படுவோரவா
படு தலைப பலி கொளல - பரிபவநினையார்
தாருறுநல்லரவம - மலர் - துன்னியதாதுதிர்
தழை பொழில மழைந் நுழை - தருமபுரம பதியே. (௪)

நேருமவாக்குணரப் - புகி - லில்லைநெடுஞ்சடைக்
கடும புனல் படர்ந் திடப் - படுவதோர்நிலையர்
பேருமவாக்கெனையா - யிர - முன்னைப்பிறப்பிறப்
பிலா தவ ருடற் றடாத - பெற்றியராரறிவா
ராரமவர்க்கழலவா - யதோர் - நாகமழலைக்குழ
வெழுந் கொளு மலர் கொள்பொன - னிதழிநல்லலங்கள்
தாரமவர்க்கிமவான் - மக - ளூர்வதுபோர்விடை
கடி படு செடி பொழிற் - றருமபுரம்பதியே. (௫)

பத்தாகளத்தவமெய்ப் - பய - ஞகவுகந்தவர்
நிகழ்ந் தவர் சவந் தவர் - சீடலைப்பொடியணிவர்
முத்தனவெண்ணகையொண் - மலை - மாதுமைபொன்னணி
புணா முலை யிணை துணை-யணைவதும்பிரியார்
தத்தருவிததிரளுந் - திய - மால்கடலோதம்வந்
தடர்ந் திடுந் தடம் பொழிற்-றருமபுரமபதியே (௧0)

பொன்னெடுநன்மணிமா - மாளிகை - சூழவிழவம்மலி
பொரு புனல் திரு வமர் - புகலியென்றுலகிற்
றனனெடுநேர்பிறவில் - பதி - ஞானசம்பந்தனஃ
துசெந் தமிழ்த் தடங் கடற் - றருமபுரம்பதியைப்
பினனெடுவாசடையிற் - பிறை - யுமரவுமமுடை
யவன் யிணை துணை கழல்கள் - பேணுதலுரியா
ரின்னெடுநனுலகெய - துவ - ரெய்தியபோகமு
முறுவர்க ளிடர் பிணி-துயரணைவிலரே. (௧௧)

திருசசிற்றமபலம்

முத்தமிழ்விரகர்-முதற்றிருமுறைபோற்றி

---

௬௯ திருககடைககாபபு - கரு௬.

முதற்றிருமுறை-முற்றிறறு

---

திருவெழுகூற்றிருககையில வெங்குருவிளங்கினை யென்பதற்கு தேவ குருவினல் பூசிக்கப்பட்டதென்று உரையிலிருககின்றது. சீகாழிப்புராணத் தில் வெங்குருவான அத்தியாயத்தில அசுரகுரு பூசித்ததாகச் சொல்லப்படு கின்றது. இங்ஙனமிருககின்ற மையால் உரைகாரா புராணத்தினபடி யெழுதி யிருந்தது பிற்கால மொன்றைப்பார்த் தொன்றெழுதினவர்களால்பிறழ்ந்துவி ட்டதோ யாதோ தெரியவில்லை.

சிவமயம்

# சம்பந்தமூர்த்திசுவாமிகள்

# இரண்டாந்திருமுறையின்

## பதிக அட்டவணை.

உ

சிவமயம்.

திருஞானசம்பந்தசுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்.

## இரண்டாந்திருமுறை

### திருப்பூந்தராய் - பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்.

செந்நெலங்கழனிப்பழனத்தயலேசெழும
புன்னைவெண்கிழியிற்பவளம்புரைபூந்தராய்
துன்னிநல்லிமையோர்முடிதோய்கழலீர்சொலீர்
மின்னுசெஞ்சடையிற்பிறைபாம்புடன்வைத்ததே (௧)

எற்றுதெண்டிரையேறியசங்கினோடிப்பிகள்
பொற்றிகழ்கமலப்பழனம்புகுபூந்தராய்
சுற்றிநல்லிமையோர்தொழுபொற்கழலீர்சொலீர்
பெற்றமேறுதல்பெற்றிமையோபெருமானீரோ (௨)

சங்குசெம்பவளத்திரண்முத்தவைதாங்கொடு
பொங்குதெண்டிரைவந்தலைக்கும்புனற்பூந்தராய்
துங்கமால்களிற்றினுரிபோர்த்துகந்தீர்சொலீர்
கங்கைபங்கமுமங்கத்தொடொன்றியமாண்பதே (௩)

சேமவன்மதில்பொன்னணிமாளிகைசேணுயர்
பூமணங்கமழும்பொழில்சூழ்தருபூந்தராய்
சோமனுமரவுந்தொடர்செஞ்சடையீர்சொலீர்
காமன்வெண்பொடியாகக்கடைக்கண்சிவந்ததே. (௪)

பள்ளமீனிரைதேர்ந்துழலும்பகுவாயன
புள்ளுநாடொறுஞ்சேர்பொழில்சூழ்தருபூந்தராய்த்
துள்ளுமான்மறியேந்தியசெங்கையினீர்சொலீர்
வெள்ளநீரொருசெஞ்சடைவைத்தவியப்பதே. (௫)

மாதிலங்கியமங்கையராடமருங்கெலாம்
போதிலங்கமலமதுவார்புனற்பூந்தராய்ச்
சோதியஞ்சுடர்மேனிவெண்ணீறணிவீர்சொலீர்
காதிலங்குழைசங்கவெண்டோடுடன்வைத்ததே. (௬-௭)

வருக்கமார்தருவான்கடுவன்னொடுமந்திகள்
தருக்கொள்சோலைதருங்கனிமாந்தியபூந்தராய்
துரக்குமால்விடைமேல்வருவீரடிகேள்சொலீ
ரரக்கனாற்றலழித்தருளாக்கியவாக்கமே. (அ)

வரிகொள்செங்கயல்பாய்புனல்சூழ்ந்தமருங்கெலாம
புரிசைநீடுயர்மாடநிலாவியபூந்தராய்
சுருதிபாடியபாணியலாமொழியீர்சொலீர்
கரியமாலயனேடியுமைக்கண்டிலாமையே. (௯)

வண்டலங்கழனிம்மடவாளைகள்பாய்புனற்
புண்டரீகமலர்ந்துமதுத்தருபூந்தராய்த்
தொண்டர்வந்தடிபோற்றிசெய்தொல்கழலீர்சொலீர்
குண்டர்சாக்கியர்கூறியதாங்குறியின்மையே. (௧௦)

மகரவார்கடல்வந்தணவும்மணற்கானல்வாய்
புகலிஞானசம்பந்தனெழில்மிகுபூந்தராய்ப்
பகவனாரைப்பரவுசொன்மாலைபத்தும்வல்லா
ரகல்வர்தீவினைநல்வினையோடுடனாவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருவலஞ்சுழி - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

விண்டெலாமலரவ்விரைநாறுதண்டேன்விம்மி
வண்டெலாநசையாலிசைபாடும்வலஞ்சுழித்
தொண்டெலாம்பரவுஞ்சுடர்போலொளியீர்சொலீர்
பண்டெலாம்பலிதேர்ந்தொலிபாடல்பயின்றதே. (௧)

பாரல்வெண்குருகும்பகுவாயனநாரையும்
வாரல்வெண்டிரைவாயிரைதேரும்வலஞ்சுழி
மூரல்வெண்முறுவன்னகுமொளியீர்சொலீ
ரூரல்வெண்டலைகொண்டுலகொக்கவுழன்றதே. (௨)

கிண்ணவண்ணமல்குங்கிளர்தாமரைத்தாதளாய்
வண்ணநுண்மணன்மேலனம்வைகும்வலஞ்சுழிச்
சுண்ணவெண்பொடிக்கொண்டுமெய்பூசவல்லீர்சொலீர்
விண்ணவர்தொழவெண்டலையிற்பலிகொண்டதே. (௩)

கோடெலாநிறையக்குவளையம்மலருங்குழி
மாடெலாமலிநீர்மணநாறும்வலஞ்சுழிச்
சேடெலாமுடையீர்சிறுமான்மறியீர்சொலீர்
நாடெலாமறியத்தலையின்னறவேற்றதே. (௪)

கொல்லைவென்றபுனத்திற்குருமாமணிகொண்டுபோய்
வல்லைநுண்மணன்மேலனம்வைகும்வலஞ்சுழி

முல்லைவெண்முறுவன்னகையாளொளியீர்சொலீர்
சில்லைவெண்டலையிற்பலிகொண்டுழல்செல்வமே. (௫)

பூசநீர்பொழியும்புனற்பொன்னியிற்பன்மலர்
வாசநீர்குடைவாரிடர்தீர்க்கும்வலஞ்சுழித்
தேசநீர்திருநீர்சிறுமான்மறியீர்சொலீர்
ரேசவெண்டலையிற்பலிகொள்வதிலாமையே. (௬)

கந்தமாமலர்ச்சந்தொடுகாரகிலுந்தழீ
வந்தநீர்குடைவாரிடர்தீர்க்கும்வலஞ்சுழி
யந்தநீர்முதனீருநுமாமடிகேள்சொலீர்
பந்தநீர்கருதாதுலகிற்பலிகொள்வதே. (௭)

தேனுற்றநறுமாமலர்ச்சோலையில்வண்டினம்
வானுற்றநசையாலிசைபாடும்வலஞ்சுழிக்
கானுற்றகளிற்றின்னுரிபோர்க்கவல்லீர்சொலீர்
ரூனுற்றதலைகொண்டுலகொக்கவுழன்றதே. (௮)

தீர்த்தநீர்வந்திழிபுனற்பொன்னியிற்பன்மலர்
வார்த்தநீர்குடைவாரிடர்தீர்க்கும்வலஞ்சுழி
யார்த்துவந்தவரக்கனையன்றடர்த்தீர்சொலீர்
சீர்த்தவெண்டலையிற்பலிகொள்வதுஞ்சீர்மையே (௯)

உரமனுஞ்சடையீர்விடையீருமதின்னருள்
வரமனும்பெறலாவதுமெந்தைவலஞ்சுழிப்
பிரமனுந்திருமாலுமளப்பரியீர்சொலீர்
சிரமெனுங்கலனிற்பலிவேண்டியசெல்வமே. (௰)

வீடுஞானமும்வேண்டுதிரேல்விரதங்களால்
வாடிஞானமென்னாவதுமெந்தைவலஞ்சுழி
நாடிஞானசம்பந்தனசெந்தமிழ்கொண்டிசை
பாடுஞானம்வல்லாரடிசேர்வதுஞானமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர் - காப்பகத்தீசுவரர், தேவியார் - மங்களநாயகியம்மை.

---

## திருத்தெளிச்சேரி - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

பூவலர்ந்தனகொண்டுமுப்போதுமும்பொற்கழ
றேவர்வந்துவணங்குமிகுதெளிச்சேரியீர்
மேவருந்தொழிலாளொடுகேழற்பின்வேடனாம்
பாவகங்கொடுநின்றதுபோலுநும்பான்மையே. (௧)

விளக்கும்பத்திக்குவிண்ணவர்மண்ணவரேத்தவே
திளைக்குந்தீர்த்தமறாததிகழ்தெளிச்சேரியீர்

வளைக்குந்திண்சிலைமேலைந்துபாணமுந்தானெய்து
களிக்குங்காமனையெங்ஙனநீர்கண்ணினாற்காய்ந்ததே. (உ)

வம்படுத்தமலர்ப்பொழில்சூழமதிதவழ்
செம்படுத்தசெழும்புரிசைத்தெளிச்சேரியீர்
கொம்படுத்ததோர்கோலவிடைமிசைக்கூர்மையோ
டம்படுத்தகண்ணாளொடுமேவலழகிதே. (ங)

காருலாங்கடலிப்பிகண்முத்தங்கரைப்பெயுந்
தேருலாநெடுவீதியதார்தெளிச்சேரியீர்
ஏருலாம்பலிக்கேகிடைவைப்பிடமின்றியே
வாருலாமுலையாளையோர்பாகத்துவைத்ததே (ச)

பக்கநுந்தமைப்பார்ப்பதிமேத்திமுனபாவிக்குஞ்
செக்கர்மாமதிசேர்மதில்சூழ்தெளிச்சேரியீர்
மைக்கொள்கண்ணியர்கைவளைமால்செய்துவௌவவே
நக்கராயுலகெங்கும்பலிக்குழல்கின்றதே. (ரு)

தவளவெண்பிறைதோய்தருதாழ்பொழில்சூழநற்
றிவளமாமணிமாடந்திகழ்தெளிச்சேரியீர்
குவளைபோற்கண்ணிதுண்ணெனவந்துகுறுகிய
கவளமால்கரியெங்ஙனநீர்கையிற்காய்ந்ததே. (சா)

கோடடுத்தபொழிலின்மிசைக்குயில்கூவிடுஞ்
சேடடுத்ததொழிலின்மிகுதெளிச்சேரியீர்
மாடடுத்தமலர்க்கண்ணினாள்கங்கைநங்கையைத்
தோடடுத்தமலர்ச்சடையென்கொனீர்சூடிற்றே (எ)

கொத்திரைத்தமலர்க்குழலாள்குயில்கோலஞ்சேர்
சித்திரக்கொடிமாளிகைசூழ்தெளிச்சேரியீர்
வித்தகப்படைவல்லவரக்கன்விறற்றலை
பத்திரட்டிக்கரநெரித்திட்டதுபாதமே (அ)

காலெடுத்ததிரைக்கைகரைக்கெறிகானல்சூழ
சேலடுத்தவயற்பழனத்தெளிச்சேரியீர்
மாலடித்தலமாமலரான்முடிதேடியே
யோலமிட்டிடவெங்ஙனமோருருக்கொண்டதே. (கூ)

மந்திரந்தருமாமறையோர்கடவுத்தவர்
செந்திலங்குமொழியவர்சேர்தெளிச்சேரியீர்
வெந்தலாகியசாக்கியரோடுசமணர்கள்
தந்திறத்தனநீக்குவித்தீரோர்சதிரே. (கo)

திக்குலாம்பொழில்சூழ்தெளிச்சேரியெஞ்செல்வனை
மிக்ககாழியுள்ஞானசம்பந்தனவிளம்பிய

தக்கபாடல்கள்பத்தும்வல்லார்கட்கடமுடி,
தொக்கவானவர்சூழவிருப்பவர்சொல்லிலே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - பாரவதீசுவரர், தேவியார் - சததியம்மாளம்மை



## திருவான்மியூர் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

கரையுலாங்கடலிற்பொலிசங்கம்வெள்ளிப்பிவன்
றிரையுலாங்கழிமீனுகளுந்திருவான்மியூ
ருரையுலாம்பொருளாயுலகாளுடையீர்சொலீர்
வரையுலாமடமாதுடனாகியமாண்பதே. (க)

சந்துயாங்கெழுகாரகிறண்புனல்கொண்டுதந்
சிந்தைசெய்தடியார்பரவுந்திருவான்மியூர்ச்
சுந்தரக்கழன்மேற்சிலம்பார்க்கவல்லீர்சொலீ
ரந்தியின்னொளியின்னிறமாக்கியவண்ணமே. (உ)

கானயங்கியதண்கழிசூழ்கடலின்புறந்
தேனயங்கியபைம்பொழில்சூழ்திருவான்மியூர்,
தோனயங்கமராடையினீரடிகேள்சொலீ
ரானையங்கவ்வுரிபோர்த்தனலாடவுகந்ததே. (ங)

மஞ்சுலாவியமாடமதிற்பொலிமாளிகைச்
செஞ்சொலாளர்கடாம்பயிலுந்திருவான்மியூர்த்
துஞ்சுவஞ்சிருளாடலுகக்கவல்லீர்சொலீர்
வஞ்சநஞ்சுணவானவர்க்கின்னருள்வைத்ததே. (ச)

மண்ணினிற்புகழ்பெற்றவர்மங்கையர்தாம்பயி
றின்னெனப்புரிசைத்தொழிலார்திருவான்மியூர்த்
துண்ணெனத்திரியுஞ்சரிதைத்தொழிலீர்சொலீர்
விண்ணினிற்பிறைசெஞ்சடைவைத்தவியப்பதே. (ரு)

போதுலாவியதண்பொழில்சூழ்புரிசைப்புறந்
தீதிலந்தணரோத்தொழியாததிருவான்மியூர்ச்
சூதுலாவியகொங்கையோர்பங்குடையீர்சொலீர்
மூதெயிலலொருமுனறெரியூட்டியமொய்ம்பதே. (சா)

வண்டிரைத்ததடம்பொழிலினிழற்கானல்வாய்த்
தெண்டிரைக்கடலோதமல்குந்திருவான்மியூர்த்
தொண்டிரைத்தெழுந்தேத்தியதொல்கழலீர்சொலீர்
பண்டிருக்கொருநாலவர்க்குநீருரைசெய்ததே. (எ)

தக்கில்வந்தசக்கிரீவன்றலையத்திறத்
திக்கில்வந்தலறவ்வடர்த்தீர்திருவான்மியூர்

தொக்கமாதொடும்வீற்றிருந்தீரருளென்சொலீர்
பக்கமேபலபாரிடம்பேய்கள்பயின்றதே. (அ)

பொருதுவார்கடலெண்டிசையுந்தருவாரியாற்
றிரிதரும்புகழ்செல்வமலகுந்திருவான்மியூர்ச்
சுருதிமாரிருவர்க்குமறிவறியீர்சொலீ
ரொருதுமேல்கொடுழன்றகந்திடப்பலியேற்றதே. (கூ)

மைதழைத்தெழுசோலையின்மாலைசேர்வண்டினங்
செய்தவத்தொழிலாரிசைசேர்திருவான்மியூர்
மெய்தவப்பொடிபூசியமேனியினீர்சொலீர்
கைதவச்சமண்சாக்கியர்கட்டுரைக்கின்றதே (க0)

மாதொர்கூறுடைநற்றவனைத்திருவான்மியூ
ராதியெம்பெருமானருள்செய்யவினவுரை
போதியன்றெழுகாழியுள்ஞானசம்பந்தன்சொ
னீதியானினைவார்நெடுவானுலகாள்வரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

தொண்டைநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் மருந்தீசுவரர், தேவியார் - சுந்தரமாது அல்லதுசொக்கநாயகி.

---

## திருவனேகதங்காபதம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

நீடனமேவுநிமிர்புன்சடைமேலோர்நிலாமுளை
சூடனமேவுமறையின்முறையாலோர்சுலாவழ
லாடனமேவுமவாமேயவனேகதங்காபதம்
பாடன்மேவுமனத்தார்வினைபற்றறுப்பாகளே. (க)

சூலமுண்டுமழுவுண்டவர்தொல்படைசூழ்கட
லாலமுண்டபெருமான்றனனேகதங்காபத
நீலமுண்டதடங்கண்ணுமைபாகநிலாயதோர்
கோலமுண்டளவில்லைகுலாவியகொள்கையே (உ)

செம்பினுருமதின்மூன்றெரியச்சினவாயதோ
ரம்பினெய்தருள்வில்லியனேகதங்காபதங்
கொம்பினேரிடையாளொடுங்கூடிக்கொல்லேறுடை
நம்பனுமநவிலாதனநாவெனலாகுமே. (ங)

தந்தத்திந்தத்தடமென்றருவித்திரள்பாய்ந்துபோய்ச்
சிந்தவெந்தகதிரோனொடுமாசறுதிங்களா
ரந்தமில்லவளவில்லவனேகதங்காபத
மெந்தைவெந்தபொடிநீறணிவார்க்கிடமாவதே. (ச)

பிறையுமாசில்கதிரானறியாமைப்பெயர்ந்துபோ
யுறையுங்கோயில்பசும்பொன்னணியாரசும்பார்புன

லறையுமோசைபறைபோ லுமனேகதங்காபத
மிறையெமீசனெமமா னிடமாகவுகந்ததே. (௫)

தேனையேறுநறுமாமலர்கொண்டடிசேர்த்துவீ
ரானையேறுமணிசாரலனேகதங்காபதம்
வானையேறுநெறிசென்றுணருந்தனைவல்லீரோ
லானையேறுமுடியானருள்செய்வதும்வானையே. (௬)

வெருவிவேழமிரியக்கதிர்முத்தொடுவெண்பளிங்
குருவிவீழவயிரங்கொழியாவகிலுந்திவெள்
ளருவிபாயுமணிசாரலனேகதங்காபத
மருவிவாழும்பெருமான்கழல்சேர்வதுவாய்மையே. (எ)

ஈரமேதுமிலனாகியெழுந்தவிராவணன்
வீரமேதுமிலனாகவிளைத்தவிலங்கலா
னாரமபாம்பதணிவான்றனனேகதங்காபதம்
வாரமாகிநினைவார்வினையாயினமாயுமே. (அ)

கண்ணன்வண்ணமலரானொடுங்கூடியோர்கையபா
யெண்ணும்வண்ணமறியாமையெழுந்ததோராரழ
லண்ணனண்ணுமணிசாரலனேகதங்காபத
நண்ணும்வண்ணமுடையார்வினையாயினநாசமே. (௯)

மாபதம்மறியாதவர்சாவகர்சாக்கிய
ரேபதம்படநின்றிறுமாந்துழல்வார்கடா
மாபதமறிவீருளிராகிலனேகதங்
காபதமமர்ந்தான்கழலசேர்தல்கருமமே. (௰)

தொல்லையூழிப்பெயர்தோன்றியதோணிபுரத்திறை
நல்லகேள்வித்தமிழ்ஞானசம்பந்தனல்லாகண்மு
னலலறீரவுரைசெய்தவனேகதங்காபதஞ்
சொல்லநல்லவடையும்மடையாசுடுதுன்பமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

வடதேசத்திலுள்ளது.

சுவாமிபெயர் - அருள்மன்னர், தேவியார்-மனோன்மணியம்மை.

ஆ பதிகம் - ௫

## திருவையாறு - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

கோடல்கோங்கங்குளிர்கூவிளமாலைகுலாயசி
ரோடுகங்கையொளிவெண்பிறைசூடுமொருவனார்
பாடல்வீணைமுழவங்குழன்மொந்தைபண்ணாகவே
யாடுமாறுவல்லானுமையாறுடையையனே. (௧)

தன்மையாருமறிவாரில்லைதாம்பிறரெள்கவே
பின்னுமுன்னுஞ்சிலபேய்க்கணஞ்சூழத்திரிதர்வர்
துன்னவாடையுடுப்பர்சுடலைப்பொடிபூசுவ
ரன்னமாலுந்துறையானுமையாறுடையையனே. (உ)

கூறுபெண்ணுடைகோவணமுண்பதுமவெண்டலை
மாறிலாருங்கொள்வாரில்லைமார்பிலணிகல
மேறுமேறித்திரிவரிமையோர்தொழுதேத்தவே
யாறுநான்குஞ்சொன்னானுமையாறுடையையனே. (௩)

பண்ணினல்லமொழியார்பவளத்துவர்வாயினா
ரெண்ணினல்லகுணத்தாரிணைவேல்வென்றகண்ணினார்
வண்ணம்பாடிவலிபாடித்தமவாய்மொழிபாடவே
யண்ணல்கேட்டுகந்தானுமையாறுடையையனே. (௪)

வேனலானைவெருவவுரிபோர்த்துமையஞ்சவே
வானையூடறுக்கும்மதிசூடியமைந்தனார்
தேனெய்பாலுதயிராடுங்கிளநீர்கரும்பின்றெளி
யானஞ்சாடுமுடியானுமையாறுடையையனே. (௫)

எங்குமாகிநின்றானுமியல்வறியப்படா
மங்கைபாகங்கொண்டானுமதிசூடுமைந்தனும்
பங்கமில்பதினெட்டொடுநான்குக்குணர்வுமா
யங்கமாறுஞ்சொன்னானுமையாறுடையையனே. (௬)

ஓதியாருமறிவாரில்லையோதியுலகெலாஞ்
சோதியாய்நிறைந்தான்சுடர்ச்சோதியுட்சோதியான்
வேதியாகிவிண்ணாகிமண்ணோடெரிகாற்றுமா
யாதியாகிநின்றானுமையாறுடையையனே (௭)

குரவநாண்மலர்கொண்டடியார்வழிபாடுசெய்
விரவுநீறணிவாரசிலதொண்டர்வியப்பவே
பரவிநாடொறும்பாடநம்பாவம்பறைதலா
லரவமார்த்துகந்தானுமையாறுடையையனே. (அ)

உரைசெய்தொல்வழிசெய்தறியாவிலங்கைக்குமன
வரைசெய்தோளடர்த்துமதிசூடியமைந்தனார்
கரைசெய்காவிரியின்வடபாலதுகாதலா
னரைசெய்மேகலையானுமையாறுடையையனே. (௯)

மாலுஞ்சோதிமலரானுமறிகிலாவாய்மையான்
காலங்காமபுவயிரங்கடிதையன்பொற்கழல்
கோலமாய்க்கொழுந்தீன்றுபவளந்திரண்டதோ
ராலநீழலுளானுமையாறுடையையனே. (௰)

கையிலுண்டுழல்வாருங்கமழ்துவராடையான்
மெய்யைப்போர்த்துழல்வாருமுரைப்பனமெய்யல
மைகொள்கண்டத்தெண்டோண்முக்கணன்கழல்வாழ்த்தவே
வையகந்தேர்ந்தளிப்பானுமையாறுடையையனே. (௧௧)

பலிதிரிந்துழல்பண்டங்கன்மேயவையாற்றினைக்
கலிகடந்தகையான்கடற்காழியர்காவல
னொலிகொள்சம்பந்தனொண்டமிழ்பத்தும்வல்லார்கள்போய்
மலிகொள்விண்ணிடைமன்னியசீர்பெறுவார்களே. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

## திருவாஞ்சியம் - பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்.

வன்னிகொன்றைமதமத்தமெருக்கொடுகூவிளம்
பொன்னியனற்சடையிற்பொலிவித்தபுராணனார்
தென்னவென்றுவரிவண்டிசைசெய்திருவாஞ்சிய
மென்னையாள்வுடையானிடமாகவுகந்ததே. (௧)

காலகாலர்கரிகானிடைமாநடமாடுவர்
மேலர்வேலைவிடமுண்டிருள்கின்றமிடற்றினர்
மாலைகோலமதிமாடமன்னுந்திருவாஞ்சிய
ஞாலம்வந்துபணியப்பொலிகோயினயந்ததே. (௨)

மேவிலொன்றர்விரிவுற்றவிரண்டினர்மூன்றுமாய்
நாவினாலருடலஞ்சினராறரேழோசையர்
தேவிலெட்டர்திருவாஞ்சியமேவியசெல்வனார்
பாவந்தீர்ப்பர்பழிபோக்குவர்தம்மடியார்கட்கே (௩)

சூலமேந்திவளாகையினாமெய்சுவண்டாகவே
சாலநல்லபொடிப்பூசுவர்பேசுவர்மாமறை
சீலமேவுபுகழாற்பெருகுந்திருவாஞ்சிய
மாலமுண்டவடிகள்ளிடமாகவமர்ந்ததே. (௪)

கையிலங்குமறியேந்துவர்காந்தளம்மெல்விரற்
றையல்பாகமுடையாரடையார்புரஞ்செற்றவர்
செய்யமேனிக்கரியமிடற்றார்திருவாஞ்சியத்
தையர்பாதமடைவார்க்கடையாவருநோய்களே. (௫)

அரவமபூண்பரணியுஞ்சிலம்பார்க்கவகந்தொறு
மிரவினல்லபலிபேணுவர்நாணிலர்நாமமே
பரவுவார்வினைதீர்க்கநின்றார்திருவாஞ்சிய
மருவியேத்தமடமாதொடுநின்றவெம்மைந்தரே. (௬)

விண்ணிலானபிறைசூடுவர்தாழ்ந்துவிளங்கவே
கண்ணினாலனங்கனுடலம்பொடியாக்கினார்.

பண்ணிலானவின்சைபாடன்மல்குந்திருவாஞ்சியத்
தண்ணலார்தம்மடிபோற்றவல்லார்க்கில்லையல்லலே. (எ)

மாடநீடுகொடிமன்னியதென்னிலங்கைக்குமன்
வாடியூடவரையாலடர்த்தன்றருள்செய்தவர்
வேடவேடர்திருவாஞ்சியமேவியவேந்தரைப்
பாடநீடுமந்தார்வினைபற்றறுப்பார்களே. (அ)

செடிகொணோயினடையார்திறம்பார்செறுதீவினை
கடியகூற்றமுங்கண்டகலும்புகழான்வரு
நெடியமாலோடயனேத்தநின்றார்திருவாஞ்சியத்
தடிகள்பாதமடைந்தாரடியாரடியார்கட்கே. (சு)

பிண்டமுண்டுதிரிவார்பிரியுந்துவராடையார்
மிண்டர்மிண்டுமொழிமெய்யலபொய்யிலையெம்மிறை
வண்டுகிண்டிமருவும்பொழில்சூழ்திருவாஞ்சியத்
தண்டவாணனடிகைதொழுவார்க்கில்லையல்லலே. (கo)

தென்றறென்றுபொழில்சென்றணையுந்திருவாஞ்சியத்
தென்றுநின்றவிறையானையுணர்ந்தடியேத்தலா
னன்றுகாழிமறைஞானசம்பந்தனசெந்தமி
ழொன்றுமுள்ளமுடையாரடைவாருயர்வானமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - வாஞ்சியநாதர், தேவியார் - வாழவந்தநாயகியம்மை.

## திருச்சிக்கல் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

வானுலாவுமதிவந்துலவும்மதின்மாளிகை
தேனுலாவுமலர்ச்சோலைமல்குந்திகழ்சிக்கலுள்
வேனலவேளைவிழித்திட்டவெண்ணெய்ப்பெருமானடி
ஞானமாகநினைவார்வினையாயினநையுமே. (க)

மடங்கொள்வாளைகுதிகொள்ளுமணமலர்ப்பொய்கைசூழ்
திடங்கொண்மாமறையோரவர்மல்கியசிககலுள்
விடங்கொள்கண்டத்துவெண்ணெய்ப்பெருமானடிமேவியே
யடைந்துவாழுமடியாரவரல்லலறுப்பரே. (உ)

நீலநெய்தனிலவிம்மலருஞ்சுனைநீடிய
சேலுமாலுங்கழனிவ்வளமல்கியசிக்கலுள்
வேலொண்கண்ணியினாளையோர்பாகன்வெண்ணெய்ப்பிரான்
பாலவண்ணன்கழலேத்தநம்பாவம்பறையுமே. (ங)

கந்தமுந்தக்கைதைபூத்துக்கமழ்ந்துசேரும்பொழிற்
சேர்ந்துவண்டின்னிசைபாடன்மல்குந்திகழ்சிக்கலுள்

வெந்தவெண்ணீற்றண்ணல்வெண்ணெய்ப்பிரான்விரையார்கழல
சிந்தைசெய்வார்வினையாயினதேய்வதுதிண்ணமே. (ச)

மங்குறங்குமறையோர்களமாடத்தயலேமிகு
தெங்குதுங்கபொழில்செல்வமல்குந்திகழ்சிக்கலுள்
வெங்கணவெள்ளேறுடைவெண்ணெய்ப்பிரானடிமேவவே
தங்குமேற்சரதந்திருநாளுந்தகையுமே. (ரு)

வண்டிரைத்துமதுவிம்மியமாமலர்ப்பொய்கைசூழ்
தெண்டிரைக்கொள்புனல்வந்தொழுகும்வயற்சிக்கலுள்
விண்டிரைத்தமலராற்றிகழ்வெண்ணெய்ப்பிரானடி
கண்டிரைத்துமனமேமதியாய்கதியாகவே. (சா)

முன்னுமாடம்மதின்மூன்றுடனேயெரியாய்விழத்
துன்னுவார்வெங்கணையொன்றுசெலுத்தியசோதியான
செந்நெலாருமவயற்சிக்கல்வெண்ணெய்ப்பெருமானடி
யுன்னிநீடமனமேநினையாய்வினையோயவே. (எ)

தெற்றலாகியதென்னிலங்கைக்கிறைவன்மலை
பற்றினான்முடிபத்தொடுதோளகணெரியவே
செற்றதேவனஞ்சிக்கல்வெண்ணெய்ப்பெருமானடி
யுற்றுநீநினையாய்வினையாயினவோயவே. (அ)

மாலினோடருமாமறைவல்லமுனிவனுங்
கோலினார்குறுகச்சிவனசேவடிகோலியுஞ்
சீலந்தாமறியாரதிகழ்சிக்கல்வெண்ணெய்ப்பிரான்
பாலும்பன்மலர்தூவப்பறையுநம்பாவமே. (சு)

பட்டைநற்றுவராடையினாரொடும்பாங்கிலாக்
கட்டமணகழுக்கள்சொல்லினைககருதாதுநீர்
சிட்டனசிக்கல்வெண்ணெய்ப்பெருமானசெழுமாமறைப
பட்டனசேவடியேபணிமின்பிணிபோகவே. (க0)

கந்தமார்பொழிற்காழியுள்ஞானசமபந்தனற்
செந்தண்பூம்பொழிற்சிக்கல்வெண்ணெய்ப்பெருமானடிச்
சந்தமாச்சொன்னசெந்தமிழ்வல்லவரவானிடை
வெந்தநீறணியும்பெருமானடிமேவரே (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது

சுவாமிபெயர் - நவநீதநாதர், தேவியார் - வேனெடுங்கண்ணியம்மை.

## திருமழபாடி - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

களையும்வல்வினையஞ்சலெஞ்சேகருதார்புர
முளையும்பூசல்செய்தானுயர்மால்வரைநல்விலா

வளையடுவெஞ்சரமவாங்கியெய்தான்மதுத்தும்பிவண்
டளையுங்கொன்றையந்தார்மழபாடியுளண்ணலே. (க)

காச்சிலாதபொன்னொக்குங்கனவயிரத்திர
ளாச்சிலாதபளிங்கினனஞ்சுமுறாடினான்
பேச்சினாலுமக்காவதென்பேதைகாள்பேணுமின
வாச்சமாளிகைசூழ்மழபாடியைவாழ்த்துமே (உ)

உரங்கெடுப்பவனும்பர்களாயவர்தங்களைப்
பரங்கெடுப்பவனஞ்சையுண்டகலோனறனை
முரணகெடுப்பவன்முப்புரந்தீயெழச்செற்றுமுன்
வரங்கொடுப்பவன்மாமழபாடியுள்வள்ளலே. (௩)

பள்ளமாாசடையிற்புடையேயடையப்புனல
வெள்ளமாதரித்தான்விடையேறியவேதியன்
வள்ளன்மாமழபாடியுண்மேயமருந்தினை
யுள்ளமாதரிமின்வினையாயினவோயவே. (௪)

தேனுலாமலர்கொண்டுமெய்த்தேவர்கள்சித்தர்கள்
பானெயஞ்சுடனாட்டமுன்னாடியபால்வணன
வானநாடர்களகைதொழுமாமழபாடியெங்
கோனைநாடொறுங்கும்பிடவேகுறிகூடுமே. (௫)

தெரிந்தவன்புரமூன்றுடன்மாட்டியசேவகன்
பரிந்துகைதொழுவாரவர்தமமனமபாவினன
வரிந்தவெஞ்சிலையொன்றுடையான்மழபாடியைப்
புரிந்துகைதொழுமினவினையாயினபோகுமே (௬)

கந்தவார்குழலாளுமைதன்னொருகூறுடை
யெந்தையானிமையாதமுக்கண்ணினனெம்பிரான்
மைந்தன்வார்பொழில்சூழ்மழபாடிமருந்தினைச்
சிந்தியாவெழுவார்வினையாயினதேயுமே. (௭)

இரக்கமொன்றுமிலானிறையான்றிருமாமலை
யுரக்கையாலெடுத்தான்றனதோண்முடிபத்திற
விரற்றலைநிறுவியுமையாளொடுமேயவன
வரத்தையேகொடுக்குமமழபாடியுள்வள்ளலே. (௮)

ஆலமுண்டமுதமமரர்க்கருளண்ணலா
காலனாருயிர்வீட்டியமாமணிகண்டனா
சாலநல்லடியார்தவத்தார்களுஞ்சார்விட
மாலயனவணங்குமழபாடியெமைந்தனே (௯)

கலியின்வல்லமணுங்கருஞ்சாக்கியப்பேய்களு
நலியுநாள்கெடுத்தாண்டவென்னாதனார்வாழ்பதி

பலியும்பாட்டொடுபண்முழுவும்பலவோசையு
மலியுமாமழுபாடியைவாழ்த்திவணங்குமே. (க0)

மலியுமாளிகைசூழ்மழபாடியுள்வள்ளலைக்
கலிசெய்மாமதில்சூழ்கடற்காழிக்கவுணியன். (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது
சுவாமிபெயர் - வச்சிரத்தம்பேசுவரர், தேவியார் - அழகாம்பிகையம்மை.

## திருமங்கலக்குடி - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

சீரினார்மணியுமகிற்சந்துஞ்செறிவரை
வாரிநீர்வருபொன்னிவடமங்கலக்குடி
நீரின்மாமுனிவன்னெடுங்கைகொடுநீர்தனைப்
பூரித்தாட்டியர்ச்சிக்கவிருந்தபுராணனே. (க)

பணங்கொளாடரவல்குனல்லார்பயின்றேத்தவே
மணங்கொண்மாமயிலாலும்பொழில்சூழ்மங்கலக்குடி
யிணங்கிலாமறையோரிமையோர்தொழுதேத்திட
வணங்கினேடிருந்தானடியேசரணாகுமே. (உ)

கருங்கையானையினீருரிபோர்த்திடுகள்வனார்
மருங்கெலாமணமாரபொழில்சூழ்மங்கலக்குடி
யருமபுசேர்மலர்க்கொன்றையினானடியன்பொடு
விரும்பியேத்தவல்லார்வினையாயினவீடுமே (ந)

பறையினேடொலிபாடலுமாடலும்பாரிட
மறையினேடியன்மல்கிடுவார்மங்கலக்குடிக
குறைவிலாநிறைவேகுணமிலகுணமேயென்று
முறையினால்வணங்குமவர்முன்னெறிகாண்பரே. (ச)

ஆனிலங்கிளரைந்துமவிர்முடியாடியோர்
மானிலங்கையினானணமாமங்கலக்குடி
யூனில்வெண்டலைக்கையுடையானுயர்பாதமே
ஞானமாகநின்றேத்தவல்லார்வினைநாசமே. (ரு)

தேனுமாயமுதாகிநின்றான்றெளிசிந்தையுள்
வானுமாய்மதிசூடவல்லானமங்கலக்குடிக்
கோனைநாடொறுமேத்திக்குணங்கொடுகூறுவா
ருனமானவைபோயறுமுய்யுமவ்வகையதே. (சு)

வேள்படுத்திடுகண்ணினனமேருவில்லாகவே
வாளரக்கர்புரமெரித்தான்மங்கலக்குடி
யாளுமாதிபபிரானடிகளடைந்தேத்தவே
கோளுநாளவைபோயறுங்குற்றமில்லார்களே. (எ)

பொலியுமால்வரைபுக்கெடுத்தான்புகழ்ந்தேத்திட
வலியுமவாளொடுநாள்கொடுத்தான்மங்கலக்குடிப்
புலியினுடையினனடியேத்திடும்புண்ணியர்
மலியும்வானுலகம்புகவல்லவர்காண்மினே. (அ)

ஞாலமுன்படைத்தானளிர்மாமலர்மேலயன்
மாலுங்காணவொணுவெரியான்மங்கலக்குடி
யேலவார்குழலாளொருபாகமிடங்கொடு
கோலமாகிநின்றான்குணங்கூறுங்குணமதே. (கூ)

மெய்யின்மாசினர்மேனிவிரிதுகிலாடையர்
பொய்யைவிட்டிடும்புண்ணியர்சேர்மங்கலக்குடிச்
செய்யமேனிச்செழும்புனற்கங்கைசெறிசடை
யையன்சேவடியேத்தவல்லார்க்கழகாகுமே. (கo)

மந்தமாம்பொழில்சூழ் மங்கலக்குடிமன்னிய
வெந்தையையெழிலார்பொழிற்காழியர்காவலன்
சிந்தைசெய்தடிசேர்த்திடுஞானசம்பந்தன்சொன்
முந்தியேத்தவல்லீரிமையோர்முதலாவரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர் - புராணவரதேசுவரர், தேவியார்-மங்களநாயகியம்மை.
ஆ பதிகம் - கo.

## சீகாழி - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

நல்லானைநான்மறையோடியலாறங்கம்
வல்லானைவல்லவாபான்மலிந்தோங்கிய
சொல்லானைத்தொன்மதிற்காழியேகோயிலா
யில்லானையேத்தநின்றார்க்குளதின்பமே. (க)

கம்மானமாற்றிநமக்கருளாய்நின்ற
பெம்மானைப்பேயுடனாடல்புரிந்தானை
யம்மானையந்தணர்சேருமணிகாழி
யெம்மானையேத்தவல்லார்க்கிடரில்லையே. (உ)

அருந்தானையன்புசெய்தேத்தகில்லார்பாற்
பொருந்தானைப்பொய்யடிமைத்தொழில்செய்வாருள்
விருந்தானைவேதியரோதிமிடைகாழி
யிருந்தானையேத்துமினும்வினையேகவே. (ஙூ)

புற்றானைப்புற்றரவம்மரையின்மிசை
சுற்றானைத்தொண்டுசெய்வாரவர்தம்மொடு

மற்றானையந்தணர்காழியமர்கோயில்
பற்றானைப்பற்றிநின்றார்க்கில்லைபாவமே. (ச)

நெதியானைநெஞ்சிடங்கொள்ளநினைவார்தம்
விதியானைவிண்ணவர்தாம்வியந்தேத்திய
கதியானைக்காருலவும்பொழிற்காழியாம
பதியானைப்பாடுமினும்வினைபாறவே. (ரு)

செப்பானமென்முலையாளைத்திகழ்மேனி
வைப்பானைவார்கழலேத்திநினைவார்த
மொப்பானையோதமுலாவுகடற்காழிமே
யப்பானைமேவியமர்ந்தாரேவியந்தாரே. (சா)

துன்பானைத்துன்பமழித்தருளாக்கிய
வின்பானையேழிசையின்னிலைபேணுவா
ரன்பானையணிபொழிற்காழிநகர்மேய
நம்பானைநண்ணவல்லார்வினைநாசமே. (எ)

குன்றானைக்குன்றெடுத்தான்புயநாலைந்து
வென்றானைமென்மலரானொடுமாறேட
நின்றானைநேரிழையாளொடுங்காழியு
ளன்றானைநம்பெருமானைநணுகுமே. (அ)

சாவாயும்வாதுசெய்சாவகர்சாக்கியர்
மேவாதசொல்லவைகேட்டுவெகுளேன்மின்
பூவாயகொன்றையினானைப்புனற்காழிக்
கோவாயகொள்கையினனடிகூறுமே. (கூ-க0)

கழியார்சீரோதமல்குங்கடற்காழிய
ளொழியாதுகோயில்கொண்டானையுகந்துள்கித்
தழியார்சொல்ஞானசம்பந்தன்றமிழான
மொழிவார்கண்மூவுலகும்பெறுவார்களே. (கக)

திருச்சிற்றம்பலம்

## திருவேகம்பகம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

மறையானைமாசிலாப்புன்சடைமல்குவெண்
பிறையானைப்பெண்ணொடாணாகியபெம்மானை
யிறையானையேர்கொள்கச்சித்திருவேகம்பத்
துறைவானையல்லதுள்காதெனதுள்ளமே. (க)

நொச்சியேவன்னிகொன்றைமதிகூவிள
முச்சியேபுனைதல்வேடம்விடையூர்தியான்
கச்சியேகம்பமேயகறைக்கண்டனை
நச்சியேதொழுமினும்மேல்வினைநையுமே. (உ)

பாராருமுழவமொந்தைகுழல்யாழொலி
சீராலேபாடலாடல்சிதைவில்லதோ
ரேரார்பூங்கச்சியேகம்பனையெம்மானைச்
சேராதாரின்பமாயநெறிசேராரே. (௩)

குன்றேய்க்குநெடுவெண்மாடக்கொடிகூடிப்போய்
மின்றேய்க்குமுகில்கடோயுமலியுங்கச்சியுண்
மன்றேய்க்குமல்குசீரானமலியேகம்பஞ்
சென்றேய்கருஞ்சிந்தையார்மேல்வினைசேராவே (௪)

சடையானைத்தலைகையேந்திப்பலிதருவார்தங்
கடையேபோய்மூன்றுங்கொண்டான்கலிகச்சியுட்
புடையேபொன்மலருங்கம்பைக்கரையேகம்ப
முடையானையல்லதுள்காதெனதுள்ளமே. (௫)

மழுவாளோடெழில்கொள்சூலப்படைவல்லார்தங்
கெழுவாளோரிமையாருச்சியுமையாள்கங்கை
வழுவாமேமல்குசீரால்வளரேகம்பந்
தொழுவாரேவிழுமியாமேல்வினைதுன்னாவே. (௬)

விண்ணுளாரமறைகள்வேதம்விரித்தோதுவார்
கண்ணுளார்கழலின்வெல்வார்கரிகாலனை
நண்ணுவாரெழில்கொள்கச்சிநகரேகம்பத்
தண்ணலாராடுகின்றவலங்காரமே. (௭)

தூயானைத்தூயவாயமறையோதிய
வாயானைவாளரக்கனவலிவாட்டிய
தீயானைத்தீதில்கச்சித்திருவேகம்ப
மேயானைமேவுவாரென்றலைமேலாரே. (௮)

நாகம்பூணேறதேறனறுங்கொன்றைத்தார்
பாகம்பெண்பலியுமேற்பர்மறைபாடுவ
ரேகம்பமேவியாடிமிறையிருவர்க்கு
மாகம்பமறியும்வண்ணத்தவனல்லனே. (௯)

போதியார்பிண்டியாரென்றிவர்பொய்ந்நூலை
வாதியாவம்மினம்மாவெனுங்கச்சியு
ளாதியார்மேவியாடுந்திருவேகம்ப
நீதியாற்றொழுமினும்மேல்வினைநில்லாவே. (௧௦)

அந்தண்பூங்கச்சியேகம்பனையம்மானைக்
கந்தண்பூங்காழியூரன்கலிக்கோவையாற்
சந்தமேபாடவல்லதமிழ்ஞானசம்
பந்தனசொற்பாடியாடக்கெடும்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருக்கோழம்பம் - பண் - இந்தளம

திருச்சிற்றம்பலம்.

நீற்றானைநீள்சடைமேனிறைவுள்ளதோ
ராற்றானையழகமர்மென்முலையாளையோர்
கூற்றானைக்குளிர்பொழிற்கோழம்பமேவிய
வேற்றானையேத்துமினும்மிடரேகவே. (௧)

மையானகண்டனைமான்மறியேந்திய
கையானைக்கடிபொழிற்கோழம்பமேவிய
செய்யானைத்தேனெய்பாலுந்திகழ்ந்தாடிய
மெய்யானைமேவுவார்மேல்வினைமேவாவே. (௨)

ஏதனையேதமிலாவிமையோர்தொழும்
வேதனைவெண்குழைதோடுவிளங்கிய
காதனைக்கடிபொழிற்கோழம்பமேவிய
நாதனையேத்துமினும்வினைநையவே. (௩)

சடையானைத்தண்மலரான்சிரமேந்திய
விடையானைவேதமும்வேள்வியுமாயநன்
குடையானைக்குளிர்பொழில்சூழ்திருக்கோழம்ப
முடையானையுள்குமினுள்ளங்குளிரவே. (௪)

காரானைக்கடிகமழ்கொன்றையம்போதணி
தாரானைத்தையலோர்பான்மகிழ்ந்தோங்கிய
சீரானைச்செறிபொழிற்கோழம்பமேவிய
வூரானையேத்துமினும்மிடரொல்கவே. (௫)

பண்டாலினிழலானைப்பரஞ்சோதியை
விண்டார்கடம்புரமூன்றுடனேவேவக்
கண்டானைக்கடிகமழ்கோழம்பங்கோயிலாக்
கொண்டானைக்கூறுமினுள்ளங்குளிரவே. (௬)

சொல்லானைச்சுடுகணையாற்புரமூன்றெய்த
வில்லானைவேதமுமவேள்வியுமானானைக்
கொல்லானையுரியானைக்கோழம்பமேவிய
நல்லானையேத்துமினும்மிடர்நையவே. (௭)

விற்றானைவல்லரக்கர்விறல்வேந்தனைக்
குற்றானைத்திருவிரலாற்கொடுங்காலனைச்
செற்றானைச்சீர்திகழுந்திருக்கோழமபம்
பற்றானைப்பற்றுவார்மேல்வினைபற்றாவே. (௮)

நெடியானோடயனறியாவகைநின்றதோர்
படியானைப்பண்டரங்கவேடம்பயின்றானைக்
கடியாருங்கோழம்பமேவியவெள்ளேற்றின்
கொடியானைக்கூறுமின்னுள்ளங்குளிரவே. (௯)

புத்தருந்தோகைபம்பீலிகொள்பொய்ம்மொழிப்
பித்தரும்பேசுவபேச்சல்லபீடுடைக்
கொத்தலர்தண்பொழிற்கோழம்பமேவிய
வத்தனையேத்துமினல்லலறுக்கவே. (௧௦)

தண்புனலோங்குதண்ணந்தராய்மாநகர்
நண்புடைஞானசம்பந்தனும்பானுறை
விண்பொழிற்கோழம்பமேவியபத்திவை
பண்கொளப்பாடவல்லார்க்கில்லைப்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-கோகுலேசுவரர், தேவியார்-சவுந்தரியம்மை.

## திருவெண்ணி - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

சடையானைச்சந்திரனோடுசெங்கண்ணரா
வுடையானையுடைதலையிற்பலிகொண்டூரும்
விடையானைவிண்ணவர்தாந்தொழும்வெண்ணியை
யுடையானையலதுள்காதெனதுள்ளமே. (௧)

சோதியைச்சுண்ணவெண்ணீறணிந்திட்டவெம்
மாதியையாதியுமந்தமுமில்லாத
வேதியைவேதியர்தாந்தொழும்வெண்ணியி
னீதியைநினையவல்லார்வினைநில்லாவே. (௨)

கனிதனைக்கனிந்தவரைக்கலந்தாட்கொளு
முனிதனைமூவுலகுக்கொருமூர்த்தியை
நனிதனைநல்லவர்தாந்தொழும்வெண்ணியி
லினிதனையேத்துவரேதமிலாதாரே. (௩)

மூத்தானைமூவுலகுக்கொருமூர்த்தியாய்க்
காத்தானைக்கனிந்தவரைக்கலந்தாளாக
வார்த்தானையழகமர்வெண்ணியம்மான்றனை
யேத்தாதாரென்செய்வாரேழையப்பேய்களே. (௪)

நீரானைநிறைபுனலசூழ்தருநீள்கொன்றைத்
தாரானைத்தையலோர்பாகமுடையானைச்
சீரானைத்திகழ்தருவெண்ணியமர்ந்துறை
யூரானையுள்கவல்லார்வினையோயுமே. (௫)

முத்தினைமுழுவயிரத்திரண்மாணிக்கத
தொத்தினைத்துளக்கமில்லாதவிளக்காய
வித்தினைவிண்ணவர்தாந்தொழும்வெண்ணியி
லத்தனையடையவல்லார்க்கில்லையல்லலே. (௬)

காய்ந்தானைக்காமனையுஞ்செறுகாலனைப்
பாய்ந்தானைப்பரியகைமாவுரித்தோன்மெய்யின்
மேய்ந்தானைவிண்ணவர்தாந்தொழும்வெண்ணியி
னீய்ந்தானைநினையவல்லார்வினைநில்லாவே. (எ)

மறுத்தானைமாமலையைமதியாதோடிச்
செறுத்தானைத்தேசழியத்திகழ்தோணமுடி
யிறுத்தானையெழிலமர்வெண்ணியெமமானெனப
பொறுத்தானைப்போற்றுவாராற்றலுடையாரே. (அ)

மண்ணினைவானவரோடுமனிதர்க்குங்
கண்ணினைக்கண்ணனுநான்முகனுங்காணு
விண்ணினைவிண்ணவர்தாந்தொழும்வெண்ணியி
லண்ணலையடையவல்லார்க்கில்லையல்லலே. (கூ)

குண்டருங்குணமிலாச்சமணசாக்கிய
மிண்டர்கண்மிண்டவைகேட்டுவெகுளன்மின்
விண்டவர்தம்புரமெய்தவன்வெண்ணியிற்
றொண்டராயேத்தவல்லார் துயர்தோன்றாவே. (கo)

மருவாருமல்குகாழித்திகழ்சம்பந்தன்
றிருவாருந்திகழ்தருவெண்ணியமர்ந்தானை
யுருவாருமொண்டமிழ்மாலையிவைவல்லார்
பொருவாகப்புக்கிருப்பார்புவலோகத்தே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - வெண்ணிநாயகர், தேவியார் - அழகியநாயகியம்மை.

## திருக்காறாயில் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

நீரானைநீள்சடைமேலொருநிரைகொன்றைத்
தாரானைத்தாமரைமேலயன்றனொடுமாலுஞ்
சீரானைசீர்திகழுந்திருக்காறாயி
லூரானையெப்பவருனமிலாதாரே (க)

மதியானைவரியரவோடுடனமத்தமுஞ்சேர்
விதியானைவிதியுடைவேதியர்தாந்தொழு
நெதியானைநீர்வயல்சூழ்திருக்காறாயிற
பதியானையென்பவர்பாவமிலாதாரே. (உ)

விண்ணானைவிண்ணவரேத்திவிரும்புஞ்சீர்
மண்ணானைமண்ணிடைவாழுமுயிர்க்கெல்லாங்
கண்ணானைகடிபொழில்சூழ்திருக்காறாயி
லெண்ணானையென்பவரேதமிலாதாரே. (ங)

தாயானேதந்தையுமாகியதன்மைக
ளாயானேயாயநலன்பர்க்கணியானே
சேயானேசீர்திகழுந்திருக்காறுயின்
மேயானேயென்பவர்மேல்வினைமேவாவே. (௪)

கலையானேகலைமலிசெம்பொற்கயிலாய
மலையானேமலைபவர்மும்மதின்மாய்வித்த
சிலையானேசீர்திகழுந்திருக்காறுயி
னிலையானேயென்பவர்மேல்வினைநில்லாவே. (௫)

ஆற்றானேயாறணிசெஞ்சடையாடர
வேற்றானேயேழுலகுமமிமையோர்களும்
போற்றானேபொழிறிகழுந்திருக்காறுயி
னீற்றானேயென்பவர்மேல்வினைநில்லாவே. (௬)

சேர்த்தானேதீவினைதேய்ந்தறதேவர்க
ளேத்தானேயேத்துநன்மாமுனிவர்க்கிடர்
காத்தானேகார்வயல்சூழ்திருக்காறுயி
லார்த்தானேயென்பவர்மேல்வினையாடாவே. (௭)

கடுத்தானேகாலனைக்காலாற்கயிலாய
மெடுத்தானையேதமாகம்முனிவர்க்கிடர்
கெடுத்தானேகேழ்கிளருந்திருக்காறுயி
லடுத்தானேயென்பவர்மேல்வினையாடாவே (௮)

பிறையானேபேணியபாடலொடின்னிசை
மறையானேமாலொடுநான்முகன்காணுத
விறையானேயெழிறிகழுந்திருக்காறுயி
லுறைவானேயென்பவர்மேல்வினையோடுமே. (௯)

செடியாரும்புனசமண்சீவரத்தார்களும்
படியாருமபாவிகள்பேச்சுப்பயனில்லை
கடியாரும்பூமபொழில்சூழ்திருக்காறுயில்
குடியாருங்கொள்கையினூர்க்கில்லைகுற்றமே (௧௦)

ஏய்ந்தசீரெழிறிகழுந்திருக்காறுயி
லாய்ந்தசீரானடியேத்தியருள்பெற்ற
பாய்ந்தநீர்க்காழியுள்ஞானசம்பந்தன்சொல்
வாய்ந்தவாறேத்துவார்வானுலகாள்வாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - கண்ணாயிரநாதர், தேவியார்-கயிலாயநாயகியம்மை.

ஆ பதிகம் - ௧௫.

## திருமணஞ்சேரி - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

அயிலாருமம்பதனாற்புரமூன்றெய்து
குயிலாருமென்மொழியாளொருகூறாகி
மயிலாருமல்கியசோலைமணஞ்சேரி
பயில்வானைப்பற்றிநின்றார்க்கில்லைபாவமே. (க)

விதியானைவிண்ணவர்தாந்தொழுதேத்திய
நெதியானைநீள்சடைமேனிகழ்வித்தவான்
மதியானைவண்பொழில்சூழ்ந்தமணஞ்சேரிப்
பதியானைப்பாடவல்லார்வினைபாறுமே. (உ)

எய்ப்பானார்க்கின்புறுதேனளித்தூறிய
விப்பாலாயென்னையுமாளவுரியானை
வைப்பானமாடங்கள்சூழ்ந்தமணஞ்சேரி
மெய்ப்பானைமேவிநின்றார்வினைவீடுமே. (ங)

விடையானைமேலுலகேழுமிப்பாரெலா
முடையானையூழிதோறூழியுளதாய
படையானைப்பண்ணிசைபாடுமணஞ்சேரி
யடைவானையடையவல்லார்க்கில்லையல்லலே. (ச)

எறியார்பூங்கொன்றையினோடுமிளமத்தம்
வெறியாருஞ்செஞ்சடையாரமிலத்தானை
மறியாருங்கங்கையுடையானைமணஞ்சேரிச்
செறிவானைச்செப்பவல்லார்க்கிடர்சேராவே. (ரு)

மொழியானைமுன்னொருநான்மறையாறங்கம்
பழியாமைபண்ணிசையானபகர்வானை
வழியானைவானவரேத்துமணஞ்சேரி
யிழியாமையேத்தவல்லார்க்கெய்துமின்பமே. (சா)

எண்ணானையெண்ணமர்சீரிமையோர்கட்குக்
கண்ணானைக்கண்ணொருமூன்றுமுடையானை
மண்ணானைமாவயல்சூழ்ந்தமணஞ்சேரிப்
பெண்ணானைப்பேசநின்றார்பெரியோர்களே. (எ)

எடுத்தானையெழின்முடியெட்டுமிரண்டுந்தோள்
கெடுத்தானைக்கேடிலாச்செம்மையுடையானை
மடுத்தாரவண்டிசைபாடுமணஞ்சேரி
பிடித்தாரப்பேணவல்லார்பெரியோர்களே. (அ)

சொல்லானைத்தோற்றங்கண்டானுநெடுமாலுங்
கல்லானைக்கற்றனசொல்லித்தொழுதோங்க

வல்லார்நன்மாதவரோத்துமணஞ்சேரி
யெல்லாமாமெம்பெருமான்கழலேத்துமே. (௯)

சற்றேயுந்தாமறிவில்சமண்சாக்கியர்
சொற்றேயும்வண்ணமோர்செம்மையுடையானை
வற்றாதவாவிகள்சூழ்ந்தமணஞ்சேரி
பற்றாகவாழ்பவர்மேல்வினைபற்றாவே. (௧0)

கண்ணாருங்காழியர்கோன்கருத்தார்வித்த
தண்ணார்சீர்ஞானசம்பந்தனறமிழ்மாலை
மண்ணாருமாவயல்சூழ்ந்தமணஞ்சேரி
பண்ணாரப்பாடவல்லார்க்கில்லைபாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

சோழநாட்டிலுள்ளது

சுவாமிபெயர் - மணவாளநாயகர், தேவியார் - யாழ்மொழியம்மை.

## திருவேணுபுரம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

நிலவும்புனலும்நிறைவாளரவு, மிலகுஞ்சடையார்க்கிடமாமெழிலார்
குலவும்வயலுக்கொளியாமுத்தம், விலகுங்கடலார்வேணுபுரமே. (௧)

அரவார்கரவன்னமையாரதிரடோட், குரவார்குழலாளொருகூறனிடங்
கரவாதகொடைக்கலந்தாரவர்க்கு, விரவாகவல்லார்வேணுபுரமே. (௨)

ஆகம்மழகாயவடான்வெருவ, நாகமுரிபோர்த்தவனண்ணுமிடம்
போகந்தருசீர்வயல்சூழ்பொழில்கண், மேகந்தவழும்வேணுபுரமே. (௩)

காசக்கடலில்விடமுண்டகண்டத், தீசர்க்கிடமாவதுவின்னறவ
வாசக்கமலத்தனம்வன்றிரைகள், வீசத்துயிலும்வேணுபுரமே. (௪)

அரையார்கலைசேர்மெனனடையை, யுறையாவுகந்தானுறையுமிட
நிரையார்கமுகின்னிகழ்பாளையுடை, விரையார்பொழில்சூழ்வேணுபுரமே. ()

ஒளிரும்பிறையு முறுகூவிளவின், றளிருஞ்சடைமேலுடையானிடமா
நளிருமபுனலின்னலசெங்கயல்கண், மிளிரும்வயல்சூழ்வேணுபுரமே. (௭-௬)

ஏவும்படைவேடனிராவணனை, யாவென்றலறவடர்த்தானிடமாந்
தாவும்மறிமானொடுதண்மதியம், மேவும்பொழில்சூழ்வேணுபுரமே. (அ)

கண்ணன்கடிமாமலரிற் றிகழு, மண்ணவிருவரறியாவிறையூர்
வண்ணச்சுதைமாளிகைமேற்கொடிகள், விண்ணிற்றிகழும்வேணுபுரமே. ()

போகம்மறியாதுவர்போர்த்துழல்வா, ராகம்மறியாவடியாரிறையூர்
மூகம்மறிவார்கலைமுத்தமிழ்நூன், மீகம்மறிவார்வேணுபுரமே. (௧0)

கலமார்கடல்போல்வளமார்தருநற், புலமார்தருவேணுபுரத்திறையை
நலமார்தருஞானசம்பந்தனசொன்ன, குலமார்தமிழ்கூறுவர்கூர்மையரே. ()

திருச்சிற்றம்பலம்

## திருமருகல் - விடந்தீர்த்ததிருப்பதிகம் பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

சடையாயெனுமால்சரணீயெனுமால்
விடையாயெனுமால்வெருவாவிழுமால்
மடையார்குவளைம்மலரும்மருக
லுடையாய்தகுமோவிவளுண்மெலிவே (௧)

சிந்தாயெனுமால்சிவனேயெனுமான்
முந்தாயெனுமானமுதல்வாவெனுமால்
கொந்தார்குவளைகுலவும்மருக
லெந்தாய்தகுமோவிவளேசறவே. (௨)

அறையார்கழலுமழல்வாயரவும்
பிறையார்சடையுமுடையாய்பெரிய
மறையார்மருகன்மகிழ்வாயிவளை
யிறையார்வளைகொண்டெழில்வவ்வினையே (௩)

ஒலிநீர்சடையிற்கரந்தாயுலகம
பலிநீதிரிவாய்பழியில்புகழாய்
மலிநீர்மருகன்மகிழ்வாயிவளை
மெலிநீர்மையளாக்கவும்வேண்டினையே (௪)

துணிநீலவண்ணமுகிற்றோன்றியன்ன
மணிநீலகண்டமுடையாய்மருகற்
கணிநீலவண்டார்குழலாளிவடன்
னணிநீலவொண்கண்ணயர்வாக்கினையே. (௫)

பலரும்பரவப்படுவாய்சடைமேன
மலரும்பிறையொன்றுடையாய்மருகற்
புலருந்தனையுந்துயிலாள்புடைபோந்
தலருமபடுமோவடியாளிவளே. (௬)

வழுவாள்பெருமான்கழல்வாழ்கவெனா
வெழுவாணினைவாளிரவும்பகலு
மழுவாளுடையாய்மருகற்பெருமான்
றொழுவாளிவளைத்துயராக்கினையே. (௭)

இலங்கைக்கிறைவனவிலங்கலெடுப்பத
துலங்கல்விரலூன்றலுந்தோன்றலனாய்
வலங்கொண்மதில்சூழ்மருகற்பெருமா
னலங்கல்லிவளையலராக்கினையே. (௮)

எரியார்சடையுமடியுமிருவர்
தெரியாததோர்தீத்திரளாயவனே
மரியாபிரியாமருகற்பெருமா
னரியாளிவளையயர்வாக்கினையே. (௯)

அறிவில்சமணும்மலர்சாக்கியருந்
நெறியல்லனசெய்தனர்நின்றுழல்வார்
மறியேந்துகையாய்மருகற்பெருமா
னெறியார்குழலிநிறைநீக்கினையே. (௧0)

வயஞானமவலலார்மருகற்பெருமா
னுயர்ஞானமுணர்ந்தடியுள்குதலா
லியன்ஞானசம்பந்தனபாடல்வல்லார்
வியன்ஞாலமெல்லாம்விளங்கும்புகழே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருநெல்லிக்கா - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

அறத்தானுயிர்காவலமர்ந்தருளி
மறத்தான்மதின்மூன்றுடனமாண்பழித்த
திறத்தாற்றெரிவெய்தியதீவெண்டிங்க
ணிறத்தானெல்லிக்காவுணிலாயவனே. (௧)

பதிதானிடுகொடுபைங்கொன்றைதொங்கன்
மதிதானதுசூடியமைந்தனுந்தான்
விதிதான்வினைதான்விழுப்பம்பயக்கு
நெதிதானெல்லிக்காவுணிலாயவனே. (௨)

நலந்தானவனான்முகன்றன்றலையைக்
கலந்தானதுகொண்டகபாலியுந்தான்
புலந்தான்புகழாலெரிவிண்புகழு
நிலந்தானெல்லிக்காவுணிலாயவனே. (௩)

தலைதானதுவேந்தியதம்மடிகள்
கலைதான்றிரிகாட்டிடநாடிடமா
மலைதானெடுத்தான்மதின்மூன்றுடைய
நிலைதானெல்லிக்காவுணிலாயவனே. (௪)

தவந்தான்கதிதான்மதிவார்சடைமே
லுவந்தான்சுறவேந்தனுருவழியச்
சிவந்தான்செயச்செய்துசெறுத்துலகி
னிவந்தானெல்லிக்காவுணிலாயவனே. (௫)

வெறியார்கொன்றையந்தார்விரும்பி
மறியார்மலைமங்கைமகிழ்ந்தவனான்
குறியார்குறிகொண்டவர்போய்க்குறுகு
நெறியானெல்லிக்காவுணிலாயவனே. (௬)

பிறைதான்சடைசேர்த்திவவெந்தைபெம்மா
னிறைதானிறவாக்கயிலைமலையான்

மறைதான்புனலொண்மதிமல்குசென்னி
நிறைதானெல்லிக்காவுணிலாயவனே. (எ)

மறைத்தான்பிணிமாதொருபாகந்தன்னை
மிறைத்தான்வரையாலரக்கன்மிகையைக்
குறைத்தான்சடைமேற்குளிர்கோல்வளையை
நிறைத்தானெல்லிக்காவுணிலாயவனே. (அ)

தழுறுமரையான்வையந்தாயவனுங்
கழுறுன்முடிகாணியனுனெரிரும்
மழுறுனடியார்கருளாய்ப்பயகு
நிழுறுனெலலிக்காவுணிலாயவனே. (௯)

கனத்தார்திரைமாண்டழுற்கான்றநஞ்சை
யெனத்தாவெனவாங்கியதுண்டகண்டன்
மனத்தாற்சமணசாக்கியர்மாண்பழிய
நினைத்தானெலலிக்காவுணிலாயவனே (௧0)

புகரோதுமில்லாதபுத்தேளுலகி
னிகராநெல்லிக்காவுணிலாயவனே
நகரார்நலஞானசம்பந்தன்சொன்ன
பகர்வாரவர்பாவமிலாதவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-நெல்லிவனேசுவரர், தேவியார் - மங்களநாயகியம்மை.

---

## திருஅழுந்தூர் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

தொழுமாறுவல்லார்துயர்தீரநினைந்
தெழுமாறுவல்லாரிசைபாடவிம்மி
யழுமாறுவல்லாரழுந்தைமறையோர்
வழிபாடுசெய்மாமடமன்னினையே. (௧)

கடலேறியநஞ்சமுதுண்டவனே
யுடலேயுயிரேயுணர்வேயெழிலே
யடலேறுடையாயழுந்தைமறையோர்
விடலேதொழுமாமடமேவினையே. (உ)

கழிகாடலனேகனலாடலினாய்
பழிபாடிலனேயவையேபயிலும்
மழிபாடிலராயழுந்தைமறையோர்
வழிபாடுசெய்மாமடமன்னினையே (௩)

வானேமலையேயென்மன்னுயிரே
தானேதொழுவார்தொழுதாண்மணியே

யானேசிவனேயெழுந்தையவரெம்
மானேயெனமாமடமன்னினையே. (ச)

அலையார்புனல்சூழழுந்தைப்பெருமா
னிலையார்மறியுந்நிறைவெண்மழுவும்
மிலையார்படையும்மிவையேந்துசெல்வ
நிலையாவதுகொள்கெனநீநினையே. (ரு)

நறவார்தலையின்னயவாவுலகிற்
பிறவாதவனேபிணியில்லவனே
யறையார்கழலாயழுந்தைமறையோர்
மறவாதெழுமாமடமன்னினையே. (சூ)

தடுமாறுவல்லாய்தலைவாமதியஞ்
சுடுமாறுவல்லாய்சுடரார்சடையில்
லடுமாறுவல்லாயழுந்தைமறையோர்
நெடுமாநகர்கைதொழநின்றனையே. (எ)

பெரியாய்சிறியாய்பிறையாய்மிடறு
கரியாய்கரிகாடுயர்வீடுடையா
யரியாயெளியாயழுந்தைமறையோர்
வெளியார்தொழமாமடமேவினையே. (அ)

மணிநீண்முடியான்மலையையரக்கன்
றணியாதெடுத்தானுடலந்நெரித்த
வணியார்விரலாயழுந்தைமறையோர்
மணிமாமடமன்னியிருந்தனையே (கூ)

முடியார்சடையாய்முனநாளிருவர்
நெடியானுமலரானிகழ்வாயிவர்க
ளடிமேலறியாரழுந்தைமறையோர்
படியாற்றொழுமாமடம்பற்றினையே. (க0)

அருஞானம்வல்லாரழுந்தைமறையோர்
பெருஞானமுடைப்பெருமானவனைத்
திருஞானசம்பந்தனசெந்தமிழ்க
ளொருஞானமுண்டாமுணர்ந்தார்தமக்கே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - வேதபுரீசர், தேவியார் - சவுந்தராம்பிகை.

தேரழுந்தூரென்பதுமிதுவே.

---

## திருக்கழிப்பாலை - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

புனலாடியபுன்சடையாயரணை
மனலாகவிழித்தவனேயழகா

கனவாடவினுய்கழிப்பாலையுளா
யுனவார்கழல்கைதொழுதுள்குதுமே (௧)

துணையாகவோர் தூவளமாதினையும
மிணையாகவுகந்தவனேயிறைவா
கணையாலெயிலெய்கழிப்பாலையுளா
யிணையார்கழலேத்தவிடர்கெடுமே (௨)

நெடியாய்குறியாய்நிமிர்புன்சடையின
முடியாய்சுடுவெண்பொடிமுற்றணிவாய்
கடியார்பொழில்சூழ்கழிப்பாலையுளா
யடியார்க்கடையாவவலம்மவையே. (௩)

எளியாயரியாய்நிலநீரொடுதீ
வளிகாயமெனவெளிமன்னியதூ
வொளியாயுனையேதொழுதுன்னுமவாக்
களியாய்கழிப்பாலையமர்ந்தவனே (௪)

நடநண்ணியோர்நாகமசைத்தவனே
விடநண்ணியதூமிடறுவிகிர்தா
கடனணணுகழிப்பதிகாவலனே
யுடனண்ணிவணங்குவனுன்னடியே. (௫)

பிறையார்சடையாய்பெரியாய்பெரிய
மறையார்தருவாய்மையினுயுலகிற்
கறையார்பொழில்சூழ்கழிப்பாலையுளா
யிறையார்கழலேத்தவிடர்கெடுமே. (௬)

முதிருஞ்சடையின்முடிமேல்விளங்குங்
கதிர்வெண்பிறையாய்கழிப்பாலையுளா
யெதிர்கொண்மொழியாலிரந்தேத்துமவர்க்
கதிரும்வினையாயினவாசறுமே. (௭)

எரியார்கணையாலெயிலெய்தவனே
விரியார்தருவீழ்சடையாயிரவிற்
கரிகாடலினுய்கழிப்பாலையுளா
யுரிதாகிவணங்குவனுன்னடியே. (௮)

நலநாரணனுன்முகனண்ணலுறக்
கனலானவனேகழிப்பாலையுளா
யுனவார்கழலேதொழுதுன்னுமவர்க்
கிலவாம்வினைகாளெயிலெய்தவனே. (௯)

தவர்கொண்டதொழிற்சமண்வேடரொடுந்
துவர்கொண்டனர்நுண்டுகிலாடையரு
மவர்கொண்டனவிட்டடிகளுறையு
முவர்கொண்டகழிப்பதியுள்குதுமே. (௰)

கழியார்பதிகாவலனைப்புகலிப்
பழியாமறைஞானசம்பந்தன்சொல்
வழிபாடிவைகொண்டடிவாழ்த்தவல்லார்
கெழியாரிமையோரொடுகேடிலரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர் - பால்வண்ணநாதர், தேவியார் - வேதநாயகியம்மை.

பதிகம் - உக.

## திருக்குடவாயில் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

திகழுந்திருமாலொடுநான்முகனும
புகழும்பெருமானடியார்புகல
மகிழும்பெருமான்குடவாயின்மன்னி
நிகழும்பெருங்கோயினிலாயவனே. (க)

ஓடுந்நதியும்மதியோடுரகஞ்
சூடுஞ்சடையான்விடைதொல்கொடிமேற்
கூடுங்குழகன்குடவாயிறனி
னீடும்பெருங்கோயினிலாயவனே. (உ)

கலையானன்மறையான்கனலேந்துகையான்
மலையாளவள்பாகமகிழ்ந்தபிரான்
கொலையார்சிலையானகுடவாயிறனி
னிலையார்பெருங்கோயினிலாயவனே. (ங)

சுலவுஞ்சடையான்சுடுகாடிடமா
நலமென்முலையாணகைசெய்யநடங்
குலவுங்குழகன்குடவாயிறனி
னிலவும்பெருங்கோயினிலாயவனே. (ச)

என்றன்னுளமேவியிருந்தபிரான்
கன்றன்மணிபோன்மிடறன்கயிலைக்
குன்றன்குழகன்குடவாயிறனி
னின்றம்பெருங்கோயினிலாயவனே. (ரு)

அலைசேர்புனலன்னனலன்னமலன்
றலைசேர்பலியன்சதுரன்விதிருங்
கொலைசேர்படையன்குடவாயிறனி
னிலைசேர்பெருங்கோயினிலாயவனே. (சு)

அறையார்கழலன்னமலன்னியலிற்
பறையாழ்முழவும்மறைபாடநடங்
குறையாவழகன்குடவாயிறனி
னிறையார்பெருங்கோயினிலாயவனே. (எ)

வரையார்திரடோளரக்கன்மடியவ்
வரையாரவோர்கால்விரல்வைத்தபிரான்
வரையார்மதில்சூழ்குடவாயின்மன்னும்
வரையார்பெருங்கோயின்மகிழ்ந்தவனே. (அ)

பொனனென்னப்பவனும்புயலொப்பவனுந்
தன்னைப்பறியாத்தழலாய்நிமிர்ந்தான
கொன்னற்படையான்குடவாயிறனின்
மன்னும்பெருங்கோயின்மகிழ்ந்தவனே. (கூ)

வெயிலின்னிலையாவிரிபோர்வையினார்
பயிலும்முறையேபகர்பாவிகள்பாற்
குயிலன்குழகன்குடவாயிறனி
னுயரும்பெருங்கோயிலுயர்ந்தவனே. (க0)

கடுவாய்மலிநீர்குடவாயிறனி
னெடுமாபெருங்கோயினிலாயவனைத்
தடமார்புகலித்தமிழார்விரகன்
வடமார்தமிழ்வல்லவர்நல்லவரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - கோணேசுவரர், தேவியார் - பெரியநாயகியம்மை.

---

## திருவானைக்கா - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

மழையார்மிடறுமழுவாளுடையா
யுழையார்கரவாவுமையாள்கணவா
விழவாரும்வெண்ணாவலின்மேவியவெம
மழகாவெனுமாயிழையாளவளே. (க)

கொலையார்கரியின்னுரிமூடியனே
மலையார்சிலையாவளைவித்தவனே
விலையாலெனையாளுமவெண்ணாவலுளாய்
நிலையாவருளாயெனுநேரிழையே. (உ)

காலாலுயிர்காலனைவீடுசெய்தாய்
பாலோடுநெய்யாடியபால்வண்ணனே
வேலாடுகையாயெம்வெண்ணாவலுளா
யாலார்நிழலாயெனுமாயிழையே. (ங)

சுறவக்கொடிகொண்டவனீறதுவா
யுறநெற்றிவிழித்தவெமுத்தமனே
விறன்மிக்ககரிக்கருள்செய்தவனே
யறமிக்கதுவென்னுமெனாயிழையே. (ச)

செங்கட்பெயர்கொண்டவன்செம்பியர்கோ
னங்கட்கருணைபெரிதாயவனே
வெங்கண்விடையாயெம்வெண்ணாவலுளா
யங்கத்துயர்வாயினளாயிழையே. (௫)

குன்றேயமர்வாய்கொலையார்புலியின்
றன்றோலுடையாய்சடையாய்பிறையாய்
வென்றாய்புரமூன்றைவெண்ணாவலுளே
நின்றாயருளாயெனுமேரிழையே. (௬-௭)

மலையன்றெடுத்தவரக்கன்முடிதோ
ளொலையவ்விரலூன்றியதூமழுவா
விலையிற்பலிபாருமவெண்ணாவலுளீ
யலசாமனல்காயெனுமாயிழையே. (௮)

திருவார்தருநாரணனான்முகனு
மருவாவெருவாவழலாய்நிமிர்ந்தாய்
விரையாருமவெண்ணாவலுண்மேவியவெம்
மரவாவெனுமாயிழையாளவளே. (௯)

புத்தாபலரோடமண்பொய்த்தவர்க
ளொத்தவ்வுரைசொல்லிவையோரகிலார்
மெய்த்தேவர்வணங்கும்வெண்ணாவலுளா
யத்தாவருளாயெனுமாயிழையே (௧௦)

வெண்ணாவலமர்ந்துறைவேதியனைக்
கண்ணார்கமழ்காழியர்தந்தலைவன்
பண்ணோடிவைபாடியபத்துமவல்லார்
விண்ணோரவரோத்தவிரும்புவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாகேச்சரம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

பொன்னேர்தருமேனியனேபுரியு
மின்னேர்சடையாய்விரிகாவிரியி
னன்னீர்வயனாகேச்சரநகரின்
மன்னேயெனவல்வினைமாய்ந்தறுமே (௧)

சிறவார்புரமூன்றெரியச்சிலையி
லுறவார்கணையுய்த்தவனேயுயரு
நறவார்பொழினாகேச்சரநகரு
ளறவாவெனவல்வினையாசறுமே. (௨)

கல்லானிழன்மேயவனேகரும்பின்
வில்லானெழில்வேவவிழித்தவனே

நல்லார்தொழுநாகேச்சரநகரிற்
செல்வாவெனவல்வினைதேய்ந்தறுமே. (௩)

நகுவான்மதியோடரவும்புனலுந்
தகுவார்சடையின்முடியாய்த்தலைவா
நகுவார்தொழுநாகேச்சரநகருட்
பகவாவெனவல்வினைபற்றறுமே. (௪)

கலைமான்மறியுங்கனலும்மழுவும்
நிலையாகியகையினனேநிகழும்
நலமாகியநாகேச்சரநகருட்
டலைவாவெனவல்வினைதானறுமே (௫)

குரையார்கழலாடநடங்குலவி
வரையான்மகள்காணமகிழ்ந்தவனே
நரையார்விடையேறுநாகேச்சரத்தே
மரைசேயெனநீங்குமருந்துயரே. (௬)

முடையார்தருவெண்டலைகொண்டுலகிற்
கடையார்பலிகொண்டுடல்காரணனே
நடையார்தருநாகேச்சரநகருட்
சடையாவெனவல்வினைதானறுமே. (௭)

ஓயாதவரக்கனொடிந்தலற
நீயாரருள்செய்துநிகழ்ந்தவனே
வாயாரவழுத்துவர்நாகேச்சரத்
தாயேயெனவல்வினைதானறுமே. (௮)

நெடியானொடுநான்முகனேடலுறச்
சுடுமாலெரியாய்நிமிர்சோதியனே
நடுமாவயனாகேச்சரநகரே
யிடமாவுறைவாயெனவின்புறுமே. (௯)

மலம்பாவியகையொடுமண்டையதுண்
கலம்பாவியர்கட்டுரைவிட்டுலகி
னலம்பாவியநாகேச்சரநகருட்
சிலம்பாவெனத்தீவினைதேய்ந்தறுமே. (௧௰)

கலமார்கடல்சூழ்தருகாழியர்கோன்
றலமார்தருசெந்தமிழின்விரக
னலமார்தருநாகேச்சரத்தானைச்
சொலன்மாலைகள்சொல்லநில்லாவினையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - செண்பகாரணியேசுவரர், தேவியார் - குன்றமுலைநாயகியம்மை.

## திருப்புகலி - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

கலியாழ்கடலோங்குபாருளீர்
கலியாவினையல்லல்போயறுமிக்
கலியார்புரமெய்தவனுறைபு
கலியாநகர்போற்றிவாழ்மினே. (க)

பண்ணியாள்வதோரேற்றர்பான்மதிக
கண்ணியாரகமழ்கொன்றைசேர்முடிப்
புண்ணியன்னுறையும்புகலியை
நண்ணுமின்னலமானவேண்டிலே. (உ)

வீசுமின்புரைகாதன்மேதகு
பாசவல்வினைதீர்த்தபண்பினன்
பூசுநீற்றினன்பூமபுகலியைப்
பேசுமின்பெரிதின்பமாகவே. (ங)

கடிகொள்கூவிளமத்தம்வைத்தவன்
படிகொள்பாரிடம்பேசும்பான்மையன்
பொடிகொண்மேனியன்பூம்புகலியுள்
ளடிகளையடைந்தன்புசெய்யுமே. (ச)

பாதத்தாரொலிபல்சிலம்பினோ
ஞேதத்தார்விடமுண்டவன்படை
பூதத்தான்புகலிந்நகர்தொழ
வேதத்தாக்கிடமில்லையெனபரே. (ரு)

மறையினானொலிமல்குவீணைய
னிறையினார்முபுன்சடையனெம்
பொறையினானுறையும்புகலியை
நிறையினாற்றொழநேசமாகுமே. (சா)

கரவிடைமநத்தாரைக்காண்கிலா
னிரவிடைப்பலிகொள்ளுமெமமிறை
பொருவிடையுயர்த்தானபுகலியைப்
பரவிடப்பயில்பாவம்பாறுமே. (எ)

அருப்பினார்முலைமங்கைபங்கினன
விருப்பினனரக்கன்னரஞ்செகும
பொருப்பினன்பொழிலார்புகலியூ
ரிருப்பினனடியேத்திவாழ்த்துமே. (அ)

மாலுநான்முகன்றானும்வார்கழற்
சீலமும்முடிதேடநீண்டெரி
போலுமேனியன்பூம்புகலியுட்
பாலதாடியபண்பனல்லனே. (கூ)

நின்றதுய்ப்பவர்சீசர்தேரர்சொல்
லொன்றதாகவையாவுணர்வினு
ணின்றவன்னிகழும்புகலியைச்
சென்றுகைதொழச்செல்வமாகுமே. (க0)

புல்லமேறிதன்பூம்புகலியை
நல்லஞானசம்பந்தனுவினற்
சொல்லுமாலையீரைந்துமவல்லவர்க்
கில்லையாம்வினையிருநிலத்துளே. (கக)

திருச்சிற்றம்பலம்

## திருநெல்வாயில் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

புடையினார்புள்ளிகால்பொருந்திய, மடையினார்மணிநீர்நெல்வாயிலார்
நடையினல்விரற்கோவணங்நயந், துடையினாரெமதுச்சியாரே. (க)

வாங்கினார்மதின்மேற்கணைவெள்ளந்,தாங்கினார்தலையாய்தனமையர்
நீங்குநீர்நெல்வாயிலார்தொழ, வோங்கினாரெமதுச்சியாரே. (உ)

நிச்சலேத்துநெல்வாயிலார்தொழ, விச்சையாலுறைவாரெமீசனார்
கச்சையாவதோர்பாம்பினார்கவி, னிச்சையாரெமதுச்சியாரே (ங)

மறையினாமழுவாளினார்மல்கு, பிறையினார்பிறையோடிலங்கிய
நிறையினார்நெல்வாயிலார்தொழு, மிறைவனாரெமதுச்சியாரே. (ச)

விருத்தனாகிவெண்ணீறுபூசிய, கருத்தனார்கனலாட்டுகந்தவர்
திருத்தனார்நெல்வாயின்மேவிய, வொருத்தனாரெமதுச்சியாரே. (ரு)

காரினார்கொன்றைக்கணியார்மல்கு, பேரினார்பிறையோடிலங்கிய
நீரினார்நெல்வாயிலார்தொழு, மேரினாரெமதுச்சியாரே. (சா)

ஆதியாரந்தமாயினார்வினை, கோதியார்மதில்கூட்டழித்தவர்
நீதியார்நெல்வாயிலார்மறை, யோதியாரெமதுச்சியாரே. (எ)

பற்றினானரக்கன்கயிலையை, யொற்றினாரொருகால்விரலுற
நெற்றியார்நெல்வாயிலார்தொழும், பெற்றியாரெமதுச்சியாரே. (அ)

நாடினார்மணிவண்ணனான்முகன், கூடினார்குறுகாதகொள்கையா
நீடினாநெல்வாயிலார்தலை, யோடினாரெமதுச்சியாரே. (கூ)

குண்டமண்டுவர்க்கூறைமூடர்சொற், பண்டமாகவையாதபண்பினர்
விண்டயங்குநெல்வாயிலாநஞ்சை, யுண்டகண்டரெம்முச்சியாரே. (க0)

நெண்பயங்குநெல்வாயிலீசனைச், சண்பைஞானசம்பந்தன்சொல்லிவை
பண்பயனகொளப்பாடவல்லவா, விண்பயன்கொளும்வேட்கையாளரே. ()

திருச்சிற்றம்பலம்.

## திருஇந்திரநீலபருப்பதம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

குலவுபாரிடம்போற்றவீற்றிருந், திலகுமான்மழுவேந்துமங்கையர்
நிலவுமிந்திரநீலபர்ப்பதத், துலவினானடியுள்கநல்குமே. (௧)

குறைவிலார்மதிசூடியாடல்வண், டறையுமாமலர்க்கொன்றைசென்னிசே
ரிறைவனிந்திரநீலபர்ப்பதத், துறைவினான்றனையோதியும்மினே. (௨)

என்பொனென்மணியென்னவேத்துவார், நம்பனான்மறைபாடுநாவின
னின்பனிந்திரநீலபர்ப்பதத், தன்பன்பாதமேயடைந்துவாழ்மினே. (௩)

நாசமாம்வினைநன்மைதான்வருந், தேசமார்புகழாயசெம்மையெம்
மீசனிந்திரநீலபர்ப்பதங், கூசிவாழ்த்துதுங்குணமதாகவே (௪)

மருவுமான்மடமாதொர்பாகமாய்ப், பரவுவார்வினைதீர்த்தபண்பின
னிரவனிந்திரநீலபர்ப்பதத், தருவிசூடுமடிகள்வண்ணமே. (௫)

வெண்ணிலாமதிசூடுமேவேணிய, னெண்ணிலார்மதிலெய்தவில்லின
னண்ணலிந்திரநீலபர்ப்பதத், துண்ணிலாவுமொருவனல்லனே. (௬)

கொடியவேற்றினர்கூற்றுதைத்தவர், கொடிகொண்மேனியிற்பூண்டபாம்பின
ரடிகளிந்திரநீலபர்ப்பத, முடையவாணனுகந்தகொள்கையே (௭)

எடுத்தவல்லரக்கன்கரம்புய, மடர்த்ததோர்விரலாளவனையாட்
படுத்தனிந்திரநீலபர்ப்பத, முடித்தலம்முறமுயலுமின்பமே. (௮)

பூவினானொடுமாலும்போற்றுறுந், தேவனிந்திரநீலபர்ப்பதம்
பாவியாவெழுவாரைத்தம்வினை, கோவியாவருங்கொல்லுங்கூற்றமே. (௯)

கட்டர்குண்டமண்டேரார்சீரிலர், விட்டரிந்திரநீலபர்ப்பத
மெட்டனைநினையாததென்கொலோ, சிட்டதாயுறையாதிசீர்களே. (௧௦)

கந்தமார்பொழில்சூழ்ந்தகாழியா, னிந்திரன்றொழுநீலபர்ப்பதத்
தந்தமில்லியையேத்துஞானசம், பந்தனபாடல்கொண்டோதிவாழ்மினே. ()

திருச்சிற்றம்பலம்

வடக்கிலுள்ளது.

சுவாமிபெயா - நீலாசலநாதர், தேவியாா - நீலாம்பிகை.

---

## திருக்கருவூர்த்திருஆனிலை - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

தொண்டெலாமலர்தூவியேத்தநஞ், சுண்டலாருயிராயதன்மையர்
கண்டனார்கருவூருளானிலை, யண்டனாருளீயுமன்பரே. (௧)

நீதியார்நினைந்தாயநான்மறை, யோதியாரொடுங்கூடிலார்குழைக்
காதினார்கருவூருளானிலை, யாதியாரடியார்தமன்பரே. (௨)

விண்ணுலாமதிசூடிவேதமே, பண்ணுளார்பரமாயபண்பினர்
கண்ணுளார்கருவூருளானிலை, யண்ணலாரடியார்க்குநல்லரே. (௩)

முடியர்மும்மதயானையீருரி, பொடியார்பூங்கணைவேளைச்செற்றவர்
கடியளார்கருவூருளானிலை, யடிகள்யாவையுமாயவீசரே. (ச)

பங்கயம்மலர்ப்பாதர்பாதியோர், மங்கையர்மணிநீலகண்டரான்
கங்கையர்கருவூருளானிலை, யங்கையோடரவத்தெமண்ணலே. (ரு)

தேவர்திங்களும்பாம்புஞ்சென்னியின், மேவர்மும்மதிலெய்தவேட்கையர்
காவலர்கருவூருளானிலை, மூவராகியமொய்ம்பரல்லரே. (சு)

பண்ணினார்படியேற்றர்நீற்றர்மெய்ப், பெண்ணினார்பிறைதாங்குநெற்றியார்
கண்ணினார்கருவூருளானிலை, நண்ணினாரமையாளுநாதரே (எ)

கடுத்தவாளரக்கன்கயிலையை, யெடுத்தவன்றலைதோளுந்தாளினு
லடர்த்தவன்கருவூருளானிலை, கொடுத்தவனருள்கூத்தனல்லனே. (அ)

உழுதுமாநிலத்தேனமாகிமா, லொழுதுமாமலரோனுங்காண்கிலார்
கழுதினான்கருவூருளானிலை, முழுதுமாகியமூர்த்திபாதமே. (கூ)

புத்தர்புன்சமணாதர்பொய்யுரைப், பித்தர்பேசியபேச்சைவிட்டுமெய்ப்
பத்தர்சேர்கருவூருளானிலை, யத்தர்பாதமடைந்துவாழ்மினே. (க0)

கந்தமாபொழிற்காழிஞானசம், பந்தன்சேர்கருவூருளானிலை
யெந்தையைச்சொன்னபத்தும்வல்லவா, சிந்தையிற்றுயராயதீர்வரே. (கக)

திருச்சிற்றம்பலம்

கொங்குநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-பசுபதீசுவரர், தேவியார்-கிருபாநாயகியம்மை.

ஆ. பதிகம் - உஅ

## திருப்புகலி - திருவிராகம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

முன்னியகலைப்பொருளுமுவலகில்வாழ்வும
பின்னியவொருத்தர்பழவூர்வினவினாலந்
துன்னியிமையோர்கடுதிசெய்துமுன்வணங்குஞ்
சென்னியர்விருப்புறுதிருப்புகலியாமே. (க)

வண்டிரைமதிச்சடைமிலைத்தபுனல்சூடிப்
பண்டெரிகையாடுபரமனபதியதென்பர்
புண்டரிகவாசமதுவீசுமலர்ச்சோலைத்
தெண்டிரைகடற்பொலிதிருப்புகலியாமே. (உ)

பாவணவுசிந்தையவர்பத்தரொடுகூடி
நாவணவுமந்தணன்விருப்பிடமதென்பர்
பூவணவுசோலையிருண்மாலையெதிர்கூரத்
தேவணர்விழாவளர்திருப்புகலியாமே. (ங)

மைதவழுமாமிடறன்மாநடமதாடிக்
கைவளையினாளொடுகலந்தபதியென்பர்

செய்பணிபெருக்கெழுமுருத்திரர்களகூடித்
தெய்வமதிணக்குறுதிருப்புகலியாமே. (௪)

முன்னமிருமூன்றுசமயங்களவையாகிப்
பின்னையருள்செய்தபிறையாளனுறைகோயில்
புன்னையமலர்ப்பொழில்களக்கினொளிகாட்டச்
செந்நெல்வயலார்தருதிருப்புகலியாமே. (௫)

வங்கமலியுங்கடல்விடத்தினைநுகர்ந்த
வங்கணனருத்திசெய்திருக்குமிடமென்பர்
கொங்கணவியன்பொழிலின்மாசுபனிமூசத்
தெங்கணவுதேனமலிதிருப்புகலியாமே. (௬)

நலங்குரவுமின்பமுநலங்களவையாகி
வலவினைகளூர்த்தருளுமைந்தனிடமென்பர்
மலருமடியார்களடியாரவிசைபாடிச்
செல்வமறையோருறைதிருப்புகலியாமே. (௭)

பரப்புறுபுகழ்ப்பெருமையாளனவரைதன்னா
லரக்கனையடர்த்தருளுமண்ணலிடமென்பர்
நெருக்குறுகடற்றிரைகண்முத்தமணிசிந்தச்
செருக்குறுபொழிற்பொலிதிருப்புகலியாமே. (௮)

கோடலொடுகூனமதிகுலாயசடைதன்மே
லாடரவம்வைத்தருளுமப்பனிருவர்க்கு
நேடவெரியாகியிருபாலுமடிபேணித்
தேடவுறையுந்நகர்திருப்புகலியாமே (௯)

கற்றமணருற்றுலவுதேரருரைசெய்த
குற்றமொழிகொள்கையதிலாதபெருமானூர்
பொற்றொடிமடந்தையருமைந்தர்புலனைந்துஞ்
செற்றவனப்புறுதிருப்புகலியாமே. (௧௦)

செந்தமிழ்பரப்புறுதிருப்புகலிதன்மே
லந்தமுதலாகிநடுவாயபெருமானைப்
பந்தனுரைசெய்தமிழ்கள்பத்துமிசைகூர
வந்தவணமேத்துமவர்வானமுடையாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருப்புறம்பயம் - திருவிராகம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

மறம்பயமலைந்தவர்மதிற்பரிசறுத்தனை
நிறம்பசுமைசெம்மையொடிசைந்துனதுநீர்மை
திறம்பயனுறும்பொருடெரிந்துணருநால்வர்க்
கறம்பயனுரைத்தனைபுறம்பயமமர்ந்தோய். (௧)

விரித்தனைதிருச்சடையரித்தொழுகுவெள்ளந்
தரித்தனையதன்றியுமிகப்பெரியகாலன்
னெருத்திறவுதைத்தனையிலங்கிழையோர்பாகம
பொருத்துதல்கருத்தினைபுறம்பயமமர்ந்தோய் (௨)

விரிந்தனைகுவிந்தனைவிழுங்குயிருமிழ்ந்தனை
திரிந்தனைகுருந்தொசிபெருந்தகையுநீயும்
பிரிந்தனைபுணர்ந்தனைபிணம்புகுமயானம
புரிந்தனைமகிழ்ந்தனைபுறம்பயமமர்ந்தோய். (௩)

வளங்கெழுகடும்புனலொடுஞ்சடையொடுங்கத்
துளங்கமரிளம்பிறைசுமந்ததுவிளங்க
வுளங்கொளவளைந்தவர்சுடுஞ்சுடலைநீறு
புளங்கொளவிளங்கினைபுறம்பயமமர்ந்தோய் (௪)

பெரும்பிணிபிறப்பினொடிறப்பிலையோர்பாகங்
கரும்பொடுபடுஞ்சொலினமடந்தையைமகிழ்ந்தோய்
சுரும்புணவரும்பவிழ்திருந்தியெழுகொன்றை
விரும்பினைபுறம்பயமமர்ந்தவிறையோனே. (௫)

அனற்படுதடக்கையவரெத்தொழிலரேனு
நினைப்புடைமனத்தவர்வினைப்பகையுநீயே
தனற்படுசுடர்ச்சடைதனிப்பிறையொடொன்ற
புனற்படுகிடக்கையைபுறம்பயமமர்ந்தோய் (௬)

மறந்துறைமறந்தவர்தவந்தடியருள்ளம்
மறத்துறையொறுத்துனதருட்கிழமைபெற்றோர்
திறத்துளதிறத்தினைமதித்தகலநின்றும
புறத்துளதிறத்தினைபுறம்பயமமர்ந்தோய் (௭)

இலங்கையரிறைஞ்சிறைவிலங்கலின்முழங்க
வுலங்கெழுதடக்கைகளடர்த்திடலுமஞ்சி
வலங்கொளவெழுந்தவனலங்கவினவஞ்சு
புலன்களைவிலங்கினைபுறம்பயமமர்ந்தோய். (௮)

வடங்கெடநுடங்குணவிடந்தவிடையல்லிக
கிடந்தவனிருந்தவனளந்துணரலாகா
தொடர்ந்தவருடம்பொடுநிமிர்ந்துடனவணங்கப
புடங்கருள்செய்தொன்றினைபுறம்பயமமர்ந்தோய். (௯)

விடக்கொருவர்நன்றெனவிடக்கொருவர்தீதென
வுடற்குடைகளைந்தவருடம்பினைமறைக்கும்
படக்கர்கள்பிடக்குரைபடுத்துமையோர்பாக
மடக்கினைபுறம்பயமமர்ந்தவுரவோனே. (௧௦)

கருங்கழிபொருந்திரைகரைக்குலவுமுத்தக்
தருங்கழுமலத்திறைதமிழ்க்கிழமைஞானன்

சுரும்பவிழ்புறமமயமமர்ந்தகமிழ்வல்லார்
பெரும்பிணிமருவகறவொருங்குவர்பிறப்பே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-சாக்ஷிவரதநாதா, தேவியார் - கரும்பன்னசொல்லம்மை.

## திருக்கருப்பறியலூர் - திருவிராகம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

சுற்றமொடுபற்றவைதுயக்கறவறுத்துக்
குற்றமில்குணங்களொடுகூடுமடியார்கண
மற்றவரைவானவர்தமவானுலகமேற்றக்
கற்றவனிருப்பதுகருப்பறியலூரே. (க)

வண்டணைசெய்கொன்றையதுவார்சடைகண்மேலே
கொண்டணைசெய்கோலமதுகோளரவினோடும்
விண்டணைசெய்மும்மதிலும்வீழ்ந்தரவோரம்பாற்
கண்டவனிருப்பதுகருப்பறியலூரே. (உ)

வேதமொடுவேதியர்கள்வேள்விமுதலாகப்
போதினொடுபோதுமலர்கொண்டுபுனைகின்ற
நாதனெனநள்ளிருண்முன்னாடுகுழைதாழுங்
காதவனிருப்பதுகருப்பறியலூரே. (௩)

மடம்படுமலைக்கிறைவன்மங்கையொருபங்கன்
னுடம்பினைவிடக்கருதிநின்றமறையோனைத்
தொடர்ந்தணவுகாலனுயிர்காலவொருகாலாற்
கடந்தவனிருப்பதுகருப்பறியலூரே. (௪)

ஒருத்தியுமையோடுமொருபாகமதுவாய
நிருத்தனவனீதியவனித்தனெறியாய
விருத்தனவன்வேதமெனவங்கமவையோதுங்
கருத்தவனிருப்பதுகருப்பறியலூரே. (ரு)

விண்ணவர்கள்வெற்பரசுபெற்றமகண்மெய்த்தேன்
பண்ணமருமென்மொழியினாளையணைவிப்பா
னெண்ணிவருகாமனுடல்வேவவெரிகாலுங்
கண்ணவனிருப்பதுகருப்பறியலூரே. (சா)

ஆதியடியைப்பணியவப்பொடுமலர்ச்சேர்
சோதியொளிநற்புகைவளர்க்குவடுபுக்குத்
தீதுசெயவந்தணையுமந்தகனரங்கக்
காதினனிருப்பதுகருப்பறியலூரே. (எ)

வாய்ந்தபுகழ்விண்ணவருமண்ணவருமஞ்சப்
பாய்ந்தமர்செயுந்தொழிலிலங்கைநகர்வேந்தற்

கேய்ந்தபுயமத்தனேயுமிற்றுவிழமேனுட்
காய்ந்தவனிருப்பதுகருப்பறியலூரே. (அ)

பரந்ததுநிரந்துவருபாய்திரையகங்கை
கரந்தொர்சடைமேன்மிசையுகந்தவளேவைத்து
நிரந்தரநிரந்திருவர்நேடியறியாமற்
கரந்தவனிருப்பதுகருப்பறியலூரே. (கூ)

அற்றமறையாவமணராதமிலிபுத்தர்
சொற்றமறியாதவர்கள்சொன்னசொலைவிட்டுக்
குற்றமறியாதபெருமான்கொகுடிக்கோயிற்
கற்றெனவிருப்பதுகருப்பறியலூரே. (க0)

நலந்தருபுனற்புகலிஞானசம்பந்தன்
கலந்தவர்கருப்பறியன்மேயகடவுள்ளேய்
பலந்தருதமிழ்க்கிளவிபத்துமிவைகற்று
வலந்தருமவர்க்குவினைவாடலெளிதாமே (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - குற்றம்பொறுத்தநாதர், தேவியார்-கோல்வளையம்மை.

## திருவையாறு - திருவிராகம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

திருத்திகழ்மலைச்சிறுமியோடுமிகுதேச
ருருத்திகழெழிற்கயிலைவெற்பிலுறைதற்கே
விருப்புடையவற்புதரிருக்குமிடமேரார்
மருத்திகழ்பொழிற்குலவுவண்டிருவையாறே. (க)

கந்தமரவுந்துபுகையுந்தவில்விளக்கே
ரிந்திரனுணர்ந்துபணியெந்தையிடமெங்குஞ்
சந்தமலியுந்தருமிடைந்தபொழில்சாரா
வந்தவனிலேந்தணவுவண்டிருவையாறே. (உ)

கட்டும்வடமெட்டுமுறுவட்டமுழவத்திற்
கொட்டுகரமிட்டவொலிதட்டும்வகைநந்திக்
கிட்டமிகநட்டமவையிட்டவரிடஞ்சீர்த்
வட்டமதிலுட்டிகழும்வண்டிருவையாறே. (ஙு)

நண்ணியோர்வடத்தினிழலுல்வர்முனிவர்க்கன்
றெண்ணிலிமறைப்பொருள்விரித்தவரிடஞ்சீர்த்
தண்ணின்மலிசந்தகிலொடுந்திவருபொன்னி
மண்ணின்மிசைவந்தணவுவண்டிருவையாறே. (ச)

வென்றிமிகுதாருகனதாருயிர்மடங்கக்
கன்றிவருகோபமிகுகாளிகதமோவ

நின்றுநடமாடியிடநீடுமலர்மேலான்
மன்றனமலியும்பொழில்கொள்வண்டிருவையாறே. (௫)

பூதமொடுபேய்கள்பலபாடநடமாடிப்
பாதமுதல்பையரவுகொண்டணிபெறுத்திக்
கோதையரிடும்பலிகொளும்பரனிடம்பூ
மாதவிமணங்கமழும்வண்டிருவையாறே. (௬)

துன்னுகுழன்மங்கையுமைநங்கைசுளிவெய்தப்
பின்னொருதவஞ்செய்துழல்பிஞ்ஞகனுமங்கே
யென்னசதியென்றுரைசெய்ங்கணனிடஞ்சீர்
மன்னுகொடையாளர்பயில்வண்டிருவையாறே. (௭)

இரக்கமில்குணத்தொடுலகெங்குநலிவெம்போ
ரரக்கனமுடிபத்தலைபுயத்தொடுமடங்கத்
துரக்கவிரலிற்சிறிதுவைத்தவரிடஞ்சீர்
வரக்கருணையாளர்பயில்வண்டிருவையாறே (௮)

பருத்துருவதாகிவிண்ணடைந்தவனொர்பன்றிப்
பெருத்துருவதாயுலகிடந்தவனுமென்றுங்
கருத்துருவொணாவகைதிகழ்ந்தவனிடங்கார்
வருத்துவகைதீர்கொள்பொழில்வண்டிருவையாறே. (௯)

பாக்கியமதொன்றுமில்சமண்பதகர்புத்தர்
சாக்கியர்களென்றுடல்பொதிந்துதிரிவார்தா
நோக்கரியதத்துவனிடம்படியின்மேலான்
மாக்கமுறநீடுபொழில்வண்டிருவையாறே. (௧0)

வாசமலியும்பொழில்கொள்வண்டிருவையாற்று
ளீசனையெழிற்புகலிமன்னவனமெய்ஞ்ஞானப்
பூசுரனுரைத்ததமிழ்ப்பத்துமிவைவல்லார்
நேசமலிபத்தரவர்நின்மலனடிக்கே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

## திருநள்ளாறு - திருவிராகம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

ஏடுமலிகொன்றையரவிந்துவிளவன்னி
மாடவலசெஞ்சடையெமைந்தனிடமென்பா
கோடுமலிஞாழல்குரவேறுசுரபுன்னை
நாடுமலிவாசமதுவீசியநள்ளாறே. (௧)

விண்ணியல்பிறைப்பிளவறைப்புனன்முடித்த
புண்ணியனிருக்குமிடமென்பர்புவிதன்மேற்
பண்ணியநடத்தொடிசைபாடுமடியார்க
ணண்ணியமனத்தின்வழிபாடுசெய்நள்ளாறே. (௨)

விளங்கிழைமடந்தைமலைமங்கையொருபாகத்
துளங்கொளவிருத்தியவொருத்தனிடமென்பர்
வளங்கெழுவுதீபமொடுதூபமலர்தூவி
நளன்கெழுவிநாளும்வழிபாடுசெய்நள்ளாறே. (௩)

கொக்கரவர்கூன்மதியர்கோபர்திருமேனிச்
செக்கரவர்சேருமிடமென்பர்தடமூழ்கிப்
புக்கரவவிஞ்சையருமவிண்ணவருநண்ணி
நக்கரவாநாமவினைவெய்தியநள்ளாறே. (௪)

நெஞ்சமிதுகண்டுகொளுனக்கெனநினைந்தார்
வஞ்சமதறுத்தருளுமற்றவனைவானோ
ரஞ்சமுதுகாகியவர்கைதொழவெழுந்த
நஞ்சமுதுசெய்தவனிருப்பிடநள்ளாறே (௫)

பாலனடிபேணவவனாருயிர்குறைக்குங்
காலனுடன்மாளமுனுதைத்தவரனூராங்
கோலமலர்நீர்க்குடமெடுத்துமறையாளர்
நாலின்வழிநின்றுதொழில்பேணியநள்ளாறே. (௬)

நீதியர்நெடுந்தகையர்நீண்மலையர்பாவை
பாதியர்பராபரர்பரம்பரரிருக்கை
வேதியர்கள்வேள்வியொழியாதுமறைநாளு
மோதியரனுமமுமுணர்த்திடுநள்ளாறே (௭)

தடுத்துவலரக்கன்முனெருக்கிவரைதன்னை
யெடுத்தவனமுடித்தலைகள்பத்துமிகுதோளு
மடர்த்தவர்தமக்கிடமதென்பரளிபாட
நடத்தகலவைத்திரள்கள்வைகியநள்ளாறே. (௮)

உயர்ந்தவனுருக்கொடுதிரிந்துலகமெல்லாம்
பயந்தவனினைப்பரியபண்பனிடமென்பர்
வியந்தமராமெச்சமலர்மல்குபொழிலெங்கு
நயந்தருமவேதவொலியாதிருநள்ளாறே. (௯)

சிந்தைதிருகற்சமணர்தேரர்தவமென்னும
பந்தனையறுத்தருளுகின்றபரமனூர்
மந்தமுழவந்தருவிழாவொலியுமவேதச்
சந்தம்விரவிப்பொழின்முழங்கியநள்ளாறே (௰)

ஆடலரவார்சடையனாயிழைதனோடுந்
நாடுமலிவெய்திடவிருந்தவனள்ளாற்றை
மாடமலிகாழிவளர்பந்தனதுசெஞ்சொற
பாடலுடையாரையடையாபழிகணோயே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

ஆ பதிகம் - ௩௩.

## திருப்பழுவூர் - திருவிராகம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

முத்தன்மிகுமூவிலைநல்வேலன்விரிநூல
னத்தனெமையாளுடையவண்ணலிடமென்பர்
மைத்தழைபெரும்பொழிலின்வாசமதுவீசப
பத்தரொடுசித்தர்பயில்கின்றபழுவூரே. (௧)

கோடலொடுகோங்கவைகுலாவுமுடிதன்மே
லாடரவமவைத்தபெருமானதிடமென்பர்
மாடமலிசூளிகையிலேறிமடவார்கள்
பாடலொலிசெய்யமலிகின்றபழுவூரே (௨)

வாலியபுரத்திலவர்வேவவிழிசெய்த
போலியவொருத்தர்புரிநூலரிடமென்பர்
வேலியின்விரைக்கமலமன்னமுகமாதர்
பாலெனமிழற்றிநடமாடுபழுவூரே. (௩)

எண்ணுமொரெழுத்துமிசையின்கிளவிதேர்வார்
கண்ணுமுதலாயகடவுட்கிடமதென்பர்
மண்ணின்மிசையாடிமலையாளர்தொழுதேத்திப
பண்ணினொலிகொண்டுபயில்கின்றபழுவூரே. (௪)

சாதல்புரிவார்சுடலைதன்னினடமாடு
நாதனமையாளுடையநம்பனிடமென்பர்
வேதமொழிசொல்லிமறையாளரிறைவன்றன்
பாதமவையேத்தநிகழ்கின்றபழுவூரே. (௫)

மேவயருமும்மதிலும்வெந்தழல்விளைத்து
மாவயரவன்றுரிசெய்மைந்தனிடமென்பர்
பூவையைமடந்தையர்கள்கொண்டுபுகழ்சொல்லிப
பாவையர்கள்கற்பொடுபொலிந்தபழுவூரே. (௬)

மந்தணமிருந்துபுரிமாமடிதன்வேள்வி
சிந்தவிளையாடுசிவலோகனிடமென்ப
ரந்தணர்களாகுதியிலிட்டவகின்மட்டார
பைந்தொடிநன்மாதர்சுவடொற்றுபழுவூரே. (௭)

உரக்கடல்விடத்தினைமிடற்றிலுறவைத்தன்
றரக்கனையடர்த்தருளுமப்பனிடமென்பர்
குரக்கினம்விரைப்பொழிலின்மீதுகனியுண்டு
பரக்குறுபுனற்செய்விளையாடுபழுவூரே. (௮)

நின்றநெடுமாலுமொருநான்முகனுநேட
வன்றுதழலாய்நிமிருமாதியிடமென்ப
ரொன்றுமிருமூன்றுமொருநாலுமுணர்வார்கள்
மன்றினிலிருந்துடன்மகிழ்ந்தபழுவூரே. (௯)

மொட்டையமணாதர்துகின்மூடுவிரிதேரர்
முட்டைகண்மொழிந்தமுனிவான்றனிடமென்பர்
மட்டைமலிதாழையிளநீர்திசைபூகம்
பட்டையொடுதாறுவிரிகின்றபழுவூரே. (௧௦)

அந்தணர்களானமலையாளரவரேத்தும்
பந்தமலிகின்றபழுவூரரனையாரச்
சந்தமிகுஞானசம்பந்தனுரைபேணி
வந்தவணமேத்துமவர்வானமுடையாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - வடவனநாதர், தேவியார் - அருந்தவநாயகியம்மை

## திருக்குரங்காடுதுறை - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

பரவக்கெடும்வல்வினைபாரிடஞ்சூழ
விரவிற்புறங்காட்டிடைநின்றெரியாடி
யரவச்சடையந்தணன்மேயவழகார்
குரவப்பொழில்சூழ்குரங்காடுதுறையே. (௧)

விண்டார்புரமூன்றுமெரித்தவிமல
னிண்டார்புறங்காட்டிடைநின்றெரியாடி
வண்டார்கருமென்குழன்மங்கையோர்பாகங்
கொண்டானகர்போல்குரங்காடுதுறையே (௨)

நிறைவில்புறங்காட்டிடைநேரிழையோடு
மிறைவில்லெரியான்மழுவேந்திநின்றாடி
மறையின்னொலிவானவர்தானவரேத்துங்
குறைவில்லவனூர்குரங்காடுதுறையே. (௩)

விழிக்குந்நுதன்மேலொருவெண்பிறைசூடித்
தெழிக்கும்புறங்காட்டிடைச்சேர்ந்தெரியாடிப்
பழிக்கும்பரிசேபலிதேர்ந்தவனூர்பொன்
கொழிக்கும்புனல்சூழ்குரங்காடுதுறையே (௪)

நீறார்தருமேனியனெற்றியோர்கண்ண
னேறார்கொடியெம்மிறையீண்டெரியாடி
யாறார்சடையந்தணனாயிழையாளோர்
கூறானகர்போல்குரங்காடுதுறையே. (௫)

நளிரும்மலர்க்கொன்றையுநாறுகரந்தைத்
துளிருஞ்சுலவிச்சுடுகாட்டெரியாடி
மிளிரும்மரவார்த்தவன்மேவியகோயில்
குளிரும்புனல்சூழ்குரங்காடுதுறையே. (௬)

பழகுமவினைதீர்ப்பவன்பார்ப்பதியோடும்
முழவங்குழன்மொந்தைமுழங்கெரியாடும
மழகனையினமூவிலைவேல்வலனேந்துங்
குழகன்னகர்போல்குரங்காடுதுறையே. (௭)

வரையார்த்தெடுத்தவரக்கன்வலியொல்க
நிரையார்விரலானெரித்திட்டவனூராங்
கரையார்ந்திழிகாவிரிகோலக்கரைமேற்
குரையார்பொழில்சூழ்குரங்காடுதுறையே. (௮)

நெடியானொடுநான்முகனுந்நினைவொண்ணாப்
படியாகியபண்டங்களின்றெரியாடி
செடியார்தலையேந்தியசெங்கண்வெள்ளேற்றின
கொடியானகர்போல்குரங்காடுதுறையே. (௯)

துவராடையர்வேடமலாச்சமண்கையர்
கவர்வாய்மொழிகாதல்செய்யாதவனூரா
நவையாரமணிபொன்னகிலசந்தனமுந்திக்
குவையார்கரைசேர்குரங்காடுதுறையே. (௧௦)

நல்லார்பயில்காழியுண்ஞானசம்பந்தன்
கொல்லேறுடையான்குரங்காடுதுறைமேற்
சொல்லார்தமிழ்மாலைபத்துந்தொழுதேத்த
வல்லாரவர்வானவரோடுறைவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - குலைவணங்குநாதர், தேவியார் அழகுசடைமுடியம்மை.

---

## திருஇரும்பூளை - வினாவுரை - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

சீரார்கழலேதொழுவீரிதுசெப்பீர்
வாரார்முலைமங்கையொடும்முடனாகி
யேராரிரும்பூளையிடங்கொண்டவீசன
காரார்கடனஞ்சமுதுண்டகருத்தே. (௧)

தொழலார்கழலேதொழுதொண்டர்கள்சொல்லீர்
குழலார்மொழிக்கோல்வளையோடுடனாகி
யெழிலாரிரும்பூளையிடங்கொண்டவீசன
கழலான்கரிகானிடையாடுகருத்தே. (௨)

அன்பாலடிகைதொழுவீரறியீரே
மின்போன்மருங்குனமடவாளொடுமேவி
யின்பாயிரும்பூளையிடங்கொண்டவீசன
பொன்போற்சடையிற்புனல்வைத்தபொருளே. (௩)

நச்சித்தொழுவீர்கணமக்கிதுசொல்லீர்
கச்சிப்பொலிகாமக்கொடியுடன்கூடி
யிச்சித்திரும்பூளையிடங்கொண்டவீச
னுச்சித்தலையிற்பலிகொண்டுழலூணே. (ச)

சுற்றார்ந்தடியேதொழுவீரிதுசொல்லீர்
நற்றாழ்குழனங்கையொடும்முடனாகி
யெற்றேயிரும்பூளையிடங்கொண்டவீசன்
புற்றாடரவோடென்புபூண்டபொருளே. (ரு)

தோடார்மலர்தூய்த்தொழுதொண்டர்கள்சொல்லீர்
சேடார்குழற்சேயிழையோடுடனாகி
யீடாயிருமபூளையிடமகொண்டவீசன்
காடாகடுவேடுவனானகருத்தே. (சு-எ)

ஒருக்கும்மனத்தன்பருள்ளீரிதுசொல்லீர்
பருக்கைமதவேழமுரித்துமையோடு
மிருக்கையிரும்பூளையிடங்கொண்டவீச
னரக்கன்னுரந்தீர்த்தருளாக்கியவாறே. (அ)

துயராயினநீங்கித்தொழுந்தொண்டர்கள்சொல்லீர்
கயலாகருங்கண்ணியொடும்முடனாகி
யியல்பாயிரும்பூளையிடங்கொண்டவீசனை
முயல்வாரிருவர்க்கெரியாகியமெய்யமே. (சு)

துணைநன்மலர்தூய்த்தொழுந்தொண்டர்கள்சொல்லீர்
பணைமென்முலைப்பார்ப்பதியோடுடனாகி
யிணையில்லிரும்பூளையிடங்கொண்டவீச
னணைவில்சமணசாக்கியமாக்கியவாறே. (கo)

எந்தையிரும்பூளையிடங்கொண்டவீசன்
சந்தம்பயிலசண்பையுண்ஞானசம்பந்தன்
செந்தண்டமிழ்செப்பியபத்திவைவல்லார
பந்தமமறுத்தோங்குவர்பான்மையினாலே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-காசியாரண்ணியேசுவரர், தேவியார் - ஏலவார்குழலம்மை.

---

திருமறைக்காடு - கதவடைக்கப்பாடியது - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

சதுரம்மறைதான்றுதிசெய்துவணங்கும்
மதுரம்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
விதுநன்கிறைவைத்தருள்செய்தவெனக்குன்
கதவந்திருக்காப்புக்கொள்ளுங்கருத்தாலே. (க)

சங்கந்தரளம்மவைதான்கரைக்கெற்றும்
வங்கக்கடல்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
பங்கையுமைபாகமுமாகவிதென்கொல்
கங்கைசடைமேலடைவித்தகருத்தே. (௨)

குரவங்குருக்கத்திகள்புன்னைகள்ஞாழன்
மருவும்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
சிரமும்மலருந்திகழ்செஞ்சடைதன்மே
லரவம்மதியோடடைவித்தலழகே. (௩)

படர்செம்பவளத்தொடுபன்மலர்முத்தம்
மடலம்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
வுடலம்முமைபங்கமதாகியுமென்கொல்
கடனஞ்சமுதாவதுவுண்டகருத்தே. (௪)

வானோர்மறைமாதவத்தோர்வழிபட்ட
தேனார்பொழில்சூழ்மறைக்காட்டுறைசெல்வா
வேனோர்தொழுதேத்தவிருந்தநீயென்கொல்
கானார்கடுவேடுவனானகருத்தே. (௫)

பலகாலங்கள்வேதங்கள்பாதங்கள்போற்றி
மலரால்வழிபாடுசெய்மாமறைக்காடா
வுலகேழுடையாய்கடைதோறுமுன்னென்கோ
றலைசேர்பலிகொண்டதிலுண்டதுதானே. (௬)

வேலாவலயத்தயலேமிளிர்வெய்துஞ்
சேலார்திருமாமறைக்காட்டுறைசெல்வா
மாலோடயனிந்திரனஞ்சமுனென்கொல்
காலாசிலைக்காமனைகாய்ந்தகருத்தே. (௭)

கலங்கொள்கடலோதமுலாவுகரைமேல்
வலங்கொள்பவர்வாழ்த்திசைக்கும்மறைக்காடா
விலங்கையுடையானடர்ப்பட்டிடவெய்த
வலங்கல்விரலூன்றியருள்செய்தவாறே. (௮)

கோனென்றுபல்கோடியுருத்திரர்போற்றுந்
தேனம்பொழில்சூழ்மறைக்காட்டுறைசெல்வா
வேனங்கழுகானவருன்னைமுனென்கொல்
வானந்தலைமண்டியுங்கண்டிலவாறே. (௯)

வேதம்பலவோமமவியந்தடிபோற்ற
வோதம்முலவும்மறைக்காட்டிலுறைவா
யேதிலசமண்சாக்கியர்வாக்கிலையென்கொ
லாதரொடுதாமலர்தூற்றியவாறே. (௧௦)

காழிநகரானகலைஞானசம்பந்தன்
வாழிம்மறைகாடனைவாய்ந்தறிவித்த
வேழின்னிசைமாலையீரைந்திவைவல்லார்
வாழிபுலகோர்தொழவானடைவாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருச்சாய்க்காடு - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

நித்தலுநியமஞ்செய்துநீர்மலர்தூவிச்
சித்தமொன்றவல்லார்க்கருளுஞ்சிவன்கோயில்
மத்தயானையின்கோடும்வெண்பீலியும்வாரித்
தத்துநீர்பொன்னிசாகரமேவுசாய்க்காடே. (க)

பண்டலைக்கொண்டுபூதங்கள்பாடநின்றாடும்
வெண்டலைக்கருங்காடுறைவேதியன்கோயில்
கொண்டலைத்திகழ்பேரிமுழங்கக்குலாவித்
தண்டலைத்தடமாமயிலாடுசாய்க்காடே. (உ)

நாறுகூவிளநாகிளவெண்மதியத்தோ
டாறுசூடுமமரர்பிரானுறைகோயி
லூறுதேங்கனிமாங்கனியோங்கியசோலைத்
தாறுதண்கதலிப்புதன்மேவுசாய்க்காடே. (ங)

வரங்கள்வண்புகழ்மன்னியவெந்தைமருவார்
புரங்கண்மூன்றுமபொடிபடவெய்தவன்கோயி
லிரங்கலோசையுமீட்டியசாத்தொடுமீண்டித்
தரங்கநீள்கழித்தண்கரைவைகுசாய்க்காடே. (ச)

ஏழைமாதர்கடைதோறுமிடுபலிக்கென்று
கூழைவாளரவாட்டும்பிரானுறைகோயில்
மாழையொண்கண்வளைக்கைநுளைச்சியர்வண்பூந்
தாழைவெண்மடற்கொய்துகொண்டாடுசாய்க்காடே. (ரு)

துங்கவானவர்சூழ்கடற்றாங்கடைபோதி
லங்கோர்நீழலளித்தவெம்மானுறைகோயில்
வங்கமங்கொளிரிப்பியுமுத்துமாமணியுஞ்
சங்கும்வாரித்தடங்கடலுந்துசாய்க்காடே. (சா)

வேதநாவினர்வெண்பளிங்கின்குழைக்காத
ரோதநஞ்சணிகண்டருகந்துறைகோயின்
மாதர்வண்டுதன்காதல்வண்டாடியபுன்னைத்
தாதுகண்டுபொழிலின்மறைந்தூடுசாய்க்காடே. (எ)

இருக்குநீள்வரைபற்றியடர்த்தன்றெடுத்த
வரக்கனைநெரித்தருள்செய்தவன்கோயின்

மருக்குலாவியமல்லிகைசெண்பகம்வண்பூந்
தருக்குலாவியதண்பொழினீடுசாய்க்காடே. (அ)

மாலினோடயன்காண்டற்கரியவர்வாய்ந்த
வேலையார்விடமுண்டவர்மேவியகோயில்
சேலினேர்விழியார்மயிலாலச்செருந்தி
காலையேகனகம்மலர்கின்றசாய்க்காடே. (௯)

ஊத்தைவாய்ச்சமண்கையர்கள்சாக்கியர்க்கென்று
மாத்தமாகவறிவரிதாயவன்கோயில்
வாய்த்தமாளிகைசூழ்தருவண்புகார்மாடே
பூத்தவாவிகள்சூழ்ந்துபொலிந்தசாய்க்காடே. (௧௦)

ஏனையோர்புகழ்ந்தேத்தியவெந்தைசாய்க்காட்டை
ஞானசம்பந்தனகாழியர்கோனவில்பத்து
மூனமின்றியுரைசெய்யவல்லவர்தாம்போய்
வானநாடினிதாள்வரிம்மாநிலத்தோரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர்-சாயாவனேசுவரர், தேவியார் - குயிலுநன்மொழியம்மை.
ஆ பதிகம் - ௬அ.

---

## திருக்ஷேத்திரக்கோவை - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

ஆரூர்தில்லையம்பலம்வல்லம்நல்லம்-வடகச்சியுமச்சிறுபாக்கநல்ல
கூரூர்குடவாயில்குடந்தைவெண்ணி-கடல்சூழ்கழிப்பாலைதென்கோடிபீடா
நீரூரவயனின்றியூர்குன்றியூருங் - குருகாவையூர்நாரையூர்நீடுகானப்
பேரூர்நன்னீள்வயனெய்த்தானமும் - பிதற்றுயபிறைசூடிதன்பேரிடமே ()

அண்ணாமலையீங்கோயுமத்திமுத்தா - றகலாமுதுகுன்றங்கொடுங்குன்றமும், கண்ணார்கழுக்குன்றங்கயிலைகோணம் - பயில்கற்குடிகாளத்திவாட்போக்கியும, பண்ணார்மொழிமங்கையோர்பங்குடையான் - பரக்குன்றம்பருப்பதம்பேணிநின்றே, யெண்ணாயிரவும்பகலுமிடும்பைக் - கடனீந்தலாங்காரணமே. (௨)

அட்டானமென்றோதியநாலிரண்டு-மழகனுறைகாவனைத்துந்துறைகளெட்டாந்திருமூர்த்தியின்காடொன்பதுங - குளமூன்றுங்களமஞ்சும்பாடிநான்கு, மட்டார்குழலாணமலைமங்கைபங்கன் - மதிக்குமிடமாகியபாழிமூன்றுஞ்,சிட்டானவன்பாசூரென்றேவிரும்பா-யரும்பாவங்களாயினதேய்ந்தறுமே.

அறப்பள்ளியகத்தியான்பள்ளிவெள்ளைப் - பொடிப்பூசிநீறணிவானமர்காட்டுப்பள்ளி, சிறபள்ளிசிராப்பள்ளிசெம்பொன்பள்ளி-திருநனிபள்ளிசீர்மயேந்திரத்துப், பிறப்பில்லவன்பள்ளிவெள்ளச்சடையான் - விரும்புமி

டைப்பள்ளிவண்சக்கரமா,லுறைப்பாலடிபோற்றக்கொடுத்தபள்ளி - யுணரா
ய்மடநெஞ்சமேயுன்னிநின்றே. (ச)

ஆறைவடமாகறலம்பரையா - றணியார்பெருவேளூர்விளமர்தெங்கூர்
சேறைதுலைபுகலூரகலாதிவை - காதலித்தானவன்சேர்பதியே. (ரு)

மனவஞ்சர்மற்றோட்முன்மாதராரு - மதிகூர்திருக்கூடலிலாலவாயு
மினவஞ்சொலிலாவிடைமாமருது - மிரும்பைப்பதிமாகாளம்வெற்றியூரும்
கனமஞ்சினமால்விடையான்விரும்புங் - கருகாவூர்நல்லூர்பெரும்புலியூர்
தனமென்சொலிற்றஞ்சமென்றேநினைமின்-றவமாமலமாயினதானறுமே ()

மாட்டேர்மடப்பாச்சிலாச்சிராமம - முண்டீச்சரம்வாதலூர்வாரணசி
காட்டேர்கடம்பூர்படம்பக்கங்கொட்டுங்-கடலொற்றியூர்மற்றுறையூரவையும்
கோட்டோர்திருவாமாத்தூர்கோழம்பமுங்-கொடுங்கோவலூர்திருக்குணவாயில்

குலாவுதிங்கட்சடையான்குளிரும்பருதிநியமம்
போற்றாரடியாரவழிபாடொழியாத்தென் - புறம்பயம்பூவணமபூழியூரும், கா
ற்றார்வரையன்றெடுத்தான்முடிதோ - ணெரித்தானுறைகோயிலென்றென்று
நீகருதே. (அ)

நெற்குன்றமோத்தூர்நிறைநீமருக - னெடுவாயில்குறுமபலாநீடுதிரு, ந
ற்குன்றம்வலம்புரநாகேச்சுர-நளிர்சோலையுஞ்சேனைமாகாளம்வாய்மூர், கற்கு
னறமொன்றேந்திமழைதடுத்த-கடல்வண்ணனுமாமலரோனுங்காணுச், சொற்
கெனறுந்தொலைவிலாதானுறையுங் - குடமூக்கெனறுசொல்லிக்குலாவுமினே.

குத்தங்குடிவேதிகுடிபுனல்சூழ்-குருந்தங்குடிதேவன்குடிமருவு
மத்தங்குடிநண்டிருவண்குடியு-மலம்புஞ்சலந்தண்சடைவைத்துகந்த
நித்தனிமலனுமையோடுங்கூட-நெடுங்காலமுறைவிடமென்றுசொல்லாப்
புத்தர்புறங்கூறியபுன்சமணர்-நெடும்பொய்களைவிட்டுநினைந்துய்ம்மினே. (க0)

அம்மானையருந்தவமாகிநின்றவமரா-பெருமான்பதியானவுன்னிக், கொ
ய்ம்மாமலர்ச்சோலைகுலாவுகொச்சைக் - கிறைவன்சிவஞானசம்பந்தன்சொன்
ன,விம்மாலையினோர்துமிருநிலத்தி-லிரவும்பகலுந்நினைந்தேத்திநின்று, விம்மா
வெருவாவிருமபும்மடியார்-விதியார்பிரியார்சிவன்சேவடிக்கே. (கக)

திருச்சிற்றம்பலம்

ரு-வதில் இரண்டுசரணமும், எ-வதில் மூன்றுசரணமும்,அ - வதில் இரண்ட
ரைசரணமும் இருக்கின்றன.

குன்றியூர்-இடைப்பள்ளி-மாட்டேர்-வாதலூர்-வாரணசி-கோட்டோ - குணவாயில்-
நெற்குன்றம்-நற்குன்றம்-நெடுவாயில்-உஞ்சேனைமாகாளம்-குத்தங்குடி - குருந்தேவன்
குடி-மத்தங்குடி-திருவண்குடி-இவைகட்குத்தனித்தனிதேவாரமில்லாமையால் வைப்
புத்தலமென்று சொல்லப்படும்.

## திருப்பிரமபுரம் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

எம்பிரானெனக்கமுதமாவானுந்தன்னடைந்தார
தம்பிரானாவானுந்தழலேந்துகையானுங்
கம்பமாகரியுரித்தகாபாலிகறைக்கண்டன
வம்புலாம்பொழிற்பிரமபுரத்துறையும்வானவனே (௧)

தாமென்றுமனந்தளராத்தகுதியராயுலகத்துக்
காமென்றுசரண்புகுந்தார்தமைக்காக்குங்கருணையினா
னோமென்றுமறைபயில்வார்பிரமபுரத்துறைகின்ற
காமனறனுடலெரியக்கனல்சேர்ந்தகண்ணானே (௨)

நன்னெஞ்சேயுனையிரந்தேனெம்பெருமான்றிருவடியே
யுன்னஞ்செய்திருகண்டாயுய்வதனைவேண்டுதியே
லன்னஞ்சேர்பிரமபுரத்தாரமுதையெப்போதும
பன்னுஞ்சீர்வாயதுவேபார்க்கண்ணேபரிந்திடவே (௩)

சாநாளின்றிம்மனமேசங்கைதனைத்தவிர்ப்பிக்குங்
கோனாளுந்திருவடிக்கேகொழுமலர்தூவெத்தனையுந்
தேனாளும்பொழிற்பிரமபுரத்துறையுந்தீவணனை
நாநாளுநன்னியமஞ்செய்தவன்சீர்நவின்றேத்தே. (௪)

கண்ணுதலான்வெண்ணீற்றான்கமழ்சடையான்விடையேறி
பெண்ணிதமாமுருவத்தானபிஞ்ஞகன்பேர்பலவுடையான
விண்ணுதலாய்த்தோன்றியசீர்ப்பிரமபுரந்தொழவிரும்பி
யெண்ணுதலாஞ்செல்வத்தையியல்பாகவறிந்தோமே. (௫)

எங்கேனுமியாதாகிப்பிறந்திடினுந்தன்னடியார்க்
கிங்கேயென்றருள்புரியுமெம்பெருமானெருதேறிக்
கொங்கேயுமலர்ச்சோலைக்குளிர்பிரமபுரத்துறையுஞ்
சங்கேயொத்தொளிர்மேனிச்சங்கரன்றனறாளைகளே. (௬)

சிலையதுவெஞ்சிலையாகத்திரிபுரமூன்றெரிசெய்த
விலைநுனைவேற்றடக்கையனேந்திழையாளொருகூற
னலைபுனல்சூழ்பிரமபுரத்தருமணியையடிபணிந்தா
னிலையுடையபெருஞ்செல்வநீடுலகிற்பெறலாமே (௭)

எரித்தமயிர்வாளரக்கன்வெற்பெடுக்கத்தோளொடுதா
ணெரித்தருளுஞ்சிவமூர்த்திநீறணிந்தமேனியினா
னுரித்தவரித்தோலுடையானுறைபிரமபுரந்தனைத
தரித்தமனமெப்போதும்பெறுவார்தாந்தக்காரே. (௮)

கரியானுநான்முகனுங்காணாமைக்கனலுருவா
யரியானம்பரமேட்டியரவஞ்சேரகலத்தான்
றெரியாதானிருந்துறையுந்திகழ்பிரமபுரஞ்சேர
வுரியார்தாமேழுலகுமுடனாளவுரியாரே. (௯)

உடையிலார் சீவரத்தார் தன்பெருமை யுணர்வரியான்
முடையிலார் வெண்டலைக்கை மூர்த்தியாந் திருவுருவன்
பெடையிலார் வண்டாடும் பொழிற்பிரம புரத்துறையுஞ்
சடையிலார் வெண்பிறையான் றாள்பணிவார் தக்காரே. (௧௦)

தன்னடைந்தார்க் கின்பங்கள் தருவானைத் தத்துவனைக்
கன்னடைந்த மதிற்பிரம புரத்துறையுங் காவலனை
முன்னடைந்தான் சம்பந்தன் மொழிபத்து மிவைவல்லார்
பொன்னடைந்தார் போகங்கள் பலவடைந்தார் புண்ணியரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

## திருச்சாய்க்காடு - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்

மண்புகார் வான்புகுவர் மனமிளையார் பசியாலுங்
கண்புகார் பிணியறியார் கற்றாருங் கேட்டாரும்
விண்புகா ரெனவேண்டா வெண்மாட நெடுவீதித்
தண்புகார்ச் சாய்க்காட்டெந் தலைவன்றாள் சார்ந்தாரே (௧)

போய்க்காடே மறைந்துறைதல் புரிந்தானும் பூம்புகார்ச்
சாய்க்காடே பதியாக வுடையானும் விடையானும்
வாய்க்காடு முதுமரமே யிடமாக வந்தடைந்த
பேய்க்காடல் புரிந்தானும் பெரியோர்கள் பெருமானே (௨)

நீநாளு நன்னெஞ்சே நினைகண்டா யாரறிவார்
சாநாளும் வாழ்நாளுஞ் சாய்க்காட்டெம் பெருமாற்கே
பூநாளுந் தலைசுமப்பப் புகழ்நாமஞ் செவிகேட்ப
நாநாளு நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே (௩)

கட்டலர்த்த மலர்தூவிக் கைதொழுமின் பொன்னியன்ற
தட்டலர்த்த பூஞ்செருந்தி கோங்கமருந் தாழ்பொழில்வாய்
மொட்டலர்த்த தடந்தாழை முருகுயிர்க்குங் காவிரிப்பூம்
பட்டினத்துச் சாய்க்காட்டெம் பரமேட்டி பாதமே. (௪)

கோங்கன்ன குவிமுலையாள் கொழும்பணைத்தோட் கொடியிடையைப்
பாங்கென்ன வைத்துகந்தான் படர்சடைமேற் பான்மதியந்
தாங்கினான் பூம்புகார்ச் சாய்க்காட்டான் றாணிழற்கீ
ழோங்கினா ரோங்கினா ரெனவுரைக்கு முலகமே. (௫)

சாந்தாக நீறணிந்தான் சாய்க்காட்டான் காமனைமுன்
றீந்தாக மெரிகொளுவச் செற்றுகந்தான் றிருமுடிமே
லோய்ந்தார மதிசூடி யொளிதிகழு மலைமகடோ
டோய்ந்தாகம் பாகமா வுடையானும் விடையானே. (௬)

மங்குறோய் மணிமாட மதிதவழு நெடுவீதிச்
சங்கெலாங் கரைபொருது திரைபுலம்புஞ் சாய்க்காட்டான்

கொங்குலாவரிவண்டினிசைபாடுமலர்க்கொன்றைத்
தொங்கலானடியார்க்குச்சுவர்க்கங்கள்பொருளலவே. (எ)

தொடலரியதொருகணையாற்புரமூன்றுமெரியுண்ணப்
படவரவத்தெழிலாரம்பூண்டான்பண்டரக்கனையுங்
கடவரையாற்றடவரைத்தோளூன்றினான்சாய்க்காட்டை
யிடவகையாலடைவோமென்றெண்ணுவார்க்கிடரிலையே. (அ)

வையநீரேற்றானுமலருறையுநான்முகனு
மையனமாயிருவர்க்குமளப்பரிதாலவன்பெருமை
தையலார்பாட்டோவாச்சாய்க்காட்டெம்பெருமானே
தெய்வமாப்பேணாதார்தெளிவுடைமைதேறோமே. (௯)

குறங்காட்டுநால்விரற்கோவணத்துக்கோலோவிப்போ
யறங்காட்டுஞ்சமணருஞ்சாக்கியருமலதூற்றுந்
திறங்காட்டல்கேளாதேதெளிவுடையீர்சென்றடைமின்
புறங்காட்டிலாடலான்பூம்புகார்ச்சாய்க்காடே. (௧௦)

நொம்பைந்துபுடைத்தொல்குநூபுரஞ்சேர்மெல்லடியா
ரம்பந்துமவரிக்கழலுமரவஞ்செய்பூங்காழிச்
சம்பந்தன்றமிழ்பகர்ந்தசாய்க்காட்டுப்பத்திவையு
மெம்பந்தமெனக்கருதியேத்துவார்க்கிடர்கெடுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருஆக்கூர் - பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்.

அக்கிருந்தவாரமுமாடரவுமாமையுந்
தொக்கிருந்தமார்பினான்றோலுடையானவெண்ணீற்றான்
புக்கிருந்ததொல்கோயில்பொய்யிலாமெய்ந்நெறிக்கே
தக்கிருந்தாராக்கூரிற்றான்றோன்றிமாடமே. (௧)

நீரார்வார்சடையானீறுடையானேறுடையான்
காரார்பூங்கொன்றையினான்காதலித்ததொல்கோயில்
கூராரலவாய்நிறையக்கொண்டயலேகோட்டகத்திற்
றாராமாடாக்கூரிற்றான்றோன்றிமாடமே. (௨)

வாளார்கண்செந்துவர்வாய்மாமலையான்றன்மடந்தை
தோளாகம்பாகமாப்புல்கினான்றொல்கோயில்
வேளாளரென்றவர்கள்வள்ளன்மையான்மிக்கிருக்குந்
தாளாளராக்கூரிற்றான்றோன்றிமாடமே. (௩)

கொங்குசேர்தண்கொன்றைமாலையினான்கூற்றடரப்
பொங்கினான்பொங்கொளிசேர்வெண்ணீற்றான்பூங்கோயி
லங்கமாறோடருமறைகளைவேள்வி
தங்கினாராக்கூரிற்றான்றோன்றிமாடமே. (௪)

வீக்கினானாடரவம்வீந்தழிந்தார்வெண்டலையென்
பாக்கினானபலகலன்களாகரித்துப்பாகம்பெ
ணாக்கினான்றொல்கோயிலாம்பலம்பூம்பொய்கைபுடைத்
தாக்கினாராக்கூரிற்றான்றோன்றிமாடமே. (௫)

பண்ணொளிசேர்நான்மறையான்பாடலினோடாடலினான்
கண்ணொளிசேர்நெற்றியினான்காதலித்ததொல்கோயில்
விண்ணொளிசேர்மாமதியந்தீண்டியக்கால்வெண்மாடந்
தண்ணொளிசேராக்கூரிற்றான்றோன்றிமாடமே. (௬)

வீங்கினார்மும்மதிலும்வில்வரையால்வெந்தவிய
வாங்கினார்வானவர்கள்வந்திறைஞ்சுந்தொல்கோயில்
பாங்கினார்நான்மறையோடாறங்கம்பலகலைக
டாங்கினாராக்கூரிற்றான்றோன்றிமாடமே. (௭)

கன்னெடியகுன்றெடுத்தான்றோளடரக்காலூன்றி
யின்னருளாலாட்கொண்டவெம்பெருமான்றொல்கோயில்
பொன்னடிக்கேநாடோறும்பூவோடுநீர்சுமக்கும்
தன்னடியாராக்கூரிற்றான்றோன்றிமாடமே (௮)

நன்மையனாநாரணனுநான்முகனுங்காண்பரிய
தொன்மையான்றோற்றங்கேடிலாதான்றொல்கோயி
லின்மையாற்சென்றிரந்தார்க்கில்லையென்னாதீந்துவக்கும்
தன்மையாராக்கூரிற்றான்றோன்றிமாடமே. (௯)

நாமருவுபுன்மைநவிற்றச்சமண்டேரர்
பூமருவுகொன்றையினான்புக்கமருந்தொல்கோயில
சேன்மருவுபங்கயத்துச்செங்கழுநீர்பைங்குவளை
தாமருவுமாக்கூரிற்றான்றோன்றிமாடமே. (௧௦)

ஆடலமர்ந்தானையாக்கூரிற்றான்றோன்றி
மாடமமர்ந்தானைமாடஞ்சேர்தண்காழி
நாடற்கரியசீர்ஞானசம்பந்தன்சொற்
பாடலிவைவல்லார்க்கில்லையாம்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - சுயம்புநாதேசுவரர், தேவியார் - கட்கநேத்திரவம்மை.

## திருப்புள்ளிருக்குவேளூர் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

கள்ளார்ந்தபூங்கொன்றைமதமத்தங்கதிர்மதிய
முள்ளார்ந்தசடைமுடியெம்பெருமானாருறையுமிடந்
தள்ளாயசம்பாதிசடாயென்பார்தாமிருவர்
புள்ளானார்க்கரையனிடம்புள்ளிருக்குவேளூரே. (௧)

தையலாளொருபாகஞ்சடைமேலாளவளோடு
மையந்தேர்ந்துழல்வாரோரந்தணனாருறையுமிட
மெய்சொல்லாவிராவணனைமேலோடியீடழித்துப்
பொய்சொல்லாதுயிர்போனான்புள்ளிருக்குவேளூரே. (௨)

வாசநலஞ்செய்திமையோர்நாடோறுமலர்தூவ
வீசனெம்பெருமானாரினிதாகவுறையுமிடம்
யோசனைபோய்ப்பூக்கொணர்ந்தங்கொருநாளுமொழியாமே
பூசனைசெய்தினிதிருந்தான்புள்ளிருக்குவேளூரே. (௩)

மாகாயம்பெரியதொருமானுரிதோலுடையாடை
யேகாயமிட்டுகந்தவெரியாடியுறையுமிட
மாகாயந்தேரோடிராவணனையமரின்கட்
போகாமேபொருதழித்தான்புள்ளிருக்குவேளூரே. (௪)

கீதத்தைமிகப்பாடுமடியார்கள்குடியாகப்
பாதத்தைத்தொழநின்றபரஞ்சோதிபயிலுமிடம்
வேதத்தின்மந்திரத்தால்வெண்மணலேசிவமாகப்
போதத்தால்வழிபட்டான்புள்ளிருக்குவேளூரே. (௫)

திறங்கொண்டவடியார்மேற்றீவினைநோய்வாராமே
யறங்கொண்டுசிவதன்மமுரைத்தபிரானமருமிட
மறங்கொண்டங்கிராவணன்றன்வலிகருதிவந்தானைப்
புறங்கண்டசடாயென்பான்புள்ளிருக்குவேளூரே. (௬)

அத்தியினீருரிமூடியழகாகவனலேந்திப்
பித்தரைப்போற்பலிதிரியும்பெருமானார்பேணுமிடம்
பத்தியினால்வழிபட்டுப்பலகாலந்தவஞ்செய்து
புத்தியொன்றவைத்திருந்தான்புள்ளிருக்குவேளூரே (௭)

பண்ணொன்றவிசைபாடுமடியார்கள்குடியாக
மண்ணின்றிவிண்கொடுக்குமணிகண்டன்மருவுமிட
மெண்ணின்றிமுக்கோடிவாணாளதுடையானைப்
புண்ணொன்றப்பொருதழித்தான்புள்ளிருக்குவேளூரே. (௮)

வேதித்தார்புரமூன்றும்வெங்கணையால்வெந்தவியச்
சாதித்தவில்லாளிகண்ணாளன்சாருமிட
மாதித்தன்மகனென்னவகன்ஞாலத்தவரோடும்
போதித்தசடாயென்பான்புள்ளிருக்குவேளூரே. (௯)

கடுத்துவருங்கங்கைதனைக்கமழ்சடையொன்றாடாமே
தடுத்தவரெம்பெருமானார்தாமினிதாயுறையுமிடம்
விடைத்துவருமிலங்கைக்கோன்மலங்கச்சென்றிராமற்காப்
புடைத்தவனைப்பொருதழித்தான்புள்ளிருக்குவேளூரே. (௧௦)

செடியாயவுடறீர்ப்பானறீவினைக்கோர்மருந்தாவான்
பொடியாடிக்கடிமைசெய்தபுள்ளிருக்குவேளூரைக்
கடியார்ந்தபொழிற்காழிக்கவுணியன்சம்பந்தன்சொன்ன
மடியாதுசொல்லவல்லார்க்கில்லையாமறுபிறப்பே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திரு ஆமாத்தூர் - பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்.

துன்னம்பெய்கோவணமுந்தோலுமுடையாடை
பின்னுஞ்சடைமேலோர்பிள்ளைமதிசூடி
யன்னஞ்சேர்தண்கானலாமாத்தூரம்மான்றன்
பொன்னங்கழல்பரவாப்பொக்கமும்பொக்கமே. (௧)

கைம்மாவின்றோல்போர்த்தகாவாலிவானுலகின்
மும்மாமதிலெய்தான்முக்கணான்பேர்பாடி
யம்மாமலர்ச்சோலையாமாத்தூரம்மானெம்
பெம்மானென்றேத்தாதார்பேயரிற்பேயரே. (௨)

பாம்பரைச்சாத்தியோர்பண்டரங்கன்விண்டதோர்
தேம்பவிளமதியஞ்சூடியசென்னியா
னாம்பலம்பூம்பொய்கையாமாத்தூரம்மான்றன்
சாம்பலகலத்தார்சார்பல்லாற்சார்பிலமே. (௩)

கோணாகப்பேரல்குற்கோல்வளைக்கைமாதராள்
பூணாகம்பாகமாகப்புல்கியவளோடு
மாணாகங்காதல்செய்யாமாத்தூரம்மானைக்
காணாதகண்ணெல்லாங்காணாதகண்களே. (௪)

பாடனெறிநின்றான்பைங்கொன்றைத்தண்டாரே
சூடனெறிநின்றான்சூலஞ்சேர்கையினா
னாடனெறிநின்றானாமாத்தூரம்மான்றன்
வேடநெறிநில்லாவேடமும்வேடமே. (௫)

சாமவரைவில்லாகச்சந்தித்தவெங்கணையாற்
காவனமதிலெய்தான்கண்ணுடைநெற்றியான்
யாவருஞ்சென்றேத்துமாமாத்தூரம்மானைத்
தேவர்தலைவணங்குந்தேவர்க்குந்தேவனே. (௬)

மாறாதவெங்கூற்றைமாற்றிமலைமகளை
வேறாகநில்லாதவேடமேகாட்டினா
னாறாததீயாடியாமாத்தூரம்மானைக்
கூறாதநாவெல்லாங்கூறாதநாக்களே. (௭)

தாளாலரக்கன்றோள்சாய்த்ததலைமகன்ற
னாளாதிரையென்றேநம்பன்றனாமத்தா

லாளானார்சென்றேத்துமாமாத்தூரம்மானைக்
கேளாச்செவியெல்லாங்கேளாச்செவிகளே. (௮)

புள்ளுங்கமலமுங்கைக்கொண்டார்தாமிருவ
ருள்ளுமவன்பெருமையொப்பளக்குந்தனமையதே
யள்ளல்விளைகழனியாமாத்தூரம்மானெம்
வள்ளல்கழல்பரவாவாழ்க்கையும்வாழ்க்கையே. (௯)

பிச்சைபிறர்பெய்யப்பின்சாரக்கோசாரக்
கொச்சைபுலானாறவீருரிவைபோர்த்துகந்தா
ணச்சந்தனமாதேவிக்கீந்தான்றன்மாத்தூர்
நிச்சனினையாதார்நெஞ்சமுநெஞ்சமே. (௧௦)

ஆடலரவசைத்தவாமாத்தூரம்மானைக்
கோடலிரும்புறவிற்கொச்சைவயத்தலைவ
னாடலரியசீர்ஞானசம்பந்தன்றன்
பாடலிவைவல்லார்க்கில்லையாம்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

ஈடுநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர் - அழகியநாதேசுவரர், தேவியார்-அழகியநாயகியம்மை.
ஆ பதிகம் - ௪௪.

## திருக்கைச்சினம் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

தையலோர்கூறுடையான்றண்மதிசேர்செஞ்சடையான்
மையுலாமணிமிடற்றன்மறைவிளங்குபாடலா
னெய்யுலாமூவிலைவேலேந்திநிவந்தொளிசேர்
கையுடையான்மேவியுறைகோயில்கைச்சினமே. (௧)

விடமல்குகண்டத்தான்வெள்வளையோர்கூறுடையான்
படமல்குபாம்பரையான்பற்றாதார்புரமெரித்தா
னடமல்குமாடலினான்மறையோர்பாடலினான்
கடமல்குமாவுரியானுறைகோயில்கைச்சினமே. (௨)

பாடலார்நான்மறையான்பைங்கொன்றைபாம்பினொடுஞ்
சூடலான்வெண்மதியந்துன்றுகரந்தையொடு
மாடலானங்கையனலேந்தியாடரவக்
காடலான்மேவியுறைகோயில்கைச்சினமே. (௩)

பண்டமரர்கூடிக்கடைந்தபடுகடனஞ்
சுண்டபிரானென்றிறைஞ்சியும்பர்தொழுதேத்த
விண்டவர்கடொன்னகரமூன்றுடனேவெந்தவியக்
கண்டபிரான்மேவியுறைகோயில்கைச்சினமே. (௪)

தேய்ந்துமலிவெண்பிறையான்செய்யதிருமேனியினான்
வாய்ந்திலங்குவெண்ணீற்றான்மாதினையோர்கூறுடையான்

சாய்ந்தமரர்வேண்டத்தடங்கட * னஞ்சுண்டனங்கைக்
காய்ந்தபிரானமேவியுறைகோயில்கைச்சினமே. (௫)

மங்கையோர்கூறுடையான்மன்னுமறைபயின்று
னங்கையோர்வெண்டலையானடரவமபூண்டுகந்தான்
றிங்களொடுபூம்பணிந்தசீரார்திருமுடிமேற்
கங்கையினன்மேவியுறைகோயில்கைச்சினமே. (௬)

வரியரவேநாணாகமாலவரையேவில்லாக
வெரிகணையானமுப்புரங்களெய்துகந்தவெமபெருமான்
பொருசுடலையிமேபுறங்காட்டானபோர்த்ததோர்
கரியுரியான்மேவியுறைகோயில்கைச்சினமே (எ)

போதுலவுகொன்றைபுனைந்தான்றிருமுடிமேன
மாதுமையாளஞ்சமலையெடுத்தவாளரக்க
னீதியினலேததங்கழ்வித்துநின்றுடுங்
காதலினன்மேவியுறைகோயில்கைச்சினமே. (அ)

மண்ணினைமுன்செனறிரந்தமாலுமறையவனு
மெண்ணறியாவண்ணமெரியுருவமாயபிரான
பண்ணிசையாலேந்தப்படுவான்றன்னெற்றியின்மேற்
கண்ணுடையானமேவியுறைகோயில்கைச்சினமே. (௯-௰)

தண்வயல்சூழ்காழித்தமிழ்ஞானசம்பந்தன்
கண்ணுதலானமேவியுறைகோயில்கைச்சினத்தைப்
பண்ணிசையாலேத்திப்பயின்றவிவைவல்லார்
விண்ணவராயோங்கிவியனுலகமாள்வாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது
சுவாமிபெயா-கைச்சினநாதா, தேவியாா - வெள்வளையம்மை.

---

## திருநாலூர்த்திருமயானம் - பண் சீகாமரம்

திருச்சிற்றம்பலம்.

பாலூருமலைப்பாம்பும்பனிமதியுமத்தமு
மேலூருஞ்செஞ்சடையான்வெண்ணூல்சேமாபினு
னூலூாமயானத்துநமபானறனடிநினைந்து
மாலூருஞ்சிந்தையாபால்வந்தூராமறுபிறப்பே. (௧)

சூடும்பிறைச்சென்னிச்சூழ்காடிடமாக
வாடும்பறைசங்கொலியோடழகாக
நாடுஞ்சிறப்போவாநாலூர்மயானத்தைப்
பாடுஞ்சிறப்போர்பாற்பற்றுவாம்பாவமே. (௨)

கல்லானிழனமேவிக்காமுறுசீர்நாலவர்ககன
றெல்லாவறனுரையுமின்னருளாற்சொலலினு

* நஞ்சுண்டு அனங்கை எனப்பிரித்து அனங்கை என்பதனுக்கு
அனங்கனை எனப் பொருள் கொள்க.

னல்லார்தொழுதேத்துநாலூர்மயானத்தைச்
சொல்லாதவரெல்லாஞ்சொல்லாதார்தொன்னெறிக்கே. (௩)

கோலத்தார்கொன்றையானகொல்புலித்தோலாடையா
னீலத்தாகண்டத்தானெற்றியோர்கண்ணினான்
ஞாலத்தார்சென்றேத்துநாலூர்மயானத்திற்
சூலத்தானென்பார்பாற்சூழாவாந்தொல்வினையே (௪)

கறையார்மணிமிடற்றான்காபாலிகட்டங்கன்
பிறையார்வளர்சடையானபெண்பாகனண்பாய
நறையாரொழில்புடைசூழ்நாலூராமயானத்தெம்
மிறையானென்றேத்துவார்க்கெய்துமாமின்பமே. (௫)

கண்ணார்நுதலான்கனலாடிடமாகப்
பண்ணார்மறைபாடியாடும்பரஞ்சோதி
நண்ணார்புரமெய்தானாலூர்மயானத்தை
நண்ணாதவரெல்லாநண்ணாதார்நன்னெறியே. (௬)

கண்பாவுவேகத்தாற்காமனைமுனகாய்ந்துகந்தான்
பெண்பாவுபாகத்தானாகத்தோலாகத்தா
னண்பார்குணத்தோர்கணாலூர்மயானத்தை
வெண்பாவுசிந்தையார்க்கேலாவிடாதானே. (௭)

பத்துத்தலையோனைப்பாதத்தொருவிரலால்
வைத்துமலையடர்த்துவாளோடுநாள்கொடுத்தா
னத்தினொலியோவாநாலூர்மயானத்தெ
னத்தனடிநினைவார்க்கல்லலடையாவே (௮)

மாலோடுநான்முகனுநேடவளரெரியாய்
மேலோடுகீழ்காணாமேன்மையானவேதங்க
ளாலோடுமாறங்கநாலூர்மயானத்தெம
பாலோடுநெய்யாடிபாதம்பணிவோமே. (௯)

துன்பாயமாசார்துவராயபோர்வையார்
புன்பேச்சுக்கேளாதேபுண்ணியனைநண்ணுமின்க
ணண்பாற்சிவாயவெனாநாலூர்மயானத்தே
யின்பாயிருந்தானையேத்துவார்க்கின்பமே. (௧௦)

ஞாலம்புகழ்காழிஞானசம்பந்தன்றா
னாலுமறையோதுநாலூர்மயானத்தைச்
சீலம்புகழாற்சிறந்தேத்தவல்லாருங்
கேளும்புகழ்வானத்தின்பாயிருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-பலாசவனேசுவரர், தேவியார்-பெரியநாயகியம்மை.

### திருமயிலாப்பூர் - பூம்பாவைத்திருப்பதிகம் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

மட்டிட்டபுன்னையங்கானன்மடமயிலைக்
கட்டிட்டங்கொண்டான்கபாலீச்சரமமர்ந்தா
னொட்டிட்டபண்பினுருத்திரபல்கணத்தார்க்
கட்டிட்டல்காணாதேபோதியோபூம்பாவாய். (௧)

மைப்பயந்தவொண்கண்மடநல்லார்மாமயிலைக்
கைப்பயந்தநீற்றான்கபாலீச்சரமமர்ந்தா
னைப்பசியோணவிழாவுமருந்தவர்க
டுய்ப்பனவுங்காணாதேபோதியோபூம்பாவாய் (௨)

வளைக்கைமடநல்லார்மாமயிலைவண்மறுகிற்
றுளக்கில்கபாலீச்சரத்தான்றொல்கார்த்திகைநாட்
டளத்தேந்திளமுலையார்தையலார்கொண்டாடும்
விளக்கீடுகாணாதேபோதியோபூம்பாவாய் (௩)

ஊர்திரைவேலையுலாவுமுயர்மயிலைக்
கூர்தருவேல்வல்லார்கொற்றங்கொள்சேரிதனிற்
கார்தருசோலைக்கபாலீச்சரமமர்ந்தா
னார்திரைநாள்காணாதேபோதியோபூம்பாவாய் (௪)

மைப்பூசுமொண்கண்மடநல்லார்மாமயிலைக்
கைப்பூசுநீற்றான்கபாலீச்சரமமர்ந்தா
னெய்ப்பூசுமொண்புழுக்கனேரிழையார்கொண்டாடுந்
தைப்பூசங்காணாதேபோதியோபூம்பாவாய் (௫)

மடலார்ந்ததெங்கின்மயிலையார்மாசிக்
கடலாட்டுக்கண்டான்கபாலீச்சரமமர்ந்தா
னடலானேறூருமடிகளடிபரவி
நடமாடல்காணாதேபோதியோபூம்பாவாய் (௬)

மலிவிழாவீதிமடநல்லார்மாமயிலைக்
கலிவிழாக்கண்டான்கபாலீச்சரமமர்ந்தான்
பலிவிழாப்பாடல்செய்பங்குனியுத்திரநா
ளொலிவிழாக்காணாதேபோதியோபூம்பாவாய். (௭)

தண்ணாவரக்கன்றோள்சாய்த்துகந்ததாளினான்
கண்ணார்மயிலைக்கபாலீச்சரமமர்ந்தான்
பண்ணார்பதினெண்கணங்கடமட்டமிநாட்
கண்ணாரக்காணாதேபோதியோபூம்பாவாய். (௮)

நற்றாமரைமலர்மேனான்முகனுநாரணனு
முற்றாங்குணர்கிலாமூர்த்திதிருவடியைக்
கற்றார்களேத்துங்கபாலீச்சரமமர்ந்தான்
பொற்றாப்புக்காணாதேபோதியோபூம்பாவாய். (௯)

சக்கரமாற்கீந்தானுஞ்சலந்தரனைப்பிளந்தானு
மக்கரைமேலசைத்தானுமடைந்தயிராபதம்பணிய
மிக்கதனுக்கருள்சுரக்கும்வெண்காடும்வினைதுரக்கு
முக்குளநன்குடையானுமுக்கணுடையிறையவனே. (௭)

பணமொய்த்தவின்மொழியாள்பயமெய்தமலையெடுத்த
வுன்மத்தனுரநெரித்தன்றருள்செய்தானுறைகோயில்
கண்மொய்த்தகருமஞ்ஞைநடமாடகடன்முழங்க
விண்மொய்த்தபொழில்வரிவண்டிசைமுரலும்வெண்காடே. (௮)

கள்ளாரசெங்கமலத்தானகடற்கிடந்தானெனவிவர்க
ளொள்ளாண்மைகொளற்கோடியுயர்ந்தாழ்ந்துமுணர்வரியான
வெள்ளானைதவஞ்செய்யுமேதகுவெண்காட்டானென
றுள்ளாடியுருகாதாருணர்வுடைமையுணரோமே. (௯)

போதியர்களபிண்டியாகண்மிண்டுமொழிபொருளென்னும
பேதையர்களவாபிரிமினறிவுடையீரிதுகேண்மின
வேதியர்கள்விரும்பியசீர்வியனறிருவெணகாட்டானென
றோதியவர்யாதுமொருதீதிலரெனறுணருமினே. (௧௦)

தண்பொழில்சூழ்சண்பையர்கோன்றமிழ்ஞானசம்பந்தன
விண்பொலிவெண்பிறைசசென்னிவிகிர்தனுறைவெணகாட்டை ப
பணபொலிசெந்தமிழ்மாலைபாடியபத்திவைவல்லார்
மண்பொலியவாழ்ந்தவாபோய்வானபொலியப்புகுவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - சுவேதாரணியேசுவரர், தேவியார் - பிரமவித்தியாநாயகி.

---

## சீகாழி - பண் - சீகாமரம்

### திருச்சிற்றம்பலம்.

பண்ணினேர்மொழிமங்கைமார்பலர்பாடியாடியவோசைநாடொறுங்
கண்ணினேரயலேபொலியுங்கடற்காழிப
பெண்ணினேரொருபங்குடைப்பெருமானையெம்பெருமானென்றென்றுன்னு
மண்ணலானடியாரருளாலுங்குறைவிலரே. (௧)

மொண்டலம்பியவார்திரைக்கடன்மோதிமீதெறிசங்கவங்கமுங்
கண்டலம்புடைசூழ்வயல்சேர்கலிக்காழி
வண்டலம்பியகொன்றையானடிவாழ்த்தியேத்தியமாந்தர்தம்வினை
விண்டலங்கெளிதாமதுநல்விதியாமே. (௨)

நாடெலாமொளியெய்தநல்லவர்நன்றுமேத்திவணங்குவார்பொழிற்
காடெலாமலர்த்தேன்றுளிக்குங்கடற்காழித்
தோடுலாவியகாதுளார்சுரிசங்கவெண்குழையாயென்றென்றுன்னும
வேடங்கொண்டவர்கள்வினைநீங்கலுற்றாரே. (௩)

மையினார்பொழில்சூழநீழலில்வாசமார்மதுமல்கநாடொறுங்
கையினார்மலர்கொண்டெழுவார்கலிக்காழி
யையனேயரனேயென்றாதரித்தோதிநீதியுளேநினைப்பவ
ருய்யுமாறுலகில்லுயர்ந்தாரினுள்ளாரே. (ச)

மலிகடுந்திரைமேனிமிர்ந்தெதிர்வந்துவந்தொளிர்நித்திலம்விழக்
கலிகடிந்தகையார்மருவுங்கலிக்காழி
வலியகாலனைவீட்டிமாணிதனின்னுயிரளித்தானைவாழ்த்திட
மெலியுந்தீவினைநோயவைமேவுவர்வீடே. (ரு)

மற்றுமிவ்வுலகத்துளோர்களும்வானுளோர்களும்வந்துவைகலுங்
கற்றசிந்தையராய்க்கருதுங்கலிக்காழி
நெற்றிமேலமர்கண்ணினானைநினைந்திருந்திசைபாடுவார்வினை
செற்றமாந்தரெனத்தெளிமின்கள்சிந்தையுளே. (சு)

தானலம்புனைவேதியரொடுதக்கமாதவர்தாந்தொழப்பயில்
கானலின்விரைசேரவிழுங்கலிக்காழி
யூனுளாருயிர்வாழ்க்கையாயுறவாகிநின்றவொருவனேயென்
றுணலங்கொடுபாரருள்வேந்தராவாரே. (எ)

மைந்தவண்டெழுசோலையாலைகள்சாலிசேர்வயலாரவைகலுங்
கத்துவார்கடல்சென்றுலவுங்கலிக்காழி
யந்தனேயரனேயரக்கனையன்றடர்த்துகந்தாயுனகழல
பத்தராய்ப்பரவுமடியார்க்குநல்காயே. (அ)

பருமராமொடுதெங்குபைங்கதலிப்பருங்கனியுண்ணமந்திகள்
கருவராலுகளும்வயல்சூழ்கலிக்காழித்
திருவினாயகனாயமாலொடுசெய்யமாமலர்ச்செல்வனாகிய
விருவர்காண்பரியானெனவேத்துதலின்பமே. (கூ)

பிண்டமுண்டுழல்வார்களும்பிரியாதுவண்டுகிலாடைபோர்த்தவர்
கண்டுசேர்கிலாரழகார்கலிக்காழித்
தொண்டைவாயுமையோடுகூடியவேடனேசுடலைப்பொடியணி
யண்டவாணனென்பார்க்கடையாவல்லலன்றே. (௰)

பெயரெனும்மிவைபன்னிரண்டினுமுண்டெனப்பெயர்பெற்றவூர்திகழ்
கயலுலாம்வயல்சூழ்ந்தழகார்கலிக்காழி
நயனடன்கழலேத்திவாழ்த்தியஞானசம்பந்தன்செந்தமிழுரை
யுபருமாமொழிவாருலகத்துயர்ந்தாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

ஆ பதிகம் - சகூ.

## திரு ஆமாத்தூர் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்

குன்றவார்சிலைநாணராவரிவாளிகூரெரிகாற்றின்மும்மதில்
வென்றவாறெங்ஙனேவிடையேறும்வேதியனே
தென்றலார்மணிமாடமாளிகைசூளிகைக்கெதிர்நீண்டபெண்ணைமே
லன்றில்வந்தணையுமாமாத்தூரம்மானே. (௧)

பரவிவானவர்தானவர்பலருங்கலங்கிடவந்தகார்விடம
வெருவவுண்டுகந்தவருளென்கொல்விண்ணவனே
கரவின்மாமணிபொன்கொழித்திழிசந்துகாரகிறந்து * பம்பைநீ
ரருவிவந்தலைக்குமாமாத்தூரம்மானே. (௨)

நீண்டவார்சடைதாழநேரிழைபாடநீறுமெய்பூசிமாலயன
மாண்டவார்சுடலைநடமாடுமாண்பதுவென்
பூண்டகேழன்மருப்பராவிரிகொன்றைவாள்வரியாமைபூணென
வாண்டநாயகனேயாமாத்தூரம்மானே. (௩)

சேலினேரனகண்ணிவெண்ணகைமான்விழித்திருமாதுபாகம்வைத்
தேலமாதவநீமுயல்கின்றவேடமிதென்
பாலினேர்மொழிமங்கைமார்நடமாடியின்னிசைபாடநீள்பதி
யாலைசூழ்கழனியாமாத்தூரம்மானே. (௪)

தொண்டர்வந்துவணங்கிமாமலர்தூவிநின்கழலேத்துவாரவ
ருண்டியால்வருந்தலிரங்காததென்னைகொலாம
வண்டலார்கழனிக்கலந்துமலர்ந்ததாமரைமாதர்வாண்முக
மண்டவாணர்தொழுமாமாத்தூரம்மானே. (௫)

ஓதியாரணமாயநுண்பொருளன்றுநால்வர்முன்கேட்கநன்னெறி
நீதியாலநீழலுரைக்கின்றநீர்மையதென்
சோதியேசுடரேசுரும்பமர்கொன்றையாய்திருநின்றியூருறை
யாதியேயரனேயாமாத்தூரம்மானே. (௬)

மங்கைவாணுதன்மான்மனத்திடைவாடியூடமணங்கமழ்சடைக்
கங்கையாளிருந்தகருத்தாயதென்னைகொலாம்
பங்கயமதுவுண்டுவண்டிசைபாடமாமயிலாடவிண்முழ
வங்கையாலதிர்க்குமாமாத்தூரம்மானே. (௭)

நின்றடாத்திடுமைம்புலன்னிலையாதவண்ணநினைந்துளத்திடை
வென்றடர்த்தொருபான்மடமாதைவிரும்புதலென்
குன்றெடுத்தநிசாசரன்றிரடோளிருபதுதானெரிதர
வன்றடர்த்துகந்தாயாமாத்தூரம்மானே. (௮)

செய்யதாமரைமேலிருந்தவனோடுமாலடிதேடநீண்முடி
வெய்யவாரழலாய்நிமிர்கின்றவேற்றுமையென்

* பம்பை என்பது - ஒருநதி.

றையலாளொடுபிச்சைக்கிச்சைதயங்குதோலரையார்த்தவேடங்கொண்
டையமேற்றுகந்தாயாமாத்தூரம்மானே. (௯)

புத்தர்புன்சமணர்பொய்மொழிநூல்பிடித்தலர்தூற்றநின்னடி
பத்தர்பேணநின்றபரமாயபான்மையதென்
முத்தைவென்றமுறுவலாளுமைபங்கனென்றிமையோர்பரவிடு
மத்தனேயரியாயாமாத்தூரம்மானே. (௧௦)

வாடல்வெண்டலைமாலையார்த்துமயங்கிருள்ளெரியேந்திமாநட
மாடன்மேயதென்னென்றுமாத்தூரம்மானைக்
கோடல்கைமருமபுனைப்பொழிற்கொச்சையாரிறைஞானசம்பந்தன்
பாடல்பத்தும்வல்லார்பரலோகஞ்சேர்வாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

ஆமாத்தூர் என்பது - பசுக்களுக்குத் தாயகமானவூர் என்றும், ஆமாதாவூர் எனற்பாலது - ஆமாத்தூர் என மருவிநின்றதென்றும், பெரியோர்களாற்கேள்வி. ஆ - பசு. சமஸ்கிருதத்தில் - கோமாதுருபுரம் எனப்பெயராம்

## திருக்களர் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்

நீருளார்கயல்வாவிசூழ்பொழினீண்டமாவயலீண்டுமாமதிற்
றேரினார்மறுகில்விழாமல்குதிருக்கள
ரூருளாரிடுபிச்சைபேணுமொருவனேயொளிர்செஞ்சடைம்மதி
யாரநின்றவனேயடைந்தார்க்கருளாயே. (௧)

தோளின்மேலொளிநீறுதாங்கியதொண்டர்வந்தடிபோற்றமிண்டிய
தாளினார்வளருந்தவமல்குதிருக்களருள்
வேளினேர்விசயற்கருள்புரிவித்தகாவிரும்பும்மடியரை
யாளுகந்தவனேயடைந்தார்க்கருளாயே. (௨)

பாடவல்லநன்மைந்தரோடுபனிமலர்பலகொண்டுபோற்றிசெய்
சேடர்வாழ்பொழில்சூழ்செழுமாடத்திருக்களரு
ணீடவல்லநிமலனேயடிநிரைகழல்சிலம்பார்க்கமாநட
மாடவல்லவனேயடைந்தார்க்கருளாயே. (௩)

அம்பினேர்தடங்கண்ணினாருடனடவர்பயின்மாடமாளிகைச்
செம்பொனார்பொழில்சூழ்ந்தழகாயதிருக்களரு
ளென்புபூண்டதோர்மேனியெம்மிறைவாவிணையடிபோற்றிநின்றவர்க்
கன்புசெய்தவனேயடைந்தார்க்கருளாயே. (௪)

கொங்குலாமலர்ச்சோலைவண்டினங்கிண்டிமாமதுவுண்டிசைசெயத்
தெங்குபைங்கமுகம்புடைசூழ்ந்ததிருக்களருண்
மங்கைதன்னொடுங்கூடியமணவாளனேபிணைகொண்டோர்கைத்தலத்
தங்கையிற்படையாயடைந்தார்க்கருளாயே. (௫)

கோலமாமயிலாலக்கொண்டல்கள்சேர்பொழிற்குலவும்வயலிடைச்
சேலிளங்கயலார்புனல்சூழ்ந்ததிக்களரு
ணீலமேவியகண்டனேநிமிராபுனசடைப்பெருமானெனப்பொலி
யாலநீழலுளாயடைந்தார்க்கருளாயே. (சு)

தம்பலமறியாதவர்மதிருங்குமால்வரையாலமுலைறும்
திண்பலங்கெடுத்தாய்திகழ்கின்றதிருக்களருள்
வம்பலர்மலர்தூவிநின்னடிவானவர்தொழக்கூத்துகந்தபே
ரம்பலத்துறைவாயடைந்தார்க்கருளாயே (எ)

குன்றடுத்தநன்மாளிகைக்கொடிமாடநீடுயர்கோபுரங்கண்மேற்
சென்றடுத்துயர்வான்மதிதோயுந்திருக்களரு
ணின்றடுத்துயர்மால்வரைத்திரடோளிணூலெடுத்தானைநனீண்முடி
யன்றடர்த்துகந்தாயடைந்தார்க்கருளாயே. (அ)

பண்ணியாழ்பயில்கின்றமங்கையர்பாடலாடலோடாரவாழ்பதி
தெண்ணிலாமதியம்பொழில்சேருந்திருக்களரு
ளுண்ணிலாவியவொருவனேயிருவர்க்குநின்கழல்காட்சியாரழ
லண்ணலாயவெம்மானடைந்தார்க்கருளாயே (கூ)

பாக்கியம்பலசெய்தபத்தர்கள்பாட்டொடும்பலபணிகள்பேணிய
தீக்கியல்குணத்தார்சிறந்தாருந்திருக்களருள்
வாக்கினைமறையோதினையமணர்சொல்லியசொற்களானபொய்
யாக்கிநின்றவனேயடைந்தார்க்கருளாயே. (கo)

இந்துவந்தெழுமாடவீதியெழில்கொள்காழிநகர்க்கவுணியன்
செந்துநேர்மொழியாரவர்சேருந்திருக்களரு
ளந்தியன்னதோர்மேனியானையமரர்தம்பெருமானைஞானசம
பந்தன்சொல்லிவைபத்தும்பாடத்தவமாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர் - களாமுளைநீசுவரர், தேவியார் - அழகேசுவரியம்மை.

## திருக்கோட்டாறு - பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்.

கருந்தடங்கண்ணின்மாதரார்இசைசெய்யக்காரதிர்கின்றபூம்பொழில்
குருந்தமாதவியின்விரைமல்குகோட்டாற்றில்
இருந்தவெம்பெருமானையுள்கியிணையடிதொழுதேத்துமாந்தர்கள்
வருந்துமாறறியார்நெறிசேர்வர்வானூடே. (க)

நின்றுமேய்ந்துநினைந்துமாகரிநீரொடும்மலர்வேண்டிவானமழை
குன்றினேர்ந்துகுத்திப்பணிசெய்யுங்கோட்டாற்று
ளென்றுமன்னியவெம்பிரான்கழலேத்திவானரசாளவல்லவர்
பொன்றுமாறறியார்புகழார்ந்தபுண்ணியரே (உ)

விரவிநாளும்விழாவிடைப்பொலிதொண்டர்வந்துவியந்துபண்செயக்
குரவமாருநிழற்பொழின்மல்குகோட்டாற்றி
லரவநீள்சடையானையுள்கிநின்றுதரித்துமுன்னன்புசெய்தடி
பரவுமாறுவல்லார்பழிபற்றறுப்பாரே (௩)

அம்பினேர்விழிமங்கைமார்பலராடகம்பெறுமாடமாளிகைக்
கொம்பினேர்துகிலின்கொடியாடுகோட்டாற்றி
னம்பனேநடனேநலந்திகழ்நாதனேயென்றுகாதல்செய்தவர்
தம்பினேர்ந்தறியார்தடுமாற்றவல்வினையே (௪)

பழையதம்மடியார்துதிசெயப்பாருளோர்களும்விண்ணுளோர்தொழக்
குழலுமொந்தைவிழாவொலிசெய்யுங்கோட்டாற்றிற்
கழலும்வணசிலம்புமொலிசெயக்கானிடைக்கணமேத்தவாடிய
வழகனென்றெழுவாரணியாவர்வானவர்க்கே. (௫)

பஞ்சின்மெல்லடிமாதராடவர்பத்தர்சித்தர்கள்பண்புவைகலுங்
கொஞ்சியின்மொழியாற்றொழினமல்குகோட்டாற்றின
மஞ்சனேமணியேமணிமிடற்றண்ணலேயெனவுண்ணெகிழ்ந்தவர்
துஞ்சுமாறறியார்பிறவாரித்தொன்னிலத்தே. (௬)

கலவமாமயிலாளோர்பங்கனைக்கண்டுகண்மிசைநீர்நெகிழ்த்திசை
குலவுமாறுவல்லார்குடிகொண்டகோட்டாற்றி
னிலவுமாமதிசேர்சடையுடைநின்மலாவெனவுன்னுவாரவ
ருலவுவானவரினுயர்வாகுவதுண்மையதே. (௭)

வண்டலார்வயற்சாலிபாலேவளம்பொலிந்திடவாபுனற்றிரை
கொண்டலார்கொணர்ந்தங்குலவுந்திகழ்கோட்டாற்றிற்
றெண்டலாந்துதிசெய்யநின்றதொழிலனேகழலாலரக்கனை
மிண்டெலாந்தவிர்த்தென்னுகந்திட்டவெற்றிமையே. (௮)

கருதிவந்தடியார்தொழுதெழக்கண்ணனோடயன்றேடவானையின்
குருதிமெய்கலப்பவுரிகொண்டுகோட்டாற்றில
விருதிறனமடமாதுநீயுமவியப்பொடுமுயர்கோயினமேவிவெள்
ளெருதுகந்தவனேயிரங்காயுனதின்னருளே. (௯)

உடையிலாதுழல்கின்றகுண்டருமூணருந்தவத்தாயசாக்கியர்
கொடையிலார்மனத்தார்குறையாருங்கோட்டாற்றிற்
படையிலார்மழுவேந்தியாடியபண்பனேயிவரென்கொலோநுனை
யடைகிலாதவண்ணமருளாயுன்னடியவர்க்கே. (௧௦)

காலனைக்கழலாலுதைத்தொருகாமனைக்கனலாகச்சீறிமெய்
கோலவார்குழலாள்குடிகொண்டகோட்டாற்றின
மூலனைமுடிவொன்றிலாதவெம்முத்தனைப்பயில்பந்தன்சொல்லிய
மாலைபத்தும்வல்லார்க்கெளிதாகும்வானகமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - ஐராபதேசுவரர், தேவியார் - வண்டமர்பூங்குழலம்மை.

## திருப்புறவார் - பனங்காட்டூர் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

விண்ணமர்ந்தனமும்மதில்களைவீழவெங்கணையாலெய்தாய்விரி
பண்ணமர்ந்தொலிசேர்புறவார்பனங்காட்டூர்ப்
பெண்ணமர்ந்தொருபாகமாகியபிஞ்ஞகாபிறைசேர்நுதலிடைக்
கண்ணமர்ந்தவனேகலந்தார்க்கருளாயே (க)

நீடல்கோடலலரவெண்முல்லைமலர்நிரைத்தாதளஞ்செய்யப்
பாடலவண்டறையும்புறவார்பனங்காட்டூர்த்
தோடிலங்கியகாதயன்மின்னிலங்கவெண்குழைதுள்ளநள்ளிரு
ளாடுஞ்சங்கரனேயடைந்தார்க்கருளாயே. (உ)

வாளையுங்கயலும்மிளிர்பொய்கைவார்புனற்கரையருகெலாம்வயற்
பாளையொண்கமுகம்புறவார்பனங்காட்டூர்ப்
பூளையுநறுங்கொன்றையுமதமத்தமும்புனைவாய்கழலிணைத்
தாளையேபரவுந்தவத்தார்க்கருளாயே. (௩)

மேய்ந்திளஞ்செந்நெல்மென்கதிர்கவ்விமேற்படுகலின்மேதிவைகறை
பாய்ந்ததண்பழனப்புறவார்பனங்காட்டூ
ராய்ந்தநான்மறைபாடியாடுமடிகளென்றென்றரற்றிநன்மலர்
சாய்ந்தடிபரவுந்தவத்தார்க்கருளாயே. (ச)

செங்கயலொடுசேல்செருச்செயச்சீறியாழ்முரறேனினத்தொடு
பங்கயம்மலரும்புறவார்பனங்காட்டூர்க்
கங்கையும்மதியுங்கமழ்சடைக்கேண்மையாளொடுங்கூடிமான்மறி
யங்கையாடலனேயடியார்க்கருளாயே. (ரு)

நீரினார்வரைகோலிமால்கடனீடியபொழில்சூழ்ந்துவைகலும்
பாரினார்பிரியாப்புறவார்பனங்காட்டூர்க்
காரினார்மலர்க்கொன்றைதாங்குகடவுளென்றுகைகூப்பிநாடொறுஞ்
சீரினால்வணங்குந்திறத்தார்க்கருளாயே (சா)

கையரிவையர்மெல்விரலவைகாட்டியம்மலர்க்காந்தளங்குறி
பையராவிரியும்புறவார்பனங்காட்டூர்
மெய்யரிவையோர்பாகமாகவுமேவினாய்கழலேத்திநாடொறும்
பொய்யிலாவடிமைபுரிந்தார்க்கருளாயே (எ)

தூவியஞ்சிறைமென்னடையனமல்கியொல்கியதூமலர்ப்பொய்கைப்
பாவில்வண்டறையும்புறவார்பனங்காட்டூர்
மேவியந்நிலையாயரக்கனதோளடர்த்தவன்பாடல்கேட்டரு
ளேவியெம்பெருமானென்பவர்க்கருளாயே (அ)

அந்தண்மாதவிபுன்னைநல்லவசோகமும்மரவிந்தமல்லிகை
பைந்தண்ஞாழல்கள்சூழ்புறவார்பனங்காட்டூ
ரெந்திளமுகில்வண்ணனான்முகனென்றிவர்க்கரிதாய்நிமிர்ந்ததோர்
சந்தமாயவனேதவத்தார்க்கருளாயே. (கூ)

நீணமார்முருகுண்டுவண்டினநீலமாமலர்கவ்விநேரிசை
பாணில்யாழ்முரலும்புறவார்பனங்காட்டூர்
நாணழிந்துழலவார்சமணருநண்பில்சாக்கியருநகத்தலை
யூணுரியவனையுகப்பார்க்கருளாயே. (௧௦)

மையினார்மணிபோன்மிடற்றனைமாசில்வெண்பொடிப்பூசுமார்பனைப்
பையதேன்பொழில்சூழ்புறவார்பனங்காட்டூ
ரையனைப்புகழானகாழியுளாய்ந்தநான்மறைஞானசம்பந்தன்
செய்யுள்பாடவல்லார்சிவலோகஞ்சேர்வாரே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

நடுநாட்டிலுள்ளது

சுவாமிபெயர் - பனங்காட்டீசுவரர், தேவியார் - திருப்புருவமின்னாளம்மை.

---

## ஸ்ரீபுகலி - பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

உருவார்ந்தமெல்லியலோர்பாகமுடையீரடைந்தோர்க்குக்
கருவார்ந்தவானுலகங்காட்டிக்கொடுத்தல்கருத்தானீர்
பொருவார்ந்ததெண்கடலொண்சங்கந்திளைக்கும்பூம்புகலித்
திருவார்ந்தகோயிலேகோயிலாகத்திகழ்ந்தீரே. (௧)

நீரார்ந்தசெஞ்சடையீர்நிரையார்கழல்சேர்பாதத்தீ
ரூரார்ந்தசில்பலியீருழைமானுரிதோலாடையீர்
பேரார்ந்ததெண்டிரைசென்றணையுங்கானற்பூம்புகலிச்
சீரார்ந்தகோயிலேகோயிலாகச்சேர்ந்தீரே. (௨)

அழிமல்குபூம்புனலுமரவுஞ்சடைமேலடைவெய்த
மொழிமல்குமாமறையீர்கறையார்கண்டத்தெண்டோளீர்
பொழின்மல்குவண்டினங்களறையுங்கானற்பூம்புகலி
யெழின்மல்குகோயிலேகோயிலாகவிருந்தீரே (௩)

கையிலார்ந்தவெண்மழுவொன்றுடையீர்கரியகரியின்றோன்
மயிலார்ந்தசாயன்மடமங்கைவெருவமெய்போர்த்தீர்
பயிலார்ந்தவேதியர்கள்பதியாய்விளங்கும்பைம்புகலி
யெயிலார்ந்தகோயிலேகோயிலாகவிசைந்தீரே (௪)

நாவார்ந்தபாடலீராடலரவமரைக்கார்த்தீர்
பாவார்ந்தபல்பொருளின்பயன்களானீரயன்பேணும்
பூவார்ந்தபொய்கைகளும்வயலுஞ்சூழ்ந்தபொழிற்புகலித்
தேவார்ந்தகோயிலேகோயிலாகத்திகழ்ந்தீரே (௫)

மண்ணார்ந்தமணமுழவந்ததும்பமலையான்மகளென்னும்
பெண்ணார்ந்தமெய்ம்மகிழப்பேணியெரிகொண்டாடினீர்
விண்ணார்ந்தமதியமிடைமாடத்தாரும்வியன்புகலிக்
கண்ணார்ந்தகோயிலேகோயிலாகக்கலந்தீரே. (௬)

களிபுல்குவல்லவுணரூர்மூன்றெரியக்கணைதொட்ட
ரளிபுல்குபூமுடியீரமரரேத்தவருள்செய்தீர்
தெளிபுல்குதேனினமுமலருள்விரைசேர்திண்புகலி
யொளிபுல்குகோயிலேகோயிலாகவுகந்தீரே. (௭)

பரந்தோங்குபல்புகழ்சேரரக்கர்கோனைவரைக்கீழிட்
டுரந்தோன்றும்பாடல்கேட்டுகவையளித்தீருகவாதார்
புரந்தோன்றுமும்மதிலுமெரியச்செற்றீர்பூம்புகலி
வரந்தோன்றுகோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே (௮)

சலந்தாங்குதாமரைமேலயனுந்தரணியளந்தானுங்
கலந்தோங்கிவந்திழிந்துங்காணாவண்ணங்கனலானீர்
புலந்தாங்கியைம்புலனுஞ்செற்றார்வாழ்பூம்புகலி
நலந்தாங்குகோயிலேகோயிலாகநயந்தீரே. (௯)

நெடிதாயவன்சமணுநிறைவொன்றில்லாச்சாக்கியருங்
கடிதாயகட்டுரையாற்கழறமேலோர்பொருளானீர்
பொடியாருமேனியினீர்புகலிமறையோர்புரிந்தேத்த
வடிவாருங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௧௦)

ஒப்பரியபூம்புகலியோங்குகோயின்மேயானை
யப்பரிசிற்பதியானவணிகொண்ஞானசம்பந்தன
செப்பரியதண்டமிழாற்றெரிந்தபாடலிவைவல்லா
ரெப்பரிசிலிடராயநீங்கியிமையோருலகத்திருப்பாரே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

ஆ. பதிகம் - ௫௪.

## திருத்தலைச்சங்காடு - பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

நலச்சங்கவெண்குழையுந்தோடும்பெய்தோர்நால்வேதஞ்
சொலச்சங்கையில்லாதீர்சுடுகாடல்லாற்கருதீர்
குலைச்செங்காய்ப்பைங்கமுகின்குளிர்கொள்சோலைக்குயிலாலுந்
தலைச்சங்கைக்கோயிலேகோயிலாகத்தாழ்ந்தீரே. (௧)

துணிமல்குகோவணமுந்தோலுங்காட்டித்தொண்டாண்டா
மணிமல்குகண்டத்தீரண்டர்க்கெல்லாமாண்பானீர்
* பிணிமல்குநூன்மார்பர்பெரியோர்வாழ்தலைச்சங்கை
யணிமல்குகோயிலேகோயிலாகவமர்ந்தீரே. (௨)

சீர்கொண்டபாடலீர்செங்கண்வெள்ளேற்றூர்தியீர்
நீர்கொண்டும்பூக்கொண்டுநீங்காத்தொண்டர்நின்றேத்தத்
தார்கொண்டநூன்மார்பர்தக்கோர்வாழ்தலைச்சங்கை
யேர்கொண்டகோயிலேகோயிலாகவிருந்தீரே. (௩)

* பிணி - பிணித்தல்.

வேடஞ்சூழ்கொள்கையீர்வேண்டிநீண்டவெண்டிங்க
ளோடஞ்சூழ்கங்கையுமுச்சிவைத்தீர்தலைச்சங்கைக்
கூடஞ்சூழ்மண்டபமுமுன்குலாயவாசற்கொடித்தோன்று
மாடஞ்சூழ்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே (௪)

சூலஞ்சேர்கையினீர்சுண்ணவெண்ணீறாடலீர்
நீலஞ்சேர்கண்டத்தீர்நீண்டசடைமேனீரேற்றீ
ராலஞ்சேர்தண்கானலன்னமன்னுந்தலைச்சங்கைக்
கோலஞ்சேர்கோயிலேகோயிலாகக்கொண்டீரே. (௫)

நிலநீரொடாகாசமனல்காலாகிநின்றைந்து
புலனீர்மைபுறங்கண்டார்பொக்கஞ்செய்யார்போற்றோவார்
சலநீதரல்லாதார்தக்கோர்வாழுந்தலைச்சங்கை
நலநீரகோயிலேகோயிலாகநயந்தீரே. (௬)

அடிபுல்குபைங்கழல்களார்ப்பப்பேர்ந்தோரனலேந்திக்
கொடிபுல்குமென்சாயலுமையோர்பாகங்கூடினீர்
பொடிபுல்குநூன்மார்பர்புரிநூலாளர்தலைச்சங்கைக்
கடிபுல்குகோயிலேகோயிலாகக்கலந்தீரே. (௭)

திரையார்ந்தமாகடல்சூழ்தென்னிலங்கைக்கோமானை
வரையார்ந்ததோளடரவிரலாலூன்றுமாண்பினீ
ரரையார்ந்தமேகலையீரந்தணாளர்தலைச்சங்கை
நிரையார்ந்தகோயிலேகோயிலாகநினைந்தீரே. (௮)

பாயோங்குபாம்பணைமேலானும்பைந்தாமரையானும்
போயோங்கிக்காண்கிலார்புறநின்றோரார்போற்றோவார்
தீயோங்குமறையாளர்திகழுஞ்செல்வத்தலைச்சங்கைச்
சேயோங்குகோயிலேகோயிலாகச்சேர்ந்தீரே. (௯)

அலைபாருமபுனறுறந்தவமணர்குண்டர்சாக்கியர்
தொலையாதங்கலர்தூற்றத்தோற்றங்காட்டியாட்கொண்டீர்
தலையானநால்வேதந்தரித்தார்வாழுந்தலைச்சங்கை
நிலையார்ந்தகோயிலேகோயிலாகநின்றீரே. (௧௦)

களிருமபுனற்காழிநல்லஞானசம்பந்தன்
குளிருந்தலைச்சங்கையோங்குகோயின்மேயானை
யொளிருமபிறையானையுரைத்தபாடலிவைவல்லார்
மிளிருந்திரைசூழ்ந்தவையத்தார்க்குமேலாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-செங்கணாயகேசுவரர், தேவியார்-சௌந்தரியம்மை.

## திருவிடைமருது - பண் - காந்தாரம்.

### திருச்சிற்றம்பலம்

பொங்குநூன்மார்பினீர்பூதப்படையினீர்பூங்கங்கை
தங்குசெஞ்சடையினீர்சாமவேதமோதினீ
ரெங்குமெழிலார்மறையோர்கண்முறையாலேத்தவிடைமருதின்
மங்குறோய்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௧)

நீரார்ந்தசெஞ்சடையீர்நெற்றித்திருக்கண்ணிகழ்வித்தீர்
பேரார்ந்தவெண்மழுவொன்றுடையீர்பூதம்பாடலீ
ரேரார்ந்தமேகலையாள்பாகங்கொண்டீரிடைமருதிற்
சீரார்ந்தகோயிலேகோயிலாகச்சேர்ந்தீரே. (௨)

அழன்மல்குமங்கையிலேந்திப்பூதமவைபாடச்
கழன்மல்குமாடலீர்சுடுகாடல்லாற்கருதாதீ
ரெழின்மல்குநான்மறையோர்முறையாலேத்தவிடைமருதிற்
பொழின்மல்குகோயிலேகோயிலாகப்பொலிந்தீரே. (௩)

பொல்லாப்படுதலையொன்றேந்திப்புறங்காட்டாடலீர்
வில்லாற்புரமூன்றுமெரித்தீர்விடையார்கொடியினீ
ரெல்லாக்கணங்களுமுறையாலேத்தவிடைமருதிற்
செல்வாய்கோயிலேகோயிலாகச்சேர்ந்தீரே. (௪)

வருந்தியமாதவத்தோர்வானோரேனோர்வந்தீண்டிப்
பொருந்தியதைப்பூசமாடியுலகம்பொலிவெய்தத்
திருந்தியநான்மறையோர்சீராலேத்தவிடைமருதிற்
பொருந்தியகோயிலேகோயிலாகப்புக்கீரே. (௫)

சலமல்குசெஞ்சடையீர்சாந்தநீறுபூசினீர்
வலமல்குவெண்மழுவொன்றேந்திமயானத்தாடலீ
ரிலமல்குநான்மறையோரினிதாயேத்தவிடைமருதிற்
புலமல்குகோயிலேகோயிலாகப்பொலிந்தீரே. (௬)

புனமல்குகொன்றையீர்புலியினதளீர்பொலிவார்ந்த
சினமல்குமால்விடையீர்செய்யீர்கரியகண்டத்தீ
ரினமல்குநான்மறையோரேத்துஞ்சீர்கொளிடைமருதிற்
கனமல்குகோயிலேகோயிலாகக்கலந்தீரே. (௭)

சிலையுய்த்தவெங்கணையாற்புரமூன்றெரித்தீர்திறலரக்கன்
றலைபத்துந்திண்டோளுநெரித்தீர்தையல்பாகத்தீ
ரிலைமொய்த்ததண்பொழிலும்வயலுஞ்சூழ்ந்தவிடைமருதி
னலமொய்த்தகோயிலேகோயிலாகநயந்தீரே. (௮)

மறைமல்குநான்முகனுமாலுமறியாவண்ணத்தீர்
கறைமல்குகண்டத்தீர்கபாலமேந்துகையினீ
ரறைமல்குவண்டினங்களாலுஞ்சோலையிடைமருதி
னிறைமல்குகோயிலேகோயிலாகநிகழ்ந்தீரே. (௯)

சின்போர்வைச்சாக்கியருமாசுசேருஞ்சமணருந்
துன்பாயகட்டுரைகள்சொல்லியல்லாற்றவே
யின்பாயவந்தணர்களேத்துமேர்கோளிடைமருதி
லன்பாயகோயிலேகோயிலாகவமர்ந்தீரே. (௧0)

கல்லின்மணிமாடக்கழுமலத்தார்காவலவ
னல்லவருமறையானற்றமிழ்ஞானசம்பந்த
னெல்லியிடைமாநிலேத்துபாடலிவைபத்துஞ்
சொல்லுவார்க்குங்கேட்பார்க்குந்துயரமில்லையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருஇந்திரநீலபருப்பதம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

பெண்ணமருந்திருமேனியுடையீர்பிறங்குசடைதாழப்
பண்ணமருநான்மறையேபாடியாடல்பயில்கின்றீர்
திண்ணமரும்பைம்பொழிலும்வயலுஞ்சூழ்ந்ததிருநல்லூர்
மண்ணமருங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௧)

அலைமல்குதண்புனலும்பிறையுஞ்சூடியங்கையிற்
கொலைமல்குவெண்மழுவுமனலுமேந்துங்கொள்கையீர்
சிலைமல்குவெங்கணையாற்புரமூன்றெரித்தீர்திருநல்லூர்
மலைமல்குகோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௨)

குறைநிரம்பாவெண்மதியஞ்சூடிக்குளிர்புன்சடைதாழப்
பறைநவின்றபாடலோடாடல்பேணிப்பயில்கின்றீர்
சிறைநவின்றதண்புனலும்வயலுஞ்சூழ்ந்ததிருநல்லூர்
மறைநவின்றகோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௩)

கூனமருமவெண்பிறையும்புனலுஞ்சூடுங்கொள்கையீர்
மானமருமென்விழியாள்பாகமாகுமாண்பினீர்
தேனமருமபைம்பொழிலின்வண்டுபாடுந்திருநல்லூர்
வானமருங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௪)

நிணங்கவருமூவிலையுமனலுமேந்திநெறிகுழலா
ளணங்கமரும்பாடலோடாடன்மேவுமழகினீர்
திணங்கவருமாடரவும்பிறையுஞ்சூடிததிருநல்லூர்
மணங்கமழுங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே (௫)

காரமருவுபூங்கொன்றைசூடிக்கமழ்புன்சடைதாழ
வாரமருவுமென்முலையாள்பாகமாகுமாண்பினீர்
தேரமருவுநெடுவீதிக்கொடிகளாடுந்திருநல்லூ
ரேரமருவுகோயிலேகோயிலாகவிருந்தீரே. (௬)

ஊன்றோயும்வெண்மழுவுமனலுமேந்தியுமைகாண
மீன்றோயுந்திசைநிறையவோங்கியாடும்வேடத்தீர்

தேனன்றேயும்மைபம்பொழிலின்வண்டுபாடுந்திருநல்லூர்
வானன்றேயுங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (எ)

காதமரும்வெண்குழையீகறுத்தவரக்கன்மலையெடுப்ப
மாதமருமென்மொழியாண்மறுகுமவண்ணங்கண்டுகந்தீர்
தீதமராவந்தணாகளீபரவியேத்துந்திருநல்லூர்
மாதமருங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (அ)

போதின்மேலயன்றிருமால்போற்றியும்மைககாணாது
நாதனேயிவனென்றுநயந்தேததமகிழ்ந்தளித்தீர்
தீதிலாவந்தணர்கடீமூனறோம்புந்திருநலலூா
மாதராளவளோடுமன்னுகோயினமகிழ்ந்தீரோ (கூ)

பொலலாதசமணரொடுபுறங்கூறுஞ்சாக்கியரொன
றலலாதாரறவுரைவிட்டடியார்களபோற்றேவா
நலலாாகளந்தணாகளுளுமேத்துந்திருநல்லூா
மல்லார்ந்தகோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே (கo)

கொந்தணவும்பொழில்புடைசூழ்கொச்சைமேவுகுலவேந்தன
செந்தமிழின்சமபந்தன்சிறைவண்புனல்சூழ்திருநலலூாப
பந்தணவுமெலவிரலாளபங்கனைறனைப்பயிலபாடல
சிந்தனையாலுரைசெய்வாாசிவலோகஞ்சேருந்திருபபாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருக்குடவாயில் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

கலைவாழுமங்கையீர்கொங்கையாருங்கருங்கூந்த
லலைவாழுஞ்செஞ்சடையிலரவும்பிறையுமமர்வித்தீர்
குலைவாழைகமுகமபொனபவளமபழுகருங்குடவாயி
னிலைவாழுங்கோயிலேகோயிலாகநினறீரே. (க)

அடியார்ந்தபைங்கழலுஞ்சிலமபுமார்ப்பவங்கையிற்
செடியார்ந்தவெண்டலையொனறேந்தியுலகம்பலிதேர்வீர்
குடியார்ந்தமாமறையோர்குலாவியேத்துங்குடவாயிற்
படியார்ந்தகோயிலேகோயிலாகப்பயின்றீரே. (உ)

கழலார்பூம்பாதத்தீரோதக்கடலில்விடமுண்டன்
றழலாருங்கண்டத்தீரண்டர்போற்றுமளவினீர்
குழலாரவண்டினங்கள்கீதத்தொலிசெய்குடவாயி
னிழலார்ந்தகோயிலேகோயிலாகநிகழ்ந்தீரே. (ங)

மறியாருங்கைத்தலத்தீர்மங்கைபாகமாகச்சேர்ந்
தெறியாருமாமழுவுமெரியுமேந்துங்கொள்கையீர்
குறியார்ந்தவண்டினங்கடேன்மிழற்றுங்குடவாயி
னெறியாருங்கோயிலேகோயிலாகநிகழ்ந்தீரே. (ச)

இழையார்ந்தகோவணமுங்கீளுமெழிலாருடையாகப்
பிழையாதசூலம்பெய்தாடல்பாடல்பேணினீர்
குழையாரும்பைம்பொழிலும்வயலுஞ்சூழ்ந்தகுடவாயில்
விழவார்ந்தகோயிலேகோயிலாகமிக்கீரே. (ரு)

அரவார்திருமேனியானவெண்ணீறாடினீ
ரிரவார்ந்தபெய்பலிகொண்டிமையோரேத்தநஞ்சுண்டீர்
குரவார்ந்தபூஞ்சோலைவாசம்வீசுங்குடவாயிற்
றிருவார்ந்தகோயிலேகோயிலாகத்திகழ்ந்தீரே. (சு)

பாடலார்வாய்மொழியீர்பைங்கண்வெள்ளேறூர்தியீ
ராடலார்மாநடத்தீரரிவைபோற்றுமாற்றலீர்
கோடலார்தும்பிமுரன்றிசைமிழற்றுங்குடவாயி
னீடலார்கோயிலேகோயிலாகநிகழ்ந்தீரே. (எ)

கொங்கார்ந்தபைங்கமலத்தயனுக்குறளாய்நிமிர்ந்தானு
மங்கார்ந்துதள்ளாடவழலாய்நிமிர்ந்தீரிலங்கைக்கோன்
றங்காதன்மாமுடியுந்தோளுமடர்த்தீர்குடவாயிற்
பங்கார்ந்தகோயிலேகோயிலாகப்பரிந்தீரே. (அ-கூ)

தூசார்ந்தசாக்கியருந்தூய்மையில்லாச்சமணரு
மேசார்ந்தபுன்மொழிநீத்தெழில்கொண்மாடக்குடவாயி
லாசாரஞ்செய்மறையோரளவிற்குன்றாதடிபோற்றத்
தேசார்ந்தகோயிலேகோயிலாகச்சேர்ந்தீரே. (௧௦)

நளிர்பூந்திரைமல்குகாழிஞானசம்பந்தன்
குளிர்பூங்குடவாயிற்கோயின்மேயகோமானை
யொளிர்பூந்தமிழ்மாலையுரைத்தபாடலிவைவல்லார்
தளர்வானதானொழியத்தகுசீர்வானத்திருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சீகாழி - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

நலங்கொண்முத்துமணியுமணியுந்திரளோதக்
கலங்கடன்னிற்கொண்டுகரைசேர்கலிக்காழி
வலங்கொண்மழுவொன்றுடையாய்விடையாயெனவேத்தி
யலங்கல்சூட்டவல்லார்க்கடையாவருநோயே. (க)

ஊராருவரிச்சங்கம்வங்கங்கொடுவந்து
காராரோதங்கரைமேலுயர்த்துங்கலிக்காழி
நீரார்சடையாய்நெற்றிக்கண்ணாவென்றென்று
பேராயிரமும்பிதற்றத்தீரும்பிணிதானே. (உ)

வடிகொள்பொழிலின்மழலைவரிவண்டிசைசெய்யக்
கடிகொள்போதிற்றென்றலணையுங்கலிக்காழி

முடிகொள்சடையாய்முதல்வாவென்றுமுயன்றேத்தி
யடிகைதொழுவார்க்கில்லையல்லலவலமே. (௩)

மனைக்கேயேறவளஞ்செய்பவளம்வளர்முத்தங்
கனைக்குங்கடலுளோதமேறுங்கலிக்காழிப்
பனைக்கைப்பகட்டீருரியாய்பெரியாயெனப்பேணி
நினைக்கவல்லவடியார்நெஞ்சினல்லாரே. (௪)

பருதியியங்கும்பாரிற்சீரார்பணியாலே
கருதிவிண்ணோர்மண்ணோர்விரும்புங்கலிக்காழிச்
சுருதிமறைநான்கானசெம்மைதருவானைக்
கருதியெழுமின்வழுவாவண்ணந்துயர்போமே. (௫)

மந்தமருவும்பொழிலெழிலார்மதுவுண்டு
சந்தமருவவரிவண்டிசைசெய்கலிக்காழிப்
பந்தநீங்கவருளும்பரனேயெனவேத்திச்
சிந்தைசெய்வார்செம்மைநீங்காதிருப்பாரே. (௬)

புயலார்பூமிநாமமோதிப்புகழ்மல்கக்
கயலார்கண்ணார்பண்ணாரொலிசெய்கலிக்காழிப்
பயில்வான்றன்னைப்பத்தியாரத்தொழுதேத்த
முயல்வார்தம்மேல்வெம்மைக்கூற்றமுடுகாதே. (எ)

அரக்கன்முடிதோளணரியவடர்த்தானடியார்க்குக்
கரக்கில்லாதருள்செய்பெருமான்கலிக்காழிப்
பரக்கும்புகழான்றனையேத்திப்பணிவார்மேற்
பெருக்குமினபந்தனபமானபிணிபோமே. (அ)

மாணுயுலகங்கொண்டமாலுமலரோனுங்
காணவண்ணமெரியாய்நிமிர்ந்தான்கலிக்காழிப
பூணாமுலையாள்பங்கத்தானைப்புகழ்ந்தேத்திக்
கோணாநெஞ்சமுடையார்க்கில்லைகுற்றமே. (௯)

அஞ்சியல்லன்மொழிந்துதிரிவாரமணர்
கஞ்சிகாலையுண்பார்க்கரியான்கலிக்காழித்
தஞ்சமாயதலைவன்றன்னைநினைவார்க
டுஞ்சலில்லாநல்லவுலகம்பெறுவாரே. (௰)

ஊழியாயபாரிலோங்குமுயர்செல்வக்
காழியீசன்கழலேபேணுஞ்சம்பந்தன
்றமுமந்தாலுரைத்ததமிழ்களிவைவல்லார்
வாழிநீங்குவானோருலகின்மகிழ்வாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருப்பாசூர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

சிந்தையிடையார்தலையின்மிசையார்செஞ்சொல்லார்
வந்துமாலைவைகும்போழ்தென்மனத்துள்ளார்
மைந்தர்மணாளரென்னமகிழ்வாரூர்போலும்
பைந்தண்மாதவிசோலைசூழ்ந்தபாசூரே. (க)

பேரும்பொழுதும்பெயரும்பொழுதும்பெம்மானென்
றாருந்தனையுமடியாரேத்தவருள்செய்வா
ரூருமரவமுடையார்வாழுமூர்போலும்
பாரின்மிசையார்பாடலோவாப்பாசூரே. (உ)

கையாற்றொழுதுதலைசாய்த்துள்ளங்கசிவார்கண்
மெய்யார்குறையுந்துயருந்தீர்க்கும்விகிர்தனா
ரெய்யாடுதலஞ்சுடையார்நிலாவுமூர்போலும்
பைவாய்நாகங்கோடலீனும்பாசூரே (௩)

பொங்காடரவும்புனலுஞ்சடைமேற்பொலிவெய்தக்
கொங்கார்கொன்றைசூடியென்னுள்ளங்குளிர்வித்தார்
தங்காதலியுந்தாமும்வாழுமூர்போலும்
பைங்கான்முல்லைபல்லரும்பீனும்பாசூரே (௪)

ஆடற்புரியுமைவாயரவொன்றரைச்சாத்துஞ்
சேடச்செல்வர்சிந்தையுளென்றும்பிரியாதார்
வாடற்றலையிற்பலிதேர்கையாரூர்போலும்
பாடற்குயில்கள்பயில்பூஞ்சோலைப்பாசூரே (௫)

கானின்றதிரக்கனல்வாய்நாகங்கச்சாகத்
தோலொன்றுடையார்விடையார்தம்மைத்தொழுவார்கண்
மால்கொண்டோடமையறீர்ப்பாரூர்போலும்
பாலவெண்மதிதோய்மாடஞ்சூழ்ந்தபாசூரே. (சா)

கண்ணினயலேகண்ணொன்றுடையார்கழலுன்னி
யெண்ணுந்தனையுமடியாரேத்தவருள்செய்வா
ருண்ணின்றுருகவுவகைதருவாரூர்போலும்
பண்ணின்மொழியார்பாடலோவாப்பாசூரே. (எ)

தேசுகுன்றத்தெண்ணீரிலங்கைக்கோமானைக்
கூசவடர்த்துக்கூர்வாள்கொடுப்பார்தம்மையே
பேசிப்பிதற்றப்பெருமைதருவாரூர்போலும்
பாசித்தடமும்வயலுஞ்சூழ்ந்தபாசூரே. (அ)

நகுவாய்மலர்மேலயனுநாகத்தணையானும்
புகுவாயறியார்புறநின்றோரார்போற்றோவார்

செருவாயுகுபற்றலைசேர்கையாரூர்போலும்
பருவாய்நாரையாரல்வாரும்பாசூரே. (௯)

தூயவெயினின்றுழல்வார்துவர்தோயாடையார்
நாவில்வெய்யசொல்லித்திரிவார்நயமில்லா
காவல்வேவக்கணையையெனறெய்தானூர்போலும
பாவைக்குரவம்பயில்பூஞ்சோலைப்பாசூரே. (௧0)

ஞானமுணர்வானகாழிஞானசம்பந்தன்
றேனுமவண்டுமினனிசைபாடுந்திருப்பாசூர்க்
கானமுறைவார்கழல்சேர்பாடலிவைவல்லா
ரூனமிலராயும்பர்வானத்துறைவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம

தொண்டைநாட்டிலுள்ளது
சுவாமிபெயர் - பாசூர்நாதர், தேவியார் - பசுபதிநாயகி
ஆ பதிகம் - ௬0

## திருவெண்காடு - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

உண்டாய்நஞ்சையுமையோர்பங்காவென்றுள்கித்
தொண்டாய்த்திரியுமடியார்தங்கடுயரங்க
ளண்டாவண்ணமறுப்பானெந்தையூர்போலும
வெண்டாமரைமேற்கருவண்டியாழ்செய்வெண்காடே. (௧)

நாதனமமையாள்வானென்றுநவின்றேத்திப்
பாதம்பன்னாள்பணியுமடியார்தங்கண்மே
லேதந்தீரவிருந்தானவாழுமூர்போலும
வேதத்தொலியாற்கிளிசொற்பயிலும்வெண்காடே (௨)

தண்முத்தரும்பத்தடமூன்றுடையான்றனையுன்னிக்
கண்முத்தரும்பக்கழற்சேவடிகைதொழுவார்க
ளுண்முத்தரும்பவுவகைதருவானூர்போலும்
வெண்முத்தருவிப்புனல்வந்தலைக்கும்வெண்காடே. (௩)

நரையார்வந்துநாளுங்குறுகிநணுகாமுன்
னுரையால்வேறாவுள்குவார்களுள்ளத்தே
கரையாவண்ணங்கண்டான்மேவுமூர்போலும
விரையார்கமலத்தன்னமருவும்வெண்காடே. (௪)

பிள்ளைப்பிறையும்புனலுஞ்சூடும்பெம்மானென
றுள்ளத்துள்ளித்தொழுவார்தங்களுறுநோய்க
டள்ளிப்போகவருளுந்தலைவனூர்போலும
வெள்ளைச்சுரிசங்குலவித்திரியும்வெண்காடே. (௫)

ஒளிகொண்மேனியுடையாயும்பராளீயென்
றளியராகியழுதுற்றூறுமடியார்கட்
கெளியானமரர்க்கரியான்வாழுமூர்போலும்
வெளியவுருவிலானைவணங்கும்வெண்காடே. (௬)

கோள்வித்தனையகூற்றந்தன்னைக்குறிப்பினான்
மாள்வித்தவனைமகிழ்ந்தங்கேத்தமாணிக்கா
யாள்வித்தமரருலகமளிப்பானூர்போலும்
வேள்விப்புகையால்வானமிருள்கூர்வெண்காடே. (௭)

வளையார்முன்கைமலையாள்வெருவவரையூன்றி
முளையார்மதியஞ்சூடியென்றுமுப்போது
மிளையாதேத்தவிருந்தானெந்தையூர்போலும்
விளையார்கழனிப்பழனஞ்சூழ்ந்தவெண்காடே. (௮)

கரியானோடுகமலமலரானகாணாமை
யெரியாய்நிமிர்ந்தவெங்கள்பெருமானென்பார்கட்
குரியானமரர்க்கரியானவாழுமூர்போலும்
விரியார்பொழிலின்வண்டுபாடும்வெண்காடே. (௯)

பாடுமடியார்பலருங்கூடிப்பரிந்தேத்த
வாடுமரவமசைத்தபெருமானறிவின்றி
மூடமுடையசமண்சாக்கியர்களுணராத
வேடமுடையபெருமானபதியாம்வெண்காடே. (௧௦)

விடையார்கொடியான்மேவியுறையும்வெண்காட்டைக
கடையார்மாடங்கலந்துதோன்றுங்காழியா
னடையாரின்சொன்ஞானசம்பந்தன்றமிழ்வல்லார்க்
கடையாவினைகளமரலோகமாள்வாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருமீயச்சூர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

காயச்செவ்விக்காமற்காய்ந்துகங்கையைப்
பாயப்படர்புன்சடையிற்பதித்தபரமேட்டி
மாயச்சூரன்றறுத்தமைந்தன்றாதைதன்
மீயச்சூரேதொழுதும்வினையைவீட்டுமே. (௧)

பூவார்சடையின்முடிமேற்புனலரனல்கொள்வார்
நாவார்மறையர்பிறையர்நறவெண்டலையேந்தி
யேவார்மலையேசிலையாக்கழியம்பெரிவாங்கி
மேவார்புரமூன்றெரித்தார்மீயச்சூராரே. (௨)

பொன்னேர்கொன்றைமாமலர்புரளுமகலத்தான்
மின்னேர்சடைகளுடையான்மீயச்சூரானைத்

தன்னேர்பிறரில்லானைத்தலையால்வணங்குவார்க்
கன்னேரிமையோருலகமெய்தற்கரிதன்றே. (௩)

வேகமதநல்லியானைவெருவவுரிபோர்த்துப்
பாகமுமையோடாகப்படிதம்பலபாட
நாகமரைமேலசைத்துநடமாடியநம்பன்
மேகமுரிஞ்சும்பொழில்சூழ்மீயச்சூரானே. (௪)

விடையார்கொடியார்சடைமேல்விளங்கும்பிறைவேடம
படையார்பூதஞ்சூழப்பாடலாடலார்
பெடையாரவரிவண்டணையும்பிணைசேர்கொன்றையார்
விடையார்நடையொன்றுடையார்மீயச்சூராரே. (௫)

குளிருஞ்சடைகொண்முடிமேற்கோலமார்கொன்றை
யொளிரும்பிறையொன்றுடையானொருவன்கைகோடி
நளிரும்மணிசூழ்மாலைநட்டநவினம்பன்
மிளிரும்மரவமுடையான்மீயச்சூரானே. (௬)

நீலவடிவாமிடறுநெடியர்நிகரில்லார்
கோலவடிவுதமதாங்கொள்கையறிவொண்ணார்
காலாகழற்கரியினுரியர்மழுவாளர்
மேலர்மதியர்விதியர்மீயச்சூராரே. (௭)

புலியினுரிதோலாடைபூசும்பொடிநீற்ற
ரொலிகொள்புனலோர்சடைமேற்கரந்தாருமையஞ்ச
வலியதிரடோள்வன்கணரக்கர்கோன்றன்னை
மெலியவரைக்கீழடர்த்தார்மீயச்சூராரே. (௮)

காதின்மிளிருங்குழையர்கரியகண்டத்தார்
போதிலவனுமாலுந்தொழப்பொங்கெரியானார்
கோதிவரிவண்டறைபூம்பொய்கைப்புனன்மூழ்கி
மேதிபடியும்வயல்சூழ்மீயச்சூராரே. (௯)

கண்டார்நாணும்படியார்கலிங்கமுடைபட்டை
கொண்டோர்சொல்லைக்குறுகாருயர்ந்தகொள்கையார்
பெண்டான்பாகமுடையார்பெரியவரைவில்லால்
விண்டார்புரமூன்றெரித்தார்மீயச்சூராரே. (௧௦)

வேடமுடையபெருமானுறையுமீயச்சூர்
நாடும்புகழார்புகலிஞானசம்பந்தன்
பாடலாயதமிழீரைந்துமொழிந்துள்கி
யாடுமடியாரகல்வானுலகமடைவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - முயற்சிநாதேசுவரர், தேவியார் - சுந்தரநாயகியம்மை.

## அரிசிற்கரைத்திருப்புத்தூர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மின்னுஞ்சடைமேலிளவெண்டிங்கள்விளங்கவே
துன்னுங்கடனஞ்சிருடோய்கண்டர்தொன்மூதூ
ரன்னம்படியும்புனலாரரிசிலலைகொண்டு
பொன்னும்மணியும்பொருதென்கரைமேற்புத்தூரே. (௧)

மேவாவசுரர்மேவெயில்வேவமலைவில்லா
லேவாரெரிவெங்கணையாலெய்தானெய்துமூர்
நாவானாதனாமமோதிநாடோறும்
பூவானீராற்பூசுரர்போற்றும்புத்தூரே. (௨)

பல்லார்தலைசேர்மாலைசூடிப்பாம்பும்பூண்
டெல்லாவிடமும்வெண்ணீறணிந்தோரேறேறி
கல்லான்மங்கைபங்கரேனுங்காணுங்காற்
பொல்லாரல்லரழகியர்புத்தூர்ப்புனிதரே. (௩)

வரியேர்வளையாளரிவையஞ்சவருகின்ற
கரியேருரிவைபோர்த்தகடவுள்கருதுமூ
ரரியோகழனிப்பழனஞ்சூழ்ந்தங்கழகாய
பொயேர்புன்குசொரிபூஞ்சோலைப்புத்தூரே. (௪)

என்போடரவமேனத்தெயிறோடெழிலாமை
மின்போற்புரிநூல்விரவிப்பூண்டமணிமார்ப
ரன்போடுருகுமடியார்க்கன்பர்மருவுமூர்
பொன்போதலர்கோங்கோங்குசோலைப்புத்தூரே. (௫)

வள்ளிமுலைதோய்குமரன்றாதைவான்றோயும்
வெள்ளிமலைபோல்விடையொன்றுடையான்மேவுமூர்
தெள்ளிவருநீரரிசிற்றென்பாற்சிறைவண்டும்
புள்ளுமலிபூம்பொய்கைசூழ்ந்தபுத்தூரே. (௬)

நிலந்தணீரோடனல்கால்விசும்பினீர்மையான்
சிலந்திசெங்கட்சோழனாகச்செய்தானூ
ரலந்தவடியானற்றைக்கன்றோர்காசெய்திப்
புலர்ந்தகாலைமாலைபோற்றும்புத்தூரே (௭)

இத்தேரேகவிம்மலைபேர்ப்பனென்றேந்தும்
பத்தோர்வாயான்வரைக்கீழலறப்பாதந்தான்
வைத்தாரருள்செய்வரதன்மருவுமூரான
புத்தூர்காணப்புகுவார்வினைகள்போகுமே. (௮)

முள்ளார்கமலத்தயன்மான்முடியோடடிதேட
வொள்ளாரெரியாயுணர்தற்கரியானூர்போலும்

கள்ளார்நெய்தல்கழுநீராம்பல்கமலங்கள்
புள்ளார்பொய்கைப்பூப்பலதோன்றும்புத்தூரே. (௯)



கையார்சோறுகவர்குண்டர்களுந்துவருண்ட
மெய்யார்போர்வைமண்டையர்சொல்லுமெய்யல்ல
பொய்யாமொழியாலந்தணர்போற்றும்புத்தூர்
ஐயாவென்பார்க்கையுறவின்றியழகாமே. (௰)

நறவங்கமழ்பூங்காழிஞானசம்பந்தன்
பொறிகொளரவம்பூண்டானாண்டான்புத்தூர்மேற்
செறிவண்டமிழ்ச்செய்மாலைசெப்பவல்லார்க
ளறவன்கழல்சேர்ந்தன்போடின்பமடைவாரே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர்-படிக்காசளித்தஈசுவரர், தேவியார் - அழகம்மை.

## திருமுதுகுன்றம் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

தேவாசிறியோம்பிழையைப்பொறுப்பாய்பெரியோனே
யாவாவென்றங்கடியார்தங்கட்கருள்செய்வா
யோவாவுவரிகொள்ளவுயர்ந்தாயென்றேத்தி
மூவாமுனிவார்வணங்குங்கோயின்முதுகுன்றே. (௧)

எந்தையிவனென்றிரவிமுதலாவிறைஞ்சுவார்
சிந்தைபுள்ளேகோயிலாகத்திகழ்வானை
மந்தியேறியினமாய்மலர்கள்பலகொண்டு
முந்தித்தொழுதுவணங்குங்கோயின்முதுகுன்றே (௨)

நீடுமலருமபுனலுங்கொண்டுநிரந்தரம்
தேடுமடியார்சிந்தையுள்ளேதிகழ்வானைப்
பாடுகுயிலினயலேகிளைபயின்றேத்த
மூடுஞ்சோலைமுகில்தோய்கோயின்முதுகுன்றே. (௩)

தெரிந்தவடியார்சிவனேயென்றுதிசைதோறுங்
குருந்தமலருங்குரவினலருங்கொண்டேந்தி
யிருந்துநின்றுமிரவும்பகலுமேத்துஞ்சீர்
முரிந்துமேகந்தவழுஞ்சோலைமுதுகுன்றே. (௪)

வைத்தநிதியேமணியேயென்றுவருந்தித்தஞ்
சித்தநைந்துசிவனேயென்பார்சிந்தையார்
கொத்தார்சந்துங்குரவுமவாரிக்கொணர்ந்துந்து
முத்தாறுடையமுதல்வர்கோயின்முதுகுன்றே. (௫)

வம்பார்கொன்றைவன்னிமத்தமலர்தூவி
நம்பாவென்னநல்கும்பெருமானுறைகோயில்

கொம்பார்குரவுகொகுடிமுல்லைகுவிந்தெங்கு
மெய்ம்பாரிசோலைவண்டுபாடுமுதுகுன்றே. (சு-எ)

வாசங்கமழும்பொழில்சூழிலங்கைவாழ்வேந்தை
நாசஞ்செய்தநங்கள்பெருமானமர்கோயில்
பூசைசெய்தவடியார்நின்றுபுகழ்ந்தேத்த
மூசிவண்டுபாடுஞ்சோலைமுதுகுன்றே. (அ)

அல்லிமலர்மேலயனுமரவினணையானுஞ்
சொல்லிப்பரவித்தொடரவொண்ணாச்சோதியூர்
கொல்லைவேடர்கூடிநின்றுகும்மிட
முல்லையயலேமுறுவல்செய்யுமுதுகுன்றே. (௯)

கருகுமுடலார்கஞ்சியுண்டுகடுவேதின்
றுருகுசிந்தையில்லார்க்கயலானுறைகோயி
றிருகல்வேய்கள்சிறிதேவளையச்சிறுமந்தி
முருகினபணைமேலிருந்துநடஞ்செய்முதுகுன்றே. (௧௰)

அறையார்கடல்சூழ்ந்தண்காழிச்சம்பந்தன்
முறையான்முனிவர்வணங்குங்கோயின்முதுகுனறைக்
குறையாப்பனுவல்கூடிப்பாடவல்லார்கள்
பிறையாசடைபெம்பெருமான்கழல்கள்பிரியாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருப்பிரமபுரம் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

கறையணிவேலிலர்போலுங்கபாலந்தரித்திலர்போலு
மறையுநவின்றிலர்போலுமாசுணமார்த்திலர்போலும்
பறையுங்கரத்திலர்போலும்பாசம்பிடித்திலர்போலும்
பிறையுஞ்சடைக்கிலர்போலும்பிரமபுரமமர்ந்தாரே. (௧)

கூரம்பதுவிலர்போலுங்கொக்கினிறகிலர்போலு
மாரமும்பூண்டிலர்போலுமாமையணிந்திலர்போலுந்
தாருஞ்சடைக்கிலர்போலுந்தண்டிக்கருளிலர்போலும
பேரும்பலவிலர்போலும்பிரமபுரமமர்ந்தாரே. (௨)

சித்தவடிவிலர்போலுந்தேசந்திரிந்திலர்போலுங்
கத்திவருங்கடுங்காளிகதங்கடவிர்த்திலர்போலு
மெய்த்தநயனமிடந்தார்க்காழியளித்திலர்போலும்
பித்தவடிவிலர்போலும்பிரமபுரமமர்ந்தாரே. (௩)

நச்சரவாட்டிலர்போலுநஞ்சமிடற்றிலர்போலுங்
கச்சுதரித்திலர்போலுங்கங்கைதரித்திலர்போலு
மொய்ச்சவன்பேயிலர்போலுமுப்புரமெய்திலர்போலும்
பிச்சையிரந்திலர்போலும்பிரமபுரமமர்ந்தாரே. (௪)

தோடுசெவிக்கிலர்போலுஞ்சூலம்பிடித்திலர்போலு
மாடுதடக்கைவலியயானையுரித்திலர்போலு
மோடுகரத்திலர்போலுமொளளழல்கையிலர்போலும்
பீடுமிகுத்தெழுசெல்வப்பிரமபுரமமர்ந்தாரே. (௫)

விண்ணவர்கண்டிலர்போலும்வேள்வியழித்திலர்போலு
மண்ணலயனதலைவீழவனாறும்அறுத்திலர்போலும்
வண்ணவெலும்பினொடக்குவடங்கடரித்திலர்போலும்
பெண்ணினமொய்த்தெழுசெல்வப்பிரமபுரமமர்ந்தாரே. (௬)

பன்றியின்கொம்பிலர்போலும்பார்த்தற்கருளிலர்போலுங்
கன்றியகாலனைவீழக்கால்கொடுபாய்ந்திலர்போலுந்
துன்றுபிணஞ்சுடுகாட்டிலாடித்துதைந்திலர்போலும்
பின்றியுமபீடமபெருகுமபிரமபுரமமர்ந்தாரே. (௭)

பரசுதரித்திலர்போலும்படுதலைபூண்டிலர்போலு
மரசனிலங்கையர்கோனையன்றுமடர்த்திலர்போலும்
புரைசெய்புனத்திளமானும்புலியினதளிர்போலும்
பிரசமலர்ப்பொழில்சூழ்ந்தபிரமபுரமமர்ந்தாரே. (௮)

அடிமுடிமாலயன்றேடவன்றுமளப்பிலர்போலுங்
கடிமலரைங்கணைவேளைக்கனலவிழித்திலர்போலும
படிமலர்ப்பாலனுக்காகப்பாற்கடலீந்திலர்போலும
பிடிநடைமாதர்பெருகுமபிரமபுரமமர்ந்தாரே (௯)

வெற்றரைச்சீவரத்தார்க்குவெளிப்படநின்றிலர்போலு
மற்றவரானிறனுல்வர்க்கறங்களுரைத்திலர்போலு
முற்றவொனறிலர்போலுமோடுமுடிக்கிலர்போலும
பெற்றமூர்ந்திலர்போலும்பிரமபுரமமர்ந்தாரே (௧0)

பெண்ணுருவாணுருவல்லாப்பிரமபுரநகர்மேய
வண்ணல்செய்யாதனவெல்லாமறிந்துவகைவகையாலே
நண்ணியஞானசமபந்தனவின்றனபத்தும்வல்லார்கள்
விண்ணவரோடினிதாகவீற்றிருப்பாரவர்தாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

ஆ பதிகம் - கரு.

---

## திருவாலவாய் - திருநீற்றுப்பதிகம்.

திருச்சிற்றம்பலம்.

மந்திரமாவதுநீறுவானவர்மேலதுநீறு
சுந்தரமாவதுநீறுதுதிக்கப்படுவதுநீறு
தந்திரமாவதுநீறுசமயத்திலுள்ளதுநீறு
செந்துவர்வாயுமைபங்கன்திருவாலவாயான்திருநீறே. (௧)

வேதத்திலுள்ளதுநீறுவெந்துயர்தீர்ப்பதுநீறு
போதந்தருவதுநீறுபுன்மைதவிர்ப்பதுநீறு
வோதத்தகுவதுநீறுவுண்மையிலுள்ளதுநீறு
சீதப்புனல்வயல்சூழ்ந்ததிருவாலவாயான்றிருநீறே. (௨)

முத்திதருவதுநீறுமுனிவரணிவதுநீறு
சத்தியமாவதுநீறுதக்கோர்புகழ்வதுநீறு
பத்திதருவதுநீறுபரவவினியதுநீறு
சித்திதருவதுநீறுதிருவாலவாயான்றிருநீறே. (௩)

காணவினியதுநீறுகவினைத்தருவதுநீறு
பேணியணிபவர்கெல்லாம்பெருமைகொடுப்பதுநீறு
மாணந்தகைவதுநீறுமதியைத்தருவதுநீறு
சேணந்தருவதுநீறுதிருவாலவாயான்றிருநீறே. (௪)

பூசவினியதுநீறுபுண்ணியமாவதுநீறு
பேசவினியதுநீறுபெருந்தவத்தோர்களுக்கெல்லா
மாசைகெடுப்பதுநீறுவந்தமதாவதுநீறு
தேசம்புகழ்வதுநீறுதிருவாலவாயான்றிருநீறே. (௫)

அருத்தமாவதுநீறுவவலமறுப்பதுநீறு
வருத்தந்தணிப்பதுநீறுவானமளிப்பதுநீறு
பொருத்தமதாவதுநீறுபுண்ணியர்பூசும்வெண்ணீறு
திருத்தகுமாளிகைசூழ்ந்ததிருவாலவாயான்றிருநீறே. (௬)

எயிலதுவட்டதுநீறுவிருமைக்குமுள்ளதுநீறு
பயிலப்படுவதுநீறுபாக்கியமாவதுநீறு
துயிலைத்தடுப்பதுநீறுசுத்தமதாவதுநீறு
வயிலைப்பொலிதருசூலத்தாலவாயான்றிருநீறே. (௭)

இராவணன்மேலதுநீறுவெண்ணத்தகுவதுநீறு
பராவணமாவதுநீறுபாவமறுப்பதுநீறு
தராவணமாவதுநீறுதத்துவமாவதுநீறு
வராவணங்குந்திருமேனியாலவாயான்றிருநீறே. (௮)

மாலொடயனறியாதவண்ணமுமுள்ளதுநீறு
மேலுறைதேவர்கடங்கண்மெய்யதுவெண்பொடிநீறு
வேலவுடம்பிடர்தீர்க்குமின்பந்தருவதுநீறு
வாலமதுண்டமிடற்றெம்மாலவாயான்றிருநீறே. (௯)

குண்டிகைக்கையர்களோடுசாக்கியர்கூட்டமுங்கூடக்
கண்டிகைப்பிப்பதுநீறுகருதவினியதுநீறு
வெண்டிசைப்பட்டபொருளாரேத்துந்தகையதுநீறு
வண்டத்தவர்பணிந்தேத்துமாலவாயான்றிருநீறே. (௰)

ஆற்றலடல்விடையேறு மாலவாயான் றிருநீற்றைப்
போற்றிப்புகலிநிலாவு பூசுரன் ஞானசம்பந்தன
றேற்றித்தென்னனுடலுற்ற தீப்பிணியாயின தீரச்
சாற்றியபாடல்கள் பத்தும் வல்லவார் நல்லவர்தாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பெரும்புலியூர் - பண் காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மண்ணுமோர்பாகமுடையார் மாலுமோர்பாகமுடையார்
விண்ணுமோர்பாகமுடையார் வேதமுடையவிமலர்
கண்ணுமோர்பாகமுடையார் கங்கைசடையிற்கரந்தார்
பெண்ணுமோர்பாகமுடையார் பெரும்புலியூர்பிரியாரே. (க)

துன்னுகடற்பவளஞ்சேர் தூயனீண்டதிரடோள்கண்
மின்னுசுடர்க்கொடிபோலுமேனியினாளொரு* கங்கைக்
கன்னிகளின்புனையோடுகலைமதிமாலைகலந்த
பின்னுசடைப்பெருமானார் பெரும்புலியூர்பிரியாரே. (உ)

கள்ளமதித்தகபாலங்கைதனிலேமிகவேந்தித்
துள்ளமிதித்துநின்றாடுந்தொழிலொழின்மிகுசெல்வா
வெள்ளநகுதலைமாலைவிரிசடைமேன்மிளிர்கின்ற
பிள்ளைமதிப்பெருமானார் பெரும்புலியூர்பிரியாரே. (௩)

ஆடலிலையமுடையாரருமறைதாங்கியாறங்கம்
பாடலிலையமுடையார் பன்மையொருமைசெய்தஞ்சு
மூடலிலையமுடையார் யோகெனும்பேரொளிதாங்கிப்
பீடலிலையமுடையார் பெரும்புலியூர்பிரியாரே. (௪)

தோடுடையார்குழைக்காதிற்சுடுபொடியாரனலாடக்
காடுடையாரெரிவீசுங்கையுடையார்கடல்சூழ்ந்த
நாடுடையார்பொருளின்பநல்லவைநாளுநயந்த
பீடுடையார்பெருமானார் பெரும்புலியூர்பிரியாரே. (௫)

கற்றதுறப்பணிசெய்துகாண்டுமென்பாரவர்தங்கண்
முற்றிதறிதுமென்பார்கண்முதலியார்வேதபுராணர்
மற்றிதறிதுமென்பார்கண்மனத்திடையார்பணிசெய்யப்
பெற்றிபெரிதுமுகப்பார் பெரும்புலியூர்பிரியாரே. (௬)

மறையுடையாரொலிபாடன்மாமலர்ச்சேவடிசேர்வார்
குறையுடையார்குறைதீர்ப்பார்குழகரழகர்நஞ்செல்வா
கறையுடையார்திகழ்கண்டங்கங்கைசடையிற்கரந்தார்
பிறையுடையார்சென்னிதன்மேற் பெரும்புலியூர்பிரியாரே. (எ)

---

* கங்கைக்கன்னிகளின்புனையோடு-என்பதனுக்குக்கங்கையாறுகளாகியமாலையுடன் எனப் பொருள் தோன்றுகின்றது.

உறவியுமின்புறுசீறப்போங்குதல்வீடெளிதாகித்
துறவியுங்கூட்டமுங்காட்டித்துன்பமுமின்பமுந்தோற்றி
மறவியஞ்சிந்தனைமாற்றிவாழவல்லார்தமக்கென்றும்
பிறவியறுக்கும்பிரானார்பெரும்புலியூர்பிரியாரே. (அ)

சீருடையாரடியார்கள்சேடரொப்பார்சடைசேரு
நீருடையார்பொடிப்பூசுநினைப்புடையார்விரிகொன்றைத்
தாருடையார்விடையூர்வார்தலைவரைந்நூற்றுப்பத்தாய
பேருடையார்பெருமானார்பெரும்புலியூர்பிரியாரே. (கூ)

உரிமையுடையடியார்களுள்ளுறவுள்கவல்லார்கட்
கருமையுடையனகாட்டியருள்செய்யுமாதிமுதல்வர்
கருமையுடைநெடுமாலுங்கடிமலரண்ணலுங்காணாப்
பெருமையுடைப்பெருமானார்பெரும்புலியூர்பிரியாரே. (கo)

பிறைவளருமுடிச்சென்னிப்பெரும்புலியூர்ப்பெருமானை
நறைவளரும்பொழிற்காழிநற்றமிழ்ஞானசம்பந்தன
மறைவளருந்தமிழ்மாலைவல்லவர்தந்துயர்நீங்கி
நிறைவளர்நெஞ்சினராகிநீடுலகத்திருப்பாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - வியாக்கிரபுரீசுவரர், தேவியார் - சவுந்தராம்பிகை.

---

## திருக்கடம்பூர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

வானமர்திங்களுநீருமருவியவார்சடையானைத்
தேனமர்கொன்றையினானைத்தேவர்தொழப்படுவானைக்
கானமருமயிலினைபுல்கிக்கலைபயிலுங்கடம்பூரிற்
றானமர்கொள்கையினானைத்தாடொழவீடெளிதாமே (க)

அரவினொடாமையும்பூண்டந்துகில்வேங்கையதளும்
விரவுந்திருமுடிதன்மேல்வெண்டிங்கள்சூடிவிரும்பிப்
பரவுந்தனிக்கடம்பூரிற்பைங்கண்வெள்ளேற்றண்ணல்பாத
மிரவும்பகலும்பணியவினைபாநமக்குதுவாமே. (உ)

*இளிபடுமின்சொலினார்களிருங்குழன்மேலிசைந்தேறத்
தெளிபடுகொள்கைகலந்ததீத்தொழிலார்கடம்பூரி
லொளிதருவெண்பிறைசூடியொண்ணுதலோடுடனாகிப்
புலியதளாடைபுனைந்தான்பொற்கழல்போற்றுதுநாமே. (ங)

பறையொடுசங்குமியம்பப்பல்கொடிசேர்நெடுமாடங்
கறையுடைவேலவரிக்கண்ணார்கலையொலிசேர்கடம்பூரின்
மறையொலிகூடியபாடன்மருவியின்றுடன்மகிழும்
பிறையுடைவார்சடையானைப்பேணவல்லார்பெரியோரே. (ச)

* இளி - என்பது ஏழிசையிலொன்று.

தீவிரியக்கழலார்ப்பச்சேயெரிகொண்டிடுகாட்டி
னாவிரிகூந்தற்பேய்கணங்கைசெயநட்டநவின்றோன்
காவிரிகொன்றைகலந்தகண்ணுதலான்கடம்பூரிற்
பாவிரிபாடல்பயில்வார்பழியொடுபாவமிலாரே. (௫)

தண்புனனீள்வயலொண்டாமரைமேலனம்வைகக்
கண்புணர்காவில்வண்டேறக்கள்ளவிழுங்கடம்பூரிற்
பெண்புணர்கூறுடையானைப்பின்னுசடைப்பெருமானைப்
பண்புணர்பாடல்பயில்வார்பாவமிலாதவர்தாமே. (௬)

பலிகெழுசெம்மலர்சாரப்பாடலோடாடலறாத
கலிகெழுவீதிகலந்தகார்வயல்சூழ்கடம்பூரி
லொலிதிகழ்கங்கைகரந்தாரொண்ணுதலாளுமைகேள்வன்
புலியதளாடையினான்றன்புனைகழல்போற்றல்பொருளே. (௭)

பூம்படுகிற்கயல்பாயப்புள்ளிரியப்புறங்காட்டிற்
காம்படுதோளியர்நாளுங்கண்கவருங்கடம்பூரின்
மேம்படுதேவியோர்பாகமேவியெம்மானெனவாழ்த்தித்
தேம்படுமாமலர்தூவித்திசைதொழத்தீயகெடுமே. (௮)

திருமருமார்பிலவனுந்திகழ்தருமாமலரோனு
மிருவருமாயறிவொண்ணாவெரியுருவாகியவீசன்
கருவரைகாலிலடர்த்தகண்ணுதலான்கடம்பூரின்
மருவியபாடல்பயில்வார்வானுலகம்பெறுவாரே. (௯)

ஆடைதவிர்த்தறங்காட்டுமவர்களுமந்துவராடைச்
சோடைகணன்னெறிசொல்லார்சொல்லினுஞ்சொல்லலகண்டீர்
வேடம்பலபலகாட்டும்விகிர்தனம்வேதமுதல்வன்
காடதனிடமாடுங்கண்ணுதலான்கடம்பூரே. (௧௦)

விடைநவிலுங்கொடியானைவெண்கொடிசேர்நெடுமாடங்
கடைநவிலுங்கடம்பூரிற்காதலனைக்கடற்காழி
நடைநவின்ஞானசம்பந்தனன்மையாலேத்தியபத்தும்
படைநவில்பாடல்பயில்வார்பழியொடுபாவமிலாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - அமுதகடேசுவரர், தேவியார் - சோதிமின்னம்மை.

## திருப்பாண்டிக்கொடுமுடி - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பெண்ணமர்மேனியினாரும்பிறைபுல்குசெஞ்சடையாருங்
கண்ணமர்நெற்றியினாருங்காதமருங்குழையாரு
மெண்ணமருங்குணத்தாருமிமையவரேத்தநின்றாரும
பண்ணமர்பாடலினாரும்பாண்டிக்கொடுமுடியாரே. (௧)

தனைக்கணிமாமலர்கொண்டுதாடொழுவாரவர்தங்கள்
வினைப்பகையாயின தீர்க்கும்விண்ணவர்விஞ்சையர்நெஞ்சி
னினைத்தெழுவார் துயர் தீர்ப்பார்திறைவளைமங்கைநடுங்கப்
பனைக்கைப்பகட்டுரிபோர்த்தார் பாண்டிக்கொடுமுடியாரே. (௨)

சடையமர்கொன்றையினாருஞ்சாந்தவெண்ணீறணிந்தாரும்
புடையமர்பூதத்தினாரும்பொறிகிளர்பாம்பசைத்தாரும்
விடையமருங்கொடியாருமவெண்மழுமூவிலைச்சூலப்
படையமர்கொள்கையினாரும்பாண்டிக்கொடுமுடியாரே. (௩)

நறைவளர்கொன்றையினாருஞாலமெல்லாந்தொழுதேத்தக்
கறைவளர்மாமிடற்றாருங்காடரங்காக்கனலேந்தி
மறைவளர்பாடலினோடுமண்முழவங்குழன்மொந்தை
பறைவளர்பாடலினாரும்பாண்டிக்கொடுமுடியாரே. (௪)

போகமுமின்பமுமாகிப்போற்றியென்பாரவர்தங்க
ளாகமுறைவிடமாகவமர்ந்தவர்கொன்றையினோடு
நாகமுந்திங்களுஞ்சூடிநன்னுதன்மங்கைதனமேனிப
பாகமுகந்தவர்தாமும்பாண்டிக்கொடுமுடியாரே. (௫)

கடிபடுகூவிளமத்தங்கமழ்சடைமேலுடையாரும்
பொடிபடமுப்புரஞ்செற்றபொருசிலையொன்றுடையாரும்
வடிவுடைமங்கைதனோடுமணம்படுகொள்கையினாரும
படிபடுகோலத்தினாரும்பாண்டிக்கொடுமுடியாரே. (௬)

ஊனமர்வெண்டலையேந்தியுண்பலிக்கென்றுழல்வாருந்
தேனமருமொழிமாதுசேர்திருமேனியினாருங்
கானமர்மஞ்ஞைகளாலுங்காவிரிகோலக்கரைமேற்
பானலநீறணிவாரும்பாண்டிக்கொடுமுடியாரே. (௭)

புரந்தரன்றன்னொடுவானோர்போற்றியென்றேத்தநின்றாரும்
பெருந்திறல்வாளரக்கனைப்பேரிடர்செய்துகந்தாருங்
கருந்திரைமாமிடற்றாருங்காரகில்பன்மணியுந்திப்
பரந்திழிகாவிரிப்பாங்கர்ப்பாண்டிக்கொடுமுடியாரே. (௮)

திருமகள்காதலினானுந்திகழ்தருமாமலர்மேலைப்
பெருமகனும்வரக்காணாப்பேரழலாகியபெம்மான்
மருமலிமென்மலர்ச்சந்துவந்திழிகாவிரிமாடே
பருமணிநீர்த்துறையாரும்பாண்டிக்கொடுமுடியாரே. (௯)

புத்தரும்புந்தியிலாதசமணரும்பொய்மொழியல்லான்
மெய்த்தவம்பேசிடமாட்டார்வேடம்பலபலவற்றாற்
சித்தருந்தேவருங்கூடிச்செழுமலர்நல்லனகொண்டு
யத்தர்கடாம்பணிந்தேத்தும்பாண்டிக்கொடுமுடியாரே. (௧௦)

கலமல்குதண்கடலசூழ்ந்தகாழியுண்ஞானசம்பந்தன்
பலமல்குவெண்டலையெந்திப்பாண்டிக்கொடுமுடிதன்னைச்
சொலமல்குபாடல்கள்பத்துஞ்சொல்லவல்லார்துயர்தீர்ந்து
நலமல்குசிந்தையராகிநன்னெறியெய்துவர்தாமே (கக)

திருச்சிற்றம்பலம்.

நடுநாட்டிலுள்ளது
சுவாமிபெயர்-கொடுமுடிநாதேசுவரர், தேவியார் - பணமொழியம்மை.

## திருச்சக்கரமாற்று - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பிரமனூர்வேணுபுரம்புகலிவெங்குருப்பெருநீர்த்தோணி
புரமன்னுபூந்தராய்பொன்னஞ்சிரபுரவண்சண்பை
யரன்மன்னுதண்காழிகொச்சைவயமுள்ளிட்டங்காதியாய
பரமனூர்பன்னிரண்டாய்நின்றதிருக்கழுமலநாம்பரவுமூரே. (க)

வேணுபுரம்பிரமனூர்புகலிபெருவெங்குருவெள்ளத்தோங்குந்
தோணிபுரமபூந்தராய்தூநீர்ச்சிரபுரம்புறவங்காழி
கோணியகோட்டாற்றுக்கொச்சைவயன்சண்பைசூழுஞ்செல்வங்
காணியவையகத்தோரேத்துங்கழுமலநாங்கருதுமூரே (உ)

புகலிசிரபுரம்வேணுபுரஞ்சண்பைபுறவங்காழி
நிகரில்பிரமபுரங்கொச்சைவயநீர்மேனின்றமூதூ
ரகலியவெங்குருவோடந்தண்டராயமரர்பெருமாற்கினபம
பகருநகர்நல்லகழுமலநாங்கைதொழுதுபாடுமூரே. (ங)

வெங்குருத்தண்புகலிவேணுபுரஞ்சணபைவெள்ளங்கொள்ளத்
தொங்கியதோணிபுரமபூந்தராய்தொகுபிரமபுரந்தொலகாழி
தங்குபொழிற்புறவங்கொச்சைவயந்தலைபண்டாணடமூதூர
கங்கைசடைமுடிமேலேற்றான்கழுமலநாங்கருதுமூரே. (ச)

தொன்னீரிற்றோணிபுரம்புகலிவெங்குருத்துயர்தீர்காழி
யின்னீரவேணுபுரந்தராய்பிரமனூரெழிலார்சண்பை
நன்னீர்ப்பூம்புறவங்கொச்சைவயஞ்சிலம்பனகராநல்ல
பொனனீரபுன்சடையான்பூந்தண்கழுமலநாம்புகழுமூரே (ரு)

தண்ணந்தராய்புகலிதாமரையானூர்சண்பைதலைமுனண்ட
வணணனகர்கொசசைவயந்தண்புறவஞ்சிரணியார்காழி
விண்ணியல்சீர்வெங்குருநல்வேணுபுரந்தோணிபுரமேலாலேந்து
கண்ணுதலோனமேவியநற்கழுமலநாங்கைதொழுதுகருதுமூரே. (சு)

சீரார்சிரபுரமுங்கொச்சைவயஞ்சண்பையொடுபுறவநல்ல
வாராத்தராய்பிரமனூர்புகலிவெங்குருவோடந்தண்காழி
யோரார்கழுமலமுமவேணுபுரந்தோணிபுரமென்றென்றுள்கிப்
பேரானெடியவனுநான்முகனுங்காண்பரியபெருமானூரே. (எ)

புரவஞ்சிரபுரமுந்தோணிபுரஞ்சண்பைமிகுபுகலிகாழி
நறவமிகுசோலைக்கொச்சைவயந்தராய்நான்முகனற்றூர்
விறலாயவெழ்குருவும்வேணுபுரம்விசயனமேலமபெய்து
திறலாலரக்கனைச்செற்றானறன்கழுமலநாஞ்சேருமூரே. (௯)

சண்பைபிரமபுரந்தண்புகலிவெங்குருநற்காழிசாயப்
பண்பார்சிரபுரமுங்கொசசைவயந்தராய்புறவம்பார்மே
னண்பார்கழுமலஞ்சீர்வேணுபுரந்தோணிபுரநாணிலாத
வெண்பற்சமணரொடுசாக்கியரைவியப்பழித்தவிமலனூரே. (௰)

செழுமலியபூங்காழிபுறவஞ்சிரபுரஞ்சீர்ப்புகலிசெய்ய
கொழுமலரானனகரந்தோணிபுரங்கொச்சையெஞ்சணபையாய
விழுமியசீர்வெங்குருவோடோங்குதராய்வேணுபுரமிகுநன்மாடக்
கழுமலமென்றினபெயர்பன்னிரண்டுங்கண்ணுதலானகருதுமூரே. (௧௦)

கொச்சைவயம்பிரமனூர்புகலிவெங்குருப்புறவங்காழி
நிச்சல்விழவோவாநீடார்சிரபுரநீளசண்பைமூதூர்
நச்சினியபூந்தராய்வேணுபுரந்தோணிபுரமாகிநம்மே
லச்சங்கடீர்த்தருளுமம்மான்கழுமலநாமமருமூரே. (௧௧)

காவிமலர்புரையுங்கணணூர்கழுமலத்தினபெயரைநாளும்
பாவியசீர்ப்பன்னிரண்டுநன்னூலாப்பத்திமையாற்பனுவன்மாலை
நாவினலம்புகழ்சீர்நானமறையான்ஞானசம்பந்தன்சொன்ன
மேவியிசைமொழிவாரவிண்ணவரிலெண்ணுதலைவிருப்புளாரே. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

இது-பாண்டியராஜனுடைய சுரப்பிணிதீர்க்கச்சென் றசனததிலிருந்தபோது அந்த ராஜன் சுவாமிகளைநோக்கி எநதவூரொனறு வினவ, நாமின்னவூரொன்றுதிருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகம்.

---

## திருக்குறும்பலா - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

திருந்தமதிசூடித்தெண்ணீர்சடைக்கரந்துதேவிபாகம்
பொருந்திப்பொருந்தாதவேடத்தாற்காடுறைதல்புரிந்தசெல்வ
ரிருந்தவிடமினவிலேலங்கமழ்சோலையினவண்டியாழ்செய்
குருந்தமணநாறுங்குனறிடஞ்சூழ்ந்தண்சாரற்குறும்பலாவே. (௧)

நாட்பலவுஞ்சேர்மதியஞ்சூடிப்பொடியணிந்தநம்பானம்மை
யாட்பலவுந்தானுடையவம்மானிடம்போலுமந்தண்சாரற்
கீட்பலவுங்கீண்டுகிளைகிளையனமந்திபாய்ந்துணடுவிண்ட
கோட்பலவின்றீங்கனியைமாக்கடுவனுண்டுகளுங்குறும்பலாவே. (௨)

வாடற்றலைமாலைசூடிப்புலித்தோல்வலித்துவீக்கி
யாடலரவசைத்தவம்மானிடம்போலுமந்தண்சாரற்
பாடற்பெடைவண்டுபோதலர்த்தத்தாதவிழ்ந்துபசுமபொனுந்திக்
கோடனமணங்கமழுங்குனறிடஞ்சூழ்தண்சாரறகுறும்பலாவே (௩)

பால்வெண்மதிசூடிப்பாகத்தோர்பெண்கலந்துபாடியாடிக்
காலனுடல்கிழியக்காய்ந்தாரிடம்போலுங்கல்சூழ்வெற்பி
னீலமலர்க்குவளைகண்டிறக்கவண்டரற்றுநெடுந்தண்சாரற்
கோலமடமஞ்ஞைபேடையோடாட்டயருங்குறும்பலாவே. (௪)

தலைவாண்மதியங்கதிர்விரியத்தண்புனலைத்தாங்கித்தேவி
முலைபாகங்காதலித்தமூர்த்தியிடம்போலுமுதுவேய்சூழ்ந்த
மலைவாயசும்புபசும்பொன்கொழித்திழியுமல்குசாரற்
குலைவாழைத்தீங்கனியுமாங்கனியுந்தேன்பிலிற்றுங்குறும்பலாவே. (௫)

நீற்றேதுதைந்திலங்குவெண்ணூலர்தண்மதியர்நெற்றிக்கண்ணர்
கூற்றேர்சிதையக்கடிந்தாரிடம்போலுங்குளிர்சூழ்வெற்பி
லேற்றேனமேனமிவையோடவைவிரவியிழிபூஞ்சாரற்
கோற்றேனிசைமுரலக்கேளாக்குயில்பயிலுங்குறும்பலாவே. (௬)

பொன்றொத்தகொன்றையும்பிள்ளைமதியும்புனலுஞ்சூடிப்
பின்றொத்தவார்சடையெம்பெருமானிடம்போலும்பிலயந்தாங்கி
மன்றத்துமண்முழவமோங்கிமணிகொழித்துவயிரமுந்திக்
குன்றத்தருவியயலேபுனறதும்புங்குறும்பலாவே. (௭)

ஏந்துதிணிதிண்டோளிராவணனைமால்வரைக்கீழடரவூன்றிச்
சாந்தமெனநீறணிந்தசைவரிடம்போலுஞ்சாரற்சாரற்
பூந்தணறுவேங்கைக்கொத்திறுத்துமத்தகத்திற்பொலியவேந்திக்
கூந்தற்பிடியுங்களிறுமுடன்வணங்குங்குறும்பலாவே. (௮)

அரவினணையானுநான்முகனுங்காண்பரியவண்ணல்சென்னி
விரவிமதியணிந்தவிகிர்தர்க்கிடம்போலும்விரிபூஞ்சாரன்
மரவமிருகரையுமல்லிகையுஞ்சண்பகமுமலர்ந்துமாந்தக்
குரவமுறுவல்செய்யுங்குன்றிடஞ்சூழ்தண்சாரற்குறும்பலாவே. (௯)

முடியசீவரத்தர்முன்கூறுண்டேறுதலும்பின்கூறுண்டு
காடிதொடுசமணைக்காய்ந்தாரிடம்போலுங்கல்சூழ்வெற்பி
னீடுயர்வேய்குனியப்பாய்கடுவனீள்கழைமேனிருத்தஞ்செய்யக்
கூடியவேடுவர்கள்கூய்விளியாக்கைமறிக்குங்குறும்பலாவே (௧௦)

கொம்பார்பூஞ்சோலைக்குறும்பலாமேவியகொல்லேற்றண்ண
லெம்பானடிபரவுநான்மறையான்ஞானசம்பந்தன்சொன்ன
வின்பாயபாடலிவைபத்தும்வல்லார்விரும்பிக்கேட்பார்
தம்பாலதீவினைகள்போயகலுநல்வினைகடளராவன்றே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

பாண்டிநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-குறும்பலாநாதர், தேவியார் - குழன்மொழியம்மை,

இதலவே-திருக்குற்றாலம்.

ஆக பதிகம் - ௭௧.

## திருநணா - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பந்தார்விரன்மடவாள்பாகமாநாகம்பூண்டேறதேறி
யந்தாரரவணிந்தவம்மானிடம்போலுமந்தண்சாரல்
வந்தார்மடமந்திகூத்தாடவார்பொழிலில்வண்டுபாடச்
செந்தேன்றெளியொளிரத்தேமாக்கனியுதிர்க்குந்திருநணாவே (௧)

நாட்டம்பொலிந்திலங்குநெற்றியினன்மற்றொருகைவீணையேந்தி
யீட்டுந்துயரறுக்குமெம்மானிடம்போலுமிலைசூழ்கானி
லோட்டந்தருமருவிவீழும்விசைகாட்டமுந்தூழோசை
சேட்டார்மணிகளணியுந்திரைசேர்க்குந்திருநணாவே. (௨)

நன்றாங்கிசைமொழிந்துநன்னுதலாள்பாகமாய்ஞாலமேத்த
மின்றாங்குசெஞ்சடையெம்விகிர்தர்க்கிடம்போலும்விரைசூழ்வெற்பிற்
குன்றோங்கிவன்றிரைகண்மோதமயிலாலுஞ்சாரற்செவ்வி
சென்றோங்கிவானவர்களேத்தியடிபணியுந்திருநணாவே. (௩)

கையின்மழுவேந்திக்காலிற்சிலம்பணிந்துகரித்தோல்கொண்டு
மெய்யின்முழுதணிந்தவிகிர்தர்க்கிடம்போலுமிடைந்துவானோ
ரையாவரனெம்பெருமானருளென்றென்றேத்திநித்தஞ்
செய்யகமலம்பொழிதேனளித்தியலுந்திருநணாவே. (௪)

முத்தேர்நகையாளிடமாகத்தம்மார்பில்வெண்ணூல்பூண்டு
தொத்தேர்மலர்சடையில்வைத்தாரிடம்போலுஞ்சோலைசூழ்ந்த
வத்தேனளியுண்களியாலிசைமுரல்வாலத்தும்பி
தெத்தேயெனமுரலக்கேட்டார்வினைகெடுக்குந்திருநணாவே. (௫)

வில்லார்வரையாகமாநாகநாணாகவேடங்கொண்டு
புல்லார்புரமூன்றெரித்தார்க்கிடம்போலும்புலியுமானு
மல்லாதசாதிகளுமங்கழன்மேற்கைகூப்பவடியார்கூடிச்
செல்லாவருநெறிக்கேசெல்லவருள்புரியுந்திருநணாவே. (௬)

கானார்களிற்றுரிவைமேன்மூடியாடரவொன்றரைமேற்சாத்தி
யூனார்தலையோட்டிலூணுகந்தானுகந்தகோயிலெங்கு
நானாவிதத்தால்விரதிகணன்னாமமேயேத்திவாழ்த்தத்
தேனார்மலர்கொண்டடியாரடிவணங்குந்திருநணாவே (௭)

மன்னீரிலங்கையர்தங்கோமான்வலிதொலையவிரலாலூன்றி
முந்நீர்க்கடனஞ்சையுண்டார்க்கிடம்போலுமுனைசேர்சீய
மன்னீர்மைகுன்றியழலால்விழிகுறைப்பவழியுமுன்றிற்
செந்நீர்பரப்பச்சிறந்துகரியொளிக்குந்திருநணாவே. (௮)

மையாரணிமிடற்றான்மங்கையோர்பங்குடையான்மனைகடோறுங்
கையார்பலியேற்றகள்வனிடம்போலுங்கழல்கணேடிப்
பொய்யாமறையானும்பூமியளந்தானும்போற்றமன்னிச்
செய்யாரெரியாமுருவமுறவணங்குந்திருநணாவே. (௯)

ஆடையொழித்தங்கமணேதிரிந்துண்பாரல்லல்பேசி
மூடுருவமுகந்தாருரையகற்றுமூர்த்திகோயி
லோடுநதிசேருநித்திலமுமொய்த்தகிலுங்கவரியிற்சாரச்
சேடர்சிறந்தேத்தத்தோன்றியொளிபெருகுதிருநணாவே. (௧௰)

கல்வித்தகத்தாற்றிரைசூழ்கடற்காழிக்கவுணிசீரார்
நல்வித்தகத்தாலினிதுணருஞானசம்பந்தனெண்ணுஞ்
சொல்வித்தகத்தாலிறைவனதிருநணாவேத்துபாடல்
வல்வித்தகத்தான்மொழிவார்பழியிலர்மண்ணின்மேலே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

கொங்குநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-சங்கமுகநாதேசுவரர், தேவியார்-வேதமங்கையம்மை.

இது - பவானியெனனும்நதி - காவிரிநதியுடன்சேருமிடமாதலால், பவானிகூடலெனப்பெயர் வழங்கப்படுகின்றது.

---

## திருச்சக்கரமாற்று - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

விளங்கியசீர்ப்பிரமனூர்வேணுபுரம்புகலிவெங்குருமேற்சோலை
வளங்கவருந்தோணிபுரம்பூந்தராய்சிரபுரம்வண்புறவமண்மேற்
களங்கமிலூர்சண்பைகமழ்காழிவயங்கொச்சைகழுமலமென்றின்ன
விளங்குமரனன்னைபெற்றிமையவர்தம்பகையெறிவித்திறைவனூரே. (௧)

திருவளருங்கழுமலமேகொச்சைதேவேந்திரனூரயனூர்தெய்வத்
தருவளரும்பொழிற்புறவஞ்சிலம்பனூர்காழிதகுசண்பையொண்பா
வுருவளர்வெங்குருப்புகலியோங்குதராய்தோணிபுரமுயர்ந்ததேவர்
வெருவவளர்கடல்விடமதுண்டவனூர்மண்டலத்தோர்விரும்புமூரே. (௨)

வாய்ந்தபுகழ்மறைவளருந்தோணிபுரம்பூந்தராய்சிலம்பன்வாழூ
ரேய்ந்தபுறவந்திகழுஞ்சண்பையெழிற்காழியிறைகொச்சையம்பொன்
வேய்ந்தமதிற்கழுமலம்விண்ணோர்பணியமிக்கயனூரமரர்கோனூ
ராய்ந்தகலையார்புகலிவெங்குருவதரனமருமூரே. (௩)

மாமலையாள்கணவனமர்கின்றவெங்குருமாப்புகலிதராய்தோணிபுரம்வான
சேமமதில்புடைதிகழுங்கழுமலமேகொச்சைதேவேந்திரனூர்சீர்ப
பூமகனூர்பொலிவுடையபுறவம்விறற்சிலம்பனூர்காழிசண்பை
பாமருவுகலையெட்டெட்டுணர்ந்தவற்றின்பயனுகர்வோர்பரவுமூரே (௪)

*நரைத்தேவர்பணிசண்பைதமிழ்க்காழிவயங்கொச்சைநயங்கொண்மேலை
விரைச்சேருங்கழுமலமெய்யுணர்ந்தயனூர்விண்ணவர்தங்கோனூர்வென்றித்
திரைச்சேரும்புனற்புகலிவெங்குருச்செல்வம்பெருகுதோணிபுரஞ்சீ
ருரைச்சேர்பூந்தராய்சிலம்பனூர்புறவமுலகத்திலுயர்ந்தவூரே. (௫)

* நரைத்தேவர்-பிராமணர்.

புண்டரிகத்தார்வயல்சூழ்புறவமிகுசிரபுரம்பூங்காழிசண்பை
யெண்டிசையோரிறைஞ்சியவெங்குருப்புகலிபூந்தராய்த்தோணிபுரஞ்சீர்
வண்டமரும்பொழின்மல்குகழுமலநற்கொச்சைவானவர்தங்கோனூ
ரண்டயனூரிவையென்பரருங்கூற்றையுதைத்துகந்தவப்பனூரே. (௬)

வண்மைவளர்வரத்தயனூர்வானவர்தங்கோனூர்வண்புகலியிஞ்சி
வெண்மதிசேர்வெங்குருமிக்கோரிறைஞ்சுசண்பைவியன்காழிகொச்சை
கண்மகிழுங்கழுமலமகற்றோர்புகழுந்தோணிபுரம்பூந்தராய்சீர்ப்
பண்மலியுஞ்சிரபுரம்பார்புகழ்புறவம்பால்வண்ணன்பயிலுமூரே. (௭)

மோடிபுறங்காக்குமூர்புறவஞ்சீர்ச்சிலம்பனூர்காழிமூதூர்
நீடியலுஞ்சண்பைகழுமலங்கொச்சைவேணுபுரங்கமலநீடு
கூடியயனூர்வளர்வெங்குருப்புகலிதராய்தோணிபுரங்கூடப்போர்
தேடியுழலவுணர்பயிறிரிபுரங்கள்செற்றமலைச்சிலையனூரே. (௮)

இரக்கமுடையிறையவனூர்தோணிபுரம்பூந்தராய்சிலம்பன்றனூர்
நிரக்கவருபுனற்புறவநிறைதவத்தயனூர்சீர்த்தேவர்கோனூர்
வரக்கரவாப்புகலிவெங்குருமாசிலாச்சண்பைகாழிகொச்சை
யரக்கன்விறலழித்தருளிக்கழுமலமந்தணர்மேவுமருதலூரே. (௯)

மேலோதுங்கழுமலமெய்த்தவமல்வளருங்கொச்சையிந்திரனூர்மெய்ம்மை
நூலோதுமயன்றனூர்நண்ணரிவார்குருப்புகலிதராய்தூநீர்மேற்
சேலோடுந்தோணிபுரந்திகழ்புறவஞ்சிலம்பனூர்செருச்செய்தன்று
மாலோடுமயனறியாவண்ணன்காழிசண்பைமண்ணோர்வாழுமூரே. (௧0)

ஆக்கமார்சீரூர்சண்பைகாழியமர்கொச்சைகழுமலமன்பானூ
ரோக்கமுடைத்தோணிபுரம்பூந்தராய்சிரபுரமொண்புறவநண்பார்
பூக்கமலத்தோன்மகிழூர்புரந்தரனூர்புகலிவெங்குருவுமென்பர்
சாக்கியரோடமணைகையர்தாமறியாவகைநின்றானுறையுமூரே. (௧௧)

அக்கரஞ்சேர்தருமனூர்புகலிதராய்தோணிபுரமணிநீர்ப்பொய்கைப்
புக்கரஞ்செய்புறவஞ்சீர்ச்சிலம்பனூர்புகழ்காழிசண்பைதொல்லூர்
மிக்கரஞ்சீர்க்கழுமலமேகொச்சைவயம்வேணுபுரமயனூர்மேலிச்
சக்கரஞ்சீர்த்தமிழ்விரகனுரைசொன்னதமிழ்தரிப்போர்தவஞ்செய்தோரே.

திருச்சிற்றம்பலம்

---

## திருக்கோமூத்திரி · பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பூமகனூர்புத்தேளுக்கிறைவனூர்குறைவிலாப்புகலிபூமேன்
மாமகளூர்வெங்குருநற்றோணிபுரம்பூந்தராய்வாய்ந்தவிஞ்சிச்
சேமமிகுசிரபுரஞ்சீர்ப்புறவநிறைபுகழ்ச்சண்பைகாழிகொச்சை
காமனைமுன்காய்ந்தநுதற்கண்ணவனூர்கழுமலநாங்கருதுமூரே. (௧)

கருத்துடையமறையவர்சேர்கழுமலமெய்த்தோணிபுரங்கனகமாட
வுருத்திகழ்வெங்குருப்புகலியோங்குதராயுலகாருங்கொச்சைகாழி

திருத்திகழுஞ்சிரபுரந்தேவேந்திரனூர்செங்கமலத்தயனூர்தெய்வத்
தருத்திகழும்பொழிற்புறவஞ்சண்பைசடைமுடியண்ணறங்குமூரே. (உ)

ஊர்மதியைக்கதுவவுயாமதிற்சண்பையொளிமருவுகாழிகொச்சை
காமலிபுமபொழில்புடைசூழ்கழுமலமெய்த்தோணிபுரங்கறமேரேத்துஞ்
சீர்மருவுபூந்தராய்சிரபுரமெய்ப்புறவமயனூர்பூங்கறபக
தார்மருவுமிந்திரனூர்புகலிவெங்குருகங்கைதரித்தோனூரே. (ங)

தரித்தமறையாளர்மிகுவெங்குருசீர்த்தோணிபுரந்தரியாரிருசி
யெரித்தவமசோகழுமலமேகொச்சைபூந்தராயபுகலியிமையோர்கோனூர்
தெரித்தபுகழ்சிரபுரஞ்சீர்திகழ்காழிசண்பைசெழுமறைகளெல்லாம
விரித்தபுகழ்ப்புறவம்விரைக்கமலத்தோனூருலகில்விளங்குமூரே (ச)

விளங்கயனூர்பூந்தராய்மிகுசண்பைவேணுபுரமேகமேய்க்கு
மிளங்கமுகம்பொழிறதோணிபுரங்காழியெழிற்புகலிபுறவமேரார்
வளங்கவருமவயற்கொச்சைவெங்குருமாசிரபுரம்வன்னஞ்சமுண்டு
களங்கமலிகளத்தவன்சீர்க்கழுமலங்காமனுடல்காயந்தோனூரே. (ரு)

காய்ந்துவருங்காலனையன்றுதைத்தவனூர்கழுமலமாத்தோணிபுரஞ்சீ
ரேய்ந்தவெங்குருப்புகலியிந்திரனூரிருங்கமலத்தயனூரின்பம
வாய்ந்தபுறவந்திகழுஞ்சிரபுரம்பூந்தராய்கொச்சைகாழிசண்பை
சேர்ந்தவனைமுன்பயந்துலகிற்றேவர்கடம்பகைகெடுத்தோனதிகழுமூரே. (சா)

திகழ்மாடமலிசண்பைபூந்தராய்பிரமனூர்காழிதேசார
மிகுதோணிபுரந்திகழும்வேணுபுரமவயங்கொச்சைபுறவம்விண்ணோர்
புகழ்புகலிகழுமலஞ்சீர்ச்சிரபுரம்வெங்குருவெம்போர்மகிடற்செற்று
நிகழ்சீலிநின்மலனலன்னடியிணைகள்பணிந்துலகினினிறவூரே. (எ)

நின்றமதிலசூழ்தருவெங்குருத்தோணிபுரநிகழும்வேணுமன்றி
லொன்றுகழுமலங்கொச்சையுயர்காழிசண்பவளாபுறவமோடி
சென்றுபுரங்காக்குமூர்சிரபுரம்பூந்தராய்புகலிதேவர்கோனூர்
வென்றிமலிபிரமபுரமபூதங்கடாங்காக்கமிகக்கவூரே. (அ)

மிக்கமலத்தயனூர்விளங்குபுறவஞ்சண்பைகாழிகொச்சை
தொக்கபொழிற்கழுமலந்தூத்தோணிபுரம்பூந்தராய்சிலம்பன்சேரூ
மைகொளபொழில்வேணுபுரமதிற்புகலிவெங்குருவல்லரக்கன்றிண்டோ
ளாகவிருபதுமுடிகளொருபதுமீடழித்துகந்தவெம்மானூரே. (கூ)

எமமான்சேர்வெங்குருசீர்ச்சிலம்பனூர்கழுமலநற்புகலியென்றும்
பொய்மமாணலோர்புறவங்கொச்சைபுரந்தரனூர்நற்றோணிபுரம்போர்க்
கைமமாவையுரிசெய்தோன்காழியயனூர்தராய்சண்பைகாரின்
மெய்ம்மாலபூடகனுணராவகைதழலாய்விளங்கியவெம்மிறைவனூரே. (க0)

இறைவனமா சண்பையெழிற்புறவமயனூரிமையோர்க்கதிபன்சேரூர்
குறைவில்புகழ்ப்புகலிவெங்குருத்தோணிபுரங்குணமார்பூந்தராய்நீச்

சிறைமலிநற்சிரபுரஞ்சீர்க்காழிவளர்கொச்சைகழுமலந்தேசின்றிப்
பறிதலையோடமண்கையர்சாக்கியர்கள்பரிசறியாவம்மானூரே. (௧௧)

அம்மானைச்சேர்கழுமலமாச்சிரபுரம்வெங்குருக்கொச்சைபுறவமந்சீ
மெய்ம்மானத்தொண்புகலிமிகுகாழிதோணிபுரந்தேவாகோனூ
ரம்மானமனனுயாசண்பைதராயமூனாவழிமுடக்குமாவின்பாசச
றம்மானைஞானசம்பந்தன்றமிழ்கற்போர்தக்கோர்தாமே. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

---

## சீகாழி - பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்.

விண்ணியங்குமதிக்கண்ணியான்விரியுஞ்சடைப்
பெண்ணயங்கொடிருமேனியான்பெருமானனற்
கண்ணயங்கொடிருநெற்றியான்கலிக்காழியுண்
மண்ணயங்கொண்மறையாளரேத்துமலர்ப்பாதனே. (௧)

வலியகாலனுயிர்வீட்டினான்மடவாளொடும்
பலிவிரும்பியதோர்கையினான்பரமேட்டியான்
கலிபவெனறமறையாளர்தங்கலிக்காழியு
ணலியவந்தவினைதீர்த்துகந்தவெம்நம்பனே. (௨)

சுற்றலாநற்புலித்தோலசைத்தயன்வெண்டலைத்
துற்றலாயதொருகொள்கையானசுடுநீறனை
கற்றல்கேட்டலுடையார்கள்வாழ்கலிக்காழியுண்
மற்றயங்குதிரடோளெம்மைந்தனைவல்லனே. (௩)

பல்லயங்குதலையேந்தினன்படுகானிடை
மல்லயங்குதிரடோள்களாரநடமாடியுங்
கல்லயங்குதிரைசூழ்நீள்கலிக்காழியுட்
டொல்லயங்குபுகழ்பேணநின்றசுடர்வண்ணனே. (௪)

தூநயங்கொடிருமேனியிற்பொடிப்பூசிப்போய்
நாநயங்கொண்மறையோதிமாதொருபாகமாக்
கானயங்கொள்புனல்வாசமார்கலிக்காழியுட்
டேனயங்கொண்முடியானைந்தாடியசெல்வனே. (௫)

சுழியிலங்கும்புனற்கங்கையாள்சடையாகவே
மொழியிலங்கும்மடமங்கைபாகமுகந்தவன்
கழியிலங்குங்கடல்சூழ்ந்தண்கலிக்காழியுட்
பழியிலங்குந்துயரொன்றிலாப்பரமேட்டியே. (௬)

முடியிலங்கும்முயர்சிந்தையான்முனிவர்தொழ
வடியிலங்குங்கழலார்க்கவேயனலேந்தியுங்
கடியிலங்கும்பொழில்சூழ்ந்தண்கலிக்காழியுட்
கொடியிலங்கும்மிடையாளொடுங்குடிகொண்டதே. (௭)

வல்லரக்கனைவரைபேர்க்கவந்தவன்றோண்முடி
கல்லரக்கிவிறல்வாட்டினானகலிக்காழியு
ணல்லொருக்கியதோர்சிலைதியாமலர்தூவவே
தொல்லிருக்குமறையேத்துகந்துடனவாழுமே (அ)

மருவுநான்மறையோனுமாமணிவண்ணனு
மிருவர்கூடியிசைந்தேத்தவேயெரியான்றனூர்
வெருவநின்றதிரையோதமவராவியன்முத்தலை
கருவையாரவயற்சங்குசேர்கலிக்காழியே. (கூ)

நன்றியொன்றுமுணராதவன்சமண்சாக்கிய
ரன்றியங்கவர்சொன்னசொல்லவைகொள்கிலான்
கன்றுமேதியிளங்கானல்வாழ்கலிக்காழியுள்
வென்றிசேர்வியன்கோயில்கொண்டவிடையாளனே. (க0)

கண்ணுமூன்றுமுடையாதிவாழ்கலிக்காழியு
ளண்ணலந்தணனருள்பேணிஞானசம்பந்தன்சொல
வண்ணமூன்றுந்தமிழிற்றெரிந்திசைபாடுவார்
விண்ணுமண்ணும்விரிகின்றதொல்புகழாளரே. (கக)

திருச்சிற்றம்பலம்

## திருஅகத்தியான்பள்ளி - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

வாடியவெண்டலைமாலைசூடிமயங்கிரு
ணீடியாகொள்ளிவிளக்குமாகநிவந்தெரி
யாடியவெம்பெருமானகத்தியான்பள்ளியைப்
பாடியசிந்தையினார்கட்கில்லையாம்பாவமே. (க)

துன்னங்கொண்டவுடையான்றுதைந்தவெண்ணீற்றினன
மன்னுங்கொன்றைமதமத்தஞ்சூடினன்மாநக
ரன்னந்தங்கும்பொழில்சூழகத்தியான்பள்ளியை
யுன்னஞ்செய்தமனத்தார்கடமவினையோடுமே. (உ)

உடுத்ததுவும்புலித்தோல்பலிதிரிந்துண்பதுங்
கடுத்துவந்தகழற்காலன்றன்னையுங்காலினா
லடுத்ததுவும்பொழில்சூழகத்தியான்பள்ளியா
னெடுத்ததவுஞ்சரமுப்புரந்துகளாகவே (ங)

காய்ந்ததுவுமன்றுகாமனைநெற்றிக்கண்ணினாற்
பாய்ந்ததுவுங்கழற்காலனைப்பண்ணின்மறை
யாய்ந்ததுவும்பொழில்சூழகத்தியான்பள்ளியா
னேய்ந்ததுவுமிமவான்மகளொருபாகமே. (ச)

போர்த்ததுவுங்கரியினனுரிபுலித்தோலுடை
கூர்த்ததோர்வெண்மழுவேந்திக்கோளரவம்மணாக்

கார்ததுவும்பொழில்சூழகத்தியான்பள்ளியான்
பார்த்ததுவும்மரணம்படவொரிழைழ்கவே. (௫)

தெரிந்ததுவுங்கணையொன்றுமுப்புரஞ்சென்றுட
னெரிந்ததுவுமுனனெழிலாமலருறைவான்றலை
யரிந்ததுவும்பொழில்சூழகத்தியானபள்ளியான்
புரிந்ததுவுமுமையாளோர்பாகமபுனைதலே. (௬)

ஓதியெல்லாமுலகுக்கோரொண்பொருளாகிமெய்ச்
சோதியென்றுதொழுவாரவர்துயர்தீர்த்திடு
மாதியெங்கள்பெருமானகத்தியானபள்ளியை
நீதியினாற்றொழுவாரவர்வினைநீங்குமே. (௭)

செறுத்ததுவுந்தக்கனவேள்வியைத்திருந்தார்புர
மொறுத்ததுவுமொளிமாமலருறைவான்சிர
மறுத்ததுவும்பொழில்சூழகத்தியான்பள்ளியா
னிறுத்ததுவுமரக்கன்றன்றோள்களிருபதே (௮)

சிரமுநல்லமதிமத்தமுந்திகழ்கொன்றையு
மரவமல்குஞ்சடையானகத்தியானபள்ளியைப்
பிரமனோடுதிருமாலுந்தேடியபெற்றிமை
பரவவல்லாரவர்தங்கண்மேலவினைபாறுமே. (௯)

செந்துவராடையினாரும்வெற்றரையேதிரி
புந்தியிலார்களும்பேசும்பேச்சவைபொய்மமொழி
யந்தணனெங்களபிரானகத்தியான்பள்ளியைச்
சிந்திமினும்வினையானவைசிதைந்தோடுமே (௧௰)

ஞாலமல்குந்தமிழ்ஞானசமபந்தன்மாமயிலாலுஞ்
சோலைபுடைசூழகத்தியான்பளளியுட்
சூலநல்லபடையானடிதொழுதேத்திய
மாலைவலலாரவர்தங்கள்மேல்வினைமாயுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - அகத்தீசுவரர், தேவியார் - மங்கைநாயகியம்மை.

ஆ பதிகம் - ௭௬.

---

## திருஅறையணிநல்லூர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பீடினாற்பெரியோர்களும்பேதைமைகெடத்தீதிலா
வீடினாலுயர்ந்தார்களும்வீடிலாரிளவெண்மதி
சூடினாமறைபாடினார்சுடலைநீறணிந்தாரழ
லாடினாரறையணிநல்லூரங்கையாற்றொழுவார்களே. (௧)

இலையினார்சூலமேறுகந்தேறியேயிமையோர்தொழ
நிலையினாலொருகாலுறச்சிலையினான்மதிலெய்தவ
னலையினார்புனல்சூடியவண்ணலாரறையணிநல்லூர
தலையினாற்றொழுதோங்குவார்நீங்குவார்தடுமாற்றமே (௨)

என்பினார்கனல்சூலத்தாரிலங்குமாமதியுச்சியா
ரன்பினாற்பிறங்குஞ்சடைப்பிஞ்ஞகன்பிறப்பிலியென்று
முன்பினார்மூவர்தாந்தொழுமுக்கண்மூர்த்திதன்றாள்களுக்
கன்பினாரறையணிநல்லூரங்கையாற்றொழுவார்களே. (௩)

விரவுநீறுபொன்மார்பினில்விளங்கப்பூசியவேதிய
னுரவுநஞ்சமுதாகவுண்டுறுதிபேணுவதன்றியு
மரவுநீள்சடைக்கண்ணியாரண்ணலாரறையணிநல்லூர
பரவுவார்பழிநீங்கிடப்பறையுந்தாஞ்செய்தபாவமே. (௪)

தீயினார்திகழ்மேனியாய்தேவர்தாந்தொழுதேவனீ
யாயினாய்கொன்றையாயனலங்கையாயறையணிநல்லூர்
மேயினார்தமதொல்வினைவீட்டினாயவெய்யகாலனைப
பாயினாயதிகழலினாயபரமனேயடிபணிவனே. (௫)

விளையினார்கொன்றைசூடியுமவேணநாகமுமவீக்கிய
வளையினாரறையணிநல்லூரண்ணலாரழகாயதோர
நளையினார்விடையூர்தியாநக்கனாநறுமமோதுமேச
ருளையினாலுயர்ந்தார்களுமுளையினாலுயர்ந்தார்களே. (௬)

வீரமாகியவேதியர்வேகமாகரியானையின
னீரமாகியவுரிவைபோர்த்தரிவைமேற்சென்றவம்மிறை
யாரமாகியபாம்பினாரண்ணலாரறையணிநல்லூர
வாரமாய்நினைப்பார்கடம்வல்வினையவைமாயுமே. (௭)

தக்கனார்பெருவேள்வியைத்தகர்த்துகந்தவன்றாழ்சடை
முக்கணான்மறைபாடியமுறைமையான்முனிவர்தொழ
வக்கினோடெழிலாமைபூணண்ணலாரறையணிநல்லூர
நக்கனாரவர்சார்வலானல்குசார்விலோநாங்களே. (௮)

வெய்யநோயிலாதீதிலாவெறியராய்ப்பிறர்பின்செலா
செய்வதேயலங்காரமாமிவையிவைதேறியின்புறி
லையமேற்றுணுந்தொழிலராமண்ணலாரறையணிநல்லூர்ச்
சைவனாரவர்சார்வலால்யாதுஞ்சார்விலோநாங்களே (௯)

வாக்கியஞ்சொல்லியாரொடும்வைகலும்வகைசெய்யன்மின்
சாக்கியஞ்சமணென்றிவைசாரேலும்மரணம்பொடி
யாக்கியமழுவாட்படையண்ணலாரறையணிநல்லூர்ப்
பாக்கியங்குறையுடையீரேற்படையுமாஞ்செய்தபாவமே. (௰)

மற்றருதிரடோளினார்மாசில்வெண்பொடிப்பூசினார்
விற்றருமணிமிடற்றினார்மேயதுவிளநகரதே (எ)

படர்தருஞ்சடைமுடியினார்பைங்கழலடிபரவுவா
ரடர்தருமபிணிகெடுகெனவருளுவாரரவரையினார்
விடர்தருமமணிமிடற்றினார்மின்னுபொன்புரிநூலினார்
மிடறருமபடைமழுவினார்மேயதுவிளநகரதே. (அ)

கையிலங்கியவேலினார்தோலினார்கரிகாலினார்
பையிலங்கரவல்குலாள்பாகமாகியபரமனார்
மையிலங்கொளிமலர்கியமாசிலாமணிமிடற்றினார்
மெய்யிலங்குவெண்ணீற்றினார்மேயதுவிளநகரதே. (கூ)

உள்ளதன்றனைக்காண்பன்கீழெனமாமணிவண்ணனும்
உள்ளதன்றனைக்காண்பன்மேலெனமாமலரண்ணலும்
உள்ளதன்றனைக்கண்டிலாரொளியார்தருஞ்சடைமுடியின்மேல்
உள்ளதன்றனைக்கண்டிலாவொளியார்விளநகர்மேயதே. (ய0)

மென்சிறைவண்டியாழ்முரல்விளநகர்த்துறைமேவிய
நன்பிறைநுதலண்ணலைச்சண்பைஞானசம்பந்தன்சீ
ரின்புறுந்தமிழாற்சொன்னவேத்துவார்வினைநீங்கிப்போய்த்
துன்புறுதுயரம்மிலாத்தூநெறிபெறுவார்களே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - துறைகாட்டும்வள்ளநாதர், தேவியார் - தோழியம்மை.

---

## திருவாரூர் - பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்.

பவனமாய்ச்சோடையாய்நாவெழாப்பஞ்சுதோய்ச்சட்டவுண்டு
சிவனதாட்சிந்தியாப்பேதைமார்போலநீவெள்கினாயே
கவனமாய்ப்பாய்வதோரேறுகந்தேறியகாளகண்ட
னவனதாரூர்தொழுதுய்யலாம்மையல்கொண்டஞ்சனெஞ்சே. (க)

தந்தையார்போயினார்தாயரும்போயினார்தாமும்போவார்
கொந்தவேல்கொண்டொருகூற்றத்தார்பார்க்கின்றார்கொண்டுபோவா
ரெந்தநாள்வாழ்வதற்கேமனம்வைத்தியாலேழைநெஞ்சே
யந்தணாரூர்தொழுதுய்யலாம்மையல்கொண்டஞ்சனெஞ்சே (உ)

நிணங்குடர்தோனரம்பென்புசேராக்கைதானிலாயதன்றாற்
குணங்களார்க்கல்லதுகுற்றநீங்காதுநெஞ்சகுலுங்கினையே
வணங்குவார்வானவர்தானவர்வைகலுமணங்கோடேத்து
மணங்கனாரூர்தொழுதுய்யலாம்மையல்கொண்டஞ்சனெஞ்சே. (ங)

நீதியால்வாழ்கிலைநாள்செலாநின்றனநித்தநோய்கள்
வாதியாவாதலானாளினுமேமருவினையே

சாதியாகினரார்தருமனுமவருணர்களேத்துமுக்க
ணாதியாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே. (௪)

பிறவியாலவருவனகேடுளவாதலாற்பெரியவின்பத்
துறவியாக்கல்லதுதுன்பநீங்காதெனத்தூங்கினாயே
மறவனீமாக்கமேனண்ணினாய்தீர்த்தநீமல்குசென்னி
யறவனாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே. (௫)

செடிகொள்ளுயாக்கையைம்பாம்பின்வாய்த்தேரைவாய்ச்சிறுபறவைக
கடிகொளபூந்தேனசுவைத்தின்புறலாமென்றுகருதினாயே
முடிகளாலவானவர்முனபணிந்தன்பராயேத்துமுக்க
ணடிகளாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே (௬)

ஏறுமாலியானையேசிவிகையந்தளகமீசமேசாமரைவட்டில
மாறிவாழுடம்பினாம்பவ்வதோரிடலைக்குமயங்கினாயே
மாறிலாவனமுலைமங்கையோர்பங்கினார்மதியமவைத்த
வாறனாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே (௭)

எனபினாகழிந்துறத்திறைசசிமணகுவமொறிந்துருமமில்லமை
புனபுலானாறுமேதால்போர்த்துப்பொல்லாமையானமுகமகொண்டு
முனபெலாமொனமதுவாசலாகுரமபையினமூழ்கிடாதே
யனபனாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே. (அ)

தந்தைதாய்தனனுடனதோன்றினார்புத்திராதாரமெனனும
பந்தநீங்காதவாக்குயந்துபோககிலலெனபபற்றினாயே
வெந்தநீறுமேனியாராதியாரசோதியார்வேதகீத
ரெந்தையாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே (௯)

நெடியமாலபிரமனுநீணடுமணணிடந்திண்ணனேடிககாணுப
படியனார்பவளம்போலுருவனார்பனிவளர்மலையாளபாக
வடிவனார்மதிபொதிசடையனார்மணியணிகணடத்தெணடோ
ளடிகளாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே. (௧௦)

பல்லிதழமாதவியல்லிவண்டியாழ்செயுங்காழியூர
னல்லவேநல்லவேசொல்லியஞானசமபந்தனாரூ
ரெல்லிமபோதெரியாடுமெமமீசனையேத்துபாடல்
கொல்லமவல்லவர்தீதிலாரோதநீர்வையகத்தே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

## திருக்கடவூர்மயானம் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

வரியமறையார்பிறையார்மலையோர்சிலையாவணங்கி
யெரியமதில்களெய்தாரெறியுமுசலமுடையார
கரியமிடறுமுடையார்கடவூர்மயானமமர்ந்தார
பெரியவிடைமேல்வருவாரவரெமபெருமானடிகளே. (௧)

மங்கைமணந்தமார்பர்மழுவாள்வலனொன்றேந்திக்
கங்கைசடையிற்கரந்தார்கடவூர்மயானமமர்ந்தார்
செங்கண்வெள்ளேறேறிச்செல்வஞ்செய்யாவருவா
ரங்கையேறியமறியாரவரெம்பெருமானடிகளே. (௨)

ஈடலிடபமிசையவேறிமழுவொன்றேந்திக்
காடதிடமாவுடையார்கடவூர்மயானமமர்ந்தார்
பாடலிசைகொள்கருவிபடுதம்பலவும்பயில்வா
ராடலரவமுடையாரவரெம்பெருமானடிகளே. (௩)

இறைநின்றிலங்குவளையாளிளையாளொருபாலுடையார்
மறைநின்றிலங்குமொழியார்மலையார்மனத்தின்மிசையார்
கறைநின்றிலங்குபொழில்சூழ்கடவூர்மயானமமர்ந்தார்
பிறைநின்றிலங்குசடையாரவரெம்பெருமானடிகளே. (௪)

வெள்ளையெருத்தின்மிசையார்விரிதோடொருகாதிலங்கத்
துள்ளுமிளமானமறியார்சுடர்பொற்சடைகடுலங்கக்
கள்ளநகுவெண்டலையார்கடவூர்மயானமமர்ந்தார்
பிள்ளைமதியமுடையாரவரெம்பெருமானடிகளே. (௫)

பொன்றாதுதிருவணங்கொள்புனைபூங்கொன்றைபுனைந்தா
ரொன்றாவெள்ளேறுயர்த்ததுடையாரதுவேயூர்வா
கன்றாவினஞ்சூழ்புறவிற்கடவூர்மயானமமர்ந்தா
பின்றாழ்சடையாரொருவரவரெம்பெருமானடிகளே. (௬)

பாசமானகளைவார்பரிவார்க்கமுதமனையா
ராசைதீரக்கொடுப்பாரலங்கல்விடைமேல்வருவார்
காசைமலர்போன்மிடற்றார்கடவூர்மயானமமர்ந்தார்
பேசவருவாரொருவரவரெம்பெருமானடிகளே. (௭)

செற்றவரக்கனலறத்திகழ்சேவடிமெல்விரலாற்
கற்குன்றடர்த்தபெருமான்கடவூர்மயானமமர்ந்தார்
மற்றொன்றிணையில்வலியமாசில்வெள்ளிமலைபோற்
பெற்றொன்றேறிவருவாரவரெம்பெருமானடிகளே. (௮)

வருமாகரியினுரியார்வளர்புன்சடையார்விடையார்
கருமானுரிதோலுடையார்கடவூர்மயானமமர்ந்தார்
திருமாலொடுநான்முகனுந்தேர்ந்துங்காணமுன்னொண்ணாப்
பெருமானெனவும்வருவாரவரெம்பெருமானடிகளே. (௯)

தூயவிடைமேல்வருவார்துன்னாருடையமதில்கள்
காயவேவச்செற்றார்கடவூர்மயானமமர்ந்தார்
தீயகருமஞ்சொல்லுஞ்சிறுபுன்றேரரமணர்
பேய்பேயென்னவருவாரவரெம்பெருமானடிகளே. (௧௦)

மரவம்பொழில்சூழ்கடவூர்மன்னுமயானமமர்ந்த
வரவமசைத்தபெருமானகலமறியலாகா

பரவுமுறையேபயிலும்பந்தன்செஞ்சொன்மாலை
யிரவும்பகலுமபரவிநினைவார்வினைகளிலரோ. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது
சுவாமிபெயர் - பிரமபுரீசுவரர், தேவியார்-மலர்க்குழல்மின்னம்மை.

## திருவேணுபுரம் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பூதத்தின்படையினீர்பூங்கொன்றைத்தாரினீ
ரோதத்தினொலியோடுமும்பாவானவர்புகுந்து
வேதத்தினவிசைபாடிவிரைமலர்கள்சொரிந்தேத்தும
பாதத்தீர்வேணுபுரம்பதியாகக்கொண்டீரே, (௧)

சுடுகாடுமேவினீர்துன்னம்பெய்கோவணந்தோ
லுடையாயவதுகொண்டீருமையாளையொருபாக
மடையாளமதுகொண்டீரங்கையினிற்பரசுவெனும
படையாள்வீர்வேணுபுரமபதியாகககொண்டீரே. (௨)

கங்கைசேர்சடைமுடியீர்காலனைமுனசெற்றுகந்தீர்
திங்களோடிளவரவந்திகழ்செனனிவைத்துகந்தீர்
மங்கையோர்கூறுடையீர்மறையோர்கணிறைந்தேத்தப்
பங்கயஞ்சேர்வேணுபுரமபதியாகக்கொண்டீரே. (௩)

நீர்கொண்டசடைமுடிமேனீண்மதியமபாம்பினொடு
மோர்கொண்டகொன்றையினொடெழினமததமிலஙகவே
சீர்கொண்டமாளிகைமேற்சேயிழையார்வாழ்த்துரைப்பக்
கார்கொண்டவேணுபுரமபதியாகககலந்தீரே (௪)

ஆலைசேர்தண்கழனியழகாகநறவுண்டு
சோலைசேர்வண்டினங்களிசைபாடத்தூமொழியார்
காலையேபுகுந்திறைஞ்சிக்கைதொழுமெய்மாதினொடும
பாலையாழ்வேணுபுரமபதியாககக்கொண்டீரே (௫)

மணிமல்கிமால்வரைமேன்மாதினொடுமகிழ்ந்திருந்தீர்
துணிமல்குகோவணந்தீர்சுடுகாட்டிலாட்டுகந்தீர்
பணிமல்குமறையோர்கள்பரிந்திறைஞ்சவேணுபுரத்
தணிமல்குகோயிலேகோயிலாகவமர்ந்தீரே (௬)

நீலஞ்சேர்மிடற்றினீர்நீண்டசெஞ்சடையினீர்
கோலஞ்சேர்விடையினீர்கொடுங்காலனைச்செற்றீ
ராலஞ்சேர்கழனியழகார்வேணுபுரமமரும்
கோலஞ்சேர்கோயிலேகோயிலாகக்கொண்டீரே. (௭)

இரைமண்டிச்சங்கேறுங்கடல்சூழ்தென்னிலங்கையர்கோன்
வரைமண்டுமுடிநெரியவிரல்வைத்தீர்வரைதன்னிற்

கரைமண்டிப்பேரோதங்கலந்தேறுங்கடற்கவினார்
விரைமண்டுவேணுபுரமேயமர்ந்துமிக்கீரே (௯)

தீயோம்புமறைவாணர்க்காதியாந்திசைமுகன்மால்
போயோங்கியிழிந்தாருமபோற்றரியதிருவடியீர்
பாயோங்குமரக்கலங்கள்படுதிரையான்மொத்துண்டு
சேயோங்குவேணுபுரஞ்செழும்பதியாத்திகழ்ந்தீரே (௰)

நிலையாரந்தவுண்டியினர்நெடுங்குண்டாசாக்கியர்கள்
புலையாருரறவுரையைப்போற்றாதுன்பொன்னடியே
நிலையாகப்பேணிநீசரணென்றார்தமையென்றும
விலையாகவாட்கொண்டுவேணுபுரம்விரும்பினையே (௧௦-௧௧)

திருச்சிற்றம்பலம்.

ஆ பதிகம் - ௭௧

திருத்தேவூர் - பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்.

பணணிலாவியமொழியுமைபங்கனெம்பெருமான
விண்ணிலவானவர்கோன்விமலனவிடையூர்தி
தெணணிலாமதிதவழ்தருமாளிகைத்தேவூ
ரணணலசேவடியடைந்தனமல்லலொன்றிலமே (௧)

ஓதிமணடலத்தோர்முழுதுய்யவெற்பேறு
சோதிவானவன்றுதிசெயமகிழ்ந்தவன்றாநீர்க்
கீதில்பங்கயநெரிவையர்முகமலர்தேவூ
ராதிசேவடியடைந்தனமல்லலொன்றிலமே (௨)

மறைகளானமிகவழிபடுமாணியைக்கொலவான
கறுவுகெண்டவக்காலனைக்காய்ந்தவெங்கடவுள்
செறுவில்வாளைகள்சேலவைபொருவயற்றேவு
ரறவனசேவடியடைந்தனமலலலொன்றிலமே. (௩)

முத்தனசிலபலிக்கூர்தொறுமுறைதிரியும
பித்தன்செஞ்சடைப்பிஞ்ஞகனறன்னடியார்கள்
சித்தமாளிகைசெழுமதிதவழ்பொழிற்றேவூ
ரத்தன்சேவடியடைந்தனமலலலொன்றிலமே. (௪)

பாடுவாரிசைபலபொருட்பயனுகந்தன்பாற்
கூடுவார்துணைக்கொண்டதம்பற்றறப்பற்றித்
தேடுவார்பொருளானவனசெறிபொழிற்றேவூ
ராடுவானடியடைந்தனமல்லலொனறிலமே. (௫)

பொங்குபூண்முலைப்புரிகுழல்வரிவலைப்பொருப்பன்
மங்கைபங்கினன்கங்கையைவளர்சடைவைத்தான்

றிங்கள்சூடியதீநிறக்கடவுடென்றேவூ
ரங்கணனறனையடைந்தனமல்லலொன்றிலமே. (௬)

வண்டுபடுதவத்தானவர்புரங்களையெரியத்
தண்டுயத்துறநடவரைவளைத்தவனறக்க
தென்றமிழ்க்கலைதெரிந்தவரொருந்தியதேவூ
ரன்பனசேவடியடைந்தனமல்லலொன்றிலமே. (௭)

கருவயாந்தவெற்பெடுத்தவத்தசமுகனெரிந்து
வெருவவூன்றியதிருவிரனெகிழ்த்துவாள்பணித்தான
றெருவுதோறுநற்றென்றலவந்துலவியதேவூ
ரரவுசூடியையடைந்தனமல்லலொன்றிலமே. (௮)

முந்திக்கண்ணனுநான்முகனுமமவர்காணா
வெந்தைதிண்டிறலிருங்களிறுரித்தவெம்பெருமான
*செந்தினத்திசையறுபதமுரறிருந்தேவூ
ரந்திவண்ணனையடைந்தனமல்லலொன்றிலமே. (௯)

பாறுபுமருந்துமணிசமணருமபலநாள்
கூறிவைத்ததோர்குறியினைப்பிழையெனக்கொண்டு
தேறிமிக்கநஞ்செஞ்சடைக்கடவுடென்றேவூ
ராறுசூடியையடைந்தனமல்லலொன்றிலமே. (௧௦)

அல்லலின்றிவிண்ணாள்வர்கள்காழியர்க்கதிப
னல்லசெந்தமிழ்வல்லவன்ஞானசம்பந்த
னெல்லையில்புகழ்மல்கியவெழில்வளர்தேவூர்த்
தொல்லைநம்பனைச்சொல்லியபத்தும்வல்லாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - தேவகுருநாதர், தேவியார் மதுரபாஷணியம்மை.

## திருக்கொச்சைவயம் - பண் - பியந்தைக்காந்தாரம்

திருச்சிற்றம்பலம்.

நீலநன்மாமிடற்றிறைவனைசினத்தநெடுமாவுரித்தநிகரில்
சேலனகண்ணிவண்ணமொருகூறுக்கொடிகழ்தேவனமேவுபதிதான்
வேலனகண்ணியார்கள்விளையாடுமோசைவிழவோசைவேதவொலியின்
சாலநல்வேலையோசைதருமாடவீதிகொடியாடுகொச்சைவயமே. (௧)

விடையுடையப்பனொப்பில்நடமாடவல்லவிகிர்தத்துருக்கொள்விமலன்
சடையிடைவெள்ளெருக்கமலர்கங்கைதிங்கடகவைத்தசோதிபதிதான
மடையிடையன்னமெங்குநிறையப்பரந்துகமலத்துவைகும்வயல்சூழ் [யமே.
கொடையுடைவண்கையாளர்மறையோர்களென்றும்வளர்கின்றகொச்சைவ

படவரவாடுமுன்கையுடையானிடும்பைகளைவிக்குமெங்கள்பரம
னிடமுடைவெண்டலைக்கைபலிகொள்ளுமின்பனிடமாயவேர்கொள்பதிதா

சடையிடைபுக்கொடுங்கியுட்டங்குவெள்ளம்வளர்திங்கள்கண்ணியயலே
யிடையிடைவைத்ததொக்குமலர்தொத்துமாலையிறைவன்னிடங்கொள்பதி
மடையிடைவாளைபாயமுகிழ்வாய்நெரிந்துமணநாறுநீலமலருந் [தான்
நடையுடையன்னம்வைகுபுனலம்படப்பைநணிபள்ளிபோலுநமர்காள். (௨)

பெறுமலர்கொண்டுதொண்டர்வழிபாடுசெய்யலொழிபாடிலாதபெருமான்
கறுமலர்கண்டமாகவிடமுண்டகாளையிடமாயகாதனகர்தான
வெறுமலர்தொட்டுவிட்டவிசைபோனகொம்பின்விடுபோதலர்ந்தவிரைசூழ்
நறுமலரல்லிபுல்லியொலிவண்டுறங்குநணிபள்ளிபோலுநமர்காள். (௩)

குளிர்தருகங்கைதங்குசடைமாடிலங்குதலைமாலையோடுகுலவி
யொளிர்தருதிங்கள்சூடியுமைபாகமாகவுடையானுகந்தநகர்தான
குளிர்தருகொம்மலோடுகுயில்பாடல்கேட்டபெடைவண்டுதானுமுரல
நளிர்தருசோலைமாலைநரைகுருகுவைகுநணிபள்ளிபோலுநமர்காள். (௪)

தோடொருகாதனாகியொருகாதிலங்குசுரிசங்குநின்றுபுரளக்
காடிடமாகநின்றுகனலாடுமெந்தையிடமாயகாதனகர்தான
வீடுடனெய்துவார்கள்விதியென்றுசென்றுவெறிநீர்தெளிப்பவிரலா
னாடுடனாடுசெம்மையொலிவெள்ளமாருநணிபள்ளிபோலுநமர்காள் (௫)

மேகமோடோடுதிங்கண்மலராவணிந்துமலையானமடந்தைமணிபொன்
னாகமோர்பாகமாகவனலாடுமெந்தைபெருமானமர்ந்தநகர்தா
னூகமோடாடுமந்தியுகளுஞ்சிலம்பவகிலுந்தியொண்பொனிடறி
நாகமோடாரம்வாருபுனல்வந்தலைக்குநணிபள்ளிபோலுநமர்காள (௬)

தகைமலிதண்டுசூலமனலுமிழுநாகங்கொடுகொட்டிவீணைமுரல
வகைமலிவன்னிகொன்றைமதமத்தம்வைத்தபெருமானுகந்தநகர்தான்
புகைமலிகந்தமாலைபுனைவார்கள்பூசல்பணிவார்கள்பாடல்பெருகி
*நகைமலிமுத்திலங்குமணல்சூழ்கிடங்குநணிபள்ளிபோலுநமர்காள். (௭)

வலமிகுவாளன்வேலன்வளைவாளெயிற்றுமதியாவரக்கன்வலியோ
டுலமிகுதோள்களொல்கவிரலாலடர்த்தபெருமானுகந்தநகர்தா
னிலமிகுகீழுமேலுநிகராதுமில்லையெனநின்றநீதியதனை
நலமிகுதொண்டர்நாளுமடிபரவல்செய்யுநணிபள்ளிபோலுநமர்காள். (௮)

நிறவுருவொன்றுதோன்றியெரியொன்றிநின்றதொருநீர்மைசீர்மைநினையா
ரறவுருவேதநாவனயனோடுமாலுமறியாதவண்ணனகர்தான
புறவிரிமுல்லைமௌவல்குளிர்பிண்டிபுன்னைபுனைகொன்றைதுன்றுபொதுளி
நறவிரிபோதுதாதுபுதுவாசநாறுநணிபள்ளிபோலுநமர்காள் (௯)

அனமிகுசெல்குசோறுகொணர்கென்றுகையிலிடவுண்டுபட்டவமணும
மணமிகுகஞ்சிமண்டையதிலுண்டுதொண்டர்குணமின்றிநின்றவடிவும

* பாலைநெய்தல்பாடியது-இந்த நானகாவதுசரணத்தால்விளங்குகின்றது. எவ்வாறென்னில், முத்துகள்விளங்கு மணல்சூழ்ந்தநிலமென்றதனாலென்க. பாலைநெய்தல்பாடியதும்-பாமபழியப்பாடியதும்-என்னுந் திருவெணபானுமுணர்க.

வினைமிகுவேதநான்கும்விரிவித்தநாவின்விடையானுகந்தநகர்தா
னனமிகுதொண்டர்நாளுமடிபரவல்செய்யுநனிபள்ளிபோலுநமர்காள். (௰)

கடல்வரையோதமல்குகழிகானல்பானல்கமழ்காழியென்றுகருதப்
படுபொருளாறுநாலுமுளதாகவைத்தபதியானஞானமுனிவ
னிடுபறையொன்றவத்தர்பியன்மேலிருந்தினிசையாலுரைத்தபனுவ
னடுவிருளாடுமெந்தைநனிபள்ளியுள்கவினைகெடுதலாணைநமதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

வேயுறுதோளி — பண் பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

வேயுறுதோளிபங்கன்விடமுண்டகண்டன்மிகநல்லவீணைதடவி
மாசறுதிங்கள்கங்கைமுடிமேலணிந்தெனுளமேபுகுந்தவதனா
ஞாயிறுதிங்கள்செவ்வாய்புதன்வியாழம்வெள்ளிசனிபாம்பிரண்டுமுடனே
யாசறுநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (௧)

என்பொடுகொம்பொடாமையிவைமார்பிலங்கவெருதேறியேழையுடனே
பொன்பொதிமத்தமாலைபுனல்சூடிவந்தெனுளமேபுகுந்தவதனா
லொன்பதொடொன்றொடேழுபதினெட்டொடாறுமுடனாயநாள்களவைதா
மன்பொடுநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (௨)

உருவளர்பவளமேனியொளிநீறணிந்துமையோடும்வெள்ளைவிடைமேன்
முருகலர்கொன்றைதிங்கண்முடிமேலணிந்தெனுளமேபுகுந்தவதனாற்
றிருமகள்கலையதூர்திசெயமாதுபூமிதிசைதெய்வமானபலவு
மருநெதிநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (௩)

மதிநுதன்மங்கையோடுவடபாலிருந்துமறையோதுமெங்கள்பரம
னதியொடுகொன்றைமாலைமுடிமேலணிந்தெனுளமேபுகுந்தவதனாற்
கொதியுறுகாலனங்கிநமனோடுதூதர்கொடுநோய்களானபலவு
மதிகுணநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (௪)

நஞ்சணிகண்டனெந்தைமடவாடனோடும்விடையேறுமெங்கள்பரமன்
றுஞ்சிருள்வன்னிகொன்றைமுடிமேலணிந்தெனுளமேபுகுந்தவதனால்
வெஞ்சினவவுணரோடுமுருமிடியுமின்னுமிகையானபூதமவையு
மஞ்சிடுநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே (௫)

வாள்வரியதளதாடைவரிகோவணத்தர்மடவாடனோடுமுடனாய்
நாண்மலர்வன்னிகொன்றைநதிசூடிவந்தெனுளமேபுகுந்தவதனாற்
கோளரியுழுவையோடுகொலையானைகேழல்கொடுநாகமோடுகரடி
யாளரிநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே (௬)

செப்பிளமுலைநன்மங்கையொருபாகமாகவிடையேறுசெல்வர்நடைவா
ரொப்பிளமதியுமப்புமுடிமேலணிந்தெனுளமேபுகுந்தவதனால்
வெப்பொடுகுளிருமவாதமிகையானபித்துமவினையானவந்துநலியா
வப்படிநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே (௭)

## திருநறையூர்-பண்-பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

நேரியனாகுமல்லனொருபாலுமேனியரியானமுனியவொளியா
னீரியலகாலுமாகிநிறைவானுமாகியுறுதீயுமாயநிமல
னூரியல்பிச்சைபேணியுலகங்களேத்தநலகண்டுபண்டுசுடலை
நாரியோர்பாகமாகநடமாடவல்லநறையூரினம்பனவனே. (௧)

இடமயிலன்னசாயன்மங்கைதன்கையெதிர்நாணிபூணவரையிற்
கடுமயிலம்புகோத்துவெயில்செற்றுகந்துவமரர்க்களித்ததலைவன்
மடமயிலூர்திதாதையெனநின்றுதொண்டர்மனநின்றமைந்தன்மருவுந்
நடமயிலாலநீடுகுயில்கூவுசோலைநறையூரினம்பனவனே. (௨)

சூடகமுன்கைமங்கையொருபாகமாகவருள்காரணங்கள்வருவா
னீடகமானநோக்கியிடுபிச்சைகொண்டுபடுபிச்சனின்றுபரவத்
தோடகமாயோர்காதுமொருகாதிலங்குகுழைதாழவேழவுரிய
நாடகமாடவாடிமடவார்கள்பாடுநறையூரினம்பனவனே. (௩)

சாயனன்மாதோர்பாகன்விதியாயசோதிகதியாகநின்றகடவுள்
ளாயகமென்னுள்வந்தவருளாயசெல்வனிருளாயகண்டனவனித்
தாயெனநின்றுகந்ததலைவனவிரும்புமலையினகண்வந்துதொழுவார்
நாயகனென்றிறைஞ்சிமறையோர்கள்பேணுநறையூரினம்பனவனே. (௪)

நெதிபடுமெய்யமையநிறைசோலைசுற்றிநிகழம்பலத்தினடுவே
யதிர்படவாடவல்லவமரர்க்கொருத்தனெமர்சுற்றமாயவிறைவன்
மதிபடுசென்னிமன்னுசடைதாழவந்துவிடையேறியில்பலிகொள்வா
னதிபடவுந்திவந்துவயல்வாளைபாயுநறையூரினம்பனவனே. (௫)

கணிகையோர்சென்னிமன்னுமதுவன்னிகொன்றைமலர்துன்றுசெஞ்சடையி
பணிகையின்முன்னிலங்கவருவேடமன்னுபலவாகிநின்றபரமன் [னன்
னணுகியவேதவோசையகலங்கமாறின்பொருளானவாதியருளா
னணுகியதொண்டர்கூடிமலர்தூவியேத்துநறையூரினம்பனவனே (௬)

ஒளிர்தருகின்றமேனியுருவெங்குமங்கமவையாரவாடலரவம்
மிளிர்தருகையிலங்கவனலேந்தியாடும்விகிர்தன்விடங்கொண்மிடறன்
றுளிதருசோலையாலைதொழின்மேவவேதமெழிலாரவென்றியருளு
நளிர்மதிசேருமாடமடவார்களாருநறையூரினம்பனவனே. (௭)

அடலெருதேறுகந்தவதிருங்கழற்களெதிருஞ்சிலம்பொடிசையக்
கடலிடைநஞ்சமுண்டுகனிவுற்றகண்டன்முனிவுற்றிலங்கையரைய
னுடலொடுதோளனைத்துமுடிபத்திறுத்துமிசைகேட்டிரங்கியொருவா
னடலைகடர்த்துநல்கிநமையாளவல்லநறையூரினம்பனவனே. (௮)

குலமலர்மேவினானுமிகுமாயனானுமெதிர்கூடிநேடிநினைவுற்
றிலபலவெய்தொணாமையெரியாயுயர்ந்தபெரியானிலங்குசடையன்

சிலபலதொண்டர்நின்றுபெருமைக்கள்பேசவருமைந்திகழ்ந்தபொழிலின்
னலமலர்சிந்தவாசமணநாறுவீதிநறையூரினமபனவனே (கூ)

துவருறுகின்றவாடையுடல்போர்த்துழன்றவர்தாமுமல்லசமணும்
கவருறுசிந்தையாளருரைநீத்துகந்தபெருமான்பிறங்குசடையன்
றவமலிபத்தர்சித்தர்மறையாளர்பேணமுறைமாதர்பாடிமருவுந்
நவமணிதுன்றுகோயிலொளிபொன்செய்மாடநறையூரினமபனவனே. (க0)

கானலுலாவியோதமெதிர்மல்குகாழிமிகுபந்தன்முந்தியுணர
ஞானமுலாவுசிந்தையடிவைத்துகந்தநறையூரினமபனவனே
யீனமிலாதவண்ணமிசையாலுரைத்ததமிழ்மாலைபத்துநினைவாா
வானநிலாவவல்லர்நிலமெங்குநின்றுவழிபாடுசெய்யுமிகவே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருமுல்லைவாயில் - பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

துளிமண்டியுண்டுநிறம்வந்தகண்டனடமன்னுதுன்னுசுடரோ
ஞெளிமண்டியும்பருலகங்கடந்தவுமைபங்கனெங்களரனூர்
களிமண்டுசோலைகழனிக்கலந்தகமலங்கடங்குமதுவிற்
றெளிமண்டியுண்டுசிறைவண்டுபாடுந்திருமுல்லைவாயிலிதுவே. (க)

பருவத்தில்வந்துபயனுற்றபண்பனயனைப்படைத்தபரம
னரவத்தொடங்கமவைகட்டியெங்குமரவிக்கநின்றவரனூ
ருருவத்தினமிக்கவொளிர்சங்கோடிப்பியவையோதமோதவெருவித்
தெருவத்தில்வந்துசெழுமுத்தலைக்கொடிருமுல்லைவாயிலிதுவே (உ)

வாராதநாடன்வருவார்தம்வில்லினுருமெல்கிநாளுமுருகில்
லாராதவின்பனகலாதவன்பனருண்மேவிநின்றவரனூர்
பேராதசோதிபிரியாதமார்பினலர்மேவுபேதைபிரியா
டீராதகாதனெதிநேரநீடுதிருமுல்லைவாயிலிதுவே. (ங)

ஒன்றொனொன்றொடொன்றுமொருநான்கொடைந்துமிருமூன்றொடேழுமுடனா
யன்றினொன்றொடொனறுமறிவானவர்க்குமறியாமைநின்றவரனூர் [றுகுழுமிச்
குன்றொனொன்றொடொனறுகுலையொன்றொடொன்று கொடியொன்றொடொன்
சென்றொனொன்றொடொன்றுசெறிவாய்நிறைந்ததிருமுல்லைவாயிலிதுவே. (ச)

கொம்பன்னமின்னினிடையாளோர்கூறன்விடைநாளுமேறுகுழக
னம்பன்னெமன்பன்மறைநாவனின்மதியேறுசென்னியரனூ
ரம்பன்னவொண்கணவராடரங்கினணிகோபுரங்களழகார்
செம்பொன்னசெவ்விதருமாடநீடுதிருமுல்லைவாயிலிதுவே. (ரு)

ஊனேறுவேலினுருவேறுகண்ணியொளியேறுகொண்டவொருவ
ணனேறதேறியழகேறுநீறனரவேறுபூணுமவனூர்
மானேறுகொல்லைமயிலேறிவந்துகுயிலேறுசோலைமருவித்
தேனேறுமாவின்வளமேறியாடுதிருமுல்லைவாயிலிதுவே. (சு)

நெஞ்சாரநீடுநினைவாரைமூடுவினைதேயநின்றநிமல
னஞ்சாடுசென்னியரவாடுகையனனலாடுமேனியரனூர்
மஞ்சாருமாடமனைதோறுமையமுளதென்றுவைகிவரினுஞ்
செஞ்சாலிநெல்லினவளாசோறளிக்கொடிருமுல்லைவாயிலிதுவே. (எ)

வரைவந்தெடுத்தவலிவாளரக்கன்முடிபத்துமிற்றுநெரிய
வுரைவந்தபொன்னினுருவந்தமேனியுமைபங்கனெங்கள்பரனூர்
வரைவந்தசந்தோடகிலுந்திவந்துமிளிராகின்றபொன்னிவடபாற்
றிரைவந்துவந்துசெறிதேறலாடுதிருமுல்லைவாயிலிதுவே. (அ)

மேலோடிநீடுவிளையாடன்மேவுவிரிநூலனவேதமுதல்வன
பாலாடுமேனிகரியானுமுன்னியவர்தேடநின்றபரனூர்
காலாடுநீலமலர்துன்றிநின்றகதிரேறுசெந்நெல்வயலிற்
சேலோடுவாளைகுதிகொளமல்குதிருமுல்லைவாயிலிதுவே. (கூ)

பனைமல்குதிண்கைமதமாவுரித்தபரமன்னநம்பனடியே
நினைவன்னசிந்தையடையாததேரமண்மாயநின்றவரனூர்
வனமல்குகைதைவகுளங்களெங்குமுகிழ்ங்களெங்குநெரியச்
சினைமல்குபுன்னைதிகழ்வாசநாறுதிருமுல்லைவாயிலிதுவே. (க0)

அணிகொண்டகோதையவணன்றுமேத்தவருள்செய்தவெந்தைமருவார்
திணிகொண்டமூன்றுபுரமெய்தவில்லிதிருமுல்லைவாயிலிதன்மேற்
றணிகொண்டசிந்தையவர்காழிஞானமிகுபந்தனொண்டமிழ்களி
னணிகொண்டபத்துமிசைபாடுபத்தாகல்வானமாள்வர்மிகவே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது
சுவாமிபெயர் - முல்லைவனநாதர், தேவியார்-கோதையம்மை.

## திருக்கொச்சைவயம் - பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

அறையுமபூம்புனலோடுமாடரவச்சடைதன்மேற்
பிறையுஞ்சூடுவர்மார்பிற்பெண்ணொருபாகமமர்ந்தார்
மறையினொல்லொலியோவாமந்திரவேள்வியறாத
குறைவிலந்தணர்வாழுங்கொச்சைவயமமர்ந்தாரே. (க)

சுண்ணத்தர்தோலொடுநூல்சேர்மார்பினர்துன்னியபூதக
கண்ணத்தர்வெங்கனலேந்திக்கங்குனின்றாடுவர்கேடி
லெண்ணத்தர்கேள்விநல்வேள்வியறாதவர்மாலெரியோம்பும்
வண்ணத்தவந்தணர்வாழுங்கொச்சைவயமமர்ந்தாரே. (உ)

பாலையன்னவெண்ணீறுபூசுவர்பல்சடைதாழ
மாலையாடுவர்கீதமாமறைபாடுதன்மகிழ்வர்
வேலைமால்கடலோதம்வெண்டிரைகரைமிசைவிளங்குங்
கோலமாமணிசிந்துங்கொச்சைவயமமர்ந்தாரே. (௩)

கடிகொள்கூவிளமத்தங்கமழ்சடைநெடுமுடிக்கணிவர்
பொடிகள்பூசியமார்பிற்புனைவர்நன்மங்கையோர்பங்கர்
கடிகொணீடொலிசங்கினொலியொடுகலையொலிதுதைந்து
கொடிகளோங்கியமாடக்கொச்சைவயமமர்ந்தாரே. (௯)

ஆடன்மாமதியுடையாராயினபாரிடஞ்சூழ
வாடல்வெண்டலையேந்திவையகமிடுபலிக்குழல்வ
ராடன்மாமடமஞ்ஞையணிதிகழ்பேடையோடாடிக
கூடுதண்பொழில்சூழ்ந்தகொச்சைவயமமர்ந்தாரே. (௫)

மண்டுகங்கையுமரவுமலகியவளாசடைதன்மேற்
றுண்டவெண்பிறையணிவாதொலவைவில்லதுவாக
விண்டதானவரரணம்வெலவழலெரிகொளவிடைமேற்
கொண்டகோலமதுடையார்கொச்சைவயமமர்ந்தாரே. (௬௭)

அன்றவானிழலமர்ந்துவறவுணாநாலவர்க்கருளிப்
பொனறினாதலையோட்டிலுணபதுபொருகடலிலங்கை
வென்றிவேந்தனையொல்கவூன்றியவிரலினாவாஞன்றுய
குன்றமன்னபொனமாடக்கொச்சைவயமமர்ந்தாரே (அ)

சீரகொண்மாமலரானுஞ்செங்கண்மாலெனறிவரோத்த
வேர்கொளவெவ்வழலாகியெங்குமுறநிமிர்ந்தாருமை
பாரகொளவிண்ணழல்கானீரபண்பினாபானமொழியோடுங்
கூர்கொள்வேல்வலனேந்திக்கொச்சைவயமமர்ந்தாரே (௬)

குண்டர்வண்டுவராடைபோர்த்ததோரகொளகையினாகண்
மிண்டாபேசியபேசுமெய்யலமையலரிகணடன
பண்டைநமவினைதீரகருமபணபினரொன்கொடியோடுங்
கொண்டலசேர்மணிமாடக்கொச்சையமமர்ந்தாரே (௧௦)

கொந்தணிபொழில்சூழநதகொசசைவயநகாமேய
வந்தணனடியேத்துமருமறைஞானசமபநதன
சந்தமார்ந்தழகாயதண்டமிழ்மாலைவலலோர்போய்
முந்திவானவரோடும்புகவலாமுனைகெடவினையே (௧௧)

திருச்சிற்றமபலம்.

---

திருநெல்வாயில் திரு அரத்துறை - பண்-பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

எந்தையீசனெம்பெருமானேறமர்கடவுளென்றேத்திச்
சிந்தைசெய்பவாக்கல்லால்சென்றுகைகூடுவதன்றால்
கந்தமாமலருந்திக்கடும்புனனிவாமல்குகரைமே
லந்தண்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (௧)

சிர்வார்சடைதன்மேலிளம்பிறையணிந்தவெம்பெருமான்
சீருஞ்செல்வமுமேத்தாச்சித்தர்தொழச்செல்வதன்றால்

வாரிமாமலருந்திவருபுனனிவாமல்குகரைமே
லாருஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (௨)

* பிணிகலந்தபுன்சடைமேற்பிறையணிசிவனெனப்பேணிப்
பணிகலந்துசெய்யாதபாவிகடொழச்செல்வதன்றான்
மணிகலந்துபொன்னுந்திவருபுனனிவாமல்குகரைமே
லணிகலந்தநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (௩)

துன்னவாடையொன்றுடுத்துத் தூயவெண்ணீற்றினராகி
யுன்னிநைபவாக்கல்லாலொன்றுங்கைகூடுவதன்றாற்
பொன்னுமாமணியுந்திப்பொருபுனனிவாமல்குகரைமே
லன்னமாருநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (௪)

வெருகுரிஞ்சுவெங்காட்டிலாடியவிமலனென்றுள்கி
யுருகிநைபவாக்கல்லாலொன்றுங்கைகூடுவதன்றான்
முருகுரிஞ்சுபூஞ்சோலைமாமலர்சுமந்திழிநிவாவந்
தருகுரிஞ்சுநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (௫)

உரவுநீர்ச்சடைக்கரந்தவொருவனென்றுள்குளிர்ந்தேத்திப்
பரவிநைபவாக்கல்லாற்பரிந்துகைகூடுவதன்றாற்
குரவநீடுயர்சோலைக்குளிர்புனனிவாமல்குகரைமே
லரவமாருநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (௬)

நீலமாமணிமிடற்றுநீறணிசிவனெனப்பேணுஞ்
சீலமாந்தர்கட்கல்லாற்சென்றுகைகூடுவதன்றாற்
கோலமாமலருந்திக்குளிர்புனனிவாமல்குகரைமே
லாலுஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (௭)

செழுந்தணமால்வரையெடுத்துச்செருவலியிராவணனலற
வழுந்தவூன்றியவிரலானபோற்றியென்பார்க்கலதருளான்
கொழுங்கனிசுமந்துந்திக்குளிர்புனனிவாமல்குகரைமே
லழுந்துஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (௮)

துணங்குநூலயன்மாலுமிருவருநோக்கரியானை
வணங்கிநைபவாக்கல்லாலவந்துகைகூடுவதன்றான்
மணங்கமழ்ந்துபொன்னுந்திவருபுனனிவாமல்குகரைமே
லணங்குஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (௯)

சாக்கியப்படுவாருஞ்சமண்படுவார்களுமற்றும
பாக்கியப்படவில்லாப்பாவிகடொழச்செல்வதன்றாற்
பூக்கமழ்ந்துபொன்னுந்திப்பொருபுனனிவாமல்குகரைமே
லார்க்குஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (௧0)

கறையினார்பொழில்சூழ்ந்தகாழியுண்ஞானசம்பந்த
னறையுமபூமபுனல்பரந்தவரத்துறையடிகடமமருளை

பிணி - கட்டுதல்.

முறைமையாற்சொன்னபாடன்மொழியுமாந்தர்தம்வினைபோய்ப்
பறையுமையுறவில்லைபாட்டிவைபத்துமவல்லார்க்கே. (கக)

திருச்சிற்றம்பலம்

நடுநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-அரத்துறைநாதர், தேவியார் - ஆனந்தநாயகியம்மை.

நிவாவென்பது ஒருநதி—புனல்-நிவாவெனப் பதம்பிரிக்க.

இது முத்துச்சிவிகை - முத்துச்சின்னமுதலியவை பெற்றபோதருளிச்செய்தது.

## திருமறைக்காடு - பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பொங்குவெண்மணற்கானற்பொருகடற்றிரைதவழ்முத்தங்
கங்குலாரிருள்போழுங்கலிமறைக்காடமர்ந்தார்தாந்
திங்கள்சூடினரேனுந்திரிபுரமெரித்தனரேனு
மெங்குமெங்கள்பிரானார்புகழலதிகழ்பழியிலரே. (க)

கூனிளம்பிறைசூடிக்கொடுவரித்தோலுடையாடை
யானிலங்கிளர்ந்துமாடுவார்பூண்பதுமரவங்
கானலங்கழியோதங்கரையொடுகதிர்மணித்தும்பத்
தேனலங்கமழ்சோலைத்திருமறைக்காடமர்ந்தாரே (உ)

நுண்ணிதாய்வெளிதாகிநூல்கிடந்திலங்குபொன்மார்பிற்
பண்ணியாழெனமுரலும்பணிமொழியுமையொருபாகன்
றண்ணிதாயவெள்ளருவிசலசலநுரைமணித்தும்பக்
கண்ணிதானுமோர்பிறையார்கலிமறைக்காடமர்ந்தாரே. (ந)

ஏழைவெண்குருகயலேயிளம்பெடைதனதெனக்கருதித்
தாழைவெண்மடற்புல்குந்தண்மறைக்காடமர்ந்தார்தா
மாழையங்கயலொண்கண்மலைமகள்கணவனதடியின்
னீழலேசரணாகநினைபவர்வினைநலிவிலரே. (ச)

அரவம்வீக்கியவரையுமதிர்கழறழுவியவடியும
பரவநாஞ்செய்தபாவம்பறைதரவருளுவர்பதிதான்
மரவநீடுயர்சோலைமழலைவண்டியாழ்செயுமறைக்காட்
டிரவுமெல்லியும்பகலுமேத்துதல்குணமெனலாமே. (ரு)

பல்லிலோடுகையேந்திப்பாடியுமாடியும்பலிதே
ரல்லல்வாழ்க்கையரேனுமழகியதறிவொம்மடிகள்
புல்லமேறுவர்பூதம்புடைசெலவுழிதர்வாக்கிடமா
மல்குவெண்டிரையோதமாமறைக்காடதுதானே. (சா)

நாகந்தான்கயிறாகநளிர்வரையதற்குமத்தாகப்
பாகந்தேவரோடசுரர்படுகடலளறெழக்கடைய

வேகநஞ்செழலாங்கேவெருவொடிரிந்தெங்குமோட
வாகநன்னில்லைவைத்தமிர்தமாகுவித்தானமறைக்காடே. (௭)

தக்கன்வேள்வியைத்தகர்த்தோன்றனதொருபொருமையையோரான்
மிக்குமேற்சென்றுமலையையெடுத்தலுமலைமகணடுங்க
நக்குத்தன்றிருவிரலாலூன்றலுநெடுத்தரக்கன்
பக்கவாயுமவிட்டலறப்பரிந்தவன்பதிமறைக்காடே. (௮)

விண்டமாமலரோனும்விளங்கொளியரவணையானும
பண்டுங்காண்பரிதாயபரிசினனவனுறைபதிதான
கண்டலங்கழியோதங்கரையொடுகதிர்மணிததும்ப
வண்டலங்கமழ்சோலைமாமறைக்காடதுதானே. (௯)

பெரியவாகியகுடையுமபீலியுமவைவெயிற்கரவாக்
கரியமண்டைகையேந்திக்கல்லெனவுழிதருங்கழுக்க
ளரியவாகவுண்டோதுமவர்திறமொழிந்துநம்மடிகள்
பெரியசீர்மறைக்காடேபேணுமினமனமுடையீரே. (௧௦)

மையுலாம்பொழில்சூழ்ந்தமாமறைக்காடமர்ந்தானைக
கையினுற்றொழுதெழுவான்காழியுண்ஞானசம்பந்தன்
செய்தசெந்தமிழ்பததுஞ்சிந்தையுட்சேர்க்கவல்லார்போய்ப்
பொய்யிலவானவரோடும்புகவலர்கொள்வர்புகழே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

திருப்புகலூர் வர்த்தமானீச்சரம் - பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பட்டம்பால்நிறமதியம்படர்சடைச்சுடர்விடுமணி
நட்டநள்ளிருளாடுநாதனூர்நவின்றுறைகோயில்
புட்டனபேடையோடாடும்பூம்புகலூர்த்தொண்டர்போற்றி
வட்டஞ்சூழ்ந்தடிபரவுமவர்த்தமானீச்சரத்தாரே. (௧)

முயல்வளாவியதிங்கள்வாண்முகத்தரிவையிற்றெரிவை
யியல்வளாவியதுடையவின்னமிர்தெந்தையெம்பெருமான்
கயல்வளாவியகழனிக்கருநிறக்குவளைகண்மலரும்
வயல்வளாவியபுகலூர்வர்த்தமானீச்சரத்தாரே. (௨)

தொண்டர்தண்கயமூழ்கித்துணையலுஞ்சாந்தமும்புகையுங்
கொண்டுகொண்டடிபரவிக்குறிப்பறிமுருகன்செய்கோலங்
கண்டுகண்டுகண்குளிரக்களிபரந்தொளிமல்குள்ளார்
வண்டுபண்செயும்புகலூர்வர்த்தமானீச்சரத்தாரே (௩)

பண்ணவண்ணத்தராகிப்பாடலோடாடலறாத
விண்ணவண்ணத்தராயவிரிபுகலூரரோர்பாகம்

பெண்ணவண்ணத்தராகும்பெற்றியோடாணிணைபிணைந்த
வண்ணவண்ணத்தெம்பெருமான்வாத்தமானீச்சரத்தாரே. (௪)

ஈசனேநமர்கடவுளின்னமிர்தெந்தையெம்பெருமான்
பூசுமாசில்வெண்ணீற்றாபொலிவுடைப்பூம்புகலூரின்
மூசுவண்டறைகொன்றைமுருகன்முப்போதுஞ்செய்முடிமேல்
வாசமாமலருடையாரவர்த்தமானீச்சரத்தாரே. (௫)

தளரிளங்கொடிவளரத்தண்கயமிரியவண்டேறிக்
கிளரிளமுழைநுழையக்கிழிதருபூம்புகலூரி
லுளரிளஞ்சுனைமலருமொளிதருசடைமுடியதன்மேல
வளரிளம்பிறையுடையார்வாத்தமானீச்சரத்தாரே. (௬)

தென்சொல்விஞ்சமாவடசொற்றிசைமொழியெழினரம்பெடுத்துத்
துஞ்சுநெஞ்சிருணீங்கத்தொழுதெழுதொலபுகலூரி
லஞ்சனம்பிதிர்ந்தனையவலைகடலகடையவனெழுந்த
வஞ்சநஞ்சணிகண்டர்வாத்தமானீச்சரத்தாரே. (௭)

சாமவேதமோர்கீதமோதியத்தவசமுகன்பரவு
நாமதேயமதுடையார்நன்குணர்ந்தடிகளெனரேத்துக
காமதேவனைவேவக்கனலெரிகொளுவியகணணார்
வாமதேவர்தண்புகலூர்வர்த்தமானீச்சரத்தாரே. (௮)

சீரணங்குறுநின்றசெருவுறுதிசைமுகனோடு
நாரணன்கருத்தழியநகைசெய்தசடைமுடிநம்ப
ராரணங்குறுமுமையையஞ்சுவித்தருளுதலபொருட்டால
வாரணத்துரிபோர்த்தார்வாத்தமானீச்சரத்தாரே. (௯)

கையிலுண்டுழல்வாருங்கமழ்துவராடையினுற்றம
மெய்யைப்போர்த்துழல்வாருமுரைப்பனமெய்யெனவிரும்பேற்
செய்யில்வாளைகளோடுசெங்கயல்குதிகொளும்புகலூர
மைகொள்கண்டத்தெம்பெருமானவர்த்தமானீச்சரத்தாரே. (௧௦)

பொங்குதண்புனல்சூழ்ந்தபோதணிபொழிற்புகலூரின
மங்குன்மாமதிதவழுமவர்த்தமானீச்சரத்தாரைத்
தங்குசீர்திகழ்ஞானசம்பந்தன்றணடமிழ்பத்து
மெங்குமேத்தவல்லார்களெய்துவரிமையவருலகே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - வர்த்தமானீசுவரர், தேவியார் - கருந்தாகுழலியம்மை.

ஆக பதிகம் - ௬௨.

* —•—

## திருத்தெங்கூர்ப் - பண் - பியந்தைக்காந்தாரம்

திருச்சிற்றம்பலம்.

புரைசெய்வல்வினைதீர்க்கும்புண்ணியர்விண்ணவர்போற்றக்
கரைசெய்மால்கடனஞ்சையுண்டவர்கருதலர்புரங்க

வினைசெய்காரிழலூட்டியுழல்பவரிடுபலிக்கெழில்சேர்
விரைசெய்பூம்பொழிற்றெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (க)

சித்தநன்னடியினைவார்செடிபடுகொடுவினைதீர்க்குங்
கொத்தின்றாழ்சடைமுடிமேற்கோளெயிற்றரவொடுபிறையன்
பத்தர்தாம்பணிந்தேத்தும்பரம்பரன்பைம்புனல்பதித்த
வித்தன்றாழ்பொழிற்றெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (உ)

அடையும்வல்வினையகலவருள்பவரனலுடைமழுவாட்
படையர்பாய்புலித்தோலர்பைம்புனற்கொன்றையர்படர்புன்
சடையில்வெண்பிறைசூடித்தார்மணியணிதருதறுகண்
விடையர்வீங்கெழிற்றெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே (ங)

பண்டுநான்செய்தவினைகள்பறையவோர்நெறியருள்பயப்பார்
கொண்டல்வான்மதிசூடிக்குரைகடல்விடமணிகண்டர்
வண்டுமாமலரூதிமதுவுணவிதழ்மறிவெய்தி
விண்டவார்பொழிற்றெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (ச)

சுழித்தவார்புனற்கங்கைசூடியோர்காலனைக்காலாற்
றெழித்துவானவர்நடுங்கச்செற்றவர்சிறையணிபறவை
கழித்தவெண்டலையேந்திக்காமனதுடல்பொடியாக
விழித்தவர்திருத்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (ரு)

தொல்லைவல்வினைதீர்ப்பார்சுடலைவெண்பொடியணிசுவண்ட
ரெல்லிசூடிநின்றாடுமிறையவரிமையவரேத்தச்
சில்லைமால்விடையேறித்திரிபுரந்தீயெழச்செற்ற
வில்லினார்திருத்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (சு)

நெறிகொள்சிந்தையராகிநினைபவர்வினைகெடநின்றார்
முறிகொண்மேனிமுக்கண்ணர்முளைமதிநுடித்திலங்கப்
பொறிகொள்வாளரவணிந்தபுண்ணியர்வெண்பொடிப்பூசி
வெறிகொள்பூம்பொழிற்றெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (எ)

எண்ணிலாவிறலரக்கனெழிறிகழ்மால்வரையெடுக்கக்
கண்ணெலாம்பொடிந்தலறக்கால்விரலூன்றியகருத்தர்
தண்ணுலாமபுனற்கண்ணிதயங்கியசடைமுடிச்சதுரர்
விண்ணுலாம்பொழிற்றெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (அ)

தேடித்தானயன்மாலுந்திருமுடியடியிணைகாணா
பாடத்தான்பலபூதப்படையினர்சுடலையிற்பலகா
லாடத்தான்மிகவல்லரருச்சுனற்கருள்செயக்கருதும்
வேடத்தார்திருத்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (கூ)

சடங்கொள்சீவரப்போர்வைச்சாக்கியர்சமணர்சொற்றவிர
விடங்கொள்வல்வினைதீர்க்குமேத்துமினிருமருப்பொருகைக்

கடங்கொண்மால்களிற்றுரியர்கடல்கடைந்திடக்கனன்றெழுந்து
விடங்கொள்கண்டத்தர்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (௧௦)

வெந்தநீற்றினர்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தானைக்
கந்தமாரபொழில்சூழ்ந்தகாழியுண்ஞானசம்பந்தன்
சந்தமாயினபாடற்றண்டமிழ்பத்தும்வல்லாரமேல்
பந்தமாயினபாவம்பாறுதறேறுதல்பயனே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - வெள்ளிமலையீஸ்வரர், தேவியார் - பெரியாம்பிகையம்மை.

---

## திருவாழ்கொளிபுத்தூர் - பண் - பியந்தைக்காந்தாரம்

திருச்சிற்றம்பலம்.

சாகையாயிரமுடையார்சாமமுமோதுவதுடையார்
ரீகையார்கடைநோக்கிரப்பதும்பலபலவுடையார்
தோகைமாமயிலனையதுடியிடைபாகமுமுடையார்
வாகைநுண்டுளிவீசும்வாழ்கொளிபுத்தூருளாரே. (௧)

எண்ணிலீரமுமுடையாரெத்தனையோரிவரறங்கள்
கண்ணுமாயிரமுடையார்கையுமோராயிரமுடையார்
பெண்ணுமாயிரமுடையார்பெருமையோராயிரமுடையார்
வண்ணமாயிரமுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. (௨)

கொடியோராயிரமுடையார்நுண்ணியராமவர்நோக்கும்
வடிவுமாயிரமுடையார்வண்ணமுமாயிரமுடையார்
முடியுமாயிரமுடையார்மொய்குழலாளையுமுடையார்
வடிவுமாயிரமுடையார்வாழ்கொளிபுத்தூராரே. (௩)

பஞ்சிநுண்டுகிலன்னபைங்கழற்சேவடியுடையார்
குஞ்சிமேகலையுடையார்கொந்தணிவேல்வலனுடையார்
நஞ்சம்வெனறவர்க்கணியரானையினீருரியுடையார்
வஞ்சிநுண்ணிடையுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. (௪)

பரவுவாரையுமுடையார்பழித்திகழ்வாரையுமுடையார்
விரவுவாரையுமுடையார்வெண்டலைப்பலிகொள்வதுடையார்
ரரவம்பூண்பதுமுடையாராயிரம்பேர்மிகவுடையார்
வரமுமாயிரமுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. (௫)

தண்டுந்தாளமுங்குழலுந்தண்ணுமைக்கருவியும்புறவிற்
கொண்டபூதமுமுடையார்கோலமும்பலபலவுடையார்
கண்டுகோடலுமரியார்காட்சியுமரியதோர்கரந்தை
வண்டுவாழ்பதியுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. (௬)

மானவாழ்க்கையதுடையார்மலைந்தவாமதிபரிசறுத்தார்
தானவாழ்க்கையதுடையார்தவத்தொடுநோம்புகழ்ந்தேத்த

ஞானவாழ்க்கையுடையார்நள்ளிருண்மகளிர்நின்றேத்த
வானவாழ்க்கையுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. (எ)

ஏழுமூன்றுமோர்தலைகளுடையவனிடர்படவடர்த்து
வேழ்விசெற்றதுமவிரும்பிவிருப்புவர்பலபலவுடையார்
கேழல்வெண்பிறையனனகெழுமணிமிடறுநின்றிலங்க
வாழிசாந்தமுமுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. (அ)

வென்றிமாமலரோனும்விரிகடற்றுயின்றவன்றானு
மென்றுமேத்துகையுடையாரிமையவர்துதிசெயவிரும்பி
முனறின்மாமலர்வாசமுதுமதிதவழ்பொழிற்றில்லை
மன்றிலாடலதுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. (௯)

மண்டைகொண்டுழறேரமாசுடைமேனிவன்சமணர்
குண்டர்பேசியபேச்சுக்கொள்ளனமினறிகழொளிநல்ல
துண்டவெண்பிறைசூடிச்சுண்ணவெண்பொடியணிந்தெங்கும்
வண்டுவாழ்பொழில்சூழ்ந்தவாழ்கொளிபுத்தூருளாரே. (க0)

நலங்கொள்பூமபொழிற்காழிநற்றமிழ்ஞானசம்பந்தன
வலங்கொள்வெண்மழுவாளன்வாழ்கொளிபுத்தூருளானை
யிலங்குவெண்பிறையானையேத்தியதமிழிவைவல்லா
நலங்கொள்சிந்தையராகிநன்னெறியெய்துவர்தாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர்-மாணிக்கவண்ணநாதர், தேவியார்-வண்டமர்பூங்குழலம்மை.

## திருத்துறைசிலி - பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பாடல்வண்டறைகொன்றைபான்மதிபாய்புனற்கங்கை
கோடல்கூவிளமாலைமத்தமுஞ்செஞ்சடைக்குலவி
வாடல்வெண்டலைமாலைமருவிடவல்லியந்தோண்மே
லாடன்மாசுணமசைத்தவடிகளுக்கிடமறைசிலியே. (க)

ஏறுபேணியதேறியிளமதக்களிற்றினையெற்றி
வேறுசெய்ததனுரிவைவெண்புலால்கலக்கமெய்போர்த்த
வூறுதேனவனும்பர்க்கொருவனல்லொளிகொளொண்சுடரா
மாறுசேர்தருசென்னியடிகளுக்கிடமறைசிலியே. (உ)

கங்கைநீர்சடைமேலேகதமிகக்கதிரிளவனமென்
கொங்கையாளொருபாகமருவியகொல்லைவெள்ளேற்றன்
சங்கையாய்த்திரியாமேதன்னடியார்க்கருள்செய்து
வங்கையாலனலேந்துமடிகளுக்கிடமறைசிலியே. (௩)

மிக்ககாலனைவீட்டிமெய்கெடக்காமனைவிழித்துப்
புக்கவூரிடுபிச்சையுண்பதுபொன்றிகழ்கொன்றை

தக்கநாிகழ்மார்பிற்றவளவெண்ணீறணிந்தாமை
யக்கினாரமும்பூணடவடிகளுக்கிடமாசிலியே (௪)

மானஞ்சும்மடநோக்கிமலைமகள்பாகமுமருவித்
தானஞ்சாவரண்மூன்றுந்தழலெழச்சரமதுதுரந்து
வானஞ்சும்பெருவிடத்தையுண்டவன்மாமறையோதி
யானஞ்சாடியசென்னியடிகளுக்கிடமாசிலியே (௫)

பரியமாசுணங்கயிறாப்பருப்பதமதற்குமத்தாகப்
பெரியவேலையைக்கலங்கப்பேணியவானவர்கடையக்
கரியநஞ்சதுதோன்றக்கலங்கியவவர்தமைக்கண்டு
வரியவாரமிர்தாக்குமடிகளுக்கிடமாசிலியே. (௬-௭)

வண்ணமால்வரைதன்னைமறித்திடலுற்றவல்லரக்கன்
கண்ணுந்தோளுநல்வாயுநெரிதரக்கால்விரலூன்றிப்
பண்ணின்பாடலகைநரம்பாற்பாடியபாடலைக்கேட்டு
அண்ணலாரருள்செய்தவடிகளுக்கிடமாசிலியே. (௮)

குறியமாணுருவாகிக்குவலயமளந்தவன்றானும்
வெறிகொடாமரைமேலேவிரும்பியமெய்த்தவத்தோனுஞ்
செறிவொணாவகையெங்குந்தேடியுந்திருவடிகாண
வறிவொணாவுருவத்தெம்மடிகளுக்கிடமாசிலியே. (௯)

குருளையெய்தியமடவார்நிற்பவேகுஞ்சியைப்பறித்துந்
திரளைகையிலுண்பவருந்தேரருஞ்சொலியதேற்றப்
பொருளைப்பொய்யிலிமெய்யெநாதனைப்பொன்னடிவணங்கு
மருளையார்தரநல்குமடிகளுக்கிடமாசிலியே. (௧0)

அல்லிநீள்வயல்சூழ்ந்தவாசிலியடிகளைக்காழி
நல்லஞானசம்பந்தனற்றமிழ்பத்திவைநாளுஞ்
செல்லவல்லவர்தம்மைச்சூழ்ந்தமரர்தொழுதேத்த
வல்லவானுலகெய்திவைகலுமகிழ்ந்திருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

தொண்டைநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - அசாசிலிநாதர், தேவியார் - பெரியம்மை.

---

## ஸ்ரீசிகாழி - பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பொங்குவெண்புரிவளரும்பொற்புடைமார்பனெம்பெருமான்
செங்கணாடரவாட்டுஞ்செல்வனெஞ்சிவனுறைகோயில்
பங்கமில்பலமறைகள்வல்லவர்பத்தர்கள்பரவுந்
தங்குவெண்டிரைக்கானற்றண்வயற்காழிநன்னகரே. (௧)

தேவர்தானவர்பரந்துதிண்வரைமால்கடனிறுவி
நாவதாயமிர்துண்ணநயந்தவரிந்திடங்கண்டு

ஆவவென்றருநஞ்சமுண்டவனமர்தருமூதூர்
காவலாமதில்சூழ்ந்தகடிபொழிற்காழிநன்னகரே. (உ)

கரியின்மாமுகமுடையகணபதிதாதைபல்பூதந்
திரியவில்பலிக்கேகுஞ்செஞ்சுடர்சேர்தருமூதூர்
சரியின்முன்கைநன்மாதர்சதிர்படமாநடமாடி
யுரியநாமங்களேத்துமொலிபுனற்காழிநன்னகரே. (ங)

சங்கவெண்குழைச்செவியன்றண்மதிசூடியசென்னி
யங்கம்பூணெனவுடையவப்பனுகக்கழகியவூராந்
துங்கமாளிகையுயர்ந்ததொகுகொடிவானிடைமிடைந்து
அங்கவாண்மதிதடவுமணிபொழிற்காழிநன்னகரே. (ச)

மங்கைகூறமர்மெய்யான்மான்மறியேந்தியகையா
னெங்களீசனென்றெழுவாரிடர்வினைகெடுப்பவற்கூராஞ்
சங்கையின்றிநன்னியமந்தாஞ்செய்துதகுதியின்மிக்க
கங்கைநாடுவாகீர்த்திமறையவர்காழிநன்னகரே. (ரு)

நாறுகூவிளமத்தநாகமுஞ்சூடியநம்ப
னேறுமேறியவீசனிருந்தினிதமர்தருமூதூர்
நீறுபூசியவுருவர்நெஞ்சினுள்வஞ்சமொன்றின்றித்
தேறுவார்கள்சென்றேத்துஞ்சீர்திகழ்காழிநன்னகரே. (சா)

நடமதாடியநாதனந்திதன்முழவிடைக்காட்டில்
விடமமர்ந்தொருகாலம்விரித்தறமுரைத்தவற்கூரா
மிடமதாமறைபயில்வாரிருந்தவர்திருந்தியம்போதிற்
குடமதார்மணிமாடங்குலாவியகாழிநன்னகரே (எ)

கார்கொண்மேனியவ்வரக்கன்றன்கடுந்திறலினைக்கருதி
யேர்கொண்மங்கையுமஞ்சவெழின்மலையெடுத்தவனெரியச்
சீர்கொள்பாதத்தோர்விரலாற்செறுத்தவெஞ்சிவனுறைகோயி*
றார்கொள்வண்டினஞ்சூழ்ந்ததண்வயற்காழிநன்னகரே. (அ)

மாலுமாமலரானுமருவிநின்றியலியமனத்தாற்
பாலுங்காண்பரிதாயபரஞ்சுடர்தன்பதியாகுஞ்
சேலும்வாளையுங்கயலுஞ்செறிந்துதன்கிளையொடுமேய
வாலுஞ்சாலிநற்கதிர்கணிவயற்காழிநன்னகரே. (கூ)

புத்தர்பொய்மிகுசமணர்பொழிகழலடியிணைகாணுஞ்
சித்தமற்றவர்க்கிலாமைதிகழ்ந்தருட்செஞ்சுடர்க்கூராஞ்
சித்தரோடுநல்லமரர்செறிந்தநன்மாமலர்கொண்டு
முத்தனேயருளென்றுமுறைமைசெய்காழிநன்னகரே. (கo)

ஊழியானவைபலவுமொழித்திடுங்காலத்திலோங்கு. (கக)

திருச்சிற்றம்பலம்.

## ஸ்ரீசீகாழி - திருவிராகம் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

நமபொருணமக்களென்றநச்சியிச்சைசெய்துநீ
ரமபரமடைந்துசாலவல்லலுய்ப்பதன்முனம
மும்பர்நாதனுந்தமனொளிமிகுத்தசெஞ்சடை
நமபனமேவுநன்னகாநலங்கொளகாழிசேர்மினே. (௧)

பாவமேவுமுள்ளமோடுபத்தியின்றிநித்தலும
மேவமானசெய்துசாவதன்முனமமிசைந்துநீர்
தீபமாலைதூபமுஞ்செறிந்தகையராகிநந
தேவதேவனமன்னுமூர்திருந்துகாழிசேர்மினே. (௨)

சோறுகூறையின்றியேதுவண்டுதூரமாய்நுமக்
கேறுசுற்றமெள்கவேயிடுக்கணுய்ப்பதன்முன
மாறுமோரசடையினுனதியானைசெற்றவ
னாறுதேன்மலர்ப்பொழிலலங்கொள்காழிசேர்மினே (௩)

நச்சிநீர்பிறன்கடைநடந்துசெல்லநாளையு
முச்சிமேனுமூணையுமுணர்ந்துகேட்பதன்முனம்
பிச்சைநச்சரவரைப்பெரியசோதிபேணுவா
ரிசைசெய்யுமெமபிரானெழிலகொள்காழிசேர்மினே. (௪)

கண்கள்காண்பொழிந்துமேனிகன்றிபொன்றலாதநோ
யுண்கிலாதசெய்துநும்மையுய்த்தழிப்பதன்முனம
விண்குலாவுதேவருய்யவேலைநஞ்சமுதுசெய
கண்கண்மூன்றுடையவெங்கருத்தாகாழிசேர்மினே. (௫)

அல்லல்வாழ்க்கையுய்ப்பதற்கவத்தமேபிறந்துநீ
ரொல்லையில்பிணக்கினிற்கிடந்திடாதெழுமினோ
பல்லில்வெண்டலையினிற்பலிக்கியங்குபான்மையான்
கொல்லையேறதேறுவான்கோலக்காழிசேர்மினே. (௬-௭)

பொய்மிகுத்தவாயராய்ப்பொறாமையோடுசொல்லுநீ
ரைமிகுத்தகண்டராயடுத்திளைப்பதன்முன
மைமிகுத்தமேனிவாளரக்கனைநெரித்தவன்
பைமிகுத்தபாம்பரைப்பரமர்காழிசேர்மினே. (௮)

காலினோடுகைகளுந்தளர்ந்துகாமநோய்தனு
வேலைவார்குழலினாரிகழ்ந்துரைப்பதன்முன
மாலினோடுநான்முகன்மதித்தவர்கள்காண்கிலா
நீலமேவுகண்டனார்நிகழ்ந்தகாழிசேர்மினே. (௯)

நிலைவெறுத்தநெஞ்சமோடுநேசமில்புதல்வர்கண்
முலைவெறுத்தபோதொடங்கியேமுனிவதன்முனம்.

தலைபறித்தகையர்தேரர்தாந்தரிப்பரியவன்
சிலைபிடித்தெயிலெய்தான்றிருந்துகாழிசேர்மினே (௧௦)

தக்கனாதலையரிந்தசங்கரன்றனதரை
யக்கினோடரவசைத்தவன்றிவண்ணர்காழியை
யொக்கஞானசம்பந்தனுரைத்தபாடல்வல்லவர்
மிக்கவின்பமெய்திவீற்றிருந்துவாழ்தன்மெய்ம்மையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

## திருத்துருத்தி - திருவிராகம் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

வரைத்தலைப்பசும்பொனோடருங்கலன்களுந்திவந்
திரைத்தலைச்சுமந்துகொண்டெறிந்திலங்குகாவிரிக்
கரைத்தலைத்துருத்திபுக்கிருப்பதேகருத்தினை
யுரைத்தலைப்பொலிந்துனக்குணர்த்துமாறுவல்லமே. (௧)

அடுத்தடுத்தகத்தியோடுவன்னிகொன்றைகூவிளந்
தொடுத்துடன்சடைப்பெய்தாய்துருத்தியாயோர்காலனைக்
கடுத்தடிப்புறத்தினானிறத்துதைத்தகாரண
மெடுத்தெடுத்துரைக்குமாறுவல்லமாகினல்லமே. (௨)

கங்குல்கொண்டதிங்களோடுகங்கைதங்குசெஞ்சடைச்
சங்கிலங்குவெண்குழைசரிந்திலங்குகாதினாய்
பொங்கிலங்குபூணநூலுருத்திராதுருத்திபுக்
கெங்குநின்னிடங்களாவடங்கிவாழ்வதென்கொலோ. (௩)

கருத்தினாலோர்காணியில்விருத்தியில்லைதொண்டர்த
மருத்தியாற்றம்வல்லசொல்லியையமேற்பதன்றியும
மொருத்திபால்பொருத்திவைத்துடம்புவிட்டியோகியா
யிருந்திநீதுருத்திபுக்கதென்னமாயமென்பதே (௪)

துறக்குமாசொலப்படாய்துருத்தியாய்திருந்தடி
மறக்குமாறிலாதவென்னைமையல்செய்திமண்ணின்மேற்
பிறக்குமாறுகாட்டினாய்பிணிப்படுமுடம்புவிட்
டிறக்குமாறுகாட்டினாய்க்கிழுக்குகின்றதென்னையே. (௫)

வெயிற்கெதிர்ந்திடங்கொடாதகங்குளிர்ந்தபைம்பொழிற்
றுயிற்கெதிர்ந்தபுள்ளினங்கண்மல்குதண்டுருத்தியாய்
மயிற்கெதிர்ந்தணங்குசாயன்மாதொர்பாகமாகவு
வெயிற்கெதிர்ந்தோரம்பினாலெரித்தவில்லியல்லையே. (௬)

கணிச்சியம்படைச்செல்வர்கழிந்தவர்க்கொழிந்தசீர்
துணிச்சிரக்கிரந்தையாய்கரந்தையாய்துருத்தியா

யணிப்படுந்தனிப்பிறைப்பனிக்கதிர்க்கவாவுநன்
மணிப்படும்பைநாகநீமகிழ்ந்தவண்ணலல்லையே. (எ)

சுடப்பொடிந்துடம்பிழந்தனங்கனாயமன்மத
னிடர்ப்படக்கடந்திடந்துருத்தியாகவெண்ணினாய்
கடற்படையுடையவக்கடலிலங்கைமன்னனை
யடற்படவடக்கவிலடர்த்தவண்ணலல்லையே (அ)

களங்குளிர்ந்திலங்குபோதுகாதலானுமானுமாய்
வளங்கிளமபொனங்கழல்வணங்கிவந்துகாண்கிலார்
துளங்கிளம்பிறைச்செனித்துருத்தியாய்திருந்தடி
யுளங்குளிர்ந்தபோதெலாமுகந்துகந்துரைப்பனே. (கூ)

புத்தர்தத்துவமிலாச்சமணுரைத்தபொய்தனை
யுத்தமமெனக்கொளாதுகந்தெழுந்துவண்டினங்
துத்தநின்றுபண்செயுஞ்சூழ்பொழிற்றுருத்தியெம்
பித்தன்பித்தனைத்தொழப்பிறப்பறுதலபெற்றியே. (கo)

கற்றுமுற்றினார்தொழுங்கழுமலத்தருந்தமிழ்
சுற்றுமுற்றுமாவினனவன்பகர்ந்தசொற்களாற்
பெற்றமொன்றுயர்த்தவன்பெருந்துருத்திபேணவே
குற்றமுற்றுமின்மையிற்குணங்கள்வந்துகூடுமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர் - வேதேசுவரர், தேவியார் - முகிழாம்பிகையம்மை.
ஆக பதிகம் - கூகூ.

## திருக்கோடிகாத் - திருவிராகம் - பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

இன்றுநன்றுநாளைநன்றெனாறுநின்றவிச்சையாற்
பொன்றுகின்றவாழ்க்கையைப்போகவிட்டுப்போதுமின்
மின்றியங்குசோதியானவெண்மதிவிரிபுனற்
கொன்றைதுன்றுசென்னியான்கோடிகாவுசேர்மினே. (க)

அல்லன்மிக்கவாழ்க்கையையாதரித்திராதுநீர்
நல்லதோர்நெறியினைநாடுதுங்கடம்மினோ
வில்லையன்னவாணுதல்வெள்வளையோர்பாகமாங்
கொல்லைவெள்ளையேற்றினான்கோடிகாவுசேர்மினே. (உ)

துக்கமிக்கவாழ்க்கையின்சோர்வினைத்துறந்துநீர்
தக்கதோர்நெறியினைச்சார்தல்செய்யப்போதுமி
னக்கணிந்தராமிசையாறணிந்தசென்னிமேற்
கொக்கிறகணிந்தவன்கோடிகாவுசேர்மினே. (ங)

பண்டுசெய்தவல்வினைபற்றறக்கெடும்வகை
யுண்டுமக்குரைப்பனானொல்லைநீரெழுமினோ

மண்டுகங்கைசெஞ்சடையைத்துமாதோர்பாகமாக்
கொண்டுகந்தமாயினன்கோடிகாவுசேர்மினே. (ச)

முன்னைநீர்செய்பாவத்தானமூர்த்திபாதஞ்சிந்தியா
தின்னநீரிடும்பையினமூழ்கிறீரொழுமினோ
பொன்னைவென்றகொன்றைமாலையான்பூதம்பாடவாடலான்
கொன்னவிலுமவேலினன்கோடிகாவுசேர்மினே. (ரு)

ஏவமிககசிந்தையோடின்பமெய்தலாமெனப்
பாவமெத்தனையுநீர்செய்தொருபயனிலைக்
காவனமிக்கமாநகர்காய்ந்துவெங்கனல்படக்
கோவமிக்கநெற்றியானகோடிகாவுசேர்மினே. (சா)

ஏணழிந்தவாழ்க்கையின்பமென்றிருந்துநீர்
மாணழிந்தமூப்பினால்வருந்தன்முன்னம்வம்மினோ
பூணல்வெள்ளெலும்பினன்பொன்றிகழ்சடைமுடிக்
கோணல்வெண்பிறையினன்கோடிகாவுசேர்மினே. (எ)

மற்றிவாழ்க்கைமெய்யெனும்மனத்தினைத்தவிர்ந்துநீர்
பற்றிவாழ்மினசேவடிபணிந்துவந்தெழுமினோ
வெற்றிகொடசமுகனவிறலகெடவிருந்தபோர்
குற்றமில்வரையினனகோடிகாவுசேர்மினே. (அ)

மங்குநோயுறும்பிணிமாயும்வண்ணஞ்சொல்லுவன
செங்கண்மாறிசைமுகனசென்றளந்துங்காண்கிலா
வெங்கண்மால்விடையுடைவேதியனவிரும்புமூர
கொங்குலாம்வளம்பொழிற்கோடிகாவுசேர்மினே. (கூ)

தட்டொடுதழைமயிற்பீலிகொள்சமணரும்
பட்டுடைவிரிதுகிலினர்கள்சொற்பயனிலை
விட்டபுன்சடையினனமேதகுமுழவொடு
கொட்டமைந்தவாடலானகோடிகாவுசேர்மினே. (கo)

கொந்தணிகுளிர்பொழிற்கோடிகாவுமேவிய
செந்தழலுருவனைசசீர்மிகுதிறலுடை
யந்தணர் புகலியுளாயகேள்விஞானசம்
பந்தனதமிழ்வல்லார்பாவமானபாறுமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - கோடீசுவரர், தேவியார்-வடிவாம்பிகை.

## திருக்கோவலூர்வீரட்டம் - திருவிராகம்-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

படைகொள்கூற்றம்வந்துமெய்ப்பாசம்விட்டபோதின்க
ணிடைகொள்வாரெமக்கிலையெழுகபோதுநெஞ்சமே
குடைகொள்வேந்தன்மூதாதைகுழகன்கோவலூர்தனுள்
விடையதேறுங்கொடியினன்வீரட்டானஞ்சேர்துமே. (க)

காவலாளர்தம்மனைக்கடைகடோறுங்காணிமிர்த்
திரவலாழிநெஞ்சமேயினியதெய்தவேண்டினீ
குரவமேறிவண்டினங்குழலோடியாழ்செய்கோவலூர்
விரவினாறுகொன்றையான்வீரட்டானஞ்சேர்துமே (உ)

உள்ளத்தீரேபோதுமினுறுதியானதறிதிரே
லள்ளற்சேற்றிற்காலிட்டங்கவலத்துள்ளழுந்தாதே
கொள்ளப்பாடுகீதத்தான்குழகன்கோவலூர்தனில
வெள்ளந்தாங்குசடையினான்வீரட்டானஞ்சேர்துமே. (௩)

கனைகொளிருமல்சூலைநோய்கம்பதாளிகுன்மமு
மினையபலவுமூப்பினோடெய்திவந்துநலியாமுன
பனைகளுலவுபைம்பொழிற்பழனஞ்சூழ்ந்தகோவலூர்
வினையைவென்றவேடத்தான்வீரட்டானஞ்சேர்துமே. (௪)

உளங்கொள்போகமுய்த்திடாருடம்பிழந்தபோதின்கட்
டுளங்கிநின்றுநாடொறுந்துயரலாழிநெஞ்சமே
வளங்கொள்பெண்ணைவந்துலாவயறகள்சூழ்ந்தகோவலூர்
விளங்குகோவணத்தினான்வீரட்டானஞ்சேர்துமே. (௫)

கேடுமூப்புச்சாக்காடுகெழுமிவந்துநாடொறு
மாடுபோனைகளாயாக்கைபோகதன்றியுங்
கூடிநின்றுபைம்பொழிற்குழகன்கோவலூரதனுள்
வீடுகாட்டுநெறியினான்வீரட்டானஞ்சேர்துமே. (௬)

உரையும்பாட்டுந்தளர்வெய்தியுடம்புமூத்தபோதின்க
ணரையுந்திரையுங்கண்டெள்கிநகுவர்நமர்களாதலால்
வரைகொள்பெண்ணைவந்துலாவயல்கள்சூழ்ந்தகோவலூர்
விரைகொள்சேர்வெண்ணீற்றினான்வீரட்டானஞ்சேர்துமே. (௭)

ஏதமிக்கமூப்பினோடிருமலீளையென்றிவை
யூதலாக்கையோம்புவீருறுதியாவதறிதிரேற்
போதில்வண்டுபண்செயும்பூந்தண்கோவலூரதனுள்
வேதமோதுநெறியினான்வீரட்டானஞ்சேர்துமே. (௮)

ஆறுபட்டபுன்சடையழகனாயிழைக்கொரு
கூறுபட்டமேனியான்குழகன்கோவலூர்தனி
னீறுபட்டகோலத்தானீலகண்டனிருவர்க்கும
வேறுபட்டசிந்தையான்வீரட்டானஞ்சேர்துமே. (௯)

குறிகொளாழிநெஞ்சமேகூறைதுவரிட்டார்களும
மறிவிலாதவமணர்சொல்லவத்தமாவதறிதிரேற்
பொறிகொள்வண்டுபண்செயும்பூந்தண்கோவலூர்தனில்
வெறிகொள்கங்கைதாங்கினான்வீரட்டானஞ்சேர்துமே. (௧0)

கழியேரவிலவுகானல்சூழ்காழிஞானசம்பந்தன்
பழிகடரச்சொன்னசொற்பாவநாசமாதலா
லழிவிலீர்கொண்டேத்துமின்தண்கோவலூர்தனில்
விழிகொள்பூதப்படையினான்வீரட்டானஞ்சேர்துமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

நடுநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-வீரட்டானேசுவரர், தேவியார் - சிவானந்தவல்லியம்மை.

## திருவாரூர்-திருவிராகம் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பருக்கையானைமத்தகத்தரிக்குலத்துகிப்புகந்
நெருக்கிவாய்நித்திலங்கிரக்குநீள்பொருப்பனூர்
கருக்கொள்சோலைசூழநீடுமாடமாளிகைக்கொடி
மருக்கனமண்டலத்தணவுமந்தணாரூரென்பதே. (க)

விண்டவெள்ளெருக்கலர்ந்தவன்னிகொன்றைமத்தமு
மிண்டுகொண்டசெஞ்சடைமுடிச்சிவனிருந்தவூர்
கெண்டைகொண்டலர்ந்தகண்ணினார்கள்கீதவோசைபோ
யண்டரண்டமூடறுக்குமந்தணாரூரென்பதே. (உ)

கறுத்தநஞ்சமுண்டிருண்டகண்டர்காலனின்னுயிர்
மறுத்தமாணிதன்றனக்கம்வண்மைசெய்தமைந்தனூர்
வெறித்துமேதியோடிமூசுவள்ளைவெள்ளைநீள்கொடி
யறுத்துமண்டியாவிபாயுமந்தணாரூரென்பதே. (ந)

அஞ்சுமொன்றியாறுவீசிநீறுபூசுமேனியிற்
குஞ்சியாரவந்திசெய்யவஞ்சலென்னிமன்னுமூர்
பஞ்சியாருமெல்லடிப்பணைத்தகொங்கைநுண்ணிடை
யஞ்சொலாரரங்கெடுக்குமந்தணாரூரென்பதே. (ச)

சங்குலாவுதிங்கள்சூடிதன்னையுன்னுவார்மனத்
தங்குலாவிநின்றவெங்களாதிதேவன்மன்னுமூர்
தெங்குலாவுசோலைநீடுதேனுலாவுசெண்பக
மங்குலாவியண்டநாறுமந்தணாரூரென்பதே. (ரு)

கள்ளநெஞ்சவஞ்சகக்கருத்தைவிட்டருத்தியோ
டுள்ளமொன்றியுள்குவாருளத்துளானுகந்தவூர்
துள்ளிவாளைபாய்வயற்சுரும்புலாவுநெய்தல்வா
யள்ளனுழையாரல்வாருமந்தணாரூரென்பதே. (சு)

கங்கைபொங்குசெஞ்சடைக்கரந்தகண்டர்காமனை
மங்கைவெங்கணல்விழித்தமங்கைபங்கன்மன்னுமூர்
தெங்கினூடுபோகிவாழைகொத்திறுத்துமாவின்மே
லங்கண்முந்திமுந்தியேறுமந்தணாரூரென்பதே. (எ)

வரைத்தலமெடுத்தவன்முடித்தலம்முரத்தொடு
நெரித்தவன்புரத்தைமுன்னெரித்தவனிருந்தவூர்
நிரைத்தமாளிகைத்திருவினேரனார்கள்வெண்ணகை
யரத்தவாய்மடந்தைமார்களாடுமாரூரென்பதே. (௮)

இருந்தவன்கிடந்தவனிடந்துவிண்பறந்துமெய்
வருந்தியுமளப்பொணாதவானவன்மகிழ்ந்தவூர்
செருந்திஞாழல்புன்னைவன்னிசெண்பகஞ்செழுங்குரா
வரும்புசோலைவாசநாறுமந்தணாரூரென்பதே. (௯)

பறித்தவெண்டலைக்கடுப்படுத்தமேனியார்தவம்
வெறித்தவேடன்வேலைநஞ்சமுண்டகண்டன்மேவுமூர்
மறித்துமண்டுவண்டல்வாரிமிண்டுநீர்வயற்செநெ
லறுத்துவாயசும்புபாயுமந்தணாரூரென்பதே. (௧௦)

வல்லிசோலைசூழநீடுமன்னுவீதிபொன்னுலா
வல்லிமாதமர்ந்திருந்தவந்தணாரூராதியை
நல்லசொல்லுஞானசம்பந்தனாவிலினுரை
வல்லதொண்டர்வானமாளவல்லர்வாய்மையாகவே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருச்சிரபுரம் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

அன்னமென்னடையரிவையோடினிதுறையமரர்தம்பெருமானார்
மின்னுசெஞ்சடைவெள்ளெருக்கமமலர்வைத்தவர்வேதந்தாம
பன்னுநன்பொருள்பயந்தவர்பருமதிற்சிரபுரத்தார்சீரார்
பொன்னின்மாமலரடிதொழுமடியவர்வினையொடும்பொருந்தாரே. (௧)

கோலமாகரியுரித்தவரரவொடுமேனக்கொம்பிளவாமை
சாலப்பூண்டுதண்மதியதுசூடியசங்கரனார்தம்மைப
போலத்தம்மடியார்க்குமின்பளிப்பவர்பொருகடல்விடமுண்ட
நீலத்தார்மிடற்றண்ணலார்சிரபுரந்தொழவினைநில்லாவே. (௨)

மானத்திண்புயவரிசிலைப்பார்த்தனைத்தவங்கெடமதித்தன்று
கானத்தேதிரிவேடனாயமர்செயக்கண்டருள்புரிந்தார்பூந்
தேனைத்தேர்ந்துசேர்வண்டுகடிரிதருஞ்சிரபுரத்துறையெங்கள்
கோனைக்கும்பிடுமடியரைக்கொடுவினைகுற்றங்கள்குறுகாவே. (௩)

மாணிதன்னுயிர்மதித்துணவந்தவக்காலனையுதைசெய்தார
பேணியுள்குமெய்யடியவர்பெருந்துயர்ப்பிணக்கறுத்தருள்செய்வார்
வேணிவெண்பிறையுடையவர்வியன்புகழ்ச்சிரபுரத்தமர்கின்ற
வாணிப்பொன்னினையடிதொழுமடியவர்க்கருவினையடையாவே. (௪)

பாருநீரொடுபல்கதிரிரவியும்பனிமதியாகாசம்
மோரும்வாயுவுமொண்கனல்வேள்வியிற்றலைவனுமாய்நின்றார்

குணங்கள்கூறியுங்குற்றங்கள்பரவியுங்குரைகழலடிசேரக்
கணங்கள்பாடவுங்கண்டவர்பரவவுங்கருத்தறிந்தவர்மேய
மணங்கொள்பூம்பொழிலரிசிலின்வடகரைவருபுனன்மாகாளம்
வணங்குமுள்ளமோடணையவல்லார்களைவல்வினையடையாவே. (௩)

எங்குமேதுமோர்பிணியிலர்கேடிலரிழைவளர்நறுங்கொன்றை
தங்குதொங்கலுந்தாமமுங்கண்ணியுந்தாமகிழ்ந்தவர்மேய
மங்குறோய்பொழிலரிசிலின்வடகரைவருபுனன்மாகாளங்
கங்குலும்பகலுந்தொழுமடியவர்காதன்மையுடையாரே. (௪)

நெதியமென்னுளபோகமற்றென்னுளநிலமிசைநலமாய
கதியமென்னுளவானவரென்னுளர்கருதியபொருள்கூடின
மதியந்தோய்பொழிலரிசிலின்வடகரைவருபுனன்மாகாளம
புதியபூவொடுசாந்தமும்புகையுங்கொண்டேத்துதல்புரிந்தோர்க்கே. (௫)

கண்ணுலாவியகதிரொளிமுடிமிசைக்கனல்விடுசுடர்நாகந்
தெண்ணிலாவொடுதிலகமுநகுதலைதிகழவைத்தவர்மேய
மண்ணுலாம்பொழிலரிசிலின்வடகரைவருபுனன்மாகாள
முண்ணிலாநினைப்புடையவர்யாவரிவ்வுலகினிலுயர்வாரே (௬)

தூசுதானரைத்தோலுடைக்கண்ணியஞ்சுடர்விடுநறுங்கொன்றை
பூசுவெண்பொடிப்பூசுவதன்றியும்புகழ்புரிந்தவர்மேய
மாசுலாம்பொழிலரிசிலின்வடகரைவருபுனன்மாகாளம்
பேசுநீர்மையர்யாவரிவ்வுலகினிற்பெருமையைப்பெறுவாரே (௭)

பவ்வமார்கடலிலங்கையர்கோன்றனைப்பருவரைக்கீழூன்றி
யெவ்வந்தீரவன்றிமையவர்க்கருள்செய்தவிறையவனுறைகோயில்
மவ்வந்தோய்பொழிலரிசிலின்வடகரைவருபுனன்மாகாளங்
கவ்வையாற்றொழுமடியவர்மேல்வினைகனவிடைச்செதினன்றே. (௮)

உய்யுங்காரணமுண்டென்றுகருதுமினொளிகிளர்மலரோனும்
பைகொள்பாம்பணைப்பள்ளிகொளண்ணலும்பரவநின்றவர்மேய
மையுலாம்பொழிலரிசிலின்வடகரைவருபுனன்மாகாளங்
கையினாற்றொழுதவலமும்பிணியுந்தயக்கவலையுங்களைவாரே. (௯)

பிண்டிபாலருமண்டைகொடேரரும்பீலிகொண்டுழலவாருங்
கண்டநூலருங்கடுந்தொழிலாளருங்கழறநின்றவர்மேய
வண்டுலாம்பொழிலரிசிலின்வடகரைவருபுனன்மாகாளம்
பண்டுநாஞ்செய்தபாவங்கள்பற்றறப்பரவுதல்செய்வோமே (௧௦)

மாறுதன்னொடுமண்மிசையில்லதுவருபுனன்மாகாளத்
தீறுமாதியுமாகியசோதியையேறமர்பெருமானை
நாறுபூம்பொழிற்காழியுண்ஞானசம்பந்தன தமிழ்மாலை
கூறுவாரையுங்கேட்கவல்லாரையுங்குற்றங்கள்குறுகாவே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர் - காளகண்டேசுவரர், தேவியார், பக்ஷநாயகி.
ஆ பதிகம் - ௧௦௪.

## திருக்கடிக்குளம் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பொடிகொண்மேனிவெண் ணூலினர்தோலினர்புலியுரியதளாடை
கொடிகொளேற்றினர்மணிகிணினெனவருகுரைகழல்சிலம்பார்க்கக்
கடிகொள்பூம்பொழில்சூழ்தருகடிக்குளத்துறையுங்கற்பகத்தைத்தம்
முடிகள்சாய்த்தடிவீழ்தருமடியரைமுன்வினைமூடாவே. (க)

விண்களார்தொழும்விளக்கினைத்துளக்கிலாவிகிர்தனைவிழவாரு
மண்களார்துதித்தன்பராயின்புறும்வள்ளலைமருவித்தங்
கண்களாரக்கண்டெங்கடிக்குளத்துறைதருகற்பகத்தைப்
பண்களாரப்பாடுவார்கேடிலர்பழியிலர்புகழாமே. (உ)

பொங்குநற்கரியுரியதுபோர்ப்பதுபுலியதளழனாகந்
தங்கமங்கையைப்பாகமதுடையவர்தழல்புரைதிருமேனிக்
கங்கைசேர்தருசடையினர்கடிக்குளத்துறைதருகற்பகத்தை
யெங்குமேத்திநின்றின்புறுமடியரையிடும்பைவந்தடையாவே. (ங)

நீர்கொணீள்சடைமுடியனைநித்திலத்தொத்தினைநிகரில்லாப்
பார்கொள்பாரிடத்தவர்தொழும்பவளத்தைப்பசும்பொனைவிசும்பாரும்
கார்கொள்பூம்பொழில்சூழ்தருகடிக்குளத்துறையுங்கற்பகந்தன்னைச்
சீர்கொள்செல்வங்களேத்தவல்லார்வினைதேய்வதுதிணமாமே. (ச)

சுரும்புசேர்சடைமுடியினன்மதியொடுதுன்னியதழனாக
மரும்புதாதவிழ்ந்தலர்ந்தனமலர்பலகொண்டடியவர்போற்றக்
கரும்புகார்மலிகொடிமிடைகடிக்குளத்துறைதருகற்பகத்தை
விரும்புவேட்கையோடுளமகிழ்ந்துரைப்பவர்விதியுடையவர்தாமே. (ரு)

மாதிலங்கியபாகத்தன்மதியமொடலைபுனலழனாகம்
போதிலங்கியகொன்றையுமத்தமும்புரிசடைக்கழகாகக்
காதிலங்கியகுழையினன்கடிக்குளத்துறைதருகற்பகத்தின்
பாதங்கைதொழுதேத்தவல்லார்வினைபற்றறக்கெடுமன்றே (சா)

குலவுகோலத்தகொடிநெடுமாடங்கள்குழாம்பலகுளிர்பொய்கை
யுலவுபுள்ளினமன்னங்களாலிடும்பூவைசேருங்கூந்தற்
கலவைசேர்தருகண்ணியன்கடிக்குளத்துறையுங்கற்பகத்தைச்சீர்
நிலவிநின்றுநின்றேத்துவார்மேல்வினைநிற்ககில்லாதானே. (எ)

மடுத்தவாளரக்கன்னவன்மலைதன்மேன்மதியிலாமையிலோடி
யெடுத்தலுமுடிதோள்கரநெரிந்திறவிறையவன்விரலூன்றக்
கடுத்துவாயொடுகையெடுத்தலறிடக்கடிக்குளந்தனின்மேவிக்
கொடுத்தபேரருட்கூத்தனையேத்துவார்குணமுடையவர்தாமே. (அ)

நீரினார்கடற்றுயின்றவனயனொடுநிகழடிமுடிகாணார்
பாரினார்விசும்புறப்பரந்தெழுந்ததோர்பவளத்தின்படியாகிக்
காரினார்பொழில்சூழ்தருகடிக்குளத்துறையுங்கற்பகத்தின்றன்
சீரினார்கழலேத்தவல்லார்களைத்தீவினையடையாவே. (கூ)

குண்டர்தம்மொடுசாக்கியர்சமணருங்குறியின்னெறியில்லா
மிண்டாமிண்டுரைகேட்டவைமெய்யெனக்கொள்ளன்மின்விடமுண்ட
கண்டர்முண்டநன்மேனியர்கடிக்குளத்துறைதருமெம்மீசர்
தொண்டாதொண்டரைத்தொழுதடிபணிமின்கடுநெறியெளிதாமே. (கo)

தனமலிபுகழ்தயங்குபூந்தராயவர்மன்னன்ற்சம்பந்தன்
மனமலிபுகழ்வண்டமிழ்மாலைகண்மாலதாய்மகிழ்வோடுங்
கனமகவிடலோதம்வந்துலவியகடிக்குளத்தமர்வானை
யினமலிந்திசைபாடவல்லார்கள்போயிறைவனோடுறைவாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-கற்பகேசுவரர், தேவியார்-சவுந்தரநாயகியம்மை.

---

## திருக்கீழ்வேளூர் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

மின்னுலாவியசடையினருமடையினர்மிளிர்தருமரவோடும்
பன்னுலாவியமறையொலிநாவினர்கறையணிகண்டத்தர்
பொன்னுலாவியகொன்றையந்தாரினர்புகழ்மிகுகீழ்வேளூ
ருன்னுலாவியசிந்தையர்மேல்வினையோடிடவீடாமே. (க)

நீருலாவியசடையிடையரவொடுமதிசிரநிரைமாலை
வாருலாவியவனமுலையவளொடுமணிசிலம்பவையார்க்க
வேருலாவியவிறைவனதுறைவிடமெழிறிகழ்கீழ்வேளூர்
சீருலாவியசிந்தைசெய்தணைபவர்பிணியொடுவினைபோமே. (உ)

வெண்ணிலாமிகுவிரிசடையரவொடுவெள்ளெருக்கலர்மத்தம்
பண்ணிலாவியபாடலோடாடலர்பயில்வுறுகீழ்வேளூர்ப்
பெண்ணிலாவியபாகனைப்பெருந்திருக்கோயிலெம்பெருமானை
யுண்ணிலாவிநின்றுள்கியசிந்தையாருலகினிலுள்ளாரே. (ங)

சேடுலாவியகங்கையைச்சடையிடைத்தொங்கவைத்தழகாக
நாடுலாவியபலிகொளுநாதனூர்நலமிகுகீழ்வேளூர்ப்
பீடுலாவியபெருமையர்பெருந்திருக்கோயிலுட்பிரியாது
நீடுலாவியநிமலனைப்பணிபவர்நிலமிகப்பெறுவாரே. (ச)

துன்றுவார்சடைச்சுடர்மதிநகுதலைவடமணிசிரமாலை
மன்றுலாவியமாதவரினிதியனமணிமிகுகீழ்வேளூர்
நின்றுநீடியபெருந்திருக்கோயிலினிமலனைநினைவோடுஞ்
சென்றுலாவிநின்றேத்தவல்லார்வினைதேய்வதுதிணமாமே. (ரு)

கொத்துலாவியகுழறிகழ்சடையனைக்கூத்தனைமகிழ்ந்துள்கித்
தொத்துலாவியநூலணிமார்பினர்தொழுதெழுகீழ்வேளூர்ப்
பித்துலாவியபத்தர்கள்பேணியபெருந்திருக்கோயின்மனனு
முத்துலாவியவித்தினையேத்துமின்முடுகியவிடர்போமே. (சு)

பிறைநிலாவியசடையிடைப்பின்னலும்வன்னியுந்துன்னருங்
கறைநிலாவியகண்டரெண்டோளினர்காதல்செய்கீழ்வேளூர்
மறையுலாவியவந்தணர்மலிதருபெருந்திருக்கோயின்மன்னு
நிறையுலாவியவீசனைநேசத்தானினைபவர்வினைபோமே. (எ)

மலைநிலாவியமைந்தனம்மலையினையெடுத்தலுமரக்கன்றன்
றலையெலாநெரிந்தலறிடவூன்றினானுறைதருகீழ்வேளூர்க்
கலைநிலாவியநாவினர்காதல்செய்பொருந்திருக்கோயிலுண்
ணிலைநிலாவியவீசனைநேசத்தானினையவல்வினைபோமே. (அ)

மஞ்சுலாவியகடற்கிடந்தவனொடுமலரவன்காண்பொணாப்
பஞ்சுலாவியமெல்லடிப்பார்ப்பதிபாகனைப்பரிவோடுஞ்
செஞ்சொலார்பலர்பரவியதொல்புகழ்மல்கியகீழ்வேளூர்
நஞ்சுலாவியகண்டனைநணுகுமின்னடலைகணணுகாவே. (௯)

சீறுலாவியதலையினார்நிலையிலாவமணர்கள்சீவரத்தார்
வீறிலாதவெஞ்சொற்பலவிரும்பன்மின்சுரும்பமர்கீழ்வேளூ
ரேறுலாவியகொடியனையேதமில்பெருந்திருக்கோயின்மன்னு
பேறுலாவியபெருமையன்றிருவடிபேணுமின்றவமாமே. (௰)

குருண்டவார்குழற்சடையுடைக்குழகனையழகார்கீழ்வேளூர்த்
திரண்டமாமறையவர்தொழும்பெருந்திருக்கோயிலெம்பெருமானை
யிருண்டமேதியின்மிகுவயன்மல்குபுகலிமன்சம்பந்தன்
றெருண்டபாடல்வல்லாரவர்சிவகதிபெறுவதுதிடமாமே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - அக்ஷயலிங்கநாதர், தேவியார் - வனமுலைநாயகியம்மை.

---

## திருவலஞ்சுழி - பண் - நட்டகராம்.

திருச்சிற்றம்பலம்.

என்னபுண்ணியஞ்செய்தனைநெஞ்சமேயிருங்கடல்வையத்து
முன்னைநீபுரிநல்வினைப்பயனிடைமுழுமணித்தரளங்கண்
மன்னுகாவிரிசூழ்திருவலஞ்சுழிவாணனைவாயாரப்
பன்னியாதரித்தேத்தியும்பாடியும்வழிபடுமதனாலே. (௧)

விண்டொழிந்தனநம்முடைவல்வினைவிரிகடல்வருநஞ்ச
முண்டிறைஞ்சுவானவர்தமைத்தாங்கியவிறைவனையுலகத்தில்
வண்டுவார்குழன்மங்கையோர்பங்கனைவலஞ்சுழியிடமாகக்
கொண்டநாதன்மெய்த்தொழில்புரிதொண்டரோடினிதிருந்தமையாலே. (௨)

திருந்தலார்புரந்தீயெழச்செறுவனவிறலின்கணடியாரைப்
பரிந்துகாப்பனபத்தியில்வருவனமத்தமாம்பிணிநோய்க்கு
மருந்துமாவனமந்திரமாவனவலஞ்சுழியிடமாக
விருந்தநாயகனிமையவரேத்தியவிணையடித்தலந்தானே (௩)

கறைகொள்கண்டத்தர்காய்கதிர்நிறத்தினராறத்திறமுனிவர்க்கன்
றிறைவராலிடைநீழலிருந்துகந்தினிதருள்பெருமானூர்
மறைகளோதுவர்வருபுனல்வலஞ்சுழியிடமகிழ்ந்தருங்கானத்
தறைகழல்சிலம்பார்க்கநின்றாடியவற்புதமறியோமே. (௪)

மண்ணாநீரர்விண்காற்றினராற்றலாமெரியுருவொருபாகம்
பெண்ணராணெனத்தெரிவரும்வடிவினர்பெருங்கடற்பவளம்போ
வண்ணராகிலும்வலஞ்சுழிபிரிகிலாபரிபவர்மனம்புக்க
வெண்ணராகிலுமெனைப்பலவியம்புவரிணையடிதொழுவாரே (ரு)

ஒருவராலுவமிப்பதையரியதோர்மேனியர்மடமாத
ரிருவராதரிப்பார்பலபூதமும்பேய்களுமடையாள
மருவராததோர்வெண்டலைகைப்பிடித்தகந்தொறும்பலிக்கென்று
வருவரோலவர்வலஞ்சுழியடிகளேவரிவளைகவர்ந்தாரே. (சு)

குன்றியூர்குடமூக்கிடம்வலம்புரங்குலவியநெய்த்தான
மென்றிவ்வூர்களிலோமென்றுமியம்புவமரிமையவர்பணிகேட்பா
ரன்றியூர்தமக்குள்ளனவறிகிலோம்வலஞ்சுழியரனார்பாற்
சென்றவூர்தனிற்றலைப்படலாமென்றுசேயிழைதளர்வாமே (எ)

குயிலினேர்மொழிகொடியிடைவெருவுறக்குலவரைபார்ப்பாய
கயிலையைப்பிடித்தெடுத்தவனகதிர்முடிதோளிருபதுமூன்றி
மயிலினேரனசாயலோடமர்ந்தவன்வலஞ்சுழியெம்மானைப்
பயிலவல்லவர்பரகதிகாண்பவரல்லவர்காணாரே. (அ)

அழலதோம்பியவலர்மிசையண்ணலுமரவணைத்துயின்றானுங்
கழலுஞ்சென்னியுங்காண்பரிதாயவர்மாண்பமர்தடக்கையின்
மழலைவீணையர்மகிழ்திருவலஞ்சுழிவலங்கொடுபாதத்தாற்
சுழலுமாந்தர்கடொலவினையதனொடுதுன்பங்கள்களைவாரே. (கூ)

அறிவிலாதவன்சமணர்கள்சாக்கியர்தவம்புரிந்தவஞ்செய்வா
நெறியலாதனகூறுவர்மற்றவைதேறனமின்மாறுநீர்
மறியுலாந்திரைக்காவிரிவலஞ்சுழிமருவியபெருமானைப்
பிறிவிலாதவர்பெறுகதிபேசிடிலளவறுப்பொண்ணாதே. (க0)

மாதொர்கூறனைவலஞ்சுழிமருவியமருந்தினைவயற்காழி
நாதன்வேதியன்ஞானசம்பந்தன்வாய்நவிற்றியதமிழ்மாலை
யாதரித்திசைகற்றுவல்லார்சொலக்கேட்டுகந்தவர்தம்மை
வாதியாவினைமறுமைக்குமிம்மைக்கும்வருத்தம்வந்தடையாவே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - சித்தீசநாதர், தேவியார் - பெரியநாயகியம்மை.

## திருக்கேதீச்சரம் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

விருதுகுன்றமாமேருவினாணரவாவனலெரியம்பாப்
பொருதுமூவெயில்செற்றவன்பற்றிநின்றுறைபதியெந்நாளுங்
கருதுகின்றவூர்கனைகடற்கடிகமழ்பொழிலணிமாதோட்டங்
கருதநின்றகேதீச்சரங்கைதொழக்கடுவினையடையாவே. (க)

பாடல்வீணையர்பலபலசரிதையரெருதுகைத்தருநட்ட
மாடலேபுரிவரமரர்கள்வேண்டநஞ்சுண்டிருள்கண்டத்த
ரீடமாவதிருங்கடற்கரையினிலெழிறிகழ்மாதோட்டங்
கேடிலாதகேதீச்சரந்தொழுதெழக்கெடுமிடர்வினைதானே. (உ)

பெண்ணொர்பாகத்தர்பிறைதவழ்சடையினரறைகழல்சிலம்பார்க்கச்
சுண்ணமாதரித்தாடுவர்பாடுவரகந்தொறுமிடுபிச்சைக்
குண்ணலாவதோரிச்சையினுழல்பவருயர்தருமாதோட்டத்
தண்ணனண்ணுகேதீச்சரமடைபவர்க்கருவினையடையாவே (ங)

பொடிகொண்மேனியர்புலியதளரையினர்விரிதருகரத்தேந்தும்
வடிகொண்மூவிலைவேலினர்நூலினர்மறிகடன்மாதோட்டத்
தடிகளாதரித்திருந்தகேதீச்சரம்பரிந்தசிந்தையராகி
முடிகள்சாய்த்தடிபேணவல்லார்தம்மேன்மொய்த்தெழும்வினைபோமே. (ச)

நல்லராற்றவுஞானநன்குடையர்தம்மடைந்தவர்க்கருளீய
வல்லர்பார்மிசைவான்பிறப்பிறப்பிலர்மலிகடன்மாதோட்டத்
தெல்லையில்புகழெந்தைகேதீச்சரமிராப்பகனினைந்தேத்தி
யல்லலாசறுத்தரனடியிணைதொழுமன்பராமடியாரே. (ரு)

பேழைவார்சடைப்பெருந்திருமகடனைப்பொருந்தவைத்தொருபாக
மாழையங்கயற்கண்ணிபாலருளியபொருளினர்குடிவாழ்க்கை
வாழையம்பொழின்மந்திகள்களிப்புறமருவியமாதோட்டக்
கேழல்வெண்மருப்பணிந்தநீண்மார்பர்கேதீச்சரம்பிரியாரே. (சு)

பண்டுநால்வருக்கறமுரைத்தருளிப்பல்லுலகினிலுயிர்வாழ்க்கை
கண்டநாதனார்கடலிடங்கைதொழக்காதலித்துறைகோயில்
வண்டுபண்செயுமாமலர்ப்பொழின்மஞ்ஞைநடமிடுமாதோட்டந்
தொண்டர்நாடொறுந்துதிசெயவருள்செய்கேதீச்சரமதுதானே. (எ)

தென்னிலங்கையர்குலபதிமலைநலிந்தெடுத்தவன்முடிதிண்டோ
டன்னலங்கெடவடர்த்தவற்கருள்செய்ததலைவனார்கடல்வாயப்
பொன்னிலங்கியமுத்துமாமணிகளும்பொருந்தியமாதோட்டத்
துன்னியன்பொடுமடியவரிறைஞ்சுகேதீச்சரத்துள்ளாரே. (அ)

பூவுளானுமப்பொருகடல்வண்ணனும்புவியிடந்தெழுந்தோடி
மேவிநாடிநின்னடியிணைகாண்கிலாவித்தகமென்னாகு

மாவும்பூகமுங்கதலியுநெருங்குமாதோட்டநன்னகர்மன்னித்
தேவிதனொடுந்திருந்துகேதீச்சரத்திருந்தவெம்பெருமானே (௯)

புத்தராய்சிலபுனைதுகிலுடையவர்புறனுரைச்சமணாத
ரெத்தராகிநின்றுண்பவரியம்பியவேண்டுமைகேளேன்மின
மத்தயானையைமறுகிடவுரிசெய்துபோர்த்தவர்மாதோட்டத்
தத்தர்மன்னுபாலாவியின்கரையிற்கேதீச்சரமடைமின்னே. (௧௦)

மாடெலாமணமுரசெனக்கடலினதொலிகவர்மாதோட்டத்
தாடலேறுடையண்ணல்கேதீச்சரத்தடிகளையணிகாழி
நாடுளாக்கிறைஞானசம்பந்தன்சொனவின்றெழுபாமாலை
பாடலாயினபாடுமின்பத்தர்கள்பரகதிபெறலாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

ஈழநாட்டிலுள்ளது
சுவாமிபெயர்-கேதீச்சுவரர், தேவியார் - கௌரிநாயகியம்மை.

## திருவிற்குடிவீரட்டானம் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

வடிகொணமேனியர்வானமாமதியினர்நதியினர்மதுவார்ந்த
கடிகொள்கொன்றையஞ்சடையினர்கொடியினருடைபுலியதளார்ப்பா
விடையதேறுமெம்மானமர்ந்தினிதுறைவிற்குடிவீரட்ட
மடியராகிநின்றேத்தவல்லார்தமையருவினையடையாவே (௧)

களங்கொளக்கொன்றையுங்கதிர்விரிமதியமுங்கடிகமழ்சடைக்கேற்றி
யுளங்கொள்பத்தர்பாலருளியபெருமையாரொருகரியுரிபோர்த்து
விளங்குமேனியரெம்பெருமானுறைவிற்குடிவீரட்டம்
வளங்கொண்மாமலராணிணைந்தேத்துவார்வருந்தமதறியாரே (௨)

கரியகண்டத்தர்வெளியவெண்பொடியணிமார்பினர்வலங்கையி
லெரியர்புனசடையிடம்பெறக்காட்டகத்தாடியவேடத்தர்
விரியுமாமலர்ப்பொய்கைசூழ்மதுமலிவிற்குடிவீரட்டம்
பிரிவிலாதவர்பெருந்தவத்தோரெனப்பேணுவருலகத்தே. (௩)

பூதஞ்சேர்ந்திசைபாடலராடலர்பொலிதரநலமார்ந்த
பாதஞ்சேரிணைச்சிலம்பினர்கலம்பெறுகடலெழுவிடமுண்டார்
வேதமோதியநாவுடையானிடமவிற்குடிவீரட்டஞ்
சேருநெஞ்சினார்க்கல்லதுண்டோபிணிதீவினைகெடுமாறே. (௪)

கடியவேற்றினர்கனலனமேனியரனலெழவூரூன்று
மிடியமாலவனாகால்வளைத்தானெனத்தடியவர்மேலுள்ள
வெடியவல்வினைவீட்டுவிப்பானுறைவிற்குடிவீரட்டம்
படியதாகவேபரவுமின்பரவினுற்பற்றறுமருநோயே (௫)

பெண்ணொர்கூறினர்பெருமையர்சிறுமறிக்கையினர்மெய்யார்ந்த
வண்ணலன்புசெய்வாரவர்க்கெளியவரரியவரல்லார்க்கு

விண்ணிலார்பொழின்மல்கியமலர்விரிவிற்குடிவீரட்ட
மெண்ணிலாவியசிந்தைபினார்தமக்கிடாகள்வந்தடையாவே. (அ-எ)

இடங்கொண்மால்கடலிலங்கையர்கோன்றனையிகலழிதரவூன்று
திடங்கொண்மால்வரையானுரையார்தருபொருளினனிருளார்ந்த
விடங்கொணமாமிடறுடையவனுறைதிருவிற்குடிவீரட்டந்
தொடங்குமாறிசைபாடிநின்றார்தமைத்துன்பநோயடையாவே. (அ)

செங்கண்மாலொடுநான்முகன்றேடியுந்திருவடியறியாமை
யெங்குமாரெரியாகியவிறைவனையறைபுனன்முடியார்ந்த
வெங்கண்மாசுணங்கரியுரித்துகந்தவனவிற்குடிவீரட்டந்
தங்கையாற்றொழுதேத்தவல்லாரவர்தவமல்குகுணத்தாரே. (கூ)

பிண்டமுண்டுழல்வார்களும்பிரிதுவராடையரவர்வார்த்தை
பண்டமின்றுமோர்பொருளெனக்கருதன்மின்பரிவுறுவீர்கேண்மின்
விண்டமாமலர்ச்சடையவனிடமெனில்விற்குடிவீரட்டங்
கண்டுகொண்டடிகாதல்செய்வாரவர்கருத்துறுங்குணத்தாரே (கo)

விலங்கலேசிலையிடமெனவுடையவன்விற்குடிவீரட்டத்
திலங்குசோதியையெம்பெருமான்றனையெழிறிகழ்கழல்பேணி
நலங்கொள்வாழ்பொழிற்காழியுண்ஞானசம்பந்தனற்றமிழ்மாலை
வலங்கொடேயிசைமொழியுமின்மொழிந்தக்கால்மற்றதுவரமாமே. (கக)

திருச்சிற்றமபலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயா-வீரட்டானேசுவரா, தேவியார்-மைவார்குழலியம்மை.

ஆக பதிகம் - கOகூ.

## திருக்கோட்டூர் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்

நீலமார்தருகண்டனேநெற்றியோர்கண்ணனேயொற்றைவிடைச்
சூலமார்தருகையனேதுன்றுபைம்பொழில்கள்சூழ்ந்தழகாய
கோலமாமலர்மணங்கமழ்கோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவார்கள்
சாலநீள்தலத்திடைப்புகழ்மிகத்தாங்குவாபாங்காலே. (க)

பங்கயம்மலர்ச்சீறடிப்பஞ்சுறுமெல்விரலரவல்குன்
மங்கைமார்பலர்மயில்குயில்கிளியெனமிழற்றியமொழியார்மென்
கொங்கையார்குழாங்குணலைசெய்கோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவார்கள்
சங்கையொன்றிலராகிநற்சங்கரன்றிருவருள்பெறலெளிதாமே. (உ)

நம்பனாநலமலர்கொடுதொழுதெழுமடியவர்தமக்கெல்லாஞ்
செம்பொனார்தருமெழிறிகழ்முலையவர்செல்வமல்கியநல்ல
கொம்பனார்தொழுதடியகோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவார்க
ளம்பொனார்தருமுலகினில்மாரோடமர்ந்தினிதிருப்பாரே. (௩)

பலவுநீள்பொழிற்றீங்கனிதேன்பலாமாங்கனிபயில்வாய
கலவமஞ்ஞைநுகணிலவுசொற்கிள்ளைகளன்னஞ்சேர்ந்தழகாய
குலவுநீள்வயற்கயலுகள்கோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவாராக
ணிலவுசெல்வத்தராகிநீணிலத்திடைநீடியபுகழாரே. (ச)

உருகுவாருள்ளத்தொண்சுடர்தனக்கென்றுமன்பராமடியார்கள்
பருகுமாரமுதெனநின்றுபரிவொடுபத்திசெய்தெத்திசையுங்
குருகுவாழ்வயல்சூழ்தருகோட்டூர்நற்கொழுந்தெயெனறெழுவார்க
ளருகுசேர்தருவினைகளுமகலும்பேயவனருள்பெறலாமே. (ரு)

துன்றுவார்சடைத்தூமதிமத்தமுந்துன்னெருக்காவன்னி
பொன்றினாதலைகலனொடுபரிகலம்புலியுரியுடையாடை
கொன்றைபொனனெனமலர்தருகோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவாரை
யெனறுமேத்துவாரக்கிடரிலைகேடிலையேதம்வந்தடையாவே. (சு)

மாடமாளிகைகோபுரங்கூடங்கண்மணியரங்கணிசாலை
பாடுசூழ்மதிற்பைமபொன்செய்மண்டபம்பரிசொடுபயில்வாய
கூடும்பொழில்சூழ்தருகோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவார்கள்
கேடதொன்றிலராகிநல்லுலகினில்கெழுவுவர்புகழாலே. (எ)

ஒளிகொள்வாளெயிற்றரக்கனவ்வுயர்வரையெடுத்தலுமுமையஞ்சிச்
சுளியவூனறலுஞ்சோர்ந்திடவாளொடுநாளவற்கருள்செய்த
குளிர்கொள்பூம்பொழில்சூழ்தருகோட்டூர்நற்கொழுந்தினைத்தொழுவார்க
டளிர்கொடாமரைப்பாதங்களருள்பெறுந்தவமுடையவர்தாமே. (அ)

பாடியாடுமெய்ப்பத்தர்கட்கருள்செயுமுத்தினைப்பவளத்தைத்
தேடிமாலயன்காணவொண்ணுதவத்திருவினைத்தெரிவைமார்
கூடியாடவர்கைதொழுகோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவார்க
ணீடுசெல்வத்தராகியிவ்வுலகினினிகழ்தருபுகழாரே. (கூ)

கோணல்வெண்பிறைச்சடையனைக் கோட்டூர்நற்கொழுந்தினைச்செழுந்திரளைப்
பூணல்செய்தடிபோற்றுமின்பொய்யிலாமெய்யனல்லருளென்றுங்
காணலொன்றிலாக்காரமண்டேரர்குண்டரக்கர்சொற்கருதாதே
பேணல்செய்தரனைத்தொழுமடியவர்பெருமையைப்பெறுவாரே. (கய)

பந்துலாவிரற்பவளவாய்த்தேன்மொழிபபாவையோடுருவாருங்
கொந்துலாமலர்விரிபொழிற்கோட்டூர்நற்கொழுந்தினைச்செழும்பவளம்
வந்துலாவியகாழியுண்ஞானசம்பந்தனவாய்ந்துரைசெய்த
சந்துலாந்தமிழ்மாலைகள்வல்லவர்தாங்குவர்புகழாலே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - கொழுந்தீசுவரர், தேவியார்-மதுரவசனியம்மை.

## திருமாந்துறை - பண் - நட்டராகம்.

### திருச்சிற்றம்பலம்.

செம்பொனார்தருவேங்கையுஞாழலுஞ்செருந்திசெண்பகமானைக்
கொம்புமாரமுமாதவிசுரபுன்னைகுருந்தலர்போந்துந்தி
யம்பொனேர்வருகாவிரிவடகரைமாந்துறையுறைகின்ற
வெம்பிரானிமையோர்தொழுபைங்கழலேத்துதல்செய்வோமே. (க)

விளவுதேனொடுசாதியின்பலங்களும்வேய்மணிநிரந்துந்தி
யளவிநீர்வருகாவிரிவடகரைமாந்துறையுறைவானைத்
துளவமான்மகனைங்கணைக்காமனைச்சுடவிழித்தவனெற்றி
யளகவாணுதலரிவைதன்பங்கனையன்றிமற்றறியோமே. (உ)

கோடுதேன்சொரிகுன்றிடைப்பூகமுங்கூந்தலின்குலைவாரி
யோடுநீர்வருகாவிரிவடகரைமாந்துறையுறைநம்பன்
வாடினார்தலையிற்பலிகொள்பவன்வானவர்மகிழ்ந்தேத்துங்
கேடிலாமணியைத்தொழலல்லதுகெழுமுதலறியோமே. (ங)

இலவநாழலுமீஞ்சொடுசுரபுன்னையிளமருதிலவங்கங்
கலவிநீர்வருகாவிரிவடகரைமாந்துறையுறைகண்ட
னலைகொள்வார்புனலம்புலிமத்தமுமாடரவுடன்வைத்த
மலையைவானவர்கொழுந்தினையல்லதுவணங்குதலறியோமே. (ச)

கோங்குசெண்பகங்குருந்தொடுபாதிரிகுரவிடைமலருந்தி
யோங்கிநீர்வருகாவிரிவடகரைமாந்துறையுறைவானைப்
பாங்கினாலிடுந்தூபமுந்தீபமும்பாட்டவிம்மலர்சேர்த்தித்
தாங்குவாரவர்நாமங்கணாவினிற்றலைப்படுந்தவத்தோரே. (ரு)

பெருகுசந்தனங்காரகில்பீலியும்பெருமரநிமிர்ந்துந்திப்
பொருதுகாவிரிவடகரைமாந்துறைப்புனிதனெம்பெருமானைப்
பரிவினாலிருந்திரவியுமதியமும்பார்மன்னர்பணிந்தேத்த
மருதவானவர்வழிபடுமலரடிவணங்குதல்செய்வோமே. (சா)

நறவமல்லிகைமுல்லையுமௌவலுநாண்மலரவைவாரி
யிறவில்வந்தெறிகாவிரிவடகரைமாந்துறையிறையன்றங்
கறவனாகியகூற்றினைச்சாடியவந்தணன்வரைவில்லா
னிறையவாங்கிவலித்தெயிலெய்தவனிணைகழல்பணிவோமே. (எ)

மந்தமார்பொழின்மாங்கனிமாந்திடமந்திகண்மாணிக்க
முந்திநீர்வருகாவிரிவடகரைமாந்துறையுறைவானை
சிந்தியாவெடுத்தார்த்தவல்லரக்கனைநெரித்திடுவிரலானைச்
சிந்தியாமனத்தாரவர்சேர்வதுதீநெறியதுதானே. (அ)

நீலமாமணிநித்திலத்தொத்தொடுநிரைமலர்நிரந்துந்தி
யாலியாவருகாவிரிவடகரைமாந்துறையமர்வானை
மாலுநான்முகனேடியுங்காண்கிலாமலரடியிணைநாளுங்
கோலமேத்திநின்றாடுமின்பாடுமின்கூற்றுவனலியானே. (கூ)

நின்றுணுஞ்சமண்டேரருநிலையிலர்நெடுங்கழைநறவேலம்
நன்றுமாங்கனிகதலியின்பலங்களுநாணலினுரைவாரி
யொன்றிநேர்தருகாவிரிவடகரைமாந்துறையொருகால
மன்றியுள்ளழிந்தெழும்பரிசழகிதுவதுவவர்க்கிடமாமே. (௧௦)

வரைவளங்கவர்காவிரிவடகரைமாந்துறையுறைவானைச்
சிரபுரம்பதியுடையவன்கவுணியன்செழுமறைநிறைநாவ
னரவெனும்பணிவல்லவன்ஞானசம்பந்தனன்புறுமாலை
பரவிடுந்தொழிலவல்லவரல்லலும்பாவமுமிலர்தாமே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-ஐராவணேசுவரர், தேவியார்-அழகாயமர்ந்தநாயகியம்மை.

## திருவாய்மூர் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்

தளிரிளவளரெனவுமைபாடத்தாளமிடவோர்கழல்வீசிக்
கிளரிளமணியரவரையார்த்தாடுமவேடக்கிறிமையார
விளரிளமுலையவர்க்கருணல்கிவெண்ணீறணிந்தோர்சென்னிமேல்
வளரிளமதியமொடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (௧)

வெந்தழல்வடிவினர்பொடிப்பூசிவிரிதருகோவணவுடைமேலோர்
பந்தஞ்செய்தரவசைத்தொலிபாடிப்பலபலகடைதொறும்பலிதேர்வார்
சிந்தனைபுகுந்தெனக்கருணல்கிச்செஞ்சுடர்வண்ணர்தம்மடிபரவ
வந்தனைபலசெயவிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (௨)

பண்ணிற்பொலிந்தவீணையர்பதினெண்கணமுமுணராநஞ்
சுண்டப்பொலிந்தமிடற்றினருள்ளமுருகிலுடனாவார்
சுண்ணப்பொடிநீறணிமார்பர்சுடர்பொற்சடைமேற்றிகழ்கின்ற
வண்ணப்பிறையோடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (௩)

எரிகிளர்மதியமொடெழினுதன்மேலெறிபொறியரவினொடாறுமூழ்க
விரிகிளர்சடையினர்விடையேறிவெருவவந்திடர்செய்தவிகிர்தனார்
பொரிகிளர்பொடியணிதிருவகலம்பொன்செய்தவாய்மையர்பொன்மிளிரும்
வரியரவரைக்கசைத்திவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (௪)

அஞ்சனமணிவனமெழினிறமாவகமிடறணிகொளவுடறிமில
நஞ்சினையமரர்களமுதமெனநண்ணியநறுநுதலுமைநடுங்க
வெஞ்சினமால்களியானையின்றோல்வெருவுறப்போர்த்ததனிறமுமஃதே
வஞ்சனைவடிவினோடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (௫)

அல்லியமலர்புல்குவிரிகுழலார்கழலிணையடிநிழலவைபரவ
வெல்லியம்போதுகொண்டரியேத்தியெழிலொடுதொழிலவையிசையவல்லார்
சொல்லியவருமறையிசைபாடிச்சூடிளமதியினர்தோடுபெய்து
வல்லியந்தோலுடுத்திவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (௬)

கடிபடுகொன்றைநன்மலர்திகழுங்கண்ணியர்விண்ணவர்கணமணிசேர்
முடியில்குபிறையவர்மறுகினல்லார்முறைமுறைபலிபெயமுறுவல்செய்வார்
பொடியணிவடிவொடுதிருவகலம்பொன்னெனமிளிரவதோரரவினொடும்
வடிநுனைமழுவினொடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (எ)

கட்டிணைபுதுமலர்க்கமழ்கொன்றைக்கண்ணியர்வீணையர்தாமுமஃதே
எட்டிணைசாந்தமோடுமைதுணையாவிறைவனுறைவதோரிடமவினவிற்
பட்டிணையகலல்குல்விரிகுழற்பாவையாபலியெதிர்கொணர்ந்துபெய்ய
வட்டணையாடலொடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (அ)

ஏனமருப்பினொடெழிலாமையிசையப்பூண்டோரேறேறிக்
கானமதிடமாவுறைகின்றகள்வர்கனவிற்றுயர்செய்து
தேனுணமலர்களுந்திவிம்மித்திகழ்பொற்சடைமேற்றிகழ்கின்ற
வானநன்மதியினொடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (௯)

சூடல்வெண்பிறையினர்சுடர்முடியர்சுண்ணவெண்ணீற்றினர்சுடர்மழுவர்
பாடல்வண்டிசைமுரல்கொன்றையந்தார்பாம்பொடுநூலவைபசைந்திலங்கக்
கோடணன்முழக்கிவிரல்கூப்பிநல்லார் குறையுறுபலியெதிர்கொணர்ந்துபெய்ய
வாடல்வெண்டலைபிடித்திவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (௧௦)

திங்களோடருவரைப்பொழிற்சோலைத்தேனலங்கானலந்திருவாய்மூ
ரங்கமோடருமறையொலிபாடலனிறவண்ணர்தம்மடிபரவி
நங்கடமவினைகெடமொழியவல்லஞானசம்பந்தன்றமிழ்மாலை
தங்கியமனத்தினாற்றொழுதெழுவார்தவநெறியுலகுக்கோர்தவநெறியே. (கக)

திருச்சிற்றம்பலம்

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்- வாய்மூரீசுவரர், தேவியார்-பாலினுநன்மொழியம்மை.

---

## திருஆடானை - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

மாதோர்கூறுகந்தேறதேறிய, வாதியானுறையாடானைப்
போதினாற்புனைந்தேத்துவார்தமை, வாதியாவினைமாயுமே. (க)

வாடல்வெண்டலையங்கையேந்திநின், றாடலானுறையாடானைத்
தோடுலாமலர்தூவிக்கைதொழ, வீடுநுங்கள்வினைகளே. (உ)

மங்கைகூறினன்மான்மறியுடை, யங்கையானுறையாடானைத்
தங்கையாற்றொழுதேத்தவல்லவர், மங்குநோய்பிணிமாயுமே. (௩)

சுண்ணநீறணிமார்பிற்றோல்புனை, யண்ணலானுறையாடானை
வண்ணமாமலர்தூவிக்கைதொழ, வெண்ணுவாரிடரேகுமே. (௪)

கொய்யணிம்மலர்க்கொன்றைசூடிய, வையன்மேவியவாடானை
கையணிமலரால்வணங்கிட, வெய்யவல்வினைவீடுமே. (௫)

வானிளம்மதிமல்குவார்சடை, யானஞ்சாடலானாடானை
தேனணிம்மலர்சேர்த்தமுன்செய்த, வூனமுள்ளவொழியுமே. (௬)

துலங்குவெண்மழுவேந்திச்சூழ்சடை, யலங்கலானுறையாடானை
நலங்கொண்மாமலர் தூவிநாடொறும், வலங்கொள்வார்வினைமாயுமே. (எ)

வெந்தநீறணிமார்பிற்றோல்புனை, யந்தமில்லவனாடானை
கந்தமாமலர் தூவிக்கைதொழுஞ், சிந்தையார்வினைதேயுமே (அ)

மறைவல்லாரொடுவானவர்தொழு, துறையுந்தண்புனலாடானை
யுறையுமீசனையேத்தத்தீவினை, பறையுநல்வினைபற்றுமே (௯)

மாயனும்மலரானுங்கைதொழ, வாயவந்தணனாடானை
தூயமாமலர் தூவிக்கைதொழத், தீயவல்வினை தீருமே. (க௦)

வீடிஞானமளிவெங்கடந்துநின், றாடலானுறையாடானை
நாடிஞானசம்பந்தனசெந்தமிழ், பாடநோய்பிணிபாறுமே (கக)

திருச்சிற்றம்பலம்.

பாண்டிநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - ஆதிரத்தினேசுவரர், தேவியார்-அம்பாயிரவல்லியம்மை.

---

## சீகாழி - பண் - செவ்வழி.

திருச்சிற்றம்பலம்.

பொடியிலங்குந்திருமேனியாளர் புலியதளின
ரடியிலங்குங்கழலார்க்கவாடும்மடிகளிடம்
மிடியிலங்குங்குரலோதமல்கவெறிவார்துணைக்
கடியிலங்கும்புனன்முத்தலைக்குங்கடற்காழியே. (க)

மயிலிலங்குந்துயர்மாசறுப்பானருந்தொண்டர்க
ளயலிலங்கப்பணிசெய்யநின்றவடிகளிடம்
புயலிலங்குங்கொடையாளர்வேதத்தொலிபொலியவே
கயலிலங்கும்வயற்கழனிசூழுங்கடற்காழியே (உ)

கூரிலங்குந்திரிசூலவேலர்குழைக்காதினர்
மாவிலங்கும்புரிநூலுகந்தமணவாளனார்
நேரிலங்கலலனதிரைகண்மோதந்நெடுந்தாரைவாய்க்
கார்விலங்கலலெனக்கலந்தொழுகுங்கடற்காழியே. (ங)

குற்றமில்லார்குறைபாடுசெய்வார்பழிதீர்ப்பவர்
பெற்றநல்லகொடிமுன்னுயர்த்தபெருமானிடம்
மற்றுநல்லார்மனத்தாரினியார்மறைகலையெலாங்
கற்றுநல்லார்பிழைதெரிந்தளிக்குங்கடற்காழியே. (ச)

விருதிலங்குஞ்சரிதைத்தொழிலார்விரிசடையினா
ரெருதிலங்கப்பொலிந்தேறுமெந்தைக்கிடமாவது
பெரிதிலங்குமறைகிளைஞரோதப்பிழைகேட்டலாற்
கருதுகிள்ளைக்குலந்தெரிந்துதீர்க்குங்கடற்காழியே. (ரு)

தோடிலங்குங்குழைக்காதர்வேதர்சுரும்பார்மலர்ப
பீடிலங்குஞ்சடைப்பெருமையாளர்க்கிடமாவது

கோடிலங்குமபெரும்பொழில்கணமல்கப்பெருந்தெங்கொனின்
காடிலங்குமவயல்பயிலுமந்தண்கடற்காழியே. (௬)

மலையிலங்குஞ்சிலையாகவேகம்மதின்மூன்றெரித்
தலையிலங்குமபுனற்கங்கைவைத்தவடிகட்கிட
மலையிலங்கும்மலர்க்கைதைகண்டல்வெறிவிரவலாற்
கலையிலங்குங்கணத்தினம்பொலியுங்கடற்காழியே. (௭)

முழுதிலங்கும்பெரும்பாருள்வாழும்முரணிலங்கைக்கோ
னழுதிரங்கச்சிரமுரமொடுங்கவ்வடர்த்தாங்கவனை
றொழுதிரங்கத்துயர்தீர்த்துகந்தார்கிடமாவது
கழுதும்புள்ளுமதிற்புறமதாருங்கடற்காழியே. (௮)

பூவினானும்விரிபோதின்மல்குந்திருமகடனை
மேவினானும்வியந்தேத்தநீண்டாரழலாய்நிறைந்
தோவியங்கேயவர்க்கருள்புரிந்தவவொருவர்க்கிடம்
காவியங்கண்மடமங்கையர்சேர்கடற்காழியே. (௯)

உடைநவின்றாருடைவிட்டுழல்வாரிருந்தவத்தார்
முடைநவின்றம்மொழியொழித்துகந்தம்முதல்வன்னிட
மடைநவின்றபுனற்கெண்டைபாயும்வயன்மலிதரக்
கடைநவின்றனெடுமாடமோங்குங்கடற்காழியே. (௧௦)

கருகுமூர்நீர்திரையோதமாருங்கடற்காழியு
ளுரகமாருஞ்சடையடிகட்பாலுணர்ந்துறுதலாற்
பெருகமல்குமபுகழ்பேணுந்தொண்டர்க்கிசையார்தமிழ்
விரகன்சொன்னவிவைபாடியாடக்கெடும்வினைகளே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருக்கேதாரம் - பண் - செவ்வழி.

திருச்சிற்றம்பலம்.

தொண்டரஞ்சுங்களிறுமடக்கிச்சுரும்பார்மல
ரிண்டைகட்டிவழிபாடுசெய்யுமிடமென்பரால்
வண்டுபாடமயிலாலமான்கன்றுதுள்ளவ்வரி
கெண்டைபாயச்சுனைநீலமொட்டலருங்கேதாரமே. (௧)

பாதமவிண்ணோர்பலரும்பரவிப்பணிந்தேத்தவே
வேதநான்குமபதினெட்டொடாறும்விரித்தார்க்கிட
மாதுவிண்டம்மதுவுண்டுமிண்டிவ்வருவண்டினங்
கீதமபாடமடமந்திகேட்டுகளுங்கேதாரமே. (௨)

முந்திவந்துபுரோதாயமூழ்கிம்முனிகள்பல
ரெந்தைபெம்மானெனநின்றிறைஞ்சுமிடமென்பரால்
மந்திபாயச்சரேலச்சொரிந்துமமுரிந்துக்கபூக்
கெந்தநாறக்கிளருஞ்சடையெந்தைகேதாரமே. (௩)

உள்ளமிக்கார்குதிரைம்முகத்தாரொருகாலர்க
ளெள்கலில்லாவிமையோர்கள்சேருமிடமென்பராற்
பிள்ளைதுள்ளிக்கிளைபயில்வகேட்டுப்பிரியாதுபோய்க்
கிள்ளையேனற்கதிர்கொணர்ந்துவாய்ப்பெய்யுங்கேதாரமே. (௪)

ஊழியூழியுணர்வார்கள்வேதத்தினொண்பொருள்களால்
வாழியெந்தையெனவந்திறைஞ்சுமிடமென்பரான்
மேழிதாங்கியுழுவார்கள்போலவ்விரைதேரிய
கேழல்பூழ்தித்திளைக்கமணிசிந்துங்கேதாரமே. (௫)

நீறுபூசிநிலத்துண்டுநீர்மூழ்கிநீள்வரைதன்மேற்
றேறுசிந்தையுடையார்கள்சேருமிடமென்பரா
லேறிமாவின்கனியும்பலாவின்னிருஞ்சுளைகளுங்
கீறிநாளுமுசுக்கிளையோடுண்டுகளுங்கேதாரமே (௬)

மடந்தைபாகத்தடக்கிம்மறையோதிவானோர்தொழத்
தொடர்ந்தநம்மேல்வினைதீர்க்கநின்றார்க்கிடமென்பரா
லுடைந்தகாற்றுக்குயர்வேங்கைபூத்துதிரக்கல்லறைகண்மேற்
கிடந்தவேங்கைசினமாமுகஞ்செய்யுங்கேதாரமே. (௭)

அரவமுந்நீரணியிலங்கைக்கோனையருவரைதனால்
வெருவவூன்றிவிரலாலடர்த்தார்க்கிடமென்பராற்
குரவங்கோங்கங்குளிர்பிண்டிஞாழல்சுரபுன்னைமேற்
கிரமமாகவரிவண்டுபண்செய்யுங்கேதாரமே. (௮)

ஆழ்ந்துகாணாருயர்ந்தெய்தகில்லாரலமந்தவர்
தாழ்ந்துதந்தம்முடிசாயநின்றார்க்கிடமென்பரால்
வீழ்ந்துசெற்றுநிழற்கிறங்குமவேழத்தின்வெண்மருப்பினைக்
கீழ்ந்துசிங்கங்குருகுண்ணமுத்துதிருங்கேதாரமே. (௯)

கடுக்கடின்றுகழிமீன்கவர்வாரகணமாசுடம்பின
ரிடுக்கணுய்ப்பாரவரெய்தவொண்ணாவிடமென்பரா
லடுக்கநின்றவ்வறவுரைகள்கேட்டாங்கவர்வினைகளைக்
கெடுக்கநின்றபெருமானுறைகின்றகேதாரமே. (௧௦)

வாய்ந்தசெந்நெல்விளைகழனிமல்குவயற்காழியா
னேய்ந்தநீர்க்கோட்டிமையோருறைகின்றகேதாரத்தை
யாய்ந்துசொன்னவருந்தமிழ்கள்பத்துமிசைவல்லவர்
வேந்தராகியுலகாண்டுவீடுகதிபெறுவரே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

வடதேசத்திலுள்ளது.
சுவாமிபெயர் - கேதாரேசுவரர், தேவியார், கௌரியம்மை.
௯ பதிகம் - ௧௧௫.

## திருப்புகலூர் - பண் - செவ்வழி.

திருச்சிற்றம்பலம்.

வெங்கள்விம்முகுழலிளையராடவ்வெறிவிரவுநீர்ப்
பொங்குசெங்கட்கருங்கயல்கள்பாயும்புகலூர்தனுட்
டிங்கள்சூடித்திரிபுரமோரம்பாலெரியூட்டிய
வெங்கள்பெம்மானடிபரவநாளுமிடர்கழியுமே. (௧)

வாழ்ந்தநாளுமினிவாழுநாளுமிவையறிதிரேல்
வீழ்ந்தநாளெம்பெருமானையேத்தாவிதியில்லிகாள்
போழ்ந்ததிங்கட்புரிசடையினான்றன்புகலூரையே
சூழ்ந்தவுள்ளமுடையீர்களுங்கடுயர்தீருமே. (௨)

மடையினெய்தல்கருங்குவளைசெய்யமலர்த்தாமரை
புடைகொள்செந்நெல்விளைகழனிமல்குபுகலூர்தனுட்
டொடைகொள்கொன்றைபுனைந்தானோர்பாகமதிசூடியை
யடையவல்லாரமருலகமாளப்பெறுவார்களே. (௩)

பூவுநீரும்பலியுஞ்சுமந்துபுகலூரையே
நாவினாலேநவின்றேத்தலோவார்செவித்துளைகளால்
யாவுங்கேளாரவன்பெருமையல்லாலடியார்கடா
மேவுநாளுமுணர்வொழிந்தநாளொன்றுள்ளங்கொள்ளவே. (௪)

அன்னங்கன்னிப்பெடைபுல்கியொல்கியணிநடையவாய்ப்
பொன்னங்காஞ்சிமலர்ச்சின்னமாலும்புகலூர்தனுண்
முன்னமூன்றுமதிலெரித்தமூர்த்திதிறங்கருதுங்கா
லின்னதொன்னப்பெரிதரியதேத்தசிறிதெளியதோ. (௫)

குலவராகக்குலமிலருமாகக்குணமபுகழுங்கா
லுலகினல்லகதிபெறுவரேனுமலர்நாறுதேன
புலவமெல்லாம்வெறிகமழுமந்தண்புகலூர்தனு
ணிலவமல்குசடையடிகள்பாதநினைவார்களே. (௬)

ஆணும்பெண்ணுமெனநிற்பரோனுமரவாரமாப்
பூணுமேனும்புகலூர்தனக்கோர்பொருளாயினா
னூணுமூராரிடுபிச்சைபேற்றுண்டுடைகோவணம்
பேணுமேனும்பிரானென்பராலெம்பெருமானையே. (௭)

உய்யவேண்டியெழுபோதநெஞ்சேயுயரிலங்கைக்கோன்
கைகளொல்கக்கருவரையெடுத்தானையோர்விரலினாற்
செய்கைதோன்றச்சிதைத்தருள்வல்லசிவன்மேயபூம்
பொய்கைசூழ்ந்தபுகலூர்புகழப்பொருளாகுமே. (௮)

நேமியானுமுகநான்குடையந்நெறியண்ணலு
மாமிதென்றுதகைந்தேத்தப்போயாரழலாயினான்

சாமிதாதைசரணாகுமென்றடிதலைசாய்மினோ
பூமியெல்லாம்புகழ்செல்வமல்கும்புகலூரையே. (௯)

வேர்த்தமெய்யருருவத்துடைவிட்டுழல்வார்களும்
போர்த்தகூறைப்போதிநீழலாரும்புகலூர்தனுட்
டீர்த்தமெல்லாஞ்சடைக்கரந்ததேவன்றிறங்கருதுங்கா
லோர்த்துமெய்யென்றுணராதுபாதந்தொழுதுய்ம்மினே. (௧௦)

புந்தியார்ந்தபெரியோர்களேத்தும்புகலூர்தனுள்
வெந்தசாம்பற்பொடிப்பூசவல்லவிடையூர்தியை
யந்தமில்லாவனலாடலானையணிஞானசம்
பந்தன்சொன்னதமிழ்பாடியாடக்கெடும்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

## திருக்கடனாகைக்காரோணம் - பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்.

கூனற்றிங்கட்குறுங்கண்ணிகான்றநெடுவெண்ணிலா
வேனற்பூத்தமராங்கோதையோடும்விராவுஞ்சடை
வானநாடனமரர்பெருமாற்கிடமாவது
கானல்வேலிகழிசூழ்கடனாகைக்காரோணமே (௧)

விலங்கலொன்றுசிலையாமதின்மூன்றுடனவீட்டின
னிலங்குபண்டத்தெழிலாவைபூண்டாற்கிடமாவது
மலங்கியோங்கிவருவெண்டிரைமல்கியமாலகடற்
கலங்களோதங்கழிசூழ்கடனாகைக்காரோணமே. (௨)

வெறிகொளாருங்கடற்கைதைநெய்தல்விரிபூம்பொழின்
முறிகொணுழைமடப்புன்னைமுல்லைமுகைவெணமலர்
நறைகொளகொனறைநயந்தோங்குநாதற்கிடமாவது
கறைகளோதங்கழிசூழ்கடனாகைககாரோணமே. (௩)

வண்டுபாடல்வளர்கொன்றைமாலைமதியோடுடன்
கொண்டகோலங்குளிர்கங்கைதங்குங்குருட்குஞ்சியு
ளுண்டுபோலுமெனவைத்துகந்தவொருவற்கிடங்
கண்டல்வேலிகழிசூழ்கடனாகைக்காரோணமே. (௪)

வார்கொள்கோலமுலைமங்கைநல்லார்மகிழ்ந்தேத்தவே
நீர்கொளகோலச்சடைநெடுவெண்டிங்கணிகழ்வெய்தவே
போர்கொள்சூலப்படைபுல்குகையார்க்கிடமாவது
கார்கொளோதங்கழிசூழ்கடனாகைக்காரோணமே. (௫)

விடையதேறிவ்விடவரவசைத்தவிகிர்தரவர்
படைகொள்பூதம்பலபாடவாடும்பரமாயவ
ருடைகொள்வேங்கையுரிதோலுடையார்க்கிடமாவது
கடைகொள்செல்வங்கழிசூழ்கடனாகைக்காரோணமே. (௬)

பொய்துவாழ்வார்மனம்பாழ்படுக்குமலர்ப்பூசனை
செய்துவாழ்வார்சிவன்சேவடிக்கேசெலுஞ்சிந்தையா
ரெய்தவாழ்வாரெழினக்கரெம்மாற்கிடமாவது
கைதல்வேலிகழிசூழ்கடனாகைக்காரோணமே. (எ)

பத்திரட்டிதிரடோளுடையான்முடிபத்திற
வத்திரட்டிவிரலாலடர்த்தார்க்கிடமாவது
மைத்திரட்டிவ்வருவெண்டிரைமல்கியவார்கடல்
கைத்திரட்டுங்கழிசூழ்கடனாகைக்காரோணமே. (அ)

நல்லபோதிலுறைவானுமாலும்[illegible]
லல்லராவரெனநின்றபெம்மாற்கிடமாவது
மல்லலோங்கிவ்வருவெண்டிரைமல்கியமால்கடல்
கல்லலோதங்கழிசூழ்கடனாகைக்காரோணமே. (கூ)

உயர்ந்தபோதினூனுருவத்துடைவிட்டுழல்வார்களும
பியர்ந்தமண்டையிற்பிண்டமாவுண்டுழல்வார்களும்
நயந்துகாணாவகைநின்றநாதர்க்கிடமாவது
கயங்களோதங்கழிசூழ்கடனாகைக்காரோணமே. (க0)

மல்குதண்பூம்புனல்வாய்ந்தொழுகும்வயற்காழியா
னல்லகேள்வித்தமிழ்ஞானசம்பந்தனல்லார்கண்முன்
வல்லவாறேபுனைந்தேத்துங்காரோணத்துவண்டமிழ்
சொல்லுவார்க்குமிவைகேட்பவர்க்குந்துயரில்லையே (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருஇரும்பைமாகாளம் - பண் - செவ்வழி.

திருச்சிற்றம்பலம்.

மண்டுகங்கைசடையிற்கரந்தும்மதிசூடிமான்
கொண்டகையாற்புரமூன்றெரித்தகுழகன்னிட
மெண்டிசையும்புகழ்போய்விளங்குமிரும்பைதனுள்
வண்டுகீதம்முரல்பொழில்சுலாநின்றமாகாளமே. (க)

வேதவித்தாயவெள்ளைநீறுபூசிவினையாயின
கோதுவித்தாயநீறெழக்கொடிமாமதிலாயின
ஏதவித்தாயினதீர்க்குமிடமிரும்பைதனுள்
மாதவத்தோர்மறையோர்தொழநின்றமாகாளமே (உ)

வெந்தநீறுமெலும்பும்மணிந்தவ்விடையூர்தியா
னெந்தைபெம்மானிடமெழில்கொள்சோலையிரும்பைதனுட்
கந்தமாயபலவின்கனிகள்கமழும்பொழின்
மந்தியேறிக்கொணர்ந்துண்டுகள்கின்றமாகாளமே. (ங)

நஞ்சுகண்டத்தடக்கிநடுங்குமலையான்மக
ளஞ்சவேழம்முரித்தபெருமானமரும்மிட

மெஞ்சவில்லாப்புகழ்போல்விளங்கும்மிரும்பைதனுண்
மஞ்சிலோங்குமபொழில்சூழ்ந்தழகாயமாகாளமே. (௫)

பூசுமாசில்பொடியான்விடையான்பொருப்பன்மகள்
கூசவானையுரித்தபெருமான்குறைவெண்மதி
யீசனெங்களிறைவனிடம்போலிரும்பைதனுண்
மாசிலோர்கண்மலர்கொண்டணிகின்றமாகாளமே. (௬)

குறைவதாயகுளிர்திங்கள்சூடிக்குனித்தான்வினை
பறைவதாக்கும்பரமன்பகவன்பரந்தசடை
யிறைவனெங்கள்பெருமானிடம்போலிரும்பைதனுண்
மறைகள்வல்லார்வணங்கித்தொழுகின்றமாகாளமே. (௬)

பொங்குசெங்கண்ணரவும்மதியும்புரிபுன்சடைத்
தங்கவைத்தபெருமானெனநின்றவர்தாழ்விட
மெங்குமிச்சையமர்ந்தானிடம்போலிரும்பைதனுண்
மங்குறோயும்பொழில்சூழ்ந்தழகாயமாகாளமே. (௭)

நட்டத்தோடுநரியாடுகானத்தெரியாடுவா
னட்டமூர்த்தியழல்போலுருவன்னழகாகவே
யிட்டமாகவிருக்குமிடம்போலிரும்பைதனுள்
வட்டஞ்சூழ்ந்துபணிவார்பிணிதீர்க்குமாகாளமே. (௮)

அட்டகாலன்றனைவவ்வினனவ்வரக்கன்முடி
யெட்டுமற்றுமிருபத்திரண்டும்மிறவூன்றினு
னிட்டமாகவிருப்பானவன்போலிரும்பைதனுண்
மட்டுவார்ந்தபொழில்சூழ்ந்தெழிலார்மாகாளமே. (௯)

அரவமார்த்தன்றனலங்கையேந்தியடியும்முடி
பிரமன்மாலும்மறியாமைநின்றபெரியோனிடம்
குரவமாரும்பொழிற்குயில்கள்சேரும்மிரும்பைதனுண்
மருவிவானோர்மறையோர்தொழுகின்றமாகாளமே (௧௦)

எந்தையெம்மானிடமெழில்கொள்சோலையிரும்பைதனுண்
மந்தமாயபொழில்சூழ்ந்தழகார்மாகாளத்தி
லந்தமில்லாவனலாடுவானையணிஞானசம்
பந்தன்சொன்னதமிழ்பாடவல்லார்பழிபோகுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

தொண்டைநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - மாகாளேசுவரர், தேவியார் - குயிலம்மை.

---

## திருத்திலதைப்பதி - மதிமுத்தம் - பண் - செவ்வழி.

திருச்சிற்றம்பலம்

பொடிகள்பூசிப்பலதொண்டர்கூடிப்புலர்காலையே
யடிகளாரத்தொழுதேத்தநின்றவழகன்னிடங்
கொடிகளோங்கிக்குலவும்விழவார்திலதைப்பதி
வடிகொள்சோலைம்மலர்மணங்கமழும்மதிமுத்தமே. (௧)

தொண்டர்மிண்டிப்புகைவிம்முசாந்துங்கமழ்துணையலுங்
கொண்டுகண்டார்குறிப்புணரநின்றகுழகன்னிடந்
தெண்டிரைப்பூம்புனலரிசில்சூழ்ந்ததிலதைப்பதி
வண்டுகொண்டுற்றிசைபயிலுஞ்சோலைமதிமுத்தமே. (௨)

அடலுளேறுய்த்துகந்தானடியாரமரர்தொழக்
கடலுணஞ்சமமுதாகவுண்டகடவுளிடந்
திடலடங்கச்செழுங்கழனிசூழ்ந்ததிலதைப்பதி
மடலுள்வாழைக்கனிதேன்பிலிற்றுமதிமுத்தமே. (௩)

கங்கைதிங்கள்வன்னிதுன்னெருக்கினொடுகூவிளம்
வெங்கணாகம்விரிசடையில்வைத்தவிகிர்தனிடஞ்
செங்கயல்பாய்புனலரிசில்சூழ்ந்ததிலதைப்பதி
மங்குறோயும்பொழில்சூழ்ந்தழகாமதிமுத்தமே. (௪)

புரவியேழும்மணிபூண்டியங்குங்கொடித்தேரினான்
பரவிநின்றுவழிபாடுசெய்யும்பரமேட்டியூர்
விரவிநாளும்விரிகோங்குவேங்கைசுரபுன்னைகண்
மரவமவ்வம்மலருந்திலதைமதிமுத்தமே. (௫)

விண்ணர்வேதம்விரித்தோதவல்லாரொருபாகமும்
பெண்ணனொண்ணாரெயில்செற்றுகந்தபெருமானிடந்
தெண்ணிலாவின்னொளிதீண்டுசோலைத்திலதைப்பதி
மண்ணுளோர்வந்தருள்பேணிநின்றமதிமுத்தமே. (௬)

ஆறுசூடியடையார்புரஞ்செற்றவர்பொற்றொடி
கூறுசேருமுருவர்க்கிடமாவதுகூறுங்கால்
தேறலாரும்பொழில்சூழ்ந்தழகார்திலதைப்பதி
மாறிலாவண்புனலரிசில்சூழ்ந்தமதிமுத்தமே. (௭)

கடுத்துவந்தகனன்மேனியினான்கருவரைதனை
யெடுத்தவன்றன்முடிதோளடர்த்தார்க்கிடமாவது
புடைக்கொள்பூகத்திளம்பாளைபுல்கும்மதுப்பாயவாய்
மடுத்துமந்தியுகளுந்திலதைமதிமுத்தமே. (௮)

படங்கொணாகத்தலையானும்பைந்தாமரையின்மிசை
இடங்கொணாமல்வேதனுமேத்தநின்றவிறைவன்னிடந்
திடங்கொணாவின்னிசைதொண்டர்பாடுந்திலதைப்பதி
மடங்கலவந்துவழிபாடுசெய்யும்மதிமுத்தமே. (௯)

புத்தர்தேரர்பொறியில்சமணர்களும்வீறிலாப்
பித்தர்சொன்னம்மொழிகேட்கிலாதபெருமானிடம்
பத்தர்சித்தர்பணிவுற்றிறைஞ்சுந்திலதைப்பதி
மத்தயானைவழிபாடுசெய்யும்மதிமுத்தமே. (௧௦)

மந்தமாரும்பொழில்சூழ்திலதைமதிமுத்தமேற்
கந்தமாருங்கடற்காழியுளான்றமிழ்ஞானசம
பந்தன்மாலைபழிதீரநின்றேத்தவல்லார்களபோய்ச
சிந்தைசெய்வார்சிவன்சேவடிசேர்வதுதிண்ணமே (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர் - மதிமுத்த நாதேசுவரா, தேவியார், பொற்கொடியம்மை

## திருநாகேச்சரம் - பண் - செவ்வழி.

திருச்சிற்றம்பலம்.

தழைகொள்சந்தும்மகிலும்மயிற்பீலியுஞ்சாதியின
பழமுழுந்திப்புனல்பாய்பழங்காவிரித்தென்கரை
நழுவில்வானோர்தொழநல்குசீர்மல்குநாகேச்சரத்
தழகர்பாதந்தொழுதேத்தவல்லார்க்கழகாகுமே. (க)

பெண்ணோர்பாகம்மடையசசடை யிற்புனல்பேணிய
வண்ணமானபெருமான்மருவும்மிடமண்ணுளார
நண்ணிநாளுந்தொழுதேத்திநன்கெய்துநாகேச்சரங்
கண்ணினாற்காணவல்லாரவர்கண்ணுடையார்களே. (உ)

குறவர்கொல்லைப்புனங்கொள்ளைகொண்டும்மணிகுலவுநீ
பறவையாலப்பறக்கும்பழங்காவிரித்தென்கரை
நறவைநாறும்பொழில்சூழ்ந்தழகாயநாகேசசரத்
திறைவர்பாதந்தொழுதேத்தவல்லார்க்கிடரில்லையே. (ங)

கூசநோக்காதுமுன்சொன்னபொய்கொடுவினைகுற்றமும்
நாசமாக்கும்மனத்தார்கள்வந்தாடுநாகேச்சரந்
தேசமாக்குந்திருக்கோயிலாக்கொண்டசெல்வன்கழ
னேசமாக்குந்திறத்தார்அறத்தார்நெறிப்பாலரே. (ச)

வம்புநாறும்மலரும்மலைப்பண்டமுங்கொண்டுநீர்
பைம்பொன்வாரிக்கொழிக்கும்பழங்காவிரித்தென்கரை
நம்பனாளுமமர்கின்றநாகேச்சரநண்ணுவா
ரும்பர்வானோர்தொழச்சென்றுடனாவதுமுண்மையே. (ரு)

காளமேகந்நிறக்காலனோடந்தகன்கருடனு
நீளமாய்நின்றெய்தகாமனுமபட்டனவினைவுறி
ஞாளுநாதனமர்கின்றநாகேச்சரநண்ணுவார்
கோளுநாளுந்தீயவேனுநன்காங்குறிக்கொண்மினே. (சா)

வேயுதிர்முத்தொடுமத்தயானைமருப்பும்விராய்ப்
பாய்புனல்வந்தலைக்கும்பழங்காவிரித்தென்கரை
நாயிறுந்திங்களுங்கூடிவந்தாடுநாகேச்சர
மேயவன்றன்னடிபோற்றியென்பார்வினைவீடுமே. (எ)

இலங்கைவேந்தன்சிரம்பத்திரட்டியெழிற்றோள்களும
மலங்கிவீழ்ம்மலையாலடர்த்தானிடமல்கிய
நலங்கொள்சிந்தையவர்நாடொறுநண்ணுநாகேச்சரம்
வலங்கொள்சிந்தையுடையாரிடராயினமாயுமே. (அ)

கரியமாலும்மயனும்மடியுமமுடிகாண்பொணு
வெரியதாகிந்நிமிர்ந்தானமருமிடமீண்டுகா
விரியினீர்வந்தலைக்குங்கரைமேவுநாகேச்சரம்
பிரிவிலாதவ்வடியார்கள்வானிற்பிரியார்களே (கூ)

தட்டிடுக்கியுறிதூக்கியகையினாசாக்கியர்
கட்டுரைக்குமமொழிகொள்ளலுமவெள்ளிலங்காட்டிடை
நட்டிருட்கண்ணடமாடியநாதனுகேச்சர
மட்டிருக்குமமலரிட்டடிவீழ்வதுவாய்மையே. (கo)

கந்தநாறும்புனற்காவிரித்தெனகரைக்கண்ணுதன
னந்திசேருந்திருநாகேசசரத்தின்மேன்ஞானசம
பந்தனுவிற்பனுவலலிவைபத்தும்வல்லார்கள்போ
யெந்தையீசனிருக்கும்முலகெய்தவல்லார்களே. (கக)

திருச்சிற்றம்பலம்.

ஆ பதிகம் - கஉo.

## திருமூக்கீச்சரம் - பண் - செவ்வழி.

திருச்சிற்றம்பலம்.

சாந்தம்வெண்ணீறெனப்பூசிவெள்ளஞ்சடைவைத்தவர்
காந்தளாருமவிரலேழையொடாடியகாரண
மாய்ந்துகொண்டாங்கறியந்நிறைந்தாரவரார்கொலோ
வேந்தன்மூக்கீச்சரத்தடிகளசெய்கின்றதோர்மெய்ம்மையே. (க)

வெண்டலையோர்கலனுபபலிதேர்ந்துவிரிசடைக்
கொண்டலாருமபுனல்சோர்த்துமையாளொடுங்கூட்டமா
விண்டவர்தமமதிலெய்தபினவேனில்வேள்வெந்தெழக்
கண்டவாமூக்கீச்சரத்தெமமடிகளசெய்கன்மமே. (உ)

மருவலார்தமமதிலெய்ததுவும்மான்மதலையை
யுருவிலாரவ்வெரியூட்டியதும்முலகுண்டதாற்
செருவிலாரும்புலிசெங்கயலாணையினுன்செய்த
பொருவினமூக்கீச்சரத்தெம்மடிகள்செய்யுமபூசலே. (ரு)

அன்னமன்னநடைச்சாயலாளோடழகெய்தவே
மின்னையன்னசடைக்கங்கையான்மேவியகாரணந்
தென்னன்கோழியெழில்வஞ்சியுமோங்குசெங்கோலினன்
மன்னன்மூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோர்மாயமே. (ச)

விடமுனாரவ்வழல்வாயதோர்பாம்பரைவீக்கியே
நடமுனாரவ்வழலாடுவர்பேயொடுகள்ளிருள்
வடமனீடுபுகழ்ப்பூழியன்றென்னவன்கோழிமன்
னடன்மன்மூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோரச்சமே (௫)

வெந்தநீறுமெய்யிற்பூசுவராடுவார்வீங்கிருள்
வந்தெனாரவளைகொள்வதுமிங்கொருமாயமா
மந்தணமாதனனேரியன்செம்பியனாக்கிய
வெந்தைமூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோரேதமே (௬)

அரையிலாருங்கலையில்லவனாணொடுபெண்ணுமா
யுரையிலாரவ்வழலாடுவரொன்றலாகாண்மினோ
விரவலார்தம்மதின்மூன்றுடன்வெவ்வழலாக்கினா
னரையன்மூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோரச்சமே. (௭)

ஈர்க்குநீர்ச்செஞ்சடைக்கேற்றதுங்கூற்றையுதைத்ததுங்
கூர்க்குநன்மூவிலைவேல்வலனேந்தியகொள்கையு
மார்க்கும்வாயானரக்கனுரத்தைநெரித்தவ்வடன்
மூர்க்கன்மூக்கீச்சரத்தடிகள்செய்யாநின்றமொய்ம்பதே. (௮)

நீருளாருமலர்மேலுறைவானெடுமாலுமாய்ச்
சீருளாருங்கழறேடமெய்த்தீத்திரளாயினான்
சீரிலங்கொளிர்தென்னவன்செம்பியன்வில்லவன்
சேருமூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோர்செம்மையே. (௯)

வெண்புலான்மார்பிடுதுகிலினர்வெற்றரையுழல்பவ
ருண்பினாலேயுரைப்பார்மொழியூனமதாக்கினா
னொண்புலாலவேன்மிகவல்லவனோங்கெழிற்கிள்ளிசே
பண்பின்மூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோர்பச்சையே (௰)

மல்லைவார்மும்முடிமன்னர்மூக்கீச்சரத்தடிகளைச்
செல்வராகநினையும்படிசேர்த்தியசெந்தமிழ்
நல்லராய்வாய்பவாகாழியுண்ஞானசம்பந்தன
சொல்லவல்லாரவர்வானுலகாளவும்வல்லரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருப்பாதிருப்புலியூர் - பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்.

முன்னநின்றமுடக்காலமுயற்கருள்செய்துநீள்
புன்னைநின்றுகமழ்பாதிரிப்புலியூருளான்
றன்னைநின்றுவணங்குந்தனைத்தவமில்லிகள்
பின்னைநின்றபிணியாக்கையைப்பெறுவார்களே. (௧)

கொள்ளிநக்கபகுவாயபேய்கள்குழைந்தாடவே
முள்ளிலவமுதுகாட்டுறையுமுதல்வனிடம்
புள்ளினங்கள்பயிலும்பாதிரிப்புலியூர்தனை
யுள்ளநம்மேல்வினையாயினவொழியுங்களே. (௨)

மருளினல்லார்வழிபாடுசெய்யுமழுவாளர்மேற்
பொருளினல்லார்பயில்பாதிரிப்புலியூருளான
வெருளின்மானின்பிணைநோக்கல்செய்துவெறிசெய்தபின்
னருளியாகத்திடைவைத்ததுவுமழகாகவே. (௩)

போதினாலும்புகையாலுமுய்த்தேயடியார்கடாம
போதினாலேவழிபாடுசெய்யப்புலியூர்தனு
ளாதினாலுமவலமிலாதவடிகண்மறை
யோதிநாளுமிடுபிச்சையேற்றுண்டுணப்பாலதே. (௪)

ஆகநல்லாரமுதாக்கவுண்டானழலைந்தலை
நாகநல்லார்பரவநயந்தங்கரையார்த்தவன
போகநல்லார்பயிலும்பாதிரிப்புலியூர்தனுட்
பாகநல்லாளொடுநின்றவெம்பரமேட்டியே. (௫)

மதியமொய்த்தகதிர்போலொளிம்மணற்கானல்வாய்ப்
புதியமுத்தந்திகழ்பாதிரிப்புலியூரெனும
பதியில்வைக்கப்படுமெந்தைதன்பழந்தொண்டர்கள்
குதியுங்கொள்வர்விதியுஞ்செய்வார்குழகாகவே. (௬)

கொங்கரவப்படுவண்டறைகுளிர்கானல்வாய்ச
சங்கரவப்பறையின்னொலியவைசார்ந்தெழப
பொங்கரவமுயர்பாதிரிப்புலியூர்தனு
ளெங்கரவமமணாயிலசைத்தானையடைமினே. (௭)

வீக்கமெழுமிலங்கைக்கிறைவிலங்கல்லிடை
யூக்கமொழிந்தலறவ்விரலிறையூன்றினான்
பூக்கமழும்புனற்பாதிரிப்புலியூர்தனை
நோக்கமெலிந்தணுகாவினைநுணுகுங்களே. (௮)

அன்னந்தாவுமணியார்பொழின்மணியார்புன்னை
பொன்னெனுந்தாதுசொரிபாதிரிப்புலியூர்தனுண்
முன்னந்தாவியடிமூன்றளந்தவனான்முகன
தன்னங்காணாதுணராததோர்தவநீதியே. (௯)

உரிந்தகூறையுருவத்தொடுதெருவத்திடைத்
திரிந்துதின்னுஞ்சிறுநோன்பருமபெருந்தேரரு
மெரிந்துசொன்னவுரைகொள்ளாதேயெடுத்தேத்துமின்
வரிந்துவெண்ணீறணிந்தண்ணல்பாதிரிப்புலியூரையே. (௧௰)

அந்தணல்லாரகன்காழியுண்ஞானசம்
பந்தனல்லார்பயில்பாதிரிப்புலியூர்தனுட்
சந்தமாலைத்தமிழ்பத்திவைதரித்தார்கள்மேல்
வந்துதீயவ்வடையாமையால்வினைமாயுமே. (கக)

திருச்சிற்றம்பலம்

நடுநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - தோன்றாத்துணைநாயகர், தேவியார் - தோகையம்பிகையம்மை.

—◆—

## ஸ்ரீபுகலி - பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்.

விடையதேறிவெறியக்கரவார்த்தவிமலனார்
படையதாகப்பரசுதரித்தார்க்கிடமாவது
கொடையிலோவார்குலமும்முயர்ந்தம்மறையோர்கடாம
புடைகொள்வேள்விப்புகையும்பருலாவும்புகலியே. (க)

வேலைதன்னின்மிகுநஞ்சினையுண்டிருள்கண்டனார்
ஞாலமெங்கும்பலிகொண்டுழல்வார்நகராவது
சாலநல்லார்பயிலும்மறைகேட்டுப்பதங்களைச்
சோலைமேவுங்கிளித்தானசொற்பயிலும்புகலியே. (உ)

வண்டுவாழுங்குழன்மங்கையோர்கூறுகந்தாமதித்
துண்டமேவுஞ்சுடர்த்தொல்சடையார்க்கிடமாவது
கெண்டைபாயமடுவில்லுயர்கேதகைமாதவி
புண்டரீகமலர்ப்பொய்கைநிலாவும்புகலியே. (ங)

திரியுமூன்றுபுரமும்மெரித்துத்திகழ்வானவர்க
கரியபெம்மானரவக்குழையார்க்கிடமாவது
பெரியமாடத்துயருங்கொடியின்மிடைவால்வெயிற்
புரிவிலாததடம்பூம்பொழில்சூழ்ந்தண்புகலியே. (ச)

ஏவிலாருஞ்சிலைப்பார்த்தனுக்கின்னருள்செய்தவர்
நாவினாண்மூக்கரிவித்தநம்பர்க்கிடமாவது
மாவிலாருங்கனிவார்கிடங்கில்விழவாளைபோய்ப்
பூவிலாரும்புனற்பொய்கையில்வாழும்புகலியே. (ரு)

தக்கனவேள்விதகர்த்ததலைவன்றையலாளொடு
மொக்கவேயெம்முரவோனுறையும்மிடமாவது
கொக்குவாழைப்பலவின்கொழுந்தண்கனிகொன்றைகள
புக்கவாசப்புன்னைபொன்றிரள்காட்டும்புகலியே (சு-எ)

தொலைவிலாதவரக்கன்னுரத்தைத்தொலைவித்தவன
றலையுந்தோளுநெரித்தசதுரர்க்கிடமாவது
கலையின்மேவும்மனத்தோரிரப்போர்க்குக்கரப்பிலார்
பொலியுமந்தண்பொழில்சூழ்ந்தழகாரும்புகலியே. (அ)

## தேவாரப்பதிகங்கள்.

கீண்டுபுக்காரபறந்தாரயர்ந்தார்கேழலன்னமாய்க்
காண்டுமென்றார்கழல்பணியநின்றார்க்கிடமாவது
நீணடநாரையிரையாரல்வாரநின்றசெறுவினிற்
பூண்டுமிக்கவ்வயல்காட்டுமந்தணபுகலியே. (கூ)

தடுக்குடுத்துத்தலையைப்பறிப்பாரொடுசாக்கிய
ரிடுக்கணுய்ப்பாரிறைஞ்சாதவெமமீசர்கிடமாவது
மடுப்படுக்குஞ்சுருதிப்பொருள்வல்லவர்வானுளோ
ரடுத்தடுத்துப்புகுந்தீண்டுமந்தண்புகலியே. (க0)

எய்தவொண்ணாவிறைவனுறைகின்றபுகலியைக்
கைதவமில்லாககவுணியன்ஞானசம்பந்தனசீா
செய்தபத்துமிவைசெபபவல்லார்சிவலோகத்தே
யெய்திநலவிமையோர்களேத்தவிருப்பார்களே. (கக)

திருச்சிற்றம்பலம்.

ஆ பதிகம் - கஉங.

## இரண்டாந்திருமுறை.

முற்றிற்று.

சிவமயம.

(பகற்பண்.)

புறநீர்மை - காந்தாரம் - பியந்தைக்காந்தாரம் - கவுசிகம - இந்தளம் - தக்கேசி - சாதாரி - நட்டபாஷை - நட்டராகம் - பழம்பஞ்சுரம் - காந்தாரபஞ்சமம - பஞ்சமம். ஆக - கஉ.

(இராப்பண்.)

தக்கராகம் - பழந்தக்கராகம் - சீகாமரம் - கொல்லி - கொல்லிக்காவாணம் - வியாழக்குறிஞ்சி - மோகராகக்குறிஞ்சி - அந்தாளிக்குறிஞ்சி - குறிஞ்சி. ஆக - கூ.

(பொதுப்பண.)

செவ்வழி - செந்துருதி - திருத்தாண்டகம். ஆ - ௩.

ஆகப்பண் - உச.

உ
சிவமயம்

# சம்பந்தமூர்த்திசுவாமிகள்

# மூன்றாந்திருமுறையின்

பதிக அட்டவணை.

# பதிக அட்டவணை.

உ

சிவமயம்.

# திருஞானசம்பந்தசுவாமிகள்

அருளிச் செய்த

# தேவாரப்பதிகங்கள்.

## மூன்றாந் திருமுறை.

### கோயில் - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

ஆடினாய்நறுநெய்யொடுபாறயிரந்தணர்பிரியாதசிற்றம்பல
நாடினாயிடமாநறுங்கொன்றைநயந்தவனே
பாடினாய்மறையோடுபல்கீதமும்பல்சடைப்பனிகால்கதிர்வெண்டிங்கள்
சூடினாயருளாய்சுருங்கவெந்தொல்வினையே (௧)

கொட்டமேகமழுங்குழலாளொடுகூடினாயெருதேறினாய்நுதல்
பட்டமேபுனைவாயிசைபாடுவபாரிடமா
நட்டமேநவில்வாய்மறையோர்தில்லைநல்லவர்பிரியாதசிற்றம்பல
மிட்டமாயுறைவாயிவைமேவியதென்னைகொலோ. (௨)

நீலத்தார்கரியமிடற்றார்நல்லநெற்றிமேலுறைகண்ணினார்பற்று
சூலத்தார்சுடலைப்பொடிநீறணிவார்சடையான்
சீலத்தார்தொழுதேத்துசிற்றம்பலஞ்சேர்தலாற்கழற்சேவடிகைதொழக்
கோலத்தாயருளாயுனகாரணங்கூறுதுமே. (௩)

கொம்பலைத்தழகெய்தியநுண்ணிடைக்கோலவாண்மதிபோலமுகத்திரண்
டம்பலைத்தகண்ணாண்முலைமேவியவார்சடையான்
கம்பலைத்தெழுகாமுறுகாளையர்காதலாற்கழற்சேவடிகைதொழ
வம்பலத்துறைவானடியார்க்கடையாவினையே. (௪)

தொல்லையாரமுதுண்ணநஞ்சுண்டதோர்தூமணிமிடறாபகுவாயதோர்
பல்லையார்தலையிற்பலியேற்றுழல்பண்டரங்கா
தில்லையார்தொழுதேத்துசிற்றம்பலஞ்சேர்தலாற்கழற்சேவடிகைதொழ
வில்லையாம்வினைதானெரியம்மதிலெய்தவனே. (௫)

ஆகந்தோயணிகொன்றையாயனலங்கையாயமரர்க்கமராவுமை
பாகந்தோய்பகவாபலியேற்றுழல்பண்டரங்கா

மாகந்தோயமொழின்மல்குசிற்றம்பலமன்னினுய்மழுவாளினுயமழு
ஞகந்தோயமரையாயடியாரைநண்ணுவினேயே. (௬)

சாதியார்பளிங்கின்னெடுவெள்ளியசங்கவார்குழையாய்திகழப்படும்
வேதியாவிகிர்தாவிழுவாரணிதில்லேதன்னு
ளாதியார்க்கிடமாயசிற்றம்பலமங்கையாற்றொழவல்லடியார்களே
வாதியாதகலுங்கலியாமலிதீவினேயே. (௭)

வேயினர்பணைத்தோளியோடாடலேவேண்டினுய்விகிர்தாவுயிர்கட்கமு
தாயினுயிடுகாட்டெரியாடலமர்ந்தவனே
தீயினர்கணையாற்புரமூன்றெய்தசெம்மையாய்திகழ்கின்றசிற்றம்பல
மேயினுய்கழலேதொழுதெய்துதுமேலுலகே. (௮)

தாரினர்விரிகொன்றையாய்மதிதாங்குநீள்சடையாய்தலேவாநல்ல
தேரினர்மறுகிற்றிருவாரணிதில்லேதன்னுட்
சீரினுல்வழிபாடொழியாததோர்செம்மையாயழகாயசிற்றம்பல
மேரினுலமர்ந்தாயுனசீரடியேத்துதுமே. (௯)

வெற்றரையுழல்வார்துவராடையர்வேடத்தாரவர்கள்ளுரைகொள்ளன்மின்
மற்றவருலகின்னவலம்மவைமாற்றகில்லார்
கற்றவர்தொழுதேத்துசிற்றம்பலங்காதலாற்கழற்சேவடிகைதொழ
வுற்றவருலகின்னுறுதிகொளவல்லவரே. (௧௦)

நாறுபூம்பொழினண்ணியகாழியுண்ஞன்மறைவல்லஞானசம்பந்த
னூறுமினறமிழாலுயர்ந்தாருறைதில்லேதன்னு
ளேறுதொல்புகழேந்துசிற்றம்பலத்தீசனேயிசையாற்சொன்னபத்திவை
கூறுமாறுவல்லாருயர்ந்தாரொடுங்கூடுவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பூந்தராய் பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

பந்துசேர்விரலாள்பவளத்துவர்வாயினுள்பனிமாமதிபோன்முகத்
தந்தமில்புகழாண்மலேமாதொடுமாதிபிரான்
வந்துசேர்விடம்வானவரெத்திசையுந்நிறைந்துவலஞ்செய்துமாமலர்
புந்திசெய்திறைஞ்சிப்பொழிபூந்தராய்போற்றுதுமே. (௧)

காவியங்கருங்கண்ணினுள்கனித்தொண்டைவாய்கதிர்முத்தநல்வெண்ணகை
தூவியம்பெடையன்னநடைச்சுரிமென்குழலா [த்
டேவியுந்திருமேனியோர்பாகமாயொன்றிரண்டொருமூன்றொடுசேர்பதி
பூவிலந்தணனொப்பவர்பூந்தராய்போற்றுதுமே. (௨)

பையராவருமல்குன்மெல்லியல்பஞ்சின்னேரடிவஞ்சிகொணுண்ணிடைத்
தையலாளொருபாலுடையெம்மிறைசாருமிடஞ்

செய்யெலாங்கழுநீர்கமலம்மலர்த்தேறலூறலிற்சேறுலராதநற்
பொய்யிலாமறையோர்பயில்பூந்தராய்போற்றுதுமே. (௩)

முள்ளிநாண்முகைமொட்டியல்கோங்கினரும்புதேன் கொள்குரும்பைமூவாம
துள்ளியன்றபைம்பொற்கலசத்தியலொத்தமுலை [ருந்
வெள்ளிமால்வரையன்னதோர்மேனியின்மேவினார்பதிவீமருதண்பொழிற்
புள்ளினந்துயின்மலகியபூந்தராய்போற்றுதுமே. (௪)

பண்ணியன்றெழுமென்மொழியாள்பகர்கோதையேர்திகழ்பைந்தளிர்மேனி
பெண்ணியன்றமொய்ம்பிற்பெருமாற்கிடம்பெய்வளையார் [யோர்
கண்ணியன்றெழுகாவிச்செழுங்கருநீலமல்கியகாமருவாவிநற்
புண்ணியருறையும்பதிபூந்தராய்போற்றுதுமே. (௫)

வாணிலாமதிபோனுதலாண்மடமாழையொண்கணாள்வெண்டரளங்கைப்
பாணிலாவியவின்னிசையார்மொழிபாவையோடுஞ்
சேணிலாத்திகழ்செஞ்சடையெம்மண்ணல்சேர்வதுசிகரப்பெருங்கோயில்சூழ்
போணிலாநுழையும்பொழிற்பூந்தராய்போற்றுதுமே. (௬)

காருலாவியவார்குழலாள்கயற்கண்ணினாள்புயற்காலொளிமின்னிடை
வாருலாவியமென்முலையாண்மலைமாதுடனாய்
நீருலாவியசென்னியன்மன்னிநிகருநாமமுந்நான்குநிகழ்பதி
போருலாவெயில்சூழ்பொழிற்பூந்தராய்போற்றுதுமே. (௭)

காசைசேர்குழலாள்கயலேர்தடங்கண்ணிகாம்பனதோட்கதிர்மென்முலைத்
தேசுசேர்மலைமாதமருந் திருமார்பகலத்
தீசனமேவுமிருங்கயிலையெடுத்தானையன்றடர்த்தானிணைச்சேவடி
பூசைச்செய்பவர்சேர்பொழிற்பூந்தராய்போற்றுதுமே. (௮)

கொங்குசேர்குழலாணிழல்வெண்ணகைக்கொவ்வைவாய்க்கொடியேரிடை
பங்குசேர் திருமார்புடையார்படர்தீயுருவாய் [யாளுமை
மங்குல்வண்ணனுமாமலரோனுமயங்கநீண்டவர்வான்மிசைவந்தெழு
பொங்குநீரினமிதந்தநற்பூந்தராய்போற்றுதுமே. (௯)

கலவமாமயிலாரியலாள்கரும்பனமென்மொழியாள்கதிர்வாணுதற்
குலவுபூங்குழலாளுமைகூறனைவேறுரையா
லலவைசொல்லுவார்தேரமணாதர்களாக்கினான்றனைநண்ணலுநல்குநற்
புலவர்தாம்புகழ்பொற்பதிபூந்தராய்போற்றுதுமே. (௧௦)

தேம்பனுண்ணிடையாள்செழுஞ்சேலனகண்ணியோடண்ணல்சேர்விட
ந்தேனமர், பூம்பொழிறிகழ்பொற்பதிபூந்தராய்போற்றுதுமென், றேரும்புதன்
மையன்முத்தமிழ்நான்மறைஞானசம்பந்தனொண்டமிழ்மாலைகொண், டாம்ப
டியிவையேத்தவல்லார்க்கடையாவினையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## ஸ்ரீபுகலி-நாலடிமேல்வைப்பு - பண் - காந்தாரபஞ்சமம

திருச்சிற்றம்பலம்

இயலிசையெனும்பொருளின்றிறமாம்புயலனமிடறுடைப்புண்ணியனே
கயலனவரிநெடுங்கண்ணியொடுமயலுலகடிதொழவமர்ந்தவனே
கலனுவதுவெண்டலைகடிபொழிற்புகலிதன்னு
ணிலனுடொறுமின்புறநிறைமதியருளினனே. (௧)

நிலையுறுமிடர்நிலையாதவண்ணமிலையுறுமலர்கள்கொண்டேத்துதும்யா
மலையினிலரிவையைவெருவவன்றோலைவருமதகரியுரித்தவனே
யிமையோர்கணின்றுதொழவெழிறிகழ்பொழிற்புகலி
யுமையாளொடுமன்னினையுயர்திருவடியிணையே. (௨)

பாடினையருமறைவரன்முறையாலாடினைகாணமுன்னருவனத்திற்
சாடினைகாலனைத்தயங்கொளிசேர்நீடுவன்பிறைமுடிநிமலனே
நினையேயடியார்தொழநெடுமதிற்புகலிநகர்
தனையேயிடமேவினைதவநெறியருளெமக்கே. (௩)

நிழறிகழ்மழுவினையானையின்றோலழறிகழ்மேனியிலணிந்தவனே
கழறிகழ்சிலம்பொலியலம்பநல்லமுழவொடுமருநடமுயற்றினனே
முடிமேன்மதிசூடினைமுருகமர்பொழிற்புகலியு
ளடியாரவரேத்துறவழகொடுமிருந்தவனே (௪)

கருமையின்னொளிர்கடனஞ்சமுண்டவுருமையினுலகுயிரளித்தநின்றன்
பெருமையைநிலத்தவர்பேசினல்லாலருமையிலளப்பரிதாயவனே
யரவேரிடையாளொடுமலைகடன்மலிபுகலி
பொருள்சேர்தரநாடொறும்புவிமிசைப்பொலிந்தவனே. (௫)

அடையரிமாவொடுவேங்கையின்றோல்புடைபடவரைமிசைப்புனைந்தவனே
படையுடைநெடுமதிற்பரிசழித்தவிடையுடைக்கொடிமல்குவேதியனே
விகிர்தாபரமாநின்னைவிண்ணவர்தொழப்புகலித்
தகுவாய்மடமாதொடுந்தாள்பணிந்தவர்தமக்கே. (௬)

அடியவர்தொழுதெழவமரரேத்தச்செடியவல்வினைபலதீர்ப்பவனே
துடியிடையகலல்குற்றூமொழியைப்பொடியணிமார்புறப்புல்கினனே
பண்ணியார்புதிதாபுகழேற்றினைபுகலிநகர்
நண்ணினாய்கழலேத்திடநண்ணகிலாவினையே. (௭)

இரவொடுபகலதாமெம்மானின்னைப்பரவுதலொழிகிலன்வழியடியேன்
குரவிரிநறுங்கொன்றைகொண்டணிந்தவிரிசடைமுடியாண்டகையே
யரசென்னவுடையாளொடுமதிகடலிலங்கைமன்னனை
யிணைபாதகருநாளடர்த்திருந்தனைபுகலியுளே (௮)

உருகிடவுவகைதந்துடலினுள்ளார்பருகிடவமுதனபண்பினனே
பொருகடல்வண்ணனும்பூவுளானும்பெருகிடமருவொளிப்பிறங்கெரியா

யுயர்ந்தாயினிநீயெனைபொன்மலரடியிணைக்கீழ்
வயந்தாங்குறவளர்மதிற்புகலிமனே. (௯)

கையினிலுண்பவர்கணிகைநோன்பர்செய்வனதவமலாச்செதுமதியார்
பொய்யவருரைகளைப்பொருளெனுகமெய்யவரடிதொழவிரும்பினனே
வியந்தாய்வெள்ளேற்றினைவிண்ணவர்தொழுபுகலி
யுயர்ந்தாய்பெருங்கோயிலுளொருங்குடனிருந்தவனே. (௰)

புண்ணியர்தொழுதெழுபுகலிநகர்விண்ணவரடிதொழவிளங்கினனை
நண்ணியஞானசம்பந்தன்வாய்மைபண்ணியவருந்தமிழ்பத்தும்வல்லார்
நடலையவையின்றிப்போய்நண்ணுவார்சிவனுலக
மிடராயினவின்றித்தாமெய்துவர்தவநெறியே (௧௧)

திருச்சிற்றம்பலம்

## திருவாவடுதுறை-நாலடிமேல்வைப்பு-பண்-காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

இடரினுந்தளரினுமெனதுறுநோய்தொடரினுமுனகழற்றொழுதெழுவேன்
கடறனிலமுதொடுகலந்தநஞ்சைமிடறினிலடக்கியவேதியனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கிலையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே. (௧)

வாழினுஞ்சாவினும்வருந்தினும்போய்வீழினுமுனகழல்விடுவேனல்லேன்
றாழிளந்தடம்புனற்பங்குசென்னிபோழிளமதிவைத்தபுண்ணியனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே. (௨)

நனவிலுங்கனவிலுநம்பாவுன்னைமனவிலும்வழிபடன்மறவேனம்மான்
புனல்விரிநறுங்கொன்றைப்போதணிந்தகனலெரியனல்புலதுகையவனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே. (௩)

தும்மலோடருந்துயர்தோன்றிடினுமம்மலரடியலாலரற்றாதென்னாக்
கைம்மல்குவரிசிலைக்கணையொன்றினான்மும்மதிலெரியெழமுனிந்தவனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே. (௪)

கைபதுவீழினுங்கழிவுறினுஞ்செய்கழலடியலாற்சிந்தைசெய்யேன்
கொய்யணிநறுமலர்குலாயசென்னிமையணிமிடறுடைமறையவனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே. (௫)

வெந்துயர்தோன்றியோர்வெருவுறினுமெந்தாயுன்னடியலாலேத்தாதென்னா
வைந்தலைபரவுகொண்டரைக்கசைத்தசந்தவெண்பொடியணிசங்கரனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே.* (௬)

வெப்பொடுவிரவியோர்வினைவரினுமப்பாவுன்னடியலாலரற்றாதென்னா
வொப்புடையொருவனையுருவழியவப்படியழலெழவிழித்தவனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. (எ)

பேரிடர்பெருகியோர்பிணிவரினுஞ்சீருடைக்கழலலாற்சிந்தைசெய்யே
னேருடைமணிமுடியிராவணனையாரிடர்படவரையடர்த்தவனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. (அ)

உண்ணினும்பசிப்பினுமுறங்கினுநின்னொண்மலரடியலாலுரையாதென்னாக்
கண்ணனுங்கடிகமழ்தாமரைமேலண்ணலுமளப்பரிதாயவனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. (கூ)

பித்தொடுமயங்கியோர்பிணிவரினுமத்தவுன்னடியலாலரற்றாதென்னாப்
புத்தருஞ்சமணருமபுறனுரைக்கப்பத்தர்கட்கருள்செய்துபயின்றவனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. (க0)

அலைபுனலாவடுதுறையமர்ந்தவிலைநுனைவேற்படையெம்மிறையை
நலமிகுஞானசம்பந்தனசொன்னவிலையுடையருந்தமிழ்மாலைவல்லார்
வினையாயினநீங்கிப்போய்விண்ணவர்வியனுலகந்
நிலையாகமுன்னேறுவர்நிலமிசைநிலையிலரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருப்பூந்தராய்-ஈரடிமேல்வைப்பு - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

தக்கன்வேள்விதகர்த்தவன்பூந்தராய்
மிக்கசெம்மைவிமலனவியனகழற்
சென்றுசிந்தையில்வைக்கமெய்க்கதி
நன்றதாகியநம்பன்றானே. (க)

புள்ளினம்புகழ்போற்றியபூந்தராய்
வெள்ளந்தாங்குவிகிர்தனடிதொழ
ஞாலத்திலுயர்வாருள்குநன்னெறி
மூலமாயமுதலவன்றானே (உ)

வேந்தராயுலகாளவிருப்புறிற்
பூந்தராய்நகர்மேயவன்பொற்கழ
னீதியானினைந்தேத்தியுள்கிடச்
சாதியாவினையானதானே. (ங)

பூசுரர்தொழுதேத்தியபூந்தரா
யீசனசேவடியேத்தியிறைஞ்சிடச்

சிந்தைநோயவைதீரநல்கிய
விந்துவார்சடையெம்மிறையே. (ச)

பொலிந்தவெண்பணிமேனியன்பூந்தராய்
மலிந்தபுந்தியராகிவணங்கிட
நுந்தமேல்வினையோடவீடுசெ
யெந்தையாயவெம்மீசன்றானே (ரு)

பூதஞ்சூழப்பொலிந்தவன்பூந்தராய்
நாதன்சேவடிநாளுநவின்றிட
நல்குநாடொறுமின்பநளிர்புனல
பிலகுவார்சடைப்பிஞ்ஞகனே. (சா)

புற்றினாகமணிந்தவனபூந்தராய்ப்
பற்றிவாழும்பரமனைப்பாடிடப்
பாவமாயினதீரப்பணித்திடுந்
சேவதேறியசெல்வன்றானே. (எ)

போதகத்துரிபோர்த்தவன்பூந்தராய்
காதலித்தான்கழல்விரலொனறினா
லரக்கனாற்றலழித்தவனுக்கருள்
பெருககின்றவெமபிஞ்ஞகனே. (அ)

மத்தமானவிருவர்மருவொணா
வத்தனானவன்மேவியபூந்தரா
யாளதாகவடைந்துய்ம்மினும்வினை
யாளுமாறருள்செய்யுந்தானே. (சு)

பொருத்தமில்சமணசாக்கியர்பொய்கடிந்
திருத்தல்செய்தபிரானிமையோர்தொழப்
பூந்தராய்நகர்கோயில்கொண்டுகை
யேந்துமான்மறிபெம்மிறையே. (கo)

புந்தியான்மிகநல்லவர்பூந்தரா
யந்தமில்லெம்மடிகளைஞானசம்
பந்தன்மாலைகொண்டேத்திவாழுதும்
பந்தமார்வினைபாறிடுமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

அஉ பதிகம் - ரு.

திருக்கொள்ளம்பூதூர் - ஈரடிமேல்வைப்பு - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

கொட்டமேகமழுங்கொள்ளம்பூதூர்
நட்டமாடியநம்பனையுள்கச்

செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௧)

கோட்டகக்கழனிக்கொள்ளம்பூதூர்
நாட்டகத்துறைநம்பனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௨)

குலையினார்தெங்குசூழ்கொள்ளம்பூதூர்
விலையிலாட்கொண்டவிகிர்தனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௩)

குவளைகண்மலருங்கொள்ளம்பூதூர்த்
தவளநீறணிதலைவனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௪)

கொன்றைபொன்சொரியுங்கொள்ளம்பூதூர்
நின்றபுன்சடைநிமலனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௫)

ஓடம்வந்தணையுங்கொள்ளம்பூதூ
ராடல்பேணியவடிகளையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௬)

ஆறுவந்தணையுங்கொள்ளம்பூதூ
ரேறுதாங்கியவிறைவனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௭)

குரக்கினம்பயிலுங்கொள்ளம்பூதூ
ரரக்கனைச்செற்றவாதியையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௮)

பருவராலுகளுங்கொள்ளம்பூதூ
ரிருவர்காண்பரியானைகழலுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௯)

நீரகக்கழனிக்கொள்ளம்பூதூர்த்
தேரமண்செற்றசெல்வனையுள்கச்

செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௧0)

கொன்றைசேர்சடையான்கொள்ளம்பூதூர்
நன்றுகாழியுண்ஞானசம்பந்த
னின்றுசொன்மாலைகொண்டேத்தவல்லார்போ
யென்றும்வானவரோடிருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - வில்வவனேசுவரர், தேவியார் - சவுந்தராம்பிகை.

இது ஓடக்காரனில்லாமல் அவ்வோடம் ஆற்றிற்சென்றுகரைசேரும்படி அருளிச் செய்தபதிகம்.

---

## திருப்புகலி - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

கண்ணுதலானும்வெண்ணீற்றினானுங்கமழலார்க்கவே
பண்ணிசைபாடநின்றாடினானும்பரஞ்சோதியும்
புண்ணியநான்மறையோர்களேத்தும்புகலிந்நகர்ப்
பெண்ணினல்லாளொடும்வீற்றிருந்தபெருமானன்றே. (௧)

சாம்பலோடுந்தழலாடினானுஞ்சடையின்மிசை
பாம்பினோடும்மதிசூடினானும்பசுவேறியும்
பூம்படுகல்லிளவாளைபாயும்புகலிந்நகர்க்
காம்பனதோளியொடுமிருந்தகடவுளன்றே. (௨)

கருப்புநல்வார்சிலைக்காமன்வேவக்கடைகண்டானு
மருப்புநல்லானையினீருரிபோர்த்தமணாளனும்
பொருப்பனமாமணிமாடமோங்கும்புகலிந்நகர்
விருப்பினல்லாளொடும்வீற்றிருந்தவிமலனன்றே. (௩)

அங்கையினங்கழலேந்தினானுமழகாகவே
கங்கையைச்செஞ்சடைசூடினானுங்கடலின்னிடைப்
பொங்கியநஞ்சமுதுண்டவனும்புகலிந்நகர்
மங்கைநல்லாளொடும்வீற்றிருந்தமணவாளனே. (௪)

சாமநல்வேதனுந்தக்கன்றன்வேள்விதகர்த்தானு
நாமநூறாயிரஞ்சொல்லிவானோர்தொழுநாதனும்
பூமல்குதண்பொழின்மன்னுமந்தண்புகலிந்நகர்க்
கோமளமாதொடும்வீற்றிருந்தகுழகனன்றே. (௫)

இரவிடையொள்ளெரியாடினானுமிமையோர்தொழச
செருவிடைமுப்புறந்தீயெரித்தசிவலோகனும்
பொருவிடையொன்றுகந்தேறினானும்புகலிந்நக
ரரவிடைமாதொடும்வீற்றிருந்தவழகனன்றே (௬)

சேர்ப்பதுதிண்சிலைமேவினானுந்திகழ்பாலன்மேல்
வேர்ப்பதுசெய்தவெங்கூற்றுதைத்தானும்வேள்விப்புகை

போர்ப்பதுசெய்தணிமாடமோங்கும்புகலிந்நகர்ப்
பார்ப்பதியோடுடனாவீற்றிருந்தபரமனன்றே. (எ)

கன்னெடுமால்வரைக்கீழரக்கனிடர்கண்டானும்
வின்னெடுமேடோர்விறல்வேடனாகிவிசயற்கொரு
பொன்னெடுங்கோல்கொடுத்தானுமந்தண்புகலிந்நக
ரன்னமன்னநடைமங்கையொடுமமர்ந்தானன்றே. (அ)

பொன்னிறநான்முகன்பச்சையானென்றிவர்புக்குழித்
தன்னையினானெனக்காண்பரியதழற்சோதியும்
புன்னைபொன்றாதுதிரமல்குமந்தண்புகலிந்நகர்
மின்னிடைமாதொடும்வீற்றிருந்தவிமலனன்றே. (கூ)

பிண்டியும்போதியும்பேணுவார்பேச்சினைப்பேணாதோர்
தொண்டருங்காதல்செய்சோதியாயசுடர்ச்சோதியான்
புண்டரீகமலர்ப்பொய்கைசூழ்ந்தபுகலிந்நகர்
வண்டமர்கோதையோடும்மிருந்தமணவாளனே. (கo)

பூங்கமழ்கோதையோடும்மிருந்தான்புகலிந்நகர்ப்
பாங்கனைஞானசம்பந்தன்சொன்னதமிழ்ப்பத்திவை
யாங்கமர்வெய்தியவாதியாகவிசைவல்லவ
ரோங்கமராபதியோர்தொழச்செலவதுமுண்மையே (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருக்கடவூர்த்திருவீரட்டம்-பண்-காந்தார பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

சடையுடையானுநெய்யாடலானுஞ்சரிகோவண
வுடையுடையானுமையார்ந்தவொண்கண்ணுமைகேள்வனுங்
கடையுடைநன்னெடுமாடமோங்குங்கடவூர்தனுள்
விடையுடையவண்ணலும்வீரட்டானத்தானல்லனே. (க)

விரிதருவார்சடையானும்வெள்ளையெருதேறியும்
புரிதருமாமலர்க்கொன்றைமாலைபுனைந்தேத்தவே
கரிதருகாலனைச்சாடினானுங்கடவூர்தனுள்
விரிதருதொல்புகழ்வீரட்டானத்தானல்லனே. (உ)

நாதனுநள்ளிருளாடினானுநளிர்போதின்கட்
பாதனும்பாய்புலித்தோலினானும்பசுவேறியுங்
காதலர்தண்கடவூரினானுங்கலந்தேத்தவே
வேதமதோதியும்வீரட்டானத்தானல்லனே. (ங)

மழுவமர்செல்வனுமாசிலாதபலபூதமுன்
முழவொலியாழ்குழன்மொந்தைகொட்டமுதுகாட்டிடைக்

கழல்வளர்கால்குஞ்சித்தாடினானுங்கடவூர்தனுள்
விழவொலிமல்கியவீரட்டானத்தானல்லனே. (௪)

சுடாமணிச்சுண்ணவெண்ணீற்றினானுஞ்சுழல்வாயதோர்
படமணிநாகமரைக்கசைத்தபரமேட்டியுங்
கடமணிமாவுரித்தோலினானுங்கடவூர்தனுள்
விடமணிகண்டனும்வீரட்டானத்தானல்லனே. (௫)

பண்பொலிநான்மறைபாடியாடிப்பலவூர்கள்போ
யுண்பலிகொண்டுழல்வானும்வானினொளிமல்கிய
கண்பொலிநெற்றிவெண்டிங்களானுங்கடவூர்தனுள்
வெண்பொடிபூசியும்வீரட்டானத்தானல்லனே. (௬)

செவ்வழலாய்நிலனாகிநின்றசிவமூர்த்தியு
முவ்வழனான்மறையைந்துமாயமுனிகேளவனுங்
கவ்வழல்வாய்க்கதநாகமார்த்தானகடவூர்தனுள்
வெவ்வழலேந்துகைவீரட்டானத்தானல்லனே. (௭)

அடியிரண்டோருடம்பைஞ்ஞான்கிருபதுதோள்பத்
முடியுடைவேந்தனைமூர்க்கழித்தமுதன்மூர்த்தியுங்
கடிகமழும்பொழில்சூழுமந்தண்கடவூர்தனுள்
வெடிதலையேந்தியும்வீரட்டானத்தானல்லனே. (௮)

வரைகுடையாமழைதாங்கினானும்வளர்போதின்கட்
புரைகடிந்தோங்கியநான்முகத்தான்புரிந்தேத்தவே
கரைகடல்சூழ்வையங்காக்கின்றானுங்கடவூர்தனுள்
விரைகமழ்பொழில்வீரட்டானத்தானல்லனே (௯)

தேரருமாசுகொண்மேனியாருந்தெளியாததோ
ராரருஞ்சொற்பொருளாகிநின்றவெமதாதியான்
காரிளங்கொன்றைவெண்டிங்களானுங்கடவூர்தனுள்
வீரமுஞ்சேர்கழல்வீரட்டானத்தானல்லனே. (௧௦)

வெந்தவெண்ணீறணிவீரட்டானத்துறைவேந்தனை
யந்தணர்தங்கடவூருளானையணிகாழியான
சந்தமெல்லாமடிசாத்தவல்லமறைஞானசம
பந்தனசெந்தமிழ்பாடியாடக்கெடும்பாவமே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருவிழிமிழலை - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்

கேள்வியர்நாடொறுமோதுநல்வேதத்தர்கேடிலா
வேள்விசெய்யந்தணர்வேதியர்வீழிமிழலையார்
வாழியர்தோற்றமுங்கேடும்வைப்பாருயிர்கட்கெலா
மாழியர்தம்மடிபோற்றியென்பார்கட்கணியரே. (௧)

கல்லினற்பாவையோர்பாகத்தர்காதலித்தேத்திய
மெல்லினத்தார்பக்கன்மேவினர்வீழிமிழலையார்
நல்லினத்தார்செய்தவேள்விசெகுத்தெழுநாயிற்றின்
பல்லினைத்தகர்த்தாரடியார்பாவநாசமே. (௨)

நஞ்சினையுண்டிருள்கண்டர்பண்டந்தகனைச்செற்ற
வெஞ்சினமூவிலைச்சூலத்தர்வீழிமிழலையா
ரஞ்சனக்கண்ணுமைபங்கினர்கங்கையங்காடிய
மஞ்சனச்செஞ்சடையாரென்னவல்வினைமாயுமே. (௩)

கலையிலங்குமழுக்கட்டங்கண்டிகைக்குண்டலம்
விலையிலங்குமமணிமாடத்தர்வீழிமிழலையார்
தலையிலங்கும்பிறைதாழ்வடஞ்சூலந்தமருக
மலையிலங்கும்புனலேற்றவர்க்குமடியார்க்குமே. (௪)

பிறையுறுசெஞ்சடையார்விடையார்பிச்சைநச்சியே
வெறியுறுநாட்பலிதேர்ந்துழல்வீழிமிழலையார்
முறைமுறையாலிசைபாடுவாராடிமுன்றொண்டர்க
ளிறையுறைவாஞ்சியமல்லதெப்போதுமென்னுள்ளமே. (௫)

வசையறுமாதவங்கண்டுவரிசிலைவேடனாய்
விசையனுக்கன்றருள்செய்தவர்வீழிமிழலையார்
ரிசைவரவிட்டியல்கேட்பித்துக்கல்லவட்டமிட்டுத்
திசைதொழுதாடியும்பாடுவார்சிந்தையுட்சேர்வரே. (௬)

சேடர்விண்ணோர்கட்குந்தேவர்நன்மூவிருதொன்னூலர்
வீடர்முத்தீயர்நால்வேதத்தர்வீழிமிழலையார்
காடரங்காவுமைகாணவண்டத்திமையோர்தொழ
நாடகமாடியையேத்தவல்லார்வினைநாசமே (௭)

எடுத்தவன்மாமலைக்கீழவிராவணன்வீழ்தர
விடுத்தருள்செய்திசைகேட்டவர்வீழிமிழலையார்
படுத்துவெங்காலனைப்பாலன்வழிபாடுசெய்பாலற்குக்
கொடுத்தனரின்பங்கொடுப்பர்தொழக்குறைவில்லையே. (௮)

திக்கமர்நான்முகன்மாலண்டமண்டலந்தேடிட
மிக்கமர்தீத்திரளாயவர்வீழிமிழலையார்
சொக்கமதாடியும்பாடியும்பாரிடஞ்சூழ்தரு
நக்கர்தநாமநமச்சிவாயவென்பார்நல்லரே (௯)

துற்றரையார்துவராடையர்துப்புரவொன்றிலா
வெற்றரையாரறியாநெறிவீழிமிழலையார்
சொற்றெரியாப்பொருள்சோதிக்கப்பானின்றசோதிதான்
மற்றறியாவடியார்கடஞ்சிந்தையுண்மன்னுமே. (௧௦)

வேதியர்கைதொழுவீழிமிழலைவிரும்பிய
வாதியைவாழ்பொழிற்காழியுண்ஞானசம்பந்தனுய்ந்
தோதியவொண்டமிழ்பத்திவையுற்றுரைசெய்பவர்
மாதியல்பங்கன்மலரடிசேரவும்வல்லரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிராமேச்சரம் - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்

அலைவளர்தண்மதியோடயலேயடக்கியுமை
முலைவளர்பாகமுயங்கவல்லமுதல்வன்முனி
யிலைவளர்தாழைகள்விம்முகானலிராமேச்சரந்
தலைவளர்கோலநன்மாலையன்றானிருந்தாட்சியே. (க)

தேவியைவவ்வியதென்னிலங்கைத்தசமாமுகன்
பூவியலும்முடிபொன்றுவித்தபழிபோயற
வேவியலுஞ்சிலையண்ணல்செய்தவிராமேச்சர
மேவியசிந்தையினார்கடம்மேல்வினைவீடுமே. (உ)

மானனநோக்கிவைதேகிதன்னையொருமாயையாற்
கானதில்வவ்வியகாரரக்கன்னுயிர்செற்றவ
னீனமில்லாப்புகழண்ணல்செய்தவிராமேச்சரந்
ஞானமுநன்பொருளாகிநின்றதொருநன்மையே. (ங)

உரையுணராதவன்காமமென்னுமுறுவேட்கையான்
வரைபொருதோளிறச்செற்றவில்லிமகிழ்ந்தேத்திய
விரைமருவுங்கடலோதமல்குமிராமேச்சர
நரையரவாடநின்றாடல்பேணுமம்மானல்லனே. (ச)

ஊறுடைவெண்டலைகையிலேந்திப்பலவூர்தொறும்
வீறுடைமங்கையரையம்பெய்யவிறலார்ந்ததோ
ரேறுடைவெல்கொடியெந்தைமேயவிராமேச்சரம்
பேறுடையான்பெயரேத்துமாந்தர்பிணிபேருமே. (ரு)

அணையலைசூழ்கடலன்றடைத்துவழிசெய்தவன்
பணையிலங்குமுடிபத்திறுத்தபழிபோக்கிய
வினையிலியென்றுமிருந்தகோயிலிராமேச்சரந்
துணையிலிதூமலர்ப்பாதமேத்தத்துயர்நீங்குமே. (சு)

சனிபுதன்ஞாயிறுவெள்ளிதிங்கட்பலதீயன
முனிவனசெய்துகந்தானைவென்றவ்வினைமூடிட
வினியருணல்கிடென்றண்ணல்செய்தவிராமேச்சரம்
பணிமதிசூடிநின்றாடவல்லபரமேட்டியே. (எ)

பெருவரையன்றெடுத்தேந்தினான்றன்பெயர்சாய்கெட
வருவரையாலடர்த்தன்றுநல்கியவன்மாலெனு

மிருவருநாடிநின்றேத்துகோயிலிராமேச்சரத்
தொருவனுமேபலவாகிநின்றதொருவண்ணமே. (அ-கூ)

சாக்கியர்வன்சமண்கையர்மெய்யிற்றடுமாற்றத்தா
ராக்கியவுமமுரைபற்றுவிட்டுமதிலொண்மையா
லேக்கியலுஞ்சிலையணலைசெய்தவிராமேச்சர
மாக்கியசெல்வனையேத்திவாழ்மின்னருளாகவே. (க0)

பகலவன்மீதியங்காமைக்காத்தபதியோன்றனை
யிகலழிவித்தவனேத்துகோயிலிராமேச்சரம்
புகலியுண்ஞானசம்பந்தனசொன்னதமிழ்புந்தியா
லகலிடமெய்குநின்றேத்தவல்லார்க்கில்லையல்லலே. (கக)

திருச்சிற்றம்பலம்.

ஆ பதிகம் - க0.

## திருப்புனவாயில்-பண்-காந்தார பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

மின்னியல்செஞ்சடைவெண்பிறையன்விரிநூலினன்
பன்னியநான்மறைபாடியாடிப்பலவூர்கள்போ
யன்னமனனநடையாளொடுமமருமிடம்
புன்னைநன்மாமலர்பொன்னுதிர்க்கும்புனவாயிலே. (க)

விண்டவர்தம்புரமூன்றெரித்துவிடையேறிப்போய்
வண்டமருங்குழன்மங்கையொடும்மகிழ்ந்தானிடந்
தண்டலுஞ்ஞாழலுநின்றுபெருங்கடற்கானலவாய்ப்
புண்டரீகம்மலர்ப்பொய்கைசூழ்ந்தபுனவாயிலே. (உ)

விடையுடைவெல்கொடியேந்தினனும்விறற்பாரிடம்
புடைபடவாடியவேடத்தானும்புனவாயிலிற்
றொடைநவில்கொன்றையந்தாரினனுஞ்சுடர்வெண்மழுப்
படைவலனேந்தியபாலனெய்யாடும்பரமனன்றே. (ங)

சங்கவெண்டோடணிகாதினனுஞ்சடைதாழவே
யங்கையிலங்கழலேந்தினனுமழகாகவே
பொங்கரவமமணிமார்பினனும்புனவாயிலிற்
பைங்கண்வெள்ளேற்றண்ணலாகிநின்றபரமேட்டியே. (ச)

கலிபடுதண்கடனஞ்சமுண்டகறைக்கண்டனும்
புலியதள்பாம்பரைசுற்றினனும்புனவாயிலி
னொலிதருதண்புனலோடெருக்கும்மதமத்தமு
மெலிதருவெண்பிறைசூடிநின்றவிடையூர்தியே. (ரு)

வாருறுமென்முலைமங்கைபாடநடமாடிப்போய்க்
காருறுகொன்றைவெண்டிங்களானுங்கனல்வாயதோர்

பேராறுருவெண்மழுவேந்திநம்புனவாயிலிற்
சீருறுசெல்வமல்கவிருந்தசிவலோகனே. (சு)

பெருங்கடனஞ்சமுதுண்டுகந்துபெருங்காட்டிடைத்
திருந்திளமென்முலைத்தேவிபாடநடமாடிப்போய்ப்
பொருந்தலர்தீம்புரமூன்றுமெய்துபுனவாயிலி
னிருந்தவன்றனகழலேத்துவார்கட்கிடரில்லையே. (எ)

மனமிகுவேலனவ்வாளரக்கன்வலியொல்கிட
வனமிகுமாலவரையாலடர்த்தானிடமன்னிய
வினமிகுதொல்புகழ்பாடலாடலெழின்மல்கிய
புனமிகுகொன்றையந்தெனநலார்ந்தபுனவாயிலே. (அ)

திருவளர்தாமரைமேவினானுந்திகழ்பாற்கடற்
கருநிறவண்ணனுங்காண்பரியகடவுளிடந்
நரல்சுரிசங்கொடிப்பியுந்திநலமலகிய
பொருகடல்வெண்டிரைவந்தெறியும்புனவாயிலே. (கூ)

போதியெனப்பெயராயினாருமபொறியில்சமண்
சாதியுரைப்பனகொண்டயர்ந்துதளர்வெய்தன்மின்
போதவிழ்தண்பொழின்மலகுமந்தண்புனவாயிலில்
வேதனைநாடொறுமேத்துவார்மேல்வினைவீடுமே. (௧0)

பொற்றொடியாளுமைபங்கனமேவும்புனவாயிலைக்
கற்றவர்தாந்தொழுதேத்தநின்றகடற்காழியா
னற்றமிழ்ஞானசம்பந்தனசொன்னதமிழ்நன்மையா
லற்றமிலபாடல்பத்தேத்தவல்லாரருள்சேர்வரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

பாண்டிநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - புனவாயிலீசுவரர், தேவியார்-கருணையீசுவரியம்மை.

---

## திருக்கோட்டாறு - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

வேதியாவிண்ணவரேத்தநின்றான்விளங்கும்மறை
யோதியவொண்பொருளாகிநின்றானொளியார்கிளிக்
கோதியதண்பொழில்சூழ்ந்தழகார்திருக்கோட்டாற்றுள்
ளாதியையேநினைந்தேத்தவல்லார்க்கல்லலில்லையே. (க)

ஏலமலர்க்குழன்மங்கைநல்லாளிமவான்மகள்
பாலமருந்திருமேனியெங்கள்பரமேட்டியுங்
கோலமலர்ப்பொழில்சூழ்ந்தெழிலார்திருக்கோட்டாற்றுள்
ளாலநீழற்கீழிருந்தறஞ்சொன்னவழகனே. (உ)

இலைமல்குசூலமொன்றேந்தினானுமிமையோர்தொழ
மலைமல்குமங்கையோர்பங்கனும்மணிகண்டனுங்

குலைமல்குதண்பொழில்சூழ்ந்தழகார்திருக்கோட்டாற்றுள்
ளலைமல்குவார்சடையேற்றுகந்தவழகனன்றே. (௩)

ஊனமரும்முடலுள்ளிருந்தவ்வுமைபங்கனும்
வானமரும்மதிசென்னிவைத்தமறையோதியுந்
தேனமரும்மலர்ச்சோலைசூழ்ந்ததிருக்கோட்டாற்றுட்
டானமருமவிடையானுமெங்கடலைவனன்றே. (௪)

வம்பமருமலர்க்கோதைபாகமகிழ்மைந்தனுஞ்
செம்பவளத்திருமேனிவெண்ணீறணிசெல்வனுங்
கொம்பமரும்மலர்வண்டுகிண்டுந்திருக்கோட்டாற்றுண்
ணம்பனெனப்பணிவார்க்கருள்செய்யெங்கணாதனே. (௫)

பந்தமரும்விரன்மங்கைநல்லாளொருபாகமா
வெந்தமரும்பொடிப்பூசவல்லவிகிர்தன்மிகுங்
கொந்தமரும்மலர்ச்சோலைசூழ்ந்ததிருக்கோட்டாற்றுள்
ளந்தணனைநினைந்தேத்தவல்லார்க்கில்லையல்லலே (௬)

துண்டமரும்பிறைசூடிநீடுசுடர்வண்ணனும்
வண்டமருங்குழன்மங்கைநல்லாளொருபங்கனுந்
தெண்டிரைநீர்வயல்சூழ்ந்தழகார்திருக்கோட்டாற்றுள்
ளண்டமுமெண்டிசையாகிநின்றவழகனன்றே. (௭)

இரவமருந்நிறம்பெற்றுடையவிலங்கைக்கிறை
கரவமரக்கயிலையெடுத்தான்வலிசெற்றவன்
குரவமரும்மலர்ச்சோலைசூழ்ந்ததிருக்கோட்டாற்றுள்
ளரவமருஞ்சடையானடியார்க்கருள்செய்யுமே. (௮)

ஓங்கியநாரணனான்முகனும்முணராவகை
நீங்கியதீயுருவாகிநின்றநிமலன்னிழற்
கோங்கமரும்பொழில்சூழ்ந்தெழிலார்திருக்கோட்டாற்றுள்
ளாங்கமரும்பெருமானமரர்க்கமரனன்றே. (௯)

கடுக்கொடுத்ததுவராடையர்காட்சியில்லாததோர்
தடுக்கிடுக்கிச்சமணேதிரிவார்கட்குத்தன்னருள்
கொடுக்ககில்லாக்குழகன்னமருந்திருக்கோட்டாற்றுள
ளிடுக்கணின்றித்தொழுவாரமரர்க்கிறையாவரே. (௧௰)

கொடியுடைமால்விடையூர்தியினான்றிருக்கோட்டாற்றுள்
ளடிகழலார்க்கநின்றாடவல்லவருளானைக்
கடிகமழும்பொழிற்காழியுண்ஞானசம்பந்தன்சொற்
படியிவைபாடிநின்றாடவல்லார்க்கில்லைபாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-ஐராபதேசுவரர், தேவியார்-வண்டமர்பூங்குழலம்மை.

## திருப்பூந்தராய்-பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

மின்னனவெயிறுடைவிரவலார்கட்
துன்னியபுரமுகச்சுளிந்ததொன்மையர்
புன்னையம்பொழிலணிபூந்தராய்நக
ரன்னமன்னநடையரிவைபங்கரே. (௧)

மூதணிமுப்புரத்தெண்ணிலோர்களை
வேதணிசரத்தினால்வீட்டினாரவர்
போதணிபொழிலமர்பூந்தராய்நகர்த்
தாதணிகுழலுமைதலைவர்காண்மினே. (௨)

தருக்கியதிரிபுரத்தவர்கடாமுகப்
பெருக்கியசிலைதனைப்பிடித்தபெற்றியர்
பொருக்கடல்புடைதருபூந்தராய்நகர்க்
கருக்கியகுழலுமைகணவர்காண்மினே. (௩)

நாகமும்வரையுமேநாணும்வில்லுமா
மாகமார்புரங்களைமறித்தமாண்பினர்
பூகமார்பொழிலணிபூந்தராய்நகர்ப்
பாகமர்மொழியுமைபங்கர்காண்மினே. (௪)

வெள்ளெயிறுடையவவ்விரலலார்களை
ரொள்ளெரியூட்டியவொருவனூரொளிர
புள்ளணிபுறவினிற்பூந்தராய்நகர்க்
கள்ளணிகுழலுமைகணவர்காண்மினே. (௫)

துங்கியருனவர்தோற்றமாநக
ரங்கியில்வீழ்ந்தரவாய்ந்தவம்பினா
பொங்கியகடலணிபூந்தராய்நக
ரயகயலனகணியரிவைபங்கரே (௬)

அண்டர்களுய்ந்திடவவுணர்மாய்தரக்
கண்டவர்கடல்விடமுண்டகண்டனா
புண்டரீகவயற்பூந்தராய்நகர்
வண்டமாகுழலிதன்மணாளர்காண்மினே. (௭)

மாசினவரக்கனைவரையின்வாட்டிய
காய்சினவெயில்களைக்கறுத்தகண்டனா
பூசுரர்பொலிதருபூந்தராய்நகர்க்
காசைசெய்குழலுமைகணவர்காண்மினே (௮)

தாமுகமாக்கியவசுரர்தம்பதி
வேமுகமாக்கியவிகிர்தர்கண்ணனும்
பூமகனறிகிலாப்பூந்தராய்நகர்க்
கோமகனெழில்பெறுமரிவைகூறரே. (௯)

முத்தரவதுரர்கண்மொய்த்தமுப்புர
மத்தகுமழலிடைவீட்டினாரமண்
புத்தருமறிவொணப்பூந்தராய்நகர்க்
கொத்தணிகுழலுமைகூறராண்மினே. (௧0)

புரமெரிசெய்தவர்பூந்தராய்நகர்ப்
பரமலிகுழலுமைநங்கைபங்கனைப்
பரவியபந்தன்மெய்ப்பாடல்வல்லவர்
சிரமலிசிவகதிசேர்தறிண்ணமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருப்பைஞ்ஞீலி - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

ஆரிடமபாடிலரடிகள்காடலா
லோரிடங்குறைவிலருடையாகோவணந்
நீரிடஞ்சடைவிடையூர்திநித்தலும்
பாரிடம்பணிசெய்யும்பயில்பைஞ்ஞீலியே. (௧)

மருவிலாதிரிபுரமெரியமால்வரை
பருவிலாக்குனித்தபைஞ்ஞீலிமேவலா
னுருவிலானபெருமையையுளங்கொளாதவத்
திருவிலாரவர்களைத்தெருட்டலாகுமே. (௨)

அஞ்சுரும்பணிமலரமுதமாந்திந்தேன்
பஞ்சுரம்பயிற்றும்பைஞ்ஞீலிமேவலான்
வெஞ்சுரந்தனிலுமைவெருவவந்ததோர்
குஞ்சரம்படவுரிபோர்த்தகொள்கையே. (௩)

கோடல்கள்புறவணிகொல்லைமுல்லைமேற்
பாடல்வண்டிசைமுரல்பயில்பைஞ்ஞீலியார்
பேடலராணலர்பெணணுமல்லதோ
ராடலையுகந்தவெம்மடிகள்வல்லரோ. (௪)

விழியிலாநகுதலைவிளங்கிளம்பிறை
சுழியிலார்வருபுனற்சூழுறங்கினான்
பழியிலார்பரவுபைஞ்ஞீலிபாடலான்
கிழியிலார்கேண்மையைக்கெடுக்கலாகுமே. (௫)

விடையுடைக்கொடிவலனேந்திவெண்மழுப்
படையுடைக்கடவுள்பைஞ்ஞீலிமேவலான்
றொடியுடைக்கலையல்குலாளோர்பாகமாச்
சடையிடைப்புனல்வைத்தசதுரனல்லனே. (௬)

தூயவன்றூயவெண்ணீறுமேனிமேற்
பாயவன்பாயபைஞ்ஞீலிகோயிலா

மேயவன்வேய்புரைதோளிபாகமா
வேயவனெனைச்செயுந்தன்மையென்கொலோ. (எ)

தொத்தினதோணமுடியுடையவன்றலை
பத்தினெரித்தபைஞ்ஞீலிமேவலான்
முத்தினைமுறுவல்செய்தாளோர் பாகமாப்
பொத்தினனிருந்தடிபொருந்திவாழுமினே. (அ)

நீருடைப்போதுறைவானுமாலுமாய்
சீருடைக்கழலடிசென்னிகாண்கிலா
பாருடைக்கடவுள்பைஞ்ஞீலிமேவிய
காருடைக்கொன்றையந்தலைவாதன்மையே (சு)

பீலியார்பெருமையும்பிடகர்நூன்மையுஞ்
சாலியாதவர்களைச்சாதியாததோர்
கோலியாவருவனாகூட்டியெய்தபைஞ்
ஞீலியான்கழலடிநினைந்துவாழுமினே. (கo)

கண்புனல்விளைவயற்காழிக்கற்பகம்
நண்புணருருமறைஞானசம்பந்தன
பண்பினர்பரவுபைஞ்ஞீலிபாடுவா
ருண்பினவுலகினிலோங்கிவாழ்வரே (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - நீலகண்டேசுவரர், தேவியார், விசாலாக்ஷியம்மை

---

## திருவெண்காடு - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்

மந்திரம்மறையவைவானவரொடு
மிந்திரன்வழிபடநின்றவெம்மிறை
வெந்தவெண்ணீற்றாவெண்காடுமேவிய
வந்தமுமுதலுமுடையடிகளல்லரோ. (க)

படையுடைமழுவினர்பாய்புலித்தோ
லுடைவிரிகோவணமுகந்தகொள்கையர்
விடையுடைக்கொடியர்வெண்காடுமேவிய
சடையிடைப்புனல்வைத்தசதுரரல்லரோ. (உ)

பாலொடுநெய்தயிர்பலவுமாடுவர்
தோலொடுநூலிழைதுதைந்தமார்பினர்
மேலவர்பரவுவெண்காடுமேவிய
வாலமதமர்ந்தவெம்மடிகளல்லரோ. (௩)

காழலுஞ்செஞ்சிந்தியுநறுமலர்ப்புனலையும்
தாழைவெண்குருகயலுகுகானலில்

வேழமதுரித்தவெண்காடுமேவிய
யாழினதிசையுடையிறைவரல்லரே. (௪)

பூதங்கள்பலவுடைப்புனிதர்புண்ணிய
ரேதங்கள்பலவிடர்தீர்க்குமெம்மிறை
வேதங்கண்முதல்வர்வெண்காடுமேவிய
பாதங்கடொழநின்றபரமரல்லரே. (௫)

மண்ணவர்விண்ணவர்வணங்கவைகலு
மெண்ணியதேவர்களிறைஞ்சுமெம்மிறை
விண்ணமர்பொழில்கொள்வெண்காடுமேவிய
வண்ணலையடிதொழவல்லலில்லையே. (௬)

நயந்தவர்க்கருள்பலநல்கியிந்திரன்
கயந்திரம்வழிபடநின்றகண்ணுதல
வியந்தவர்பரவுவெண்காடுமேவிய
பயந்தருமழவுடைப்பரமரல்லரே. (௭)

மலையுடனெடுத்தவல்லரக்கனீண்முடி
தலையுடனெரித்தருள்செய்தசங்கரர்
விலையுடைநீறணிவெண்காடுமேவிய
வலையுடைப்புனல்வைத்தவடிகளல்லரே. (௮)

ஏடவிழ்நறுமலரயனுமாலுமாய்த்
தேடவுந்தெரிந்தவர்தேரகிற்கிலர்
வேடமதுடையவெண்காடுமேவிய
வாடலையமர்ந்தவெம்மடிகளல்லரே. (௯)

போதியர்பிண்டியர்பொருத்தமில்லிக
ணீதிகள்சொல்லியுநினையகிற்கிலர்
வேதியர்பரவுவெண்காடுமேவிய
வாதியையடிதொழவல்லலில்லையே (௧0)

நல்லவர்புகலியுண்ஞானசம்பந்தன
செல்வனெஞ்சமொடுறைதிருவெண்காட்டின்மேற்
சொல்லியவருந்தமிழ்பத்தும்வல்லவ
ரல்லலோடருவினையறுதலாணையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

ஆ பதிகம் - ௬௪.

திருக்கொள்ளிக்காடு - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்

நிணம்படுசுடலையினீறுபூசிநின்
றிணங்குவர்பேய்களோடிடுவர்மாநடம்

முணங்கல்வெண்டலைதனினுண்பராயினுங்
குணம்பெரிதுடையர்நங்கொள்ளிக்காடரே. (௧)

ஆற்றனல்லடியிணையலர்கொண்டேத்துவான
சாற்றியவந்தணன்றகுதிகண்டநாண்
மாற்றலனாகிமுன்னடர்த்துவந்தணை
கூற்றினையுதைத்தனர்கொள்ளிக்காடரே. (௨)

அத்தகுவானவர்க்காகமால்விடம்
வைத்தவாமணிபுரைகண்டத்தினுளே
மத்தமும்வன்னியுமலிந்தசென்னிமேற்
கொத்தலர்கொன்றையர்கொள்ளிக்காடரே. (௩)

பாவணமேவுசொன்மாலையிற்பல
நாவணங்கொள்கையினவின்றசெங்கைய
ராவணங்கொண்டெமையாள்வராயினுங்
கோவணங்கொள்கையர்கொள்ளிக்காடரே. (௪)

வாரணிவனமுலைமங்கையாளொடுஞ்
சீரணிதிருவுருத்திகழ்ந்தசென்னியர்
நாரணிசிலைதனானுகலாரெயில்
கூரெரிகொளுவினர்கொள்ளிக்காடரே. (௫)

பஞ்சுதோய்மெல்லடிப்பாவையாளொடு
மஞ்சுதோய்கயிலையுண்மகிழ்வர்நாடொறும்
வெஞ்சினமருப்பொடுவிரையவந்தடை
குஞ்சரமுரித்தனர்கொள்ளிக்காடரே. (௬)

இறையுறுவரிவளையிசைகள்பாடிட
வறையுறுகழலடியார்க்கவாடுவர்
சிறையுறுவிரிபுனல்சென்னியின்மிசைக்
குறையுறுமதியினர்கொள்ளிக்காடரே. (௭)

எடுத்தனன்கைலையையியல்வலியினா
லடர்த்தனர்திருவிரலாலலறிடப்
படுத்தனனென்றவன்பாடல்பாடலுங்
கொடுத்தனர்கொற்றவாள்கொள்ளிக்காடரே. (அ)

தேடினாரயன்முடிமாலுஞ்சேவடி
நாடினாரவரென்றுநணுகிற்றிலர்
பாடினார்பரிவொடுபத்தர்சித்தமுங்
கூடினார்க்கருள்செய்வர்கொள்ளிக்காடரே. (௯)

நாடிநின்றறிவினாணிலிகள்சாக்கிய
ரோடிமுன்னோதியவுரைகண்மெய்யல

பாடுவர்நான்மறைபயின்றமாதொடுங்
கூடுவர்திருவுருக்கொள்ளிக்காடரே. (௧௦)

நற்றவர்காழியுண்ஞானசம்பந்தன்
குற்றமில்பெருமைகொள்ளிக்காடனைச்
சொற்றமிழின்னிசைமாலைசோர்வின்றிக்
கற்றவர்கழலடிகாணவல்லரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர்-அக்கினீசுவரர், தேவியார்-பஞ்சின்மெல்லடியம்மை

## திருவிசயமங்கை - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

மருவமர்குழலுமைபங்கர்வார்சடை
யரவமர்கொள்கையெம்மடிகள்கோயிலாங்
குரவமர்சுரபுன்னைகோங்குவேங்கைகள்
விரவியபொழிலணிவிசயமங்கையே. (௧)

கீதமுன்னிசைதரக்கிளரும்வீணையர்
பூதமுன்னியல்புடைப்புனிதர்பொன்னகர்
கோதனம்வழிபடக்குலவுநான்மறை
வேதியர்தொழுதெழுவிசயமங்கையே. (௨)

அக்கரவரையினரரிவைபாகமாத்
தொக்கநல்விடையுடைச்சோதிதொன்னகர்
தக்கநல்வானவர்தலைவர்நாடொறு
மிக்கவர்தொழுதெழுவிசயமங்கையே. (௩)

தொடைமலியிதழியுந்துன்னெருக்கொடு
புடைமலிசடைமுடியடிகள்பொன்னகர்
படைமலிமழுவினர்பைங்கண்மூரிவெள்
விடைமலிகொடியணலிசயமங்கையே (௪)

தோடமர்காதினன்றுதைந்துநீற்றினை
னேடமர்கோதையோடினிதமர்விடங்
காடமர்மாகரிகதறப்போர்த்ததோர்
வேடமதுடையணல்விசயமங்கையே. (௫)

மைப்புரைகண்ணுமைபங்கன்வண்டழ
லொப்புரையேனியெம்முடையவன்னக
ரப்பொடுமலர்கொடங்கிறைஞ்சிவானவர்
மெய்ப்படவருள்புரிவிசயமங்கையே. (௬)

இரும்பொனின்மலைவில்லினெரிசரத்தினால்
வரும்புரங்களைப்பொடிசெய்தமைந்தனூர்

சுருமபயாகொன்றையுந் தூயமத்தமுஞ
விரும்பியசடையணல்விசயமங்கையே. (எ)

உளங்கையிலிருபதோடொருபதுங்கொடாங்
களந்தரும்வரையெடுத்திடுமரக்கனைத்
தளர்ந்துடனெரிதர வடர்த்ததன்மையன்
விளங்கின்றுயொர்ம்புகுவிசயமங்கையே. (அ)

மண்ணினையுண்டவன் மலரின்மேலுறை
பண்ணவல்கடமக்களப்பரியவத்தனூர்
தண்ணறுஞ்சாந்தமும்பூவுநீர்கொடு
விண்ணவர்தொழுதெழுவிசயமங்கையே (கூ)

கஞ்சியுங்கவளமுணகவணர்கட்டுரை
நஞ்சினுங்கொடியனநமர்கடேர்கிலார்
செஞ்சடைமுடியுடைத்தேவனன்னகர்
விஞ்சையர்தொழுதெழுவிசயமங்கையே. (கo)

விண்ணவர்தொழுதெழுவிசயமங்கையை
நண்ணியபுகலியுண்ஞானசம்பந்தன
பண்ணியசெந்தமிழ்பத்துமவல்லவர்
புண்ணியர்சிவகதிபுகுதறிண்ணமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயா - விசயநாதேசுவரர், தேவியார்-மங்கைநாயகியம்மை.

---

## திருவைகன்மாடக்கோயில் - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்

துளமதியுடைமறிதோன்றுகையின
ரிளமதியணிசடையெந்தையாரிட
முளமதியுடையவர்வைகவோங்கிய
வளமதிதடவியமாடக்கோயிலே. (க)

மெய்யகளிரும்வெண்ணூலர்வேதியர்
மையகண்மலைமகளோடுமவைகிடம்
வையகமகிழ்தரவைகன்மேற்றிசை
செய்யகன்வளவனமுன்செய்தகோயிலே. (உ)

கணியணிமலர்கொடுகாலைமாலையும்
பணியணிபவர்க்கருள்செய்தபான்மையர்
தணியணியுமையொடுதாமுந்தங்கிட
மணியணிகிளர்வைகன்மாடக்கோயிலே. (ங)

கொம்பியல்கோதைமுன்னஞ்சக்குஞ்சரத்
தும்பியதுரிசெய்ததுங்கர்தங்கிடம்

வம்பியலசோலைசூழ்வைகன்மேற்றிசைச்
செம்பியன்கோச்செங்கணான்செய்கோயிலே. (௪)

விடமடைமிடற்றினர்வேதநாவினர்
மடமொழிமலைமகளோடும்வைகிட
மடவனநடைபயில்வைகன்மாநகர்க்
குடதிசைநிலவியமாடக்கோயிலே. (௫)

நிறைபுனல்பிறையொடுநிலவுநீள்சடை
யிறையவருறைவிடமிலங்குமூமெரி
மறையொடுவோர்வுசெய்வாணர்வைகலிற்
றிறையுடைநிறைசெல்வன்செய்தகோயிலே. (௬)

எரிசரம்வரிசிலைவளையவேவிமுன்
றிரிபுரமெரிசெய்தசெல்வர்சேர்விடம்
வரிவளையவர்பயில்வைகன்மேற்றிசை
வருமுகிலணவியமாடக்கோயிலே. (௭)

மலையனவிருபதுதோளினான்வலி
தொலைவுசெய்தருள்செய்தசோதியாரிட
மலர்மலிபொழிலணிவைகல்வாழ்வர்கள்
வலம்வருமலையனமாடக்கோயிலே. (௮)

மாலவனமலரவனேடிமால்கொள
மாலெரியாகியவரதர்வைகிட
மாலைகொடணிமறைவாணர்வைகலின்
மாலனமணியணிமாடக்கோயிலே. (௯)

கடுவுடைவாயினர்கஞ்சிவாயினர்
பிடருரைபேணிலார்பேணுகோயிலா
மடமுடை யவர்பயில்வைகன்மாநகா
வடமலையனையநன்மாடக்கோயிலே. (௧௦)

மைந்தனதிடம்வைகன்மாடக்கோயிலைச்
சந்தமர்பொழிலணிசண்பைஞானசம்
பந்தனதமிழ்கெழுபாடல்பத்திவை
சிந்தைசெயபவர்சிவலோகஞ்சேர்வரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-வைகனாதேசுவரர், தேவியார்-வைகலம்பிகையம்மை.

---

## திருஅம்பர்ப்பெருந்திருக்கோயில்-பண்-காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

எரிதரவனல்கையிலேந்தியெல்லியி
னரிதிரிகானிடைநட்டமாடுவா
ரரிசிலம்பொருபுனலம்பர்மாநகர்க்
குரிசில்செங்கண்ணவன்கோயில்சேர்வரே. (௧)

மையகண்மலைமகள்பாகமாயிருள்
கையதோர்கனலெரிகனலவாடுவ
ராயகண்பொருபுனலம்பர்ச்செய்ம்பியர்
செய்யகணிறைசெய்தகோயில்சேர்வரே (உ)

மறைபுனைபாடலர்சுடர்கைமல்கவோர்
பிறைபுனைசடைமுடிபெயரவாடுவ
ரறைபுனனிறைவயலம்பர்மாநக
ரிறைபுனையெழில்வளரிடமதென்பரே. (௩)

இரவுமல்கிளமதிசூடியீடுயர்
பரவமல்கருமறைபாடியாடுவ
ரரவமோடுயர்செம்மலம்பர்க்கொம்பலா
மரவமல்கெழினகர்மருவிவாழ்வரே. (௪)

சங்கணிகுழையினர்சாமம்பாடுவர்
வெங்கனல்கனறரவீசியாடுவ
ரங்கணிவிழவமரம்பர்மாநகர்ச்
செங்கணிறைசெய்தகோயில்சேர்வரே. (௫)

கழல்வளர்காலினர்சுடர்கைமல்கவோர்
சுழல்வளர்குளிர்புனல்சூடியாடுவ
ரழல்வளர்மறையவரம்பர்ப்பைம்பொழி
னிழல்வளர்நெடுநகரிடமதென்பரே. (௬)

இகலுறுசுடரெரியிலங்கவீசியே
பகலிடம்பலிகொளப்பாடியாடுவ
ரகலிடமலிபுகழம்பர்வம்பவிழ்
புகலிடநெடுநகர்புகுவர்போலுமே. (௭)

எரியனமணிமுடியிலங்கைக்கோன்றன
கரியனதடக்கைகளடர்த்தகாலினா
ரரியவர்வளநகரம்பரின்பொடு
புரியவர்பிரிவிலர்பூதஞ்சூழவே. (௮)

வெறிகிளர்மலர்மிசையவனும்வெங்தொழிற்
பொறிகிளரரவணைப்புல்குசெல்வனு
மறிகிலரரியவரம்பர்செம்பியர்
செறிகழலிறைசெய்தகோயில்சேர்வரே. (௯)

வழிதலைபறிதலையவர்கள்கட்டிய
மொழிதலைபயனெனமொழியல்வம்மினோ
வழிதலைபொருபுனலம்பர்மாநக
ருழிதலையொழிக்துளருமையுந்தாமுமே. (௰)

அழகரையடிகளையம்பர்மேவிய
நிழறிகழ்சடைமுடிநீலகண்டனை
யுமிழ்திரையுலகினிலோதுவீர்கொண்மின்
றமிழ்கெழுவிரகினன்றமிழ்செய்மாலையே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - பிரமபுரிநாதேசுவரர், தேவியார் - பூங்குழனாயகியம்மை.

---

## திருப்பூவணம் - பண் - கௌசிகாந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

மாதமர்மேனியனாகிவண்டொடு
போதமர்பொழிலணிபூவணத்துறை
வேதனைவிரவலரரணமூன்றெய்த
நாதனையடிதொழநன்மையாகுமே. (க)

வாணணிமதிபுல்குசென்னிவண்டொடு
தேனணிபொழிற்றிருப்பூவணத்துறை
யானநல்லருமறையங்கமோதிய
ஞானனையடிதொழநன்மையாகுமே. (௨)

வெந்துயருறுபிணிவினைகடீர்வதோர்
புந்தியர்தொழுதெழுபூவணத்துறை
யந்திவெண்பிறையினோடாறுசூடிய
நந்தியையடிதொழநன்மையாகுமே (௩)

வாசநன்மலர்மலிமார்பில்வெண்பொடிப்
பூசனைப்பொழிறிகழ்பூவணத்துறை
யீசனைமலர்புனைந்தேத்துவார்வினை
நாசனையடிதொழநன்மையாகுமே. (௪)

குருந்தொடுமாதவிகோங்குமல்லிகை
பொருந்தியபொழிற்றிருப்பூவணத்துறை
யருந்திறலவுணர்தமரணமூன்றெய்த
பெருந்தகையடிதொழப்பீடையில்லையே. (௫)

வெறிகமழ்புன்னைபொன்ஞாழல்விம்மிய
பொறியரவணிபொழிற்பூவணத்துறை
கிறிபடுமுடையினன்கேடில்கொள்கைய
னறுமலரடிதொழநன்மையாகுமே. (௬)

பறைமல்குமுழவொடுபாடலாடலன்
பொறைமல்குபொழிலணிபூவணத்துறை
மறைமல்குபாடலன்மாதோர்கூறின
னறைமல்குகழறொழவல்லலில்லையே. (௭)

வரைதனையெடுத்தவல்லரக்கனீண்முடி
விரறனிலடர்த்தவன்வெள்ளைநிற்றினன்
பொருபுனல்புடையணிபூவணந்தனைப்
பரவியவடியவர்க்கில்லைபாவமே. (அ)

நீர்மல்குமலருறைவா னுமா னுமாய்ச்
சீர்மல்குதிருந்தடிசேரகிற்கிலர்
போர்மல்குமழுவினன்மேயபூவண
மேர்மல்குமலர்புனைந்தேத்தலின்பமே. (கூ)

மண்டைகொண்டுழிதருமதியிறேரரும்
குண்டருங்குணம்பலபேசுங்கோலத்தர்
வண்டமாவனாபொழின்மல்குபூவணங்
கண்டவரடிதொழுதேத்தல்கன்மமே. (க0)

புண்ணியர்தொழுதெழுபூவணத்துறை
யண்ணலையடிதொழுதந்தண்காழியு
ணண்ணியவருமறைஞானசம்பந்தன்
பண்ணியதமிழ்சொலப்பறையும்பாவமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருக்கருக்குடி - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

நனவிலுங்கனவிலுநாளுந்தன்னொளி
நினைவிலுமெனக்குவந்தெய்துநின்மலனை
கனைகடலவையகந்தொழுகருக்குடி
யனலெரியாடுமெம்மடிகள் காண்மினே. (க)

வேதியன்விடையுடைவிமலனொன்னலா
மூதெயிலெரியெழமுனிந்தமுக்கணன
காதியல்குழையினன்கருக்குடியம
ரரதியையடிதொழவல்லலில்லையே. (உ)

மஞ்சுறுபொழில்வளமலிகருக்குடி
நஞ்சுறுதிருமிடறுடையநாதனு
ரஞ்சுரும்பார்குழலரிவையஞ்சவே
வெஞ்சுரந்தனில்விளையாடலென்கொலோ. (௩)

ஊனுடைப்பிறவியையறுக்கவுன்னுவீர்
கானிடையாடலான்பயில்கருக்குடிக்
கோனுயர்கோயிலைவணங்கிவைகலும்
வானவர்தொழுகழல்வாழ்த்திவாழ்மினே. (௪)

சூடுவர்சடையிடைக்கங்கைநங்கையைக்
கூடுவருலகிடையையங்கொண்டொலி

பாடுவாரிசைபறைகொட்டநட்டிரு
ளாடுவார்கருக்குடியண்ணல்வண்ணமே. (ரு)

இன்புடையாரிசைவீணைபூணரா
வென்புடையாரொழின்மேனிமேலெரி
முன்புடையார்முகலேத்துமன்பருக்
கன்புடையார்கருக்குடியெமண்ணலே. (சு)

காலமுஞாயிறுந்தீயுமாயவர்
கோலமுமுடியரவணிந்தகொள்கையர்
சீலமுமுடையவர்திருககருக்குடிச்
சாலவுமினிதவருடையதன்மையே. (எ)

எறிகடல்புடைதழுவிலங்கைமன்னனை
முறிபடவரையிடையடர்த்தமூர்த்தியார்
கறைபடுபொழின்மதிதவழ்கருக்குடி
யறிவொடுதொழுமவராள்வர்நன்மையே. (அ)

பூமனுந்திசைமுகன்றானும்பொற்பமர்
வாமனனீகிலாவண்ணமோங்கெரி
யாமெனவுயர்ந்தவனணிசருக்குடி
நாமனனினில்வரவினைதனன்மையே. (கூ)

சாக்கியர்சமண்படுகையர்பொய்ம்மொழி
யாக்கியவுரைகொளேலருந்திருந்நமக்
காக்கியவரனுறையணிகருக்குடிப்
பூக்கமழ்கோயிலேபுடைபட்டுய்ம்மினே. (க0)

கானலின்விளைமலர்விம்முகாழியான்
வானவன்கருக்குடிமைந்தன்றன்னொளி
யானமெய்ஞ்ஞானசம்பந்தன்சொல்லிய
ஊனமின்மொழிவலார்க்குயருமின்பமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - சற்குணலிங்கேசுவரர், தேவியார் - சர்வாலங்கிரதமின்னம்மை.

ஆ பதிகம்-உச.

திருப்பஞ்சாக்கரப்பதிகம் - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

துஞ்சலுந்துஞ்சலிலாதபோழ்தினு
நெஞ்சகநைந்துநினைமினாடொறும்
வஞ்சகமற்றடிவாழ்த்தவந்தகூற்
றஞ்சவுதைத்தனவஞ்செழுத்துமே. (க)

மந்திரநான்மறையாகிவானவர்
சிந்தையுணின்றவர்தம்மையாள்வன

செங்கழலோம்பியசெம்மைவேதியர்க்
கந்தியுண்மந்திரமஞ்செழுத்துமே. (௨)

ஊனிலுயிர்ப்பையொடுக்கியொண்சுடர்
ஞானவிளக்கினையேற்றிநன்புலத்
தேனைவழிதிறந்தேத்துவார்க்கிட
ரானகெடுப்பனவஞ்செழுத்துமே. (௩)

நல்லவர்தீயரெனாதுநச்சினர்
செல்லல்கெடச்சிவமுத்திகாட்டுவ
கொல்லநமன்றமர்கொண்டுபோமிடத்
தல்லல்கெடுப்பனவஞ்செழுத்துமே. (௪)

கொங்கலர்வன்மதன்வாளியைந்தகத்
தங்குளபூதமுமஞ்சவைம்பொழிற்
றங்கரவின்படமஞ்சுந்தம்முடை
யங்கையிலைவிரலஞ்செழுத்துமே (௫)

தும்மலிருமறொடர்ந்தபோழ்தினும்
வெம்மைநரகம்விளைந்தபோழ்தினு
மிம்மைவினையடர்த்தெய்தும்போழ்தினு
மம்மையினுந்துணையஞ்செழுத்துமே. (௬)

வீடுபிறப்பையறுத்துமெச்சினர்
பீடைகெடுப்பனபின்னைநாடொறு
மாடுகொடுப்பனமன்னுமாநட
மாடியுகப்பனவஞ்செழுத்துமே. (௭)

வண்டமரோதிமடந்தைபேணின
பண்டையிராவணன்பாடியுய்ந்தன
தொண்டர்கள்கொண்டுதுதித்தபின்னவர்க்
கண்டமளிப்பனவஞ்செழுத்துமே (௮)

கார்வணனான்முகன்காணுதற்கொணாச்
சீர்வணச்சேவடிசெவ்விநாடொறும்
பேர்வணம்பேசிப்பிதற்றும்பித்தர்கட்
கார்வணமாவனவஞ்செழுத்துமே (௯)

புத்தர்சமண்கழுக்கையர்பொய்கொளாச்
சித்தத்தவர்கடெளிந்துதேறின
வித்தகநீறணிவார்வினைப்பகைக்
கத்திரமாவனவஞ்செழுத்துமே. (௰)

நற்றமிழ்ஞானசம்பந்தனான்மறை
கற்றவன்காழியர்மன்னனுன்னிய

வற்றமிலாமாலையீரைந்துமஞ்செழுத்
துற்றனவல்லவரும்பராவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருவிற்கோலம்-பண்-காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

உருவினாருமையொடுமொன்றிநின்றதோர்
திருவினானவளர்சடைத்திங்கள்கங்கையான்
வெருவிவானவர்தொழவெகுண்டுநோக்கிய
செருவினானுறைவிடந்திருவிற்கோலமே (௧)

சிற்றிடையுமையொருபங்கனங்கையி
லுற்றதோரெரியினனொருசரத்தினால்
வெற்றிகொளவுணர்கள்புரங்கள்வெந்தறச்
செற்றவனுறைவிடந்திருவிற்கோலமே. (௨)

ஐயனல்லதிசயனயன்விண்ணோர்தொழு
மையணிகண்டனார்வண்ணம்வண்ணவான்
பையரவலகுலாள்பாகமாகமுஞ்
செய்யவனுறைவிடந்திருவிற்கோலமே. (௩)

விதைத்தவன்முனிவருக்கறமுன்காலனை
யுதைத்தவனுயிரிழந்துருண்டுவீழ்தரப்
புதைத்தவனெடுங்காபுரங்கண்மூன்றையுஞ்
சிதைத்தவனுறைவிடந்திருவிற்கோலமே (௪)

முந்தினான்மூவருண்முதல்வனாயினான்
கொந்துலாமலர்ப்பொழிற்கூகமேவினா
னந்திவான்பிறையினனடியர்மேல்வினை
சிந்துவானுறைவிடந்திருவிற்கோலமே. (௫)

தொகுத்தவனருமறையங்கமாகமம்
வகுத்தவன்வளர்பொழிற்கூகமேவினான்
மிகுத்தவன்மிகுத்தவர்புரங்கள்வெந்தறச்
செகுத்தவனுறைவிடந்திருவிற்கோலமே. (௬)

விரித்தவனருமறைவிரிசடைவெள்ளந்
தரித்தவன்றரியலர்புரங்களாசற
வெரித்தவனிலங்கையர்கோனிடர்ப்படச்
சிரித்தவனுறைவிடந்திருவிற்கோலமே. (எ-அ)

திரிதருபுரமெரிசெய்தசேவகன்
வரியரவொடுமதிசடையில்வைத்தவ
னரியொடுபிரமனதாற்றலானுருத்
தெரியலனுறைவிடந்திருவிற்கோலமே. (௯)

சீர்மையில்சமணொடுசீவரக்கையர்
நீர்மையிலுரைகள்கொள்ளாதநேசர்க்குப்
பார்மலிபெருஞ்செல்வம்பரிந்துநல்கிடுஞ்
சீர்மையினானிடந்திருவிற்கோலமே. (கய)

கோடல்வெண்பிறையனைக்கூடமேவிய
சேடனைசெழுமதிற்றிருவிற்கோலத்தை
நாடவல்லவந்தமிழ்ஞானசம்பந்தன
பாடல்வல்லார்களுக்கில்லைபாவமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

தொண்டைநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - புராந்தகேசுவரர், தேவியார் - புராந்தரியம்மை.

இந்தத்தலம் - கூவமென வழங்கப்படுகின்றது.

---

## திருக்கழுமலம் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

மண்ணினல்லவண்ணம்வாழலாம்வைகலும்
எண்ணினல்லகதிக்கியாதுமோர்குறைவிலைக்
கண்ணினல்லஃதுறுங்கழுமலவளநகர்ப்
பெண்ணினல்லாளொடும்பெருந்தகையிருந்ததே. (க)

போதையார்பொற்கிண்ணத்தடிசில்பொல்லாதெனத்
தாதையார்முனிவுறத்தானெனையாண்டவன்
காதையார்குழையினன்கழுமலவளநகர்ப்
பேதையாளவளொடும்பெருந்தகையிருந்ததே. (உ)

தொண்டணைசெய்தொழிற்றுயரறுத்துய்யலாம
வண்டணைகொன்றையான்மதுமலர்ச்சடைமுடிக்
கண்டுணைநெற்றியான்கழுமலவளநகர்ப்
பெண்டுணையாகவோர்பெருந்தகையிருந்ததே. (ங)

அயர்வுளோமென்றுநீயசைவொழிநெஞ்சமே
நியர்வளைமுன்கையாணேரிழையவளொடுங்
கயல்வயல்குதிகொளுங்கழுமலவளநகர்ப்
பெயர்பலதுதிசெயப்பெருந்தகையிருந்ததே. (ச)

அடைவிலோமென்றுநீயயர்வொழிநெஞ்சமே
விடையமர்கொடியினான்விண்ணவர்தொழுதெழுங்
கடையுயர்மாடமார்கழுமலவளநகர்ப்
பெடையனநடையொடும்பெருந்தகையிருந்ததே. (ரு)

மற்றொருபற்றிலைநெஞ்சமேமறைபல
கற்றநல்வேதியர்கழுமலவளநகர்ச்

சிற்றிடைப்பேரல்குற்றிருந்திழையவளொடும்
பெற்றெனையாள்விடைப்பெருந்தகையிருந்ததே. (௬)

குறைவளைவதுமொழிகுறைவொழிநெஞ்சமே
நிறைவளைமுன்கையாணேரிழையவளொடும்
கறைவளர்பொழிலணிகழுமலவளநகர்ப்
பிறைவளர்சடைமுடிப்பெருந்தகையிருந்ததே (௭)

அரக்கனாருவரையெடுத்தவனலறிட
நெருக்கினாவிரலினானீடியாழ்பாடவே
கருக்குவாளருள்செய்தானகழுமலவளநகர்ப்
பெருக்குநீரவளொடும்பெருந்தகையிருந்ததே (௮)

நெடியவன்பிரமனுநினைப்பரிதாயவ
ரடியொடுமுடியரியாவழலுருவினன
கடிகமழ்பொழிலணிகழுமலவளநகர்ப்
பிடிநடையவளொடும்பெருந்தகையிருந்ததே. (௯)

தாருறுதட்டுடைச்சமணர்சாக்கியர்கட
மாருறுசொற்களைந்தடியிணையடைந்துய்ம்மின்
காருறுபொழில்வளர்கழுமலவளநகர்ப்
பேரறத்தாளொடும்பெருந்தகையிருந்ததே (௧௦)

கருந்தடந்தேனமல்குகழுமலவளநகர்ப்
பெருந்தடங்கொங்கையோடிருந்தவெம்பிரான்றனை
யருந்தமிழ்ஞானசம்பந்தனசெந்தமிழ்
விரும்புவாரவர்கள்போய்விண்ணுலகாள்வரே (௧௧)

திருச்சிற்றம்பலம்

## திருந்துதேவன்குடி - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

மருந்துவேண்டில்லிவைமந்திரங்களிவை
புரிந்துகேட்கப்படும்புண்ணியங்களிவை
திருந்துதேவன்குடித்தேவர்தேவெய்திய
வருந்தவத்தோர்தொழுமடிகள்வேடங்களே. (௧)

வீதிபோக்காவனவினையைவிட்டுய்வன
வோதியோர்க்கப்படாப்பொருளையோர்விப்பன
தீதிறேவன்குடித்தேவர்தேவெய்திய
வாதியந்தம்மிலாவடிகள்வேடங்களே. (௨)

மானமாக்குவ்வனமாசுநீக்குவ்வன
வானையுள்கச்செலும்வழிகள்காட்டுவ்வன
தேனும்வண்டும்மிசைபாடுந்தேவன்குடி
யானஞ்சாடும்முடியடிகள்வேடங்களே. (௩)

செவிகளார்விப்பனசிந்தையுட்சேர்வன
கவிகள்பாடுவ்வனகண்குளிர்விப்பன
புவிகள்பொங்கப்புனல்பாயும்தேவன்குடி
யவிகளுக்கப்பமெடிகள்வேடங்களே. (சு)

விண்ணுலாவுக்நெறிவீடுகாட்டுங்நெறி
மண்ணுலாவுங்நெறிமயக்கந்தீர்க்குங்நெறி
தெண்ணிலாவெண்மதிதீண்டுதேவன்குடி
யண்ணலானேறுடையடிகள்வேடங்களே. (௭)

பங்கமென்னப்படாபழிகளென்னப்படா
புங்கமென்னப்படாபுகழ்களென்னப்படும்
திங்கடோயும்பொழிறீண்டுதேவன்குடி
யங்கமாறுஞ்சொனவடிகள்வேடங்களே. (அ)

கறைதலொன்றும்மிலைகருதவல்லார்தமக்
குறையிலூனம்மிலையுலகினின்மன்னுவர்
திரைகள்பொங்கப்புனல்பாயுந்தேவன்குடி
யறையில்வெண்கோவணத்தடிகள்வேடங்களே. (௯)

உலகமுட்குந்திறலுடையரக்கன்வலி
விலகுபூதககணமவெருட்டும்வேடத்தினன
றிலகமாருமபொழில்சூழ்ந்ததேவன்குடி
யலர்தயங்கும்முடியடிகள்வேடங்களே. (௰)

துளக்கமில்லாதனதூயதோற்றத்தன
விளக்கமாக்குவ்வனவெறிவணடாரும்பொழி
றிளக்குந்தேவன்குடித்திசைமுகனொடுமா
லளக்கவொண்ணுவண்ணத்தடிகள்வேடங்களே. (கூ)

செருமருதணடுவர்த்தேரமணுதர்க
ளுருமருவப்படாத்தொழும்பர்தமுரைகொளே
திருமருவும்பொய்கைசூழ்ந்ததேவன்குடி
யருமருந்தாவனவடிகள்வேடங்களே. (௧௰)

சேடர்தேவன்குடித்தேவர்தேவன்றனை
மாடமோங்கும்பொழின்மல்குதண்காழியா
னுடவல்லதமிழ்ஞானசம்பந்தனற்
பாடல்பத்தும்வல்லார்க்கில்லையாம்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - கர்க்கடகேசுவரர், தேவியார் - அருமருந்தாயகியம்மை.

## திருக்கானப்பேர் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

பிடியெலாம்பின்செலப்பெருங்கைமாமலர்தழீஇ
விடியலேதடமூழ்கிவிதிதியினால்வழிபடுங்

கடியுலாம்பூம்பொழிற்கானப்பேரண்ணலின்
னடியலாலடைசரணுடையரோவடியரே. (௧)

நுண்ணிடைப்பேரல்குனூபுரமெல்லடிப்
பெண்ணினல்லாளையோர்பாகமாப்பேணினான்
கண்ணுடைநெற்றியான்கருதியகானப்பேர்
விண்ணிடைவேட்கையார்விரும்புதல்கருமமே. (௨)

வாவிவாய்த்தங்கியதுண்சிறைவண்டினங்
காவிவாய்ப்பண்செயுங்கானப்பேரண்ணலை
நாவிவாய்ச்சாந்துளும்பூவுளுஞானநீ
தூவிவாய்ப்பெய்துநின்றூட்டுவார்தொண்டரே. (௩)

நிறையுடைநெஞ்சுளுநீருளும்பூவுளும்
பறையுடைமுழவுளும்பலியுளும்பாட்டுளும்
கறையுடைமிடற்றண்ணல்கருதியகானப்பேர்
குறையுடையவர்க்கலாற்களைகிலார்குற்றமே. (௪)

ஏனப்பூண்மார்பின்மேலென்புபூண்டீறிலா
ஞானப்பேராயிரம்பேரினானண்ணிய
கானப்பேரூர்தொழுங்காதலார்தீதிலர்
வானப்பேரூர்புகும்வண்ணமும்வல்லரே. (௫)

பள்ளமேபடர்சடைப்பாற்படப்பாய்ந்தநீர்
வெள்ளமேதாங்கினான்வெண்மதிசூடினான்
கள்ளமேசெய்கிலார்கருதியகானப்பே
ருள்ளமேகோயிலாவுள்குமென்னுள்ளமே. (௬)

மானமாமடப்பிடிவன்கையாலலகிடக்
கானமாகடகரிவழிபடுங்கானப்பே
ரூனமாமுடம்பினிலுறுபிணிகெடவெண்ணின்
ஞானமாமலர்கொடுநணுகுதனன்மையே. (௭)

வாளினான்வேலினான்மால்வரையெடுத்ததிண்
டோளினானெடுமுடிதொலையவேயூன்றிய
தாளினான்கானப்பேர்தலையினால்வணங்குவார்
நாளுநாளுயர்வதோர்நன்மையைப்பெறுவரே. (௮)

சிலையினான்முப்புரந்தீயெழச்செற்றவ
னிலையிலாவிருவர்நிலைமைகண்டோங்கினான்
கலையினார்புறவிற்றேன்கமழ்தருகானப்பேர்
தலையினால்வணங்குவார்தவமுடையார்களே. (௯)

உறித்தலைச்சுரையொடுகுண்டிகைபிடித்துச்சி
பறித்தலும்போர்த்தலும்பயனிலைப்பாவிகாண்
மறித்தலைமடப்பிடிவளரிளங்கொழுங்கொடி
கறித்தெழுகானப்பேர்கைதொழல்கருமமே. (௧௦)

காட்டகத்தாடலான்கருதியகானப்பேர்
கோட்டகத்தில்வரால்குதிகொளுங்காழியா
னாட்டகத்தோங்குசீர்ஞானசம்பந்தன்
பாட்டகத்திவைவலார்க்கில்லையாம்பாவமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

பாண்டிநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர்-காளையீசுவரர், தேவியார்-மகமாயியம்மை.
இத்தலம்-காளையார்கோவிலென்று வழங்கப்படுகின்றது.

## திருச்சக்கரப்பள்ளி - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

படையினார்வெண்மழுப்பாய்புலித்தோலரை
யுடையினாருமையொருகூறனாரூர்வதோர்
விடையினார்வெண்பொடிப்பூசியார்விரிபுனற்
சடையினாருறைவிடஞ்சக்கரப்பள்ளியே. (க)

பாடினாரருமறைபனிமதிசடையிசைச்
சூடினார்படுதலைதுன்னெருக்கதனொடு
நாடினாரிடுபலிநண்ணியோர்காலனைச்
சாடினார்வளநகர்சக்கரப்பள்ளியே. (உ)

மின்னினார்சடைமிசைவிரிகதிர்மதியமும்
பொன்னினார்கொன்றையும்பொறிகிளரரவமும்
துன்னினாருலகெலாந்தொழுதெழநான்மறை
தன்னினார்வளநகர்சக்கரப்பள்ளியே. (௩)

நலமலிகொள்கையார்நான்மறைப்பாடலார்
வலமலிமழுவினார்மகிழுமூர்வண்டறை
மலர்மலிசலமொடுவந்திழிகாவிரி
சலசலமணிகொழிசக்கரப்பள்ளியே. (௪)

வெந்தவெண்பொடியணிவேதியர்விரிபுன
லந்தியிலணிமலைமங்கையோடமருமூர்
கந்தமார்மலரொடுகாரகில்பன்மணி
சந்திரோடணைபுனற்சக்கரப்பள்ளியே. (௫)

பாங்கினான்முப்புரம்பாழ்படவெஞ்சிலை
வாங்கினார்வானவர்தானவர்வணங்கிட
வோங்கினாருண்மையொருகூறுடைமாலிடு
றுங்கினாருறைவிடஞ்சக்கரப்பள்ளியே. (௬)

பாரினார்தொழுதெழுபரவுபல்லாயிரம்
பேரினார்பெண்ணொருகூறனார்பேரொலி
நீரினார்சடைமுடிநிறைமலர்க்கொன்றையந்
தாரினார்வளநகர்சக்கரப்பள்ளியே. (௭)

முதிரிலாவோர்பிறைசூடினர்முன்னநா
ளெதிரிலாமுப்புரமெரிசெய்தார்வரைதனு
லதிரிலாவல்லரக்கன்வலிவாட்டிய
சதிரினர்வளநகர்சக்கரப்பள்ளியே. (அ)

துணிபடுகோவணஞ்சுண்ணவெண்பொடியினர்
பணிபடுமார்பினர்பணிமதிச்சடையினர்
மணிவணனவனொடுமலர்மிசையானையுந்
தணிவினர்வளநகர்சக்கரப்பள்ளியே. (கூ)

உடம்புபோர்சீவரருண்டொழிற்சமணர்கள்
விடம்படுமுரையவைமெய்யலவிரிபுனல்
வடம்படுமலர்கொடுவணங்குமின்வைகலுந்
தடம்புனல்சூழ்தருசக்கரப்பள்ளியே. (க0)

தண்வயல்புடையணிசக்கரப்பள்ளியெங்
கண்ணுதலவனடிகழுமலவளநகர்
நண்ணியசீர்தமிழ்ஞானசம்பந்தன்சொற்
பண்ணியவிவைசொலப்பறையுமெய்ப்பாவமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - ஆலந்துறையீசுவரர், தேவியார் - அல்லியங்கோதையம்மை

சக்கரப்பள்ளியினைச்சார்ந்த அல்லியங்கோதை, சொற்கிரக்குமாலந்துறையானே என்னுஞ் சிவநாமப்பஃறொடையானுமுணர்க.

---

## திருமழபாடி - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

காலையார்வண்டினங்கிண்டியகார்நறுஞ்
சோலையார்பைங்கிளிசொற்பொருள்பயிலவே
வேலையார்விடமணிவேதியன்விரும்பிட
மாலையார்மதிதவழ்மாமழபாடியே. (க)

கறையணிமிடறுடைக்கண்ணுதனண்ணிய
பிறையணிசெஞ்சடைப்பிஞ்ஞகன்பேணுமூர்
துறையணிகுருகினந்தாமலர்துதையவே
மறையணிகலிநின்மாமழபாடியே. (உ)

அந்தணர்வேள்வியுமருமறைத்துழனியுஞ்
செந்தமிழ்க்கீதமுஞ்சீரினால்வளர்தரப்
பந்தணைமெல்விரலாளொடும்பயில்விட
மந்தம்வந்துலவுசீர்மாமழபாடியே. (ங)

அத்தியினுரிதனையழகுறப்போர்த்தவன்
முத்தியாய்மூவரின்முதல்வனாயின்றவன்

பத்தியாற்பாடிடப்பரிந்தவர்க்கருள்செயு
மத்தனுறைவிடமணிமழபாடியே. (௪)

கங்கையார்சடையிடைக்கதிர்மதியணிந்தவன்
வெங்கண்வாளரவுடைவேதியன்நீதிலாச்
செங்கயற்கண்ணுமையாளொடுஞ்சேர்விடம்
மங்கைமார்நடம்பயின்மாமழபாடியே. (௫)

மூலனாராருயிர்பாங்கினுலுணவருங்
காலனாருயிர்செகக்காலினாற்சாடினான்
சேலினார்கண்ணினாளொடுஞ்சேர்விடம்
மாலினார்வழிபடுமாமழபாடியே (௬)

விண்ணிலாரிமையவர்மெய்ம்மகிழ்ந்தேத்தவே
யெண்ணிலார்முப்புரமெரியுணநகைசெய்தார்
கண்ணினாற்காமனைக்கனலெழக்காய்ந்தவெம்
மண்ணலாருறைவிடமணிமழபாடியே (௭)

கரதினாற்கயிலையையெடுத்தகாரரக்கன
சிரத்தினையூன்றலுஞ்சிவனடிசரணென
விரத்தினானைந்நரம்பெடுத்திசைபாடலும
வரத்தினனமருவிடமாமழபாடியே. (௮)

ஏடுலாமலாமிசையயனெழின்மாலுமாய்
நாடினார்க்கரியசீரானுறைவிடம்
பாடலாமபெண்ணையினபழம்விழப்பைம்பொழின்
மாடெலாமல்குசீர்மாமழபாடியே. (௯)

உறிபிடித்தூத்தைவாய்ச்சமணொடுசாக்கியர்
நெறிபிடித்தறிவிலாநீர்சொற்கொள்ளன்மின்
பொறிபிடித்தரவினம்பூணெனக்கொண்டுமான
மறிபிடித்தானிடமாமழபாடியே. (௧௦)

ஞாலத்தாராதிநாளினொடொருந்
சீலத்தானமேவியதிருமழபாடியை
ஞாலத்தானமிக்கசீர்ஞானசம்பந்தன்சொற்
கோலத்தாற்பாடுவார்குற்றமற்றார்களே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## மேலைத்திருக்காட்டுப்பள்ளி - பண்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்

வாருமன்னும்முலைமங்கையோர்பங்கினன்
ஊருமன்னும்பலியுண்பதும்வெண்டலை
காருமன்னும்பொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளி
நீருமன்னுஞ்சடைநின்மலன்றன்சீர்மையே. (௧)

திருத்தனார்நீள்சடைமதியொடொம்பணி
கருத்தனார்கடிபொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளி
யருத்தனாரழகமர்மங்கையோர்பாகமாப்
பொருத்தனார்கழலிணைபோற்றுதல்பொருளதே. (௨)

பண்ணினாரருமறைபாடினார்நெற்றியோர்
கண்ணினார்கடிபொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளி
விண்ணினார்விரிபுனன்மேவினார்சடைமுடி
யண்ணலாரெம்மையாளுடையவெம்மடிகளே. (௩)

பணங்கொளாகம்மணைக்கார்ப்பதுபலபலி
யுணங்கலோடுண்கலனுறைவதுகாட்டிடை
கணங்கள்கூடித்தொழுதேத்துகாட்டுப்பள்ளி
நிணங்கொள்சூலப்படைநிமலர்தந்நீர்மையே (௪)

வரையுலாஞ்சந்தொடுவந்திழிகாவிரிக்
கரையுலாமிடுமணல்சூழ்ந்தகாட்டுப்பள்ளித்
திரையுலாங்கங்கையுந்திங்களுஞ்சூடியங்
கரையுலாங்கோவணத்தடிகள்வேடங்களே (௫)

வேதனார்வெண்மழுவேந்தினாரங்கமுன்
னோதினாருமையொருகூறனாரொண்குழைக்
காதினார்கடிபொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளி
நாதனார்திருவடிநாளுநின்றேத்துமே (௬)

மையினார்மிடற்றனார்மான்மழுவேந்திய
கையினார்கடிபொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளித்
தையலோர்பாகமாத்தண்மதிசூடிய
ஐயனாரடிதொழவல்லலொன்றில்லையே. (௭)

சிலைதனான்முப்புரஞ்செற்றவன்கயிலையை
மலைதனாலவல்லரக்கன்வலிவாட்டினான்
கலைதனார்புறவணிசூழ்ந்தகாட்டுப்பள்ளி
தலைதனால்வணங்கிடத்தவமதுவாகுமே. (௮)

செங்கண்மாறிகழ்தருமலருறைதிசைமுகன்
றங்கையாற்றொழுதெழத்தழலுருவாயினான்
கங்கையார்சடையினன்கருதுகாட்டுப்பள்ளி
யங்கையாற்றொழுமவர்க்கல்லலொன்றில்லையே. (௯)

போதியார்பிண்டியாரென்றவப்பொய்யர்கள்
வாதினாலுரையவை[illegible]
காரினார்கடிபொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளி
யேரினார்தொழுதெழவின்பம்வந்தெய்துமே. (௧௦)

பொருபுனல்புடையணிபுறவநன்னகர்மன்னன்
னருமறையவைவல்லஞானசம்பந்தன்சொற்

கருமணிமிடற்றினன்கருதுகாட்டுப்பள்ளி
பரவியதமிழ்சொலப்பறையுமெய்ப்பாவமே (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - தீயாடியப்பர், தேவியார் - வார்கொண்டமுலையம்மை.

## திருஅரதைப்பெரும்பாழி - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

பைத்தபாம்போடரைக்கோவணம்பாய்புலி
மொய்த்தபேய்கண்முழக்கமுதுகாட்டிடை
நித்தமாகநடமாடிவெண்ணீறணி
பித்தர்கோயில்லரதைப்பெரும்பாழியே. (க)

கயலசேலகருங்கண்ணியர்நாடொறும்
பயலைகொள்ளப்பலிதேர்ந்துழல்பான்மையா
ரியலைவானோர்நினைந்தோர்களுக்கெண்ணரும்
பெயரர்கோயில்லரதைப்பெரும்பாழியே. (உ)

கோடல்சாலவ்வுடையார்கொலையானையின்
மூடல்சாலவ்வுடையார்முளிகானிடை
யாடல்சாலவ்வுடையாரழகாகிய
பீடர்கோயில்லரதைப்பெரும்பாழியே. (ங)

மண்ணர்நீராரழலார்மலிகாலினர்
விண்ணர்வேதம்விரித்தோதுவார்மெய்ப்பொருள்
பண்ணர்பாடலுடையாரொருபாகமும்
பெண்ணர்கோயில்லரதைப்பெரும்பாழியே. (ச)

மறையர்வாயின்மொழிமானொடுவெண்மழுக்
கறைகொள்சூலம்முடைக்கையர்காரார்தருங்
நறைகொள்கொன்றையந்தார்தருஞ்சென்னிமேற்
பிறையர்கோயில்லரதைப்பெரும்பாழியே. (ரு)

புற்றரவம்புலித்தோலரைக்கோவணந்
தற்றிரவின்னடமாடுவர்தாழ்தரு
சுற்றமர்பாரிடந்தொல்கொடியின்மிசைப்
பெற்றர்கோயில்லரதைப்பெரும்பாழியே (சா)

துணையிறுத்தசுரிசங்கமர்வெண்பொடி
யிணையிலேற்றையுகந்தேறுவரும்மெரி
கணையினுன்முப்புரஞ்செற்றவர்கையினிற்
பிணையர்கோயில்லரதைப்பெரும்பாழியே. (எ)

சரிவிலாவல்லரக்கன்றடந்தோளை
நெரிவிலாரவ்வடர்த்தார்நெறிமென்குழ

லரிவைபாகமமர்ந்தாரடியார்தொழும்
பிரிவில்கோயிலரதைப்பெரும்பாழியே. (அ)

வரியராவென்பணிமார்பினர்நீர்மல்கு
மெரியராவுஞ்சடைமேற்பிறையேற்றவர்
கரியமாலோடயன்காண்பரியாகிய
பெரியர்கோயிலரதைப்பெரும்பாழியே. (கூ)

நாணிலாதசமண்சாக்கியர்நாடொறு
மேணிலாதம்மொழியவ்வெழிலாயவர்
சேணுலாமும்மதிறீயெழச்செற்றவர்
பேணுகோயிலரதைப்பெரும்பாழியே. (௰)

நீரினார்புன்சடைநிமலனுக்கிடமெனப்
பாரினார்பரவரதைப்பெரும்பாழியைச்
சீரினார்காழியுண்ஞானசம்பந்தன்செய்
யேரினார்தமிழ்வல்லார்க்கில்லையாம்பாவமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-ப்ரதேசுவரர், தேவியார் - அலங்காரநாயகியம்மை.

---

## திருமயேந்திரப்பள்ளி - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

திரைதருபவளமுஞ்சீர்திகழ்வயிரமுங்
கரைதருமகிலொடுகனவளைபுகுதரும்
வரைவிலாலெயிலெய்தமயேந்திரப்பள்ளியு
ளரவரையழகனையடியிணைபணிமினே. (க)

கொண்டல்சேர்கோபுரங்கோலமார்மாளிகை
கண்டலுங்கைதையுங்கமலமார்வாவியும்
வண்டுலாம்பொழிலணிமயேந்திரப்பள்ளியிற்
செண்டுசேர்விடையினான்றிருந்தடிபணிமினே. (உ)

கோங்கிளவேங்கையுங்கொழுமலர்ப்புன்னையுந்
தாங்குதேன்கொன்றையுந்தகுமலர்க்குரவமு
யாங்கரும்பும்வயன்மயேந்திரப்பள்ளியு
ளாங்கிருந்தவன்கழலடியிணைபணிமினே. (ங)

வங்கமார்சேணுயர்வருகுறியான்மிகு
சங்கமாரொலியகிற்றருபுகைகமழ்தரும்
மங்கையோர்பங்கினன்மயேந்திரப்பள்ளியு
ளெங்கணாயகன்றனிணையடிபணிமினே. (ச)

நித்திலத்தொகைபலநிரைதருமலரெனச்
சித்திரப்புணரிசேர்த்திடத்திகழ்ந்திருந்தவன்

மைத்திகழ்கண்டனைமயேந்திரப்பள்ளியுட்
கைத்தலமழுவனைக்கண்டடிபணிமினே (௫)

சந்திரன்கதிரவன்றகுபுகழயனொடு
மிந்திரன்வழிபடவிருந்தவெம்மிறையவன்
மந்திரமறைவளர்மயேந்திரப்பள்ளியுள்
ளந்தமில்லழகனையடிபணிந்துய்ம்மினே (௬)

சடைமுடிமுனிவர்கள்சமைவொடும்வழிபட
நடநவில்புரிவினனறவணிமலரொடு
படர்சடைமதியினன்மயேந்திரப்பள்ளியுள்
ளடல்விடையுடையவனடிபணிந்துய்ம்மினே. (௭)

சிரமொருபதுமுடைச்செருவலியரக்கனைக்
கரமிருபதுமிறக்கவரையடர்த்தவன்
மரவமர்பூம்பொழின்மயேந்திரப்பள்ளியுள
ளரவமர்சடையனையடிபணிந்துய்ம்மினே. (௮)

நாகணைத்துயில்பவன்னலமிகுமலரவ
னாகணைந்தவர்கழலணையவும்பெறுகிலா
மாகணைந்தலர்பொழின்மயேந்திரப்பள்ளியுள்
யோகணைந்தவனகழலுணர்ந்திருந்துய்ம்மினே. (௯)

உடைதுறந்தவர்களுமுடைதுவருடையரும்
படுபழியுடையவர்பகர்வனவிடுமினீர்
மடைவளர்வயலணிமயேந்திரப்பள்ளியு
ளிடமுடையீசனையிணையடிபணிமினே. (௧௦)

வம்புலாம்பொழிலணிமயேந்திரப்பள்ளியு
ணம்பனார்கழலடிஞானசம்பந்தன்சொ
லம்பரமிதுவெனாவினைவில்பவ
ரும்பரரெதிர்கொளவுயர்பதியணைவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - திருமேனியழகர், தேவியார் - வடிவாம்பிகை.

[illegible] பதிகம்-௫௧.

## திருவேடகம் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

வன்னியுமத்தமுமதிபொதிசடையினன்
பொன்னியறிருவடிபுதுமலரவைகொடு
மன்னியமறையவர்வழிபடவடியவ
ரின்னிசைப்பாடலரேடகத்தொருவனே. (௧)

கொடிநெடுமாளிகைக்கோபுரங்குளிர்மதி
வடிவுறவமைதரமருவியவேடகத்
தடிகளையடிபணிந்தரற்றுமினன்பினா
லிடிபடும்வினைகள்போயில்லையதாகுமே. (௨)

குண்டலந்திகழ்தருகாதுடைக்குழகனை
வண்டலம்பும்மலர்க்கொன்றைவான்மதியணி
செண்டலம்பும்விடைச்சேடனூரேடகங்
கண்டுகைதொழுதலுங்கவலைநோயகலுமே. (௩)

ஏலமார்தருகுழலேழையோடெழில்பெறுங்
கோலமார்தருவிடைக்குழகனுறைவிடஞ்
சாலமாதவிகளுஞ்சந்தனஞ்சண்பகஞ்
சீலமாரேடகஞ்சேர்தலாஞ்செல்வமே. (௪)

வரியணிநயனிநன்மலைமகண்மறுகிடக்
கரியினையுரிசெய்தகறையணிமிடறினன்
பெரியவன்பெண்ணினோடாணலியாகிய
வெரியவனுறைவிடமேடகக்கோயிலே. (௫)

பொய்கையின்பொழிலுறுபுதுமலர்த்தென்றலார்
வைகையின்வடகரைமருவியவேடகத்
தையனையடிபணிந்தரற்றுமின்னடர்தரு
வெய்யவன்பிணிகெடவீடெளிதாகுமே. (௬-௭)

தடவரையெடுத்தவனருக்கிறத்தோளடர்ப்
படவிரலூன்றியேபரிந்தவற்கருள்செய்தான்
மடவரலெருக்கொடுவன்னியுமத்தமு
மிடமுடைச்சடையினனேடகத்திறைவனே. (௮)

பொன்னனுமாமணிகளும்பொருதிரைச்சந்தி
றன்னனுளாரவைகையின்கரைதனிற்சமைவுற
வன்னமாமயனுமாலடிமுடிதேடியு
மின்னவாறெனவொணாவேடகத்தொருவனே. (௯)

குண்டிகைக்கையினர்குணமிலாத்தேரர்கள்
பண்டியைப்பெருக்கிடுமபளகர்கள்பணிகிலர்
வண்டிரைக்கும்மலர்க்கொன்றையும்வன்னியும்
மிண்டுசேர்க்குஞ்சடையேடகத்தெந்தையே. (௧௦)

கோடுசந்தனமகில்கொண்டிழிவைகைநீ
ரோடுசென்றணைதருமேடகத்தொருவனை
நாடுதென்புகலியுண்ஞானசம்பந்தன்
பாடல்பத்திவைவல்லார்க்கில்லையாம்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருவுசாத்தானம் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்

நீரிடைத் துயின்றவன் றம்பிநீள் சாம்புவன்
பேருடைச் சுக்கிரீ வன்னனு மன்றொழக்
காருடை நஞ்சுண்டு காத்தருள் செய்தவெஞ்
சீருடைச் சேடர்வாழ் திருவுசாத் தானமே. (௧)

கொல்லையே றுடையவன் கோவண வாடையன்
பல்லையார் படுதலைப் பலிகொளும் பரமனார்
முல்லையார் புறவணி முதுபதி நறைகமழ்
இல்லையா னுறைவிடந் திருவுசாத் தானமே. (௨)

தாமலார் போலவே தக்கனார் வேள்வியை
ஊமனார் தங்கனா வாக்கினா னொருநொடிக்
காமனா ருடல்கெடக் காய்ந்தவெங் கண்ணுதல்
சேமமா வுறைவிடந் திருவுசாத் தானமே. (௩)

மறிதரு கரத்தினான் மால்விடை யேறிபான்
குறிதரு கோலநங் குணத்தினா னடிதொழ
நெறிதரு வேதியர் நித்தலு நியமஞ்செய்
செறிதரு பொழிலணி திருவுசாத் தானமே. (௪-௫-௬)

பண்டிரைத் தயனுமா லும்பல பத்தர்கள்
தொண்டிரைத் தும்மலர் தூவித்தோத் திரஞ்சொலக்
கொண்டிரைக் கொடியொடுங் குருகினம் வினாங்
தெண்டிரைக் கழனிசூழ் திருவுசாத் தானமே. (௭)

மடவர லுங்கினை மலைதனை மதியாது
சடசட வெடுத்தவன் றலைபத்து நெரிதர
வடா தரலூன்றியங் கேபவஞ் சருள்செய்தான்
திடமென வுறைவிடந் திருவுசாத் தானமே. (௮)

ஆணலார் பெண்ணலா ரயனொடு மாலுக்குங்
காணொணா வண்ணத்தான் கருதுவார் மனத்துளான்
பேணுவார் பிணியொடும் பிறப்பறுப் பானிடஞ்
சேணுலா மாளிகைத் திருவுசாத் தானமே. (௯)

கானமார் வாழ்க்கையான் காரமண் டேரர்சொல்
ஊனமாக் கொண்டுநீ ருய்யவெண் ணில்
வானமார் மதிலணி மாளிகை வளர்பொழிற்
றேனமா மதியஞ்சேர் திருவுசாத் தானமே. (௧௦)

வரைதிரிந் திழியுநீர் வளவயற் புகலிமன்
திரைதிரிந் தெறிகடற் றிருவுசாத் தானனை
உரைதெரிந் துணருஞ்சம் பந்தனொண் டமிழ்வல்லார்
நரைதிரை யின்றியே நன்னெறி சேர்வரே. (௧௧)

சோழநாட்டிலுள்ளது. திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - மந்திரபுரீசுவரர்; தேவியார் - பெரியநாயகியம்மை.

## திருமுதுகுன்றம் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

வண்ணமாமலர்கொடுவானவர்வழிபட
வண்ணலாராயிழையாளொடுமமர்விடம்
விண்ணின்மாமழைபொழிந்திழியவெள்ளருவிசேர்
திண்ணிலார்புறவணிதிருமுதுகுன்றமே. (௧)

வெறியுலாங்கொன்றையந்தாரினான்மேதகு
பொறியுலாமரவசைத்தாடியோர்புண்ணியன்
மறியுலாங்கையினான்மங்கையோடமர்விடஞ்
செறியுளார்புறவணிதிருமுதுகுன்றமே. (௨)

ஏறனார்விடைமிசையிமையவர்தொழவுமை
கூறனார்கொல்புலித்தோலினார்மேனிமே
னீறனார்நிறைபுனற்சடையனார்நிகழ்விடந்
தேறலார்பொழிலணிதிருமுதுகுன்றமே. (௩)

உரையினாருறுபொருளாயினானுமையொடும்
விரையினார்கொன்றைசேர்சடையினான்மேவிடம்
நுரையினாரொலியெனவோங்குமுத்தாறுமெய்த்
திரையினாலெறிபுனற்றிருமுதுகுன்றமே. (௪)

கடியவாயினகுரற்களிற்றினைப்பிளிறவோ
ரிடியவெங்குரலினோடாளிசென்றிடுநெறி
வடியவாய்மழுவினன்மங்கையோடமர்விடஞ்
செடியதார்புறவணிதிருமுதுகுன்றமே. (௫)

கானமார்கரியினீருரிவையார்பெரியதோர்
வானமார்மதியினோடரவர்தாமருவிட
மூனமாயினபிணியவைகெடுத்துமையொடுந்
தேனமார்பொழிலணிதிருமுதுகுன்றமே. (௬)

மஞ்சர்தாமலர்கொடுவானவர்வணங்கிட
வெஞ்சொலார்வேடரோடாடவர்விரும்பவே
யஞ்சொலாளுமையொடுமமர்விடமணிகலைச்
செஞ்சொலார்பயிறருந்திருமுதுகுன்றமே. (௭)

காரினாரமர்தருங்கயிலைநன்மலையினை
யேரினார்முடியிராவணனெடுத்தானிற
வாரினார்முலையொடுமன்னினார்மருவிடஞ்
சீரினார்திகழ்தருந்திருமுதுகுன்றமே. (௮)

ஆடினார்கானகத்தருமறையின்பொருள்
பாடினார்பலபுகழ்ப்பரமனாரிணையடி
யேடினார்மலர்மிசையயனுமாலிருவருந்
தேடினாரறிவொணார்திருமுதுகுன்றமே. (௯)

மாசுமெய்தூசுகொண்டுழல்சமண்சாக்கியர்
பேசுமெய்யுளவல்லபேணுவீர்காணுமின்
வாசமார்கருபொழில்வண்டினமிசைசெயுந்
தேசமார்புகழ்மிகுந்திருமுதுகுன்றமே (௧௦)

திண்ணினார்புறவணிதிருமுதுகுன்றனை
நண்ணினான்காழியுண்ஞானசம்பந்தன்சொல்
லெண்ணினானீரைந்துமாலையுமியலுமாப்
பண்ணினாற்பாடுவார்க்கில்லையாம்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருத்தென்குடித்திட்டை - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்

முன்னைநான்மறையவைமுறைமுறைகுறையொடுந்
தன்னதாடொழுதெழநின்றவன்றன்னிட
மன்னுமாகாவிரிவந்தடிவருடநற்
செந்நெலார்வளவயற்றென்குடித்திட்டையே (௧)

மகரமாடுங்கொடிமன்மதவேளை
நிகரலாகாநெருப்பெழவிழித்தானிடம்
பகரபாணிக்கலம்பன்மகரத்தொடுஞ்
சிகரமாளிகைதொகுந்தென்குடித்திட்டையே. (௨)

கருவினாலன்றியேகருவெலாமாயவ
னுருவினாலன்றியேயுருவுசெய்தானிடம்
பருவநாள்விழவொடும்பாடலோடாடலுந்
திருவினான்மிகுபுகழ்த்தென்குடித்திட்டையே. (௩)

உண்ணிலாவாவியாயோங்குதன்றன்மையை
விண்ணிலாரறிகிலாவேதவேதாந்தனூ
ரெண்ணிலாவொளிமணிக்கனகமாளிகையிளந்
தெண்ணிலாவிரிதருந்தென்குடித்திட்டையே. (௪)

வருந்திவானோர்கள்வந்தடையமாநஞ்சுதா
னருந்தியாரமுதவர்க்கருள்செய்தான்மருவுமூர்
செருந்திபூமாதவிப்பந்தல்வண்செண்பகந்
திருந்துநீள்வளர்பொழிற்றென்குடித்திட்டையே. (௫)

ஊறினாரோசையுள்ளொன்றினாரொன்றிமால்
கூறினாரமர்தருங்குமரவேடாதையூ
ராறினார்பொய்யகத்தையுணர்வெய்திமெய்
தேறினார்வழிபடுந்தென்குடித்திட்டையே. (௬)

கானலைக்கும்மவன்கண்ணிடந்தப்பநீள்
வானலைக்குந்தவத்தேவுவைத்தானிடந்

தானலர்புள்ளுமார்தாமரைத்தண்டுறை
தேனலைக்கும்வயற்றென்குடித்திட்டையே. (எ)

மாவலோடும்பொருதிறலவாளரக்கன்னெரிந்
தோலிடும்படிவிரலொன்றுவைத்தானிடங்
காலெலாந்தங்கனகழுக்குடன்மிரக்கயல்வரால்
சேலொடும்பாய்வயற்றென்குடித்திட்டையே. (அ)

நாரணன்றன்னொடுநான்முகன்றானுமாய்க்
காரணனடிமுடிகாணவொண்ணானிடம்
ஆரணங்கொண்டுபூசுரர்கள்வந்தடிதொழச்
சீரணங்கும்வயற்றென்குடித்திட்டையே (௯)

குண்டிகைக்கையுடைக்குண்டரும்புத்தரும்
பண்டுமோர்தேசமிடம்பற்றுவிட்டோர்தொழும்
வண்டுலாக்கும்பொழிற்றண்டலைக்கொண்டலார்
தெண்டிரைத்தண்புனற்றென்குடித்திட்டையே (௧0)

தேனெரீசோலைசூழ்தென்குடித்திட்டையைக்
கானலார்கமழ்பொழில்சூழ்தருங்காழியுண்
ஞானமார்ஞானசம்பந்தனசெந்தமிழ்
பானமார்மொழிவலார்க்கில்லையாம்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது

சுவாமிபெயர் - பசுபதீசுவரர், தேவியார் - உலகநாயகியம்மை.

---

## திருக்காளத்தி - பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

சந்தமாரகிலொடுசாதிதேக்கமரம்
முந்துமாமுகலியின்கரையினிலுமையொடும்
மந்தமார்பொழில்வளர்மல்குவண்காளத்தி
யெந்தையாரிணையடியென்மனத்துள்ளவே. (௧)

ஆலமாமரவமோடமைந்தசீர்ச்சந்தனஞ்
சாலமாபீலியுஞ்சண்பகஞ்சிந்தியே
காலமார்முகலிவந்தணைதருகாளத்தி
நீலமார்கண்டனைநினையுமாநினைவதே (௨)

கோங்கமேகுரவமேகொன்றையம்பாதிரி
மூங்கில்வந்தணைதருமுகலியின்கரையினி
லோங்கமர்காளத்தியடிகளையடிதொழ
வீங்குவெந்துயர்கெடும்வீடெளிதாகுமே. (௩)

கரும்புதேன்கட்டியுங்கதலியின்கனிகளு
மரும்புநீர்முகலியின்கரையினிலணிமதி

யொருங்குவார்சடையினன்காளத்தியொருவனை
விரும்புவாரவர்கடாம்விண்ணுலகாள்வரே. (௬)

வரைதருமகிலொடுமாமுகத்தழங்கியே
திரைதருமுகலியின்கரையினிற்றோன்றவா
விரைதருசடைமுடிக்காளத்திவிண்ணவ
னிரைதருகழலிணைநித்தலுநினைமினே. (௫-௬-௭)

முத்துமாமணிகளுமுழுமலர்த்திரள்களு
மெத்துமாமுகலியின்கரையினிலெழில்பெறக்
கத்திடவரக்கனைக்கால்விரலூன்றிய
வத்தன்றன்காளத்தியணைவதுகருமமே. (௮)

மண்ணுமாவேங்கையும்மருதுகள்பீழ்ந்துந்தி
நண்ணுமாமுகலியின்கரையினின்னன்மைசேர்
வண்ணமாமலரயன்மாலவன்காண்கிலா
வண்ணலார்காளத்தியாங்கணைந்துய்ம்மினே. (௯)

வீங்கியவுடலினர்விரிதருதுவருடைப்
பாங்கிலார்சொலைவிடும்பரனடிபணியுமி
னோங்குவண்காளத்தியுள்ளமோடுணர்தர
வாங்கிடுவினைகளைவானவர்க்கொருவனே (௰)

அட்டமாசித்திகளணைதருகாளத்தி
வட்டவார்சடையனைவயலணிசாழியான்
சிட்டநான்மறைவலஞானசம்பந்தனசொ
லிட்டமாப்பாடுவார்க்கில்லையாம்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பிரமபுரம் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்

கரமுனம்மலரால்புனல்மலர்தூவியேகலந்தேத்துமின்
பரமனூர்பலபேரினாற்பொலிபத்தர்சித்தர்கடாம்பயில்
வரமுன்னவருள்செய்யவல்லவெம்மையனாடொறுமேயசீர்ப்
பிரமனூர்பிரமாபுரத்துறைபிஞ்ஞகனருள்பேணியே. (௧)

விண்ணிலார்மதிசூடினான்விரும்புமறையவன்றன்றலை
யுண்ணநன்பலிபேணினானுலகத்துளூனுயிரான்மலைப்
பெண்ணினார்திருமேனியான்பிரமாபுரத்துறைகோயிலு
ளண்ணலாரருளாளனாயமர்கின்றவெம்முடையாதியே (௨)

எல்லையில்புகழாளனும்மிமையோர்கணத்துடன்கூடியும்
பல்லையார்தலையிற்பலியதுகொண்டுகந்தபடிறனுந்
தொல்லைவையகத்தேறுதொண்டர்கண்மலர்சொரிந்தேத்தவே
மல்லையம்பொழிறேன்மல்கும்பிரமாபுரத்துறைமைந்தனே. (௩)

அடையலார்புரஞ்சீறியந்தணரேத்தமாமடமாதொடும்
பெடையெலாங்கடற்கானல்புல்கும்பிரமாபுரத்துறைகோயிலான்
றொடையலார்நறுங்கொன்றையான்றொழிலேபரவிநின்றேத்தினா
லிடையிலார்சிவலோகமெய்துதற்கீதுகாரணங்காண்மினே. (௪)

வாயிடைம்மறையோதிமங்கையர்வந்திடப்பலிகொண்டுபோய்ப்
போயிடம்மெரிகானிடைப்புரிநாடகம்மினிதாடினான்
பேயொடுங்குடிவாழ்வினான்பிரமாபுரத்துறைபிஞ்ஞகன
றாயிடைப்பொருடந்தையாகுமென்றோதுவார்க்கருடன்மையே. (௫)

ஊடினாலினியாவதென்னுயர்நெஞ்சமேயுறுவல்வினைக்
கோடிநீயுழல்கின்றதென்னழலன்றதங்கையிலேந்தினான்
பீடுநேர்ந்ததுகொள்கையான்பிரமாபுரத்துறைவேதியன
னேடுநேர்மதியோடராவணிமைந்தனென்றுநின்றேத்திடே. (௬)

செய்யன்வெள்ளியனொள்ளியார்சிலரென்றுமேத்திநினைந்திட
லையனாண்டகையந்தணனருமாமறைப்பொருளாயினான்
பெய்யுமாமழையானவன்பிரமாபுரம்மிடம்பேணிய
வெய்யவெண்மழுவேந்தியைநினைந்தேத்துமின்வினைவீடவே. (௭)

கன்றொருக்கையிலேந்திநல்விளவின்கனிபடநூறியுஞ்
சென்றொருக்கியமாமறைப்பொருடேர்ந்தசெம்மலரோனுமா
யன்றரக்கனைச்செற்றவன்னடியும்முடியவைகாண்கிலா
பின்றருக்கியதண்பொழிற்பிரமாபுரத்தரன்பெற்றியே. (௮)

உண்டுடுக்கைவிட்டார்களும்முயர்கஞ்சிமண்டைகொடேரரும
பண்டடக்குசொற்பேசுமப்பரிவொன்றிலார்கள்சொற்கொள்ளன்மின்
றண்டொடக்குவன்சூலமுந்தழலாமழுப்படைதன்கையிற்
கொண்டொடுக்கியமைந்தனெம்பிரமாபுரத்துறைகூத்தனே. (௯)

பித்தனைப்பிரமாபுரத்துறைபிஞ்ஞகன்கழல்பேணிய
மெய்த்தவத்துநின்றோர்களுக்குரைசெய்துநன்பொருண்மேவிட
வைத்தசிந்தையுண்ஞானசம்பந்தனவாய்நவின்றெழுமாலைகள்
பொய்த்தவம்பொறிநீங்கவின்னிசைபோற்றிசெய்யுமெய்ம்மாந்தரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

ஆக பதிகம்-௩௭.

## திருக்கண்டியூர் - திருவீரட்டம் - பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்.

வினவினேனறியாமையிலுரைசெய்மினீரருள்வேண்டுவீர்
கனைவிலார்புனற்காவிரிக்கரைமேயகண்டியூர்வீரட்டன்
றனமுனேதனக்கின்மையோதமராயினாரண்டமாளத்தான்
வனனில்வாழ்க்கைகொண்டாடிப்பாடியிவ்வையமாப்பலிதேர்ந்ததே. (௧)

உள்ளவாறெனக்குரைசெய்மினுயர்வாயமாதவம்பேணுவீர்
கள்ளவிழ்பொழில்சூழுங்கண்டியூர்வீரட்டத்துறைகாதலான்
பிள்ளைவான்பிறைசெஞ்சடைம்மிசைவைத்ததும்பெருநீரொலி
வெள்ளந்தாங்கியதென்கொலோமிகுமங்கையாளுடனாகவே. (௨)

அடியராயினீர்சொல்லுமின்னறிகின்றிலேனரன்செய்கையைப்
படியெலாந்தொழுதேத்துகண்டியூர்வீரட்டத்துறைபான்மையான
முடிவுமாய்முதலாயிவ்வையகமுழுதுமாயழகாயதோர்
பொடியதார்திருமார்பினிற்புரிநூலும்பூண்டெழுபொற்பதே. (௩)

பழையதொண்டர்கள்பகருமின்பலவாயவேதியன்பான்மையைக்
கழையுலாம்புனன்மல்குகாவிரிமன்னுகண்டியூர்வீரட்டன்
குழையொர்காதினிற்பெய்துகந்தொருகுன்றின்மங்கைவெருவுறப்
புழைநெடுங்கைநன்மாவுரித்ததுபோர்த்துகந்தபொலிவதே. (௪)

விரவிலாதுமைக்கேட்கின்றேனடிவிரும்பியாட்செய்வீர்விளம்புமின்
கரவெலாந்திரைமண்டுகாவிரிக்கண்டியூருறைவீரட்டன்
முரவமொந்தைமுழாவொலிக்கமுழங்குமபேயொடுங்கூடிப்போய
பரவுவானவர்க்காகவார்கடனஞ்சமுண்டபரிசதே. (௫)

இயலுமாறெனக்கியம்புமின்னிறைவனுமாய்நிறைசெய்கையைக்
கயனெடுங்கண்ணினார்கடாம்பொலிகண்டியூருறைவீரட்டன்
புயல்பொழிந்திழிவானுளோர்களுக்காகவன்றயன்பொய்ச்சிரம
மயனகவவதரிந்துமற்றதிலூணுகந்தவருத்தியே. (௬)

திருந்துதொண்டர்கள்செப்புமின்மிகச்செல்வன்றன்னதுதிறமெலாங்
கருந்தடங்கண்ணினார்கடாந்தொழுகண்டியூருறைவீரட்ட
னிருந்துநால்வரொடாலநீழலறமுரைத்ததுமிகுவெம்மையா
வருந்தவன்சிலையாலமாமதின்மூன்றுமாட்டியவண்ணமே. (௭)

நாவிரித்தரன்றொல்புகழ்பலபேணுவீரிறைநல்குமின்
காவிரித்தடம்புனல்செய்கண்டியூர்வீரட்டத்துறைகண்ணுதல
கோவிரிப்பயனானைஞ்சாடியகொள்கையுங்கொடிவரைபெற
மாவரைத்தலத்தாலரக்கனைவலியைவாட்டியமாண்பதே. (௮)

பெருமையேசரணாகவாழ்வுறுமாந்தர்காளிறைபேசுமின்
கருமையார்பொழில்சூழுந்தண்வயற்கண்டியூருறைவீரட்ட
னொருமையாலுயர்மாலுமற்றைமலரவனுணர்ந்தேத்தவே
யருமையாலவவுக்குயர்ந்தெரியாகிநின்றவத்தன்மையே. (௯)

நமரொழுபிறப்பறுக்குமாந்தர்கணவிலுமின்னுமைக்கேட்கின்றேன்
கமரழிவயல்சூழுந்தண்புனற்கண்டியூருறைவீரட்டன்
றமருந்தெழுசாக்கியச்சமணாதரோதுமதுகொள்ளா
தமரானவரோத்தவக்கன்றன்னைச்சூலத்திலாய்ந்ததே. (௧௦)

கருத்தனைப்பொழில்சூழுங்கண்டியூர்வீரட்டத்துறைகள்வனை
யருத்தனைத்திறமடியர்பால்மிகக்கேட்டுகந்தவின்னுரை
திருத்தமாந்திகழ்காழிஞானசம்பந்தன்செப்பியசெந்தமி
ழொருத்தராகிலும்பலர்களாகிலுமுரைசெய்வாருயர்ந்தார்களே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர் - வீரட்டேசுவரர், தேவியார் - மங்கைநாயகியம்மை.
இறை-உத்தரவு.

---

## திருவாலவாய - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

மானினேர்விழிமாதராய்வழுதிக்குமாபெருந்தேவிகேள்
பானல்வாயொருபாலனீங்கிவனென்றுநீபரிவெய்திடே
லானைமாமலையாதியாயவிடங்களிற்பலவல்லல்சே
ரீனர்கட்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே. (க)

ஆகமத்தொடுமந்திரங்களமைத்தசங்கதபங்கமாப்
பாகதத்தொடிரைத்துரைத்தசனங்கள்வெட்குறுபக்கமா
மாகரக்கரிபோற்றிரிந்துபுரிந்துநின்றுணுமாசுசே
ராகதர்க்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே. (உ)

அந்தகுபொருளுண்டுமில்லையுமென்றுநின்றவர்க்கச்சமா
வொத்தொவ்வாமைமொழிந்துவாதிலழிந்தெழுந்தகவிப்பெயர்ச்
சத்திரத்தின்மடிந்தொடிந்துசனங்கள்வெட்குறநக்கமே
சித்திரர்க்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே (ங)

சந்துசேனனுமிந்துசேனனுந்தருமசேனனுங்கருமைசேர்
கந்துசேனனுங்கனகசேனனுமுதலாகியபெயர்கொளா
மந்திபோற்றிரிந்தாரியத்தொடுசெந்தமிழ்ப்பயனறிகிலா
வந்தகர்க்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே. (ச)

கூட்டினார்கிளியின்விருத்தமுரைத்ததோரொலியின்றொழிற்
பாட்டுமெய்சொலிபக்கமேசெலுமெக்கர்தங்களைப்பல்லறங்
காட்டியேவருமாடெலாங்கவர்கையரைக்கசிவொன்றிலாச்
சேட்டைகட்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே. (ரு)

கனகநந்தியும்புட்பநந்தியும்பவணநந்தியுங்குமணமா
சுனகநந்தியுங்குனகநந்தியுந்திவணநந்தியுமொழிகொளா
வனகநந்தியர்மதுவொழிந்தவமேதவம்புரிவோமெனுஞ்
சினகருக்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே. (சா)

பந்தணம்மவையொன்றிலம்பரிவொன்றிலமெனவாசக
மந்தணம்பலபேசிமாசறுசீர்மையின்றியகாயமே

யந்தணம்மருகந்தணம்மதுபுத்தணம்மதுசித்தணஞ்
சிந்தனைக்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே. (எ)

மேலெனக்கெதிரில்லையென்றவரக்கனார்மிகைசெற்றதீப்
போலியைப்பணியக்கிலாதொருபொய்த்தவங்கொடுகுண்டிகை
பீலிகைக்கொடுபாயிடுக்கிநடுக்கியேபிறர்பின்செலுஞ்
சீலிகட்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே. (அ)

பூமகற்குமரிக்குமோரவருபுண்ணியனடிபோற்றிலா
சாமவத்தையினார்கள்போறலையைப்பறித்தொருபொய்த்தவம்
வேமவத்தைசெலுத்திமெய்ப்பொடியட்டிவாயசகதிக்குநே
ராமவாகெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே. (கூ)

தங்களுக்குமசாக்கியர்க்குந்தரிப்பொணாதநற்சேவடி
யெங்களுக்கபகனேத்தொழிந்திடுக்கேமடுத்தொருபொய்த்தவம்
பொங்குநூல்வழியன்றியேபுலவோர்களைப்பழிக்கும்பொலா
வங்கதர்க்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே. (க0)

எக்கராமமண்கையருக்கெளியேனலேன்றிருவாலவாய்ச்
சொக்கனென்னுளிருக்கவேதுளங்குமுடித்தென்னன்முன்னிவை
தக்கசீர்ப்புகலிக்குமன்றமிழ்நாதன்ஞானசம்பந்தன்வா
யொக்கவேயுரைசெய்தபத்துமுரைப்பவர்க்கிடரில்லையே (கக)

திருச்சிற்றம்பலம்.

இது-பாண்டியராஜனுடைய சுரப்பிணிதீர்ப்பதற்காகத் திருஞானசம்பந்தசுவாமிகளெழுந்தருளியிருக்கும்போது பாண்டிமாதேவியாகிய மங்கையர்க்கரசியார்கண்டுசுவாமிகளுடைய திருமேனி மிகுந்த பாலியமாயிருக்கின்றதுமன்றித், தனிமையாயுமிருக்கின்றது. சமணர்களோ சரீரதிடமுள்ளவர்களும பலருமாயிருக்கின்றார்களென்றுமனம் பரிவுற்றதைக் குறிப்பினாலே திருஞானசம்பந்தசுவாமிகள் திருவுள்ளத்திலுணர்ந்துகொண்டு அன்னையே யஞ்சவேண்டுவதில்லையென்று கட்டளையிட்டபதிகம்

## தனித்திருவிருக்குக்குறள்-பண்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

கல்லானீழ லல்லாத்தேவை, நல்லார்பேணா ரல்லோநாமே (க)
கொன்றைசூடி நின்றதேவை, யன்றியொன்று நன்றிலோமே. (உ)
கல்லாநெஞ்சி னில்லானீசன், சொல்லாதாரோ டல்லோநாமே (ங)
கூற்றுதைத்த நீற்றினானைப், போற்றுவார்க டோற்றிலாரே. (ச)
காட்டுளாடும் பாட்டுளானை, நாட்டுளோருந் தேட்டுளாரே. (ரு)
தக்கன்வேள்விப் பொக்கந்தீர்த்த, மிக்கதேவர் பக்கத்தோமே. (சா)
பெண்ணாணாய விண்ணோர்கோவை, நண்ணாதாரை யெண்ணோநாமே. (எ)
தூர்த்தனவீரந் தீர்த்தகோவை, யார்த்தமாக வேத்தினோமே. (அ)
பூவினானுந் தாவினானு, நாவினாலு மோவினாரே. (கூ)

மொட்டமணர் கட்டர்தேரர், பிட்டர்சொல்லை விட்டுளோமே. (௧௦)
அந்தண்காழிப் பந்தன்சொல்லைச், சிந்தைசெய்வோ ருய்ந்துளாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருவேகம்பம்-திருவிருக்குக்குறள் - பண்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

கருவார்கச்சித் திருவேகம்பத், தொருவாவென்ன மருவாவினையே. (௧)
மதியார்கச்சி நதியேகம்பம், விதியாலேத்தப் பதியாவாரே. (௨)
கலியார்கச்சி மலியேகம்பம், பலியாற்போற்ற நலியாவினையே. (௩)
வரமார்கச்சிப் புரமேகம்பத், பரவாவேத்த விரவாவினையே. (௪)
படமார்கச்சி யிடமேகம்பம், துடையாயென்ன வடையாவினையே (௫)
நலமார்கச்சி நிலவேகம்பங், குலவாவேத்தக் கலவாவினையே. (௬)
கரியின்னுரியன் றிருவேகம்பன், பெரியபுரமூன் றெரிசெய்தானே. (௭)
இலங்கையரசைத் துலங்கவூன்று, நலங்கொள்கம்ப னிலங்குசரணே. (௮)
மறையோனரியு மறியாவனலன், னெறியேகம்பங் குறியாற்றொழுமே. (௯)
பறியாத்தேரர் நெறியில்கச்சிச், செறிகொள்கம்பங் குறுகுவோமே. (௧௦)
கொச்சைவேந்தன் கச்சிக்கம்ப, மெச்சுஞ்சொல்லை நச்சும்புகழே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருச்சிற்றேமம் - பண்-கொல்லிக்கௌவாணம்.

திருச்சிற்றம்பலம்

நிறைவெண்டிங்கள்வாண்முகமாதர்பாடநீள்சடைக்
குறைவெண்டிங்கள்சூடியோராடன்மேயகொள்கையான்
சிறைவண்டியாழ்செய்பைம்பொழிற்பழனஞ்சூழ்சிற்றேமத்தா
னிறைவனென்றேயுலகெல்லாமேத்தநின்றபெருமானே. (௧)

மாகத்திங்கள்வாண்முகமாதர்பாடவார்சடைப்
பாகத்திங்கள்சூடியோராடன்மேயபண்டங்கன்
மேகத்தாடுசோலைசூழ்மிடைசிற்றேமமேவினா
னாகத்தோர்கொள்ளாமையைப்பூண்டவண்ணலல்லனே. (௨)

நெடுவெண்டிங்கள்வாண்முகமாதர்பாடநீள்சடைக்
கொடுவெண்டிங்கள்சூடியோராடன்மேயகொள்கையான்
படுவண்டியாழ்செய்பைம்பொழிற்பழனஞ்சூழ்சிற்றேமத்தான்
கடுவெங்கூற்றைக்காலாற்காய்ந்தகடவுளல்லனே. (௩)

கதிரார்திங்கள்வாண்முகமாதர்பாடக்கண்ணுதன்
முதிரார்திங்கள்சூடியோராடன்மேயமுக்கண

னெதிரார்புனலம்புன்சடையெழிலாருஞ்சிற்றேமத்தா
னதிரார்பைங்கணேறுடையாதிமூர்த்தியல்லனே. (௪)

வானார்திங்கள்வாண்முகமாதர்பாடவார்சடைக்
கூனார்திங்கள்சூடியோராடன்மேயகொள்கையான்
றேனார்வண்டுபண்செயுந்திருவாருஞ்சிற்றேமத்தான்
மானார்விழிநன்மாதோடுமகிழ்ந்தமைந்தனல்லனே. (௫)

பனிவெண்டிங்கள்வாண்முகமாதர்பாடப்பல்சடைக்
குனிவெண்டிங்கள்சூடியோராடன்மேயகொள்கையான்
றனிவெள்விடையன்புள்ளினத்தாமஞ்சூழ்சிற்றேமத்தான்
முனிவுமூப்புநீக்கியமுக்கண்மூர்த்தியல்லனே. (௬)

கிளருந்திங்கள்வாண்முகமாதர்பாடக்கேடிலா
வளருந்திங்கள்சூடியோராடன்மேயமாதவன்
றளிருங்கொம்புமதுவுமார்தாமஞ்சூழ்சிற்றேமத்தா
னொளிரும்வெண்ணூன்மார்பனென்னுள்ளத்துள்ளானல்லனே. (௭)

சூழ்ந்ததிங்கள்வாண்முகமாதர்பாடச்சூழ்சடைப்
போழ்ந்ததிங்கள்சூடியோராடன்மேயபுண்ணியன்
றாழ்ந்தவயற்சிற்றேமத்தான்றடவரையைத்தன்றோளினா
லாழ்ந்தவரக்கனொல்கவன்றடர்த்தவனல்லனே. (௮)

தணிவெண்டிங்கள்வாண்முகமாதர்பாடத்தாழ்சடைத்
துணிவெண்டிங்கள்சூடியோராடன்மேயதொன்மையா
னணிவண்ணச்சிற்றேமத்தானலர்மேலந்தணாளனு
மணிவண்ணனுமுன்காணகிலாமழுவாட்செல்வனல்லனே. (௯)

வெள்ளைத்திங்கள்வாண்முகமாதர்பாடவிரிசடைப்
பிள்ளைத்திங்கள்சூடியோராடன்மேயபிஞ்ஞக
னுள்ளத்தார்சிற்றேமத்தானுருவார்புத்தரொப்பிலாக்
கள்ளத்தாரைத்தன்றியுட்கரந்துவைத்தானல்லனே. (௧0)

கல்லிலோதமல்குதண்கானல்சூழ்ந்தகாழியா
னல்லவாயவின்றமிழ்நவிலுஞானசம்பந்தன்
செல்வனூர்சிற்றேமத்தைப்பாடல்சீராருநாவினால்
வல்லாராகிவாழ்த்துவாரல்லலின்றிவாழ்வரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது

சுவாமிபெயர்-பொன்வைத்தநாதர், தேவியார் - அகிலாண்டேசுவரியம்மை.

---

## சீகாழி - பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்

சந்தமார்முலையாடன்கூறனார்
வெந்தவெண்பொடியாடியமெய்யனார்

கானல்வந்துலவுங்கடற்காழியுள்
ஏனமில்லிணையடியேத்திடு
ஞானசம்பந்தனசொல்லிவற்றமிழ்
மானமாக்குமகிழ்ந்துரைசெய்யவே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருக்கழிப்பாலை - பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

வெந்தகுங்கிலியப்புகைவிம்மவே
கந்தநின்றுலவுங்கழிப்பாலையா
ரந்தமுமளவுமறியாததோர்
சந்தமாலவர்மேவியசாந்தமே. (௧)

வானிலங்கவிளங்குமிளம்பிறை
தானலங்கலுகந்ததலைவனார்
கானிலங்கவருங்கழிப்பாலையார்
மானலமடநோக்குடையாளொடே. (௨)

கொடிகொளேற்றினர்கூற்றையுதைத்தனர்
பொடிகொணமார்பினிற்பூண்டதோராமையர்
கடிகொள்பூம்பொழில்சூழ்கழிப்பாலையு
ளடிகள்செய்வனவார்க்கறிவொண்ணுமே. (௩)

பண்ணலம்படவண்டறைகொன்றையி
றண்ணலங்கலுகந்ததலைவனார்
கண்ணலங்கவருங்கழிப்பாலையுள்
ளண்ணலெங்கடவுளலனல்லனே. (௪)

ஏரினாருலகத்திமையோரொடும்
பாரினாருடனேபரவப்படுங்
காரினார்பொழில்சூழ்கழிப்பாலையெஞ்
சீரினார்கழலேசிந்தைசெய்மினே. (௫)

துள்ளுமான்மறியங்கையிலேந்தியூர்
கொள்ளுவாரிடுவெண்டலையிற்பலி
கள்ளநாருறையுங்கழிப்பாலையை
யுள்ளுவார்வினையாயினவோயுமே. (௬)

மண்ணினார்புகழ்செல்வமும்வானமு
மெண்ணிநீரினிதேத்துமின்பாகமும்
பெண்ணினார்பிறைநெற்றியோடுற்றமுக்
கண்ணினாருறையுங்கழிப்பாலையே. (௭)

இலங்கைமன்னனையீரைந்திரட்டிதோ
ளலங்கலூன்றியருளுமழுவாளினார்

கலங்கள்வந்துலவுங்கழிப்பாலையை
வலங்கொள்வார்வினையாயினமாயுமே. (௮)

ஆட்சியாலலராறொடுமாலுமாய்க்
காட்சியாலறியாதுகளர்ந்தனர்
காட்சியாலறியான்கழிப்பாலையு
மாட்சியாற்றொழுவார்வினைமாயுமே. (௯)

செய்யநுண்டுவராடையினாரொடு
மெய்யின்மாசுபிறங்கியவீறிலாக்
கையர்கேண்மையனேகழிப்பாலையெம
மையனசேவடியேயடைந்துய்ம்மினே. (௧௦)

அந்தணகாழியருமறைஞானசம
பந்தனபாய்புனல்சூழ்கழிப்பாலையைச்
சிந்தையாற்சொன்னசெந்தமிழ்வல்லவா
முந்திவானுலகாடன்முறைமையே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

ஆக பதிகம்-௪௪.

## திருவாரூர் - பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்

அந்தமாயுலகாதியுமாயினான்
வெந்தவெண்பொடிப்பூசியவேதியன
சிந்தையேபுகுந்தான்திருவாரூரெம
மெந்தைதானெனையேன்றுகொளுங்கொலோ. (௧)

கருந்தனேகருதார்புரமூன்றெய்த
வொருத்தனேயுமையாளொருகூறனே
திருத்தனேதிருவாரூரெந்தீவண்ண
வருத்தவெண்ணெனையஞ்சலெனாததே. (௨)

மறையனமாமுனிவனமருவார்புர
மிறையின்மாத்திரையில்லெரியூட்டினான்
சிறைவண்டார்பொழில்சூழ்திருவாரூரெம்
மிறைவன்றானெனையேன்றுகொள்ளுங்கொலோ. (௩)

பல்லிலோடுகையேந்திப்பலிதிரிந்
தெல்லைவந்திடுகாட்டெரியாடுவான்
செல்வமல்கியதென்றிருவாரூரா
னல்லறீர்த்தெனையஞ்சலெனுங்கொலோ. (௪)

குருந்தமேறிக்கொடிவிடுமாதவி
விரிந்தலர்ந்தவிரைகமழ்தேன்கொன்றை
திருந்துமாடங்கள்சூழ்திருவாரூரான்
வருந்துமபோழ்தெனைவாடலெனுங்கொலோ. (௫)

வார்கொண்மென்முலையாளொருபாகமா
வூர்களாரிடுபிச்சைகொளுத்தமன்
சீர்கொண்மாடங்கள்சூழ்திருவாரூரா
ரோர்கணூவெனையஞ்சலெனுங்கொலோ. (௬)

வளைக்கைமங்கைநல்லாளையோர்பாகமாத்
துளைக்கையானைதுயரபடப்போர்த்தவன்
றிளைக்குந்தண்புனல்சூழ்திருவாரூரா
னிளைக்குமபோழ்தெனையேன்றுகொளுங்கொலோ. (௭)

இலங்கைமன்னனிருபதுதோளிறக்
கலங்கக்கால்விரலாற்கடைக்கண்டவன்
வலங்கொண்மாமதில்சூழ்திருவாரூரா
னலங்கநந்தெனையஞ்சலெனுங்கொலோ. (௮)

நெடியமாலுமபிரமனுநேர்கிலாப
படியவனபனிமாமதிசென்னியான்
செடிகணீக்கியதென்றிருவாரூரெம
மடிகடானெனைபஞ்சலெனுங்கொலோ (௯)

மாசுமெய்யினர்வண்டுவராடைகொள்
காசைபோர்க்குங்கலதிகள்சொற்கொளேற்
றேசமல்கியதென்றிருவாரூரெம
மீசன்றானெனையேன்றுகொளுங்கொலோ. (௧௦)

வன்னிகொன்றைமதியொடுகூவிளஞ்
சென்னிவைத்தபிரான்றிருவாரூரை
மன்னுகாழியுண்ஞானசம்பந்தனவாய்
பன்னுபாடல்வல்லார்கிலைபாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருக்கருகாவூர் - பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

முத்திலங்குமுறுவலுமையஞ்சவே
மத்தயானைமறுகவ்வுரிவாங்கிய
கத்தைபோர்த்தகடவுள்கருகாவூரெம்
மத்தர்வண்ணமழலும்மழல்வண்ணமே (௧)

விமுதவல்லசடையான்றனையுள்குவா
கமுதநீலகலாததோர்செல்வமாய்
கமுதமுல்லைகமழ்கின்றகருகாவூ
ரமுதர்வண்ணமழலும்மழல்வண்ணமே. (௨)

பழகவல்லசிறுத்தொண்டர்பாவின்னிசை
குழகரொன்றுகுழையாவழையாவருங்

கழல்கொள்பாடலுடையார்கருகாவூரெம்
மழகர்வண்ணம்மழலும்மழல்வண்ணமே (ங)

பொடிமெய்ப்பூசிமலர்கொய்துபுணர்ந்துடன்
செடியரல்லாவுள்ளநல்கியசெல்வத்தர்
கடிகொண்முல்லைகமழுங்கருகாவூரெம்
மடிகள்வண்ணம்மழலும்மழல்வண்ணமே. (ச)

மையலின்றிமலர்கொய்துவணங்கிடச்
செய்யவுள்ளம்மிகநல்கியசெல்வத்தர்
கைதன்முல்லைகமழுங்கருகாவூரெம்
மையர்வண்ணம்மழலுமழல்வண்ணமே. (ரு)

பாசிநெருண்டாமலர்கொண்டுவணங்கிட
வாசையாரவருணல்கியசெல்வத்தர்
காய்சினத்தவிடையார்கருகாவூரெம்
மீசர்வண்ணமெரியுமெரிவண்ணமே (சா)

வெந்தநீறுமெய்பூசியவேதியன்
சிந்தைநின்றவருணல்கியசெல்வத்தான்
கந்தமௌவல்கமழுங்கருகாவூரெ
மெந்தைவண்ணமெரியும்மெரிவண்ணமே. (எ-அ)

பண்ணினேர்மொழியாளையோர்பாகனார்
மண்ணுங்கோலமுடையமலரானொடுங்
கண்ணனேடவரியார்கருகாவூரெ
மண்ணல்வண்ணமழலுமழல்வண்ணமே. (கூ)

போர்த்தமெய்யினர்போதுழல்வார்கள்சொற்
றீர்த்தமென்றுதெளிவீர்தெளியேன்மின்
கூர்த்தன்முல்லைகமழுங்கருகாவூரெம்
மார்த்தர்வண்ணம்மழலும்மழல்வண்ணமே. (க0)

கலவமஞ்ஞையுலவுங்கருகாவூர்
நிலவுபாடலுடையான்றன்னீள்கழல்
குலவுஞானசம்பந்தனசெந்தமிழ்
சொலவல்லாரவர்தொல்வினைதீருமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - முல்லைவனேசுவரர், தேவியார் - கரும்பனையாளம்மை.

## திருவாலவாய் - பண் - கௌசிகம்.

**திருச்சிற்றம்பலம்.**

காட்டுமாவதுரித்துரிபோர்த்துட
னாட்டமூன்றுடையாயுரைசெய்வனான்

வேட்டுவேள்விசெய்யாவமண்கையரை
யோட்டிவாதுசெயத்திருவுள்ளமே. (க)

மத்தயானையினீருரிமூடிய
வத்தனேயணியாலவாயாய்பணி
பொய்த்தவன்றவவேடத்தராஞ்சமண்
சித்தரையழிக்கத்திருவுள்ளமே (உ)

மண்ணகத்திலும்வானிலுமெங்குமாந்
திண்ணகத்திருவாலவாயாயருள்
பெண்ணகத்தெழிற்சாக்கியப்பேயமண்
டெண்ணர்கற்பழிக்கத்திருவுள்ளமே (ங)

ஓதியோத்தறியாவமணாதரை
வாதில்வென்றழிக்கத்திருவுள்ளமே
யாதியேதிருவாலவாயண்ணலே
நீதியாகநினைந்தருள்செய்திடே. (ச)

வையமன்னுபுகழாயடியார்தொழுஞ்
செய்கையார்திருவாலவாய்செப்பாய்
கையிலுண்டுழலுமமண்கையரை
யையனேவாதுசெயத்திருவுள்ளமே (ரு)

நாறுசேர்வயற்றண்டலைமிண்டிய
தேறலார்திருவாலவாயாய்செப்பாய்
வீறிலாத்தவமோட்டமண்வேடரைச்
சீறிவாதுசெயத்திருவுள்ளமே. (சு)

பண்டடித்தவத்தார்பயில்வார்தமேற்
றொண்டருக்கெளியாய்திருவாலவா
யண்டனேயமண்கையரைவாதினிற்
செண்டடித்துளறத்திருவுள்ளமே (எ)

அரக்கனார்முனைகிரியேற்றவன்றனைமுடிச்
செருக்கினைத்தவிர்த்தாய்திருவாலவாய்
பரக்குமாண்புடையாயமண்பாவரைக்
கரக்கவாதுசெயத்திருவுள்ளமே (அ)

மாலுநான்முகனுமறியாநெறி
யாலவாயுறையுமண்ணலேபணி
மேலைவீடுணராவெற்றமணரைச்
சாலவாதுசெயத்திருவுள்ளமே (கூ)

கழிக்கரைப்படுமீன்கவர்வாரமண்
ணழிப்பரையழிக்கத்திருவுள்ளமே
தெழிக்கும்பூம்புனல்சூழ்திருவாலவாய்
மழுப்படையுடைமைந்தனேநல்கிடே. (க0)

செந்தெனுமுரலுந்திருவாலவாய்
மைந்தனேயென்றுவல்லமணாசறச்
சந்தமார்தமிழ்கேட்டமெய்ஞ்ஞானசம்
பந்தனசொற்பகரும்பழிநீங்கவே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருமழபாடி பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

அங்கையாரழலன்னழகார்சடைக்
கங்கையாளகடவுள்ளிமேவிய
மங்கையாளுறையும்மழபாடியைத்
தங்கையாற்றொழுவார்தகவாளரே (க)

விதியுமாம்விளைவாமொழியார்ந்தமீதார்
கதியுமாங்கசிவாமரியாற்றமா
மதியுமாம்வலியாமழபாடியு
ணதியந்தோய்சடைநாதனற்பாதமே. (உ)

முழவினான்முதுகாடுறைபேய்க்கணக்
குழவினான்குலவுங்கையிலேந்திய
மழுவினானுறையும்மழபாடியைத்
தொழுமினுந்துயரானவைதீரவே (௩)

கலையினான்மறையான்கதியாகிய
மலையினான்மருவார்புரமூன்றெய்த
சிலையினான்சேர்திருமழபாடியைத்
தலையினால்வணங்கத்தவமாகுமே (ச)

நல்வினைப்பயனான்மறையின்பொருள்
கல்வியாயகருத்தனுருத்திரன்
செல்வன்மேயதிருமழபாடியைப்
புல்கியேத்துமதுபுகழாகுமே. (ரு)

நீடினாருலகுக்குயிராய்நின்று
ஆடினானெரிகானிடைமாநடம்
பாடினாரிசைமாமழபாடியை
நாடினார்க்கில்லைநல்குரவானவே (சு)

மின்னினாரிடையாளொருபாகமாய்
மன்னினானுறைமாமழபாடியைப்
பன்னினாரிசையால்வழிபாடுசெய்
துன்னினார்வினையாயினவோயுமே. (எ)

தென்னிலங்கையர்மன்னன்செழுவரை
தன்னிலங்கவடர்த்தருள்செய்தவன்

மந்தரமன்னபாவங்கண்மேவிய
பந்தனையவர்தாமும்பகர்வரேற்
சிந்துமவல்வினைசெல்வமுமல்குமா
னந்திநாமநமச்சிவாயவே (௬)

நரகமேழ்புகநாடினராயினு
முரைசெய்வாயினராயினுருத்திரர்
விரவியேபுகுவித்திடுமென்பரால்
வரதனாமநமச்சிவாயவே (௭)

இலங்கைமன்னனெடுத்தவடுக்கன்மேற்
றலங்கொள்கால்விரல்சங்கரனூன்றலு
மலங்கிவாய்மொழிசெய்தவனுய்வகை
நலங்கொணாமநமச்சிவாயவே. (௮)

போதன்போதனகண்ணனுமண்ணறன்
பாதந்தான்முடிநேடியபண்பரா
யாதுங்காண்பரிதாகியலந்தவ
ரோதுநாமநமச்சிவாயவே (௯)

கஞ்சிமண்டையர்கையிலுண்கையர்கள்
வெஞ்சொன்மிண்டர்விரவிலரென்பரால
விஞ்சையண்டர்கள்வேண்டவமுதுசெய்
நஞ்சுண்கண்டனமச்சிவாயவே (௰)

நந்திநாமநமச்சிவாயவெனுஞ்
சந்தையாற்றமிழ்ஞானசம்பந்தன்சொற்
சிந்தையான்மகிழ்ந்தேத்தவல்லாரெல்லாம்
பந்தபாசமறுக்கவல்லார்களே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

ஆக பதிகம்-௪௬.

---

## திருத்தண்டலைநீணெறி - பண்-கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்

விரும்புந்திங்களுங்கங்கையும்விம்மவே
சுரும்புந்தும்பியுஞ்சூழ்சடையார்க்கிடங்
கரும்புஞ்செந்நெலுங்காய்கமுகினவள
நெருங்குந்தண்டலைநீணெறிகாண்மினே. (௧)

இகழுங்காலனிதயத்துமென்னுளுந்
திகழுஞ்சேவடியான்றிருந்தும்மிடம்
புகழும்பூமகளும்புணர்பூசுரர்
நிகழுந்தண்டலைநீணெறிகாண்மினே. (௨)

பரந்தசீலப்படரிவல்லிடங்
கரந்தகண்டத்தினன்கருதும்மிடந்
சுரந்தமேதிதுறைபடிந்தோடையி
னிரந்ததண்டலைநீணெறிகாண்மினே. (௯)

நவந்தவெண்புந்தவளப்பொடியுமே
யுவந்தமேனியினானுறையும்மிடந்
சிவந்தபொன்னுஞ்செழுந்தரளங்களு
நிவந்ததண்டலைநீணெறிகாணமினே. (ப-டு-சா-எ)

இலங்கைவேந்தனிருபதுதோளிற
விலங்கலிலடர்த்தான்விரும்பும்மிடந்
சலங்கொளிப்பிதரளமுஞ்சங்குமு
நிலங்கொடண்டலைநீணெறிகாண்மினே. (அ)

கருவருந்தியினான்முகன்கண்ணனென
றிருவருந்தெரியாவொருவனிடந்
செருவருந்தியசெம்பியன்கோச்செங்க
ணிருபாதண்டலைநீணெறிகாண்மினே. (௯)

கலவுசீவரத்தார்கையிலுண்பவர்
குலவமாட்டாககுழகனுறைவிடந்
சுலவுமாமதிலுஞ்சுதைமாடமு
நிலவுந்தண்டலைநீணெறிகாண்மினே. (௧0)

நீற்றர்தண்டலைநீணெறிநாதனைத்
தோற்றமேன்மையர்தோணிபுரத்திறை
சாற்றிஞானசம்பந்தன்றமிழ்வல்லார்
மாற்றில்செல்வர்மறப்பர்பிறப்பையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - நீணெறிநாதேசுவரர், தேவியார் - ஞானாம்பிகையம்மை.

---

## திருவாலவாய்-பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்.

செய்யனேதிருவாலவாய்மேவிய
வையனேயஞ்சலென்றருள்செய்யெனை
பொய்யராமமணர்கொளுவுஞ்சுடர்
பையவேசென்றுபாண்டியற்காகவே. (௧)

சித்தனேதிருவாலவாய்மேவிய
வத்தனேயஞ்சலென்றருள்செய்யெனை
யெத்தராமமணர்கொளுவுஞ்சுடர்
பத்தியன்றென்னன்பாண்டியற்காகவே (௨)

தக்கன்வேள்விதகர்த்தருளாலவாய்ச்
சொக்கனேயஞ்சலென்றருள்செய்யெனை
யெக்கராமமணர்கொளுவுஞ்சுடர்
பக்கமேசென்றுபாண்டியற்காகவே (௩)

சிட்டனேதிருவாலவாய்மேவிய
வட்டமூர்த்தியனேயஞ்சலென்றருள்
துட்டராமமணர்கொளுவுஞ்சுடர்
பட்டிமன்றென்னன்பாண்டியற்காகவே. (௪)

நண்ணலார்புரமூன்றெரியாலவா
யண்ணலேயஞ்சலென்றருள்செய்யெனை
எண்ணிலாவமணர்கொளுவுஞ்சுடர்
பண்ணியற்றமிழ்ப்பாண்டியற்காகவே. (௫)

தஞ்சமென்றுன்சரண்புகுந்தேனையு
மஞ்சலென்றருளாலவாயண்ணலே
வஞ்சஞ்செய்தமணர்கொளுவுஞ்சுடர்
பஞ்சவன்றென்னன்பாண்டியற்காகவே (௬)

செங்கண்வெள்விடையாய்திருவாலவா
யங்கணாவஞ்சலென்றருள்செய்யெனைக்
கங்குலாரமண்கையரிடுங்கனல்
பங்கமிறென்னன்பாண்டியற்காகவே. (௭)

தூர்த்தன்வீரந்தொலைத்தருளாலவா
யாத்தனேயஞ்சலென்றருள்செய்யெனை
யேத்திலாவமணர்கொளுவுஞ்சுடர்
பார்த்திவன்றென்னன்பாண்டியற்காகவே. (௮)

தாவினானயன்றானறியாவகை
மேவினாய்திருவாலவாயாயரு
டூவிலாவமணர்கொளுவுஞ்சுடர்
பாவினான்றென்னன்பாண்டியற்காகவே (௯)

எண்டிசைக்கெழிலாலவாய்மேவிய
வண்டனேயஞ்சலென்றருள்செய்யெனைக்
குண்டராமமணர்கொளுவுஞ்சுடர்
பண்டிமன்றென்னன்பாண்டியற்காகவே. (௧௦)

அப்பனாலவாயாதியருளினால
வெப்பந்தென்னவன்மேலுறமேதினிக்
கொப்பஞானசம்பந்தனுரைபத்துஞ்
செப்பவல்லவர்தீதிலாச்செல்வரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

## திருவாலவாய்-திருவிராகம்-பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

வீடலாலவாயிலாய்விழுமியார்கணின்கழற்
பாடலாலவாயிலாய்பரவநின்றபுண்ணியனே
காடலாலவாயிலாய்கவாலிநீள்கடிம்மதிற்
கூடலாலவாயிலாய்குலாயதென்னகொள்கையே. (க)

பட்டிசைந்தவல்குலாள்பாவையாளோர்பாகமா
வொட்டிசைந்ததன்றியும்முச்சியாளொருத்தியாக
கொட்டிசைந்தவாடலாய்கூடலாலவாயிலா
யெட்டிசைந்தமூர்த்தியாயிருந்தவாறிதென்னையே. (உ)

குற்றநீகுணங்கணீகூடலாலவாயிலாய்
சுற்றநீபிரானுநீதொடர்ந்திலங்குசோதிநீ
கற்றநூற்கருத்துநீயருத்தமின்பமென்றிவை
முற்றுநீபுகழ்ந்துமுன்னுரைப்பதென்முகம்மனே. (ங)

முதிருநீர்ச்சடைமுடிமுதல்வநீமுழங்கழ
லதிரவீசியாடுவாயழகனீபுயங்கனீ
மதுரநீமணாளனீமதுரையாலவாயிலாய்
சதுரனீசதுமுகன்கபாலமேந்துசம்புவே (ச)

கோலமாயநீண்மதிற்கூடலாலவாயிலாய்
பாலனாயதொண்டுசெய்துபண்டுமின்றுமுன்னையே
நீலமாயகண்டனேநின்னையன்றிநித்தலுஞ்
சீலமாயசிந்தையிற்றேர்வதில்லைதேவரே. (ரு)

பொன்றயங்கிலங்கொளிநலங்குளிர்ந்தபுன்சடை
பின்றயங்கவாடுவாய்பிஞ்ஞகாபிறப்பிலீ
கொன்றையம்முடியினாய்கூடலாலவாயிலாய்
நின்றயங்கியாடலேநினைப்பதென்னியமமே. (சா)

ஆதியந்தமாயினாயாலவாயிலண்ணலே
சோதியந்தமாயினாய்சோதியுள்ளோர்சோதியாய்
கீதம்வந்தவாய்மையாற்கிளர்தருக்கினார்க்கலா
லோதிவந்தவாய்மையாலுணர்ந்துணாக்கலாகுமே. (எ)

கறையிலங்குகண்டனேகருத்திலாக்கருங்கடற்
றுறையிலங்கைமன்னனைத்தோளடரவூன்றினாய்
மறையிலங்குபாடலாய்மதுரையாலவாயிலாய்
நிறையிலங்குநெஞ்சினாணினைப்பதேநியமமே. (அ)

தாவணவ்விடையினாய்தலைமையாகநாடொறுங்
கோவணவ்வுடையினாய்கூடலாலவாயிலாய்
தீவணம்மலர்மிசைத்திசைமுகனுமாலுநின்
றாவணமளக்கிலார்துளக்கமெய்துவார்களே. (கூ)

பாருமாவின்னூறுங்கைதொழப்பாயுங்கங்கைசெஞ்சடை
யாரநீரோடேந்தினானானைக்காவுசேர்மினே. (௭)

பொன்னமல்குதாமரைப்போதுதாதுவண்டினம்
மன்னமல்குதண்டுறையானைக்காவிலண்ணலைப்
பன்னவல்லநான்மறைபாடவல்லதன்மையோர்
முன்னவல்லர்மொய்கழறுன்னவல்லர்விண்ணையே (௮)

ஊனொடுண்டனன்றெனவூனொடுண்டதீதென
வானதொண்டரன்பினாற்பேசநின்றதன்மையான்
வானொடொன்றுசூடினான்வாய்மையாகமன்னிநின்
றானொடஞ்சுமாடினானானைக்காவுசேர்மினே. (௯)

கையிலுண்ணுங்கையருங்கடுக்கடின்கழுக்களும்
மெய்யைப்போர்க்கும்பொய்யருமவேதநெறியையறிகிலார்
தையல்பாகமாயினான்றழலதுருவத்தானெங்க
ளையன்மேயபொய்கைசூழானைக்காவுசேர்மினே (௧௦)

ஊழியூழிவையகத்துயிர்கடோற்றுவானொடும்
ஆழியானுங்காண்கிலாவானைக்காவிலண்ணலைக்
காழிஞானசம்பந்தன்கருதிச்சொன்னபத்திவை
வாழியாகக்கற்பவர்வல்வினைகண்மாயுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பாசுரம் - பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

வாழ்கவந்தணர்வானவராளினம்
வீழ்கதண்புனல்வேந்தனுமோங்குக
ஆழ்கதீயதெல்லாமரனாமமே
சூழ்கவையகமுந்துயர்தீர்கவே (௧)

அரியகாட்சியராய்த்தமதங்கைசே
ரெரியரேறுகந்தேறுவர்கண்டமுங்
கரியர்காடுறைவாழ்க்கையராயினும்
பெரியராரறிவாரவர்பெற்றியே. (௨)

வெந்தசாம்பல்விரையெனப்பூசியே
தந்தையாரொடுதாயிலர்தம்மையே
சிந்தியாவெழுவார்வினைதீர்ப்பரா
லெந்தையாரவரெவ்வகையார்கொலோ. (௩)

ஆட்பாலவர்க்கருளும்வண்ணமுமாதிமாண்பும்
கேட்பான்புகிலளவில்லைகிளக்கவேண்டா
கோட்பாலனவும்வினையுங்குறுகாமையெந்தை
தாட்பால்வணங்கித்தலைநின்றிவைகேட்கதக்கார். (௪)

ஏதுக்களாலுமெடுத்தமொழியாலுமிக்குச்
சோதிக்கவேண்டாசுடர்விட்டுளனெங்கள்சோதி
மாதுக்கநீங்கலுறுவீர்மனம்பற்றிவாழ்மின்
சாதுக்கண்மிக்கீரிறையேவந்துசார்மின்களே. (ரு)

ஆடுமெனவுமருங்கூற்றமுதைத்துவேதம்
பாடுமெனவும்புகழல்லதுபாவநீங்கக்
கேடும்பிறப்புமறுக்குமெனக்கேட்டீராகி
னாடுந்திறத்தார்க்கருளல்லதுநாட்டலாமே. (சு)

கடிசேர்ந்தபோதுமலரானகைக்கொண்டுநல்ல
படிசேர்ந்தபால்கொண்டங்காட்டிடத்தாதைபண்டு
முடிசேர்ந்தகாலையறவெட்டிடமுக்கண்மூர்த்தி
யடிசேர்ந்தவண்ணமறிவார்சொலக்கேட்டுமன்றே. (எ)

வேதம்முதல்வன்முதலாகவிளங்கிவையம்
மேதப்படாமையுலகத்தவரேத்தல்செய்யப்
பூதம்முதல்வன்முதலேமுதலாப்பொலிந்த
சூதனொலிமாலையென்றேகலிக்கோவைசொல்லே. (அ)

பாராழிவட்டம்பகையானலிந்தாட்டவாடிப்
பேராழியானதிடர்கண்டருள்செய்தல்பேணி
நீராழிவிட்டேறிநெஞ்சிடங்கொண்டவர்க்குப்
போராழியீந்தபுகழும்புகழுற்றதன்றே. (கூ)

மாலாயவனுமறைவல்லநான்முகனும்
பாலாயதேவர்பகரிலமுதூட்டல்பேணிக்
காலாயமுந்நீர்கடைந்தார்க்கரிதாயெழுந்த
வாலாலமுண்டங்கமரர்க்கருள்செய்ததாமே. (க0)

அற்றன்றியந்தண்மதுரைத்தொகையாக்கினானுந்
தெற்றென்றுதெய்வந்தெளியார்கரைக்கோலைதெண்ணீர்ப்
பற்றின்றிப்பாங்கெதிர்விரவும்பண்புநோக்கிற்
பெற்றொன்றுயர்த்தபெருமான்பெருமானுமன்றே. (கக)

நல்லார்கள்சேர்புகலிஞானசம்பந்தனல்ல
வெல்லார்களும்பரவுமீசனையேத்துபாடல்
பல்லார்களுமதிக்கப்பாசுரஞ்சொன்னபத்தும்
வல்லார்கள்வானோருலகாளவும்வல்லரன்றே. (கஉ)

திருச்சிற்றம்பலம்.

## திருவான்மியூர் - பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

விரையார்கொன்றையினாய்விடமுண்டமிடற்றினனே
யுரையார்பலபுகழாயுமைநங்கையோர்பங்குடையாய்

திரையார்தென்கடல்சூழ்திருவான்மியூருறையுங்
மரையாவுன்னையல்லாலடையாதெனதாதரவே. (௧)

இடியாரேறுடையாயிமையோர்தம்மணிமுடியாய்
கொடியார்மாமதியோடரவம்மலர்க்கொன்றையினாய்
செடியார்மாதவிசூழ்திருவான்மியூருறையும்
மடிகெளுன்னையல்லாலடையாதெனதாதரவே. (௨)

கையார்வெண்மழுவர்கனல்போறிருமேனியனே
மையாரொண்கணல்லாளுமையாள்வளர்மார்பினனே
செய்யார்செங்கயல்பாய்திருவான்மியூருறையு
மையாவுன்னையல்லாலடையாதெனதாதரவே. (௩)

பொன்போலுஞ்சடைமேற்புனறாங்கியபுண்ணியனே
மின்போலும்புரிநூல்விடையேறியவேதியனே
தென்பால்வையமெலாந்திகழுந்திருவான்மிதன்னி
லன்பாவுன்னையல்லாலடையாதெனதாதரவே. (௪)

கண்ணாருந்நுதலாய்கதிர்சூழொளிமேனியின்மே
லெண்ணார்வெண்பொடிநீறணிவாயெழில்வார்பொழில்சூழ்
திண்ணார்வண்புரிசைத்திருவான்மியூருறையு
மண்ணாவுன்னையல்லாலடையாதெனதாதரவே. (௫)

நீதியின்னையல்லானெறியாதுநினைந்தறியே
னோதிநான்மறைகண்மறையோன்றலையொன்றினையுஞ்
சேதிசேதமில்லாத்திருவான்மியூருறையு
மாதியுன்னையல்லாலடையாதெனதாதரவே. (௬)

வானார்மாமதிசேர்சடையாய்வரைபோலவருங்
கானாரானையின்றோலுரித்தாய்கறைமாமிடற்றாய்
தேனார்சோலைகள்சூழ்திருவான்மியூருறையும்
மானுயுன்னையல்லாலடையாதெனதாதரவே. (௭)

பொறிவாய்நாகணையானொடுபூமிசைமேயவனு
நெறியார்நீள்கழன்மேனமுடிகாண்பரிதாயவனே
செறியார்மாமதில்சூழ்திருவான்மியூருறையு
மறிவேயுன்னையல்லாலடையாதெனதாதரவே. (அ-௯)

குண்டாடுஞ்சமணர்கொடுஞ்சாக்கியரொன்றிவர்கள்
கண்டாகாரணங்கள்கருதாதவர்பேசநின்றாய்
திண்டேர்வீதியதார்திருவான்மியூருறையு
மண்டாவுன்னையல்லாலடையாதெனதாதரவே. (௧௦)

கன்றாருங்கமுகின்வயல்சூழ்கருகாழிதனி
னன்றானபுகழான்மிகுஞானசம்பந்தனுரை
சென்றார்தம்மிடர்தீர்திருவான்மியூர்தன்மேற்
குன்றாதேத்தவல்லார்கொடுவல்வினைபோயறுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

ஆகபதிகம்-௩௩.

துவருறுமாடையினார்தொக்கபீலியர் * நக்கரைய
ரவரவர்தன்மைகள்கண்டணுகேன்மினருள்பெறுவீர்
கவருறுசிந்தையொன்றிக்கழிகாலமெல்லாம்படைத்த
விவரவன்றிறைஞ்சிப்பிரமாபுரமேத்துமினே. (௧0)

உரைதருநான்மறையோர்புகழ்ந்தேத்தவொண்மாதினொடும்
வரையென வீற்றிருந்தான்மலிகின்றபிரமாபுரத்
தரைசினையேத்தவல்லவணிசம்பந்தன்பத்துமவல்லார்
விரைதருவிண்ணுலகம்மெதிர்கொள்ளவிரும்புவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

* நக்கரையரென்பது-நிருவாணமான அரையினையுடையவர்கள்
சைனசமயத்தவர்கள்.

## திருவொற்றியூர் - பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்

விடையவன்விண்ணுமண்ணுந்தொழநின்றவன்வெண்மழுவாட்
படையவன்பாய்புலித்தோலுடைகோவணம்பல்கரந்தைச்
சடையவன்சாமவேதன்சசிதங்கியசங்கவெண்டோ
டுடையவனூனமில்லியுறையும்மிடமொற்றியூரே. (௧)

பாரிடம்பாணிசெய்யப்பறைக்கட்செறுபல்கணப்பேய்
சீரொடும்பாடலாடலிலயஞ்சிதையாதகொள்கைத்
தாரிடும்போர்விடையன்றலைவன்றலையேகலனா
ஊரிடும்பிச்சைகொள்வானுறையும்மிடமொற்றியூரே. (௨)

விளிதருநீருமண்ணும்விசும்போடனல்காலுமாகி
யளிதருபேரருளானாகியவாதிமூர்த்தி
களிதருவண்டுபண்செய்கமழ்கொன்றையினோடணிந்த
வொளிதருவெண்பிறையானுறையும்மிடமொற்றியூரே (௩)

அரவமேகச்சதாகவசைத்தானலர்கொன்றையந்தார்
விரவிவெண்ணூல்கிடந்தவிரையார்வரைமார்பனெந்தை
பரவுவார்பாவமெல்லாம்பறைத்துப்படர்புன்சடைமே
லுரவுநீரேற்றபெம்மானுறையும்மிடமொற்றியூரே. (௪)

விலகினார்வெய்யபாவம்விதியாலருள்செய்துநல்ல
பலகினார்மொந்தைதாளந்தகுணிச்சமும்பாணியாலே
யலகினால்வீசிநீர்கொண்டடிமேலலரிட்டுமுட்டா
துலகினோரேத்தநின்றானுறையும்மிடமொற்றியூரே. (௫)

கமையொடுநின்றசீரான்கழலுஞ்சிலம்புமொலிப்பச்
சுமையொடுமேலும்வைத்தான்விரிகொன்றையுஞ்சோமனையு
மமையொடுநீண்டதிண்டோளழகாய்ப்பெற்றோடிலங்க
வுமையொடுங்கூடநின்றானுறையும்மிடமொற்றியூரே. (௬)

நன்றியால்வாழ்வதுள்ளம்முலகுக்கொருநன்மையாலே
கன்றினார்மும்மதிலுங்கருமால்வரையேசிலையாப்
பொன்றினார்வார்சுடலைப்பொடிநீறணிந்தாரழலம்
பொன்றினையெய்தவெம்மானுறையும்மிடமொற்றியூரே. (௭)

பெற்றியாற்பித்தனொப்பான்பெருமான்கருமானுரிதோல்
சுற்றியான்சுத்திசூலஞ்சுடர்க்கண்ணுதன்மேலவிளங்கத்
தெற்றியாற்செற்றரக்கனுடலைச்செழுமால்வரைக்கீ
ழொற்றியானமுற்றுமாள்வானுறையும்மிடமொற்றியூரே (௮)

திருவினார்போதினானுந்திருமாலுமோர்தெய்வமுன்னித்
தெரிவினாற்காணமாட்டார்திகழ்சேவடிசிந்தைசெய்து
பரவினார்பாவமெல்லாம்பறையப்படர்பேரொளியோ
டொருவனாய்நின்றவெம்மானுறையும்மிடமொற்றியூரே. (௯)

தோகையம்பீலிகொள்வார்துவர்கூறைகள்போர்த்துழல்வா
ராகமசெல்வனாரையலர்தூற்றுதல்காரணமாக்
கூகையம்மாக்கள்சொல்லைக்குறிக்கொள்ளன்மினேழுலகு
மோகைதந்தாளவல்லானுறையும்மிடமொற்றியூரே. (௧௦)

ஒண்பிறைமல்குசென்னியிறைவனுறையொற்றியூரைச்
சண்பையர்தந்தலைவன்றமிழ்ஞானசம்பந்தன்சொன்ன
பண்புனைபாடல்பத்தும்பரவிப்பணிந்தேத்தவல்லார்
விண்புனைமேலுலகம்விருப்பெய்துவர்வீடெளிதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

தொண்டைநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - மாணிக்கத்தியாகா, தேவியார் - வடிவுடையம்மை.

---

## திருச்சாத்தமங்கை - பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

திருமலர்க்கொன்றைமாலையிளக்குமதிசென்னிவைத்தீ
ரிருமலர்க்கண்ணிதன்னோடுடனாவதுமேற்பதொன்றே
பெருமலர்ச்சோலைமேகமுருஞ்சும்பெருஞ்சாத்தமங்கை
யருமலராதிமூர்த்தியயவந்தியமர்ந்தவனே. (௧)

பொடிதனைப்பூசுமார்பிற்புரிநூலொருபாற்பொருந்தக்
கொடியனசாயலாளோடுடனாவதுங்கூடுவதே
கடிமணமல்கிநாளுங்கமழும்பொழிற்சாத்தமங்கை
யடிகணக்கன்பரவவயவந்தியமர்ந்தவனே. (௨)

நூனலந்தங்குமார்பினுகர்நீறணிந்தேறதேறி
மானனநோக்கிதன்னோடுடனாவதுமாண்பதுவே
தானலங்கொண்டுமேகந்தவழும்பொழிற்சாத்தமங்கை
யானலந்தோய்ந்தவெம்மானயவந்தியமர்ந்தவனே. (௩)

மற்றவின்மால்வரையாமதிலெய்துவெண்ணீறுபூசிப்
புற்றரவல்குலாளோர்பாலுடனாவதும்பொற்பதுவே
கற்றவர்சாத்தமங்கைநகர்கைதொழச்செய்தபூம
மற்றவர்நாளுமேத்தவயவந்தியமர்ந்தவனே. (௪)

வெந்தவெண்ணீறுபூசிவிடையேறியவேதகீதன்
பந்தணவும்விரலாளுடனாவதும்பாங்கதுவே
சந்தமாறங்கம்வேதந்தரித்தார்தொழுஞ்சாத்தமங்கை
யந்தமாயாதியாகியயவந்தியமர்ந்தவனே (௫)

வேதமாய்வேள்வியாகிவிளங்கும்பொருள்வீடதாகிச்
சோதியாய்மங்கைபாகந்நிலைதான்சொல்லலாவதொன்றே
சாதியான்மிக்கசீராற்றகுவார்தொழுஞ்சாத்தமங்கை
யாதியாய்நின்றபெம்மானயவந்தியமர்ந்தவனே. (௬)

இமையமெல்லாமிரியமதிலெய்துவெண்ணீறுபூசி
யுமையையோர்பாகமவைத்தநிலைதானுன்னலாவதொன்றே
சமையமாறங்கமவேதந்தரித்தார்தொழுஞ்சாத்தமங்கை
யமையவேறோங்குசீரானயவந்தியமர்ந்தவனே. (௭)

பண்ணுலாம்பாடல்வீணைபயில்வானோர்பரமயோகி
விண்ணுலாமால்வரையான்மகள்பாகமும்வேண்டினையே
தண்ணிலாவெண்மதியந்தவழும்பொழிற்சாத்தமங்கை
யண்ணலாய்நின்றவெம்மானயவந்தியமர்ந்தவனே. (௮)

பேரெழிற்றோளரக்கன்வலிசெற்றதும்பெண்ணோர்பாக
மீரெழிற்கோலமாகியுடனாவதுமேற்பதொன்றே
காரெழில்வண்ணனோடுகனகம்மனையானுங்காணா
வாரழல்வண்ணமங்கையயவந்தியமர்ந்தவனே (௯)

கங்கையோர்வார்சடைமேலடையப்புடையேகமழு
மங்கையோடொன்றிநின்றம்மதிதான்சொல்லலாவதொன்றே
சங்கையிலாமறையோரவர்தாந்தொழுசாத்தமங்கை
யங்கையிற்சென்னிவைத்தாயயவந்தியமர்ந்தவனே. (௰)

மறையினார்மல்குகாழித்தமிழ்ஞானசந்தன்மன்னு
நிறையினார்நீலநக்கனெடுமாநகரென்றுதொண்ட
ரறையுஞ்சாத்தமங்கையயவந்திமேலாய்ந்தபத்து
முறைமையாலேத்தவல்லாரிமையோரிலுமுந்துவரே (௧௧)

திருச்சிற்றம்பலம்

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - அயவந்தீசுவரர், தேவியார் - மலர்க்கணம்பிகை.

சாத்தமங்கை என்பது ஸ்தலம்—அயவந்தி என்பது-ஆலயம்.

## திருக்குடமூக்கு - பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

அரவிரிகோடனீடலணிகாவிரியாற்றயலே
மரவிரிபோதுமௌவன்மணமல்லிகைகள்ளவிழுங்
குரவிரிசோலைசூழ்ந்தகுழகன்குடமூக்கிடமா
யிரவிரிதிங்கள்சூடியிருந்தானவனெம்மிறையே, (௧)

ஓத்தரவங்களோடுமொலிகாவிரியாற்றயலே
பூத்தரவங்களோடும்புகைக்கொண்டடிபோற்றிநல்ல
கூத்தரவங்களோவாக்குழகன்குடமூக்கிடமா
யேத்தரவங்கள்செய்யவிருந்தானவனெம்மிறையே. (௨)

மயில்பெடைபுல்கியாலமழைமேன்மடவன்னமல்கும்
பயில்பெடைவண்டுபண்செய்பழங்காவிரிப்பைம்பொழில்வாய்க்
குயில்பெடையோடுபாடலுடையான்குடமூக்கிடமா
யியல்பொடுவானமேத்தவிருந்தானவனெம்மிறையே (௩)

மிக்கரைதாழ்வேங்கையுரியார்த்துமையாளவெருவ
வக்கரவாமையேனமருப்போடவைபூண்டழகார்
கொக்கரையோடுபாடலுடையான்குடமூக்கிடமா
வெக்கரையாருமேத்தவிருந்தானவனெம்மிறையே (௪)

வடிவுடைவாட்டடங்கண்ணுமையஞ்சவோர்வாரணத்தைப்
பொடியணிமேனிமூடவுரிகொண்டவன்புன்சடையான்
கொடிநெடுமாடமோங்குங்குழகன்குடமூக்கிடமா
யிடிபடுவானமேத்தவிருந்தானவனெம்மிறையே. (௫)

கழைவளர்கவ்வைமுத்தங்கமழ்காவிரியாற்றயலே
தழைவளர்மாவினல்லபலவின்கனிகடங்கு
குழைவளர்சோலைசூழ்ந்தகுழகன்குடமூக்கிடமா
மழைவளர்மங்கையோடுமிருந்தானவனெம்மிறையே. (௬)

மலைமலிமங்கைபாகமகிழ்ந்தானெழில்வையமுய்யச்
சிலைமலிவெங்கணையாற்சிதைத்தான்புரமூன்றினையுங்
குலைமலிதண்பலவின்பழம்வீழ்குடமூக்கிடமா
விலைமலிசூலமேந்தியிருந்தானவனெம்மிறையே. (௭)

நெடுமுடிபத்துடையநிகழ்வாளரக்கனுடலைப்
படுமிடர்கண்டயரப்பருமால்வரைக்கீழடர்த்தான்
கொடுமடறங்குதெங்குபழம்வீழ்குடமூக்கிடமா
விடுமணலெக்கர்சூழவிருந்தானவனெம்மிறையே. (௮)

ஆரெரியாழியானுமலரானுமளப்பரிய
நீரிரிபுன்சடைமேனிரம்பாமதிசூடிநல்ல
கூரெரியாகிநீண்டகுழகன்குடமூக்கிடமா
* வீரிருகோவணத்தோடிருந்தானவனெம்மிறையே. (௧௦)

* நான்குவேதங்களுங் கோவணமாதலின் ஈரிருகோவணமென்றருளிச்செய்தது.

மூடியசீவரத்தார்முதுமட்டையர்மோட்டமணர்
நாடியதேவரெல்லாநயந்தேத்தியநன்னலத்தான்
கூடியகுன்றமெல்லாமுடையான்குடமூக்கிடமா
வேடலர்கொன்றைசூடியிருந்தானவனெம்மிறையே (௧௦)

வெண்கொடிமாடமோங்குவிறல்வெங்குருநன்னகரா
னண்பொடுநின்றசீரான்றமிழ்ஞானசம்பந்தனல்ல
தண்குடமூக்கமர்ந்தானடிசேர்தமிழ்பத்தும்வல்லார்
விண்புடைமேலுலகம்வியப்பெய்துவர்வீடெளிதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது

சுவாமிபெயர் - கும்பேசுவரர், தேவியார் - மங்களநாயகியம்மை.

## திருவக்கரை - பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்.

கறையணிமாமிடற்றான்கரிகாடரங்காவுடையான்
பிறையணிகொன்றையினானொருபாகமும்பெண்ணமர்ந்தான்
மறையவனற்றலையிற்பலிகொள்பவன்வக்கரையி
லுறைபவனெங்கடம்பிரானொலியார்கழலுள்குதுமே. (௧)

பாய்ந்தவன்காலனைமுன்பணைத்தோளியோர்பாகமதா
வேய்ந்தவனெண்ணிறைந்தவிமையோர்கடொழுதிறைஞ்ச
வாய்ந்தவன்முப்புரங்களெரிசெய்தவன்வக்கரையிற்
றேய்ந்திளவெண்பிறைசேர்சடையானடிசெப்புதுமே. (௨)

சந்திரசேகரனேயருளாயென்றுதண்விசும்பி
னிந்திரனுமுதலாவிமையோர்கடொழுதிறைஞ்ச
வந்தரமூவெயிலுமனலாய்விழவோரம்பினா
மந்தரமேருவில்லாவளைத்தானிடம்வக்கரையே (௩)

நெய்யணிசூலமோடுநிறைவெண்மழுவுமரவுங்
கையணிகொள்கையினன்கனன்மேவியவாடலினான்
மெய்யணிவெண்பொடியான்விரிகோவணவாடையினான்
மையணிமாமிடற்றானுறையுமிடம்வக்கரையே (௪)

ஏனவெண்கொம்பினொடுமிளவாமையும்பூண்டுகந்து
கூனிளவெண்பிறையுங்குளிர்மத்தமுஞ்சூடிநல்ல
மானனமென்விழியாளொடும்வக்கரைமேவியவன்
றானவர்முப்புரங்களெரிசெய்ததலைமகனே. (௫)

காமலிகொன்றையொடுங்கதிர்மத்தமும்வாளரவு
நீர்மலியுஞ்சடைமேனிரம்பாமதிசூடிநல்ல
வார்மலிமென்முலையாளொடும்வக்கரைமேவியவன்
பார்மலிவெண்டலையிற்பலிகொண்டுழல்பான்மையனே. (௬)

## திருப்பனந்தாள் - பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்

கண்பொலிநெற்றியினான்றிகழ்கையிலோர்வெண்மழுவான்
பெண்புணர்கூறுடையான்மிகுபீடுடைமால்விடையான்
விண்பொலிமாமதிசேர்தருசெஞ்சடைவேதியனூர்
தண்பொழில்சூழ்பனந்தாட்டிருத்தாடகையீச்சரமே. (௧)

விரித்தவனான்மறையைமிக்கவிண்ணவர்வந்திறைஞ்ச
வெரித்தவன்முப்புரங்களியலேழுலகில்லுயிரும்
பிரித்தவன்செஞ்சடைமேனிறைபேரொலிவெள்ளந்தன்னைத்
தரித்தவனூர்பனந்தாட்டிருத்தாடகையீச்சரமே. (௨)

உடுத்தவன்மானுரிதோல்கழலுள்கவல்லார்வினைகள்
கெடுத்தருள்செய்யவல்லான்கிளர்கீதமோர்நான்மறையான்
மடுத்தவனஞ்சமுதாமிக்கமாதவர்வேள்வியைமுன்
றடுத்தவனூர்பனந்தாட்டிருத்தாடகையீச்சரமே (௩)

சூழ்தருவல்வினையுமுடறோன்றியபல்பிணியும்
பாழ்படவேண்டுதிரேன்மிகவேத்துமின்பாய்புனலும்
போழிளவெண்மதியுமனலொங்கரவும்புனைந்த
தாழ்சடையான்பனந்தாட்டிருத்தாடகையீச்சரமே. (௪)

விடம்படிகண்டத்தினானிருள்வெள்வளைமங்கையொடு
நடம்புரிகொள்கையினானவனெம்மிறைசேருமிடம்
படம்புரிநாகமொடுதிரைபன்மணியுங்கொணரும்
தடம்புனல்சூழ்பனந்தாட்டிருத்தாடகையீச்சரமே. (௫)

விடையுயர்வெல்கொடியானடிவிண்ணொடுமண்ணுமெல்லாம்
புடைபடவாடவல்லான்மிகுபூதமார்பல்படையான்
றொடைநவில்கொன்றையொடுவன்னிதுன்னெருக்கும்மணிந்த
சடையவனூர்பனந்தாட்டிருத்தாடகையீச்சரமே. (௬)

மலையவன்முன்பயந்தமடமாதையோர்கூறுடையான்
சிலைமலிவெங்கணையாற்புரமூன்றவைசெற்றுகந்தா
னலைமலிதண்புனலும்மதியாடரவும்மணிந்த
தலையவனூர்பனந்தாட்டிருத்தாடகையீச்சரமே. (௭)

செற்றரக்கன்வலியைத்திருமெல்விரலாலடர்த்து
முற்றும்வெண்ணீறணிந்ததிருமேனியன்மும்மையினான்
புற்றரவம்புலியினுரிதோலொடுகோவணமுந்
தற்றவனூர்பணந்தாட்டிருத்தாடகையீச்சரமே. (௮)

வின்மலைநாணரவம்மிகுவெங்கனலம்பதனாற்
புன்மைசெய்தானவர்தம்புரம்பொன்றுவித்தான்புனித
னன்மலர்மேலயனுங்கண்ணனுநாரணனும்மறியாத்
தன்மையனூர்பனந்தாட்டிருத்தாடகையீச்சரமே. (௯)

ஆதர்சமணரொடும்மடையைந்துகில்போர்த்துழலும்
நீதருரைக்குமொழியவைகொள்ளன்மினின்மலனூர்
போதவிழ்பொய்கைதனுட்டிகழ்புள்ளிரியப்பொழில்வாய்த்
தாதவிழும்பனந்தாட்டிருத்தாடகையீச்சரமே. (க

தண்வயல்சூழ்பனந்தாட்டிருத்தாடகையீச்சரத்துக்
கண்ணயலேபிறையானவன்றன்னைமுனைகாழியர்கோ
னண்ணியசெந்தமிழ்ஞானசம்பந்தனல்ல
பண்ணியல்பாடல்வல்லாரவர்தம்வினைபற்றறுமே. (க

திருச்சிற்றம்பல

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - சடையப்பஈசுவரர், தேவியார் - பெரியநாயகியம்மை.

---

## திருச்செங்காட்டங்குடி - பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

பைங்கோட்டுமலர்ப்புன்னைப்பறவைகாள்பயப்பூரச்
சங்காட்டந்தவிர்த்தென்னைத்தவிராநோய்தந்தானே
செங்காட்டங்குடிமேயசிறுத்தொண்டன்பணிசெய்ய
வெண்காட்டுள்ளனலேந்திவிளையாடும்பெருமானே. (

பொன்னம்பூங்கழிக்கானற்புணர்துணையோடுடன்வாழு
மன்னங்காளன்றில்காளகன்றும்போய்வருவீர்காள்
கன்னவின்றோட்சிறுத்தொண்டன்கணபதீச்சரமேய
வின்னமுதனிணையடிக்கீழெனதல்லலுரையீரே. (

குட்டத்துங்குழிக்கரையுங்குளிர்பொய்கைத்தடத்தகத்து
மிட்டத்தாலிரைதேருமிருஞ்சிறகின்மடநாராய்
சிட்டன்சீர்ச்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
வட்டவார்சடையார்க்கென்வருத்தஞ்சென்றுரையாயே.

கானருகும்வயலருகுங்கழியருகுங்கடலருகு
மீனிரியவருபுனலினிரைதேர்வெண்மடநாராய்
தேனமர்தார்ச்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
வானமருஞ்சடையார்க்கென்வருத்தஞ்சென்றுரையாயே. (

ஆரலாஞ்சுறவமேய்ந்தகன்கழனிச்சிறகுலர்த்தும்
பாரல்வாய்ச்சிறுகுருகேபயிறாவிமடநாராய்
சீருலாஞ்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
நீருலாஞ்சடையார்க்கென்னிலைமைசென்றுரையீரே. (

குரைக்கொண்டாரிடர்தீர்த்தல்கடனன்றேகுளிர்பொய்கைத்
துறைக்கெண்டைகவர்குருகேதுணைபிரியாமடநாராய்
கறைக்கண்டன்பிறைச்சென்னிக்கணபதீச்சரமேய
சிறுத்தொண்டன்பெருமான்சீரருளொருநாள்பெறலாமே. (

கருவடியபசுங்கடல்வெண்குருகேயொண்கழிநாரா
யொருவடியாளிரங்காளென்றொருநாள்சொன்றுரையீரோ
செருவடிதோட்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
திருவடிதன்றிருவருளேபெறலாமோதிறத்தவர்க்கே. (எ)

கூரார வினைதேர்ந்துகுளமுலவிவயலவாழுந்
தாராவேமடநாராய்தமியேற்கொன்றுரையீரோ
சீராளன்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
பேராளன்பெருமானதனருளொருநாள்பெறலாமே. (அ)

நறப்பொலிபூங்கழிக்கானல்வில்குருகேயுலகெல்லா
மறப்பலிதேர்ந்துழல்வார்க்கென்னலர்கோடலழகியதே
சிறப்புலவன்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
பிறப்பிலிபேர்பிதற்றிநின்றிழிக்கோவெம்பெருநலமே. (கூ)

செந்தண்பூம்புனல்பரந்தசெங்காட்டங்குடிமேய
வெந்தநீறணிமார்பன்சிறுத்தொண்டனவனவேண்ட
வந்தண்பூங்கலிக்காழியடிகளையேயடிபரவுஞ்
சந்தங்கொள்சம்பந்தன்றமிழுரைப்போர்தக்கோரே (௧௦-௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருப்பெருவேளூர் - பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்.

அண்ணாவுங்கழுக்குன்றுமாயமலையவைவாழ்வார்
விண்ணோருமண்ணோரும்வியந்தேத்தவருள்செய்வார்
கண்ணாவாருலகுக்குக்கருத்தானார்புரமெரித்த
பெண்ணாணாம்பெருமானார்பெருவேளூர்பிரியாரே. (க)

கருமானினுரியுடையர்கரிகாடரிமவானார்
மருமானார்இவரென்றுமடவாளோடுடனாவர்
பெருமானவிடையூர்வதுடையாரவெண்பொடிப்பூசும்
பெருமானார்பிஞ்ஞகனார்பெருவேளூர்பிரியாரே. (௨)

குணக்குந்தென்றிசைக்கண்ணுங்குடபாலும்வடபாலுங்
கணக்கென்னவருள்செய்வார்கழிந்தோர்க்குமொழிந்தோர்க்கும்
வணக்கஞ்செய்மனத்தராய்வணங்காதார்தமக்கென்றும்
பிணக்கஞ்செய்பெருமானார்பெருவேளூர்பிரியாரே. (௩)

இறைக்கொண்டவளையாளோடிருகூறாயொருகூறு
மறைக்கண்டத்திறைநாவர்மதிவெண்கதிலைவல்லா
கறைக்கொண்டமிடறுடையகனல்விளருஞ்சடைமுடிமேம்
பிறைக்கொண்டபெருமானார்பெருவேளூர்பிரியாரே. (௪)

விழையாதார்விழைவார்போல்விகிர்தங்கள்பலபேசிக்
குழையாதார்குழைவார்போற்குணநல்லபலகூறி

யழையாவுமலற்றுவுமடிவீழ்வார்தமக்கெனறும்
பிழையாதபெருமானூர்பெருவேளூர்பிரியாரே. (ரு

விரித்தார்நான்மறைப்பொருளையுமையஞ்சவிறல்வேழ
முரித்தாராமுரிபோர்த்துமதின்மூன்றுமொருகணையா
லெரித்தாராழிமைப்பள்விலிமையோர்கடொழுதிறைஞ்சப்
பெருத்தாரெம்பெருமானூர்பெருவேளூர்பிரியாரே. (சு

மறப்பிலாவடிமைக்கண்மனம்வைப்பார்தமக்கெல்லாஞ்
சிறப்பிலார்மதிலெய்தசிலைவல்லாரொருகணையா
பிறப்பிலார்பிணியிலலார்தமக்கென்றுங்கேடிலார்
பிறப்பிலாப்பெருமானூர்பெருவேளூர்பிரியாரே (எ

எரியார்வேற்கடற்றானையிலங்கைக்கோன்றனைவீழ
முரியாரந்தடந்தோள்களடர்த்துகந்தமுதல்வர்
வரியார்வெஞ்சிலைபிடித்துமடவாளையொருபாகம்
பிரியாதபெருமானூர்பெருவேளூர்பிரியாரே. (அ

சேணியலுநெடுமாலுந்திசைமுகனுஞ்செருவெய்திக்
காணியலவையறிவிலராய்க்கனல்வண்ணரடியிணைக்கீழ்
நாணியவர்தொழுதேத்தநாணுமேயருள்செய்து
பேணியவெம்பெருமானூர்பெருவேளூர்பிரியாரே (சு

புற்றேறியுணங்குவார்புகையார்ந்ததுகிலபோர்ப்பார்
சொற்றேறவேண்டாநீர்தொழுமின்கள்சுடர்வண்ண
மற்றேரும்பரிமாவுமதகளிறுமிவையொழியப்
பெற்றேறும்பெருமானூர்பெருவேளூர்பிரியாரே (கூ

பைம்பொன்சீர்மணிவாரிப்பலவுஞ்சேர்கனியுந்தி
யம்பொன்செய்மடவரலாரணிமல்குபெருவேளூர்
நம்பன்றன்கழலடைவிக்கவிலகின்றமறைஞான
சம்பந்தன்றமிழ்வல்லார்க்கருவினைநோய்சாராவே. (கக

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - பிரியாவீசுவரர், தேவியார் - மின்னனையாளம்மை.

---

## திருக்கச்சிநெறிக்காரைக்காடு-பண்-பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

வாரணவுமுலைமங்கைபங்கினராயகாகையினிற
போரணவும்மழுவொன்றங்கேந்திவெண்பொடியணிவார்
காரணவுமணிமாடங்கடைநவின்றகலிக்கச்சி
நீரணவுமலர்ப்பொய்கைநெறிக்காரைக்காட்டாரே. (

காருருமணிமிடற்றாகலகாடுருடைதலைகொண்
டேருரும்பலிக்குழலவாருமழமானினுரியதளர்

தேரூருநெடுவீதிச்செழுங்கச்சிமாநகர்வாய்
நீரூருமலர்ப்பொய்கைநெறிக்காரைககாட்டாரே. (உ)

கூறணிந்தார்கொடியிடையைக்குளிர்சடைமேலிளமதியோ
டாதணிந்தாராடரவம்பூண்டுகந்தாரான்வெள்ளை
யேறணிந்தார்கொடியதன்மேலென்பணிந்தார்வரைமார்பி
னீறணிந்தார்கலிக்கச்சிநெறிக்காரைககாட்டாரே (ங)

பிறைநவின்றசெஞ்சடைகள்பின்றாழப்பூதங்கண்
மறைநவின்றபாடலோடாடலராய்மழுவேந்திச்
சிறைநவின்றவண்டினங்கடங்கனிவாய்த்தேனகதுவு
நிறைநவின்றகலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. (ச)

அனறாலின்கீழிருந்தங்கறம்புரிந்தவருளாளர்
குனறாதவெஞ்சிலையிற்கோளரவநாண்கொளுவி
யொனறாதார்புரமூன்றுமோங்கெரியில்வெந்தவிய
நின்றாருங்கலிககச்சிநெறிக்காரைக்காட்டாரே. (ரு)

பன்வலர்கொண்டடிக்கீழ்வானோர்கள்பணிந்திறைஞ்ச
நன்மையிலாவல்லவுணர்நகர்மூன்றுமொருநொடியில்
வின்மலையினாண்கொளுவிவெங்கணையாலெய்தழித்த
நின்மலனார்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே (சா)

புற்றிடைவாளரவினொடுபுனைகொன்றைமதமத்த
மெற்றொழியாவலைபுனலோடிளமதியமேந்துசடைப்
பெற்றுடையாரொருபாகம்பெண்ணுடையாரகண்ணமரு
நெற்றியினாகலிக்கச்சிநெறிக்காரைககாட்டாரே. (எ)

ஏழ்கடல்சூழ்தென்னிலங்கைக்கோமானையெழில்வரைவாய்த்
தாழ்விரலாலூன்றியதோர்தன்மையினார்நன்மையினா
ராழ்கிடங்குஞ்சூழ்வயலுமதில்புல்கியழகமரு
நீண்மறுகிற்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே (அ)

ஊண்டானுமொலிகடனஞ்சுடைதலையிற்பலிகொள்வா
மாண்டார்தமெலும்பணிவர்வரியரவோடெழிலாமை
பூண்டாருமோரிருவரறியாமைப்பொங்கெரியாய்
நீண்டாருங்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. (கூ)

குண்டாடிசசமண்படுவார்கூறைதனைமெய்போர்த்து
மிண்டாடித்திரிதருவாருரைப்பனகண்மெய்யல்ல
வணடாருங்குழலாளைவரையாகத்தொருபாகங்
கண்டாருங்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. (க0)

கண்ணாருங்கலிக்கச்சிநெறிக்காரைககாட்டுறையும
பொண்ணாருந்திருமேனிப்பெருமானதடிவாழ்த்தி

தண்ணாரும்பொழிற்காழித்தமிழ்ஞானசம்பந்தன்
பண்ணாருந்தமிழ்வல்லார்பரலோகத்திருப்பாரே. (கக

திருச்சிற்றம்பலம்.

தொண்டைநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - காரைத்திருநாதேசுவரர், தேவியார் - காரார்குழலியம்மை.

ஆகபதிகம்-சுரு.

---

## திருவேட்டக்குடி - பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

வண்டிரைக்குமலர்க்கொன்றைவிரிசடைமேல்மதியரவங்
கண்டிரைக்கும்பிறைச்சென்னிக்காவாலிகழல்க
டொண்டிரைத்துத்தொழுதிறைஞ்சத்துளங்கொளிநீர்ச்சுடர்ப்பவளந்
தெண்டிரைக்கண்கொணர்ந்தெறியுந்திருவேட்டக்குடியாரே. (க

பாய்திமிலர்வலையோடுமீன்வாரிப்பயின்றெங்குங்
காசினியிற்கொணர்ந்தட்டுங்கைதல்சூழ்கழிக்கானம்
போயிரவிற்பேயோடும்புறங்காட்டிற்புரிந்தழகார்
தீயெரிகைமகிழ்ந்தாருந்திருவேட்டக்குடியாரே (உ

தோத்திரமாமணலிலிங்கந்தொடங்கியவானிரையிற்பால்
பாத்திரமாவாட்டுதலும்பரஞ்சோதிபரிந்தருளி
யாத்தமெனமறைநால்வர்க்கறம்புரிநூலன்றுரைத்த
தீர்த்தமல்குசடையாருந்திருவேட்டக்குடியாரே. (ங

கலவஞ்சேர்கழிக்கானல்கதிர்முத்தங்கலந்தெங்கு
மலவஞ்சேரணைவாரிக்கொணர்ந்தெறியுமகன்றுறைவாய்
நிலவஞ்சேர்நுண்ணிடையநேரிழையாளவளோடுந்
திலதஞ்சேர்நெற்றியினார்திருவேட்டக்குடியாரே (ச

வங்கமார்கடலலறப்பருவரையோடரவுழலச்
செங்கண்மால்கடையவெழுநஞ்சருந்துசிவமூர்த்தி
யங்கநான்மறைநால்வர்க்கறம்பொருளின்பயனளித்த
திங்கள்சேர்சடையாருந்திருவேட்டக்குடியாரே. (ரு

நாவாயபிறைச்சென்னிநலந்திகழுமிலயத்திப்பி
கோவாதநித்திலங்கள்கொணர்ந்தெறியுங்குளிர்கான
லேவாரும்வெஞ்சிலையாலெயின்மூன்றுமெரிசெய்த
தேவாதிதேவனார்திருவேட்டக்குடியாரே (சு

பானிலவும்பங்கயத்துப்பைங்கானல்வெண்குருகு
கானிலவுமலர்ப்பொய்கைக்கைதல்சூழ்கழிக்கானன்
மானின்விழிமலைமகளோடொருபாகம்பிரிவரியார்
தேனிலவுமலர்ச்சோலைத்திருவேட்டக்குடியாரே. (எ

துறையுலவுகடலோதஞ்சுரிசங்கமிடறிப்போய்
நறையுலவும்பொழிற்புன்னைநன்னீழற்கீழமரு

புற்றரவுபற்றியகைநெற்றியதுமற்றொருகணொற்றைவிடையன்
செற்றதெயிலுற்றதுமையற்றவர்கணற்றுணைவனிற்றனகர்தான்
சுற்றமணிபெற்றதொளிசெற்றமொடுகுற்றமிலதெற்றெனவினாய்க்
கற்றவர்கள்சொற்றொகையின்முற்றுமொளிபெற்றகயிலாயமலையே. (௨)

சிங்கவரைமங்கையர்தங்களனசெய்கைநிறைகொங்குமலர்தூ
வெங்கள்வினைசங்கையவையிங்ககலவங்கமொழியெங்குமுளவாய்த்
திங்களிருணெங்கவொளிவிங்கவிருதொங்கலொடுதங்கவயலே
கங்கையொடுபொங்குசடையெங்களிறைதங்குகயிலாயமலையே. (௩)

முடியசடைபிடியதொருவடியமழுவுடையசெடியுடையதலையில்
வெடியவினைகொடியகெடவிடுசில்பலிநொடியமகிழடிகளிடமாய்
கொடியசுரலுடையவிடைகடியதுடியடியினொடுமிடியினதிரக்
கடியகுரனெடியமுகிலினமடியவதரடிகொள்கயிலாயமலையே. (௪)

குடவயகையினுடங்கெரிதொடர்ந்தெழவிடங்கிளர்படங்கொளரவ
மடங்கொளிபடர்ந்திடநடந்தருவிடங்களனிடந்தண்முகில்போய்த்
தடங்கடறொடர்ந்துடனடங்குவவிடங்கொளமிடைந்தகுரலாற்
கடுங்கலினமுடங்களைநுடங்கரவொடுங்குகயிலாயமலையே (௫)

ஏதமிலபூதமொடுகோதைதுணையாதிமுதல்வேதவிகிர்தன்
கீதமொடுநீதிபலவோதிமறவாதுபயிலுநகர்தான்
றாதுபொதிபோதுவிடவூதுசிறைமீதுதுளிகூதனலியக்
காதன்மிகுசோதிகிளர்மாதுபயில்சீதகயிலாயமலையே. (௬)

சென்றுபலவென்றுலவுபுன்றலையர்துன்றலொடுமொன்றியுடனே
நின்றமரரென்றுமிறைவன்றனடிசென்றணிகினன்றுநகர்தான
துன்றுமலர்பொன்றிகழ்செய்கொன்றைவிரைதென்றலொடுசென்றுகமழக்
கன்றுபிடிதுன்றுகளிறென்றிவைமுனின்றகயிலாயமலையே. (௭)

மருப்பிடைநெருப்பெழுதருக்கொடுசெருச்செய்தபருத்தகளிறின்
பொருப்பிடைவிருப்புறவிருக்கையையொருக்குடனரக்கனுணரா
தொருத்தியைவெருக்குறவெருட்டலுநெருக்கெனநிருத்தவிரலாற்
கருத்திலவொருத்தனைநெருக்கிறநெரிக்ககயிலாயமலையே. (௮)

பரியதிரையெரியபுனல்வரியபுலிபுரியதுமைபரிசையுடையன
வரியவளையரியகணியுருவினொடுபுரிவினவர்பிரிவினகர்தான்
பெரியவெரியுருவமதுதெரியவுருபுரிவுதருமருமையயனாற்
கரியவனுமரியமறைபுரியவனுமருவுகயிலாயமலையே (௯)

அண்டர்தொழுசண்டிபணிகண்டடிமைகொண்டவிறைதுண்டமதியோ
டிண்டைபுனைவுண்டசடைமுண்டதரசண்டவிருள்கண்டரிடமாங்
குண்டமணவண்டரவர்மண்டைகையிலுண்டுழறிமிண்டுசமயங்
கண்டவர்கள்கொண்டவர்கள்பண்டுமறியாதகயிலாயமலையே. (௧௦)

அந்தண்வரைவந்தபுனறந்ததிரைசந்தனமொடுந்தியகிலுங்
கந்தமலர்கொந்தினொடுமந்திபலசிந்துகயிலாயமலையே

லெந்தையடிவந்தணுகுசந்தமொடுசெந்தமிழிசைந்தபுகலிப்
பந்தனுரைசிந்தைசெயவந்தவினைநைந்துபரலோகமெளிதே. (கக)

திருச்சிற்றம்பலம்

## திருக்காளத்தி - திருவிராகம் - பண் - சவுதாரி.

திருச்சிற்றம்பலம்

வானவர்கடானவர்கள்வாதைபடவந்ததொருமாகடல்விடந்
தானமுதுசெய்தருள்புரிந்தசிவன்மேவுமலைதன்னைவினவி
லேனமிளமானினொடுகிள்ளைதினைகொள்ளவெழிலார்கவணினாற்
கானவர்தமாமகளிர்கனகமணிவிலகுகாளத்திமலையே (க)

முதுசினவிலவுணர்புரமூன்றுமொருநொடிவரையின்மூளவெரிசெய்
சதுரர்மதிபொதிசடையர்சங்கரர்விரும்புமலைதன்னைவினவி
லெதிரெதிரவெதிர்பிணையவெழுபொறிகள்சிதறவெழிலேனமுழுதக
கதிர்மணியின்வளரொளிகளிருளகலநிலவுகாளத்திமலையே. (உ)

வல்லைவருகாளியைவகுத்துவலியாகுமிகுதாருகனைநீ
கொல்லெனவிடுத்தருள்புரிந்தசிவன்மேவுமலைகூறிவினவிற்
பல்பலவிருங்கனி * பருங்கிமிகவுண்டவைநெருங்கியினமாய்க
கல்லதிரநின்றுகருமந்திவிளையாடுகாளத்திமலையே (௩)

வேயனையதோளுமையோர்பாகமதுவாகவிடையேறிசடைமேற்
றூயமதிசூடிசுடுகாடினடமாடிமலைதன்னைவினவில்
வாய்கலசமாகவழிபாடுசெயும்வேடன்மலராகுநயனங்
காய்கணையினாலிடந்தீசனடிகூடுகாளத்திமலையே (௪)

மலையின்மிசைதனின்முகில்போல்வருவதொருமதகரியைமழைபோலலறக்
கொலைசெய்துமையஞ்சவுரிபோர்த்தசிவனமேவுமலைகூறிவினவி
லலைகொள்புனலருவிபலசுனைகள்வழியிழியவயனிலவுமுதுவேய்
கலகலெனவொளிகொள்கதிர்முத்தமவைசிந்துகாளத்திமலையே. (௫)

பாரதம்விளங்கியபகீரதனருந்தவமுயன்றபணிகண்
டாரருள்புரிந்தலைகொள்கங்கைசடையேற்றவரன்மலையைவினவில்
வாரதரிருங்குறவர்சேவலின்மடுத்தவரெரித்தவிறகிற்
காரகிலிரும்புகைவிசும்புகமழ்கின்றகாளத்திமலையே. (௬)

ஆருமெதிராதவலியாகியசலந்தரனையாழியதனு
லீரும்வகைசெய்தருள்புரிந்தவனிருந்தமலைதன்னைவினவி
லூருமரவம்மொளிகொண்மாமணியுமிழ்ந்தவையுலாவிவரலாற்
காரிருள்கடிந்துகனகம்மெனவிளங்குகாளத்திமலையே. (எ)

எரியனையசூரியமயிராவணனையீடழியவெழில்கொள்விரலாற்
பெரியவரையூன்றியருள்செய்தசிவன்மேவுமலைபெற்றிவினவில்

* பருகி-எனச்சொல்வது—விகாரவகையாற் பருங்கியெனநின்றது.

வரியசிலைவேடுவர்களாடவர்கணீடுவரையூடுவரலாற்
கரியினொடுவரியழுவையரியினமும்வெருவுகாளத்திமலையே (அ)

இனதளவிலிவனதடியிணையுமுடியறிதுமெனவிகலுவார்
தனதுருவமறிவரியசகலசிவன்மேவுமலைதன்னைவினவிற்
புனவர்புனமயிலனையமாதரொடுமைந்தர்மணம்புணருநாட்
கனகமெனமலர்களணிவேங்கைகணிலாவுகாளத்திமலையே (கூ)

நின்றுகவளம்பலகொள்கையரொடுமெய்யிலிடுபோர்வையமணர்
நன்றியறியாதவகைநின்றவர்கள்மேயமலைநாடிவினவிற்
குன்றின்மலிதுன்றுபொழினின்றுகுளிர்சந்தின்முறிதின்றுகுலவிக்
கன்றினொடுசென்றுபிடிநின்றுவிளையாடுகாளத்திமலையே (க0)

காடதிடமாகநடமாடுசிவன்மேவுகாளத்திமலையை
மாடமொடுமாளிகைகணீடுவளர்கொச்சைவயமன்னுதலைவ
னாடுமலிநீடுபுகழ்ஞானசம்பந்தனுரைநல்லதமிழின
பாடலொடுபாடுமிசைவல்லவர்கணல்லர்பரலோகமெளிதே. (கக)

திருச்சிற்றம்பலம்

---

## திருமயிலாடுதுறை - திருவிராகம்-பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்.

ஏனவெயிறாடரவொடென்புவரியாமையிவைபூணடிளையராய்க்
கானவரிநீடுழுவையதளுடையபடர்சடையர்காணியெனலா
மானபுகழ்வேதியர்களாகுதியின்மீதுபுகைபோயழகார்
வானமுறுசோலைமிசைமாசுபடமூசுமயிலாடுதுறையே. (க)

அந்தண்மதிசெஞ்சடையரங்கணெழில்கொன்றையொடணிந்தழகரா
மெந்தமடிகட்கினியதானமதுவேண்டிலெழிலார்பதியதாங்
கந்தமலிசந்தினொடுகாரகிலும்வாரிவருகாவிரியுளால
வந்ததிரையுந்தியெதிர்மந்திமலர்சிந்துமயிலாடுதுறையே (உ)

தோளின்மிசைவரியரவநஞ்சழலவீக்கிமிகமோக்கரியராய்
மூளைபடுவெண்டலையிலுண்டுமுதுகாடுறையுமுதல்வரிடமாம்
பாளைபடுபைங்கமுகுசெங்கனியுதிர்த்திடநிரந்துகமழ்பூ
வாளைகுதிகொள்ளமடலவிழ்ந்தமணநாறுமயிலாடுதுறையே (ங)

ஏதமிலவரியமறைமலையர்மகளாகியவிலங்குநுதலொண்
பேதைதடமார்பதிடமாகவுறைகின்றபெருமானதிடமாங்
காதன்மிகுகவ்வையொடுமவ்வலவைகூடிவருகாவிரியுளான்
மாதர்மறிதிரைகள்புகலெறியவெறிகமழுமயிலாடுதுறையே. (ச)

பூவிரிகதுப்பின்மடமங்கையரகந்தொறுநடந்துபலிதேர்
பாவிரியிசைக்குரியபாடல்பயிலும்பரமர்பழமையெனலாங்
காவிரிநுரைத்திருகரைக்குமணிசிந்தவரிவண்டுகவர
மாவிரிமதுக்கிழியமந்திகுதிகொள்ளுமயிலாடுதுறையே. (ரு)

கடந்திகழ்கருங்களிறுரித்துமையுமஞ்சமிகநோக்கரியராய்
விடந்திகழுமூவிலைநல்வேலுடையவேதியர்விரும்புமிடமாந் [வாய்
தொடர்ந்தெழுநீர்கிடந்தவொருசோதிமிகுதொண்டையெழில்கொண்டதுவர்
மடந்தையர்குடைந்தபுனல்வாசமிகநாறுமயிலாடுதுறையே. (சூ)

அவ்வதிசையாருமடியாருமுளராகவருள்செய்தவர்கண்மே
லெவ்வமறவைகலுமிரங்கியெரியாடுமெமதீசனிடமாங்
கவ்வையொடுகாவிரிகலந்துவருதென்கரைநிரந்துகமழ்பூ
மவ்வலொடுமாதவிமயங்குமணநாறுமயிலாடுதுறையே. (எ)

இலங்கைநகர்மன்னன்முடியொருபதினோடிருபதுந்தோணெரியவிரலால்
விலங்கலிலடர்த்தருள்புரிந்தவரிருந்தவிடமவினவுதிர்களேற்
கலங்கனுரையுந்தியெதிர்வந்தகயமூழ்குமலர்கொண்டுமகிழ
மலங்கிவருகாவிரிநிரந்துபொழிகின்றமயிலாடுதுறையே. (அ)

ஒண்டிறலினான்முகனுமாலுமிகநேடியுணராதவகையா
லண்டமுறவங்கியுருவாகிமிகநீண்டவரனூரதிடமாங்
கெண்டையிரைகொண்டுகெளிறுடனிருந்துகிளர்வாயறுதல்சேர
வண்டன்மணல்கிண்டிமடநாரைவிளையாடுமயிலாடுதுறையே. (கூ)

மிண்டுதிறலமணரொடுசாக்கியருமலர்தூற்றமிக்கதிறலோ
னிண்டைகுடிகொண்டசடையெங்கள்பெருமானதிடமென்பரொழிலார்
தெண்டிரைபரந்தொழுகுகாவிரியதென்கரைநிரந்துகமழ்பூ
வண்டவைதிளைக்கமதுவந்தொழுகுசோலைமயிலாடுதுறையே. (கo)

நிணந்தருமயானநிலவானமதியாதவொருசூலமொடுபேய்க்
கணந்தொழுகபாலிகழலேத்திமிகவாய்த்தவொருகாதன்மையினான்
மணந்தண்மலிகாழிமறைஞானசம்பந்தன்மயிலாடுதுறையைப்
புணர்ந்ததமிழ்பத்துமிசையாலுரைசெய்வார்பெறுவாபொனவுலகமே. (கக)

திருச்சிற்றம்பலம்

---

## திருவைகா - திருவிராகம் - பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

கோழைமிடறாககவிகோளுமிலவாகவிசைகூடும்வகையா
லேழையடியாரவர்கள்யாவைசொனசொன்மகிழுமீசனிடமாந்
தாழையிளநீர்முதியகாய்கமுகின்வீழநிறைதாறுசிதறி
வாழையுதிர்வீழ்கனிகணூறிவயல்சேறுசெயும்வைகாவிலே. (க)

அண்டமுறுமேருவரையங்கிகணைநாணரவதாகவெழிலார்
விண்டவர்தமுப்புரமெரித்தவிகிர்தன்னவன்விரும்புமிடமாம்
புண்டரிகமாமலர்கள்புக்குவிளையாடுவயல்சூழ்தடமெலாம்
வண்டினிசைபாடவழகார்குயின்மிழற்றுபொழில்வைகாவிலே. (உ)

ஊனமிலராகியுயர்நற்றவமெய்கற்றவையுணர்ந்தவடியார்
ஞானமிகநின்றுதொழுநாளுமருள்செய்யவலநாதனிடமா

மாணவயல்சூழ்தருமல்குழியருகேபொழில்கடோறுமழகார்
வானமதியோடுமழைநீண்முகில்கள்வந்தணவும்வைகாவிலே. (௩)

இன்னவுருவின்னநிறமென்றறிவதேலரிதுநீதிபலவுந்
தன்னதுருவாமெனமிகுத்ததவநீதியொடுதானமர்விட
முன்னைவினைபோம்வகையினான்முழுதுணர்ந்துமுயல்கின்றமுனிவர்
மன்னவிருபோதுமருவித்தொழுதுசேரும்வயல்வைகாவிலே. (௪)

வேதமொடுவேள்விபலவாயினமிகுத்துவிதியாறுசமய
மோதியுமுணர்ந்துமுளதேவர்தொழநின்றருள்செயொருவனிடமா
மேதகையகேதகைகள்புன்னையொடுஞாழலவைமிக்கவழகான்
மாதவிமணங்கமழவண்டுபலபாடுபொழில்வைகாவிலே. (௫)

நஞ்சமுதுசெய்தமணிகண்டனமையாளுடையஞானமுதல்வன்
செஞ்சடையிடைப்புனல்கரந்தசிவலோகனமர்கின்றவிடமா
மஞ்சுடரொடாறுபதமேழினிசைபெண்ணரியவண்ணமுளவாய்
மைந்தரொடுமாதர்பாலருந்தொழுதுசேரும்வயல்வைகாவிலே. (௬)

நாளுமிகுபாடலொடுஞானமிகுநல்லமலர்வல்லவகையாற்
றோளினொடுகைகுளிரவேதொழுமவர்க்கருள்செய்சோதியிடமா
நீளவளர்சோலைதொறுநாளிபலதுன்றுகனிநின்றதுதிர
வாளைகுதிகொள்ளமதுநாறமலர்விரியும்வயல்வைகாவிலே. (௭)

கையிருபதோடுமெய்கலங்கிடவிலங்கலையெடுத்தகடியோ
னையிருசிரங்களையொருங்குடனெரித்தவழகன்றனிடமாங்
கையின்மலர்கொண்டுநலகாலையொடுமாலைகருதிப்பலவிதம்
வையமெலாமருவிநின்றுதொழுதேத்துமெழில்வைகாவிலே. (௮)

அந்தமுதலாதிபெருமானமரர்கோனையயன்மாலுமிவர்க
ளெந்தைபெருமானிறைவனென்றுதொழநின்றருள்செயீசனிடமாஞ்
சிந்தைசெய்துபாடுமடியார்பொடிமெய்பூசியெழுதொண்டரவர்கள்
வந்துபலசந்தமலர்முந்தியணையும்பதிநல்வைகாவிலே. (௯)

ஈசனெமையாளுடையவெந்தைபெருமானிறைவனென்றுதனையே
பேசுதல்செயாவமணர்புத்தரவர்சித்தமணையாவவனிடங்
தேசமதெலாமருவிநின்றுபரவித்திகழநின்றபுகழோன்
வாசமலரானபலதூவியணையும்பதிநல்வைகாவிலே. (௧௦)

முற்றுநமையாளுடையமுக்கண்முதல்வன்றிருவைகாவிலதனைச்
செற்றமலினார்சிரபுரத்தலைவன்ஞானசம்பந்தனுரைசெ
யுற்றதமிழ்மாலையீரைந்துமிவைவல்லவருருத்திரரெனப்
பெற்றமரலோகமிகவாழ்வர்பிரியாரவர்பெரும்புகழொடே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-வில்வனேசர், தேவியார்-வளைக்கைவல்லியம்மை.

ஆகபதிகம்-௭௦.

## திருமாகறல் - திருவிராகம் - பண் : சாதாரி

திருச்சிற்றம்பலம்.

விங்குவிளைகழனிமிகுகடைசியர்கள்பாடல்விளையாடலரவ
மங்குலொடுநீள்கொடிகண்மாடமலிநீடுபொழின்மாகறலுளான்
கொங்குவிரிகொன்றையொடுகங்கைவளர்திங்களணிசெஞ்சடையினான்
செங்கண்விடையண்ணலடிசேர்பவர்கடீவினைகடீருமுடனே. (௧)

கலையினொலிமங்கையர்கள்பாடலொலியாடல்கவினெய்தியழகார்
மலையினிகர்மாடமுயர்நீள்கொடிகள்வீசுமலிமாகறலுளா
னிலையின்மலிவேலனனையசூலமலனேந்தியெரிபுன்சடையினு
ளலைகொள்புனலேந்துபெருமானடியையேத்தவினையகலுமிகவே. (௨)

காலையொடுதுந்துமிகள்சங்குழல்யாழ்முழவுகாமருவுசீர்
மாலைவழிபாடுசெய்துமாதவர்களேத்திமகிழ்மாகறலுளான்
றோலையுடைபேணியதன்மேலோர்சுடர்நாகமசையாவழகிதாப்
பாலையனநீறுபுனைவானடியையேத்தவினைபறையுமுடனே. (௩)

இங்குகதிர்முத்தினொடுபொன்மணிகளுந்தியெழின்மெய்யுளுடனே
மங்கையருமைந்தர்களுமன்னுபுனலாடிமகிழ்மாகறலுளான்
கொங்குவளர்கொன்றைகுளிர்திங்களணிசெஞ்சடையினானடியையே
நுங்கள்வினைதீரமிகவேத்திவழிபாடுநுகராவெழுமினே. (௪)

துஞ்சுநறுநீலமிருணீக்கவொளிதோன்றுமதுவார்கழனிவாய்
மஞ்சுமலிபூம்பொழிலின்மயில்கணடமாடன்மலிமாகறலுளான்
வஞ்சமதயானையுரிபோர்த்துமகிழ்வானோர்மழுவாளன்வளரு
நஞ்சமிருள்கண்டமுடைநாதனடியாரைநலியாவினைகளே. (௫)

மன்னுமறையோர்களொடுபல்படிமமாதவர்கள்கூடியுடனா
யின்னவகையாலினிதிறைஞ்சியிமையோரிலெழுமாகறலுளான்
மின்னைவிரிபுன்சடையின்மேன்மலர்கள்கங்கையொடுதிங்களெனவே
யுன்னுமவர்தொல்வினைகளொல்கவுயர்வானுலகமேறலெளிதே. (௬)

வெய்யவினைநெறிகள்செலவந்தணையுமேல்வினைகள்வீட்டலுறுவீர்
மைகொள்விரிகானன்மதுவார்கழனிமாகறலுளானெழிலதார்
கையகரிகால்வரையின்மேலதுரிதோலுடையமேனியழகா
ரையனடிசேர்பவரையஞ்சியடையாவினைகளகலுமிகவே. (௭)

தூசுதுகினீள்கொடிகண்மேகமொடுதோய்வனபொன்மாடமிசையே
மாசுபடுசெய்கைமிகமாதவர்களோதிமலிமாகறலுளான்
பாசுபதவிச்சைவரிநச்சரவுகச்சையுடைபேணியழகார்
பூசுபொடியீசனெனவேத்தவினைநிற்றலிலபோகுமுடனே. (௮)

தூயவிரிதாமரைகணெய்தல்கழுநீர்குவளைதோன்றமதுவுண்
பாயவரிவண்டுபலபண்முரலுமோசைபயின்மாகறலுளான்
சாயவிரலூன்றியவிராவணனதன்மைகெடநின்றபெருமா
னாயபுகழேத்துமடியார்கள்வினையாயினவுமகல்வதெளிதே. (௯)

காலினலபைங்கழல்கணீண்முடியின்மேலுணர்வுகாமுறவினான்
மாலுமலரானுமறியாமையெரியாகியுயர்மாகறலுளா
னாலுமெரிதோலுமுரிமாமணியநாகமொடுகூடியுடனா
யாலும்விடையூர்தியுடையடிகளடியாரையடையாவினைகளே. (௧௦)

கடைகணெடுமாடமிகவோங்குகமழ்வீதிமலிகாழியவர்கோ
னடையும்வகையாற்பரவியரனையடிகூடுசம்பந்தனுரையான்
மடைகொள்புனலோடுவயல்கூடுபொழின்மாகறலுளானடியையே
யுடையதமிழ்பத்துமுணர்வாரவர்கடொல்வினைகளொல்குமுடனே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

தொண்டைநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - அடைக்கலங்காத்தநாதர், தேவியார் - புவனநாயகியம்மை.

## திருப்பட்டீச்சரம் - திருவிராகம் - பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்.

பாடன்மறைசூடன்மதிபல்வளையோர்பாகமதின்மூன்றோர்கணையாற்
கூடவெரியூட்டியெழில்காட்டிநிழல்கூடுபொழில்சூழ்பழசையுண்
மாடமழபாடியுறைபட்டீசரமேயகடிகட்டரவினார்
வேடநிலைகொண்டவரைவீடுநெறிகாட்டிவினைவீடுமவரே. (௧)

நீரின்மலிபுன்சடையர்நீளரவுகச்சையதுநச்சிலையதோர்
கூரின்மலிசூலமதுவேந்தியுடைகோவணமுமானினுரிதோல்
காரின்மலிகொன்றைவிரிதார்கடவுள்காதல்செய்துமேயநகர்தான்
பாரின்மலிசீர்பழசைபட்டீசரமேத்தவினைபற்றழியுமே. (௨)

காலைமடவார்கள்புனலாடுவதுகவ்வைகடியார்மறுகெலா
மாலைமணநாறுபழையாறைமழபாடியழகாயமலிசீர்ப்
பாலையனநீறுபுனைமார்பனுறைபட்டீசரமேபரவுவார்
மேலையொருமால்கடல்கள்போற்பெருகிவிண்ணுலகமாளுமவரே. (௩)

கண்ணின்மிசைநண்ணியிழிவிப்பமுகமேந்துகமழ்செஞ்சடையினான்
பண்ணின்மிசைநின்றுபலபாணிபடவாடவலபான்மதியினான்
வண்ணின்மிசைநேரின்மழபாடிமலிபட்டீசரமேமருவுவார்
விண்ணின்மிசைவாழுமிமையோரொடுடனாதலதுமேவலெளிதே. (௪)

மருவமுழவதிரமழபாடிமலிமத்தவிழவார்க்கவரையார்
பருவமழைபணகவர்செய்பட்டீசரமேயபடர்புன்சடையினான்
வெருவமதயானையுரிபோர்த்துமையையஞ்சவருவெள்விடையினா
னுருவமெரிகழல்கடொழவுள்ளமுடையாரையடையாவினைகளே. (௫)

மறையினொலிகீதமொடுபாடுவனபூதமடிமருவிவரவார்
பறையினொலிபெருகநிகழ்நட்டமமர்பட்டீசரமேயபனிகூர்
பிறையினொடுமருவியதோர்சடையினிடையேற்றபுனறோற்றநிலையா
யிறைவனடிமுறைமுறையினேத்துமவர்தீத்தொழில்களில்லைமிகவே. (௬)

பிறவிபிணிமூப்பினொடுநீங்கியிமையோருலகுபேணலுறுவார்
துறவியெனுமுள்ளமுடையார்கள்கொடிவீதியழகாயதொருசீ
ரிறைவனுறைபட்டீச்சரமேத்தியெழுவார்கள்வினையேதுமிலவாய்
நறவவிரையாலுமொழியாலும்வழிபாடுமறவாதவவரே. (௭)

நேசமிகுதோள்வலவனாகியிறைவன்மலையைநீக்கியிடலும்
நீசன்விறல்வாட்டிவரையுற்றதுணராதநிரம்பாமதியினா
னீசனுறைபட்டீச்சரமேத்தியெழுவார்கள்வினையேதுமிலவாய்
நாசமறவேண்டுதலினண்ணலெளிதாமமரர்விண்ணுலகமே. (௮)

தூயமலரானுநெடியானுமறியாரவன்றேற்றநிலையின்
னேயவகையானதனையாரதறிவாரணிகொண்மார்பினகலம்
பாயநலநீறதணிவானுமைதனோடுமுறைபட்டீச்சரமே
மேயவனதீரடியுமேத்தவெளிதாகுநலமேலுலகமே. (௯)

தடுக்கினையிடுக்கிமடவார்களிடுபிண்டமதுவுண்டுழறருங்
கடுப்பொடியுடற்கயவர்கத்துமொழிகாதல்செய்திடாதுகமழ்சேர்
மடக்கயல்வயற்கொண்மழபாடிநகர்நீடுபழையாறையதனுட்
படைக்கொருகரத்தன்மிகுபட்டீச்சரமேத்தவினைபற்றறுதலே. (௧௦)

மந்தமலிசோலைமழபாடிநகர்நீடுபழையாறையதனிற்
பந்தமுயர்வீடுநலபட்டீச்சரமேயபடர்புன்சடையனை
யந்தண்மறையோரினிதுவாழ்புகலிஞானசம்பந்தனணியார்
செந்தமிழ்கள்கொண்டினிதுசெப்பவலதொண்டர்வினைநிற்பதிலவே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - பட்டீச்சரநாதர், தேவியார்-பல்வளைநாயகியம்மை.

## திருத்தேவூர் - திருவிராகம் - பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்

காடுபயில்வீடுமுடையோடுகலமூடுமுடையாடைபுலிதோ
லேடுபலியூணதுடைவேடமிகுவேதியர்திருந்துபதிதா
னாடகமதாடமனைபாடல்வரிகோடல்கைமறிப்பநலமார்
சேடுமிகுபேடையனமூடிமகிழ்மாடமிசைதேவூரதுவே. (௧)

கோளரவுகொன்றைநகுவெண்டலையெருக்குவனிகொக்கிறகொடும்
வாளரவுதண்சலமகட்குலவுசெஞ்சடைவரத்திறைவனூர்
வேளரவுகொங்கையிளமங்கையர்கள்குங்குமம்விளாக்குமணமார்
தேளரவுதென்றறெருவெங்குநிறைவொன்றிவருதேவூரதுவே. (௨)

பண்டடவுசொல்மலைவல்லியுமைபங்கனெமையாளுமிறைவ
னெண்டடவுவானவர்நிறைஞ்சுகழலோனினிதிருந்தவிடமாம்
விண்டடவுவார்பொழிலுகுத்தநறவாடிமலர்சூடிவிரையார்
* செண்டடவுமாளிகைசெழிக்[illegible]வொன்றிவளர்தேவூரதுவே. (௩)

மாசின்மனநேசர்தமதாசைவளர்சூலதரன்மேலையிமையோ
ரீசன்மறையோனையெரியாடிமிகுபாசுபதன்மேவுபதிதான்
வாசமலர்கோதுகுயில்வாசகமுமாதரவர்பூவைமொழியுந்
தேசவொலிவீணையொடுகீதமதுவீதிநிறைதேவூரதுவே (௪)

கானமுறுமான்மறியனானையுரிபோர்வைகனலாடல்புரிவோ
னேனவெயிறாமையிளநாகம்வளர்மார்பினிமையோர்தலைவனூர்
வானளவுசூதமிளவாழைமகிழ்மாதவிபலாநிலவிவார்
தேனமதுவுண்டுவரிவண்டுமெருள்பாடிவருதேவூரதுவே (௫)

ஆறினொடுகீறுமதியேறுசடையேறனடையார்நகர்கடான்
சீறுமவைவேறுபடநீறுசெய்தநீறனுமையாளுமரனூர்
வீறுமலரூருமதுவேறிவளர்வாயவிளைகின்றகழனிச்
சேறுபடுசெங்கயல்விளிப்பவிளவாளைவருதேவூரதுவே. (௬)

கன்றியெழவென்றிநிகழ்துன்றுபுரமன்றவியநின்றுநகைசெ
யென்றனதுசென்றுநிலையெந்தைதனதந்தையமரின்பநகர்தான்
முன்றின்மிசைநின்றபலவின்கனிகடின்றுகறவைக்குருளைகள்
சென்றிசையநின்றுதுளியொன்றவிளையாடிவளர்தேவூரதுவே. (௭)

ஓதமலிகின்றதெனிலங்கையரையன்மலிபுயங்களிரியப்
பாதமலிகின்றவிரலொன்றினிலடர்த்தபரமன்றனதிடம்
போதமலிகின்றமடவார்கணடமாடலொடுபொங்குமுரவஞ்
சேதமலிகின்றகரம்வென்றிதொழிலாளர்புரிதேவூரதுவே. (௮)

வண்ணமுகிலன்னவெழிலண்ணலொடுசுண்ணமலிவண்ணமலர்மே
னண்ணவனுமெண்ணரியவிண்ணவர்கள்கண்ணவனலங்கொள்பதிதான்
வண்ணவனநுண்ணிடையினெண்ணரியவன்னநடையின்மொழியினார்
திண்ணவனமாளிகைசெறிந்தவிசையாழ்மருவுதேவூரதுவே. (௯)

பொச்சமமர்பிச்சைபயிலச்சமணுமெச்சமறுபோதியருமா
மொச்சைபயிலிச்சைகடிபிச்சன்மிகுநச்சரவன்மொச்சுநகர்தான்
றைச்சின்முகில்வைச்சபொழில். (௰)

துங்கமிகுபொங்கரவுதங்குசடைநங்களிறைதுன்றுகுழலார்
செங்கயல்கண்மங்கையுமைநங்கையொருபங்கனமர்தேவூரதன்மேற்
பைங்கமலமங்கணிகொடிண்புகலிஞானசம்பந்தனுரைசெய்
சங்கமலிசெந்தமிழ்கள்பத்துமிசைவல்லவர்கள்சங்கையிலரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

பத்தாவதிற்குறைவு - இலமானதிற்சேர்ந்தது

## திருச்சண்பைநகர் - திருவிராகம் - பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

எந்தமதுசிந்தைபிரியாதபெருமானெனவிறைஞ்சியிமையோர்
வந்துதுதிசெய்யவளர்தீபமொடுதூபமலிவாய்மையதனு

வந்தியமர்சந்திபலவர்ச்சனைகள்செய்யவமர்கின்றவழகன்
சந்தமலிகொந்தளநன்மாதினொடுமேவுபதிசண்பைநகரே. (௧)

அங்கம்விரிதுத்தியரவாமைவிரவாரமமர்மார்பிலழகன்
பங்கயமுகத்தரிவையோடுபிரியாதுபயில்கின்றபதிதான்
பொங்குபரவைத்திரைகொணர்ந்துபவளத்திரள்பொலிந்தவயலே
சங்குபுரியிப்பிதரளத்திரள்பிறங்கொளிகொள்சண்பைநகரே (௨)

போழுமதிதாழுநதிபொங்கரவுதங்குபுரிபுன்சடையினன்
யாழின்மொழிமாழைவிழியேழையிளமாதினொடிருந்தபதிதான் •
வாழைவளர்நாழன்மகிழ்மன்னுபுனைதுன்னுபொழின்மாடேடலார்
தாழைமுகிழ்வேழமிகுதந்தமெனவுந்துதகுசண்பைநகரே. (௩)

கொட்டமுழவிட்டவடிவட்டணைகட்டநடமாடிகுலவும்
பட்டநுதல்கட்டுமலர்மட்டுமலிபாவையொடுமேவுபதிதான்
வட்டமதிதட்டுபொழிலுட்டமதுவாய்மைவழுவாதமொழியார்
சட்டகலையெட்டுமருவெட்டும்வளர்தத்தைபயில்சண்பைநகரே. (௪)

பணங்கெழுவுபாடலினொடாடல்பிரியாதபரமேட்டிபகவ
னணங்கெழுவுபாகமுடையாகமுடையன்பர்பெருமானதிடமா
மிணங்கெழுவியாடுகொடிமாடமதினீடுவினையார்புறவெலாந்
தணங்கெழுவியேடலர்கொடாமரையிலன்னமவளர்சண்பைநகரே. (௫)

பாலனுயிர்மேலணுவுகாலனுயிர்பாறவுதைசெய்தபரம
னாலுமயில்போலியலியாயிழைதனோடுமமர்வெய்துமிடமா
மேலுமலிசோலையினவண்டுமலர்கிண்டிநறவுண்டிசைசெயச்
சாலிவயல்கோலமலிசேலுகளநீலம்வளர்சண்பைநகரே. (௬)

விண்பொயதனான்மழைவிழாதொழியினும்விளைவுதான்மிகவுடை
மண்பொயதனால்வளமிலாதொழியினுந்தமதுவண்மைவழுவா
ருண்பகரவாருலகினூழிபலதோறுநிலையானபதிதான்
சண்பைநகரீசனடிதாழுமடியார்தமதுதன்மையதுவே. (௭)

வரைக்குலமகட்கொருமறுக்கம்வருவித்தமதியில்வலியுடை
யிரக்கனதரக்கரசிரத்துறவடர்த்தருள்புரிந்தவழக
னிருக்கையதருக்கன்முதலானவிமையோர்குழுமியெழிவினிற்
றருக்குலநெருக்குமலிதண்பொழில்கள்கொண்டலனசண்பைநகரே. (௮)

நீலவரைபோலநிகழ்கேழலுருநீள்பறவைநேருருவமா
மாலுமலரானுமறியாமைவளர்தீயுருவமானவரதன்
சேலுமினவேலுமனகண்ணியொடுநண்ணுபதிசூழ்புறவெலாஞ்
சாலிமலிசோலைகுயில்புள்ளினொடுகிள்ளைபயில்சண்பைநகரே. (௯)

போதியர்கள்பிண்டியர்கள்போதுவழுவாதவகையுண்டுபலபொய்
யோதியவர்கொண்டுசெய்வதொன்றுமிலைநன்றதுணர்வீர்களுரைமினோ

வாதியெமையாளுடையவரிவையொடுபிரிவிலியமர்ந்தபதிதான்
சாதிமணித்தெண்டிரைசொரிந்துவயல்புகவெறிகொள்சண்பைநகரே. (௧௦)

வாரின்மலிகொங்கையுமைநங்கையொடுசங்கரன்மகிழ்ந்தமருமூர்
சாரின்முரறெண்கடல்விசும்புறமுழங்கொலிகொள்சண்பைநகர்மேற்
பாரின்மலிகின்றபுகழ்நின்றதமிழ்ஞானசம்பந்தனுரைசெய்
சீரின்மலிசெந்தமிழ்கள்செப்புமவர்சேர்வர்சிவலோகநெறியே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருவேதவனம் - திருவிராகம்-பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

கற்பொலிசுரத்தினெரிகானினிடைமாநடமதாடிமடவா
ரிற்பலிகொளப்புகுதுமெந்தைபெருமானதிடமென்பர்புவிமேன்
மற்பொலிகலிக்கடன்மலைக்குவடெனத்திரைகொழித்தமணியை
விற்பொலிநுதற்கொடியிடைக்கணிகைமார்கவருமவேதவனமே. (௧)

பண்டிரைபௌவப்புணரியிற்கனகமால்வரையைநட்டரவினைக்
கொண்டுகயிறிற்கடையவந்தவிடமுண்டகுழகன்றனிடமாம்
வண்டிரைநிழற்பொழிலின்மாதவியின்மீதணவுதென்றல்வெறியார்
வெண்டிரைகள்செம்பவளமுந்துகடல்வந்தமொழிவேதவனமே. (௨)

காரியன்மெலோதிநதிமாதைமுடிவார்சடையில்வைத்துமலையார்
நாரியொருபானமகிழுநம்பருறைவென்பர்நெடுமாடமறுகிற்
றேரியல்விழாவினொலிதிண்பணிலமொண்படகநாருமிசையால்
வேரிமலிவார்குழனன்மாதரிசைபாடலொலிவேதவனமே. (௩)

நீறுதிருமேனியின்மிசைத்தொளிபெறத்தடவிவந்திடவமே
யேறியுலகங்கடொறும்பிச்சைநுகரிச்சையரிருந்தபதியா
மூறுபொருளின்றமிழியற்கிளவிதேருமடமாதருடனார்
வேறுதிசையாடவர்கள்கூறவிசைதேறுமெழில்வேதவனமே (௪)

கத்திரிகைதுத்திரிகறங்குதுடிதக்கையொடிடக்கைபடக
மெத்தனையுலப்பில்கருவித்திரளலம்பவிமையோர்கள்பரச
வொத்தறமிதித்துநடமிட்டவொருவர்க்கிடமதென்பருலகின்
மெய்த்தகையபத்தரொடுசித்தர்கண்மிடைந்துகளும்வேதவனமே. (௫)

மாலைமதிவாளரவுகொன்றைமலர்துன்றுசடைநின்றுசுழலக்
காலையிலெழுந்தகதிர்தாரகைமடங்கவனலாடுமரனூர்
சோலையின்மடங்கடொறுமிண்டியினவண்டுமதுவுண்டிசைசெய
வேலையொலிசங்குதிரைவங்கசுறவங்கொணரும்வேதவனமே. (௬)

வஞ்சகமனத்தவுணர்வல்லரணமன்றவியவார்சிலைவளைத்
தஞ்சகமவித்தவமரர்க்கமரனாதிபெருமானதிடமாங்
கிஞ்சுகவிதழ்க்கனிகளூறியசெவ்வாயவர்கள்பாடல்பயில
விஞ்சகவியக்கர்முனிவக்கணநிறைந்துமிடைவேதவனமே. (௭)

முடித்தலைகள்பத்துடைமுருட்டிருவரக்கனைநெருக்கிவிரலா
லடித்தலமுன்வைத்தலமரக்கருணைவைத்தவனிடம்பலதுயர்
கெடுத்தலைநினைத்தறமியற்றுதல்கிளர்ந்துபுலவாணர்வறுமை
விடுத்தலைமதித்துநிதிநல்குமவர்மல்குபதிவேதவனமே. (௮)

வாசமலர்மேவியுறைவானுநெடுமாலுமறியாதநெறியைக்
கூசுதல்செயாதவமணாதரொடுதேரர்குறுகாதவரனூர்
காசுமணிவார்கனகநீடுகடலோடுதிரைவார்துவலைமேல்
வீசுவலைவாணரவைவாரிவிலைபேசுமெழில்வேதவனமே. (௯-௧௦)

மந்தமுழவங்கடல்வளங்கெழுவுகாழிபதிமன்னுகவுணி
வெந்தபொடிநீறணியும்வேதவனமேவுசிவனின்னருளினாற்
சந்தமிவைதண்டமிழினின்னிசையெனப்பரவுபாடலுலகிற்
பந்தனுரைகொண்டுமொழிவார்கள்பயில்வார்களுயர்வானுலகமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

வேதவனம் என்பது - வேதாரணியம்.

ஆக பதிகம் - ௭௫,

## திருமாணிகுழி - திருவிராகம்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

பொன்னியல்பொருப்பரையன்மங்கையொருபங்கர்புனறங்குசடைமேல்
வன்னியொடுமத்தமலர்வைத்தவிறல்வித்தகர்மகிழ்ந்துறைவிடங்
கன்னியிளவாளைகுதிகொள்ளவிளவள்ளைபடரள்ளல்வயல்வாய்
மன்னியிளமேதிகள்படிந்துமனைசேருதவிமாணிகுழியே. (௧)

சோதிமிகுநீறதுமெய்ப்பூசியொருதோலுடைபுனைந்துதெருவே
மாதர்மனைதோறுமிசைபாடிவசிபேசுமரனார்மகிழ்விடந்
தாதுமலிதாமரைமணங்கமழவண்டுமுரறண்பழனமிக்
கோதுமலிவேலைபுடைசூழுலகினீடுதவிமாணிகுழியே. (௨)

அம்பனையகண்ணுமைமடந்தையவளஞ்சிவெருவச்சினமுடைக்
கம்பமதயானையுரிசெய்தவரனார்கருதிமேயவிடமாம்
வம்புமலிசோலைபுடைசூழுமணிமாடமதினீடியழகா
ரும்பரவர்கோனகரமென்னமிகமன்னுதவிமாணிகுழியே. (௩)

நித்தநியமத்தொழிலனாகிநெடுமால்குறளனாகிமிகவுஞ்
சித்தமதொருக்கிவழிபாடுசெயநின்றசிவலோகனிடமாங்
கொத்தலர்மலர்ப்பொழிலினீடுகுலமஞ்ஞைநடமாடலதுகண்
டொத்தவரிவண்டுகளுலாவியிசைபாடுதவிமாணிகுழியே. (௪)

மாசின்மதிசூடுசடைமாமுடியர்வல்லசுரர்தொன்னகரமுன்
னாசமதுசெய்துநலவானவர்களுக்கருள்செய்நம்பனிடமாம்
வாசமலிமென்குழன்மடந்தையர்கண்மாளிகையின்மன்னியழகா
ரூசன்மிசையேறியினிதாகவிசைபாடுதவிமாணிகுழியே. (௫)

மந்தமலர்கொண்டுவழிபாடுசெயுமாணியுயிர்வவ்வமனமாய்
வந்தவொருகாலனுயிர்மாளவுதைசெய்தமணிகண்டனிடமாஞ்
சந்தினொடுகாரகில்சுமந்துதடமாமலர்கள்கொண்டுகெடில
முந்துபுனல்வந்துவயல்பாயுமணமாருதவிமாணிகுழியே. (௬)

எண்பெரியவானவர்களின்றுதிசெய்யவிறையேகருணையா
யுண்பரியநஞ்சதனையுண்டுலகமுய்யவருளுத்தமனிடம்
பண்பயிலும்வண்டுபலகிண்டிமதுவுண்டுநிறைபைம்பொழிலின்வா
யொண்பலவினின்கனிசொரிந்துமணநாறுதவிமாணிகுழியே. (௭)

எண்ணமதுவின்றியெழிலார்கைலைமாமலையெடுத்ததிறலார்
திண்ணியவரக்கனைநெரித்தருள்புரிந்தசிவலோகனிடமாம்
பண்ணமருமென்மொழியினார்பணைமுலைப்பவளவாயழகதா
ரொண்ணுதன்மடந்தையர்குடைந்துபுனலாடுதவிமாணிகுழியே. (௮)

நேடுமயனோடுதிருமாலுமுணராவகைநிமிர்ந்துமுடிமே
லேடுலவுதிங்கண்மதமத்தமிதழிச்சடையெமீசனிடமா
மாடுலவுமல்லிகைகுருந்துகொடிமாதவிசெருந்திகுரவி
னூடுலவுபுன்னைவிரைதாதுமலிசேருதவிமாணிகுழியே. (௯)

மொட்டையமணாதர்முதுதேரர்மதியில்லிகண்முயன்றனபடும்
முட்டைகண்மொழிந்தமொழிகொண்டருள்செய்யாதமுதல்வன்றனிடமா
மட்டைமலிதாழையிளநீர்முதியவாழையில்விழுந்தவதரி
லொட்டமலிபூகநிரைதாறுதிரவேறுதவிமாணிகுழியே. (௰)

உந்திவருதண்கெடிலமோடுபுனல்சூழுதவிமாணிகுழிமே
லெந்திமதிசூடியவெமானையடிசேருமணிகாழிநகரான்
சந்தநிறைதண்டமிழ்தெரிந்துணருஞானசம்பந்தனதுசொன்
முந்தியிசைசெய்துமொழிவார்களுடையார்கணெடுவானநிலனே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

நடுநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - மாணிக்கமேனியீசுவரர், தேவியார்-மாணிக்கவல்லியம்மை.

---

## திருவேதிகுடி-திருவிராகம்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்

நீறுவரியாடரவொடாமைமனவென்புநிரைபூண்பரிடப
மேறுவரியாவருமிறைஞ்சுகழலாதியரிருந்தவிடமாந்
தாறுவிரிபூகமலிவாழைவிரைநாறவிணைவாளைமடுவில்
வேறுபிரியாதுவிளையாடவளமாரும்வயல்வேதிகுடியே. (௧)

சொற்பிரிவிலாதமறைபாடிநடமாடுவர்தொலாவனையுரிவை
மற்புரிபுயத்தினிதுமேவுவர்[illegible]வானவர்தொழத்
துற்பெரியநஞ்சமுதமா[illegible]சீர்
வெற்பரையன்மங்கையொருபங்கர்நகரென்பர்திருவேதிகுடியே. (௨)

பொழுமதிபூணரவுகொன்றைமலர் துன்றுசடைவென்றிபுகமேல்
வாழுநதிதாழுமருளாளரிருளார்மிடறர்மாதரிமையோர்
சூழுமிரவாளர்திருமார்பில்விரிநூலர்வரிதோலருடைமேல்
வேழவுரிபோர்வையினர்மேவுபதியென்பர்திருவேதிகுடியே. (௩)

காடர்கரிகாலர்கனல்கையரனன்மெய்யருடல்செய்யர்செவிபிற்
றோடர்தெரிகீளர்சரிகோவணவராவணவர்தொல்லைநகர்தான்
பாடலுடையார்களடியார்கண்மலரோடுபுனல்கொண்டுபணிவார்
வேடமொளியானபொடிபூசியிசைமேவுதிருவேதிகுடியே. (௪)

சொக்கர்துணைமிக்கவெழிலுக்கமுமனிர்ந்துதொழுமூவர்மகிழத்
தக்கவருள்பக்கமுறவைத்தவரனாரினிதுதங்குநகர்தான்
கொக்கரவமுற்றபொழில்வெற்றிநிழல்பற்றிவரிவண்டிசைகுலா
மிக்கமரர்மெச்சியினிதச்சமிடர்போகநல்கும்வேதிகுடியே. (௫)

செய்யதிருமேனிமிசைவெண்பொடியணிந்துகருமானுரிவைபோர்த்
தையமிடுமெனமடமங்கையொடகந்திரியுமண்ணலிடமாம்
வையம்விலைமாறிடினுமேறுபுகழ்மிக்கிழிவிலாதவகையார்
வெய்யமொழிதண்புலவருக்குரைசெயாதவர்வேதிகுடியே. (௬)

உன்னியிருபோதுமடிபேணுமடியார்தமிடரொல்கவருளித்
துன்னியொருநால்வருடனானிழலிருந்ததுணைவன்றனிடமாங்
கன்னியரொடாடவர்கண்மாமணம்விரும்பியருமங்கலமிக
மின்னியலுநுண்ணிடைநன்மங்கையரியற்றுபதிவேதிகுடியே. (௭)

உரக்கரநெருப்பெழநெருக்கிவரைபற்றியவொருத்தன்முடிதோ
ளரக்கனையடர்த்தவனிசைக்கினிதுநல்கியருளங்கணனிடம்
முருக்கிதழ்மடக்கொடிமடந்தையருமாடவருமொய்த்தகலவை
விரைக்குழன்மிகக்கமழவிண்ணிசையுலாவுதிருவேதிகுடியே. (௮)

பூவின்மிசையந்தணனொடாழிபொலியங்கையனுநேடவரியாய்த்
தேதவுமிவரலரினியாவரெனநின்றுதிகழ்கின்றவரிடம்
பாவலர்களோசையியல்கேள்வியதரூசகொடையாளர்பயில்வா
மேவரியசெல்வநெடுமாடம்வளர்வீதிநிகழ்வேதிகுடியே (௯)

வஞ்சமணர்தேரர்மதிகேடர்தமகத்தறிவிலாதவர்மொழி
தஞ்சமெனவென்றுமுணராதவடியார்கருதுசைவனிடமா
மஞ்சுபுலன்வென்றறுவகைப்பொருடெரிந்தெழுவிசைக்கிளவியால்
வெஞ்சினமொழித்தவர்கண்மேவிநிகழ்கின்றதிருவேதிகுடியே. (௰)

கந்தமலிதண்பொழினன்மாடமிடைகாழிவளர்ஞானமுணர்சம்
பந்தன்மலிசெந்தமிழின்மாலைகொடுவேதிகுடியாதிகழலே
சிந்தைசெயவல்லவர்களல்லவர்களென்னநிகழ்வெய்தியிமையோ
ரந்தவுலகெய்தியரசாளுமதுவேசரதமாணையநமதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - வேதபுரீசுவரர், தேவியார் - மங்கையர்க்கரசியம்மை.

## திருக்கோகரணம் - திருவிராகம் - பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

என்றுமரியானயலவர்க்கியலிசைப்பொருள்களாகியெனது
ணன்றுமொளியாவொளிசிறந்தபொன்முடிக்கடவுணண்ணுமிடமா
மொன்றியமனத்தடியர்கூடியிமையோர்பரவுநீடரவமார்
குன்றுகணெருங்கிவிரிதண்டலைமிடைந்துவளர்கோகரணமே. (௧)

பேதைமடமங்கையொருபங்கிடமிகுத்திடலமேறியமரர்
வாதைபடவண்கடலெழுந்தவிடமுண்டசிவனார்வாழுமிடமா
மாதரொடுமாடவர்கள்வந்தடியிறைஞ்சிநிறைமாமலர்கடூய்க்
கோதைவரிவண்டிசைகொள்கீதமுரல்கின்றவளர்கோகரணமே. (௨)

முறைத்திறமுறப்பொருடெரிந்துமுனிவர்க்கருளியாலநிழல்வாய்
மறைத்திறமறத்தொகுதிகண்டுசமயங்களைவகுத்தவனிடம்
துறைத்துறைமிகுத்தருவிதூமலர்சுமந்துவரையுந்திமதகைக்
குறைத்தறையிடக்கரிபுரிந்திடறுசாரன்மலிகோகரணமே. (௩)

இலைத்தலைமிகுத்தபடைமெய்யணகரம்மிளங்கவெரிவீசிமுடிமே
லலைத்தலைதொகுத்தபுனல்செஞ்சடையில்வைத்தவழகன்றனிடமா
மலைத்தலைவகுத்தமுழைதோறுமுழைவாளரிகள்கேழல்களிறு
குலைத்தலைமடப்பிடிகள்கூடிவிளையாடிநிகழ்கோகரணமே. (௪)

தொடைத்தலைமலைத்திதழிதுன்னியவெருக்கலரிவன்னிமுடியின்
சடைத்தலைமிலைச்சியதபோதனெமாதிபயில்கின்றபதியாம்
படைத்தலைபிடித்துமறவாளரொடுவேடர்கள்பயின்றுகுழுமிக்
குடைத்தலைநதிப்படியநின்றுபழிதீரநல்குகோகரணமே. (௫)

நீறுதிருமேனிமிசையாடிநிறைவார்கழல்சிலம்பொலிசெய
வேறுவிளையாடவிசைகொண்டுபலிக்குவருமீசனிடமா
மாறுசமயங்களும்விரும்பியடிபேணியரனாகமமிகக்
கூறுமனமேவுறிரவந்தடியர்கும்பமருகோகரணமே. (௬)

கல்லவடமொந்தைகுழறாளமலிகொக்கரையரக்கைமிசை
பல்லபடநாகம்விரிகோவணவராளுநகரென்பரயலே
நல்லமடமாதரரனாமமுநவிற்றியதிருத்தமுழுகக்
கொல்லவிடநோயகரப்புகலகொடுத்தருளுகோகரணமே. (௭)

வரைத்தலைநெருக்கியமுருட்டிருணிறத்தவனவாய்களலறவ்
விரற்றலையுகிர்ச்சிறிதுவைத்தபெருமானினிதுமேவுமிடமாம்
புரைத்தலைகெடுத்தமுனிவர்ணர்பொலிவாகிவினைதீரவதன்மேற்
குரைத்தலைகழற்பணியவோமமிலகும்புகைசெய்கோகரணமே. (அ)

வில்லிமையினல்விறலரக்கனுயிர்செற்றவனும்வேதமுதலோ
னில்லையுளதென்றிகலிகேட[illegible]
றெல்லையில்வரைத்தகடலவட்ட[illegible]
கொல்லையிவிருங்குறவர்தம்மயிர்புலர்த்திவளர்கோகரணமே. (௯)

நேசமின்மனச்சமணர்தேரர்கணிரந்துமொழிபொய்களகல்வித்
தாசைகொண்மனந்தையடியாரவர்தமக்கருளுமங்கணனிடம்
பாசமதறுத்தவனியற்பெயர்கள்பத்துடையமன்னவனைக்
கூசவகைகண்டுபினவர்க்கருள்கணல்கவலகோகரணமே. (௧௦)

கோடலரவீனும்விரிசாரன்முனைநெருங்கிவளர்கோகரணமே
யீடமினிதாகவுறைவாரடிகள்பேணியணிகாழிநகரா
னாடியதமிழ்க்கிளவியின்னிசைசெய்ஞானசம்பந்தன்மொழிகள்
பாடவலபத்தரவரொத்திசையுமாள்வர்பரலோகமெளிதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

துளுவதேசத்திலிருப்பது அந்தத்தேயத்தில் இது ஒரேதலம்.

சுவாமிபெயர் - மாபலநாதர், தேவியார் - கோகரணநாயகியம்மை.

---

## திருவீழிமிழலை - திருவிராகம் - பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

சீர்மருவுதேசினொடுதேசமலிசெல்வமறையோர்கள்பணியத்
தார்மருவுகொன்றையணிதாழ்சடையினானமர்சயங்கொள்பதிதான்
பார்மருவுபங்கயமுயர்த்தவயல்சூழ்பழனநீடவருகே
கார்மருவுவெண்கனகமாளிகைகவின்பெருகுவீழிநகரே. (௧)

பட்டமுழவிட்டபணிலத்தினொடுபன்மறைகளோதுபணிநற்
சிட்டர்கள்சயத்துதிகள்செய்யவருள்செய்தழல்கொண்மேனியவனூர்
மட்டுலவுசெங்கமலவேலிவயல்செந்நெல்வளர்மன்னுபொழில்வாய்
விட்டுலவுதென்றல்விரைநாறுபதிவேதியர்கள்வீழிநகரே. (௨)

மண்ணிழிசுரர்க்குவளமிக்கபதிமற்றுமுளமன்னுயிர்களுக்
கெண்ணிழிவிலின்பநிகழ்வெய்தவெழிலார்பொழிலிலங்குபதிதா
பண்ணிழிவிலாதவகைபாடமடமஞ்ஞைநடமாடவழகார்
விண்ணிழிவிமானமுடைவிண்ணவர்பிரான்மருவுவீழிநகரே. (௩)

செந்தமிழர்தெய்வமறைநாவர்செழுநற்கலைதெரிந்தவவரோ
டந்தமில்குணத்தவர்களர்ச்சனைகள்செய்யவமர்கின்றவரனூர்
கொந்தலர்பொழிற்பழனவேலிகுளிர்தண்புனல்வளம்பெருகவே
வெந்திறல்விளங்கிவளர்வேதியர்விரும்புபதிவீழிநகரே. (௪)

பூதபதியாகியபுராணமுனிபுண்ணியநன்மாதைமருவிப்
பேதமிலாதவகைபாகமிகவைத்தபெருமானிடமா
மாதவர்களன்னமறையாளர்கள்வளர்த்தமலிவேள்வியதனு
லேதமிலாதவகையின்பமமர்கின்றவழில்வீழிநகரே. (௫)

மண்ணின்மறையோர்மருவுவைதிகமுமாதவமுமற்றுமுலகத்
தெண்ணில்பொருளாயவைபடைத்தவிமையோர்கள்பெருமானிடமா
நண்ணிவருநாவலர்களோடு[illegible]
விண்ணுலவுமாளிகைநெருங்கிவளர்[illegible]வீழிநகரே. (௬)

கமடபரியசெம்பொனெனமோடமதில்கல்வளைவிலாக
லும்பெரியவெப்பருமானுறைவதவளிவணல்லூரே. (௧)

ஓமையனகள்ளியனவாகையனகூகைமுரலோசை
யீமமெரிசூழ்சுடலைவாசமுதுகாடுநடமாடித்
தூய்மையுடையக்கொடரவம்விரவிமிக்கொளிதுளங்க
வாமையொடுபூணுமடிகளுறைவதவளிவணல்லூரே. (௨)

நீறுடையமார்பிலிமவான்மகளோர்பாகநிலைசெய்து
கூறுடையவேடமொடுகூடியழகாயதொருகோல
மேறுடையனேனுமிடுகாடிரவினின்றுநடமாடு
மாறுடையவார்சடையினானுறைவதவளிவணல்லூரே. (௩)

பிணியுமிலர்கேடுமிலர்தோற்றமிலரென்றுலகுபேணிப்
பணியுமடியார்களனபாவமறவின்னருள்பயந்து
துணியுடையதோலுமுடைகோவணமுநாகமுடன்றுங்க
வணியுமழகாகவுடையானுறைவதவளிவணல்லூரே. (௪)

குழலின்வரிவண்டுமுரன்மெல்லியனபொன்மலர்கள்கொண்டு
கழலிணைமிசையிண்டைபுனைவார்கடவுளென்றமரர்கூடித்
தொழும்வழிபாடுமுடையார்துயருநோயுமிலராவ
ரழலுமழுவேந்துகையினானுறைவதவளிவணல்லூரே. (௫)

துஞ்சலிலராயமரர்நின்றுதொழுதேத்தவருள்செய்து
நஞ்சுமிடறுண்டுகரிதாயவெளிதாகியொருநம்பன்
மஞ்சுறநிமிர்ந்துமைநடுங்கவகலத்தொடுவளாவி
யஞ்சமதவேழவுரியானுறைவதவளிவணல்லூரே. (௬)

கூடரவமொந்தைகுழலியாழ்முழவினோடுமிசைசெய்யப்
பீடரவமாகுபடரம்புசெய்துபேரிடபமோடுங்
காடரவமாகுகனல்கொண்டிரவினின்றுநடமாடி
யாடரவமார்த்தபெருமானுறைவதவளிவணல்லூரே. (௭)

ஒருவரையுமேல்வலிகொடேனெனவெழுந்தவிறலோனிப்
பெருவரையின்மேலோர்பெருமானுமுளனோவெனவெகுண்டு
கருவரையுமாழ்கடலுமன்னதிறல்கைகளுடையோனை
யருவரையிலூன்றியடர்த்தானுறைவதவளிவணல்லூரே. (௮)

பொறிவரியநாகமுயர்பொங்கணையணைந்தபுகழோனும்
வெறிவரியவண்டறையவிண்டமலர்மேல்விழுமியோனுஞ்
செறிவரியதோற்றமொடுவாற்றன்மிகநின்றுசெறிதேயு
மறிவரியனாயபெருமானுறைவதவளிவணல்லூரே. (௯)

கழியருகுபள்ளியிடமாகவடுமீன்கள்கவர்வாரும்
வழியருகுசாரவெயினின்றடிசிலுண்டிவருவாரும்
பழியருவினையொழிகபோன்மையொடுநின்றுதொழுதேத்தும்
மழியருவிதோய்ந்தபெருமானுறைவதவளிவணல்லூரே. (௧௦)

ஆனமொழியானதிறலோர்பரவுமங்களிவளைல்லூர்மேற்
போனமொழிநன்மொழிகளாயபுகழ்தோணிபுரவூரன
ஞானமொழிமாலைகலைகெடுபுகழ்ஞானசம்பந்தன
றேனமொழிமாலைபுகழ்வார்துயர்கடியதிலர்தாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

சோழநாட்டிருள்ளது.

சுவாமிபெயர் - சாக்ஷிநாயகர், தேவியார் - சவுந்தரநாயகியம்மை.

## திருநல்லூர் - திருவிராகம் - பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்

வண்டிரியவிண்டமலர்மல்குசடைதாழவிடையியேறிப்
பண்டெரிகைகொண்டபரமன்பதியதென்பரதனயலே
கண்டிரியகாரையிரைதேரவளைமேலருவிமுத்தந்
தெண்டிரைகண்மோதவிரிபோதுகமழுந்திருநல்லூரே. (௧)

பல்வளருநாகமரையார்த்துவரைமங்கையொருபாக
மல்வளர்புயத்திலணிவித்துமகிழும்பரமனிடமாந்
தொல்வளரிசைக்கிளவிபாடிமடவார்நடமதாடச்
செல்வமறையோர்கண்முறையேத்தவளருந்திருநல்லூரே. (௨)

நீடுவரைமேருவிலதாகவிகழ்நாகமழலம்பாற்
கூடலர்கண்மூவெயிலெரித்தகுழகன்குலவுசடைமே
லேடுலவுகொன்றைபுனல்நின்றுதிகழுங்கிமலனிடமாந்
தேடுலவுதாமரைகணீடுவயலார்திருநல்லூரே. (௩)

கருகுபுரிமிடறர்கரிகாடரெரிகையதனிலேந்தி
யருகுவருகரியினுரியதளர்படவரவரிடம்வினவின்
முருகுவிரிபொழிலின்மணநாறமயிலாலமரமேறித்
திருகுசினமந்திகனிசிந்தமதுவார்திருநல்லூரே. (௪)

பொடிகொடிருமார்பர்புரிநூலர்புனல்பொங்கரவுதங்கு
முடிகொள்சடைதாழவிடையேறுமுதல்வரவரிடமா
மிடிகொண்முழவோசையெழிலார்செய்தொழிலாளர்விழமல்கச்
செடிகொள்வினையகலமனமினியவர்கள்சேர்திருநல்லூரே. (௫)

புற்றரவர்நெற்றியொர்கண்ணொற்றைவிடையூர்வதுடையாளஞ்
சுற்றமிருள்பற்றியபல்பூதமிசைபாடவிசையாலே
கற்றமறையுற்றுணர்வர்பற்றலர்கண்முற்றுமெயின்மாளச்
செற்றவரிருப்பிடநெருக்குபுனலார்திருநல்லூரே. (௬)

பொங்கரவரங்கமுடன்மேனியிலணிந்துபலிபிச்சை
தங்கரவமாகவுழிதந்துமையொடொன்றிநின்றதொர்
கங்கையரவங்கிரவிரிந்தவமுதக்கனிடமென்பற்
செங்கயல்வதிக்குதிகொள்பொய்கைவயலார்திருநல்லூரே. (௭)

ஏறுபுகழ்பெற்றதெனிலங்கையவர்கோனையருவரையிற்
சீறியவனுக்கருளுமெங்கள்சிவலோகனிடமாகுங்
கூறுமடியார்களிசைபாடிவலம்வந்தயருமருவிச்
சேறுகமழாவழியத்திகழ்தருந்திருநல்லூரே. (௮)

மாலுமலர்மேலயனுநேடியறியாமையெரியாய
கோலமுடையானுணர்வுகோயிற்புகழானிடமதாகு
நாலுமறையங்கமுதலாறுமெரிமூன்றுதழலோம்புஞ்
சீலமுடையார்கணெடுமாடம்வளருந்திருநல்லூரே. (௯)

நீறுமுண்டகோவணமிலாமையிலோலோவியதவத்தர்
பாறுமுடன்மூடுதுவராடையர்கள்வேடமவைபாரே
லேறுமுடவாளொடினிதேறிமுனிருந்தவிடமென்பர்
தேறுமனவாரமுடையார்குடிசெயுந்திருநல்லூரே. (௧௦)

திரைகளிருகரையும்வருபொன்னிநிலவுந்திருநல்லூர்மேற்
பரசுதருபாணியைநலந்திகழ்செய்தோணிபுரநாத
னுரைசெய்தமிழ்ஞானசம்பந்தனிசைமாலைமொழிவார்போய்
விரைசெய்மலர்தூவவிதிபேணுகதிபேறுபெறுவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்புறவம் - திருவிராகம் - பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்

பெண்ணியலுருவினர்பெருகியபுனல்விரவியபிறைக்
கண்ணியர்கடுநடைவிடையினர்கழறொழுமடியவர்
நண்ணியபிணிகெடவருள்புரிபவர்நணுகுயர்பதி
புண்ணியர்மறையவர்நிறைபுகழொலிமலிபுறவமே. (௧)

கொக்குடையிறகொடுபிறையொடுகுளிர்சடைமுடியின
ரக்குடைவடமுமோரரவமுமலரரைமிசையினிற்
றிக்குடைமருவியவுருவினர்திகழ்மலைமகளொடும்
புக்குடனுறைவதுபுதுமலர்விரைகமழ்புறவமே. (௨)

கொங்கியல்சுரிகுழல்வரிவளையிளமுலையுமையொரு
பங்கியறிருவுருவுடையவர்பரசொடுசூலமேய்
தங்கியகரதலமுடையவர்விடையவருறைபதி
பொங்கியபொருகடல்கொளவதன்மிசையுயர்புறவமே. (௩)

மாதவமுடைமறையவனுயிர்கொளவருமறலியை
மேதகுதிருவடியிறையுறவுயிரதுவிலகினர்
சாதகவுருவியல்கானிடையுமைவெருவுறவரு
போதகவுரியதண்மருவினருறைபதிபுறவமே. (௪)

காமனையழல்கொளவிழிசெய்துகருதலர்கடிமதி
றூமமதுறவிறல்சுடர்கொளுவியவிறைதொழுபதி

யோமமொடுயர்மறைபிறவியவகைதனொடொளிகெழு
பூமகனலரொடுபுனல்கொடுவழிபடுபுறவமே. (௫)

சொன்னயமுடையவர்சுருதிகள்கருதியதொழிலினர்
பின்னையநுவுணர்பெருமையர்திருவடிபேணிட
முன்னையமுதல்வினையறவருளினருறைமுதுபதி
புன்னையின்முகைநிதிபொதியவிழ்பொழிலணிபுறவமே. (௬)

வரிதருபுலியதளுடையினர்மழுவெறிபடையினர்
பிரிதருநகுதலைவடமுடிமிசையணிபெருமைய
ரெரிதருமுருவினரிமையவர்தொழுவதோரியல்பினர்
ருரிதருகுழலுமையொடுமினிதுறைபதிபுறவமே. (௭)

வசிதருமுருவொடுமலர்தலையுலகினைவலிசெயு
நிசிசரனுடலொடுநெடுமுடியொருபதுநெரிவுற
வொசிதரவொருவிரனிறுவினரொளிவளர்வெளிபொடி
பொசிதருதிருவுருவுடையவருறைபதிபுறவமே. (௮)

தேனகமருவியசெறிதருமுளரிசெய்தவிசினி
லூனகமருவியபுலனுகர்வுணர்வுடையொருவனும்
வானகமவனியகமறிதலினிலனெனுமெழுவகைப்
போனகமருவினனறிவரியவர்பதிபுறவமே. (௯)

கோசரநுகர்பவர்கொழுகியதுவரனதுகிலினர்
பாசுரவினைதருபளகர்கள்பழிதருமொழியினர்
நீசரைவிடுமினினினைவுறுநிமலர்தமுறைபதி
பூசுரர்மறைபயினிறைபுகழொலிமலிபுறவமே. (௧௦)

போதியல்பொழிலணிபுறவநன்னகருறைபுனிதனை
வேதியரதிபதிமிகுதலைதமிழ்கெழுவிரகின
னோதியவொருபதுமுரியதோரிசைகொளவுரைசெயு
நீதியரவரிருநிலனிடைநிகழ்தருபிறவியே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருவீழிமிழலை-திருவிராகம்-பண்-சாதாரி

திருச்சிற்றம்பலம்

மட்டொளிவிரிதருமலர்நிறைசுரிகுழன்மடவரல்
பட்டொளிமணியல்குலுமையமையுருவொருபாகமாக்
கட்டொளிர்புனலொடுகடியரவுடனுறைமுடிமிசை
விட்டொளியுதிர்பிறைமதியவர்பதிவீழிமிழலையே (௧)

எண்ணிறவரிவளைநெறிகுழலெழின்மொழியிளமுலைப்
பெண்ணுறுமுடலினர்பெருகியகடல்விடமிடறினர்
கண்ணுறுநுதலினர்கடியதோர்விடையினர்கனலினர்
விண்ணுறுபிறையணிசடையினர்பதிவீழிமிழலையே. (௨)

## திருச்சேறை-திருவிராகம்-பண் - ஸாதாரி.

### திருச்சிற்றம்பலம்.

முறியுறுநிறமல்குமுகிழ்முலைமலைமகள்வெருவுறமுன்
வெறியுறுமதகரியதள்படவுரிசெய்தவிறலினா
நறியுறுமிதழியினமலரொடுநதிமதிநகுதலை
செறியுறுசடைமுடியடிகடம்வளநகர்சேறையே. (௧)

புனமுடைநறுமலர்பலகொடுதொழுவதோர்புரிவினர்
மனமுடையடியவர்படுதுயர்களைவதோர்வாய்மைய
ரினமுடைமணியினோடரசிலையொளிபெறமிளிர்வதோர்
சினமுதிர்விடையுடையடிகடம்வளநகர்சேறையே. (௨)

புரிதருசடையினர்புலியதளரையினர்பொடிபுல்கு
மெரிதருமுருவினரிடபமதேறுவரீடுலா
வரிதருவளையினரவரவர்மகிழ்தரமனைதொறுந்
திரிதருசரிதையருறைதருவளநகர்சேறையே. (௩)

துடிபடுமிடையுடைமடவரலுடனொருபாகமா
விடிபடுகுரலுடைவிடையினர்படமுடையரவினர்
பொடிபடுமுருவினர்புலியுரிபொலிதருமரையினர்
செடிபடுசடைமுடியடிகடம்வளநகர்சேறையே. (௪)

அந்தரமுழிதருதிரிபுரமொருநொடியளவினின்
மந்தரவரிசிலையதனிடையரவரிவாளியால்
வெந்தழிதரவெய்தவிடலையர்விடமணிமிடறினர்
செந்தழனிறமுடையடிகடம்வளநகர்சேறையே. (௫)

மத்தரமுறுதிறன்மறவர்தம்வடிவுகொடுருவுடைப்
பத்தொருபெயருடைவிசயனையசைவுசெய்பரிசினா
லத்திரமருளுநமடிகளதணிகிளர்மணியணி
சித்திரவளநகர்செறிபொழிறழுவியசேறையே. (௬)

பாடினரருமறைமுறைமுறைபொருளெனவருநட
மாடினருலகிடையலர்கொடுமடியவர்துதிசெய
வாடினர்படுதலையிடுபலியதுகொடுமகிழ்தருஞ்
சேடர்தம்வளநகர்செறிபொழிறழுவியசேறையே. (௭)

கட்டுரமதுகொடுகயிலைநன்மலைமலிகரமுடை
நிட்டுரனுடலொடுநெடுமுடியொருபதுநெரிசெய்தா
மட்டுரமலரடியடியவர்தொழுதெழவருள்செய்யுஞ்
சிட்டர்தம்வளநகர்செறிபொழிறழுவியசேறையே. (௮)

பன்றியர்பறவையர்பரிசுடைவடிவொடுபடர்தர
அன்றியவவரவரடியொடுமுடியவையறிகிலார்
நின்றிருபுடைபடவெரிநடுவெயோர்நிகழ்தரச்
சென்றுயர்வெளிபடவருளியவவர்நகர்சேறையே. (௯)

கார்மலிபுரிநெறிசுரிகுழன்மலைமகள்கவினுற
சீர்மலிதருமணியணிமுலைதிகழ்வொடுசெறிதலிற்
றார்மலிநகுதலையுடையநள்ளாறர்தந்நாமமே
பேர்மலியெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. (௭)

மன்னியவளரொளிமலைமழைகடளிர்நிறமதமிகு
பொன்னியன்மணியணிகலசமதனமுலைபுணர்தலிற்
றன்னியறசமுகனெரியநள்ளாறர்தந்நாமமே
மின்னியலெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே (௮)

கான்முகமயிலியன்மலைமகள்கதிர்விடுகணமிகு
பான்முகமியல்பணையிணைமுலைதுணையொடுபயிறலி
னான்முகனரியறிவரியநள்ளாறர்தந்நாமமே
மேன்முகவெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. (௯)

அத்திரநயனிசொன்மலைமகள்பயனுறுமதிசயச
சித்திரமணியணிதிகழ்முலையிணையொடுசெறிதலிற்
புத்தரொடமணர்பொய்பெயருநள்ளாறர்தந்நாமமே
மெய்த்திரளெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே (௧௦)

சிற்றிடையரிவைதன்வனமுலையிணையொடுசெறிதிரு
நற்றிறமுறுகழுமலநகர்ஞானசம்பந்தன
கொற்றவனெதிரிடையெரியினிலிடவிவைகூறிய
சொற்றெரியொருபதுமறிபவர்துயரிலர்தூயரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

இது-சமணர் வாதின்பொருட்டுத் தீயிலிடுதற்கு போகமார்த்த பூண்முலையாளென்னும் பதிகம் உறயமாக இது தீயில் பழுதுபடாது என்னுந் துணிவுகொண்டு அருளிச்செய்தபதிகம்.

ஆக பதிகம் - அசு

## திருவிளமர்-திருவிராகம்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

மத்தகமணிபெறமலர்வதோர்மதிபுரைநுதல்கர
மொத்தநகமணிமிளிர்வதோரரவினொளிகிளர
ரத்தகவடிதொழவருள்பெறுகணனொடுமுமையவள்
வித்தகருறைவதுவிரிபொழில்வளநகர்விளமரே. (௧)

பட்டிலகியன்முலையரிவையருலகினிலிடுபலி
யொட்டிலகிணைமறவடியினருமையுறவடியினர்
சிட்டலகழகியபொடியினர்விடைமிசைசேர்வதோர்
விட்டிலகழகொளிபெயரவருறைவதுவிளமரே. (௨)

அங்கதிரொளியினரரையிடைமிளிர்வதோரரவொடு
செங்கதிரெனநிறமனையதோர்செழுமணிமார்பினர்

சங்கதிர்பறைகுழன்முழவினொடிசைதருசரிதையர்
வெங்கதிருறமழுவுடையவரிடமெனில்விளமரே. (௩)

மாடமதெனவளர்மதிலவையெரிசெய்வர்விரவுசீர்ப்
பீடனமறையுரைசெய்வர்பெரியபல்சரிதைகள்
பாடலராடியசுடலையிலிடமுறநடநவில்
வேடமதுடையவர்வியனகரதுசொல்விளமரே. (௪)

பண்டலைமழலைசெய்யாழெனமொழியுமைபாகமாக்
கொண்டலைகுரைகழலடிதொழுமவர்வினைகுறுகிலா
விண்டலையமரர்கள்துதிசெயவருள்புரிவிழலினர்
வெண்டலைபலிகொடுந்திரிவிமலர்தமவளநகர்விளமரே. (௫)

மனைகடோறிடுபலியதுகொள்வர்மதிபொதிசடையினர்
கனைகடலடுவிடமமுதுசெய்கறையணிமிடறினர்
முனைகெடவருமதிலெரிசெய்தவர்கழல்பரவுவார்
வினைகெடவருள்புரிதொழிலினர்செழுநகர்விளமரே. (௬)

நெறிகமழ்தருமுரையுணர்வினர்புணர்வுறுமடவரல்
செறிகமழ்தருவுருவுடையவர்படைபலபயில்பவர்
பொறிகமழ்தருபடவரவினொடுவிரவியசடைமிசை
வெறிகமழ்தருமலரடைபவரிடமெனில்விளமரே. (௭)

தெண்கடல்புடையணிநெடுமதிலிலங்கையர்தலைவனைப்
பண்படவரைதனிலடர்செய்தபைங்கழல்வடிவினர்
திண்கடலடைபுனறிகழ்சடைபுகுவதொர்சேர்வினர்
விண்கடல்விடமலியடிகடமவளநகர்விளமரே. (௮)

தொண்டசையுறவருதுயருறுகாலனைமாள்வுற
வண்டலசெய்திருவரைவெருவுறவாரழலாயினோர்
கொண்டல்செய்தருதிருமிடறினரிடமெனிலளியினம
வண்டிசைவுறுமலர்நறுமதுவிரிபொழில்விளமரே. (௯)

ஒள்ளியர்தொழுதெழவுலகினிலுரைசெயுமொழிபல
கொள்ளியகளவினர்குண்டிகையவர்தவமறிவிலா
பள்ளியைமெய்யெனக்கருதன்மின்பரிவொடுபேணுவீர்
வெள்ளியபிறையணிசடையினர்வளநகர்விளமரே (௧௦)

வெந்தவெண்பொடியணியடிகளைவிளமருள்விகிர்தனைச்
சிந்தையுளிடைபெறவுரைசெய்ததமிழிவைசெழுவிய
வந்தணர்புகலியுளழகமருமறைஞானசம்
பந்தனமொழியிவையுரைசெயுமவர்வினைபறையுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - பதஞ்சலிமனோகரேசுவரர், தேவியார் யாழினுமென்மொழியம்மை.

## திருக்கொச்சைவயம்-பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

திருந்துமாகளிற்றிளமருப்பொடுதிரண்மணிச்சந்தமுந்திக்
குருந்துமாகுரவமுங்குடசமும்பீலியுஞ்சுமந்துகொண்டு
நிரந்துமாவயல்புகுநீடுகோட்டாறுசூழ்கொசசைமேவிப்
பொருந்தினார்திருந்தடிபோற்றிவாழ்நெஞ்சமேபுகலதாமே. (௧)

ஏலமாரிலவமோடினமலர்த்தொகுதியாயெங்குநுந்திக்
கோலமாமிளகொடுகொழுங்கனிகொன்றையுங்கொண்டுகோட்ட
றாலியாவயல்புகுமணிதருகொச்சையேநச்சிமேவு
நீலமார்கண்டனைநினைமடநெஞ்சமேயஞ்சனீயே. (௨)

பொன்னுமாமணிகொழித்தெறிபுனற்கரைகள்வாயநுரைகளுந்திக்
கன்னிமார்முலைநலங்கவரவந்தேறுகோட்டாறுசூழ
மன்னினார்மாதொடுமருவிடங்கொச்சையேமருவினாளு
முன்னைநோய்தொடருமாறில்லைகாணெஞ்சமேயஞ்சனீயே (௩)

கந்தமார்கேதகைச்சந்தனக்காடுசூழ்கதலிமாடே
வந்துமாவள்ளையின்பவரளிக்குவளையைச்சாடியோடக்
கொந்துவார்குழலினார்குதிகொள்கோட்டாறுசூழ்கொசசைமேய
வெந்தையாரடிநினைந்துய்யலாநெஞ்சமேயஞ்சனீயே. (௪)

மறைகொளுந்திறலினாராகுதிபுகைகள்வானண்டமிண்டிச
சிறைகொளும்புனலணிசெழுமதிதிகழ்மதிற்கொசசைதன்பா
லுறைவிடமெனமனமதுகொளும்பிரமனார்சிரமறுத்த
விறைவனதடியிணையிறைஞ்சிவாழ்நெஞ்சமேயஞ்சனீயே (௫)

சுற்றமுமக்களுந்தொக்கவத்தக்கனைச்சாடியன்றே
யுற்றமால்வரையுமைநங்கையைப்பங்கமாயுள்கினோர்
குற்றமிலடியவர்குழுமியவீதிசூழ்கொச்சைமேவி
நற்றவமருள்புரிநம்பனைநம்பிடாய்நாளுநெஞ்சே (௬)

கொண்டலார்வந்திடக்கோலவார்பொழில்களிற்கூடிமந்தி
கண்டவார்கழைபிடித்தேறிமாமுகிறனைக்கதுவுகொச்சை
யண்டவானவர்களுமமரருமுனிவரும்பணியவால
முண்டமாகண்டனார்தம்மையேயுள்குநீயஞ்சனெஞ்சே. (௭)

அடலெயிற்றரக்கனார்நெருக்கிமாமலையெடுத்தார்த்தவாய்க
ளுடல்கெடத்திருவிரலூன்றினாருறைவிடமொளிகொள்வெள்ளி
ம[illegible]விழ்டபபவளமுமுத்தமுந்தொத்துவண்புன்னைமாடே
பெடையொடுங்குருகினிற்பெருகுதண்கொச்சையேபேணுநெஞ்சே (௮)

அரவினிற்றுயிறருமரியுநற்பிரமனுமன்றயர்ந்து
குரைகழற்றிருமுடியளவிடவரியவர்கொங்குசெம்பொன்
விரிபொழிலிடைமிகுமலைமகண்மகிழ்தரவீற்றிருந்த
கரியநன்மிடறுடைக்கடவுளார்கொச்சையேகருதுநெஞ்சே. (௯)

கடுமலியுடலுடையமண்கருஞ்சியுணசாக்கியரு
மிடிமெறவுரைதனையிகழ்பவர்கருதுநம்மீசர்வானோர்
நடுவுறைநம்பனைநானமறையவர்பணிந்தேத்தஞால
முடையவன்கொச்சையேயுள்கிவாழ்நெஞ்சமேயஞ்சனீயே. (க0)

காய்ந்துதங்காலினாற்காலனைச்செற்றவர்கடிகொள்கொச்சை
யாய்ந்துகொண்டிடமெனவிருந்தநல்லடிகளையாதரித்தே
யேய்ந்ததொல்புகழ்மிகுமெழிலமறைஞானசம்பந்தனசொன்ன
வாய்ந்தவிம்மாலைகள்வல்லவர்நல்லவ ருலகினமேலே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருத்துருத்தியுந் - திருவேள்விக்குடியும் - பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

ஓங்கிமேலுழிதருமொலிபுனற்கங்கையையொருசடைமேற்
றாங்கினாரிடுபலிதலைகலனாக்கொண்டதம்மடிகள்
பாங்கினாலுமையொடுமகிழ்விடம்புகலிடம்பைம்பொழில்சூழ்
வீங்குநீர்த்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே. (க)

தூறுசேர்சுடலையிற்சுடரெரியாடுவர்துளங்கொளிசேர்
நீறுசாந்தெனவுகந்தணிவர்வெண்பிறைமல்குசடைமுடியார்
நாறுசாந்திளமுலையரிவையோடொருபகலமர்ந்தபிரான்
வீறுசேர்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே. (உ)

மழைவளரிளமதிமலரொடுதலைபுல்குவார்சடைமேற்
கழைவளர்புனல்புகக்கண்டவெங்கணுதற்கபாலியார்தா
மிழைவளர்துகிலல்குலரிவையோடொருபகலமர்ந்தபிரான்
விழைவளர்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே. (ந)

கரும்பனைவரிசிலைப்பெருந்தகைக்காமனைக்கவினழித்த
சுரும்பொடுதேன்மல்குதூமலர்க்கொன்றையஞ்சடாச்சடையா
ரரும்பனவனமுலையரிவையோடொருபகலமர்ந்தபிரான்
விரும்பிடந்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே. (ச)

வளங்கிளர்மதியமும்பொன்மலர்க்கொன்றையும்வாளரவுங்
களங்கொளச்சடையிடைவைத்தவெங்கணுதற்கபாலியார்தாந்
துளங்குநூன்மார்பினரரிவையோடொருபகலமர்ந்தபிரான்
விளங்குநீர்த்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே. (ரு)

பொறியுலாமடுபுலியுரிவையர்வரியராப்பூண்டிலங்கு
நெறியுலாம்பலிகொளுநீர்மையர்சீர்மையையுடைப்பெரியார்
மறியுலாங்கையினர்மங்கையோடொருபகலமர்ந்தபிரான்
வெறியுலாந்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே. (சு)

புரிதருசடையினர்புலியுரியரையினர்பொடியணிந்து
திரிதருமியல்பினர்திரிபுரமூன்றையுந்தீவளைத்தார்

வரிதருவனமுலைமங்கையோடொருபகலமர்ந்தபிரான்
விரிதருதுருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே. (எ)

நீண்டிலங்கவிரொளிநெடுமுடியரக்கனின்னீள்வரையைக்
கீண்டிடந்திடுவனென்றெழுந்தவனாள்வினைக்கீழ்ப்படுத்தகீர்
பூண்டநான்மார்பிணரரிவையோடொருபகலமர்ந்தபிரான்
வேண்டிடந்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே. (அ)

கரைகடலரவணைக்கடவுளுந்தாமரைநான்முகனுங்
குரைகழலடிதொழக்கூரெரியெனநிறங்கொண்டபிரான்
வரைகெழுமகளொடும்பகலிடம்புகலிடம்வண்பொழில்சூழ்
விரைகமழ்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே. (கூ)

அயமுகவெயினிலையமணருங்குண்டருஞ்சாக்கியரு
நயமுகவுரையினாநகுவனசரிதைகள்செய்துழல்வார்
கயலனவரிநெடுங்கணியோடொருபகலமர்ந்தபிரான்
வியனகர்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே (௧0)

விண்ணுலாமவிரிபொழில்விரைமணற்றுருத்திவேள்விக்குடியு
மொண்ணுலாமொலிகழலாடுவாரரிவையோடுறைபதிய
நண்ணுலாமபுகலியுளருமறைஞானசமபந்தன்சொன்ன
பண்ணுலாமருந்தமிழ்பாடுவாராடுவார்பழியிலரே. (கக)

திருச்சிற்றமபலம்.

---

## திருவடகுரங்காடுதுறை - பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

கோங்கமேகுரவமேகொழுமலர்ப்புன்னையேகொகுடிமுல்லை
வேங்கைபோனாழலேவிம்முபாதிரிகளேவிரவியெங்கு
மோங்குமாகாவிரிவடகரையடைகுரங்காடுதுறை
வீங்குநீர்சசடைமுடியடிகளாரிடமெனவிரும்பினரே. (க)

மந்தமாயிழிமதகளிற்றிளமருப்பொடுபொருப்பினல்ல
சந்தமாரகிலொடுசாதியின்பலங்களுந்தகையமோதி
யுந்துமாகாவிரிவடகரையடைகுரங்காடுதுறை
யெந்தையாரிணையடியிமையவர்தொழுதெழுமியல்பினரே (உ)

முத்துமாமணியொடுமுழைவளராரமுமுகந்துந்தி
யெத்துமாகாவிரிவடகரையடைகுரங்காடுதுறை
மத்தமாமலரொடுமதிபொதிசடைமுடியடிகடம்மேற்
சித்தமாமடியவர்சிவகதிபெறுவதுதிணணமன்றே (௩)

கறியுமாமிளகொடுகதலியின்பலங்களுங்கலந்துந்தி
யெறியுமாகாவிரிவடகரையடைகுரங்காடுதுறை
மறியுலாங்கையினர்மலரடிதொழுதெழமருவுமுள்ளக
குறியினரவர்மிகக்கூடுவார்நீடுவானுலகினூடே. (௪)

துன்றுதண்பொழினுழைந்தெழுவியகேதகைப்போதளைந்து
தென்றல்வந்துலவியதிருநெல்வேலியுறைசெல்வர்தாமே. (உ)

பொறிவளரரவமும்போழிளமதியமுங்கங்கையென்னு
நெறிபடுகுழலியைச்சடைமிசைச்சுலவிவெண்ணீறுபூசி
கிறிபடநடந்துநற்கிளிமொழியவர்மனங்கவர்வர்போலுஞ்
செறிபொழிறழுவியதிருநெல்வேலியுறைசெல்வர்தாமே. (௩)

காண்டகுமலைமகள்கதிர்நிலாமுறுவல்செய்தருளவேயும்
பூண்டநாகம்புறங்காடரங்காநடமாடல்பேணு
மீண்டுமாமாடங்கண்மாளிகைமீதெழுகொடிமதியந்
தீண்டிவந்துலவியதிருநெல்வேலியுறைசெல்வர்தாமே. (௪)

ஏனவெண்கொம்பொடுமெழிறிகழ்மத்தமுமிளவரவுங்
கூனல்வெண்பிறைதவழ்சடையினர்கொல்புலித்தோலுடையா
ரானினிலைந்துகந்தாடுவர்பாடுவரருமறைகள்
தேனில்வண்டமர்பொழிற்றிருநெல்வேலியுறைசெல்வர்தாமே (௫)

வெடிதருதலையினர்வேனல்வெள்ளேற்றினர்விரிசடையர்
பொடியணிமார்பினர்புலியதளாடையர்பொங்கரவர்
வடிவுடைமங்கையோர்பங்கினர்மாதரைமையல்செய்வார்
செடிபடுபொழிலணிதிருநெல்வேலியுறைசெல்வர்தாமே. (௬)

அக்குலாமரையினர்திரைகுலாமுடியினரடிகளன்று
தக்கனார்வேள்வியைச்சாடியசதுரனார்கதிர்கொள்செம்மை
புக்கதோர்புரிவினர்வரிதருவண்டுபண்முரலுஞ்சோலைத்
திக்கெலாம்புகழுறுந்திருநெல்வேலியுறைசெல்வர்தாமே. (௭)

முந்திமாவிலங்கலேடுத்தவன்முடிகடோணெரிதரவே
யுந்திமாமலரடியொருவிரலுகிர்நுதியாலடர்த்தார்
கந்தமார்தருபொழின்மந்திகள்பாய்தரமதுத்திவலை
சிந்துபூந்துறைகமழ்திருநெல்வேலியுறைசெல்வர்தாமே. (௮)

பைங்கண்வாளரவணையவனொடுபனிமலரோனுங்காணா
வங்கணாவருளெனவவரவர்முறைமுறையிறைஞ்சநின்றா
சங்கநான்மறையவர்நிறைதரவரிவையராடல்பேணத்
திங்கணாள்விழமல்குதிருநெல்வேலியுறைசெல்வர்தாமே. (௯)

துவருறுவிரிதுகிலாடையர்வேடமில்சமணரென்னு
மவருறுசிறுசொலையவமெனநினையுமெமண்ணலார்தாங்
கவருறுகொடிமல்குமாளிகைச்சூளிகைமயில்களாலத்
திவருறுமதிதவழ்திருநெல்வேலியுறைசெல்வர்தாமே. (௧௦)

பெருந்தண்மாமலர்மிசையயனவனனையவர்பேணுகல்வித்
திருந்துமாமறையவர்திருநெல்வேலியுறைசெல்வர்தம்மை
பொருந்துநீர்த்தடமல்குபுகலியுண்ஞானசம்பந்தன்சொன்ன
வருந்தமிழ்மாலைகள்பாடியாடக்கெடுமருவினையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சாக்கியக்கயவர்வன்றலைபறிக்கையரும்பொய்யினொடு
லாக்கியமொழியவைபிழையவையாதவில்வழிபடுவீர்
வீக்கியவரவுடைக்கச்சையர்நச்சையானவர்கட்கெல்லா
மாக்கியவரனுறையம்பர்மாகாளமேயடைமினீரே. (க0)

செம்பொன்மாமணிகொழித்தெழுதிரைவருபுனலருசில்சூழ்ந்த
வம்பர்மாகாளமேகோயிலாவணங்கினோடிருந்தகோனை
* கம்பினூர்நெடுமதிற்காழியுண்ஞானசம்பந்தன்சொன்ன
நம்பிகாணமொழிபவர்கசிலையாமவினைநலம்பெறுவார்தாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருவெங்குருத் - திருமுக்கால் - பண் சாதாரி

திருச்சிற்றம்பலம்.

விண்ணவர்தொழுதெழுவெங்குருமேவிய
சுண்ணவெண்பொடியணிவீரே
சுண்ணவெண்பொடியணிவீருமதொழுதெழு
மெண்ணவல்லாரிடரிலரே. (க)

வேதியர்தொழுதெழுவெங்குருமேவிய
வாதியவருமறையீரே
யாதியவருமறையீருமையலாகொடு
வோதியருணர்வுடையோரே. (உ)

விளங்குதண்பொழிலணிவெங்குருமேவிய
விளம்பிறையணிசடையீரே
யிளம்பிறையணிசடையீருமதிணையடி
யுளங்கொளவுறுபிணியிலரே. (ங)

விண்டலர்பொழிலணிவெங்குருமேவிய
வண்டமாவளர்சடையீரே
வண்டமாவளர்சடையீருமைவாழ்த்துமத்
தொண்டாகபெயாபிணியிலரே. (ச)

மிக்கவர்தொழுதெழுவெங்குருமேவிய
வக்கினோடரவசைத்தீரே
யக்கினோடரவசைத்தீருமதடியிணை
தக்கவருறுவதுதவமே. (ரு)

வெந்தவெண்பொடியணிவெங்குருமேவிய
வந்தமில்பெருமையினீரே
யந்தமில்பெருமையினீருமையலர்கொடு
சிந்தைசெய்வோர்வினைசிதைவே. (சா)

* கம்பினூர் நெடுமதில் என்பது—ஆகாயம்பின்னிடும்படி மேலோங்கியமதிலெனப் பொருள்படுகின்றது. கம்-எ-து—ஆகாயம்.

விழமல்குபொழிலணிவெங்குருமேவிய
வழமலகுமங்கையினீரே
யழமலகுமங்கையினீருமையலர்கொடு
தொழமல்குவலவினைகெடுவதுதுணிவே. (எ)

விருந்தகமணிநயவர்வெங்குருமேவிய
பருந்தருநன்மலர்புனைவீரே
பருந்தருநன்மலர்புனைவீருமதடிதொழுஞ்
சிருந்தமதுடையவாதிருவே. (அ)

மேவலர்தொழுதெழுவெங்குருமேவிய
பாலனமணிமிடற்றீரே
பாலனன்மணிமிடற்றீருமதடிதொழுஞ்
சீலமதுடையவாதிருவே. (கூ)

விளைமல்குபொழிலணிவெங்குருமேவிய
வளைமலகுபுலியதளீரே
யளைமல்குபுலியதளீருமதடியிணை
புளைமலகுபுகழ்வருயாவே. (௧0-கக)

திருச்சிற்றமபலம

## திருஇன்னம்பர் - திருமுக்கால் - பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

எண்டிசைக்கும்புகழின்னம்பர்மேவிய
வண்டிசைக்குஞ்சடையீரே
வண்டிசைக்குஞ்சடையீருமைவாழ்த்துவா
தொண்டிசைகருநதொழிலோரே- (க)

யாழ்நரம்பின்னிசையினனம்பர்மேவிய
தாழ்தருசடைமுடியீரே
தாழ்தருசடைமுடியீருமைச்சாரபவ
ராழ்துயரருவினையிலரே. (உ)

இளமதிநுதலியோடின்னம்பாமேவிய
வளமதிவளர்சடையீரே
வளமதிவளர்சடையீருமைவாழ்த்துவா
ருளமதிமிகவுடையோரே. (ஙு)

இடிகுரலிசைமுரலின்னம்பர்மேவிய
கடிகமழ்சடைமுடியீரே
கடிகமழ்சடைமுடியீருமகழறொழு
மடியவரருவினையிலரே. (ச)

இமையவாதொழுதெழுமின்னம்பர்மேவிய
உமையொருகூறுடையீரே

யுமையொருகூறுடையீருமையுள்குவா
ரமைகிலராகிலரன்பே. (ரு)

எண்ணருமபுகழுடையின்னமபர்மேவிய
தண்ணருஞ்சடைமுடியீரே
தண்ணருஞ்சடைமுடியீருமைசாரபவா
விண்ணவரடைவுடையோரே. (சு)

எழிறிகழும்பொழிலின்னமபர்மேவிய
நிழறிகழ்மேனியினீரே
நிழறிகழ்மேனியினீருமைநினைபவா
குழறியகொடுவினையிலரே. (எ)

ஏத்தருமபுகழணியின்னம்பாமேவிய
தூர்த்தனைத்தொலைவுசெய்தீரே
தூர்த்தனைத்தொலைவுசெய்தீருமைத்தொழுமவர்
கூர்த்தநற்குணமுடையோரே (அ)

இயலுளோர்தொழுதெழுமின்னம்பர்மேவிய
வயனுமாலறிவரியீரே
யயனுமாலறிவரியீருமதடிதொழு
மயலுளார்மறுபிறபபிலரே (சு)

ஏரமர்பொழிலணியின்னமபாமேவிய
தேரமண்சிதைவுசெய்தீரே
தேரமண்சிதைவுசெய்தீருமைசேர்பவ
ராழ்துயரருவினையிலரே (௰)

ஏ மர்பொழிலணியின்னமபரீசனை
நாடமர்ஞானசம்பந்த
ஞடமர்ஞானசமபந்தனநற்றமிழ்
பாடவல்லார்பழியிலரே. (கக)

திருச்சிற்றம்பலம்

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - எழுத்தறிந்தவீசுவரர், தேவியார்-கொர்தார்பூங்குழலம்மை.

---

## திருநெல்வெண்ணெய்-திருமுக்கால்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

நல்வெணைவிழுதுபெய்தாடுதிர்நாடொறு
நெல்வெணைமேவியநீரே
நெல்வெணைமேவியநீருமைநாடொறுஞ்
சொல்வணமிவைசொல்லே. (க)

நிச்சலுமடியவர்தொழுதெழுநெல்வெணைக
கச்சிளவரவசைத்தீரே

கச்சிளவரவசைத்தீருமைக்காண்பவ
ரச்சமோடருவினையிலரே. (௨)

நிரைவிரிதொல்புகழ்நெல்வெணெய்மேவிய
வரைவிரிகோவணத்தீரே
யரைவிரிகோவணத்தீருமையலர்கொடு
வுரைவிரிப்போருயர்ந்தோரே. (௩)

நீர்மல்குதொல்புகழ்நெல்வெணெய்மேவி
யூர்மல்கியுறையவல்லீரே
யூர்மல்கியுறையவல்லீருமையுள்குதல
பார்மல்குபுகழவர்பண்பே. (௪)

நீடிளம்பொழிலணிநெல்வெணெய்மேவிய
வாடிளம்பாப்பசைத்தீரே
யாடிளம்பாப்பசைத்தீருமையனபொடு
பாடுளமுடையவர்பண்பே. (௫)

நெற்றியோர்கண்ணுடைநெல்வெணெய்மேவிய
பெற்றிகொள்பிறைநுதலீரே
பெற்றிகொள்பிறைநுதலீருமைப்பேணுதல
கற்றறிவோர்கடங்கடனே. (௬)

நிறையவர்தொழுதெழுநெல்வெணெய்மேவிய
கறையணிமிடறுடையீரே
கறையணிமிடறுடையீருமைக்காண்பவ
ருறைவதுமுமடிக்கீழே. (௭)

நெருக்கியபொழிலணிநெல்வெணெய்மேவியன்
றரக்கனையசைவுசெய்தீரே
யரக்கனையசைவுசெய்தீருமையன்புசெய்
திருக்கவல்லாரிடரிலரே (௮)

நிரைவிரிசடைமுடிநெல்வெணெய்மேவியன
றிருவனையிடர்கள்செய்தீரே
யிருவனையிடர்கள்செய்தீருமையிசையொடு
பரவவல்லார்பழியிலரே. (௯)

நீக்கியபுனலணிநெல்வெணெய்மேவிய
சாக்கியச்சமண்கெடுத்தீரே
சாக்கியச்சமண்கெடுத்தீருமைசார்வது
பாக்கியமுடையவர்பண்பே. (௧௦)

நிலமல்குதொல்புகழ்நெல்வெணெயீசனை
நலமல்குஞானசம்பந்த
னலமல்குஞானசம்பந்தனசெந்தமிழ்
சொலமல்குவார்துரியலரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

மரோட்டிறுள்ளது.

சுவாமிபெயர் - வெண்ணெயப்பர், தேவியார் - நீலமலர்க்கண்ணம்மை.

## திருச்சிறுகுடி - திருமுக்கால் - பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

திடமலிமதிலணிசிறுகுடிமேவிய
படமலியரவுடையீரே
படமலியரவுடையீருமைப்பணிபவ
ரடைவதுமமருலகதுவே. (க)

சிற்றிடையுடனமகிழ்சிறுகுடிமேவிய
சுற்றியசடைமுடியீரே
சுற்றியசடைமுடியீருமதொழுகழ
லுற்றவருறுபிணியிலரே. (உ)

தெள்ளியபுனலணிசிறுகுடிமேவிய
துள்ளியமானுடையீரே
துள்ளியமானுடையீருமதொழுகழ
லுள்ளுதலசெயநலமுறுமே (ங)

செங்நெலவயலணிசிறுகுடிமேவிய
வொன்னலர்புரமெரித்தீரே
யொன்னலர்புரமெரித்தீருமையுள்குவா
சொன்னலமுடையவர்தொண்டே. (ச)

செற்றினின்மலிபுனற்சிறுகுடிமேவிய
பெற்றிகொளபிறைமுடியீரே
பெற்றிகொள்பிறைமுடியீருமைப்பேணிநஞ்
சற்றவரருவினையிலரே (ரு)

செங்கயலடுபுனலணிசிறுகுடிமேவிய
மங்கையையிடமுடையீரே
மங்கையிடமுடையீருமைவாழ்த்துவா
சங்கையதிலாநலர்தவமே. (சு)

செறிபொழிறழுவியசிறுகுடிமேவிய
வெறிகமழ்சடைமுடியீரே
வெறிகமழ்சடைமுடியீருமைவிரும்பிமெய்ந
நெறியுணர்வோருணர்ந்தோரே. (எ)

திசையவர்தொழுதெழுசிறுகுடிமேவிய
தசமுகனுரநெரித்தீரே
தசமுகனுரநெரித்தீருமைச்சார்பவ
ரசையறுமதுவழிபாடே. (அ)

செருவளைவயலமர்சிறுகுடிமேவிய
விருவரையசைவுசெய்தீரே
விருவரையசைவுசெய்தீருமையேத்துவா
ரருவினையொடுதுயரிலரே (கூ)

செய்த்தலைப்புனலணி சிறுகுடிமேவிய
புத்தரோடமண்புறத்தீரே
புத்தரோடமண்புறத்தீருமைப்போற்றுதல்
பத்தரோடும்முடைப்பரிசே. (க0)

தேனமர்பொழிலணிசிறுகுடிமேவிய
மானமர்கரமுடையீரே
மானமர்கரமுடையீருமைவாழ்த்திய
ஞானசம்பந்தனதமிழே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - மனைனேசுவரர், தேவியார் - மங்களநாயகியம்மை.

---

## திருவீழிமிழலை - திருமுக்கால் - பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்.

வெண்மதிதவழ்மதின்மிழலையுளீர்சடை
யொண்மதியணியுடையீரே
யொண்மதியணியுடையீருமையுணர்பவர்
கண்மதிமிகுவதுகடனே. (க)

விதிவழிமறையவர்மிழலையுளீர்நடஞ்
சதிவழிவருவதோர்சதிரே
சதிவழிவருவதோர்சதியுடையீருமை
யதிகுணர்புகழ்வதுமழகே. (உ)

விரைமலிபொழிலணிமிழலையுளீரொரு
வரைமிசையுறைவதுமவமே
வரைமிசையுறைவதோர்வலதுடையீருமை
யுரைசெயுமவைமறையொலியே. (ங)

விட்டெழில்பெறுபுகழ்மிழலையுளீர்கையி
லிட்டெழில்பெறுகிறதெரியே
யிட்டெழில்பெறுகிறதெரியுடையீர்புர
மட்டதுவரைசிலையாலே. (௪)

வேணிகர்கண்ணியர்மிழலையுளீர்நல
பாணிகருருவுடையீரே
பாணிகருருவுடையீருமதுடனுமை
தாணிகவுறைவதுபவமே. (ரு)

விரைமலிபொழிலணிமிழலையுளீர்சென்னி
நிரையுறவணிவதுநெறியே
நிரையுறவணிவதோர்நெறியுடையீரும
தரையுறவணிவனவரவே. (சு)

விசையுறுபுனல்வயன்மிழலையுளீரர
வசைவுறவணிவுடையீரே
யசைவுறவணிவுடையீருமைபணிபவ
ரசையுறுநாவினர்தாமே. (எ)

விலங்கலொண்மதிலணிமிழலையுளீரன்றவ்
விலங்கைமன்னிடர்கெடுத்தீரே
யிலங்கைமன்னிடர்கெடுத்தீருமையேத்துவார்
புலன்களைமுனிவதுபொருளே (அ)

வெற்பமர்பொழிலணிமிழலையுளீருமை
யற்புதனயனறியானே
யற்புதனயனறியாவகைநின்றவ
னற்பதமறிவதுபயமே. (கூ)

வித்தகமறையவர்மிழலையுளீரன்று
புத்தரோடமணழித்தீரே
புத்தரோடமணழித்தீருமைப்போற்றுவார்
பத்திசெய்மனமுடையவரே. (க0)

விண்பயில்பொழிலணிமிழலையுளீசனை
சண்பையுண்ஞானசம்பந்தன
சண்பையுண்ஞானசம்பந்தனதமிழிவை
யொண்பொருளுணர்வதுமுணர்வே (கக)

திருச்சிற்றம்பலம்.

ஆக பதிகம்-கஎ.

---

## திருமுதுகுன்றம் - திருமுக்கால்பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்

முரசதிர்ந்தெழுதருமுதுகுன்றமேவிய
பரசமர்படையுடையீரே.
பரசமர்படையுடையீருமைப்பரவுவா
ரரசர்களுலகிலாவாரே (க)

மொய்குழலாளொடுமுதுகுன்றமேவிய
பையரவமசைத்தீரே
பையரவம்மசைத்தீருமைப்பாடுவார்
நைவிலர்நாடொறுநலமே. (உ)

முழவமர்பொழிலணிமுதுகுன்றமேவிய
மழவிடையதுவுடையீரே
மழவிடையதுவுடையீருமைவாழ்த்துவார்
பழியொடுபகையிலர்தாமே. (௩)

முருகமர்பொழிலணிமுதுகுன்றமேவிய
வுருவமர்சடைமுடியீரே

யுருவமர்சடைமுடியீருமையோதுவார்
திருவொடுதேசினராமே. (ச-ரு-சா-எ)

முத்திதருமுயர்முதுகுன்றமேவிய
பத்துமுடியடர்த்தீரே
பத்துமுடியடர்த்தீருமைப்பரவுவார்
சித்தநல்லவ்வடியாரே. (அ)

முயன்றவரருள்பெறுமுதுகுன்றமேவியன்
றியன்றவரறிவரியீரே
றியன்றவரறிவரியீருமையேத்துவார்
பயன்றலைநிற்பவர்தாமே. (கூ)

மொட்டலர்பொழிலணிமுதுகுன்றமேவிய
கட்டமண்டேரைக்காய்ந்தீரே
கட்டமண்டேரைக்காய்ந்தீருமைக்கருதுவார்
சிட்டர்கள்சீர்பெறுவாரே. (க0)

மூடியசோலைசூழ்முதுகுன்றமதீசனை
நாடியஞானசம்பந்த
னாடியஞானசம்பந்தனசெந்தமிழ்
பாடியவர்பழியிலரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருத்தோணிபுரம் - பண்-பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

கரும்பமர்வில்லியைக்காய்ந்துகாதற்காரிகைமாட்டருளி
யுரும்பமர்கொங்கையோர்பாகமாகிக்கலப்புறஞ்செய்பரிதாம்
பெரும்பகலேவந்தென்பெண்மைகொண்டுபோந்தவர்சேர்ந்தவிடந்
சுரும்பமர்சோலைகள்சூழ்ந்தசெம்மைத்தோணிபுரந்தானே. (க)

கொங்கியல்பூங்குழற்கொவ்வைச்செவ்வாய்க்கோமளமாதுமையாள்
பங்கியலுந்திருமேனியெங்கும்பால்வெண்ணீறணிந்து
சங்கியல்வெள்வளைசோரவந்தென்சாயல்கொண்டார்தமதூர்
துங்கியன்மாளிகைசூழ்ந்தசெம்மைத்தோணிபுரந்தானே. (உ)

மத்தக்களிற்றுரிபோர்க்கக்கண்டுமாதுமைபேதுறலுஞ்
சித்தந்தெளியநின்றாடியேறார்தீவண்ணர்சில்பலிக்கென்
றொத்தபடிவந்தென்னுள்ளங்கொண்டவொருவர்க்கிடம்போலுந்
துத்தநல்லின்னிசைவண்டுபாடுந்தோணிபுரந்தானே. (ங-ச-ரு-சா-எ)

வள்ளலிருந்தமலையதனைவலஞ்செய்தல்வாய்மையெனா
வுள்ளங்கொள்ளாதுகொதித்தெழுந்தன்றெடுத்தோனுரநெரிய
மெள்ளவிரல்வைத்தென்னுள்ளங்கொண்டார்மேவுமிடம்போலுந்
துள்ளொலிவெள்ளத்தின்மேன்மிதந்ததோணிபுரந்தானே. (அ)

வெல்பறவைக்கொடிமாலுமற்றைவிரைமலர்மேலயனும்
பல்பறவைப்படியாயுயர்ந்தும்பன்றியதாய்ப்பணிந்துஞ்
செல்வறநீண்டெஞ்சிந்தைகொண்டசெல்வரிடம்போலுந்
தொல்பரவைசுமந்தோங்குசெம்மைத்தோணிபுரந்தானே. (௯)

குண்டிகைபீலிதட்டோடுநின்றுகோசரங்கொள்ளியரு
மண்டைகையேந்திமணங்கொள்கஞ்சியூணருமாய்மடிய
விண்டைபுனைந்தெருத்தெறிலங்கெனெழிலகலாந்தாரிடமாந்
தொண்டிசைபாடலறாத்தொன்மைத்தோணிபுரந்தானே. (௧௦)

தாமருமாளிகைகூடநீடுதோணிபுரத்திறையை
மாமறைநான்கினொடங்கமாறும்வல்லவனவாய்மையினா
னாமருகேள்விநலந்திகழுஞானசம்பந்தன்சொன்ன
பாமருபாடல்கள்பத்தும்வல்லார்பார்முழுதாள்பவரோ (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருஇராமேச்சரம்-பண்-பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

திரிதருமாமணிநாகமாடத்திளைத்தொருதீயழல்வாய்
நரிகதிக்கவெரியேந்தியாடலமேதெரிந்துணர்வா
ரெரிக்திர்முத்தமிலங்குகானலிராமேசசரமேய
விரிகதிர்வெண்பிறைமல்குசென்னிவிமலர்செயுஞ்செயலே (௧)

பொறிகிளர்பாம்பணையார்த்தயலேபுரிவோடுமைபாடத்
தெறிகிளரப்பெயர்ந்தெல்லியாடுந்திறமேதெரிந்துணர்வா
ரெறிகிளர்வெண்டிரைவந்துபேருமிராமேச்சரமேய
மறிகிளர்மான்மழுப்புல்குகையெம்மணாளர்செயுஞ்செயலே. (௨)

அலைவளர்தண்புனல்வார்சடைமேலடக்கியொருபாக
மலைவளர்காதலிபாடவாடிமயக்கவருமாட்சி
யிலைவளர்தாழைமுகிழ்விரியுமிராமேச்சரமேயார்
தலைவளர்கோலநன்மாலைசூடுந்தலைவர்செயுஞ்செயலே (௩)

மாதெனநேரிழையோர்தடங்கண்மலையான்மகள்பாடத்
தேதெரியங்கையிலேந்தியாடுந்திறமேதெரிந்துணர்வா
ரேதமிலார்தொழுதேத்திவாழ்த்துமிராமேச்சரமேயார்
போதுவெண்டிங்கள்பைங்கொன்றைசூடும்புனிதர்செயுஞ்செயலே. (௪)

சூலமோடொண்மழுநின்றிலங்கச்சுடுகாடிடமாகக்
கோலநன்மாதுடன்பாடவாடுங்குணமேகுறித்துணர்வா
ரேலநறும்பொழில்வண்டுபாடுமிராமேச்சரமேய
நீலமார்கண்டமுடையவெங்கணிமலர்செயுஞ்செயலே. (௫)

கணைபிணைவெஞ்சிலைகையிலேந்திக்காமனைக்காய்ந்தவர்தா
மிணைபிணைநோக்கிநல்லாளொடாடுமியல்பினராகிநல்ல

தீயவனீரவன்பூமியவன்றிருநாரையூர்தன்னின்
மேயவனைத்தொழுவாரவர்மேலவினையாயினவீடுமே. (௩)

துஞ்சிருளாடுவர்தூமுறுவறுளங்குமுடம்பினரா
யஞ்சுடராரெரியாடுவராரழலாவிழிக்கண்ணி
னஞ்சுமிழ்நாகமரைக்கசைப்பானலனோங்குநாரையூ
ரெஞ்சிவனார்க்கடிமைப்படுவார்க்கினியில்லையேதமே. (௪)

பொங்கிளங்கொன்றையினார்கடலில்விடமுண்டிமையோர்க
டங்களையாரிடர்தீரநின்றதலைவர்சடைமேலோர்
திங்களைவைத்தனலாடலினார்திருநாரையூர்மேய
வெங்கனல்வெண்ணீறணியவல்லாரவரோவிழுமியரே. (௫)

பாருறுவாய்மையினார்பரவும்பரமேட்டிபைங்கொன்றைத்
தாருறுமார்புடையான்மலையின்றலைவன்மலைமகளைச்
சீருறுமாமறுகிற்சிறைவண்டறையுந்திருநாரை
யூருறையெம்மிறைவர்க்கிவையொன்றொடொன்றொவ்வாவே. (௬)

கள்ளியிடுதலையேந்துகையர்கரிகாடர்கண்ணுதலா
வெள்ளியகோவணவாடைதன்மேன்மிளிராடரவார்த்து
நள்ளிருணட்டமதாடுவர்நலனோங்குநாரையூ
ருள்ளியபோழ்திலெம்மேல்வருவல்வினையாயினவோடுமே (௭)

நாமமெனைப்பலவும்முடையானலனோங்குநாரையூர்
தாமொமெனப்பறையாழ்குழறாளார்கழல்பயில
வீமவிளக்கெரிசூழ்சுடலையியம்புமிடுகாட்டிற்
சாமமுரைக்கநின்றாடுவானுந்தழலாயசங்கரனே. (௮)

ஊனுடைவெண்டலைகொண்டுழல்வானொளிர்புன்சடைமேலோர்
வானிடைவெண்மதிவைத்துகந்தான்வரிவண்டியாழ்முரலத்
தேனுடைமாமலரன்னம்வைகுந்திருநாரையூர்மேய
வானிடையானுகந்தானடியேபரவாவடைவோமே. (௯)

தூசுபுனைதுவராடைமேவுந்தொழிலாருடம்பினிலுண்
மாசுபுனைந்துடைநீத்தவர்கண்மயனீர்மைகேளாதே
தேசுடையீர்கடெளிந்தடைமின்றிருநாரையூர்தன்னிற்
பூசுபொடித்தலைவரடியாரடியேபொருந்துமே. (௰)

தணமதிதாழ்பொழில்சூழ்புகலித்தமிழ்ஞானசம்பந்த
னொண்மதிசேர்சடையானுறையுந்திருநாரையூர்தன்மேற்
பண்மதியாற்சொன்னபாடல்பத்தும்பயின்றார்வினைபோகி
மண்மதியாதுபோய்வான்புகுவர்வானோரெதிர்கொளவே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-சௌந்தரேசர், தேவியார்-திரிபுரசுந்தரி

காவியநற்றுவராடையினர்கடுநோன்புமேற்கொள்ளும்
பாவிகள்சொல்லைப்பயின்றறியாப்பழந்தொண்டருள்ளுருக
வாவியுணினறருள்செய்யவல்லவழகரிடம்போலும்
வாவியினீர்வயலவாய்ப்புடையவலம்புரநன்னகரே. (க0)

நல்லியனுண்மறையோர்புகலித்தமிழ்ஞானசம்பந்தன்
வல்லியந்தோலுடையாடையினுன்வலம்புரநன்னகரைச்
சொல்லியபாடல்கள்பத்துஞ்சொல்லவல்லவர்தொல்வினைபோய்ச்
செல்வனசேவடிசென்றணுகிச்சிவலோகஞ்சேர்வாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - வலம்புரநாதர், தேவியார் - வடுவகிர்க்கண்ணம்மை.

ஆக பதிகம். சு0உ.

## திருப்பருதிநியமம்-பண்-பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்

விணகொண்டதுமதிசூடிநீவிரிபுன்சடைதாழப்
பெண்கொண்டமார்பில்வெண்ணீறுபூசிப்பேணார்பலிதேர்ந்து
கண்கொண்டசாயலொடேர்கவர்ந்தகள்வர்க்கிடம்போலும்
பண்கொண்டவண்டினம்பாடியாடும்பருதிநியமமே. (க)

அரவொலிவில்லொலியம்பினெலியடங்கார்புரமூன்று
நிரவவல்லார்நிமிர்புன்சடைமேனிரம்பாமதிசூடி
யிரவிலபுகுந்தென்னெழில்கவர்ந்தவிறைவர்க்கிடம்போலும்
பரவவல்லார்வினைபாழ்படுக்கும்பருதிநியமமே (உ)

வாணுண்முகவார்குழலவாணெடுங்கண்வளைதோண்மாதஞ்ச
நீணுமுகமாகியபைங்களிற்றினுரிமேனிகழ்விடத்து
நாணுமுகங்காட்டிநலங்கவர்ந்தநாதர்க்கிடம்போலும்
பணைமுகவண்டினம்பாடியாடும்பருதிநியமமே (ங)

வெஞ்சுரமசேர்விளையாடல்பேணிவிரிபுன்சடைதாழந்
துஞ்சிருண்மாலைபுகுந்தகலுந்துணையார்பலிதேர்ந்து
வஞ்சுரும்பார்குழலசோரவுள்ளங்கவர்ந்தார்க்கிடம்போலும்
பஞ்சுரம்பாடிவண்டியாழ்முரலும்பருதிநியமமே. (ச)

நீரபுல்குபுன்சடைநின்றிலங்கநெடுவெண்மதிசூடித்
தாரபுல்குமார்பில்வெண்ணீறணிந்துதலையார்பலிதேவா
ரேர்புல்குசாயலெழில்கவர்ந்தவிறைவர்க்கிடம்போலும்
பாரபுல்குதொல்புகழாலவிளங்கும்பருதிநியமமே (ரு)

வெங்கடுங்காட்டகத்தாடல்பேணிவிரிபுன்சடைதாழத்
திங்கடிருமுடிமேல்விளங்கத்திசையார்பலிதேவார்
சங்கொடுசாயலெழில்கவர்ந்தசைவர்க்கிடம்போலும்
பைங்கொடிமுல்லைபடர்புறவிற்பருதிநியமமே. (சா)

கல்லுயர்மாக்கடனின்றுமுழங்குங்கரைபொருகாழியமூதூர்
நல்லுயர்நான்மறைநாவினற்றமிழ்ஞானசம்பந்தன்
வல்லுயர்சூலமும்வெண்மழுவாளும்வல்லவன்வாழ்கொளிபுத்தூர்
சொல்லியபாடல்கள்வல்லார்துயர்கெடுதல்லெளிதாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பாம்புரம் - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

சீரணிதிகழ்திருமார்பில்வெண்ணூலர்திரிபுரமெரிசெய்தசெல்வர்
வாரணிவனமுலைமங்கையோர்பங்கர்மான்மறியேந்தியமைந்தர்
காரணிமணிதிகழ்மிடறுடையண்ணல்கண்ணுதல்விண்ணவரேத்தும்
பாரணிதிகழ்தருநான்மறையாளர்பாம்புரநன்னகராரே. (௧)

கொக்கிறகோடுகூவிளமத்தங்கொன்றையொடெருக்கணிசடைய
ரக்கினொடாமைபூண்டழகாகவனலதுவாடுமெம்மடிகண்
மிக்கநல்வேதவேள்வியுளெங்கும்விண்ணவர்விரைமலர்தூவப்
பக்கம்பல்பூதம்பாடிடவருவார்பாம்புரநன்னகராரே. (௨)

துன்னலினாடையுடுத்ததன்மேலோர்சூறைநல்லரவதுசுற்றிப்
பின்னுவார்சடைகடாழவிட்டாடிப்பித்தராய்த்திரியுமெம்பெருமான்
மன்னுமாமலர்கடூவிடநாளுமாமலையாட்டியுந்தாமும்
பன்னுநான்மறைகள்பாடிடவருவார்பாம்புரநன்னகராரே. (௩)

துஞ்சுநாடுறந்துதோற்றமுமில்லாச்சுடர்விடுசோதியெம்பெருமா
னஞ்சுசேர்கண்டமுடையவென்னாதர்நள்ளிருணடஞ்செயுநம்பர்
மஞ்சுதோய்சோலைமாமயிலாடமாடமாளிகைதன்மேலேறிப்
பஞ்சுசேர்மெல்லடிப்பாவையர்பயிலும்பாம்புரநன்னகராரே. (௪)

நதியதனயலேநகுதலைமாலைநாண்மதிசடைமிசையணிந்து
கதியதுவாகக்காளிமுன்காணக்கானிடைநடஞ்செய்தகருத்தர்
விதியதுவழுவாவேதியர்வேள்விசெய்தவரோத்தொலியோவாப்
பதியதுவாகப்பாவையுந்தாமும்பாம்புரநன்னகராரே. (௫)

ஓதிநன்குணர்வார்க்குணர்வுடையொருவரொளிதிகழுருவஞ்சேரொருவர்
மாதினையிடமாவைத்தவெம்வள்ளல்மான்மறியேந்தியமைந்தர்
ஆதிநீயருளென்றமரர்கள்பணியவலைகடல்கடையவன்றெழுந்த
பாதிவெண்பிறைசடைவைத்தவெம்பரமர்பாம்புரநன்னகராரே. (௬)

மாலினுக்கன்றுசக்கரமீந்துமலரவற்கொருமுகமொழித்தே
ஆலின்கீழறமோர்நால்வருக்கருளியனலதுவாடுமெம்மடிகள்
காலனைக்காய்ந்துதங்கழலடியாற்காமனைப்பொடிபடநோக்கிப்
பாலனுக்கருள்கள்செய்தவெம்மடிகள்பாம்புரநன்னகராரே. (௭)

விடைத்தவல்லரக்கன்வெற்பினையெடுக்கமெல்லியதிருவிரலூன்றி
யடர்த்தவற்றனக்கருள்செய்தவடிகளனலதுவாடுமெம்மண்ணல்
மடக்கொடியவர்கள்வருபுனலாடவந்திழியரிசிலின்கரைமேற்
படப்பையிற்கொணர்ந்துபருமணிசிதறும்பாம்புரநன்னகராரே. (௮)

கடிபடுகமலத்தயனொடுமாலுங்காதலோடடிமுடிதேடச்
செடிபடுவினைகடீர்த்தருள்செய்யுந்தீவணரெம்முடைச்செல்வர்

முடியுடையமரர்முனிகணத்தவர்களுமுறைமுறையடிபணிந்தேத்தப்
படியதுவாகப்பாவையுந்தாமும்பாம்புரநன்னகராரே.

குண்டர்சாக்கியருங்குணமிலாதாருங்குற்றுவிட்டுடுக்கையர்தாமுங்
கண்டவாறுரைத்துக்கால்நிமிர்த்துண்ணுங்கையராதாமுள்ளவாறறி
வண்டுசேர்குழலிமலைமகணடுங்கவாரணமுரிசெய்துபோர்த்தார்
பண்டுநான்செய்தபாவங்களைத்தீர்ப்பார்பாம்புரநன்னகராரே

பாமலிந்தோங்கியபெருமதிள்சூழ்தருபாம்புரநன்னகராரைக்
கார்மலிந்தழகார்கழனிசூழ்மாடக்கழுமலமுதுபதிக்கவுணி
நாமலிந்தோங்குநான்மறைஞானசம்பந்தனசெந்தமிழ்வல்லார்
சீர்மலிந்தழகார்செல்வமோங்கிச்சிவனடிநண்ணுவர்தாமே.

---

திருப்பேணுபெருந்துறை - பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்.

பைம்மாநாகம்பன்மலர்க்கொன்றைபன்றிவெண்கொ[illegible]ண்டு
செம்மாந்தையம்பெய்கென்றுசொல்லிச்செய்தொழில[illegible]யார்செல்வ
ரம்மானோக்கியவந்தளிர்மேனியரிவையோர்பாகமமர்ந்த
பெம்மானல்கியதொல்புகழாளர்பேணுபெருந்துறையாரே (க)

மூவருமாகியிருவருமாகிமுதல்வனுமாய்நின்றமூர்த்தி
பாவங்கடீர்தரநல்வினைநல்கிப்பல்கணநின்றுபணியச்
சாவமதாகியமால்வரைகொண்டுதண்மதின்மூன்றுமெரித்த
தேவர்கள்தேவரெம்பெருமானார்தீதில்பெருந்துறையாரே. (உ)

செய்பூங்கொன்றைகூவிளமாலைசென்னியுட்சேர்புனல்சேர்த்திக்
கொய்பூங்கோதைமாதுமைபாகங்கூடியோர்பீடுடைவேடர்
கைபோனான்றகனிகுலைவாழைகாய்குலையிற்கமுகின்பை
பெய்பூம்பாளைபாய்ந்திழிதேறல்பில்குபெருந்துறையாரே. (ங)

நிலனொடுவானுநீரொடுதீயும்வாயுவுமாகியோரைந்து
புலனொடுவென்றுபொய்ம்மைகடீர்த்தபுண்ணியர்வெண்பொடிப்பூசி
நலனொடுதீங்குந்தானலதின்றிநன்னெறிநாதயராகி
மலனொடுமாசுமில்லவர்வாழ்மல்குபெருந்துறையாரே. (ச)

பணிவாயுள்ளநன்கெழுநாவினபத்தர்கள்பத்திமைசெய்யத்
துணியார்தங்களுள்ளமிலாதசுமடர்கள்சோதிப்பரியா
ரணியார்நீலமாகியகண்டரரிசிலுருஞ்சுகரைமேல்
மணிவாய்நீலம்வாழ்கமழுந்தேறல்மல்குபெருந்துறையாரே. (ரு)

எண்ணார்தங்கள்மும்மதில்வேவவேவலங்காட்டியவெந்தை
விண்ணோர்சாரத்தன்னருள்செய்தவித்தகர்வேதமுதல்வர்
பண்ணார்பாடலாடலறாதபசுபதியீசனோர்பாகம்
பெண்ணாணாயவார்சடையண்ணல்பேணுபெருந்துறையாரே. (சு)

விழையாருள்ளநன்கெழுநாவில்வினைகெடவேதமாறங்கம்
பிழையாவண்ணம்பண்ணியவாற்றாற்பெரியோரேத்தும்பெருமான்

றழையுயர்மாவின்றூழ்கனியுந்தித்தன் * அரிசில்புடைசூழ்ந்த
குழையார்சோலைமென்னடையன்னங்கூடும்பெருந்துறையாரே. (எ)

பொன்னங்கானல்வெண்டிரைசூழ்ந்தபொருகடல்வேலியிலங்கை
மன்னனொல்கமால்வரையூன்றிமாமுரணழித்தோரு
முனைவனாடப்பின்னருள்செய்தமூவிலைவேலுடைமூர்த்தி
யன்னங்கன்னிப்பேடையோடாடியணவும்பெருந்துறையாரே. (அ)

புள்வாய்போழ்ந்தமாநிலநீண்டபொருகடல்வண்ணனும்பூவி
னுள்வாயல்லிமேலுறைவானுமுணரவரியானுமைகேள்வன்
முள்வாய்த்தாளிற்றாமரைமொட்டின்முகமலரக்கயல்பாயுங்
கள்வாய்நீலங்கண்மலரேய்க்குங்காமர்பெருந்துறையாரே. (கூ)

குண்டுந்தேருங்கூறைகளைந்துங்கூப்பிலர்செப்பிலராகி
மிண்டுமமிண்டர்மிண்டவைகண்டுமிண்டுசெயாதுவிரும்புந்
தண்டும்பாம்பும்வெண்டலைசூலந்தாங்கியதேவர்தலைவர்
வண்டுந்தேனும்வாழ்பொழிற்சோலைமல்குபெருந்துறையாரே. (க0)

கடையார்மாடநன்கெழுவீதிக்கழுமலவூரன்கலைநு
நடையாரின்சொல்ஞானசம்பந்தனல்லபெருந்துறைமேய
படையார்சூலம்வல்லவன்பாதம்பரவியபத்திவைவல்லா
ருடையாராகியுள்ளமுமொன்றியுலகினில்மன்னுவர்தாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கற்குடி - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்

வடந்திகழ்மென்முலையாளைப்பாகமதாகமதித்துத்
தடந்திரைசேர்புனல்மாதைத்தாழ்சடைவைத்தசதுர
ரிடந்திகழ்முப்புரிநூலர்துன்பமொடின்பமதெல்லாங்
கடந்தவர்காதலில்வாழுங்கற்குடிமாமலையாரே. (க)

அங்கமோராறுடைவேள்வியானவருமறைநான்கும
பங்கமில்பாடலோடாடல்பாணிபயின்றபடிறர்
சங்கமதார்குறமாதர்தங்கையின்மைந்தர்கள்தாவிக்
கங்குலின்மாமதிபற்றுங்கற்குடிமாமலையாரே. (உ)

நீரகலந்தருசென்னிநீடியமத்தமும்வைத்துத்
தாரகையின்னொளிசூழ்ந்ததண்மதிசூடியசைவர்
போரகலந்தருவேடர்புனத்திடையிட்டவிறகிற்
காரகிலின்புகைவிம்முங்கற்குடிமாமலையாரே. (ங)

ஒருங்களிநீயிறைவாவென்றும்பர்களோலமிட்டக்கண்
டிருங்களமாரவிடத்தையின்னமுதுண்ணியவீசர்
மருங்களியார்பிடிவாயில்வாழ்வெதிரின்முளைவாரிக்
கருங்களியானைகொடுக்குங்கற்குடிமாமலையாரே. (ச)

போர்மலிதிண்சிலைகொண்டுபூதகணம்புடைசூழப்
பார்மலிவேடுருவாகிப்பண்டொருவர்க்கருள்செய்தா

---

* அரிசில் என்பது-ஒருநதி. அது அரிசொல்ல வந்ததினால் அரிசொல்நதியென்று கும்பகோணபுராணத்திற் சொல்லப்படுகின்றது.

நேர்மலிகேழற்கிளைத்தவிண்ணொளியாமணியெங்கும்
கார்மலிவேடர்குவிக்குங்கற்குடிமாமலையாரே. (ரு)

உலந்தவரென்பதணிந்தேயூரிடுபிச்சையராகி
விலங்கல்வில்வெங்கனலாலேமூவெயில்வேவமுனிந்தார்
நலந்தருசிந்தையராகிநாமலிமாலையினாலே
கலந்தவர்காதலில்வாழுங்கற்குடிமாமலையாரே. (சு)

மானிடமார்தருகையர்மாமழுவாருமவலத்தா
ரூனிடையார்தலையோட்டிலுண்கலனாகவுகந்தார்
தேனிடையார்தருசந்தின்றிணிசிறையால்திணைவித்திக்
கானிடைவேடர்விளைக்குங்கற்குடிமாமலையாரே.

வாளமர்வீரநினைந்தவிராவணன்மாமலையின்கீழ்த்
தோளமர்வன்றலைகுன்றத்தொல்விரலூன்றுதுணைவர்
தாளமர்வேய்தலைபற்றித்தாழ்கரிவிட்டவிசைபோய்க்
காளமதார்முகில்கீறுங்கற்குடிமாமலையாரே (அ)

தண்டமர்தாமரையானுந்தாவியமண்ணளந்தா
கொண்ட வனுமறிவொண்ணாக்கொள்கையர்வெள்விடையூர்
வண்டிசையாயினபாடநீடியவார்பொழினீழற்
கண்டமர்மாமயிலாடுங்கற்குடிமாமலையாரே. (கூ)

மூத்துவராடையினாருமூசுகரும்பொடியாரு
நாத்துவர்பொய்ம்மொழியாளர்நயமிலராமதிவைத்தா
ரேத்துயர்பாதங்கள்சித்தரிறைஞ்சவவரிடரகலாங்
காத்தவர்காமருசோலைக்கற்குடிமாமலையாரே. (க0)

காமருவார்பொழில்சூழுங்கற்குடிமாமலையாரை
நாமருவண்புகழ்காழிநலந்திகழ்ஞானசம்பந்தன்
பாமருசெந்தமிழ்மாலைபத்திவைபாடவல்லார்கள்
பூமலிவானவரோடும்பொன்னுலகிற்பொலிவாரே (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருப்பாச்சிலாச்சிராமம் - முயலகன்றீர்த்தது - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்

துணிவளர்திங்கள்துளங்கிவிளங்கச்சுடர்ச்சடைசுற்றிமுடித்துப்
பணிவளர்கொள்கையர்பாரிடஞ்சூழவாரிடமும்பலிதேர்வ
ரணிவளர்கோலமெலாஞ்செய்துபாச்சிலாச்சிராமத்துறைகின்ற
மணிவளர்கண்டரோமங்கையைவாடமயல்செய்வதோவிவர்மாண்பே. (க)

கலைபுனைமானுரிதோலுடையாடைகனல்சுடராலிவர்கண்கள்
தலையணிசென்னியர்தாரணிமார்பர்தம்மடிகளிவரென்ன
அலைபுனல்பூம்பொழில்சூழ்ந்தமர்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
விலைபுனைவேலரோவேழையைவாடவிடர்செய்ததோரிவரீடே. (உ)

வெஞ்சுடராடுவர்துஞ்சுருண்மாலைவேண்டுவர்பூண்பதுவெண்ணூல்
நஞ்சடைகண்டர்நெஞ்சிடமாகநண்ணுவர்நம்மைநயந்து
மஞ்சடைமாளிகைசூழ்தருபாச்சிலாச்சிராமத்துறைகின்ற
செஞ்சுடர்வண்ணரோபைந்தொடிவாடச்சிதைசெய்வதோவிவர்சீரே. (ங)

கணமலர்க்கொன்றையலங்கலிலங்கக்கனல்தருதூமதிகண்ணி
புணமலர்மாலையணிந்தழகாயபுனிதர்கொலாமிவரென்ன
வணமலிவண்பொழில்சூழ்தருபாச்சிலாச்சிராமத்துறைகின்ற
மணமலிமைந்தரோமங்கையைவாடமயல்செய்வதோவிவர்மாண்பே. (ச)

மாந்தர்தம்பால்நறுநெய்மகிழ்ந்தாடி வளர்சடைமேற்புனல்வைத்து
மோந்தைமுழாக்குழல்தாளமோர்வீணைமுதிரவோர்வாய்மூரிபாடி
யாந்தைவிழிச்சிறுபூதத்தர்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
சாந்தணிமார்பரோதையலைவாடச்சதுர்செய்வதோவிவர்சார்வே. (ரு)

நீறுமெய்பூசிநிறைசடைதாழநெற்றிக்கண்ணாலுற்றுநோக்கி
றதுசூடியாடரவாட்டியைவிரற்கோவணவாடை
றருமேனியர்பூதத்தர்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
ஏறதுவேறியரேழையைவாடவிடர்செய்வதோவிவரீடே. (சா)

பொங்கிளநாகமொரேகவடத்தோடாமைவெண்ணூல்புனைகொன்றை
கொங்கிளமாலைபுனைந்தழகாயகுழகர்கொலாமிவரென்ன
வங்கிளமங்கையோர்பங்கினர்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
சங்கொளிவண்ணரோதாழ்குழல்வாடச்சதிர்செய்வதோவிவர்சார்வே. (எ)

ஏவலத்தால்விசயற்கருள்செய்தோயிராவணனையீடழித்து
மூவரிலும்முதலாய்நடுவாயமூர்த்தியையன்றிமொழியாள்
யாவர்களும்பரவும்மெழிற்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
தேவர்கள்தேவரோசேயிழைவாடச்சிதைசெய்வதோவிவர்சார்வே. (அ)

மேலதுநான்முகனெய்தியதில்லைக்கீழதுசேவடிதன்னை
நீலதுவண்ணனுமெய்தியதில்லையெனவிவர்நின்றதுமல்லா
லாலதுமாமதிதோய்பொழிற்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
பாலதுவண்ணரோபைந்தொடிவாடப்பழிசெய்வதோவிவர்பண்பே. (கூ)

நாணொடுகூடியசாயினரேனுநகுவரவரிருபோது
மூணொடுகூடியவுட்குநகையாலுரைகளவைகொளவேண்டா
வாணொடுபெண்வடிவாயினர்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
பூணொடுமார்பரோபூங்கொடிவாடப்புனைசெய்வதோவிவர்பொற்பே. (கo)

அகமலியன்பொடுதொண்டர்வணங்கப்பாச்சிராமத்துறைகின்ற
புகைமலிமாலைபுனைந்தழகாயபுனிதர்கொலாமிவரென்ன
நகைமலிதண்பொழில்சூழ்தருகாழிநற்றமிழ்ஞானசம்பந்தன்
றகைமலிதண்டமிழ்கொண்டிவையேத்தச்சாரகிலாவினைதானே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

**திருப்பழையனூர் - திருஆலங்காடு - பண் - தக்கராகம்.**

திருச்சிற்றம்பலம்.

துஞ்சவருவாருந்தொழுவிப்பாரும்வழுவிப்போய்
நெஞ்சம்புகுந்தென்னைநினைவிப்பாருமுனைநட்பாய்
வஞ்சப்படுத்தொருத்திவாணாள்கொள்ளும்வகைகேட்
டஞ்சும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. (க)

கேடும்பிறவியுமாக்கினாருங்கேடிலா
வீடுமாநெறிவிளம்பினரெம்மகிழ்தனர்

## திரு அதிகை வீரட்டானம் - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

குண்டைக்குறட்பூதங்குழுமவனலேந்திக்
கெண்டைபிறழ்தெண்ணீர்க்கெடிலவடபக்கம்
வண்டுமருள்பாடவளர்பொன்விரிகொன்றை
விண்டதொடையலானாடும்வீரட்டானத்தே. (௧)

அரும்புங்குரும்பையுமலைத்தமென்கொங்கைக்
கரும்பின்மொழியாளோடுடன்கையனல்வீசிச
சுரும்புண்விரிகொன்றைச்சுடர்பொற்சடைதாழ
விரும்புமதிகையுளாடும்வீரட்டானத்தே. (௨)

ஆடலழனாகமரைக்கிட்டசைத்தாடப
பாடல்பறைவல்லான்படுதம்பலிபெயர்வான்
மாடமுகட்டின்மேல்மதிதோயதிகையுள்
வேடம்பலவல்லானாடும்வீரட்டானத்தே. (௩)

எண்ணாரெயிலெய்தானிறைவனனலேந்தி
மண்ணார்முழவதிரமுதிராமதிசூடிப
பண்ணார்மறைபாடப்பரமனதிகையுள்
விண்ணோர்பரவநின்றாடும்வீரட்டானத்தே. (௪)

கரிபுன்புறமாயகழிந்தாரிடுகாட்டிற்
றிருநின்றொருகையாற்றிருவாமதிகையு
ளெரியேந்தியபெருமானெரிபுன்சடைதாழ
விரியும்புனல்சூடியாடும்வீரட்டானத்தே (௫)

துளங்குஞ்சுடரங்கைத்துதையவிளையாடி
இளங்கொம்பனசாயலுமையோடிசைபாடி
வளங்கொள்புனல்சூழ்ந்தவயலாரதிகையுள
விளங்கும்பிறைசூடியாடும்வீரட்டானத்தே. (௬)

பாதம்பலரேத்தப்பரமன்பரமேட்டி
பூதம்புடைசூழப்புலித்தோலுடையாகக்
கீதமுமைபாடக்கெடிலவடபக்கம்
வேதமுதல்வனின்றாடும்வீரட்டானத்தே (௭)

கல்லாவரையரக்கன்றடந்தோள்கவின்வாட
வொல்லையடர்த்தவனுக்கருள்செய்ததிகையுட்
பல்லார்பகுவாயநகுவெண்டலைசூடி
வில்லாலெயிலெய்தானாடும்வீரட்டானத்தே. (௮)

நெடியானான்முகனுநிமிர்ந்தானைக்காண்கிலார்
பொடியாடுமார்பானைப்புரிநூலுடையானைக்
கடியார்கழுநீலமலருமதிகையுள்
வெடியார்தலையேந்தியாடும்வீரட்டானத்தே. (௯)

அரையோடலர்பிண்டிமருவிக்குண்டிகை
சுரையோடுடனேந்தியுடைவிட்டுழல்வார்க
ளுரையோடுரையொவ்வாதுமையோடுடனாகி
விரைதோயலர்தாரானாடும்வீரட்டானத்தே.

ஞாழல்கமழ்காழியுண்ஞானசம்பந்தன்
வேழமபொருதெண்ணீரதிகைவீரட்டானத்துச்
சூழுங்கழலானைச்சொன்னதமிழ்மாலை
வாழுநதுணையாகநினைவார்வினையிலரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சிரபுரம் - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம். (கூ)

பல்லடைநதவெண்டலையிற்பலிகொள்வதன்றியும்போய்
வில்லடைநதபுருவநல்லாள்மேனியில்வைத்தலென்னே
சொல்லடைநததொன்மறையோடங்கங்கலைகளெல்லாஞ்
செல்லடைநதசெல்வர்வாழுஞ்சிரபுரமேயவனே. (க)

தொல்லைமுல்லைநகையினளோர்கூறதுவன்றியுமபோ
யல்லல்வாழ்க்கைபலிகொண்டுண்ணுமாதரவென்னைகொலாஞ்
சொல்லநீண்டபெருமையாளர்தொல்கலைகற்றுவல்லார்
செல்லநீண்டசெல்வமல்குசிரபுரமேயவனே. (உ)

நீரடைநதசடையின்மேலோர்நிகழ்மதியன்றியுமபோ
யூரடைநதவேறதேறியுண்பலிகொளவதென்னே
காரடைநதசோலைசூழநதுகாமரமவண்டிசைப்பச்
சீரடைநதசெல்வமோங்குசிரபுரமேயவனே. (ங)

கையடைநதமானினோடுகாரரவன்றியுமபோய்
மெய்யடைநதவேட்கையோடுமெல்லியல்வைத்தலென்னே
கையடைநதகளைகளாகச்செங்கழுநீர்மலர்கள்
செய்யடைநதவயல்கள்சூழ்நதசிரபுரமேயவனே. (ச)

புரமெரிநதபெற்றியோடுமபோர்மதயானைதன்னைக்
கரமெடுநதுநதோலுரித்தகாரணமாவதென்னே
மரமுரிநததோலுடுததமாதவர்தேவரோடுஞ்
சிரமெடுத்தகைகள்கூபபுஞ்சிரபுரமேயவனே. (ரு)

கண்ணுமூன்றுமுடையதன்றிக்கையினில்வெண்மழுவும
பண்ணுமூனறுவீணையோடுபாம்புடன்வைத்தலென்னே
எண்ணுமூன்றுகனலுமோம்பியெழுமையுமவிழுமியராய்த்
திண்ணமூன்றுவேள்வியாளர்சிரபுரமேயவனே. (சு)

குறைபடாதவேட்கையோடுகோல்வளையாளொருபாற்
பொறைபடாதவின்பமோடுபுணர்தருமெய்ம்மையென்னை
இறைபடாதமென்முலையார்மாளிகைமேலிருநது
சிறைபடாதபாடலோங்குசிரபுரமேயவனே. (எ)

மலையெடுத்தவாளரக்கனஞ்சவொருவிரலால்
நிலையெடுத்தகொள்கையானேநின்மலனேநினைவார்
துலையெடுத்தசொற்பயில்வார்மேதகுவீதிதோறுஞ்
சிலையெடுத்ததோளினனேசிரபுரமேயவனே. (அ)

மாலினோடுமலரினனும்வந்தவர்காணாது
சாலுமஞ்சப்பண்ணிநீண்டதத்துவமேயதென்னே

நாலுவேதமோதலார்கள்நந்துணையென்றிறைஞ்சச்
சேலுமேயுங்கழனிசூழ்ந்தசிரபுரமேயவனே. (௯)

புத்தரோடுசமணர்சொற்கள்புறனுரையென்றிருக்கும்
பத்தர்வந்துபணியவைத்தபான்மையதென்னைகொலாம்
மத்தயானையுரியும்போர்த்துமங்கையொடும்முடனே
சித்தர்வந்துபணியுஞ்செல்வச்சிரபுரமேயவனே. (௰)

தெங்குநீண்டசோலைசூழ்ந்தசிரபுரமேயவனை
யங்கநீண்டமறைகள்வல்லவணிகொள்சம்பந்தனுரை
பங்கநீங்கப்பாடவல்லபத்தர்கள்பாரிதன்மேற்
சங்கமோடுநீடிவாழ்வர்தன்மையினாலவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சேய்ஞலூர் - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

நூலடைந்தகொள்கையாலேநுன்னடிகூடுதற்கு
மாலடைந்தநால்வர்கேட்கநல்கியநல்லறத்தை
யாலடைந்தநீழல்மேவியருமறைசொன்னதென்னே
சேலடைந்ததண்கழனிச்சேய்ஞலூர்மேயவனே. (௧)

நீறடைந்தமேனியின்கணேரிழையாளொருபாற்
கூறடைந்தகொள்கையன்றிக்கோலவளர்சடைமே
லாறடைந்ததிங்கள்சூடியரவமணிந்ததென்னே
சேறடைந்ததண்கழனிச்சேய்ஞலூர்மேயவனே. (௨)

ஊனடைந்தவெண்டலையினோடுபலிதிரிந்து
கானடைந்தபேய்களோடுபூதங்கலந்துடனே
மானடைந்தநோக்கிகாணமகிழ்ந்தெரியாடலென்னே
தேனடைந்தசோலைமல்குசேய்ஞலூர்மேயவனே. (௩)

வீணடைந்தமும்மதிலும்வின்மலையாவரவி
னாணடைந்தவெஞ்சரத்தால்நல்லெரியூட்டலென்னே
பாணடைந்தவண்டுபாடும்பைம்பொழில்சூழ்ந்தழகார்
சேணடைந்தமாடமல்குசேய்ஞலூர்மேயவனே. (௪)

பேயடைந்தகாடிடமாப்பேணுவதன்றியும்போய்
வேயடைந்ததோளியஞ்சவேழமுரித்ததென்னே
வாயடைந்தநான்மறையாறங்கமோடைவேள்வித்
தீயடைந்தசெங்கையாளர்சேய்ஞலூர்மேயவனே. (௫)

காடடைந்தவேனமொன்றின்காரணமாகிவந்து
வேடடைந்தவேடனாகிவிசயனொடெய்ததென்னே
கோடடைந்தமால்களிற்றுக்கோச்செங்கணற்கருள்செய்
சேடடைந்தசெல்வர்வாழுஞ்சேய்ஞலூர்மேயவனே. (௬)

பீரடைந்தபாலதாட்டப்பேணாதவன்றாதை
வேரடைந்துபாய்ந்ததாளைவேர்த்தடிந்தான்றனக்குத்
தாரடைந்தமாலைசூட்டித்தலைமைவகுத்ததென்னே
சீரடைந்தகோயின்மல்குசேய்ஞலூர்மேயவனே.

மாவடைந்ததேரரக்கன்வலிதொலைவித்தவன்ற
னாவடைந்தபாடல்கேட்டுநயந்தருள்செய்ததென்னே
பூவடைந்தநான்முகன்போற்பூசுரர்போற்றிசெய்யுஞ்
சேவடைந்தவூர்தியானேசேய்ஞலூர்மேயவனே. (அ)

காரடைந்தவண்ணனோடுகனகமனையானும்
பாரடைந்துமவிண்பறந்துமபாதமுடிகாணார்
சீரடைந்துவந்துபோற்றச்சென்றருள்செய்ததென்னே
தேரடைந்தமாமறுகிற்சேய்ஞலூர்மேயவனே. (௯)

மாசடைந்தமேனியாருமனந்திரியாதகஞ்சி
நேசடைந்தவூணினருநேசமிலாததென்னே
வீசடைந்ததோகையாடவிரைகமழும்பொழில்வாய்த்
தேசடைந்தவண்டுபாடுஞ்சேய்ஞலூர்மேயவனே. (௧0)

சேயடைந்தசேய்ஞலூரிற்செல்வன்சீர்பரவித்
தோயடைந்ததண்வயல்சூழ்தோணிபுரத்தலைவன்
சாயடைந்தஞானமல்குசம்பந்தனின்னுரைகள்
வாயடைந்துபாடவல்லார்வானுலகாள்பவரே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருநள்ளாறு - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

போகமார்த்தபூண்முலையாள்தன்னோடுமபொன்னகலம்
பாகமார்த்தபைங்கண்வெள்ளேற்றண்ணல்பரமேட்டி
யாகமார்த்ததோலுடையன்கோவணவாடையின்மேல்
நாகமார்த்தநம்பெருமான்மேயதுநள்ளாறே. (௧)

தோடுடையகாதுடையன்றோலுடையன்தொலையாப
பீடுடையபோர்விடையன்பெண்ணுமோர்பாலுடைய
னேடுடையமேலுலகோடேழ்கடலுஞ்சூழ்ந்த
காடுடையநம்பெருமான்மேயதுநள்ளாறே. (௨)

ஆன்முறையாலாற்றவெண்ணீறாடியணியிழையோர
பான்முறையால்வைத்தபாதம்பத்தர்பணிந்தேத்த
மான்மறியும்வெண்மழுவுஞ்சூலமும்பற்றியகை
நான்மறையானநம்பெருமான்மேயதுநள்ளாறே. (௩)

புல்கவல்லவார்சடைமேற்பூம்புனல்பெய்தயலே
மல்கவல்லகொன்றைமாலைமதியோடுடன்சூடிப்
பல்கவல்லதொண்டர்தம்பொற்பாதநிழற்சேர
நல்கவல்லநம்பெருமான்மேயதுநள்ளாறே. (௪)

ஏறுதாங்கியூர்திபேணியேர்கொளிளமதிய
மாறுதாங்குஞ்சென்னிமேலோராடரவஞ்சூடி
நீறுதாங்கிநூல்கிடந்தமார்பினிரைகொன்றை
நாறுதாங்குநம்பெருமான்மேயதுநள்ளாறே. (௫)

திங்களுச்சிமேல்விளங்குந்தேவனிமையோர்க
ளெங்களுச்சியெம்மிறைவனென்றடியேயிறைஞ்சத்

தங்களுச்சியால்வணங்குந்தன்னடியார்கட்கெல்லா
நங்களுச்சிநமபெருமான்மேயதுநள்ளாறே. (௬)

வெஞ்சுடர்த்தீயங்கையேந்திவிண்கொள்முழவதிர
வஞ்சிடத்தோராடல்பாடல்பேணுவதன்றியும்போய்ச்
செஞ்சடைக்கோர்திங்கள்சூடித்திகழ்தருகண்டத்துள்ளே
நஞ்சடைந்தநம்பெருமான்மேயதுநள்ளாறே. (எ)

சிட்டமார்ந்தமும்மதிலுஞ்சிலைவரைதீயம்பினாற்
சுட்டுமாட்டிச்சுண்ணவெண்ணீறாடுவதன்றியும்போய்ப்
பட்டமார்ந்தசென்னிமேலோர்பான்மதியஞ்சூடி
நட்டமாடுநமபெருமான்மேயதுநள்ளாறே. (அ)

உண்ணலாகாநஞ்சுகண்டத்துண்டுடனேயொடுக்கி
யண்ணலாகாவண்ணனீழலாரழல்போலுருவ
மெண்ணலாகாவுள்வினையென்றெள்கவலித்திருவர்
நண்ணலாகாநமபெருமான்மேயதுநள்ளாறே. (௯)

மாசுமெய்யர்மண்டைத்தேரர்குண்டர்குணமிலிகள்
பேசும்பேச்சைமெய்யென்றெண்ணியநெறிசெல்லன்மின்
மூசுவண்டார்கொன்றைசூடிமும்மதிலும்முடனே
நாசஞ்செய்தநம்பெருமான்மேயதுநள்ளாறே. (௧௦)

தண்புனலும்வெண்பிறையுந்தாங்கியதாழ்சடையன்
நண்புநல்லார்மல்குகாழிஞானசம்பந்தனல்ல
பண்புநள்ளாறேத்துபாடல்பத்துமிவைவல்லா
ருண்புநீங்கிவானவரோடுலகிலுறைவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருவலிவலம் - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

ஒல்லையாறியுள்ளமொன்றிக்கள்ளமொழிகதுவெய்ய
சொல்லையாறித்தூய்மைசெய்துகாமவினையகற்றி
நல்லவாறேயுன்றனாமநாவினவின்றேத்த
வல்லவாறேவந்துநல்காய்வலிவலமேயவனே. (௧)

இயங்குகின்றவிரவிதிங்கள்மற்றுநற்றேவரெல்லாம்
பயங்களாலேபற்றிநின்பாற்சித்தநதெளிகின்றிலர்
தயங்குசோதிசாமவேதாகாமனைக்காய்ந்தவனே
மயஙகுகின்றேன்வநதுநல்காய்வலிவலமேயவனே. (௨)

பெண்டிர்மக்கள்சுற்றமென்னும்பேதைப்பெருங்கடலை
விண்டுபண்டேவாழமாட்டேன்வேதனைநோய்நலியக்
கண்டுகண்டேயுன்றனாமங்காதலிக்கின்றதுள்ளம்
வண்டுகிண்டிபபாடுஞ்சோலைவலிவலமேயவனே. (௩)

மெய்யராகிப்பொய்மைநீக்கிவேதனையைத்துறந்து
செய்யரானார்சிந்தையானேதேவர்குலக்கொழுந்தே
கைவனுயேனுன்றனாமங்காளுநவிற்றுகின்றேன்
வையமுன்னேவந்துநல்காய்வலிவலமேயவனே. (௪)

துஞ்சும்போதுந்துற்றும்போதுஞ்சொல்லுவனுன்றிறமே
தஞ்சமில்லாத்தேவர்வந்துன்றாளிணைக்கீழ்ப்பணிய
நஞ்சையுண்டாய்க்கென்செய்கேனோநாளுநினைந்தடியேன்
வஞ்சமுண்டென்றஞ்சுகின்றேன்வலிவலமேயவனே. (ரு)

புரிசடையாய்புண்ணியனேநண்ணலார்மூவெயிலு
மெரியவெய்தாயெம்பெருமானென்றிமையோர்பரவுங்
கரியுரியாய்காலகாலாநீலமணிமிடற்று
வரியரவாவந்துநல்காய்வலிவலமேயவனே. (சா)

தாயுநீயேதந்தைநீயேசங்கரனேயடியே
னாயுநின்பாலன்புசெய்வானாதரிக்கின்றதுள்ள
மாயமாயகாயந்தன்னுளைவர்நின்றொன்றலொட்டார்
மாயமேயென்றஞ்சுகின்றேன்வலிவலமேயவனே. (எ)

நீரொடுங்குஞ்செஞ்சடையாய்நின்னுடையபொன்மலையை
வேரொடுமபீழ்ந்தேந்தலுற்றவேந்தனிராவணனைத்
தேரொடுமபோய்வீழ்ந்தலறத்திருவிரலாலடர்த்த
வாரொடுங்குங்கொங்கைபங்காவலிவலமேயவனே. (அ)

ஆதியாயநான்முகனுமாலுமறிவரிய
சோதியானேநீதியில்லேன்சொல்லுவதுன்றிறமே
யோதிநாளுமுன்னையேத்துமென்னைவினையவலம்
வாதியாமேவந்துநல்காய்வலிவலமேயவனே. (கூ)

* பொதியிலானேபூவணத்தாய்பொன்றிகழுங்கயிலைப்
பதியிலானேபத்தர்சித்தமபற்றுவிடாதவனே
விதியிலாதார்வெஞ்சமணர்சாக்கியரென்றிவர்கள்
மதியிலாதாரென்செய்வாரோவலிவலமேயவனே. (கo)

வன்னிகொன்றைமத்தஞ்சூடும்வலிவலமேயவனைப்
பொன்னிநாடன்புகலிவேந்தன்ஞானசம்பந்தன்சொன்ன
பன்னுபாடல்பத்தும்வல்லார்மெய்த்தவத்தோர்விரும்பு
மன்னுசோதியீசனோடேமன்னியிருப்பாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சோபுரம் - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

வெங்கணானையீருரிவைபோர்த்துவிளங்குமொழி
மங்கைபாகம்வைத்துகந்தமாண்பதுவென்னைகொலாங்
கங்கையோடுதிங்கள்சூடிக்கடிகமழுங்கொன்றைத்
தொங்கலானேதூயநீற்றாய்சோபுரமேயவனே. (க)

விடையமர்ந்துவெண்மழுவொன்றேந்திவிரிந்திலங்கு
சடையொடுங்கத்தண்புனலைத்தாங்கியதென்னைகொலாங்
கடையுயர்ந்தமும்மதிளுங்காய்ந்தனலுள்ளழுந்தத்
தொடைநெகிழ்ந்தவெஞ்சிலையாய்சோபுரமேயவனே. (உ)

---

* பொதியில் - என்பது பொதிகைமலை. அது வைப்புத்தலங்களி லொன்று. திங்களூர் பிடவூர் கோவந்தபுத்தூர் குருக்கேத்திரம் பொதியமலை தேனூர் - என்னுஞ் செய்யுளானுணர்க.

தீயராயவல்லரக்கர்செந்தழலுள்ளழுந்தச்
சாயவெய்துவானவரைத்தாங்கியதென்னைகொலாம
பாயும்வெள்ளையேற்றையேறிப்பாய்புலித்தோலுடைதந்துத்
தூயவெள்ளைநீற்றினனேசோபுரமேயவனே. (௫)

பல்விலோடுகையிலேந்திப்பல்கடையும்பலிதேர்ந்
தல்லல்வாழ்க்கைமேலதானவாதரவென்னைகொலாம
வில்லைவென்றநுண்புருவவேனெடுங்கண்ணியொடுந்
தொல்லையூழியாகிநின்றாய்சோபுரமேயவனே. (௬)

நாற்றமிக்ககொன்றைதுன்றுசெஞ்சடைமேல்மதிய
மேற்றமாகவைத்துகந்தகாரணமென்னைகொலா
மூற்றமிக்ககாலன்றன்னையொல்கவுதைத்தருளித்
தோற்றமீறுமாகிநின்றாய்சோபுரமேயவனே. (௭)

கொன்னவின்றமூவிலைவேற்கூர்மழுவாட்படையன்
பொன்னைவென்றகொன்றைமாலைசூடும்பொற்பென்னைகொலா
மன்னமன்னமென்னடையாள்பாகமமர்ந்தரைசேர்
துன்னவண்ணவாடையினாய்சோபுரமேயவனே. (௮)

குற்றமின்மையுண்மைநீயென்றுன்னடியார்பணிவார்
கற்றகேள்விஞானமானகாரணமென்னைகொலாம
வற்றலாமைவாளரவமபூண்டயன்வெண்டலையிற்
றுற்றலானகொள்கையானேசோபுரமேயவனே. (௯)

விலங்கலொன்றுவெஞ்சிலையாக்கொண்டுவிறலரக்கர்
குலங்கள்வாழூரெரித்தகொள்கையிதென்னைகொலா
மிலங்கைமன்னுவாளவுணர்கோனையெழில்விரலாற்
றுலங்கவூன்றிவைத்துகந்தாய்சோபுரமேயவனே. (௮)

விடங்கொளுகமால்வரையைச்சுற்றிவிரிதிரைநீர்
கடைந்திடநஞ்சையுண்டுகந்தகாரணமென்னைகொலா
மிடந்துமண்ணையுண்டமாலுமின்மலர்மேலயனுந்
தொடர்ந்துமுன்னங்காணமாட்டாச்சோபுரமேயவனே. (௯)

புத்தரோடுபுன்சமணர்பொய்யுரையேயுரைத்துப
பித்தராகக்கண்டுகந்தபெற்றிமையென்னைகொலா
மத்தயானையீருரிவைபோர்த்துவளர்சடைமேற
றுத்திநாகஞ்சூடினனேசோபுரமேயவனே. (௧0)

சோலைமிக்கதண்வயல்சூழ்சோபுரமேயவனைச்
சீலமிக்கதொல்புகழார்சிரபுரக்கோனலத்தால்
ஞாலமிக்கதண்டமிழால்ஞானசம்பந்தன்சொன்ன
கோலமிக்கமாலைவல்லார்கூடுவர்வானுலகே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநெடுங்களம் - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

மறையுடையாய்தோலுடையாய்வார்சடைமேல்வளரும்
பிறையுடையாய்பிஞ்ஞகனேயென்றுன்னைப்பேசினல்லார்ற்

குறையுடையார்குற்றமோராய்கொள்கையினாலுயர்ந்த
நிறையுடையாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (க)

கனைத்தெழுந்தவெண்டிரைசூழ்கடலிடைநஞ்சுதன்னை
தினைத்தனையாமிடற்றில்வைத்ததிருந்தியதேவநின்னை
மனத்தகத்தோர்பாடலாடல்பேணியிராப்பகலு
நினைத்தெழுவாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (உ)

நின்னடியேவழிபடுவானிமலாநினைக்கருத
வென்னடியானுயிரைவவ்வேலென்றடற்கூற்றுதைத்த
பொன்னடியேபரவிநாளும்பூவொடுநீர்சுமக்கு
நின்னடியாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (ங)

மலைபுரிந்தமன்னவன்றன்மகளையோர்பால்மகிழ்ந்தா
யலைபுரிந்தகங்கைதங்குமவிர்சடையாரூரா
தலைபுரிந்தபலிமகிழ்வாய்தலைவநின்றாணிழற்கீழ்
நிலைபுரிந்தாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (ச)

பாங்கினல்லார்படிமஞ்செய்வார்பாரிடமும்பலிசேர்
தூங்கிநல்லார்பாடலோடுதொழுகழலேவணங்கித்
தாங்கிநில்லாவன்பினோடுந்தலைவநின்றாணிழற்கீழ்
நீங்கிநில்லாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (ரு)

விருத்தனாகிப்பாலனாகிவேதமோர்நான்குணர்ந்து
கருத்தனாகிக்கங்கையாளைக்கமழ்சடைமேற்கரந்தாய்
யருந்தனாயவாதிதேவனடியிணையேபரவு
நிருத்தர்கீதரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (சா)

கூறுகொண்டாய்மூன்றுமொன்றாக்கூட்டியோர்வெங்கணையால்
மாறுகொண்டார்புரமெரித்தமன்னவனேகொடிமே
லேறுகொண்டாய்சாந்தமீதென்றெம்பெருமானணிந்த
நீறுகொண்டாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (எ)

குன்றினுச்சிமேல்விளங்குங்கொடிமதிள்சூழிலங்கை
யன்றிநின்றவரக்கர்கோனையருவரைக்கீழடர்த்தா
யென்றுநல்லவாய்மொழியால்லேத்தியிராப்பகலு
நின்றுநைவாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (அ)

வேழவெண்கொம்பொசித்தமாலுமவிளங்கியநான்முகனுஞ்
சூழவெங்குந்தேடவாங்கோர்சோதியுளாகிநின்றாய்
கேழல்வெண்கொம்பணிந்தபெம்மான்கேடிலாப்பொன்னடியி
னீழல்வாழ்வாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (கூ)

வெஞ்சொற்றஞ்சொலாக்கிநின்றவேடமிலாச்சமணுந்
தஞ்சமில்லாச்சாக்கியருந்தத்துவமொன்றறியார்
துஞ்சலில்லாவாய்மொழியாற்றோத்திரநின்னடியே
நெஞ்சில்வைப்பாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. (க0)

நீடவல்லவார்சடையான்மேயநெடுங்களத்தைச்
சேடர்வாழுமாமறுகிற்சிரபுரக்கோனலத்தால்
நாடவல்லபனுவன்மாலைஞானசம்பந்தன்சொன்ன
பாடல்பத்தும்பாடவல்லார்பாவம்பறையுமே. (கக)

திருமுதுகுன்றம் - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

தேவராயுமசுரராயுஞ்சித்தர்செழுமறைசேர்
நாவராயுநண்ணுபாருமவிண்ணெரிகால்நீரு
மேவராயவிரைமலரோன்செங்கண்மாலீசனென்னு
மூவராயமுதலொருவன்மேயதுமுதுகுன்றே. (௧)

பற்றுமாகிவானுளோர்க்குப்பல்கதிரோன்மதிபா
ரெற்றுநீர்தீக்காலுமேலைவிண்ணியமானனோடு
மற்றுமாதோர்பல்லுயிராய்மாலயனுமறைகள்
முற்றுமாகிவேறுமானான்மேயதுமுதுகுன்றே. (௨)

வாரிமாகமவைகுதிங்கள்வாளரவஞ்சூடி
நாரிபாகநயந்துபூமேல்நான்முகன்றன்றலையிற
சீரிதாகபபலிகொள்செல்வன்செற்றலுநதோன்றியதோர்
மூரிநாகத்துரிவைபோர்த்தான்மேயதுமுதுகுன்றே. (௩)

பாடுவாருக்கருளுமெநதைபணிமுதுபௌவமுந்நீர்
நீடுபாருமுழுதுமோடியண்டர்நிலைகெடலும
நாடுதானுமூடுமோடிஞாலமுநான்முகனு
மூடுகாணமூடுமவெள்ளத்துயர்நததுமுதுகுன்றே. (௪)

வழங்குதிங்கள்வன்னிமத்தமாசுணமீசணவிச்
செழுஙகல்வேநதன்செல்விகாணத்தேவர்திசைவணஙகத்
தழஙகுமொநதைதக்கைமிக்கபேய்க்கணம்பூதஞ்சூழ
முழஙகுசெந்தீயேநதியாடிமேயதுமுதுகுன்றே. (௫)

சுழிநதகங்கைதோய்நததிங்கட்டொல்லார்நல்விதழி
சழிநதசென்னிச்சைவவேடநதானினைத்தைமபுலனும்
அழிநதசிநதையநதணாளர்க்கறமபொருளின்பம்வீடு
மொழிநதவாயான்முக்கணாதிமேயதுமுதுகுன்றே. (௬-௭)

மயஙகுமாயமவல்லராகிவானினொடுநீரு
மியஙகுவோருக்கிறைவனையிராவணன்றோளெரித்த
புயங்கராகமாநடத்தன்புணர்முலைமாதுமையாள்
முயஙகுமார்பன்முனிவரேத்தமேயதுமுதுகுன்றே. (௮)

ஞாலமுண்டமாலுமற்றைநான்முகனுமறியாக்
கோலமண்டர்சிநதைகொள்ளாராயினுங்கொய்மலரா
லேலவிண்டைகட்டிநாமமிசையவெபபோதுமேத்து
மூலமுண்டநீற்றர்வாயான்மேயதுமுதுகுன்றே. (௯)

உறிகொள்கையர்சீவரத்தருண்டுழல்மிண்டர்சொல்லை
நெறிகளென்னநினைவுறாதேநித்தலுங்கைதொழுமின்
மறிகொள்கையன்வங்கமுந்நீர்பொங்குவிடத்தையுண்ட
முறிகொள்மேனிமங்கைபங்கன்மேயதுமுதுகுன்றே. (௧௦)

மொய்த்துவானோர்பல்கணங்கள்வணங்குமுதுகுன்றைப்
பித்தர்வேடம்பெருமையென்னும்பிரமபுரத்தலைவன். (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருவோத்தூர் ஆண்பனைபெண்பனையானது - பண் - பழந்தக்கராகம்

திருச்சிற்றம்பலம்.

பூத்தேர்ந்தாயனகொண்டுநின்பொன்னடி, யேத்தாதாரில்லையெண்ணுங்கா
லோத்தூர்மேயவொளிமழுவாளங்கை, கூத்தீரும்மகுணங்களே. (க)

இடையீர்போகாவிளமுலையாளையோர், புடையீரேபுள்ளிமானுரி
யுடையீரேயும்மையேத்துதுமோத்தூர்ச், சடையீரேயுமதாளே. (உ)

உள்வேர்போலநொடிமையினார்திறங், கொள்வீரல்குலோர்கோவண
மொள்வாழைக்கனிதேன்சொரியோத்தூர்க், கள்வீரேயுமகாதலே. (ந)

தோட்டீரேதுத்தியைந்தலைநாகத்தை, யாட்டீரேயடியார்வினை
யோட்டீரேயுமமையேத்துதுமோத்தூர், நாட்டீரேயருணல்குமே. (ச)

குழையார்காதீர்கொடுமழுவாட்படை, யுழையாள்வீர்திருவோத்தூர்
பிழையாவண்ணங்கள்பாடிநின்றாடுவா, ரழையாமேயருணல்குமே. (ரு)

மிக்கார்வந்துவிரும்பிப்பலியிடத், தக்காதம்மடியீர்களென்
றுட்காதாருளரோதிருவோத்தூர், நக்கீரேயருணல்குமே. (சு)

தாதார்கொன்றைதயங்குமுடியுடை, நாதாவென்றுநலம்புகழ்ந்
தோதாதாருளரோதிருவோத்தூ, ராதீரேயருணல்குமே. (எ)

என்றானிம்மலையென்றவரக்கனை, வென்றார்போலுமவிரலினா
லொன்றார்மும்மதிளெய்தவனோத்தூ, ரென்றார்மேல்வினையேகுமே. (அ)

நன்றாநான்மறையானொடுமாலுமாய்ச், சென்றார்போலுந்திசையெலா
மொன்றாயொள்ளெரியாய்மிகவோத்தூர், நின்றீரேயுமைநேடியே. (கூ)

காரமண்கலிங்கத்துவராடையர், தேரர்சொல்லவைதேறன்மி
னோரம்பாலெயிலெய்தவனோத்தூர்ச், சீரவன்கழல்சேர்மினே. (க0)

குரும்பையாண்பனையின்குலையோத்தூ, ரரும்புகொன்றையடிகளைப்
பெரும்புகலியுள்ஞானசம்பந்தன்சொல், விரும்புவார்வினைவீடே. (கக)

திருச்சிற்றம்பலம்.

திருமாற்பேறு - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

ஊறியார்தருநஞ்சினையுண்டுமை, நீறுசேர்திருமேனியர்
சேறுசேர்வயறென்றிருமாற்பேற்றின், மாறிலாமணிகண்டரே. (க)

தொடையார்மாமலர்கொண்டிருபோதுமை, யடைவாராமடிகள்ளென
மடையார்நீர்மல்குமன்னியமாற்பே, றுடையீரேயுமையுள்கியே. (உ)

பையாருமரவங்கொடுவாட்டிய, கையானென்றுவணங்குவர்
மையார்நஞ்சுண்டுமாற்பேற்றிருக்கின்ற, வையாநின்னடியார்களே. (ந)

சாலமாமலர்கொண்டுசரணென்று, மேலையார்கள்விரும்புவர்
மாலினார்வழிபாடுசெய்மாற்பேற்று, நீலமார்கண்டநின்னையே. (ச)

மாறிலாமணியேயென்றுவானவ, ரேறவேமிகவேத்துவர்
கூறனேகுலவுந்திருமாற்பேற்றி, னீறனேயென்றுநின்னையே. (ரு)

உரையாதாரில்லையொன்றுநின்றன்மையைப், பரவாதாரில்லைநாள்களும்
திரையார்பாலியின்றென்கரைமாற்பேற் [illegible]

அரசளிக்குமரக்கனவன்றனை, யுரைகெடுத்தவனெல்கிட
வரமிகுத்தவெமமாற்பேற்றடிகளைப, பரவிடக்கெடும்பாவமே. (அ)

இருவர்தேவருகதேடிததிரிகதினி, யொவரலறிவொண்ணிலன
மருவுநீள்கழனமாறபேற்றடிகளைப, பரவுவார்வினைபாறுமே. (கூ)

தூசுபோர்த்துழல்வார்கையிறறுற்றுணு, நீசாதமமுரைகொள்ளேலுக
தேசமல்கியதென்றிருமாற்பேற், றீசனென்றெடுத்தேத்துமே. (கO)

மனனிமாலொடுசோமன்பணிசெயு, மன்னுமாற்பேற்றடிகளை
மன்னுகாழியுண்ஞானசமபநதன்சொற், பன்னவேவினைபாறுமே. (கக)

---

திருச்சிற்றம்பலம்.

திருப்பாற்றுறை - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றமபலம.

காரார்கொனறைகலநதமுடியினர்
சீரார்சிநதைசெலச்செய்தார
பாரார்நாளும்பரவியபாறறுறை
யாராராதிமுதல்வரே. (க)

நல்லாருமவர்தீயரெனப்படுஞ
சொல்லார்நனமலர்சூடினார்
பல்லார்வெண்டலைசெல்வரெம்பாற்றுறை
யெல்லாருநதொழுமீசரே. (உ)

விண்ணார்திங்கள்விளஙகுநுதலின
ரெண்ணார்வநதெனெழில்கொண்டார்
பண்ணாவண்டினம்பாடல்செய்பாறறுறை
யுண்ணாணாளுமுறைவரே. (ங)

பூவுநதிங்கள்புனைநதமுடியின
ரேவினல்லாரெயிலெய்தார்
பாவநதீர்புனன்மல்கியபாறறுறை
யோவெனசிநதையொருவரே. (ச)

மாகநதோய்மதிசூடிமகிழ்நதென
தாகமபொன்னிறமாக்கினார்
பாகமபெண்ணுமுடையவர்பாற்றுறை
நாகம்பூண்டநயவரே. (ரு)

போதுபொன்றிகழ்கொன்றைபுனைமுடி
நாதர்வநதெனலநகொண்டார்
பாதந்தொண்டர்பரவியபாற்றுறை
வேதமோதும்விகிர்தரே. (சா)

வாடல்வெண்டலைசூடினர்மால்விடை
கோடல்செய்தகுறிபபினார்
பாடல்வண்டினம்பண்செயும்பாற்றுறை
யாடல்நாகமசைத்தாரே. (எ)

வெவ்வமேனியராய்வெள்ளைநீற்றின
ரெவ்வஞ்செய்தெனெழில்கொண்டார்

பவ்வநஞ்சடைகண்டரெம்பாற்றுறை
மவ்வல்சூடியமைந்தரே. (௮)

ஏனமன்னமுமானவருக்கெரி
யானவண்ணத்தெம்மண்ணலார்
பானலம்மலர்விம்மியபாற்றுறை
வானவெண்பிறைமைந்தரே. (௯)

வெந்தநீற்றினர்வேலினர்நூலினா
வந்தெனன்னலம்வவ்வினார்
பைந்தணமாதவிசூழ்தருபாற்றுறை
மைந்தர்தாமோர்மணாளரே. (௧௦)

பத்தர்மன்னியபாற்றுறைமேவிய
பத்துநூறுபெயரனைப்
பந்தனஞானசம்பந்தனதின்றமிழ்
பத்தும்பாடிப்பரவுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவேற்காடு - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்

ஒள்ளிதுள்ளக்கதிக்காமிவனொளி, வெள்ளியானுறைவேற்கா
டுள்ளியாருயர்ந்தாரிவ்வுலகினிற், றெள்ளியாரவர்தேவரே. (௧)

ஆடல்நாகமசைத்தளவில்லதோர், வேடங்கொண்டவன்வேற்காடு
பாடியும்பணிந்தாரிவ்வுலகினிற், சேடராகியசெல்வரே. (௨)

பூதம்பாடப்புறங்காட்டிடையாடி, வேதவித்தகன்வேற்காடு
போதுஞ்சாந்தும்புகையுங்கொடுத்தவர்க், கேதமெய்துதலில்லையே. (௩)

ஆழ்கடலெனக்கங்கைகரந்தவன், வீழ்சடையினன்வேற்காடு
தாழ்வுடைமனத்தாற்பணிந்தேத்திடப், பாழ்படுமவர்பாவமே. (௪)

காட்டினானுமயர்த்திடக்காலனை, வீட்டினானுறைவேற்காடு
பாட்டினாற்பணிந்தேத்திடவல்லவ, ரோட்டினார்வினையொல்லையே. (௫)

தோலினானுடைமேவவல்லான்சுடர், வேலினானுறைவேற்காடு
நூலினாற்பணிந்தேத்திடவல்லவர், மாலினார்வினைமாயுமே. (௬)

மல்லன்மும்மதின்மாய்தரவெய்ததோர், வில்லினானுறைவேற்காடு
சொல்லவல்லசுருங்காமனத்தவர், செல்லவல்லவர்திக்கமே. (௭)

மூரல்வெண்மதிசூடுமுடியுடை, வீரன்மேவியவேற்காடு
வாரமாய்வழிபாடுநினைந்தவர், சேர்வர்செய்கழறிண்ணமே. (௮)

பரக்கினார்படுவெண்டலையிற்பலி, விரக்கினானுறைவேற்காட்டீ
ரரக்கனாண்மையடரப்பட்டானிறை, நெருக்கினானைநினைமினே. (௯)

மாறிலாமலரானொடுமாலவன், வேறலானுறைவேற்கா
டூறிலாமொழியேமொழியாவெழில், கூறினார்க்கில்லைகுற்றமே. (௧௦)

விண்டமாம்பொழில்சூழ்திருவேற்காடு, கண்டுநம்பன்கழல்பேணிச
சண்பைஞானசம்பந்தனசெந்தமிழ், கொண்டுபாடக்குணமாமே. (௧௧)

### திருக்கரவீரம் - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

அரியுநம்வினையுள்ளனவாசற, வரிகொள்மாமணிபோல்கண்டங்
கரியவன்றிகழுங்கரவீரத்தெம், பெரியவன்கழல்பேணவே. (௧)

தங்குமோவினைதாழ்சடைமேலவன், திங்களோடுடன்சூடிய
கங்கையான்றிகழுங்கரவீரத்தெனு, சங்கரன்கழல்சாரவே. (௨)

ஏதம்வந்தடையாவினிநல்லன, பூதம்பல்படையாக்கிய
காதலான்றிகழுங்கரவீரத்தெம், நாதன்பாதநணுகவே. (௩)

பறையுநம்வினையுள்ளனபாழ்பட, மறையுமாமணிபோல்கண்டங்
கறையவன்றிகழுங்கரவீரத்தெம், மிறையவன்கழலேத்தவே. (௪)

பண்ணினார்மறைபாடலனாடலன், விண்ணினார்மதிளெய்தமுக்
கண்ணினானுறையுங்கரவீரத்தை, நண்ணுவார்வினைநாசமே. (௫)

நிழலினார்மதிசூடினனீள்சடை, யழலினாரனலேந்திய
கழலினானுறையுங்கரவீரத்தைத், தொழவல்லார்க்கில்லைதுக்கமே. (௬)

வண்டர்மும்மதிண்மாய்தரவெய்தவ, னண்டனாரழல்போலொளி
கண்டனாருறையுங்கரவீரத்துத், தொண்டர்மேற்றுயர்தூரமே. (௭)

புனலிலங்கையர்கோன்முடிபத்திறச், சினவலாண்மைசெகுத்தவன்
கனலவனுறைகின்றகரவீர, மெனவல்லார்க்கிடரில்லையே. (௮)

வெள்ளத்தாமரையானொடுமாலுமாய்த், தெள்ளத்தீத்திரளாகிய
கள்ளத்தானுறையுங்கரவீரத்தை, யுள்ளத்தான்வினையோயுமே. (௯)

செடியமண்ணொடுசீவரத்தாரவர், கொடியவெவ்வுரைகொள்ளன்மின்
கடியவன்னுறைகின்றகரவீரத், தடியவர்க்கில்லையல்லலே. (௧௦)

வீடிலான்விளங்குங்கரவீரத்தெனு, சேடன்மேற்கசிவாற்றமிழ்
நாடிஞானசம்பந்தனசொல்லிவை, பாடுவார்க்கில்லைபாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

### திருத்தூங்கானைமாடம் - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

ஒடுங்கும்பிணிபிறவிகேடென்றிவையுடைத்தாயவாழ்க்கையொழியத்தவ
மடங்குமிடங்கருதிநின்றீரெல்லாமடிகளடிநிழற்கீ ழாளாமவண்ணங்
கிடங்குமதிளுஞ்சுலாவியெங்குங்கெழுமனைகடோறுமறையினொலி
தொடங்குங்கடந்தைத்தடங்கோயில்சேர்தூங்கானைமாடந்தொழுமின்களே. ()

பிணிநீரசாதல்பிறத்தலிவைபிரியப்பிரியாதபேரின்பத்தோ
டணிநீரமேலுலகமெய்தலுறிலறிமின்குறைவில்லையானேறுடை
மணிநீலகண்டமுடையபிரான்மலைமகளுந்தானுமகிழ்ந்துவாழுந்
துணிநீர்க்கடந்தைத்தடங்கோயில்சேர்தூங்கானைமாடந்தொழுமின்களே. (௨)

சாநாளும்வாழ்நாளுந்தோற்றமிவைசலிப்பாயவாழ்க்கையொழியத்தவ
மாமாறறியாதலமந்துநீரயர்ந்துங்குறைவில்லையானேறுடைப்
பூமாணலங்கலிலங்குகொன்றைபுனல்பொதிந்தபுன்சடையினானுறையுந்
தூமாண்கடந்தைத்தடங்கோயில்சேர்தூங்கானைமாடந்தொழுமின்களே. (௩)

ஊன்றும்பிணிபிறவிகேடென்றிவையுடைத்தாயவாழ்க்கையொழியத்தவ
மான்றுமனங்கருதிநின்றீரெல்லாமனந்திரிந்துமண்ணின்மயங்காதுநீர்
மூன்றுமதிளெய்தமூவாச்சிலைமுதல்வர்க்கிடமபோலுமுகிறோய்கொடி
தோன்றுங்கடந்தைத்தடங்கோயில்சேர்தூங்கானைமாடந்தொழுமின்களே. (௪

மயறீர்மையில்லாததோற்றம்மிவைமரணத்தொடொத்தழியுமாறுதலால்
வியறீரமேலுலகமெய்தலுறின்மிக்கொன்றுமவேண்டாவிமலனிட
முயர்தீரவோங்கியநாமங்களாலோவாதுநாளுமடிபரவல்செய்
துயர்தீர்கடந்தைத்தடங்கோயில்சேர்தூங்கானைமாடந்தொழுமின்களே. (ரு

பன்னீர்மைகுன்றிச்செவிகேட்பில்படர்நோக்கிற்கண்பவளந்நிற
நன்னீர்மைகுன்றித்திரைதோலொடுநரைதோன்றுங்காலநமக்காதன்முன் [
பொன்னீர்மைதுன்றப்புறந்தோன்றுநற்புனல்பொதிந்தபுன்சடையினானுறை
தொன்னீர்க்கடந்தைத்தடங்கோயில்சேர்தூங்கானைமாடந்தொழுமின்களே.

இறையூண்டுகளோடிடுக்கணெய்திழிப்பாயவாழ்க்கையொழியத்தவ
நிறையூணெறிகருதினீரெல்லாநீள்கழலேநாளுநினைமின்சென்னிப
பிறைசூழலங்கலிலங்குகொன்றைபிணையுமபெருமான்பிரியாதநீர்த
துறைசூழ்கடந்தைத்தடங்கோயில்சேர்தூங்கானைமாடந்தொழுமின்களே. (

பல்வீழ்ந்துநாத்தளர்ந்துமெய்யில்வாடிப்பழிப்பாயவாழ்க்கையொழியத்தவ
மில்சூழிடங்கருதிநின்றீரெல்லாமிறையேபிரியாதெழுந்துபோதுங
கல்சூழரக்கன்கதறச்செய்தான்காதலியுந்தானுங்கருதிவாழுந
தொல்சீர்க்கடந்தைத்தடங்கோயில்சேர்தூங்கானைமாடந்தொழுமின்களே. (

நோயும்பிணியுமருந்துயரமுறுகருடையவாழ்க்கையொழியத்தவம
வாயுமனங்கருதிநின்றீரெல்லாமலர்மிசையநான்முகனுமண்ணுமவிண்ணுந
தாயவடியளந்தான்காணமாட்டாத்தலைவர்க்கிடம்போலுந்தண்சோலைவிண்
டோயுங்கடந்தைத்தடங்கோயில்சேர்தூங்கானைமாடந்தொழுமின்களே. (௯

பகடூர்பசிநலியநோய்வருதலாற்பழிப்பாயவாழ்க்கையொழியத்தவ
முகடூர்மயிர்கடிந்தசெய்கையாருமூடுதுவராடையருநாடிச்சொன்ன [மூ
திகடூர்ந்தபொய்மொழிகடேறவேண்டாதிருந்திழையுந்தானும்பொருந்திவா
துகடீர்கடந்தைத்தடங்கோயில்சேர்தூங்கானைமாடந்தொழுமின்களே. (௧௦)

மண்ணார்முழவதிருமாடவீதிவயற்காழிஞானசமபந்தனல்ல [ன்
பெண்ணாகடத்துபபெருங்கோயில்சேர்பிறையுரிஞ்சுந்தூங்கானைமாடமேயா
கண்ணார்கழல்பரவுபாடல்பத்துங்கருத்துணரக்கற்றாருங்கேட்டாருமபோய்
விண்ணோருலகத்துமேவிவாழுமவிதியதுவேயாகுமவினைமாயுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

60

திருத்தோணிபுரம் - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

வண்டரங்கப்புனற்கமலமதுமாந்திப்பெடையினொடு
மொண்டரங்கவிசைபாடுமளியரசேயொளிமதியத்
துண்டரங்கப்பூண்மார்பர்திருத்தோணிபுரத்துறையும்
பண்டரங்கர்க்கென்னிலைமைபரிந்தொருகால்பகராயே. (௧)

எறிசுறவங்கழிக்கானலிளங்குருகேயென்பயலை
யறிவுறாதொழிவதுவுமருவினையின்பயனன்றே

செறிசிறார்பதமோதுந்திருத்தோணிபுரத்துறையும்
வெறிநிறார்மலர்க்கண்ணிவேதியர்க்குவிளம்பாயே. (௨)

பண்பழனக்கோட்டகத்துவாட்டமிலாச்செஞ்சூட்டுக்
கண்பகத்தின்வாரணமேகடுவினையேனுறுபயலை
செண்பகஞ்சேர்பொழில்புடைசூழ்திருத்தோணிபுரத்துறையும
பண்பனுக்கென்பரிசுரைத்தாற்பழியாமோமொழியாயே. (௩)

காண்டகையசெங்காலொண்கழிநாராய்காதலாற்
பூண்டகையமுலைமெலிந்துபொன்பயந்தாளென்றுவளர்
சேண்டகையமணிமாடத்திருத்தோணிபுரத்துறைய
மாண்டகையாற்கின்றேசென்றடியறியவுணர்த்தாயே. (௪)

பாராரேயெனையொருகாற்றொழுகின்றேன்பாங்கமைந்த
காராருஞ்செழுநிறத்தபவளக்காற்கபோதகங்காள
தேராருநெடுவீதித்திருத்தோணிபுரத்துறையும்
நீராருஞ்சடையாருக்கென்னிலைமைநிகழ்த்தீரே. (௫)

சேற்றெழுந்தமலர்க்கமலச்செஞ்சாலிக்கதிர்வீச
வீற்றிருந்தவன்னங்காள்விண்ணோடுமண்மறைகள்
தேற்றுவிக்குந்திருத்தோணிபுரத்தீசன்றுளங்காத
கூற்றுதைத்ததிருவடியேகூடுமாகூறீரே. (௬)

முன்றில்வாழ்மடற்பெண்ணைக்குரம்பைவாழ்முயங்குசிறை
யன்றில்காள்பிரிவுறுநோயறியாதீர்மிகவல்லீர
தென்றலார்புகுந்துலவுதிருத்தோணிபுரத்துறையுங
கொன்றைவார்சடையார்க்கென்கூர்பயலைகூறீரே. (௭)

பானுறுமலர்ச்சூதப்பல்லவங்களவைகோதி
யேனோர்க்குமினிதாகமொழியுமெழில்இளங்குயிலே
தேனாரும்பொழில்புடைசூழ்திருத்தோணிபுரத்தமரர்
கோனாரையென்னிடத்தேவரவொருகாற்கூவாயே (௮)

நற்பதங்கள்மிகவறியாய்நானுன்னைவேண்டுகின்றேன்
பொற்பமைந்தவாயலகிற்பூவைநல்லாய்போற்றுகின்றேன்
சொற்பதஞ்சேர்மறையாளர்திருத்தோணிபுரத்துறையும
விற்பொலிதோள்விகிர்தனுக்கென்மெய்ப்பயலைவிளம்பாயே. (௯)

சிறையாருமடக்கிளியேயிங்கேவாதேனொடுபால்
முறையாலேயுணத்தருவேன்மொய்பவளத்தொடுதரளந
துறையாருங்கடற்றோணிபுரத்தீசன்றுளங்குமிளம
பிறையாளன்றிருநாமமெனக்கொருகாற்பேசாயே. (௧௰)

போர்மிகுத்தவயற்றோணிபுரத்துறையும்புரிசடையெங
கார்மிகுத்தகறைகண்டத்திறையவனைவண்கமலத
தார்மிகுத்தவரைமார்பன்சம்பந்தனுரைசெய்த
சீர்மிகுத்ததமிழ்வல்லார்சிவலோகஞ்சேர்வாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருச்செங்காட்டங்குடி - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

நறைகொண்டமலர்தூவிவிரையளிப்பநாடோறு
முறைகொண்டுநின்றடியார்முட்டாமேபணிசெய்யச்

சிறைகொண்டவண்டறையுஞ்செங்காட்டங்குடியதனுட்
கறைகொண்டகண்டத்தான்கணபதீச்சரத்தானே. (௧)

வாரேற்றபறையொலியுஞ்சங்கொலியும்வந்தியம்ப
ஊரேற்றசெல்வத்தோடோங்கியசீர்விழவோவாச்
சீரேற்றமுடைத்தாயசெங்காட்டங்குடியதனுட்
காரேற்றகொன்றையான்கணபதீச்சரத்தானே. (௨)

வரந்தையான்சோபுரத்தான்மந்திரத்தான்றந்திரத்தான்
கிரந்தையானகோவணத்தான்கிங்கிணியான்கையதோர்
சிரந்தையான்செங்காட்டங்குடியான்செஞ்சடைசேருங்
கரந்தையானவெண்ணீற்றான்கணபதீச்சரத்தானே. (௩)

தொங்கலுங்கமழ்சாந்துமகிற்புகையுந்தொண்டர்கொண்
டங்கையாற்றொழுதேத்தவருச்சுனற்கன்றருள்செய்தான்
செங்கயல்பாய்வயலுடுத்தசெங்காட்டங்குடியதனுட்
கங்கைசேர்வார்சடையான்கணபதீச்சரத்தானே. (௪)

பாலினானறுநெய்யாற்பழத்தினாற்பயின்றாட்டி
நூலினான்மணமாலைகொணர்ந்தடியார்புரிந்தேத்தச்
சேலினார்வயல்புடைசூழ்செங்காட்டங்குடியதனுட்
காலினாற்கூற்றுதைத்தான்கணபதீச்சரத்தானே. (௫)

நுண்ணியான்மிகப்பெரியானோவுளார்வாயுளான்
தண்ணியான்வெய்யானந்தலைமேலான்மனத்துளான்
றிண்ணியான்செங்காட்டங்குடியான்செஞ்சடைமதியக்
கண்ணியான்கண்ணுதலான்கணபதீச்சரத்தானே. (௬)

மையினார்மலர்நெடுங்கண்மலைமகளோர்பாகமா
மெய்யினான்பையரவமரைக்கசைத்தான்மீன்பிறழச்
செய்யினார்தண்கழனிச்செங்காட்டங்குடியதனுட்
கையினார்கூரெரியான்கணபதீச்சரத்தானே. (௭)

தோடுடையான்குழையுடையானரக்கன்றன்றோளடர்த்த
பீடுடையான்போர்விடையான்பெண்பாகமிகப்பெரியான்
சேடுடையான்செங்காட்டங்குடியுடையான்சேர்ந்தாடுங்
காடுடையானாடுடையான்கணபதீச்சரத்தானே. (௮)

ஆனூராவுழிதருவானன்றிருவர்தேர்ந்துணரா
வானூரான்வையகத்தான்வாழ்த்துவார்மனத்துளான்
தேனூரான்செங்காட்டங்குடியான்சிற்றம்பலத்தான்
கானூரான்கழுமலத்தான்கணபதீச்சரத்தானே. (௯)

செடிநுகருஞ்சமணர்களுஞ்சீவரத்தசாக்கியரும
படிநுகராதயருழப்பார்க்கருளாதபண்பினான்
பொடிநுகருஞ்சிறுத்தொண்டர்க்கருள்செய்யும்பொருட்டாகக்
கடிநகராய்வீற்றிருந்தான்கணபதீச்சரத்தானே. (௧௦)

கறையிலங்குமலர்க்குவளைகண்காட்டக்கடிபொழிலி
னறையிலங்குவயற்காழித்தமிழ்ஞானசம்பந்தன்
சிறையிலங்குபுனற்படப்பைச்செங்காட்டங்குடிசேர்த்து
மறையிலங்குதமிழ்வல்லார்வானுலகத்திருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருக்கோளிலி - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

நாளாயபோகாமேநஞ்சணியுங்கண்டனுக்கே
யாளாயவன்புசெய்வோமடநெஞ்சேயரனாமங்
கேளாய்நங்கிளைகிளைக்குங்கேடுபடாத்திறமருளிக்
கோளாயநீக்குமவன்கோளிலியெம்பெருமானே. (௧)

ஆடரவத்தழகாமையணிகேழற்கொம்பார்த்த
தோடரவத்தொருகாதன்றுணைமலர்நற்சேவடிக்கே
பாடரவத்திசைபயின்றுபணிந்தெழுவார்தம்மனத்திற்
கோடரவந்தீர்க்குமவன்கோளிலியெம்பெருமானே (௨)

நன்றுநகுநாண்மலரால்நல்லிருக்குமந்திரங்கொண்
டொன்றிவழிபாடுசெயலுற்றவன்றனோங்குயிர்மேற்
கன்றிவருகாலனுயிர்கண்டவனுக்கன்றளித்தான்
கொன்றைமலர்பொன்றிகழுங்கோளிலியெம்பெருமானே. (௩)

வந்தமணலாலிலிங்கமண்ணியின்கட்பாலாட்டுஞ்
சிந்தைசெய்வோன்றன்கருமந்தேர்ந்துசிதைப்பான்வருமத்
தந்தைதனைச்சாடுதலுஞ்சண்டீசனென்றருளிக்
கொந்தணவுமலர்கொடுத்தான்கோளிலியெம்பெருமானே. (௪)

வஞ்சமனத்தஞ்சொடுக்கிவைகலுநற்பூசனையால்
நஞ்சமுதுசெய்தருளுநம்பியெனவேநினையும்
பஞ்சவரிற்பார்த்தனுக்குப்பாசுபதமீந்துகந்தான்
கொஞ்சுகிளிமஞ்சணவுங்கோளிலியெம்பெருமானே. (௫)

தாவியவனுடனிருந்துங்காணாததற்பரனை
யாவிதனிலஞ்சொடுக்கியங்கணனென்றாதரிக்கு
நாவியல்சீர்நமிநந்தியடிகளுக்குநல்குமவன்
கோவியலும்பூவெழுகோற்கோளிலியெம்பெருமானே. (௬)

கன்னவிலுமால்வரையான்கார்திகழுமாமிடற்றான்
சொன்னவிலுமாமறையான்றோத்திரஞ்சேர்வாயினுளான்
மின்னவிலுஞ்செஞ்சடையான்வெண்பொடியானங்கையினிற்
கொன்னவிலுஞ்சூலத்தான்கோளிலியெம்பெருமானே. (௭)

அந்தரத்திற்றேரூருமரக்கன்மலையன்றெடுப்பச்
சுந்தரத்தன்றிருவிரலாலூன்றவவனுடல்நெரிந்து
மந்திரத்தமறைபாடவாளவனுக்கீந்தானுங்
கொந்தரத்தமதிச்சென்னிக்கோளிலியெம்பெருமானே. (௮)

நாணமுடைவேதியனுநாரணனுநண்ணவொணாத்
தாணுவெனையாளுடையான்றன்னடியார்க்கன்புடைமை
பாணனிசைபத்திமையாற்பாடுதலும்பரிந்தளித்தான்
கோணவிளம்பிறைச்சென்னிக்கோளிலியெம்பெருமானே. (௯)

தடுக்கமருஞ்சமணரொடுதக்கசாத்திரத்தவர்சொல்
லிடுக்கண்வருமொழிகேளாதீசனையேயேத்துமின்க
ணடுக்கமிலாவமருலகநண்ணலுமாமண்ணல்கழல்
கொடுக்ககிலாவரங்கொடுக்குங்கோளிலியெம்பெருமானே. (௧௦)

நமபனைநல்லடியார்கள்நாமுடைமாடென்றிருக்குங்
கொம்பனையாள்பாகனெழிற்கோளிலியெம்பெருமானை
வம்பமருந்தண்காழிச்சம்பந்தன்வண்டமிழ்கொண்
டின்பமரவல்லார்களெய்துவார்களீசனையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

௯௦ திருப்பிரமபுரம் - பல்பெயர்ப்பத்து - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

எரியார்மழுவொன்றேந்தியங்கையிடுதலையேகலனா
வரியார்வளையாரையம்வவ்வாய்மாநலம்வவ்வுதியே
சரியாநாவின்வேதகீதன்றாமரைநான்முகத்தன்
பெரியானபிரமனபேணியாண்டபிரமபுரத்தானே. (௧)

பெயலார்சடைக்கோர்திங்கள்சூடிப்பெய்பலிக்கென்றயலே
கயலார்தடங்கணஞ்சொனல்லார்கண்டுயில்வவ்வுதியே
இயலானடாவியின்பமெய்தியிந்திரனுள்மண்மேல்
வியலார்முரசமோங்குசெம்மைவேணுபுரத்தானே. (௨)

நகலார்தலையும்வெண்பிறையுநளிர்சடைமாட்டயலே
பகலாப்பலிதேர்ந்தையம்வவ்வாய்பாய்கலைவவ்வுதியே
யகலாதுறையுமாநிலத்திலயலின்மையாலமரர்
புகலால்மலிந்தபூம்புகலிமேவியபுண்ணியனே. (௩)

சங்கோடிலங்கத்தோடுபெய்துகாதிலோர்தாழ்குழைய
னங்கோல்வளையாரையமவவ்வாயானலமவ்வுதியே
செங்கோல்நடாவிப்பல்லுயிர்க்குஞ்செய்வினைமெய்தெரிய
வெங்கோத்தருமன்மேவியாண்டவெங்குருமேயவனே. (௪)

தணிநீர்மதியஞ்சூடிநீடுதாங்கியதாழ்சடையன்
பிணிநீர்மடவாரையமவ்வாய்பெய்கலைவவ்வுதியே
யணிநீருலகமாகியெங்குமாழ்கடலாலழுங்கத்
துணிநீர்பணியத்தான்மிதந்ததோணிபுரத்தானே. (௫)

கவர்பூம்புனலுந்தண்மதியுங்கமழ்சடைமாட்டயலே
யவர்பூம்பலியோடையமவ்வாயானலம்வவ்வுதியே
யவர்பூணரையாகாதியாயவடன்மன்னனுள்மண்மேற்
றவர்பூம்பதிகளெங்குமோங்குதங்குதராயவனே. (௬)

குலையாள்கெழுமமொந்தைகொட்டமுன்கடைமாட்டயலே
நிலையாப்பலிதேர்ந்தையம்வவ்வாய்நீநலம்வவ்வுதியே
தலையாய்க்கிடந்திவ்வையமெல்லாந்தன்னதோராணைநடாய்ச்
சிலையால்மலிந்தசீர்ச்சிலம்பன்சிரபுரமேயவனே. (௭)

எருதேகொணர்கென்றேறியங்கையிடுதலையேகலனாக்
கருதேர்மடவாரையம்வவ்வாய்கண்டுயில்வவ்வுதியே
யொருதேர்கடாவியாரமருளொருபதுதேரொடொலையப்
பொருதேர்வலவன்மேவியாண்டபுறவமர்புண்ணியனே. (௮)

துவர்சேர்கலிங்கப்போர்வையாருந்தூய்மையிலாச்சமணுங்
கவர்செய்துழலக்கண்டவண்ணங்காரிகைவார்குழலா

ரவர்பூம்பலியோடையம்வவ்வாயானலம்வவ்வுதியே
தவர்செய்நெடுவேற்சண்டனாளச்சண்டையமர்ந்தவனே. (கூ)

நிழலால்மலிந்தகொன்றைசூடிநீறுமெய்பூசிநல்ல
குழலார்மடவாரையம்வவ்வாய்கோல்வளைவவ்வுதியே
யழலாயுலகங்கவ்வைதீரவைந்தலைநீண்முடிய
கழல்நாகரையன்காவலாகக்காழியமர்ந்தவனே. (க0)

கட்டார்துளாயன்தாமரையானென்றிவர்காண்பரிய
சிட்டாரபலிதேர்ந்தையம்வவ்வாய்செய்கலைவவ்குதியே
நட்டார்நடுவேநந்தனாளநல்வினையாலுயர்ந்த
கொட்டாறுடுத்ததண்வயல்சூழ்கொச்சையமர்ந்தவனே. (கக)

கடையார்கொடிநன்மாடவீதிக்கழுமலவூர்க்கவுணி
நடையார்பனுவன்மாலையாகஞானசமபநதனல்ல
படையார்மழுவன்றன்மேல்மொழிந்தபல்பெயர்ப்பத்துமவல்லார்க்
கடையாவினைகளுலகில்நாளுமமருலகாள்பவரே. (கஉ)

திருச்சிற்றம்பலம்.

---

திருப்பூவணம் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

அறையார்புனலுமாமலருமாடரவார்சடைமேற்
குறையார்மதியஞ்சூடிமாதோர்கூறுடையானிடமா
முறையால்முடிசேர்தென்னர்சேரர்சோழர்கடாம்வணங்குந
திரையாரொளிசேர்செம்மையோங்குதென்றிருபபூவணமே. (க)

மருவார்மதின்மூன்றொன்றவெய்துமாமலையான்மடந்தை
யொருபால்பாகமாகச்செய்தவும்பர்பிரானவனூர்
கருவார்சாலியாலைமல்கிக்கழல்மன்னர்காத்தளித்த
திருவால்மலிந்தசேடர்வாழுந்தென்றிருப்பூவணமே. (உ)

போரார்மதமாவுரிவைபோர்த்துபபொடியணிமேனியனைக்
காரார்கடலினஞ்சமுண்டகண்ணுதல்விண்ணவனூர்
பாரார்வைகைபபுனல்வாய்பபரபபிபபன்மணிபொன்கொழித்துச்
சீரார்வாரிசேரநின்றதென்றிருபபூவணமே. (ங)

கடியாரலங்கற்கொன்றைசூடிக்காதிலோர்வார்குழையன்
கொடியார்வெள்ளையேறுகந்தகோவணவன்னிடமாம்
படியார்கூடிநீடியோங்குபல்புகழாற்பரவச்
செடியார்வைகைசூழநின்றதென்றிருபபூவணமே. (ச)

கூரார்வாளிசிலையிற்கோத்துக்கொடிமதில்கூட்டழித்த
போரார்வில்லிமெல்லியலாளோர்பால்மகிழ்ந்தானிடமா
மாராவன்பிற்றென்னர்சேரர்சோழர்கள்போற்றிசைப்பத்
தேரார்வீதிமாடநீடுதென்றிருப்பூவணமே. (ரு)

நன்றுதீதென்றொன்றிலாதநான்மறையோன்கழலே
சென்றுபேணியேத்தநின்றதேவர்பிரானிடமாங்
குன்றிலொன்றியோங்கமல்குகுளிர்பொழில்சூழ்மலர்மேற்
றென்றலொன்றிமுன்றிலாருந்தென்றிருப்பூவணமே. (சு)

பைவாயரவமரையிற்சாத்திப்பாரிடம்போற்றிசைப்ப
மெய்வாய்மேனிநீறுபூசியேறுகந்தானிடமாங்
கைவாழ்வளையார்மைந்தரோடுங்கலவியினால்நெருங்கிச்
செய்வார்தொழிலின்பாடலோவாத்தென்றிருப்பூவணமே. (எ)

மாடவீதிமன்னிலங்கைமன்னனைமாண்பழித்துக்
கூடவென்றிவாள்கொடுத்தாள்கொள்கையினார்க்கிடமாம்
பாடலோடுமாடலோங்கிப்பன்மணிபொன்கொழித்து
ஓடநீரால்வைகைசூழுமுயர்திருப்பூவணமே. (அ)

பொய்யாவேதநாவினானும்பூமகள்காதலனுங்
கையாற்றொழுதுகழல்கள்போற்றக்கனலெரியானவனூர்
மையார்பொழிலின்வண்டுபாடவைகைமணிகொழித்துச்
செய்யார்கமலந்தேனரும்புந்தென்றிருப்பூவணமே. (௯)

அலையார்புனலைநீத்தவருந்தேரருமன்புசெய்யா
நிலையாவண்ணமாயவைத்தநின்மலன்றன்னிடமா
மலைபோற்றுன்னிவென்றியோங்குமாளிகைசூழ்ந்தயலே
சிலையார்புரிசைபரிசுபண்ணுந்தென்றிருப்பூவணமே. (௧௦)

திண்ணார்புரிசைமாடமோங்குதென்றிருப்பூவணத்துப்
பெண்ணார்மேனியெமமிறையைப்பேரியலின்றமிழால்
நண்ணாருட்கக்காழிமல்குஞானசம்பந்தன்சொன்ன
பண்ணார்பாடல்பத்தும்வல்லார்பயில்வதுவானிடையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

65 காவிரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரம் - பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்.

அடையாதார்தம்புரங்கள்மூன்றுமாரழலில்லழுந்த
விடையார்மேனியராய்ச்சீறும்வித்தகன்மேயவிடங்
கடையார்மாடநீடியெங்குங்கங்குல்புறந்தடவப்
படையார்புரிசைப்பட்டினஞ்சேர்பல்லவனீச்சரமே. (௧)

எண்ணாரெயில்கள்மூன்றுஞ்சீறுமெந்தைபிரானிமையோர்
கண்ணாயுலகங்காக்கநின்றகண்ணுதனண்ணுமிடம்
மண்ணார்சோலைக்கோலவண்டுவைகலுந்தேனருந்திப்
பண்ணார்செய்யும்பட்டினத்துப்பல்லவனீச்சரமே. (௨)

மங்கையங்கோர்பாகமாகவாணிலவார்சடைமேற்
கங்கையங்கேவாழவைத்தகள்வனிருந்தவிடம்
பொங்கயஞ்சேர்புணரியோதமீதுயர்பொய்கையின்மேற்
பங்கயஞ்சேர்பட்டினத்துப்பல்லவனீச்சரமே. (௩)

தாரார்கொன்றைபொன்றயங்கச்சாத்தியமார்பகலம்
நீரார்நீறுசாந்தம்வைத்தநின்மலன்மன்னுமிடம்
போரார்வேற்கண்மாதர்மைந்தர்புக்கிசைபாடலினாற்
பாரார்கின்றபட்டினத்துப்பல்லவனீச்சரமே. (௪)

மைசேர்கண்டரண்டவாணர்வானவருந்துதிப்ப
மெய்சேர்கொடியரடியாரேத்தமேவியிருந்தவிடங்

கைசேர்வளையார்விளைவினொடுகாதன்மையாற்கழலே
பைசேரரவாரல்குலார்சேர்பல்லவனீச்சரமே. (௫)

குழலினோசைவீணைமொந்தைகொட்டமுழவதிரக்
கழலினோசையார்க்கவாடுங்கடவுளிருந்தவிடஞ்
சுழியிலாருங்கடலிலோதந்தெண்டிரைமொண்டெறியப்
பழியிலார்கள்பயில்புகாரிற்பல்லவனீச்சரமே. (௬)

வெந்தலாயவேந்தன்வேள்விவேரறச்சாடிவிண்ணோர்
வந்தெலாமுன்பேணிநின்றமைந்தனமகிழ்ந்தவிட
மந்தலாயமல்லிகையும்புன்னைவளர்குரவின்
பந்தலாரும்பட்டினத்துப்பல்லவனீச்சரமே. (௭)

தேரரக்கன்மால்வரையைத்தெற்றியெடுக்கவவன்
றூரரக்குந்திண்முடிகளூன்றியசங்கரனூர்
காரரக்குங்கடல்கிளர்ந்தகாலமெலாமுணரப்
பாரரக்கம்பயில்புகாரிற்பல்லவனீச்சரமே. (௮)

அங்கமாறும்வேதநான்குமோதுமயனெடுமாற்
றங்கணாலுநேடநின்றசங்கரன்றங்குமிடம்
வங்கமாருமுத்தமிப்பிவார்கடலூடலைப்பப்
பங்கமில்லார்பயில்புகாரிற்பல்லவனீச்சரமே. (௯)

உண்டுடுக்கையின்றியேநின்றூர்நகவேதிரிவார்
கண்டுடுக்கைமெய்யிற்போர்த்தார்கண்டறியாதவிடந்
தண்டுடுக்கைதாளந்தக்கைசாரநடம்பயில்வார்
பண்டிடுக்கண்டீரநல்கும்பல்லவனீச்சரமே. (௧௰)

பத்தரேத்தும்பட்டினத்துப்பல்லவனீச்சரத்தே
மத்தன்றன்னையணிகொள்காழிஞானசம்பந்தன்சொற்
சித்தஞ்சேரச்செப்புமாந்தர்தீவினைநோயிலரா
யொத்தமைந்தவும்பர்வானிலுயர்வினோடோங்குவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சண்பைநகர் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

பங்கமேறுமதிசேர்சடையார்விடையார்பலவேத
மங்கமாறுமறைநான்கவையுமானார்மீனாரும்
வங்கமேவுங்கடல்வாழ்பரதர்மனைக்கேநுனைமூக்கின்
சங்கமேறிமுத்தமீனுஞ்சண்பைநகராரே. (௧)

சூதகஞ்சேர்கொங்கையாளோர்பங்கர்சுடர்க்கமலப்
போதகஞ்சேர்புண்ணியனார்பூதகணநாதர்
மேதகஞ்சேர்மேகமந்தண்சோலையில்விண்ணார்ந்த
சாதகஞ்சேர்பாளைநீர்சேர்சண்பைநகராரே. (௨)

மகரத்தாடுகொடியோனுடலம்பொடிசெய்தவனுடைய
நிகரொப்பில்லாத்தேவிக்கருள்செய்நீலகண்டனார்
பகரத்தாராவன்னம்பகன்றில்பாதம்பணிந்தேத்தத்
தகரப்புன்னைதாழைப்பொழில்சேர்சண்பைநகராரே. (௩)

மொய்வல்லசுரர்தேவர்கடைந்தமுழுநஞ்சதுண்ட
தெய்வர்செய்யவுருவர்கரியகண்டர்திகழ்சுத்திக்
கையர்கட்டங்கத்தர்கரியினுரியர்காதலாற்
சைவர்பாசுபதர்கள்வணங்குஞ்சண்பைநகராரே. (ச)

கலமார்கடலுள்விடமுண்டமரர்க்கமுதமருள்செய்த
குலமார்கயிலைக்குன்றதுடையகொல்லையெருதேறி
நலமார்வெள்ளைநாளிகேரம்விரியாநறும்பாளை
சலமார்கரியின்மருப்புக்காட்டுஞ்சண்பைநகராரே. (ரு)

மாகரஞ்சேரத்தியின்றோல்போர்த்துமெய்ம்மாலான்
சூகரஞ்சேரெயிறுபூண்டசோதியன்மேதக்க
வாகரஞ்சேரிப்பிமுத்தையந்தண்வயலுக்கே
சாகரஞ்சேர்திரைகளுந்துஞ்சண்பைநகராரே. (சா-எ)

இருளைப்புரையுநிறத்திலரக்கன்றன்னையடர்வித்
தருளைச்செய்யுமம்மானேராருந்தண்கந்தத்தின்
மருளைச்சுரும்புபாடியளக்கர்வரையார்திரைக்கையாற்
றரளத்தோடுபவளமீனுஞ்சண்பைநகராரே. (அ)

மண்டான்முழுதுமுண்டமாலுமலர்மிசைமேலயனு
மெண்டானறியாவண்ணநின்றவிறைவன்மறையோதி
தண்டார்குவளைக்கள்ளருந்தித்தாமரைத்தாதின்மேற்
பண்டான்கொண்டுவண்டுபாடுஞ்சண்பைநகராரே. (கூ)

போதியாரும்பிண்டியாரும்புகழலசொன்னாலு
நீதியாகக்கொண்டங்கருளுநிமலனிருநான்கின்
மாதிசித்தராமாமறையின்மன்னியதொன்னூலர்
சாதிகீதவர்த்தமானர்சண்பைநகராரே. (க0)

வந்தியோடுபூசையல்லாப்பொழுதின்மறைபேசிச்
சந்திபோதிற்சமாதிசெய்யுஞ்சண்பைநகர்மேய
வந்திவண்ணன்றன்னையழகார்ஞானசம்பந்தன்சொற்
சிந்தைசெய்துபாடவல்லார்சிவகதிசேர்வாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பழனம் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

வேதமோதிவெண்ணூல்பூண்டுவெள்ளையெருதேறிப்
பூதஞ்சூழப்பொலியவருவார்புலியினுரிதோலார்
நாதாவெனவுநக்காவெனவுநம்பாவெனநின்று
பாதந்தொழுவார்பாவந்தீர்ப்பார்பழனநகராரே. (க)

கண்மேற்கண்ணுஞ்சடைமேற்பிறையுமுடையார்காலனைப்
புண்ணாறுதிரமெதிராறோடப்பொன்றப்புறந்தாளா
லெண்ணாதுதைத்தவெந்தைபெருமானிமவான்மகளோடும்
பண்ணார்களிவண்டறைபூஞ்சோலைப்பழனநகராரே. (உ)

பிறையும்புனலுஞ்சடைமேலுடையார்பறைபோல்விழிகட்பே
யுறையுமயானமிடமாவுடையாருலகர்தலைமக

னறையுமலர்கொண்டடியார்பரவியாடல்பாடல்செய்
பறையுஞசஙகும்பலியுமோவாபபழனநகராரே. (ச

உரமன்னுயர்கோட்டுலறுகூகையலறுமயாநத்தி
ஸிரவிற்பூதம்பாடவாடியெழிலாரலர்மேலப
பிரமனறலையினறவமேற்றபெமமானெனமையாளும்
பரமன்பகவன்பரமேச்சுவரன்பழனநகராரே. (

குலவெஞசிலையால்மதின்மூன்றெரித்தகொல்லேறுடையண்ணல்
கலவமயிலுமகுயிலுமபயிலுமகடல்போற்காவேரி
நலமஞசுடையநறுமாஙகனிகள்குதிகொண்டெதிருநதிப
பலவின்கனிகள்திரைமுன்சேர்க்கும்பழனநகராரே. (

வீளைக்குரலும்விளிசங்கொலியும்விழவினொலியோவா
மூளைத்தலைகொண்டடியாரேத்தப்பொடியாமதிளெய்தா
ரீளைபபடுகிலிலையார்தெஙகிற்குலையார்வாழையின்
பாளைக்கமுகின்பழம்வீழ்சோலைபபழனநகராரே. (

பொய்யாமொழியார்முறையாலேத்திப்புகழ்வார்திருமேனி
செய்யார்கரியமிடறுர்வெண்ணூல்சேர்நதவகலத்தார்
கையாடலினர்புனலால்மல்குசடைமேறபிறையோடும
பையாடரவமுடனேவைததார்பழனநகராரே. (

மஞசோஙகுயரமுடையான்மலையைமாறுயெடுத்தான்றோ
ளஞசோடஞசுமாறுநான்குமடரவூன்றினர்
நஞசார்சுடலைபபொடிநீறணிநதநமபான்வமபாரும
பைநதாமரைகள்கழனிசூழ்நதபழனநகராரே. (

கடியார்கொன்றைச்சுரும்பின்மாலைகமழ்புன்சடையார்விண்
முடியாப்படிமூவடியாலுலகமுழுதுநதாவிய
நெடியானீடாமரைமேலயனுநேடிக்காணுத
படியார்பொடியாடகலமுடையார்பழனநகராரே. (

கண்டான்கழுவாமுன்னேயோடிக்கவ்வைக்கஞசியை
யுண்டாஙகவர்களுரைக்குஞசிறுசொல்லோரார்பாராட்ட
வண்டாமரையின்மலர்மேனறவமதுவாய்மிகவுண்டு
பண்டான்கெழுமவண்டியாழ்செய்யுமபழனநகராரே. (க

வேய்முத்தோங்கிவிரைமுன்பரக்கும்வேணுபுரநதன்னு
ளுவய்த்தனையதிறலால்மிக்கஞானசமபநதன்
பேசற்கினியபாடல்பயிலுமபெருமான்பழனத்தை
வாயிற்பொலிநதமாலைபத்தும்வல்லார்நல்லாரே. (க

திருச்சிற்றம்பல

---

ஸ்ரீகயிலாயம் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

பொடிகொளொருவர்புலியினதளர்புரிநூறிகழ்மார்பிற்
கடிகொள்கொன்றைகலநதநீற்றர்கறைசேர்கண்டத்த
ரிடியகுரலாலிரியமடங்கலொடங்குமுழைச்சாரற்
கடியவிடைமேற்கொடியொன்றுடையார்கயிலைமலையாரே. (

புரிகொள்சடையாரடியர்க்கெளியார்கிளிசேர்மொழிமங்கை
தெரியவுருவில்வைத்துகந்ததேவர்பெருமானார்
பரியகளிற்றையரவுவிழுங்கமழுங்கவிருள்கூர்ந்த
கரியமிடற்றர்செய்யமேனிக்கயிலைமலையாரே. (௨)

மாவினுரிவைமங்கைவெருவமூடிமுடிதன்மேல்
மேவுமதியுநதியும்வைத்தவிறைவர்கழலுன்னுந்
தேவர்தேவர்திரிசூலத்தர்திரங்கன்முகவனசேர்
காவும்பொழிலுங்கடுங்கற்சுனைசூழ்கயிலைமலையாரே. (௩)

முந்நீர்சூழ்ந்தநஞ்சமுண்டமுதல்வர்மதனன்றன்
றென்னீருருவமழியத்திருக்கண்சிவந்தநுதலினார்
மன்னீர்மடுவுமடுக்கல்லறையினுழுவைசினங்கொண்டு
கன்னீர்வரைமேலிரைமுன்தேடுங்கயிலைமலையாரே. (௪)

ஒன்றும்பலவுமாயவேடத்தொருவர்கழல்சேர்வார்
நன்றுநினைந்துநாடற்குரியார்கூடித்திரண்டெங்கும்
தென்றியிருளிற்றிகைத்தகரிதண்சாரல்நெறியோடிக்
கன்றும்பிடியுமடிவாரஞ்சேர்கயிலைமலையாரே. (௫)

தாதார்கொன்றைதயங்குமுடியர்முயங்குமடவாளைப்
போதார்பாகமாகவைத்தபுனிதர்பனிமல்கு
மூதாருலகின்முனிவருடனாயறநான்கருள்செய்த
காதார்குழையர்வேதத்திரளர்கயிலைமலையாரே. (௬-எ)

தொடுத்தார்புரமூன்றெரியச்சிலைமேலெரியொண்பகழியா
லெடுத்தான்றிரடோள்முடிகள்பத்துமிடியவிரல்வைத்தார்
கொடுத்தாய்படைகள்கொண்டாராளக்குறுகிவருங்கூற்றைக்
கடுத்தாங்கவனைக்கழலாலுதைத்தார்கயிலைமலையாரே. (அ)

ஊணாப்பலிகொண்டுலகிலேற்றார்இலங்குமணிநாகம்
பூணாரமாகப்பூண்டார்புகழுமிருவர்தாம
பேணாவோடிநேடவெங்கும்பிறங்குமெரியாகிக்
காணாவண்ணமுயர்ந்தார்போலுங்கயிலைமலையாரே. (௯)

விருதுபகருமவெஞ்சொற்சமணர்வஞ்சச்சாக்கியர்
பொருதுபகருமொழியைக்கொள்ளாப்புகழவார்க்கணியரா
யெருதொன்றுகைத்திங்கிடுவார்தம்பாலிரந்துண்டிகழ்வார்கள்
கருதும்வண்ணமுடையார்போலுங்கயிலைமலையாரே. (௧0)

போரார்கடலிற்புனல்சூழ்காழிப்புகழார்சம்பந்தன்
காரார்மேகங்குடிகொள்சாரற்கயிலைமலையார்மேற்
றேராதுரைத்தசெஞ்சொன்மாலைசெப்புமடியார்மேல்
வாராபிணிகள்வானோருலகில்மருவுமனத்தாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திரு அண்ணாமலை - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

**பூவார்மலர்கொண்டடியார்தொழுவார்புகழ்வார்வானோர்கள்**
**மூவார்புரங்களெரித்தவன்றுமூவர்க்கருள்செய்தார்**

தூமாமழைநின்றதிரவெருவித்தொறுவின்னிரையோடு
மாமாம்பிணைவந்தணையுஞ்சாரலண்ணாமலையாரே. (க)

மஞ்சைப்போழ்ந்தமதியஞ்சூடும்வானோர்பெருமானார்
நஞ்சைக்கண்டத்தடக்குமதுவுநன்மைப்பொருள்போலும்
வெஞ்சொற்பேசும்வேடர்மடவாரிதணமதுவேறி
யஞ்சொற்கிளிகளாயோவென்னுமண்ணாமலையாரே. (உ)

ஞானத்திரளாய்நின்றபெருமானல்லவடியார்மே
லூனத்திரணீக்குமதுவுமுண்மைப்பொருள்போலு
மேனத்திரளோடினமான்கரடியிழியுமிரவின்க
ணானத்திரள்வந்தணையுஞ்சாரலண்ணாமலையாரே. (ங)

இழைத்தவிடையாளுமையாள்பங்கரிமையோர்பெருமானா
ரழைத்தசடையார்விடையொன்றேறித்தரியார்புரமெய்தார்
பிழைத்தபிடியைக்காணாதோடிப்பெருங்கைமதவேழ
மழைத்துத்திரிந்தங்குறங்குஞ்சாரலண்ணாமலையாரே. (ச)

உருவிற்றிகழுமுமையாள்பங்கரிமையோர்பெருமானார்
செருவிலொருகால்வளையவூன்றிச்செந்தீயெழுவித்தார்
பருவிக்குறவர்புனத்திற்குவித்தபருமாமணிமுத்த
மருவித்திரளோடிழியுஞ்சாரலண்ணாமலையாரே. (ரு)

எனைத்தோரூழியடியாரேத்தவிமையோர்பெருமானார்
நினைத்துத்தொழுவார்பாவந்தீர்க்குநிமலருறைகோயில்
கனைத்தமேதிகாணாதாயன்கைமேற்குழலூத
வனைத்துஞ்சென்றுதிரளுஞ்சாரலண்ணாமலையாரே. (சு

வந்தித்திருக்குமடியார்தங்கள்வருமேல்வினையோடு
பந்தித்திருந்தபாவந்தீர்க்கும்பரமனுறைகோயில்
முந்தியெழுந்தமுழவினோசைமுதுகல்வரைகண்மே
லந்திப்பிறைவந்தணையுஞ்சாரலண்ணாமலையாரே. (எ

மறந்தான்கருதிவலியைநினைந்துமாறாய்யெடுத்தான்றோ
ணிறந்தான்முரியநெரியவூன்றிநிறையவ்வருள்செய்தார்
திறந்தான்காட்டியருளாயென்றுதேவர்வேண்ட
வறந்தான்காட்டியருளிச்செய்தாரண்ணாமலையாரே. (அ

தேடிக்காணார்திருமால்பிரமன்றேவர்பெருமானை
மூடியோங்கிமுதுவேயுகுத்தமுத்தம்பலகொண்டு
கூடிக்குறவர்மடவார்குவித்துக்கொள்ளவம்மினென்
றாடிப்பாடியளக்குஞ்சாரலண்ணாமலையாரே. (

தட்டையிடுக்கித்தலையைப்பறித்[illegible]ணேநின்றுண்ணும்
பிட்டர்சொல்லுக்கொள்ளவேண்டாமடம்பணித்தொழுமின்கள்
வட்டமுலையாளுமையாள்பங்கர்மன்னியுறைகோயி
லட்டமாளித்திரள்வந்தணையுமண்ணாமலையாரே. (ய

அல்லாடரவமியங்குஞ்சாரலண்ணாமலையாரை
நல்லார்பரவப்படுவான்காழிஞானசம்பந்தன்
சொல்லால்மலிந்தபாடலானபத்துமிவைகற்று
வல்லாரெல்லாம்வானோர்வணங்கமன்னிவாழ்வாரே. (க

திருச்சிற்றம்ப

### திருஈங்கோய்மலை - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

வானத்துயர்தண்மதிதோய்சடைமேல்மத்தமலர்சூடித்
தேனொத்தனமென்மொழிமான்விழியாள்தேவிபாகமாக்
கானத்திரவிலெரிகொண்டாடுங்கடவுளுலகேத்த
வேனத்திரள்வந்திழியுஞ்சாரலீங்கோய்மலையாரே. (க)

சூலப்படையொன்றேந்தியிரவிற்சுடுகாடிடமாகக்
கோலச்சடைகடாழக்குழல்யாழ்மொந்தைகொட்டவே
பாலொத்தனையமொழியாள்காணவாடும்பரமனா
ரேலத்தொடுநல்லிலவங்கமழுமீங்கோய்மலையாரே. (உ)

கண்கொணுதலார்கனறக்கொண்டிட்டார்கரியினுரிதோலார்
விண்கொள்மதிசேர்சடையார்விடையார்கொடியார்வெண்ணீறு
பெண்கொடிருமார்பதனிற்பூசும்பெம்மானெம்மையாள்வா
ரெண்குமரியுந்திரியுஞ்சாரலீங்கோய்மலையாரே. (ங)

மறையின்னிசையார்நெறிமென்கூந்தன்மலையான்மகளோடு
குறைவெண்பிறையும்புனலுநிலவுங்குளிர்புன்சடைதாழப்
பறையுங்குழலுங்கழலுமார்ப்பப்படுகாட்டெரியாடு
மிறையவர்சிறைவண்டறைபூஞ்சாரலீங்கோய்மலையாரே. (ச)

நொந்தசுடலைப்பொடிநீறணிவார்நுதல்சேர்கண்ணினார்
கந்தமலர்கள்பலவுநிலவுகமழ்புன்சடைதாழப்
பந்தொண்விரலாள்பாகமாகப்படுகாட்டெரியாடு
மெந்தமடிகள்கடிகொள்சாரலீங்கோய்மலையாரே. (ரு)

நீறாரகலமுடையார்நிறையார்கொன்றையரவோடு
மாறார்சடையாரயில்வெங்கணையாலவுணர்புரமூன்றுஞ்
சீறாவெரிசெய்தேவர்பெருமான்செங்கண்டவெள்ளை
யேறார்கொடியாருமையாளோடுமீங்கோய்மலையாரே. (சா)

வினையாயினதீர்த்தருளேபுரியும்விகிர்தன்விரிகொன்றை
நனையார்முடிமேல்மதியஞ்சூடுமம்பானலமல்கு
தனையாகமலமலர்மேலுறைவான்றலையோடனலேந்து
மெனையாளுடையானுமையாளோடுமீங்கோய்மலையாரே. (எ)

பரக்கும்பெருமையிலங்கையென்னும்பதியிற்பொலிவாய
வரக்கர்க்கிறைவன்முடியுந்தோளுமணியார்விரல்தன்னா
னெருக்கியடர்த்துநிமலாபோற்றியென்றுநின்றேத்த
விரக்கம்புரிந்தாருமையாளோடுமீங்கோய்மலையாரே. (அ)

வரியார்புலியினுரிதோலுடையான்மலையான்மகளோடும்
பிரியாதுடனாயாடல்பேணும்பெம்மான்றிருமேனி
யரியோடயனுமறியாவண்ணமளவில்பெருமையோ
டெரியாய்நிமிர்ந்தவெங்கள்பெருமானீங்கோய்மலையாரே. (கூ)

பிண்டியென்றுபெயராநிற்கும்பிணங்குஞ்சமணரு
மண்டைகலனாக்கொண்டுதிரியுமதியில்தேரரு
முண்டிவயிறாருரைகள்கொள்ளாதுமையோடுடனாகி
இண்டைச்சடையானிமையோர்பெருமானீங்கோய்மலையாரே. (க0)

விழவாரொலியுமுழவுமோவாவேணுபுரந்தன்னு
ளழலார்வண்ணத்தடிகளருள்சேரணிகொள்சம்பந்த
னெழிலார்சுனையும்பொழிலுமபுடைசூழ்ந்தகோய்மலையீசன்
கழல்சேர்பாடல்பத்துமவல்லார்கவலைகழல்வாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருநறையூர்ச்சித்தீச்சரம் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

பிறைகொள்சடையர்புலியினுரியர்பேழ்வாய்நாகத்தர்
கறைகொள்கண்டர்கபாலமேந்துங்கையர்கங்காளர்
மறைகொள்கீதம்பாடச்சேடர்மனையில்மகிழ்வெய்திச்
சிறைகொள்வண்டுதேனார்நறையூர்ச்சித்தீச்சரத்தாரே. (க)

பொங்கார்சடையர்புனலரனலர்பூதமபாடவே
தங்காதலியுந்தாமுமுடனாய்த்தனியோர்விடையேறிக்
கொங்காகொன்றைவன்னிமத்தஞ்சூடிக்குளிர்பொய்கைச்
செங்காலன்னமபெடையொடுசேருஞ்சித்தீசரத்தாரே (உ)

முடிகொள்சடையர்முளைவெண்மதியர்மூவாமேனிமேற்
பொடிகொணூலர்புலியினதளர்புரிபுன்சடைதாழக்
கடிகொள்சோலைவயல்சூழ்மடுவிற்கயலாரினமபாயக்
கொடிகொள்மாடக்குழாமார்நறையூர்சித்தீசரத்தாரே. (ங)

பின்றாழ்சடைமேனகுவெண்டலையர்பிரமன்றலையேந்தி
மின்றாழுருவிற்சங்கார்குழைதானமிளிருமொருகாதர்
பொன்றாழ்கொன்றைசெருந்திபுன்னைபொருந்துசண்பகஞ்
சென்றார்செல்வத்திருவார்நறையூர்சித்தீசரத்தாரே. (ச)

நீரார்முடியர்கறைகொள்கண்டர்மறைநன்கிறைநாவர்
பாரார்புகழாற்பத்தர்சித்தர்பாடியாடவே
தேரார்வீதிமுழவார்விழவினொலியுந்திசைசெல்லச்
சீரார்கோலமபொலியுநறையூர்சித்தீசரத்தாரே.

நீண்டசடையர்நிரைகொள்கொன்றைவிரைகொள்மலர்மாலை
தூண்டுசுடரபொன்னொளிகொள்மேனிபபவளத்தெழிலார்வந்
தீண்டுமாடமெழிலார்சோலையிலங்குகோபுரந்
தீண்டுமதியந்திகழுநறையூர்சித்தீசரத்தாரே. (சு)

குழலார்சடையர்கொக்கினிறகர்கோலநிறமத்தந்
தழலார்மேனித்தவளநீற்றாசரிகோவணக்கீள
ரெழிலார்நாகமபுலியினுடைமேலிசைத்துவிடையேறிக்
கழலார்சிலம்புபுலம்பவருவார்சித்தீச்சரத்தாரே.

கரையார்கடல்சூழிலங்கைமன்னன்கயிலைமலைதன்னை
வரையார்தோளாலெடுக்கமுடிகணெரிந்துமனமொன்றி
யுரையார்கீதம்பாடநல்லவுலப்பிலருள்செய்தார்
திரையார்புனல்சூழ்செல்வநறையூர்ச்சித்தீச்சரத்தாரே. (கல)

நெடியான்பிரமனேடிக்காணார்நினைப்பார்மனத்தாரா
யடியாரவருமருமாமறையுமண்டத்தமரரு

ணும்
ன்கள்
(கக)
நச்சிற்றம்பலம்.

முடியால்வணங்கிக்குணங்களேத்திமுதல்வாவருளென்னச்
செடியார்செந்நெறறிகழுநறையூர்சசித்தீச்சரத்தாரே. (௯)

நின்றுண்சமணரிருந்துண்டேரர்நீண்டபோர்வையா
ரொன்றுமுணராவூமாவாயிலுரைகேட்டுழல்வீர்காள்
கன்றுண்பயப்பாலுண்ணமுலையிற்கபாலமயல்பொழியச்
சென்றுண்டார்ந்துசேருநறையூர்சசித்தீச்சரத்தாரே. (௧௦)

குயிலார்கோலமாதவிகள்குளிர்பூஞ்சுரபுன்னை
செயிலார்பொய்கைசேருநறையூர்சசித்தீச்சரத்தாரை
மயிலார்சோலைசூழ்ந்தகாழிமல்குசம்பந்தன்
பயில்வார்க்கினியபாடல்வல்லார்பாவநாசமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்குடந்தைக்காரோணம் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

வாரார்கொங்கைமாதோர்பாகமாகவார்சடை
நீரார்கங்கைதிங்கள்சூடிநெற்றியொற்றைக்கண்
கூராரழுவொன்றேந்தியந்தண்குழகன்குடமூக்கிற்
காரார்கண்டத்தெண்டோளெந்தைகாரோணத்தாரே. (௧)

முடியார்மன்னர்மடமான்விழியார்மூவுலகும்மேத்தும்
படியார்பவளவாயார்பலருமபரவிப்பணிந்தேத்தக்
கொடியார்விடையார்மாடவீதிக்குடந்தைக்குழகாருங்
கடியார்சோலைக்கலவமயிலார்காரோணத்தாரே. (௨)

மலையார்மங்கைபங்கரங்கையனலர்மடலாருங்
குலையார்தெங்குகுளிர்கொள்வாழையழகார்குடமூக்கின்
முலையாரணிபொன்முளைவெண்ணகையார்மூவாமதியினார்
கலையார்மொழியார்காதல்செய்யுங்காரோணத்தாரே. (௩)

போதார்புனல்சேர்கந்தமுந்திப்பொலியவழகாருந்
தாதார்பொழில்சூழ்ந்தெழிலார்புறவிலந்தண்குடமூக்கில்
மாதாரமங்கைபாகமாகமனைகள்பலிதேர்வார்
காதார்குழையர்காளகண்டர்காரோணத்தாரே. (௪)

பூவார்பொய்கையலர்தாமரைசெங்கழுநீர்புறவெல்லாந்
தேவார்சிந்தையந்தணாளர்சீராலடிபோற்றக்
கூவார்குயில்களாலுமயில்களின்சொற்கிளிப்பிள்ளை
[illegible]பாழில்சூழ்ந்தழகார்குடந்தைக்காரோணத்தாரே. (௫)

மூப்பூர்நலியநெதியாவிதியாய்முன்னேயனல்வாளி
கோப்பார்பார்த்தனிலைகண்டருளுங்குழகர்குடமூக்கிற்
றீர்ப்பாருடலிலடுநோயவலமவினைகணலியாமைக்
காப்பார்காலனடையாவண்ணங்காரோணத்தாரே. (௬)

ஊனார்தலைகையேந்தியுலகம்பலிதேர்ந்துழல்வாழ்க்கை
மானார்தோலார்புலியினுடையார்கரியினுரிபோர்வை
தேனார்மொழியார்திளைத்தங்காடித்திகழுங்குடமூக்கிற்
கானார்நட்டமுடையார்செல்வக்காரோணத்தாரே. (௭)

வரையார்திரடோள்மதவாளரக்கனெடுப்பமலைசேருமம்
விரையார்பாதநுதியாலூன்றநெரிந்துசிரம்பத்து
முரையார்கீதம்பாடக்கேட்டங்கொளிவாள்கொடுத்தாரும்
கரையார்பொன்னிசூழ்தண்குடந்தைக்காரோணத்தாரே. (அ)

கரியமாலுஞ்செய்யபூமேலயனுங்கழறிப்போ
யரியவண்டந்தேடிப்புக்குமளக்கவொண்கிலார்
தெரியவரியதேவர்செல்வந்திகழுங்குடமூக்கிற்
கரியகண்டர்காலகாலர்காரோணத்தாரே. (கூ)

நாணாரமணர்நல்லதறியார்நாளுங்குரத்திகள்
பேணார்தூய்மெய்மாசுகழியார்பேசேலவரோடுஞ்
சேணார்மதிதோய்மாடமல்குசெல்வநெடுவீதிக்
கோணார்கரமொன்றுடையார்குடந்தைக்காரோணத்தாரே. (க0)

கருவார்பொழில்சூழ்ந்தழகார்செல்வக்காரோணத்தாரைத்
திருவார்செல்வமல்குசண்பைத்திகழுஞ்சம்பந்த
னுருவார்செஞ்சொன்மாலையிவைபத்துரைப்பாருலகத்துக்
கருவாரிடும்பைப்பிறப்பற்றுத்துக்கவலைகழிவாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கானூர் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

வானார்சோதிமன்னுசென்னிவன்னிபுனங்கொன்றைத்
தேனார்போதுதானார்கங்கைதிங்களொடுசூடி
மானேர்நோக்கிகண்டங்குவப்பமாலையாடுவார்
கானூர்மேயகண்ணார்நெற்றியானூர்செல்வரே. (க)

நீந்தலாகாவெள்ளமூழ்குநீள்சடைதன்மேலோ
ரேய்ந்தகோணற்பிறையோடரவுகொன்றையெழிலாரப்
போந்தமென்சொலின்பம்பயந்தமைந்தரவர்போலாங்
காந்தள்விம்முகானூர்மேயசாந்தநீற்றாரே. (உ)

சிறையார்வண்டுந்தேனும்விம்முசெய்யமலர்க்கொன்றை
மறையார்பாடலாடலோடுமால்விடைமேல்வருவா
ரிறையார்வந்தெனில்புகுந்தெனெழில்நலமுங்கொண்டார்
கறையார்சோலைக்கானூர்மேயபிறையார்சடையாரே. (ங)

விண்ணார்திங்கட்கண்ணிவெள்ளைமாலையதுசூடித்
தண்ணாரக்கோடாமைபூண்டுதழைபுன்சடைதாழ
வெண்ணாவந்தெனில்புகுந்தங்கெவ்வநோய்செய்தான்
கண்ணார்சோலைக்கானூர்மேயவிண்ணோர்பெருமானே. (ச)

தார்கொள்கொன்றைக்கண்ணியோடுந்தண்மதியஞ்சூடிச்
சீர்கொள்பாடலாடலோடுசேடராய்வந்து
ஊர்கடோறுமையமேற்றென்னுள்வெந்நோய்செய்தார்
கார்கொள்சோலைக்கானூர்மேயகறைக்கண்டத்தாரே. (ரு)

முளிவெள்ளெலும்புநீறுநூலுமூழ்குமார்பரா
யெளிவந்தார்போலையமென்றெனில்லேபுகுந்துள்ளத்

தெளிவுநாளுங்கொண்டகள்வர்தேறலார்பூவிற்
களிவண்டியாழ்செய்கானூர்மேயவொளிவெண்பிறையாரே. (சு)

மூவாவண்ணர்முளைவெணபிறையர்முறுவல்செய்திங்கே
பூவார்கொன்றைபுனைந்துவந்தார்பொக்கம்பலபேசிப
போவார்போலமால்செய்துள்ளமபுக்கபுரிநூலர்
தேவார்சோலைக்கானூர்மேயதேவதேவரே. (எ)

தமிழினீர்மைபேசிததாளம்வீணைபண்ணிநல்ல
முழவமொந்தைமல்குபாடல்செய்கையிடமோவார்
குமிழின்மேனிதந்துகோலநீர்மையதுகொண்டார்
கமழுஞ்சோலைக்கானூர்மேயபவளவண்ணரே. (அ)

அந்தமாதியயனுமாலுமார்க்குமறிவரியான்
சிந்தையுள்ளுநாவினமேலுஞ்சென்னியுமன்னினான்
வந்தென்னுள்ளமபுகுந்துமாலைகாலையாடுவான்
சுந்தமல்குகானூர்மேயவெந்தைபெம்மானே. (கூ)

ஆமையரவோடேனவெண்கொம்பக்குமாலைபூண்
டாமோர்கள்வர்வெள்ளர்போலவுளவெந்நோயசெய்தா
ரோமவேதநான்முகனுங்கோணுகணையானுஞ்
சேமமாயசெல்வர்கானூர்மேயசேடரே. (கo)

கழுதுதுஞ்சுங்கங்குலாடுங்கானூர்மேயானைப
பழுதில்ஞானசமபந்தன்சொற்பத்தும்பாடியே
தொழுதுபொழுதுதோத்திரங்கள்சொல்லித்துதித்துநின்
றழுதுநக்குமன்புசெய்வாரல்லலறுப்பாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருப்புறவம் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

நறவநிறைவண்டறைதார்க்கொன்றைநயந்துநயந்தாற்
சுறவஞ்செறிவண்கொடியோனுடலமபொடியாவிழிசெய்தான்
புறவமுறைவண்பதியாமதியார்புரமூன்றெரிசெய்த
விறைவனறவனிமையோரேத்தவுமையோடிருந்தானே. (க)

உரவன்புலியினுரிதோலாடையுடைமேற்படநாகம்
விரவிவிரிபூங்கச்சாவசைத்தவிகிர்தனுகிர்தன்னாற்
பொருவெங்களிறுபிளிறவுரித்துப்புறவமபதியாக
விரவும்பகலுமிமையோரேத்தவுமையோடிருந்தானே. (உ)

பந்தமுடையபூதம்பாடப்பாதஞ்சிலம்பார்க்கக்
கந்தமல்குகுழலிகாணக்கரிகாட்டெரியாடி
யந்தண்கடல்சூழ்ந்தழகார்புறவமபதியாவமர்வெய்தி
யெந்தமபெருமானிமையோரேத்தவுமையோடிருந்தானே. (ங)

நினைவார்நினையவினியான்பனியார்மலர்தூய்நித்தலுங்
கனையார்விடையொன்றுடையான்கங்கைதிங்கள்கமழ்கொன்றை
புனைவார்சடையின்முடியான்கடல்சூழ்புறவம்பதியாக
வெனையாளுடையானிமையோரேத்தவுமையோடிருந்தானே. (ச)

செங்கணரவுநகுவெண்டலையுமுகிழ்வெண்டிங்களுந்
தங்குசடையன்விடையனுடையன்சரிகோவணவாடை
பொங்குதிரைவண்கடல்சூழ்ந்தழகார்புறவம்பதியாக
வெங்குமபரவியிமையோரேத்தவுமையோடிருந்தானே. (௫)

பின்னுசடைகடாழக்கேழலெயிறுபிறழப்போ
யன்னநடையார்மனைகடோறுமழகார்ப்பலிதேர்ந்து
புன்னைமடலின்பொழில்சூழ்ந்தழகார்புறவம்பதியாக
வென்னையுடையானிமையோரேத்தவுமையோடிருந்தானே. (௬)

உண்ணற்கரியநஞ்சையுண்டொருதோழந்தேவர்
விண்ணிற்பொலியவமுதமளித்தவிடைசேர்கொடியண்ணல்
பண்ணிற்சிறைவண்டறைபூஞ்சோலைப்புறவம்பதியாக
வெண்ணிற்சிறந்தவிமையோரேத்தவுமையோடிருந்தானே. (௭)

விண்டானதிரவியனார்கயிலைவேரோடெடுத்தான்றன்
றிண்டோளுடலுமுடியுநெரியச்சிறிதேயூன்றிய
புண்டானொழியவருள்செய்பெருமான்புறவம்பதியாக
வெண்டோளுடையானிமையோரேத்தவுமையோடிருந்தானே. (௮)

நெடியானீடாமரைமேலயனுநேடிக்காண்கிலாப்
படியாமேனியுடையான்பவளவரைபோற்றிருமார்பிற்
பொடியார்கோலமுடையான்கடல்சூழ்புறவம்பதியாக
விடியாமுழவாரிமையோரேத்தவுமையோடிருந்தானே. (௯)

ஆலுமயிலின்பீலியமணரறிவில்சிறுதேரர்
கோலுமொழிகளொழியக்குழுவுந்தழலுமெழில்வானும்
போலும்வடிவுமுடையான்கடல்சூழ்புறவம்பதியாக
வேலுமவகையாலிமையோரேத்தவுமையோடிருந்தானே. (௧௦)

பொன்னார்மாடநீடுஞ்செல்வப்புறவம்பதியாக
மின்னாரிடையாளுமையாளொடுமிருந்தவிமலனைத்
தன்னார்வஞ்செய்தமிழின்விரகனுரைத்ததமிழ்மாலை
பன்னாள்பாடியாடப்பிரியார்பரலோகந்தானே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.-

---

## திருவெங்குரு - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

காலைநன்மாமலர்கொண்டடிபரவிக்கைதொழுமாணியைக்கறுத்தவெங்
காலனோலமிடமுன்னுயிரொடுமாளவுதைத்தவனுமையவள்விருப்பனெம
பெருமான், மாலைவந்தணுகவோதமவந்துலவிமறிதிரைசங்கொடுபவளமுனு
ந்தி, வேலைவந்தணையுஞ்சோலைகள்சூழ்ந்தவெங்குருமேவியுள்வீற்றிருந்தாரே

பெண்ணினைப்பாகமமர்ந்துசெஞ்சடைமேற்பிறையொடுமரவினையணிந்
தழகாகப், பண்ணினைப்பாடியாடிமுன்பலிகொள்பரமரெம்மடிகளார்பரிசுகள்
பேணி, மண்ணினைமூடிவான்முகடேறிமறிதிரைகடன்முகந்தெடுப்பமற்றுய
ர்ந்து, விண்ணளவோங்கிவந்திழிகோயில்வெங்குருமேவியுள்வீற்றிருந்தாரே.

ஓரியல்பில்லாவுருவமதாகியொண்டிறல்வேடனதுருவதுகொண்டு [மா
காரிகைகாணத்தனஞ்சயன்றன்னைக்கறுத்ததற்களித்துடன்காதல்செய்பெரு

னேரிசையாகவறுபதமுரன்றுநிறைமலர்த்தாதுகள்மூசவிண்டுதிர்ந்து
வேரிகளெங்கும்விம்மியசோலைவெங்குருமேவியுள்வீற்றிருந்தாரே. (௩)

வண்டணைகொன்றைவன்னியுமத்தமருவியகூவிளமெருக்கொடுமிக்க, கொண்டணிசடையர்விடையினர்பூதங்கொடுகொட்டிகுடமுழாக்கூடியுமுழவப், பண்டிகழ்வாகப்பாடியோர்வேதம்பயில்வர்முன்பாய்புனற்கங்கையைச் சடைமேல், வெண்பிறைசூடியுமையவளோடும்வெங்குருமேவியுள்வீற்றிருந்தாரே. (௪)

சடையினர்மேனிநீறதுபூசித்தக்கைகொள்பொக்கணமிட்டுடனாகக்
கடைதொறுமவந்துபலியதுகொண்டுகண்டவர்மனமவைகவர்ந்தழகாகப்
படையதுவேந்திப்பங்கயக்கண்ணியுமையவள்பாகமுமமர்ந்தருள்செய்து
விடையொடுபூதஞ்சூழதரச்சென்றுவெங்குருமேவியுள்வீற்றிருந்தாரே. (௫)

கரைபொருகடலிறறிரையதுமோதக்கங்குல்வந்தேறியசங்கமும்பியும் [யும்
யுரையுடைமுத்தமணலிடைவைகியோங்குவானிருளறத்துரப்ப வெண்டிசை
புரைமலிவேதமபோறறுபூசுரர்கள்புரிந்தவர்லங்கொளாகுதியினில் நிறைந்த
விரைமலிதூபமவிசும்பினைமறைக்குமவெங்குருமேவியுள்வீற்றிருந்தாரே. ()

வல்லிநுண்ணிடையாளுமையவடன்னைமறுகிடவருமதகளிறறினைமயங்க, வொல்லையிற்பிடித்தங்குரித்தவள்வெருவல்கெடுத்தவர்விரிபொழின்மிகுதிருவாலி, னல்லறமுரைத்துஞானமோடிருப்பநலிந்திடலுற்றுவந்தவக்கருப்பு, வில்லியைப்பொடிபடவிழித்தவர்விரும்பிவெங்குருமேவியுள்வீற்றிருந்தாரே.

பாங்கிலாவரக்கன்கயிலையன்றெடுப்பப்பலதலைமுடியொடுதோளவைநெரிய
வோங்கியவிரலாலூன்றியன்றவற்கேயொளிதிகழ்வாளதுகொடுத்தழகாய[ வர்
கோங்கொடுசெருந்திகூவிளமத்தங்கொன்றையுங்குலாவியசெஞ்சடைசெல்
வேங்கைபொன்மலராவிரைதருகோயில்வெங்குருமேவியுள்வீற்றிருந்தாரே.

ஆறுடைச்சடையெம்மடிகளைக்காணவரியொடுபிரமனுமளப்பதற்காகிச், சேறிடைத்திகழ்வானத்திடைபுக்குச்செலவறத்தவிர்ந்தனரெழிலுடைத்திகழ் வெண், ணீறுடைக்கோலமேனியர்நெற்றிக்கண்ணினர்விண்ணவர்கைதொழுதேத்த,வேறெமையாளவிரும்பியவிகிர்,நாவெங்குருமேவியுள்வீற்றிருந்தாரே.

பாடுடைக்குண்டர்சாக்கியர்சமணர்பயிறருமறவுரைவிட்டழகாக, வேடுடைமலராள்பொருட்டுவன்றக்கன்னெல்லையில்வேள்வியைத் தகர்த்தருள்செய்து, காடிடைக்கடிநாய்கலந்துடன்சூழக்கண்டவர்வெருவுறவிளித்துவெய்தாய, வேடுடைக்கோலமவிரும்பியவிகிர்தர்வெங்குருமேவியுள்வீற்றிருந்தாரே. (௧0)

விண்ணியல்விமானம்விரும்பியபெருமானவெங்குருமேவியுள்வீற்றிருந்தா
நண்ணியனூலன்ஞானசமபந்தனவின்றவிவ்வாய்மொழிநலமிகுபத்தும் [ரை
பண்ணியல்பாகப்பத்திமையாலேபாடியுமாடியும்பயிலவல்லார்கள்
விண்ணவர்விமானங்கொடுவரவேறிவியனுலகாண்டுவீற்றிருப்பவர்தாமே. ()

திருச்சிற்றம்பலம்.

---

திருஇலம்பையங்கோட்டூர் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

மலையினார்பருப்பதந்துருத்திமாற்பேறுமாசிலாச்சீர்மறைக்காடுநெய்த் தானம், நிலையினானெனதுரைதனதுரையாகநீறணிந்தேறுகந்தேறிய நிமலன்,

கலையினார்மடப்பிணைதுணையொடுந்துயிலக்கா னலம்பெடைபுல்கிக்கணமயிலா லுமிலையினர் பைம்பொழிலிலம்பையங்கோட்டூரிருக்கையாப்பேணியென்னெ ழில்கொள்வதியல்பே. (க)

திருமலர்க்கொன்றையானின்றியூர்மேயான்றேவர்தலைமகன்றிருக்கழி ப்பாலை, நிருபமனெனதுரைதனதுரையாகநீறணிந்தேறுகந்தேறியநிமலன், கருமலர்க்கமழ்சுனைநீண்மலர்க்குவளைகதிர்முலையிளையவர்மதிமுகத்துலவு, மி ருமலர்த்தண்பொய்கையிலமபையஙகோட்டூரிருக்கையாபபேணியென்னெழி ல்கொள்வதியல்பே. (உ)

பாலனுமவிருத்தனுமபசுபதிதானும்பண்டுவெங்கூற்றுதைத்தடியவர்க்கரு ளுங், காலனுமெனதுரைதனதுரையாகக்கனலெரியங்கையிலேந்தியகடவுள் நீலமாமலர்ச்சுனை வண்டுபண்செய்ய நீர்மலர்க்குவளைகடாது விண்டோங்கு, மேலநாறும் பொழிலிலமபையங கோட்டூரிருக்கையாப் பேணியென்னெழில் கொள்வதியல்பே. (ங)

உளங்கொள்வாருச்சியார்கச்சியேகம்பனொற்றியூருறையுமண்ணுமலைய ண்ணல், விளம்புவானெனதுரைதனதுரையாகவெள்ளநீர்விரிசடைததாங்கிய விமலன்,குளம்புறக்கலைதுளமலைகளுஞ்சிலம்பக்கொழுங்கொடியெழுந்தெங்கு ங்கூவிளங்கொள்ள, விளம்பிறைதவழ்பொழிலிலம்பையங்கோட்டூரிருக்கையா ப்பேணியென்னெழில்கொள்வதியல்பே. (ச)

தேனுமாயமுதுமாய்த்தெய்வமுந்தானாய்த்தீயொடுநீருடன்வாயுவாந்தெ ரியில், வானுமாமெனதுரைதனதுரையாகவரியராவரைக்கசைத்துழிதருமை ந்தன், கானமான்வெருவுறக்கருவிரலூகங்கடுவனோடுகளுமூர்கறகடுஞ்சார, லேனமானுழிதரு மிலம்பையங்கோட்டூ ரிருக்கையாப் பேணியென்னெழில் கொள்வதியல்பே. (ரு)

மனமுலாமடியவர்க்கருள்புரிகின்றவகையலால்பலிதிரிந் துண்பிலான்ம ற்றோர், தனமிலானெனதுரைதனதுரையாகத்தாழ்சடையிளமதிதாங்கியதலை வன், புனமெலாமருவிகளிருவிசோமுத்தம்பொனனொடுமணிகொழித்தீண்டி வந்தெங்கு, மினமெலாமடைகரையிலம்பையங்கோட்டூரிருக்கையாப்பேணி யென்னெழில்கொள்வதியல்பே. (சு)

நீருளான்றீயுளானந்தரத்துள்ளானினைப்பவர்மனத்துளானித்தமாவேத்து, மூருளானெனதுரைதனதுரையாகவொறறைவெள்ளேறுகந் தேறிய வொரு வன், பாருளார்பாடலோடாடலறுதபண்முரன்றஞ்சிறை வண்டினமபாடு, மேருளார்பைம்பொழிலிலமபையஙகோட்டூரிருக்கையாப்பேணியென்னெழி ல்கொள்வதியல்பே. (எ)

வேருலாமாழ்கடல்வருதிரையிலங்கைவேந்தனதடக்கைகளடர்த்தவனு லகி, லாருலாமெனதுரைதனதுரையாகவாகமோரரவணிந்துழிதருமண்ணல், வாருலாநல்லனமாக்களுஞ்சாரவாரணமுழிதருமல்லலங்கான, லேருலாம பொழிலணியிலமபையஙகோட்டூரிருக்கையாபபேணியென் னெழில்கொள்வ தியல்பே. (அ)

கிளர்மழைதாங்கினானான்முகமுடையோன்கீழடிமேன்முடிதேர்ந்தளக்கி ல்லா,வுளமழையெனதுரைதனதுரையாகவொள்ளழலங்கையிலேந்தியவொரு வன், வளமழையெனக்கறைவளர்துளிசோரமாசுணமுழிதருமணியணிமாலை, இளமழைதவழ்பொழிலிலம்பையங கோட்டூரிருக்கையாப்பேணியென்னெழி ல்கொள்வதியல்பே. (கூ)

உரிஞ்சனகூறைகளுடம்பினராகியுழி தருஞ்சமணருஞ்சாக்கியப்பேய்கள், பெருஞ்செல்வனெனதுரைதனதுரையாகப்பெய்பலிக்கென்றுழல் பெரியவர் பெருமான், கருஞ்சுனைமுல்லைநன்பொனனடைவேங்கைகளிமுகவண்டொடு தேனினமுரலு, மிருஞ்சுனைமல்கியவிலமபையங்கோட்டூரிருக்கையாப்பேணி யென்னெழில்கொளவதியல்பே. (௧0)

கந்தனைமலிகனைகடலொலியோதங்கானலங்கசழிவளர்கழுமலமென்னு நந்தியாருறைபதிநானமறைநாவனற்றமிழ்க்கின்றுணைஞானசம்பந்த [போய் னெநதையார்வளநகரிலம்பையங்கோட்டூரிசையொடுகூடியபத்தும்வல்லார் வெந்துயரகெடுகிடவிணணவரோடுமவீடுபேறினமையினவீடெளிதாமே. ()

திருச்சிற்றம்பலம்.

---

## திருஅச்சிறுபாக்கம் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

பொன்றிரண்டன்னபுரிசடைபுரளபபொருகடற்பவளமொடழனிறம்பு ரையக், குன்றிரண்டன்னதோ ளுடையகலங்குலாயவெண ணூலொடுகொழும பொடியணிவா, மின்றிரண்டனனநுண்ணிடையரிவைமெல்லியலாளையோர் பாகமாபபேணி, யன்றிரணடுருவமாயவெமமடிகளசசிறுபாக்கமதாட்சிகொ ணடாரே (௧)

தேனினுமினியர்பாலனநீற்றர்தீங்கருமபனையர்தந்திருவடிதொழுவா ரூனயநதுருகவுவகைகடருவாருச்சிமேலுறைபவரொனறலாதூரார் வானகமிறநதுவையகமவணங்கவயங்கொளநிறபதோர்வடிவினையுடையா ரானையினுரிவைபோர்த்தவெமமடிகளசசிறுபாக்கமதாட்சிகொண்டாரே. (௨)

காரிருளுருவமால்வரைபுரையக்களிறறினதுரிவைகொண்டரிவைமேலோடி நீருருமகளைநிமிர்சடைததாங்கிநீறணிநதேறுகநதேறியநிமலர் பேரருளாளர்பிறவியிறசேரார்பிணியிலர்கேடிலர்பேயக்கணஞ்சூழ வாரிருண்மாலையாடுமெம்மடிகளசசிறுபாக்கமதாட்சிகொண்டாரே. (௩)

மைம்மலர்க்கோதைமார்பினரெனவுமலைமகளவளொடுமருவினரெனவு ஞ், செமமலர்பபிறையுஞ்சிறையணிபுனலுஞ்சென்னிமேலுடையரெஞ்சென் னிமேலுறைவார், தமமலரடியொன்றடியவர்பரவத்தமிழச்சொலும்வடசொ லுநதாணிழற்சேர, வமமலர்க்கொன்றையணிநதவெமமடிகளச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. (௪)

விண்ணுலாமதியஞ்சூடினரெனவும்விரிசடையுள்ளதுவெள்ளநீரெனவும் பண்ணுலாமறைகளபாடினரெனவும்பலபுகழல்லதுபழியிலரெனவு மெணணலாகாதவிமையவாநாளுமேத்தரவங்களோடெழில்பெறநின்ற வண்ணலாணூர்தியேறுமெமமடிகளசசிறுபாக்கமதாட்சிகொண்டாரே. (௫)

நீடிருஞ்சடைமேலிளம்பிறைதுளங்கநிழறிகழ்மழுவொடுநீறுமெய்பூசித் தோலொடுகாதினிற்பெய்துவெய்தாயசுடலையிலாடுவர்தோலுடையாகக் காடரங்காகக்கங்குலும்பகலுங்கழுதொடுபாரிடங்கைதொழுதேத்த வாடரவாடவாடுமெம்மடிகளச்சிறுபாக்கமதாட்சிகொண்டாரே. (௬)

ஏறுமொன்றேறிநீறுமெய்பூசியிளங்கிளையரிவையோடொருங்குடனாகிக் கூறுமொன்றருளிக்கொன்றையந்தாருங்குளிரிளமதியமுங்கூவிளமலரு நாறுமல்லிகையுமெருக்கொடுமுருக்குமகிழிளவன்னியுமிவைநலம்பகர வாறுமோர்சடைமேலணிநதவெம்மடிகளச்சிறுபாக்கமதாட்சிகொண்டாரே.

கச்சுமொள்வாளுங்கட்டியவுடையுர்கதிர்முடிசுடர்விடக்கவரியுங்குடையும்
பிச்சமும்பிறவும்பெண்ணணங்காயபிறைநுதலவர்தமைப்பெரியவர்பேணப்
பச்சமும்வலியுங்கருதியவரக்கன்பருவரையெடுத்ததிண்டோள்களையடர்வித்
தச்சமுமருளுங்கொடுத்தவெம்மடிகளச்சிறுபாக்கமதாட்சிகொண்டாரே. ()

நோற்றலாரேனும்வேட்டலாரேனுநுகர்புகர்சாந்தமோடேந்தியமாலைக்
கூற்றலாரேனுமின்னவாறென்றுமெய்தலாகாததோரியல்பினையுடையார்
தோற்றலார்மாலுநான்முகமுடையதோன்றலுமடியொடுமுடியுறத்தங்
களாற்றலாற்காணாராயவெம்மடிகளச்சிறுபாக்கமதாட்சிகொண்டாரே. (௯)

வாதுசெய்சமணுஞ்சாக்கியப்பேய்கணல்வினைநீக்கியவல்வினையாள
ரோதியுங்கேட்டுமுணர்வினையிலாதாருள்கலாகாததோரியல்பினையுடையார்
வேதமும்வேதநெறிகளுமாகிவிமலவேடத்தொடுகமலமாமதிபோ
லாதியுமீறுமாயவெம்மடிகளச்சிறுபாக்கமதாட்சிகொண்டாரே. (௧௦)

மைச்செறிகுவளைதவளைவாய்நிறையமதுமலர்ப்பொய்கையிற்புதுமலர்கிழியப், பச்சிறவெறிவயல்வெறிகமழ்காழிப்பதியவரதிபதிகவுணியர்பெருமான், கைச்சிறுமறியவன்கழலலாற்பேணாக்கருத்துடைஞானசம்பந்தன்றமிழ்கொண், டச்சிறுபாக்கத்தடிகளையேத்துமன்புடையடியவரருவினையிலரே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருஇடைச்சுரம் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

வரிவளரவிரொளியரவரைதாழவார்சடைமுடிமிசைவளர்மதிசூடிக்
கரிவளர்தருகழல்கால்வலனேந்திக்கனலெரியாடுவர்காடரங்காக
விரிவளர்தருபொழிலிளமயிலாலவெண்ணிறத்தருவிகடிண்ணெனவீழு
மெரிவளரினமணிபுனமணிசாரலிடைச்சுரமேவியவிவர்வணமென்னே. (௧)

ஆற்றையுமேற்றதோரவிர்சடையுடையரழகினையருளுவர்குழகலதறியார், கூற்றுயிர்செகுப்பதோர்கொடுமையையுடையர்நடவிருளாடுவர்கொன்றையந்தாரார், சேற்றயல்மிளிர்வனகயலிளவாளைசெருச்செயவோர்ப்பனசெம்முகமந்தி, யேற்றையொடுழிதருமெழிறிகழ்சாரலிடைச்சுரமேவியவிவர்வணமென்னே. (௨)

கானமுஞ்சுடலையுங்கடற்படுநிலனுங்காதலர்தீதிலர்கனன்மழுவாளர், வானமுநிலமையுமிருமையுமானார்வணங்கவுமிணங்கவும்வாழ்த்தவும்படுவார், நானமும்புகையொளிவிரையொடுகமழநளிர்பொழிலிளமஞ்ஞைமன்னியபாங்க, ரேனமும்பிணையலுமெழிறிகழ்சாரலிடைச்சுரமேவியவிவர்வணமென்னே ()

கடமணிமார்பினர்கடறனிலுறைவார்காதலர்தீதிலர்கனன்மழுவாளர், விடமணிமிடறினர்மிளிர்வதோரரவர் வேறுமோர்சரிதையர் வேடமுமுடையர், வடமுலையயலனகருங்குருந்தேறிவாழையின்றீங்கனியார்ந்துதேனட்டு, மடமுலையரிவையரெழிறிகழ்சாரலிடைச்சுரமேவியவிவர்வணமென்னே. (௪)

கார்கொண்டகடிகமழ்விரிமலர்க்கொன்றைக்கண்ணியர்வளர்மதிகதிர்விடக்கங்கை, நீர்கொண்டசடையினர்விடையுயர்கொடியர்நிழறிகழ்மழுவினரழறிகழ்நிறத்தர், சீர்கொண்டமென்சிறைவண்டுபண்செய்யுஞ்செழும்புனலனையனசெங்குலைவாழை, யேர்கொண்டபலவினொடெழிறிகழ்சாரலிடைச்சுரமேவியவிவர்வணமென்னே. (௫)

தோடணிகுழையினர்சுண்ணவெண்ணீற்றர்சுடலையினாடுவர்தோலுடையாகப், பீடுயர்செய்ததோர்பெருமையையுடையர்பேயுடனாடுவர்பெரியவர்பெருமான், கோடல்களொழுகுவமுழுகுவதும்பிகுரவமுமரவமுமன்னியபாங்க, ரேடவிழ்புதுமலர்கடிகமழ்சாரலிடைச்சுரமேவியவிவாவணமென்னே. (௬)

கழன்மல்குகாலினர்வேலினர்நூலர்கவர்தலையரவொடுகண்டியும்பூண்ப
ரழன்மல்குமெரியொடுமணிமழுவேந்தியாடுவர்பாடுவராரணங்குடையர்
பொழின்மல்குநீடியவரவமுமரவமன்னியகவட்டிடைப்புணர்குயிலாலு[னே.
மெழின்மல்குசோலையில்வண்டிசைபாடுமிடைச்சுரமேவியவிவர்வணமென்

தேங்கமழ்கொன்றையந்திருமலர்புனைவார்திகழ்தருசடைமிசைத்திங்களுஞ்சூடி, வீந்தவர்சுடலைவெண்ணீறுமெய்பூசிவேறுமோர்சரிதையர்வேடமுமுடையர், சாந்தமுமகிலொடுமுகில்பொதிந்தலம்பித்தவழ்கனமணியொடுமிகுபளிங்கிடறி, யேந்துவெள்ளருவிகளொளிதிகழ்சாரலிடைச்சுரமேவியவிவாவணமென்னே. (௮)

பலவிலமிடுபலிகையிலொன்றேறப்பலபுகழல்லதுபழியிலர்தாமுந [டையர்
தலையிலங்கவிரொளிநெடுமுடியரக்கனடக்கைகளடர்த்ததோர்தன்மையையு
மலையிலங்கருவிகள்மணமுழவதிரமழைதவழிளமஞ்ஞைமல்கியசார
லிலையிலவங்கமுமேலமுங்கமழுமிடைச்சுரமேவியவிவாவணமெனனே. (௯)

பெருமைகடருக்கியோர்பேதுறுகின்றபெருங்கடல்வண்ணனும்பிரமனுமோரா, வருமையரடிநிழல்பரவிநின்றேத்துமன்புடையடியவர்க்கணியருமாவர், கருமைகொள்வடிவொடுசுனைவளர்குவளைகயலினம்வயலிளவாளைகளிரிய,வெருமைகள்படிதரவிளவனமாலுமிடைச்சுரமேவியவிவர்வணமென்னே.

மடைச்சுரமறிவனவாளையுங்கயலுமருவியவயறனில்வருபுனற்காழிச், சடைச்சுரத்துறைவதோர்பிறையுடையண்ணல்சரிதைகள்பரவிநின்றுருகுசம்பந்தன், புடைச்சுரத்தருவரைப்பூக்கமழ்சாரற்புணர்மடந்தையவர்புடையிடையார்ந்த, விடைச்சுரமேத்தியவிசையொடுபாடலிவைசொலவல்லவர்பிணியிலர்தாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கழுமலம் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

அயிலுறுபடையினர்விடையினர்முடிமேலரவமுமதியமும்விரவியவழகர்
மயிலுறுசாயல்வனமுலையொருபான்மகிழ்பவர்வானிடைமுகில்புல்குமிடறர்
பயில்வுறுசரிதையரெருதுகந்தேறிப்பாடியுமாடியும்பலிகொள்வர்வலிசேர்
கயிலையும்பொதியிலுமிடமெனவுடையார்கழுமலநினையநம்வினைகரிசறுமே. ()

கொண்டலுநீலமும்புரைதிருமிடறர்கொடுமுடியுறைபவர்படுதலைக்கையர், பண்டலரயன்சிரமரிந்தவர்பொருந்தும்படர்சடையடிகளார்பதியதனயலே, வண்டலும்வங்கமுஞ்சங்கமுஞ்சுறவுமறிகடறிரைகொணர்ந்தெற்றியகரைமேற்,கண்டலுங்கைதையுநெய்தலுங்குலவுங்கழுமலநினையநம்வினைகரிசறுமே. (௨)

எண்ணிடையொன்றினரிரண்டினருருவமெரியிடைமூன்றினர்நான்மறையாளர், மண்ணிடையைந்தினராறினரங்கம்வகுத்தனரேழிசையெட்டிருங்கலைசேர், பண்ணிடையொன்பதுமுணர்ந்தவர்பத்தர்பாடிநின்றடிதொழமதனனைவெகுண்ட, கண்ணிடைக்கனலினர்கருதியகோயில்கழுமலநினையநம்வினைகரிசறுமே. (௩)

எரியொருகரத்தினரிமையவர்க்கிறைவரோறுகந்தேறுவர்நீறுமெய்பூசித்
திரிதருமியல்பினரயலவர்புரங்கடீயெழவிழித்தனர்வேய்புரைதோளி
வரிதருகண்ணிணைமடவரலஞ்சமஞ்சுறநிமிர்ந்ததோர்வடிவொடுமவந்த
கரியுரிமருவியவடிகளுக்கிடமாங்கழுமலநினையநம்வினைகரிசறுமே. (௫)

ஊரெதிர்ந்திடுபலிதலைகலனாகவுண்பவர்விண்பொலிந்திலங்கியவுருவர்
பாரெதிர்ந்தடிதொழவிரைதருமார்பிற்படவரவாமையக்கணிந்தவர்க்கிடமா
நீரெதிர்ந்திழிமணிநித்திலமுத்தநிரைசொரிசங்கமொடொண்மணிவரன்றிக்
காரெதிர்ந்தோதமவனதிரைகரைக்கெற்றுங்கழுமலநினையநமவினைசருசறுமே.

முன்னுயிர்த்தோற்றமுமிறுதியுமாகிமுடியுடையமரர்களடிபணிந்தேத்தப்
பின்னியசடைமிசைப்பிறைநிறைவித்தபேரருளாளனார்பேணியகோயில்
பொன்னியனறுமலர்புனலொடுதூபஞ்சாந்தமுமேந்தியகையினராகிக்
கன்னியர்நாடொறுமவேடமேபரவுங்கழுமலநினையநம்வினைகரிசறுமே. (௬)

கொலைக்கணித்தாவருகூற்றுதைசெய்தார்குரைகழல்பணிந்தவர்க்கருளி யபொருளினிலைக்கணித்தாவரநினையவல்லார்தங்நெடுந்துயர்தவிர்த்தவெந்நிமலருக்கிடமா, மலைக்கணித்தாவரவன்றிரைமுரலமதுவிரிபுன்னைகள்முத்தெனவரும்பக், கலைக்கணங்கானலினீழலில்வாழுங் கழுமலநினையநமவினைகரிசறுமே. (௭)

புயம்பலவுடையதென்னிலங்கையர்வேந்தன்பொருவரையெடுத்தவன் பொன்முடிதிண்டோள், பயமபலபடவடர்த்தருளியபெருமான்பரிவொடுமினிதுறைகோயிலதாகும், வியன்பலவிண்ணினுமண்ணினுமெங்குமவேறுவேறுகங்களிற்பெயருளதென்னக், கயமபலபடக்கடறிரைகரைக்கெற்றுங்கழுமலநினையநம்வினைகரிசறுமே. (அ)

விலங்கலொன்றேந்திவன்மழைதடுத்தோனும்வெறிகமழ்தாமரையோனுமென்றிவர்தம, பலங்களானெடியுமறிவரிதாயபரிசினன்மருவிநின்றினிதுறைகோயில், மலங்கியவன்றிரைவரையெனபரந்தெங்குமறிகடலோங்கிவெள்ளிப்பியுஞ்சுமந்து, கலங்கடன்சரக்கொடுநிரக்கவந்தேறுங்கழுமலநினையநம்வினைகரிசறுமே. (௯)

ஆம்பலதவமுயன்றறவுரைசொல்லுமறிவிலாச்சமணருந்தேரருங்கணிசேர்
நோம்பலதவமறியாதவர்நொடிந்தமூதுரைகொள்கிலாமுதல்வர்தமமேனிச்
சாமபலும்பூசிவெண்டலைகலனாகத்தையலாரிடுபலிவையகத்தேற்றுக்
காம்பனதோளியோடினிதுறைகோயில்கழுமலநினையநம்வினைகரிசறுமே. ()

கலிகெழுபாரிடையூரெனவுளதாங்கழுமலம்விரும்பியகோயில்கொண்டவர்மேல், வலிகெழுமனமிகவைத்தவன்மறைசேர்வருங்கலைஞானசம்பந்தனதமிழி, னொலிகெழுமாலையென்றுரைசெய்தபத்துமுண்மையினால்நினைந்தேத்தவல்லாமேல், மெலிகெழுதுயரடையாவினைசிந்தும்விண்ணவராற்றலின்மிகப்பெறுவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

கோயில் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

கற்றுங்கெரியோம்பிக்கலியைவாராமே
செற்றார்வாழ்தில்லைச்சிற்றம்பலமேய
முற்றாவெண்டிங்கண்முதல்வன்பாதமே
பற்றாநின்றாரைப்பற்றாபாவமே. (௧)

பறப்பைப்படுத்தெங்கும்பசுவேட்டெரியோம்புஞ்
சிறப்பர்வாழ்தில்லைச்சிற்றம்பலமேய
பிறப்பில்பெருமானைப்பின்றாழ்சடையானை
மறப்பிலார்கண்டீர்மையல்தீர்வாரே. (உ)

மையாரொண்கண்ணார்மாடநெடுவீதிக்
கையாற்பந்தோச்சுங்கழிசூழ்தில்லையுட்
பொய்யாமறைபாடல்புரிந்தானுலகேத்தச்
செய்யானுறைகோயில்சிற்றம்பலந்தானே. (ங)

நிறைவெண்கொடிமாடநெறிநேர்தீண்டப்
பிறைவந்திறைதாக்கும்பேரம்பலந்தில்லைச்
சிறைவண்டறையோவாச்சிற்றம்பலமேய
விறைவன்கழலேத்துமின்பமின்பமே. (ச)

செல்வநெடுமாடஞ்சென்றுசேணோங்கிச்
செல்வமதிதோயச்செல்வமுயர்கின்ற
செல்வர்வாழ்தில்லைச்சிற்றம்பலமேய
செல்வன்கழலேத்துஞ்செல்வஞ்செல்வமே. (ரு)

வருமாந்தளிர்மேனிமாதோர்பாகமாந்
திருமாந்தில்லையுட்சிற்றம்பலமேய
கருமானுரியாடைக்கறைசேர்கண்டத்தெம்
பெருமான்கழலல்லாற்பேணாதுள்ளமே. (சு)

அலையார்புனல்சூடியாகத்தொருபாக
மலையான்மகளோடுமகிழ்ந்தானுலகேத்தச்
சிலையாலெயிலெய்தான்சிற்றம்பலந்தன்னைத்
தலையால்வணங்குவார்தலையானார்களே. (எ)

கூர்வாளரக்கன்றன்வலியைக்குறைவித்துச்
சீராலேமல்குசிற்றம்பலமேய
நீரார்சடையானைநித்தலேத்துவார்
தீராநோயெல்லாந்தீர்தறிண்ணமே. (அ)

கோணாகணையானுங்குளிர்தாமரையானுங்
காணார்கழலேத்தக்கனலாயோங்கினான்
சேணார்வாழ்தில்லைச்சிற்றம்பலமேத்த
மாணாநோயெல்லாம்வாளாமாயுமே. (கூ)

பட்டத்துவராடைப்படிமங்கொண்டாடு
முட்டைக்கட்டுரைமொழிவகேளாதே
சிட்டர்வாழ்தில்லைச்சிற்றம்பலமேய
நட்டப்பெருமானைநாளுந்தொழுவோமே. (க0)

ஞாலத்துயர்காழிஞானசம்பந்தன்
சீலத்தார்கொள்கைச்சிற்றம்பலமேய
சூலப்படையானைச்சொன்னதமிழ்மாலை
கோலத்தார்பாடவல்லார்நல்லாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

### சீகாழி - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

நல்லார்தீமேவுந்தொழிலார்நால்வேதஞ்
சொல்லார்கேண்மையார்சுடர்பொற்கழலேத்த
வில்லாற்புரஞ்செற்றான்மேவும்பதிபோலுங்
கல்லாமதில்சூழ்ந்தகாழிநகர்தானே. (௧)

துளிவண்டேன்பாயுமிதழிதூமத்தந்
தெளிவெண்டிங்கள்மாசுணநீர்திகழ்சென்னி
யொளிவெண்டலைமாலையுகந்தானூர்போலுங்
களிவண்டியாழ்செய்யுங்காழிநகர்தானே. (௨)

ஆலக்கோலத்தினஞ்சுண்டமுதத்தைச்
சாலத்தேவர்க்கீந்தளித்தான்றன்மையாற்
பாலற்காய்நன்றும்பரிந்துபாதத்தாற்
காலற்காய்ந்தானூர்காழிநகர்தானே. (௩-௪-௫-௬-௭)

இரவிற்றிரிவோர்கட்கிறைதோளிணைபத்து
நிரவிக்கரவாளைநேர்ந்தானிடம்போலும்
பரவித்திரிவோர்க்கும்பானீறணிவோர்க்குங்
கரவிற்றடக்கையார்காழிநகர்தானே. (௮)

மாலும்பிரமனுமறியாமாட்சியான்
றோலும்புரிநூலுந்துதைந்தவரைமார்ப
னேலும்பதிபோலுமிரந்தோர்க்கெந்நாளுங்
காலம்பகராதார்காழிநகர்தானே. (௯)

தங்கையிடவுண்பார்தாழ்சீவரத்தார்கள்
பெங்கையுணராதேபேணித்தொழுமின்கள்
மங்கையொருபாகமகிழ்ந்தான்மலர்ச்சென்னிக்
கங்கைதரித்தானூர்காழிநகர்தானே. (௧௦)

வாசங்கமழ்காழிமதிசெஞ்சடைவைத்த
வீசன்னகர்தன்னையிணையில்சம்பந்தன்
பேசுந்தமிழ்வல்லோர்பெருநீருலகத்துப்
பாசந்தனையற்றுப்பழியில்புகழாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

### திருவீழிமிழலை - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

இரும்பொன்மலைவில்லாவெரியம்பாநாணிற்
றிரிந்தபுரமூன்றுஞ்செற்றானுறைகோயில்
தெரிந்தவடியார்கள்சென்றதிசைதோறும்
விரும்பியெதிர்கொள்வார்வீழிமிழலையே. (௧)

வாதைப்படுகின்றவானோர்துயர்தீர
வோதக்கடனஞ்சையுண்டானுறைகோயில்
கீதத்திசையோடுங்கேள்விக்கிடையோடும்
வேதத்தொலியோவாவீழிமிழலையே. (௨)

பயிலும்மறையாளன்றலையிற்பலிகொண்டு
துயிலும்பொழுதாடுஞ்சோதியுறைகோயின்
மயிலும்மடமானுமமதியுமமிளவேயும்
வெயிலும்போனமாதர்வீழிமமிழலையே. (கூ)

இரவன்பகலோனுமெச்சத்திமையோரை
நிரவிட்டருள்செய்தநிமலன்னுறைகோயில்
குரவஞ்சுரபுன்னைகுளிர்கோங்கிளவேங்கை
விரவும்பொழிலந்தண்வீழிம்மிழலையே. (ச)

கண்ணிற்கனலாலேகாமன்பொடியாகப்
பெண்ணுக்கருள்செய்தபெருமானுறைகோயில்
மண்ணிற்பெருவேள்விவளர்தீபபுகைநாளும
விண்ணிற்புயல்காட்டும்வீழிம்மிழலையே. (ரு)

மாலாயிரங்கொண்டுமலர்க்கண்ணிடவாழி
யேலாவலயநதோடீந்தானுறைகோயில்
சேலாகியபொய்கைச்செழுநீர்க்கமலங்கண்
மேலாலெரிகாட்டும்வீழிமமிழலையே. (சா)

மதியால்வழிபட்டான்வாணாளகொடுபோவான்
கொதியாவருகூற்றைக்குமைததானுறைகோயில்
நிதியான்மிகுசெல்வர்நித்தநியமங்கள்
விதியானிறகின்றார்வீழிம்மிழலையே. (எ)

எடுத்தானறருகக்கினையிழித்தான்விரலூன்றிக்
கொடுததான்வாளாளாகக்கொண்டானுறைகோயில்
படிததார்மறைவேள்விபயின்றார்பாவததை
விடுததார்மிகவாழுமவீழிமமிழலையே. (அ)

கிடந்தானிருநதானுங்கீழ்மேல்காணாது
தொடர்நதாங்கவரேநதசசுடராயவன்கோயில்
படநதாங்கரவல்குறபவளத்துவர்வாய்மேல்
விடநதாங்கியகண்ணார்வீழிமமிழலையே. (கூ)

சிக்கார்துவராடைச்சிறுதட்டுடையாரு
நக்காங்கலாதூற்றுநம்பனுறைகோயில
தக்கார்மறைவேளவித்தலையாயுலகுக்கு
மிக்காரவர்வாழும்வீழிமமிழலையே. (கo)

மேனின்றிழிகோயில்வீழிமமிழலையு
ளேனத்தெயிற்றானையெழிலார்பொழிற்காழி
ஞானததுயர்கின்றநலங்கொள்சம்பநதன்
வாய்மைததுவைசொல்லவல்லோர்நல்லோரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருஅம்பர்மாகாளம். - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

அடையார்புரமூன்றுமனலாய்விழவெய்து
மடையார்புனலம்பர்மாகாளம்மேய

விடையார்கொடியெந்தைவெள்ளைப்பிறைசூடுஞ்
சடையான்கழலேத்தச்சாராவினைதானே. (௧)

தேனார்மதமத்தந்திங்கள்புனல்சூடி
வானார்பொழிலம்பர்மாகாளமமேய
வூனார்தலைதன்னிற்பலிகொண்டுழல்வாழ்க்கை
யானான்கழலேத்தவல்லலடையாவே. (௨)

திரையார்புனலோடுசெல்வமதிசூடி
விரையார்பொழிலம்பர்மாகாளம்மேய
நரையார்விடையூருநம்பான்கழல்நாளு
முரையாதவர்கண்மேலொழியாவூனமமே. (௩)

கொந்தண்பொழிற்சோலைக்கோலவரிவண்டு
மந்தமமலியம்பர்மாகாளம்மேய
கந்தங்கமழ்கொன்றைகமழபுன்சடைவைத்த
வெந்தைகழலேத்தவிடர்வந்தடையாவே. (௪)

அணியார்மலைமங்கையாகம்பாகமாய்
மணியார்புனலம்பர்மாகாளம்மேய
துணியாருடையினான்றுதைபொற்கழனாளும்
பணியாதவர்தமமேற்பறையாபாவமமே. (௫)

பண்டாழ்கடல்நஞ்சையுண்டுகளிமாந்தி
வண்டார்பொழிலம்பர்மாகாளமமேய
விண்டார்புரம்வேவமேருச்சிலையாகக்
கொண்டான்கழலேத்தக்குறுகாகுற்றமே. (௬)

மிளிரும்மரவோடுவெள்ளைபபிறைசூடி
வளருமபொழிலமபர்மாகாளமமேய
கிளருஞ்சடையண்ணல்கேடில்கழலேத்தத்
தளருமமுறுநோய்கள்சாருந்தவந்தானே. (௭)

கொலையார்மழுவோடுகோலச்சிலையேந்தி
மலையார்புனலம்பர்மாகாளமமேய
விலையார்திரிசூலபபடையான்கழல்நாளும
நிலையாநினைவார்மேல்நில்லாவினைதானே. (௮)

சிறையார்வரிவண்டுதேனுண்டிசைபாட
மறையார்நிறையமபர்மாகாளம்மேய
நறையார்மலரானுமாலுங்காண்பொண்ணா
விறையான்கழலேத்தவெய்துமின்பமே. (௯)

மாசூர்வடிவினார்மண்டையுணல்கொள்வார்
கூசாதுரைக்குஞ்சொற்கொள்கைகுணமல்ல
வாசார்பொழிலம்பர்மாகாளமமேய
வீசாவென்பார்கட்கில்லையிடர்தானே. (௧0)

வெருநீர்கொளவோங்குவேணுபுரந்தன்னுட்
டிருமாமறைஞானசம்பந்தன்சேணார்
பெருமான்மலியம்பர்மாகாளம்பேணி
யுருகாவுரைசெய்வாருயர்வானடைவாரே. (௧௧)

---

திருச்சிற்றம்பலம்.

85

திருக்கடனாகைக்காரோணம் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

புனையுமவிரிகொன்றைக்கடவுள்புனல்பாய
நனையுஞ்சடைமேலோர்நகுவெண்டலைசூடி
வினையில்லடியார்கள்விதியால்வழிபடக்
கனையுங்கடனாகைக்காரோணத்தானே. (க)

பெண்ணாணெனநின்றபெம்மான்பிறைச்சென்னி
யண்ணாமலைநாடனாரூருறையமமான்
மண்ணார்முழவோவாமாடநெடுவீதிக்
கண்ணாகடனாகைக்காரோணத்தானே. (உ)

பாரோர்தொழவிண்ணோர்பணியம்மதிளமூன்று
மாராரழலூட்டியடியார்க்கருள்செய்தான்
தேரார்விழவோவாச்செல்வன்றிரைசூழ்ந்த
காராகடனாகைக்காரோணத்தானே. (ஙூ)

மொழிசூழ்மறைபாடிமுதிருஞ்சடைதன்மே
லழிசூழ்புனலேறவண்ணலணியாய
பழிசூழ்விலாயபத்தர்பணிந்தேத்தக்
கழிசூழ்கடனாகைக்காரோணத்தானே. (ச)

ஆணும்பெண்ணுமாயடியார்க்கருணல்கிச்
சேணின்றவர்க்கின்னஞ்சிந்தைசெயவல்லான்
பேணிவழிபாடுபிரியாதெழுந்தொண்டர்
காணுங்கடனாகைக்காரோணத்தானே. (ரு)

ஏனத்தெயிறோடுமரவமெய்பூண்டு
வானத்திளந்திங்கள்வளருஞ்சடையண்ணல்
ஞானத்துரைவல்லார்நாளும்பணிந்தேத்தக்
கானக்கடனாகைக்காரோணத்தானே. (சா)

அரையாரழனாகமக்கோடசைத்திட்டு
விரையார்வரைமார்பின்வெண்ணீறணியண்ணல்
வரையார்வனபோலவளரும்வங்கங்கள்
கரையார்கடனாகைக்காரோணத்தானே. (எ)

வலங்கொள்புகழ்பேணிவரையாலுயர்திண்டோ
ளிலங்கைக்கிறைவாடவடர்த்தங்கருள்செய்தான்
பலங்கொள்புகழ்மண்ணிற்பத்தர்பணிந்தேத்தக்
கலங்கொள்கடனாகைக்காரோணத்தானே. (அ)

திருமாலடிவீழத்திசைநான்முகனேத்தப்
பெருமானெனநின்றபெம்மான்பிறைச்சென்னிச்
செருமால்விடையூருஞ்செல்வன்றிரைசூழ்ந்த
கருமால்கடனாகைக்காரோணத்தானே. (கூ)

நல்லாரறஞ்சொல்லப்பொல்லார்புறங்கூற
வல்லாரலர்தூற்றவடியார்க்கருள்செய்வான்
பல்லார்தலைமாலையணிவான்பணிந்தேத்தக்
கல்லார்கடனாகைக்காரோணத்தானே. (க0)

கரையார்கடனாகைக்காரோணம்மேய
நரையார்விடையானைநவிலுஞ்சம்பந்த
னுரையார்தமிழ்மாலைபாடுமவரெல்லாங்
கரையாவுருவாகிக்கலிவானடைவாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருநல்லம் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

கல்லானிழல்மேயகறைசேர்கண்டாவென்
றெல்லாமொழியாலுமிமையோர்தொழுதேத்த
வில்லாலரண்மூன்றும்வெந்துவிழவெய்த
நல்லானமையாள்வானல்லநகரானே. (க)

தக்கன்பெருவேள்விதன்னிலமரரைத்
துக்கம்பலசெய்துசுடர்பொற்சடைதாழக்
கொக்கின்னிறகோடுகுளிர்வெண்பிறைசூடு
நக்கன்னமையாள்வானல்லநகரானே. (உ)

அந்திமதியோடுமரவச்சடைதாழ
முந்தியனலேந்திமுதுகாட்டெரியாடிச்
சிந்தித்தெழவல்லார்தீராவினைதீர்க்கு
நந்திநமையாள்வானல்லநகரானே. (ங)

குளிரும்மதிசூடிக்கொன்றைச்சடைதாழ
மிளிருமரவோடுவெண்ணூல்திகழ்மார்பிற்
றளிருந்திகழ்மேனித்தையல்பாகமாய்
நளிரும்வயல்சூழ்ந்தநல்லநகரானே. (ச)

மணியார்திகழ்கண்டம்முடையான்மலர்மல்கு
பிணிவார்சடையெந்தைபெருமான்கழல்பேணித்
துணிவார்மலர்கொண்டுதொண்டர்தொழுதேத்த
நணியானமையாள்வானல்லநகரானே. (ரு)

வாசம்மலர்மல்குமலையான்மகளோடு
பூசுஞ்சுடுநீறுபுனைந்தான்விரிகொன்றை
யீசனெனவுள்கியெழுவார்வினைகட்கு
நாசன்னமையாள்வானல்லநகரானே. (சு)

அங்கோல்வளைமங்கைகாணவனலேந்திக்
கொங்கார்நறுங்கொன்றைசூடிக்குழகாக
வெங்காடிடமாகவெந்தீவிளையாடு
நங்கோனமையாள்வானல்லநகரானே. (எ)

பெண்ணார்திருமேனிப்பெருமான்பிறைமல்கு
கண்ணார்நுதலினன்கயிலைகருத்தினை
லெண்ணாதெடுத்தானையிறையேவிரலூன்றி
நண்ணார்புரமெய்தானல்லநகரானே. (அ)

நாகத்தணையானுநளிர்மாமலரானும்
போகத்தியல்பினாற்பொலியவழகாகு

மாகத்தவளோடுமமர்ந்தங்கழகாரு
நாகமமரையார்த்தானல்லநகரானே. (கூ)

குறியில்சமணோடுகுண்டர்வண்டேர
ரறிவில்லுரைகேட்டங்கவமேகழியாதே
பொறிகொள்ளரவார்த்தான்பொல்லாவினைதீர்க்கு
நறைகொள்பொழில்சூழ்நதநல்லநகரானே. (க0)

நலமார்மறையோர்வாழ்நல்லநகர்மேய
கொலைசேர்மழுவானைக்கொச்சையமர்நதோரகு
தலமார்தமிழ்ஞானசமபநதன்சொன்ன
கலைகளிவைவல்லார்கவலைகழிவாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருநல்லூர் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

கொட்டும்பறைசீராற்குழுமவனலேநதி
நட்டம்பயின்றாடுநல்லூர்பபெருமானை
முட்டின்றிருபோதுமுனியாதெழுநதன்பு
பட்டமனத்தார்களறியார்பாவமே. (க)

ஏறிலெருதேறுமெழிலாயிழையோடும்
வேறும்முடனுமாமவிகிர்தாவரென்ன
நாறும்மலர்பபொய்கைநல்லூர்பபெருமானைக்
கூறும்மடியார்கட்கடையாகுற்றமே. (உ)

சூடுமிளநதிங்கட்சுடர்பொற்சடைதாழ
வோடுண்கலனாகவூரூரிடுபிச்சை
நாடுநெறியானைநல்லூர்பபெருமானைப்
பாடும்மடியார்கட்கடையாபாவமே. (ங)

நீத்தநெறியானைநீங்காத்தவத்தானை
நாத்தநெறியானைநல்லூர்ப்பெருமானைக்
காத்தநெறியானைக்கைகூபபித்தொழு
தேத்துமடியார்கட்கில்லையிடர்தானே. (௪)

ஆகத்துமைகேள்வனரவச்சடைதாழ
நாகமசைத்தானைநலலூர்பபெருமானைத்
தாகம்புகுநதண்மித்தாள்கள்தொழுநதொண்டர்
போகமநத்தராய்ப்புகழத்திரிவாரே. (ரு)

கொல்லுங்களியானையுரிபோர்த்துமையஞ்ச
நல்லநெறியானைநல்லூர்ப்பெருமானைச்
செல்லுநெறியானைச்சேர்ந்தாரிடர்தீரச்
சொல்லுமடியார்களறியார்துக்கமே. (சு)

எங்கள்பெருமானையிமையோர்தொழுதேத்து
நங்கள்பெருமானைநல்லூர்பிரிவில்லா
தங்கைதலைக்கேற்றியாளென்றடிநீழற்
றங்குமநத்தார்கள்தடுமாற்றறுப்பாரே. (எ)

காமனெழில்வாட்டிக்கடல்சூழிலங்கைக்கோ
ஞமமிறுத்தானைநல்லூர்ப்பெருமானை
யேமமநத்தராயிகழாதெழுநதொண்டர்
தீபமநத்தார்களறியார்தீயவே. (அ)

வண்ணமலரானும்வையமளநதானு
நண்ணலரியானைநல்லூர்பபெருமானைத்
தண்ணமலர்தூவித்தாள்கள்தொழுதேத்த
வெண்ணுமடியார்கட்கில்லையிடுக்கணே. (கூ)

பிச்சக்குடைநீழற்சமணர்சாக்கியர்
நிசசமலர்தூற்றநின்றபெருமானை
நச்சுமிடற்றானைநல்லூர்பபெருமானை
யெச்சுமடியார்கட்கில்லையிடர்தானே. (கo)

தண்ணம்புனற்காழிஞானசம்பந்த
னண்ணுமபுனல்வேலிநல்லூர்பபெருமானை
வண்ணம்புனைமாலைவைகலேத்துவார்
விண்ணுநிலனுமாய்விளஙகுமபுகழாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருவடுகூர் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

சுடுகூடெரிமாலையணிவர்சுடர்வேலர்
கொடுகூர்மழுவாளொன்றுடையர்விடையூர்வர்
கடுகூர்பசிகாமஙகவலைபிணியில்லார்
வடுகூர்புனல்சூழ்ந்தவடுகூரடிகளே. (க)

பாலுநறுநெய்யுநதயிரும்பயின்றாடி
யேலுஞ்சுடுநீறுமென்புமொளிமல்கக்
கோலமபொழிற்சோலைகூடிமட வன்ன
மாலும்வடுகூரிலாடுமடிகளே. (உ)

சூடுமிளநதிங்கட்சுடர்பொற்சடைதன்மே
லோடுஙகளியானையுரிபோர்த்துமையஞ்ச
வேடுமலர்மோநதஙகெழிலார்வரிவண்டு
பாடுமவடுகூரிலாடுமடிகளே. (ந)

துவருமபுரிசையுநதுதைநதமணிமாடங்
கவரவெரியோட்டிக்கடியமதிளெய்தார்
கவருமணிகொலலைக்கடியமுலைநல்லார்
பவரும்வடுகூரிலாடுமடிகளே. (ச)

துணியாருடையாடைதுன்னியரைதன்மேற்
றணியாவழுஞகநதரியாவகைவைத்தார்
பணியாரடியார்கள்பலரும்பயின்றேத்த
வணியார்வடுகூரிலாடுமடிகளே. (ரு)

தளருஙகொடியன்னாடன்னோடுடனாகிக்
கிளருமரவார்த்துக்கிளருமுடிமேலோர்

வளரும்பிறைசூடிவரிவண்டிசைபாட
வொளிரும்வடுகூரிலாடுமடிகளே. (௬)

நெடியர்சிறிதாயநிரம்பாமதிசூடு
முடியர்விடையூர்வர்கொடியர்மொழிகொள்ளார்
கடியதொழிற்காலன்மடியவுதைகொண்ட
வடியர்வடுகூரிலாடுமடிகளே. (௭)

பிறையுநெடுநீரும்பிரியாமுடியினார்
மறையும்பலபாடிமயானத்துறைவாரும
பறையுமதிர்குழலும்போலப்பலவண்டாங்
கறையும்வடுகூரிலாடுமடிகளே. (௮)

சந்தம்மலர்வேய்ந்தசடையின்னிடைவிமமு
கந்தம்மிகுதிங்கட்சிந்துகதிர்மாலை
வந்துநயந்தெம்மைநன்றுமருள்செய்வா
ரந்தண்வடுகூரிலாடுமடிகளே. (௯)

திருமாலடிவீழத்திசைநான்முகனாய
பெருமானுணர்கில்லாப்பெருமானெடுமுடிசேர்
செருமால்விடையூருஞ்செம்மான்றிசைவில்லா
வருமாவடுகூரிலாடுமடிகளே. (௧௦)

படிநோன்பவையாவர்பழியில்புகழான
கடிநாணிகழ்சோலைகமழும்வடுகூரைப்
படியானசிந்தைமொழியார்சம்பந்த
னடிஞானம்வல்லாரடிசேர்வார்களே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திரு ஆப்பனூர் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

முற்றுஞ்சடைமுடிமேன்முதிராவிளம்பிறைய
னொற்றைப்படவரவமதுகொண்டரைக்கணிந்தான்
செற்றமில்சீரானைத்திருவாப்பனூரானைப
பற்றுமனமுடையார்வினைபற்றறுப்பாரே. (௧)

குரவங்கமழ்குழலாள்குடிகொண்டுநின்றுவிண்ணோர்
விரவுந்திருமேனிவிளங்கும்வளையெயிற்றி
னரவமணிந்தானையணியாப்பனூரானைப
பரவுமனமுடையார்வினைபற்றறுப்பாரே. (௨)

முருகுவிரிகுழலார்மனங்கொளனங்கனைமுன்
பெரிதுமுனிந்துகந்தான்பெருமான்பெருங்காட்டி
னரவமணிந்தானையணியாப்பனூரானைப்
பரவுமனமுடையார்வினைபற்றறுப்பாரே. (௩)

பிணியும்பிறப்பறுப்பான்பெருமான்பெருங்காட்டிற்
றுணியினுடைதாழச்சுடரேந்தியாடுவா
னணியும்புனலானையணியாப்பனூரானைப்
பணியுமனமுடையார்வினைபற்றறுப்பாரே. (௪)

தகரமணியருவித்தடமால்வரைசிலையா
நகரமொருமூன்றுநலங்குன்றவென்றுகந்தான்
அகரமுதலானையணியாப்பனூரானைப்
பகருமனமுடையார்வினைபற்றறுப்பாரே. (௫)

ஓடுந்திரிபுரங்களுடனேயுலந்தவியக்
காடதிடமாகக்கனல்கொண்டுநின்றிரவி
லாடுந்தொழிலானையணியாப்பனூரானைப்
பாடுமனமுடையார்வினைபற்றறுப்பாரே. (௬)

இயலும்விடையேறியெரிகொண்மழுவீசிக்
கயலினைக்கண்ணாளொருபால்கலந்தாட
வியலுமிசையானையெழிலாப்பனூரானைப்
பயிலுமனமுடையார்வினைபற்றறுப்பாரே. (௭)

கருக்குமணிமிடறன்கதநாகக்கச்சையினு
னுருக்குமடியவரையொளிவெண்பிறைசூடி
யரக்கன்றிறலழித்தானணியாப்பனூரானைப்
பருக்குமனமுடையார்வினைபற்றறுப்பாரே. (௮)

கண்ணன்கடிக்கமலமலர்மேலினிதுறையு
மண்ணறகளப்பரிதாய்நின்றங்கடியாமே
லெண்ணில்வினைகளைவானெழிலாப்பனூரானைப
பண்ணின்னிசைபகர்வார்வினைபறறறுபபாரே (௯)

செய்யகலிங்கத்தார்சிறுதட்டுடையார்கள்
பொய்யர்புறங்கூறப்புரிந்தவடியாரை
யையமகற்றுவானணியாப்பனூரானைப்
பையநினைக்தெழுவார்வினைபறறறுபபாரே. (௧௦)

அந்தண்புனல்வைகையணியாபபனூர்மேய
சந்தமலர்க்கொன்றைசடைமேலுடையானை
நந்தியடிபரவுநலஞானசமபந்தன
சந்தமிவைவல்லார்தடுமாற்றறுப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திரு எருக்கத்தம்புலியூர் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

படையார்தருபூதபபகடாருரிபோர்வை
யுடையானுமையோடுமுடனாயிடுகங்கைச்
சடையானெருக்கத்தமபுலியூர்த்தருகோயில்
விடையானடியேத்தமேவா வினை தானே. (௧)

இலையார்தருசூலப்படையெம்பெருமானாய்
நிலையார்மதின்மூன்றுநீறாய்விழவெய்த
சிலையானெருக்கத்தம்புலியூர்த்திகழ்கோயிற்
கலையானடியேத்தக்கருதாவினை தானே. (௨)

விண்ணோர்பெருமானேவிகிர்தாவிடையூர்தி
பெண்ணாணலியாகும்பித்தாபிறைசூடி

யெண்ணாரெருக்கத்தம்புலியூருறைகின்ற
வண்ணாவெனவல்லார்க்கடையாவினை தானே. (ரு)

அரையார்தருநாகமணிவானலர்மாலை
விரையார்தருகொன்றையுடையான்விடையேறி
வரையானெருக்கத்தம்புலியூர்மகிழ்கின்ற
திரையார்சடையானைச்சேரத்திருவாமே. (௬)

வீறார்முலையாளைப்பாகமிகவைத்துச்
சீறாவருகாலனசினத்தையழிவித்தா
னேறானெருக்கத்தம்புலியூரிறையானை
வேறாநினைவாரைவிரும்பாவினை தானே. (௭)

நகுவெண்டலையேந்திநாளுமிதம்பாடிப்
புகுவானயம்பெய்யப்புலித்தோல்பியற்கிட்டுத்
தகுவானெருக்கத்தம்புலியூர்த்தகைந்தங்கே
தொகுவான்கழலேத்தத்தொடராவினை தானே. (சு-எ)

ஆவாவெனவரக்கனலறவடர்த்திட்டுத்
தேவாவெனவருளார்செல்வங்கொடுத்திட்ட
கோவேயெருக்கத்தம்புலியூர்மிகுகோயிற்
றேவேயெனவல்லல்தீர்தல்திடமாமே. (அ)

மறையானெடுமால்காண்பரியான்மழுவேந்தி
நிறையாமதிசூடிநிகழ்முத்தின்றொத்தே
யிறையானெருக்கத்தம்புலியூரிடங்கொண்ட
கறையார்மிடற்றானைக்கருதக்கெடும்வினையே. (௯)

புத்தருகர்தம்பொய்களபுறம்போக்கிச்
சுத்திதரித்துறையுஞ்சோதியுமையோடு
நித்தனெருக்கத்தம்புலியூர்நிகழ்வாய
வத்தனறவன்றன்னடியேயடைவோமே. (௧0)

ஏராரெருக்கத்தம்புலியூருறைவானைச்
சீரார்திகழ்காழித்திருவார்சம்பந்த
ஞராவருந்தமிழ்மாலையிவைவல்லார்
பாராரவரேத்தப்பதிவானுறைவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருப்பிரமபுரம் - திருவிருக்குக்குறள் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

அரனையுள்குவீர், பிரமனூருளெம்
பரனையேமனம், பரவியுய்மினே. (௧)

காணவுள்குவீர், வேணுநற்புரத்
தாணுவின்கழல், பேணியுய்மினே. (௨)

நாதனென்பிர்காள், காதலொன்புக
லாதிபாதமே, யோதியுய்மினே. (௩)

அங்கமாதுசேர், பங்கமாயவன்
வெங்குருமன்னு, மெங்களீசனே. (௪)

வாணிலாச்சடைத், தோணிவண்புரத்
தாணிநற்பொனைக், காணுமின்களே. (ரு)

பாந்தளார்சடைப, பூந்தராய்மன்னு
மேந்துகொங்கையாள், வேந்தனென்பரே. (சா)

கரியகண்டனைச், சிரபுரத்துளெம
மரசைநாடொறும், பரவியுய்ம்மினே. (எ)

நறவமார்பொழிற், புரவநற்பதி
யிறைவனுமமே, மறவனெஞ்சமே. (அ)

தென்றிலரக்கனைக்,குன்றிறசண்பைம
னன்றுசெரிந்தவா, நின்றுநினைமினே. (கூ)

அயனுமாலுமாய், முயலுங்காழியான்
பெயல்வையெய்திநின், றியலுமுள்ளமே. (கO)

தேரரமணரைச, சேரவில்கொசசைமன்
னேரில்கழனினைந, தோருமுள்ளமே. (கக)

தொழுமநததவர், கழுமலத்துறை
பழுதிலசமபநதன, மொழிகள்பத்துமே. (கஉ)

திருச்சிற்றம்பலம்.

---

திருஆநூர்-திருவிருக்குக்குறள் - பண் - குறிஞ்சி.

திருசசிற்றமபலம்.

சித்தநதெளிவீர்கா, ளத்தனாரூரைப
பத்திமலர்தூவ, முததியாகுமே. (க)

பிறவியறுபபீர்கா, ளறவனாரூரை
மறவாதேததுமின், றுறவியாகுமே. (உ)

துன்பநதுடைபபீர்கா, ளன்பனணியாரூ
நன்பொன்மலர்தூவ, வின்பமாகுமே (ங)

உய்யலுறுவீர்கா, ளையனாரூரைக்
கையினாற்றொழ, நையும்வினைதானே. (ச)

பிண்டமறுபபீர்கா, ளண்டனாரூரைக்
கண்டுமலர்தூவ, விண்டுவினைபோமே. (ரு)

பாசமறுப்பீர்கா, ளீசனணியாரூர்
வாசமலர்தூவ, நேசமாகுமே. (சா)

வெய்யவினைதீர, வையனணியாரூர்
செய்யமலர்தூவ, வையமுமதாமே. (எ)

அரக்கனுண்மையை, நெருக்கினாரூர்
கரத்தினாற்றொழத், திருததமாகுமே. (அ)

துள்ளுமிருவர்க்கும், வள்ளலாரூரை
யுள்ளுமவர்தம்மேல், விள்ளுமவினைதானே. (கூ)

கடுக்கொள்சீவரை, யடக்கினாரூ
ரொடுக்கூவாம்க்கூவார். விடுபபர்வேட்கையே. (கO)

சீரூர்சம்பந்த, னாரூரைச்சொன்ன
பாரூர்பாடலார், பேராரின்பமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருவீழிமிழலை-திருவிருக்குக்குறள் - பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

வாசிதீரவே, காசுநல்குவீர்
மாசின்மிழலையீ, ரேசலில்லையே. (௧)

இறைவராயினீர், மறைகொண்மிழலையீர்
கறைகொள்காசினை, முறைமைநல்குமே. (௨)

செய்யமேனியீர், மெய்கொண்மிழலையீர்
பைகொளரவினீ, ருய்யநல்குமே (௩)

நீறுபூசினீ, ரேறதேறினீர்
கூறுமிழலையீர், பேறுமருளுமே (௪)

காமன்வேவவோர், தூமக்கண்ணினீர்
நாமமிழலையீர், சேமநல்குமே. (௫)

பிணிகொள்சடையினீர், மணிகொண்மிடறினீ
ரணிகொண்மிழலையீர், பணிகொடருளுமே. (௬)

மங்கைபங்கினீர், துங்கமிழலையீர்
கங்கைமுடியினீர், சங்கைதவிர்மினே (௭)

அரக்கனெரிதர, விரக்கமெய்தினீர்
பரக்குமிழலையீர், கரக்கைதவிர்மினே. (௮)

அயனுமாலுமாய், முயலுமுடியினீ
ரியலுமிழலையீர், பயனுமருளுமே. (௯)

பறிகொளதலையினு, ரறிவதறிகிலார்
வெறிகொண்மிழலையீர், பிறிவதரியதே. (௧0)

காழிமாநகர், வாழிசம்பந்தன
வீழிமிழலைமேற், றாழுமொழிகளே (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

திருமுதுகுன்றம் - திருவிருக்குக்குறள் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

நின்றுமலர்தூவி, யின்றுமுதுகுன்றை
நன்றுமேத்துவீர்க், கென்றுமின்பமே. (௧)

அத்தன்முதுகுன்றைப, பத்தியாகிநீர்
நித்தமேத்துவீர்க், குய்த்தல்செல்வமே. (௨)

ஐயன்முதுகுன்றைப், பொய்கள்கெடநின்று
கைகள்கூப்புவீர், வையமுமதாமே. (௩)

ஈசன்முதுகுன்றை, நேசமாகிநீர்
வாசமலர்தூவப், பாசவினைபோமே. (௪)

மணியார்முதுகுன்றைப, பணிவாரவர்கண்டீர்
பிணியாயினகெட்டுத், தணிவாருலகிலே. (௫)

மொய்யார்முதுகுன்றி, லையாவெனவல்லார்
பொய்யாரிரவோர்க்குச், செய்யாளணியாளே. (௬)

விடையான்முதுகுன்றை, யிடையாதேத்துவார்
படையாயினசூழ, வுடையாருலகமே. (௭)

பத்துத்தலையானைக், கத்தவிரலூன்று
மத்தன்முதுகுன்றை, மொய்த்துப்பணிமினே. (௮)

இருவரறியாத, வொருவன்முதுகுன்றை
யுருகிநினைவார்கள், பெருகிநிகழ்வோரே. (௯)

தேரரமணருஞ்சேருமவகையில்லா
நேரின்முதுகுன்றை, நீர்நின்றுள்குமே. (௧௦)

நின்றுமுதுகுன்றை, நன்றுசம்பந்
னென்றுமுரைவல்லா, ரென்றுமுயர்வோரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருஆலவாய் - திருவிருக்குக்குறள் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

நீலமாமிடற், றாலவாயிலான்
பாலதாயினார், ஞாலமாள்வரே. (௧)

ஞாலமேழுமா, மாலவாயிலார்
சீலமேசொலீர், காலன்வீடவே. (௨)

ஆலநீழலா, ராலவாயிலார்
காலகாலனார், பாலதாமினே. (௩)

அந்தமில்புக, ழெந்தையாலவாய்
பந்தியார்கழல், சிந்தைசெய்மினே. (௪)

ஆடலேற்றினன், கூடலாலவாய்
பாடியேமனம், நாடிவாழ்மினே (௫)

அண்ணலாலவாய், நண்ணினான்றனை
யெண்ணியேதொழத், திண்ணமின்பமே. (௬)

அம்பொனாலவாய், நம்பனார்கழல்
நம்பிவாழ்பவர், துன்பம்வீடுமே. (௭)

அரக்கனார்வலி, நெருக்கனாலவா
யுரைக்குமுள்ளத்தார்க், கிரக்கமுண்மையே. (௮)

அருவனாலவாய், மருவினான்றனை
யிருவரேத்தநின், றுருவமோங்குமே. (௯)

ஆரநாகமாஞ், சீரனாலவாய்த்
தேரமண்செற்ற, வீரனென்பரே. (௧௦)

அடிகளாலவாய்ப், படிகொள்சம்பந்தன்
முடிவிலின்றமிழ், செடிகணீக்குமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

திரு இடைமருது - திருவிருக்குக்குறள் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

தோடொர்காதினன், பாடுமறையினன்
காடுபேணிநின், றாடுமருதனே.

கருதார்புரமெய்வ, ரெருதேயினிதூர்வர்
மருதேயிடமாகும், விருதாம்வினைதீர்ப்பே. (உ)

எண்ணுமடியார்க, ளண்ணன்மருதரைப்
பண்ணின்மொழிசொல்ல, விண்ணுந்தமதாமே. (ந)

விரியார்சடைமேனி, யெரியார்மருதரைத்
தரியாதேத்துவார், பெரியாருலகிலே (ச)

பந்தவிடையேறு, மெந்தைமருதரைச்
சிந்தைசெய்பவா, புந்திநல்லாரே. (ரு)

கழலுஞ்சிலம்பார்க்கு, மெழிலார்மருதரைத்
தொழலேபேணுவார்க், குழலும்வினைபோமே. (சா)

பிறையார்சடையண்ணன், மறையார்மருதரை
நிறையால்நினைபவர், குறையாரின்பமே. (எ)

எடுத்தான்புயந்தன்னை, யடுத்தார்மருதரைத்
தொடுத்தார்மலர்சூட்ட, விடுத்தார்வேட்கையே. (அ)

இருவர்க்கெரியாய, வுருவமருதரைப்
பரவியேத்துவா, மருவிவாழ்வரே (கூ)

நின்றுண்சமண்டேர, ரென்றுமருதரை
யன்றியுரைசொல்ல, நன்றுமொழியாரே. (க0)

கருதுசம்பந்தன், மருதரடிபாடிப
பெரிதுந்தமிழ்சொல்லப, பொருந்தவினைபோமே (கக)

திருச்சிற்றம்பலம்

---

திருஅன்னியூர் - திருவிருக்குக்குறள் - பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

மன்னியூருறை, சென்னியார்பிறை
யன்னியூரமர், மன்னுசோதியே (க)

பழகுந்தொண்டர்வம, மழகனன்னியூர்க்
குழகன்சேவடி, தொழுதுவாழ்மினே. (உ)

நீதிபேணுவீ, ராதியன்னியூர்ச்
சோதிநாமமே, யோதியுய்ம்மினே. (ந)

பத்தராயினீ, ரத்தனன்னியூர்ச்
சித்தர்தாடொழ, முத்தராவரே. (ச)

நிறைவுவேண்டுவீ, ரறவனன்னியூர்
மறையுளான்கழற், குறவுசெய்மினே. (ரு)

இன்பம்வேண்டுவீ, ரன்பனன்னியூர்
நன்பொனென்னுமி, னும்பராகவே. (சா)

அந்தணாளர்தந், தந்தையன்னியூ
ரெந்தையேயெனப், பந்தநீங்குமே (எ)

தூர்த்தனைச்செற்ற, தீர்த்தனன்னியூ
ராத்தமாவடைந், தேத்தியுய்ம்மினே. (அ)

இருவர்நாடிய, வரவனன்னியூர்
பரவுவார்விண்ணுக், கொருவராவரே. (௯)

குண்டர்தேரருக், கண்டனன்னியூர்த்
தொண்டுளார்வினை, விண்டுபோகுமே. (௧0)

பூந்தராய்ப்பந்த, னாய்ந்தபாடலால்
வேந்தனன்னியூர், சேர்ந்துவாழ்மினே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

௧௮

---

திருப்புறவம் - பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்.

எய்யாவென்றித்தானவரூர்மூன்றெரிசெய்த
மையார்கண்டன்மாதுமைவைகுந்திருமேனிச்
செய்யான்வெண்ணீறணிவானதிகழ்பொறபதிபோலும்
பொய்யாநாவினந்தணர்வாழும்புறவம்மே (௧)

மாதொருபாலுமாலொருபாலுமகிழ்கின்ற
நாதனென்றேத்துநம்பானவைகுநகர்போலும்
மாதவிமேயவண்டிசைபாடமயிலாடப்
போதலர்செம்பொன்புன்னைகொடுக்கும்புறவம்மே. (௨)

வற்றுநதியுமதியும்பொதியுஞ்சடைமேலே
புற்றரவின்படமாடவுமிப்புவனிக்கோர்
பற்றுயிடுமின்பலியென்றடைவார்பதிபோலும்
பொற்றுமகரயின்பொய்கைநிலாவும்புறவம்மே. (௩)

துன்னார்புரமும்பிரமன்சிரமுந்துணிசெய்து
மின்னார்சடைமேலரவும்மதியும்விளையாடப்
பன்னாளிடுமின்பலியென்றடைவார்பதிபோலும்
பொன்னார்புரிநூலந்தணர்வாழும்புறவம்மே. (௪)

தேவாவரனேசரணென்றிமையோர்திசைதோறுங்
காவாயென்றுவந்தடையக்கார்விடமுண்டு
பாவாரமறையும்பயில்வோருறையும்பதிபோலும்
பூவார்கோலச்சோலைசுலாவும்புறவம்மே. (௫)

கற்றறிவெய்திக்காமன்முன்னாகமுகவெல்லா
மற்றரனேநின்னடிசரணென்னுமடியோர்க்குப
பற்றதுவாயபாசுபதன்சேர்பதியென்பர்
பொற்றிகழ்மாடத்தொளிகணிலாவும்புறவம்மே. (௬)

எண்டிசையோரஞ்சிடுவகைகார்சேர்வரையென்னக்
கொண்டெழுகோலமுகில்போற்பெரியகரிதன்னைப்

பண்டுரிசெய்தோன்பாவனைசெய்யும்பதியென்பர்
புண்டரிகத்தோன்போன்மறையோர்சேர்புறவம்மே. (எ)

பரக்குந்தொல்சீர்த்தேவர்கள்சேனைப்பவ்வத்தைத்
துரக்குஞ்செந்தீப்போலமர்செய்யுந்தொழின்மேவு
மரக்கன்றிண்டோளழிவித்தானக்காலத்திற்
புரக்குமவேந்தன்சேர்தருமூதூர்புறவம்மே. (அ)

மீத்திகழண்டந்தந்தயனோடுமிகுமாலு
மூர்த்தியைநாடிக்காணவொணாதுமுயல்விட்டாங்
கேத்தவெளிப்பாடெய்தியவன்றனிடமென்பர்
பூத்திகழ்சோலைத்தென்றலுலாவும்புறவம்மே. (௯)

வையகநீர்தீவாயுவும்விண்ணுமுதலானான்
மெய்யலதேரராவுண்டிலையென்றேநின்றேதம்
கையினிலுண்போர்காணவொணாதானகரென்பர்
பொய்யகமில்லாப்பூசுராவாழும்புறவம்மே. (௧௦)

பொன்னியன்மாடப்புரிசைநிலாவும்புறவத்து
மன்னியவீசன்சேவடிநாளும்பணிகின்ற
தன்னியல்பில்லாச்சண்பையர்கோன்சீர்ச்சம்பந்த
னின்னிசையீரைந்தேத்தவல்லோர்கட்கிடர்போமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சிராப்பள்ளி - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

நன்றுடையானைத்தீயதிலானைநரைவெள்ளே
றொன்றுடையானையுமையொருபாகமுடையானைச்
சென்றடையாததிருவுடையானைச்சிராப்பள்ளிக்
குன்றுடையானைக்கூறவென்னுள்ளங்குளிருமே. (௧)

கைம்மகவேந்திக்கடுவனொடூடிக்கழைபாய்வான்
செம்முகமந்திகருவரையேறுஞ்சிராப்பள்ளி
வெம்முகவேழத்தீருரிபோர்த்தவிகிர்தாநீ
பைம்முகநாகமமதியுடன்வைத்தல்பழியன்றே. (௨)

மந்தம்முழவமமழலைததும்பவரைநீழற்
செந்தண்புனமுஞ்சுனையுஞ்சூழ்ந்தசிராப்பள்ளிச்
சந்தமலர்கள்சடைமேலுடையார்விடையூரு
மெந்தம்மடிகளடியார்க்கல்லலில்லையே. (௩)

துறைமல்குசாரற்சுனைமல்குநீலத்திடைவைகிச்
சிறைமல்குவண்டுந்தும்பியும்பாடுஞ்சிராப்பள்ளிக்
கறைமல்குகண்டன்கனலெரியாடுங்கடவுள்ளெம்
பிறைமல்குசென்னியுடையவனெங்கள்பெருமானே. (௪)

கொலைவரையாதகொள்கையர்தங்கண்மதின்மூன்றுஞ்
சிலைவரையாகச்செற்றனரேனுஞ்சிராப்பள்ளித்
தலைவரைநாளுந்தலைவரல்லாமையுரைப்பீர்கா
ணிலவரைநீலமுண்டதும்வெள்ளைநிறமாமே. (௫)

*வெய்யதண்சாரல்விரிநிறவேங்கைத்தண்போது*
*செய்யபொன்சேருஞ்சிராப்பள்ளிமேவியசெல்வனார்*
*தையலோர்பாகமகிழ்வர்நஞ்சுண்பர்தலையோட்டி*
*லையமுங்கொள்வராரிவர்செய்கையறிவாரே.* (௬)

*வேயுயர்சாரற்கருவிரலூகமவிளையாடுஞ்*
*சேயுயர்கோயிற்சிராபபள்ளிமேவியசெலவனார்*
*பேயுயர்கொள்ளிகைவிளக்காகப்பெருமானார்*
*தீயுகநதாடறிருக்குறிப்பாயிற்றாகாதே.* (௭)

*மலைமல்குதோளான்வலிகெடவூன்றிமலரோன்றன்*
*றலைகலனாகபபலிதிரிநதுண்பர்பழியோரார்*
*சொலவலவேதஞ்சொலவலகீதஞ்சொல்லுங்காற்*
*சிலவலபோலுஞ்சிராபபள்ளிச்சேடாசெயகையே.* (௮)

*அரபபள்ளியானுமலருறைவானுமறியாமைக்*
*கரபபுள்ளிநாடிக்கண்டிலரேனுங்கல்சூழ்நத*
*சிரபபள்ளிமேயவார்சடைச்செல்வர்மனைதோறு*
*மிரப்புள்ளீருமமையேதிலர்கண்டாலிகழாரே.* (௯)

*நாணாதுடைநீத்தோர்களுங்கஞ்சிநாட்காலே*
*யூணாபபகலுண்டோதுவோர்களுமுரைக்குஞ்சொற்*
*பேணாதுறுசீர்பெறுதுமென்பீரெம்பெருமானார்*
*சேணார்கோயில்சிராபபள்ளிசென்றுசேர்மினே.* (க0)

*தேனயமபாடுஞ்சிராப்பள்ளியானைத்திரைசூழ்நத*
*கானல்சங்கேறுங்கழுமலவூரிற்கவுணியன்*
*ஞானசம்பநதனலமிகுபாடலிவைவல்லார்*
*வானசமபநதத்தவரொடுமன்னிவாழ்வாரே.* (கக)

*திருச்சிற்றம்பலம்.*

---

**திருக்குற்றலம் - பண் - குறிஞ்சி.**

*திருச்சிற்றம்பலம்.*

*வம்பார்குன்றநீடுயர்சாரல்வளர்வேஙகைக்*
*கொம்பார்சோலைக்கோலவண்டியாழ்செய்குற்றால*
*மமபானெய்யோடாடலமர்நதானலர்கொன்றை*
*நம்பான்மேயநன்னகர்போலுநமரங்காள்.* (க)

*பொடிகள்பூசித்தொண்டர்பின்செல்லப்புகழ்விம்மக்*
*கொடிகளோடுநாள்விழமல்குகுற்றாலங்*
*கடிகொள்கொன்றைகூவிளமாலைகாதல்செய்*
*யடிகண்மேயநன்னகர்போலுமடியீர்காள்.* (௨)

*செல்வமல்குசெண்பகமவேங்கைசென்றேறிக்*
*கொல்லைமுல்லைமெல்லரும்பீனுங்குற்றாலம*
*வில்லினொல்கமும்மதிலெய்துவினைபோக*
*நல்குநமபானன்னகர்போலுநமரங்காள்.* (௩)

*பக்கம்வாழைப்பாய்கனியோடுபலவின்றேன்*

மக்கும்பாம்புமாமையும்பூண்டோரனலேந்தி
நக்கன்மேயநன்னகர்போலுநமரங்காள். (ச)

மலையார்சாரன்மகவுடன்வந்தமடமந்தி
குலையார்வாழைத்தீங்கனிமாந்துங்குற்றால
மிலையார்சூலமேந்தியகையானெயிலெய்த
சிலையானமேயநன்னகர்போலுஞ்சிறுதொண்டீர். (ரு)

மைம்மாநீலக்கண்ணியர்சாரன்மணிவாரிக்
கொய்ம்மமாவேனலுண்கிளியோப்புங்குற்றாலங்
கைம்மமாவேழத்தீருரிபோர்த்தகடவுளெம்
பெம்மானமேயநன்னகர்போலும்பெரியீர்காள். (சா)

நீலநெய்தல்தண்சுனைசூழ்ந்தநீள்சோலைக்
கோலமஞ்ஞைபேடையொடாடுங்குற்றாலங்
காலன்றன்னைக்காலாற்காய்ந்தகடவுளெஞ்
சூலபாணிநன்னகர்போலுந்தொழுவீர்காள். (எ)

போதும்பொன்னுமுந்தியருவிபுடைசூழக்
கூதன்மாரிநுண்டுளிதூங்குங்குற்றால
மூதூரிலங்கைமுட்டியகோனைமிறைசெய்த
நாதன்மேயநன்னகர்போலுநமரங்காள். (அ)

அரவின்வாயின்முள்ளெயிறேய்ப்பவரும்பீன்று
குரவம்பாவைமுருகமர்சோலைக்குற்றால
பிரமனோடுமாலறியாதபெருமையெம்
பரமன்மேயநன்னகர்போலும்பணிவீர்காள். (கூ)

பெருந்தண்சாரல்வாழ்சிறைவண்டுபெடைபுல்கிக்
குருந்தமமேறிச்செவ்வழிபாடுங்குற்றால
மிருந்துண்டேருநின்றுண்சமணுமெடுத்தார்ப்ப
வருந்தணமேயநன்னகர்போலுமடியீர்காள். (கo)

மாடவீதிவருபுனற்காழியார்மன்னன்
கோடலீன்றுகொழுமுனைகூம்புங்குற்றால
நாடவல்லநற்றமிழ்ஞானசம்பந்தன்
பாடல்பத்தும்பாடநம்பாவம்பறையுமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருப்பரங்குன்றம் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

நீடலர்சோதிவெண்பிறையோடுநிறைகொன்றைச்
சூடலனந்திச்சுடரெரியேந்திச்சுடுகானி
லாடலனஞ்சோலணியிழையாளையொருபாகம்
பாடலன்மேயநன்னகர்போலும்பரங்குன்றே. (க)

அங்கமோராறுமருமறைநான்குமருள்செய்து
பொங்குவெண்ணூலும்பொடியணிமார்பிற்பொலிவித்துத்
திங்களும்பாம்புந்திகழ்சடைவைத்தோர்தேன்மொழி
பங்கினன்மேயநன்னகர்போலும்பரங்குன்றே. (உ)

நீரிடங்கொண்டநிமிர்சடைதன்மேனிரைகொன்றைச்
சீரிடங்கொண்டவெமமிறைபோலுஞ்சேய்தாய
வோருடம்புள்ளேயுமையொருபாகமுடனாகிப
பாரிடம்பாடவினிதுறைகோயில்பரங்குன்றே. (௩)

வளர்பூங்கோங்கமாதவியோடுமல்லிகைக்
குளிர்பூஞ்சாரல்வண்டறைசோலைபரங்குன்றந்
தளிர்போன்மேனித்தையனல்லாளோடொருபாகந்
நளிர்பூங்கொன்றைசூடினன்மேயநகர்தானே. (௪)

பொன்னியல்கொன்றைப்பொறிகிளர்நாகம்புரிசடைத்
துன்னியசோதியாகியவீசன்றொன்மறை
பன்னியபாடலாடலன்மேயபரங்குன்றை
யுன்னியசிந்தையுடையவர்க்கில்லையுறுநோயே. (௫)

கடைநெடுமாடக்கடியரண்மூன்றுங்கனன்மூழ்கத்
தொடைநவில்கின்றவில்லினனந்திச்சுடுகானிற்
புடைநவில்பூதம்பாடநின்றாடும்பொருசூலப
படைநவில்வான்றனன்னகர்போலும்பரங்குன்றே. (௬)

அயிலுடைவேலோரனல்புல்குகையினம்பொன்றா
லெயில்படவெய்தவெமமிறைமேயவிடம்போலு
மயில்பெடைபுல்கிமாநடமாடும்வளர்சோலைப
பயில்படைவண்டுபாடலறாதபரங்குன்றே. (௭)

மைத்தகுமேனிவாளரக்கன்றன்மகுடங்கள்
பத்தினதிண்டோளிருபதுஞ்செற்றான்பரங்குன்றைச்
சித்தமதொன்றிச்செய்கழலுன்னிச்சிவனென்று
நித்தலுமேத்தத்தொல்வினைநம்மேனில்லாவே. (௮)

முந்தியவையந்தாவியமாலுமொய்யொளி
யுந்தியில்வந்திங்கருமறையீந்தவுரவோனுஞ்
சிந்தையினாலுந்தெரிவரிதாகித்திகழ்சோதி
பந்தியலங்கைமங்கையோர்பங்கன்பரங்குன்றே. (௯)

குண்டாய்முற்றுந்திரிவார்கூறைமெய்போர்த்து
மிண்டாய்மிண்டர்பேசியபேச்சுமெய்யல்ல
பண்டானீழன்மேவியவீசன்பரங்குன்றைத்
தொண்டாயேத்தத்தொல்வினைநம்மேனில்லாவே. (௧௦)

தடமலிபொய்கைச்சண்பைமன்ஞானசம்பந்தன்
படமலிநாகமரைக்கசைத்தான்றன்பரங்குன்றைத்
தொடைமலிபாடல்பத்தும்வல்லார்தந்துயர்போகி
விடமலிகண்டனருள்பெறுதன்மைமிக்கோரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கண்ணார்கோயில் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

தண்ணார்திங்கட்பொங்கரவந்தாழ்புனல்சூடிப்
பெண்ணாணாயபேரருளாளன்பிரியாத
கண்ணார்கோயில்கைதொழுவோர்கட்கிடர்பாவந்
நண்ணாவாகுநல்வினை [illegible]

கந்தமர்சந்துங்காரகிலுந்தண்கதிர்முத்தும்
வந்தமாதெண்ணீர்மண்ணிவளஞ்சேர்வயன்மண்டிக்
கொந்தலர்சோலைக்கோகிலமாடக்குளிர்வண்டு
செந்திசைபாடுஞ்சீர்திகழ்கண்ணார்கோயிலே. (௨)

பல்லியல்பாணிப்பாரிடமேத்தப்படுகானி
னெல்லிநடஞ்செய்யீசனெம்மான்றனிடமென்பர்
கொல்லையின்முல்லைமல்லிகைமவ்வற்கொடிபின்னிக்
கல்லியலின்சிமஞ்சமர்கண்ணார்கோயிலே. (௩)

தருவளர்கானந்தங்கியதுங்கப்பெருவேழ
மருவளர்கோதையஞ்சவுரித்துமறைநால்வர்க்
குருவளராலநீழலமர்ந்தீங்குரைசெய்தார்
கருவளர்கண்ணார்கோயிலடைந்தோர்கற்றோரே. (௪)

மறுமாணுருவாய்மற்றிணையின்றிவானோரைச்
செறுமாவலிபாற்சென்றுலகெல்லாமளவிட்ட
குறுமாணுருவன்றற்குறியாகக்கொண்டாடுங்
கறுமாகண்டன்மேயதுகண்ணார்கோயிலே. (௫)

விண்ணவருக்காவேலையுணஞ்சம்விருப்பாக
வுண்ணவனைத்தேவர்க்கமுதீந்தெவ்வுலகிற்குங்
கண்ணவனைக்கண்ணார்திகழ்கோயிற்கனிதன்னை
நண்ணவல்லோர்கட்கில்லைநமன்பாலடலையே. (௬)

முன்னொருகாலத்திந்திரனுற்றமுனிசாபம்
பின்னொருநாளவ்விண்ணவரேத்தப்பெயர்வெய்தித்
தன்னருளாற்கண்ணாயிரமீந்தோன்சார்வென்பர்
கன்னியர்நாளுந்துன்னமர்கண்ணார்கோயிலே. (௭)

பெருக்கெண்ணாதபேதையரக்கன்வரைக்கீழா
னெருக்குண்ணாத்தன்னீள்கழனெஞ்சினினைந்தேத்த
முருக்குண்ணாதோர்மொய்கதிர்வாள்தேர்முன்னீந்த
திருக்கண்ணாரென்பார்சிவலோகஞ்சேர்வாரே. (௮)

செங்கமலப்போதிற்றிகழ்செல்வன்றிருமாலு
மங்கமலக்கண்ணோக்கரும்வண்ணத்தழலானன்
றங்கமலக்கண்ணார்திகழ்கோயில்தமதுள்ளத்
தங்கமலத்தோடேத்திடவண்டத்தமர்வாரே. (௯)

தாறிடுபெண்ணைத்தட்டுடையாருந்தாமுண்ணுஞ்
சோறுடையார்சொற்றேறன்மின்வெண்ணூல்சேர்மார்ப
னேறுடையான்பானென்பணிவானீள்சடைமேலோ
ராறுடையண்ணல்சேர்வதுகண்ணார்கோயிலே. (௧0)

காமருகண்ணார்கோயிலுளானைக்கடல்சூழ்ந்த
பூமருசோலைப்பொன்னியல்மாடப்புகலிக்கோ
னாமருதொன்மைத்தன்மையுள்ஞானசம்பந்தன்
பாமருபாடல்பத்தும்வல்லார்மேற்பழிபோமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## சீகாழி - பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்.

உரவார்கலையின்கவிதைப்புலவர்க்கொருநாளுங்
கரவாவண்கைக்கற்றவர்சேருங்கலிக்காழி
யரவாரரையரவுணர்புரமூன்றெரிசெய்த
சரவாவென்பார்தத்துவஞானத்தலையாரே. (௧)

மொய்சேர்வண்டுண்மும்மதநால்வாய்முரண்வேழக்
கைபோல்வாழைக்காய்குலையீனுங்கலிக்காழி
மைசேர்கண்டத்தெண்டோண்முக்கண்மறையோனே
ஐயாவென்பார்க்கல்லல்களானவடையாவே. (௨)

இளகக்கமலத்தின்களியங்குங்கழிசூழக்
களகப்புரிசைக்கவினார்சாருங்கலிக்காழி
யளகத்திருநன்னுதலிபங்காவரனேயென்
றுளகப்பாடுமடியார்க்குறுநோயடையாவே (௩)

எண்ணார்முத்தமீன்றுமரகதம்போற்காய்த்துக்
கண்ணார்கமுகுபவளம்பழுக்குங்கலிக்காழிப்
பெண்ணோர்பாகாபித்தாபிரானேயென்போர்க்கு
நண்ணாவினைகணாடொறுமின்பநணுகும்மே. (௪)

மழையார்சாரற்செம்புனல்வந்தங்கடிவருடக்
கழையார்கரும்புகண்வளர்சோலைக்கலிக்காழி
யுழையார்கரவாவுமையாள்கணவாவொளிர்சங்கக்
குழையாவென்றுகூறவல்லார்கள்குணவோரே. (௫)

குறியார்திரைகள்வரைகணின்றுங்கோட்டாறு
கறியார்கழிசம்பிரசங்கொடுக்குங்கலிக்காழி
வெறியார்கொன்றைச்சடையாவிடையாவென்பாரை
யறியாவினைகளருநோய்பாவமடையாவே (௬-௭)

உலங்கொள்சங்கத்தார்கலியோதத்துதையுண்டு
கலங்கள்வந்துகார்வயலேறுங்கலிக்காழி
யிலங்கைமன்னன்றனையிடர்கண்டருள்செய்த
சலங்கொள்சென்னிமன்னாவென்னத்தவமாமே. (௮)

ஆவிக்கமலத்தன்னமியங்குங்கழிசூழ்
காவிக்கண்ணார்மங்கலமோவாக்கலிக்காழிப்
பூவிற்றோன்றும்புத்தேளொடுமாலவன்றானு
மேவிப்பரவுமரசேயென்னவினைபோமே. (௯)

மலையார்மாடநீடுயரிஞ்சிமஞ்சாருங்
கலையார்மதியஞ்சேர்தருமந்தண்கலிக்காழித்
தலைவாசமணர்சாக்கியர்க்கென்றுமறிவொண்ணா
நிலையாவென்னத்தொல்வினையாயநில்லாவே. (௧௦)

வடிகொள்வாவிச்செங்கழுநீரிற்கொங்காடிக்
கடிகொடென்றன்முன்றினில்வைகுங்கலிக்காழி
யடிகடம்மையந்தமில்ஞானசம்பந்தன்
படிகொள்பாடல்வல்லவர்தம்மேற்பழிபோமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

104

## திருக்கழுக்குன்றம் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

தோடுடையானொருகாதிற்றூயகுழைதாழ
வேடுடையான்றன்றலைகலனாகவிரந்துண்ணு
நாடுடையானள்ளிருளேமநடமாடுங
காடுடையான்காதல்செய்கோயில்கழுக்குன்றே. (க)

கேணவல்லான்கேழல்வெண்கொம்புகுறளாமை
பூணவல்லான்புரிசடைமேலோர்புனல்கொன்றை
பேணவல்லான்பெண்மகடன்னையொருபாகங
காணவல்லான்காதல்செய்கோயில்கழுக்குன்றே. (உ)

தேனகத்தார்வண்டதுவுண்டதிகழ்கொன்றை
தானகத்தார்தண்மதிசூடித்தலைமேலோர்
வானகத்தார்வையகத்தார்கடொழுதேத்துங
கானகத்தான்காதல்செய்கோயில்கழுக்குன்றே. (ங)

துணையல்செய்தான்றூயவண்டியாழ்செய்சுடர்க்கொன்றை
பிணையல்செய்தான்பெண்ணினல்லாளையொருபாக
மிணையல்செய்யாவிலங்கெயின்மூன்றுமெரியுணக்
கணையல்செய்தான்காதல்செய்கோயில்கழுக்குன்றே. (ச)

பையுடையபாம்பொடுநீறுபயில்கின்ற
மெய்யுடையான்வெண்பிறைசூடிவிரிகொன்றை
மையுடையமாமிடற்றண்ணன்மறிசேர்ந்த
கையுடையான்காதல்செய்கோயில்கழுக்குன்றே. (ரு)

வெள்ளமெல்லாம்விரிசடைமேலோர்விரிகொன்றை
கொள்ளவல்லான்குரைகழலேத்துஞ்சிறுத்தொண்ட
ருள்ளமெல்லாமுள்கிநின்றாங்கேயுடனாடுங
கள்ளம்வல்லான்காதல்செய்கோயில்கழுக்குன்றே. (சு-எ)

ஆதல்செய்தானரக்கர்தங்கோனையருவரையி
னோதல்செய்தானொடிவரையிற்கண்விரலூன்றிப
பேர்தல்செய்தான்பெண்மகடன்னோடொருபாகங்
காதல்செய்தான்காதல்செய்கோயில்கழுக்குன்றே. (அ)

இடந்தபெம்மானேனமதாயுமனமாயுந
தொடர்ந்தபெம்மான்றூமதிசூடிவரையார்தம
மடந்தைபெம்மான்வார்கழலோச்சிக்காலனைக்
கடந்தபெம்மான்காதல்செய்கோயில்கழுக்குன்றே. (கூ)

தேயநின்றான்றிரிபுரங்கங்கைசடைமேலே
பாயநின்றான்பலர்புகழ்ந்தேத்தவுலகெல்லாஞ
சாயநின்றான்வன்சமண்குண்டர்சாக்கியர்
காயநின்றான்காதல்செய்கோயில்கழுக்குன்றே. (க0)

கண்ணுதலான்காதல்செய்கோயில்கழுக்குன்றை
நண்ணியசீர்ஞானசம்பந்தன்றமிழ்மாலை
பண்ணியல்பாற்பாடியபத்துமிவைவல்லார்
புண்ணியராய்விண்ணவரோடும்புகுவாரே. (கக)

---

ஸ்ரீபுகலி - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

ஆடலரவசைத்தானருமாமறைதான்விரித்தான்கொன்றை
சூடியசெஞ்சடையான்சுடுகாடமர்ந்தபிரா
னேடவிழ்மாமலையாளொருபாகமமர்ந்தடியாரேத்த
வாடியவெம்மிறையூர்புகலிப்பதியாமே. (க)

ஏலமலிகுழலாரிசைபாடியெழுந்தருளாற்சென்று
சோலைமலைசுனையிற்குடைந்தாடித்துதிசெய்ய
வாலைமலிபுகைபோயண்டர்வானத்தைமூடிநின்றுநல்ல
மாலையதுசெய்யும்புகலிப்பதியாமே. (உ)

ஆறணிசெஞ்சடையானழகார்புரமூன்றுமன்றுவேவ
நீறணியாகவைத்தநிமிர்புன்சடையெம்மிறைவன்
பாறணிவெண்டலையிற்பகலேபலியென்றுவந்துநின்ற
வேறணிகோலத்தினான்விரும்பும்புகலியதே. (ங)

வெள்ளமதுசடைமேற்கரந்தான்விரவார்புரங்கள்மூன்றுங்
கொள்ளவெரிமடுத்தான்குறைவின்றியுறைகோயி
லள்ளல்விளைகழனியழகார்விரைத்தாமரைமேலன்னம
புள்ளினம்வைகியெழும்புகலிப்பதிதானே. (ச)

சூடுமதிச்சடைமேற்சுருமார்மலர்க்கொன்றைதுன்றநட்ட
மாடுமமரர்பிரானழகாருமையோடுமுடன
வேடுபடநடந்தவிகிர்தன்குணம்பரவித்தொண்டர்
பாடவினிதுறையும்புகலிப்பதியாமே. (ரு)

மைந்தணிசோலையின்வாய்மதுப்பாயவரிவண்டினங்கள்வந்து
நந்திசைபாடநடம்பயில்கின்றநம்பனிட
மந்திசெய்மந்திரத்தாலடியார்கள்பரவியெழவிரும்பு
புந்திசெய்நான்மறையோர்புகலிப்பதிதானே. (சா)

மங்கையோர்கூறுகந்தமழுவாளன்வார்சடைமேற்றிங்கள்
கங்கைதனைக்கரந்தகறைக்கண்டனகருதுமிடஞ்
செங்கயல்வார்கழனிதிகழும்புகலிதனைச்சென்றுத
மங்கையினாற்றொழுவாரவலம்மறியாரே. (எ)

வல்லியநுண்ணிடையாளுமையாள்விருப்பனவனண்ணு
நல்லிடமென்றறியானலியும்விறலரக்கன்
பல்லொடுதோணெரியவிரலூன்றிப்பாடலுமேகைவா
ளொல்லையருள்புரிந்தானுறையும்புகலியதே. (அ)

தாதலர்தாமரைமேலயனுந்திருமாலுந்தேடி
யோதியுங்காண்பரியவுமைகோனுறையுமிடம்
மாதவிவான்வகுளமலர்ந்தெங்கும்விரைதோயவாய்ந்த
போதலர்சோலைகள்சூழ்புகலிப்பதிதானே. (கூ)

வெந்துவர்மேனியினார்விரிகோவணநீத்தார்சொல்லும்
மந்திரஞானமெல்லாமவையோர்பொருளென்னேல்
வந்தெதிரும்புரமூன்றெரித்தானுறைகோயில்வாய்ந்த
புந்தியினார்பயிலும்புகலிப்பதிதானே. (க0)

வேதமோர்கீதமுணர்வாணர்தொழுதேத்தமிகுவாசப்
போதனைப்போன்மறையோர்பயிலும்புகலிதன்னுள்
நாதனைஞானமிகுசம்பந்தன்றமிழ்மாலைநாவி
லோதவல்லாருலகிலுறுநோய்களைவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருஆரூர் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

பாடலனான்மறையன்படிபட்டகோலத்தன்றிங்கள்
சூடலன்மூவிலையசூலம்வலனேந்திக்
கூடலர்மூவெயிலுமெரியுண்ணக்கூரெரிகொண்டெல்லி
யாடலனாதிரையனாரூரமர்ந்தானே. (௧)

சோலையில்வண்டினங்கள்சுரும்போடிசைமுரலச்சூழ்ந்த
வாலையின்வெம்புகைபோய்முகிறோயுமாரூரிற்
பாலொடுநெய்தயிர்நம்பயின்றாடும்பரமேட்டிபாதங்
காலையுமாலையும்போய்ப்பணிதல்கருமமே. (௨)

உள்ளமோரிச்சையினாலுகந்தேத்தித்தொழுமின்றொண்டீர்மெய்யே
கள்ளமொழிந்திடுமின்கரவாதிருபொழுதும்
வெள்ளம்போவார்சடைமேற்கரந்திட்டவெள்ளேற்றான்மேய
வள்ளல்கனகழனியாரூரடைவோமே. (௩)

வெந்துறுவெண்மழுவாட்படையான்மணிமிடற்றானரையி
னைந்தலையாடரவமசைத்தானணியாரூர்ப்
பைந்தளிர்க்கொன்றையந்தார்ப்பரமனடிபரவப்பாவ
நைந்தறும்வந்தணையுநாடொறுநல்லனவே. (௪)

வீடுபிறப்பெளிதாமதனைவினவுதிரேல்வெய்ய
காடிடமாகநின்றுகனலேந்திக்கைவீசி
யாடுமவிர்சடையானவன்மேயவாரூரைச்சென்று
பாடுதல்கைதொழுதல்பணிதல்கருமமே. (௫)

கங்கையோர்வார்சடைமேற்கரந்தான்கிளிமழலைக்கேடில்
மங்கையோர்கூறுடையான்மறையான்மழுவேந்து
மங்கையினடியேபரவியவன்மேயவாரூர்
தங்கையினாற்றொழுவார்தடுமாற்றறுப்பாரே. (௬)

நீறணிமேனியனாய்நிரம்பாமதிசூடிநீண்ட
வாறணிவார்சடையானாரூரினிதமர்ந்தான்
சேறணிமாமலர்மேற்பிரமன்சிரமரிந்தசெங்க
ணேறணிவெல்கொடியானவனெம்பெருமானே. (௭-௮)

வல்லியந்தோலுடையான்வளர்திங்கட்கண்ணியினான்வாய்த்த
நல்லியனான்முகத்தோன்றலைபின்னறவேற்றா
னல்லியங்கோதைதன்னையாகத்தமர்ந்தருளியாரூர்ப்
புல்லியபுண்ணியனைத்தொழுவாரும்புண்ணியரே. (௯)

செந்துவராடையினாருடைவிட்டுநின்றுழல்வார்சொன்ன
விந்திரஞாலமொழிந்தின்புறவேண்டுதிரே

லந்தரமூவெயிலுமரணமமெரியூட்டியாநேர்ந்த
தந்திரமாவுடையானவனெந்தலைமையனே. (க0)

நல்லபுனற்புகலித்தமிழ்ஞானசம்பந்தனல்ல
வல்லிமலர்க்கழனியாரூரமர்ந்தானை
வல்லதோரிசையினால்வழிபாடிவைபத்துமவாய்க்கச்
சொல்லுதல்கேட்டல்வல்லார்துன்பந்துடைப்பாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருவூறல் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

மாறிலவுணரரணமவைமாயவோர்வெங்கணையாலன்று
நீறெழவெய்தவெங்கள்விமலனிடம்வினவிற்
றேறலிரும்பொழிலுந்திகழ்செங்கயல்பாய்வயலுஞ்சூழ்ந்த
ஊறலமர்ந்தபிரானொலியார்கழலுள்குதுமே. (க)

மத்தமதக்கரியைமலையானமகளஞ்சவன்றுகையான்
மெத்தவுரித்தவெங்கள்விமலன்விரும்புமிடந்
தொத்தலரும்பொழில்சூழ்வயல்சேர்ந்தொளிநீலநாளுநயன
மொத்தலருங்கழனித்திருவூறலையுள்குதுமே (உ)

ஏனமருப்பினொடுமெழிலாமையும்பூண்டழகார்நன்றுங்
கானமர்மான்மறிக்கைக்கடவுள்கருதுமிடம்
வானமதிதடவும்வளர்சோலைகள்சூழ்ந்தழகார்நம்மை
யூனமறுத்தபிரான்றிருவூறலையுள்குதுமே. (ங)

நெய்யணிமூவிலைவேனிறைவெண்மழுவுமனலுமன்று
கையணிகொள்கையினன்கடவுளிடம்வினவின்
மையணிகண்மடவாரவர்தாம்பலர்வந்திறைஞ்சமன்னிநம்மை
யுய்யும்வகைபுரிந்தான்றிருவூறலையுள்குதுமே. (ச)

எண்டிசையோர்மகிழவெழின்மாலையும்போனகமும்பண்டு
தண்டிதொழவளித்தானவனாமிடம்வினவிற்
கொண்டல்கடங்குபொழிற்குளிர்பொய்கைகள்சூழ்ந்துநஞ்சை
யுண்டபிரானமருந்திருவூறலையுள்குதுமே. (ரு-சு-எ)

கறுத்தமனத்தினொடுங்கடுங்காலன்வந்தெய்துதலுங்கலங்கி
மறுக்குறுமாணிக்கருள்மகிழ்ந்தானிடம்வினவிற்
செறுத்தெழுவாளரக்கன்சிரந்தோளுமெய்யுநெரியவன்று
ஒறுத்தருள்செய்தபிரான்றிருவூறலையுள்குதுமே. (அ)

நீரின்மிசைத்துயின்றோனிறைநான்முகனுமறியாதன்று
தேரும்வகைநிமிர்ந்தானவன்சேருமிடம்வினவிற்
பாரின்மிசையடியார்பலர்வந்திறைஞ்சமகிழ்ந்தாக
மூருமரவசைத்தான்றிருவூறலையுள்குதுமே. (கூ)

பொன்னியல்சீவரத்தார்புளித்தட்டையர்மோட்டமணர்குண்ட
ரென்னுமிவர்க்கருளாவீசனிடம்வினவிற்
றென்னெனவண்டினங்கள்செறியார்பொழில்சூழ்ந்தழகார்தன்னை
யுன்னவினைகெடுப்பான்றிருவூறலையுள்குதுமே. (க0)

கோடலிரும்புறவிற்கொடிமாடக்கொச்சையர்மனமெச்ச
வோடுபுனல்சடைமேற்கரந்தான்றிருவூறல்
நாடலரும்புகழான்மிகுஞானசம்பந்தன்சொன்னநல்ல
பாடல்கள்பத்தும்வல்லார்பரலோகத்திருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கொடிமாடச் செங்குன்றூர் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

வெந்தவெண்ணீறணிந்துவிரிநூறிகழ்மார்பினல்ல
பந்தணவும்விரலாளொருபாகமமர்ந்தருளிக்
கொந்தணவும்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர்நின்ற
வந்தணனைத்தொழுவாரவலமறுப்பாரே. (௧)

அலைமலிதண்புனலோடரவஞ்சடைக்கணிந்தாக
மலைமகள்கூறுடையான்மலையாரிளவாழைக்
குலைமலிதண்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர்நின்ற
தலைமகனைத்தொழுவார்தடுமாற்றறுப்பாரே. (௨)

பாலனநீறுபுனைதிரள்மார்பிற்பல்வளைக்கைநல்ல
வேலமலர்க்குழலாளொருபாகமமர்ந்தருளிக்
கோலமலர்ப்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர்மல்கு
நீலநன்மாமிடற்றான்கழலேத்தல்நீதியே. (௩)

வாருறுகொங்கைநல்லமடவாள்திகழ்மார்பினண்ணு
காருறுகொன்றையொடுங்கதநாகம்பூண்டருளிச்
சீருறுமந்தணர்வாழ்கொடிமாடச்செங்குன்றூர்நின்ற
நீருறுசெஞ்சடையான்கழலேத்தல்நீதியே. (௪)

பொன்றிகழாமையொடுபுரிநூறிகழ்மார்பினல்ல
பன்றியின்கொம்பணிந்துபணைத்தோளியோர்பாகமாகக்
குன்றனமாளிகைசூழ்கொடிமாடச்செங்குன்றூர்வானின்
மின்றிகழ்செஞ்சடையான்கழலேத்தல்மெய்ப்பொருளே. (௫)

ஓங்கியமூவிலைநற்சூலமொருகையன்சென்னி
தாங்கியகங்கையொடுமதியஞ்சடைக்கணிந்து
கோங்கணவும்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர்வாய்ந்த
பாங்கனதாடொழுவார்வினையாயபற்றறுமே. (௬)

நீடலர்கொன்றையொடுநிமிர்புன்சடைதாழவெள்ளை
வாடலுடைதலையிற்பலிகொள்ளுமவாழ்க்கையனைக்
கோடல்வளம்புறவிற்கொடிமாடச்செங்குன்றூர்நின்ற
சேடனதாள்தொழுவார்வினையாயதேயுமே. (௭)

மத்தநன்மாமலரும்மதியும்வளர்கொன்றையுடன்றுன்று
தொத்தலர்செஞ்சடைமேற்றுதையவுடன்சூடிக்
கொத்தலர்தண்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர்மேய
தத்துவனைத்தொழுவார்தடுமாற்றறுப்பாரே. (௮)

செம்பொனின்மேனியனும்பிரமன்றிருமாலுந்தேடநின்ற
வம்பவளத்திரள்போலொளியாயவாதிபிரான்

கொம்பணவும்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர்மேய
நம்பனதாள்தொழுவார்வினையாயநாசமே. (௯)

போதியர்பிண்டியரென்றிவர்கள்புறங்கூறும்பொய்ந்நூ
லோதியகட்டுரைகேட்டுழலவீர்வரிக்குயில்கள்
கோதியதண்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர்நின்ற
வேதியனைத்தொழநும்வினையானவீடுமே. (௧௦)

அலைமலிதண்புனல்சூழ்ந்தழகார்புகலிந்நகர்பேணுந்
தலைமகனாகிநின்றதமிழ்ஞானசம்பந்தன்
கொலைமலிமூவிலையானகொடிமாடச்செங்குன்றூரேத்து
நலமலிபாடல்வல்லார்வினையானநாசமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பாதாளேச்சுரம் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

மின்னியல்செஞ்சடைமேல்விளங்குமதிமத்தமொடுநல்ல
பொன்னியல்கொன்றையினொடுபுனல்சூடிப்பொற்பமரு
மன்னமனநடையாளொருபாகந்தமர்ந்தருளிநாளும்
பன்னியபாடலினானுறைகோயில்பாதாளே. (௧)

நீடலர்கொன்றையொடுநிரம்பாமதிசூடிவெள்ளைத்
தோடமர்காதினல்லகுழையான்சுடுநீற்ற
னாடரவம்பெருகவனலேந்திக்கைவீசிவேதம்
பாடலினானினியானுறைகோயில்பாதாளே. (௨)

நாகமும்வான்மதியுநலமல்குசெஞ்சடையான்சாமம்
போகநல்வில்வரையாற்புரமூன்றெரித்துகந்தான்
றோகைநன்மாமயில்போல்வளர்சாயலொண்மொழியைக்கூடப்
பாகமும்வைத்துகந்தானுறைகோயில்பாதாளே. (௩)

அங்கமுநான்மறையுமருள்செய்தழகார்ந்தவஞ்சொன்
மங்கையோர்கூறுடையான்மறையானுறைகோயில்
செங்கயனின்றுகளுஞ்செறுவிற்றிகழ்கின்றசோதிப்
பங்கயநின்றலரும்வயல்சூழ்ந்தபாதாளே. (௪)

பேய்பலவுந்நிலவப்பெருங்காடரங்காகவுன்னிநின்று
தீயொடுமான்மறியுமழுவுந்திகழ்வித்துத்
தேய்பிறையும்மரவும்பொலிகொன்றைச்சடைதன்மேற்சேரப்
பாய்புனலும்முடையானுறைகோயில்பாதாளே. (௫)

கண்ணமர்நெற்றியினான்கமழ்கொன்றைச்சடைதன்மேனின்றும்
விண்ணியன்மாமதியுமுடன்வைத்தவன்விரும்பும்
பெண்ணமர்மேனியினான்பெருங்காடரங்காகவாடும்
பண்ணியல்பாடலினானுறைகோயில்பாதாளே. (௬)

விண்டலர்மத்தமொடுமிளிரும்மிளநாகம்வன்னிதிகழ்
வண்டலர்கொன்றைநகுமதிபுல்குவார்சடையான்
விண்டவர்தம்புரமூன்றெரிசெய்துரைவேதநான்குமவை
பண்டிசைபாடலினானுறைகோயில்பாதாளே. (௭)

மல்கிய நுண்ணிடையாளுமைநங்கைமறுகவன்றுகையாற்
றொல்லைமலையெடுத்தவரக்கன்றலைதோணெரித்தான்
கொல்லைவிடையுகந்தான்குளிர்திங்கள்சடைக்கணிந்தோனவி
பல்லிசைபாடலினானுறைகோயில்பாதாளே. (அ)

தாமரைமேலயனுமரியுந்தமதாள்வினையாற்றேடிக்
காமனைவீடுவித்தான்கழல்காணபிலராயகன்றார்
பூமருவுங்குழலாளுமைநங்கைபொருந்தியிட்டநல்ல
பாமருவுங்குணத்தானுறைகோயில்பாதாளே. (௯)

காலையிலுண்பவருஞ்சமண்கையருங்கட்டுரைவிட்டன்
றாலவிடநுகர்ந்தானவன்றன்னடியேபரவி
மாலையில்வண்டினங்கண்மதுவுண்டிசைமுரலவாய்த்த
பாலையாழ்ப்பாட்டுகந்தானுறைகோயில்பாதாளே. (௧௦)

பண்மலர்வைகுபொழில்புடைசூழ்ந்தபாதாளைச்சேரப்
பொன்னியன்மாடமல்குபுகலிநகர்மன்னன்
றன்னொளிமிக்குயர்ந்ததமிழ்ஞானசம்பந்தன்சொன்ன
இன்னிசைபத்தும்வல்லாரெழில்வானத்திருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

திருச்சிரபுரம் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

வாருறுவனமுலைமங்கைபங்கன், நீருறுசடைமுடிநிமலனிடங்
காருறுகடிபொழில்சூழ்ந்தழகார், சீருறுவளவயற்சிரபுரமே. (௧)

அங்கமொடருமறையருள்புரிந்தான், றிங்களொடரவணிதிகழ்முடியன்
மங்கையொடினிதுறைவளநகரஞ், செங்கயன்மிளிர்வயற்சிரபுரமே. (௨)

பரிந்தவன்பன்முடியமரர்க்காகித், திரிந்தவர்புரமவைதீயினவேவ
வரிந்தவெஞ்சிலைபிடித்தடுசரத்தைத், தெரிந்தவன்வளநகர்சிரபுரமே. (௩)

நீறணிமேனியனீள்மதியோ, டாறணிசடையினனணியிழையோர்
கூறணிந்தினிதுறைகுளிர்நகரஞ், சேறணிவளவயற்சிரபுரமே. (௪)

அருந்திறலவுணர்களரணழியச், சரந்துரந்தெரிசெய்தசங்கரனூர்
குருந்தொடுகொடிவிடுமாதவிகள், பொருந்தியபுறவணிசிரபுரமே. (௫)

கலையவன்மறையவன்காற்றொடுதீ, மலையவன்விண்ணொடுமண்ணுமவன்
கொலையவன்கொடிமதில்கூட்டழித்த, சிலையவன்வளநகர்சிரபுரமே. (௬)

வானவர்மதியொடுமத்தஞ்சூடித், தானவர்புரமெய்தசைவனிடங்
கானமர்மடமயில்பெடைபயிலுந், தேனமர்பொழிலணிசிரபுரமே. (௭)

மறுத்தவர்திரிபுரமாய்ந்தழியக், கறுத்தவன்காரரக்கன்முடிதோ
ளிறுத்தவனிருஞ்சினக்காலனைமுன், செறுத்தவன்வளநகர்சிரபுரமே. (அ)

வண்ணநன்மலருறைமறையவனுங், கண்ணனுங்கழறொழக்கனலுருவாய்
விண்ணுறவோங்கியவிமலனிடந், திண்ணநன்மதிளணிசிரபுரமே (௯)

வெற்றரையுழல்பவர்விரிதுகிலார், கற்றிலரறவுரைபுறனுரைக்கப்
பற்றலர்திரிபுரமூன்றுமவேவச், செற்றவன்வளநகர்சிரபுரமே. (௧௦)

அருமறைஞானசம்பந்தனந்தண், சிரபுரநகருறைசிவனடியைப்
பரவியசெந்தமிழ்பத்தும்வல்லார், திருவொடுபுகழ்மல்குதேசினரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

110

திருவிடைமருதூர் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

மருந்தவன்வானவர்தானவர்க்கும்
பெருந்தகைபிறவிநெடிறவுமானு
னருந்தவமுனிவரோடாலீழற்கீ
ழிருந்தவன்வளநகரிடைமருதே. (௧)

தோற்றவன்கேடவனாணைமுலையாள்
கூற்றவன்கொல்புலித்தோலசைத்த
நீற்றவனிறைபுனலீள்சடைமே
லேற்றவன்வளநகரிடைமருதே. (௨)

படையுடைமழுவினன்பால்வெண்ணீற்ற
னடைநவிலேற்றினன்ஞாலமெல்லா
முடைதலையிடுபலிகொண்டுழல்வா
னிடைமருதினிதுறையெம்மிறையே. (௩)

பணைமுலையுமையொருபங்கனொன்னார்
துணைமதின்மூன்றையுஞ்சுடரின்மூழ்கக்
கணைதுரந்தடுதிறற்காலற்செற்ற
விணையிலிவளநகரிடைமருதே. (௪)

பொழிலவன்புயலவன்புயலியக்குந்
தொழிலவன்றுயரவன்றுயரகற்றுங்
கழலவன்கரியுரிபோர்த்துகந்த
வெழிலவன்வளநகரிடைமருதே. (௫)

நிறையவன்புனலொடுமதியும்வைத்த
பொறையவன்புகழவன்புகழநின்ற
மறையவன்மறிகடனஞ்சையுண்ட
விறையவன்வளநகரிடைமருதே. (௬)

நனிவளர்மதியொடுநாகம்வைத்த
பனிமலர்க்கொன்றையம்படர்சடையன்
முனிவரோடமரர்கண்முறைவணங்க
வினிதுறைவளநகரிடைமருதே. (௭)

தருக்கினவரக்கனதாளுந்தோளு
நெரித்தவனெடுங்கைமாமதகரியன்
றுரித்தவனொன்னலர்புரங்கண்மூன்று
மெரித்தவன்வளநகரிடைமருதே. (௮)

பெரியவன்பெண்ணினோடாணுமானான்
வரியரவணைமறிகடற்றுயின்ற
கரியவனலரவன்காண்பரிய
வெரியவன்வளநகரிடைமருதே. (௯)

சிந்தையில்சமணொடுதேரர்சொன்ன
புந்தியிலுரையவைபொருள்கொளாதே
யந்தணர் *ஓத்தினோடரவமோவா
வெந்தைதன்வளநகரிடைமருதே. (௧௦)

---

* ஓத்து - என்பது வேதம்.

இலைமலிபொழிலிடைமருதிறையை
நலமிகுஞானசம்பந்தன்சொன்ன
பலமிகுதமிழிவைபத்தும்வல்லா
ருலகுறுபுகழினொடோங்குவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கடைமுடி - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

அருத்தனையறவனையமுதனைநீர், விருத்தனைப்பாலனைவினவுதிரே
லொருத்தனையல்லதிங்குலகமேத்துங், கருத்தவன்வளநகர்கடைமுடியே. ()
திரைபொருதிருமுடிதிங்கள்விம்மு, மரைபொருபுலியதளடிகளிடந்
திரையொடுநுரைபொருதெண்சுனைநீர், கரைபொருவளநகர்கடைமுடியே. ()
ஆலிளமதியினொடரவுகங்கை, கோலவெண்ணீற்றனைத்தொழுதிறைஞ்சி
யேலநன்மலரொடுவிரைகமழுங், காலனவளநகர்கடைமுடியே. (௩)
கொய்யணிநறுமலர்க்கொன்றையந்தார், மையணிமிடறுடைமறையவனூர்
பையணியரவொடுமான்மழுவாட், கையணிபவனிடங்கடைமுடியே. (௪)
மறையவனுலகவன்மாயமவன், பிறையவன்புனலவனனலுமவ
னிறையவனெனவுலகேத்துங்கண்டங், கறையவன்வளநகர்கடைமுடியே. ()
படவரவேரல்குறபல்வளைக்கை, மடவரலாளையோர்பாகம்வைத்துக்
குடதிசைமதியதுசூடுசென்னிக், கடவுடன்வளநகர்கடைமுடியே. (௬)
பொடிபுல்குமார்பினிற்புரிபுல்குநூ, லடிபுல்குபைங்கழலடிகளிடங்
கொடிபுல்குமலரொடுகுளிர்சுனைநீர், கடிபுல்குவளநகர்கடைமுடியே. (௭)
நோதல்செய்தரக்கனைநோக்கழியச், சாதல்செய்தவனடிசரணெனலு
மாதரவருள்செய்தவடிகளவர், காதல்செய்வளநகர்கடைமுடியே. (௮)
அடிமுடிகாண்கிலரோரிருவர், புடைபுல்கியருளென்றுபோற்றிசைப்பச்
சடையிடைபுனல்வைத்தசதுரனிடங், கடைமுடியதனயல்காவிரியே. (௯)
மண்ணுதல்பறித்தலுமாயமிவை, யெண்ணியகாலவையின்பமல்ல
வொண்ணுதலுமையையோர்பாகம்வைத்த, கண்ணுதல்வளநகர்கடைமுடியே.
பொன்றிகழ்காவிரிப்பொருபுனல்சீர், சென்றடைகடைமுடிச்சிவனடியை
நன்றுணர்ஞானசம்பந்தன்சொன்ன, வின்றமிழிவைசொலவின்பமாமே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருச்சிவபுரம் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

இன்குரலிசைகெழுமியாழ்முரலத்
தன்கரமருவியசதுரனகர்
பொன்கரைபொருபழங்காவிரியின்
றென்கரைமருவியசிவபுரமே. (௧)

அன்றடற்காலனைப்பாலனுக்காய்ப்
பொன்றிடவுதைசெய்தபுநிதனகர்

வென்றிகொளெயிற்றுவெண்பன்றிமுன்னாட்
சென்றடிவீழ்தருசிவபுரமே. (௨)

மலைமகண்மறுகிடமதகரியைக்
கொலைமல்கவுரிசெய்தகுழகனக
ரலைமல்கும * அரிசிலினதனயலே
சிலைமல்குமதிலணிசிவபுரமே. (௩)

மண்புனலனலொடுமாருதமும்
விண்புனைமருவியவிகிர்தனகர்
பண்புனைகுரல்வழிவண்டுகிண்டிச்
செண்பகமலர்பொழிற்சிவபுரமே. (௪)

வீறுநன்குடையவண்மேனிபாகங்
கூறுநன்குடையவன்குளிர்நகர்தா
ஞாறுநன்குரவிரிவண்டுகிண்டித்
தேறலுண்டெழுதருசிவபுரமே. (௫)

மாறெதிர்வருதிரிபுரமெரித்து
நீறதுவாக்கியநிமலனகர்
நாறுடைநடுபவருழவரொடுஞ்
சேறுடைவயலணிசிவபுரமே. (௬)

ஆவிலைந்தமர்ந்தவனரிவையொடு
மேவிநன்கிருந்ததோர்வியனகர்தான்
பூவில்வண்டமர்தருபொய்கையன்னச்
சேவறன்பெடைபுல்குசிவபுரமே. (௭)

எழின்மலையெடுத்தவல்லிராவணன்றன்
முழுவலியடக்கியமுதல்வனகர்
விழவினிலெடுத்தவெண்கொடிமிடைந்து
செழுமுகிலடுக்கும்வண்சிவபுரமே. (௮)

சங்களவியகையன்சதுமுகனு
மங்களவறிவரியவனகர்தான்
கங்குலும்பறவைகள்கமுகுதொறுஞ்
செங்கனிநுகர்தருசிவபுரமே. (௯)

மண்டையிற்குண்டிகைமாசுதரு
மிண்டரைவிலக்கியவிமலனகர்
பண்டமர்தருபழங்காவிரியின்
றெண்டிரைபொருதெழுசிவபுரமே. (௧௦)

சிவனுறைதருசிவபுரநகரைக்
கவுணியர்குலபதிகாழியர்கோன்
றவமல்குதமிழிவைசொல்லவல்லார்
நலமொடுசிவகதிநண்ணுவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

* அரிசில் - என்பது ஒருநதி.

### திருவல்லம் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

எரித்தவன்முப்புரமெரியின்மூழ்கத்
தரித்தவன்கங்கையைத்தாழ்சடைமேல்
விரித்தவன்வேதங்கள்வேறுவேறு
தெரித்தவனுறைவிடந்திருவல்லமே. (க)

தாயவனுலகுக்குத்தன்னொப்பிலாத
தூயவன்றூமதிசூடியெல்லா
மாயவனமரர்க்குமுனிவர்கட்குஞ்
சேயவனுறைவிடந்திருவல்லமே (உ)

பார்த்தவன்காமனைப்பண்பழியப்
போர்த்தவன்போதகத்தின்னுரிவை
யார்த்தவனான்முகன்றலையையன்று
சேர்த்தவனுறைவிடந்திருவல்லமே. (௩)

கொய்தவமலரடிகூடுவார்தம்
மைதவழ்திருமகள்வணங்கவைத்துப்
பெய்தவன்பெருமழையுலகமுய்யச்
செய்தவனுறைவிடந்திருவல்லமே (௪)

சார்ந்தவர்க்கின்பங்கடழைக்கும்வண்ண
நேர்ந்தவனேரிழையோடுங்கூடித்
தேர்ந்தவர்தேடுவார்தேடச்செய்தே
சேர்ந்தவனுறைவிடந்திருவல்லமே. (௫)

பதைத்தெழுகாலனைப்பாதமொன்றா
லுதைத்தெழுமாமுனிக்குண்மைநின்று
விதிர்த்தெழுதக்கன்றன்வேள்வியன்று
சிதைத்தவனுறைவிடந்திருவல்லமே. (௬-௭)

இகழ்ந்தருவரையினையெடுக்கலுற்றுங்
கிகழ்ந்தவல்லரக்கனையடர்த்தபாத
நிகழ்ந்தவர்நேடுவார்நேடச்செய்தே
திகழ்ந்தவனுறைவிடந்திருவல்லமே. (௮)

பெரியவன்சிறியவர்சிந்தைசெய்ய
வரியவனருமறையங்கமானோன்
கரியவனான்முகன்காணவொண்ணாத்
தெரியவன்வளநகர்திருவல்லமே. (௯)

அன்றியவமணர்கள்சாக்கியர்கள்
குன்றியவறவுரைகூறவண்ணம்
வென்றவன்புலனைந்தும்விளங்கவெங்குஞ்
சென்றவனுறைவிடந்திருவல்லமே. (௰)

கற்றவர்திருவல்லங்கண்டுசென்று
நற்றமிழ்ஞானசம்பந்தன்சொன்ன
குற்றமில்செந்தமிழ்கூறவல்லார்
பற்றுவரீசன்பொற்பாதங்களே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருமாற்பேறு - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

குருந்தவன் குருகவன் கூர்மையவன்
பெருநதகைபெண்ணவனாணுமவன்
கருநதடமலர்க்கண்ணிகாதலசெய்யு
மருநதவன்வளநகர்மாறபேறே. (௧)
பாறணிவெண்டலைகையிலேநதி
வேறணிபலிகொளும்வேட்கையனாய்
நீறணிநதுமையொருபாகமவைத்த
மாறிலிவளநகர்மாறபேறே. (௨)
கருவுடையாருலகங்கள்வேவச்
செருவிடையேறியுஞசென்றுநின்
றுருவுடையாளுமையாளுநதானும்
மருவியவளநகாமாற்பேறே. (௩)
தலையவன்றலையணிமாலைபூண்டு
கொலைநவில்கூற்றினைக்கொன்றுகநதான்
கலைநவின்றான்கயிலாயமெனனும்
மலையவன்வளநகர்மாற்பேறே (௪)
துறையவன்றொழிலவன்றொல்லுயிர்க்கும
பிறையணிசடைமுடிபபெண்ணோர்பாகன்
கறையணிமிடற்றண்ணல்காலற்செற்ற
மறையவன்வளநகர்மாறபேறே. (௫)
பெண்ணினல்லாளையோர்பாகமவைத்துக்
கண்ணினாற்காமனைக்காய்நதவன்றன்
விண்ணவாதானவர்முனிவரொடு
மண்ணவர்வணங்குநன்மாற்பேறே. (௬-௭)
தீதிலாமலையெடுத்தவவரக்க
னீதியால்வேதகீதங்கள்பாட
வாதியானாகியவண்ணலெங்கண்
மாதிதன்வளநகர்மாற்பேறே. (௮)
செய்யதண்டாமரைக்கண்ணனொடுங்
கொய்யணிநறுமலர்மேலயனு
மையனன்சேவடியதனையுள்க
மையல்செய்வளநகர்மாறபேறே. (௯)
குளித்துணவமணர்குண்டாக்கரொன்றுங்
களிததுநன்கழலடிகாணலுறார்
முளைத்தவெண்மதியினோடரவுசென்னி
வளைத்தவன்வளநகர்மாற்பேறே. (௧௦)
அந்தமில்ஞானசம்பநதனல்ல
செநதிசைபாடல்செய்திருமாற்பேற்றைச்
சந்தமின்றமிழ்கள்கொண்டேத்தவல்லா
ரெந்தைதன்கழலடியெய்துவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

115

திருஇராமனதீச்சரம் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

சங்கொளிர்முன்கையர் தம்மிடையே
யங்கிடுபலிகொளுமவன்கோபப
பொங்கரவாடலோன்புவனியோங்க
வெங்குமனிராமனதீச்சரமே. (க)

சந்தநன்மலரணிதாழ்சடையன்
றந்தமதத்தவன்றுதையோதா
னந்தமில்பாடலோனழகனல்ல
வெந்தவனிராமனதீச்சரமே. (உ)

தழைமயிலேறவன்றுதையோதான்
மழைபொழிசடையவன்மன்னுகாதிற்
குழையதுவிலங்கியகோலமாபி
னிழையவனிராமனதீச்சரமே. (ங)

சத்தியுளாதியோர்தையல்பங்கன்
முத்தியதாகியமூர்த்தியோதா
னத்தியங்கையினிலழகுசூலம்
வைத்தவனிராமனதீசசரமே. (ச)

தாழ்ந்தகுழற்சடைமுடியதன்மேற்
றோய்ந்தவிளம்பிறைதுளங்குசென்னிப்
பாய்ந்தகங்கையொடுபடவரவ
மேய்ந்தவனிராமனதீச்சரமே. (ரு)

சரிகுழலிலங்கியதையல்காணும
பெரியவன்காளிதன்பெரியகூத்தை
யரியவனாடலோனங்கையேந்து
மெரியவனிராமனதீச்சரமே. (சு)

மாறிலாமாதொளிபங்கன்மேனி
நீறதுவாடலோனீள்சடைமே
லாறதுசூடுவானழகன்விடை
யேறவனிராமனதீச்சரமே. (எ)

தடவரையரக்கனைத்தலைநெரித்தோன்
படவரவாட்டியபடர்சடைய
னடமதுவாடலானான்மறைக்கு
மிடமவனிராமனதீச்சரமே. (அ)

தனமணிதையறன்பாகன்றன்னை
யனமணியயனணிமுடியுங்காணான்
பனமணிவரவரிபாதங்காணு
னினமணியிராமனதீச்சரமே. (கூ)

தறிபோலாஞ்சமணர்சாக்கியர்சொற்கொளே
லறிவோராணுமமறிந்துனைமின்
மறிகையோன்றன்முடிமணியார்கங்கை
யெறிபவனிராமனதீச்சரமே. (க0)

தேன்மலர்க்கொன்றையோன்
முந்தமக்கூனமன்றே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருநீலகண்டம் - பண் - வியாழக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்.

அவ்வினைக்கிவ்வினையாமென் றுசொல்லுமஃ தறிவீ
ருய்வினைநாடா திருப்பதுமுந்தமக்கூனமன்றே
கைவினைசெய்தெம்பிரான்கழல்போற்றுதுநாமடியோஞ்
செய்வினைவந்தெமைத்தீண்டப்பெறா திருநீலகண்டம். (க)

காவினையிட்டுங்குளம்பலதொட்டுங்கனிமனத்தா
லேவினையாலெயின்மூன்றெரித்தீரென் றிருபொழுதும்
பூவினைக்கொய்துமலரடிபோற்றுதுநாமடியோந்
தீவினைவந்தெமைத்தீண்டப்பெறா திருநீலகண்டம். (உ)

முலைத்தடமூழ்கியபோகங்களுமற்றெவையுமெல்லாம்
விலைத்தலையாவணங்கொண்டெமையாண்டவிரிசடையீ
ரிலைத்தலைச்சூலமுந்தண்டுமழுவுமிவையுடையீர்
சிலைத்தெமைத்தீவினைதீண்டப்பெறா திருநீலகண்டம். (ங)

விண்ணுலகாள்கின்றவிச்சாதரர்களும்வேதியரும்
புண்ணியரென்றிருபோதுந்தொழப்படும்புண்ணியரே
கண்ணிமையாதனமூன்றுடையீருங்கழலடைந்தோந்
திண்ணியதீவினைதீண்டப்பெறா திருநீலகண்டம். (ச)

மற்றிணையில்லாமலைதிரண்டன்னதிண்டோளுடையீர்
கிற்றெமையாட்கொண்டுகேளாதொழிவதுந்தன்மைகொலோ
சொற்றுணைவாழ்க்கைதுறந்துந்திருவடியேயடைந்தோஞ்
செற்றெமைத்தீவினைதீண்டப்பெறா திருநீலகண்டம். (ரு)

மறக்குமனத்தினைமாற்றியெம்மாவியைவற்புறுத்திப்
பிறப்பில்பெருமான்றிருந்தடிக்கீழ்ப்பிழையாதவண்ணம்
பறித்தமலர்கொடுவந்துமையேத்தும்பணியடியோஞ்
சிறப்பிலித்தீவினைதீண்டப்பெறா திருநீலகண்டம். (சு-எ)

கருவைக்கழித்திட்டுவாழ்க்கைகடிந்துங்கழலடிக்கே
யுருகிமலர்கொடுவந்துமையேத்துதுநாமடியோஞ்
செருவிலரக்கனைச்சீரிலடர்த்தருள்செய்தவரே
திருவிலித்தீவினைதீண்டப்பெறா திருநீலகண்டம். (அ)

நாற்றமலர்மிசைநான்முகனாரணன்வாதுசெய்து
தோற்றமுடையவடியுமுடியுந்தொடர்வரியீர்
தோற்றினுந்தோற்றுந்தொழுதுவணங்குதுநாமடியோஞ்
சீற்றமதாம்வினைதீண்டப்பெறா திருநீலகண்டம். (கூ)

சாக்கியப்பட்டுஞ்சமணுருவாகியுடையொழிந்தும்
பாக்கியமின்றியிருதலைப்போகமும்பற்றும்விட்டார்
பூக்கமழ்கொன்றைப்புரிசடையீரடிபோற்றுகின்றோந்
தீக்குழித்தீவினைதீண்டப்பெறா திருநீலகண்டம். (க0)

பிறந்தபிறவியிற்பேணியெஞ்செல்வன்கழலடைவா
னிறந்தபிறவியுண்டாகிலிமையவர்கோனடிக்கட்
டிறம்பயில்ஞானசம்பந்தனசெந்தமிழ்ப்பத்தும்வல்லார்
நிறைந்தவுலகினில்வானவர்கோனொடுங்கூடுவரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

117

## திருப்பிரமபுரம் - மொழிமாற்று - பண் வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

காடதணிகலங்காரரவம்பதிகாலதனிற்
றோடதணிகுவர்சுந்தரக்காதினிற்றூச்சிலம்பர்
வேடதணிவர்விசயற்குருவம்வில்லுங்கொடுப்பர்
பீடதணிமணிமாடப்பிரமபுரத்தாரே. (க)

கற்றைச்சடையதுகங்கணமுன்கையிற்றிங்கள்கங்கை
பற்றித்துமுப்புரம்பார்படைத்தோன்றலைசுட்டதுபண்
டெற்றித்துப்பாம்பையணிந்ததுகூறுமையெழில்விளங்கும்
வெற்றிச்சிலைமதில்வேணுபுரத்தெங்கள்வேதியரே. (௨)

கூவிளங்கையதுபேரிசடைமுடிக்கூட்டத்தது
தூவிளங்கும்பொடிப்பூண்டதுபூசிற்றுத்துத்திநாக
மேவிளங்குநுதலாளையும்பாகமுரித்தனரின்
பூவிளஞ்சோலைப்புகலியுண்மேவியபுண்ணியரே. (௩)

உரித்ததுபாம்பையுடன்மிசையிட்டதோரொண்களிற்றை
யெரித்ததோராமையையின்புறப்பூண்டதுமுப்புரத்தைச்
செருத்ததுசூலத்தையேந்திற்றுத்தக்கனைவேள்விப்பன்னூல்
விரித்தவர்வாழ்தருவெங்குருவில்வீற்றிருந்தவரே. (௪)

கொட்டுவரக்கரையார்ப்பதுதக்கைகுறுந்தாளன
விட்டுவர்பூதங்கலப்பிலரின்புகழென்புலவின்
மட்டுவருந்தழல்சூடுவர்மத்தமுமேந்துவர்வான்
றொட்டுவருங்கொடித்தோணிபுரத்துறைசுந்தரரே. (௫)

சாத்துவர்பாசந்தடக்கையிலேந்துவர்கோவணந்தங்
கூத்தவர்கச்சுக்குலாவிநின்றூடுவர்கொக்கிறகும
போர்த்தவர்பல்படைபேயவைசூடுவர்பேரொழிலார்
பூத்தவர்கைதொழுபூந்தராய்மேவியபுண்ணியரே. (௬)

காலதுகங்கைகற்றைச்சடையுள்ளாற்கழல்சிலம்பு
மாலதுவேந்தன்மழுவதுபாகம்வளர்கொழுங்கோட்
டாலதூர்வரடலேறிருப்பரணிமணிநீர்ச்
சேலதுகண்ணியோர்பங்கர்சிரபுரமேயவரே. (௭)

நெருப்புறுவெள்விடைமேனியரேறுவர்நெற்றியின்கண்
மருப்புறுவன்கண்ணர்தாதையைக்காட்டுவர்மாமுருகன்
விருப்புறுபாம்புக்குமெய்த்தந்தையார்விறன்மாதவர்வாழ்
பொருப்புறுமாளிகைத்தென்புறவத்தணிபுண்ணியரே. (௮)

இலங்கைத்தலைவனையெந்திற்றிறுத்ததிரலையின்னாட்
கலங்கியகூற்றுயிர்பெற்றதுமாணிகுமைபெற்றது

கலங்கிளர்மொந்தையினாடுவர்கொட்டுவர்காட்டகத்துச்
சலங்கிளர்வாழ்வயற்சண்பையுண்மேவியதத்துவரே. (௯)

அடியிணைகண்டிலன்றாமரையோன்மான்முடிகண்டிலன்
கொடியணியுமபுலியேறுகந்தேறுவர்தோலுடுப்பர்
பிடியணியுநடையாள்வெற்பிருப்போர்கூறுடையார்
கடியணியும்பொழிற்காழியுண்மேயகறைக்கண்டரே (௧௦)

கையதுவெண்குழைகாதததுசூலமமணர்புத்தர்
எய்துவர்தம்மையடியவரெய்தாரோரொனக்கொம்பு
மெய்திகழ்கோவணம்பூண்பதுடுப்பதுமேதகைய
கொய்தலர்பூம்பொழிற்கொச்சையுண்மேவியகொற்றவரே. (௧௧)

கல்லுயர்கழுமலவிஞ்சியுண்மேவியகடவுடனை
நல்லுரைஞானசம்பந்தன்ஞானத்தமிழ்நன்குணர்தல்
சொல்லுதல்கேட்டல்வல்லோர்தொல்லைவானவர்தங்களோடும்
செல்குவர்சீரருளாற்பெறலாஞ்சிவலோகமதே. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

மொழிமாற்றும்வகை.

காடதணிகலங் காரரவம்பதி—இதனை-காடுபதி எனவும், அணிகலங்காரரவம்எனவும்,

காலதனில்தோடதணிகுவர் சுந்தரக்காதினில் தூச்சிலம்பர்—இதனை - காலத னில் தூச்சிலம்பர் எனவும், சுந்தரக்காதினில் தோடது அணிகுவர் எனவும்,

வேடதணிகுவர் விசயற்குருவம் வில்லுங்கொடுப்பர்—இதனை-வேடது உருவம் அணிகுவர் எனவும், விசயற்கு வில்லுங்கொடுப்பர் எனவும், மொழிமாற்றுக.—இவ்வாறே மற்றத்தேவாரங்களுக்கு மொழிமாற்றுக.

---

திருப்பருப்பதம் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

சுடுமணியுமிழ்நாகஞ்சூழ்தரவரைக்கசைத்தா
னிடுமணியெழிலானையேறலனொருதேறி
விடமணிமிடறுடையான்மேவியநெடுங்கோட்டுப்
படுமணிவிடுசுடராரப்பருப்பதமபரவுதுமே. (௧)

நோய்புல்குதோல்திரையநரைவருநுகருடம்பி
னீபுல்குதோற்றமெல்லாநினையுள்குமடநெஞ்சே
வாய்புல்குதோத்திரத்தால்வலஞ்செய்துதலைவணங்கிப்
பாய்புலித்தோலுடையான்பருப்பதம்பரவுதுமே. (௨)

துனியுறுதுயர்தீரத்தோன்றியோர்நல்வினையா
லினியுறுபயனாதலிரண்டுறமனமவையேற்
கனியுறுமரமேறிக்கருமுசுக்கழையுகளும்
பனியுறுகதிர்மதியான்பருப்பதம்பரவுதுமே. (௩)

கொங்கணிநறுங்கொன்றைத்தொங்கலன்குளிர்சடையா
னெங்கணோயகலநின்றானெனவருளீசனிடம்
மைங்கணவரிசிலையானநங்கனையழகழித்த
பைங்கண்வெள்ளேறுடையான்பருப்பதம்பரவுதுமே. (௪)

துறைபலசுனைமூழ்கித்தூமலர்சுமந்தோடி
மறையொலிவாய்மொழியால்வானவர்மகிழ்ந்தேத்தச்
சிறையொலிகிளிபயிலுந்தேனினமொலியோவாப்
பறைபடுவிளங்கருவிப்பருப்பதம்பரவுதுமே. (ரு)

சீர்கெழுசிறப்போவாச்செய்தவநெறிவேண்டி
லேர்கெழுமடநெஞ்சேயிரண்டுறமனம்வையேற்
கார்கெழுநறுங்கொன்றைக்கடவுளதிடமவகையாற்
பார்கெழுபுகழோவாப்பருப்பதம்பரவுதுமே. (சு)

புடைபுல்குபடர்கமலம்புகையொடுவிரைகமழத்
தொடைபுல்குநறுமாலைதிருமுடிமிசையேற
விடைபுல்குகொடியேந்திவெந்தவெண்ணீறணிவான்
படைபுல்குமழுவாளன்பருப்பதம்பரவுதுமே. (எ)

நினைப்பெனுநெடுங்கிணறைநின்றுநின்றயராதே
மனத்தினைவலித்தொழிந்தேனவலமவந்தடையாமைக்
கனைத்தெழுதிரள்கங்கைகமழ்சடைக்கரந்தான்றன்
பனைத்திரள்பாயருவிப்பருப்பதம்பரவுதுமே. (அ)

மருவியவல்வினைநோயவலம்வந்தடையாமற்
றிருவுருவமர்ந்தானுந்திசைமுகமுடையானு
மிருவருமறியாமலெழுந்ததோரெரிநடுவே
பருவரையுறநிமிர்ந்தான்பருப்பதம்பரவுதுமே. (கூ)

சடங்கொண்டசாத்திரத்தார்சாக்கியர்சமண்குண்டர்
மடங்கொண்டவிருமபியராய்மயங்கியோர்பேய்த்தேர்ப்பின்
குடங்கொண்டுநீர்க்குச்செல்வார்போதுமின்குஞ்சரத்தின்
படங்கொண்டபோர்வையினான்பருப்பதம்பரவுதுமே. (கo)

வெண்செந்நெல்விளைகழனிவிழவொலிகழுமலத்தான்
பண்செலப்பலபாடலிசைமுரல்பருப்பதத்தை
நன்சொலினாற்பரவுஞானசம்பந்தனல்ல
வொண்சொலினிவைமாலையுருவெணத்தவமாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

119

திருக்கள்ளில் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

முள்ளின்மேன்முதுகூகைமுரலுஞ்சோலை
வெள்ளின்மேல்விடுகூரைக்கொடிவிளைந்த
கள்ளின்மேயவண்ணல்கழல்கணாளு
முள்ளுமேனுயர்வெய்தலொருதலையே. (க)

ஆடலான்பாடலானரவங்கள்பூண்டா
னோடலாற்கலனில்லானுறைபதியாற்
காடலாற்கருதாதகள்ளின்மேயான்
பாடலாம்பெரியார்கள்பரசுவாரே. (உ)

எண்ணார்மும்மதிலெய்தவிமையாமுக்கண்
பண்ணார்நான்மறைபாடும்பரமயோகி

கண்ணார்நீறணிமார்பன்கள்ளின்மேயான்
பெண்ணாணுமபெருமானெமபிஞ்ஞகனே. (ரு)

பிறைபெற்றசடையண்ணல்பெடைவண்டாலுந
நறைபெற்றவிரிகொன்றைத்தார்நயந்த
கறைபெற்றமிடற்றண்ணல்கள்ளின்மேயா
னிறைபெற்றவடியார்தநெஞ்சுளானே. (சு)

விரையாலுமலராலும்விழுமைகுன்று
வுரையாலுமெதிர்கொள்ளவூராரம்மாக்
கரையாரபொன்புனல்வேலிக்கள்ளின்மேயா
னரையார்வெண்கோவணத்தவணணலே. (ரு)

நலனாயபலகொள்கைநமபாலல்ல
வலனாயமழுவாளும்வேலுமவல்லான்
கலனாயதலையோட்டான்கள்ளினமேயான்
மலனாயதீர்த்தெய்துமாதவத்தோர்க்கே (சு)

பொடியார்மெய்பூசினும்புறவினறவுந
குடியாவூர்திரியினுங்கூப்பிடினும்
கடியார்பூம்பொழிறசோலைக்கள்ளின்மேயா
னடியாரபணிபுகழ்வார்களார்களே. (எ)

திருநீலமலரொண்கண்டேவிபாகம்
புரிநூலுந்திருநீறும்புல்குமார்பிற
கருநீலமலர்விம்முகளளிலெனறும
பெருநீலமிடற்றண்ணல்பேணுவதே. (அ)

வரியாயமலரானுமவையந்தன்னை
யுரிதாயவளந்தானுமுள்ளுந்தற்கு
கரியானுமறியாதகள்ளினமேயான்
பெரியானென்றறிவாாகளபேசுவரோ (கூ)

ஆச்சியபபேய்களோடமணர்குண்டா
பேசசிவைநெறியல்லபேணுமின்கள
மாச்செய்தவளவயன்மல்குகள்ளி
நீச்செய்தசடையண்ணறிருந்தடியே. (க0)

திசைநான்குமபுகழ்காழிசசெல்வமல்கு
பகல்போலும்பேரொளியான்பந்தனல்ல
முகைமேவுமுதிர்சடையான்கள்ளிலேத்த
புகழோடுமபேரின்பம்புகுதுமனறே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருவையாறு - திருவிராகம் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

பணிந்தவராருவினைபற்றறுத்தருள்செயத்
துணிந்தவன்றோலொடுநூலுதைமார்பினிற்
பிணிந்தவனரவொடுபேரொழிலாமைகொண்
டணிந்தவன்வளநகரந்தணையாறே. (க)

கீர்த்திமிக்கவனகர்கிளரொளியுடனடப
பார்த்தவன்பனிமதிபடர்சடைவைத்துப்
போர்த்தவன்கரியுரிபுலியதளாவனா
யார்த்தவன்வளநகரந்தணையாறே. (உ)

வரிந்தவெஞ்சிலைபிடித்தவுணர்தம்வளநக
ரெரிந்தறவெய்தவனெழிறிகழ்மலாமே
லிருந்தவன்சிரமதுவிமையவர்குறைகொள
வரிந்தவனவளநகரந்தணையாறே. (ங)

வாய்ந்தவல்லவுணர்தமவளநகரெரியிடை
மாய்ந்தறவெய்தவன்வளர்பிறைவிரிபுன
றோய்ந்தெழுசடையினன்றொன்மறையாறங்க
மாய்ந்தவன்வளநகரந்தணையாறே. (ச)

வானமர்மதிபுல்குசடையிடையரவொடு
தேனமர்கொன்றையனறிகழ்தருமார்பினன்
மானினமனவிழிமங்கையோர்பாகமு
மானவன்வளநகரந்தணையாறே (ரு)

முன்பனைமுனிவரோடமரர்கடொழுதெழு
மின்பனையிணையிலவிறைவனையெழிறிக
ழென்பொனையேதமில்வேதியர்தாந்தொழு
மன்பனன்வளநகரந்தணையாறே (சா)

வன்றிறலவுணர்தம்வளநகரெரியிடை
வெந்தறவெய்தவனவிளங்கியமார்பினிற்
பந்தயர்மெல்விரல்பாகமதாகித
னந்தமில்வளநகரந்தணையாறே. (எ)

விடைந்தவலரக்கனல்வெற்பினையெடுத்தலு
மடித்தலத்தாலிறையூன்றிமற்றவனது
முடித்தலைதோளவைநெரிதரமுறைமுறை
யடர்த்தவனவளநகரந்தணையாறே. (அ)

விண்ணவர்தமமொடுவெங்கதிரோனல
வெண்ணிலிதேவர்களிந்திரன்வழிபடக்
கண்ணனும்பிரமனுங்காண்பரிதாகிய
வண்ணறன்வளநகரந்தணையாறே. (கூ)

மருளுடைமனத்துவன்சமணர்கண்மாசறு
விருளுடையிணைத்துவர்பபோர்வையினர்களுந்
தெருளுடைமனத்தவர்தேறன்மின்றிண்ணமா
வருளுடையடிகடமந்தணையாறே. (க0)

நலமலிஞானசம்பந்தனதின்றமி
ழலைமலிபுனன்மல்குமந்தணையாறினைக்
கலைமலிதமிழிவைகற்றுவல்லார்மிக
நலமலிபுகழ்மிகுநன்மையர்தாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருவிடைமருதூர் - திருவிராகம் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

நடைமருதிரிபுரமெரியுணநகைசெய்த
படைமருதழலெழமழுவலபகவன
புடைமருதிளமுகில்வளமமர்பொதுளிய
விடைமருதடையநமிடர்கெடலெளிதே. (க)

மழைநுழைமதியமொடழிதலைமடமஞ்ஞை
கழைநுழைபுனல்பெய்தகமழ்சடைமுடியன
குழைநுழைதிகழ்செவியழகொடுமிளிர்வதோ
ரிழைநுழைபுரியணலிடமிடைமருதே. (உ)

அருமையனெளிமையனழல்விடமிடறினன்
கருமையினொளிபெறுகமழ்சடைமுடியன்
பெருமையன்சிறுமையன்பிணைபெணொடொருமைய
னிருமையுமுடையணலிடமிடைமருதே. (ஙு)

பொரிபடுமுதுகுறமுளிகளிபுடைபுலகு
நரிவளர்சுடலையுணடமெனநவில்வோன்
வரிவளர்குளிர்மதியொளிபெறமிளிர்வதோ
ரெரிவளர்சடையணலிடமிடைமருதே. (ச)

வருநலமயிலனமடநடைமலைமகள்
பெருநலமுலையிணைபிணைசெய்தபெருமான்
செருநலமதிலெய்தசிவனுறைசெழுநக
ரிருநலபுகழ்மல்குமிடமிடைமருதே. (ரு)

கலையுடைவிரிதுகில்கமழ்குழலகில்புகை
மலையுடைமடமகடணையிடமுடையோன்
விலையுடையணிகலனிலனெனமழுவினொ
டிலையுடைபடையவனிடமிடைமருதே. (சா)

வளமெனவளர்வனவரிமுரல்பறவைக
ளிளமணலணைகரையிசைசெயுமிடைமரு
துளமெனநினைபவரொலிகழலிணையடி
குளமணலுறமூழ்கிவழிபடல்குணமே. (எ)

மறையவனுலகவன்மதியவன்மதிபுல்கு
துறையவனெனவலவடியவர்துயரிலர்
கறையவன்மிடறதுகனல்செய்தகமழ்சடை
யிறையவனுறைதருமிடமிடைமருதே. (அ)

மருதிடைநடவியமணிவணர்பிரமரு
மிருதுடையகலமோடிகலினரினதெனக்
கருதிடலரியதோருருவொடுபெரியதோ
ரெருதுடையடிகடமிடமிடைமருதே. (கூ)

துவருறுவிரிதுகிலுடையருமமணரு
மவருறுசிறுசொலைநயவன்மினிடுமணல்
கவருறுபுனலிடைமருதுகைதொழுதெழு
மவருறுவினைகெடலணுகுதல்குணமே. (க0)

தடமலிபுகலியர்தமிழ்கெழுவிரகின
னிடமலிபொழிலிடைமருதினையிசைசெய்த
படமலிதமிழிவைபரவவல்லவர்வினை
கெடமலிபுகழொடுகிளரொளியினரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருவிடைமருதூர் - திருவிராகம் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

விரிதருபுலியுரிவிரவியவரையினா
திரிதருமெயிலவைபுனைகணையினிலெய்த
வெரிதருசடையினரிடைமருதடைவுனல்
புரிதருமனனவர்புகழ்மிகவுளதே. (௧)

மறிதிரைபடுகடலவிடமடைமிடறின
ரெறிதிரைகரைபொருமிடைமருதெனுமவர்
செறிதிரைநரையொடுசெலவிலருலகினிற
பிறிதிரைபெறுமுடல்பெறுகுவதரிதே. (௨)

சலசலசொரிபுனல்சடையினர்மலைமக
ணிலவியவுடலினாநிறைமறைமொழியின
ரிலரெனவிடுபலியவரிடைமருதினை
வலமிடவுடனலிவிலதுளவினையே. (௩)

விடையினர்வெளியதோர்தலைகலனெனநனி
கடைகடைதொறுபலியிடுகெனமுடுகுவ
ரிடைவிடலரியவரிடைமருதெனுநக
ருடையவரடியிணைதொழுவதெமதுயர்வே. (௪)

உரையருமுருவினருணர்வருவகையின
ரரைபொருபுலியதளுடையினரதன்மிசை
யிரைமருமரவினரிடைமருதெனவுள
முரைகளதுடையவர்புகழ்மிகவுளதே. (௫)

ஒழுகியபுனன்மதியரவமொடுறைதரு
மழகியமுடியுடையடிகளதறைகழ
லெழிலினருறையிடைமருதினைமலர்கொடு
தொழுதல்செய்தெழுமவர்துயருறவிலரே. (௬)

கலைமலிவிரலினர்கடியதோர்மழுவொடு
நிலையினர்சலமகளுலவியசடையினர்
மலைமகண்முலையிணைமருவியவடிவின
ரிலைமலிபடையவரிடமிடைமருதே. (௭)

செருவடையிலவலசெயல்செயத்திறலொடு
மருவரையினிலொருபதுமுடிநெரிதர
விருவகைவிரனிறியவரிடைமருதிது
பரவுவாருவினையொருவுதல்பெரிதே. (௮)

அரியொடுமலரவனெனவிவரடிமுடி
தெரிவகையரியவர்திருவடிதொழுதெழ
வெரிதருமுருவர்தமிடைமருதடைவுறல்
புரிதருமனனவர்புகழ்மிகவுளதே. (௯)

குடைமயிலினந்தழைமருவியவுருவின
ருடைமருதுவரினர்பலசொலவுறவிலை
யடைமருதிருவினர்தொழுதெழுகழலவ
ரிடைமருதெனமனநினைவதுமெழிலே. (௧௦)

பொருகடலடைதருபுகலியர்தமிழொடு
விரகினன்விரிதருபொழிலிடைமருதினைப்
பரவியவொருபதுபயிலவலவரிடர்
விரவிலர்வினையொடுவியனுலகுறவே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

**திருவலிவலம் - திருவிராகம் - பண் - வியாழக்குறிஞ்சி.**

திருச்சிற்றம்பலம்.

பூவியல்புரிகுழல்வரிசிலைநிகர்நுத
லேவியல்கணைபிணையெதிர்விழியுமையவண்
மேவியதிருவுருவுடையவன்விரைமலர்
மாவியல்பொழில்வலிவலமுறையிறையே. (௧)

இட்டமதமர்பொடியிசைதலினசைபெறு
பட்டவிர்பவளநன்மணியெனவணிபெறு
விட்டொளிர்திருவுருவுடையவன்விரைமலர்
மட்டமர்பொழில்வலிவலமுறையிறையே. (௨)

உருமலிகடல்கடைவுழியுலகமருயிர்
வெருவுறவகையெழுவிடமவெளிமலையணி
கருமணிநிகர்களமுடையவன்மிடைதரு
மருமலிபொழில்வலிவலமுறையிறையே. (௩)

அனனிகர்சடையழலவியுறவெனவரு
புனனிகழ்வதுமதிநனைபொறியரவமு
மெனநினைவொடுவருமிதுமெலமுடிமிசை
மனமுடையவர்வலிவலமுறையிறையே. (௪)

பிடியதனுருவுமைகொளமிகுகரியது
வடிகொடுதனதடிவழிபடுமவரிடர்
கடிகணபதிவரவருளினன்மிகுகொடை
வடிவினர்பயில்வலிவலமுறையிறையே. (௫)

தரைமுதலுலகினிலுயிர்புணர்தகைமிக
விரைமலிகுழலுமையொடுவிரவதுசெய்து
நரைதிரைகெடுதகவதுவருளினனெழில்
வரைதிகழ்மதில்வலிவலமுறையிறையே. (௬)

நலிதருதரைவரநடைவருமிடையவர்
பொலிதருமடவரலியர்மனையதுபுகு
பலிகொளவருபவனெழின்மிகுதொழில்வளர்
வலிவருமதில்வலிவலமுறையிறையே. (௭)

இரவணனிருபதுகரமெழின்மலைதனி
னிரவணநினைதரவவன்முடிபொடிசெய்து
விரவணமமர்பெயரருளினனகநெதி
யிரவணநிகர்வலிவலமுறையிறையே. (௮)

தேனமர்தருமலரணைபவன்வலிமிகு
மேனமதாய்நிலமகழரியடிமுடி
தானணையாவுருவுடையவன்மிடைகொடி
வானணைமதில்வலிவலமுறையிறையே. (௯)

இலைமலிதரமிகுதுவருடையவாகளு
நிலைமையிலுணவுடையவர்களுநினைவது
தொலைவலிநெடுமைறைதொடாவகையுருவினன்
மலைமலிமதில்வலிவலமுறையிறையே. (க0)

மன்னியவலிவலநகருறையிறைவனை
பின்னியல்கழுமலநகரிறையெழின்மறை
தன்னியல்கலைவலதமிழவிரகனதுரை
யுன்னியவொருபதுமுயர்பொருடருமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

திருவீழிமிழலை - திருவிராகம் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம

அலர்மகண்மலிதரவவனியினிகழ்பவர்
மலர்மலிகுழலுமைதனையிடமகிழ்பவர்
நலமலியுருவுடையவர்நகர்மிகுபுகழ்
நிலமலிமிழலையைநினையவல்லவரே (க)

இருநிலமிதன்மிசையெழில்பெறுமுருவினர்
கருமலிதருமிகுபுவிமுதலுலகினி
லிருளறுமதியினரிமையவர்தொழுதெழு
நிருபமன்மிழலையைநினையவல்லவரே. (உ)

கலைமகடலைமகனிவனெனவருபவ
ரலைமலிதருபுனலரவொடுநகுதலை
யிலைமலியிதழியுமிசைதருசடையினர்
நிலைமலிமிழலையைநினையவல்லவரே. (௩)

மாடமர்சனமகிழ்தரமனமுடையவர்
காடமர்கழுதுகளவைமுழவொடுமிசை
பாடலினவில்பவர்மிகுதருமுலகினி
னீடமர்மிழலையைநினையவல்லவரே. (௪)

புகழ்மகடுணையினர்புரிகுழலுமைதனை
யிகழ்வுசெய்தவனுடையெழின்மறைவழிவளர்
முகமதுசிதைதரமுனிவுசெய்தவன்மிகு
நிகழ்தருமிழலையைநினையவல்லவரே. (௫)

அன்றினரெரியெனவருபவரரிதினி
னென்றியதிரிபுரமொருநொடியினிலெரி
சென்றுகொள்வகைசிறுமுறுவல்கொடொளிபெற
நின்றவர்மிழலையைநினையவல்லவரே. (௬)

கரம்பயில்கொடையினர்கடிமலரயனதோர்
சிரம்பயில்வறவெறிசிவனுறைசெழுநகர்
வரம்பயில்கலைபலமறைமுறையறநெறி
நிரம்பினர்மிழலையைநினையவல்லவரே. (௭)

ஒருக்கியவுணர்வினொடொளிநெறிசெலுமவ
ரரக்கனன்மணிமுடியொருபதுமிருபது
கரக்கனநெரிதரமலரடிவிரல்கொடு
நெருக்கினன்மிழலையைநினையவல்லவரே. (௮)

அடியவர்குழுமிடவவனியினிகழ்பவர்
கடிமலரயனரிகருதருவகைதழல்
வடிவுருவியல்பினொடுலகுகணிறைதரு
நெடியவனமிழலையைநினையவல்லவரே. (௯)

மன்மதனெனவொளிபெறுமவர்மருதமர்
வன்மலர்துவருடையவர்களுமதியிலர்
துன்மதியமணர்கடொடர்வருமிகுபுகழ்
நின்மலனமிழலையைநினையவல்லவரே. (௧௦)

நித்திலன்மிழலையைநிகரிலிபுகலியுள
வித்தகமறைமலிதமிழ்விரகன்மொழி
பத்தியல்வருவனபத்திமைபாடியொடு
கற்றுவல்லவருலகினிலடியவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சிவபுரம் - திருவிராகம் - பண் - வியாழக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்.

கலைமலியகலல்குலரிவைதனுருவினன்
முலைமலிதருதிருவுருவமதுடையவன
சிலைமலிமதில்பொதிசிவபுரநகர்தொழ
விலைநலிவினையிருமையுமிடர்கெடுமே. (௧)

படரொளிசடையினன்விடையினன்மதிலவை
சுடரெரிகொளுவியசிவனவனுறைபதி
திடலிடுபுனல்வயல்சிவபுரமடையநம
மிடர்கெடுமுயர்கதிபெறுவதுதிடனே. (௨)

வரைதிரிதரவரவகடழலெழவரு
நுரைதருகடல்விடநுகர்பவனெழிறிகழ்
திரைபொருபுனலரிசிலதடைசிவபுர
முரைதருமடியவருயர்கதியினரே. (௩)

துணிவுடையவர்சுடுபொடியினருடலடு
பிணியடைவிலர்பிறவியுமறவிசுறுவர்
தணிவுடையவர்பயில்சிவபுரமருவிய
மணிமிடறனதடியிணைதொழுமவரே. (௪)

மறையவன்மதியவன்மலையவனிலையவ
னிறையவனுமையவன்மகிழ்நடநவில்பவ
னிறையவனிமையவர்பணிகொடுசிவபுர
முறைவெனவுடையவனெமையுடையவனே. (௫)

முதிர்சடையிளமதிநதிபுனல்பதிவுசெய்
ததிர்கழலொலிசெயவருநடநவில்வோ

னெதிர்பவர்புரமெய்தவிணையிலியணைபதி
சதிர்பெறுமுளமுடையவர்சிவபுரமே. (௬)

வடிவுடைமலைமகள்சலமகளுடனமர்
பொடிபடுமிழையதள்பொலிதிருவுருவினன்
செடிபடுபலிதிரிசிவனுறைசிவபுர
மடைதருமடியவரருவினையிலரே. (௭)

கரமிருபதுமுடியொருபதுமுடையவ
னுரநெரிதரவரையடர்வுசெய்தவனுறை
பரனெனவடியவர்பணிதருசிவபுர
நகரதுபுகுதனமதுயர்கதியதுவே. (௮)

அன்றியலுருவுகொளரியயனெனுமவர்
சென்றளவிடலரியவனுறைசிவபுர
மென்றிருபொழுதுமுனைவழிபடுமவர்துய
ரொன்றிலர்புகழொடுமுடையரிவ்வுலகே. (௯)

புத்தரொடமணர்களறவுரைபுறவுரை
வித்தகமொழிகிலவிடையுடையடிகட
மித்தவமுயல்வுறிலிறைவனசிவபுர
மெய்த்தகவழிபடல்விழுமியகுணமே. (௧௦)

புந்தியர்மறைநவில்புகலிமன்ஞானசம்
பந்தனதமிழ்கொடுசிவபுரநகருறை
யெந்தையையுரைசெய்தவிசைமொழிபவர்வினை
சிந்திமுனுறவுயர்கதிபெறுவர்களே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கழுமலம் - திருத்தாளச்சந்தி - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

பந்தத்தால்வந்தெப்பால்பயின்றுநின்றவும்பரப் - பாலேசேர்வாயேனோர் கான்பயில்கணமுனிவர்களுஞ், சிந்திப்பத்தேவந்திப்பச்சிலம்பின்மங்கைதன்னொ டுஞ் - சேர்வார்நாணுநீள்கயிலைத்திகழ்தருபரிசதெலாஞ், சந்தித்தேயிந்தப பார்சனங்கணின்றுதங்கணாறு - ஞமேகாணாவாழ்வாரத்தநவுசெய்தவனிடங், கந்தத்தாலெண்டிக்குங்கமழ்ந்திலங்குசந்தனக் - காடார்பூவார்சீர்மேவுங்கழும லவளநகரே. (௧)

பிச்சைக்கேபிச்சித்துப்பிசைந்தணிந்தவெண்பொடிப் - பீடார்நீடார்மா டாரும்பிறைநுதலரிவையொடு, முச்சந்தால்நச்சிப்பேரொருடர்ந்தடர்ந்தவெ ங்கணே - நூராவூராநீள்வீதிபயில்வொடுமொலிசெயிசை, வச்சத்தானசசுச் சேர்வடங்கொள்கொங்கைமங்கைமார் - வாராநேரேமாலாகும்வசிவலவனதி டங், கச்சத்தான்மெச்சிப்பூக்கலந்திலங்குவண்டினங் - காரார்காரார்நீள்சோ லைக்கழுமலவளநகரே. (௨)

திங்கட்சேருமபைக்கேதிகழ்ந்திலங்குமத்தையின் - சேரேசேரேநீராகச் செறிதருசுரநதியோ, டங்கைசசோவின்றிக்கேயடைந்துடைந்தவெண்டலைப் பாலேமேலேமாலேயப்படர்வுறுமவனிறகும், பொங்கப்பேர்நஞ்சைச்சேர் புயங்கமங்கள்கொன்றையின் - போதார்தாரேதாமேவிப்புரிதருசடையனிடங், கங்கைக்கேயும்பொற்பாகலந்துவந்தபொன்னியின் - காலேவாராமேலேபாய் கழுமலவளநகரே. (௩)

அண்டத்தாலெண்டிக்குமமைந்தடங்குமண்டலத் - தாறேவேறேவாணு
ள்வாரவரவரிடமதெலா, மண்டிப்போய்வென்றிபபோர்மலைந்தலைந்தவுமபரு -
மாறேலாதார்தாமேவுமவலிமிகுபுரமெரிய, முண்டத்தேவெந்திட்டேமுடிந்தி
டிந்தவிஞ்சிசூழ - மூவாமூதூர்மூதூராமுனிவுசெய்தவனிடங், கண்டிட்டே
செஞ்சொறசோகவினசிறந்தமந்திரக - காலேயாவார்தார்மேவுங்கழுமலவள
நகரே. (௪)

திக்கிற்றேவற்றற்றேதிகழ்ந்திலங்குமண்டலச் - சீறூர்வீறூர்போரார்தா
ருகனுடலவனெதிரே, புக்கிட்டேவெட்டிட்டேபுகைந்தெழுந்தசண்டத்தீப -
போலேபூநீர்தீகானமீபபுணர்தருமுயிர்கடிறஞ், சொக்கத்தேநிர்த்தத்தேதொ
டர்ந்தமங்கைசெங்கதத் - தோடேயாமேமாலோகத்துயர்களைபவனிடங், கை
க்கபோயுக்கத்தேகனன்றுமிணடுதண்டலைக் - காடேயோடாவூரேசேர்கழும
லவளநகரே. (௫)

செற்றிட்டேவெற்றிச்சேர்திகழ்ந்ததுமபிமொய்மபுருஞ் - சேரேவாரார்
நீள்கோதைத்தெரியிழைபிடியதுவா, யொற்றைசசேர்முற்றற்கொம்புடைத்
தடக்கைமுக்கண்மிக் - கோவாதேபாய்மாதானத்துறுபுகர்முகவிறையைப்,
பெற்றிட்டேமற்றிபபார்பெருத்துமிக்கதுக்கமும் - பேராநோய்தாமேயாமை
பிரிவுசெய்தவனிடங், கற்றிட்டேயெட்டெட்டுக்கலைத்துறைக்கரைச்செலக்
காணாதாரேசேராமெய்க்கழுமலவளநகரே (௬)

பத்திப்போர்வித்திட்டேபரந்தவைம்புலன்கள்வாய்ப் - பாலேபோகாமே
காவாபபகையறுவகைநினையா, முத்திக்கேவிக்கத்தேமுடிக்குமுக்குணங்கள்
வாய் - மூடாவூடாநாலந்தக்கரணமுமொருநெறியாய்ச, சித்திக்கேயுய்த்திட்
டுத்திகழ்ந்தமெய்ப்பரம்பொருள் - சேர்வார்தாமேதானாகச்செயுமவனுறையு
மிடங், கத்திட்டோர்சட்டங்கங்கலந்திலங்குநற்பொருள் - காலேயோவாதார்
மேவுங்கழுமலவளநகரே. (௭)

செம்பைசசேரிஞ்சிச்சூழ்செறிந்திலங்குபைமபொழிற் - சேரேவாராவா
ரீசத்திரையெறிநகரிறைவ, னிமபர்க்கேதஞ்செய்திட்டிருந்தரன்பயின்றவெ
ற் - பேரார்பூநேரோர்பாதத்தெழில்விரலவணிறுவிட, டம்பொற்பூண்வென்
றித்தோளழிந்துவந்தனஞ்செய்தாற் - காரார்கூர்வாளவாளனறருள்புரிபவ
னிடங், கம்பத்தார்தும்பித்திண்கவுட்சொரிந்தமும்மதக் - காரார்சேறூர்மா
வீதிக்கழுமலவளநகரே. (௮)

பன்றிக்கோலங்கொண்டிப்படித்தடம்பயின்றிடப் - பானுமானுமேயப்
பறவையினுருவுகொள, வொன்றிட்டேயமபுச்சேருயர்ந்தபங்கயத்தவ - னோ
தானோதானஃதுணராதுருவினதடிமுடியுஞ், சென்றிட்டேவந்திப்பத்திருக்க
ளங்கொள்பைங்கணின் - றேசால்வேறூராகாரந்தெரிவுசெய்தவனிடங், க
ன்றுக்கேமுன்றிற்கேகலந்திலந்நிறைக்கவுங் - காலேவாராமேலேபாய்கழுமல
வளநகரே. (௯)

தட்டிட்டேமுட்டிக்கைத்தடுக்கிடுக்கினின்றுணாத் - தாமேபேணாதேநா
ணுஞ்சமணொடுமுழல்பவரு, மிட்டத்தாலத்தந்தானிதன்றதென்றுநின்றவ
ர்க் - கேயாமேவாயேதுச்சொல்லிலைமலிமருதமபூப், புட்டத்தேயெட்டிட்டுப்
புதைக்குமெய்க்கொள்புத்தரும் - போல்வார்தாமோராமேபோய்ப்புணர்வுசெ
ய்தவனிடங், கட்டிக்கால்வெட்டித்தீங்கரும்புதந்தபைம்புனற்காலேவாரா
மேலேபாய்கழுமலவளநகரே. (௧௰)

கஞ்சத்தேனுண்டிட்டேகளித்துவண்டுசெண்பகக் - கானேதேனேபோ ராருஙகழுமலாகரிறையைத், தஞசச்சார்சண்பைக்கோன்சமைத்தநற்கலைத் துறை-தாமேபோல்வார்தேனேரார்தமிழ்விரகனமொழிக, ளெஞசத்தேய்வின் றிக்கேயிமைத்திசைதமைத்தகொண் - டேழேயேழேநாலேமூன்றியலிசையி சையியல்பா, வஞசத்தேய்வின்றிக்கேமனஙகொளபபயிற்றுவோர் - மார்பே சேர்வாள்வானோர்சீர்மதிநுதன்மடவரலே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சீகாழி - திருஏகபாதம் - பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

பிரமபுரத்துறைபெமமானெம்மான்
பிரமபுரததுறைபெமமானெமமான்
பிரமபுரததுறைபெம்மானெமமான
பிரமபுரத்துறைபெமமானெமமான். (க)

விண்டலர்பொழிலணிவேணுபுரத்தரன்
விண்டலாபொழிலணிவேணுபுரத்தரன்
விண்டலர்பொழிலணிவேணுபுரததரன்
விண்டலர்பொழிலணிவேணுபுரத்தரன். (உ)

புண்டரிகத்தவன்மேவியபுகலியே
புண்டரிகததவன்மேவியபுகலியே
புண்டரிகத்தவன்மேவியபுகலியே
புண்டரிகத்தவனமேவியபுகலியே. (ங)

விளஙகொளிதிகழ்தருவெஙகுருமேவினன்
விளஙகொளிதிகழ்தருவெஙகுருமேவினன்
விளஙகொளிதிகழ்தருவெஙகுருமேவினன்
விளஙகொளிதிகழ்தருவெஙகுருமேவினன். (ச)

சுடர்மணிமாளிகைத்தோணிபுரத்தவன்
சுடர்மணிமாளிகைத்தோணிபுரததவன்
சுடர்மணிமாளிகைத்தோணிபுரத்தவன்
சுடர்மணிமாளிகைத்தோணிபுரத்தவன். (ரு)

பூசுரர்சேர்பூநதராயவன்பொன்னடி
பூசுரர்சேர்பூந்தராயவன்பொன்னடி
பூசுரர்சோபூநதராயவன்பொன்னடி
பூசுரர்சேர்பூநதராயவன்பொன்னடி. (சா)

செருக்குவாய்பபுடையான்சிரபுரமென்னிற்
செருக்குவாய்ப்புடையான்சிரபுரமென்னிற்
செருச்குவாய்பபுடையான்சிரபுரமென்னிற்
செருக்குவாய்பபுடையானசிரபுரமென்னில். (எ)

பொன்னடிமாதவர்சேர்புறவத்தவன்
பொன்னடிமாதவர்சேர்புறவத்தவன்
பொன்னடிமாதவர்சேர்புறவத்தவன்
பொன்னடிமாதவர்சேர்புறவத்தவன். (அ)

தசமுகனெரிதராவூன்றுசண்பையான்
றசமுகனெரிதராவூன்றுசண்பையான்

றசமுகனெரிதரவூன்றுசண்ணையான்
றசமுகனெரிதரவூன்றுசண்ணையான். (௯)

காழியானயனுள்ளவாகாண்பரே
காழியானயனுள்ளவாகாண்பரே
காழியானயனுள்ளவாகாணபரே
காழியானயனுள்ளவாகாண்பரே. (௰)

கொச்சையண்ணலைக்கூடகிலாருடன்மூடரே
கொச்சையண்ணலைக்கூடகிலாருடன்மூடரே
கொச்சையண்ணலைக்கூடகிலாருடன்மூடரே
கொச்சையண்ணலைக்கூடகிலாருடன்மூடரே. (௧௧)

கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை
கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை
கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை
கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

---

திரு ஏகபாதத் திருவுள்ளக்கருத்து

---

௧. பிரமபுரத்துறை பெம்மானெம்மான்.

(இதன்பதப்பொருள்.) பிரமம் - ஞானாகாசமாகிய பராசத்தியை, புரத்துறை அந்தப் பரிபூரணத்தை மிகுதியாக வியகப்பப்பட்டது, பெம்மான - பெருமான, எம்மான எந்தப்பெரியோன் எனக.

(பொழிப்பு) ஞானாகாசமாகிய பராசத்தியான பரிபூரணத்தை மிகுதியாகவிய நது அந்தப் பராசத்திக கதீதமாகிய சுகமே வடிவாய முதல நடு விறுதி காணப்படாத வஸ்து எந்தப்பெரியோன்.

பிரமபுரத்துறை பெமமானெம்மான்.

(ப-ள்) பிரமபுரதது - மேலநிலதது, உறை - தணணீா, பெம் - விருப்பம், மான் - மான்போலும் விழியையுடையபெண், எம - எமமுடைய, ஆன் - ஆன்மா எனக.

(பொ-பு) மேல்நிலமாகிய ஆகாசததின்கணணே யோடாநின்ற கங்காதேவியை விரும்பித திருமுடியிலே வைததவன், எமமை நீங்காத நிலைமையையுடைய எமதுயிா.

பிரமபுரத்துறை பெமமானெம்மான்.

(ப-ள்.) பிரமம் - பிரமத்துவம், புரம் - சரீரம், உறை - எண்ணுதல், பெம் - ஆசை, ஆன் - அமையாமை, எம்மான் - என்னை யொக்கவந்தவன என்க.

(பொ-பு.) பிரமரூபத்திலே யெண்ணப்பட்ட என்னை முத்தியிலேவிடுகைக்கு அமையாத விருப்பமுள்ளவனு யென்னை யொக்கவந்தவன்.

பிரமபுரத்துறை பெம்மானெம்மான்.

(ப-ள்.) பிரமபுரத்துறை - பிரமபுரமென்கிற சீகாழிப்பதியிலே வீற்றிராநின்ற, பெம்மான் - கர்த்தாவானவன், எம்மான் - என்னுடையசுவாமி என்க.

(பொ-பு.) பிரமபுரமென்கிற சீகாழிப்பதியிலே வீற்றிராநின்ற கர்த்தாவானவன் என்னுடையசுவாமி, பெரியோனும் எனக்குயிரானவனும் என்னை யொக்கவந்தவனும் சீகாழிப்பதியில் வீற்றிருக்குங் கடவுளெனக்கூட்டிப் பொருள்கொள்க.

உ. விண்டலர்பொழிலணி வேணுபுரத்தரன்.

(ப-ள்) விண்டு - மலை, அலர் - ஒலி, பொழில் - உலகம், அணிவு - அகப்படுத்தல், எண் - பெருமை, நுபுரம் - சிலம்பு, தரன் - தரித்துள்ளவன எனக.

(பொ-பு) அஷ்டகுலபாவதங்களும், ஒலிசிறந்த தரிசுமணியாகவும், அகிலலோகங்களையும் உளளேயகப்படுத்துந் தன்மையவாயும், பெரிதாயுமுள்ள திருச்சிலம்பினைத் தரித்துள்ளவன். நூபுரம எனற்பாலது - நுபுரம் எனக குறுகிநின்றது.

விண்டலர்பொழிலணி வேணுபுரத்தரன்.

(ப-ள்) விண்டு - விஷ்ணு, அலர் - புறனுரை, பொழில - அரசினிழல், அணி பொருந்தி, வேணு - விருபபம், புரததுஅரன - புரததையரித்தவன் என்க.

(பொ-பு.) விஷ்ணுவின புறனுரையாகிய சிவதூஷணததை அரசமரததினீழலில் அவனுடனிருநது விருமபியுளள முப்புரங்களைச சங்கரிததுள்ளவன். அணணி யெனற்பாலது - அணியென இடைககுறையாய நினறது.

விண்டலா பொழிலணி வேணுபுரத்தரன்.

(ப-ள்) விணதலா - தேவாகள, பொழில் - சறபகப்பூஞ்சோலை, அணிவு, சூடுதல், எறு - எண்ணுமை, புரத்தரன - தேவேந்திரன எனக.

(பொ-பு) தேவாகள் சறபகப்பூஞ்சோலை மலாகளால அாச்சிககப் படுகினற தேவேநதிரனுடைய எணு-எனற்பாலது - எணு என நீணடது புரநதரன எனறபாலது புரததரனென வலிததுநினறது.

விண்டலர்பொழிலணி வேணுபுரந்தரன்.

(ப-ள்) விண்டு - இதழ் விணடு, அலா - மலர்கின்ற, பொழிலஅணி - சோலை சூழ்நத, வேணுபுரததுஅரன - வேணுபுரமென்று மொருபெயருள்ள சீகாழிப்பதிக்குக் காததா எனக.

(பொ-பு) இதழ்கள் விண்டுமலர்கினற சோலைசூழ்நத சீகாழிப்பதிக்குக் கர்த்தாவாயுள்ளவன். தேவேநதிரன மூங்கில்வழியாகவநது பூசிததததால வேணுபுரமென்னும் பெயர்பெற்றது சிலமபினைத தரிததுளளவரும், முப்புரததை யெரிததவரும, தேவேந்திரனுடைய சோலைசூழ்ந்த வேணுபுரததில் வீற்றிருக்கும் இறைவ னெனககூட்டி யுரைத்துக் கொள்க.

ங. புண்டரிகத்தவன மேவியபுகலியே.

(ப-ள்) புண்டரிகததவன் - இதயகமலததிலுள்ளவன், மேவியபுகலியே - எனக்கின்பந்தருவானுமாய் மீளாவழியாகிய புகலிடமாயுமுளளவன் எனக.

(பொ-பு-) இதயகமலததிலிருந் திடையறாத வானந்தம் பொழியப்பட்டென்னை மலபோதததில தளளாமல எனக் கடைககலப் பொருளாயுளளவன்.

புண்டரிகத்தவன் மேவியபுகலியே.

(ப-ள்) புணடரிகம் - திரிபுண்டரம், தவன் - மிக்க பெருமையை யுடையவன், மேவிய - பொருந்திய, புகலி - சொல்லப்பட்டவன. ஏ - என்ப தீற்றசை என்க.

(பொ-பு.) ஆன்மாக்களுக்கு இரக்ஷையாக முண்டம்போலிருந்த திருநீற்றை யணியப்பட்ட மிக்க கருணையானவனே யான்பாடும் பாடலை யுவந்துள்ளவன்.

புண்டரிகத்தவன மேவியபுகலியே.

(ப-ள்.) புண்டரிகம் - புலி, தவன் - தவமுனி, மே - கூத்து, வியம் - பொன், பு - பொது, கலி - கற்றவன் என்க.

(பொ-பு) புலிக்காலும், புலிக்கையும பெற்றுள்ள வியாக்கிரபாத முனிவருக்கு ஞானானந்தமாகிய நாடகத்தைக் கனகசபையிலே யாடல்செய்யும பரதவித்தையைக் கற்றுள்ளான். வியம் எனற்பாலது - வியவெனக கடைகுறைந்து நின்றது.

புண்டரிகத்தவன் மேவியபுகலியே.

(ப-ள்.) புண்டரிகத்தவன் - பிரமதேவன, மேவிய-தனது போதத்தாலே பணிய லுற்ற, புகலியே - புகலியென்னுஞ் சீகாழிப்பதியே எனக.

(பொ-பு.) கீழ்ச்சொனன லீலைகளெலலாஞ்செய்கின்ற சிவன் தனதிச்சையால் பொருந்தியிருக்குமூர் பிரமாவானவன பூசிதத புகலியெனனுந திருப்பதி.

௪. விளஙகொளிதிகழ்தரு வெஙகுருமேவினன்.

(ப-ள்.) விள - விளாம்பழததை, கொளி - கன்றுதணிலாக எறிந்துகொணடவ ஞகிய விஷ்ணு, தி - விட்டு விளஙகாநினற, கழ்தரு - நினமலநிடிய, எஙகு-எவ்விடததில், உருமேவினன - தனது திருமேனியிலே மேவினன எனக.

(பொ-பு) கனறுகுணிலாக எறிநது விளவின்கனியைக கொணட நாரணனைப் பிரகாசஞ்செய்யப்பட்டு நினமலமாயிருநதுளள தனது பெரிய திருமேனியிலே ஒன்றுபா தியாக வைததுள்ளான் என்க. தீ எனறபாலது - தி எனககுறுகிநின்றது. கமுதரு எனற் பாலது - கழதரு எனநின்றது.

விளஙகொளிதிகழ்தரு வெஙகுருமேவினன்.

(ப-ள்) விலங்கு எனற்பாலது விளங்கு எனவும், ஒலி எனற்பாலது-ஒளி என வுந் திரிந்து நினறது. விலங்கு-மாறுபாடாய், ஒலி-கதறப்பட்ட பௌததனது தலையிலே, தி-அக்கினியைசசொரிந்து, கழ்தரு-மிக்கபயததோடும் விழுகினற, எங்கு - ஒலிக்கும், உருமு-இடியை, ஏவினன்-விழும்படி யேவினன் எனக.

(பொ-பு.) மாறுபாடாய்க் கதறப்பட்ட பௌததனது தலையிலே அககினியைச் சொரிநது மிக்க பயத்தோடும விழுகின்ற இடியை விழும்படி யேவிப் பௌததனை வே றறுத்தானுந் தானேயன்றி யானன்ருகும்.

தீ எனற்பாலது - தி எனவும், காழ்தரு எனற்பாலது - கழ்தரு எனவும, ஏங்கு எனற்பாலது-எங்கு எனவுங் குறுகிநினறன

விளஙகொளிதிகழதரு வெஙகுருமேவினன்.

(ப-ள்) விள்-நீங்குதல், அங்கு-அவ்விடத்தில, ஒளிது-ஒளியது, இகழ்தரு- இகழப்படும், எங்குரு-எமமுடையகுரு, மேவினன-கலநதனன் எனக.

(பொ-பு.) தனது பரிபூரணததிலே தன்னையிழநது இரண்டாய் விசுவமுருகித தான் விஷமாகத் தூஷணப்பட்டு நிற்கின்ற எனக்கும் குருமூர்ததியாய் வநது என் பிற வியை யொழித்துத் தனது பேரின்ப மாகிய பரிபூரணததிலே எனதடிமை குலையாம லிரண்டற வைததவன்.

விளங்கொளிதிகழ்தரு வெங்குருமேவினன்.

(ப-ள்.) விளங்கு ஒளி-எங்கும் பிரகாசியாநின்ற கீர்த்தி, திகழ்தரு - சிறத்தல், வெங்குரு-இயமனாற் பூசிக்கப்பட்ட திருப்பதி, மேவினன்-விரும்பினன் என்க

(பொ-பு) கீழ்ச்சொல்லிப்போந்த செய்திகளெல்லாமுடைய னெத்தன்மைய னேவெனனில எங்கும பிரகாசியாநின்ற கீர்த்தியிறைற் சிறக்கப்பட்டுள்ள இயமனாற் பூசிக்கப்பட்ட வெங்குரு வென்னும் திருப்பதியை விரும்பியுள்ளான. வெங்குரு என் பதும் சீகாழி.

௫. சுடர்மணிமாளிகைத் தோணிபுரத்தவன்.

(ப-ரை.) சுடாமண்-சூடார்மண், இம்-ஈமம், ஆளி-ஆளப்பட்டவன், கைத்தோணி-போர்தொலைதத தும்பைமாலை, புரத்து-திரிபுரங்களையும், அவன-அவம் பண்ணினவன் எனக

(பொ-பு.) சுடுநிலமாகிய மயானததை நடமாடுமிடமாகக்கொணடும், முப்புரங களையும் நகைசெய்து சுடபபட்ட வெற்றிப்போரையுடைய தும்பைமாலைக் கடவுள். சூடார எனறபாலது - சுடரெனவும், ஈமம் எனறபாலது - இம் எனவும், குறுகிநின்றன. துரோணமெனறபாலது-தோணியென மருவிற்று.

சுடர்மணிமாளிகைத் தோணிபுரத்தவன்.

(ப-ரை) சுடாமணி - சூடாமணி, மாளி - மாலி, கைததோள் - துதிக்கையினை யுடைய யானையை, ரிபுரததவன-வடிவில்லாமற் செயதோன எனக

(பொ-பு,) எனனுடைசிரசுச சூடாமணியுமாய் என்மேல் வைதத மாலினையுடை யனுமாய் யாகததினகணவந்த யானையை வடிவொழிததுப் போர்க்குந தனமையை யுடையவன.

சூடாமணியெனறபாலது - சுடாமணி யெனவும், மாலியெனறபாலது - மாளி எனவும், தோல எனறபாலது - தோள எனவும் நினறன. மாலையுடையவன - மாலி. தோல்-யானை

சுடர்மணிமாளிகைத் தோணிபுரத்தவன்.

(ப-ரை.) சுடா - சூரியன், மணி-கழுவி, மாளி-கெட்டவன், கைத்தோணி-தெப் பம், புரததவன-புரநதவன் என்க

(பொ-பு) சூரியனுடைய களங்கததைக் கழுவப்பட்ட சமுததிரம் போன்ற செனனக்கடலிலே வீழ்ப்பட்டழுநதிக் கெடாநினற ஆனமாக்களுக்குக் கைபபற்றிக் கரை யேறுந தெப்பமாகப் பிரணவமென்கிற மநதிரததை அவரது செவியினகண்ணே யுண் டாக்காநின்றவன

மணணி எனபது - மணியென இடைகுறைந்து நின்றது. புரந்தவன் எனற் பாலது - புரததவன என வலிசதல் விகாரமாயிறறு.

சுடர்மணிமாளிகைத் தோணிபுரததவன்.

(ப-ரை) சுடா-விளககததையுடைய, மணி-நவரததினங்களாலே அலங்கரிக்கப் பட்ட, மாளிகை-மாளிகைகள சூழ்நத, தோணிபுரத்தவன-திருத்தோணி புரத்தினகண் ணே வாழ்கினறவன என்க

(பொ-பு) விளககததை யுடைய நவரததினங்களாலே அலங்கரிக்கப்பட்ட மாளிகைசூழ்நத திருததோணிபுரததிலே வீற்றிருக்குஞ் சிவன் இததனமையன்

௬. பூசுரர்சேர்பூநத ராயவன்பொன்னடி.

(ப-ரை.) பூ-பூமியிலுளளோர், சுரர்-தேவர்கள, சேர் - தோன்றுதல், பூ - இதய கமலம், தராயவன-தரிததவன, பொன்-பொலிவு, அடி-கண்ணாடி என்க.

(பொ-பு.) பூமியிலுள்ளாரையுந தேவகணஙகளா யுள்ளாரையுந் தனது நாபிக் கமலத்திலே தோற்றுவிககப்பட்ட பிர்மா விஷ்ணுவினது போதத்திலே கண்ணாடியும் நிழலும் போலப பிரதி விம்பியாநின்றவன். ஆடி எனபது அடியெனக் குறுகிநின்றது.

பூசுரர்சேர்பூநத ராயவன்பொன்னடி.

(ப-ரை ) பூசுரா - மலத்தைக் கழுவிய சிவஞானிகள், சேர்-திரட்சி, பூ - பொ லிவு, தராய்-பெறப்பட்ட, அவன்-அக்கடவுள், பொன்-வனப்பு, நடி-நாடகமாடப்பட்ட வன் என்க.

(பொ-பு.) மலத்திரயங்களைக் கழுவப்பட்ட சிவஞானிகள் கூட்டம் பொலிவு பெறத்தக்க வனப்பையுடைய ஆனந்தநிருத்தஞ் செய்தருள்பவன்.

பூசுரர்சேர்பூந்த ராயவன்பொன்னடி.

(ப-ள்.) பூசு-திருநீற்றையுத தூளிக்கப்பட்ட, உரர்-மார்பையுடையவர், சேர்பு-அரிதல், ஊந்தராய-தள்ளுதல், யவன-யௌவனம், பொன்-அழகு, அடி-மூலம் என்க.

(பொ-பு.) சர்வாங்கமு முதத்தூளம்பண்ணின மார்பையுடைய சிவஞானிகளும், புண்ணியபாவக் கட்டையரிந்து விசுவத்தைத் தளளப்பட்ட சிறப்பையுடையருமா யிரா நின்றவர்களுக்கு மிருதியான மூலமாயுள்ளவன். உந்தராய் என்பது - ஊந்தராயென நீண்டது.

பூசுரர்சோபூந்த ராயவன்பொன்னடி.

(ப-ள்.) பூசுரர் - மறையோர், சோ-திரட்சி, பூந்தராயவன் - பூந்தராயென்னுந் திருப்பதியிலேயுள்ளவன், பொன்னடி-அழகிய திருவடித்தாமரை என்க.

(பொ-பு.) மறுவிலா மறையோர் வாழ்கின்ற திருப்பூந்தராயென்னுந் திருப்பதியின்கண் வீற்றிராநின்ற சிவனது அழகிய திருவடித்தாமரை யென்னை யாண்டிடுவதாக. பூந்தராயென்பதுஞ்-சீகாழி.

எ. செருக்குவாய்ப்புடையான் சிரபுரமென்னில்.

(ப-ள்.) செருக்கு - மயக்கம், வாய்ப்பு - மேலீடு, உடையான் - கேடுசெய்யான், சிரபுரம்-மேலாகிய இருப்பு, எனனில்-என்னுடைய போதமே என்க.

(பொ-பு.) தனது திருவடிப்பிரசாதமில்லாதார்க்கு மலமயக்கத்தின் மேலீட்டைக்கெடாத சிவனுக்கு விசுவாதீதமான இருப்பிடம் என்து சைதன்னியமே.

செருக்குவாய்ப்புடையான் சிரபுரமென்னில்.

(ப-ள்.) செர்-சத்தாதிக ளெனுக்கூருசேரப்பட்ட, உசகு-அந்தப்பூமி, வாயப்புடையான்-தன வாயினிடமாகவுள்ள விஷ்ணு, சிா-சிறப்பு, அபுரம-உயர்போனகளேபரம், என்னில-மேனிலே என்க.

(பொ-பு.) சத்தாதிக ளெனுக்குச்சேரப்பட்ட உலகத்தைத் தன்வாயினிடமாக வுடைய விஷ்ணுவின் களேபரத்தைத் திருமேனியிலே தரித்தருள்ளான சேர-என்றபாலது-செர் எனவும், சீா-என்றபாலது-சிர எனவுங் குறுகிநின்றன.

செருக்குவாய்ப்புடையான சிரபுரமென்னில்.

(ப-ள்) செருக்கு - ஆத்துமவிகாரமாகிய காவம், வாய்-இந்திரியம், புடையான்-இடத்தான், சிரம்-மேல், புரம-சரீரம், என்னில-சத்தியம் என்க.

(பொ-பு.) ஆத்துமவிகாரமாகிய கர்மத்தினாலே இந்திரியங்களுக்கு விடயமாகிய சுவர்க்கத்தி லிச்சையுடையானுக்கு அந்தச சுவர்க்கம் மெய்யாக விசேடித்திருக்குமன்றே.

செருக்குவாய்ப்புடையான் சிரபுரமென்னில்.

(ப-ள்.) செருக்கு-இந்திரிய யுத்தத்திற்கு, ஆய்ப்பு-இளைப்பு, உள்தையான்-உள்தைக்கப்படான், சிரபுரமென்னில்-சிரபுரமென்றுரைக்கில் என்க.

(பொ-பு-) இந்திரியவன்மையாகிய யுத்தத்துக்கு இளையாமல் அந்த இந்திரியமாகிய பாணங்கள் தனதறிவுக்குள் தைக்கப்படான்.

**(தாற்பரியம்.) ஒருகாற் சிரபுரமென்று சொன்னவிடத்துப் பஞ்சேந்திரியங்களையும் அவியப்பொருது சிவனுடைய திருவடியிலே அடையா நிற்பன் என்பதாம்.**

அ. பொன்னடிமாதவர் சேர்புறவத்தவன்.

(ப-ள்) பொன்-பொலிவு, நடி-கூத்தடையான், மாது-பத்திரகாளி, அவர்-பூத கணங்கள், சேர்-தங்குதல், புறவத்தவன்-சுடுகாட்டிலுள்ளவன எனக.

(போ-பு.) பொலிவினையுடைய மாயா நிருத்தம் புரிகின்ற பத்திரகாளியும, பூத பசாசும் பொருந்திய மயானமே திருக்கோயிலாக வுள்ளவன

பொன்னடிமாதவா சேர்புறவத்தவன்.

(ப-ள்) பொன்-தூயமை, அடி-வழி, மாதவா-தபோதனர், சேர்-திரட்சி, புற வம்-முலலைநிலம், தவன-தவம்புரிநதுளளான எனக.

(போ-பு) சுத்தமான வழியைததரப்பட்ட மகா இருஷிகள திரண்டு தவம் பண்ணுநிற்கும் ஆரணியததில தனிததுத தவமபுரியாநிற்குந் தபோதனன்.

பொன்னடிமாதவர் சேர்புறவத்தவன.

(ப-ள்) பொன்-இலக்குமி, அடி-ஆபரணததொகுதி, மாது அவா-இருடி பத்தி னிகள, சோபு உறு-பிசசையிடவநதணைதல, அவததவன்-கலைசோாதலைசசெய்த நிரு வாணி எனக

(போ-பு) அழகிய ஆபரணங்களால் அலங்கரிககப்பட்டுள்ள இலக்குமியை யொதத இருடிபத்தினிகள் பிசசையிடவநதணையுமிடததுத தனசகுளள நிருவாணததை அவாகளுக்குக் கொடுததவன

பொனனடிமாதவர் சேர்புறவததவன.

(ப-ள்.) பொன-பொன்னாற்செயயப்பட்ட பாடகநூபுர காலாழிகள் முதலியவு மிடப்பட்ட, அடி-பாதம, மாதவா-கனனியா, சோ - இணைமாய் விளையாடுதல், புறவத்த வன-திருப்புறவமெனகினற திருப்பதியில் வாழகினறவன் எனக.

(போ-பு) பொனனாற் செய்யபபட்ட பாடக நூபுரஙகளைப் பாதங்களிலே யணிநதுளள கனனியாதிரணடு விளையாடுமெ புறவமெனனுந திருப்பதியில வாழ்கின்ற சிவன. புறவம எனபது-சீாகாழி

கூ தசமுகனெரிதர வூனறுசண்ணையான்.

(ப-ள்.) தசமுகன்-சயவையுடையான, எரிதர-எரிவீசு, ஊன்று-அழுநது, சண்-வேகம், பையான்-படமபொருநதிய பாம்பையுடையான எனக.

(போ-பு) ஆததுமாககளிடததுச் கருணைபிறசகு மிடமாயுள்ளவன். அச்கினி வீசப்படுதெ திருவரையில அழுநதசசாத்தியுளள விரிநத படததினையுடைய பாம்பை அரைஞாணாக வுடையான்.

தசமுகனெரிதர வூன்றுசண்பையான்.

(ப-ள்) த-அது, சமுகம்-திரட்சி, நெரி-நேரானவன, தர-புலி, ஊன-மாமிசம், துசு-தூசு, அண பையான-விரிததுடுததான எனக

(போ-பு) எலலாமிறநத அநதமாயுள்ள சிவஞானிகள் குழாத்துக்கு நேரிதா கிய சூனியமாயுளள பொருளைத தோற்றுவித் துளளானுமாயப் புலியினது ஊனபொருந் திய தோலாடையைத் திருவரையிலே விரித்துடுததவன. நேரி எனற்பாலது-நெரி எனக் குறுகினின்றது. தரக்கு எனற்பாலது-தர எனக் குறைந்தது. தூசு எனற்பாலது-துசு எனக் குறுகினின்றது. பாயான்-எனற்பாலது பையானெனக் குறுகிப் போலியாயிற்று.

தசமுகனெரிதர வூன்றுசண்பையான்.

(ப-ள்.) தசம்-தைசதம், உக-கெட, நெரி-எதிர்ப்பட்டவன், தரம்-மலை, ஊன்-திருவுளத்தடைத்தல், து-விசேஷ ஞானமுள்ளவன், சண்-சட்சமயம், பையான் - பயனு யுள்ளவன் என்க.

(பொ-பு) ஆத்துமவிகாரமான அகங்காரம் போம்படி என்னறிவிலெதிர்ப்பட்டவன் கயிலாயமலையைத் திருவுள்ளத்தடைத் தெழுந்தருளியிருந்து ஆத்துமாக்களை யிரக்ஷியாநின்ற விசேஷத்தை யுடையவனென் றேத்தும சட்சமயங்களுக்கும் அவரவர் கொண்ட பயனுயுள்ளவன். நேரி எனற்பாலது-நெரியெனக் குறுகிநின்றது.

தசமுகனெரிதர வூன்றுசண்பையான்.

(ப-ள்.) தசமுகன்-பத்துத்தலைகளையுடைய இராவணன், நெரிதர-முறிய, ஊன்று-அமுக்கிய, சண்பையான்-சண்பையென்னுந் திருப்பதியில் வீற்றிருப்பவன என்க.

(பொ-பு.) பத்துத்தலையுள்ள இராவணன், முறியும்படி திருவிரலாலடர்த்தவன் யாரெனனில், சண்பையென்னுந திருபபதியிலே வீற்றிருக்குங் கடவுள.

௧௦. காழியானய னுள்ளவாகாண்பரே.

(ப-ள்) காழியான-நிலைபெற்று நின்மலமான சித்தத்தையுடைய, யனைபத்தரிடத்து, உள்ளவா-சத்தியம், காணபரே-நோக்குவர் என்க.

(பொ-பு.) நிலைபெற்று நின்ற நின்மலமாகிய சித்தத்தையுடைய பத்தரிடத்துச் சத்தியப்பொருள விளையும்பொருட்டு ஞானநாட்டத்திஞலே அவர்களைக கடாக்ஷிகினறவன்.

காழியானய னுள்ளவாகாண்பரே.

• (ப-ள்) காழியான்-களங்கமுள்ளவன், நயனுள்ளவா-ஞானக்கண்ணுள்ளவாறு, காண்பரே-நிலைமையாக நினைப்பரே எனக.

(பொ-பு.) திருமிடற்றிற் களங்கமுடையானது கருணையை நினைந்து ஞான நாட்டத்தையுடைய சிவஞானிகள் சிவனுக்கிச்சை தனனடியாரகயே ஆஙகாரத்தைத் தகெகுமதே பணியெனத் தமதறிவிலே கருதாநிற்பர்.

காழியானய னுள்ளவாகாண்பரே.

(ப-ள்.) காழியான்-விஷ்ணு, அயன்-பிர்மா, உள்ள-நினைகக, ஆ-அதிசயம், கண்-கருதுதல், பரே-அன்னியம் எனக

(பொ-பு) விஷ்ணுவும் பிர்மாவுந திருமுடியுந் திருவடியுங் காணும்பொருட்டு வராகமும அன்னமுமாகச்சருதி வடிவுகொண்டார் ஐயோ உள்ளபடி கருதிச சிவனைப் பெரு்மல அவர்கருதிய தேதெனில், அனனியமே கண்டனர் கண-எனறபாலது-காண் என நீண்டது.

காழியானய னுள்ளவாகாண்பரே.

(ப-ள்.) காழியான்-காழிப்பதியிலுள்ளான், அயன்-ஐயன், உள-என்னறிவிலுண்டான, அவா-ஆசை, காண்பரே-தரிசிப்பரே என்க.

(பொ-பு.) என்பொருட்டாற் காழியென்னுந் திருப்பதியைப் படைத்தானை என்னையனை எனதாசையை கீழ்ச்சொன்ன விருவாசஞம் தாங்கள் தேடுந தேட்டப்பிறிவில் மயக்கத்திலே தேட்டமழித்துத் தோன்று நிற்பவனை தேடி மறந்தலொழிந் தெவ்வாறு காண்பர்.

௧௧. கொச்சையண்ணலைக் கூடகிலாருடன்மூடரே.

(ப-ள்) கொச்சை-அறியாமையைப் பொருந்தியுள்ள ஆணவமலம், அண்ணலை-பொருந்துதலை, கூடகிலார்-மாறுபட்டார், உடல்-உடலாலே, மூடரே-மூடாரே என்க.

(பொ-பு.) ஆணவமலத்தோடு கூடியுள்ள மயக்கத்துடன் மாறுபட்டோர்சள் மாயாதனுவாலு மந்திரதனுவாலு மறைக்கப்படார்கள். மூடார் எனற்பாலது - மூடர் எனக் குறுகிநின்றது.

கொச்சையண்ணலைக் கூடகிலாருடன் மூடரே.

(ப-ள்.) கொச்சை-புலால் நாற்றம், அண்ணல்-அணுகுதல், கூடகிலார் - மனம் பொருந்தமாட்டாதார், உடல் மூடரே-சரீரத்தைப் புதைப்பரே என்க.

(போ-பு.) புலால் நாற்றத்தைப் பொருந்திய வழுக்குமெய்யைப் பொய்யென்று மனங்கொள்ளமாட்டாமல் அதுவே தமது நிலைபெற்ற வுருவாக நினைதது துவராடையாலே யுடம்பைச் சூழப்பட்ட பௌத்தரும்.

கொச்சையண்ணலைக் கூடகிலாருடன்மூடரே.

(ப-ள்.) கொச்சையள்-பேதைத்தன்மையை யுடைய மச்சியகந்தி, நலை - புலப்படாநின்ற அவளது நலததைக்கருதி, கூடு-சரீரம்,அகில்ஆர் - அகில் மணம்பொருந்திய உடன-அந்தனமையாளுடன்,மூடரே-மொய்க்குமாறு பணணினது அது பொருநதுதல் எனக.

(போ-பு) பேதைத் தன்மையையுடைய மச்சியகநதியினுடைய நலததைக கொளளும்பொருட்டு அவளது சரீரமெல்லாம் சுகநத மொயசகும்படி யவளுடனே பொருநதிய பராசரனுகிய மகாவிருடிவந்து சிவனைப்பொருநதி யருசசிககப்படுதலால்.

கொச்சையண்ணலைக் கூடகிலாருடன்மூடரே.

(ப-ள்.) கொச்சை-கொச்சையாகிய பராசரன பேராலுள்ள கொசசையெனனும திருப்பதி, அணணலை - காததாவை, கூடகிலார - நோபடமாட்டார, உளதல - உளளுதல, மூடரே - அநதகார நிறைநத போததததையுடையவரே என்க.

(போ-பு) பராசரமுனிவனுற் பூசிக்கப்பட்டு அவன பெயரால பெயாபெற்றுள்ள கொச்சை நகரென்னும திருப்பதியிலே எழுந்தருளியிராநின்ற தலைமையோனை உளளபடி தரிசனம்பணணி வழிபட மாட்டாாகளது நினைவு எவ்வாறிருக்கு மென்னில், மழைக்காலிருளும வெளிதென இருண்டமயக்கததையுடைய ஆணவ போதமாயிருக்கும்

கஉ. கழுமலமுதுபதிக் கவுணியன்கட்டுரை.

(ப ள்.) கழுமல் - மிகுதிபபட்டகுற்றம், அமுது - செலம், பதிக்க - விளைவிக்க, உள்நி-உள்ளநீ, கட்டு-வடிவாகக கட்டுணடல, உரை-தேய்தல் என்க.

(போ-பு.) மிகுதிப்பட்ட தோஷமாயுள்ள சுக்கிலசுரோணிதமாகிய இருவகை நீரின் கணணே சிரமுதலாகிய அவயவமாகத தோறறிப் பூமியின்கண் செனிததுப் பரிணமித்துப் பின்பு தேயந்து மரிக்கினற செனமத்தையும். பரிணமிததல் - வேறுபடுதல்

கழுமலமுதுபதிக் கவுணியன்கட்டுரை.

(ப-ள்.) கழு-கழுவப்படும், மலம் உது-ஆணவமலமு மற்றதனுடன் சுட்டிச் சொல்லப்பட்ட மாயாமலததையுங் கனமமலததையும், பதி - பாதி, கவுணி - உள்ளே அகப்படுத்திக் கவுளிகரித்துககொள்ளுதல், அன்கண் - ஆததுமாவினிடதது, துரை - இறைவர் என்க.

(போ-பு) மேற்சொல்லிப்போந்த செனமத்தையுங் கழுவி மலத்திரயங்களையுங் கழுவாநிற்கும், (எனறபதம் நிற்க. இனிச் சிவனது நாமமுரைக்கற்பாற்று.) தனது பாதியாகிய திருவருளி னலே என்னை யகப்படுத்திக் கவுளிகரித்துக்கொண்டந்த அருள் வழியாக எனறிடததி லிடையறுமல் வாழுந் தன்னை யெனக்குததந் தடிமை குலையாம லெக்கண்ணும் விட்டு விளங்குங் கர்த்தர். பாதி எனறபாலது - பதியெனக்குறுகி நின்றது.

கழுமலமுதுபதிக் கவுணியன்கட்டுரை.

(ப-ள்.) கழும்-மயக்கம், அலம்-அலக்கண் படுதல், அமுது-அமுதம், பதி-கர்த்தர், க-சிரசு, உணியன்-உண்ணப்பட்டவர், கட்டு-விளக்கம், உரை-பொன் என்க.

(போ-பு) மாயா மயக்கத்தின்கண்ணே மயங்கி பெத்தமுத்தி யிரண்டுந்தெரியாமல் திண்டாடப்பட்ட மலபோதர்களுக்கு அமுதமபோன்று அரிதா யுள்ளவனுமாய் விட்டு விளங்கப்படாநின்ற பொன்னுருவ யுடையவனும்ச் சிருஷ்டிக்குக் கர்த்தாவாகிய பிரமனது சிரக்கபாலத்திலே பிச்சைகொண்டு நுகருங் கருணையாளனே.

கழுமலமுதுபதிக் கவுணியனகட்டுரை

(ப-ள்) கழுமலமுதுபதி - கீழ்ச்சொன்ன பதியினகண, கவுணியன் - கவுணிய கோத்திரத்துவந்த மறையோனாகிய யான, கட்டு - காட்டு, உரை - உரைப்பீராக எனக.

(போ-பு) திருக்கழுமல மென்னும் மூவாப் பழங்கிழமைப் பன்னிரு பெயர்பெற்ற அநாதி மூலமாகிய பதியிடத்துக் கவுணிய கோத்திரத்திலே தோன்றப்பட்ட யான் நிவேதிக்கப்படும் காட்டாகிய இப்பாடலைக் கீழ்ச்சொன்னவற்றிலு மந்திரங்களிலும் அழுந்தா நின்ற ஒருத்தராகிலும் பலராகிலும் உரைசெய்வார் உயர்ந்தோரே யாதலால் இப்பாடலை யிடைவிடாம லுரைசெய்வீராக காட்டு என்பது - கட்டெனக் குறுகி நின்றது.

திருச்சிற்றம்பலம்.

உரை - முற்றியது.

---

## திருவெழுகூற்றிருக்கை.

திருச்சிற்றம்பலம்.

ஒருருவாயினைமானாங்காரத - தீரியல்பாயொருவிண்முதல்பூதல - மொன்றியவிருசுடருமபர்கள்பிறவும - படைத்தளித்தழிப்பமும்மூர்த்திகளாயினை - யிருவரோடொருவனாகிநின்றனை - யோராலீழலொண்கழலிரண்டு - முப்பொழுதேத்தியநால்வர்க்கொளிநெறி - காட்டினைநாட்டமூன்றாகக்கோட்டினை - யிருநதியரவமோடொருமதிசூடினை - யொருதாளீரயின்மூவிலைச்சூல - நாற்காலமான்மறியைந்தலையரவ - மேந்தினைகாய்ந்தநால்வாய்மும்மதத் - திருகோட்டொருகரியீடழித்துரித்தனை - யொருதனுவிருகால்வளையவாங்கி - முப்புரத்தோடுநானிலமஞ்சக - கொன்றுதலத்துறவவுணரையறுத்தனை - யைம்புலனாலாமந்தக்கரண முக்குணமிருவளியொருங்கியவானோ - ரேத்தநின்றனை யொருங்கியமனத்தோ - டிருபிறப்போர்ந்துமுப்பொழுதுகுறைமுடித்து - நான்மறையோதியைவகைவேள்வி - யமைத்தாறங்கமுதலெழுத்தோதி - வரன்முறைபயின்றெழுவானறனைவளர்க்கும்-பிரமபுரம்பேணினை - யறுபதமுரலும் வேணுபுரம்விரும்பினை - யிகலியமைந்துணர்புகலியமர்ந்தனை - பொங்குநாற்கடல்சூழ்வெங்குருவிளங்கினை பாணிமூவுலகும்புதையமேன்மிதந்த- தோணிபுரத்துறைந்தனை தொலையாவிருநிதி - வாய்ந்தபூந்தராயேய்ந்தனை-வரபுரமென்றுணர்சிரபுரத்துறைந்தனை - யொருமலையெடுத்தவிருதிறலரக்கன் - விறல்கெடுத்தருளினைபுறவம்புரிந்தனை - முந்நீர்த்துயின்றோன்நான்முகனறியாப - பண்பொடுநின்றனைசண்பையமர்ந்தனை - யையுறுமமணருமறுவகைத்தேரரு - மூழியுமுணராக்காழியமர்ந்தனை - யெச்சனேழிசையோன்கொச்சையைமெச்சினை - யாறுபதமுமைந்தமர்கல்வியு - மறைமுதனான்குமூன்றுகாலமுந - தோன்றநின்றனையிருமையினொருமையு - மொருமையின்பெருமையுமறுவிலாமறையோர் - கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை - கழுமலமுதுபதிக்கவுணியனறியு - மனையதன்மையையாதலினின்னை - நினையவல்லவரில்லைநீணிலத்தே.

---

## திருவேழுகூற்றிருக்கைத் திருவுள்ளக்கருத்து.

ஓருருவாயினை - என்றது. எல்லாதத்துவங்களையுங் கடந்து வாக்குமனாதிகளுக்கு மெட்டாமலிருந்துள்ள தற்சுருபந்தான பஞ்சகிருத்தியங்களையும் நிகழ்த்த வேண்டி நின்றிச்சையா லெடுத்துக்கொண்டிருக்குந் திருமேனியை என்றவாறு.

மானுங் காரணத்திரியல்பாய் - என்றது மானென்பது - சத்தி - யாங்காரத்திரியல்பாய - தற்சத்தியைக்கொண்டு சாவானுக்கிரகமான பஞ்சகிருத்தியங்களை நடத்தவேண்டிச் சத்திசிவமாகிய விரண்டுருவாயினை என்றவாறு

ஒரு - என்றது அந்தச் சத்தியுடனே கூடியொன்றாகி நின்றனை என்றவாறு.

விண்முதல்பூதல மொன்றியவிருசுட ருமபர்கள்பிறவும் படைத்தளித்தழிப்ப மும்மூர்த்திகளாயினை - என்றது ஆகாசமுதலாகப் பூமியீறாகவுள்ள பஞ்சபூதங்களையுஞ் சந்திராதித்தர்களையுந் தேவர்களையு மற்றுமுள்ள ஆத்மாக்களையும் படைக்கைக்கும், காக்கைக்கும், அழிக்கைக்கும் பிரமா - விஷ்ணு-ருத்திரரென்கின்ற திரிமூர்த்திகளுமாயினை என்றவாறு.

இருவரோடொருவனாகி நின்றனை-என்றது. பிர்மாவையும் விஷ்ணுவையுமிடத்திலும் வலத்திலும் அடக்கிக்கொண்டு ஏகமாய்த் திரிமூர்த்தியாகி நின்றனை என்றவாறு.

ஓராலநீழலுன கழலிரண்டு முப்பொழுதேத்திய நால்வர்க்கொளி நெறிகாட்டினை என்றது விருக்ஷங்களுக்கெல்லாந் தலைமையாயிருப்பதொரு வடவிருக்ஷத்தினீழலிலே யெழுந்தருளியிருந்து நின்னழகிய ஸ்ரீபாதங்களை யுதய - மத்தியான - மத்தமனமென்கின்ற மூன்று காலமுந் தோத்திரஞ்செய்யாநின்ற அகஸ்தியன - புலத்தியன - சனகன - சனற்குமாரனென்னும் நாலவகையிருடிகளுக்குந் தற்சுருபமான திருமேனியைக்காட்டியருளினை என்றவாறு

நாட்டமூன்றாகக்கோட்டினை-என்றது பிரமா முதலாயிருந்துள்ள ஆத்மாக்கள் ரூபமென்னும் புலனாலே காவ பதார்த்தங்களையுங் காணுதபடியாலே சந்திராதித்தர்களையு மக்கினியையு மூன்றுகண்ணாகக் கொண்டருளி அந்தகாரமான விருளை யோட்டினை என்றவாறு.

இருநதியரவமோடொருமதிசூடினை - என்றது. பெரிதாகிய கங்கையையு மொப்பில்லாத பாமபினையு மொருகாலத்திலுமுதிராத பிறைக்கண்ணியையுஞ் சூடியருளினை என்றவாறு.

ஒருதாளீரயின்மூவிலைச்சூல நாற்கான்மான்மறியைந்தலை யரவமேந்தினை - என்றது. பிரணவமாயிருந்துள்ள ஒருகாம்பினையும் ஈருகின்ற கூர்மையினையும் - பிர்மா - விஷ்ணு - ருத்திரனென்கின்ற மூன்றிலையினையுமுடையதொரு சூலத்தினையும் இருக்கு யசுர் - சாமம்- அதர்வணமென்கின்ற நாலுவேதங்களையும் நாலுகாலாயிருந்துள்ளதொரு மான்கன்றினையும் ஸ்ரீ பஞ்சாக்ஷரங்களையு மஞ்சுதலையாகவுடையதொரு மகாநாகத்தினையும் அஸ்தங்களிலே தரித்தருளினை என்றவாறு.

காய்ந்தநால்வாய் மும்மதத்திருகோட் டொருகரியீடழித்துரித்தனை - என்றது. தன்னிழலைக்காயத்தக்க கோபத்தினையும் தொங்கும்வாயினையு மிரண்டு கொம்பினையுமுடைய தொரு ஒப்பில்லாத ஆனையினுடைய பெலங்களையெல்லாங்கெடுத்து உரித்துப் போர்த்தனை என்றவாறு.

ஒருதனுவிருகால்வளையவாங்கி முப்புரத்தோடு நானிலமஞ்சக் கொன்றுதலைத் துறுவவுணரையறுத்தனை-என்றது. ஒப்பில்லாத பொன்மலையாகியவில்லை யிருதலையும் வளையவாங்கி அஸ்திரத்தைத்தொடுத்து, மூன்றுபுராதிகளாகிய அவுணரையறுத்தனை என்றவாறு.

ஐம்புலனாலா மந்தக்கரண முக்குணமிருவளி யொருங்கியவானோரேத்த நின்றனை - என்றது. சத்த - பரிச - ரூப - ரச - கந்தமென்னப்பட்ட ஐம்புலன்களையு மனம் புத்தி - யாங்கார - சித்தமென்கின்ற அந்தக்கரணங்கள் நான்கினையும், ராசத - தாமத - சாத்துவிதமென்கின்ற மூன்றுகுணங்களையும், பிராணன் - அபானனென்கின்ற விரண்டு வாயுவையும் மூலாதாரத்திலே யொடுக்கிக்கொண்டு ஏகாக்கிரசித்தராயிருந்துள்ள தேவர்களேத்தநின்றனை என்றவாறு.

ஒருங்கியமனத்தோ டிருபிறப்போர்ந்து முப்பொழுதுகுறைமுடித்து நான்மறையோதி ஐவகைவேள்வியமைத்தாறங்க முதலெழுத்தோதிவரன்முறைபயின்றெழுவான்றனைவளாக்கும பிரமபுரம்பேணினை - என்றது ஆகாரம - நித்திரை - பயம் - மைதுனமிவற்றில செல்லுகின்ற மனத்தைப பரமேசுவரனுடைய ஸ்ரீபாதங்களிலே யொருக்கி முன்பு தாம் மாதாவின உதரத்திலேபிறந்த பிறப்பும், உபநயனத்தின்பின்பு உண்டான பிறப்புமாகிய இரண்டையும விசாரித்து மூன்றுசந்தியும, செபதாப்பண - அனுட்டான ஓமங்களையு முடித்து, இருக்கு-யசுா-சாம-அதாவணமெனகிற நாலுவேதங்களையுமோதி-சிவபூசை-குருபூசை மகேசுரபூசை - பிராமணபோசனம - அதிதி புசிப்பு என்கின்ற வைந்துவேள்வியு முடித்து, ஓதல-ஓதுவித்தல - வேட்டல - வேடபித்தல - ஈதல - ஏற்றல் என்னுமாறங்கங்களையும நடத்தியிவைகளுக்கு முதலாயிருந்துள்ள பிரணவத்தைசசெயு முச்சரித்துத தேவலோகத்திலுள்ள தேவாகளுக்கு மவிகொடுத்து மழையைப பெய்விக்கும் பிராமணராலே பூசிக்கப்பட்ட பிரமபுரமே திருப்பதியாக வெழுந்தருளி யிருந்தனை என்றவாறு ஆறங்கமாவன:—மந்திரம - வியாகரணம - நிகண்டு-சந்தோபிசிதம - நிருத்தம் - சோதிடம இவ்வாறு வழங்கப்படுகின்ற முறையொன்று

அறுபதமுரலும் வேணுபுரம் விரும்பினை - என்றது. அறுகாலுடைய வண்டுகளிசைபாடும பொழில்சூழந்த வேணுபுரமென்பதே திருப்பதியாக வெழுந்தருளினை என்றவாறு.—வேணுபுரமென்பதற்குக காரணம - வேணு வென்பானொரு இந்திரனுடன் கசமுகனென்பானொரு வசுரன வந்து யுத்தம்பண்ண வேணுடன் பொருது அபசெயப்பட்டுப பிரமபுரமென்று முன்சொன்ன பதியிலேவந்து பரமேசுவரன திருவடிகளிலே தம்பிரானே யடியேனுக்கமைத்தருளின சுவாக்கலோகத்தைக் கசமுகன்சங்கரிக்க அவனுடன யுத்தமபண்ணி அபசெயபபட்டுப போநதேனென்று விண்ணப்பஞ்செய்த பூசிக்கையாலே தமபிரானுங்கணேசுரனைத திருவுளத்தடைத்து வாராய் கணேசுரனே கசமுகன் வரப்பிரசாதமுடையவன ஒருவராலு மவனைச செயிக்கப்போகாது நீயுமவன வடிவாகச்சென்று உனவலக்கொமபை முறித்தெறிந்து அவனைக்கொன்று வேணுவென்கின்ற இந்திரனைச்சுவாக்கலோகத்திலே குடிபுகவிட்டுவாவென்று திருவுளமபற்றக, கணேசுரனு மவனவடிவாகச்சென்று தனவலக்கொம்பை முறித்தெறிந்து அவனையுங்கொன்று வேணுவென்கின்ற இந்திரனையும் சுவாக்கலோகத்திலே குடிபுகவிடவுண்டானதெனக.

இகலியமைந்துணர்புகலியமாந்தனை-என்றது. தேவர்கள் முன்புபுகலிடமென்று புகுதலால்திருப்புகலியென்பதே திருப்பதியாக எழுந்தருளியிருந்தனை என்றவாறு. தேவலோகமான வமராபதியைச் சூரபதமா என்பானொரு வசுரனவந்து சங்காரம் பண்ண அவனுடனே தேவேந்திரன் முதலாயுள்ளாாபொருது அபசெயப்பட்டு யுத்தத்தையொழிந்து இனி நமக்குப்பரமேசுவரன ஸ்ரீபாதமொழிய, புகலிடமில்லையென்று வேணுபுரத்திலேவந்து பரமேசுவரனைததெண்டம் பண்ணி யவனாலுண்டான நலிகையை விண்ணப்பஞ் செய்து எங்களை ரக்ஷித்தருளவேண்டுமென்னப் பரமேசுவரனும் - சுப்பிரமணியரைத் திருவுளத்தடைத்து வாராய் சுப்பிரமணியனே நீ ஆறுமுகமும், பன்னிரண்டு கையுமாகப்போய்ச் சூரபத்மாவையுஞ் செயித்துத் தேவலோகத்திலே தேவர்களையுமகுடிபுகுதவிட்டுவாவென வருகைகாரணம்.

பொங்குநீர்க்கடல்சூழ் வெங்குருவிளங்கினை - என்றது. மிகவும் கோபிக்கப்பட்ட கடல்சூழ்ந்த வெங்குருவென்றதே திருப்பதியாக எழுந்தருளியிருந்தனை என்றவாறு — லோகங்களுக்கெல்லாந் தேவகுருவாகிய பிரகஸ்பதிபகவான என்னையொழிந்து கர்த்தா வுண்டோவென்று மனோகெர்வமடைந்தமையாலே பரமேசுவரனும் இவன் மகா கெர்வியாயிருந்தா னிவனுடைய கெர்வத்தை யடக்கவேண்டுமென்று திருவுளத்தடைத்தருளித் தேவர்க்குக்குருவாகிய அதிகாரத்தை மாற்றியருளப் பயப்பட்டுப் புகலியென்கின்ற திருப்பதியிலேபோய்ப் பரமேசுவரனைத் தெண்டம்பண்ணி அடியேன்செய்த அபராதங்களைப் பொறுத்தருளி யடியேனை ரட்சித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யத் தம்பிரானும் நீ மகாவேகியாயிருந்தாயென்று திருவுளமாய் முன்புபோலே தேவர்களுக்குக் குருவாகிய வதிகாரத்தையுங் கொடுத்தகாரணத்தால் வெங்குரு என்கின்ற பெயருண்டாயது.

பாணிமூவுலகும்புதையமேல்மிதந்த தோணிபுரத்துறைந்தனை - என்றது. பாணியென்கின்ற சலப்பிரளயமாய்ப் பூமி-அந்தர-சுவர்க்க - மூன்றுலோகங்களையும் புதைப்பதைச் சங்காரம்பண்ணி யருளி யதின்மேலே தோணிபோல மிதந்த வெங்குருவாகிய தோணிபுரமென்றதே திருப்பதியாக வெழுந்தருளியிருந்தனை என்றவாறு.

தொலையாவிருநிதிவாய்ந்த பூந்தராயேய்ந்தனை-என்றது வேண்டினோர் வேண்டியது கொடுத்துத் தொலைவற்ற சங்கநிதி - பதுமநிதியென்று சொல்லப்பட்ட இரண்டுநிதிகளும் பூவுந்தாராயும் பூசிக்கையாலே திருப்பூந்தராயெனனப்பட்ட திருப்பதியிலே எழுந்தருளியிருந்தனை என்றவாறு ஒருகாலத்து நிதி தொலையாதவரத்தைப் பெறுவது காரணமாகத் திருத்தோணிபுரத்திலேவந்து தம்பிரானைப் பூசித்தளவி லுங்களுக்கு வேண்டுவதென்னென்று கேட்டருள, தம்பிரானே அடியோங்களுக்கு எல்லாக்காலங்களுந் தொலையாமல் கொடுக்கத்தக்க வரத்தைப் பிரசாதித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, அவ்வாறே தொலையாதவரத்தையுங் கொடுத்தருளி மகாசங்காரத்திலுந் தம்முடைய ஸ்ரீ அஸ்தங்களிலே தரித்தருளும் வரப்பிரசாதமுங் கொடுத்தருளினதால் பூந்தராயெனப் பெயருண்டாயது

வரபுரமென்றுணர் சிரபுரத்துறைந்தனை-என்றது வரத்தைத் தருவதான புரமென்றுணரத்தக்க சிரபுரமென்பதே திருப்பதியாக எழுந்தருளியிருந்தனை என்றவாறு — தேவர்களும்-பிரமா-விஷ்ணுக்களுமாகக்கூடி அமிர்தத்தை யுண்டாக்கித் தேவர்களை யிருத்தி விஷ்ணுபகவான அமிர்தம் படைத்துக்கொண்டு வருகிற வேளையிலேராகுகேதுவென்கின்ற இரண்டுபாம்பும் கூடிக்கரந்திருந்து அமிர்தபானம்பண்ணுவதாக இருப்பதுகண்டு விஷ்ணுபகவான் அமிர்தம் படைத்துவருகின்ற சட்டுவத்தைக்கொண்டு தலையறவெட்டுகையா லுடலிழந்து நாகமிரண்டும் நம்முடல்தரக்கடவான் பரமேசுவரனொழிய வேறேயில்லையென்று திருப்பூந்தராயிலே வந்து பரமேசுவரனைநோக்கி யிரண்டு சிரங்களும் பூசித்தலால் சிரபுரமென்று பெயருண்டாயது

ஒருமலையெடுத்த விருதிறலரக்கன விறல்கெடுத்தருளினை-என்றது. பெருமையுள்ள கயிலாயமென்னும் பேரையுடைத்தாய் உனக்கே ஆலயமாயிருப்பதொரு வெள்ளிமலையையெடுத்த பெரிய புசபெலங்கொண்ட ராவணனுடைய காவத்தைக் கெடுத்தருளினை என்றவாறு.

புறவம்புரிந்தனை-என்றது. பிரசாபதியென்கின்ற பிர்மவிருஷி - கவுதமரிஷியை நோக்கி நீ ஸ்திரிபோகத்தைக் கைவிடாமலிருக்கிறவனல்லவோவென்று தூஷணிக்கையாலே, கவுதமரிஷியும் பிரசாபதிபகவானைப்பார்த்து, நீ புறுவென்னும் ஒருபக்ஷியாய் நரமாமிசம் புசிப்பாயாகவென்று சபிக்கப் பிரசாபதியும் ஒரு புறுவாய்ப்போய்ப்பல விடத்திலும் நரமாமிசம் புசிக்கையிலே யொருநாள், மாமிசந்தேடிச் சோழவமிசத்

திலே யொருராசா தினசரிதனுயிருக்கிறவிடத்திலே யிந்தப்புறாவாகிய ரிஷியும்போய் ராசாவைப்பார்த்து எனக்கு அதிகதாகமாயிருக்கின்றது சற்று நரமாமிசம் இடவல்லையோவென்ன, ராசாவு முனக்கு எவ்வளவு மாமிசம் வேண்டுமென்னப் புறாவு முன் சரீரத்திலே ஒன்று பாதி தரவேண்டுமென்ன, ராசாவுந் தன் சரீரத்திலே யொன்றுபாதி யரிந்திடப் புறாவுக்கு நிறையைப்போதாமல் சர்வமாமிசத்தையு மரிந்திட்டு ராசாவுஞ் சோர்ந்துவிழ, இந்தப் புறாவாகிய பக்ஷியும் நமக்குத் தன சரீரத்தைத யரிந்திட்டுப் பிழைப்பித்த ராசா சரீரம்பெறும்படி யெங்ஙனே யென்று விசாரிக்குமளவில, பரமேசுவரனொழிய வேறில்லையென்று சிரபுரத்திலேவந்து பரமேசுவரனைநோக்கிஅர்ச்சிக்கப்,பரமேசுவரனுந் திருவுளத்தடைத்தருளத், தம்பிரானே யடியேன் தாகந்தீரத் தன் சரீரத்தை யரிந்திட்ட ராசாவுக்கு முன்புபோல வுடலும் பிரசாதித்து, அடியேனுக்கு மிந்தச்சாப தோஷம் நீக்கவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, ராசாவுக்குச் சரீரமுங்கொடுத்துப் புறாவுக்கு வேண்டும் வரப்பிரசாதங்களையும் பிரசாதித்துச் சாபதோஷமு மாற்றியருளிப் புறாவும் பூசிக்கையாலே புறவமென்கின்றதே திருப்பதியாக வெழுந்தருளி யிருந்தனை என்றவாறு.

முந்நீர்த்துயின்றோ னான்முகனறியாப் பண்பொடுநின்றனை - என்றது ஆற்றுநீர் வேற்றுநீர் ஊற்றுநீர் என்று சொல்லப்பட்ட முந்நீராகிய சமுத்திரத்திலேதுயிலாநின்ற நாராயணனும் நாலுமுகத்தினையுடைய பிர்மாவு மடியுமுடியுந் தேடற்கரிதாய் நின்றபண்பினையுடையையா யெழுந்தருளி யிருந்தனை என்றவாறு.

சண்பையமர்ந்தனை-என்றது. தூர்வாசமகாரிஷியாசிரமத்தே கிருஷ்ணவதாரத்திலுள்ள கோபாலப்பிள்ளைகளெல்லா மிந்த இருஷியை அசங்கதித்துத் தங்களிலே யொருவனைக் கொப்பிணியாகப் பாவித்துச்சென்று, இவள் பெறுவது ஆணோ பெண்ணோவென்றுஅந்த இருஷியைக்கேட்கையாலே, அவர்கோபித்து இவள்பெறுவது ஆணுமல்ல பெண்ணுமல்ல வுங்கள் வமிசத்தாரையெல்லாஞ் சங்கரிக்கைக்கு ஒரு இருப்புலக்கை பிறக்கக்கடவதென்று சபிக்கையாலே, அவன் வயிற்றிலிருந்து ஒரு இருப்புலக்கைவிழ, அந்தச்சேதியைக் கிருஷ்ணன் கேட்டு, தூர்வாசமகாரிஷி சாபங் கேவலமல்லவென்று அந்த இருப்புலக்கையைப் பொடியாக அராவி, அந்தப் பொடியைச் சமுத்திரத்திலே போட, அராவுதலுக்குப் பிடிபடாத ஒருவேப்பம்விதைப் பிரமாணமுள்ள விரும்பை ஒரு மீன் விழுங்கி, ஒரு வலைக்காரன் கையிலே யகப்பட்டது. அதின் வயிற்றில கிடந்த இரும்பைத் தன்னம்புத் தலையிலே வைத்தான். மற்றுஞ் சமுத்திரத்திற்போட்ட இரும்புப் பொடிகளெல்லாம அலையுடனேவந்து கரைசேர்ந்து சண்பையாக முளைத்துக் கதிராய் நின்றவிடத்திலே, கோபாலகுமாரர்கள் விளையாடி வருவோமென்று இரண்டுவகையாகப்பிரிந்து சென்று அந்தச் சண்பைக்கதிரைப்பிடுங்கி யெறிந்துகொண்டு அதனாலேபட்டு விழுந்தார்கள். இதைக் கிருஷ்ணன் கேட்டு இதினாலே நமக்கு மரணமாயிருக்குமென்று விசாரித்து, ஆலின்மேலே யொரு இலையிலே யேகாசனமாக வொருபாதத்தை மடித்து ஒருபாதத்தைத்தூக்கி யமர்ந்திருக்கிறசமயத்திலே, அந்த மீன்வேடன் பக்ஷிசாலங்களைத் தேடி வருகிறபோது தூக்கிப்பாதத்தை யொரு செம்பருந்திருக்கிறதாகப்பாவித்து அந்த அம்பைத்தொடுத்தெய்யக், கிருஷ்ணனும்பட்டுப் பரமபதத்தை அடைந்தான் இந்தச்சாப தோஷம் தூர்வாசமகாரிஷியைச்சென்று நலிகையாலே, யிந்ததோஷத்தை நீக்கிப் பரமேசுவரனைநோக்கி அர்ச்சிக்கப், பரமேசுவரனுந் திருவுளத்தடைத்தருள, இருஷியுந் தெண்டன்பண்ணித் தம்பிரானே அடியேனுடைய சாபத்தாலே கிருஷ்ணனுடைய வமிசத்திலுள்ள கோபாலரெல்லாருஞ் சண்பைக்கதிர்களால் சங்காரப்பட்டமையாலே, அந்தத் தோஷ மடியேனைவந்து நலியாதபடி திருவுளத்தடைத்தருளி ரக்ஷிக்கவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யத், தூர்வாசமகாரிஷிக்குச் சண்பைச்சாபத்தினாலுள்ள தோஷத்தை

நீக்கிச் சண்பைமுனியென்கின்ற நாமத்தையுந் தரித்தருளிச் சண்பை யென்கின்றதே திருப்பதியாக வெழுந்தருளி யிருந்தனை என்றவாறு.

ஐயுறும்மமணரு மறுவகைத்தேரரு மூழியுமுணராக் காழியமர்ந்தனை என்றது. வேதாகமபுராணசாத்திரங்களிலுள்ள பலத்தையில்லையென்று ஐயமுற்றிருக்கின்ற அமணருங், கைப்புப்-புளிப்புக்-காப்புத்-துவாப்பு-கூப்புத் தித்திப்பு - என்கின்ற அறுவகை ரசங்களையு முச்சிக்குமுன்னே புசிக்கிறதே பொருளென்றிருக்கிற புத்தரு மூழிகாலத்து மறியாமல், மிகவுங் காளிதமான விஷத்தையுடைய காளியென்கின்ற நாகம் பூசிக்கைகயாலே சீகாழியென்கின்றதே திருப்பதியாக வெழுந்தருளியிருந்தனை என்றவாறு.

எச்சனேழிசையோன் கொச்சையைமேச்சினை-என்றது. குரல்-துத்தங்-கைக்கிளை-உழை-யிளி-விளரி-தாரம-எனபதேழிசை.—குரலாவது - சங்கத்தொனி, துத்தமாவது-ஆண்மீன்பிளிறு, கைக்கிளையாவது-குதிரையின் குரல், உழையாவது-யானைக்குரல், இளியாவது-மயிலின்குரல், விளரியாவது-கடலோசை, தாரமாவது-காடையின்குரல், என்னும் நாதங்களையு மேச்சினை மகத்தான இருடிகள் எல்லாரினும விருத்தராயுள்ள பராசரப்பிரமரிஷியானவர் மற்ற ரிஷிகளெல்லாரையும்நோக்கி நீங்கள் சமுசாரிகளொழிய விரதத்தை யனுஷ்டிப்பாரில்லையென்று அவர்களைத்தூஷிக்க, அவர்களும் நீ மச்சகந்தியைப் புணர்ந்து மச்சகந்தமு முன்னைப் பற்றிவிடாம லனுபவிப்பா யென்று சபிக்கையாலே, அந்தச்சாபத்தின்படி போய் மச்சகந்தியைப்புணர்ந்து அந்தத்துர்க்கந்த மிவரைப் பற்றி யொருயோசனைதூரம தூர்க்கந்திக்கப்படியாலே, யிதுபோகசவல்லவாபரமேசுவரனை யொழிய வேறில்லை யென்று சீகாழியிலேவந்து பரமேசுவரனை அர்ச்சிக்கப், பரமேசுவரன் உனக்கு வேண்டினதென்னென்றுகேட்கத், தம்பிரானே அடியேனைப்பற்றின துர்க்கந்தத்தை விடுவிக்க வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, தம்பிரானு மிவனென்ன கொச்சைமுனியோவென்று திருவுளமா யிவன்மேற் பற்றின துர்க்கந்தத்தையும்போக்கிச் சுகந்தத்தையும் பிரசாதித்தருளிக் கொச்சையென்கிற சந்தானநாமத்தையுந் தரித்தருளிக் கொச்சையென்கின்றதே திருப்பதியாக வெழுந்தருளியிருந்தனை என்றவாறு

ஆறுபதமுமைந்தமாகலவியு மறைமுதலநான்கு மூன்றுகாலமுந் தோன்றநின்றனை-என்றது பிரகிருதி-பிரத்தியாகாரம-தாலியம்-தல்லியாசீதம்-வித்தை-அவித்தையென்கின்ற ஆறுபதங்களும, ஆகமதந்த்ரஞ்-சித்திரம-வித்தாரம-வினயம் - என்கின்ற வைந்தும், இருக்கு-யசுர் சாமம்-அதர்வணமென்கின்ற நாலுவேதங்களுஞ், செலகாலம-வருகாலம்-நிகழ்காலமென்கின்ற மூன்றுகாலமுந்தோன்றநின்ற மூர்த்தியாயினை என்றவாறு.

இருமையிலொருமையும்-என்றது. சத்திசிவங்களாயிருந்துள்ள இரண்டுமொன்றாய் அர்த்தநாரீசுவரமாயிருந்துள்ளதை யென்றவாறு

ஒருமையின்பெருமை-என்றது. தானேயொரு எல்லையில்லாத சிவமாயிருந்துள்ளதை யென்றவாறு.

மறுவிலாமறையோர் கழுமலமுதுபதிக் கவுணியன்கட்டுரை கழுமலமுதுபதிக் கவுணியனறியும-என்றது. மறுவற்ற பிரமவமிசத்தில் தோன்றிய தீக்ஷைகளாலே மலத்தைக்கழுவப்பட்ட கவுணியகோத்திரத்திலேவந்த சீகாழிப்பிள்ளை கட்டுரையை விரும்பிக் கழுமலமென்கின்ற முதுபதியிலே யெழுந்தருளினை. கம்மென்கின்ற பிரமசிரசிலே உண்கின்றவனே அறியுமென்றவாறு.

அனையதன்மையையாதலின்-என்றது. அத்தன்மையாகிய வியல்பினையுடையையாதலின என்றவாறு.

நினைனிநினையவல்லவரில்லை நீணிலத்தே-என்றது. நின்னைநினைக்க வல்லார்களுக்குப் பிறப்பில்லை என்றவாறு.

திருச்சிற்றம்பலம்.

**உரை - முற்றியது.**

## திருக்கழுமலம் - பண் - மேகராகக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

சேவுயருந்திண்கொடியான்றிருவடியேசரணென்றுசிறந்தவன்பா
னாவியலுமங்கையொடுநான்முகன்றான்வழிபட்டநலங்கொள்கோயில்
வாவிதொறும்வண்கமலமுகங்காட்டச்செங்குமுதம்வாய்கள்காட்டக்
காவியிருங்கருங்குவளைகருநெய்தல்கண்காட்டுங்கழுமலமே. (க)

பெருந்தடங்கண்செந்துவர்வாய்ப்பீடுடையமலைச்செல்விபிரியாமேனி
யருந்தகையசுண்ணவெண்ணீறலங்கரித்தானமராதொழவமருங்கோயி
றருந்தடக்கைமுத்தழலோர்மனைகடொறுமிறைவனதுதன்மைபாடிக்
கருந்தடங்கண்ணார்கழல்பந்தம்மானைப்பாட்டயருங்கழுமலமே. (உ)

அலங்கன்மலிவானவருந்தானவருமலைகடலைக்கடையப்பூதங்
கலங்கவெழுகடுவிடமுண்டிருண்டமணிகண்டத்தோன்கருதுங்கோயில்
விலங்கலமர்புயன்மறந்துமீன்சனிபுக்கூன்சலிக்குங்காலந்தானுங்
கலங்கலிலாமனப்பெருவண்கையுடையமெய்யர்வாழ்கழுமலமே. (௩)

பாரிதனைநலிந்தமரர்பயமெய்தச்சயமெய்தும்பரிசுவெம்மைப், போரிசை
யும்புரமூன்றும்பொன்றவொருசிலைவளைத்தோன்பொருந்துங்கோயில், வாரி
சைமென்முலைமடவார்மாளிகையின்சூளிகைமேன்மகப்பாராட்டக், காரிகை
யுமவிசும்பியங்குங்கணங்கேட்டுமகிழ்வெய்துங்கழுமலமே. (௪)

ஊர்கின்றவரவமொளிவிடுதிங்களொடுவன்னிமத்தமன்னு
நீர்நின்றகங்கைநகுவெண்டலைசேர்செஞ்சடையோனிகழுங்கோயி
லேர்தங்குமலர்நிலவிமிசைவெள்ளிமலையென்னநிலவிநின்ற
கார்வண்டினங்கணங்களாற்கவின்பெருகுசுதைமாடக்கழுமலமே. (ரு)

தருஞ்சரதந்தந்தருளென்றடிநினைந்துதழலணைந்துதவங்கள்செய்த
பெருஞ்சதுரர்பெயலர்க்குமபீடார்தோழமையளித்தபெருமான்கோயி
லரிந்தவயலரவிந்தமதுவுகுப்பவதுகுடித்துக்களித்துவாளை
கருஞ்சகடமிளகவளர்கரும்பிரியவகம்பாயுங்கழுமலமே. (சா)

புவிமுதலைம்பூதமாய்ப்புலனைந்தாய்நிலனைந்தாய்க்கரணநான்கா
யவையவைசேர்பயனுருவாயல்லவுருவாய்நின்றானமருங்கோயி
றவமுயல்வோர்மலர்பறிப்பத்தாழவிடுகொம்புதைப்பக்கொக்கின்காய்கள்
கவணெறிகற்போற்சுனையிற்கரைசேரப்புள்ளிரியுங்கழுமலமே. (எ)

அடல்வந்தவானவரையழித்துலகுதெழித்துழலுமரக்கர்கோமான்
மிடல்வந்தவிருபதுதோணெரியவிரற்பணிகொண்டோன்மேவுங்கோயில்
நடவந்தவுழவரிதுநடவொணாவகைபரலாய்த்தென்றுதுன்று
கடல்வந்தசங்கீன்றமுத்துவயற்கரைகுவிக்குங்கழுமலமே. (அ)

பூமகடன்கோனயனும்புள்ளினொடுகேழலுருவாகிப்புக்கிட்
டாமளவுஞ்சென்றுமுடியடிகாணாவகைநின்றானமருங்கோயில்
பாமருவுங்கலைப்புலவோர்பன்மலர்கள்கொண்டணிந்துபரிசினாலே
காமனைகள்பூரித்துக்களிகூர்ந்துநின்றேத்துங்கழுமலமே. (கூ)

குணமின்றிப்புத்தர்களும்பொய்த்தவத்தைமெய்த்தவமாநின்றுகையி
லுணன்மருவுஞ்சமணர்களுமுணராதவகைநின்றானுறையுங்கோயின்
மணமருவும்வதுவையொலிவிழவினொலியிவையிசையமண்மேற்றேவர்
கணமருவுமறையினொலிகீழ்ப்படுக்கமேற்படுக்குங்கழுமலமே. (க0)

கற்றவர்கள்பணிந்தேத்துங்கழுமலத்துளீசன்றன்கழன்மேனல்லோர்
நற்றுணையாம்பெருந்தகைமைஞானசம்பந்தன்றானயந்துசொன்ன
சொற்றுணையோரைந்தினோடைந்திவைவல்லார்தூமலராடணைவராகி
முற்றுலகமதுவாண்டுமுக்கணானடிசேரமுயல்கின்றாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருவையாறு - பண் - மேகராகக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

புலனைந்தும்பொறிகலங்கிநெறிமயங்கியறிவழிந்திட்டைமேலுந்தி
யலமந்தபோதாகவஞ்சேலென்றருள்செய்வானமருங்கோயில்
வலம்வந்தமடவார்கணடமாடமுழவதிரமழையென்றஞ்சிச்
சிலமந்தியலமந்துமரமேறிமுகில்பார்க்குந்திருவையாறே. (க)

விடலேறுபடநாகமரைக்கசைத்துவெற்பரையன்பாவையோடு
மடலேறொன்றதுவேறியஞ்சொலீர்பலியென்னுமடிகள்கோயில்
கடலேறித்திரைமோதிக்காவிரியினுடன்வந்துகங்குல்வைகித்
திடலேறிச்சுரிசங்கஞ்செழுமுத்தங்கீன்றலைக்குந்திருவையாறே. (உ)

கங்காளர்கயிலாயமலையாளர்கானப்பேராளர்மங்கை
பங்காளர்திரிசூலப்படையாளர்விடையாளர்பயிலுங்கோயில்
கொங்காளப்பொழினுழைந்துகூர்வாயாலிறகுலர்த்திக்கூதனீங்கிச்
செங்கானல்வெண்குருகுபைங்கானலிரைதேருந்திருவையாறே. (ங)

ஊன்பாயுமுடைதலைகொண்டூரூரின்பலிக்குழல்வாருமையாள்பங்கர்
தான்பாயும்விடையேறுஞ்சங்கரனார்தழலுருவர்தங்குங்கோயில்
மான்பாயும்வயலருகேமரமேறிமந்திபாய்மடுக்கடோறுந்
தேன்பாயமீன்பாயச்செழுங்கமலமொட்டலருந்திருவையாறே. (௪)

நீரோடுகூவிளமுநிலாமதியும்வெள்ளெருக்குநிறைந்தகொன்றைத்
தாரோடுதண்கரந்தைச்சடைக்கணிந்ததத்துவனார்தங்குங்கோயில்
காரோடிவிசும்பளந்துகடிநாறும்பொழிலணைந்தகமழ்தார்வீதித்
தேரோடுமரங்கேறிச்சேயிழையார்நடம்பயிலுந்திருவையாறே. (ரு)

வேந்தாகிவிண்ணவர்க்குமண்ணவர்க்குநெறிகாட்டும்விகிர்தனாகிப்
பூந்தாமநறுங்கொன்றைச்சடைக்கணிந்தபுண்ணியனார்நண்ணுங்கோயில்
காந்தாரமிசையமைத்துக்காரிகையார்பண்பாடக்கவினார்வீதித்
தேந்தாமென்றரங்கேறிச்சேயிழையார்நடமாடுந்திருவையாறே. (சா)

நின்றுலாநெடுவிசும்பினெருங்கிவருபுரமூன்றுநீள்வாயம்பு
சென்றுலாம்படிதொட்டசிலையாளிமலையாளிசேருங்கோயில்
குன்றெலாங்குயில்கூவக்கொழும்பிரசமலர்பாய்ந்துவாசமல்கு
தென்றலாரடிவருடச்செழுங்கரும்புகண்வளருந்திருவையாறே. (எ)

அஞ்சாதேகயிலாயமலையெடுத்தவரக்கர்கோன்றலைகள்பத்து
மஞ்சாடுதோணெரியவடர்த்தவனுக்கருள்புரிந்தமைந்தர்கோயி
லிஞ்சாயலிளந்தெங்கின்பழம்வீழவிளமேதியிரிந்தங்கோடிச்
செஞ்சாலிக்கதிருழக்கிச்செங்கமலவயல்படியுந்திருவையாறே. (அ)

மேலோடிவிசும்பணவிவியனிலத்தைமிகவகழ்ந்துமிக்குநாடு
மாலோடுநான்முகனுமறியாதவகைநின்றான்மன்னுங்கோயில்

கோலோடக்கோல்வளையார்கூத்தாடக்குவிமுலையார்முகத்தினின்று
சேலோடச்சிலையாடச்சேயிழையார்நடமாடுந்திருவையாறே. (௯)

குண்டாடுக்குற்றுடுக்கைச்சமணரொடுசாக்கியருங்குணமொன்றில்லா
மிண்டாடுமிண்டருரைகேளாதேயாளாமினமேவித்தொண்டு
ரெண்டோளர்முக்கண்ணரெம்மீசரிறைவரினிதமருங்கோயில்
செண்டாடுபுனற்பொன்னிச்செழுமணிகள்வந்தலைக்குந்திருவையாறே. (௧0)

அன்னமலிபொழில்புடைசூழையாற்றெம்பெருமானையந்தண்காழி
மன்னியசீர்மறைநாவன்வளர்ஞானசம்பந்தன்மருவுபாட
லின்னிசையாலிவைபத்துமிசையுங்காலீசனடியேத்துவார்க
டன்னிசையோடமருலகிற்றவநெறிசென்றெய்துவார்தாழாதன்றே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருமுதுகுன்றம் - பண் - மேகராகக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

மெய்த்தாறுசுவையுமேழிசையுமெண்குணங்களும்விரும்புநால்வே
தத்தாலுமறிவொண்ணாநடைதெளியப்பளிங்கேபோலரிவைபாக
மொத்தாறுசமயங்கட்கொருதலைவன்கருதுமூருலவுதெண்ணீர்
முத்தாறுவெதிருதிரநித்திலம்வாரிக்கொழிக்குமுதுகுன்றமே. (௧)

வேரிமிகுகுழலியொடுவேடுவனாய்வெங்கானில்விசயன்மேவு
போரின்மிகுபொறையளந்துபாசுபதம்புரிந்தளித்தபுராணர்கோயில்
காரின்மலிகடிபொழில்கள்கனிகள்பலமலருதிர்த்துக்கயமுயங்கி
மூரிவளங்கிளர்தென்றற்றிருமுன்றிற்புகுந்துலவுமுதுகுன்றமே. (௨)

தக்கனதுபெருவேள்விசந்திரனிந்திரனெச்சனருக்கனங்கி
மிக்கவிதாதாவினொடுமிகவிதிவழியேதண்டித்தவிமலர்கோயில்
கொக்கினியகொழுமவருக்கைக்கதலிகமுகுயர்தெங்கின்குலைகள்சோலை
முக்கனியின்சாறொழுகிச்சேறுலராநீள்வயல்சூழ்முதுகுன்றமே. (௩)

வெம்மைமிகுபுரவாணர்மிகைசெய்யவிறலழிந்துவிண்ணுளோர்கள்
செம்மலரோனிந்திரன்மால்சென்றிரப்பத்தேவர்களேதேராக
மைம்மருவுமேருவிலுமாசுணநாணரியெரிகால்வாளியாக
மும்மதிலுநொடியளவிற்பொடிசெய்தமுதல்வனிடமுதுகுன்றமே. (௪)

இழைமேவுகலையல்குலேந்திழையாளொருபாலாயொருபால்வெள்கா
துழைமேவுமுரியுடுத்தவொருவனிருப்பிடமென்பரும்பரோங்கு
கழைமேவுமடமந்திமழைகண்டுமகவினொடும்புகவொண்கல்லின்
முழைமேவுமாலானையிரைதேருமவளர்சாரன்முதுகுன்றமே. (௫)

நகையார்வெண்டலைமாலைமுடிக்கணிந்தநாதனிடநன்முத்தாறு
வகையாரும்வரைப்பண்டங்கொண்டிரண்டுகரையருகுமறியமோதித்
தகையாரும்வரம்பிடறிச்சாலிகழுநீர்குவளைசாயப்பாய்ந்து
முகையாருஞ்செந்தாமரைகண்முகமலரவயறழுவுமுதுகுன்றமே. (௬)

அறங்கிளருநால்வேதமாலின்கீழிருந்தருளியமரர்வேண்ட
நிறங்கிளர்செந்தாமரையோன்சிரமைந்தினொன்றறுத்தநிமலர்கோயில்
திறங்கொண்மணித்தரளங்கள்வரத்திரண்டங்கெழிற்குறவர்சிறுமிமார்கண்
முறங்களினாற்கொழித்துமணிசெலவிலக்கிமுத்துலைப்பெய்முதுகுன்றமே. (௭)

கதிரொளியநெடுமுடிபத்துடையகடலிலங்கையர்கோன்கண்ணும்வாயும்
பிதிரொளியகனல்பிறங்கப்பெருங்கயிலைமலையைநிலைபெயர்த்தஞான்று
மதிலளகைக்கிறைமுரலமலரடியொன்றூன்றிமறைபாடவாங்கே
முதிரொளியசுடர்நெடுவாண்முன்னீந்தான்வாய்ந்தபதிமுதுகுன்றமே. (௮)

பூவார்பொற்றவிசின்மிசையிருந்தவனும்பூந்துழாய்புனைந்தமாலு
மோவாதுகழுகேனமாயுயர்ந்தாழ்ந்துறநாடியுண்மைகாணாத்
தேவாருந்திருவுருவன்சேருமலைசெழுநிலத்தைமூடவந்த
மூவாதமுழங்கொலிநீர்கீழ்தாழமேலுயர்ந்தமுதுகுன்றமே. (௯)

மேனியிற்சீவரத்தாரும்விரிதருதட்டுடையாரும்விரவலாகா
வூனிகளாயுள்ளார்சொற்கொள்ளாதுமுள்ளுணர்ந்தங்குய்மின்றொண்டீர்
ஞானிகளாயுள்ளார்கணான்மறையைமுழுதுணர்ந்தைம்புலன்கள்செற்று
மோனிகளாய்முனிச்செல்வர்தனித்திருந்துதவம்புரியுமுதுகுன்றமே. (௧௦)

முழங்கொலிநீர்முத்தாறுவலஞ்செய்யுமுதுகுன்றத்திறையைமூவாப்
பழங்கிழமைப்பன்னிருபேர்படைத்துடையகழுமலமேபதியாக்கொண்டு
தழங்கெரிமூன்றோம்புதொழிற்றமிழ்ஞானசம்பந்தன்சமைத்தபாடல்
வழங்குமிசைகூடும்வகைபாடுமவர்நீடுலகமாள்வர்தாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

### திருவீழிமிழலை - பண் - மேகராகக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

எரிசையும்வடவாலின்கீழிருந்தங்கீரிருவர்க்கிரங்கிநின்று [ல்
நேரியனான்மறைப்பொருளையுரைத்தொளிசேர்நெறியளித்தோனின்றகோயி
பாரிசையும்பண்டிதர்கள்பன்னாளும்பயின்றோதுமோசைகேட்டு
வேரிமலிபொழிற்கிளிகள்வேதங்கள்பொருட்சொல்லுமிழலையாமே. (௧)

பொறியரவமதுசுற்றிப்பொருப்பேமத்தாகப்புத்தேளிர்கூடி
மறிகடலைக்கடைந்திட்டவிடமுண்டகண்டத்தோன்மன்னுங்கோயில் [நெல்
செறியிதழ்த்தாமரைத்தவிசிற்றிகழ்ந்தோங்குமிலைக்குடைக்கீழ்ச்செய்யார்செ
வெறிகதிர்சாமரையிரட்டவிளவன்னம்வீற்றிருக்குமிழலையாமே. (௨)

எழுந்துலகைநலிந்துழலுமவுணர்கடம்புரமூன்றுமெழிற்கணுடி [யில்
யுழுந்துருளுமளவையினொள்ளெரிகொளவெஞ்சிலைவளைத்தோனுறையுங்கோ
கொழுந்தரளநகைகாட்டக்கோகநகமுகங்காட்டக்குதித்துநீர்மேல்
விழுந்தகயல்விழிகாட்டவிற்பவளம்வாய்காட்டுமிழலையாமே. (௩)

உரைச்சேருமெண்பத்துநான்குநூறாயிரமாம்யோனிபேத
நிரைச்சேரப்படைத்தவற்றினுயிர்க்குயிராயங்கங்கேநின்றான்கோயில்
வரைச்சேருமுகின்முழவமயில்கள்பலநடமாடவண்டுபாட
விரைச்சேர்பொன்னிதழிதரமென்காந்தள்கையேற்குமிழலையாமே. (௪)

காணுமாறரியபெருமானாகிக்காலமாய்க்குணங்கண்மூன்றாய்ப்
பேணுமூன்றுருவாகிப்பேருலகம்படைத்தளிக்கும்பெருமான்கோயி
றூணுவாய்நின்றபரதத்துவனையுத்தமனையிறைஞ்சீரென்று
வேணுவார்கொடிவிண்ணோர்தமைவிளிப்பபோலோங்குமிழலையாமே. (௫)

அகனமர்ந்தவன்பினராயறுபகைசெற்றைம்புலனுமடக்கிஞானப்
புகலுடையோர்தம்முள்ளப்புண்டரிகத்துள்ளிருக்கும்புராணர்கோயி

றகவுடைநீர்மணித்தலத்துச்சங்குளவர்க்கந்திகழச்சலசத்தீயுண்
மிகவுடையபுன்குமலர்ப்பொரியட்டமணஞ்செய்யுமிழலையாமே. (௬)

ஆறுடுசடைமுடியனனலாடுமலர்க்கையனிமயப்பாவை
கூறுடுதிருவுருவன்கூத்தாடுங்குணமுடையோன்குளிருங்கோயில்
சேறுடுசெங்கழுநீர்த்தாதாடிமதுவுண்டுசிவந்தவண்டு
வேறாயவுருவாகிச்செவ்வழிநற்பண்பாடுமிழலையாமே. (எ)

கருப்பமிகுமுடலடர்த்துக்காலூன்றிக்கைமறித்துக்கயிலையென்னும்
பொருப்பெடுக்கலுறுமரக்கன்பொன்முடிதோளொரித்தவிறற்புனிதர்கோயி
றருப்பமிகுசலந்தரன்றனுடறடிந்தசக்கரத்தைவேண்டியீண்டு
விருப்பொருமால்வழிபாடுசெய்யவிழிவிமானஞ்சேர்மிழலையாமே. (அ)

செந்தளிர்மாமலரோனுந்திருமாலுமேனமோடன்னமாகி
யந்தமடிகாணாதேயவரேத்தவெளிப்பட்டோனமருங்கோயில்
புந்தியினான்மறைவழியேபுற்பரப்பிநெய்சமிதைகையிற்கொண்டு
வெந்தழலின்வேட்டுலகின்மிகவளிப்போர்சேருமூர்மிழலையாமே. (௯)

எண்ணிறந்தவமணர்களுமிழிதொழில்சேர்சாக்கியருமென்றுந்தன்னை
நண்ணரியவகைமயக்கித்தன்னடியார்க்கருள்புரியுநாதன்கோயில்
பண்ணமருமென்மொழியார்பாலகரைப்பாராட்டுமோசைகேட்டு
விண்ணவர்கள்வியப்பெய்திவிமானத்தோடுமிழியுமிழலையாமே. (௧0)

மின்னியலுமணிமாடமிடைவீழிமிழலையானவிரையார்பாதஞ்
சென்னிமிசைக்கொண்டொழுகுஞ்சிரபுரக்கோன்செழுமறைகள்பயிலுநாவன்
பன்னியசீர்மிகுஞானசம்பந்தன்பரிந்துரைத்தபத்துமேத்தி
யின்னிசையாற்பாடவல்லாரிருநிலத்திலீசனெனுமியல்பினோரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருவேகம்பம் - பண் - மேகராகக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

வெந்தவெண்பொடிப்பூசுமார்பின்விரிநூலொருபால்பொருந்தக்
கந்தமல்குகுழலியோடுங்கடிபொழிற்கச்சிதன்னு
ளந்தமில்குணத்தாரவர்போற்றவணங்கிணோடாடல்புரி
யெந்தைமேவியவேகம்பந்தொழுதேத்தவிடர்கெடுமே. (௧)

வரந்திகழுமவுணர்மாநகர்மூன்றுடன்மாய்ந்தவியச்சரந்
துரந்தெரிசெய்ததாழ்சடைச்சங்கரன்மேயவிடங்
குருந்தமல்லிகைகோங்குமாதவிநல்லகுராமரவந்
திருந்துபைம்பொழிற்கச்சியேகம்பஞ்சேரவிடர்கெடுமே. (௨)

வண்ணவெண்பொடிப்பூசிமார்பின்வரியரவம்புனைந்து
பெண்ணமர்ந்தெரியாடல்பேணியபிஞ்ஞகன்மேயவிடம்
விண்ணமர்நெடுமாடமோங்கிவிளங்கியகச்சிதன்னுட்
டிண்ணமாம்பொழில்சூழ்ந்தவேகம்பஞ்சேரவிடர்கெடுமே. (௩)

தோலுநூலுந்துதைந்தவரைமார்பிற்சுடலைவெண்ணீறணிந்து
காலன்மாள்வுறக்காலாற்காய்ந்தகடவுள்கருதுமிட
மாலைவெண்மதிதோயுமாமதிற்கச்சிமாநகருள்
ளேலவார்குழலாளொடேகம்பமேத்தவிடர்கெடுமே. (௪)

தோடணிமலர்க்கொன்றைசேர்சடைதூமதியம்புனைந்து
பாடலனான்மறையாகப்பல்கணப்பேய்களவைசூழ
வாடல்வெண்டலையோடனலேந்திமகிழ்ந்துடனாடல்புரி
சேடர்சேர்கலிக்கச்சியேகம்பஞ்சேரவிடர்கெடுமே. (௬)

சாகம்பொன்வரையாகத்தானவர்மும்மதில்சாயவெய்
தாகம்பெண்ணொருபாகமாகவரவொடுநூலணிந்து
மாகந்தோய்மணிமாடமாமதிற்கச்சிமாநகருள்
ளேகம்பத்துறையீசன்சேவடியேத்தவிடர்கெடுமே. (௭-௮)

வாணிலாமதிபுல்குசெஞ்சடைவாளரவமணிந்து
நாணிடத்தினில்வாழ்க்கைபேணிநகுதலையிற்பலிதேர்ந்
தேணிலாவரக்கன்றனீண்முடிபத்துமிறுத்தவனூர்
சேணுலாம்பொழிற்கச்சியேகம்பஞ்சேரவிடர்கெடுமே. (௯)

பிரமனுந்திருமாலுங்கைதொழப்பேரழலாயபெம்மா
னரவஞ்சேர்சடையந்தணனணங்கினொடமருமிடங்
கரவில்வண்கையினார்கள்வாழ்கலிக்கச்சிமாநகருண்
மரவஞ்சூழ்பொழிலேகம்பந்தொழவல்வினைமாய்ந்தறுமே. (௰)

குண்டுபட்டமணாயவரோடுஞ்கூறைதமமெய்போர்க்கு
மிண்டர்கட்டியசட்டுரையவைகொண்டுவிரும்பேன்மின்
விண்டவர்புரமூன்றும்வெங்கணையொன்றினாலவியக்
கண்டவன்கலிக்கச்சியேகம்பங்காணவிடர்கெடுமே. (௧௰)

ஏரினார்பொழில்சூழ்ந்தகச்சியேகம்பமேயவனைக்
காரினார்மணிமாடமோங்குகழுமலநன்னகருட்
பாரினார்தமிழ்ஞானசம்பந்தன்பரவியபத்துமவல்லார்
சீரினார்புகழோங்கிவிண்ணவரொடுசேர்பவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

திருப்பறியலூர் - வீரட்டம் - பண் - மேகராகக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

கருத்தன்கடவுள்கனலேந்தியாடு
நிருத்தன்சடைமேனிரம்பாமதியன்
றிருத்தமுடையார்திருப்பறியலூரில்
விருத்தனெனத்தகுமவீரட்டத்தானே. (௧)

மருந்தனமுதன்மயானத்துண்மைந்தன்
பெருந்தண்புனற்சென்னிவைத்தபெருமான்
றிருந்துமறையோர்திருப்பறியலூரில்
விரிந்தமலர்ச்சோலைவீரட்டத்தானே. (௨)

குளிர்ந்தார்சடையன்கொடுஞ்சிலைவிற்காமன்
விளிந்தானடங்கவீந்தெய்தச்செற்றான்
றெளிந்தார்மறையோர்திருப்பறியலூரில்
மிளிர்ந்தார்மலர்ச்சோலைவீரட்டத்தானே. (௩)

பிறப்பாதியில்லான்பிறப்பார்பிறப்புச்
செறப்பாதியந்தஞ்செலச்செய்யுந்தேசன்

சிறப்பாடுடையார்திருப்பறியலூரில்
விறற்பாரிடஞ்சூழ்ந்தவீரட்டத்தானே. (௪)

கரிந்தாரிடுகாட்டிலாடுங்கபாலி
புரிந்தார்படுதம்புறங்காட்டிலாடுந்
தெரிந்தார்மறையோர்திருப்பறியலூரில்
விரிந்தார்பொழிற்சோலைவீரட்டத்தானே. (௫)

அரவுற்றநாணாவனலம்பதாகச்
செருவுற்றவர்புரந்தீயெழச்செற்றான்
றெருவிற்கொடிசூழ்திருப்பறியலூரில்
வெருவுற்றவர்தொழுமவீரட்டத்தானே. (௬)

நரையார்விடையானலங்கொள்பெருமா
னரையாரரவமமழநாவசைத்தான்
றிரையார்புனல்சூழ்திருப்பறியலூரில்
விரையார்மலர்ச்சோலைவீரட்டத்தானே. (௭)

வளைக்குமெயிற்றினரக்கன்வரைக்கீ
ழிளைக்குமபடிதானிருந்தேதைழயன்னந்
திளைக்கும்படுகற்றிருப்பறியலூரில்
விளைக்கும்வயல்சூழ்ந்தவீரட்டத்தானே. (௮)

வளங்கொண்மலர்மேலயனேதவண்ணன்
றுளங்குமனத்தார்தொழத்தழலாய்நின்றா
னிளங்கொம்பனாளொடிணைந்தும்பிணைந்தும்
விளங்குந்திருப்பறியல்வீரட்டத்தானே. (௯)

சடையன்பிறையன்சமண்சாக்கியரோ
டடையன்பிலாதானடியார்பெருமா
னுடையன்புலியினுரிதோலரைமேல்
விடையன்றிருப்பறியல்வீரட்டத்தானே. (௧௦)

நறுநீருகுங்காழிஞானசம்பந்தன்
வெறிநீர்த்திருப்பறியல்வீரட்டத்தானைப
பொறிநீடரவன்புனைபாடல்வல்லார்க்
கறுநீடவலமறும்பிறப்புத்தானே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருப்பராய்த்துறை - பண் - மேகராகக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

நீறுசேர்வதோர்மேனியர்நேரிழை, கூறுசேர்வதோர்கோலமாய்ப்
பாறுசேர்தலைக்கையர்பராய்த்துறை, யாறுசேர்சடையண்ணலே. (௧)

கந்தமாமலர்க்கொன்றைகமழ்சடை, வந்தபூம்புனல்வைத்தவர்
பைந்தண்மாதவிசூழ்ந்தபராய்த்துறை, யந்தமில்லவடிகளே. (௨)

வேதர்வேதமெல்லாமுறையால்விரித், தோதநின்றவொருவனார்
பாதிபெண்ணுருவாவார்பராய்த்துறை, யாதியாயவடிகளே. (௩)

தோலுந்தம்மரையாடைசுடர்விடு, நூலுந்தாமணிமார்பினர்
பாலுநெய்பயின்றாடுபேராய்த்துறை, யாலநீழலடிகளே. (ச)

விரவிநீறுமெய்பூசுவர்மேனிமே, லிரவினின்றெரியாடுவர்
பரவினரவர்வேதமபராய்த்துறை, யரவமார்த்தவடிகளே. (ரு)

மறையுமோதுவர்மான்மறிக்கையினர், கறைகொள்கண்டமுடையவர்
பறையுஞ்சங்குமொலிசெய்பராய்த்துறை, யறையநின்றவடிகளே. (சா)

விடையுமேறுவர்வெண்பொடிப்பூசுவர், சடையிற்கங்கைதரித்தவர்
படைகொள்வெண்மழுவாளர்பராய்த்துறை, யடையநின்றவடிகளே. (எ)

தருக்கின்மிக்கதசக்கிரீவன்றனை நெருக்கினார்விரலொன்றினா
லருக்கினரவர்போலும்பராய்த்துறை, யருக்கனன்னையடிகளே. (அ)

நாற்றமாமலரானொடுமாலுமாய்த், தோற்றமுமறியாதவர்
பாறறினார்வினையானபராய்த்துறை, யாறறன்மிக்கவடிகளே. (கூ)

திருவிலிச்சிலதேரமணாதர்க, ளொருவிலாவுரைகொள்ளேலும
பருவிலாலெயிலெய்துபராய்த்துறை, மருவினானைவாழ்த்துமே. (க0)

செல்வமல்கியசெல்வர்பராய்த்துறை, செல்வமேற்சிவநாயாதன
செல்வன்ஞானசம்பந்தன்செந்தமிழ் செல்வமாமிவைசெப்பவே. (கக)

திருச்சிற்றம்பலம்.

திருத்தருமபுரம் - பண் - யாழ்மூரி.

திருச்சிற்றம்பலம்.

மாதர் மடப்பிடியு - மட - வன்னமுமன்னதோர்
நடை யுடைம் மலை மக டுணையெனமகிழ்வர்
பூதவினப்படைநின - றிசை - பாடவுமாடுவ
ரவர் படர் சடை நெடு - முடியதோர்புனலர்
வேதமொடேழிசைபா - டுவ - ராழ்கடல்வெண்டிரை
யிரைந் நுரை கரை பொருது - விம்மிநின்றயலே
தாதவிழ்புன்னைதயங் - கும - லர்ச்சிறைவண்டறை
யெழில் பொழில் குயில் பயில் - தருமபுரம்பதியே. (க)

பொங்குநடைப்புகலில் - விடை - யாமவரூர்திவெண்
பொடி யணி தடங் கொண் மார்பு - பூணநூல்புரள
மங்குலிடைத்தவழு - மதி சூடுவராடுவர்
வளங் கிளர் புன லரவம் - வைகியசடையர்
சங்குகடற்றிரையா - லுதை - யுண்டுசரிந்திரிந்
தொசிந் தசைந் திசைந்து சேரும் - வெண்மணற்குவைமேற்
றங்குகதிர்ம்மணிநித் - தில - மெல்லிருளொல்கநின்
றிலங் கொளிந் நலங் கெழிற்-றருமபுரம்பதியே. (உ)

விண்ணுறுமால்வரைபோல் - விடை - யேறுவராறுசூ
டுவர் விரி சுரி யொளிகொள் - தோடுநின்றிலங்கக்
கண்ணுறநின்றொளிருங் - கதிர் - வெண்மதிக்கண்ணியர்
கரிந் கவ ரிந் கிடு - மடைகலைகலைப்

பெண்ணுறநின்றவர்தம - முரு - வமயன்மால்தொழ
வரி வையைப் பிணைந் திணைந் - தணைந்ததும்பிரியார்
தண்ணிதழ்முல்லையொடெண் - ணிதழ் - மவ்வன்மருங்கலர்
கருங் கழிந் நெருங் குறற் - றருமபுரம்பதியே. (௩)

வாருறுமென்முலைநன் - னுத - லேழையொடாடுவர்
வளங் கிளர் விளங்கு திங்கள் - வைகியசடையர்
காருறநின்றலரும் - மலர்க் - கொன்றையங்கண்ணியர்
கடு விடை கொடி வெடிகொள - காடுறைபதியர்
பாருறவிண்ணுலகம் - பர - வப்படுவோரவர்
படு தலைப் பலி கொளல் - பரிபவநினையார்
தாருறுநல்லரவம் - மலர் - துன்னியதாதுதிர்
தழை பொழில் மழை நுழை - தருமபுரம்பதியே. (௪)

நேருமவர்க்குணரப் - புகி - லில்லைநெடுஞ்சடைக்
கடும் புனல் படர்ந் திடப் - படுவதோர்நிலையர்
பேருமவர்க்கெனையா - யிர - முன்னைப்பிறப்பிறப்
பிலாதவ ருடற் றடாத - பெற்றியராறிவா
ராரமவர்க்கழல்வா - யதோர் - நாகமழைக்குற
வெழுங் கொழு மலர் கொள்பொன் - னிதழி நல்லலங்கல்
தாரமவர்க்கிமவான் - மக - ளூர்வதுபோர்விடை
கடி படு செடி பொழிற் - றருமபுரம்பதியே. (௫)

கூழையங்கோதைகுலா - யவ - டம்பிணைபுல்கமல்
குமென் முலை பொறி கொள்பொற் - கொடியிடைதுவர்வாய்
மாழையொண்கண்மடவா - ளையோர் - பாகமகிழ்ந்தவர்
வலம் மலி படை விடை - கொடிகொடும்மழுவாள்
யாழையுமெள்கிடவே - ழிசை - வண்டுமுரன்றினந்
துவன் றிமென சிறைக் கறை - யுறந்நறவிரியுந்
தாழையுஞாழலுநீ - டிய - கானலிலள்ளலி
சைபுள் ளினந் துயில் பயில் - தருமபுரம்பதியே. (௬)

தேமருவார்குழ - லன்ன - நடைப்பெடைமான்விழித்
திருந் திழை பொருந்து மேனி - செங்கதிர்விரியத்
தூமருசெஞ்சடையிற் - றுதை - வெண்மதிதுன்றுகொன்றை
தொல் புனல் சிரங் கரந் - துரிந்ததோலுடையர்
காமருதண்கழிநீ - டிய - கானல்கண்டகங்
கடல் லடை கழி யிழிய-முண்டகத்தயலே
தாமரைசேர்குவளைப் - படு - கிற்கழுநீர்மலர்
வெறி கமழ் செறி வயற் - றருமபுரம்பதியே. (௭)

தூவணநீறகலம் - பொலி - யவ்விரைபுல்கமல்
குமென் மலர் வரை புரை - திரள்புயமணிவர்
கோவணமுமுழையின் - னதள் - ளுமுடையாடையர்
கோலை மலி படை யோர்சூல - மேந்தியகுழகர்
பாவணமாவலறத் - தலை - பத்துடையவ்வரக்க
னவ் வலி யோர் கவ்வைசெய் - தருள்புரிதலைவர்
தாவணவேறுடையெம - மடி - கட்கிடம்வன்றடங்
கடல் லிடுந் தடங் கரைத் - தருமபுரம்பதியே. (அ)

வார்மலிமென்முலைமா - தொரு - பாகமதாகுவர்
வளங்கிளர் மதி யரவம - வைகியசடையர்
கூர்மலிசூலமுமவெண் - மழு - வும்மவர்வெல்படை
குனி சிலை தனி மலைய - தேநதியகுழகர்
ஆர்மலியாழிகொள்செல் - வனு - மல்லிகொடாமரைம
மிசை யவ னடிம முடி - யளவுதாமறியார்
தார்மலிகொனறையலங - கனு - கநதவர்தஙகிடந
தடங்கடல் விடுந் திரைத் - தருமபுரமபதியே. (கூ)

புத்தர்கடத்துவர்மொய்த - துறி - புல்கியகையர்பொய்
மொழிந தழி வில்பெற் றியுற்ற - நற்றவர்புலவோர்
பததர்களத்தவமெய்ப - பய - னுகவுகநதவா
நிகழ்ந தவர் சவந தவா - சுடலைபபொடியணிவர்
முத்தனவெண்ணகையொண - மலை - மாதுமைபொன்னணி
புணர் முலை பிணை துணை - யிணைவதுமபிரியார்
தத்தருவித்திரளுந - திய - மால்கடலோதம்வந
தடாந திடுந தடம் பொழிற் - றருமபுரமபதியே. (கo)

பொன்னெடுநன்மணிமா - ளிகை - சூழவிழவமமலி
பொரு புனல் திரு வமர் - புகலியென்றுலகிற்
றன்னொடுநேர்பிறவில் - பதி - ஞானசமபநதனஃ
துசெந தமிழ்த் தடங் கடற் - றருமபுரம்பதியைப்
பின்னெடுவார்சடையிற - பிறை - யுமமரவுமமுடை
யவன் பிணை துணை கழல்கள் - பேணுதலுரியா
ரின்னெடுநன்னுலகெய் - துவ - ரெய்தியபோகமு
முறு வர்க ளிடர் பிணி - துயரணைவிலரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

முத்தமிழ்விரகர்-முதற்றிருமுறைபோற்றி.

ஆ திருக்கடைக்காபபு - காஙசு.

முதறறிருமுறை-முற்றிற்று.

திருவெழு கூற்றிருக்கையில் வெங்குருவிளங்கினை யெனபத ற்கு தேவகுருவினல பூசிககப்பட்டதெனறு உரையிலிருக்கின் றது. சீகாழிப்புராணததில் வெங்குருவான அத்தியாயததில் அசுர குரு பூசித்ததாகச் சொல்லப்படுகின்றது. இங்ஙன மிருக்கின்ற மையால் உரைகாரர் புராணத்தின்படி யெழுதியிருந்தது பிற் கால மொன்றைப்பார்த் தொன்றெழுதினவர்களால் பிறழ்ந்து விட்டதோ யாதோ தெரியவில்லை.

சிவமயம்.

# இரண்டாந்திருமுறையின்

## பதிக அட்டவணை.



உ

சிவமயம்.

# திருஞானசம்பந்தசுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்.

## இரண்டாந்திருமுறை.

### திருப்பூந்தராய் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

செந்நெலங்கழனிப்பழனத்தயலேசெழும்
புன்னைவெண்கிழியிற்பவளம்புரைபூந்தராய்
துன்னிநல்லிமையோர்முடிதோய்கழலீர்சொலீர்
மின்னுசெஞ்சடையிற்பிறைபாம்புடன்வைத்ததே. (௧)

எற்றுதெண்டிரையேறியசங்கினொடிப்பிகள்
பொற்றிகழ்கமலப்பழனம்புகுபூந்தராய்
சுற்றிநல்லிமையோர்தொழுபொற்கழலீர்சொலீர்
பெற்றமேறுதல்பெற்றிமையோபெருமானீரே. (௨)

சங்குசெம்பவளத்திரண்முத்தவைதாங்கொடு
பொங்குதெண்டிரைவந்தலைக்கும்புனற்பூந்தராய்
துங்கமால்களிற்றினுரிபோர்த்துகந்தீர்சொலீர்
மங்கைபங்கமுமங்கத்தொடொன்றியமாண்பதே. (௩)

சேமவன்மதில்பொன்னணிமாளிகைசேணுயர்
பூமணங்கமழும்பொழில்சூழ்தருபூந்தராய்
சோமனும்மரவுந்தொடர்செஞ்சடையீர்சொலீர்
காமன்வெண்பொடியாகக்கடைக்கண்சிவந்ததே. (௪)

பள்ளமீனிரைதேர்ந்துழலும்பகுவாயன
புள்ளுநாடொறுஞ்சேர்பொழில்சூழ்தருபூந்தராய்த்
துள்ளுமான்மறியேந்தியசெங்கையினீர்சொலீர்
வெள்ளநீரொருசெஞ்சடைவைத்தவியப்பதே. (௫)

மாதிலங்கியமங்கையராடமருங்கெலாம
போதிலங்கமலமதுவார்புனற்பூந்தராய்ச்
சோதியஞ்சுடர்மேனிவெண்ணீறணிவீர்சொலீர்
காதிலங்குழைசங்கவெண்டோடுடன்வைத்ததே. (௬-௭)

வருக்கமார்தருவான்கடுவனொடுமந்திகள்
தருக்கொள்சோலைதருங்கனிமாந்தியபூந்தராய்
துரக்குமால்விடைமேல்வருவீரடிகேள்சொலீ
ராக்கனாற்றலழித்தருளாக்கியவாக்கமே. (௮).

வரிகொள்செங்கயல்பாய்புனல்சூழ்ந்தமருங்கெலாம்
புரிசைநீடியர்மாடநிலாவியபூந்தராய்
சுருதிபாடியபாணியறாமொழியீர்சொலீர்
கரியமாலயனேடியுமைக்கண்டிலாமையே. (௰)

வண்டலங்கழனிமடைவாளைகள்பாய்புனற்
புண்டரீகமலாந்துமதுந்தருபூந்தராய்த்
தொண்டர்வந்தடிபோற்றிசெய்தொல்புகழீர்சொலீர்
குண்டர்சாக்கியர்கூறியதாங்குறியின்மையே. (௧௰)

மகரவார்கடல்வந்தணவும்மணற்கானல்வாய்
புகலிஞானசம்பந்தனெழில்மிகுபூந்தராய்ப்
பகவனாரைப்பரவுசொன்மாலைபத்துமவல்லா
ரகல்வர்தீவினைநல்வினையோடுடனாவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருவலஞ்சுழி - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

விண்டெலாமலரவ்விரைநாறுதண்டேன்விம்மி
வண்டெலாநசையாலிசைபாடும்வலஞ்சுழி
தொண்டெலாம்பரவுஞ்சுடர்போலொளியீர்சொலீர்
பண்டெலாம்பலிதேர்ந்தொலிபாடலபயின்றதே. (௧)

பாரல்வெண்குருகும்பகுவாயனநாரையும்
வாரல்வெண்டிரைவாரிநிரைதேருங்வலஞ்சுழி
மூரல்வெண்முறுவன்னகுமொய்யொளியீர்சொலீ
ரூரல்வெண்டலைகொண்டுலகொக்கவுழன்றதே. (௨)

கிண்ணவண்ணமல்குங்கிளர்தாமரைத்தாதளாய்
வண்ணநுண்மணல்மேலனமன்னும்வலஞ்சுழிச்
சுண்ணவெண்பொடிகொண்டுமெய்பூசவல்லீர்சொலீர்
விண்ணவர்தொழவெண்டலையிற்பலிகொண்டதே. (௩)

கோடெலாநிறையக்குவளைமலருங்குழி
மாடெலாமலிநீர்மணநாறும்வலஞ்சுழிச்
சேடெலாமுடையீர்சிறுமான்மறியீர்சொலீர்
நாடெலாமறியத்தலையினனறவேற்றதே. (௪)

கொல்லைவென்றபுனத்திற்குருமாமணிகொண்டுபோய்
வல்லைநுண்மணன்மேலன்னம்வைகும்வலஞ்சுழி
முல்லைவெண்முறுவன்னகையாளொளியீர்சொலீர்
சில்லைவெண்டலையிற்பலிகொண்டுழல்செல்வமே. (௫)

பூசநீர்பொழியும்புனற்பொன்னியிற்பன்மலர்
வாசநீர்குடைவாரிடர்தீர்க்கும்வலஞ்சுழித்
தேசநீர்திருநீர்சிறுமான்மறியீர்சொலீ
ரேசவெண்டலையிற்பலிகொள்வதிலாமையே. (௬)

கந்தமாமலர்ச்சந்தொடுகாரகிலுந்தழீ
வந்தநீர்குடைவாரிடர்தீர்க்கும்வலஞ்சுழி

யந்தநீர்முதனீர்நடுவோமடியேன்சொலீர்
பந்தநீர்கருதாதுலகிற்பலிகொள்வதே. (எ)

தேனுற்றநறுமாமலர்ச்சோலையில்வண்டினம்
வானுற்றநசையாலிசைபாடும்வலஞ்சுழிக்
கானுற்றகளிற்றின்னுரிபோர்க்கவல்லீர்சொலீ
ரூனுற்றதலைகொண்டுலகொக்கவுழன்றதே (அ)

தீர்த்தநீர்வந்திழிபுனற்பொன்னியிற்பன்மலர்
வார்த்தநீர்குடைவார்கடாமலிகும்வலஞ்சுழி
யார்த்துவந்தவரக்கனையன்றடர்த்தீர்சொலீர்
சீர்த்தவெண்டலையிற்பலிகொளவந்தசீர்மையே. (௯)

உரமனுஞ்சடையீர்விடையீரும்நின்னருள்
வரமனும்பெறலாவதுமெந்தவலஞ்சுழிப்
பிரமனுந்திருமாலுமளப்பரியீர்சொலீர்
சிரமெனுங்கலனிற்பலிவேண்டியசெல்வமே. (௧0)

வீடுஞானமும்வேண்டுதிரேல்விரதங்களால்
வாடிஞானமென்னாவதுமெந்தவலஞ்சுழி
நாடிஞானசம்பந்தனசெந்தமிழ்கொண்டிசை
பாடுஞானம்வல்லாரடிசேர்வதுஞானமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருந்தெளிச்சேரி - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

பூவலர்ந்தனகொண்டுமுப்போதுமும்பொற்கழ
றேவர்வந்துவணங்குமிகுதெளிச்சேரியீர்
மேவருந்தொழிலாளொடுகேழற்பின்வேடனாம்
பாவகங்கொடுநின்றதுபோலுநும்பான்மையே. (௧)

விளைக்கும்பத்திக்குவிண்ணவர்மண்ணவரேத்தவே
திளைக்குந்தீர்த்தமறாததிகழ்தெளிச்சேரியீர்
வளைக்குந்திண்சிலைமேலைந்துபாணமுந்தானெய்து
களிக்குங்காமனையெங்ஙனநீர்கண்ணினாற்காய்ந்ததே. (௨)

வம்படுத்தமலர்ப்பொழில்சூழமதிதவழ்
செம்படுத்தசெழும்புரிசைத்தெளிச்சேரியீர்
கொம்படுத்ததோர்கோலவிடைமிசைக்கூர்மையோ
டம்படுத்தகண்ணாளொடுமேவலழகிதே. (௩)

காருலாங்கடலிப்பிகண்முத்தங்கரைப்பெயுந்
தேருலாநெடுவீதியதார்தெளிச்சேரியீ
ரேருலாம்பலிக்கேகிடைவைப்பிடமின்றியே
வாருலாமுலையாளையோர்பாகத்துவைத்ததே. (௪)

பக்கநுந்தமைப்பார்ப்பதியேத்திமுன்பாவிக்குஞ்
செக்கர்மாமதிசேர்மதில்சூழ்தெளிச்சேரியீர்
மைக்கொள்கண்ணியர்கைவளைமால்செய்துவெளவவே
நக்கராயுலகெங்கும்பலிக்குநடப்பதே. (௫)

தவளவெண்பிறைதோய்தருதாழ்பொழில்சூழநற்
றிவளமாமணிமாடந்திகழ்தெளிச்சேரியீர்
குவளைபோற்கண்ணிதுண்ணெனவந்துகுறுகிய
கவளமால்கரியெங்ஙனநீர்கையிற்காய்ந்ததே (சு)

கோட்டுநந்தபொழிலின்மிசைக்குயில்கூவிடுஞ்
சேட்டுநந்தொழிலின்மிகுதெளிச்சேரியீர்
மாட்டுத்தாமலர்க்கண்ணினாள்கங்கைநங்கையைத்
தோட்டுத்தாமலர்ச்சடையென்கொனீர்சூடிற்றே. (எ)

கொத்திரைத்தமலர்க்குழலாள்குயிலகோலஞ்சேர்
சித்திரக்கொடிமாளிகைசூழ்தெளிச்சேரியீர்
வித்தகப்படைவல்லவரக்கனைவிற்றலை
பத்திரட்டிக்கரநெரித்திட்டதும்பாதமே. (அ)

காலெடுத்ததிரைக்கைக்கரைக்கெறிகானல்சூழ்
சேலடுத்தவயற்பழனத்தெளிச்சேரியீர்
மாலடித்தலமாமலரானமுடிதேடியே
யோலமிட்டிடவெங்ஙனமோருருக்கொண்டதே (கூ)

மந்திரந்தருமாமறையோர்கடவத்தவா
செந்திலங்குமொழியவாசேர்தெளிச்சேரியீர்
வெந்தலாகியசாக்கியரோடுசமணர்கள்
தந்திறத்தனநீக்குவித்தீரோர்சதிரரே. (க0)

திக்குலாம்பொழில்சூழ்தெளிச்சேரியெஞ்செல்வனை
மிக்ககாழியுள்ஞானசம்பந்தன்விளம்பிய
தக்கபாடல்கள்பத்தும்வல்லார்கட்டமுடி
தொக்கவானவர்சூழவிருப்பவர்சொல்லிலே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருவான்மியூர் - பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்.

கரையுலாங்கடலிற்பொலிசங்கம்வெள்ளிப்பிவன்
றிரையுலாங்கழிமீனுகளுந்திருவான்மியூ
ருரையுலாம்பொருளாயுலகாளுடையீர்சொலீர்
வரையுலாமடமாதுடனாகியமாண்பதே. (க)

சந்துயர்ந்தெழுகாரகிற்றண்புனல்கொண்டுதஞ்
சிந்தைசெய்தடியார்பரவுந்திருவான்மியூர்ச்
சுந்தரக்கழன்மேற்சிலம்பார்க்கவல்லீர்சொலீ
ரந்தியின்னொளியின்னிறமாக்கியவண்ணமே. (உ)

கானயங்கியதண்கழிசூழ்கடலின்புறந்
தேனயங்கியபைம்பொழில்சூழ்திருவான்மியூர்த்
தோனயங்கமராடையினீரடிகேள்சொலீ
ரானையங்கவ்வுரிபோர்த்தனலாடவுகந்ததே. (ங)

மஞ்சுலாவியமாடமதிற்பொலிமாளிகைச்
செஞ்சொலாளர்கடாம்பயிலுந்திருவான்மியூர்த்

துஞ்சுவஞ்சிருளாடனுகக்கவல்லீர்சொலீர்
வஞ்சநஞ்சுண்டுவானவர்க்கின்னருள்வைத்ததே. (ச)

மண்ணினிறபுகழ்பெற்றவர்மங்கையர்தாம்பயி
றிண்ணென்னபுரிசைத்தொழிலார்திருவான்மியூர்த்
துண்ணெனத்திரியுஞ்சரிதைத்தொழிலீர்சொலீர்
விண்ணினிறபிறைச்செஞ்சடைவைத்தவியப்பதே. (ரு)

போதுலாவியதண்பொழில்சூழ்புரிசைப்புறந்
தீதிலந்தணரோத்தொழியாத்திருவான்மியூர்ச்
சூதுலாவியகொங்கையொர்பங்குடையீர்சொலீர்
மூதெயில்லொருமூன்றெரியூட்டியமொய்ம்பதே (சா)

வண்டிரைத்தத்தடம்பொழிலின்னிழற்கானல்வாய்த்
தெண்டிரைக்கடலோதமல்குந்திருவான்மியூர்த்
தொண்டிரைத்தெழுந்தேத்தியதொல்கழலீர்சொலீர்
பண்டிருக்கொருநால்வர்க்குநீருரைசெய்ததே. (எ)

தக்கில்வந்ததசக்கிரீவன்றலைபத்திறத்
திக்கில்வந்தலறவ்வடர்த்தீர்திருவான்மியூர்த்
தொக்கமாதொடுமேவிநறிருந்திருளென்சொலீர்
பக்கமேபலபாரிடம்பேய்கள்பயின்றதே. (அ)

பொருதுவார்கடலெண்டிசையுந்தருவாரியாற்
றிரிதரும்புகழ்செல்வமல்குந்திருவான்மியூர்ச்
சுருதிமாரிருவர்க்குமறிவரியீர்சொலீ
ரெருதுமேல்கொடுமென்றுகந்திலபலியேற்றதே. (கூ)

மைதழைத்தெழுசோலையின்மாலைசேர்வண்டினஞ்
செய்தவத்தொழிலாரிசைசேர்திருவான்மியூர்
மெய்தவப்பொடிபூசியமேனியினீர்சொலீர்
கைதவச்சமண்சாக்கியர்கட்டுரைக்கின்றதே. (க0)

மாதொர்கூறுடைநற்றவனைத்திருவான்மியூ
ராதியெம்பெருமானருள்செய்யவினவுரை
யோதியன்றெழுகாழியுள்ஞானசம்பந்தன்சொன்
னீதியானினைவார்நெடுவானுலகாள்வரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவனேகதங்காபதம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

நீடன்மேவுநிமிர்புன்சடைமேலோர்நிலாமுளை
சூடன்மேவுமறையின்முறையாலோர்சுலாவழ
லாடன்மேவுமவர்மேயவனேகதங்காபதம்
பாடன்மேவுமனத்தார்வினைபற்றறுப்பார்களே. (க)

சூலமுண்டுமழுவுண்டவர்தொல்படைசூழ்கட
லாலமுண்டபெருமான்றனனேகதங்காபத
நீலமுண்டதடங்கண்ணுமைபாகநிலாயதோர்
கோலமுண்டளவில்லைகுலாவியகொள்கையே. (உ)

செம்பினாருமதின்மூன்றெரியச்சினவாயதோ
ரம்பினாலெய்தருளவில்லியனேகதங்காபதங்
கொம்பினேரிடையாளொடுங்கூடிக்கொல்லேறுடை
நம்பனாமநவிலாதனநாவெனலாகுமே. (௩)

தந்தத்திந்தத்தடமென்றருவித்திரள்பாய்ந்துபோய்ச்
சிந்தவெந்தகதிரோனொடுமாசறுதிங்களா
ரந்தமில்லவளவில்லவனேகதங்காபத
மெந்தைவெந்தபொடிநீறணிவார்க்கிடமாவதே. (௪)

பிறையுமாசில்கதிரோனறியாமைப்பெயர்ந்துபோ
யுறையுங்கோயில்பசும்பொன்னணியாரசும்பார்புன
லறையுமோசைபறைபோலுமனேகதங்காபத
மிறையெம்மீசனெம்மானிடமாகவுகந்ததே. (௫)

தேனையேறுநறுமாமலர்கொண்டடிசேர்த்துவீ
ரானையேறுமணிசாரலனேகதங்காபதம்
வானையேறுநெறிசென்றுணருந்தனைவல்லீரே
லானையேறுமுடியானருள்செய்வதுமவானையே. (௬)

வெருவிவேழமிரியக்கதிர்முத்தொடுவெண்பளிங்
குருவிவீழவயிரங்கொழியாவகிலுந்தியெள்
ளருவிபாயுமணிசாரலனேகதங்காபத
மருவிவாழும்பெருமான்கழல்சேர்வதுவாய்மையே. (௭)

ஈரமேதுமிலனாகியெழுந்தவிராவணன்
வீரமேதுமிலனாகவிளைத்தவிலங்கலா
னாரம்பாம்பதணிவானுறனனேகதங்காபதம்
வாரமாகிநினைவார்வினையாயினமாயுமே. (௮)

கண்ணனாவண்ணமலரானொடுங்கூடியோர்க்கையமா
யெண்ணும்வண்ணமறியாமையெழுந்ததோராரழ
லண்ணனண்ணுமணிசாரலனேகதங்காபத
நண்ணும்வண்ணமுடையார்வினையாயினநாசமே. (௯)

மாபதம்மறியாதவர்சாவகர்சாக்கிய
ரேபதம்படநின்றிறுமாந்துழல்வார்கடா
மாபதமறிவீருளிராகிலனேகதங்
காபதமமர்ந்தான்கழல்சேர்தல்கருமமே. (௧௰)

தொல்லையூழிப்பெயர்தோன்றியதோணிபுரத்திறை
நல்லகேள்வித்தமிழ்ஞானசம்பந்தனல்லார்கண்மு
னல்லறீரவுரைசெய்தவனேகதங்காபதஞ்
சொல்லநல்லவடையுமடையாசுடுதுன்பமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

### திருவையாறு - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

கோடல்கோங்கங்குளிர்கூவிளமாலைகுலாயசீ
ரோடுகங்கையொளிவெண்பிறைசூடுமொருவனார்
பாடல்வீணைமுழவங்குழன்மொந்தைபண்ணாகவே
யாடுமாறுவல்லானுமையாறுடையையனே. (௧)

தன்மையாருமறிவாரில்லைதாமபிறரெள்கவே
பின்னுமுன்னுஞ்சிலபேய்க்கணஞ்சூழத்திரிதர்வர்
துன்னவாடையுடுப்பர்சுடலைப்பொடிபூசுவ
ரன்னமாலுந்துறையானுமையாறுடையையனே. (உ)

கூறுபெண்ணுடைகோவணமுண்பதுமவெண்டலை
மாறிலாருங்கொளவாரில்லைமார்பிலணிகல
மேறுமேறித்திரிவரிமையோர்தொழுதேத்தவே
யாறுநான்குஞ்சொன்னானுமையாறுடையையனே. (ந)

பண்ணினல்லமொழியார்பவளத்துவர்வாயினு
ரெண்ணினல்லகுணத்தாரிணைவேல்வென்றகண்ணினா
வண்ணம்பாடிவலிபாடித்தம்வாய்மொழிபாடவே
யண்ணல்கேட்டுகந்தானுமையாறுடையையனே. (ச)

வேனலானைவெருவவுரிபோர்த்துமையஞ்சவே
வானையூடறுக்குமதிசூடியமைந்தனூ
தேனெய்பாலுந்தயிர்தெங்கிளநீர்கரும்பின்றெளி
யானஞ்சாடுமுடியானுமையாறுடையையனே. (ரு)

எங்குமாகிநின்றானுமியல்பறியப்படா
மங்கைபாகங்கொண்டானுமதிசூடுமைந்தனும்
பங்கமில்பதினெட்டொடுநான்குக்குணர்வுமா
யங்கமாறுஞ்சொன்னானுமையாறுடையையனே. (சா)

ஓதியாருமறிவாரில்லையோதியுலகெலாஞ்
சோதியாய்நிறைந்தான்சுடர்ச்சோதியுட்சோதியான்
வேதியாகிவிண்ணாகிமண்ணோடெரிகாற்றுமா
யாதியாகிநின்றானுமையாறுடையையனே. (எ)

குரவநாண்மலர்கொண்டடியார்வழிபாடுசெய்
விரவுநீறணிவார்சிலதொண்டர்வியப்பவே
பரவிநாடொறும்பாடநம்பாவம்பறைதலா
லரவமார்த்துகந்தானுமையாறுடையையனே. (அ)

உரைசெய்தொல்வழிசெய்தறியாவிலங்கைக்குமன்
வரைசெய்தோளடர்த்துமதிசூடியமைந்தனூர்
கரைசெய்காவிரியின்வடபாலதுகாதலா
னரைசெய்மேகலையானுமையாறுடையையனே. (கூ)

மாலுஞ்சோதிமலரானுமறிகிலாவாய்மையான்
காலங்காம்புவயிரங்கடிகையன்பொற்கழல்
கோலமாய்க்கொழுந்தீனறுபவளத்திரண்டதோ
ராலநீழலுளானுமையாறுடையையனே. (க0)

கையிலுண்டுழல்வாருங்கமழ்துவராடையான்
மெய்யைப்போர்த்துழல்வாருமுரைப்பனமெய்யல
மைகொள்கண்டத்தெண்டோண்முக்கணன்கழல்வாழ்த்தவே
யையந்தேர்ந்தளிப்பானுமையாறுடையையனே. (கக)

பலிதிரிந்துழல்பண்டங்கன்மேயவையாற்றினைக்
கலிகடந்தகையான்கடற்காழியர்காவல

ஞொலிகொள்சம்பந்தனொண்டமிழ்பத்தும்வல்லார்கள்போய்
மலிகொள்விண்ணிடைமன்னியசீர்பெறுவார்களே. (கஉ)

திருச்சிற்றம்பலம்

---

## திருவாஞ்சியம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

வன்னிகொன்றைமதமத்தமெருக்கொடுகூவிளம்
பொன்னியன்றசடையிற்பொலிவித்தபுராணனார்
தென்னவென்றுவரிவண்டிசைசெய்திருவாஞ்சிய
மென்னையாளுடையானிடமாகவுகந்ததே. (க)

காலகாலர்கரிகானிடைமாநடமாடுவர்
மேலர்வேலைவிடமுண்டிருளுகின்றமிடற்றினர்
மாலைகோலமதிமாடமன்னுந்திருவாஞ்சிய
ஞாலம்வந்துபணியப்பொலிகோயினயந்ததே. (உ)

மேவிலொன்றர்விரிவுற்றவிரண்டினர்மூன்றுமாய்
நாவிலைந்தருருவாறினரேழோசையர்
தேவிலெட்டர்திருவாஞ்சியமேவியசெல்வனார்
பாவந்தீர்ப்பர்பழிபோக்குவர்தம்மடியார்கட்கே. (௩)

சூலமேந்திவளர்கையினர்மெய்சுவண்டாகவே
சாலநல்லபொடிப்பூசுவர்பேசுவர்மாமறை
சீலமேவுபுகழாற்பெருகுந்திருவாஞ்சிய
மாலமுண்டவடிகள்ளிடமாகவமர்ந்ததே. (௪)

கையிலங்குமறியேந்துவர்காந்தளம்மெல்விரற்
றையல்பாகமுடையாரடையார்புரஞ்செற்றவர்
செய்யமேனிக்கரியமிடற்றார்திருவாஞ்சியத்
தையர்பாதமடைவார்க்கடையாவருநோய்களே. (௫)

அரவம்பூண்பரணியுஞ்சிலம்பார்க்கவகந்தொறு
மிரவினல்லபலிபேணுவர்நாணிலர்நாமமே
பரவுவார்வினைதீர்க்கநின்றார்திருவாஞ்சிய
மருவியேத்தமடமாதொடுநின்றவெம்மைந்தரே. (௬)

விண்ணிலானபிறைசூடுவர்தாழ்ந்துவிளங்கவே
கண்ணினாலனங்கனுடலம்பொடியாக்கினார்
பண்ணிலானவிசைபாடன்மல்குந்திருவாஞ்சியத்
தண்ணலார்தம்மடிபோற்றவல்லார்க்கில்லையல்லலே. (௭)

மாடநீடுகொடிமன்னியதென்னிலங்கைக்குமன்
வாடியூடவரையாலடர்த்தன்றருள்செய்தவர்
வேடவேடர்திருவாஞ்சியமேவியவேந்தரைப்
பாடநீடுமனத்தார்வினைபற்றறுப்பார்களே. (௮)

செடிகொணோயினடையார்திறம்பார்செறுதீவினை
கடியகூற்றமுங்கண்டகலும்புகழுன்வரு
நெடியமாலோடயனேத்தநின்றார்திருவாஞ்சியத்
தடிகள்பாதமடைந்தாரடியாரடியார்கட்கே. (௯)

பிண்டமுண்டுதிரிவார்பிரியுந்துவராடையார்
மிண்டர்மிண்டுமொழிமெய்யலபொய்யிலையெம்மிறை
வண்டுகிண்டிமருவும்பொழில்சூழ்திருவாஞ்சியத்
தண்டவாணனடிகைதொழுவாரகில்லையல்லலே. (௧௦)

தென்றலொன்றுபொழில்சென்றணையுந்திருவாஞ்சியத்
தென்றுநின்றவிறையானையுணர்ந்தடியேத்தலா
னன்றுகாழிமறைஞானசம்பந்தனசெந்தமி
ழொன்றுமுள்ளமுடையாரடைவாருயர்வானமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருச்சிக்கல் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

வானுலாவுமதிவந்துலாவுமதின்மாளிகை
தேனுலாவுமலர்ச்சோலைமல்குந்திகழ்சிக்கலுள்
வேனல்வேளைவிழித்திட்டவெண்ணெய்ப்பெருமானடி
ஞானமாகநினைவார்வினையாயினநையுமே. (௧)

மடங்கொள்வாளைகுதிகொள்ளுமண்மலர்ப்பொய்கைசூழ்
திடங்கொள்மாமறையோரவர்மல்கியசிக்கலுள்
விடங்கொள்கண்டத்துவெண்ணெய்ப்பெருமானடிமேவிய
யடைந்துவாழுமடியாரவரல்லலறுப்பரே. (௨)

நீலநெய்தனிலவிம்மலருஞ்சுனைநீடிய
சேலுமாலுங்கழனிவ்வளமல்கியசிக்கலுள்
வேலொண்கண்ணியினாளையொர்பாகன்வெண்ணெய்ப்பிரான்
பாலவண்ணன்கழலேத்தநம்பாவம்பறையுமே. (௩)

கந்தமுந்தக்கைதைப்பூத்துக்கமழ்ந்துசேரும்பொழிற்
செந்துவண்டின்னிசைபாடன்மல்குந்திகழ்சிக்கலுள்
வெந்தவெண்ணீறணிந்தவெண்ணெய்ப்பிரான்விரையார்கழல்
சிந்தைசெய்வார்வினையாயினதேய்வதுதிண்ணமே. (௪)

மங்குறங்குமறையோர்கண்மாடத்தயலேமிகு
தெங்குதுங்கப்பொழிற்செல்வமல்குந்திகழ்சிக்கலுள்
வெங்கண்வெள்ளேறுடைவெண்ணெய்ப்பிரானடிமேவவே
தங்குமேற்சரதந்திருநாளுந்தகையுமே. (௫)

வண்டிரைத்துமதுவிம்மியமாமலர்ப்பொய்கைசூழ்
தொண்டிரைக்கொள்புனல்வந்தொழுகும்வயற்சிக்கலுள்
விண்டிரைத்தமலராற்றிகழ்வெண்ணெய்ப்பிரானடி
கண்டிரைத்துமனமேமதியாய்கதியாகவே. (௬)

முன்னுமாடம்மதின்மூன்றுடனேயெரியாய்விழத்
துன்னுவார்வெங்கணையொன்றுசெலுத்தியசோதியான்
செந்நெலாரும்வயற்சிக்கல்வெண்ணெய்ப்பெருமானடி
யுன்னிநீடுமனமேநினையாய்வினையோயவே. (௭)

தெற்றலாகியதென்னிலங்கைக்கிறைவன்மலை
பற்றினான்முடிபத்தொடுதோள்கணெரியவே

செற்றதேவனஞ்சிக்கல்வெண்ணெய்ப்பெருமானடி
யுற்றுநீநினையாய்வினையாயினவோயவே. (௯)

மாவினோடருமாமறைவல்லமுனிவனுங்
கோவினார்குறுகச்சிவன்சேவடிகோலியுந்
சீலந்தாமறியார்திகழ்சிக்கல்வெண்ணெய்ப்பிரான்
பாலுமபன்மலர்தூவபபறையுநமபாவமே. (௯)

பட்டைநற்றுவராடையினுரொடுமபாங்கிலாக்
கட்டமண்கழுக்கள்சொல்லினைக்கருதாதுநீர்
சிட்டன்சிக்கல்வெண்ணெய்ப்பெருமான்செழுமாமறைப
பட்டன்சேவடியேபணிமின்பிணிபோகவே. (௧0)

கந்தமார்பொழிற்காழியுள்ஞானசமபந்தனற
செந்தண்பூம்பொழிறசிக்கல்வெண்ணெய்ப்பெருமானடிச்
சந்தமாச்சொன்னசெந்தமிழ்வல்லவர்வானிடை
வெந்தநீறணியும்பெருமானடிமேவரே. (௧௧)

திருச்சிற்றமபலம்.

---

திருமழபாடி - பண் - இந்தளம்.

திருசசிறறம்பலம.

களையும்வல்வினையஞ்சனெஞ்சேகருதார்புர
முளையுமபூசல்செய்தானுயர்மால்வரைநல்விலா
வளையவெஞ்சரமவாங்கியெய்தான்மதத்துமபிவண்
டளையுங்கொன்றையந்தார்மழபாடியுளண்ணலே. (௧)

காச்சிலாதபொன்னொக்குங்கனவயிரத்திர
ளாச்சிலாதபளிங்கினனஞ்சுமுன்னாடினன்
பேச்சினாலுமக்காவதென்பேதைகாள்பேணுமின்
வாச்சமாளிகைசூழ்மழபாடியைவாழ்த்துமே. (௨)

உரங்கெடுப்பவனுமபர்களாயவர்தங்களைப
பரங்கெடுப்பவனஞ்சையுண்டுபகலோன்றனை
முரண்கெடுப்பவனமுப்புரந்தீயெழச்செற்றுமுன்
வரங்கொடுப்பவன்மாமழபாடியுள்வள்ளலே. (௩)

பள்ளமார்சடையிற்புடையேயடையப்புனல்
வெள்ளமாதரித்தான்விடையேறியவேதியன்
வள்ளன்மாமழபாடியுண்மேயமருந்தினை
யுள்ளமாதரிமின்வினையாயினவோயவே. (௪)

தேனுலாமலர்கொண்டுமெய்த்தேவர்கள்சித்தர்கள்
பானெயஞ்சுடனாட்டமுன்னாடியபால்வணன்
வானநாடர்கள்கைதொழுமாமழபாடியெங்
கோனைநாடொறுங்குமபிடவேகுறிகூடுமே. (௫)

தெரிந்தவன்புரமூன்றுடன்மாட்டியசேவகன்
பரிந்துகைதொழுவாரவர்தம்மனம்பாவினன்
வரிந்தவெஞ்சிலையொன்றுடையான்மழபாடியைப்
புரிந்துகைதொழுமின்வினையாயினபோகுமே. (௬)

கந்தவார்குழலாளுமைதனொருகூறுடை
யெந்தையானிமையாதமுக்கண்ணினனெம்பிரான்
மைந்தன்வார்பொழில்சூழ்மழபாடிமருந்தினைச்
சிந்தியாவெழுவார்வினையாயினதேயுமே. (எ)

இரக்கமொன்றுமிலானிறையான்றிருமாமலை
யுரக்கையாலெடுத்தான்றனதோண்முடிபத்திற
விரற்றலைநிறுவியுமையாளொடுமேயவன்
வரத்தையேகொடுக்குமமழபாடியுள்வள்ளலே. (அ)

ஆலமுண்டமுதமமரர்க்கருளண்ணலார்
காலனாருயிர்வீட்டியமாமணிகண்டனார்
சாலநல்லடியார்தவத்தார்களுஞ்சார்விட
மாலயன்வணங்குமழபாடியெம்மைந்தனே. (௯)

கலியின்வல்லமணுஞ்சருஞ்சாக்கியப்பேய்களு
நலியநாள்கெடுத்தாண்டவென்னாதனார்வாழ்பதி
பலியும்பாட்டொடுபண்முழவும்பலவோசையு
மலியுமாமழபாடியைவாழ்த்திவணங்குமே. (௧௦)

மலியுமாளிகைசூழ்மழபாடியுள்வள்ளலைக்
கலிசெய்மாமதில்சூழ்கடற்காழிக்கவுணியன். (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருமங்கலக்குடி - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

சீரினார்மணியுமகிழ்சந்துஞ்செறிவரை
வாரிநீர்வருபொன்னிவடமங்கலக்குடி
நீரின்மாமுனிவன்னெடுங்கைகொடுநீர்தனைப்
பூரித்தாட்டியர்ச்சிக்கவிருந்தபுராணனே. (௧)

பணங்கொளாடரவல்குனல்லார்பயின்றேத்தவே
மணங்கொண்மாமயிலாலும்பொழில்சூழ்மங்கலக்குடி
யிணங்கிலாமறையோனிமையோர்தொழுதேத்திட
வணங்கினோடிருந்தானடியேசரணாகுமே. (௨)

கருங்கையானையினீருரிபோர்த்திடுகள்வனார்
மருங்கெலாமணமார்பொழில்சூழ்மங்கலக்குடி
யரும்புசேர்மலர்க்கொன்றையினானடியன்பொடு
விரும்பியேத்தவல்லார்வினையாயினவீடுமே. (௩)

பறையினோடொலிபாடலுமாடலும்பாரிட
மறையினோடியன்மல்கிடுவார்மங்கலக்குடிக்
குறைவிலாநிறைவேகுணமில்குணமேயென்று
முறையினால்வணங்குமவர்முன்னெறிகாண்பரே. (௪)

ஆனிலங்கிளரைந்துமவிர்முடியாடியோர்
மானிலங்கையினான்மணமார்மங்கலக்குடி
யூனில்வெண்டலைக்கையுடையானுயர்பாதமே
ஞானமாகநின்றேத்தவல்லார்வினைநாசமே. (௫)

செற்றதேவனஞ்சிக்கல்வெண்ணெய்ப்பெருமானடி
யுற்றுநீநினையாய்வினையாயினவோயவே. (௯)

மாலினோடருமாமறைவல்லமுனிவனுங்
கோலினார்குறுகச்சிவன்சேவடிகோலியுஞ்
சீலந்தாமறியார்திகழ்சிக்கல்வெண்ணெய்யபிரான்
பாலுமன்மலர்தூவப்பறையுநம்பாவமே. (௯)

பட்டைநற்றுவராடையினாரொடும்பாங்கிலாக்
கட்டமண்கழுக்கள்சொல்வினைக்கருதாதுநீர்
சிட்டன்சிக்கல்வெண்ணெய்ப்பெருமான்செழுமாமறைப்
பட்டன்சேவடியேபணிமின்பிணிபோகவே. (௧௦)

கந்தமார்பொழிற்காழியுள்ஞானசம்பந்தனற
செந்தண்பூம்பொழிற்சிக்கல்வெண்ணெய்ப்பெருமானடிச்
சந்தமாச்சொன்னசெந்தமிழ்வல்லவர்வானிடை
வெந்தநீறணியும்பெருமானடிமேவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருமழபாடி - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

களையும்வல்வினையஞ்சனெஞ்சேகருதார்புர
முளையும்பூசல்செய்தானுயர்மால்வரைநல்விலா
வளையவெஞ்சரம்வாங்கியெய்தான்மதத்தும்பிவண்
டளையுங்கொன்றையந்தார்மழபாடியுளண்ணலே. (௧)

காச்சிலாதபொன்னோக்குங்கனவயிரத்திர
ளாச்சிலாதபளிங்கினனஞ்சுமுனாடினன்
பேச்சினாலுமக்காவதென்பேதைகாளபேணுமின்
வாச்சமாளிகைசூழ்மழபாடியைவாழ்த்துமே. (௨)

உரங்கெடுப்பவனும்பர்களாயவர்தங்களைப்
பரங்கெடுப்பவனஞ்சையுண்டுபகலோன்றனை
முரண்கெடுப்பவன்முப்புரந்தீயெழச்செற்றுமுன்
வரங்கொடுப்பவன்மாமழபாடியுள்வள்ளலே. (௩)

பள்ளமார்சடையிற்புடையேயடையப்புனல்
வெள்ளமாதரித்தானவிடையேறியவேதியன்
வள்ளன்மாமழபாடியுண்மேயமருந்தினை
யுள்ளமாதரிமின்வினையாயினவோயவே. (௪)

தேனுலாமலர்கொண்டுமெய்த்தேவர்கள்சித்தர்கள்
பானெய்யஞ்சுடனாட்டமுன்னாடியபால்வணன்
வானநாடர்கள்கைதொழுமாமழபாடியெங்
கோனைநாடொறுங்கும்பிடவேகுறிகூடுமே. (௫)

தெரிந்தவன்புரமூன்றுடன்மாட்டியசேவகன்
பரிந்துகைதொழுவாரவர்தம்மனம்பாவினான்
வரிந்தவெஞ்சிலையொன்றுடையான்மழபாடியைப்
புரிந்துகைதொழுமின்வினையாயினபோகுமே. (௬)

கந்தவார்குழலாளுமைதன்னொருகூறுடை
யெந்தையானிமையாதமுக்கண்ணினனெம்பிரான்
மைந்தன்வார்பொழில்சூழ்மழபாடிமருந்தினைச்
சிந்தியாவெழுவார்வினையாயினதேயுமே. (எ)

இரக்கமொன்றுமிலானிறையான்றிருமாமலை
யுரக்கையாலெடுத்தான்றனதோண்முடிபத்திற
விரற்றலைந்நிறுவியுமையாளொடுமேயவன்
வரதனையேகொடுக்குமமழபாடியுள்வள்ளலே. (அ)

ஆலமுண்டமுதமமரர்க்கருளண்ணலார்
காலனாருயிர்வீட்டியமாமணிகண்டனார்
சாலநல்லடியார்தவத்தார்களுஞ்சார்விட
மாலயன்வணங்குமழபாடியெம்மைந்தனே. (கூ)

கலியின்வல்லமணுஞ்சருஞ்சாக்கியப்பேய்களு
நலியநாள்கெடுத்தாண்டவென்னுதனார்வாழ்பதி
பலியும்பாட்டொடுபண்முழவும்பலவோசையு
மலியுமாமழபாடியைவாழ்ந்திவணங்குமே. (க0)

மலியுமாளிகைசூழ்மழபாடியுள்வள்ளலைக்
கலிசெய்மாமதில்சூழ்கடற்காழிக்கவுணியன். (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருமங்கலக்குடி - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

சீரினார்மணியும்மகிழ்சந்துஞ்செறிவரை
வாரிநீர்வருபொன்னிவடமங்கலக்குடி
நீரின்மாமுனிவன்னெடுங்கைகொடுநீர்தனைப
பூரித்தாட்டியர்ச்சிக்கவிருந்தபுராணனே. (க)

பணங்கொளாடரவல்குனல்லார்பயின்றேத்தவே
மணங்கொண்மாமயிலாலும்பொழில்சூழ்மங்கலக்குடி
யிணங்கிலாமறையோனிமையோர்தொழுதேத்திட
வணங்கினோடிருந்தானடியேசரணாகுமே. (உ)

கருங்கையானையினீருரிபோர்த்திடுகள்வனார்
மருங்கெலாமணமார்பொழில்சூழ்மங்கலக்குடி
யரும்புசேர்மலர்க்கொன்றையினானடியன்பொடு
விரும்பியேத்தவல்லார்வினையாயினவீடுமே. (ங)

பறையினோடொலிபாடலுமாடலும்பாரிட
மறையினோடியன்மல்கிடுவார்மங்கலக்குடிக்
குறைவிலாநிறைவேகுணமில்குணமேயென்று
முறையினால்வணங்குமவர்முன்னெறிகாண்பரே. (௪)

ஆனிலங்கிளரைந்துமவிர்முடியாடியோர்
மானிலங்கையினான்மணமார்மங்கலக்குடி
யூனில்வெண்டலைக்கையுடையானுயர்பாதமே
ஞானமாகநின்றேத்தவல்லார்வினைநாசமே. (ரு)

தேனுமாயமுதாகிநின்றான்றெளிசிந்தையுள்
வானுமாய்மதிசூடவல்லான்மங்கலக்குடிக்
கோனைநாடொறுமேத்திக்குணங்கொடுகூறுவா
ரூனமானவைபோயறுமுய்யும்வகையதே. (௬)

வேள்படுத்திடுகண்ணினன்மேருவில்லாகவே
வாளரக்கர்புரமெரித்தான்மங்கலக்குடி
யாளுமாதிப்பிரானடிகளடைந்தேத்தவே
கோளுநாளவைபோயறுங்குற்றமில்லார்களே. (௭)

பொலியுமால்வரைபுக்கெடுத்தான்புகழ்ந்தேத்திட
வலியும்வாளொடுநாள்கொடுத்தான்மங்கலக்குடிப்
புலியினாடையினானடியேத்திடும்புண்ணியர்
மலியும்வானுலகம்புகவல்லவர்காண்மினே (௮)

ஞாலமுன்படைத்தானளிர்மாமலர்மேலயன்
மாலுங்காணவொணாவெரியான்மங்கலக்குடி
யேலவார்குழலாளொருபாகமிடங்கொடு
கோலமாகிநின்றான்குணங்கூறுங்குணமதே. (௯)

மெய்யின்மாசினர்மேனிவிரிதுகிலாடையர்
பொய்யைவிட்டிடும்புண்ணியர்சேர்மங்கலக்குடிச்
செய்யமேனிச்செழும்புனற்கங்கைசெறிசடை
யையன்சேவடியேத்தவல்லார்க்கழகாகுமே. (௧௦)

மந்தமாம்பொழில்சூழ்மங்கலக்குடிமன்னிய
வெந்தையையெழிலார்பொழிற்காழியர்காவலன்
சிந்தைசெய்தடிசேர்ந்திடுஞானசம்பந்தன்சொன்
முந்தியேத்தவல்லாரிமையோர்முதலாவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## சீகாழி - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

கல்லானைநான்மறையோடியலாறங்கம்
வல்லானைவல்லவர்பான்மலிந்தோங்கிய
சொல்லானைத்தொன்மதிற்காழியேகோயிலா
மில்லானையேத்தநின்றார்க்குளதின்பமே (௧)

நம்மானமாற்றிநமக்கருளாய்நின்ற
பெம்மானைப்பேயுடனாடல்புரிந்தானை
யம்மானையந்தணர்சேருமணிக்காழி
யெம்மானையேத்தவல்லார்க்கிடரில்லையே. (௨)

அருந்தானையன்புசெய்தேத்தகில்லார்பாற்
பொருந்தானைப்பொய்யடிமைத்தொழில்செய்வாருள்
விருந்தானைவேதியரோதிமிடைகாழி
யிருந்தானையேத்துமினும்வினையேகவே. (௩)

புற்றானைப்புற்றரவமரையின்மிசை
சுற்றானைத்தொண்டுசெய்வாரவர்தம்மொடு

மற்றானையந்தணர்காழியமர்கோயில்
பற்றானைப்பற்றிநின்றார்க்கில்லைபாவமே. (ச)

நெதியானைநெஞ்சிடங்கொள்ளநினைவார்தம்
விதியானைவிண்ணவர்தாம்வியந்தேத்திய
கதியானைக்காருலவும்பொழிற்காழியாம்
பதியானைப்பாடமினும்வினைபாறுமே. (ரு)

செப்பானமென்முலையாளைத்திகழ்மேனி
வைப்பானைவார்கழலேத்திநினைவார்த
மொப்பானையோதமுலாவுகடற்காழிமே
யப்பானைமேவியமாந்தாரேவியந்தாரே. (சா)

துன்பானைத்துன்பமழித்தருளாக்கிய
வின்பானையேழிசையின்னிலைபேணுவா
ரன்பானையணிபொழிற்காழிநகர்மேய
நம்பானைநண்ணவல்லார்வினைநாசமே, (எ)

குன்றானைக்குன்றெடுத்தான்புயநாலைந்து
வென்றானைமென்மலரானொடுமாலொட
நின்றானைநேரிழையாளொடுங்காழியு
ணன்றானைநம்பெருமானைநணுகுமே. (அ)

சாவாயுமவாதுசெய்சாவகசாக்கியர்
மேவாதசொல்லைவைகேட்டுவெகுளன்மின்
பூவாயகொன்றையினானைப்புனற்காழிக்
கோவாயகொள்கையினானடிகூறுமே. (கூ-க0)

கழியாருஞ்சீரோதமல்குங்கடற்காழியு
ளொழியாதுகோயில்கொண்டானையுகந்துளதித்
தழியாதசொல்ஞானசம்பந்தன்றமிழான
மொழிவார்கண்மூவுலகும்பெறுவார்களே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருவேகம்பம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

மறையானைமாசிலாப்புன்சடைமல்குவெண்
பிறையானைப்பெண்ணொடாணாகியபெம்மானை
யிறையானையேர்கொள்கச்சித்திருவேகம்பத்
துறைவானையல்லதுள்காதெனதுள்ளமே. (க)

நொச்சியேவன்னிகொன்றைமதிகூவிள
முச்சியேபுனைதல்வேடம்விடையூர்தியான
கச்சியேகம்பமேயகறைக்கண்டனை
நச்சியேதொழுமினுமமேல்வினைகையுமே. (உ)

பாராருமுழவமொந்தைகுழலியாழொலி
சீராலேபாடலாடல்சிறைதவில்லதோ
ரேரார்பூங்கச்சியேகம்பனையெம்மானைச்
சேராதாரின்பமாயநெறிசேராரே. (ங)

குன்றேய்க்குநெடுவெண்மாடக்கொடிகூடிப்போய்
மின்றேய்க்குமுகில்கடோயும்வியன்கச்சியுண்
மன்றேய்க்குமல்குசீரான்மலியேகம்பஞ்
சென்றேய்க்குஞ்சிந்தையார்மேல்வினைசேராவே. (ச)

சடையானைத்தலைகையேந்திப்பலிதருவார்தங்
கடையேபோய்மூன்றுங்கொண்டான்கலிக்கச்சியுட்
புடையேபொன்மலருங்கம்பைக்கரையேகம்ப
முடையானையல்லதுள்காதெனதுள்ளமே. (ரு)

மழுவாளோடெழில்கொள்சூலப்படைவல்லார்தங்
கெழுவாளோரிமையாருச்சியுமையாள்கங்கை
வழுவாமேமல்குசீரால்வளரேகம்பந்
தொழுவாரேவிழுமியார்மேல்வினைதுன்னாவே. (சா)

விண்ணுளார்மறைகள்வேதமவிரித்தோதுவார்
கண்ணுளார்கழலின்வெல்வார்கரிகாலனை
நண்ணுவாரெழில்கொள்கச்சிநகரேகம்பத்
தண்ணலாராடுகின்றவலங்காரமே. (எ)

தூயானைத்தூயவாயம்மறையோதிய
வாயானைவாளரக்கன்வலிவாட்டிய
தீயானைத்தீதில்கச்சித்திருவேகம்ப
மேயானைமேவுவாரென்றலைமேலாரே. (அ)

நாகம்பூணேறதேறனாறுங்கொன்றைத்தார்
பாகம்பெண்பலியுமேற்பர்மறைபாடுவ
ரேகம்பமேவியாடுமிறையிருவர்க்கு
மாகம்பமறியுமவண்ணத்தவனல்லனே. (கூ)

போதியார்பிண்டியாரென்றிவர்பொய்ந்நூலை
வாதியாவம்மினம்மாவெனுங்கச்சியு
ளாதியார்மேவியாடுந்திருவேகம்ப
நீதியாற்றொழுமினும்மேல்வினைநில்லாவே. (க0)

அந்தண்பூங்கச்சியேகம்பனையம்மானைக்
கந்தண்பூங்காழியூரன்கலிக்கோவையாற்
சந்தமேபாடவல்லதமிழ்ஞானசம்
பந்தன்சொற்பாடியாடக்கெடும்பாவமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கோழம்பம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

நீற்றானைநீள்சடைமேனிறைவுள்ளதோ
ராற்றானையழகமர்மென்முலையாளையோர்
கூற்றானைக்குளிர்பொழிற்கோழம்பமேவிய
வேற்றானையேத்துமினுமமிடரேகவே. (க)

மையானகண்டனை மான்மறியேந்திய
கையானைக்கடிபொழிற்கோழம்பமேவிய
செய்யானைத்தேனெய்பாலுந்திகழ்ந்தாடிய
மெய்யானைமேவுவார்மேல்வினைமேவாவே. (உ)

ஏதனையேதமிலாவிமையோர்தொழும்
வேதனைவெண்குழைதோடுவிளங்கிய
காதனைக்கடிபொழிற்கோழம்பமேவிய
நாதனையேத்துமினுமவினைநையவே. (ங)

சடையானைத்தண்மலரானசிரமேந்திய
விடையானைவேதமும்வேள்வியுமாயநன்
குடையானைக்குளிர்பொழில்சூழ்திருக்கோழம்ப
முடையானையுள்குமினுள்ளங்குளிரவே. (ச)

காரானைக்கடிகமழ்கொன்றையம்போதணி
தாரானைத்தையலோர்பான்மகிழ்ந்தோங்கிய
சீரானைச்செறிபொழிற்கோழம்பமேவிய
வூரானையேத்துமினுமிடரொல்கவே. (ரு)

பண்டாலினிழலானைப்பரஞ்சோதியை
விண்டார்கடம்புரமூன்றுடனேவேவக்
கண்டானைக்கடிகமழ்கோழம்பங்கோயிலாக்
கொண்டானைக்கூறுமினுள்ளங்குளிரவே. (சு)

சொல்லானைச்சுடுகணையாற்புரமூன்றெய்த
வில்லானைவேதமும்வேள்வியுமானானைக்
கொல்லானையுரியானைக்கோழம்பமேவிய
நல்லானையேத்துமினும்மிடர்நையவே. (எ)

விற்றானைவல்லரக்கர்விறல்வேந்தனைக்
குற்றானைத்திருவிரலாற்கொடுங்காலனைச்
செற்றானைச்சீர்திகழுந்திருக்கோழம்பம்
பற்றானைப்பற்றுவார்மேல்வினைபற்றாவே. (அ)

நெடியானோடயனறியாவகைநின்றதோர்
படியானைப்பண்டரங்கவேடம்பயின்றானைக்
கடியாருங்கோழம்பமேவியவெள்ளேற்றின
கொடியானைக்கூறுமினுள்ளங்குளிரவே. (கூ)

புத்தருந்தோகையம்பீலிகொள்பொய்ம்மொழிப்
பித்தரும்பேசுவபேசல்லபீடுடைக்
கொத்தலர்தண்பொழிற்கோழம்பமேவிய
வத்தனையேத்துமினல்லலறுக்கவே. (க0)

தண்புனலோங்குதண்ணந்தராய்மாநகர்
நண்புடைஞானசம்பந்தனம்பானுறை
விண்பொழிற்கோழம்பமேவியபத்திவை
பண்கொளப்பாடவல்லார்க்கில்லைப்பாவமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருவெண்ணி - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

சடையானைச்சந்திரனோடுசெங்கண்ணரா
வுடையானையுடைதலையிற்பலிகொண்டூரும்
விடையானைவிண்ணவர்தாந்தொழும்வெண்ணியை
யுடையானையல்லதுள்காதெனதுள்ளமே (௧)

சோதியைச்சுண்ணவெண்ணீறணிந்திட்டவெம்
மாதியையாதியுமந்தமுமில்லாத
வேதியைவேதியர்தாந்தொழும்வெண்ணியி
னீதியைநினையவல்லார்வினைநில்லாவே. (௨)

கனிதனைக்கனிந்தவரைக்கலந்தாட்கொள்ளு
முனிதனைமூவுலகுக்கொருமூர்த்தியை
நனிதனைநல்லவர்தாந்தொழும்வெண்ணியி
லினிதனையேத்துவரேதமிலாதாரே. (௩)

மூத்தானைமூவுலகுக்கொருமூர்த்தியாய்க்
காத்தானைக்கனிந்தவரைக்கலந்தாளாக
வார்த்தானையழகமர்வெண்ணியம்மானறனை
யேத்தாதாரென்செய்வாரேழையப்பேய்களே. (௪)

நீரானைநிறைபுனல்சூழ்தருநீள்கொன்றைத்
தாரானைத்தையலோர்பாகமுடையானைச்
சீரானைத்திகழ்தருவெண்ணியமர்ந்துறை
யூரானையுள்கவல்லார்வினையோயுமே. (௫)

முத்தினைமுழுவயிரத்திரண்மாணிக்கத்
தொத்தினைத்துளக்கமிலாதவிளக்காய
வித்தினைவிண்ணவர்தாந்தொழும்வெண்ணியி
லத்தனையடையவல்லார்க்கில்லையல்லலே. (௬)

பாய்ந்தானைக்காமனையுஞ்செறுகாலனைப்
பாய்ந்தானைப்பரியகைம்மாவுரித்தோன்மெய்யினை
மேய்ந்தானைவிண்ணவர்தாந்தொழும்வெண்ணியி
னீய்ந்தானைநினையவல்லார்வினைநில்லாவே. (௭)

மறுத்தானைமாமலையைமதியாதோடிச்
செறுத்தானைத்தேசழியத்திகழ்தோண்முடி
யிறுத்தானையெழிலமர்வெண்ணியெம்மானெனப்
பொறுத்தானைப்போற்றுவாராற்றலுடையாரே. (௮)

மண்ணினைவானவரோடுமனிதர்க்குங்
கண்ணினைக்கண்ணனுநான்முகனுங்காணா
விண்ணினைவிண்ணவர்தாந்தொழும்வெண்ணியி
லண்ணலையடையவல்லார்க்கில்லையல்லலே. (௯)

குண்டருங்குணமிலாச்சமணசாக்கிய
மிண்டர்கணமிண்டவைகேட்டுவெகுளன்மின்
விண்டவர்தம்புரமெய்தவன்வெண்ணியிற்
றொண்டராயேத்தவல்லார்துயர்தோன்றாவே. (௧௰)

மருவாருமல்குகாழித்திகழ்சம்பந்தன்
திருவாருந்திகழ்தருவெண்ணியமர்ந்தானை
யுருவாருமொண்டமிழ்மாலையிவைவல்லார்
பொருவாகப்புக்கிருப்பார்புவலோகத்தே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்காறாயில் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

நீரானேநீள்சடைமேலொருநிரைகொன்றைத்
தாரானேதாமரைமேலயன்றான்றொழுஞ்
சீரானேசீர்திகழுந்திருக்காறாயி
லூரானேயென்பவரூனமிலாதாரே. (க)

மதியானேவரியரவோடுடன்மத்தஞ்சேர்
விதியானேவிதியுடைவேதியர்தாந்தொழு
நெதியானேநீர்வயல்சூழ்திருக்காறாயிற்
பதியானேயென்பவர்பாவமிலாதாரே. (உ)

விண்ணானேவிண்ணவரேத்திவிரும்புஞ்சீர்
மண்ணானேமண்ணிடைவாழுமுயிர்க்கெல்லாங்
கண்ணானேகடிபொழில்சூழ்திருக்காறாயி
லெண்ணானேயென்பவரேதமிலாதாரே. (ந)

தாயானேதந்தையுமாகியதன்மைக
ளாயானேயாயநல்லன்பர்க்கணியானே
சேயானேசீர்திகழுந்திருக்காறாயில்
மேயானேயென்பவர்மேல்வினைமேவாவே. (ச)

கலையானேகலைமலிசெம்பொற்கயிலாய
மலையானேமலைபவர்மும்மதின்மாய்வித்த
சிலையானேசீர்திகழுந்திருக்காறாயி
னிலையானேயென்பவர்மேல்வினைநில்லாவே. (ரு)

ஆற்றானேயாறணிசெஞ்சடையாடர
வேற்றானேயேழுலகுமிமையோர்களும்
போற்றானேபொழிறிகழுந்திருக்காறாயி
னீற்றானேயென்பவர்மேல்வினைநில்லாவே. (சு)

சேர்த்தானேதீவினைதேய்ந்தறத்தேவர்க
ளேத்தானேயேத்துநன்மாமுனிவர்க்கிடர்
காத்தானேகார்வயல்சூழ்திருக்காறாயி
லார்த்தானேயென்பவர்மேல்வினையாடாவே. (எ)

கடுத்தானேகாலனைக்காலாற்கயிலாய
மெடுத்தானையேதமாகமுனிவர்க்கிடர்
கெடுத்தானேகேழ்கிளருந்திருக்காறாயி
லடுத்தானேயென்பவர்மேல்வினையாடாவே. (அ)

பிறையானேபேணியபாடலோடின்னிசை
மறையானேமாலொடுநான்முகன்காணாத

விறையானையெழிறிகழுந்திருக்காழியி
லுறைவானையென்பவாமேல்வினையோடுமே. (௯)

செடியாரும்புன்சமண்சீவரத்தார்களும்
படியாரும்பாவிகள்பேச்சுப்பயனில்லை
கடியாரும்பூம்பொழில்சூழ்திருக்காழியிற்
குடியாருங்கொள்கையினார்க்கில்லைகுற்றமே. (௧௦)

ஏய்ந்தசீரெழிறிகழுந்திருக்காழியி
லாய்ந்தசீரானடியேயதியருள்பெற்ற
பாய்ந்தநீர்க்காழியுண்ஞானசம்பந்தன்சொல்
வாய்ந்தவாறேத்துவார்வானுலகாள்வாரே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருமணஞ்சேரி - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

அயிலாருமம்பதனாற்புரமூன்றெய்து
குயிலாருமென்மொழியாளொருகூறாகி
மயிலாருமல்கியசோலைமணஞ்சேரி
பயில்வானைப்பற்றிநின்றார்க்கில்லைபாவமே. (௧)

விதியானைவிண்ணவர்தாந்தொழுதேத்திய
நெதியானைநீள்சடைமேனிலாவைத்தவான
மதியானைவண்பொழில்சூழ்ந்தமணஞ்சேரிப்
பதியானைப்பாடவல்லார்வினைபாறுமே. (௨)

எய்ப்பானார்க்கின்புறுதேனளித்தூறிய
விப்பாலாயென்னையுமாளவுரியானை
வைப்பானமாடங்கள்சூழ்ந்தமணஞ்சேரி
மெய்ப்பானைமேவிநின்றார்வினைவிடுமே. (௩)

விடையானைமேலுலகேழுமிப்பாரெலா
முடையானையூழிதோறூழியுள்ளதாய
படையானைப்பண்ணிசைபாடுமணஞ்சேரி
யடைவானையடையவல்லார்க்கில்லையல்லலே. (௪)

எறியார்பூங்கொன்றையினோடுமிளமத்தம்
வெறியாருஞ்செஞ்சடையாரமிலைந்தானை
மறியாருங்கங்கையுடையானைமணஞ்சேரிச்
செறிவானைச்செப்பவல்லார்க்கிடர்சேராவே. (௫)

மொழியானைமுன்னொருநான்மறையாறங்கம்
பழியாமைப்பண்ணிசையானபகர்வானை
வழியானைவானவரேத்துமணஞ்சேரி
யிழியாமையேத்தவல்லார்க்கெய்துமின்பமே. (௬)

எண்ணானையெண்ணமர்சீரிமையோர்கட்குக்
கண்ணானைக்கண்ணொருமூன்றுமுடையானை
மண்ணானைமாவயல்சூழ்ந்தமணஞ்சேரிப்
பெண்ணானைப்பேசநின்றார்பெரியோர்களே. (௭)

எடுத்தானையெழின்முடியெட்டுமிரண்டுந்தோள்
கெடுத்தானைக்கேடிலாச்செம்மையுடையானை
மடுத்தாரவண்டிசைபாடுமணஞ்சேரி
பிடித்தாரப்பேணவல்லார்பெரியோர்களே. (அ)

சொல்லானைத்தோற்றங்கண்டானுநெடுமாலுங்
கல்லானைக்கற்றனசொல்லித்தொழுதோங்க
வல்லானைமாதவரேத்துமணஞ்சேரி
யெல்லாமாமெம்பெருமான்கழலேத்துமே. (கூ)

சற்றேயுந்தாமறிவில்சமண்சாக்கியர்
சொற்றேயும்வண்ணமோர்செம்மையுடையானை
வற்றாதவாவிகள்சூழ்ந்தமணஞ்சேரி
பற்றாகவாழ்பவர்மேல்வினைபற்றாவே. (க0)

கண்ணாருங்காழியர்கோன்கருத்தார்வித்த
தண்ணார்சீர்ஞானசம்பந்தனதமிழ்மாலை
மண்ணாருமாவயல்சூழ்ந்தமணஞ்சேரி
பண்ணாரப்பாடவல்லார்க்கில்லைபாவமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருவேணுபுரம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

நிலவும்புனலுநிறைவாளரவு, மிலகுஞ்சடையார்க்கிடமாமெழிலா
ருலவும்வயலுக்கொளியார்முத்தம், விலகுங்கடலார்வேணுபுரமே. (க)

அரவார்கரவன்னமையார்திரடோட், குரவார்குழலாளொருகூறனிடங்
கரவாதகொடைக்கலந்தாரவர்க்கு, விரவாகவல்லார்வேணுபுரமே. (உ)

ஆகம்மழகாயவடான்வெருவ, நாகமுரிபோர்த்தவனண்ணுமிடம்
போகந்தருசீர்வயல்சூழ்பொழில்கண், மேகந்தவழும்வேணுபுரமே. (௩)

காசக்கடலில்விடமுண்டகண்டத், தீசற்கிடமாவதுவின்னறவ
வாசக்கமலத்தனம்வன்றிரைகள், வீசத்துயிலும்வேணுபுரமே. (ச)

அரையார்கலைசேரனமென்னடையை, யுரையாவுகந்தானுறையுமிட
நிரையார்கமுகினிகழ்பாளையுடை, விரையார்பொழில்சூழ்வேணுபுரமே. ()

ஒளிரும்பிறையுமுறுகூவிளவின், றளிருஞ்சடைமேலுடையானிடமா
நளிரும்புனலினலர்செங்கயல்கண், மிளிரும்வயல்சூழ்வேணுபுரமே. (சு)

ஏவும்படைவேந்தனிராவணனை, யாவென்றலறவடர்த்தானிடமாந்
தாவுமறிமானெடுதண்மதியம், மேவும்பொழில்சூழ்வேணுபுரமே. (எ)

கண்ணன்கடிமாமலரிற்றிகழு, மண்ணலிருவரறியாவிறையூர்
வண்ணச்சுதைமாளிகைமேற்கொடிகள், விண்ணிற்றிகழும்வேணுபுரமே. (அ)

போகமறியார்துவர்போர்த்துழல்வா, ராகமறியாவடியாரிறையூர்
மூகம்மறிவார்கலைமுத்தமிழ்நூன், மீகம்மறியாவேணுபுரமே. (கூ)

கலமார்கடல்போல்வளமார்தருநற், புலமார்தருவேணுபுரத்திறையை
நலமார்தருஞானசம்பந்தன்சொன்ன, குலமார்தமிழ்கூறுவர்கூர்மையரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

### திருமருகல் - விடந்தீர்த்ததிருப்பதிகம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

சடையாயெனுமால்சரணீயெனுமால்
விடையாயெனுமால்வெருவாவிழுமால்
மடையார்குவளைமலரும்மருக
லுடையாய்தகுமோவிவளுண்மெலிவே. (௧)

சிந்தாயெனுமால்சிவனேயெனுமான்
முந்தாயெனுமான்முதல்வாவெனுமால்
கொந்தார்குவளைகுலவும்மருக
லெந்தாய்தகுமோவிவளேசறவே. (௨)

அறையார்கழலுமழல்வாயரவும்
பிறையார்சடையுமுடையாய்பெரிய
மறையார்மருகன்மகிழ்வாயிவளை
யிறையார்வளைகொண்டெழில்வவ்வினையே. (௩)

ஒலிநீர்சடையிற்கரந்தாயுலகம்
பலிநீதிரிவாய்பழியில்புகழாய்
மலிநீர்மருகன்மகிழ்வாயிவளை
மெலிநீர்மையளாக்கவும்வேண்டினையே. (௪)

துணிநீலவண்ணம்முகிறோன்றியன்ன
மணிநீலகண்டமுடையாய்மருகற்
கணிநீலவண்டார்குழலாளிவடன்
னணிநீலவொண்கண்ணயர்வாக்கினையே. (௫)

பலரும்பரவப்படுவாய்சடைமேன்
மலரும்பிறையொன்றுடையாய்மருகற்
புலருந்தனையுந்துயிலாள்புடைபோந்
தலரும்படுமோவடியாளிவளே. (௬)

வழுவாள்பெருமான்கழல்வாழ்கவெனா
வெழுவாணினைவாளிரவும்பகலு
மழுவாளுடையாய்மருகற்பெருமான
றொழுவாளிவளைத்துயராக்கினையே. (௭)

இலங்கைக்கிறைவன்விலங்கலெடுப்பத்
துலங்கவ்விரலூன்றலுந்தோன்றலனாய்
வலங்கொண்மதில்சூழ்மருகற்பெருமா
னலங்கல்லிவளையலராக்கினையே. (௮)

எரியார்சடையும்மடியும்மிருவர்
தெரியாததோர்தீத்திரளாயவனே
மரியார்பிரியாமருகற்பெருமா
னரியாளிவளையயர்வாக்கினையே. (௯)

அறிவில்சமணும்மலர்சாக்கியருந்
நெறியல்லனசெய்தனர்நின்றுழல்வார்
மறியேந்துகையாய்மருகற்பெருமா
னெறியார்குழலிநிறைநீக்கினையே. (௧௰)

வயஞானம்வல்லார்மருகற்பெருமா
னுயர்ஞானமுணர்ந்தடியுள்குதலா
லியன்ஞானசம்பந்தனபாடல்வல்லார்
வியன்ஞாலமெல்லாம்விளங்கும்புகழே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநெல்லிக்கா - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

அறத்தானுயிர்காவலமர்ந்தருளி
மறந்தான்மதின்மூன்றுடன்மாண்பழித்த
திறந்தாறெரிவெய்தியநீவெண்டிங்க
ணிறத்தானெல்லிக்காவுணிலாயவனே. (௧)

பதிதானிடுகாடுபைங்கொன்றைதொங்கன்
மதிதானதுசூடியமைந்தனுந்தான்
விதிதான்வினைதான்விழுப்பம்பயக்கு
நெதிதானெல்லிக்காவுணிலாயவனே. (௨)

நலந்தானவனான்முகன்றன்றலையைக்
கலந்தானதுகொண்டகபாலியுந்தான
புலந்தான்புகழாலெரிவிண்புகழுந
நிலந்தானெல்லிககாவுணிலாயவனே. (௩)

தலைதானதுவேந்தியதம்மடிகள்
கலைதான்றிரிகாடிடநாடிடமா
மலைதானெடுத்தான்மதினமூன்றுடைய
நிலைதானெல்லிக்காவுணிலாயவனே. (௪)

தவந்தான்கதிதான்மதிவார்சடைமே
லுவந்தான்சுறவேந்தனுருவழியச்
சிவந்தான்செயச்செய்துசெறுத்துலகி
னிவந்தானெல்லிக்காவுணிலாயவனே. (௫)

வெறியார்கொன்றையந்தார்விரும்பி
மறியார்மலைமங்கைமகிழ்ந்தவன்றான்
குறியார்குறிகொண்டவர்போய்க்குறுகுந்
நெறியாநெல்லிக்காவுணிலாயவனே. (௬)

பிறைதான்சடைசேர்த்தியவெந்தைபெம்மா
னிறைதானிறவாக்கயிலைமலையான்
மறைதானபுனலொண்மதிமல்குசென்னி
நிறைதானெல்லிக்காவுணிலாயவனே. (௭)

மறைத்தான்பிணிமாதொருபாகந்தன்னை
மிறைத்தான்வரையாலரக்கன்மிகையைக்
குறைத்தான்சடைமேற்குளிர்கோல்வளையை
நிறைத்தானெல்லிக்காவுணிலாயவனே. (௮)

தழறுமரையான்வையந்தாயவனுங்
கழறுன்முடிகாணியஞொளிரும்

மழுவாளடியார்க்கருளாய்ப்பயக்கு
நிழலானெல்லிக்காவுணிலாயவனே. (௯)

கனத்தார்திரைமாண்டழற்கான்றநஞ்சை
யெனத்தாவெனவாங்கியதுண்டகண்டன்
மனத்தாற்சமணசாக்கியர்மாண்பழிய
நினைத்தானெல்லிக்காவுணிலாயவனே. (௧௰)

புகரேதுமில்லாதபுத்தேளுலகி
னிகரானெல்லிக்காவுணிலாயவனை
நகரார்நலஞானசம்பந்தன்சொன்ன
பகர்வாரவர்பாவமிலாதவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருஅழுந்தூர் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

தொழுமாறுவல்லார்துயர்தீரநினைந்
தெழுமாறுவல்லாரிசைபாடவிம்மி
யழுமாறுவல்லாரழுந்தைமறையோர்
வழிபாடுசெய்மாமடமன்னினையே. (௧)

கடலேறியநஞ்சமுதுண்டவனே
யுடலேயுயிரேயுணர்வேயெழிலே
யடலேறுடையாயழுந்தைமறையோர்
விடலேதொழுமாமடமேவினையே. (௨)

கழிகாடலனேகனலாடலினாய்
பழிபாடிலனேயவையேபயிலும்
மழிபாடிலராயழுந்தைமறையோர்
வழிபாடுசெய்மாமடமன்னினையே. (௩)

வானேமலையேயெனமன்னுயிரே
தானேதொழுவார்தொழுதாண்மணியே
யானேசிவனேயழுந்தையவரெம
மானேயெனமாமடமன்னினையே. (௪)

அலையார்புனல்சூழழுந்தைப்பெருமா
னிலையார்மறியுந்நிறைவெண்மழுவும்
மிலையார்படையும்மிவையேந்துசெல்வ
நிலையாவதுகொள்கெனநீநினையே. (௫)

நறவார்தலையின்னயவாவுலகிற்
பிறவாதவனேபிணியில்லவனே
யறையார்கழலாயழுந்தைமறையோர்
மறவாதெழுமாமடமன்னினையே. (௬)

தடுமாறுவல்லாய்தலைவாமதியஞ்
சுடுமாறுவல்லாய்சுடரார்சடையில்
லடுமாறுவல்லாயழுந்தைமறையோர்
நெடுமாநகர்கைதொழநின்றனையே. (௭)

பெரியாய்சிறியாய்பிறையாய்மிடறு
கரியாய்கரிகாடுயர்வீடுடையா
யரியாயெளியாயழுந்தைமறையோர்
வெரியார்தொழுமாமடமேவினையே. (௮)

மணிநீண்முடியான்மலையையரக்கன்
றணியாதெடுத்தானுடலநெரித்த
வணியாவிரலாயழுந்தைமறையோர்
மணிமாமடமன்னியிருந்தனையே. (௯)

முடியார்சடையாய்முனநாளிருவர்
நெடியானமலரானிகழவாலிவாக
னடிமேலறியாரழுந்தைமறையோர்
படியாறறொழுமாமடம்பற்றினையே. (௧௦)

அருஞானமவல்லாரழுந்தைமறையோர்
பெருஞானமுடையபெருமானவனைத்
திருஞானசம்பந்தனசெந்தமிழ்க
ளொருஞானமுண்டாமுணர்ந்தார்தமக்கே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கழிப்பாலை - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

புனலாடியபுன்சடையாயரண
மனலாகவிழித்தவனேயழகார்
கனலாடலினாய்கழிப்பாலையுளா
யுனவாகழல்கைதொழுதுள்குதுமே. (௧)

துணையாகவோர்தூவளமாதினையும்
மிணையாகவுகந்தவனேயிறைவா
கணையாலெயிலெய்கழிப்பாலையுளா
யிணையார்கழலேத்தவிடர்கெடுமே. (௨)

நெடியாய்குறியாய்நிமிர்புன்சடையின்
முடியாய்சுடுவெண்பொடிமுற்றணிவாய்
கடியார்பொழில்சூழ்கழிப்பாலையுளா
யடியார்க்கடையாவவலம்மவையே. (௩)

எளியாயரியாய்நிலநீரொடுதீ
வளிகாயமெனவெளிமன்னியதூ
வொளியாயுனையேதொழுதுன்னுமவர்க்
களியாய்கழிப்பாலையமர்ந்தவனே. (௪)

நடநண்ணியோர்நாகமசைத்தவனே
விடநண்ணியதூமிடறாவிகிர்தா
கடனண்ணுகழிப்பதிகாவலனே
யுடனண்ணிவணங்குவனுன்னடியே. (௫)

பிறையார்சடையாய்பெரியாய்பெரிய
மறையார்தருவாய்மையினாயுலகிற்

கறையார்பொழில்சூழ்கழிப்பாலையுளா
யிறையார்கழலேத்தவிடாகெடுமே. (௬)

முதிருஞ்சடையின்முடிமேல்விளங்குங்
கதிர்வெண்பிறையாய்கழிப்பாலையுளா
யெதிர்கொண்மொழியாலிரந்தேத்துமவர்க்
கதிருமவினையாயினவாசறுமே. (௭)

எரியார்கணையாலெயிலெய்தவனே
விரியார்தருவீழ்சடையாயிரவிற்
கரிகாடலினாய்கழிப்பாலையுளா
யுரிதாகிவணங்குவனுன்னடியே. (௮)

நலநாரணனான்முகனண்ணலுறக்
கனலானவனேகழிப்பாலையுளா
யுனவார்கழலேதொழுதுன்னுமவர்க்
கிலவாமவினைதானெயிலெய்தவனே. (௯)

தவர்கொண்டதொழிற்சமண்வேடரொடுந்
துவர்கொண்டனர்நுண்டுகிலாடையரு
மவர்கொண்டனவிட்டடிகளுறையு
முவர்கொண்டகழிப்பதியுள்குதுமே. (௧௦)

கழியார்பதிகாவலனைப்புகலிப்
பழியாமறைஞானசம்பந்தன்சொல்
வழிபாடிவைகொண்டடிவாழ்த்தவல்லார்
கெழியாரிமையோரொடுகேடிலரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்குடவாயில் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

திகழுந்திருமாலொடுநான்முகனும்
புகழும்பெருமானடியார்புகல
மகிழும்பெருமான்குடவாயின்மன்னி
நிகழும்பெருங்கோயினிலாயவனே. (௧)

ஓடுந்நதியும்மதியோடுரகஞ்
சூடுஞ்சடையான்விடைதொல்கொடிமேற்
கூடுங்குழகன்குடவாயிறனி
னீடும்பெருங்கோயினிலாயவனே. (௨)

கலையான்மறையான்கனலேந்துகையான்
மலையாளவள்பாகமகிழ்ந்தபிரான்
கொலையார்சிலையான்குடவாயிறனி
னிலையார்பெருங்கோயினிலாயவனே. (௩)

சுலவுஞ்சடையான்சுடுகாடிடமா
நலமென்முலையாணகைசெய்யநடங்
குலவுங்குழகன்குடவாயிறனி
னிலவும்பெருங்கோயினிலாயவனே. (௪)

எனறன்னுளமேவியிருநதபிரான்
கன்றன்மணிபோன்மிடறன்கயிலைக்
குனறன்குழகன்குடவாயிறனி
னினறபெருநகோயினிலாயவனே. (ரு)

அலைசேர்புனலனனலன்னமலன்
றலைசேர்பலியன்சதுரனவிதிருந
கொலைசேர்படையன்குடவாயிறனி
னிலைசேரபெருநகோயினிலாயவனே. (சா)

அறையார்கழலன்னழலனணியவிற்
பறையாழ்முழவும்மறைபாடநடந
குறையாவழகன்குடவாயிறனி
னிறையாரபெருநகோயினிலாயவனே. (எ)

வரையாரதிரடோளரக்கன்மடியவ
வரையாரவொரகால்விரலவைத்தபிரான்
வரையார்மதில்சூழ்குடவாயின்மன்னும்
வரையார்பெருநகோயின்மகிழ்நதவனே. (அ)

பொனனொனபவனுமபுயனொபபவனுந
தனனொபபறியாததழலாயநிமிர்நதான்
கொனனபபடையானகுடவாயிறனின
மன்னுமபெருநகோயினமகிழநதவனே. (கூ)

வெயிலின்னிலையாரவிரிபோர்வையினர்
பயிலுமமுறையேயபகாபாவிகளபாற்
குயிலனகுழகனகுடவாயிறனி
னுயருமபெருநகோயிலுயாநதவனே. (க0)

கடிவாய்மலிநீர்குடவாயிறனி
னெடுமாபெருநகோயினிலாயவனைத்
தடமாரபுகலிததமிழார்விரகன்
வடமாதமிழவல்லவர்நல்லவரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

௩
௨

திருவானைக்கா - பண் - இந்தளம்

திருச்சிற்றமபலம்.

மழையார்மிடறாமழுவாளுடையா
யுழையார்கரவாவுமையாளகணவா
விழவாருமவெண்ணாவலினமேவியவெம
மழகாவெனுமாயிழையாளவளே. (க)

கொலையார்கரியின்னுரிமூடியனே
மலையார்சிலையாவளைவித்தவனே
விலையாலெனையாளுமவெண்ணாவலுளாய்
நிலையாவருளாயெனுநேரிழையே. (உ)

காலனுயிர்காலனைவீடுசெய்தாய்
பாலோடுநெய்யாடியபால்வண்ணனே

வேலாடுகையாயெம்வெண்ணாவலுளா
யாலார்நிழலாயெனுமாயிழையே. (௩)

சுறவக்கொடிகொண்டவனீறதுவா
யுறநெற்றிவிழித்தவெமுத்தமனே
விறன்மிக்ககரிக்கருள்செய்தவனே
யறமிக்கதுவென்னுமெனாயிழையே. (௪)

செங்கட்பெயர்கொண்டவன்செம்பியர்கோ
னங்கட்கருணைபெரிதாயவனே
வெங்கணவிடையாயெமவெண்ணாவலுளா
யங்கத்தயர்வாயினளாயிழையே. (௫)

குன்றேயமர்வாய்கொலையார்புலியின்
றன்றோலுடையாய்சடையாய்பிறையாய்
வென்றாய்புரமூன்றைவெண்ணாவலுளே
நின்றாயருளாயெனுநேரிழையே. (௬-௭)

மலையன்றெடுத்தவரக்கனமுடிதோ
டொலையவ்விரலூன்றியதூமழுவா
விலையில்லெலனையாளும்வெண்ணாவலுளா
யலசாமனல்காயெனுமாயிழையே. (௮)

திருவார்தருநாரணனான்முகனு
மருவாவெருவாவழலாய்நிமிர்ந்தாய்
விரையாருமவெண்ணாவலுணமேவியவெம்
மரவாவெனுமாயிழையாளவளே. (௯)

புத்தர்பலரோடமண்பொய்த்தவர்க
ளொத்தவ்வுரைசொல்லிவையோரகிலார்
மெய்த்தேவர்வணங்கும்வெண்ணாவலுளா
யத்தாவருளாயெனுமாயிழையே. (௧௦)

வெண்ணாவலமர்ந்துறைவேதியனைக்
கண்ணாகமழ்காழியர்தந்தலைவன்
பண்ணோடிவைபாடியபத்துமவல்லார்
விண்ணோரவரேதவிரும்புவரே. (௧௧

திருச்சிற்றம்பலம்.

---

௪௭ திருநாகேச்சரம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

பொன்னேர்தருமேனியனேபுரியு
மின்னேர்சடையாய்விரிகாவிரியி
னன்னீர்வயனாகேச்சரநகரின்
மன்னேயெனவல்வினைமாய்ந்தறுமே. (௧)

சிறவார்புரமூன்றெரியச்சிலையில்
லுறவார்கணையுய்த்தவனேயுயருங்
கறவார்பொழினாகேச்சரநகரு
ளாறவாவெனவல்வினையாசறுமே. (௨)

கல்லானிழன் மேயவனேகருமபின்
வில்லானெழில்வேவவிழித்தவனே
நல்லார்தொழுநாகேச்சரநகரிற்
செல்வாவெனவல்வினைதேய்ந்தறுமே. (௩)

நகுவான்மதியோடரவும்புனலுந
தகுவார்சடையின்முடியாய்தவளந
நகுவார்பொழினாகேசசரநகருட்
பகவாவெனவல்வினைபற்றறுமே. (௪)

கலைமான்மறியுங்கனலும்மழுவுந
நிலையாகியகையினனேநிகழுந
நலமாகியநாகேசசரநகருட்
டலைவாவெனவல்வினைதானறுமே. (௫)

குரையார்கழலாடநடங்குலவி
வரையானமகள்காணமகிழ்ந்தவனே
நரையார்விடையேறுநாகேச்சரதெத
வரைசேயெனநீங்குமருந்துயரே. (௬)

முடையார்தருவெண்டலைகொண்டுலகிற்
கடையார்பலிகொண்டுழலகாரணனே
நடையார்தருநாகேசசரநகருட்
சடையாவெனவல்வினைதானறுமே. (௭)

ஓயாதவரக்கனொடிந்தலற
நீயாரருள்செய்துநிகழ்ந்தவனே
வாயாரவழுத்துவர்நாகேச்சரத
தாயேயெனவல்வினைதானறுமே. (௮)

நெடியானொடுநான்முகனேடலுறச
சுடுமாலெரியாய்நிமிர்சோதியனே
நடுமாவயனாகேசசரநகரே
யிடமாவுறைவாயெனவின்புறுமே. (௯)

மலம்பாவியகையொடுமண்டையதுண்
கலம்பாவியர்கட்டுரைவிட்டுலகி
னலம்பாவியநாகேசசரநகருட்
சிலம்பாவெனதீவினைதேய்ந்தறுமே. (௧௦)

கலமார்கடல்சூழ்தருகாழியர்கோன்
றலமார்தருசெந்தமிழின்விரக
னலமார்தருநாகேச்சரத்தானைச்
சொலனமாலைகள்சொல்லநில்லாவினையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

25

---

திருப்புகலி - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

**கலியாழ்கடலோங்குபாருளீர்**
**கலியாவினையல்லல்போயறுமிக்**

கலியார்புரமெய்தவனுறைபு
கலியாநகர்போற்றிவாழ்மினே. (க)

பண்ணியாள்வதோரேற்றர்பான்மதிக்
கண்ணியார்கமழ்கொன்றைசேர்முடிப்
புண்ணியனுறையும்புகலியை
நண்ணுமின்னலமானவேண்டிலே. (உ)

வீசுமின்புரைகாதன்மேதகு
பாசவல்வினைதீர்த்தபண்பினன்
பூசுநீற்றினன்பூம்புகலியைப்
பேசுமின்பெரிதின்பமாகவே. (௩)

கடிகொள்கூவிளமத்தம்வைத்தவன்
படிகொள்பாரிடம்பேசும்பான்மையன்
பொடிகொண்மேனியன்பூம்புகலியு
ளடிகளையடைந்தன்புசெய்யுமே. (௪)

பாதத்தாரொலிபல்சிலம்பின
னோதத்தார்விடமுண்டவன்படை
பூதத்தான்புகலிந்நகர்தொழ
வேதத்தார்க்கிடமில்லையென்பரே. (௫)

மறையினொலிமல்குவீணைய
னிறையினார்நிமிர்புன்சடையனெம்
பொறையினானுறையும்புகலியை
நிறையினாற்றொழநேசமாகுமே. (௬)

கரவிடைமனத்தாரைக்காண்கிலா
னிரவிடைப்பலிகொள்ளுமெம்மிறை
பொருவிடையுயர்த்தான்புகலியைப்
பரவிடப்பயில்பாவம்பாறுமே. (௭)

அருப்பினார்முலைமங்கைபங்கினன்
விருப்பினனரக்கனரண்செகும்
பொருப்பினன்பொழிலார்புகலியூ
ரிருப்பினனடியேத்திவாழ்த்துமே. (அ)

மாலுநான்முகன்றானுமவார்கழற்
சீலமும்முடிதேடநீண்டெரி
போலுமேனியன்பூம்புகலியுட்
பாலதாடியபண்பனல்லனே. (௯)

நின்றுதுய்ப்பவர்நீசர்தேரர்சொல்
லொன்றதாகவையாவுணர்வினு
ணின்றவன்னிகழும்புகலியைச்
சென்றுகைதொழச்செல்வமாகுமே. (க0)

புல்லமேறிதன்பூம்புகலியை
நல்லஞானசம்பந்தனுவிற்
சொல்லுமாலையீரைந்தும்வல்லவர்க்
கில்லையாம்வினையிருநிலத்துளே. (கக)

திருச்சிற்றம்பலம்.

### திருநெல்வாயில் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

புடையினார்புள்ளிகால்பொருந்திய, மடையினார்மணிநீர்நெல்வாயிலார்
நடையினால்விரற்கோவணநந்நயந், துடையினாரெமதுச்சியாரே. (க)

வாங்கினார்மதின்மேற்கணைவெள்ளநீர், தாங்கினார்தலையாயதன்மையர்
நீங்குநீர்நெல்வாயிலார்தொழ, வோங்கினாரெமதுச்சியாரே. (உ)

நிச்சலேத்துநெல்வாயிலார்தொழ, விச்சையாலுறைவாரெமீசனார்
கச்சையாவதோர்பாம்பினார்கவி, னிச்சையாரெமதுச்சியாரே. (ஙு)

மறையினார்மழுவாளினார்மல்கு, பிறையினார்பிறையோடிலங்கிய
நிறையினார்நெல்வாயிலார்தொழு, மிறைவனாரெமதுச்சியாரே. (ச)

விருத்தனாகிவெண்ணீறுபூசிய, கருத்தனார்கனலாட்டுகந்தவர்
நிருத்தனார்நெல்வாயின்மேவிய, வொருத்தனாரெமதுச்சியாரே. (ரு)

காரினார்கொன்றைக்கண்ணியார்மல்கு, பேரினார்பிறையோடிலங்கிய
நீரினார்நெல்வாயிலார்தொழு, மேரினாரெமதுச்சியாரே. (சா)

ஆதியாரந்தமாயினார்வினை, கோதியார்மதில்கூட்டழித்தவர்
நீதியார்நெல்வாயிலார்மறை, யோதியாரெமதுச்சியாரே. (எ)

பற்றினானரக்கன்கயிலையை, யொற்றினாரொருகால்விரலுற
நெற்றியார்நெல்வாயிலார்தொழும், பெற்றியாரெமதுச்சியாரே. (அ)

நாடினார்மணிவண்ணனான்முகன், கூடினார்குறுகாதகொள்கையர்
நீடினார்நெல்வாயிலார்தலை, யோடினாரெமதுச்சியாரே. (கூ)

குண்டமண்டுவர்க்கூறைமூடர்சொற், பண்டமாகவையாதபண்பினர்
விண்டயங்குநெல்வாயிலார்நஞ்சை, யுண்டகண்டரெம்முச்சியாரே. (க0)

நெண்பயங்குநெல்வாயிலீசனைச், சண்பைஞானசம்பந்தன்சொல்லிவை
பண்பயன்கொளப்பாடவல்லவர், விண்பயன்கொளும்வேட்கையாளரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

### திரு இந்திரநீலபருப்பதம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

குலவுபாரிடம்போற்றவீற்றிருந், திலகுமான்மழுவேந்துமங்கையர்
நிலவுமிந்திரநீலப்பர்ப்பதத், துலவினானடியுள்கநல்குமே. (க)

குறைவிலார்மதிசூடியாடல்வண், டறையுமாமலர்க்கொன்றைசென்னிசே
ரிறைவனிந்திரநீலப்பர்ப்பதத், துறைவினான்றனையோதியுய்ம்மினே. (உ)

என்பொனென்மணியென்னவேத்துவார், நம்பனான்மறைபாடுநாவினா
னின்பனிந்திரநீலப்பர்ப்பதத், தன்பன்பாதமேயடைந்துவாழ்மினே. (ங)

நாசமாம்வினைநன்மைதான்வரும், தேசமார்புகழாயசெம்மையெம
மீசனிந்திரநீலப்பர்ப்பதங், கூசிவாழ்த்துதுங்குணமதாகவே. (ச)

மருவுமான்மடமாதொர்பாகமாய்ப், பரவுவார்வினைதீர்த்தபண்பினா
னிரவனிந்திரநீலப்பர்ப்பதத், தருவிசூடுமடிகள்வண்ணமே. (ரு)

வெண்ணிலாமதிசூடும்வேணிய, னெண்ணிலார்மதிலெய்தவில்லின
னண்ணலிந்திரநீலப்பர்ப்பதத், துண்ணிலாவுமொருவனல்லனே. (சா)

கொடியவேற்றினர்கூற்றுதைத்தவர்,பொடிகொண்மேனியிற்பூண்டபாம்பின
ரடிகளிந்திரநீலப்பர்ப்பத, முடையவாணனுகந்தகொள்கையே. (எ)

எடுத்தவல்லரக்கன்கரமபுய, மடர்த்ததோர்விரலானவனையாட்
படுத்தனிந்திரநீலப்பர்ப்பத, முடித்தலமுறமுயலுமின்பமே. (அ)

பூவினானொடுமாலும்போறறுறுந், தேவனிந்திரநீலப்பர்ப்பதம்
பாவியாவெழுவாரைத்தமவினை, கோவியாவருநுங்கொல்லுநுங்கூற்றமே. (௯)

கட்டர்துண்டமணைடோரசீரிலர், விட்டரிந்திரநீலப்பர்ப்பதத்
தெட்டனைநினையாததெனங்கொலோ, சிட்டதாயுறையாதிசீர்களே. (௧௰)

கந்தமார்பொழில்சூழ்ந்தகாழியா, னிந்திரன்றொழுநீலப்பர்ப்பதத்
தந்தமில்லியையேத்துஞானசம், பந்தன்பாடல்கொண்டோதிவாழ்மினே. ()

திருச்சிற்றம்பலம்.

---

௨௮

திருக்கருவூர்த்திருஆனிலை - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

தொண்டெலாமலர்தூவியேத்தநஞ், சுண்டலாருயிராயதன்மையர்
கண்டனார்கருவூருளானிலை, யண்டனாருளீயுமன்பரே. (௧)

நீதியார்நினைந்தாயநான்மறை, யோதியாரொடுங்கூடலார்குழைக்
காதினார்கருவூருளானிலை, யாதியாரடியார்தமன்பரே. (௨)

விண்ணுலாமதிசூடிவேதமே, பண்ணுளார்பரமாயபண்பினர்
கண்ணுளார்கருவூருளானிலை, யண்ணலாரடியார்க்குநல்லரே. (௩)

முடியர்மும்மதயானையீருரி, பொடியர்பூங்கணைவேளைச்செற்றவர்
கடியுளார்கருவூருளானிலை, யடிகளியாவையுமாயவீசரே. (௪)

பங்கயம்மலர்ப்பாதர்பாதியோர், மங்கையர்மணிநீலகண்டர்வான்
கங்கையார்கருவூருளானிலை, யங்கையோடரவத்தெமண்ணலே. (௫)

தேவர்திங்களும்பாம்புஞ்சென்னியின், மேவர்மும்மதிலெய்தவேட்கையர்
காவலார்கருவூருளானிலை, மூவராகியமொய்ம்பரல்லரே. (௬)

பண்ணினார்படியேற்றர்நீற்றர்மெய்ப், பெண்ணினார்பிறைதாங்குநெற்றியார்
கண்ணினார்கருவூருளானிலை, நண்ணினார்நமையாளுநாதரே. (எ)

கடுத்தவாளரக்கன்கயிலையை, யெடுத்தவன்றலைதோளுந்தாளினு
லடர்த்தவன்கருவூருளானிலை, கொடுத்தவன்னருள்கூத்தனல்லனே. (அ)

உழுதுமாநிலத்தேனமாகிமா, றொழுதுமாமலரோனுங்காண்கிலார்
கழுதினான்கருவூருளானிலை, முழுதுமாகியமூர்த்திபாதமே. (௯)

புத்தர்புன்சமணாதர்பொய்யுரைப, பித்தர்பேசியபேச்சைவிட்டுமெய்ப்
பத்தர்சேர்கருவூருளானிலை, யத்தர்பாதமடைந்துவாழ்மினே. (௧௰)

கந்தமார்பொழிற்காழிஞானசம், பந்தன்சேர்கருவூருளானிலை
யெந்தையைச்சொன்னபத்தும்வல்லவர், சிந்தையிற்றுயராயதீர்வரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

௨௯

திருப்புகலி - திருவிராகம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

முன்னியகலைப்பொருளுமுவலகில்வாழ்வும்
பன்னியவொருத்தர்பழவூர்வினவின்ஞாலந்

துன்னியிமையோர்கடுதிசெய்துமுன்வணங்குஞ்
சென்னியர்விருப்புறுதிருப்புகலியாமே. (௧)

வண்டிரைமதிச்சடைமிலைத்தபுனல்சூடிப்
பண்டெரிகையாடுபரமன்பதியதென்பர்
புண்டரிகவாசமதுவீசுமலர்ச்சோலைத்
தெண்டிரைகடற்பொலிதிருப்புகலியாமே. (௨)

பாவணவுசிந்தையவர்பத்தரொடுகூடி
நாவணவுமந்தணன்விரும்பிடமதென்பர்
பூவணவுசோலையிருண்மாலையெதிர்கூரத்
தேவணர்விழாவளர்திருப்புகலியாமே. (௩)

மைதவழுமாமிடறன்மாநடமதாடிக்
கைவளையினாளொடுகலந்தபதியென்பர்
செய்பணிபெருந்தெழுமுருத்திரர்கள்கூடித்
தெய்வமதிணக்குறுதிருப்புகலியாமே. (௪)

முன்னமிருமூன்றுசமயங்களவையாகிப்
பின்னையருள்செய்தபிறையாளனுறைகோயில்
புன்னையமலர்ப்பொழில்களக்கினொளிகாட்டச்
செந்நெல்வயலார்தருதிருப்புகலியாமே. (௫)

வங்கமலியுங்கடல்விடத்தினைநுகர்ந்த
வங்கணனருத்திசெய்திருக்குமிடமென்பர்
கொங்கணவியன்பொழிலின்மாசுபனிமூசத்
தெங்கணவுதேன்மலிதிருப்புகலியாமே. (௬)

நல்குரவுமின்பமுநலங்களவையாகி
வல்வினைகடீர்த்தருளுமைந்தனிடமென்பர்
மல்குமடியார்களடியாரவிசைபாடிச்
செல்வமறையோருறைதிருப்புகலியாமே. (௭)

பரப்புறுபுகழ்ப்பெருமையாளன்வரைதன்னை
லரக்கனையடர்த்தருளுமண்ணலிடமென்பர்
நெருக்குறுகடற்றிரைகண்முத்தமணிசிந்தச்
செருக்குறுபொழிற்பொலிதிருப்புகலியாமே. (௮)

கோடலொடுகூன்மதிகுலாயசடைதன்மே
லாடரவம்வைத்தருளுமப்பனிருவர்க்கு
நேடவெரியாகியிருபாலுமடிபேணித்
தேடவுறையுந்நகர்திருப்புகலியாமே. (௯)

கற்றமணருற்றுலவுதேரருரைசெய்த
குற்றமொழிகொள்கையதிலாதபெருமானூர்
பொற்றொடிமடந்தையருமைந்தர்புலனைந்துஞ்
செற்றவர்விருப்புறுதிருப்புகலியாமே. (௧௦)

செந்தமிழ்பரப்புறுதிருப்புகலிதன்மே
லந்தமுதலாகிநடுவாயபெருமானைப்
பந்தனுரைசெய்தமிழ்கள்பத்துமிசைகூர
வந்தவணமேத்துமவர்வானுடையாரே. (௧௧)

—————

30

## திருப்புறம்பயம் - திருவிராகம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

மறம்பயமலைந்தவர்மதிற்பரிசறுத்தனை
நிறம்பசுமைசெம்மையொடிசைந்துனதுநீர்மை
திறம்பயனுறும்பொருடெரிந்துணருநால்வர்க்
கறம்பயனுரைத்தனைபுறம்பயமமர்ந்தோய். (௧)

விரித்தனைதிருச்சடையரித்தொழுகுவெள்ளந்
தரித்தனையதன்றியுமிகப்பெரியகாலன்
னெருத்தறவுதைத்தனையிலங்கிழையோர்பாகம்
பொருத்துதல்கருத்தினைபுறம்பயமமர்ந்தோய். (௨)

விரிந்தனைகுவிந்தனைவிழுங்குயிருமிழ்ந்தனை
திரிந்தனைகுருந்தொசிபெருந்தகையநீயும்
பிரிந்தனைபுணர்ந்தனைபிணம்புகுமயானம்
புரிந்தனைமகிழ்ந்தனைபுறம்பயமமர்ந்தோய். (௩)

வளங்கெழுகடும்புனலொடுஞ்சடையொடுங்கத்
துளங்கமரிளம்பிறைசுமந்ததுவிளங்க
வுளங்கொளவளைந்தவர்சுடுஞ்சுடலைநீறு
புளங்கொளவிளங்கினைபுறம்பயமமர்ந்தோய். (௪)

பெரும்பிணிபிறப்பினொடிறப்பிலையோர்பாகங்
கரும்பொடுபடுஞ்சொலின்மடந்தையைமகிழ்ந்தோய்
சுரும்புணவரும்பவிழ்திருந்தியெழுகொன்றை
விரும்பினைபுறம்பயமமர்ந்தவிறையோனே. (௫)

அனற்படுதடக்கையவரெத்தொழிலரேனு
நினைப்புடைமனத்தவர்வினைப்பகையுநீயே
தனற்படுசுடர்ச்சடைதனிப்பிறையொடொன்றப்
புனற்படுகிடக்கையைபுறம்பயமமர்ந்தோய். (௬)

மறந்துறைமறுத்தவர்தவத்தடியருள்ளம்
மறத்துறையொறுத்துனதருட்கிழமைபெற்றோர்
திறத்துளதிறத்தினைமதித்தகலநின்றும்
புறத்துளதிறத்தினைபுறம்பயமமர்ந்தோய். (௭)

இலங்கையரிறைஞ்சிறைவிலங்கலின்முழங்க
வுலங்கெழுதடக்கைகளடர்த்திடலுமஞ்சி
வலங்கொளவெழுந்தவனலங்கவினவஞ்சப்
புலன்களைவிலங்கினைபுறம்பயமமர்ந்தோய். (௮)

வடங்கெடநுடங்குணவிடந்தவிடையல்லிக்
கிடந்தவனிருந்தவனளந்துணரலாகார்
தொடர்ந்தவருடம்பொடுநிமிர்ந்துடன்வணங்கப்
புடங்கருள்செய்தொன்றினைபுறம்பயமமர்ந்தோய். (௯)

விடக்கொருவர்நன்றெனவிடக்கொருவர்தீதென
வுடற்குடைகளைந்தவருடம்பினைமறைக்கும்
படக்கர்கள்பிடக்குரைபடுத்துமையோர்பாக
மடக்கினைபுறம்பயமமர்ந்தவுரவோனே. (௰)

கருங்கழிபொருந்திரைகரைக்குலவுமுத்தந்
தருங்கழுமலத்திறைதமிழ்க்கிழமைஞானன்
சுரும்பவிழ்புறம்பயமமர்ந்ததமிழ்வல்லார்
பெரும்பிணிமருங்கறவொருங்குவர்பிறப்பே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கருப்பறியலூர்-திருவிராகம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

சுற்றமொடுபற்றவைதுயக்கறவறுத்துக்
குற்றமில்குணங்களொடுகூடுமடியார்கண்
மற்றவரைவானவர்தம்வானுலகமேற்றக்
கற்றவனிருப்பதுகருப்பறியலூரே. (க)

வண்டணைசெய்கொன்றையதுவார்சடைகண்மேலே
கொண்டணைசெய்கோலமதுகோளரவினோடும்
விண்டணைசெய்மும்மதிலும்வீழ்தரவோரம்பாற்
கண்டவனிருப்பதுகருப்பறியலூரே. (உ)

வேதமொடுவேதியர்கள்வேள்விமுதலாகப்
போதினொடுபோதுமலர்கொண்டுபுனைகின்ற
நாதனெனநள்ளிருண்முன்னாடுகுழைதாழுங்
காதவனிருப்பதுகருப்பறியலூரே. (ங)

மடம்படுமலைக்கிறைவன்மங்கையொருபங்கன்
னுடம்பினைவிடக்கருதிநின்றமறையோனைத்
தொடர்ந்தணவுகாலனுயிர்காலவொருகாலாற்
கடந்தவனிருப்பதுகருப்பறியலூரே. (ச)

ஒருத்தியுமையோடுமொருபாகமதுவாய
நிருத்தனவனீதியவனித்தனெறியாய
விருத்தனவன்வேதமெனவங்கமவையோதுங்
கருத்தவனிருப்பதுகருப்பறியலூரே. (ரு)

விண்ணவர்கள்வெற்பரசுபெற்றமகண்மெய்த்தேன்
பண்ணமருமென்மொழியினாளையணைவிப்பா
னெண்ணிவருகாமனுடல்வேவவெரிகாலுங்
கண்ணவனிருப்பதுகருப்பறியலூரே. (சு)

ஆதிபடியைப்பணியவப்பொடுமலர்ச்சேர்
சோதியொளிநற்புகைவளர்க்குவடுபுக்குத்
தீதுசெயவந்தணையுமந்தகனரங்கக்
காதினனிருப்பதுகருப்பறியலூரே. (எ)

வாய்ந்தபுகழ்விண்ணவருமண்ணவருமஞ்சப்
பாய்ந்தமர்செயுந்தொழிலிலங்கைநகர்வேந்தற்
கேய்ந்தபுயமத்தனையுமிற்றுவிழமேனாட்
காய்ந்தவனிருப்பதுகருப்பறியலூரே. (அ)

பரந்ததுநிரந்துவருபாய்திரையகங்கை
கரந்தொர்சடைமேன்மிசையுகந்தவளைவைத்து

நிரந்தரநிரந்திருவர்தேடியறியாமற்
கரந்தவனிருப்பதுகருப்பறியலூரே. (௯)

அற்றமறையாவமணராதமிலிபுத்தர்
சொற்றமறியாதவர்கள்சொன்னசொலைவிட்டுக்
குற்றமறியாதபெருமானகொகுடிக்கோயிற்
கற்றெனவிருப்பதுகருப்பறியலூரே. (௰)

நலந்தருபுனற்புகலிஞானசம்பந்தன்
கலந்தவர்கருப்பறியன்மேயகடவுள்ளைப்
பலந்தருதமிழ்க்கிளவிபத்துமிவைகற்று
வலந்தருமவர்க்குவினைவாடலெளிதாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

திருவையாறு - திருவிராகம் - பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

திருத்திகழ்மலைச்சிறுமியோடுமிகுதேச
ருருத்திகழெழிற்கயிலைவெற்பிலுறைதற்கே
விருப்புடையவற்புதரிருக்குமிடமேரார்
மருத்திகழ்பொழிற்குலவுவண்டிருவையாறே. (௧)

கந்தமரவுந்துபுகையுந்தவில்விளக்கே
ரிந்திரனுணர்ந்துபணியெந்தையிடமெங்கு
சந்தமலியுந்தருமிடைந்தபொழில்சார
வந்தவனிலுந்தணவுவண்டிருவையாறே. (௨)

கட்டுவடமெட்டுமுறுவட்டமுழவத்திற்
கொட்டுகரமிட்டவொலிதட்டுமவகைக்கநதிக்
கிட்டமிகநட்டமவையிட்டவரிடஞ்சீர்
வட்டமதிலுட்டிகழுமவண்டிருவையாறே. (௩)

நண்ணியொர்வடத்தினிழனால்வர்முனிவர்க்கன்
றெண்ணிலிமறைப்பொருள்விரித்தவரிடஞ்சீர்த்
தண்ணின்மலிசந்தகிலொடுந்திவருபொன்னி
மண்ணின்மிசைவந்தணவுவண்டிருவையாறே. (௪)

வென்றிமிகுதாருகனதாருயிர்மடங்கக்
கன்றிவருகோபமிகுகாளிகதமோவ
நின்றுநடமாடியிடநீடுமலர்மேலால்
மன்றன்மலியும்பொழில்கொள்வண்டிருவையாறே. (௫)

பூதமொடுபேய்கள்பலபாடநடமாடிப
பாதமுதல்பையரவுகொண்டணிபெறுத்திக்
கோதையரிடும்பலிகொளும்பரனிடம்பூ
மாதவிமணங்கமழும்வண்டிருவையாறே. (௬)

துன்னுகுழன்மங்கையுமைநங்கைசுளிவெய்தப்
பின்னொருதவஞ்செய்துழல்பிஞ்ஞகனுமங்கே
யென்னசதியென்றுரைசெயங்கணனிடஞ்சீர்
மன்னுகொடையாளர்பயில்வண்டிருவையாறே. (௭)

இரக்கமில்குணத்தொடுலகெங்குநலிவெம்போ
ரரக்கன்முடியத்தலைபுயத்தொடுமடங்கத்
துரக்கவிரலிற்சிறிதுவைத்தவரிடஞ்சீ
வரக்கருணையாளர்பயில்வண்டிருவையாறே. (௮)

பருத்துருவதாகிவிண்ணடைந்தவனோர்பன்றிப்
பெருத்துருவதாயுலகிடந்தவனுமென்றுங்
கருத்துருவொணாவகைநிமிர்ந்தவனிடங்கார்
வருத்துயலைதீர்கொள்பொழில்வண்டிருவையாறே. (௯)

பாக்கியமதொன்றுமில்சமண்பதகர்புத்தர்
சாக்கியர்களென்றுடல்பொதிந்துதிரிவார்தா
நோக்கரியதத்துவனிடம்படியின்மேலால்
மாக்கமுறநீடுபொழில்வண்டிருவையாறே. (௧௰)

வாசமலியும்பொழில்கொள்வண்டிருவையாற்று
ளீசனையெழிற்புகலிமன்னவன்மெய்ஞ்ஞானப
பூசுரனுரைத்ததமிழ்பத்துமிவைவல்லார்
நேசமலிபத்தரவர்நின்மலனடிக்கே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

௩ திருநள்ளாறு - திருவிராகம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

ஏடுமலிகொன்றையரவிந்துவிளவன்னி
மாடவலசெஞ்சடையெம்மைந்தனிடமென்பர்
கோடுமலிஞாழல்குரவேறுசுரபுன்னை
நாடுமலிவாசமதுவீசியநள்ளாறே. (௧)

விண்ணியல்பிறைப்பிளவறைப்புனன்முடித்த
புண்ணியனிருக்குமிடமென்பர்புவிதன்மேற்
பண்ணியனடத்தொடிசைபாடுமடியார்க
ணண்ணியமனத்தின்வழிபாடுசெய்நள்ளாறே. (௨)

விளங்கிழைமடந்தைமலைமங்கையொருபாகத்
துளங்கொளவிருத்தியொருத்தனிடமென்பர்
வளங்கெழுவுதீபமொடுதூபமலர்தூவி
நளன்கெழுவிநாளும்வழிபாடுசெய்நள்ளாறே. (௩)

கொக்கரவர்கூன்மதியாகோபாதிருமேனிச்
செக்கரவர்சேருமிடமென்பர்தடமூழ்கிப்
புக்கரவவிஞ்சையருமவிண்ணவருநண்ணி
நக்கரவர்நாமநினைவெய்தியநள்ளாறே. (௪)

நெஞ்சமிதுகண்டுகொளுனக்கெனநினைந்தார்
வஞ்சமதறுத்தருளுமற்றவனைவானோ
ரஞ்சமுதுகாகியவர்கைதொழவெழுந்த
நஞ்சமுதுசெய்தவனிருப்பிடநள்ளாறே. (௫)

பாலனடிபேணவவனாருயிர்குறைக்குங்
காலனுடன்மாளமுனுதைத்தவரனூராங்

கோலமலர்நீர்க்குடமெடுத்துமறையாளர்
நாவின்வழிநின்றுதொழில்பேணியநள்ளாறே. (௬)

நீதியர்நெடுந்தகையர்நீண்மலையர்பாவை
பாதியர்பராபரர்பரமபரரிருக்கை
வேதியர்கள்வேள்வியொழியாதுமறைநாளு
மோதியரனாமமுமுணர்ந்திடுநள்ளாறே. (௭)

கடுத்துவலரக்கன்முனெருக்கிவரைதன்னை
யெடுத்தவன்முடித்தலைகள்பத்துமிருதோளு
மடர்த்தவர்தமக்கிடமதென்பரளிபாட
நடத்தகலவைத்திரள்கள்வைகியநள்ளாறே. (௮)

உயர்ந்தவனுருக்கொடுதிரிந்துலகமெல்லாம்
பயந்தவனினைப்பரியபண்பனிடமென்பர்
வியந்தமரர்மெச்சமலர்மல்குபொழில்விம்மு
நயந்தருமவேதவொலியார்திருநள்ளாறே. (௯)

சிந்தைதிருகற்சமணர்தேரர்தவமென்னும்
பந்தனையறுத்தருளுகின்றபரமன்னூர்
மந்தமுழவந்தருவிழாவொலியும்வேதச
சந்தமிகவிம்பொழின்முழங்கியநள்ளாறே. (௧௦)

ஆடலரவார்சடையனாயிழைதனோடு
நாடுமலிவெய்திடவிருந்தவனள்ளாற்றை
மாடமலிகாழிவளர்பந்தனதுசெஞ்சொற
பாடலுடையாரையடையாபழிகளேயே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருப்பழுவூர் - திருவிராகம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

முத்தன்மிகுமூவிலைநல்வேலன்விரிநூல
னத்தனெமையாளுடையவண்ணலிடமென்பர்
மைத்தழைபெரும்பொழிலின்வாசமதுவீசப
பத்தரொடுசித்தர்பயில்கின்றபழுவூரே. (௧)

கோடலொடுகோங்கவைகுலாவுமுடிதன்மே
லாடரவம்வைத்தபெருமானதிடமென்பர்
மாடமலிசூளிகையிலேறிமடவார்கள்
பாடலொலிசெய்யமலிகின்றபழுவூரே. (௨)

வாலியபுரத்திலவர்வேவவிழிசெய்த
போலியவொருத்தர்புரிநூலரிடமென்பர்
வேலியின்விரைக்கமலமன்னமுகமாதர்
பாலெனமிழற்றிநடமாடுபழுவூரே. (௩)

எண்ணுமோரெழுத்துமிசையின்கிளவிதேர்வார்
கண்ணுமுதலாயகடவுட்கிடமதென்பர்
மண்ணின்மிசையாடிமலையாளர்தொழுதேத்திப்
பண்ணிறைவிகொண்டுபயில்கின்றபழுவூரே. (௪)

சாதல்புரிவார்சுடலைதன்னினடமாடு
நாதனமையாளுடையநம்பனிடமென்பர்
வேதமொழிசொல்லிமறையாளரிறைவன்றன்
பாதமவையோதநிகழ்கின்றபழுவூரே. (௬)

மேவயருமும்மதிலும்வெந்தழல்விளைத்து
மாவயரவன்றுரிசெய்மைந்தனிடமென்பர்
பூவையைமடந்தையர்கள்கொண்டுபுகழ்சொல்லிப்
பாவையர்கள்கற்பொடுபொலிந்தபழுவூரே. (௭)

மந்தணமிருந்துபுரிமாமடிதனவேள்வி
சிந்தவிளையாடுசிவலோகனிடமென்ப
ரந்தணர்களாகுதியிலிட்டவகின்மட்டார்
பைந்தொடிநன்மாதர்சுவடொற்றுபழுவூரே. (அ)

உரக்கடல்விடத்தினைமிடற்றிலுறவைத்தன்
றரக்கனையடர்த்தருளும்மப்பனிடமென்பர்
குரக்கினம்விரைப்பொழிலின்மீதுகனியுண்டு
பரக்குறுபுணர்ச்செய்விளையாடுபழுவூரே. (௯)

நின்றநெடுமாலுமொருநான்முகனுந்தேட
வன்றுதழலாய்நிமிருமாதியிடமென்ப
ரொன்றுமிருமூன்றுமொருநாலுமுணர்வார்கண்
மன்றினிலிருந்துடன்மகிழ்ந்தபழுவூரே. (௧௦)

மொட்டையமணாதர்துகின்மூடுவிரிதேரர்
முட்டைகண்மொழிந்தமுனிவான்றனிடமென்பர்
மட்டைமலிதாழையிளநீரதிசைபூகம
பட்டையொடுதாறுவிரிகின்றபழுவூரே. (௧௧)

அந்தணர்களானமலையாளரவரேத்தும்
பந்தமலிகின்றபழுவூரரனையாரச
சந்தமிகுஞானசம்பந்தனுரைபேணி
வந்தவணமேத்துமவர்வானமுடையாரே. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

---

திருத்தென்குரங்காடுதுறை - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

பரவக்கெடும்வல்வினைபாரிடஞ்சூழ
விரவிற்புறங்காட்டிடைநின்றெரியாடி
யரவச்சடையந்தணன்மேயவழகார்
குரவப்பொழில்சூழ்குரங்காடுதுறையே. (௧)

விண்டார்புரமூன்றுமெரித்தவிமல
னிண்டார்புறங்காட்டிடைநின்றெரியாடி
வண்டார்கருமென்குழன்மங்கையோர்பாகங்
கொண்டானகர்போல்குரங்காடுதுறையே. (௨)

நிறைவில்புறங்காட்டிடைநேரிழையோடு
மிறைவில்லெரியான்மழுவேந்திநின்றாடி

மறையின்னொலிவானவர்தானவரேத்துங்
குறைவில்லவனூர்குரங்காடுதுறையே (௩)

விழிக்குந்நுதன்மேலொருவெண்பிறைசூடித்
தெழிக்கும்புறங்காட்டிடைச்சேர்ந்தெரியாடிப்
பழிக்கும்பரிசேபலிதேர்ந்தவனூர்பொன்
கொழிக்கும்புனல்சூழ்குரங்காடுதுறையே. (௪)

நீறார்தருமேனியனெற்றியோர்கண்ண
ணேறார்கொடியெம்மிறையீண்டெரியாடி
யாறார்சடையந்தணனாயிழையாளோர்
கூறனகர்போல்குரங்காடுதுறையே. (௫)

களிருமமலர்க்கொன்றையுநாறுகரந்தைத்
துளிருஞ்சுலவிச்சுடுகாட்டெரியாடி
மிளிரும்மரவார்த்தவன்மேவியகோயில்
குளிரும்புனல்சூழ்குரங்காடுதுறையே. (௬)

பழகும்வினைதீர்ப்பவன்பார்ப்பதியோடும
முழவங்குழன்மொந்தைமுழங்கெரியாடும
மழகன்னயின்மூவிலைவேலவலனேந்துங
குழகன்னகர்போலகுரங்காடுதுறையே. (௭)

வரையார்த்தெடுத்தவரக்கன்வலியொல்க
நிரையார்விரலானெரித்திட்டவனூராங்
கரையார்ந்திழிகாவிரிக்கோலக்கரைமேற்
குரையார்பொழில்சூழ்குரங்காடுதுறையே. (௮)

நெடியானொடுநான்முகனுந்நினைவொண்ணாப
படியாகியபண்டங்கனின்றெரியாடி
செடியார்தலையேந்தியசெங்கண்வெள்ளேற்றின்
கொடியானகர்போல்குரங்காடுதுறையே. (௯)

துவராடையர்வேடமலாச்சமண்கையர்
கவர்வாய்மொழிகாதல்செய்யாதவனூரா
நவையார்மணிபொன்னகில்சந்தனமுந்திக்
குவையார்கரைசேர்குரங்காடுதுறையே (௧௦)

நல்லார்பயில்காழியுண்ஞானசம்பந்தன்
கொல்லேறுடையான்குரங்காடுதுறைமேற்
சொல்லார்தமிழ்மாலைபத்துந்தொழுதேத்த
வல்லாரவர்வானவரோடுறைவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திரு இரும்பூளை - வினாவுரை - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

சீரார்கழலேதொழுவீரிதுசெப்பீர்
வாரார்முலைமங்கையொடும்முடனாகி
யேராரிரும்பூளையிடங்கொண்டவீசன்
காரார்கடனஞ்சமுதுண்டகருத்தே. (௧)

தொழலார்கழலேதொழுதொண்டர்கள்சொல்லீர்
குழலார்மொழிக்கோல்வளையோடுடனாகி
யெழிலாரிரும்பூளையிடங்கொண்டவீசன்
கழலான்கரிகானிடையாடுகருத்தே. (௨)

அன்பாலடிகைதொழுவீரறியீரே
மின்போன்மருங்குன்மடவாளொடுமேவி
யின்பாயிரும்பூளையிடங்கொண்டவீசன்
பொன்போற்சடையிற்புனல்வைத்தபொருளே. (௩)

நச்சித்தொழுவீர்கணமக்கிதுசொல்லீர்
கச்சிப்பொலிகாமக்கொடியுடன்கூடி
யிச்சித்திரும்பூளையிடங்கொண்டவீச
னுச்சித்தலையிற்பலிகொண்டுழலூணே (௪)

சுற்றார்ந்தடியேதொழுவீரிதுசொல்லீர்
நற்றாழ்குழனங்கையொடுமுடனாகி
யெற்றேயிரும்பூளையிடங்கொண்டவீசன்
புற்றாரரவோடென்புபூண்டபொருளே. (௫)

தோடார்மலர்தூய்த்தொழுதொண்டர்களசொல்லீர்
சேடார்குழற்சேயிழையோடுடனாகி
யீடாயிரும்பூளையிடங்கொண்டவீசன்
காடார்கடுவேடுவனானகருத்தே. (௬-௭)

ஒருக்கும்மனத்தன்பருள்ளீரிதுசொல்லீர்
பருக்கைமதவேழமுரித்துமையோடு
மிருக்கையிரும்பூளையிடங்கொண்டவீச
னரக்கன்னுரந்தீர்த்தருளாக்கியவாறே. (௮)

துயராயினநீங்கித்தொழுந்தொண்டர்சொல்லீர்
கயலார்கருங்கண்ணியொடுமுடனாகி
யியல்பாயிரும்பூளையிடங்கொண்டவீசன்
முயல்வாரிருவர்க்கெரியாகியமொய்ம்பே. (௯)

துணைநன்மலர்தூய்த்தொழுந்தொண்டர்கள்சொல்லீர்
பணைமென்முலைப்பார்ப்பதியோடுடனாகி
யிணையில்லிரும்பூளையிடங்கொண்டவீச
னணைவில்சமண்சாக்கியமாக்கியவாறே. (௧௦)

எந்தையிரும்பூளையிடங்கொண்டவீசன்
சந்தம்பயில்சண்பையுண்ஞானசம்பந்தன்
செந்தண்டமிழ்செப்பியபத்திவைவல்லார்
பந்தம்மறுத்தோங்குவர்பான்மையினாலே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

**திருமறைக்காடு - கதவடைக்கப்பாடியது - பண் - இந்தளம்.**

திருச்சிற்றம்பலம்.

**சதுரம்மறைதான்றுதிசெய்துவணங்கும்**
**மதுரம்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா**

விதானன்கிறைவைத்தருள்செய்தவெனக்குன்
கதவந்திருக்காப்புக்கொள்ளுங்கருத்தாலே. (க)

சங்கந்தரளம்மவைத்தான்கரைக்கேற்றும
வங்கக்கடல்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
மங்கையுமைபாகமுமாகவிதென்கொல்
கங்கைசடைமேலடைவித்தகருத்தே. (உ)

குரவங்குருக்கத்திகள்புன்னைகண்ஞாழன்
மருவும்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
சிரமும்மலருந்திகழ்செஞ்சடைதன்மே
லரவம்மதியோடடைவித்தவழகே. (ங)

படர்செம்பவளத்தொடுபொன்மலர்முத்தம்
மடலம்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
வுடலம்முமைபங்கமதாகியுமென்கொல்
கடனஞ்சமுதாவதுவுண்டகருத்தே. (௪)

வானோர்மறைமாதவத்தோர்வழிபட்ட
தேனார்பொழில்சூழ்மறைக்காட்டுறைசெல்வா
வேனோர்தொழுதேத்தவிருந்தநீயென்கொல்
கானார்கடுவேடுவனானகருத்தே. (ரு)

பலகாலங்கள்வேதங்களபாதங்கள்போற்றி
மலரால்வழிபாடுசெய்மாமறைக்காடா
வுலகேழுடையாய்கடைதோறுமுனென்கொ
றலைசேர்பலிகொண்டதிலுண்டதுதானே. (சு)

வேலாவலயத்தயலேமிளிர்வெய்துஞ்
சேலார்திருமாமறைக்காட்டுறைசெல்வா
மாலோடயனிந்திரனஞ்சமுனென்கொல்
காலார்சிலைக்காமனைக்காய்ந்தகருத்தே. (எ)

கலங்கொள்கடலோதமுலாவுங்கரைமேல்
வலங்கொள்பவர்வாழ்த்திசைக்கும்மறைக்காடா
விலங்கையுடையானடர்பட்டிடரெய்த
வலங்கலவிரலூன்றியருள்செய்தவாறே. (அ)

கோனென்றுபல்கோடியுருத்திரர்போற்றுந்
தேனம்பொழில்சூழ்மறைக்காட்டுறைசெல்வா
வேனங்கழுகானவருன்னைமுனென்கொல்
வானந்தலைமண்டியுங்கண்டிலவாறே. (௯)

வேதம்பலவோமம்வியந்தடிபோற்ற
வோதம்முலவும்மறைக்காட்டிலுறைவா
யேதில்சமண்சாக்கியர்வாக்கிவையென்கொ
லாதரொடுதாமலர்தூற்றியவாறே. (க0)

காழிந்நகரான்கலைஞானசம்பந்தன்
வாழிம்மறைக்காடனைவாய்ந்தறிவித்த
வேழின்னிசைமாலையீரைந்திவைவல்லார்
வாழியுலகோர்தொழவானடைவாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

திருச்சாய்க்காடு - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

நித்தலுந்நியமஞ்செய்துநீர்மலர்தூவிச
சித்தமொன்றவல்லார்க்கருளுஞ்சிவன்கோயின்
மத்தயானையினகோடுமவெண்பீலியுமவாரித
தத்துநீர்ப்பொன்னிசாகரமேவுசாய்க்காடே. (௧)

பண்டலைக்கொண்டுபூதங்கள்பாடநின்றுமெ
வெண்டலைக்கருங்காடுறைவேதியன்கோயில்
கொண்டலைததிகழ்பேரிமுழங்கக்குலாவித
தண்டலைத்தடமாமயிலாடுசாய்க்காடே (௨)

நாறுகூவிளநாகிளவெண்மதியத்தோ
டாறுசூடுமமரர்பிரானுறைகோயி
லூறுதேங்கனிமாங்கனியோங்கியசோலைத்
தாறுதண்கதலிப்புதன்மேவுசாய்க்காடே (௩)

வரங்கள்வண்புகழ்மன்னியவெந்தைமருவார்
புரங்களைமூன்றுமபொடிபடவெய்தவன்கோயி
லிரங்கலோசையுமீட்டியர்சாததொடுமீண்டிந
தரங்கநீளகழித்தண்கரைவைகுசாய்க்காடே. (௪)

ஏழைமாதர்கடைதோறுமிடுபலிகொன்று
கூழைவாளரவாடுமபிரானுறைகோயின
மானழியொண்கண்வளைக்கைநுளைச்சியர்வண்பூந
தாழைவெண்மடறகொய்துகொண்டாடுசாய்க்காடே. (௫)

துங்கவானவர்சூழ்கடறுங்கடைபோதி
லங்கோர்நீழலளித்தவெம்மானுறைகோயில்
வங்கமங்கொளிரிப்பியுமுத்துமாமணியுஞ
சங்குமவாரித்தடங்கடலூந்துசாய்க்காடே (௬)

வேதநாவினர்வெண்பளிங்கினகுழைக்காத
ரோதநஞ்சணிகண்டருகந்துறைகோயின
மாதர்வண்டுதன்காதல்வண்டாடியபுன்னைத்
தாதுகண்டுபொழிலின்மறைந்தூடுசாய்க்காடே. (௭)

இருக்குநீள்வரைபற்றியடர்த்தன்றெடுத்த
வரக்கனாகநெரித்தருள்செய்தவன்கோயின்
மருக்குலாவியமல்லிகைசெண்பகமவண்பூந்
தருக்குலாவியதண்பொழினீடுசாய்க்காடே. (௮)

மாவினுடையன்காண்டற்கரியவர்வாய்ந்த
வேலையார்விடமுண்டவர்மேவியகோயில்
சேலினேர்விழியார்மயிலாலச்செருந்தி
காலையேகனகம்மலர்கின்றசாய்க்காடே. (௯)

ஊத்தைவாய்ச்சமண்கையர்கள்சாக்கியர்க்கென்று
மாத்தமாகவறிவரிதாயவன்கோயில்
வாய்த்தமாளிகைசூழ்தருவண்புகார்மாடே
பூத்தவாவிகள்சூழ்ந்துபொலிந்தசாய்க்காடே. (௧௦)

ஏனையோர்புகழ்ந்தேத்தியவெந்தைசாய்க்காட்டை
ஞானசம்பந்தன்காழியர்கோனவில்பத்து
மூனமின்றியுரைசெய்யவல்லவார்தாம்போய்
வானநாடினிதாளவரிம்மாநிலத்தோரே (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்ஷேத்திரக்கோவை - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

ஆரூர்தில்லையம்பலம்வல்லம்நல்லம் - வடகச்சியுமச்சிறுபாக்கநல்ல
கூரூர்குடவாயில்குடந்தைவெண்ணி- கடல்சூழ்கழிப்பாலைதென்கோடிபீடார்
நீரூர்வயனின்றியூர்குன்றியூருங் - குருகாவையூர்நாரையூர்நீடுகானப்
பேரூர்நன்னீள்வயனெய்த்தானமும்பிதற்றாய்பிறைசூடிதன்பேரிடமே. (க)

அண்ணாமலையீங்கோயுமத்திமுத்தா - றகலாமுதுகுன்றங்கொடுங்குன்ற
முங், கண்ணார்கழுக்குன்றங்கயிலைக்கோணம் - பயில்கற்குடிகாளத்திவாட்போ
க்கியும், பண்ணார்மொழிமங்கையோர்பங்குடையான்- பரங்குன்றம்பருப்பதம்
பேணிநின்றே, யெண்ணாயிரவும்பகலுமிடும்பைக் - கடனீந்தலாங்காரணமே.()

அட்டானமென்றோதியநாலிரண்டு - மழகன்னுறைகாவனைத்துந்துறைக
ளெட்டாந்திருமூர்த்தியின்காடொன்பதுங் - குளமூன்றுங்களமஞ்சும்பாடிநா
ன்கு,மட்டார்குழலாண்மலைமங்கைபங்கன் - மதிக்குமிடமாகியபாழிமூன்று
ஞ்,சிட்டானவன்பாசூரென்றேவிரும்பா-யரும்பாவங்களாயினதேய்ந்தறுமே.

அறப்பள்ளியகத்தியான்பள்ளிவெள்ளைப் - பொடிப்பூசிநீறணிவானமர்
காட்டுப்பள்ளி, சிறப்பள்ளிசிராப்பள்ளிசெம்பொன்பள்ளி- திருநனிபள்ளிசீர்ம
கேந்திரத்துப், பிறப்பில்லவன்பள்ளிவெள்ளச்சடையான் - விரும்பும்மிடைப்
பள்ளிவண்சக்கரமா, லுறைப்பாலடிபோற்றக்கொடுத்தபள்ளி - யுணராய்மட
நெஞ்சமேயுன்னிநின்றே. (ச)

ஆறைவடமாகறலம்பரையா - றணியார்பெருவேளூர்விளமர்தெங்கூர்
சேறைத்துலைபுகலூரகலாதிவை - காதலித்தானவன்சேர்பதியே. (ரு)

மனவஞ்சர்மற்றோடமுன்மாதராரு - மதிகூர்திருக்கூடலிலாலவாயு
மினவஞ்சொலிலாவிடைமாமருது - மிரும்பைப்பதிமாகாளம்வெற்றியூருங்
கனமஞ்சினமால்விடையான்விரும்புங் - கருகாவூர்நல்லூர்பெரும்புலியூர்
தனமென்சொலிற்றஞ்சமென்றேநினைமின்-றவமாமலமாயினதானறுமே.(சு)

மாட்டூர்மடப்பாச்சிலாச்சிராமம் - *முண்டீச்சரம்வாதவூர்வாரணாசி
காட்டூர்கடம்பூர்படம்பக்கங்கொட்டுங் - கடலொற்றியூர்மற்றுறையூரவையுங்
கோட்டூர்திருவாமாத்தூர்கோழம்பமுங்-கொடுங்கோவலூர்திருக்குணவாயில்.

குலாவுதிங்கட்சடையான்குளிரும்பரிதிந்நியமம்
போற்றூரடியார்வழிபாடொழியாத் தென்புறம்பயம்பூவணம்பூழியூருங்,காற்
றூர்வரையன்றெடுத்தான்முடிதோ - ணெரித்தானுறைகோயிலென்றென்று
நீகருதே. (அ)

நெற்குன்றமோத்தூர்நிறைநீர்மருகல் - னெடுவாயில்குறும்பலாநீடுதிரு
நற்குன்றம்வலம்புரநாகேச்சுர - நளிர்சோலையுஞ்சேனைமாகாளம்வாய்மூர், கற்
குன்றமொன்றேந்திமழைதடுத்த - கடல்வண்ணனுமாமலரோனுங்காணச்,
சொற்கென்றுந்தொலைவிலாதானுறையுங் -குடமூக்கென்றுசொல்லிக்குலாவு
மினே. (கூ)

---

* "மயிண்டீச்சரம்" என்றும் பாடம்.

குத்தங்குடி வேதிகுடி புனல்சூழ் - குருந்தங்குடி தேவன்குடி மருவு
மத்தங்குடி தண்டிருவண்குடியு - மலம்புஞ்சல நஞ்சடை வைத்துகந்த
நித்தன்னிமலனுமையோடுங்கூட - நெடுங்காலமுறைவிடமென்று சொல்லாப்
புத்தர்புறங்கூறிய புன்சமணர் - நெடும்பொய்களைவிட்டு நினைந்துய்ம்மினே. ( )

அம்மானையருந்தவமாகி நின்ற வமரர்பெருமான்பதியானவுன்னிக், கொய்ம்மாமலர்ச்சோலைகுலாவுகொச்சைக் - கிறைவன் சிவஞானசம்பந்தன்சொன்ன, விம்மாலையீரைந்துமிருநிலத்தி - லிரவும்பகலுநினைந்தேத்திநின்று, விம்மாவெருவாவிரும்புமடியார் - விதியார்பிரியார்சிவன்சேவடிக்கே. (கக)

திருச்சிற்றம்பலம்

ரு-வதில் இரண்டுசரணமும், எ-வதில் மூன்றுசரணமும், அ - வதில் இரண்டரை சரணமும் இருக்கின்றன.

குன்றியூர்-இடைப்பள்ளி-மாட்டூர்-வாதவூர் - வாரணாசி-கோட்டூர்-குணவாயில் - நெற்குன்றம்-நற்குன்றம்-நெடுவாயில்-உஞ்சேனைமாகாளம் - குத்தங்குடி - குருந்தேவன் குடி-மத்தங்குடி-திருவண்குடி இவைகட்குத் தனித்தனி தேவாரமில்லாமையால் வைப்புத்தலமென்று சொல்லப்படும்.

---

## திருப்பிரமபுரம் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்

எம்பிரானெனக்கமுதமாவானுந்தன்னடைந்தார்
தம்பிரானாவானுந்தழலேந்துகையானும்
கம்பமாகரியுரித்தகாபாலிகறைக்கண்டன்
வம்புலாம்பொழிற்பிரமபுரத்துறையும்வானவனே. (க)

தாமென்றுமனந்தளராத்தகுதியராயுலகத்துக்
காமென்றுசரண்புகுந்தாரந்தமைக்காக்குங்கருணையினா
னோமென்றுமறைபயில்வார்பிரமபுரத்துறைகின்ற
காமனறவுடலெரியக்கனல்சேர்ந்தகண்ணானே (உ)

நன்னெஞ்சேயுனையிரந்தேனம்பெருமான்றிருவடியே
யுன்னஞ்செய்திருக்கண்டாயுய்வதனைவேண்டுதியே
லன்னஞ்சேர்பிரமபுரத்தாரமுதையெப்போதும்
பன்னுஞ்சீர்வாயதுவேபார்க்கண்ணேபரிந்திடவே (௩)

சாநாளின்றிமனமேசங்கைதனைத்தவிர்ப்பிக்குங்
கோனாளுந்திருவடிக்கேகொழுமலர்தூவெத்தனையுந்
தேனாளும்பொழிற்பிரமபுரத்துறையுந்தீவணனை
நாநாளுநன்னியமஞ்செய்தவன்சீர்நவின்றேத்தே. (௪)

கண்ணுதலான்வெண்ணீற்றான்கமழ்சடையான்விடையேறி
பெண்ணிதமாமுருவத்தான்பிஞ்ஞகன்பேர்பலவுடையான்
விண்ணுதலாத்தோன்றியசீர்ப்பிரமபுரந்தொழவிரும்பி
யெண்ணுதலாஞ்செல்வத்தையியல்பாகவறிந்தோமே. (ரு)

எங்கேனுமியாதாகிப்பிறந்திடினுந்தன்னடியார்க்
கிங்கேயென்றருள்புரியுமெம்பெருமானெருதேறிக்
கொங்கேயுமலர்ச்சோலைக்குளிர்பிரமபுரத்துறையுஞ்
சங்கேயொத்தொளிர்மேனிச்சங்கரன்றன்றன்மைகளே. (சு)

சிலையதுவெஞ்சிலையாகத்திரிபுரமூன்றெரிசெய்த
விலைநுனைவேற்றடக்கையனேந்திழையாளொருகூற
னலைபுனல்சூழ்பிரமபுரத்தருமணியையடிபணிந்தா
னிலையுடையபெருஞ்செல்வநீடுலகிற்பெறலாமே. (௭)

எரித்தமயிர்வாளரக்கன்வெற்பெடுக்கத்தோளொடுதா
ணெரித்தருளுஞ்சிவமூர்த்திநீறணிந்தமேனியினு
னுரித்தவரித்தோலுடையானுறைபிரமபுரந்தன்னைத்
தரித்தமனமெப்போதும்பெறுவார்தாந்தக்காரே. (௮)

கரியானுநான்முகனுங்காணாமைக்கனலுருவா
யரியானாம்பரமேட்டியரவஞ்சேரகலத்தான்
றெரியாதானிருந்துறையுந்திகழ்பிரமபுரஞ்சேர
வுரியார்தாமேழுலகுமுடனாளவுரியாரே. (௯)

உடையிலார்சீவரத்தார்தன்பெருமையுணர்வரியான
முடையிலார்வெண்டலைக்கைமூர்த்தியாந்திருவுருவன்
பெடையிலார்வண்டாடும்பொழிற்பிரமபுரத்துறையுஞ்
சடையிலார்வெண்பிறையான்றாள்பணிவார்தக்காரே (௧௦)

தன்னடைந்தார்க்கின்பங்கடருவானைத்தத்துவனைக்
கன்னடைந்தமதிற்பிரமபுரத்துறையுங்காவலனை
முன்னடைந்தான்சம்பந்தன்மொழிபத்துமிவைவல்லார்
பொன்னடைந்தார்போகங்கள்பலவடைந்தார்புண்ணியரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருச்சாய்க்காடு - பண் சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

மண்புகார்வான்புகுவர்மனமிளையார்பசியாலுங்
கண்புகார்பிணியறியார்கற்றாருங்கேட்டாரும்
விண்புகாரெனவேண்டாவெண்மாடநெடுவீதித்
தண்புகார்ச்சாய்க்காட்டெந்தலைவன்றாள்சார்ந்தாரே. (௧)

போய்க்காடேமறைந்துறைதல்புரிந்தானும்பூம்புகார்ச்
சாய்க்காடேபதியாகவுடையானும்விடையானும்
வாய்க்காடுமுதுமரமேயிடமாகவந்தடைந்த
பேய்க்காடல்புரிந்தானும்பெரியோர்கள்பெருமானே. (௨)

நீநாளுநன்னெஞ்சேநினைகண்டாயாரறிவார்
சாநாளும்வாழ்நாளுஞ்சாய்க்காட்டெம்பெருமாற்கே
பூநாளுந்தலைசுமப்பப்புகழ்நாமஞ்செவிகேட்ப
நாநாளுநவின்றேத்தப்பெறலாமேநல்வினையே. (௩)

கட்டலர்த்தமலர்தூவிக்கைதொழுமின்பொன்னியன்ற
தட்டலர்த்தபூஞ்செருந்திகோங்கமருந்தாழ்பொழில்வாய்
மொட்டலர்த்ததடந்தாழைமுருகுயிர்க்குங்காவிரிப்பூம்
பட்டினத்துச்சாய்க்காட்டெம்பரமேட்டிபாதமே. (௪)

கோங்கன்னகுவிமுலையாள்கொழும்பணைத்தோட்கொடியிடையைப்
பாங்கென்னவைத்துகந்தான்படர்சடைமேற்பான்மதியந்
தாங்கினான்பூம்புகார்ச்சாய்க்காட்டான்றாணிழற்கீ
ழோங்கினாரோங்கினாரெனவுரைக்குமுலகமே. (௫)

சாந்தாகநீறணிந்தான்சாய்க்காட்டான்காமனைமுன்
றீந்தாகமெரிகொளுவச்செற்றுகந்தான்றிருமுடிமே
லேய்ந்தாரமதிசூடியொளிதிகழுமலைமகடோ
டோய்ந்தாகம்பாகமாவுடையானும்விடையானே. (சா)

மங்குறோய்மணிமாடமதிதவழுநெடுவீதிச்
சங்கெலாங்கரைபொருதுதிரைபுலம்புஞ்சாய்க்காட்டான்
கொங்குலாவரிவண்டினிசைபாடுமலர்க்கொன்றைத்
தொங்கலானடியார்க்குச்சுவர்க்கங்கள்பொருளலவே. (எ)

தொடலரியதொருகணையாற்புரமூன்றுமெரியுண்ணப்
படவரவத்தெழிலாரம்பூண்டான்பண்டரக்கனைக்
கடல்வரையாற்றடவரைத்தோளூன்றினான்சாய்க்காட்டை
யிடவகையாலடைவோமென்றெண்ணுவார்க்கிடரிலையே. (அ)

வையநீரேற்றானுமலருறையுநான்முகனு
மையன்மாரிருவர்க்குமளப்பரிதாலவன்பெருமை
தையலார்பாட்டோவாச்சாய்க்காட்டெம்பெருமானைத்
தெய்வமாப்பேணாதார்தெளிவுடைமைதேறோமே. (கூ)

குறங்காட்டுநால்விரற்கோவணத்துக்கோலோவிப்போ
[illegible]றங்காட்டுஞ்சமணருஞ்சாக்கியருமலர்தூற்றுந்
திறங்காட்டல்கேளாம்தெளிவுடையீர்சென்றடைமின்
புறங்காட்டிலாடலான்பூம்புகார்ச்சாய்க்காடே. (க0)

நொம்பந்தபுடைத்தொல்குநாபுரஞ்சேர்மெல்லடியா
ரம்பந்துமவரிக்கழலுமரவஞ்செய்பூங்காழிச்
சம்பந்தன்றமிழ்பகர்ந்தசாய்க்காட்டுப்பத்தினையு
மெம்பந்தமெனக்கருதியேத்துவார்க்கிடர்கெடுமே. (கக)

திருச்சிற்றம்பலம்

---

## திரு ஆக்கூர் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

அக்கிருந்தவாரமுமாடரவுமாமையுந்
தொக்கிருந்தமார்பினான்றோலுடையான்வெண்ணீற்றான்
புக்கிருந்ததொல்கோயில்பொய்யிலாமெய்ந்நெறிக்கே
தக்கிருந்தாராக்கூரிற்றான்றோன்றிமாடமே. (க)

நீராரவார்சடையானீறுடையானேறுடையான்
காரார்பூங்கொன்றையினான்காதலித்ததொல்கோயில்
கூராரல்வாய்நிறையக்கொண்டயலேகோட்டகத்திற்
றூராமாடாக்கூரிற்றான்றோன்றிமாடமே. (உ)

வாளார்கண்செந்துவர்வாய்மாமலையான்றன்மடந்தை
தோளாகம்பாகமாப்புல்கினான்றொல்கோயில்
வேளாளரென்றவர்கள்வள்ளன்மையான்மிக்கிருக்குந்
தாளாளராக்கூரிற்றான்றோன்றிமாடமே. (ங)

கொங்குசேர்தண்கொன்றைமாலையினான்கூற்றடரப்
பொங்கினான்பொங்கொளிசேர்வெண்ணீற்றான்பூங்கோயி
லங்கமாறோடுமருமறைகளைவேள்வி
தங்கினாராக்கூரிற்றான்றோன்றிமாடமே. (ச)

வீக்கினானாடரவம்விரிந்திழிந்தார்வெண்டலையென்
பாக்கினானபலகலன்களாதரித்துப்பாகம்பெ
ணாக்கினான்றன்கோயிலாமபலமபூம்பொய்கைபுடைத
தாக்கினாராக்கூரிற்றான்றோன்றிமாடமே. (௫)

பண்ணொளிசேர்நான்மறையான்பாடலினோடாடலினன
கண்ணொளிசேர்நெற்றியினான்காதலித்ததொல்கோயில்
விண்ணொளிசோமாமதியநீண்டியக்கால்வெண்மாடந
தண்ணொளிசேராக்கூரிற்றான்றோன்றிமாடமே. (௬)

வீங்கினார்மும்மதிலும்வில்வரையால்வெந்தவிய
வாங்கினார்வானவர்கள்வந்திறைஞ்சுந்தொல்கோயில்
பாங்கினார்நான்மறையோடாறங்கமபலகலைக
டாங்கினாராக்கூரிற்றான்றோன்றிமாடமே. (௭)

கணநெடியகுன்றெடுத்தான்றோளடக்காலூன்றி
யினனருளாலாட்கொண்டவெம்பெருமான்றன்கோயில்
பொன்னடிக்கேநாடோறும்பூவோடுநீர்சுமக்குந
தன்னடியாராக்கூரிற்றான்றோன்றிமாடமே. (௮)

நன்மையராநாரணனுநான்முகனுங்காண்பரிய
தொன்மையான்றோற்றங்கேடில்லாதான்றன்கோயி
லின்மையாற்சென்றிரந்தார்க்கில்லையென்னாதீந்துவக்குந
தன்மையாராக்கூரிற்றான்றோன்றிமாடமே. (௯)

நாமருவுபுன்மைநவிற்றச்சமணடேரர்
பூமருவுகொன்றையினான்புக்கமருந்தொல்கோயில்
சேனமருவுபங்கயத்துச்செங்கழுநீர்பைங்குவளை
தாமருவுமாக்கூரிற்றான்றோன்றிமாடமே. (௰)

ஆடலமர்ந்தானையாக்கூரிற்றான்றோன்றி
மாடமமர்ந்தானைமாடஞ்சேர்தண்காழி
நாடறியசீர்ஞானசம்பந்தன்சொற்
பாடலிவைவல்லார்க்கில்லையாம்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருப்புள்ளிருக்குவேளூர் - பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்.

கள்ளார்ந்தபூங்கொன்றைமதமத்தங்கதிர்மதிய
முள்ளார்ந்தசடைமுடியெம்பெருமானாருறையுமிடந
தள்ளாயசம்பாதிசடாயென்பார்தாமிருவர்
புள்ளானார்க்கரையனிடம்புள்ளிருக்குவேளூரே. (௧)

தையலாளொருபாகஞ்சடைமேலாளவளோடு
மையந்தேர்ந்துழல்வானோரந்தணனாருறையுமிட
மெய்சொல்லாவிராவணனைமேலோடியீடழித்துப
பொய்சொல்லாதுயிர்போனான்புள்ளிருக்குவேளூரே. (௨)

வாசநலஞ்செய்திமையோர்நாடோறுமலர்தூவ
வீசனெம்பெருமானாரினிதாகவுறையுமிடம
யோசனைபோய்ப்பூக்கொணர்ந்தங்கொருநாளுமொழியாமே
பூசனைசெய்தினிதிருந்தான்புள்ளிருக்குவேளூரே. (௩)

மாகாயம்பெரியதொருமானுரித்தோலுடையாடை
யேகாயமிட்டுகந்தவெரியாடியுறையுமிடம்
மாசாயந்தேரோடுமிராவணனையமரின்கட்
போகாமேபொருதழித்தான்புள்ளிருக்குவேளூரே. (௪)
கீதத்தைமிகப்பாடுமடியார்கள்குடியாகப்
பாதத்தைத்தொழநின்றபரஞ்சோதிபயிலுமிடம்
வேதத்தின்மந்திரத்தால்வெண்மணலேசிவமாகப்
போதத்தால்வழிபட்டான்புள்ளிருக்குவேளூரே (௫)
திறங்கொண்டவடியார்மேற்றீவினைநோய்வாராமே
யறங்கொண்டுசிவதன்மமுரைத்தபிரானமருமிடம்
மறங்கொண்டங்கிராவணன்றன்வலிகருதிவந்தானைப்
புறங்கண்டசடாயென்பான்புள்ளிருக்குவேளூரே. (௬)
அத்தியினீருரிமூடியழகாகவனலேந்திப்
பித்தரைப்போற்பலிதிரியும்பெருமானார்பேணுமிடம்
பத்தியினால்வழிபட்டுப்பலகாலந்தவஞ்செய்து
புத்தியொன்றவைத்திருந்தான்புள்ளிருக்குவேளூரே. (௭)
பண்ணொன்றவிசைபாடுமடியார்கள்குடியாக
மண்ணின்றிவிண்கொடுக்குமணிகண்டன்மருவுமிடம்
எண்ணின்றிமுக்கோடிவாணாளதுடையானைப்
புண்ணொன்றப்பொருதழித்தான்புள்ளிருக்குவேளூரே. (௮)
வேதித்தார்புரமூன்றும்வெங்கணையால்வெந்தவியச்
சாதித்தவில்லாளிகண்ணாளன்சாருமிடம்
மாதித்தன்மகனென்னவகன்ஞாலத்தவரோடும்
போதித்தசடாயென்பான்புள்ளிருக்குவேளூரே. (௯)
கடுத்துவருங்கங்கைதனைக்கமழ்சடையொன்றூடாமே
தடுத்தவரெம்பெருமானார்தாமினிதாயுறையுமிடம்
விடைத்துவருமிலங்கைக்கோன்மலங்கச்சென்றிராமற்காப்
புடைத்தவனைப்பொருதழித்தான்புள்ளிருக்குவேளூரே. (௧௦)
செடியாயவுடறீர்ப்பானறீவினைக்கோர்மருந்தாவான்
பொடியாடிக்கடிமைசெய்தபுள்ளிருக்குவேளூரைக்
கடியார்ந்தபொழிற்காழிக்கவுணியன்சம்பந்தன்சொன்
மடியாதுசொல்லவல்லார்க்கில்லையாமறுபிறப்பே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

44

## திருஆமாத்தூர் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

துன்னம்பெய்கோவணமுந்தோலுமுடையாடை
பின்னஞ்சடைமேலோர்பிள்ளைமதிசூடி
யன்னஞ்சேர்தண்கானலாமாத்தூரமயான்றன்
பொன்னங்கழல்பரவாப்பொக்கமும்பொக்கமே. (௧)
கைம்மாவின்றோல்போர்த்தகாபாலிவானுலகின்
மும்மாமதிலெய்தான்முக்கணான்பேர்பாடி
யம்மாமலர்ச்சோலையாமாத்தூரம்மானெம்
பெம்மானென்றேத்தாதார்பேயரிற்பேயரே. (௨)

பாம்பரைச்சாத்தியோர்பண்டரங்கன்விண்டதோர்
தேம்பவிளமதியஞ்சூடியசென்னியா
னம்பலம்பூம்பொய்கையாமாத்தூரம்மானறன்
சாம்பலகலந்தார்சார்பல்லாற்சார்பிலமே. (௩)

கோணாகப்பேரல்குற்கோல்வளைக்கைமாதராள்
பூணாகம்பாகமாப்புல்கியவளோடு
மாணாகங்காதல்செயாமாத்தூரம்மானைக்
காணாதகண்ணெல்லாங்காணாதகண்களே. (௪)

பாடனெறிநின்றான்பைங்கொன்றைத்தண்டாரே
சூடனெறிநின்றான்சூலஞ்சேர்கையினா
றாடனெறிநின்றானாமாத்தூரம்மான்றன்
வேடநெறிநில்லாவேடமும்வேடமே. (௫)

சாமவரைவில்லாகச்சந்தித்தவெங்கணையாற்
காவன்மதிலெய்தான்கண்ணுடைநெற்றியான
யாவருஞ்சென்றேத்துமாமாத்தூரம்மானந்
தேவாதலைவணங்குந்தேவர்க்குந்தேவனே. (௬)

மாறாதவெங்கூற்றைமாற்றிமலைமகளை
வேறாகநில்லாதவேடமேகாட்டினா
னாறாதநீயாடியாமாத்தூரம்மானைக்
கூறாதநாவெல்லாங்கூறாதநாக்களே. (௭)

தாளாலரக்கன்றோள்சாய்த்ததலைமகன்ற
னாளாதிரையென்றேநம்பன்றனாமத்தா
லாளானார்சென்றேத்துமாமாத்தூரம்மானைக்
கேளாச்செவியெல்லாங்கேளாச்செவிகளே. (௮)

புள்ளானுங்கமலமுங்கைக்கொண்டார்தாமிருவ
ருள்ளாநமவன்பெருமையொப்பளக்குந்தன்மையதே
யள்ளல்விளைகழனியாமாத்தூரம்மானெம
வள்ளல்கழல்பரவாவாழ்க்கையுமவாழ்க்கையே. (௯)

பிச்சைபிறர்பெய்யப்பின்சாரக்கோசாரக்
கொச்சைபுலானாறவீருரிவைபோர்த்துகந்தா
னச்சந்தனமாதேவிக்கீந்தான்றனாமாத்தூர்
நிச்சனினையாதார்நெஞ்சமுநெஞ்சமே. (௧௦)

ஆடலரவசைத்தவாமாத்தூரம்மானைக்
கோடவிரும்புறவிற்கொச்சைவயத்தலைவ
னாடலரியசீர்ஞானசம்பந்தன்றன்
பாடலிவைவல்லார்க்கில்லையாம்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்—

---

## திருக்கைச்சினம் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

தையலோர்கூறுடையான்றண்மதிசேர்செஞ்சடையான்
மையுலாமணிமிடற்றான்மறைவிளங்குபாடலா
னெய்யுலாமுவிலைவேலேந்திநிவந்தொளிசேர்
கையுடையான்மேவியுறைகோயில்கைச்சினமே. (௧)

விடமல்குகண்டத்தானைவெள்வளையோர்கூறுடையான்
படமல்குபாம்பரையான்பற்றார்தம்புரமெரித்தா
னடமல்குமாடலினானன்மறையோர்பாடலினான்
கடமல்குமாவுரியானுறைகோயில்கைச்சினமே. (௨)

பாடலார்நான்மறையான்பைங்கொன்றைபாம்பினொடு
சூடலானவெண்மதியந்துன்றுகரந்தையொடு
மாடலானங்கையனலேந்தியாடரவக்
காடலான்மேவியுறைகோயில்கைச்சினமே. (௩)

பண்டமராக்கூடிக்கடைந்தபடுகடனஞ்
சுண்டபிரானென்றிறைஞ்சியும்பாதொழுதேத்த
விண்டவர்தொன்னகரமூன்றுடனேவெந்தவியக்
கண்டபிரானமேவியுறைகோயில்கைச்சினமே. (௪)

தேய்ந்துமலிவெண்பிறையானசெய்யதிருமேனியினான
வாய்ந்திலங்குவெண்ணீற்றன்மாதினையோர்கூறுடையான
சாய்ந்தமரர்வேண்டத்தடங்கடனஞ்சுண்டனங்கைக்
காய்ந்தபிரானமேவியுறைகோயில்கைச்சினமே. (௫)

மங்கையோர்கூறுடையான்மன்னுமறைபயின்று
னங்கையோர்வெண்டலையானுடரவம்பூண்டுகந்தா
திங்களொடுபாம்பணிந்தநீர்சார்திருமுடிமேற்
கங்கையினான்மேவியுறைகோயில்கைச்சினமே (௬)

வரியரவேநாணாகமாலவரையேவில்லாக
வெரிகணையான்முப்புரங்களெய்துகந்தவெம்பெருமான்
பொருசுடலையீமப்புறங்காட்டான்போர்த்ததோர்
கரியுரியானமேவியுறைகோயில்கைச்சினமே. (௭)

போதுலவுகொன்றைபுனைந்தான்றிருமுடிமேன்
மாதுமையாளஞ்சமலையெடுத்தவாளரக்க
னீதியினாலேத்தநிகழ்வித்தநின்றுநோ
காதலினான்மேவியுறைகோயில்கைச்சினமே. (௮)

மண்ணினைமுன்சென்றிரந்தமாலுமறையவனு
மெண்ணறியாவண்ணமெரியுருவமாயபிரான
பண்ணிசையாலேத்தப்படுவானறனெறியின்மேற்
கண்ணுடையானமேவியுறைகோயில்கைச்சினமே. (௯-௰)

தணவயல்சூழ்காழித்தமிழ்ஞானசம்பந்தன்
கண்ணுதலான்மேவியுறைகோயில்கைச்சினத்தைப்
பண்ணிசையாலேத்தியபின்றவிவைவல்லார்
விண்ணவராயோங்கியுலகமாள்வாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

௨

திருநாலூர்த்திருமயானம் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

பாலூருமலைப்பாம்புமபனிமதியுமத்தமு
மேலூருஞ்செஞ்சடையானவெண்ணூல்சேர்மார்பினு

---

* நஞ்சுண்டு அனங்கை எனப்பிரித்து அனங்கை என்பதனுக்கு அனங்கனை எனப் பொருள் கொள்க.

லூராமயானத்துநம்பான்றனடிநினைந்து
மாலூருஞ்சிந்தையர்பால்வந்தூரா மறுபிறப்பே. (௧)

சூடும்பிறைச்சென்னிசூழ்காடிடமாக
வாடும்பறைசங்கொலியோடழகாக
நாடுஞ்சிறப்போவாநல்லூர்மயானத்தைப்
பாடுஞ்சிறப்போர்பாற்பற்றாவாம்பாவமே. (௨)

கல்லானிழன்மேவிக்காமுறுசீர்நால்வர்க்கன்
றெல்லாவறனுரையுமின்னருளாற்சொல்லினா
னல்லார்தொழுதேத்துநல்லூர்மயானத்தைச்
சொல்லாதவரெல்லாஞ்செல்லாதார்தொன்னெறிக்கே. (௩)

கோலத்தார்கொன்றையான்கொல்புலித்தோலாடையா
னீலத்தார்கண்டத்தானெற்றியோர்கண்ணினான்
ஞாலத்தார்சென்றேத்துநல்லூர்மயானத்திற்
சூலத்தானென்பார்பாற்சூழாவாந்தொல்வினையே. (௪)

கறையார்மணிமிடற்றான்காபாலிகட்டங்கன்
பிறையார்வளர்சடையான்பெண்பாகனண்பாய
நறையார்பொழில்புடைசூழ்நல்லூர்மயானத்தெம்
மிறையானென்றேத்துவார்க்கெய்துமாமின்பமே. (௫)

கண்ணார்நுதலான்கனலாடிடமாகப்
பண்ணார்மறைபாடியாடும்பரஞ்சோதி
நண்ணார்புரமெய்தானல்லூர்மயானத்தை
நண்ணாதவரெல்லாநண்ணாதாநன்னெறியே (௬)

கண்பாவுவேகத்தாற்காமனைமுன்காய்ந்துகந்தான்
பெண்பாவுபாகத்தானகத்தோலாகத்தா
னண்பார்குணத்தோர்கணல்லூர்மயானத்தை
யெண்பாவுசிந்தையார்க்கேலாவிடர்தானே. (௭)

பத்துத்தலையோனைப்பாதத்தொருவிரலால்
வைத்துமலையடர்த்துவாளோடுநாள்கொடுத்தா
னத்தினொலியோவாநல்லூர்மயானத்தெ
னத்தனடிநினைவார்க்கல்லலடையாவே. (௮)

மாலோடுநான்முகனுநேடவளரெரியாய்
மேலோடுகீழ்காணாமேன்மையான்வேதங்க
ணாலோடுமாறங்கநல்லூர்மயானத்தெம்
பாலோடுநெய்யாடிபாதம்பணிவோமே. (௯)

துன்பாயமாசார்துவராயபோர்வையார்
புன்பேச்சுக்கேளாதேபுண்ணியனைநண்ணுமின்க
ணண்பாற்சிவாயவெனநல்லூர்மயானத்தே
யின்பாயிருந்தானையேத்துவார்க்கின்பமே. (௧௦)

ஞாலம்புகழ்காழிஞானசம்பந்தன்ற
னாலுமறையோதுநல்லூர்மயானத்தைச்

சிலம்புகழாற்சிறந்தேத்தவல்லாருக்
கேலுமபுகழ்வானத்தின்பாயிருப்பாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருமயிலாப்பூர் - பூம்பாவைத்திருப்பதிகம் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்

மட்டிட்டபுன்னையங்கானன்மடமயிலைக்
கட்டிட்டங்கொண்டான்கபாலீச்சரமமர்ந்தா
ளொட்டிட்டபண்பினுருத்திரபல்கணத்தார்க்
கட்டிட்டல்காணாதேபோதியோபூம்பாவாய். (க)

மைப்பயந்தவொண்கண் மடநல்லார்மாமயிலைக்
கைப்பயந்தநீற்றான்கபாலீச்சரமமர்ந்தா
னைப்பசியோணவிழாவுமருந்தவர்க
டுய்ப்பனவுங்காணாதேபோதியோபூம்பாவாய் (உ)

வளைக்கைமடநல்லார்மாமயிலைவண்மறுகிற
றுளக்கில்கபாலீச்சரத்தான்றொல்கார்த்திகைநாட்
டளத்தேந்திளமுலையார்தையலார்கொண்டாடும்
விளக்கீடுகாணாதேபோதியோபூம்பாவாய். (ங)

ஊர்திரைவேலையுலாவுமுயர்மயிலைக்
கூர்தருவேல்வல்லார்கொற்றங்கொள்சேரிதனிற்
கார்தருசோலைக்கபாலீச்சரமமர்ந்தா
ளாதிரைநாள்காணாதேபோதியோபூம்பாவாய். (ச)

மைப்பூசுமொண்கண் மடநல்லார்மாமயிலைக்
கைப்பூசுநீற்றான்கபாலீச்சரமமர்ந்தா
னெய்ப்பூசுமொண்புழுக்கனேரிழையார்கொண்டாடுந்
தைப்பூசங்காணாதேபோதியோபூம்பாவாய். (ரு)

மடலார்ந்ததெங்கின்மயிலையார்மாசிக்
கடலாட்டுக்கண்டான்கபாலீச்சரமமர்ந்தா
னடலானேறூருமடிகளடிபரவி
நடமாடல்காணாதேபோதியோபூம்பாவாய். (சு)

மலிவிழாவீதிமடநல்லார்மாமயிலைக்
கலிவிழாக்கண்டான்கபாலீச்சரமமர்ந்தான்
பலிவிழாப்பாடல்செய்பங்குனியுத்திரநா
ளொலிவிழாக்காணாதேபோதியோபூம்பாவாய். (எ)

தண்ணாவரக்கன்றோள்சாய்த்துகந்ததாளினான்
கண்ணார்மயிலைக்கபாலீச்சரமமர்ந்தான்
பண்ணார்பதினெண்கணங்கடமட்டமிநாட்
கண்ணாரக்காணாதேபோதியோபூம்பாவாய். (அ)

நற்றாமரைமலர்மேலான்முகனுநாரணனு
முற்றாங்குணர்கிலாமூர்த்திதிருவடியைக்
கற்றார்களேத்துங்கபாலீச்சரமமர்ந்தான்
பொற்றாப்புக்காணாதேபோதியோபூம்பாவாய். (கூ)

உரிஞ்சாயவாழ்க்கையமணுடையைப்போர்க்கு
மிருஞ்சாக்கியர்களெடுத்துரைப்பநாட்டிற்
கருஞ்சோலைசூழ்ந்தகபாலீச்சரத்தான்றன்
பெருஞ்சாந்திகாணாதேபோதியோபூம்பாவாய் (க0)

கானமர்சோலைக்கபாலீச்சரமமர்ந்தான்
றேனமர்பூம்பாவைப்பாட்டாகச்செந்தமிழான்
ஞானசம்பந்தனலம்புகழ்ந்தபத்தும்வல்லார்
வானசம்பந்தத்தவரோடும்வாழ்வாரே (கக)

திருச்சிற்றம்பலம்.

---

### திருவெண்காடு - பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்.

கண்காட்டுநுதலானுங்கனல்காட்டுங்கையானும்
பெண்காட்டுமுருவானும்பிறைகாட்டுஞ்சடையானும்
பண்காட்டுமிசையானும்பயிர்காட்டும்புயலானும்
வெண்காட்டிலுறைவானும்விடைகாட்டுங்கொடியானே (க)

பேயடையாபிரிவெய்தும்பிள்ளையினோடுள்ளநினை
வாயினவேவரம்பெறுவரையுறவேண்டாவொன்றும்
வேயனதோளுமைபங்கன்வெண்காட்டுமுக்குளநீர்
தோய்வினையாரவர்தம்மைத்தோயாவாந்தீவினையே. (உ)

மண்ணொடுநீரனல்காலோடாகாயமதியிரவி
யெண்ணில்வருமியமானனிகபரமுமெண்டிசையும்
பெண்ணினொடாண்பெருமையொடுசிறுமையுமாம்பேராளன்
விண்ணவர்கோன்வழிபடவெண்காடிடமாவிரும்பினனே. (௩)

விடமுண்டமிடற்றண்ணல்வெண்காட்டின்றண்புறவின்
மடல்விண்டமுடத்தாழைமலர்நிழலைக்குருகென்று
தடமண்டுதுறைக்கெண்டைதாமரையின்பூமறையக்
கடல்விண்டகதிர்முத்தநகைகாட்டுங்காட்சியதே. (௪)

வேலைமலிதண்கானல்வெண்காட்டான்றிருவடிக்கீழ்
மாலைமலிவண்சாந்தால்வழிபடுநன்மறையவன்றன்
மேலடர்வெங்காலனுயிர்விண்டபினைநமன்றூத
ராலமிடற்றானடியாரென்றடரவஞ்சுவரே. (௫)

தண்மதியும்வெய்யரவுந்தாங்கினான்சடையினுட
னொண்மதியநுதலுமையோர்கூறுகந்தானுறைகோயில்
பண்மொழியாலவனாமம்பலவோதப்பசுங்கிள்ளை
வெண்முகில்சேர்கரும்பணைமேல்வீற்றிருக்கும்வெண்காடே. (௬)

சக்கரமாற்கீந்தானுஞ்சலந்தரனைப்பிளந்தானு
மக்கரைமேலசைத்தானுமடைந்தயிராபதம்பணிய
மிக்கதனுக்கருள்சுரக்கும்வெண்காடும்வினைதுரக்கு
முக்குளநன்குடையானுமுக்கணுடையிறையவனே. (௭)

பண்மொய்த்தவின்மொழியாள்பயமெய்தமலையெடுத்த
வுன்மத்தனுரநெரித்தன்றருள்செய்தானுறைகோயில்

கண்மொய்த்த கருமஞ்ஞை நடமாடக் கடல்முழங்க
விண்மொய்த்த பொழில்வரிவண் டிசைமுரலும் வெண்காடே. (அ)

கள்ளார்செங் கமலத்தான் கடற்கிடந்தா னெனவிவர்க
ளொள்ளாண்மை கொளற்கோடி யுயர்ந்தாழ்ந் துணர்வரியான்
வெள்ளானை தவஞ்செய்யு மேதகுவெண் காட்டானென்
றுள்ளாடி யுருகாதா ருணர்வுடைமை யுணரோமே. (கூ)

போதியர்கள் பிண்டியர்கள் மிண்டுமொழி பொருளென்னும்
பேதையர்க ளவர்பிரிமி னறிவுடையீ ரிதுகேண்மின்
வேதியர்கள் விரும்பியசீர் வியன்றிருவெண் காட்டானென்
றோதியவா யாதுமொரு தீதிலரென் றுணருமினே. (க௦)

தண்பொழில்சூழ் சண்பையர்கோன் றமிழ்ஞான சம்பந்தன்
விண்பொலிவெண் பிறைச்சென்னி விகிர்தனுறை வெண்காட்டைப்
பண்பொலிசெந் தமிழ்மாலை பாடியபத் திவைவல்லார்
மண்பொலிய வாழ்ந்தவர்போய் வான்பொலியப் புகுவாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

சீகாழி - பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

பண்ணினேர்மொழி மங்கைமார்பலர் பாடியாடிய வோசைநாடொறுங்
கண்ணினே ரயலேபொலியுங் கடற்காழிப்
பெண்ணினேரொரு பங்குடைப்பெரு மானையெம்பெரு மானென்றென்றுன்னு
மண்ணலா னடியா ரருளாலுங் குறைவிலரே. (க)

மொண்டலம்பிய வார்திரைக்கடன் மோதிமீதெறி சங்கவங்கமுங்
கண்டலம்புடை சூழ்வயல்சேர் கலிக்காழி
வண்டலம்பிய கொன்றையானடி வாழ்த்தியேத்திய மாந்தர்தம்வினை
விண்டலங்கெளி தாமதுநல் விதியாமே. (உ)

நாடெலாமொளி யெய்தநல்லவர் நன்றுமேத்தி வணங்குவார்பொழிற்
காடெலாமலர் தேன்றுளிக்குங் கடற்காழித்
தோடுலாவிய காதுளார்சுரி சங்கவெண்குழை யாயென்றென்றுன்னும்
வேடங்கொண்டவர்கள் வினைநீங்க லுற்றாரே. (ங)

மையினார்பொழில் சூழநீழலில் வாசமார்மது மல்கநாடொறுங்
கையினார்மலர் கொண்டெழுவார் கலிக்காழி
ஐயனேயர னேயென்றாதரித் தோதிநீதியு ளேநினைப்பவ
ருய்யுமாறுல கில்லுயர்ந்தாரி னுள்ளாரே. (ச)

மலிகடுந்திரை மேனிமிர்ந்தெதிர் வந்துவந்தொளிர் நித்திலம்விழக்
கலிகடிந்தகை யார்மருவுங் கலிக்காழி
வலியகாலனை வீட்டிமாணி தனின்னுயிரளித் தானைவாழ்த்திட
மெலியுந்தீவினை நோயவைமேவுவர் வீடே. (ரு)

மற்றுமிவ்வுல கத்துளோர்களும் வானுளோர்களும் வந்துவைகலுங்
கற்றசிந்தைய ராய்க்கருதுங் கலிக்காழி
நெற்றிமேலமர் கண்ணினானை நினைந்திருந்திசை பாடுவார்வினை
செற்றமாந்தரெனத் தெளிமின்கள் சிந்தையுளே. (சா)

தானலம்புரைவேதியரொடுதக்கமாதவர்தாந்தொழப்பயில்
கானலின்விரைசேரவிம்முங்கலிக்காழி
யூனுளாருயிர்வாழ்க்கையாயுறவாகிநின்றவொருவனேயென்
றானலங்கொடுப்பாரருள்வேந்தராவாரே. (௭)

மைத்தவண்டெழுசோலையாலைகள்சாலிசேர்வயலாரவைகலுங்
கத்துவார்கடல்சென்றுலவுங்கலிக்காழி
யத்தனேயரனேயரக்கனையன்றடர்த்துகந்தாயுனகழல்
பத்தராய்ப்பரவும்பயனீங்குநல்காயே (௮)

பருமராமொடுதெங்குபைங்கதலிப்பருங்கனியுண்ணமந்திகள்
கருவராலுகளும்வயல்சூழ்கலிக்காழித்
திருவினாயகனாயமாலொடுசெய்யமாமலர்ச்செல்வனாகிய
விருவர்காண்பரியானெனவேத்துதலின்பமே (௯)

பிண்டமுண்டுழல்வார்களும்பிரியாதுவண்டுகிலாடைபோர்த்தவர்
கண்டுசேர்கிலாரழகாருங்கலிக்காழித்
தொண்டைவாயுமையோடுங்கூடியவேடனேசுடலைப்பொடியணி
யண்டவாணனென்பார்க்கடையாவல்லலுமே (௧௦)

பெயரெனும்மிவைபன்னிரண்டினுமுண்டெனப்பெயர்பெற்றவூர்திகழ்
கயலுமாம்வயல்சூழ்ந்தழகார்கலிக்காழி
நயனடன்கழலேத்திவாழ்த்தியஞானசம்பந்தன்செந்தமிழ்களை
யுயருமாமொழிவாருலகத்துயர்ந்தாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருஆமாத்தூர் - பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

குன்றவார்சிலைநாணராவரிவாளிகூரெரிகாற்றின்மும்மதில்
வென்றவாறெங்ஙனேவிடையேறுமவேதியனே
தென்றலார்மணிமாடமாளிகைசூளிகைக்கெதிர்நீண்டபெண்ணைமே
லன்றில்வந்தணையுமாமாத்தூரம்மானே. (௧)

பரவிவானவர்தானவர்பலருங்கலங்கிடவந்தகார்விடம
வெருவவுண்டுகந்தவருளென்கொல்விண்ணவனே
கரவின்மாமணிபொன்கொழித்திழிசந்துகாரகிற்றந்து * பம்பைநீ
ரருவிவந்தலைக்குமாமாத்தூரம்மானே. (௨)

நீண்டவார்சடைதாழநேரிழைபாடநீறுமெய்பூசிமாலயன்
மாண்டவார்சுடலைநடமாடுமாண்பதுவென
பூண்டகேழன்மருப்பராவிரிகொன்றைவாள்வரியாமைபூணென
வாண்டநாயகனேயாமாத்தூரம்மானே. (௩)

சேலினேரனகண்ணிவெண்ணகைமானவிழித்திருமாதைப்பாகம்வைத்
தேலமாதவநீமுயல்கின்றவேடமிதென்
பாலினேர்மொழிமங்கைமார்நடமாடியின்னிசைபாடநீள்பதி
யாலைசூழ்கழனியாமாத்தூரம்மானே. (௪)

தொண்டர்வந்துவணங்கிமாமலர்தூவிநின்கழலேத்துவாரவ
ருண்டியால்வருந்தவிரங்காததென்னைகொலாம்

* பம்பை என்பது - ஒருநதி.

வண்டலார்கழனிக்கலந்துமலர்ந்ததாமரைமாதர்வாண்முக
மண்டவாணர்தொழுமாமாத்தூரம்மானே. (௫)

ஓதியாரணமாயநுண்பொருளன்றுநால்வர்முனைகேட்கநன்னெறி
நீதியாலநீழலுரைக்கின்றநீர்மையதென்
சோதியேசுடரேசுரும்பமர்கொன்றையாய்திருநின்றியூருறை
யாதியேயரனேயாமாத்தூரம்மானே. (௬)

மங்கைவாணுதன்மான்மனத்திடைவாடியூடமணங்கமழ்சடைக்
கங்கையாளிருந்தகருத்தாயதென்னைகொலாம்
பங்கயமதுவுண்டுவண்டிசைபாடமாமயிலாடவிண்முழ
வங்கையாலதிர்கருமாமாத்தூரமமானே. (௭)

நின்றடர்த்திடுமைம்புலன்னிலையாதவண்ணநினைந்துளத்திடை
வென்றடர்த்தொருபான்மடமாதைவிரும்புதலென
குன்றெடுத்தநிசாசரன்திரடோளிருபதுதானெரிதர
வன்றடர்த்துகந்தாயாமாத்தூரமமானே (௮)

செய்யதாமரைமேலிருந்தவனோடுமாலடிதேடநீண்முடி
வெய்யவாரழலாய்நிமிர்கின்றவேறதுமையென
றையலாளொடுபிச்சைக்கிச்சைதயங்குதோலரையார்த்தவேடங்கொண்
டையமேற்றுகந்தாயாமாத்தூரம்மானே. (௯)

புத்தர்புன்சமணாதர்பொய்மொழிநூல்பிடித்தலர்தூற்றநின்னடி
பத்தர்பேணநின்றபரமாயபான்மையதென
முத்தைவென்றமுறுவலாளுமைபங்கனென்றிமையோர்பரவிடு
மத்தனேயரியாயாமாத்தூரம்மானே. (௧௦)

வாடல்வெண்டலைமாலையார்த்துமயங்கிருள்ளெரியேந்திமாநட
மாடன்மேயதென்னென்றுமாத்தூரம்மானைக்
கோடனாகமரும்புடைமொழிறகொசசையாரிறைஞானசமபந்தன்
பாடல்பத்தும்வல்லார்பரலோகஞ்சேர்வாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

ஆமாத்தூர என்பது - பசுக்களுக்குத் தாயகமானவூர் என்றும், ஆமாதாவூர எனற் பாலது - ஆமாததூர என மருவிநின்றதென்றும், பெரியோர்களாற் சொல்லப்படும். ஆ - பசு. சமஸ்கிருதத்தில - கோமாதுருபுரம் எனப் பெயராம

---

**திருக்களர் - பண் - சீகாமரம்.**

திருச்சிற்றம்பலம்.

நீருளார்கயல்வாவிசூழ்பொழினீண்டமாவயலீண்டுமாமதிற்
றேரினார்மறுகில்விழாமல்குதிருக்கள
ரூருளாரிடுபிச்சைபேணுமொருவனேயொளிர்செஞ்சடைம்மதி
யாரநின்றவனேயடைந்தார்க்கருளாயே. (௧)

தோளின்மேலொளிநீறுதாங்கியதொண்டர்வந்தடிபோற்றமிண்டிய
தாளினார்வளருந்தவமல்குதிருக்களருள்
வேளினோர்விசயற்கருள்புரிவித்தகாவிரும்பும்மடியாரை
யாளுகந்தவனேயடைந்தார்க்கருளாயே. (௨)

பாடவல்லநன்மைந்தரோடுபனிமலர்பலகொண்டுபோற்றிசெய்
சேடர்வாழ்பொழில்சூழ்செழுமாடத்திருக்களரு

ணீடவல்லநிமலனே யடிநிரைகழல்சிலமபார்க்கமாநட
மாடவல்லவனே யடைந்தார்க்கருளாயே. (௩)

அம்பினோதடங்கண்ணினுருடனுடவாபயினமாடமாளிகைச
செம்பொனார்பொழில்சூழ்ந்தழகாயதிருக்களரு
ளெனபுபூண்டதோர்மேனியெம்மிறைவாவிணையடிபோற்றிநின்றவர்க
கனபுசெய்தவனே யடைந்தார்க்கருளாயே. (௪)

கொங்குலாமலர்ச்சோலைவண்டினங்கிண்டிமாமதுவுணடிசைசெயத
தெஙகுபைங்கமுகம்புடைசூழ்ந்ததிருக்களருண
மங்கைதன்னொடுங்கூடியமணவாளனேபிணைகொண்டோர்கைத்தலத
தங்கைபிறபடையாயடைந்தார்க்கருளாயே. (௫)

கோலமாமயிலாலக்கொண்டல்களசேர்பொழிற்குலவும்வயலிடைச
சேலிளங்கயலார்புனல்சூழ்ந்ததிருக்களரு
ணீலமேவியகண்டனேநிமிர்புனசடைப்பெருமானெனப்பொலி
யாலநீழலுளாயடைந்தாரக்கருளாயே. (௬)

தம்பலம்மறியாதவர்மதிற்றுங்குமால்வரையாலழலெழத்
திண்பலங்கெடுத்தாயதிகழகின்றதிருக்களருள
வம்பலர்மலர்தூவிநின்னடிவானவாதொழக்கூத்துகந்தபே
ரம்பலத்துறைவாயடைந்தார்க்கருளாயே. (எ)

குன்றடுத்தநன்மாளிகைக்கொடிமாடநீடுயர்கோபுரங்கண்மேற
சென்றடுத்துயாவான்மதிதோயுந்திருக்களரு
ணின்றடுத்துயர்மால்வரைத்திரடோளினுலெடுத்தான்றனீண்முடி
யன்றடர்த்துகந்தாயடைந்தார்க்கருளாயே. (அ)

பண்ணியாழபயில்கின்றமங்கையர்பாடலாடலோடாரவாழ்பதி
தெண்ணிலாமதியம்பொழில்சேருந்திருக்களரு
ளுண்ணிலாவியவொருவனேயிருவர்க்குநின்கழல்காட்சியாரழ
லண்ணலாயவெம்மானடைந்தாரக்கருளாயே. (௯)

பாக்கியம்பலசெய்தபத்தர்கள்பாட்டொடும்பலபணிகள்பேணிய
தீக்கியல்குணத்தார்சிறந்தாருந்திருக்களருள்
வாக்கினான்மறையோதினாயமண்டேரர்சொல்லியசொற்களானபொய்
யாக்கிநின்றவனேயடைந்தார்க்கருளாயே. (௧௦)

இந்துவந்தெழுமாடவீதியெழில்கொள்காழிநகர்க்கவுணியன்
செந்துநேர்மொழியாரவர்சேருந்திருக்களரு
ளந்தியன்னதோர்மேனியானையமரர்தம்பெருமானைஞானசம
பந்தன்சொல்லிவைபத்தும்பாடத்தவமாமே (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

திருக்கோட்டாறு - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

கருந்தடங்கண்ணின்மாதரார்இசைசெய்யக்காரதிர்கின்றபூம்பொழிற்
குருந்தமாதவியின்விரைமல்குகோட்டாற்றில்
இருந்தவெம்பெருமானையுள்கியிணையடிதொழுதேத்துமாந்தர்கள்
வருந்துமாறறியார்நெறிசேர்வர்வானூடே. (௧)

நின்றுமேய்ந்துநினைந்துமாகரிநீரொடும்மலர்வேண்டிவான்மழை
குன்றினேர்ந்துகுத்திப்பணிசெய்யுங்கோட்டாற்று

ளென்றுமன்னியவெம்பிரான்கழலேத்திவானரசாளவல்லவர்
பொன்றுமாறறியார்புகழார்ந்தபுண்ணியரே. (உ)

விரவிநாளுமவிழாவிடைப்பொலிதொண்டர்வந்துவியந்துபண்செயக்
குரவமாருநிழற்பொழின்மல்குகோட்டாற்றி
லரவநீள்சடையானையுள்கிநின்றுதரித்துமுனன்புசெய்தடி
பரவுமாறுவல்லார்பழிபற்றறுப்பாரே. (ந)

அம்பினேர்விழிமங்கைமார்பலராடகம்பெறுமாடமாளிகைக்
கொம்பினேறுதுகிலின்கொடியாடுகோட்டாற்றி
னம்பனேயடனேநலந்திகழ்நாதனேயென்றுகாதல்செய்தவர்
தம்பினேர்ந்தறியார்தடுமாறறவல்வினையே. (ச)

பழையதம்மடியார்துதிசெய்யப்பாருளோர்களுமவிண்ணுளோர்தொழக்
குழலுமொந்தைவிழாவொலிசெய்யுங்கோட்டாற்றிற்
கழலுமவண்சிலம்புமொலிசெய்யக்கானிடைக்கணமேத்தவாடிய
வழகனென்றெழுவாரணியாவர்வானவர்க்கே. (ரு)

பஞ்சின்மெல்லடிமாதராடவர்பத்தர்சித்தர்கள்பண்புவைகலுங்
கொஞ்சியின்மொழியாற்றொழின்மல்குகோட்டாற்றின
மஞ்சனேமணியேமணிமிடற்றண்ணலேயெனவுண்ணெகிழ்ந்தவர்
துஞ்சுமாறறியார்பிறவார்த்தொன்னிலத்தே. (சா)

கலவமாமயிலாளோர்பங்கனைக்கண்டுகண்மிசைநீர்நெகிழத்திசை
குலவுமாறுவல்லார்குடிகொண்டகோட்டாற்றி
னிலவுமாமதிசேர்சடையுடைநின்மலாவெனவுன்னுவாரவ
ருலவுவானவரினுயர்வாகுவதுண்மையதே. (எ)

வண்டலார்வயற்சாலியாலைவளம்பொலிந்திடவார்புனற்றிரை
கொண்டலார்கொணர்ந்தங்குலவுந்திகழ்கோட்டாற்றிற்
றெண்டலாந்துதிசெய்யநின்றதொழிலனேகழலாலரக்கனை
மிண்டெலாந்தவிர்த்தெனனுகந்திட்டவெற்றிமையே. (அ)

கருதிவந்தடியார்தொழுதெழக்கண்ணனோடயன்றேடவானையின்
குருதிமெய்கலப்பவுரிகொண்டுகோட்டாற்றில்
விருதினன்மடமாதுநீயும்வியப்பொடும்முயர்கோயின்மேவிவெள்
ளெருதுகந்தவனேயிரங்காயுனதின்னருளே. (கூ)

உடையிலாதுழல்கின்றகுண்டருமூணருந்தவத்தாயசாக்கியர்
கொடையிலாமனத்தார்குறையாருங்கோட்டாற்றிற்
படையிலார்மழுவேந்தியாடியபண்பனேயிவரென்கொலோநுனை
யடைகிலாதவண்ணமருளாயுன்னடியவர்க்கே. (கo)

காலனைக்கழலாலுதைத்தொருகாமனைக்கனலாகச்சீறிமெய்
கோலவார்குழலார்குடிகொண்டகோட்டாற்றின
மூலனைமுடிவொன்றிலாதவெம்முத்தனைப்பயில்பந்தன்சொல்லிய
மாலைபத்துமவல்லார்க்கெளிதாகும்வானகமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்புறவார் - பனங்காட்டூர் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

**விண்ணமர்ந்தனமும்மதில்களைவீழவெங்கணையாலெய்தாய்விரி**
**பண்ணமர்ந்தொலிசேர்புறவார்பனங்காட்டூர்ப்**

பெண்ணமர்ந்தொருபாகமாகியபிஞ்ஞகாபிறைசேர்நுதலிடைக்
கண்ணமர்ந்தவனேகலந்தார்க்கருளாயே. (க)

நீடல்கோடலலர்வெண்முல்லைநீர்மலர்நிரைத்தாதளஞ்செய்ய
பாடல்வண்டறையும்புறவார்பனங்காட்டூர்ந்
தோடிலங்கியகாதயன்மின்னிளங்கவெண்குழைதுள்ளநள்ளிரு
ளாடுஞ்சங்கரனேயடைந்தார்க்கருளாயே. (உ)

வாளையுங்கயலும்மிளிர்பொய்கைவார்புனற்கரையருகெலாம்வயற்
பாளையொண்கமுகம்புறவார்பனங்காட்டூர்ப்
பூளையுந்நறுங்கொன்றையுமதமத்தமும்புனைவாய்கழலிணைத்
தாளையேபரவுந்தவத்தார்க்கருளாயே. (ங)

மேய்ந்திளஞ்செந்நென்மென்கதிர்கவ்விமேற்படுகலின்மேதிவைகறை
பாய்ந்ததண்பழனப்புறவார்பனங்காட்டூ
ராய்ந்தநான்மறைபாடியாடுமடிகளென்றென்றரற்றிநன்மலர்
சாய்ந்தடிபரவுந்தவத்தார்க்கருளாயே. (ச)

செங்கயல்லொடுசேல்செருச்செயச்சீறியாழ்முரன்றேனினத்தொடு
பங்கயம்மலரும்புறவார்பனங்காட்டூர்க்
கங்கையுமதியுங்கமழ்சடைக்கேண்மையாளொடுங்கூடிமான்மறி
யங்கையாடலனேயடியார்க்கருளாயே. (ரு)

நீரினார்வரைகோலிமால்கடனீடியபொழில்சூழ்ந்துவைகலும்
பாரினார்பிரியாப்புறவார்பனங்காட்டூர்க்
காரினார்மலர்க்கொன்றைதாங்குங்கடவுளென்றுகைகூப்பிநாடொறுஞ்
சீரினால்வணங்குந்திறத்தார்க்கருளாயே. (சா)

கையரிவையர்மெல்விரல்லவைகாட்டியம்மலர்க்காந்தளங்குறி
பையராவிரியும்புறவார்பனங்காட்டூர்
மெய்யரிவையோர்பாகமாகவும்மேவினாய்கழலேத்திநாடொறும்
பொய்யிலாவடிமைபுரிந்தார்க்கருளாயே. (எ)

தூவியஞ்சிறைமென்னடையனமல்கியொல்கியதாமலர்ப்பொய்கைப்
பாவில்வண்டறையும்புறவார்பனங்காட்டூர்
மேவியந்நிலையாயரக்கன்றோளடர்த்தவன்பாடல்கேட்டரு
ளேவியெம்பெருமானென்பவர்க்கருளாயே. (அ)

அந்தண்மாதவிபுன்னைநல்லவசோகமும்மரவிந்தமல்லிகை
பைந்தண்ஞாழல்கள்சூழ்புறவார்பனங்காட்டூ
ரெந்திளமுகில்வண்ணனான்முகனென்றிவர்க்கரிதாய்நிமிர்ந்ததோர்
சந்தமாயவனேதவத்தார்க்கருளாயே. (கூ)

நீணமார்முருகுண்டுவண்டினநீலமாமலர்கவ்விநேரிசை
பாணியாழ்முரலும்புறவார்பனங்காட்டூர்
நாணழிந்துழல்வார்சமணருநம்பில்சாக்கியருந்நகத்தலை
யூணுரியவனேயுகப்பார்க்கருளாயே. (க0)

மையினார்மணிபோன்மிடற்றனைமாசில்வெண்பொடிப்பூசுமார்பனைப்
பையதேன்பொழில்சூழ்புறவார்பனங்காட்டூ
ரையனைப்புகழானகாழியுளாய்ந்தநான்மறைஞானசம்பந்தன்
செய்யுள்பாடவல்லார்சிவலோகஞ்சேர்வாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

54

## ஸ்ரீபுகலி - பண் - காந்தாரகம்.

திருச்சிற்றம்பலம்

உருவார்ந்தமெல்லியலோர்பாகமுடையீரடைவோர்க்குக்
கருவார்ந்தவானுலகங்காட்டிக்கொடுத்தல்கருத்தானீர்
பொருவார்ந்ததெண்கடலொண்சங்கந்திளைக்கும்பூம்புகலித்
திருவார்ந்தகோயிலேகோயிலாகத்திகழ்ந்தீரே (௧)

நீரார்ந்தசெஞ்சடையீர்நிரையார்கழல்சேர்பாதத்தீர்
ஊரார்ந்தசில்பலியீருழைமானுரிதோலாடையீர்
போரார்ந்ததெண்டிரைசென்றணையுங்கானற்பூம்புகலிச்
சீரார்ந்தகோயிலேகோயிலாகச்சேர்ந்தீரே. (௨)

அழிமல்குபூம்புனலுமரவுஞ்சடைமேலடைவெய்த
மொழிமல்குமாமறையீர்கறையார்கண்டத்தெண்டோளீர்
பொழின்மல்குவண்டினங்களறையுங்கானற்பூம்புகலி
யெழின்மல்குகோயிலேகோயிலாகவிருந்தீரே. (௩)

கையிலார்ந்தவெண்மழுவொன்றுடையீர்கரியகரியின்றோன்
மயிலார்ந்தசாயன்மடமங்கைவெருவமெய்போர்த்தீர்
பயிலார்ந்தவேதியர்கள்பதியாய்விளங்கும்பைம்புகலி
யெயிலார்ந்தகோயிலேகோயிலாகவிசைந்தீரே. (௪)

நாவார்ந்தபாடலீராடலரவமரைக்கார்த்தீர்
பாவார்ந்தபல்பொருளின்பயன்களானீரயன்பேணும்
பூவார்ந்தபொய்கைகளும்வயலுஞ்சூழ்ந்தபொழிற்புகலித்
தேவார்ந்தகோயிலேகோயிலாகத்திகழ்ந்தீரே. (௫)

மண்ணார்ந்தமணமுழவந்ததும்பமலையான்மகளென்னும்
பெண்ணார்ந்தமெய்மகிழப்பேணியெரிகொண்டாடினீர்
விண்ணார்ந்தமதியமிடைமாடத்தாருமலியும்புகலிக்
கண்ணார்ந்தகோயிலேகோயிலாகக்கலந்தீரே. (௬)

களிபுல்குவல்லவுணரூர்மூன்றெரியக்கணைதொட்டீ
ரளிபுல்குபூமுடியீரமரரேத்தவருள்செய்தீர்
தெளிபுல்குதேனினமுமலருள்விரைசேர்திண்புகலி
யொளிபுல்குகோயிலேகோயிலாகவுகந்தீரே. (௭)

பரந்தோங்குபல்புகழ்சேரரக்கர்கோனைவரைக்கீழிட்
டுரந்தோன்றும்பாடல்கேட்டுகவையளித்தீருகவாதார்
புரந்தோன்றுமும்மதிலுமெரியச்செற்றீர்பூம்புகலி
வரந்தோன்றுகோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௮)

சலந்தாங்குதாமரைமேலயனுந்தரணியளந்தானுங்
கலந்தோங்கிவந்திழிந்துங்காணாவண்ணங்கனலானீர்
புலந்தாங்கியைம்புலனுஞ்செற்றார்வாழும்பூம்புகலி
நலந்தாங்குகோயிலேகோயிலாகநயந்தீரே. (௯)

நெடிதாயவன்சமணுநிறைவொன்றில்லாச்சாக்கியருங்
கடிதாயகட்டுரையாற்கழறமேலோர்பொருளானீர்
பொடியாருமேனியினீர்புகலிமறையோர்புரிந்தேத்த
வடிவாருங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௧௦)

ஒப்பரியபூம்புகலியோங்குகோயின்மேயானை
யப்பரிசிற்பதியானவணிகொண்ஞானசம்பந்தன்
செப்பரியதண்டமிழாற்றெரிந்தபாடலிவைவல்லா
ரெப்பரிசிலிடர்நீங்கியிமையோருலகத்திருப்பாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

### திருத்தலைச்சங்காடு - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

நலச்சங்கவெண்குழையுந்தோடும்பெய்தோர்நால்வேதஞ்
சொலச்சங்கையில்லாதீர்சுடுகாடல்லாற்கருதாதீர்
குலைச்செங்காய்ப்பைங்கமுகின்குளிர்கொள்சோலைக்குயிலாலுந்
தலைச்சங்கைக்கோயிலேகோயிலாகத்தாழ்ந்தீரே. (க)

துணிமல்குகோவணமுந்தோலுங்காட்டித்தொண்டாண்டீர்
மணிமல்குகண்டத்தீரண்டர்க்கெல்லாமாண்பானீர்
* பிணிமல்குநூன்மார்பர்பெரியோர்வாழுந்தலைச்சங்கை
யணிமல்குகோயிலேகோயிலாகவமர்ந்தீரே. (உ)

சீர்கொண்டபாடலீர்செங்கண்வெள்ளேறூர்தியீர்
நீர்கொண்டும்பூக்கொண்டுநீங்காத்தொண்டர்நின்றேத்தத்
தார்கொண்டநூன்மார்பர்தக்கோர்வாழுந்தலைச்சங்கை
யேர்கொண்டகோயிலேகோயிலாகவிருந்தீரே. (௩)

வேடஞ்சூழ்கொள்கையீர்வேண்டிநீண்டவெண்டிங்க
ளோடஞ்சூழ்கங்கையுமுச்சிவைத்தீர்தலைச்சங்கைக்
கூடஞ்சூழ்மண்டபமுங்குலாயவாசற்கொடித்தோன்று
மாடஞ்சூழ்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (ச)

சூலஞ்சேர்கையினீர்சுண்ணவெண்ணீறாடலீர்
நீலஞ்சேர்கண்டத்தீர்நீண்டசடைமேனீரேற்றீ
ராலஞ்சேர்தண்கானலன்னமன்னுந்தலைச்சங்கைக்
கோலஞ்சேர்கோயிலேகோயிலாகக்கொண்டீரே. (ரு)

நிலநீரொடாகாசமனல்காலாகிநின்றைந்து
புலனீர்மைபுறங்கண்டார்பொக்கஞ்செய்யார்போற்றோவார்
சலநீதரல்லாதார்தக்கோர்வாழுந்தலைச்சங்கை
நலநீரகோயிலேகோயிலாகநயந்தீரே. (௬)

அடிபுல்குபைங்கழல்களார்ப்பப்பெயர்ந்தோரனலேந்திக்
கொடிபுல்குமென்சாயலுமையோர்பாகங்கூடினீர்
பொடிபுல்குநூன்மார்பர்புரிநூலாளர்தலைச்சங்கைக்
கடிபுல்குகோயிலேகோயிலாகக்கலந்தீரே. (எ)

திரையார்ந்தமாகடல்சூழ்தென்னிலங்கைக்கோமானை
வரையார்ந்ததோளடரவிரலாலூன்றுமாண்பினீ
ரரையார்ந்தமேகலையீரந்தணாளர்தலைச்சங்கை
நிரையார்ந்தகோயிலேகோயிலாகநின்றீரே. (அ)

பாயோங்குபாம்பணைமேலானும்பைந்தாமரையானும்
போயோங்கிக்காண்கிலார்புறநின்றோரார்போற்றோவார்

---

* பிணி - பிணித்தல்.

தீயோங்குமறையாளர்திகழுஞ்செல்வத்தலைச்சங்கைச
சேயோங்குகோயிலேகோயிலாகச்சேர்ந்தீரே. (௯)

அலையாரும்புனறுறந்தவமணர்குண்டர்சாக்கியர்
தொலையாதங்கலர்தூற்றத்தோற்றங்காட்டியாட்கொண்டீர்
தலையானநால்வேதந்தரித்தார்வாழுந்தலைச்சங்கை
நிலையார்ந்தகோயிலேகோயிலாகநின்றீரே. (௧௦)

நளிரும்புனற்காழிநல்லஞானசம்பந்தன
குளிருந்தலைச்சங்கையோங்குகோயின்மேயானை
யொளிருமபிறையானையுரைத்தபாடலிவைவல்லார்
மிளிருந்திரைசூழ்ந்தவையத்தார்க்குமேலாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருவிடைமருது - பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்.

பொங்குநூன்மார்பினீர்பூதப்படையினீர்பூங்கங்கை
தங்குசெஞ்சடையினீர்சாமவேதமோதினீ
ரெங்குமெழிலார்மறையோர்கண்முறையாலேத்தவிடைமருதின்
மங்குறோய்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௧)

நீரார்ந்தசெஞ்சடையீர்நெற்றித்திருக்கண்ணிகழ்வித்தீர்
போரார்ந்தவெண்மழுவொன்றுடையீர்பூதம்பாடலீ
ரேரார்ந்தமேகலையாள்பாகங்கொண்டீரிடைமருதிற்
சீரார்ந்தகோயிலேகோயிலாகச்சேர்ந்தீரே. (௨)

அழன்மல்குமங்கையிலேந்திப்பூதமவைபாடச்
சுழன்மல்குமாடலீர்சுடுகாடல்லாற்கருதாதீ
ரெழின்மல்குநான்மறையோர்முறையாலேத்தவிடைமருதிற்
பொழின்மல்குகோயிலேகோயிலாகப்பொலிந்தீரே. (௩)

பொல்லாப்படுதலையொன்றேந்திப்புறங்காட்டாடலீர்
வில்லாற்புரமூன்றுமெரித்தீர்விடையார்கொடியினீ
ரெல்லாக்கணங்களுமுறையாலேத்தவிடைமருதிற்
செலவாய்கோயிலேகோயிலாகச்சேர்ந்தீரே. (௪)

வருந்தியமாதவத்தோர்வானோரேனோர்வந்தீண்டிப்
பொருந்தியதைப்பூசமாடியுலகம்பொலிவெய்தத்
திருந்தியநான்மறையோர்சீராலேத்தவிடைமருதிற்
பொருந்தியகோயிலேகோயிலாகப்புக்கீரே. (௫)

சலமல்குசெஞ்சடையீர்சாந்தநீறுபூசினீர்
வலமல்குவெண்மழுவொன்றேந்திமயானத்தாடலீ
ரிலமல்குநான்மறையோரினிதாயேத்தவிடைமருதிற்
புலமல்குகோயிலேகோயிலாகப்பொலிந்தீரே. (௬)

புனமல்குகொன்றையீர்புலியினதளீர்பொலிவார்ந்த
சினமல்குமால்விடையீர்செய்யீர்கரியகண்டத்தீ
ரினமல்குநான்மறையோரேத்துஞ்சீர்கொளிடைமருதிற்
கனமல்குகோயிலேகோயிலாகக்கலந்தீரே. (௭)

சிலையுய்த்தவெங்கணையாற்புரமூன்றெரித்தீர்திறலரக்கன்
றலைபத்துந்திண்டோளுநெரித்தீர்தையல்பாகத்தீ
ரிலைமொய்த்ததண்பொழிலும்வயலுஞ்சூழ்ந்தவிடைமருதி
னலமொய்த்தகோயிலேகோயிலாகநயந்தீரே. (௮)

மறைமல்குநான்முகனும்மாலுமறியாவண்ணத்தீர்
கறைமல்குகண்டத்தீர்கபாலமேந்துகையினீ
ரறைமல்குவண்டினங்களாலுஞ்சோலையிடைமருதி
னிறைமல்குகோயிலேகோயிலாகநிகழ்ந்தீரே. (௯)

சின்போர்வைசசாக்கியருமாசுசேருஞ்சமணருந்
துன்பாயகட்டுரைகள்சொல்லியல்லறாற்றவே
யன்பாயவந்தணர்களேத்துமேர்கொளிடைமருதி
லன்பாயகோயிலேகோயிலாகவமர்ந்தீரே. (௧௦)

கல்லின்மணிமாடக்கழுமலத்தார்காவலவ
னல்லவருமறையானற்றமிழ்ஞானசம்பந்த
னெல்லியிடைமருதிலேத்துபாடலிவைபத்துஞ்
சொல்லுவார்க்குங்கேட்பார்க்குந்துயரமில்லையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

### திருநல்லூர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பெண்ணமருந்திருமேனியுடையீர்பிறங்குசடைதாழப்
பண்ணமருநான்மறையேபாடியாடல்பயில்கின்றீர்
திண்ணமரும்பைம்பொழிலும்வயலுஞ்சூழ்ந்ததிருநல்லூர்
மண்ணமருங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௧)

அலைமல்குதண்புனலும்பிறையுஞ்சூடியங்கையிற்
கொலைமல்குவெண்மழுவுமனலுமேந்துங்கொள்கையீர்
சிலைமல்குவெங்கணையாற்புரமூன்றெரித்தீர்திருநல்லூர்
மலைமல்குகோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௨)

குறைநிரம்பாவெண்மதியஞ்சூடிக்குளிர்புன்சடைதாழப்
பறைநவின்றபாடலோடாடல்பேணிப்பயில்கின்றீர்
சிறைநவின்றதண்புனலும்வயலுஞ்சூழ்ந்ததிருநல்லூர்
மறைநவின்றகோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௩)

கூனமரும்வெண்பிறையும்புனலுஞ்சூடுங்கொள்கையீர்
மானமருமென்விழியாள்பாகமாகுமாண்பினீர்
தேனமரும்பைம்பொழிலின்வண்டுபாடுந்திருநல்லூர்
வானமருங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௪)

நிணங்கவருமூவிலையுமனலுமேந்திநெறிகுழலா
ளணங்கமரும்பாடலோடாடன்மேவுமழகினீர்
திணங்கவருமாடரவும்பிறையுஞ்சூடித்திருநல்லூர்
மணங்கமழுங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௫)

கார்மருவுபூங்கொன்றைசூடிக்கமழ்புன்சடைதாழ
வார்மருவுமென்முலையாள்பாகமாகுமாண்பினீர்

தேர்மருவுநெடுவீதிக்கொடிகளாடுந்திருநல்லூ
ரேர்மருவுங்கோயிலேகோயிலாகவிருந்தீரே. (௬)

ஊன்றோயும்வெண்மழுவுமனலுமேந்தியுமைகாண
மீன்றோயுந்திசைநிறையவோங்கியாடும்வேடத்தீர்
தேன்றோயும்பைம்பொழிலின்வண்டுபாடுந்திருநல்லூர்
வான்றோயுங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே (௭)

காதமரும்வெண்குழையீர்கறுத்தவரக்கன்மலையெடுப்ப
மாதமருமென்மொழியாண்மறுகும்வண்ணங்கண்டுகந்தீர்
நீதமராவந்தணர்கள்பரவியேத்துந்திருநல்லூர்
மாதமருங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௮)

போதினமேலயன்றிருமால்போற்றியும்மைக்காணாது
நாதனேயிவனென்றுநயந்தேத்தமகிழ்ந்தளித்தீர்
நீதியாலந்தணர்கண்மூன்றோம்புந்திருநல்லூர்
மாதராளவளோடுமன்னுகோயின்மகிழ்ந்தீரே. (௯)

பொல்லாதசமணரொடுபுறங்கூறுஞ்சாக்கியரொன்
றல்லாதாரறவுரைவிட்டடியார்கள்போற்றொவா
நல்லார்களந்தணர்கணாளுமேத்துந்திருநல்லூர்
மல்லார்ந்தகோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே (௰)

கொந்தணவும்பொழில்புடைசூழ்கொச்சைமேவுகுலவேந்தன்
செந்தமிழின்சம்பந்தன்சிறைவண்புனல்சூழ்திருநல்லூர்ப்
பந்தணவுமெல்விரலாள்பங்கன்றன்னைப்பயில்பாடல்
சிந்தனையாலுரைசெய்வார்சிவலோகஞ்சேர்ந்திருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்குடவாயில் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

கலைவாழுமங்கையீர்கொங்கையாருங்கருங்கூந்த
லலைவாழுஞ்செஞ்சடையிலரவும்பிறையுமமர்வித்தீர்
குலைவாழைகமுகம்பொன்பவளம்பழுக்குங்குடவாயி
னிலைவாழுங்கோயிலேகோயிலாகநின்றீரே. (௧)

அடியார்ந்தபைங்கழலுஞ்சிலம்புமார்ப்பவங்கையிற்
செடியார்ந்தவெண்டலையொன்றேந்தியுலகம்பலிதேர்வீர்
குடியார்ந்தமாமறையோர்குலாவியேத்துங்குடவாயிற்
படியார்ந்தகோயிலேகோயிலாகப்பயின்றீரே. (௨)

கழலார்பூம்பாதத்தீரோதக்கடலில்விடமுண்டன்
றழலாருங்கண்டத்தீரண்டர்போற்றுமளவினீர்
குழலாரவண்டினங்கள்கீதத்தொலிசெய்குடவாயி
னிழலார்ந்தகோயிலேகோயிலாகநிகழ்ந்தீரே. (௩)

மறியாருங்கைத்தலத்தீர்மங்கைபாகமாகச்சேர்ந்
தெறியாருமாமழுவுமெரியுமேந்துங்கொள்கையீர்
குறியார்ந்தவண்டினங்கடேன்மிழற்றுங்குடவாயி
னெறியாருங்கோயிலேகோயிலாகநிகழ்ந்தீரே. (௪)

இழையார்ந்தகோவணமுங்கீளுமெழிலாருடையாகப்
பிழையாதசூலம்பெய்தாடல்பாடல்பேணினீர்
குழையாரும்பைம்பொழிலும்வயலுஞ்சூழ்ந்தகுடவாயில்
விழவார்ந்தகோயிலேகோயிலாகமிக்கீரே. (௫)

அரவார்ந்ததிருமேனியானவெண்ணீறாடினீ
ரிரவார்ந்தபெய்பலிகொண்டிமையோரேத்தநஞ்சுண்டீர்
குரவார்ந்தபூஞ்சோலைவாசம்வீசுங்குடவாயிற்
றிருவார்ந்தகோயிலேகோயிலாகத்திகழ்ந்தீரே. (௬)

பாடலார்வாய்மொழியீர்பைங்கண்வெள்ளேறூர்தியீ
ராடலார்மாநடத்தீரரிவைபோற்றுமாற்றலீர்
கோடலார்தும்பிமுரன்றிசைமிழற்றுங்குடவாயி
னீடலார்கோயிலேகோயிலாகநிகழ்ந்தீரே. (௭)

கொங்கார்ந்தபைங்கமலத்தயனுங்குறளாய்நிமிர்ந்தானு
மங்காந்துதள்ளாடவழலாய்நிமிர்ந்தீரிலங்கைக்கோன்
றங்காதன்மாமுடியுந்தோளுமடர்த்தீர்குடவாயிற்
பங்கார்ந்தகோயிலேகோயிலாகப்பரிந்தீரே. (௮-௯)

தூசார்ந்தசாக்கியருந்தூய்மையில்லாச்சமணரு
மேசார்ந்தபுன்மொழிநீத்தெழில்கொண்மாடக்குடவாயி
லாசாரஞ்செய்மறையோரளவிற்குன்றாதடிபோற்றத்
தேசார்ந்தகோயிலேகோயிலாகச்சேர்ந்தீரே. (௧0)

நளிர்பூந்திரைமல்குகாழிஞானசம்பந்தன்
குளிர்பூங்குடவாயிற்கோயின்மேயகோமானை
யொளிர்பூந்தமிழ்மாலையுரைத்தபாடலிவைவல்லார்
தளர்வானதானொழியத்தகுசீர்வானத்திருப்பாரே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

சீகாழி - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

நலங்கொண்முத்துமணியுமணியுந்திரளோதக்
கலங்கடன்னிற்கொண்டுகரைசேர்கலிக்காழி
வலங்கொண்மழுவொன்றுடையாய்விடையாயெனவேத்தி
யலங்கல்சூட்டவல்லார்க்கடையாவருநோயே. (௧)

ஊராருவரிச்சங்கம்வங்கங்கொடுவந்து
காராரோதங்கரைமேலுயர்த்துங்கலிக்காழி
நீரார்சடையாய்நெற்றிக்கண்ணாவென்றென்று
பேராயிரமும்பிதற்றத்தீரும்பிணிதானே. (௨)

வடிகொள்பொழிலின்மழலைவரிவண்டிசைசெய்யக்
கடிகொள்போதிற்றென்றலணையுங்கலிக்காழி
முடிகொள்சடையாய்முதல்வாவென்றுமுயன்றேத்தி
யடிகைதொழுவார்க்கில்லையல்லலவலமே (௩)

மனைக்கேயேறவளஞ்செய்பவளம்வளர்முத்தங்
கனைக்கடலுளோதமேறுங்கலிக்காழிப்

பனைக்கைப்பகட்டீருரியாய்பெரியாயெனப்பேணி
நினைக்கவல்லவடியார்நெஞ்சினல்லாரே. (௪

பருதியியங்குமபாரிற்சீரார்பணியாலே
கருதிவிண்ணோர்மண்ணோர்விருமபுங்கலிக்காழிச்
சுருதிமறைநான்கானசெமமைதருவானைக்
கருதியெழுமின்வழுவாவண்ணநுயர்போமே. (௫)

மந்தமமருவும்பொழிலிலெழிலார்மதுவுண்டு
சந்தமருவவரிவண்டிசைசெய்கலிக்காழிப்
பநதநீஙகவருளும்பரனேயெனவேத்திச்
சிந்தைசெய்வார்செம்மைநீங்காதிருப்பாரே. (௬)

புயலார்பூமிநாமமோதிபபுகழ்மல்கக்
கயலார்கண்ணார்பண்ணாரொலிசெய்கலிக்காழிப்
பயில்வான்றன்னைப்பத்தியாரத்தொழுதேத்த
முயல்வார்தமமேல்வெம்மைக்கூற்றமுடுகாதே. (௭)

அரக்கன்முடிதோளணரியவடர்த்தானடியார்க்குக்
கரக்கவில்லாதருள்செய்பெருமான்கலிக்காழிப்
பரக்கும்புகழான்றன்னையேத்திப்பணிவார்மேற்
பெருக்குமினபந்துன்பமானபிணிபோமே. (அ)

மாணாயுலகங்கொண்டமாலுமலரோனுங்
காணாவண்ணமெரியாய்நிமிர்நதான்கலிக்காழிப்
பூணார்முலையாள்பங்கத்தானைப்புகழ்ந்தேத்திக்
கோணாநெஞ்சமுடையார்க்கில்லைகுற்றமே. (கூ)

அஞ்சியல்லன்மொழிந்துதிரிவாரமணாதர்
கஞ்சிகாலையுண்பார்க்கரியான்கலிக்காழித்
தஞ்சமாயதலைவன்றன்னைநினைவார்க
டுஞ்சலில்லாநல்லவுலகம்பெறுவாரே. (க0)

ஊழியாயபாரிலோங்குமுயர்செல்வக்
காழியீசன்கழலேபேணுஞ்சம்பந்தன்
றாழுமநத்தாலுரைத்ததமிழ்களிவைவல்லார்
வாழிநீங்காவானோருலகின்மகிழ்வாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

௬0

திருப்பாசூர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

சிந்தையிடையார்தலையின்மிசையார்செஞ்சொல்லார்
வந்துமாலைவைகும்போழ்தென்மனத்துள்ளார்
மைந்தாமணாளாவென்னமகிழ்வாரூர்போலும்
பைந்தண்மாதவிசோலைசூழ்ந்தபாசூரே. (க)

பேரும்பொழுதும்பெயரும்பொழுதும்பெம்மானென்
றாருந்தனையுமடியாரேத்தவருள்செய்வா
ரூருமரவமுடையார்வாழுமூர்போலும்
பாரின்மிசையார்பாடலோவாப்பாசூரே. (உ)

கையாற்றொழுதுதலைசாய்த்துள்ளங்கசிவார்கண்
மெய்யார்குறையுநதுயருந்தீர்க்கும்விகிர்தனூர்
செய்யாடுதலஞ்சுடையார்நிலாவுமூர்போலும்
பைவாய்நாகங்கோடலீனும்பாசூரே. (௩)

பொங்காடரவும்புனலுஞ்சடைமேற்பொலிவெய்தக்
கொங்கார்கொன்றைசூடியெனுள்ளங்குளிர்வித்தார்
தங்காதலியுந்தாமும்வாழுமூர்போலும
பைங்கான்முல்லைபல்லரும்பீனும்பாசூரே. (௪)

ஆடற்புரியுமைவாயரவொன்றரைச்சாத்துஞ்
சேடச்செல்வர்சிந்தையுளென்றும்பிரியாதார்
வாடற்றலையிற்பலிதேர்கையாரூர்போலும்
பாடக்குயில்கள்பயில்பூஞ்சோலைப்பாசூரே. (௫)

கானின்றதிரக்கனல்வாய்நாகங்கச்சாகத்
தோலொன்றுடையார்விடையார்தம்மைத்தொழுவார்கண்
மால்கொண்டோடமையறீர்ப்பாரூர்போலும்
பால்வெண்மதிதோய்மாடஞ்சூழ்ந்தபாசூரே. (௬)

கண்ணினயலேகண்ணொன்றுடையார்கழலுன்னி
யெண்ணுந்தனையுமடியாரேத்தவருள்செய்வா
ருண்ணின்றுருகவுகவைதருவாரூர்போலும்
பண்ணின்மொழியார்பாடலோவாப்பாசூரே. (௭)

தேசுகுன்றாத்தெண்ணீரிலங்கைக்கோமானைக்
கூசவடர்த்துக்கூர்வாள்கொடுப்பார்தம்மையே
பேசிபிதற்றப்பெருமைதருவாரூர்போலும்
பாசித்தடமும்வயலுஞ்சூழ்ந்தபாசூரே. (௮)

நகுவாய்மலர்மேலயனுநாகத்தணையானும்
புகுவாயறியார்புறநின்றோரார்போற்றோவார்
செகுவாயுகுபற்றலைசேர்கையாரூர்போலும்
பகுவாய்நாரையாரல்வாரும்பாசூரே. (௯)

தூயவெயினின்றுழல்வார்துவர்தோயாடையார்
நாவில்வெய்யசொல்லித்திரிவார்நயமில்லார்
காவலவேவக்கணையொன்றெய்தானூர்போலும்
பாவைக்குரவம்பயில்பூஞ்சோலைப்பாசூரே. (௧௦)

ஞானமுணர்வான்காழிஞானசம்பந்தன்
றேனும்வண்டுமின்னிசைபாடுந்திருப்பாசூர்க்
கானம்முறைவார்கழல்சேர்பாடலிவைவல்லா
ரூனமிலராயும்பர்வானத்துறைவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவெண்காடு - பண் காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

உண்டாய்நஞ்சையுமையோர்பங்காவென்றுள்கித்
தொண்டாய்த்திரியமடியார்தங்கடியீங்க

ளண்டாவண்ணமறுப்பானெந்தையூர்போலும்
வெண்டாமரைமேற்கருவண்டியாழ்செய்வெண்காடே. (௧)

நாதனம்மையாள்வானென்றுநவின்றேத்திப்
பாதம்பன்னாள்பணியுமடியார்தங்கண்மே
லேதந்தீரவிருந்தான்வாழூர்போலும்
வேதத்தொலியாற்கிளிசொற்பயிலும்வெண்காடே. (௨)

தண்முத்தரும்பத்தடமூன்றுடையான்றனையுன்னிக்
கண்முத்தரும்பக்கழற்சேவடிகைதொழுவார்க
ளுண்முத்தரும்பவுவகைதருவானூர்போலும்
வெண்முத்தருவிப்புனல்வந்தலைக்கும்வெண்காடே. (௩)

நரையார்வந்துநாளுங்குறுகிநணுகாமுன்
னுரையால்வேறுவுள்குவார்களுள்ளத்தே
கரையாவண்ணங்கண்டான்மேவுமூர்போலும்
விரையார்கமலத்தன்னமருவும்வெண்காடே. (௪)

பிள்ளைப்பிறையும்புனலுஞ்சூடும்பெம்மானென்
றுள்ளத்துள்ளித்தொழுவார்தங்களுறுநோய்க
டள்ளிப்போகவருளுந்தலைவனூர்போலும்
வெள்ளைச்சுரிசங்குலவித்திரியும்வெண்காடே. (௫)

ஒளிகொண்மேனியுடையாயும்பராளீயென்
றளியராகியழுதுற்றூறுமடியார்கட்
கெளியானமரர்க்கரியான்வாழூர்போலும்
வெளியவுருவிலானைவணங்கும்வெண்காடே. (௬)

கோள்வித்தனையகூற்றந்தன்னைக்குறிப்பினான்
மாள்வித்தவனைமகிழ்ந்தங்கேத்தமாணிக்கா
யாள்வித்தமரருலகமளிப்பானூர்போலும்
வேள்விப்புகையால்வானமிருள்கூர்வெண்காடே. (௭)

வளையார்முன்கைமலையாள்வெருவவரையூன்றி
முளையார்மதியஞ்சூடியென்றும்முப்போது
மிளையாதேத்தவிருந்தானெந்தையூர்போலும்
விளையார்கழனிப்பழனஞ்சூழ்ந்தவெண்காடே. (௮)

கரியானோடுகமலமலரான்காணாமை
யெரியாய்நிமிர்ந்தவெங்கள்பெருமானென்பார்கட்
குரியானமரர்க்கரியான்வாழூர்போலும்
விரியார்பொழிலின்வண்டுபாடும்வெண்காடே. (௯)

பாடும்மடியார்பலருங்கூடிப்பரிந்தேத்த
வாடுமரவமசைத்தபெருமானறிவின்றி
மூடமுடையசமண்சாக்கியர்களுணராத
வேடமுடையபெருமான்பதியாம்வெண்காடே. (௧௦)

விடையார்கொடியான்மேவியுறையும்வெண்காட்டைக்
கடையார்மாடங்கலந்துதோன்றுங்காழியா
னடையாரின்சொன்ஞானசம்பந்தன்றமிழ்வல்லார்க்
கடையாவினைகளமரலோகமாள்வாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

६✓

திருமீயச்சூர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

காயச்செவ்விக்காமற்காய்ந்துகங்கையைப்
பாயப்படர்புன்சடையிற்பதித்தபரமேட்டி
மாயச்சூரன்றறுத்தமைந்தன்றாதைதன்
மீயச்சூரேதொழுதுவினையைவீட்டுமே. (க)

பூவார்சடையின்முடிமேற்புனலரனல்கொள்வார்
நாவார்மறையர்பிறையர்நறவெண்டலையேந்தி
யேவார்மலையேசிலையாக்கழியம்பெரிவாங்கி
மேவார்புரமூன்றெரித்தார்மீயச்சூராரே. (உ)

பொன்னேர்கொன்றைமாமலர்புரளுமகலத்தான்
மின்னேர்சடைகளுடையான்மீயச்சூரானைத்
தன்னேர்பிறரில்லானைத்தலையால்வணங்குவார்க்
கன்னேரிமையோருலகமெய்தற்கரிதன்றே. (ங)

வேகமதநல்லியானைவெருவவுரிபோர்த்துப
பாகமுமையோடாகப்படிதம்பலபாட
நாகமரைமேலசைத்துநடமாடியநம்பன்
மேகமுரிஞ்சுபொழில்சூழ்மீயச்சூரானே. (ச)

விடையார்கொடியார்சடைமேல்விளங்கும்பிறைவேடம்
படையார்பூதஞ்சூழப்பாடலாடலார்
பெடையார்வரிவண்டணையும்பிணைசேர்கொன்றையார்
விடையார்நடையொன்றுடையார்மீயச்சூராரே. (ரு)

குளிருஞ்சடைகொண்முடிமேற்கோலமார்கொன்றை
யொளிரும்பிறையொன்றுடையானொருவன்கைகோடி
நளிரும்மணிசூழ்மாலைநட்டநவினம்பன்
மிளிரும்மரவமுடையான்மீயச்சூரானே. (சு)

நீலவடிவாமிடறுநெடியர்நிகரில்லார்
கோலவடிவுதமதாங்கொள்கையறிவொண்ணார்
காலர்கழலர்கரியினுரியர்மழுவாளர்
மேலர்மதியர்விதியர்மீயச்சூராரே. (எ)

புலியினுரிதோலாடைபூசும்பொடிநீற்ற
ரொலிகொள்புனலோர்சடைமேற்கரந்தாருமையஞ்ச
வலியதிரடோள்வன்கணரக்கர்கோன்றன்னை
மெலியவரைக்கீழடர்த்தார்மீயச்சூராரே. (அ)

காதின்மிளிருங்குழையர்கரியகண்டத்தார்
போதிலவனுமாலுநதொழப்பொங்கெரியானார்
கோதிவரிவண்டறைபூம்பொய்கைபபுனன்மூழ்கி
மேதிபடியும்வயல்சூழ்மீயச்சூராரே. (கூ)

கண்டார்நாணும்படியார்கலிங்கமுடைபட்டை
கொண்டோர்சொல்லைக்குறுகாருயர்ந்தகொள்கையார்
பெண்டான்பாகமுடையார்பெரியவரைவில்லால்
விண்டார்புரமூன்றெரித்தார்மீயச்சூராரே. (க0)

வேடமுடையபெருமானுறையுமியச்சூர்
நாடுமெபுகழார்புகலிஞானசம்பந்தன்
பாடலாயதமிழீரைந்துமொழிந்துள்கி
யாடுமெடியாரகல்வானுலகமடைவாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

அரிசிற்கரைத்திருப்புத்தூர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மின்னுஞ்சடைமேலிளவெண்டிங்கள்விளங்கவே
துன்னுங்கடனஞ்சிருடோய்கண்டர்தொன்மூதூ
ரன்னமடவடியும்புனலாரரிசிலலைகொண்டு
பொன்னுமமணியுமபொருதெதன்கரைமேற்புத்தூரே. (க)

மேவாவசுரர்மேவெயில்வேவமலைவில்லா
லேவாரெரிவெங்கணையாலெய்தானெய்துமூர்
நாவாருதனுமமோதிநாடோறும்
பூவானீரார்பூசுரர்போற்றும்புத்தூரே. (உ)

பல்லார்தலைசேர்மாலைசூடிப்பாமபும்பூண்
டெல்லாவிடமும்வெண்ணீறணிந்தோரேறேறி
கல்லார்மஙகைபங்கரேனுங்காணுங்காற்
பொல்லாரல்லரழகியர்புத்தூர்ப்புநிதரே. (ங)

வரியேர்வளையாளரிவையஞ்சவருகின்ற
கரியேருரிவைபோர்த்தகடவுள்கருதுமூ
ரரியேர்கழனிப்பழனஞ்சூழ்ந்தங்கழகாய
பொரியேர்புன்குசொரிபூஞ்சோலைப்புத்தூரே. (ச)

என்போடரவமேனத்தெயிறோடெழிலாமை
மின்போற்புரிநூல்விரவிப்பூண்டமணிமார்ப
ரன்போடிருக்குமடியார்க்கன்பரமருமூர்
பொன்போதலர்கோங்கோங்குசோலைப்புத்தூரே. (ரு)

வள்ளிமுலைதோய்குமரன்றாதைவான்றோயும்
வெள்ளிமலைபோல்விடையொன்றுடையான்மேவுமூர்
தெள்ளிவருநீரரிசிற்றென்பாற்சிறைவண்டும
புள்ளுமலிபூம்பொய்கைசூழ்ந்தபுத்தூரே. (சு)

நிலந்தணீரோடனல்கால்விசுமபினீர்மையான்
சிலந்திசெங்கட்சோழனுகச்செய்தானூ
ரலந்தவடியானற்றைக்கன்றோர்காசெய்திப்
புலர்ந்தகாலைமாலைபோற்றுமபுத்தூரே. (எ)

இத்தேரேகவிம்மலைபேர்ப்பனென்றேந்தும்
பத்தோர்வாயான்வரைக்கீழலறப்பாதந்தான்
வைத்தாரருள்செய்வரதன்மருவுமூரான
புத்தூர்காணப்புகுவார்வினைகள்போகுமே. (அ)

முள்ளார்கமலத்தயன்மான்முடியோடடிதேட
வொள்ளாரெரியாயுணர்தற்கரியானூர்போலுங்

கள்ளார்கெய்தல்கழுநீராம்பல்கமலங்கள்
புள்ளார்பொய்கைப்பூப்பலதோன்றும்புத்தூரே. (௯)

கையார்சோறுகவர்குண்டர்களுந்துவருண்ட
மெய்யார்போர்வைமண்டையர்சொல்லுமெய்யல்ல
பொய்யாமொழியாலந்தணர்போற்றுமபுத்தூரி
லையாவென்பாராக்கையுறவின்றியழகாமே. (௧0)

நறவங்கமழ்பூங்காழிஞானசம்பந்தன்
பொறிகொளரவம்பூண்டானுண்டான்புத்தூர்மேற்
செறிவண்டமிழ்செய்மாலைசெப்பவல்லார்க
ளறவன்கழல்சேர்ந்தன்போடின்பமடைவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

67

## திருமுதுகுன்றம் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

தேவாசிறியோம்பிழையைப்பொறுப்பாய்பெரியோனே
யாவாவென்றங்கடியார்தங்கட்கருள்செய்வா
யோவாவுவரிகொள்ளவுயர்ந்தாயெனறேத்தி
மூவாமுனிவர்வணங்குங்கோயின்முதுகுன்றே. (௧)

எந்தையிவனென்றிரவிமுதலாவிறைஞ்சுவார்
சிந்தையுள்ளேகோயிலாகத்திகழ்வானை
மந்தியேறியினமாமலர்கள்பலகொண்டு
முந்தித்தொழுதுவணங்குங்கோயின்முதுகுன்றே. (௨)

நீடுமலரும்புனலுங்கொண்டுநிரந்தரந்
தேடுமடியார்சிந்தையுள்ளேதிகழ்வானைப்
பாடுகுயிலினயலேகிள்ளைபயின்றேத்த
மூடுஞ்சோலைமுகிறோய்கோயின்முதுகுன்றே (௩)

தெரிந்தவடியார்சிவனேயென்றுதிசைதோறுங்
குருந்தமலருங்குரவினலருங்கொண்டேந்தி
யிருந்துநின்றுமிரவும்பகலுமேத்துஞ்சீர்
முரிந்துமேகந்தவழுஞ்சோலைமுதுகுன்றே. (௪)

வைத்தநிதியேமணியேயென்றுவருந்தித்தஞ்
சித்தநைந்துசிவனேயென்பார்சிந்தையார்
கொத்தார்சந்துங்குரவுமவாரிக்கொணர்ந்துந்து
முத்தாறுடையமுதல்வர்கோயின்முதுகுன்றே. (௫)

வம்பார்கொன்றைவன்னிமத்தமலர்தூவி
நம்பாவென்னநல்கும்பெருமானுறைகோயில்
கொம்பார்குரவுகொகுடிமுல்லைகுவிந்தெங்கு
மொய்ம்பார்சோலைவண்டுபாடுமுதுகுன்றே. (௬-எ)

வாசங்கமழும்பொழில்சூழிலங்கைவாழ்வேந்தை
நாசஞ்செய்தங்கள்பெருமானமர்கோயில்
பூசைசெய்தவடியார்நின்றுபுகழ்ந்தேத்த
மூசிவண்டுபாடுஞ்சோலைமுதுகுன்றே. (அ)

அல்லிமலர்மேலயனுமரவினணையானுஞ்
சொல்லிப்பரவித்தொடரவொண்ணுச்சோதியூர்
கொல்லைவேடர்கூடிநின்றுகும்பிட
முல்லையயலேமுறுவல்செய்யுமுதுகுன்றே. (கூ)

கருகுமுடலார்கஞ்சியுண்டுகடுவேதின்
றுருகுசிந்தையிலலார்க்கயலானுறைகோயி
றிருகல்வேய்கள்சிறிதேவளையச்சிறுமந்தி
முருகின்பணைமேலிருந்துநடஞ்செய்முதுகுன்றே. (கo)

அறையார்கடல்சூழ்ந்தண்காழிச்சம்பந்தன்
முறையான்முனிவர்வணங்குங்கோயின்முதுகுன்றைக்
குறையாப்பனுவல்கூடிப்பாடவல்லார்கள்
பிறையார்சடையெம்பெருமான்கழல்கள்பிரியாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருப்பிரமபுரம் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

கறையணிவேலிலர்போலுங்கபாலந்தரித்திலர்போலு
மறையுநவின்றிலர்போலுமாசுணமார்த்திலர்போலும்
பறையுங்கரத்திலர்போலும்பாசமபிடித்திலர்போலும்
பிறையுஞ்சடைக்கிலர்போலும்பிரமபுரமமர்ந்தாரே. (க)

கூரம்பதுவிலர்போலுங்கொக்கின்இறகிலர்போலு
மாரமும்பூண்டிலர்போலுமாமையணிந்திலர்போலுந்
தாருஞ்சடைக்கிலர்போலுந்தண்டிக்கருளிலர்போலும
பேருமபலவிலர்போலும்பிரமபுரமமர்ந்தாரே. (உ)

சித்தவடிவிலர்போலுந்தேசந்திரிந்திலர்போலுங்
கத்திவருங்கடுங்காளிகதங்கடிவிர்த்திலர்போலு
மெய்த்தநயனமிடந்தார்க்காழியளித்திலர்போலும்
பித்தவடிவிலர்போலும்பிரமபுரமமர்ந்தாரே. (ங)

நச்சரவாட்டிலர்போலுநஞ்சமிடற்றிலர்போலுங்
கச்சுதரித்திலர்போலுங்கங்கைதரித்திலர்போலு
மொய்ச்சவன்பேயிலர்போலுமுப்புரமெய்திலர்போலும்
பிச்சையிரந்திலர்போலும்பிரமபுரமமர்ந்தாரே. (ச)

தோடுசெவிக்கிலர்போலுஞ்சூலம்பிடித்திலர்போலு
மாடுதடக்கைவலியயானையுரித்திலர்போலு
மோடுகரத்திலர்போலுமொள்ளழல்கையிலர்போலும்
பீடுமிகுத்தெழுசெல்வப்பிரமபுரமமர்ந்தாரே. (ரு)

விண்ணவர்கண்டிலர்போலும்வேள்வியழித்திலர்போலு
மண்ணலயன்றலைவீழவன்றுமறுத்திலர்போலும்
வண்ணவெலும்பினொடக்குவடங்கடரித்திலர்போலும்
பெண்ணினமொய்த்தெழுசெல்வப்பிரமபுரமமர்ந்தாரே. (சு)

பன்றியின்கொம்பிலர்போலும்பார்த்தற்கருளிலர்போலுங்
கன்றியகாலனைவீழக்காலிற்கொடுபாய்ந்திலர்போலுங்

துன்றுபிணஞ்சுடுகாட்டிலாடித்துதைந்திலர்போலும்
பின்றியும்பீடம்பெருகும்பிரமபுரமமர்ந்தாரே. (எ)

பரசுதரித்திலர்போலும்படுதலைபூண்டிலர்போலு
மரசனிலங்கையர்கோனையன்றுமடர்த்திலர்போலும்
புரைசெய்புனத்திளமானும்புலியினதளிலர்போலும்
பிரசமலர்ப்பொழில்சூழ்ந்தபிரமபுரமமர்ந்தாரே. (அ)

அடிமுடிமாலயன்றேடவன்றுமளப்பிலர்போலுங்
கடிமலரைங்கணைவேளைக்கனலவிழித்திலர்போலும்
படிமலர்ப்பாலனுக்காகப்பாற்கடலீந்திலர்போலும
பிடிநடைமாதர்பெருகுமபிரமபுரமமர்ந்தாரே. (௯)

வெற்றரைச்சீவரத்தார்க்குவெளிப்படநின்றிலர்போலு
மற்றவரானிழலுவர்க்கறங்களுரைத்திலர்போலு
முற்றவரென்றிலர்போலுமோடுமுடிக்கிலர்போலும்
பெற்றமுமூர்ந்திலர்போலும்பிரமபுரமமர்ந்தாரே. (௧௦)

பெண்ணுருவாணுருவல்லாப்பிரமபுரநகர்மேய
வண்ணல்செய்யாதனவெல்லாமறிந்துவகைவகையாலே
நண்ணியஞானசமபந்தனவின்றனபத்தும்வல்லார்கள்
விண்ணவரோடினிதாகவீற்றிருப்பாரவர்தாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவாலவாய் - திருநீற்றுப்பதிகம்.

திருச்சிற்றம்பலம்.

மந்திரமாவதுநீறுவானவர்மேலதுநீறு
சுந்தரமாவதுநீறுதுதிக்கப்படுவதுநீறு
தந்திரமாவதுநீறுசமயத்திலுள்ளதுநீறு
செந்துவர்வாயுமைபங்கன்றிருவாலவாயான்றிருநீறே. (௧)

வேதத்திலுள்ளதுநீறுவெந்துயர்தீர்ப்பதுநீறு
போதந்தருவதுநீறுபுன்மைதவிர்ப்பதுநீறு
வோதத்தகுவதுநீறுவுண்மையிலுள்ளதுநீறு
சீதப்புனல்வயல்சூழ்ந்ததிருவாலவாயான்றிருநீறே. (௨)

முத்திதருவதுநீறுமுனிவரணிவதுநீறு
சத்தியமாவதுநீறுதக்கோர்புகழ்வதுநீறு
பத்திதருவதுநீறுபரவவினியதுநீறு
சித்திதருவதுநீறுதிருவாலவாயான்றிருநீறே. (௩)

காணவினியதுநீறுகவினைத்தருவதுநீறு
பேணியணிபவர்க்கெல்லாம்பெருமைகொடுப்பதுநீறு
மாணந்தகைவதுநீறுமதியைத்தருவதுநீறு
சேணந்தருவதுநீறுதிருவாலவாயான்றிருநீறே. (௪)

பூசவினியதுநீறுபுண்ணியமாவதுநீறு
பேசவினியதுநீறுபெருந்தவத்தோர்களுக்கெல்லா
மாசைகெடுப்பதுநீறுவந்தமதாவதுநீறு
தேசம்புகழ்வதுநீறுதிருவாலவாயான்றிருநீறே. (௫)

அருத்தமதாவதுநீறுஅவலமறுப்பதுநீறு
வருத்தந்தணிப்பதுநீறுவானமளிப்பதுநீறு
பொருத்தமதாவதுநீறுபுண்ணியர்பூசும்வெண்ணீறு
திருத்தகுமாளிகைசூழ்ந்ததிருவாலவாயான்றிருநீறே. (௬)

எயிலதுவட்டதுநீறுவிருமைக்குமுள்ளதுநீறு
பயிலப்படுவதுநீறுபாக்கியமாவதுநீறு
துயிலைத்தடுப்பதுநீறுசுத்தமதாவதுநீறு
வயிலைப்பொலிதருசூலத்தாலவாயான்றிருநீறே. (௭)

இராவணன்மேலதுநீறுவெண்ணத்தகுவதுநீறு
பராவணமாவதுநீறுபாவமறுப்பதுநீறு
தராவணமாவதுநீறுதத்துவமாவதுநீறு
வராவணங்குந்திருமேனியாலவாயான்றிருநீறே. (௮)

மாலொடயனறியாதவண்ணமுமுள்ளதுநீறு
மேலுறைதேவர்கடங்கண்மெய்யதுவெண்பொடிநீறு
வேலவுடம்பிடர்தீர்க்குமின்பந்தருவதுநீறு
வாலமதுண்டமிடற்றெம்மாலவாயான்றிருநீறே. (௯)

குண்டிகைக்கையர்களோடுசாக்கியர்கூட்டமுங்கூடக்
கண்டிகைப்பிப்பதுநீறுகருதவினியதுநீறு
வெண்டிசைப்பட்டபொருளாரேத்துந்தகையதுநீறு
வண்டத்தவர்பணிந்தேத்துமாலவாயான்றிருநீறே. (௧௦)

ஆற்றலடல்விடையேறுமாலவாயான்றிருநீற்றைப்
போற்றிப்புகலிநிலாவும்பூசுரன்ஞானசம்பந்தன்
தேற்றித்தென்னனுடலுற்றதீப்பிணியாயினதீரச்
சாற்றியபாடல்கள்பத்தும்வல்லவர்நல்லவர்தாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருப்பெரும்புலியூர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மண்ணுமோர்பாகமுடையார்மாலுமோர்பாகமுடையார்
விண்ணுமோர்பாகமுடையார்வேதமுடையவிமலர்
கண்ணுமோர்பாகமுடையார்கங்கைசடையிற்கரந்தார்
பெண்ணுமோர்பாகமுடையார்பெரும்புலியூர்பிரியாரே. (௧)

துன்னுகடற்பவளஞ்சேர்தூயனீண்டதிரடோள்கண
மின்னுசுடர்க்கொடிபோலுமேனியினாளொரு * கங்கைக்
கன்னிகளின்புனையோடுகலைமதிமாலைகலந்த
பின்னுசடைப்பெருமானார்பெரும்புலியூர்பிரியாரே. (௨)

கள்ளமதித்தகபாலங்கைதனிலேமிகவேந்தித்
துள்ளமிதித்துநின்றாடுந்தொழிலரெழின்மிகுசெல்வர்
வெள்ளநகுதலைமாலைவிரிசடைமேன்மிளிர்கின்ற
பிள்ளைமதிப்பெருமானார்பெரும்புலியூர்பிரியாரே. (௩)

* கங்கைக்கன்னிகளின்புனையோடு - என்பதனுக்கு-கங்கையாறுகளாகிய மாலையுடன் எனப் பொருள் தோன்றுகின்றது.

ஆடலிலையமுடையாரருமறைதாங்கியாறங்கம்
பாடலிலையமுடையார்பன்மையொருமைசெய்தனுங்
கூடலிலையமுடையார்கோலெனும்போரொளிதாங்கிய
பீடலிலையமுடையார்பெரும்புலியூர்பிரியாரே. (௪)

தோடுடையார்குழைக்காதிற்சுடுபொடியாரனலாடக்
காடுடையாரெரிவீசுங்கையுடையார்கடல்சூழ்ந்த
நாடுடையார்பொருளின்பநல்லவைநாளுநயந்த
வீடுடையார்பெருமானார்பெரும்புலியூர்பிரியாரே. (௫)

கற்றறுப்பணிசெய்துகாண்டுமென்பாரவர்தங்கண்
முற்றிற்றறிதுமென்பார்கண்முதல்வியோர்வேதபுராணா
மற்றிகழ்ந்துமெனபாக்கணமனத்திடையார்பணிசெய்யப்
பெற்றிபெரிதுமுகப்பார்பெரும்புலியூர்பிரியாரே. (௬)

மறையுடையாரொலிபாடனமாமலர்ச்சேவடிசேர்வார்
குறையுடையார்குறைதீர்ப்பார்குழகரழகர்நஞ்செல்வர்
கறையுடையார்திகழ்கண்டங்கங்கைசடையிற்கரந்தார்
பிறையுடையார்சென்னிதனமேற்பெரும்புலியூர்பிரியாரே. (௭)

உறவிலியின்புறுசீர்நன்மாநகுதல்வீடெளிதாகித்
துறவிங்கூட்டமுங்காட்டித்துன்பமுமின்பமுந்தோற்றி
மறவியெனுஞ்சிந்தனைமாற்றிவாழவல்லார்தமக்கென்றும்
பிறவியறுக்கும்பிரானார்பெரும்புலியூர்பிரியாரே. (௮)

சீருடையாரடியார்கள்சேடரொப்பார்சடைசேரு
நீருடையார்பொடிப்பூசுநினைப்புடையார்விரிகொன்றைத்
தாருடையார்விடையூர்வார்தலைவரைந்நூற்றுப்பத்தாய
பேருடையார்பெருமானார்பெரும்புலியூர்பிரியாரே (௯)

உரிமையுடையடியார்கணுள்ளுறவுள்கவல்லார்கட்
கருமையுடையனநாட்டியருள்செய்யுமாதிமுதல்வர்
கருமையுடைநெடுமாலுங்கடிமலரண்ணலுங்காணாப்
பெருமையுடையபெருமானார்பெரும்புலியூர்பிரியாரே. (௧0)

பிறைவளருமுடிச்சென்னிப்பெரும்புலியூர்ப்பெருமானை
நறைவளரும்பொழிற்காழிநற்றமிழ்ஞானசம்பந்தன்
மறைவளருந்தமிழ்மாலைவல்லவர்தந்துயர்நீங்கி
நிறைவளர்நெஞ்சினராகிநீடுலகத்திருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

### திருக்கடம்பூர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

வானமர்திங்களுநீருமருவியவார்சடையானைத்
தேனமர்கொன்றையினானைத்தேவர்தொழப்படுவானைக்
கானமருமயிலினைபுல்கிக்கலைபயிலுங்கடம்பூரிற்
றானமர்கொள்கையினானைத்தாடொழவீடெளிதாமே. (௧)

அரவினொடாமையும்பூண்டுத்துகில்வேங்கையதளும்
விரவுந்திருமுடிதன்மேல்வெண்டிங்கள்சூடிவிரும்பிப்

பரவுந்தனிக்கடம்பூரிற்பைங்கண்வெள்ளேற்றண்ணல்பாத
மிரவும்பகலும்பணியவினைபாறுமக்கதுவாமே. (௨)

* இளிபடுமின்சொலினார்களிருங்குழன்மேலிசைந்தேறத்
தெளிபடுகொள்கைகலந்ததீத்தொழிலார்கடம்பூரி
லொளிதருவெண்பிறைசூடியொண்ணுதலோடுடனாகிப்
புலியதளாடைபுனைந்தான்பொற்கழல்போற்றுதுநாமே. (௩)

பறையொடுசங்குமியம்பப்பல்கொடிசேர்நெடுமாடங்
கறையுடைவேல்வரிக்கண்ணார்கலையொலிசேர்கடம்பூரின்
மறையொலிகூடியபாடன்மருவிநின்றாடன்மகிழும
பிறையுடைவார்சடையானைப்பேணவல்லார்பெரியோரே. (௪)

தீவிரியக்கழலார்ப்பச்சேயெரிகொண்டிடுகாட்டி
னாவிரிகூந்தனற்பேய்கணகைசெய்யநட்டநவின்றோன்
காவிரிகொன்றைகலந்தகண்ணுதலான்கடம்பூரிற்
பாவிரிபாடல்பயில்வார்பழியொடுபாவமிலாரே. (௫)

தண்புனனீள்வயறோறுந்தாமரைமேலனம்வைகக்
கண்புணர்காவில்வண்டேறக்கள்ளவிழுங்கடம்பூரிற்
பெண்புனைகூறுடையானைப்பின்னுசடைப்பெருமானைப்
பண்புனைபாடல்பயில்வார்பாவமிலாதவர்தாமே. (௬)

பலிகெழுசெம்மலர்சாரப்பாடலோடாடலறாத
கலிகெழுவீதிகலந்தகார்வயல்சூழ்கடம்பூரி
லொலிதிகழ்கங்கைகரந்தானொண்ணுதலாளுமைகேள்வன்
புலியதளாடையினான்றன்புனைகழல்போற்றல்பொருளே. (௭)

பூம்படுகிற்கயல்பாயப்புள்ளிரியப்புறங்காட்டிற்
காம்படுதோளியர்நாளுங்கண்கவருங்கடம்பூரின்
மேம்படுதேவியோர்பாகமேவியெம்மானைவாழ்த்தித்
தேம்படுமாமலர்தூவித்திசைதொழத்தீயகெடுமே. (௮)

திருமருமார்பிலவனுந்திகழ்தருமாமலரோனு
மிருவருமாயறிவொண்ணாவெரியுருவாகியவீசன்
கருவரைகாலிலடர்த்தகண்ணுதலான்கடம்பூரின்
மருவியபாடல்பயில்வார்வானுலகம்பெறுவாரே. (௯)

ஆடைதவிர்த்தறங்காட்டுமவர்களுமந்துவராடைச்
சோடைகணன்னெறிசொல்லார்சொல்லினுஞ்சொல்லலகண்டீர்
வேடம்பலபலகாட்டும்விகிர்தனம்வேதமுதல்வன்
காடதனிடமாடுங்கண்ணுதலான்கடம்பூரே (௧௦)

விடைநவிலுங்கொடியானைவெண்கொடிசேர்நெடுமாடங்
கடைநவிலுங்கடம்பூரிற்காதலனைக்கடற்காழி
நடைநவினஞானசம்பந்தனன்மையாலேத்தியபத்தும
படைநவில்பாடல்பயில்வார்பழியொடுபாவமிலாரே. (௧௧).

திருச்சிற்றம்பலம்.

---

* இளி - என்பது ஏழிசையிலொன்று.

## திருப்பாண்டிக் கொடுமுடி - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பெண்ணமர்மேனியினாரும்பிறைபுல்குசெஞ்சடையாருங்
கண்ணமர்நெற்றியினாருங்காதமருங்குழையாரு
மெண்ணமருங்குணத்தாருமிமையவரேத்தநின்றாரும்
பண்ணமர்பாடலினாரும்பாண்டிக்கொடுமுடியாரே. (௧)

தனைக்கணிமாமலர்கொண்டுதாடொழுவாரவர்தங்கள்
வினைப்பகையாயினதீர்க்கும்விண்ணவர்விஞ்சையர்நெஞ்சி
னினைத்தெழுவார்துயர்தீர்ப்பார்நிரைவளைமங்கைநடுங்கப்
பனைக்கைப்பகட்டுரிபோர்த்தார்பாண்டிக்கொடுமுடியாரே. (௨)

சடையமர்கொன்றையினாருஞ்சாந்தவெண்ணீறணிந்தாரும்
புடையமர்பூதத்தினாரும்பொறிகிளர்பாம்பசைத்தாரும்
விடையமருங்கொடியாரும்வெண்மழுமூவிலைச்சூலப்
படையமர்கொள்கையினாரும்பாண்டிக்கொடுமுடியாரே. (௩)

நறைவளர்கொன்றையினாருஞாலமெல்லாந்தொழுதேத்தக்
கறைவளர்மாமிடற்றாருங்காடரங்காக்கனலேந்தி
மறைவளர்பாடலினோடுமண்முழவங்குழன்மொந்தை
பறைவளர்பாடலினாரும்பாண்டிக்கொடுமுடியாரே. (௪)

போகமுமின்பமுமாகிப்போற்றியென்பாரவர்தங்க
ளாகமுறைவிடமாகவமர்ந்தவர்கொன்றையினோடு
நாகமுந்திங்களுஞ்சூடிநன்னுதன்மங்கைதன்மேனிப்
பாகமுகந்தவர்தாமும்பாண்டிக்கொடுமுடியாரே. (௫)

கடிபடுகூவிளமத்தங்கமழ்சடைமேலுடையாரும்
பொடிபடமுப்புரஞ்செற்றபொருசிலையொன்றுடையாரும
வடிவுடைமங்கைதன்னோடுமணம்படுகொள்கையினாரும்
படிபடுகோலத்தினாரும்பாண்டிக்கொடுமுடியாரே. (௬)

ஊனமர்வெண்டலையேந்தியுண்பலிக்கென்றுழல்வாருந்
தேனமருமொழிமாதுசேர்திருமேனியினாருங்
கானமர்மஞ்ஞைகளாலுங்காவிரிக்கோலக்கரைமேற்
பானலநீறணிவாரும்பாண்டிக்கொடுமுடியாரே. (௭)

புரந்தரன்றன்னொடுவானோர்போற்றியென்றேத்தநின்றாரும்
பெருந்திறல்வாளரக்கன்னைப்பேரிடர்செய்துகந்தாருங்
கருந்திரைமாமிடற்றாருங்காரகில்பன்மணியுந்திப்
பரந்திழிகாவிரிப்பாங்கர்ப்பாண்டிக்கொடுமுடியாரே. (௮)

திருமகள்காதலினானுந்திகழ்தருமாமலர்மேலைப்
பெருமகனும்மவர்காணாப்பேரழலாகியபெம்மான்
மருமலிமென்மலர்ச்சந்துவந்திழிகாவிரிமாடே
பருமணிநீர்த்துறையாரும்பாண்டிக்கொடுமுடியாரே. (௯)

புத்தருமப்புந்தியிலாதசமணரும்பொய்ம்மொழியல்லான்
மெய்த்தவம்பேசிடமாட்டார்வேடம்பலபலவற்றாற்
சித்தருந்தேவருங்கூடிச்செழுமலர்நல்லனகொண்டு
பத்தர்கடாம்பணிந்தேத்தும்பாண்டிக்கொடுமுடியாரே. (௧௦)

கலமல்குதண்கடல்சூழ்ந்தகாழியுண்ஞானசம்பந்தன்
பலமல்குவெண்டலையேந்திபாண்டிக்கொடுமுடிதன்னைச்
சொலமல்குபாடல்கள்பத்துஞ்சொல்லவல்லார்துயர்தீர்ந்து
நலமல்குசிந்தையராகிநன்னெறியெய்துவர்தாமே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சக்கரமாற்று - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

பிரமனூர்வேணுபுரம்புகலிவெங்குருப்பெருநீர்த்தோணி
புரமன்னுபூந்தராய்பொன்னஞ்சிரபுரம்வண்சண்பை
யரன்மன்னுதண்காழிகொச்சைவயமுள்ளிட்டங்காதியாய
பரமனூர்பன்னிரண்டாய்நின்றதிருக்கழுமலநாமபரவுமூரே (௧)

வேணுபுரம்பிரமனூர்புகலிபெருவெங்குருவெள்ளத்தோங்கு
தோணிபுரம்பூந்தராய்தூநீர்ச்சிரபுரம்புறவங்காழி
கோணியகோட்டாறுக்கொச்சைவயஞ்சண்பைகூருஞ்செல்வங்
காணியவையகத்தோர்க்கதுங்கழுமலநாங்கருதுமூரே. (௨)

புகலிசிரபுரம்வேணுபுரஞ்சண்பைபுறவங்காழி
நிகரில்பிரமபுரங்கொச்சைவயநீர்மேனின்றுயர்ந்தோ
ரகலியவெங்குருவோடந்தண்டராயமராம்பெருமாற்கின்பம்
பகருநகர்நல்லகழுமலநாங்கைதொழுதுபாடுமூரே. (௩)

வெங்குருத்தண்புகலிவேணுபுரஞ்சண்பைவெள்ளங்கொள்ளத்
தொங்கியதோணிபுரம்பூந்தராய்தொகுபிரமபுரந்தொல்காழி
தங்குபொழிற்புறவங்கொச்சைவயந்தலைபண்டாண்டமூதூர்
கங்கைச்சடைமுடிமேலேற்றான்கழுமலநாங்கருதுமூரே (௪)

தொன்னீரிற்றோணிபுரம்புகலிவெங்குருத்துயர்தீர்காழி
யின்னீர்வேணுபுரந்தராய்பிரமனூர்பொழிலார்சண்பை
நன்னீர்ப்பூம்புறவங்கொச்சைவயஞ்சிலம்பன்காரநல்ல
பொன்னீர்புன்சடையான்பூந்தண்கழுமலநாம்புகழுமூரே. (௫)

தண்ணந்தராய்புகலிதாமரையானூர்சண்பைதலைமுன்னண்ட
வண்ணனகர்கொச்சைவயந்தண்புறவஞ்சீரணியார்காழி
விண்ணியல்சீர்வெங்குருநல்வேணுபுரந்தோணிபுரமேலாலேந்து
கண்ணுதலோன்மேவியநற்கழுமலநாங்கைதொழுதுகருதுமூரே. (௬)

சீரார்சிரபுரமுங்கொச்சைவயஞ்சண்பையொடுபுறவநல்ல
வாராத்தராய்பிரமனூர்புகலிவெங்குருவோடந்தண்காழி
யோரார்கழுமலமும்வேணுபுரந்தோணிபுரமென்றென்றுள்கிப்
பேரானெடியவனுநான்முகனுங்காணபரியபெருமானூரே. (௭)

புறவஞ்சிரபுரமுந்தோணிபுரஞ்சண்பைமிகுபுகலிகாழி
நறவமிகுசோலைக்கொச்சைவயந்தராய்நான்முகன்றனூர்
விறலாயவெங்குருவும்வேணுபுரம்விசயன்மேலம்பெய்து
திறலாலரக்கனைச்செற்றான்றன்கழுமலநாஞ்சேருமூரே. (௮)

சண்பைபிரமபுரந்தண்புகலிவெங்குருநற்காழிசாயாப்
பண்பார்சிரபுரமுங்கொச்சைவயந்தராய்ப்புறவம்பார்மே.

### திருப்பாண்டிக் கொடுமுடி - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பெண்ணமர்மேனியினாரும்பிறைபுல்குசெஞ்சடையாருங்
கண்ணமர்நெற்றியினாருங்காதமருங்குழையாரு
மெண்ணமருங்குணத்தாருமிமையவரேத்தநின்றாரும்
பண்ணமர்பாடலினாரும்பாண்டிக்கொடுமுடியாரே. (க)

தனைக்கணிமாமலர்கொண்டுதாடொழுவாரவர்தங்கள்
வினைப்பகையாயினதீர்க்குமவிண்ணவர்விஞ்சையர்நெஞ்சி
னினைத்தெழுவார்துயர்தீர்ப்பார்நிரைவளைமங்கைநடுங்கப்
பனைக்கைப்பகட்டுரிபோர்த்தார்பாண்டிக்கொடுமுடியாரே. (உ)

சடையமர்கொன்றையினாருஞ்சாந்தவெண்ணீறணிந்தாரும
புடையமர்பூதத்தினாருமபொறிகிளர்பாம்பசைத்தாரும்
விடையமருங்கொடியாருமவெண்மழுமூவிலைசூலப
படையமர்கொள்கையினாரும்பாண்டிக்கொடுமுடியாரே (௩)

நறைவளர்கொன்றையினாருஞாலமெல்லாந்தொழுதேத்தக்
கறைவளர்மாமிடற்றாருங்காடரங்காக்கனலேந்தி
மறைவளர்பாடலினோடுமண்முழவங்குழன்மொந்தை
பறைவளர்பாடலினாரும்பாண்டிக்கொடுமுடியாரே. (௪)

போகமுமின்பமுமாகிப்போற்றியென்பாரவர்தங்க
ளாகமுறைவிடமாகவமர்ந்தவர்கொன்றையினோடு
நாகமுந்திங்களுஞ்சூடிநன்னுதன்மங்கைதன்மேனி
பாகமுகந்தவர்தாமும்பாண்டிக்கொடுமுடியாரே (௫)

கடிபடுகூவிளமத்தங்கமழ்சடைமேலுடையாரும்
பொடிபடமுப்புரஞ்செற்றபொருசிலையொன்றுடையாரும
வடிவுடைமங்கைதன்னோடுமணம்படுகொள்கையினாரும்
படிபடுகோலத்தினாரும்பாண்டிக்கொடுமுடியாரே. (௬)

ஊனமர்வெண்டலையேந்தியுண்பலிக்கென்றுழல்வாருந்
தேனமருமொழிமாதுசேர்திருமேனியினாரு
கானமர்மஞ்ஞைகளாலுங்காவிரிக்கோலக்கரைமேற்
பானலநீறணிவாரும்பாண்டிக்கொடுமுடியாரே. (௭)

புரந்தரன்றன்னொடுவானோர்போற்றியென்றேத்தநின்றாரும
பெருந்திறல்வாளரக்கன்னைப்பேரிடர்செய்துகந்தாருங்
கருந்திரைமாமிடற்றாருங்காரகில்பன்மணியுந்திப்
பரந்திழிகாவிரிப்பாங்கர்ப்பாண்டிக்கொடுமுடியாரே (௮)

திருமகள்காதலினானுந்திகழ்தருமாமலர்மேலைப்
பெருமகனும்மவர்காணாப்பேரழலாகியபெம்மான்
மருமலிமென்மலர்ச்சந்துவந்திழிகாவிரிமாடே
பருமணிநீர்த்துறையாரும்பாண்டிக்கொடுமுடியாரே. (௯)

புத்தரும்புத்தியிலாதசமணரும்பொய்ம்மொழியல்லான்
மெய்த்தவம்பேசிடமாட்டார்வேடம்பலபலவற்றாற்
சித்தருந்தேவருங்கூடிச்செழுமலர்நல்லனகொண்டு
பத்தர்கடாம்பணிந்தேத்தும்பாண்டிக்கொடுமுடியாரே. (௰)

நீற்றேதுதைந்திலங்கு வெண்ணூலர் தண்மதியர் நெற்றிக்கண்ணர்
கூற்றேர்சிதையக் கடந்தாரிடம்போலுங் குளிர்சூழ் வெற்பி
லேற்றேனமேனமிவை யோடவைவிரவி யிழிபூஞ்சாரற்
கோற்றேனிசைமுரலக் கேளாக்குயில்பயிலுங் குறும்பலாவே. (சு)

பொன்றொத்த கொன்றையும்பிள்ளைமதியும் புனலுஞ்சூடிப்
பின்றொத்தவார்சடையெம் பெருமானிடம்போலும் பிலயந்தாங்கி
மன்றத்து மண்முழவமோங்கி மணிகொழித்து வயிரமுந்திக்
குன்றத்தருவியயலே புனல்ததும்புங் குறும்பலாவே. (எ)

ஏந்துதிணிதிண்டோ ளிராவணனைமால்வரைக்கீழடரவூன்றிச்
சாந்தமெனநீறணிந்த சைவரிடம்போலுஞ் சாரற்சாரற்
பூந்தணறுவேங்கைக் கொத்திறுத்து மத்தகத்திற் பொலியவேந்திக்
கூந்தற்பிடியுங் களிறுமுடன்வணங்குங் குறும்பலாவே. (அ)

அரவினணையானு நான்முகனுங் காண்பரியவண்ணல்சென்னி
விரவிமதியணிந்த விகிர்தர்க்கிடம்போலும் விரிபூஞ்சாரன்
மரவமிருகரையு மல்லிகையுஞ் சண்பகமுமலர்ந்துமாந்தக்
குரவமுறுவல்செய்யுங் குன்றிடஞ்சூழ் தண்சாரற்குறும்பலாவே. (கூ)

மூடியசீவரத்தர் முன்கூறுண்டேறுதலும் பின்கூறுண்டு
காடிதொடுசமணைக் காய்ந்தாரிடம்போலுங் கல்சூழ்வெற்பி
னீடுயர்வேய்குனியப் பாய்கடுவனீள்கழைமே னிருத்தஞ்செய்யக்
கூடியவேடுவர்கள் கூய்விளியாக் கைமறிக்குங் குறும்பலாவே. (க0)

கொம்பார்பூஞ்சோலைக் குறும்பலாமேவியகொல்லேற்றண்ண
ணம்பானடிபரவு நான்மறையான் ஞானசம்பந்தன்சொன்ன
வின்பாயபாடலிவை பத்தும்வல்லார்விரும்பிக்கேட்பார்
தம்பாலதீவினைகள் போயகலு நல்வினைகடளராவன்றே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருநணா - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பந்தார்விரன்மடவாள் பாகமாநாகம்பூண் டேறதேறி
யந்தாரரவணிந்த வம்மானிடம்போலு மந்தண்சாரல்
வந்தார்மடமந்திகூத் தாடவார்பொழிலில் வண்டுபாடச்
செந்தேன்றெளியொளிரத் தேமாக்கனியுதிர்க்குந் திருநணாவே. (க)

நாட்டம்பொலிந்திலங்கு நெற்றியினான் மற்றொருகைவீணையேந்தி
யீட்டுந்துயரறுக்கு மெம்மானிடம்போலு மிலைசூழ்கானி
லோட்டந்தருமருவி வீழும்விசைகாட்ட முந்தூழோசைச்
சேட்டார்மணிகளணியுந் திரைசேர்க்குந் திருநணாவே. (உ)

நன்றாங்கிசைமொழிந்து நன்னுதலாள்பாகமாய்ஞாலமேத்த
மின்றாங்குசெஞ்சடையெம் விகிர்தர்க்கிடம்போலும் விரைசூழ்வெற்பிற்
குன்றோங்கிவன்றிரைகண் மோதமயிலாலுஞ் சாரற்செவ்வி
சென்றோங்கிவானவர்களேத்தியடிபணியுந் திருநணாவே. (ங)

கையின்மழுவேந்திக் காலிற்சிலம்பணிந்து கரித்தோல்கொண்டு
மெய்யின்முழுதணிந்த விகிர்தர்க்கிடம்போலு மிடைந்துவாழை

வுருவளர்வெங்குருப்புகலியோங்குதராய்தோணிபுரமுயர்ந்ததேவர்
வெருவவளர்கடல்விடமதுண்டணிகொள்கண்டத்தோன்விரும்புமூரே. (உ)

வாய்ந்தபுகழ்மறைவளருந்தோணிபுரம்பூந்தராய்சிலம்பன்வாழூ
ரேய்ந்தபுறவந்திகழுஞ்சண்பையெழிற்காழியிறைகொச்சையம்பொன்
வேய்ந்தமதிற்கழுமலம்விண்ணோர்பணியமிக்கயனூரமரர்கோனூ
ராய்ந்தகலையார்புகலிவெங்குருவதானூருமமருமூரே. (ங)

மாமலையாள்கணவனமகிழ்வெங்குருமாப்புகலிதராய்தோணிபுரம்வான்
சேமமதிற்புடைதிகழுங்கழுமலமேகொச்சைதேவேந்திரனூர்சீர்ப்
பூமகனூர்பொலிவுடையபுறவம்விறற்சிலம்பனூர்காழிசண்பை
பாமருவுங்கலையெட்டெட்டுணர்ந்தவற்றின்பயனானோர்பரவுமூரே. (ச)

* தரைத்தேவர்பணிசண்பைதமிழ்க்காழிவயங்கொச்சைதயங்குபூமேல்
விரைச்சேருங்கழுமலமெய்யுணர்ந்தயனூர்விண்ணவர்தங்கோனூர்வென்றித்
திரைச்சேருமபுனற்புகலிவெங்குருச்செல்வமபெருகுதோணிபுரஞ்சீ
ருரைச்சேர்பூந்தராய்சிலம்பனூர்புறவமுலகத்திலுயர்ந்தவூரே. (ரு)

புண்டரிகத்தார்வயல்சூழ்புறவமிகுசிரபுரம்பூங்காழிசண்பை
யெண்டிசையோரிறைஞ்சியவெங்குருப்புகலிபூந்தராய்தோணிபுரஞ்சீர்
வண்டமரும்பொழில்மல்குங்கழுமலந்தற்கொச்சைவானவர்தங்கோனூ
ரண்டயனூரிவையென்பாருங்கூறறயுதைத்துகந்தவப்பனூரே. (சு)

வண்மைவளர்வரத்தயனூர்வானவர்தங்கோனூர்வண்புகலியிஞ்சி
வெண்மதிசேர்வெங்குருமிக்கோரிறைஞ்சுசண்பைவியன்காழிகொச்சை
கண்மகிழுங்கழுமலங்கற்றோர்புகழுந்தோணிபுரம்பூந்தராய்சீர்ப்
பண்மலியுஞ்சிரபுரம்பார்புகழ்புறவம்பாலவண்ணனபயிலுமூரே. (எ)

மோடிபுறங்காக்குமூர்புறவஞ்சீர்ச்சிலம்பனூர்காழிமூதூர்
நீடியலுஞ்சண்பைகழுமலங்கொச்சைவேணுபுரங்கமலநீடு
கூடியயனூர்வளர்வெங்குருப்புகலிதராய்தோணிபுரங்கூடப்போர்
தேடியுழலவுணர்பயில்திரிபுரங்கள்செற்றமலைச்சிலையனூரே. (அ)

இரக்கமுடையிறையவனூர்தோணிபுரம்பூந்தராய்சிலம்பனறன்னூர்
நிரக்கவருபுனற்புறவநிறைதவத்தயனூர்சீர்த்தேவர்கோனூர்
வரக்கரவார்புகலிவெங்குருமாசிலாச்சண்பைகாழிகொச்சை
யரக்கன்விறலழித்தருளிக்கழுமலமந்தணர்வேதமறாதவூரே. (கூ)

மேலோதுங்கழுமலமெய்த்தவமவளருங்கொச்சையிந்திரனூர்மெய்ம்மை
நூலோதுமயனறனூர்நுண்ணறிவார்குருப்புகலிதராய்தூநீர்மேற்
சேலோடுதோணிபுரந்திகழ்புறவஞ்சிலம்பனூர்செருச்செய்தன்று
மாலோடுமயனறியாவண்ணகாழிசண்பைமண்ணோர்வாழ்த்துமூரே. (கo)

ஆக்கமர்சீரூர்சண்பைகாழியமர்கொச்சைகழுமலமன்பானூ
ரோக்கமுடைத்தோணிபுரம்பூந்தராய்சிரபுரமொண்புறவநண்பார்
பூக்கமலத்தோனமகிழூர்புரந்தரனூர்புகலிவெங்குருவுமென்பர்
சாக்கியரோடமண்கையர்தாமறியாவகைநின்றானுறங்குமூரே. (கக)

அக்கரஞ்சேர்தருமனூர்புகலிதராய்தோணிபுரமணிநீர்ப்பொய்கை
புக்கரஞ்சேர்புறவஞ்சீர்ச்சிலம்பனூர்புகழ்க்காழிசண்பைதொல்லூர்
மிக்கரஞ்சேர்க்கழுமலமேகொச்சைவயமவேணுபுரமயனூர்மேவிச்
சக்கரஞ்சேர்த்தமிழ்விரகன்றான்சொன்னதமிழ்தரிப்போர்தவஞ்செய்தோரே.

திருச்சிற்றம்பலம்.

---

* தரைத்தேவர் - பிராமணர்.

74

## திருக்கோமூத்திரி - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பூமகனூர்புத்தேளுக்கிறைவனூர்குறைவிலாப்புகலிபூமேன்
மாமகளூர்வெங்குருநற்றோணிபுரம்பூந்தராய்வாய்ந்தவிஞ்சிச்
சேமமிகுசிரபுரஞ்சீர்ப்புறவநிறைபுகழ்ச்சண்பைகாழிகொச்சை
காமனைமுன்காய்ந்தநுதற்கண்ணவனூர்கழுமலநாங்கருதுமூரே. (க)

கருத்துடையமறையவர்சேர்கழுமலமெய்த்தோணிபுரங்கனகமாட
வுருத்திகழ்வெங்குருப்புகலியோங்குதராயுலகாருங்கொச்சைகாழி
திருத்திகழுஞ்சிரபுரந்தேவேந்திரனூர்செங்கமலத்தயனூர்தெய்வத்
தருத்திகழும்பொழிற்புறவஞ்சண்பைசடைமுடியண்ணறங்குமூரே. (உ)

ஊர்மதியைக்கதுவவுயர்மதிற்சண்பையொளிமருவுகாழிகொச்சை
கார்மலியும்பொழில்புடைசூழ்கழுமலமெய்த்தோணிபுரங்கற்றோரேத்துஞ்
சீர்மருவுபூந்தராய்சிரபுரமெய்ப்புறவமயனூர்பூங்கற்பத்
தார்மருவுமிந்திரனூர்புகலிவெங்குருக்கங்கைதரித்தோனூரே. (ங)

தரித்தமறையாளர்மிகுவெங்குருச்சீர்த்தோணிபுரந்தரியாரிஞ்சி
யெரித்தவன்சேர்கழுமலமேகொச்சைபூந்தராய்புகலியிமையோர்கோனூர்
தெரித்தபுகழ்ச்சிரபுரஞ்சீர்திகழ்காழிசண்பைசெழுமறைகளெல்லாம்
விரித்தபுகழ்ப்புறவம்விரைக்கமலத்தோனூருலகில்விளங்குமூரே. (ச)

விளங்கயனூர்பூந்தராய்மிகுசண்பைவேணுபுரமேகமேய்க்கு
மிளங்கமுகம்பொழிற்றோணிபுரங்காழியெழிற்புகலிபுறவமேரார்
வளங்கவரும்வயற்கொச்சைவெங்குருப்பாச்சிரபுரமவனஞ்சமுண்டு
களங்கமலிகளத்தவன்சீர்க்கழுமலங்காமனுடல்காய்ந்தோனூரே. (ரு)

காய்ந்துவருங்காலனையன்றுதைத்தவனூர்கழுமலமாத்தோணிபுரஞ்சீ
ரேய்ந்தவெங்குருப்புகலியிந்திரனூரிருங்கமலத்தயனூரின்பம்
வாய்ந்தபுறவந்திகழுஞ்சிரபுரம்பூந்தராய்கொச்சைகாழிசண்பை
சேந்தனைமுன்பயந்துலகிற்றேவர்கடம்பகைகெடுத்தோன்றிகழுமூரே. (சா)

திகழ்மாடமலிசண்பைபூந்தராய்பிரமனூர்காழிதேசார்
மிகுதோணிபுரந்திகழும்வேணுபுரம்வயங்குகொச்சைபுறவம்விண்ணோர்
புகழ்புகலிகழுமலஞ்சீர்ச்சிரபுரம்வெங்குருவெம்போர்மகிடற்செற்று
நிகழ்நீலிநின்மலன்றனடியிணைகள்பணிந்துலகினிதுறவூரே. (எ)

நின்றமதில்சூழ்தருவெங்குருத்தோணிபுரந்திகழும்வேணுமன்றி
லொன்றுகழுமலங்கொச்சையுயர்காழிசண்பைவளர்புறவமோடி
சென்றுபுறங்காக்குமூர்சிரபுரம்பூந்தராய்புகலிதேவர்கோனூர்
வென்றிமலிபிரமபுரம்பூதங்கடாங்காக்கமிக்கவூரே. (அ)

மிக்ககமலத்தயனூர்விளங்குபுறவஞ்சண்பைகாழிகொச்சை
தொக்கபொழிற்கழுமலநற்றோணிபுரம்பூந்தராய்சிலம்பன்சேரூர்
மைகொண்மொய்ம்பொழில்வேணுபுரமதிற்புகலிவெங்குருவல்லரக்கன்றிண்டோ
ளொக்கவிருபதுமுடிகளொருபதுமீடழித்துகந்தவெம்மானூரே. (கூ)

எம்மான்சேர்வெங்குருச்சீர்ச்சிலம்பனூர்கழுமலநற்புகலியென்றும்
பொய்ம்மாண்பிலோர்புறவங்கொச்சைபுரந்தரனூர்நற்றோணிபுரம்போர்க்
கைம்மாவையுரிசெய்தோன்காழியயனூர்தராய்சண்பைகாரின்
மெய்ம்மால்பூமகனுணராவகைதழலாய்விளங்கியவெம்மிறைவனூரே. (கo)

இறைவனமர்சண்பையெழிற்புறவமயனூரிமையோர்க்கதிபன்சேரூர்
குறைவில்புகழ்ப்புகலிவெங்குருத்தோணிபுரங்குணமார்பூந்தராய்நீர்ச்
சிறைமலிநற்சிரபுரஞ்சீர்க்காழிவளர்கொச்சைகழுமலந்தேசின்றிப
பறிதலையோடமண்கையர்சாக்கியர்கள்பரிசறியாவம்மானூரே. (கக)

அம்மான்சேர்கழுமலமாசிரபுரம்வெங்குருகொச்சைபுறவஞ்சீர்
மெய்ம்மானத்தொண்புகலிமிகுகாழிதோணிபுரந்தேவர்கோனூ
ரம்மான்மன்னுயர்சண்பைதராயயனூராவழிமடக்குமாவின்பாய்ச்ச
றம்மானென்றியஞானசம்பந்தன்றமிழ்கற்போர்தக்கோர்தாமே. (கஉ)

திருச்சிற்றம்பலம்.

---

75

சீகாழி - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம

விண்ணியங்குமதிக்கண்ணியான்விரியுஞ்சடைப்
பெண்ணயங்கொடிருமேனியான்பெருமானனற்
கண்ணயங்கொடிருநெற்றியான்கலிக்காழியுண்
மண்ணயங்கொண்மறையாளரேத்துமலர்ப்பாதனே. (க)

வலியகாலனுயிர்வீட்டினான்மடவாளொடும
பலிவிரும்பியதோர்கையினான்பரமேட்டியான்
கலியைவென்றமறையாளர்தங்கலிக்காழியு
ணலியவந்தவினைதீர்த்துகந்தவெம்நம்பனே. (உ)

சுற்றலாநற்புலித்தோலசைத்தயன்வெண்டலைத்
துற்றலாய்தொருகொள்கையான்சுடுநீற்றனா
கற்றலகேட்டலுடையார்கள்வாழ்கலிக்காழியுண்
மற்றயங்குதிரடோளெம்மைந்தனவனல்லனே. (௩)

பல்லயங்குதலையேந்தினான்படுகானிடை
மல்லயங்குதிரடோளனாரடமாடியுங்
கல்லயங்குதிரைசூழ்நீள்கலிக்காழியுட
டொல்லயங்குபுகழ்பேணநின்றசுடர்வண்ணனே. (௪)

தூநயங்கொடிருமேனியிற்பொடிபூசிப்போய்
நாநயங்கொண்மறையோதிமாதொருபாகமாக்
கானயங்கொள்புனல்வாசமார்கலிக்காழியுட்
டேனயங்கொண்முடியானைநாடியசெல்வனே (௫)

சுழியிலங்கும்புனற்கங்கையாள்சடையாகவே
மொழியிலங்கும்மடமங்கைபாகமுகந்தவன்
கழியிலங்குங்கடல்சூழ்ந்ததண்கலிக்காழியுட்
பழியிலங்குந்துயரொன்றிலாப்பரமேட்டியே. (௬)

முடியிலங்குமுயர்சிந்தையான்முனிவர்தொழ
வடியிலங்குங்கழலார்க்கவேயனலேந்தியுங்
கடியிலங்கும்பொழில்சூழ்ந்ததண்கலிக்காழியுட்
கொடியிலங்கும்மிடையாளொடுங்குடிகொண்டதே. (௭)

வல்லரக்கன்வரைபேர்க்கவந்தவன்றோண்முடி
கல்லரக்கிவ்விறல்வாட்டினான்கலிக்காழியு

ணல்லொருக்கியதோர்சிந்தையார்மலர்தூவவே
தொல்லிருக்குமமறையேத்துகந்துடன்வாழுமே (அ)

மருவுநான்மறையோனுமாமணிவண்ணனு
மிருவர்கூடியிசைந்தேத்தவேயெரியாய்நின்றா
வெருவநின்றதிரையோதமவராவியன்முத்தவை
கருவையார்வயற்சங்குசேர்கலிக்காழியே. (கூ)

நன்றியொன்றுமுணராதவன்சமண்சாக்கிய
ரன்றியங்கவர்சொன்னசொல்லவைகொளகிலான்
கன்றுமேதியிளங்கானல்வாழ்கலிக்காழியுள்
வென்றிசேர்வியன்கோயில்கொண்டவிடையாளனே. (கO)

கண்ணுமூன்றுமுடையாதிவாழ்கலிக்காழியு
ளண்ணலந்தண்ணருள்பேணிஞானசம்பந்தன்சொல்
வண்ணமூன்றுந்தமிழிற்றெரிந்திசைபாடுவார்
விண்ணுமண்ணுமவிரிகினற்றொல்புகழாளரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

76

திருஅகத்தியான்பள்ளி - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

வாடியவெண்டலைமாலைசூடியயங்கிரு
ணீடெரிகொளவிளக்குமாநிவந்தெரி
யாடியவெம்பெருமானகத்தியான்பள்ளியைப்
பாடியசிந்தையினார்கட்கில்லையாம்பாவமே. (க)

துன்னங்கொண்டவுடையானதுதைந்தவெண்ணீற்றினன்
மன்னுங்கொன்றைமதமத்தஞ்சூடினன்மாநக
ரன்னந்தங்கும்பொழில்சூழகத்தியான்பள்ளியை
யுன்னஞ்செய்தமனத்தார்கடமவினையோடுமே (உ)

உடுத்ததுவும்புலித்தோல்பலிதிரிந்துண்பது
கடுத்துவந்தகழற்காலனைக்காலினா
லடுத்ததுவும்பொழில்சூழகத்தியான்பள்ளியா
னெடுத்ததுவுஞ்சரமுப்புரந்துகளாகவே (ங)

காய்ந்ததுவுமன்றுகாமனைநெற்றிக்கண்ணினாற்
பாய்ந்ததுவுங்கழற்காலனைப்பண்ணின்மறை
யாய்ந்ததுவும்பொழில்சூழகத்தியான்பள்ளியா
னேய்ந்ததுவுமிமவான்மகளொருபாகமே. (ச)

போர்த்ததுவுங்கரியின்னுரிபுலித்தோலுடை
கூர்த்ததோர்வெண்மழுவேந்திக்கோளரவமமரைக்
கார்த்ததுவும்பொழில்சூழகத்தியான்பள்ளியான்
பார்த்ததுவும்மரணம்படரெரிமூழ்கவே. (ரு)

தெரிந்ததுவுங்கணையொன்றுமுப்புரஞ்சென்றுட
னெரிந்ததுவுமுன்னெழிலார்மலருறைவான்றலை
யரிந்ததுவும்பொழில்சூழகத்தியான்பள்ளியான்
புரிந்ததுவுமமுமையாளோர்பாகம்புனைதலே. (சு)

ஓதியெல்லாமுலகுக்கோரொண்பொருளாகிமெய்ச்
சோதியென்றுதொழுவாரவர்துயர்தீர்த்திடு
மாதியெங்கள்பெருமானகத்தியான்பள்ளியை
நீதியினாற்றொழுவாரவர்வினைநீங்குமே. (எ)

செறுத்ததுவுந்தக்கன்வேள்வியைத்திருந்தார்புர
மெரித்ததுவுமொளிமாமலருறைவான்சிர
மறுத்ததுவும்பொழில்சூழகத்தியான்பள்ளியா
னிறுத்ததுவுமரக்கன்றன்றோள்களிருபதே. (அ)

சிரமுநல்லமதிமத்தமுந்திகழ்கொன்றையு
மரவமல்குஞ்சடையானகத்தியான்பள்ளியைப்
பிரமனுந்திருமாலுந்தேடியபெற்றிமை
பரவவல்லாரவர்தங்கண்மேல்வினைபாறுமே. (கூ)

செந்துவராடையினாரும்வெற்றரையேதிரி
புந்தியிலார்களும்பேசும்பேச்சவைபொய்ம்மொழி
யந்தணனெங்கள்பிரானகத்தியான்பள்ளியைச்
சிந்திமினும்வினையானவைசிதைந்தோடுமே. (க0)

ஞாலமல்குந்தமிழ்ஞானசம்பந்தன்மாமயிலாடுஞ்
சோலைபுடைசூழகத்தியான்பள்ளியுட்
சூலநல்லபடையானடிதொழுதேத்திய
மாலைவல்லாரவர்தங்கள்மேல்வினைமாயுமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருஅறையணிநல்லூர் - பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்.

பீடினாற்பெரியோர்களும்பேதைமைகெடத்தீதிலா
வீடினாருயர்ந்தார்களும்வீடிலாரிளவெண்மதி
சூடினார்மறைபாடினார்சுடலைநீறணிந்தாரழ
லாடினாரறையணிநல்லூரங்கையாற்றொழுவார்களே. (க)

இலையினார்சூலமேறுகந்தேறியேயிமையோர்தொழ
நிலையினாலொருகாலுறச்சிலையினான்மதிலெய்தவ
னலையினார்புனல்சூடியவண்ணலாரறையணிநல்லூர்
தலையினாற்றொழுதோங்குவார்நீங்குவார்தடுமாற்றமே. (உ)

என்பினார்கனல்சூலத்தாரிலங்குமாமதியுச்சிய
ரன்பினாற்பிறங்குஞ்சடைப்பிஞ்ஞகன்பிறப்பிலியென்று
முன்பினார்மூவாதார்தொழுமுக்கண்மூர்த்திதன்றாள்களுக்
கன்பினாரறையணிநல்லூரங்கையாற்றொழுவார்களே. (ங)

விரவுநீறுபொன்மார்பினில்விளங்கப்பூசியவேதிய
னுரவுநஞ்சமுதாகவுண்டுறுதிபேணுவதன்றியு
மரவுநீள்சடைக்கண்ணியாரண்ணலாரறையணிநல்லூர்
பரவுவார்பழிநீங்கிடப்பறையுந்தாஞ்செய்தபாவமே. (ச)

தீயினார்திகழ்மேனியாய்தேவர்தாந்தொழுதேவனீ
யாயினாய்கொன்றையாயனலங்கையாயறையணிநல்லூர்

மேயினார்தமதொல்வினைவீட்டினாய்வெய்யகாலனை
பாயினாயதிர்கழலினாய்பரமனேயடிபணிவனே. (௫)

விரையினார்கொன்றைசூடியும்வேதநாகமும்வீக்கிய
வரையினாரறையணிநல்லூரண்ணலாரழகாயதோர்
நரையினார்விடையூர்தியார்நக்கனார்நறும்போதுசே
ருரையினாலுயர்ந்தார்களுக்குரையினாலுயர்ந்தார்களே. (௬)

வீரமாகியவேதியர்வேகமாகளியானையின்
னீரமாகியவுரிவைபோர்த்தரிவைமேற்சென்றவெம்பிறை
யாரமாகியபாம்பினாரண்ணலாரறையணிநல்லூர்
வாரமாய்நினைப்பார்கடம்வல்வினையவைமாயுமே. (௭)

தக்கனார்பெருவேள்வியைத்தகர்த்துகந்தவன்றாழ்சடை
முக்கணான்மறைபாடியமுறைமையானமுனிவர்தொழ
வக்கினோடெழிலாமைபூணண்ணலாரறையணிநல்லூர்
நக்கனாரவர்சாரலானல்குசார்விலோநாங்களே. (௮)

வெய்யநோயிலர்தீதிலர்வெறியராய்ப்பிறர்பின்செலார்
செய்வதேயலங்காரமாமிவையிவைதேறியின்புறு
மையமேற்றுணுந்தொழிலராமண்ணலாரறையணிநல்லூர்ச்
சைவனாரவர்சார்வலால்யாதுஞ்சார்விலோநாங்களே. (௯)

வாக்கியஞ்சொல்லியாரொடும்வகையலாவகைசெய்யன்மின்
சாக்கியஞ்சமணென்றிவைசாரேலுமமரணம்பொடி
யாக்கியமழுவாட்படையண்ணலாரறையணிநல்லூர்ப்
பாக்கியங்குறையுடையீரேறபறையுமாறுசெய்தபாவமே. (௧௦)

கழியுலாங்கடற்கானல்சூழ்கழுமலமமர்தொல்பதிப்
பழியிலாமறைஞானசம்பந்தனல்லதோர்பண்பினார்
மொழியினாலறையணிநல்லூர்முக்கணமூர்த்திதன்றாடொழக்
கெழுவினாரவர்தம்மொடுங்கேடில்வாழ்பதிபெறுவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிளநகர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

ஒளிரிளம்பிறைசென்னிமேலுடையர்கோவணவாடையர்
குளிரிளமழைதவழ்பொழிற்கோலநீர்மல்குகாவிரி
நளிரிளம்புனல்வார்துறைநங்கைகங்கையைநண்ணினார்
மிளிரிளம்பொறியரவினார்மேயதும்விளநகரதே. (௧)

அக்கரவ்வணிகலனெனவதனோடார்த்ததோராமைபூண்
டக்கவர்சுடுநீறணிந்தொளிமல்குபுனற்காவிரிப்
புக்கவர்துயர்கெடுகெனப்பூசுவெண்பொடிமேவிய
மிக்கவர்வழிபாடுசெய்விளநகரவர்மேயதே. (௨)

வாளிசேரடங்கார்மதிற்றொலையநூறியவம்பின்வேய்த்
தோளிபாகமமர்ந்தவருயர்ந்ததொல்கடனஞ்சுடன்
காளமல்கியகண்டத்தார்கதிர்விரிசுடர்முடியினர்
மீளியேறுகந்தேறினார்மேயதுவிளநகரதே. (௩)

கால்விளங்கெரிகழலினார்கையிலங்கியவேலினார்
நூல்விளங்கியமார்பினார்நோயிலார்பிறப்புமிலார்
மால்விளங்கொளிமல்கியமாசிலாமணிமிடற்றினார்
மேல்விளங்குவெண்பிறையினார்மேயதுவிளநகரதே. (௪)

பன்னினார்மறைபாடினார்பாயசீர்ப்பழங்காவிரித்
துன்னுதண்டுறைமுன்னினார்தூநெறிபெறுவாரெனச்
சென்னிதிங்களைப்பொங்கராக்கங்கையோடுடன்சேர்த்தினார்
மின்னுபொன்புரிநூலினார்மேயதுவிளநகரதே (௫)

தேவருமமரர்களுந்திசைகண்மேலுளதெய்வமும்
யாவருமறியாததோரமரியாற்றழலுருவினார்
மூவருமவரென்னவு முதல்வருமவரென்னவு
மேவரும்பொருளாயினார்மேயதுவிளநகரதே. (௬)

சொற்றருமறைபாடினார்சுடர்விடுஞ்சடைமுடியினார்
கற்றருவடங்கையினார்காவிரித்துறைகாட்டினார்
மற்றருந்திரடோளினார்மாசில்வெண்பொடிப்பூசினார்
விற்றருமணிமிடற்றினார்மேயதுவிளநகரதே. (௭)

படர்தருஞ்சடைமுடியினார்பைங்கழலடிபரவுவா
ரடர்தருமபிணிகெடுமெனவருளுவாரரவரையினார்
விடர்தரும்மணிமிடற்றினார்மின்னுபொன்புரிநூலினார்
மிடறருமபடைமழுவினார்மேயதுவிளநகரதே. (௮)

கையிலங்கியவேலினார்தோலினார்கரிகாலினார்
பையிலங்கரவல்குலாளபாகமாகியபரமனார்
மையிலங்கொளிமல்கியமாசிலாமணிமிடற்றினார்
மெய்யிலங்குவெண்ணீற்றினார்மேயதுவிளநகரதே. (௯)

உள்ளதன்றனைக்காண்பன்கீழென்றமாமணிவண்ணனும்
உள்ளதன்றனைக்காண்பன்மேலெனற்றமாமலரண்ணலும்
உள்ளதன்றனைக்கண்டிலாரொளியார்தருஞ்சடைமுடியின்மேல்
உள்ளதன்றனைக்கண்டிலாவொளியார்விளநகர்மேயதே. (௧௦)

மென்சிறைவண்டியாழ்முரல்விளநகர்த்துறைமேவிய
நன்பிறைநுதலண்ணலைச்சண்பைஞானசம்பந்தன்சீ
ரின்புறுதமிழார்சொன்னவேத்துவார்வினைநீங்கிப்போய்த்
துன்புறுதுயரம்மிலர்தூநெறிபெறுவார்களே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருவாரூர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பவனமாய்ச்சோடையாய்நாவெழாப்பஞ்சுதோய்ச்சட்டவுண்டு
சிவனதாட்சிந்தியாப்பேதைமார்போலநீவெள்கினேயே
கவனமாய்ப்பாய்வதோரேறுகந்தேறியகாளகண்ட
னவனதாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே. (௧)

தந்தையார்போயினார்தாயரும்போயினார்தாமும்போவார்
கொந்தவேல்கொண்டொருகூற்றத்தார்பார்க்கின்றார்கொண்டுபோவா

ரெந்தநாள்வாழ்வதற்கேமனம்வைத்தியாலேழைநெஞ்சே
யந்தணாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே. (௨)

நிணங்குடர்தோனரம்பென்புசேராக்கைதானிலாயதன்றுற
குணங்களார்க்கல்லதுகுற்றநீங்காதெனக்குலுங்கிளையே
வணங்குவார்வானவர்தானவர்வைகலுமணங்கொடேத்தநா
மணங்கனாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே. (௩)

நீதியால்வாழ்கிலைநாள்செலாநின்றனசித்தநோய்கள
வாதியாவாதலானாளினைப்போக்கருவினையே
சாதியாகின்னரர்கருமனுமவருணாகமேளத்துமுக்க
ளாதியாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே. (௪)

பிறவியால்வருவனகேடுளவாதலாற்பெரியவின்பத்
துறவியாகச்சொலத்தானடநீங்காதெனத்தாங்கிளையே
மறவனீமாரகமேனணிணிறுய்நீத்தநீமலகுசென்னி
யறவனாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே. (௫)

செடிகொணோயாக்கையம்பாம்பின்வாய்த்தேரைவாய்ச்சிறுபறவைக
கடிகொள்பூந்தேன்சுவைத்தின்புறலாமென்றுகருதினுயே
முடிகளால்வானவர்முன்பணிந்தன்பராயேத்துமுக்க
ணடிகளாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே. (௬)

ஏறுமாலியானையேசிவிகையந்தளகமீசசோப்பிவட்டில
மாறிவாழுடம்பினர்படுவதோர்நடலைக்குமயங்கினுயே
மாறிலாவனமுலைமங்கையோர்பங்கினர்மதியம்வைத்த
வாறனாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே. (௭)

என்பினாற்கழிநிரைத்திறைச்சிமண்சுவரெறிந்ததுநம்மில்லம்
புன்புலால்நாறுதோல்போர்த்துப்பொல்லாமையால்முகடுகொண்டு
முன்பெலாமொன்பதுவாசலார்குரம்பையில்மூழ்கிடாதே
யன்பனாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே. (௮)

தந்தைதாய்தன்னுடன்றோன்றினார்புத்திரர்தாரமென்னும்
பந்தநீங்காதவர்க்குய்ந்துபோக்கில்லெனப்பற்றினாயே
வெந்தநீறாடியாராதியார்சோதியார்வேதகீத
ரெந்தையாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே (௯)

நெடியமாலபிரமனுநீண்டுமண்ணிடந்தின்னநேடிக்காணுப
படியனார்பவளம்போலுருவனார்பனிவளர்மலையாள்பாக
வடிவனார்மதிபொதிசடையனார்மணியணிகண்டத்தெண்டோ
ளடிகளாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே. (௰)

பல்லிதழ்மாதவியல்லிவண்டியாழ்செயுங்காழியூர
னல்லவேநல்லவேசொல்லியஞானசம்பந்தனாரூ
ரெல்லியம்போதெரியாடுமெம்மீசனையேத்துபாடல்
சொல்லவேவல்லவர்தீதிலாரோதநீர்வையகத்தே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

**திருக்கடவூர்மயானம் - பண் - காந்தாரம்.**

திருச்சிற்றம்பலம்.

வரியமறையார்பிறையார்மலையோர்சிலையாவணக்கி
யெரியமதில்களெய்தாரெறியுமுசலமுடையார்

கரியமிடறுமுடையார்கடவூர்மயானமமர்ந்தார்
பெரியவிடைமேல்வருவாரவரெம்பெருமானடிகளே. (க)

மங்கைமணந்தமார்பாமழுவாள்வலனொன்றேந்திக்
கங்கைசடையிற்கரந்தார்கடவூர்மயானமமர்ந்தார்
செங்கணவெள்ளேறேறிச்செல்வஞ்செய்யாவருவா
ரங்கையேறியமறியாரவரெம்பெருமானடிகளே. (உ)

ஈடல்இடவமிசையவேறிமாறுவொன்றேந்திக்
காடிடமாவுடையார்கடவூர்மயானமமர்ந்தார்
பாடல்இசைகொள்கருவிபடுதம்பலவும்பயில்வா
ராடலரவமுடையாரவரெம்பெருமானடிகளே. (ஙு)

இறைநின்றிலங்குவளையாளிளையாளொருபாலுடையார்
மறைநின்றிலங்குமொழியார்மலையார்மனத்தின்மிசையார்
கறைநின்றிலங்குபொழில்சூழ்கடவூர்மயானமமர்ந்தார்
பிறைநின்றிலங்குசடையாரவரெம்பெருமானடிகளே (ச)

வெள்ளையெருத்தின்மிசையார்விரிதோடொருகாதிலங்கத்
துள்ளுமிளமான்மறியார்சுடர்பொற்சடைகளிலங்கக்
கள்ளநகுவெண்டலையார்கடவூர்மயானமமர்ந்தார்
பிள்ளைமதியமுடையாரவரெம்பெருமானடிகளே. (ரு)

பொன்றுந்திருமணங்கொள்புனைபூங்கொன்றைபுனைந்தா
ரொன்றுவெள்ளையுயர்த்தவுடையார்துவையூர்வார்
கன்றுவினைசூழ்புறவிற்கடவூர்மயானமமர்ந்தார்
பின்றுமுசடையாரொருவரவரெம்பெருமானடிகளே. (சா)

பாசமானகளைவார்பரிவார்க்கமுதமனையா
ராசைதீரக்கொடுப்பாரலங்கல்விடைமேல்வருவார்
காசைமலர்போல்மிடற்றார்கடவூர்மயானமமர்ந்தார்
பேசவருவாரொருவரவரெம்பெருமானடிகளே. (எ)

செற்றவரக்கனலறத்திகழ்சேவடிமெல்விரலாற்
கற்குன்றடர்த்தபெருமான்கடவூர்மயானமமர்ந்தார்
மற்றொன்றிணையில்வலிமையாமாவெள்ளிமலைபோற
பெற்றொன்றேறிவருவாரவரெம்பெருமானடிகளே (அ)

வருமாகரியினுரியார்வளர்புன்சடையார்விடையார்
கருமானுரிதோலுடையார்கடவூர்மயானமமர்ந்தார்
திருமாலொடுநான்முகனுந்தேர்ந்துங்காணமுன்னொண்ணாப்
பெருமானெனவுமவருவாரவரெம்பெருமானடிகளே. (கூ)

தூயவிடைமேல்வருவார்துன்னாருடையமதில்கள்
காயவேவச்செற்றார்கடவூர்மயானமமர்ந்தார்
தீயகருமஞ்சொல்லுஞ்சிறுபுன்தேரரமணர்
பேய்பேயெனவருவாரவரெம்பெருமானடிகளே. (கo)

மரவம்பொழில்சூழ்கடவூர்மன்னுமயானமமர்ந்த
வரவமசைத்தபெருமானகலமறியலாகா
பரவுமுறையேபயின்றுபந்தன்செஞ்சொன்மாலை
யிரவும்பகலும்பரவிநினைவார்வினைகளிலரே. (கக)

---

திருச்சிற்றம்பலம்.

அல்லலின்றிவிண்ணாள்வர்கள்காழியர்க்கதிப
னல்லசெந்தமிழ்வல்லவன்ஞானசம்பந்த
னெல்லையில்புகழ்மல்கியவெழில்வளர்தேவூர்த்
தொல்லைநம்பனைச்சொல்லியபத்தும்வல்லாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கோச்சைவயம் - பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

நீலநன்மாமிடற் றிறைவன்சினத்தநெடுமாவுரித்தநிகரில
சேலனகண்ணிவண்ணமொருகூறுருகக்கொடிகழ்ந்தவனமேவுபதிதான
வேலனகண்ணிமார்கள்விளையாடுமோசைவிழவோசைவேதவொலியின
சாலநல்வேலையோசைதருமாடவீதிகொடியாடுகொச்சைவயமே. (க)

விடையுடையப்பனொப்பினடமாடவல்லவிகிர்தத்துருக்கொள்விமலன்
சடையிடைவெள்ளெருக்கமலர்கங்கைதிங்கள்தகவைத்தசோதிபதிதான
மடையிடையன்னமெங்குநிறையப்பரந்துகமலத்துவைகும்வயல்சூழ் [யமே
கொடையுடைவண்கையாளர்மறையோர்களென்றுநிலவாளர்நின்றகொச்சைவ

படவரவாடுமுன்கையுடையானிடும்பைகளைவிக்குமெங்கள்பரம
னிடமுடைவெண்டலைக்கைப்பலிகொள்ளுமின்பனிடமாயவேர்கொள்பதிதா
னடமிடமஞ்ஞைவண்டுமதுவுண்டுபாடநளிர்சோலைகோலுகனக
குடமிடுகூடமேறிவளர்பூவைநல்லமறையோதுகொச்சைவயமே (ங)

எண்டிசைபாலரெங்குமிகலிப்புகுந்துமுயல்வுற்றசிந்தைமுடுகிப்
பண்டொளிதீபமாலையிடுதூபமோடுபணிவுற்றபாதர்பதிதான்
மண்டியவண்டன்மிண்டிவருநீரபொன்னிவயல்பாயவாளைகுழுமிக்
குண்டகழ்பாயுமோசைபடநீடுதெங்கின்வளர்கின்றகொச்சைவயமே. (ச)

பணிவளர்மாமலைக்குமருகன்குபேரனொருதோழன்மைந்தனொருவ
னிணையனவல்லவற்றையினிதாகநல்குமிறைவனிடங்கொள்பதிதான
முனிவர்கடொக்குமிக்கமறையோர்களோமம்வளர்த்தம்மமொழியவ்விக
குணிமதிமூடிநீடுயர்வானமறைத்துநிறைகின்றகொச்சைவயமே. (ரு)

புலியதள்கோவணங்களுடையாடையாகவுடையானினைக்குமளவி
னலிதருமுப்புரங்களெரிசெய்தநாதனலமாவிருந்தநகர்தான
கலிகெடவந்தணாளர்கலைமேவிசிந்தையுடையார்நிறைந்துவளரப்
பொலிதருமண்டபங்களுயர்மாடநீடுவரைமேவுகொச்சைவயமே. (கூ-எ)

மழைமுகில்போலுமேனியடல்வாளரக்கன்முடியோடுதோள்கணெரியப
பிழைகெடமாமலர்ப்பொன்னடிவைத்தபேயொடுடனாடிமேயபதிதா
னிழைவளரல்குன்மாதரிசைபாடியாடவிடுமூசலன்னகமுகின
குழைதருகண்ணிவிண்ணில்வருவார்கடங்களடிதேடுகொச்சைவயமே (அ)

வண்டமர்பங்கயத்துவளர்வானுமவையமுழுதுண்டமாலுமிகலிக்
கண்டிடவொண்ணுமென்றுகிளறிப்பறந்துமறியாதசோதிபதிதா
னண்டுணநாரைசெந்நெடுவேயிருந்துவிரைதேரப்போதுமலிவிற்
புண்டரிகங்களோடுகுமுதம்மலர்ந்துவயன்மேவுகொச்சைவயமே. (கூ)

கையினிலுண்டுமேனியுதிர்மாசர்குண்டரிடுசீவரத்திலுடையார்
மெய்யுரையாதவண்ணமவிளையாடவல்லவிகிர்தத்துருக்கொள்விமலன்

பையுடைநாகவாயிலெயிறாரமிக்ககுரவம்பயின்றுமலரச்
செய்யினினீலமொட்டுவிரியக்கமழ்ந்துமணநாறுகொச்சைவயமே. (௧௦)

இறைவனையொப்பிலாதவொளிமேனியானையுலகங்களேழுமுடனே
மறைதருவெள்ளமேறிவளர்கோயின்மன்னியினிதாவிருந்தமணியைக்
குறைவிலஞானமேவுகுளிர்பந்தன்வைத்ததமிழ்மாலைபாடுமவர்போ
யறைகழலீசனாளுநகர்மேவியென்றுமழகாவிருப்பதறிவே. (௧௧)

---

திருச்சிற்றம்பலம்.

திருநனிபள்ளி-பண்-பியந்தைக்காந்தாரம்-பாலைநெய்தல் பாடியருளியது.

திருச்சிற்றம்பலம்.

காரைகள்கூகைமுல்லைகளவாகையீகைபடர்தொடரிகள்ளிகவினிச
சூரைகள்பம்மிவிம்முசுடுகாடமர்ந்தசிவன்மேவுசோலைநகர்தான்
றேரைகளாரைசாயமிதிகொள்ளவாளைகுதிகொள்ளவள்ளைதுவள
நாரைகளாரல்வாரவயன்மேதிவைகுநனிபள்ளிபோலுநமர்காள். (௧)

சடையிடைபுக்கொடுங்கியுளதங்கொர்வெள்ளமவளர்திங்கள்கண்ணியயலே
யிடையிடைவைத்ததொத்தமலர்தொத்துமாலையிறைவன்றனிடங்கொள்பதிதா
மடையிடைவாளைபாயமுகிழ்வாய்நெரிந்துமணநாறுநீலமலருந [ன
நடையுடையன்னம்வைகுபுனலம்படப்பைநனிபள்ளிபோலுநமர்காள் (௨)

பெறுமலர்கொண்டுதொண்டர்வழிபாடுசெய்யலொழிபாடிலாதபெருமான்
கறுமலர்கண்டமாகவிடமுண்டகாளையிடமாயகாதனகர்தான்
வெறுமலர்தொட்டுவிட்டவிசைபோனகொம்பின்விடுபோதலர்ந்தவிரைசூழ்
நறுமலரல்லிபுல்லியொலிவண்டுறங்குநனிபள்ளிபோலுநமர்காள். (௩)

குளிர்தருகங்கைதங்குசடைமாடிலங்குதலைமாலையோடரவமொ
ளிர்தருதிங்கள்சூடியுமைபாகமாகவுடையானுகந்தநகர்தான்
குளிர்தருகொம்மலோடுகுயில்பாடல்கேட்டபெடைவண்டுதானுமுரல
நளிர்தருசோலைமாலைநரைகுருகுவைகுநனிபள்ளிபோலுநமர்காள் (௪)

தோடொருகாதனாகியொருகாதிலங்குசுரிசங்குநின்றுபுரளக்
காடிடமாகநின்றுகனலாடுமெந்தையிடமாயகாதனகர்தான்
வீடுடனெய்துவார்கள்விதியென்றுசென்றுவெறிநீர்தெளிப்பவிரலா
ஞடுடனாடுசெம்மையொலிவெள்ளமாருநனிபள்ளிபோலுநமர்காள் (௫)

மேகமோடோடுதிங்கண்மலராவணிந்துமலையான்மடந்தைமணிபொன்
னாகமோர்பாகமாகவனலாடுமெந்தைபெருமானமர்ந்தநகர்தா
னூகமோடாடுமந்தியுகளுஞ்சிலம்பவகிலுந்தியொண்பொனிடறி
நாகமோடாரம்வாருபுனல்வந்தலைக்குநனிபள்ளிபோலுநமர்காள். (௬)

தகைமலிதண்டுசூலமனலுமிழ்நாகங்கொடுகொட்டிவீணைமுரல
வகைமலிவன்னிகொன்றைமதமத்தம்வைத்தபெருமானுகந்தநகர்தான்
புகைமலிகந்தமாலைபுனைவார்கள்பூசல்பணிவார்கள்பாடல்பெருகி
* நகைமலிமுத்திலங்குமணல்சூழ்கிடக்கைநனிபள்ளிபோலுநமர்காள். (௭)

வலமிகுவாளன்வேலன்வளைவாளெயிற்றுமதியாவரக்கன்வலியோ
டுலமிகுதோள்களொல்கவிரலாலடர்த்தபெருமானுகந்தநகர்தா

---

* பாலைநெய்தல்பாடியது-இந்த நான்காவது சரணத்தால் விளங்குகின்றது. எவ்வா றென்னில், முத்துகள் விளங்கு மணல்சூழ்ந்த நிலமென்றதனாலென்க. பாலைநெய்தலை பாடியதும்-பாம்பழியப்பாடியதும்-என்னுந் திருவெண்பாவாலுமுணர்க.

ளிலமிகுகீழுமேனிநிகராதுமில்லையெனநின்றநீதியதனை
நலமிகுதொண்டர்நாளுமடிபரவல்செய்யுநனிபள்ளிபோலுநமர்காள். (அ)

நிறவுருவொன்றுதோன்றியெரியொன்றிநின்றதொருநீர்மைசீர்மைநினையா
ரறவுருவேதநாவனயனோடுமாலுமறியாதவண்ணணகர்தான்
புறவிரிமுல்லைமௌவல்குளிர்பிண்டிபுன்னைபுனைகொன்றைதுன்றுபொதுளி
நறவிரிபோதுதாதுபுதுவாசநாறுநனிபள்ளிபோலுநமர்காள். (௯)

அனமிகுசெல்குசோறுகொணர்கென்றுகையிலிடவுண்டுபட்டவமணும
மனமிகுகஞ்சிமண்டையதிலுண்டுதொண்டர்குணமின்றிநின்றவடிவும்
வினைமிகுவேதநான்கும்விரிவித்தநாவின்விடையானுகந்தநகர்தா
னனைமிகுதொண்டர்நாளுமடிபரவல்செய்யுநனிபள்ளிபோலுநமர்காள். (௧௦)

கடல்வரையோதமல்குகழிகானல்பானல்கமழ்காழியென்றுகருதப
படுபொருளாறுநாலுமுபதேசமாகவுடையானைஞானமுனிவ
னிடுமறையொன்றவத்தாமியலமேவிருக்கினிசையாலுரைத்தபதுவ
னடுவிருளாடுமெந்தைநனிபள்ளியுள்கவினைகெடுதலாணைநமதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## வேயுறுதோளி - பண் - பியந்தைக்காந்தாரம்

### திருச்சிற்றம்பலம்

வேயுறுதோளிபங்கனவிடமுண்டகண்டன்மிகநல்லவீணைதடவி
மாசறுதிங்கள்கங்கைமுடிமேலணிந்தெனுளமேபுகுந்தவதனா
ஞாயிறுதிங்கள்செவ்வாய்புதன்வியாழம்வெள்ளிசனிபாம்பிரண்டுமுடனே
யாசறுநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (௧)

என்பொடுகொம்பொடாமையிவைமார்பிலங்கவெருதேறியேழையுடனே
பொன்பொதிமத்தமாலைபுனல்சூடிவந்தெனுளமேபுகுந்தவதனா
* லொன்பதொடொன்றொடேழுபதினெட்டொடாறுமுடனாயநாள்களவைதா
மன்பொடுநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (௨)

உருவளர்பவளமேனியொளிநீறணிந்துமையோடும்வெள்ளைவிடைமேன்
முருகலர்கொன்றைதிங்கள்முடிமேலணிந்தெனுளமேபுகுந்தவதனாற்
றிருமகள்கலையதூர்திசெயமாதுபூமிதிசைதெய்வமானபலவு
மருநெதிநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (௩)

மதிநுதன்மங்கையோடுவடபாலிருந்துமறையோதுமெங்கள்பரம
னதியொடுகொன்றைமாலைமுடிமேலணிந்தெனுளமேபுகுந்தவதனாற்
கொதியுறுகாலனங்கிநமனோடுதூதர்கொடுநோய்களானபலவு
மதிகுணநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (௪)

நஞ்சணிகண்டனெந்தைமடவாடனோடும்விடையேறுமெங்கள்பரமன்
றுஞ்சிருள்வன்னிகொன்றைமுடிமேலணிந்தெனுளமேபுகுந்தவதனால்
வெஞ்சினவவுணரோடுமுருமிடியுமின்னுமிகையானபூதமவையு
மஞ்சிடுநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (௫)

**வாள்வரியதளதாடைவரிகோவணத்தர்மடவாடனோடுமுடனாய்**
**நாண்மலர்வன்னிகொன்றைநதிசூடிவந்தெனுளமேபுகுந்தவதனாற்**
**கோளரியுழுவையோடுகொலையானைகேழல்கொடுநாகமோடுகரடி**
**யாளரிநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே.** (௬)

இடமயிலன்னசாயன்மடமங்கைதன்கையெதிர்நாணிபூணவரையிற்
கடுமையிலமபுகோத்துவெயில்செற்றுகந்துவமரர்க்களித்ததலைவன்
மடமயிலூர்திதாதையெனநின்றுதொண்டர்மனநின்றமைந்தன்மருவுந
நடமயிலாலநீடுகுயில்கூவுசோலைநறையூரினம்பனவனே. (உ)

சூடகமுன்கைமங்கையொருபாகமாகவருள்காரணங்கள்வருவா
னீடகமானநோக்கியிடுபிச்சைகொண்டுபடுபிச்சனின்றுபரவத்
தோடகமாயோர்காதுமொருகாதிலங்குகுழைதாழவேழவுரிய
னாடகமாடவாடிமடவார்கள்பாடுநறையூரினம்பனவனே. (௩)

சாயனன்மாதோர்பாகன்விதியாயசோதிகதியாகநின்றகடவுள்
ளாயகமென்னுளாவந்தவருளாயசெல்வனிருளாயகண்டனவனித்
தாயெனநின்றுகந்ததலைவனவிரும்புமலையின்கணவந்துதொழுவார்
நாயகனென்றிறைஞ்சிமறையோர்கள்பேணுநறையூரினம்பனவனே. (௪)

நெதிபடுமெய்யமையநிறைசோலைசுற்றிநிகழம்பலத்தினடுவே
யதிர்படவாடவல்லவமராகமொருதனைமாசுற்றமாயவிறைவன்
மதிபடுசென்னிமன்னுசடைதாழவந்துவிடையேறியில்பலிகொள்வா
னதிபடவுந்திவந்துவயல்வாளைபாயுநறையூரினம்பனவனே. (௫)

கணிகையோர்சென்னிமன்னுமதுவன்னிகொன்றைமலர்துன்றுசெஞ்சடையி
பணிகையினமுன்னிலங்கவருவேடமனனுபலவாகிநின்றபரமன [னுன்
னணுகியவேதவோசையகிலங்கமாறின்பொருளானவாதியருளா
னணுகியதொண்டர்கூடிமலர்தூவியேத்துநறையூரினம்பனவனே. (௬)

ஒளிர்தருகின்றமேனியுருவெங்குமங்கமவையாரவாடலரவம்
மிளிர்தருகையிலங்கவனலேந்தியாடுமெவிகிர்தன்விடங்கொண்மிடறன்
றுளிதருசோலையாலைதொழின்மேவவேதமெழிலாரவென்றியருளுந
நளிர்மதிசேருமாடமடவாரகளாருநறையூரினம்பனவனே. (௭)

அடலெருதேறுகந்தவதிருங்கழற்களதிருஞ்சிலம்பொடிசையக்
கடவிடைநஞ்சமுண்டுகனிவுறநண்டன்முனிவுறநிலங்கையரைய
னுடலொடுதோளனைத்துமுடிபத்திறுத்துமிசைகேட்டிரங்கியொருவா
ணடலைகடர்த்துநல்கிநமையாளவல்லநறையூரினம்பனவனே. (௮)

குலமலர்மேவினானுமிகுமாயனானுமெதிர்கூடிநேடிநினைவுற்
றிலபலவெய்தொணாமையெரியாயுயர்ந்தபெரியாநிலங்குசடையன்
சிலபலதொண்டர்நின்றுபெருமைக்கள்பேசவருமைத்திகழ்ந்தபொழிலின்
னலமலர்சிந்தவாசமணநாறுவீதிநறையூரினம்பனவனே. (௯)

துவருறுகின்றவாடையுடல்போர்த்துழன்றவவர்தாமுமல்லசமணுங்
கவருறுசிந்தையாளருரைநீத்துகந்தபெருமான்பிறங்குசடையன
றவமலிபத்தர்சித்தர்மறையாளர்பேணமுறைமாதர்பாடிமருவுந
நவமணிதுன்றுகோயிலொளிபொன்செய்மாடநறையூரினம்பனவனே. (௧௦)

கானலுலாவியோதமெதிர்மல்குகாழிமிகுபந்தன்முந்தியுணர
ஞானமுலாவுசிந்தையடிவைத்துகந்தநறையூரினம்பனவனை
யீனமிலாதவண்ணமிசையாலுரைத்ததமிழ்மாலைபத்துநினைவார்
வானநிலாவவல்லர்நிலமெங்குநின்றுவழிபாடுசெய்யுமிகவே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருமுல்லைவாயில் - பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

துளிமண்டியுண்டுநிறம்வந்தகண்டனடமன்னுதுன்னுசுடரோ
டொளிமண்டியும்பருலகங்கடந்தவுமைபங்கனெங்களரனூர்
களிமண்டுசோலைகழனிக்கலந்தகமலங்கடங்குமதுவிற
றெளிமண்டியுண்டுசிறைவண்டுபாடுதிருமுல்லைவாயிலிதுவே. (௧)

பருவத்தில்வந்துபயனுற்றபண்பனயனைப்படைத்தபரம
னரவத்தொடங்கமவைகட்டியெங்குமரவிக்கநின்றவரனூ
ருருவத்தின்மிக்கவொளிர்சங்கொடிப்பியவையோதமோதவெருவித்
தெருவத்தில்வந்துசெழுமுத்தலைக்கொடிருமுல்லைவாயிலிதுவே. (௨)

வாராதநாடன்வருவார்தம்வில்லினுருமெல்கிநாளுமுருகில்
லாராதவின்பனகலாதவன்பனருண்மேவிநின்றவரனூர்
பேராதசோதிபிரியாதமார்பினலர்மேவுபேதைபிரியா
டீராதகாதனெதிநேரநீடுதிருமுல்லைவாயிலிதுவே. (௩)

ஒன்றொன்றொடொன்றுமொருநான்கொடைந்துமிருமூன்றொடேழுமுடனா
யன்றின்றொடென்றுமறிவானவர்க்குமறியாமைநின்றவரனூர் [றுகுழுமிச்
குன்றொன்றொடொன்றுகுலையொன்றொடொன்றுகொடியொன்றொடொன்
சென்றொன்றொடொன்றுசெறிவாய்நிறைந்ததிருமுல்லைவாயிலிதுவே. (௪)

கொம்பன்னமின்னினிடையாளோர்கூறன்விடைநாளுமேறுகுழக
னம்பன்னெமன்பன்மறைநாவன்வானின்மதியேறுசென்னியரனூ
ரம்பன்னவொண்கணவராடரங்கினணிகோபுரங்களழகார்
செம்பொன்னசெவ்விதருமாடநீடுதிருமுல்லைவாயிலிதுவே. (௫)

ஊனேறுவேலினுருவேறுகண்ணியொளியேறுகொண்டவொருவ
ஞனேறதேறியழகேறுநீறனரவேறுபூணுமவனூர்
மானேறுகொல்லைமயிலேறிவந்துகுயிலேறுசோலைமருவித்
தேனேறுமாவின்வளமேறியாடுதிருமுல்லைவாயிலிதுவே. (௬)

நெஞ்சாரநீடுநினைவாரைமூடுவினைதேயநின்றநிமல
னஞ்சாடுசென்னியரவாடுகையனனலாடுமேனியரனூர்
மஞ்சாருமாடமனைதோறுமையமுளதென்றுவைகிவரினுஞ்
செஞ்சாலிநெல்லின்வளர்சோறளிக்கொடிருமுல்லைவாயிலிதுவே. (௭)

வரைவந்தெடுத்தவலிவாளரக்கன்முடிபத்துமிற்றுநெரிய
வுரைவந்தபொன்னினுருவந்தமேனியுமைபங்கனெங்கள்பரனூர்
வரைவந்தசந்தொடகிலுந்திவந்துமிளிர்கின்றபொன்னிவடபாற
றிரைவந்துவந்துசெறிதேறலாடுதிருமுல்லைவாயிலிதுவே. (௮)

மேலோடிநீடுவிளையாடன்மேவுவிரிநூலன்வேதமுதல்வன்
பாலாடுமேனிகரியானுமுன்னியவர்தேடநின்றபரனூர்
காலாடுநீலமலர்துன்றிநின்றகதிரேறுசெந்நெல்வயலிற்
சேலோடுவாளைகுதிகொள்ளமல்குதிருமுல்லைவாயிலிதுவே. (௯)

பனைமல்குதிண்கைமதமாவுரித்தபரமன்னநம்பனடியே
நினைவன்னசிந்தையடையாததேரரமண்மாயநின்றவரனூர்
வனமல்குகைதைவகுளங்களெங்குமுகுளங்களெங்குநெரியச்
சினைமல்குபுன்னைதிகழ்வாசநாறுதிருமுல்லைவாயிலிதுவே. (௧௦)

அணிகொண்டகோதையவண் ணன்றுமேத்தவருள்செய்தவெங்கைதமருவார்
திணிகொண்டமூன்றுபுரமெய்தவில்லிதிருமுலவாயிலிதன்மேற்
றணிகொண்டசிந்தையவர்காழிஞானமிகுபந்தனொண்டமிழ்களி
னணிகொண்டபத்துமிசைபாடுபத்தரகல்வானமாள்வர்மிகவே. (கக)

திருச்சிற்றம்பலம்.

திருக்கோச்சைவயம் - பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

அறையுமபூம்புனலோடுமாடரவச்சடைதன்மேற்
பிறையுஞ்சூடுவர்மார்பிற்பெண்ணொருபாகமமர்ந்தார்
மறையின்ஒலிமல்லொலியோவாமந்திரவேள்வியறாத
குறைவிலந்தணர்வாழுங்கொச்சைவயமமர்ந்தாரே. (க)

சுண்ணத்தர்தோலொடுநூல்சேர்மார்பினர்துன்னியபூதக
கண்ணத்தாவெங்கனலேந்திக்கங்குனின்றாடுவர்கேடி
லெண்ணத்தர்கேள்விநல்வேள்வியறாதவர்மாலெரியோம்பும
வண்ணத்தவந்தணர்வாழுங்கொச்சைவயமமர்ந்தாரே (உ)

பாலையன்னவெண்ணீறுபூசுவர்பல்சடைதாழ
மாலையாடுவர்கீதமாமறைபாடுதன்மகிழ்வர்
வேலைமால்கடலோதம்வெண்டிரைகரைமிசைவிளங்குங்
கோலமாமணிசிந்துங்கொச்சைவயமமர்ந்தாரே. (ங)

கடிகொள்கூவிளமத்தங்கமழ்சடைநெடுமுடிக்கணிவர்
பொடிகள்பூசியமார்பிற்புனைவர்நன்மங்கையோர்பங்கர்
கடிகொணீடொலிசங்கினொலியொடுகலையொலிதுதைந்து
கொடிகளோங்கியமாடக்கொச்சைவயமமர்ந்தாரே. (ச)

ஆடன்மாமதியுடையாராயினபாரிடஞ்சூழ
வாடல்வெண்டலையேந்திவையகமிடுபலிக்குழல்வ
ராடன்மாமடமஞ்ஞையணிதிகழ்பேடையோடாடிக்
கூடுதண்பொழில்சூழ்ந்தகொச்சைவயமமர்ந்தாரே. (டு)

மண்டுகங்கையுமரவுமல்கியவளர்சடைதன்மேற
றுண்டவெண்பிறையணிவர்தொல்வரைவில்லதுவாக
விண்டதானவரரணமவ்வழலெரிகொளவிடைமேற்
கொண்டகோலமதுடையார்கொச்சைவயமமர்ந்தாரே. (கூ-எ)

அன்றவானிழலமர்ந்துவறவுரைநால்வர்க்கருளிப
பொன்றினார்தலையோட்டிலுண்பதுபொருகடலிலங்கை
வென்றிவேந்தனையொல்கவூன்றியவிரலினர்வான்றோய்
குன்றமன்னபொன்மாடக்கொச்சைவயமமர்ந்தாரே. (அ)

சீர்கொண்மாமலரானுஞ்செங்கண்மாலென்றிவரேத்த
வேர்கொள்வெவ்வழலாகியெங்குமுறநிமிர்ந்தாரும
பார்கொள்விண்ணழல்கானீர்ப்பண்பினர்பான்மொழியோடுங
கூர்கொள்வேல்வலனேந்திக்கொச்சைவயமமர்ந்தாரே. (கூ)

குண்டர்வண்டுவராடைபோர்த்ததோர்கொள்கையினார்கண்
மிண்டர்பேசியபேச்சுமெய்யலமையணிகண்டன்
பண்டைநம்வினைதீர்க்கும்பண்பினரொண்கொடியோடுங்
கொண்டல்சேர்மணிமாடக்கொச்சைவயமமர்ந்தாரே. (கo)

கொந்தணிபொழில்சூழ்ந்தகொச்சைவயநகர்மேய
வந்தணனடியேத்துமருமறைஞானசம்பந்தன்
சந்தமார்ந்தழகாயதண்டமிழ்மாலைவல்லோர்போய்
முந்திவானவரோடும்புகவலர்முனைகெடவினையே. (கக)

திருச்சிற்றம்பலம்.

திருநெல்வாயில் திரு அரத்துறை - பண்பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

எந்தையீசனெம்பெருமானேறமர்கடவுளென்றேத்திச்
சிந்தைசெய்பவர்க்கல்லால்சென்றுகைகூடுவதன்றாற்
கந்தமாமலருந்திக்கடும்புனனிவாமல்குகரைமே
லந்தண்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (க)

ஈரவார்சடைதன்மேலிளம்பிறையணிந்தவெம்பெருமான்
சீருஞ்செல்வமுமேத்தாச்சிதடர்கடொழச்செல்வதன்றால்
வாரிமாமலருந்திவருபுனனிவாமல்குகரைமே
லாருஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (உ)

* பிணிகலந்தபுன்சடைமேற்பிறையணிசிவனெனப்பேணிப்
பணிகலந்துசெய்யாதபாவிகடொழச்செல்வதன்றான்
மணிகலந்துபொன்னுந்திவருபுனனிவாமல்குகரைமே
லணிகலந்தநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (ங)

துன்னவாடையொன்றுடுத்துத்தூயவெண்ணீற்றினராகி
யுன்னிநைபவர்க்கல்லாலொன்றுங்கைகூடுவதன்றாற்
பொன்னுமாமணியுந்திப்பொருபுனனிவாமல்குகரைமே
லன்னமாருநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (ச)

வெருகுரிஞ்சுவெங்காட்டிலாடியவிமலனென்றுள்கி
யுருகிநைபவர்க்கல்லாலொன்றுங்கைகூடுவதன்றான்
முருகுரிஞ்சுபூஞ்சோலைமொய்ம்மலர்சுமந்திழிநிவாவந்
தருகுரிஞ்சுநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (ரு)

உரவுநீர்ச்சடைக்கரந்தவொருவனென்றுள்குளிர்ந்தேத்திப்
பரவிநைபவர்க்கல்லாற்பரிந்துகைகூடுவதன்றாற்
குரவநீடுயர்சோலைக்குளிர்புனனிவாமல்குகரைமே
லரவமாருநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (சு)

நீலமாமணிமிடற்றுநீறணிசிவனெனப்பேணுஞ்
சீலமாந்தர்கட்கல்லாற்சென்றுகைகூடுவதன்றாற்
கோலமாமலருந்திக்குளிர்புனனிவாமல்குகரைமே
லாலுஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (எ)

செழுந்தண்மால்வரையெடுத்தசெருவலியிராவணனலற
வழுந்தவூன்றியவிரலான்போற்றியென்பார்க்கல்லதருளான்
கொழுங்கனிசுமந்துந்திக்குளிர்புனனிவாமல்குகரைமே
லழுந்துஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (அ)

நுணங்குநூலயன்மாலுமிருவருநோக்கரியானை
வணங்கிநைபவர்க்கல்லால்வந்துகைகூடுவதன்றான்

* பிணி - கட்டுதல்.

மணங்கமழ்ந்துபொன்னுந்திவருபுனனிவாமல்குகரைமே
லணங்குஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (௯)

சாக்கியப்படுவாருஞ்சமண்படுவார்களுமற்றும்
பாக்கியப்படகில்லாப்பாவிகடொழச்செல்வதன்றாற்
பூக்கமழ்ந்துபொன்னுந்திப்பொருபுனனிவாமல்குகரைமே
லார்க்குஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (௧0)

கறையினார்பொழில்சூழ்ந்தகாழியுண்ஞானசம்பந்த
னறையும்பூம்புனல்பரந்தவரத்துறையடிகடம்மருளை
முறைமையாற்சொன்னபாடன்மொழியுமாந்தர்தம்வினைபோய்ப்
பறையுமையுறவில்லைபாட்டிவைபத்தும்வல்லார்க்கே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருமறைக்காடு - பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

பொங்குவெண்மணக்கானற்பொருகடற்றிரைதவழ்முத்தங்
கங்குலாரிருள்போழுங்கலிமறைக்காடமர்ந்தார்தாந்
திங்கள்சூடினரேனுந்திரிபுரமெரித்தனரேனு
மெங்குமெங்கள்பிரானார்புகழலதிகழ்பழியிலரே. (௧)

கூனிளம்பிறைசூடிக்கொடுவரித்தோலுடையாடை
யானிலங்கிளர்ந்துமாடுவர்பூண்பதுமரவங்
கானலங்கழியோதங்கரையொடுகதிர்மணிதும்பத்
தேனலங்கமழ்சோலைத்திருமறைக்காடமர்ந்தாரே. (௨)

நுண்ணிதாய்வெளிதாகிநூல்கிடந்திலங்குபொன்மார்பிற்
பண்ணியாழெனமுரலும்பணிமொழியுமையொருபாகன்
றண்ணிதாயவெள்ளருவிசலசலநுரைமணிததும்பக்
கண்ணிதானுமோர்பிறையார்கலிமறைக்காடமர்ந்தாரே. (௩)

ஏழைவெண்குருகயலேயிளம்பெடைதனதெனக்கருதித்
தாழைவெண்மடற்புல்குந்தண்மறைக்காடமர்ந்தார்தா
மாழையங்கயலொண்கண்மலைமகள்கணவனதடியி
னீழலேசரணாகநினைபவர்வினைநலிவிலரே. (௪)

அரவமவீக்கியவரையுமதிர்கழறழுவியவடியும்
பரவநாஞ்செய்தபாவம்பறைதரவருளுவர்பதிதான்
மரவநீடுயர்சோலைமழலைவண்டியாழ்செயுமறைக்காட்
டிரவுமெல்லியும்பகலுமேத்துதல்குணமெனலாமே. (௫)

பல்விலோடுகையேந்திப்பாடியுமாடியும்பலிதே
ரல்லல்வாழ்க்கையரேனுமழகியதறிவரெம்மடிகள்
புல்லமேறுவர்பூதம்புடைசெலவழிதர்வர்க்கிடமா
மல்குவெண்டிரையோதமாமறைக்காடதுதானே. (௬)

நாகந்தானகயிறாகநளிர்வரையதற்குமத்தாகப்
பாகந்தேவரொடசுரர்படுகடலளறெழக்கடைய
வேகஞ்செழவாங்கேவெருவொடுமிரிந்தெங்குமோட
வாகந்தன்னில்வைத்தமிர்தமாக்குவித்தான்மறைக்காடே. (௭)

தக்கன்வேள்வியைத்தகர்த்தோன்றனதொருபெருமையையோரான்
மிக்குமேற்சென்றுமலையையெடுத்தலுமலைமகணடுங்க
நக்குத்தன்றிருவிரலாலூன்றலுநடுநடுந்தரக்கன்
பக்கவாயும்விட்டலறப்பரிந்தவன்பதிமறைக்காடே. (௮)

விண்டமாமலரோனுமவிளங்கொளியரவணையானும்
பண்டுங்காண்பரிதாயபரிசினனவனுறைபதிதான்
கண்டலங்கழியோதங்கரையொடுகதிர்மணிததும்ப
வண்டலங்கமழ்சோலைமாமறைக்காடதுதானே. (௯)

பெரியவாகியகுடையும்பீலியுமவைவெயிற்கரவாக்
கரியமண்டைகையேந்திக்கல்லெனவுழிதருங்கழுக்க
ளரியவாகவுண்டோதுமவர்திறமொழிந்துநம்மடிகள்
பெரியசீர்மறைக்காடேபேணுமின்மனமுடையீரே. (௰)

மையுலாம்பொழில்சூழ்ந்தமாமறைக்காடமர்ந்தாரைக்
கையினாற்றொழுதெழவல்லகாழியுண்ஞானசம்பந்தன்
செய்தசெந்தமிழ்பத்துஞ்சிந்தையுட்சேர்க்கவல்லார்போய்ப்
பொய்யில்வானவரோடும்புகவலர்கொள்வர்புகழே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்புகலூர் வர்த்தமானீச்சரம் - பண் - பியந்தைக்காந்தாரம்

திருச்சிற்றம்பலம்.

பட்டம்பானிறமதியம்படர்சடைச்சுடர்விடுமணி
நட்டநள்ளிருளாடுநாதனார்நவின்றுறைகோயில்
புட்டன்பேடையோடாடும்பூம்புகலூர்த்தொண்டர்போற்றி
வட்டஞ்சூழ்ந்தடிபரவும்வர்த்தமானீச்சரத்தாரே. (௧)

முயல்வளாவியதிங்கள்வாண்முகத்தரிவையிற்றெரிவை
பயில்வளாவியதுடையவின்னமிர்தெந்தையெம்பெருமான்
கயல்வளாவியகழனிக்கருநிறக்குவளைகண்மலரும்
வயல்வளாவியபுகலூர்வர்த்தமானீச்சரத்தாரே. (௨)

தொண்டர்தண்கயமூழ்கித்துணையலுஞ்சாந்தமும்புகையுங்
கொண்டுகொண்டடிபரவிக்குறிப்பறிமுருகன்செய்கோலங்
கண்டுகண்டுகண்குளிரக்களிபரந்தொளிமல்குகள்ளார்
வண்டுபண்செயும்புகலூர்வர்த்தமானீச்சரத்தாரே (௩)

பண்ணவண்ணத்தராகிப்பாடலோடாடலறாத
விண்ணவண்ணத்தராயவிரிபுகலூரரோர்பாகம்
பெண்ணவண்ணத்தராகும்பெற்றியோடாணிணைபிணைந்த
வண்ணவண்ணத்தெம்பெருமான்வர்த்தமானீச்சரத்தாரே. (௪)

ஈசனேறமர்கடவுளின்னமிர்தெந்தையெம்பெருமான்
பூசுமாசில்வெண்ணீற்றர்பொலிவுடைப்பூம்புகலூரின்
மூசுவண்டறைகொன்றைமுருகன்முப்போதுஞ்செய்முடிமேல்
வாசமாமலருடையார்வர்த்தமானீச்சரத்தாரே. (௫)

தளிரிளங்கொடிவளரத்தண்கயமிரியவண்டேறிக்
கிளரிளம்முழைநுழையக்கிழிதருபூம்புகலூரி
லுளரிளஞ்சுனைமலருமொளிதருசடைமுடியதன்மேல்
வளரிளம்பிறையுடையார்வர்த்தமானீச்சரத்தாரே. (௬)

தென்சொல்விஞ்சமர்வடசொற்றிசைமொழியெழினரம்பெடுத்துத்
துஞ்சுநெஞ்சிருணீங்கத்தொழுதெழுதொல்புகலூரி
லஞ்சனம்பிதிர்ந்தனையவலைகடல்கடையவன்றெழுந்த
வஞ்சநஞ்சணிகண்டர்வர்த்தமானீச்சரத்தாரே. (எ)

சாமவேதமோர்கீதமோதியத்தசமுகன்பரவு
நாமதேயமதுடையார்நன்குணர்ந்தடிகளென்றேத்தக்
காமதேவனைவேவக்கனலெரிகொளுவியகண்ணார்
வாமதேவர்தண்புகலூர்வர்த்தமானீச்சரத்தாரே. (அ)

சீரணங்குறநின்றசெருவுறுதிசைமுகனோடு
நாரணன்கருத்தழியநகைசெய்தசடைமுடிநம்ப
ராரணங்குறுமுமையையஞ்சுவித்தருள்பொருட்டால்
வாரணத்துரிபோர்த்தார்வர்த்தமானீச்சரத்தாரே. (௯)

கையிலுண்டுழல்வாருங்கமழ்துவராடையினுடம்பை
மெய்யைப்போர்த்துழல்வாருமுரைப்பனமெய்யெனவிரும்பேற்
செய்யில்வாளைகள்பாயுஞ்செங்கயல்குதிகொளும்புகலூர்
மைகொள்கண்டத்தெம்பெருமான்வர்த்தமானீச்சரத்தாரே. (௰)

பொங்குதண்புனல்சூழ்ந்தபோதணிபொழிற்புகலூரின்
மங்குன்மாமதிதவழும்வர்த்தமானீச்சரத்தாரைத்
தங்குசீர்திகழ்ஞானசம்பந்தன்றண்டமிழ்பத்து
மெங்குமேத்தவல்லார்களெய்துவரிமையவருலகே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருந்தெங்கூர் - பண் - பியந்தைக்காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

புரைசெய்வல்வினைதீர்க்கும்புண்ணியர்விண்ணவர்போற்றக்
கரைசெய்மால்கடனஞ்சையுண்டவர்கருதலர்புரங்க
ளிரைசெய்தாரழலூட்டியுழல்பவரிடுபலிக்கெழிலார்
விரைசெய்பூம்பொழிற்றெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (௧)

சித்தந்தன்னடிநினைவார்செடிபடுகொடுவினைதீர்க்குங்
கொத்தின்றாழ்சடைமுடிமேற்கோளெயிற்றரவொடுபிறையன்
பத்தர்தாம்பணிந்தேத்தும்பரம்பரன்பைம்புனல்பதித்த
வித்தன்றாழ்பொழிற்றெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (௨)

அடையும்வல்வினையகலவருள்பவரனலுடைமழுவாட்
படையர்பாய்புலித்தோலர்பைம்புனற்கொன்றையர்படர்புன்
சடையில்வெண்பிறைசூடித்தார்மணியணிதருதறுகண்
விடையர்வீங்கெழிற்றெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (௩)

பண்டுநான்செய்தவினைகள்பறையவோர்நெறியருள்பயப்பார்
கொண்டல்வான்மதிசூடிக்குரைகடல்விடமணிகண்டர்
வண்டுமாமலரூதிமதுவுணவிதழ்மறிவெய்தி
விண்டவார்பொழிற்றெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (௪)

சுழித்தவார்புனற்கங்கைசூடியோர்காலனைக்காலாற்
றெழித்துவானவர்நடுங்கச்செற்றவர்சிறையணிபறவை
கழித்தவெண்டலையேந்திக்காமனதுடல்பொடியாக
விழித்தவர்திருத்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (௫)

தொல்லைவல்வினைதீர்ப்பார்சுடலைவெண்பொடியணிசுவண்ட
ரெல்லிசூடிநின்றாடுமிறையவரிமையவரேத்தச்
சில்லைமால்விடையேறித்திரிபுரந்தீயெழச்செற்ற
வில்லினார்திருத்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே (சு)

நெறிகொள்சிந்தையராகிநினைபவர்வினைகெடநின்றார்
முறிகொண்மேனிமுக்கண்ணர்முளைமதிநடுநடுதிலங்கப
பொறிகொள்வாளரவணிந்தபுண்ணியர்வெண்பொடிபூசி
வெறிகொள்பூம்பொழிற்றெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (எ)

எண்ணிலாவிறலரக்கனெழிறிகழ்மால்வரையெடுக்கக்
கண்ணெலாம்பொடிந்தறக்கால்விரலூன்றியகருத்தர்
தண்ணுலாம்புனற்கன்னிதயங்கியசடைமுடிச்சதுரர்
விண்ணுலாம்பொழிற்றெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (அ)

தேடித்தானயன்மாலுந்திருமுடியடியிணைகாணார்
பாடத்தான்பலபூதப்படையினர்சுடலையிற்பலரா
லாடத்தான்மிகவல்லரருச்சுனற்கருள்செயக்கருதும
வேடத்தார்திருத்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (கூ)

சடங்கொள்சீவரப்போர்வைச்சாக்கியர்சமணர்சொற்றவிர
விடங்கொள்வல்வினைதீர்க்குமேத்துமினிருமருப்பொருகைக்
கடங்கொண்மால்களிற்றுரியர்கடல்கடைந்திடக்கனன்றெழுந்த
விடங்கொள்கண்டத்தார்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. (க0)

வெந்தநீற்றினர்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரைக்
கந்தமார்பொழில்சூழ்ந்தகாழியுண்ஞானசம்பந்தன்
சந்தமாயினபாடற்றண்டமிழ்பத்தும்வல்லார்மேல்
பந்தமாயினபாவம்பாறுதறேறுதல்பயனே. (கக)

திருச்சிற்றம்பலம்.

94

## திருவாழ்கொளிபுத்தூர் - பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

சாகையாயிரமுடையார்சாமமுமோதுவதுடையா
ரீகையார்கடைநோக்கியிரப்பதும்பலபலவுடையார்
தோகைமாமயிலனையதுடியிடைபாகமுமுடையார்
வாகைநுண்டுளிவீசும்வாழ்கொளிபுத்தூருளாரே. (க)

எண்ணிலீரமுமுடையாரெத்தனையோரிவரறங்கள்
கண்ணுமாயிரமுடையார்கையுமோராயிரமுடையார்
பெண்ணுமாயிரமுடையார்பெருமையோராயிரமுடையார்
வண்ணமாயிரமுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. (உ)

நொடியோராயிரமுடையார்நுண்ணியராமவர்நோக்கும
வடிவுமாயிரமுடையார்வண்ணமுமாயிரமுடையார்
முடியுமாயிரமுடையார்மொய்குழலாளையுமுடையார்
வடிவுமாயிரமுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. (௩)

பஞ்சிநுண்டுகிலன்னபைங்கழற்சேவடியுடையார்
குஞ்சிமேகலையுடையார்கொந்தணிவேல்வலனுடையா
ரஞ்சும்வென்றவர்க்கணியாரானையினீருரியுடையார்
வஞ்சிநுண்ணிடையுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. (௪)

பரவுவாரையுமுடையார்பழித்திகழ்வாரையுமுடையார்
விரவுவாரையுமுடையார்வெண்டலைப்பலிகொள்வதுடையா
ரரவம்பூண்பதுமுடையாராயிரம்பேர்மிகவுடையார்
வரமுமாயிரமுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. (ரு)

தண்டுந்தாளமுங்குழலுந்தண்ணுமைக்கருவியும்புறவிற்
கொண்டபூதமுமுடையார்கோலமும்பலபலவுடையார்
கண்டுகோடலுமரியார்காட்சியுமரியதோர்கரந்தை
வண்டுவாழ்பதியுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. (சா)

மானவாழ்க்கையதுடையார்மலைந்தவர்மதிற்பரிசறுத்தார்
தானவாழ்க்கையதுடையார்தவத்தொடுநாம்புகழ்ந்தேத்த
ஞானவாழ்க்கையதுடையார்நள்ளிருண்மகளிர்நின்றேத்த
வானவாழ்க்கையதுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. (எ)

ஏழுமூன்றுமோர்தலைகளுடையவனிடர்படவடர்த்து
வேழவிசெற்றதும்விரும்பிவிருப்பவர்பலபலவுடையார்
கேழல்வெண்பிறையன்னகேழ்மணிமிடறுநின்றிலங்க
வாழிசாந்தமுமுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. (அ)

வென்றிமாமலரோனும்விரிகடற்றுயின்றவனானும்
என்றுமேத்துகையுடையாரிமையவர்துதிசெயவிரும்பி
முன்றின்மாமலர்வாசமுந்துமதிதவழ்பொழிற்றில்லை
மன்றிலாடலதுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. (கூ)

மண்டைகொண்டுழறேரர்மாசுடைமேனிவன்சமணர்
குண்டர்பேசியபேச்சுக்கொள்ளன்மின்றிகழொளிநல்ல
துண்டவெண்பிறைசூடிச்சுண்ணவெண்பொடியணிந்தெங்கும்
வண்டுவாழ்பொழில்சூழ்ந்தவாழ்கொளிபுத்தூருளாரே. (க0)

நலங்கொள்பூம்பொழிற்காழிநற்றமிழ்ஞானசம்பந்தன்
வலங்கொள்வெண்மழுவாளன்வாழ்கொளிபுத்தூருளானை
யிலங்குவெண்பிறையானையேத்தியதமிழிவைவல்லார்
நலங்கொள்சிந்தையராகிநன்னெறியெய்துவர்தாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருஅரைசிலி - பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பாடல்வண்டறைகொன்றைபான்மதிபாய்புனற்கங்கை
கோடல்கூவிளமாலைமத்தமுஞ்செஞ்சடைக்குலவி
வாடல்வெண்டலைமாலைமருவிடவல்லியந்தோன்மே
லாடன்மாசுணமசைத்தவடிகளுக்கிடமரைசிலியே. (க)

ஏறுபேணியதேறியிளமதக்களிற்றினையெற்றி
வேறுசெய்ததனுரிவைவெண்புலால்கலக்கமெய்போர்த்த
ஊறுதேனவனும்பர்க்கொருவனல்லொளிகொளொண்சுடரா
மாறுசேர்தருசென்னியடிகளுக்கிடமரைசிலியே. (உ)

கங்கைநீர்சடைமேலேகதமிகக்கதிரிளவனமென்
கொங்கையாளொருபாகமருவியகொல்லைவெள்ளேற்றன்

சங்கையாய்த்திரியாமேதன்னடியார்க்கருள்செய்து
வங்கையாலனலேந்துமடிகளுக்கிடமாவதரசிலியே. (ச)

மிக்ககாலனைவீட்டிமெய்கெடக்காமனைவிழித்துப
புக்கவூரிற்பிச்சையுண்பதுபொன்றிகழ்கொன்றை
தக்கநூறிகழ்மார்பிற்றவளவெண்ணீறணிந்தாமை
யக்கினாரமும்பூண்டவடிகளுக்கிடமாவதரசிலியே. (ரு)

மானஞ்சுமடநோக்கிமலைமகள்பாகமுமருவித்
தானஞ்சாவரணமூன்றுந்தழலெழச்சரமதுதுரந்து
வானஞ்சும்பெருவிடத்தையுண்டவன்மாமறையோதி
யானஞ்சாடியசென்னியடிகளுக்கிடமாவதரசிலியே. (சு)

பரியமாசுணங்கயிறாப்பருப்பதமதற்குமத்தாகப்
பெரியவேலையைக்கலங்கப்பேணியவானவர்கடையக்
கரியநஞ்சதுதோன்றக்கலங்கியவவர்தமைக்கண்டு
வரியவாரமிதாக்குமடிகளுக்கிடமாவதரசிலியே (எ)

வண்ணமால்வரைதன்னைமறித்திடலுற்றவல்லரக்கன்
கண்ணுந்தோளுநல்வாயுநெரிதரக்கால்விரலூன்றிப்
பண்ணினார்பாடலைக்கைநரம்பாற்பாடியபாடலைக்கேட்டு
அண்ணலாரருள்செய்தவடிகளுக்கிடமாவதரசிலியே. (அ)

குறியமாணுருவாகிக்குவலயமளந்தவனோடும்
வெறிகொடாமரைமேலவிரும்பியமெய்த்தவத்தோனுஞ்
செறிவொணாவகையெங்குந்தேடியதிருவடிகாண
வறிவொணாவுருவத்தெம்மடிகளுக்கிடமாவதரசிலியே. (கூ)

குருளையெய்தியமடவார்நிறமிவேகுஞ்சியைப்பறித்துந்
திரளைக்கையிலுண்பவருந்தேரருஞ்சொல்லியசொற்ப
பொருளைப்பொய்யிலிமெய்யெந்நாதனைப்பொன்னடிவணங்கு
மருளையாதரநல்குமடிகளுக்கிடமாவதரசிலியே. (கo)

அல்லிநீள்வயல்சூழ்ந்தவரசிலியடிகளைக்காழி
நல்லஞானசம்பந்தனற்றமிழ்ப்பத்திவையாருளுஞ்
சொல்லவல்லவர்தம்மைச்சூழ்ந்தமரர்கடொழுதேத்த
வல்லவானுலகெய்திவைகலுமகிழ்ந்திருப்பாரே (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## ஸ்ரீசீகாழி - பண் - பியந்தைக்காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

பொங்குவெண்புரிவளரும்பொற்புடைமார்பனெம்பெருமான்
செங்கணாடரவாட்டுஞ்செல்வனெஞ்சிவனுறைகோயில்
பங்கமில்பலமறைகள்வல்லவர்பத்தர்கள்பரவுந்
தங்குவெண்டிரைக்கானற்றண்வயற்காழிநன்னகரே. (க)

தேவர்தானவர்பரந்துதிண்வரைமால்கடனிறுவி
நாவதாயமிர்துண்ணநயந்தவரிரிந்திடக்கண்டு
ஆவவென்றருணஞ்சமுண்டவனமர்தருமூதூர்
காவலார்மதில்சூழ்ந்தகடிபொழிற்காழிநன்னகரே. (உ)

தீபமாலைதூபமுஞ்செறிந்தகையராகிநந்
தேவதேவன்மன்னுமூர்திருந்துகாழிசேர்மினே. (௨)

சோறுகூறையின்றியேதுவண்டுதூரமாய்நுமக்
கேறுசுற்றமெள்கவேயிடுக்கணுய்ப்பதன்முன
மாறிமோதசண்டையினுதியானைசெற்றவ
னாறுதேனமலர்ப்பொழிலணங்கொள்காழிசேர்மினே. (௩)

நச்சிநீர்பிறன்கடைநடந்துசெல்லநாளையு
முச்சிமேலுமுரையுமுணர்ந்துகேட்பதன்முனம்
பிச்சைசச்சரவரைப்பெரியசோதிபேணுவா
ரிச்சைசெய்யுமெம்பிரானெழில்கொளகாழிசேர்மினே. (௪)

கண்கள்காண்பொழிந்துமேனிகன்றியொன்றலாதநோ
யுண்கிலாதசெய்துநும்மையுய்த்தழிப்பதன்முனம்
விண்குலாவுதேவருய்யவேலைநஞ்சமுதுசெய்
கண்கண்மூன்றுடையவெங்கருத்தர்காழிசேர்மினே. (௫)

அல்லல்வாழ்க்கையுய்ப்பதற்கவத்தமேபிறந்துநீ
ரெல்லையில்பிணக்கினிற்கிடந்திடாதெழுமினோ
பல்லில்வெண்டலையினிற்பலிக்கியங்குபான்மையான்
கொல்லையேறதேறுவானகோலக்காழிசேர்மினே. (௬-௭)

பொய்மிகுத்தவாயராய்ப்பொறாமையோடுசொல்லுநீ
ரைமிகுத்தகண்டராயடுத்தரைப்பதன்முன
மைமிகுத்தமேனிவாளரக்கனைநெரித்தவன்
பைமிகுத்தபாம்பரைப்பரமர்காழிசேர்மினே. (௮)

காலினோடுகைகளுந்தளர்ந்துகாமநோய்தனு
வேலைவார்குழலினாரிகழ்ந்துரைப்பதன்முன
மாலினோடுநான்முகன்மதித்தவர்கள்காணிலா
நீலமேவுகண்டனூர்நிகழ்ந்தகாழிசேர்மினே. (௯)

நிலைவெறுத்தநெஞ்சமோடுநேசமில்புதல்வர்கண்
முலைவெறுத்தபோதொடங்கியேமுனிவதன்முனந்
தலைபறித்தகையர்தேரர்தாந்தரிப்பரியவன்
சிலைபிடித்தெயிலெய்தானிருந்தகாழிசேர்மினே. (௧௦)

தக்கனார்தலையரிந்தசங்கரன்றனதரை
யக்கினோடரவசைத்தவன்றிவண்ணர்காழியை
யொக்கஞானசம்பந்தனுரைத்தபாடல்வல்லவர்
மிக்கவின்பமெய்திவீற்றிருந்துவாழ்தன்மெய்ம்மையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

திருந்துருத்தி - திருவிராகம் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

வரைத்தலைப்பசும்பொனோடருங்கலன்களுந்திவந்
திரைத்தலைச்சுமந்துகொண்டெறிந்திலங்குகாவிரிக்
கரைத்தலைத்துருத்திபுக்கிருப்பதேகருத்தினை
யுரைத்தலைப்பொலிந்துனக்குணர்த்துமாறுவல்லமே. (௧)

அடுத்தடுத்தகத்தியோடுவன்னிகொன்றைகூவிளந்
தொடுத்துடன்சடைப்பெய்தாய்துருத்தியாயோர்காலனைக்
கடுத்தடிப்புறத்தினாலிறத்துதைத்தகாரண
மெடுத்தெடுத்துரைக்குமாறுவல்லமாகினல்லமே. (௨)

கங்குல்கொண்டதிங்களோடுகங்கைதங்குசெஞ்சடைச்
சங்கிலங்குவெண்குழைசரிந்திலங்குகாதினாய்
பொங்கிலங்குபூணநூலுருத்திராதுருத்திபுக்
கெங்குநின்னிடங்களாவடங்கிவாழ்வதென்கொலோ. (௩)

கருத்தினாலோர்காணியில்விருத்தியில்லைதொண்டர்த
மருத்தியாற்றமவல்லசொல்லையையமேற்பதன்றியு
மொருத்திபாலொருத்திவைத்துடம்புவிட்டியோகியா
யிருத்திநீதுருத்திபுக்கிதென்னமாயமென்பதே. (௪)

துறக்குமாசொலப்படாய்துருத்தியாய்திருந்தடி
மறக்குமாறிலாதவென்னைமையல்செய்திம்மண்ணின்மேற்
பிறக்குமாறுகாட்டினாய்பிணிப்படுமுடம்புவிட்
டிறக்குமாறுகாட்டினாய்க்கிழக்குகின்றதென்னையே. (௫)

வெயிற்கெதிர்ந்திடங்கொடாதகங்குளிர்ந்தபைம்பொழிற்
றுயிற்கெதிர்ந்தபுள்ளினங்கண்மல்குதண்டுருத்தியாய்
மயிற்கெதிர்ந்தணங்குசாயன்மாதொர்பாகமாகமு
வெயிற்கெதிர்ந்தோரம்பினாலெரித்தவில்லியல்லையே. (௬)

கணிச்சியம்படைச்செல்வர்கழிந்தவர்க்கொழிந்தசீர்
துணிச்சிரக்கிரந்தையாய்கரந்தையாய்துருத்தியா
யணிப்படுந்தனிப்பிறைப்பனிக்கதிர்க்கவாவுநன்
மணிப்படும்பைநாகநீமகிழ்ந்தவண்ணலல்லையே. (௭)

சுடப்பொடிந்துடம்பிழந்தனங்கனாயமன்மத
னிடர்ப்படக்கடந்திடந்துருத்தியாகவெண்ணினாய்
கடற்படையுடையவக்கடலிலங்கைமன்னனை
யடற்படவடுக்கலிலடர்த்தவண்ணலல்லையே. (௮)

களங்குளிர்ந்திலங்குபோதுகாதலானுமாலுமாய்
வளங்கிளம்பொனங்கழல்வணங்கிவந்துகாண்கிலார்
துளங்கிளம்பிறைச்செனித்துருத்தியாய்திருந்தடி
யுளங்குளிர்ந்தபோதெலாமுகந்துகந்துரைப்பனே. (௯)

புத்தர்தத்துவமிலாச்சமணுரைத்தபொய்தனை
யுத்தமமெனக்கொளாதுகந்தெழுந்துவண்டினந்
துத்தநின்றுபண்செயுஞ்சூழ்பொழிற்றுருத்தியெம்
பித்தன்பித்தனைத்தொழப்பிறப்பறுதல்பெற்றியே. (௧௦)

கற்றுமுற்றினார்தொழுங்கழுமலத்தருந்தமிழ்
சுற்றுமுற்றுமாயினானவன்பகர்ந்தசொற்களாற்
பெற்றமொன்றுயர்த்தவன்பெருந்துருத்திபேணவே
குற்றமுற்றுமின்மையிற்குணங்கள்வந்துகூடுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

னீறுபட்டகோலத்தானீலகண்டனிருவர்க்கும்
வேறுபட்டசிந்தையான்வீரட்டானஞ்சேர்துமே (௯)

குறிகொளாழிநெஞ்சமேகூறைதுவரிட்டார்களு
மறிவிலாதவமணர்சொல்லவத்தமாவதறிதிரேற்
பொறிகொள்வண்டுபண்செயும்பூந்தண்கோவலூர்தனில்
வெறிகொள்கங்கைதாங்கினான்வீரட்டானஞ்சேர்துமே. (௧௦)

கழியோடுலவுகானல்சூழ்காழிஞானசம்பந்தன்
பழிகடீரச்சொன்னசொற்பாவநாசமாதலா
லழிவிலீர்கொண்டேத்துமின்னந்தண்கோவலூர்தனில்
விழிகொள்பூதப்படையினான்வீரட்டானஞ்சேர்துமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

### திருவாரூர் - திருவிராகம் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பருக்கையானைமத்தகத்தரிக்குலத்துகிர்ப்புக
நெருக்கிவாய்நித்திலந்நிரக்குநீள்பொருப்பனூர்
கருக்கொள்சோலைசூழநீடுமாடமாளிகைக்கொடி
யருக்கன்மண்டலத்தணாவுமந்தணாரூரென்பதே. (௧)

விண்டவெள்ளெருக்கலர்ந்தவன்னிகொன்றைமத்தமு
மிண்டைகொண்டசெஞ்சடைமுடிச்சிவன்னிருந்தவூர்
கெண்டைகொண்டலர்ந்தகண்ணினார்கள்கீதவோசைபோ
யண்டரண்டமூடறுக்குமந்தணாரூரென்பதே. (௨)

கறுத்தநஞ்சமுண்டிருண்டகண்டர்காலனின்னுயிர்
மறுத்தமாணிதன்றனக்குவண்மைசெய்தமைந்தனூர்
வெறித்ததுமேதியோடிமூசுவள்ளைவெள்ளைநீள்கொடி
யறுத்துமண்டியாவிபாயுமந்தணாரூரென்பதே (௩)

அஞ்சுமொன்றியாறுவீசிநீறுபூசுமேனியிற்
குஞ்சியாரவந்திசெய்யவஞ்சலென்னிமன்னுமூர்
பஞ்சியாருமெல்லடிப்பணைத்தகொங்கைநுண்ணிடை
யஞ்சொலாரரங்கெடுக்குமந்தணாரூரென்பதே. (௪)

சங்குலாவுதிங்கள்சூடிதன்னையுன்னுவார்மனத்
தங்குலாவிநின்றவெங்களாதிதேவன்மன்னுமூர்
தெங்குலாவுசோலைநீடுதேனுலாவுசெண்பக
மங்குலாவியண்டநாறுமந்தணாரூரென்பதே. (௫)

கள்ளநெஞ்சவஞ்சகக்கருத்தைவிட்டருத்தியோ
டுள்ளமொன்றியுள்குவாருளத்துளானுகந்தவூர்
துள்ளிவாளைபாய்வயற்கரும்புலாவுநெய்தல்வா
யள்ளனாரையாரல்வாருமந்தணாரூரென்பதே. (௬)

கங்கைபொங்குசெஞ்சடைக்கரந்தகண்டர்காமனை
மங்கவெங்கணால்விழித்தமங்கைபங்கன்மன்னுமூர்
தெங்கினூடுபோகிவாழைகொத்திறுத்துமாவின்மே
லங்கண்மந்திமுந்தியேறுமந்தணாரூரென்பதே. (௭)

வரைத்தலமெடுத்தவன்முடித்தலைமுரத்தொடு
நெரித்தவன்புரங்கண்மூன்றெரித்தவனிருந்தவூர்
நிரைத்தமாளிகைத்திருவினேரனார்கள்வெண்ணகை
யரத்தவாய்மடந்தைமார்களாடுமாரூரென்பதே (அ)

இருந்தவன்கிடந்தவனிடந்துவிண்பறந்துமெய்
வருந்தியுமளப்பொணாதவானவன்மகிழ்ந்தவூர்
செருந்திஞாழல்புன்னைவன்னிசெண்பகஞ்செழுங்குரா
வரும்புசோலைவாசநாறுமந்தணாரூரென்பதே. (கூ)

பறித்தவெண்டலைக்கடுப்படுத்தமேனியர்தவம்
வெறித்தவேடன்வேலைநஞ்சமுண்டகண்டன்மேவுமூர்
மறிந்துமண்டுவண்டல்வாரிமண்டிநீர்வயற்செநெல்
லறுத்தவாய்கசும்புபாயுமந்தணாரூரென்பதே. (க0)

வல்லிசோலைசூழ்ந்துநீடுமன்னுவீதிபொன்னுலா
வலமதாமதந்திருந்தவந்தணாரூராதியை
நல்லசொல்லுஞானசம்பந்தனின்மன்னுமா
வல்லதொண்டர்வானமாளவல்லர்வாய்மையாகவே (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சிரபுரம் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்

அன்னமென்னடையரிவையோடினிதுறையமரர்தம்பெருமானார்
மின்னுசெஞ்சடைவெள்ளெருக்கம்மலர்வைத்தவர்வேதந்தாம
பன்னுநன்பொருள்பயந்தவர்பருமதிற்சிரபுரத்தார்சீரார்
பொன்னின்மாமலரடிதொழுமடியவர்வினையொடும்பொருந்தாரே (க)

கோலமாகரியுரித்தவரரவொடுமேனக்கொம்பிளவாமை
சாலப்பூண்டுதண்மதியதுசூடியசங்கரனார்தம்மைப்
போலத்தம்மடியார்க்குமின்பளிப்பவர்பொருகடல்விடமுண்ட
நீலத்தார்மிடற்றண்ணலார்சிரபுரந்தொழவினைநில்லாவே. (உ)

மானத்திண்புயவரிசிலைப்பார்த்தனைத்தவங்கெடமதித்தன்று
கானத்தேதிரிவேடனாயமர்செயக்கண்டருள்புரிந்தார்பூந்
தேனைத்தேர்ந்துசேர்வண்டுகடிரிதருஞ்சிரபுரத்துறையெங்கள்
கோனைக்கும்பிடுமடியரைக்கொடுவினைகுற்றங்கள்குறுகாவே. (௩)

மாணிதன்னுயிர்மதித்துணவந்தவக்காலனையுதைசெய்தார்
பேணியுள்குமெய்யடியவர்பெருந்துயர்ப்பிணக்கறுத்தருள்செய்வார்
வேணிவெண்பிறையுடையவர்வியன்புகழ்ச்சிரபுரத்தமர்கின்ற
வாணிப்பொன்னினையடிதொழுமடியவர்க்கருவினையடையாவே. (ச)

பாருநீரொடுபல்கதிரிரவியும்பனிமதியாகாசம்
மோரும்வாயுவுமொண்கனல்வேள்வியிற்றலைவனுமாய்நின்றார்
சேருஞ்சந்தனமகிலொடுவந்திழிசெழும்புனற்கோட்டாறு
வாருந்தண்புனல்சூழ்சிரபுரந்தொழுமடியவர்வருந்தாரே. (ரு)

ஊழியந்தத்திலொலிகடலோட்டந்திவ்வுலகங்களவைமூட
வாழியெந்தையெனறமரர்கள்சரண்புகவந்தரத்துயர்ந்தார்தாம

கங்கைசேர்தருசடையினார்கடிக்குளத்துறைதருகற்பகத்தை
யெங்குமேத்தினர்தினம்புகழுமடியவரையிடும்பைவந்தடையாவே (௩)

நீர்கொணீள்சடைமுடியனைநித்திலத்தொத்தினைநிகரில்லாப்
பார்கொள்பாரிடத்தவர்தொழும்பவளத்தைப்பசும்பொனைவிசும்பாருங்
கார்கொள்பூம்பொழில்சூழ்தருகடிக்குளத்துறையுங்கற்பகந்தனைச்
சீர்கொள்செல்வங்களேத்தவல்லார்வினைதேய்வதுதிண்ணமாமே. (௪)

சுரும்புசேர்சடைமுடியினன்மதியொடுதுன்னியதழனாக
மரும்புதாதவிழ்ந்தலர்ந்தனமலர்பலகொண்டடியவர்போற்றக்
கரும்புகார்மலிகொடிமிடைகடிக்குளத்துறைதருகற்பகத்தை
விரும்புவேட்கையோடுளமகிழ்ந்துரைப்பவர்விதியுடையவர்தாமே (௫)

மாதிலங்கியபாகத்தன்மதியமொடலைபுனலழனாகம்
போதிலங்கியகொன்றையுமத்தமும்புரிசடைக்கழகாகக்
காதிலங்கியகுழையினன்கடிக்குளத்துறைதருகற்பகத்தின்
பாதங்கைதொழுதேத்தவல்லார்வினைபற்றறக்கெடுமன்றே. (௬)

குலவுகோலத்தகொடிநெடுமாடங்கள்குழாம்பலகுளிர்பொய்கை
யுலவுபுள்ளினமன்னங்களாலிடம்பூவைசேருங்கூந்தற்
கலவைசேர்தருகண்ணியன்கடிக்குளத்துறையுங்கற்பகத்தைச்சீர்
நிலவிநின்றுநின்றேத்துவார்மேல்வினைநிற்கிலாதானே (௭)

மடுத்தவாளரக்கன்னவன்மலைதன்மேன்மதியிலாமையிலோடி
யெடுத்தலுமுடிதோள்கரநெரிந்திறவிறையவன்விரலூன்றக்
கடுத்துவாயொடுகையெடுத்தலறிடக்கடிக்குளந்தனின்மேவிக்
கொடுத்தபேரருட்கூத்தனையேத்துவார்குணமுடையவர்தாமே (௮)

நீரினார்கடற்றுயிலவனயனொடுநிகழ்முடிகாணார்
பாரினார்விசும்புறப்பரந்தெழுந்ததோர்பாலவன்றிறலாகிக்
காரினார்பொழில்சூழ்தருகடிக்குளத்துறையுங்கற்பகத்தின்றன்
சீரினார்கழலேத்தவல்லார்களைத்தீவினையடையாவே. (௯)

குண்டர்தம்மொடுசாக்கியர்சமணருங்குறியினின்னெறிநில்லா
மிண்டர்மிண்டுரைகேட்டவைமெய்யெனக்கொள்ளன்மின்விடமுண்ட
கண்டர்முண்டநன்மேனியர்கடிக்குளத்துறைதருமெம்மீசர்
தொண்டர்தொண்டரைத்தொழுதடிபணிமின்கணெறியெளிதாமே (௧௦)

தனமலிபுகழ்தயங்குபூந்தராயவர்மன்னனற்சம்பந்தன்
மனமலிபுகழ்வண்டமிழ்மாலைகண்மாலதாய்மகிழ்வோடுங்
கனமலிகடலோதமவந்துலவியகடிக்குளத்தமர்வானை
யினமலிந்திசைபாடவல்லார்கள்போயிறைவனோடுறைவாரே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கீழ்வேளூர் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்

மின்னுலாவியசடையினர்விடையினர்மிளிர்தருமரவோடும்
பன்னுலாவியமறையொலிநாவினர்கறையணிகண்டத்தார்
பொன்னுலாவியகொன்றையந்தாரினர்புகழ்மிகுகீழ்வேளூ
ருன்னுலாவியசிந்தையர்மேல்வினையோடிடவீடாமே. (௧)

## திருவலஞ்சுழி - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்

என்னபுண்ணியஞ் செய்தனை நெஞ்சமே யிருங்கடல் வையத்து
முன்னைநீபுரி நல்வினைப் பயனிடை முழுமணித் தரளங்கள்
மன்னுகாவிரி சூழ்திரு வலஞ்சுழி வாணனை வாயாரப்
பன்னியாதரித் தேத்தியும் பாடியும் வழிபடு மதனாலே. (க)

விண்டொழிந்தன நம்முடை வல்வினை விரிகடல் வருநஞ்ச
முண்டிறைஞ்சு வானவர் தமைத்தாங்கிய விறைவனைப் புவனத்தில்
வண்டுவார்குழன் மங்கையோர் பங்கனை வலஞ்சுழி யிடமாகக்
கொண்டநாதன் மெய்த்தொழிற்புரி தொண்டரோ டினிதிருந் தமையாலே. (உ)

திருந்தலார்புரந் தீயெழச் செறுவன விறலின கழலடியாரைப்
பரிந்துகாப்பன பத்தியில் வருவன மத்தமாம் பிணிநோய்க்கு
மருந்துமாவன மந்திர மாவன வலஞ்சுழி யிடமாக
விருந்தநாயக னிமையவ ரேத்திய விணையடித் தலந்தானே. (௩)

கறைகொள் கண்டத்தர் காய்கதிர் நிறத்தின ரறத்திற முனிவர்க்கன்
றிறையவ ராலிடை நீழலி லிருந்துகந் தினிதருள் பெருமானார்
மறைகளோதுவார் வருபுனல் வலஞ்சுழி யிடமகிழ்ந் தருங்கானத்
தறைகழல் சிலம்பார்க்க நின்றாடிய வற்புத மறியோமே. (௪)

மண்ணர் நீரர்விண் காற்றின ராற்றலா மெரியுரு வொருபாகம்
பெண்ணராண் எனத் தெரிவரு வடிவினர் பெருங்கடற் பவளம்போல்
வண்ணராகிலும் வலஞ்சுழி பிரிகிலார் பரிபவ மனம்புகப்
பெண்ணராகிலு மெனைப்பல வியம்புவ ரிணையடி தொழுவாரே. (௫)

ஒருவராலுவ மிப்பதை யரியதோர் மேனியர் மடமாத
ரிருவராதரிப் பார்பல பூதமும் பேய்களு மடையாள
மருவராததோர் வெண்டலை கைப்பிடித் தகந்தொறும் பலிக்கென்று
வருவரேலவர் வலஞ்சுழி யடிகளே வரிவளை கவர்ந்தாரே. (௬)

குன்றியூர் குடமூக்கிடம் வலம்புரங் குலவிய நெய்த்தான
மென்றிவ்வூர்களி லோமென் றியம்புவ ரிமையவர் பணிகேட்பா
ரன்றியூர் தமக் குள்ளன வறிகிலோம் வலஞ்சுழி யரனார்பாற்
சென்றவூர் தனிற் றலைப்படலா மென்று சேயிழை தளர்வாமே. (௭)

குயிலினேர்மொழிக் கொடியிடை வெருவுறக் குலவரைப் பரப்பாய
கயிலையைப் பிடித் தெடுத்தவன் கதிர்முடி தோளிருபது மூன்றி
மயிலினேரன சாயலோ டமர்ந்தவன் வலஞ்சுழி யெம்மானைப்
பயிலவல்லவர் பரகதி காண்பவ ரல்லவர் காணாரே. (௮)

அழலதோம்பிய அலர்மிசை யண்ணலு மரவணைத் துயின்றானுங்
கழலுஞ்சென்னியுங் காண்டற் கரியவ ரொருவர்மா மடக்கையின்
மழலையின்மொழி மகிழ்ந்திரு வலஞ்சுழி வலங்கொண்டு பாதத்தாற்
சுழலுமாந்தர்கள் தொல்வினை யதனொடு துன்பங்கள் களைவாரே. (௯)

அறிவிலாதவன் சமணர்கள் சாக்கியர் தவம்புரிந் தவஞ்செய்வார்
நெறியலாதன கூறுவர் மற்றவை தேறன்மின் மாறாநீர்
மறியுலாந்திரைக் காவிரி வலஞ்சுழி மருவிய பெருமானைப்
பிறிவிலாதவர் பெறுகதி பேசிடி லளவறுப் பொண்ணாதே. (௧௦)

மாதொர்கூறனைவலஞ்சுழிமருவியமருந்தினைவயற்காழி
நாதனைவேதியன்ஞானசம்பந்தனவாய்நவிற்றியதமிழ்மாலை
யாதரித்திசைகற்றுவல்லார்சொலக்கேட்டுகந்தவர்தம்மை
வாதியாவினைமறுமைக்குமிம்மைக்கும்வருந்தம்வந்தடையாவே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருக்கேதீச்சரம் - பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

விருதுகுன்றமாமேருவினாணரவாவனலெரியம்பாப்
பொருதுமூவெயில்செற்றவன்பற்றிநின்றுறைபதியெந்நாளுங்
கருதுகின்றவூர்கனைகடற்கடிகமழ்பொழிலணிமாதோட்டங்
கருதநின்றகேதீச்சரங்கைதொழக்கடுவினையடையாவே. (௧)

பாடல்வீணையர்பலபலசரிதையரெருதுகைத்தருநட்ட
மாடல்பேணுவரமரர்கள்வேண்டநஞ்சுண்டிருள்கண்டத்த
ரீடமாவதுவிருங்கடற்கரையினிலெழிறிகழ்மாதோட்டங்
கேடிலாதகேதீச்சரந்தொழுதெழக்கெடுமிடர்வினைதானே. (௨)

பெண்ணொர்பாகத்தர்பிறைதவழ்சடையினரறைகழல்சிலம்பார்க்கச்
சுண்ணமாதரித்தாடுவர்பாடுவரகந்தொறுமிடுபிச்சைக்
குண்ணலாவதோரிச்சையினுழல்பவருயர்தருமாதோட்டத்
தண்ணனண்ணுகேதீச்சரமடைபவர்க்கருவினையடையாவே. (௩)

பொடிகொண்மேனியர்புலியதளரையினர்விரிதருகரத்தேந்தும்
வடிகொண்மூவிலைவேலினர்நூலினர்மறிகடன்மாதோட்டத்
தடிகளாதரித்திருந்தகேதீச்சரம்பரிந்தசிந்தையராகி
முடிகள்சாய்த்தடிபேணவல்லார்தம்மேன்மொய்த்தெழும்வினைபோமே. (௪)

நல்லராற்றவுஞானநன்குடையர்தம்மடைந்தவர்க்கருளீய
வல்லர்பார்மிசைவான்பிறப்பிறப்பிலர்மலிகடன்மாதோட்டத்
தெல்லையில்புகழெந்தைகேதீச்சரமிராப்பகனினைந்தேத்தி
யல்லலாசறுத்தரனடியிணைதொழுமன்பராமடியாரே. (௫)

பேழைவார்சடைப்பெருந்திருமகள்தனைப்பொருந்தவைத்தொருபாக
மாழையங்கயற்கண்ணிபாலருளியபொருளினர்குடிவாழ்க்கை
வாழையம்பொழின்மந்திகள்களிப்புறமருவியமாதோட்டக்
கேழல்வெண்மருப்பணிந்தநீண்மார்பர்கேதீச்சரம்பிரியாரே. (௬)

பண்டுநால்வருக்கறமுரைத்தருளிப்பல்லுலகினிலுயிர்வாழ்க்கை
கண்டநாதனார்கடலிடங்கைதொழக்காதலித்துறைகோயில்
வண்டுபண்செயுமாமலர்ப்பொழின்மஞ்ஞைநடமிடுமாதோட்டந்
தொண்டர்நாடொறுந்துதிசெயவருள்செய்கேதீச்சரமதுதானே. (௭)

தென்னிலங்கையர்குலபதிமலைநலிந்தெடுத்தவன்முடிதிண்டோ
டன்னலங்கெடவடர்த்தவற்கருள்செய்ததலைவனார்கடல்வாயப்
பொன்னிலங்கியமுத்துமாமணிகளும்பொருந்தியமாதோட்டத்
துன்னியன்பொடுமடியவரிறைஞ்சுகேதீச்சரத்துள்ளாரே. (௮)

பூவுளானுமப்பொருகடல்வண்ணனும்புவியிடந்தெழுந்தோடி
மேவிநாடிநுன்னடியிணைகாண்கிலாவித்தகமென்னாகு

செங்கண்மாலொடுநான்முகன்றேடியுந்திருவடியறியாமை
யெங்குமாரெரியாகியவிறைவனையறைபுனன்முடியார்ந்த
வெங்கணமால்வரைக்கரியுரித்துகந்தவன்விற்குடிவீரட்டந்
தங்கையாற்றொழுதேத்தவல்லாரவர்தவமல்குகுணத்தாரே. (௯)

பிண்டமுண்டுழல்வார்களும்பிரிதுவராடையரவர்வார்த்தை
பண்டுமின்றுமோர்பொருளெனக்கருதன்மின்பரிவுறுவீர்கேண்மின்
விண்டமாமலர்ச்சடையவனிடமெனில்விற்குடிவீரட்டங்
கண்டுகொண்டடிகாதல்செய்வாரவர்கருத்துறுங்குணத்தாரே. (௧௦)

விலங்கலேசிலையிடமெனவுடையவன்விற்குடிவீரட்டத்
திலங்குசோதியையெம்பெருமான்றனையெழிறிகழ்கழல்பேணி
நலங்கொள்வாழ்பொழிற்காழியுண்ஞானசம்பந்தனற்றமிழ்மாலை
வலங்கொடேயிசைமொழியுமின்மொழிந்தக்கான்மற்றதுவரமாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கோட்டூர் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

நீலமார்தருகண்டனேநெற்றியோர்கண்ணனேயொற்றைவிடைச்
சூலமார்தருகையனேதுன்றுபைம்பொழில்கள்சூழ்ந்தழகாய
கோலமாமலர்மணங்கமழ்கோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவார்கள்
சாலநீளுலகத்திடைப்புகழ்மிகத்தாங்குவர்பாங்காலே. (௧)

பங்கயம்மலர்ச்சீறடிபஞ்சுறுமெல்விரலரவல்குன்
மங்கைமார்பலர்மயில்குயில்கிளியெனமிழற்றியமொழியார்மென்
கொங்கையார்குழாங்குணலைசெய்கோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவார்கள்
சங்கையொன்றிலராகிச்சங்கரன்றிருவருள்பெறலெளிதாமே. (௨)

நம்பனார்நல்லமலர்கொடுதொழுதெழுமடியவர்தமக்கெல்லாஞ்
செம்பொனார்தருமெழிறிகழ்முலையவர்செல்வமல்கியநல்ல
கொம்பனார்தொழுதாடியகோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவார்க
ளம்பொனார்தருமுலகினிலமரரோடமர்ந்தினிதிருப்பாரே. (௩)

பலவுநீள்பொழிற்றீங்கனிதேன்பலாமாங்கனிபயில்வாய
கலவமஞ்ஞைகணிலவுசொற்கிள்ளைகளன்னஞ்சேர்ந்தழகாய
குலவுநீள்வயற்கயலுகள்கோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவார்க
ணிலவுசெல்வத்தராகிநீணிலத்திடைநீடியபுகழாரே. (௪)

உருகுவாருள்ளத்தொண்சுடர்தனக்கென்றுமன்பராமடியார்கள்
பருகுமாரமுதெனநின்றுபரிவொடுபத்திசெய்தெத்திசையுங்
குருகுவாழ்வயல்சூழ்தருகோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவார்க
ளருகுசேர்தருவினைகளுமகலுமப்போயவனருள்பெறலாமே. (௫)

துன்றுவார்சடைத்தூமதிமத்தமுந்துன்னெருக்கார்வன்னி
பொன்றினார்தலைகலனொடுபரிகலம்புலியுரியுடையாடை
கொன்றைபொன்னெனமலர்தருகோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவாரை
யென்றுமேத்துவார்க்கிடரிலைகேடிலையேதமவந்தடையாவே. (௬)

மாடமாளிகைகோபுரங்கூடங்கண்மணியரங்கணிசாலை
பாடுசூழ்மதிற்பைம்பொன்செய்மண்டபம்பரிசொடுபயில்வாய

கூடுபூம்பொழில்சூழ்தருகோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவார்கள்
கேடதொன்றிலராகிநல்லுலகினில்கெழுவுவர்புகழாலே. (எ)

ஒளிகொள்வாளெயிற்றரக்கனவ்வுயர்வரையெடுத்தலுமுமையஞ்சச்
சுளியவூன்றலுஞ்சோர்ந்திடவாளொடுநாள்வறங்கருள்செய்த
குளிர்கொள்பூம்பொழில்சூழ்தருகோட்டூர்நற்கொழுந்தினைத்தொழுவார்கட்
டளிர்கொடாமரைப்பாதங்களருள்பெறுந்தவமுடையவர்தாமே. (அ)

பாடியாடுமெய்ப்பத்தர்கட்கருள்செயுமுதல்வனைப்பாவளந்தனைத்
தேடிமாலயன்காணவொண்ணாதவத்திருவினைத்தெரிவைமார்
கூடியாடவர்கைதொழுகோட்டூர்நற்கொழுந்தேயென்றெழுவார்க
ணீடுசெல்வத்தராகியிவ்வுலகினினிகழ்தருபுகழாரே. (கூ)

கோணல்வெண்பிறைச்சடையனைக்கோட்டூர்நற்கொழுந்தினைச்செழுந்திரளைப்
பூணல்செய்தடிபோற்றுமின்பொய்யிலாமெய்யனென்றருளென்றுங் [ப
காணலொன்றிலாக்காரமண்டேரர்குண்டர்கட்சொற்கருதாதே
பேணல்செய்தரனைத்தொழுமடியவர்பெருமையைப்பெறுவாரே. (கዐ)

பந்துலாவிரற்பவளவாய்த்தேன்மொழிப்பாவையோடுருவாருங்
கொந்துலாமலர்விரிபொழிற்கோட்டூர்நற்கொழுந்தினைச்செழும்பவளம்
வந்துலாவியகாழியுண்ஞானசம்பந்தனவாய்ந்துரைசெய்த
சந்துலாந்தமிழ்மாலைகள்வல்லவர்தாங்குவர்புகழாலே (கக)

திருச்சிற்றம்பலம்.

---

### திருமாந்துறை - பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

செம்பொனார்தருவேங்கையுஞாழலுஞ்செருந்திசெண்பகமானைக்
கொம்புமாரமுமாதவிசுரபுன்னைகுருந்தலர்போந்துந்தி
யம்பொன்னேர்வருகாவிரிவடகரைமாந்துறையுறைகின்ற
வெம்பிரானிமையோர்தொழுபைங்கழலேத்துதல்செய்வோமே. (க)

விளவுதேனொடுசாதியின்பலங்களுமவேய்மணிநிரந்துந்தி
யளவிநீர்வருகாவிரிவடகரைமாந்துறையுறைவானத்
துளவமான்மகனைங்கணைக்காமனைச்சுடவிழித்தவனெற்றி
யளகவாணுதலரிவைதன்பங்கனையன்றிமற்றறியோமே. (உ)

கோடுதேன்சொரிகுன்றிடைப்பூகமுங்கூந்தலின்குலைவாரி
யோடுநீர்வருகாவிரிவடகரைமாந்துறையுறைநம்பன்
வாடினார்தலையிற்பலிகொள்பவன்வானவர்மகிழ்ந்தேத்துங்
கேடிலாமணியைத்தொழலல்லதுகெழுமுதலறியோமே. (ங)

இலவநாழலுமீஞ்சொடுசூரல்புன்னையிளமருதிலவங்கங்
கலவிநீர்வருகாவிரிவடகரைமாந்துறையுறைகண்ட
னலைகொள்வார்புனலம்புலிமத்தமுமாடரவுடன்வைத்த
மலையைவானவர்கொழுந்தினையல்லதுவணங்குதலறியோமே. (ச)

கோங்குசெண்பகங்குருந்தொடுபாதிரிகுரவிடைமலருந்தி
யோங்குநீர்வருகாவிரிவடகரைமாந்துறையுறைவானைப்
பாங்கினாலிடுந்தூபமுந்தீபமும்பாட்டவிம்மலர்சேர்த்தித்
தாங்குவாரவர்நாமங்கணாவினிற்றலைப்படுந்தவத்தோரே. (ரு)

பெருகுசந்தனங்காரகில்பீலியும்பெருமாமிளிர்ந்துந்திப்
பொருதுகாவிரிவடகரைமாந்துறைப்புநிதனெம்பெருமானைப்
பரிவினாலிருந்திரவியுமதியமும்பார்மன்னர்பணிந்தேத்த
மருதவானவர்வழிபடுமலரடிவணங்குதல்செய்வோமே. (சா)

நறவமல்லிகைமுல்லையுமௌவலுநாண்மலரவைவாரி
யிறவில்வந்தெறிகாவிரிவடகரைமாந்துறையிறையன்றங்
கறவனாகியகூற்றினைச்சாடியவந்தணனைவரைவில்லா
னிறையவாங்கிவலித்தெயிலெய்தவனிணைகழல்பணிவோமே. (எ)

மந்தமாம்பொழின்மாங்கனிமாந்திடமந்திகண்மாணிக்க
முந்திநீர்வருங்காவிரிவடகரைமாந்துறையுறைவானை
நிந்தியாவெடுத்தார்த்தவல்லரக்கனைநெரித்திடுவிரலானைச்
சிந்தியாமனத்தாரவர்சேர்வதுதீநெறியதுதானே. (அ)

நீலமாமணிநித்திலத்தொத்தொடுநிரைமலர்நிரந்துந்தி
யாலியாவருங்காவிரிவடகரைமாந்துறையமர்வானை
மாலுநான்முகன்றேடியுங்காணகிலாமலரடியிணைநாளுங்
கோலமேத்திநின்றாடுமின்பாடுமின்கூற்றுவனலியானே. (கூ)

நின்றுணுஞ்சமண்டேரருநிலையிலாநெடுங்கழைநறவேல
கன்றுமாங்கனிகதலியின்பலங்களுநாணலினுரைவாரி
யொன்றிநேதருங்காவிரிவடகரைமாந்துறையொருகால
மன்றியுள்ளழிந்தெழும்பரிசழகிதுவதுவவாக்கிடமாமே. (க0)

வரைவளங்கவர்காவிரிவடகரைமாந்துறையுறைவானைச்
சிரபுரம்பதியுடையவன்கவுணியன்செழுமறைநிறைநாவ
னரனெழும்பணிவல்லவன்ஞானசம்பந்தனன்புறுமாலை
பரவிடுந்தொழில்வல்லவரல்லலும்பாவமுமிலாதாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருவாய்மூர் - பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்.

தளிரிளவளரொளியுமைபாடத்தாளமிடவோர்தழலவீசிக்
கிளரிளமணியரவரையார்த்தாடும்வேடக்கிறிமையார்
விளரிளமுலையவர்க்கருணல்கிவெண்ணீறணிந்தோர்சென்னிமேல்
வளரிளமதியமொடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே (க)

வெந்தழல்வடிவினர்பொடிப்பூசிவிரிதருகோவணவுடைமேலோர்
பந்தஞ்செய்தரவசைத்தொலிபாடிப்பலபலகடைதொறும்பலிதேர்வார்
சிந்தனைபுகுந்தெனக்கருணல்கிச்செஞ்சுடர்வண்ணர்தம்மடிபரவ
வந்தனைபலசெயவிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (உ)

பண்ணிற்பொலிந்தவீணையர்பதினெண்கணமுமுணராநஞ்
சுண்ணப்பொலிந்தமிடற்றினருள்ளமுருகினுடனாவார்
சுண்ணப்பொடிநீறணிமார்பர்சுடர்பொற்சடைமேற்றிகழ்கின்ற
வண்ணப்பிறையோடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (ங)

எரிகிளர்மதியமொடெழினுதன்மேலெறிபொறியரவினொடாறுமூழ்க
விரிகிளர்சடையினர்விடையேறிவெருவவந்திடர்செய்தவிகிர்தனார்

பொரிகிளர்பொடியணிதிருவகலம்பொன்செய்தவாய்மையர்பொன்மிளிரும
வரியரவரைக்கசைத்திவராணீர்வாய்மூரடிகள்வருவாரே (௪)

அஞ்சனமணிவனமெழினிறமாவகமிடறணிகொளவுடறிமில
நஞ்சினையமரர்களமுதமெனநண்ணியநறுநுதலுமையொடுங்க
வெஞ்சினமால்களியானையின்றோல்வெருவுறப்போர்த்ததனிறமுமஃதே
வஞ்சனைவடிவினொடிவராணீர்வாய்மூரடிகளவருவாரே. (௫)

அல்லியமலர்புல்குவிரிகுழலார்கழலிணையடிநிழலவைபரவ [லார்
வெல்லியம்போதுகொண்டெரியேந்தியெழிலொடுதொழிலவையிசையவல்
சொல்லியவருமறையிசைபாடிச்சூடிளமதியினர்தோடுபெய்து
வல்லியந்தோலுடுத்திவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (௬)

கடிபடுகொன்றைநன்மலர்திகழுங்கண்ணியர்விண்ணவர்கணமணிசேர்
முடியிற்குபிறையவர்மறுகினல்லார்முறைமுறைபலிபெயமுறுவல்செய்வார்
பொடியணியடிவொடுதிருவகலம்பொன்னெனமிளிரவதோரரவினொடும்
வடிநுனைமழுவினொடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (௭)

கட்டிணைபுதுமலர்க்கமழ்கொன்றைக்கண்ணியர்வீணையர்தாமுமஃதே
எட்டுகேளாசாந்தமோடுமைதுணையாவிறைவனுறைவதோரிடமினவிற
பட்டிணையகலல்குல்விரிகுழலார்பாவையர்பலியெதிர்கொணர்ந்துபெய்ய
வட்டணையாடலொடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (௮)

ஏனமருப்பினொடெழிலாமையிசையப்பூண்டோரேறேறிக்
கானமாடமாவுறைகின்றகளவர்கனவிறலுயாசெய்து
தேனுணமலர்கள்நதிவிமமிதநிகழ்பொற்சடைமேற்றிகழ்கின்ற
வானமாமதியினோடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. (௯)

சூடல்வெண்பிறையினர்சுடர்முடியர்சுண்ணவெண்ணீற்றினர்சுடர்மழுவர்
பாடல்வண்டிசைமுரல்கொன்றையந்தார்பாம்பொடுநூலவைபசைந்திலங்கக்
கோடலொணமுகிழ்விரல்கூப்பிநல்லார்குறையுறுபலியெதிர்கொணர்ந்துபெய்ய
வாடல்வெண்டலைபிடித்திவராணீர்வாய்மூரடிகளவருவாரே. (௰)

திங்களோடருவரைப்பொழிற்சோலைத்தேனலங்கானலந்திருவாய்மூ
ரங்கமொடருமறையொலிபாடலழனிறவண்ணர்தம்மடிபரவி
நங்கடம்வினைகெடமொழியவல்லஞானசம்பந்தன்றமிழ்மாலை
தங்கியமனத்தினாற்றொழுதெழுவார்தவநெறியுலகுக்கோர்தவநெறியே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருஆடானை - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்

மாதோர்கூறுகந்தேறதேறிய, வாதியானுறையாடானைப
போதினாற்புனைந்தேத்துவார்தமை, வாதியாவினைமாயுமே. (௧)

வாடல்வெண்டலையங்கையேந்திநின், றாடலானுறையாடானைத்
தோடுலாமலர்தூவிக்கைதொழ,வீடுநுங்களவினைகளே. (௨)

மங்கைகூறினன்மான்மறியுடை, யங்கையானுறையாடானைத்
தங்கையாற்றொழுதேத்தவல்லவர், மங்குநோய்பிணிமாயுமே. (௩)

சுண்ணநீறணிமார்பிற்றோல்புனை, யண்ணலானுறையாடானை
வண்ணமாமலர்தூவிக்கைதொழ, வெண்ணுவாரிடரேகுமே. (௪)

கொய்யணிம்மலர்க்கொன்றைசூடிய, மையணமேவியவாடானை
கையணிமலரால்வணங்கிட, வெய்யவல்வினைவீடுமே. (ரு)

வானிளமமதிமல்குவார்சடை, யானஞ்சாடலானாடானை
தேனணிம்மலர்சேர்த்தமுனசெய்த, வூனமுள்ளவொழியுமே. (சு)

துலங்குவெண்மழுவேந்திச்சூழ்சடை, யலங்கலானுறையாடானை
நலங்கொண்மாமலர்தூவிநாடொறும், வலங்கொள்வார்வினைமாயுமே. (எ)

வெந்தநீறணிமார்பிற்றோல்புனை, யந்தமில்லவனாடானை
கந்தமாமலர்தூவிக்கைதொழுஞ், சிந்தையார்வினைதேயுமே. (அ)

மறைவல்லாரொடுவானவர்தொழு, தறையுந்தண்புனலாடானை
யுறையுமீசனையேத்தத்தீவினை, பறையுநல்வினைபற்றுமே (கூ)

மாயனும்மலரானுங்கைதொழ, தாயவந்தணனாடானை
தூயமாமலர்தூவிக்கைதொழத், தீயவல்வினைதீருமே. (கo)

வீடுஞானமிவெங்கடத்துநின், றாடலானுறையாடானை
நாடுஞானசம்பந்தன்செந்தமிழ், பாடநோய்பிணிபாறுமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

சீகாழி - பண் - செவ்வழி.

திருச்சிற்றம்பலம்

பொடியிலங்குந்திருமேனியாளர்புலியதளின
ரடியிலங்குங்கழலார்க்கவாடுமடிகளிடம்
மிடியிலங்குங்குரலோதமல்கவெறிவார்திரைக்
கடியிலங்கும்புனமுந்தலைக்குங்கடற்காழியே. (க)

மயிலிலங்குந்துயரமாசறுப்பானருந்தொண்டர்க
ளயலிலங்கப்பணிசெய்யநின்றவடிகளிடம்
புயலிலங்குங்கொடையாளர்வேதத்தொலிபொலியவே
கயலிலங்கும்வயற்கழனிசூழுங்கடற்காழியே (உ)

கூவிலங்குந்திரிசூலவேலர்குழைக்காதினா
மார்விலங்கும்புரிநூலுகந்தமணவாளனூர்
கோவிலங்கல்லனதிரைகண்மோதந்நெடுந்தாரைவாய்க்
காவிலங்கல்லெனக்கலந்தொழுகுங்கடற்காழியே. (ங)

குற்றமில்லார்குறைபாடுசெய்வார்பழிதீர்ப்பவர்
பெற்றநல்லகொடிமுன்னுயர்த்தபெருமானிடம்
மற்றுநல்லார்மனத்தாலினியார்மறைகலையெலாங்
கற்றுநல்லார்பிழைதெரிந்தளிக்குங்கடற்காழியே. (ச)

விருதிலங்குஞ்சரிதைத்தொழிலார்விரிசடையினா
ரெருதிலங்கப்பொலிந்தேறுமெந்தைக்கிடமாவது
பெரிதிலங்குமறைகிளைஞரோத்தப்பிழைகேட்டலாற்
கருதுகிள்ளைக்குலந்தெரிந்துதீர்க்குங்கடற்காழியே. (ரு)

தோடிலங்குங்குழைக்காதர்வேதர்சுரும்பார்மலர்ப்
பீடிலங்குஞ்சடைப்பெருமையாளர்க்கிடமாவது
கோடிலங்கும்பெரும்பொழில்கள்மல்கப்பெருஞ்செந்நெலின்
காடிலங்கும்வயல்பயிலுமந்தண்கடற்காழியே. (சு)

மலையிலங்குஞ்சிலையாகவேகமதின்மூன்றெரித்
தலையிலங்குமழுவாட்கைகைவைத்தவடிகட்கிட
மிலையிலங்குமலர்க்கைதைகண்டல்வெறிவிரவலாற்
கலையிலங்குங்கணத்தினம்பொலியுங்கடற்காழியே. (௭)

முழுதிலங்குபெரும்பாருள்வாழும்முரணிலங்கைக்கோ
னழுதிரங்கச்சிரமுரமொடுங்கவடர்த்தாங்கவ
னொழுதிரங்கத்துயர்தீர்த்துகந்தார்க்கிடமாவது
கழுதும்புள்ளுமதிற்புறமதாருங்கடற்காழியே. (௮)

பூவினானும்விரிபோதின்மன்னுந்திருமகடனை
மேவினானும்வியந்தேத்தநீண்டாரழலாய்நிறைந்
தோவியங்கேயவர்க்கருள்புரிந்தவ்வொருவர்க்கிடங்
காவியங்கண்மடமங்கையர்சேர்கடற்காழியே. (௯)

உடைநவின்றாருடைவிட்டுழல்வாரிருந்தவத்தார்
முடைநவின்றமொழியொழித்துகந்தமுதல்வன்னிட
மடைநவின்றபுனற்கெண்டைபாயும்வயன்மலிதரக்
கடைநவின்றநெடுமாடமோங்குங்கடற்காழியே. (௰)

கருகுமுந்நீர்த்திரையோதமாருங்கடற்காழியு
ளொருகமாருஞ்சடையடிகட்பாலுணர்ந்துறுதலாற்
பெருகமல்குமபுகழ்பேணுந்தொண்டர்க்கிசையார்தமிழ்
விரகன்சொன்னவிவைபாடியாடக்கெடும்வினைகளே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருக்கேதாரம் - பண் - செவ்வழி.

திருச்சிற்றம்பலம்

தொண்டரஞ்சுங்களிறுமடக்கிச்சுருமமாமல
ரிண்டைகட்டிவழிபாடுசெய்யுமிடமென்பரால்
வண்டுபாடமயிலாலமான்கன்றுதுள்ளவரி
கெண்டைபாயச்சுனைநீலமொட்டலருங்கேதாரமே. (௧)

பாதம்விண்ணோர்பலரும்பரவிப்பணிந்தேத்தவே
வேதநான்கும்பதினெட்டொடாறும்விரித்தார்க்கிடந்
தாதுவிண்டம்மதுவுண்டுமிண்டிவண்டினங்
கீதம்பாடமடமந்திகேட்டுகளுங்கேதாரமே, (௨)

முந்திவந்துபுரோதயமூழ்கிமுனிகள்பல
ரெந்தைபெம்மானெனநின்றிறைஞ்சுமிடமென்பரான்
மந்திபாய்சரேலச்சொரிந்தும்முரிந்துக்கபூக்
கெந்தநாறக்கிளருஞ்சடையெந்தைகேதாரமே. (௩)

உள்ளமிக்கார்குதிரைம்முகத்தாரொருகாலர்க
ளெள்கலில்லாவிமையோர்கள்சேருமிடமென்பராற்
பிள்ளைதுள்ளிக்கிளைபயில்வகேட்டுப்பிரியாதுபோய்க்
கிள்ளையேனற்கதிர்கொணர்ந்துவாய்ப்பெய்யுங்கேதாரமே. (௪)

ஊழியூழியுணர்வார்கள்வேதத்தினொண்பொருள்களால்
வாழியெந்தையெனவந்திறைஞ்சுமிடமென்பரான்

மேழிதாங்கியுழவார்கள்போலவ்விரைதேறிய
கேழல்பூழ்திகிளைக்கமணிசிந்துங்கேதாரமே. (௫)

நீறுபூசிநிலத்துண்டுநீர்மூழ்கிநீள்வரைதன்மேற்
றேறுசிந்தையுடையார்கள்சேருமிடமென்பரா
லேறிமாவின்கனியும்பலாவினிருஞ்சுளைகளுங்
கீறிநாளுமுசுக்கிளையோடுண்டுகளுங்கேதாரமே. (௬)

மடந்தைபாகத்தடக்கிமறையோதிவானோர்தொழத்
தொடர்ந்தநம்மேல்வினைதீர்க்கநின்றார்க்கிடமென்பரா
லுடைந்தகாற்றுக்குயர்வேங்கைபூத்துதிரக்கல்லறைகண்மேற்
கிடந்தவேங்கைசினமாமுகஞ்செய்யுங்கேதாரமே (௭)

அரவமுந்நீரணியிலங்கைக்கோனையருவரைதனால்
வெருவவூன்றிவிரலாலடர்த்தாற்கிடமென்பரா ற
குரவங்கோங்கங்குளிர்பிண்டிஞாழல்சுரபுன்னைமேற்
கிரமமாகவரிவண்டுபண்செய்யுங்கேதாரமே. (௮)

ஆழ்ந்துகாணாருயர்ந்தெய்தகில்லாரலமந்தவர்
தாழ்ந்ததம்முடிசாய்நின்றார்க்கிடமென்பரால்
வீழ்ந்துசெற்றுநிழற்கிறங்கும்வேழத்தின்வெண்மருப்பினைக்
கீழ்ந்துசிங்கங்குருகுண்ணமுத்துதிருங்கேதாரமே. (௯)

கடுக்கடின்றுகழிமீன்கவர்வார்கண்மாசுடம்பின
ரிடுக்கணுய்ப்பாரவரெய்தவொண்ணாவிடமென்பரா
லடுக்கநின்றவறவுரைகள்கேட்டாங்கவர்வினைகளைக்
கெடுக்கநின்றபெருமானுறைகின்றகேதாரமே. (௧௦)

வாய்ந்தசெந்நெல்விளைகழனிமல்கும்வயற்காழியா
னேய்ந்தநீர்க்கோட்டிமையோருறைகின்றகேதாரத்தை
யாய்ந்துசொன்னவருந்தமிழ்ப்பத்துமிசைவல்லவா
வேந்தராகியுலகாண்டுவீடுகதிபெறுவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்புகலூர் - பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்.

வெங்கள்விம்முகுழலிளையராடவ்வெறிவிரவுநீர்ப்
பொங்குசெங்கட்கருங்கயல்கள்பாயும்புகலூர்தனுட்
டிங்கள்சூடித்திரிபுரமோரம்பாலெரியூட்டிய
வெங்கள்பெருமானடிபரவநாளுமிடர்கழியுமே. (௧)

வாழ்ந்தநாளுமினிவாழுநாளுமிவையறிதிரேல்
வீழ்ந்தநாளெம்பெருமானையேத்தாவிதியில்லிகாள்
போழ்ந்ததிங்கட்புரிசடையினான்றன்புகலூரையே
சூழ்ந்தவுள்ளமுடையீர்களுங்கடுயர்தீருமே. (௨)

மடையினெய்தல்கருங்குவளைசெய்யமலர்த்தாமரை
புடைகொள்செந்நெல்விளைகழனிமல்கும்புகலூர்தனுட்
டொடைகொள்கொன்றைபுனைந்தானோர்பாகமதிசூடியை
யடையவல்லாரமருலகமாளப்பெறுவார்களே. (௩)

பூவுநீருமபலியுஞசுமநதுபுகலூரையே
நாவினாலேநவினறேததலோவார்செவித்துளைகளால்
யாவுங்கேளாரவன்பெருமையல்லாலடியார்கடா
மேவுநாளும்முணாவொழிநதநாளெனறுளளங்கொள்ளவே. (ச)

அனனஙகளனிபபெடைபுல்கியொலகியணிநடையவாயப
பொன்னஙகாஞசிம்மலர்சசினனமாலும்புகலூர்தனுண
முனனமமூன்றுமமதிலெரித்தமூாததிதிறஙகருதுஙகா
லினனரெனனபபெரிதரியரேததசசிறிதெளியரே (ரு)

குலவராகக்குலமிலருமாககுணமபுகாழஙகா
லுலகினலலகதிபெறுவரேனுமலாநறுதேன்
புலவமெல்லாமவெறிகமழமநதணபுகலூர்தனு
ணிலவமல்குசடையடிகளபாதநினைவார்களே (சு)

ஆணுமபெண்ணுமெனநிறபரேனுமமரவாரமாப
பூணுமேனுமபுகலூர்தனககோர்பொருளாயினா
னூணுமூராரிடுபிசசையேறறுணடைகோவணம
பேணுமேனும்பிரானெனபராலெமபெருமானையே (எ)

உய்யவேணடிலெழுபோதநெஞசேயுயரிலஙகைக்கோன்
கைககளாலககருவரையெடுததானையோர்விரலினாற
செய்கைதோன்றசசிதைத்தருளவல்லசிவனமேயபூம்
பொய்கைசூழ்நதபுகலூர்புகழபபொருளாகுமே. (அ)

நேமியானுமமுகநானகுடையநெறியண்ணலு
மாமிதென்றுதகைநதேததபபோயாரழலாயினான்
சாமிதாதைசரணாகுமெனறுதலைசாய்மினோ
பூமியெல்லாமபுகழசெலவமல்குமபுகலூரையே. (கூ)

வேர்த்தமெய்யருருவததுடைவிட்டுழல்வார்களும
போர்த்தகூறைபபோதிநீழலாருமபுகலூர்தனுட
டீர்த்தமெல்லாஞசடைக்கரநததேவனறிறஙகருதுஙகா
லோர்த்துமெய்யெனறுணராதுபாதந்தொழுதுய்ம்மினே. (க0)

புநதியாரநதபெரியோர்களேததுமபுகலூர்தனுள்
வெநதசாமபற்பொடிபபூசவல்லவிடையூர்தியை
யநதமில்லாவனலாடலானையணிஞானசம
பநதனசொன்னதமிழபாடியாடக்கெடுமபாவமே. (கக)

திருச்சிற்றமபலம்.

---

## திருக்கடனாகைக்காரோணம் - பண் - செவ்வழி.

திருச்சிற்றம்பலம்.

கூனற்றிங்கட்குறுங்கண்ணிகான்றநெடுவெண்ணிலா
வேனற்பூத்தமமராஙகோதையோடுமவிராவுஞசடை
வானநாடனமரர்பெருமாற்கிடமாவது
கானல்வேலிகழிசூழ்கடனாகைக்காரோணமே (க)

விலங்கலொன்றுசிலையாமதின்மூன்றுடன்வீட்டினா
னிலங்குகண்டத்தெழிலாமைபூண்டாற்கிடமாவது

மலங்கியோங்கிவருவெண்டிரைமல்கியமால்கடற்
கலங்களோதங்கழிசூழ்கடனாகைக்காரோணமே. (உ)

வெறிகொளாருங்கடற்கைதைநெய்தல்விரிபூம்பொழின்
முறிகொண்ஞாழன்முடப்புன்னைமுல்லைமுகைவெண்மலர்
நறைகொள்கொன்றைநயந்தோங்குநாதற்கிடமாவது
கறைகொளோதங்கழிசூழ்கடனாகைக்காரோணமே. (ங)

வண்டுபாடலவளர்கொன்றைமாலைமதியோடுடன்
கொண்டகோலங்குளிர்கங்கைதங்குங்குருட்குஞ்சியு
ளுண்டுபோலுமெனவைத்துகந்தவொருவற்கிடங்
கண்டல்வேலிகழிசூழ்கடனாகைக்காரோணமே. (ச)

வார்கொள்கோலமுலைமங்கைநல்லார்மகிழ்ந்தேத்தவே
நீர்கொள்கோலச்சடைநெடுவெண்டிங்கணிகழ்வெய்தவே
போர்கொள்சூலப்படைபுல்குகையார்க்கிடமாவது
கார்கொளோதங்கழிசூழ்கடனாகைக்காரோணமே. (ரு)

விடையதேறிவ்விடவரவசைத்தவிகிர்தரவர்
படைகொள்பூதம்பலபாடவாடும்பரமாயவ
ருடைகொள்வேங்கையுரித்தோலுடையார்க்கிடமாவது
கடைகொள்செல்வங்கழிசூழ்கடனாகைக்காரோணமே. (சு)

பொய்துவாழ்வார்மனம்பாழ்படுக்கும்மலர்ப்பூசனை
செய்துவாழ்வார்சிவன்சேவடிக்கேசெலுஞ்சிந்தையா
ரெய்தவாழ்வாரெழினக்கரெம்மாற்கிடமாவது
கைதல்வேலிகழிசூழ்கடனாகைக்காரோணமே. (எ)

பத்திரட்டித்திரடோளுடையான்முடிபத்திற
யத்திரட்டிவிரலாலடர்த்தார்க்கிடமாவது
மைத்திரட்டிவருவெண்டிரைமல்கியவார்கடல்
கைத்திரட்டுங்கழிசூழ்கடனாகைக்காரோணமே. (அ)

நல்லபோதிலுறைவானுமாலுநடுக்கத்தினா
லல்லராவரெனநின்றபெம்மாற்கிடமாவது
மல்லலோங்கிவருவெண்டிரைமல்கியமால்கடல்
கல்லலோதங்கழிசூழ்கடனாகைக்காரோணமே. (கூ)

உயர்ந்தபோதினுருவத்துடைவிட்டுழல்வார்களும்
பெயர்ந்தமண்டையிடுபிண்டமாவுண்டுழல்வார்களும்
நயந்துகாணாவகைநின்றநாதற்கிடமாவது
கயங்களோதங்கழிசூழ்கடனாகைக்காரோணமே. (க0)

மல்குதண்பூம்புனல்வாய்ந்தொழுகும்வயற்காழியா
னல்லகேள்வித்தமிழ்ஞானசம்பந்தனல்லார்கண்முன்
வல்லவாறேபுனைந்தேத்துங்காரோணத்துவண்டமிழ்
சொல்லுவார்க்குமிவைகேட்பவர்க்குந்துயரில்லையே. (கக)

திருச்சிற்றம்பலம்.

### திருஇரும்பைமாகாளம் - பண் - செவ்வழி.

திருச்சிற்றம்பலம்

மண்டுகங்கைசடையிற்கரந்தும்மதிசூடிமான்
கொண்டகையாற்புரமூன்றெரித்தகுழகன்னிட
மெண்டிசையும்புகழ்போய்விளங்குமிரும்பைதனுள
வண்டுகீதம்முரல்பொழில்சுலாநின்றமாகாளமே (௧)

வேதவித்தாயவெள்ளைநீறுபூசிவினையாயின
கோதவித்தாயநீறெழக்கொடிமாமதிலாயின
வேதவித்தாயினதீர்க்குமிடமிரும்பைதனுண்
மாதவத்தோர்மறையோர்தொழநின்றமாகாளமே (௨)

வெந்தநீறுமெலும்புமணிந்தவ்விடையூர்தியா
னெந்தைபெம்மானிடமெழில்கொள்சோலையிரும்பைதனுட்
கந்தமாயபலவின்கனிகளகமழும்பொழின்
மந்தியேறிக்கொணர்ந்துண்டுகள்கின்றமாகாளமே. (௩)

நஞ்சுகண்டத்தடக்கிநடுங்குமலையான்மக
ளஞ்சவேழம்முரித்தபெருமானமருமிட
மெஞ்சலில்லாப்புகழ்போல்விளங்குமிரும்பைதனுண்
மஞ்சிலோங்கும்பொழில்சூழ்ந்தழகாயமாகாளமே. (௪)

பூசுமாசில்பொடியான்விடையானபொருப்பன்மகள்
கூசவானையுரித்தபெருமான்குறைவெண்மதி
யீசனெங்கள்ளிறைவன்னிடம்போலிரும்பைதனுண்
மாசிலோர்கண்மலர்கொண்டணிகின்றமாகாளமே. (௫)

குறைவதாயகுளிர்திங்கள்சூடிக்குனித்தான்வினை
பறைவதாக்கும்பரமன்பகவன்பரந்தசடை
யிறைவனெங்கள்பெருமானிடம்போலிரும்பைதனுண்
மறைகள்வல்லார்வணங்கித்தொழுகின்றமாகாளமே. (௬)

பொங்குசெங்கண்ணரவும்மதியும்புரிபுன்சடைத்
தங்கவைத்தபெருமானெனநின்றவர்தாழ்விட
மெங்குமிச்சையமர்ந்தானிடம்போலிரும்பைதனுண்
மங்குறோயும்பொழில்சூழ்ந்தழகாயமாகாளமே. (௭)

நட்டத்தோடுநரியாடுகானத்தெரியாடுவா
னட்டமூர்த்தியழல்போலுருவனழகாகவே
யிட்டமாகவிருக்குமிடம்போலிரும்பைதனுள்
வட்டஞ்சூழ்ந்துபணிவார்பிணிதீர்க்குமாகாளமே (௮)

அட்டகாலன்றனைவவ்வினனவ்வரக்கன்முடி
யெட்டுமற்றுமிருபத்திரண்டும்மிறவூன்றினா
னிட்டமாகவிருப்பானவன்போலிரும்பைதனுண்
மட்டுவார்ந்தபொழில்சூழ்ந்தெழிலாருமாகாளமே. (௯)

அரவமார்த்தன்றனலங்கையேந்தியடியும்முடி
பிரமனோமாலுமறியாமைநின்றபெரியோனிடங்
குரவமாரும்பொழிற்குயில்கள்சேருமிரும்பைதனுண்
மருவிவானோர்மறையோர்தொழுகின்றமாகாளமே. (௧௦)

எந்தையெம்மானிடமெழில்கொள்சோலையிரும்பைதனுண்
மந்தமாயபொழில்சூழ்ந்தழகாருமாகாளத்தி
லந்தமில்லாவனலாடுவானையணிஞானசம்
பந்தன்சொன்னதமிழ்பாடவல்லார்பழிபோகுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருத்திலதைப்பதி - மதிமுத்தம் - பண் - செவ்வழி.

திருச்சிற்றம்பலம்.

பொடிகள்பூசிப்பலதொண்டர்கூடிப்புலர்காலையே
யடிகளாரத்தொழுதேத்தநின்றவழகன்னிடங்
கொடிகளோங்கிக்குலவும்விழவார்திலதைப்பதி
வடிகொள்சோலைம்மலர்மணங்கமழும்மதிமுத்தமே. (௧)

தொண்டர்மிண்டிப்புகைவிம்முசாந்துங்கமழ்துணையலுங்
கொண்டுகண்டார்குறிப்புணரநின்றகுழகன்னிடந்
தெண்டிரைப்பூம்புனலரிசில்சூழ்ந்ததிலதைப்பதி
வண்டுகெண்டுற்றிசைபயிலுஞ்சோலைமதிமுத்தமே

அடலுளேறுய்த்துகந்தானடியாரமரர்தொழக்
கடலுணஞ்சமுதாகவுண்டகடவுளிடந்
திடலடங்கச்செழுங்கழனிசூழ்ந்ததிலதைப்பதி
மடலுள்வாழைக்கனிதேன்பிலிற்றுமதிமுத்தமே.

கங்கைதிங்கள்வன்னிதுன்னெருக்கின்னொடுகூவிளம்
வெங்கணாகம்விரிசடையில்வைத்தவிகிர்தன்னிடஞ்
செங்கயல்பாய்புனலரிசில்சூழ்ந்ததிலதைப்பதி
மங்குறோயும்பொழில்சூழ்ந்தழகார்மதிமுத்தமே.

புரவியேழும்மணிபூண்டியங்குங்கொடித்தேரினான்
பரவிநின்றுவழிபாடுசெய்யும்பரமேட்டியூர்
விரவிநாழல்விரிகோங்குவேங்கைசுரபுன்னைகண்
மரவமௌவன்மலருந்திலதைம்மதிமுத்தமே.

விண்ணவாவேதம்விரித்தோதவல்லாரொருபாகமும்
பெண்ணரெண்ணாரெயில்செற்றுகந்தபெருமானிடந்
தெண்ணிலாவின்னொளிதீண்டுசோலைத்திலதைப்பதி
மண்ணுளாரவந்தருள்பேணிநின்றமதிமுத்தமே.

ஆறுசூடியடையார்புரஞ்செற்றவர்பொற்றொடி
கூறுசேருமுருவர்க்கிடமாவதுகூறுங்காற்
றேறலாரும்பொழில்சூழ்ந்தழகார்திலதைப்பதி
மாறிலாவண்புனலரிசில்சூழ்ந்தமதிமுத்தமே (௭)

கடுத்துவந்தகணன்மேனியினாற்கருவரைதனை
யெடுத்தவன்றன்முடிதோளடர்த்தார்க்கிடமாவது
புடைக்கொள்பூகத்திளம்பாளைபுல்கும்மதுப்பாயவாய்
மடுத்துமந்தியுகளுந்திலதைம்மதிமுத்தமே. (௮)

படங்கொணாகத்தலையானும்பைந்தாமரையின்மிசை
இடங்கொணால்வேதனுமேத்தநின்றவிறைவன்னிடம்

திடங்கொள்வீணையின்னிசைதொண்டர்பாடுந்திலதைப்பதி
மடங்கல்வந்துவழிபாடுசெய்யுமதிமுத்தமே. (௯)

புத்தர்தேரர்பொறியில்சமணர்களும்வீறிலாப்
பித்தர்சொன்னமொழிகேட்கிலாதபெருமானிடம்
பத்தர்சித்தர்பணிவுற்றிறைஞ்சுந்திலதைப்பதி
மத்தயானைவழிபாடுசெய்யுமதிமுத்தமே (௧௦)

மந்தமாரும்பொழில்சூழ்திலதைமதிமுத்தமேற்
கந்தமாருங்கடற்காழியுளான்றமிழ்ஞானசம்
பந்தன்மாலைபழிதீரநின்றேத்தவல்லார்கள்போய்ச்
சிந்தைசெய்வார்சிவன்சேவடிசேர்வதுதிண்ணமே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாகேச்சரம் - பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்

தழைகொள்சந்தும்மகிலும்மயிற்பீலியுஞ்சாதியின்
பழமுமுந்திப்புனல்பாய்பழங்காவிரித்தென்கரை
நழுவில்வானோர்தொழநல்குசீர்மல்குநாகேச்சரத்
தழகர்பாதந்தொழுதேத்தவல்லார்க்கழகாகுமே (௧)

பெண்ணொர்பாகம்மடையச்சடையிற்புனல்பேணிய
வண்ணமானபெருமான்மருவுமிடமண்ணுளார்
நண்ணிநாளுந்தொழுதேத்திநன்கெய்துநாகேச்சரங்
கண்ணினாற்காணவல்லாரவர்கண்ணுடையார்களே. (௨)

குறவர்கொல்லைப்புனங்கொள்ளைகொண்டுமணிகுலவுநீர்
பறவையாலப்பரக்கும்பழங்காவிரித்தென்கரை
நறவநாறும்பொழிற்சூழ்ந்தழகாயநாகேச்சரத்
திறைவர்பாதந்தொழுதேத்தவல்லார்க்கிடரில்லையே. (௩)

கூசநோக்காதுமுன்சொன்னபொய்யாக்கடுவினைகுற்றமு
நாசமாக்கும்மனத்தார்கள்வந்தாடுநாகேச்சரந்
தேசமாகத்திருக்கோயிலாக்கொண்டசெல்வனைப்பூ
ணேசமாகக்குந்திறத்தாரறத்தார்நெறிபாலரே. (௪)

வம்புநாறும்மலருமலைப்பண்டமுங்கொண்டுநீர்
பைம்பொன்வாரிக்கொழிக்கும்பழங்காவிரித்தென்கரை
நம்பனாளுமமர்கின்றநாகேச்சரநண்ணுவா
ரும்பர்வானோர்தொழச்சென்றுடனாவதுமுண்மையே (௫)

காளமேகந்நிறக்காலனோடந்தகன்கருடனு
நீளமாய்நின்றெய்தகாமனும்பட்டனநினைவுறி
ஞாலநாதனமர்கின்றநாகேச்சரநண்ணுவார்
கோளுநாளுந்தீயவேனுநன்காங்குறிக்கொண்மினே. (௬)

வேயுதிர்முத்தொடுமத்தயானைமருப்பும்விராய்ப்
பாய்புனல்வந்தலைக்கும்பழங்காவிரித்தென்கரை
ஞாயிறுந்திங்களுங்கூடிவந்தாடுநாகேச்சர
மேயவன்றன்னடிபோற்றியென்பார்வினைவீடுமே. (௭)

இலங்கைவேந்தன்சிரம்பத்திரட்டியெழிற்றோள்களும்
மலங்கிவீழ்மமலையாலடர்த்தானிடமல்கிய
நலங்கொள்சிந்தையவர்நாடொறுநண்ணுநாகேச்சரம்
வலங்கொள்சிந்தையுடையாரிடராயினமாயுமே (௮)

கரியமாலுமயனுமடியும்முடிகாண்பொணா
எரியதாகிநிமிர்ந்தானமரும்மிடமீண்டுகா
விரியினீர்வந்தலைக்குங்கரைமேவுநாகேச்சரம்
பிரிவிலாதவ்வடியார்களவானிறபிரியார்களே. (௯)

தட்டிடுக்கியுறிதூக்கியகையினர்சாக்கியர்
கட்டுரைக்குமொழிகொள்ளலும்வெள்ளிலங்காட்டிடை
நட்டிருட்பண்ணாடுமடியார்தனாகேச்சரம்
மட்டிருக்குமலரிட்டடிவீழ்வதுவாய்மையே. (௰)

கந்தநாறும்புனற்காவிரித்தென்கரைகண்ணுதன்
நந்திசேருந்திருநாகேச்சரத்தின்மேன்ஞானசம்
பந்தனுரைப்பனவல்லவைபத்தும்வல்லார்கள்போ
யெந்தையீசனிருக்குமுலகெய்தவல்லார்களே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருமுக்கீச்சரம் - பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்

சாந்தம்வெண்ணீறெனப்பூசிவெள்ளஞ்சடைவைத்தவர்
காந்தளாரும்விரலேழையொடாடியகாரணம்
மாய்ந்துகொண்டாங்கறியந்நிறைந்தாரவராகொலோ
வேந்தன்மூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோர்மெய்ம்மையே (௧)

வெண்டலையோர்கலனாப்பலிதேர்ந்துவிரிசடைக்
கொண்டலாரும்புனல்சேர்த்துமையாளொடுங்கூட்டமா
விண்டவர்தம்மதிலெய்தபின்வேனில்வேள்வெந்தெழக்
கண்டவர்மூக்கீச்சரத்தெம்மடிகள்செய்கன்மமே (௨)

மருவலார்தம்மதிலெய்ததுவும்மான்மதலையைப்
புருவிலாரவ்வெரியூட்டியதும்புலன்கொண்டதாம்
செருவிலாரும்புலிச்செங்கயலானையினான்செய்த
பொருவின்மூக்கீச்சரத்தெம்மடிகள்செய்யும்பூசலே (௩)

அன்னமன்னநடைச்சாயலாளோடழகெய்தவே
பின்னையன்னசடைக்கங்கையாண்மேவியகாரணம்
தென்னன்கோழியெழில்வஞ்சியும்மோங்குசெங்கோலினான்
மன்னன்மூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோர்மாயமே (௪)

விடமுண்ணாரவழல்வாயதோர்பாம்பரைவீக்கியே
நடமுன்னாரவழலாடுவர்பேயொடுநள்ளிருள்
வடமன்னீடுபுகழ்ப்பூழியன்தென்னவன்கோழிமன்
னடன்மன்மூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோரசசமே. (௫)

வெந்தநீறுமெய்ப்பூசுவராடுவர்வீங்கிருள்
வந்தெனாரவளைகொள்வதுமிகுகொருமாயமா
மந்தணமாதனேரியன்செம்பியனாக்கிய
வெந்தைமூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோரேதமே. (௬)

அரையிலாருங்கலையில்லவனுமாணொடுபெண்ணுமா
யுரையிலாரவ்வழலாடுவரொன்றலர்காண்மினோ
விரவலாத்தம்மதின்மூன்றுடனேவெவ்வழலாக்கினா
னுறையூர்முக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோரச்சமே. (எ)

ஏரகுநீர்ச்செஞ்சடைக்கேற்றதுங்கூற்றையுதைத்ததுங்
கூர்க்குநன்மூவிலைவேல்வலனேந்தியகொள்கையும்
மாகக்குப்பவாயானரக்கனுரந்தசைத்தநெறித்தவ்வடன
மூரகனமுக்கீச்சரத்தடிகள்செய்யாநின்றமொய்ம்பதே. (அ)

நீருளாருமலர்மேலுறைவானொடுமாலுமாய்ச்
சீருளாருங்கழற்றேடமெய்த்தீத்திரளாயினா
சீரினலங்கொளிதென்னவனைச்செம்பியனைவில்லவனைச்
சேருமுக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோர்செம்மையே. (கூ)

வெண்புலான்மாரிபிடுதுகிலினார்வெற்றரையுழல்பவ
ருண்பினாலேயுரைப்பார்மொழியூனமதாக்கினா
ஒண்புலால்வேன்மிகவல்லவனோங்கெழிற்கிள்ளிசோ
பண்பின்முக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோர்பச்சையே. (க0)

மல்லைவாருமமுடிமன்னர்முக்கீச்சரத்தடிகளைச்
செல்வராகநினையும்படிசேர்த்தியசெந்தமிழ்
நல்லராய்வாழ்பவர்காழியுண்ஞானசம்பந்தன
சொல்லவல்லாரவர்வானுலகாளவும்வல்லரே. (கக)

திருச்சிற்றம்பலம்

### திருப்பாதிரிப்புலியூர் - பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்.

முன்னநின்றமுடக்கான்முயற்கருள்செய்துநீள்
புன்னைநின்றுகமழ்பாதிரிப்புலியூருளான்
றன்னைநின்றுவணங்குந்தனைத்தவமில்லிகள்
பின்னைநின்றபிணியாக்கையைப்பெறுவார்களே. (க)

கொள்ளிநக்கபகுவாயபேய்கள்குழைந்தாடவே
முள்ளிலவம்முதுகாடுறையும்முதல்வன்னிடம்
புள்ளினங்கள்பயிலும்பாதிரிப்புலியூர்தனை
யுள்ளநம்மேல்வினையாயினவொழியுங்களே. (உ)

மருளினல்லார்வழிபாடுசெய்யும்மழுவாளர்மேற்
பொருளினல்லார்பயில்பாதிரிப்புலியூருளான்
வெருளின்மானின்பிணைநோக்கல்செய்துவெறிசெய்தபின்
னருளியாகத்திடைவைத்ததுவுமழகாகவே. (ங)

போதினாலும்புகையாலுமுய்த்தேயடியார்கடாம்
போதினாலேவழிபாடுசெய்யப்புலியூர்தனு
ளாதினாலுமவலமிலாதவடிகண்மறை
யோதிநாளுமிடும்பிச்சையேற்றுண்டுணப்பாலதே. (ச)

ஆகநல்லாரமுதாக்கவுண்டானழலைந்தலை
நாகநல்லார்பரவந்நயந்தங்கரையார்த்தவன்
போகநல்லார்பயிலும்பாதிரிப்புலியூர்தனுட்
பாகநல்லாளொடுநின்றவெம்பரமேட்டியே. (ரு)

மதியமொய்த்தகதிர்போலொளிர்மணற்கானல்வாய்ப்
புதியமுத்தந்திகழ்பாதிரிப்புலியூரெனும்
பதியில்வைக்கப்படுமெந்தைதன்பழந்தொண்டர்கள்
குதியுங்கொள்வர்விதியுஞ்செய்வார்குழகர்க்கவே. (௬)

கொங்கரவப்படுவண்டறைகுளிர்கானல்வாய்ச்
சங்கரவப்பறையின்னொலியவைசார்ந்தெழப்
பொங்கரவம்முயர்பாதிரிப்புலியூர்தனுள்
அங்கரவம்மரையிலசைத்தானையடைமினே. (௭)

வீக்கமெழுமிலங்கைக்கிறைவிலங்கல்லிடை
யூக்கமொழிந்தலறவ்விரலிறையூன்றினான்
பூக்கமழும்புனற்பாதிரிப்புலியூர்தனை
நோக்கமெலிந்தணுகாவினைநுணுகுங்களே. (௮)

அன்னந்தாவுமணியார்பொழின்மணியார்புன்னை
பொன்னந்தாதுசொரிபாதிரிப்புலியூர்தனுண்
முன்னந்தாவியடிமூன்றளந்தவன்னான்முகன்
றன்னந்தாளுற்றுணராததோர்தவநீதியே. (௯)

உரிந்தகூறையுருவத்தொடுதெருவத்திடைத்
திரிந்துதின்னுஞ்சிறுநோன்பரும்பெருந்தேரரு
மெரிந்துசொன்னவுரைகொள்ளாதேயெடுத்தேத்துமின்
பரிந்துவெண்ணீறறண்ணல்பாதிரிப்புலியூரையே. (க0)

அந்தணல்லாரகன்காழியுண்ஞானசம்
பந்தனல்லார்பயில்பாதிரிப்புலியூர்தனுட்
சந்தமாலைத்தமிழ்பத்திவைதரித்தார்கள்மேல்
வந்துதீயவடையாமையால்வினைமாயுமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

ஸ்ரீபுகலி - பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்.

விடையதேறிவெறியக்கரவார்த்தவிமலனார்
படையதாகப்பரசுதரித்தார்க்கிடமாவது
கொடையிலோவார்குலமும்முயர்ந்தம்மறையோர்கடாம்
புடைகொள்வேள்விப்புகையும்பருலாவும்புகலியே (க)

வேலைதன்னின்மிகுநஞ்சினையுண்டிருள்கண்டனார்
ஞாலமெங்கும்பலிகொண்டுழல்வார்நகராவது
சாலநல்லார்பயிலும்மறைகேட்டுப்பதங்களைச்
சோலைமேவுங்கிளித்தான்சொற்பயிலும்புகலியே. (உ)

வண்டுவாழுங்குழன்மங்கையோர்கூறுகந்தார்மதித்
துண்டமேவுஞ்சுடர்த்தொல்சடையார்க்கிடமாவது
கெண்டைபாயமடுவில்லுயிர்மேதகைமாதவி
புண்டரீகமலர்ப்பொய்கைநிலாவும்புகலியே. (௩)

திரியுமூன்றுபுரமும்மெரித்துத்திகழ்வானவர்க்
கரியபெம்மானரவக்குழையார்க்கிடமாவது
பெரியமாடத்துயருங்கொடியின்மிடைவால்வெயிற்
புரிவிலாததடம்பூம்பொழில்சூழ்தண்புகலியே. (ச)

சிவமயம்.

# மூன்றாந் திருமுறையின்.

## பதிக அட்டவணை

| பதிகப்பெயர் | பக்கம் |
|---|---|
| **பண்-காந்தாரபஞ்சமம்** | |
| கோயில | ௧ |
| திருப்பூந்தராய் | ௨ |
| ஸ்ரீபுகலி-நாலடிமேல்வைப்பு | ௩ |
| திருவாவடுதுறை - நாலடிமேல்வைப்பு | ௪ |
| திருப்பூந்தராய்-ஈரடிமேல்வைப்பு | ௫ |
| திருக்கொள்ளம்பூதூர்-ஈரடிமேல்வைப்பு | ௭ |
| திருப்புகலி | ௮ |
| திருக்கடவூர்த்திருவீரட்டம் | ௯ |
| திருவீழிமிழலை | ௧0 |
| திருவிராமேச்சரம் | ௧௧ |
| திருப்புனவாயில் | ௧௨ |
| திருக்கோட்டாறு | ௧௩ |
| திருப்பூந்தராய் | ௧௫ |
| திருப்பைஞ்ஞீலி | ௧௬ |
| திருவெண்காடு | ௧௭ |
| திருக்கொள்ளிக்காடு | ௧௮ |
| திருவிசயமங்கை | ௧௯ |
| திருவைகன்மாடக்கோயில் | ௨0 |
| திருஅம்பர்ப்பெருந்திருக்கோயில் | ௨௧ |
| திருப்பூவணம் | ௨௩ |
| திருக்கருக்குடி | ௨௪ |
| திருப்பஞ்சாக்கரப்பதிகம் | ௨௫ |
| திருவிற்கோலம் | ௨௬ |
| **பண்-கொல்லி.** | |
| திருக்கழுமலம் | ௨௭ |
| திருநெல்வேதேவன்குடி | ௨௮ |
| திருக்கானப்பேர் | ௨௯ |
| திருச்சக்கரப்பள்ளி | ௩0 |
| திருமழபாடி | ௩௨ |
| மேலைத்திருக்காட்டுப்பள்ளி | ௩௩ |
| திருஅரதைப்பெரும்பாழி | ௩௪ |
| திருமயேந்திரப்பள்ளி | ௩௫ |
| திருஏடகம் | ௩௬ |
| திருஉசாத்தானம் | ௩௭ |
| திருமுதுகுன்றம் | ௩௮ |
| திருத்தென்குடித்திட்டை | ௩௯ |
| திருக்காளத்தி | ௪0 |
| திருப்பிரமபுரம் | ௪௧ |
| திருக்கண்டியூர்திருவீரட்டம் | ௪௨ |
| திருவாலவாய் | ௪௪ |
| தனித்திருவிருக்குக்குறள் | ௪௫ |
| திருவேகம்பம்-திருவிருக்குக்குறள் | ௪௫ |
| திருச்சிற்றேமம் | ௪௬ |
| சீகாழி | ௪௭ |
| **பண்-கௌசிகம்.** | |
| திருக்கழிப்பாலை | ௪௮ |
| திருவாரூர் | ௪௯ |
| திருக்கருகாவூர் | ௫0 |
| திருவாலவாய் | ௫௧ |
| திருமழபாடி | ௫௨ |
| நமச்சிவாயத்திருப்பதிகம் | ௫௪ |
| திருத்தண்டலைநீணெறி | ௫௫ |
| திருவாலவாய் | ௫௬ |
| திருவாலவாய்-திருவிராகம் | ௫௭ |
| திருவானைக்கா-திருவிராகம் | ௫௮ |
| திருப்பாசூரம் | ௫௯ |
| திருவான்மியூர் | ௬0 |
| **பண்-பஞ்சமம்.** | |
| திருப்பிரமபுரம் | ௬௧ |
| திருவொற்றியூர் | ௬௨ |
| திருச்சாத்தமங்கை | ௬௪ |
| திருக்குடமூக்கு | ௬௫ |
| திருவக்கரை | ௬௬ |
| திருவெண்டுறை | ௬௭ |
| திருப்பனந்தாள் | ௬௮ |
| திருச்செங்காட்டங்குடி | ௬௯ |
| திருப்பெருவேளூர் | ௭0 |
| திருக்கச்சிநெறிக்காரைக்காடு | ௭௧ |
| திருவேட்டக்குடி | ௭௩ |
| **பண்-சாதாரி.** | |
| திருப்பிரமபுரம்-வழிமொழித்திருவிராகம் | ௭௪ |



உ

சிவமயம்.

# திருஞானசம்பந்தசுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்.

## மூன்றாந்திருமுறை

### கோயில் - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்

ஆடினாய்நறுநெய்யொடுபான்றயிரந்தணர்பிரியாதசிற்றம்பல
நாடினாயிடமாநறுங்கொன்றைநயந்தவனே
பாடினாய்மறையோடுபல்கீதமும்பல்சடைப்பனிகால்கதிர்வெண்டிங்கள்
சூடினாயருளாய்சுருங்கவெமதொல்வினையே (௧)

கொட்டமேகமழுங்குழலாளொடுகூடினாயெருதேறினாய்நுதல்
பட்டமேபுனைவாயிசைபாடுவபாரிடம்
நட்டமேநவில்வாய்மறையோர்தில்லைநல்லார்பிரியாதசிற்றம்பல
மிட்டமாயுறைவாயிவைமேவியதென்னைகொலோ (௨)

நீலத்தார்கரியமிடற்றார்நல்லநெற்றிமேலுற்றகண்ணினார்பற்று
சூலத்தார்சுடலைப்பொடிநீறணிவார்சடையார்
சீலத்தார்தொழுதேத்துசிற்றம்பலஞ்சேர்தலாற்கழற்சேவடிகைதொழக்
கோலத்தாயருளாயுனகாரணங்கூறுதுமே (௩)

கொம்பலைத்தழகெய்தியநுண்ணிடைக்கோலவாண்மதிபோலமுகத்திரண்
டம்பலைத்தகண்ணாண்முலைமேவியவார்சடையான்
கம்பலைத்தெழுகாமுறுகாளையர்காதலாற்கழற்சேவடிகைதொழ
வம்பலத்துறைவானடியார்க்கடையாவினையே. (௪)

தொல்லையாரமுதுண்ணநஞ்சுண்டதோர்தூமணிமிடறாபகுவாயதோர்
பல்லையார்தலையிற்பலியேற்றுழல்பண்டரங்கா
தில்லையார்தொழுதேத்துசிற்றம்பலஞ்சேர்தலாற்கழற்சேவடிகைதொழ
வில்லையாம்வினைதானெரியம்மதிலெய்தவனே. (௫)

ஆகந்தோயணிகொன்றையாயனலங்கையாயமரர்க்கமராவுமை
பாகந்தோய்பகவாபலியேற்றுழல்பண்டரங்கா
மாகந்தோய்பொழின்மல்குசிற்றம்பலமன்னினாய்மழுவாளினாயழ
னாகந்தோயரையாயடியாரைநணாவினையே. (௬)

சாதியார்பளிங்கின்னொடுவெள்ளியசங்கவார்குழையாய்திகழப்படும்
வேதியாவிகிர்தாவிழவாரணிதில்லைதன்னு
ளாதியார்க்கிடமாயசிற்றம்பலமங்கையாற்றொழவல்லடியார்களை
வாதியாதகலுந்நலியாமலிதீவினையே. (௭)

வேயினார்பணைத்தோளியொடாடலைவேண்டினாய்விகிர்தாவுயிர்கட்கமு
தாயினாயிடுகாட்டெரியாடலமர்ந்தவனே
தீயினார்கணையாற்புரமூன்றெய்தசெம்மையாய்திகழ்கின்றசிற்றம்பல
மேயினாய்கழலேதொழுதெய்துதுமேலுலகே (௮)

தாரினார்விரிகொன்றையாய்மதிதாங்குநீள்சடையாய்தலைவாநல்ல
தேரினார்மறுகிற்றிருவாரணிதில்லைதன்னுட்
சீரினால்வழிபாடொழியாததோர்செம்மையாலழகாயசிற்றம்பல
மேரினாலமர்ந்தாயுனசீரடியேத்துதுமே. (௯)

வெற்றரையுழல்வார்துவராடையர்வேடத்தாரவர்கள்ளுரைகொள்ளன்மின்
மற்றவருலகின்னவலம்மவைமாற்றகில்லார்
கற்றவர்தொழுதேத்துசிற்றம்பலங்காதலாற்கழற்சேவடிகைதொழ
வுற்றவருலகின்னுறுதிகொளவல்லவரே. (௧0)

நாறுபூம்பொழினண்ணியகாழியுணான்மறைவல்லஞானசம்பந்த
னூறுமின்றமிழாலுயர்ந்தாருறைதில்லைதன்னு
ளேறுதொல்புகழேந்துசிற்றம்பலத்தீசனையிசையாற்சொன்னபத்திவை
கூறுமாறுவல்லாருயர்ந்தாரொடுங்கூடுவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருப்பூந்தராய் - பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

பந்துசேர்விரலாள்பவளத்துவர்வாயினாள்பனிமாமதிபோன்முகத்
தந்தமில்புகழாள்மலைமாதொடுமாதிரையான்
வந்துசேர்விடம்வானவரோத்தினொடுந்நிறைந்துவலஞ்செய்துபாமலர்
புந்திசெய்திறைஞ்சிப்பொழிற்பூந்தராய்ப்போற்றுதுமே. (௧)

காவியங்கருங்கண்ணினாள்கனித்தொண்டைவாய்கதிர்முத்தநல்வெண்ணகைத்
தூவியம்பெடையன்னநடைச்சுரிமென்குழலாள் [த
ேவியுந்திருமேனியோர்பாகமாயொன்றிரண்டொருமூன்றொடுசேர்பதி
பூவிலந்தணனொப்பவர்பூந்தராய்ப்போற்றுதுமே. (௨)

பையராவருமல்குன்மெல்லியல்பஞ்சினேரடிவஞ்சிகொணுண்ணிடைத்
தையலாளொருபாலுடையெம்மிறைசாருமிடஞ்
செய்யெலாங்கழுநீர்கமலம்மலர்த்தேறலூறலிற்சேறுலராதநற்
பொய்யிலாமறையோர்பயில்பூந்தராய்ப்போற்றுதுமே. (௩)

முள்ளிநாண்முகைமொட்டியலங்கோங்கினரும்புதேன்கொள்குரும்பைமூவா
துள்ளியன்றபைம்பொற்கலசத்தியலொத்தகமுலை [மருந்
வெள்ளிமால்வரையன்னதோர்மேனியின்மேவினார்பதிவீமருதண்பொழிற்
புள்ளினந்துயின்மல்கியபூந்தராய்ப்போற்றுதுமே. (௪)

பண்ணியன்றெழுமென்மொழியாள்பகர்கோதையேர்திகழ்பைந்தளிர்மே
பெண்ணியன்றமொய்ம்பிற்பெருமாற்கிடம்பெய்வளையார் [னியோர்
கண்ணியன்றெழுகாவிசெழுங்கருநீலமல்கியகாமருவாவிநற்
புண்ணியருறையும்பதிபூந்தராய்ப்போற்றுதுமே. (௫)

வாணிலாமதிபோனுதலாண்மடமாழையொண்கணாள்வெண்டளநகைப்

யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே. (ங)

தும்மலோடருந்துயர்தோன்றிடினுமம்மலரடியலாலரற்றேனென்னை
கைமல்குவரிசிலைக்கணையொன்றினான்மும்மதிலெரியெழமுனிந்தவனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே. (ச)

கையதுவீழினுங்கழிவுறினுஞ்செய்கழலடியலாற்சிந்தைசெய்யேன
கொய்யணிநறுமலர்குலாயசென்னிமையணிமிடறுடைமறையவனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே (ரு)

வெந்துயர்தோன்றியோர்வெருவுறினுமெந்தாயுனதடியலாலேத்தாதென்னு
வைந்தலையரவுகொண்டரைக்கசைத்தசந்தவெண்பொடியணிசங்கரனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே. (சா)

வெப்பொடுவிரவியோர்வினைவரினுமப்பாவுனடியலாலரற்றேனென்னு
வொப்புடையொருவனையுருவழியவப்படியழலெழவிழித்தவனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே. (எ)

பேரிடர்பெருகியோர்பிணிவரினுஞ்சீருடைக்கழலலாற்சிந்தைசெய்யே
னேருடைமணிமுடியிராவணனையாரிடர்படவரையடர்த்தவனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே. (அ)

உண்ணினும்பசிப்பினுமுறங்கினுநின்னொண்மலரடியலாலுரையாதென்னா
கண்ணனுங்கடிகமழ்தாமரைமேலண்ணலுமளப்பரிதாயவனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே. (கூ)

பித்தொடுமயங்கியோர்பிணிவரினுமத்தவுன்னடியலாலரற்றேனென்னாப்
புத்தருஞ்சமணருமபுறனுரைக்கப்பத்தர்கட்கருள்செய்துபயின்றவனே
யிதுவோவெமையாளுமாறீவதொன்றெமக்கில்லையே
லதுவோவுனதின்னருளாவடுதுறையானே. (க0)

அலைபுனலாவடுதுறையமர்ந்தவிலைநுனைவேற்படையெம்மிறையை
நலமிகுஞானசம்பந்தன்சொன்னவிலையுடையருந்தமிழ்மாலைவல்லார்
வினையாயினநீங்கிப்போய்விண்ணவர்வியனுலகம்
நிலையாகமுன்னேறுவர்நிலமிசைநிலையிலரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பூந்தராய்-ஈரடிமேல்வைப்பு-பண்-காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

தக்கன்வேள்விதகர்த்தவன்பூந்தராய்
மிக்கசெம்மைவிமலன்வியன்கழற்
சென்றுசிந்தையில்வைக்கமெய்க்கதி

புள்ளினம்புகழ்போற்றியபூந்தராய்
வெள்ளந்தாங்குவிகிர்தனடிதொழ
ஞாலத்திலுயர்வாருள்குநன்னெறி
மூலமாயமுதல்வன்றானே. (௨)

வேந்தராயுலகாளவிருப்புறு
பூந்தராய்நகர்மேயவன்பொற்கழ
னீதியானினைந்தேத்தியுள்கிடச்
சாதியாவினையானதானே (௩)

பூசுரர்தொழுதேத்தியபூந்தரா
யீசன்சேவடியேத்தியிறைஞ்சிடச்
சிந்தைநோயவைதீரநல்கிய
விந்துவார்சடையெம்மிறையே (௪)

பொலிந்தவெண்பணிமேனியன்பூந்தராய்
மலிந்தபுந்தியராகிவணங்கிட
நந்தமேல்வினையோடவீடுசேர்
யெந்தையாயவெம்மீசன்றானே (௫)

பூதஞ்சூழப்பொலிந்தவன்பூந்தராய்
நாதன்சேவடிநாளுநவின்றிட
நல்குநாடொறுமின்பநல்கிப்புனல்
பிலகுவார்சடைப்பிஞ்ஞகனே. (௬)

புற்றினாகமணிந்தவன்பூந்தராய்ப்
பற்றிவாழும்பரமனைப்பாடிடப்
பாவமாயினதீரப்பணித்திடுஞ்
சேவதேறியசெல்வன்றானே. (௭)

போதகத்துரிபோர்த்தவன்பூந்தராய்
காதலித்தான்கழல்விரலொன்றினா
லரக்கனாற்றலழித்தவனுக்கருள்
பெருக்கிநின்றவெம்பிஞ்ஞகனே. (௮)

மத்தமானவிருவர்மருவொணா
வத்தனானவன்மேவியபூந்தரா
யாளதாகவடைந்துய்ம்மினும்வினை
யாளுமாறருள்செய்யுந்தானே. (௯)

பொருத்தமில்சமண்சாக்கியர் பொய்கடிந்
திருத்தல்செய்தபிரானிமையோர்தொழப்
பூந்தராய்நகர்கோயில்கொண்டுகை
யேந்துமான்மறியெம்மிறையே. (௧௦)

புந்தியான்மிகநல்லவர்பூந்தரா
யந்தமில்லெம்மடிகளைஞானசம்
பந்தன்மாலைகொண்டேத்திவாழ்த்தும்
பந்தமார்வினைபாரிடுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

### திருக்கொள்ளம்பூதூர்-ஈரடிமேல்வைப்பு-பண்-காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்

கொட்டமேகமழுங்கொள்ளம்பூதூர்
நட்டமாடியநம்பனையுள்க
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௧)

கோட்டகக்கழனிக்கொள்ளம்பூதூர்
நாட்டகத்துறைநம்பனையுள்க
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௨)

குலையினார்தெங்குசூழ்கொள்ளம்பூதூர்
விலையிலாட்கொண்டவிகிர்தனையுள்க
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௩)

குவளைகண்மலருங்கொள்ளம்பூதூர்த்
தவளநீறணிதலைவனையுள்க
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே (௪)

கொன்றைபொன்சொரியுங்கொள்ளம்பூதூர்
நின்றபுன்சடைநிமலனையுள்க
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௫)

ஓடம்வந்தணையுங்கொள்ளம்பூதூ
ராடல்பேணியவடிகளையுள்க
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௬)

ஆறுவந்தணையுங்கொள்ளம்பூதூ
ரேறுதாங்கியவிறைவனையுள்க
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௭)

குரக்கினம்பயிலுங்கொள்ளம்பூதூ
ரரக்கனைச்செற்றவாதியையுள்க
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௮)

பருவராலுகளுங்கொள்ளம்பூதூ
ரிருவர்காணரியானைக்கழலுள்க
செல்லவுந்துகசிந்தையார்தொழ
நல்குமாறருணம்பனே. (௯)

நீரகக்கழனிக்கொள்ளம்பூதூர்த்
தேரமண்செற்றசெல்வனையுள்க
செல்லவுந்துகசிந்தையார்தொழ

கொன்றைசேர்சடையான்கொள்ளம்பூதூர்
நன்றுகாழியுண்ஞானசம்பந்த
னின்றுசொன்னமாலைகொண்டேத்தவல்லார்போ
யென்றுமவானவரோடிருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

திருப்புகலி-பண்-காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

கண்ணுதலானும்வெண்ணீற்றினானுங்கழலார்க்கவே
பண்ணிசைபாடநின்றாடினானும்பரஞ்சோதியும்
புண்ணியநான்மறையோர்களேத்தும்புகலிந்நகர்ப்
பெண்ணினல்லாளொடும்வீற்றிருந்தபெருமானன்றே. (௧)

சாம்பலோடுந்தழலாடினானுஞ்சடையின்மிசைப்
பாம்பினோடுமதிசூடினானும்பசுவேறியும்
பூம்படுகல்லிளவாளைபாயும்புகலிந்நகர்க்
காம்பனதோளியொடும்மிருந்தகடவுளன்றே. (௨)

கருப்புநல்வார்சிலைக்காமனைவேவக்கடைக்கண்டானு
மருப்புநல்லானையினீருரிபோர்த்தமணாளனும்
பொருப்பனமாமணிமாடமோங்கும்புகலிந்நகர்
விருப்பினல்லாளொடும்வீற்றிருந்தவிமலனன்றே. (௩)

அங்கையினங்கழலேந்தினானுமழகாகவே
கங்கையைச்செஞ்சடைசூடினானுங்கடலின்னிடைப்
பொங்கியநஞ்சமுதுண்டவனும்புகலிந்நகர்
மங்கைநல்லாளொடும்வீற்றிருந்தமணவாளனே. (௪)

சாமநல்வேதனுந்தக்கன்றன்வேள்விதகர்த்தானு
நாமநூறாயிரஞ்சொல்லிவானோர்தொழநின்றானும்
பூமல்குதண்பொழின்மன்னுமந்தண்புகலிந்நகர்க்
கோமளமாதொடும்வீற்றிருந்தகுழகனன்றே. (௫)

இரவிடையொள்ளெரியாடினானுமிமையோர்தொழச்
செருவிடைமுப்புரந்தீயெரித்தசிவலோகனும்
பொருவிடையொன்றுகந்தேறினானும்புகலிந்நக
ரரவிடைமாதொடும்வீற்றிருந்தவழகனன்றே. (௬)

சேர்ப்பதுதிண்சிலைமேவினானுந்திகழ்பாலன்மேல்
வேர்ப்பதுசெய்தவெங்கூற்றுதைத்தானும்வேள்விப்புகை
போர்ப்பதுசெய்தணிமாடமோங்கும்புகலிந்நகர்ப்
பார்ப்பதியோடுடன்வீற்றிருந்தபரமனன்றே. (௭)

கன்னெடுமால்வரைக்கீழரக்கன்னிடர்கண்டானும்
வின்னெடும்போர்விறல்வேடனாகிவிசயற்கொரு
பொன்னெடுங்கோல்கொடுத்தானுமந்தண்புகலிந்நக
ரன்னமன்னநடைமங்கையொடுமமர்ந்தானன்றே. (௮)

பொன்னிறநான்முகன்பச்சையானென்றிவர்புகக்குழித்

புன்னைபொன்றுதிரமல்குமந்தண்புகலிந்நகர்
பின்னிடைமாதொடுமேவிற்றிருந்தவிமலனவனே. (௯)

பிண்டியும்போதியும்பேணுவார்பேசினைப்பேணத்தோர்
தொண்டருங்காதல்செய்சோதியாயசுடர்ச்சோதியான
புண்டரீகமலர்ப்பொய்கைசூழ்ந்தபுகலிந்நகர்
வண்டமர்கோதையொடிருந்தமணவாளனே. (௧௦)

பூங்கமழ்கோதையொடிருந்தான்புகலிந்நகர்ப்
பாங்கனைஞானசம்பந்தன்சொன்னதமிழ்ப்பத்திவை
யாங்கமர்வெய்தியவாதியாகவிசைவல்லவர்
ஓங்கமரர்பதியோர்தொழச்செல்வதுமுண்மையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கடவூர்த்திருவீரட்டம்-பண்-காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

சடையுடையானுநெய்யாடலானுஞ்சரிகோவண
வுடையுடையானுமையார்ந்தவொண்கண்ணுமைகேள்வனுங்
கடையுடைநன்னெடுமாடமோங்குகடவூர்தனுள்
விடையுடையண்ணலும்வீரட்டானத்தானல்லனே. (௧)

விரிதருவார்சடையானும்வெள்ளையெருதேறியும்
புரிதருமாமலர்க்கொன்றைமாலைபுனைந்தேத்தவே
கரிதருகாலனைச்சாடினானுங்கடவூர்தனுள்
விரிதருதொல்புகழ்வீரட்டானத்தானல்லனே. (௨)

நாதனுநள்ளிருளாடினானுநளிர்போதின்கட்
பாதனும்பாய்புலித்தோலினானும்பசுவேறியுங்
காதலார்தங்கடவூரினானுங்கலந்தேத்தவே
வேதமோதியும்வீரட்டானத்தானல்லனே. (௩)

மழுவமர்செல்வனுமாசிலாதபல்பூதமுன்
முழவொலியாழ்குழன்மொந்தைகொட்டமுதுகாட்டிடைக்
கழல்வளர்காலுறநேசித்தாடினானுங்கடவூர்தனுள்
விழவொலிமல்கியவீரட்டானத்தானல்லனே. (௪)

சுடர்மணிச்சுண்ணவெண்ணீற்றினானுஞ்சுழல்வாயதோர்
படமணிநாகமரைக்கசைத்தபரமேட்டியுங்
கடமணிமாவுரித்தோலினானுங்கடவூர்தனுள்
விடமணிகண்டனும்வீரட்டானத்தானல்லனே. (௫)

பண்பொலிநான்மறைபாடியாடிப்பலவூர்கள்போ
யுண்பலிகொண்டுழல்வானும்வானினொளிமல்கிய
கண்பொலிநெற்றிவெண்டிங்களானுங்கடவூர்தனுள்
வெண்பொடிபூசியும்வீரட்டானத்தானல்லனே. (௬)

செவ்வழலாய்நிலனாகிநின்றசிவமூர்த்தியு
முவ்வழலானமறையைந்துமாயமுனிகேள்வனுங்
கவ்வழல்வாய்க்கதநாகமார்த்தான்கடவூர்தனுள்
வெவ்வழலேந்துகைவீரட்டானத்தானல்லனே. (௭)

ஊறுடைவெண்டலைகையிலேந்திப்பல்லூர்தொறும்
வீறுடைமங்கையரையம்பெய்யவிறலார்ந்ததோ
ரேறுடைவெல்கொடியெந்தைமேயவிராமேச்சரம்
பேறுடையான்பெயரேத்துமாந்தர்பிணிபேருமே. (௫)

அணையலைசூழ்கடலன்றடைத்துவழிசெய்தவன்
பணையிலங்குமுடிபத்திறுத்தபழிபோக்கிய
விணையிலியென்றிருந்தகோயிலிராமேச்சரந்
துணையிலிதூமலர்ப்பாதமேத்தத்துயர்நீங்குமே. (௬)

சனிபுதன்ஞாயிறுவெள்ளிதிங்கட்பலதீயன
முனிவனசெய்துரநாளைவென்றவ்வினைமூடிட
வினியருணல்கிடென்றண்ணல்செய்தவிராமேச்சரம்
பணிமதிசூடிநின்றாடவல்லபரமேட்டியே. (௭)

பெருவரையன்றெடுத்தேந்தினான்றன்பெயர்சாய்கெட
வருவரையாலடர்த்தன்றருணல்கியவன்மாலொடு
மிருவருநாடிநின்றேத்துகோயிலிராமேச்சரந்
தொருவனுமேபலவாகிநின்றதொருவண்ணமே. (௮-௯)

சாக்கியர்வன்சமண்கையர்மெய்ப்பிறருமாற்றத்தார்
வாக்கியலுமுரைபற்றுவிட்டுமதியொண்மையா
லேக்கியலுஞ்சிலையண்ணல்செய்தவிராமேச்சர
மாக்கியசெல்வனையேத்திவாழ்மினருளாகவே. (௧௦)

பகலவன்மீதியங்காமைக்காத்தபதியோன்றனை
யிகலழித்தவனேத்துகோயிலிராமேச்சரம்
புகலியுண்ஞானசம்பந்தன்சொன்னதமிழ்புந்தியா
லகலிடமெங்குநின்றேத்தவல்லார்க்கில்லையல்லலே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

### திருப்புனவாயில்-பண்-காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

மின்னியல்செஞ்சடைவெண்பிறையன்விரிநூலினன்
பன்னியநான்மறைபாடியாடிப்பலவூர்கள்போ
யன்னமன்னந்நடையாளொடும்மமருமிடம்
புன்னைநன்மாமலர்பொன்னுதிர்க்கும்புனவாயிலே. (௧)

விண்டவர்தம்புரமூன்றெரித்துவிடையேறிப்போய்
வண்டமருங்குழன்மங்கையொடும்மகிழ்ந்தானிடங்
கண்டலுஞ்ஞாழலுநின்றுபெருங்கடற்கானல்வாய்ப்
புண்டரீகம்மலர்ப்பொய்கைசூழ்ந்தபுனவாயிலே. (௨)

விடையுடைவெல்கொடியேந்தினானும்விறற்பாரிடம்
புடைபடவாடியவேடத்தானும்புனவாயிலிற்
றொடைநவில்கொன்றையந்தாரினானுஞ்சுடர்வெண்மழுப்
படைவலனேந்தியபாலனெய்யாடும்பரமனன்றே. (௩)

சங்கவெண்டோடணிகாதினானுஞ்சடைதாழவே
யங்கையிலங்கழலேந்தினானுமழகாகவே

பொங்கரவம்மணிமார்பினானும்புனவாயிலிற
பைங்கணவெள்ளேறறண்ணலாகிநின்றபரமேட்டியே. (௪)

கலிபடுதண்கடனஞ்சமுண்டகறைக்கண்டனும
புலியதள்பாம்பரைச்சுற்றினானும்புனவாயிலி
னொலிதருதண்புனலோடெருக்குமமத்தமுந்தழு
மெலிதருவெண்பிறைசூடிநின்றவிடையூர்தியே. (௫)

வாருறுமென்முலைமங்கைபாடநடமாடிப்போய்ங்
காருறுகொன்றைவெண்டிங்களானுங்கனலவாயதோர்
போருறுவெண்மழுவேந்தினானும்புனவாயிலிற்
சீருறுசெல்வமல்கவிருந்தசிவலோகனே. (௬)

பெருங்கடனஞ்சமுதுண்டுகந்துபெருங்காட்டிடைத்
திருந்திளமென்முலைத்தேவிபாடநடமாடிப்போய்ப்
பொருந்தலர்தம்புரமூன்றுமெய்துபுனவாயிலி
னிருந்தவன்றன்கழலேத்துவார்கட்கிடரில்லையே. (௭)

மனமிகுவேலன்னவாளரக்கனவலியொல்கிட
வனமிகுமால்வரையாலடர்த்தானிடமன்னிய
வினமிகுதொல்புகழ்பாடலாடலெழின்மல்கிய
புனமிகுகொன்றையந்தென்றலார்ந்தபுனவாயிலே. (௮)

திருவளர்தாமரைமேவினானுந்திகழ்பாற்கடற்
கருநிறவண்ணனுங்காண்பரியகடவுளிடங்
நரல்சுரிசங்கொடிப்பியுந்திநலமல்கிய
பொருகடல்வெண்டிரைவந்தெற்றும்புனவாயிலே. (௯)

போதியெனப்பெயராயினாரும்பொறியில்சமண
சாதியுரைப்பனகொண்டயர்ந்துதளர்வெய்தன்மின
போதவிழ்தண்பொழின்மல்குமந்தண்புனவாயிலில
வேதனைநாடொறுமேத்துவார்மேல்வினைவீடுமே (௧0)

பொற்றொடியாளுமைபங்கன்மேவும்புனவாயிலைக
கற்றவர்தாந்தொழுதேத்திநின்றகடற்காழியா
னற்றமிழ்ஞானசம்பந்தன்சொன்னதமிழ்நன்மையா
லற்றமில்பாடல்பத்தேத்தவல்லாரருள்சேர்வரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கோட்டாறு - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்

வேதியாவிண்ணவரேத்தநின்றான்விளங்குமறை
யோதியவொண்பொருளாகிநின்றானொளியாகிய
கோதியதண்பொழில்சூழ்ந்தழகார்திருக்கோட்டாற்றுள்
ளாதியையேநினைந்தேத்தவல்லார்க்கல்லலில்லையே.

ஏலமலர்க்குழன்மங்கைநல்லாளிமவான்மகள்
பாலமருந்திருமேனியெங்கள்பரமேட்டியுங்
கோலமலர்ப்பொழில்சூழ்ந்தெழிலார்திருக்கோட்டாற்றுள்
ளாலநீழற்கீழிருந்தறஞ்சொன்னவழகனே.

இலைமல்குசூலமொன்றேந்தினுமிமையோர்தொழ
மலைமல்குமங்கையோர்பங்கனுமாமணிகண்டனுங்
குலைமல்குதண்பொழில்சூழ்ந்தழகார்திருக்கோட்டாற்றுள்
அலைமல்குவார்சடையேற்றுகந்தவழகன்னன்றே. (௩)

ஊனமரும்முடலுள்ளிருந்தவ்வுமைபங்கனும்
வானமரும்மதிசென்னிவைத்தமறையோதியுந்
தேனமரும்மலர்ச்சோலைசூழ்ந்ததிருக்கோட்டாற்றுட்
டானமரும்மவிடையானுமெங்கடலைவனன்றே (௪)

வம்பமருமலர்க்கோதைபாகமகிழ்மைந்தனுஞ்
செம்பவளத்திருமேனிவெண்ணீறணிசெல்வனுங்
கொம்பமருமலர்வண்டுகெண்டுந்திருக்கோட்டாற்றுள்
நம்பனென்னப்பணிவார்க்கருள்செய்யெங்கண்ணுதலே. (௫)

பந்தமராமெல்விரன்மங்கைநல்லாளொருபாகமா
வெந்தபொடிப்பூசவல்லவிகிர்தனுமிக்க
கொந்தமருமலர்ச்சோலைசூழ்ந்ததிருக்கோட்டாற்றுள்
அந்தணனைநினைந்தேத்தவல்லார்க்கில்லையல்லலே. (௬)

துண்டமருமதிசூடிநீடுசடாவண்ணனும்
வண்டமருங்குழன்மங்கைநல்லாளொருபங்கனுந்
தெண்டிரைநீர்வயல்சூழ்ந்தழகார்திருக்கோட்டாற்றுள்
அண்டமுமெண்டிசையாகிநின்றவழகன்னன்றே. (௭)

இரவமருந்நிறம்பெற்றுடையவிலங்கைக்கிறை
கரவமரக்கயிலையெடுத்தானவலிசெற்றவன்
குரவமரும்மலர்ச்சோலைசூழ்ந்ததிருக்கோட்டாற்றுள்
அரவமருஞ்சடையானடியார்க்கருள்செய்யுமே (௮)

ஓங்கியநாரணனான்முகனுமுணராவகை
நீங்கியதீயுருவாகிநின்றநிமலன்னிழற்
றேங்கமரும்பொழில்சூழ்ந்தெழிலார்திருக்கோட்டாற்றுள்
ஆங்கமரும்பெருமானமரர்க்கமரன்னன்றே. (௯)

கடுநொடித்ததுவராடையர்காட்சியில்லார்தமக்கா
தடுக்கிடுக்கிச்சமணேதிரிவார்கட்குத்தன்னருள
கொடுக்ககில்லாக்குழகன்னமருந்திருக்கோட்டாற்றுள
இடுக்கணின்றித்தொழுவாரமரர்க்கிறையாவரே. (௰)

கொடியுடைமாலவிடையூர்தியினன்றிருக்கோட்டாற்றுள
அடிகழலார்க்கநின்றாடவல்லவருளாளனைக்
கடிகமழ்பூம்பொழிற்காழியுண்ஞானசம்பந்தன்சொற்
படியியைபாடிநின்றாடவல்லார்க்கில்லைபாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருவாலவாய் - பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

செய்யனேதிருவாலவாய்மேவிய
வையனேயஞ்சலென்றருள்செய்யெனைப்
பொய்யராமமணர்கொளுவுஞ்சுடர்
பையவேசென்றுபாண்டியற்காகவே. (க)

சித்தனேதிருவாலவாய்மேவிய
வத்தனேயஞ்சலென்றருள்செய்யெனை
யெத்தராமமணர்கொளுவுஞ்சுடர்
பத்திமன்றென்னன்பாண்டியற்காகவே. (உ)

தக்கன்வேள்விதகர்த்தருளாலவாய்ச்
சொக்கனேயஞ்சலென்றருள்செய்யெனை
யெக்கராமமணர்கொளுவுஞ்சுடர்
பக்கமேசென்றுபாண்டியற்காகவே. (ங)

சிட்டனேதிருவாலவாய்மேவிய
வட்டமூர்த்தியனேயஞ்சலென்றருள்
துட்டராமமணர்கொளுவுஞ்சுடர்
பட்டிமன்றென்னன்பாண்டியற்காகவே. (ச)

நண்ணலார்புரமூன்றெரியாலவா
யண்ணலேயஞ்சலென்றருள்செய்யெனை
எண்ணிலாவமணர்கொளுவுஞ்சுடர்
பண்ணியற்றமிழ்ப்பாண்டியற்காகவே. (ரு)

தஞ்சமென்றுன்சரண்புகுந்தேனையு
மஞ்சலென்றருளாலவாயண்ணலே
வஞ்சஞ்செய்தமணர்கொளுவுஞ்சுடர்
பஞ்சவன்றென்னன்பாண்டியற்காகவே. (சா)

செங்கண்வெள்விடையாய்திருவாலவா
யங்கணாவஞ்சலென்றருள்செய்யெனைக்
கங்குலாரமண்கையரிடுங்கனல
பங்கமிறென்னன்பாண்டியற்காகவே. (எ)

தூர்த்தன்வீரந்தொலைத்தருளாலவா
யார்த்தனேயஞ்சலென்றருள்செய்யெனை
யேத்திலாவமணர்கொளுவுஞ்சுடர்
பார்த்திபன்றென்னன்பாண்டியற்காகவே. (அ)

தாவினானயன்றானறியாவகை
மேவினாய்திருவாலவாயாயரு
ளோவிலாவமணர்கொளுவுஞ்சுடர்
பாவினன்றென்னன்பாண்டியற்காகவே. (கூ)

எண்டிசைக்கெழிலாலவாய்மேவிய
வண்டனேயஞ்சலென்றருள்செய்யெனைக்
குண்டராமமணர்கொளுவுஞ்சுடர்
பண்டிமன்றென்னன்பாண்டியற்காகவே. (க0)

அப்பனாலவாயாதியருளினால
வெப்பநதென்னவனமேலுறமேதினிக
கொப்பஞானசமபநதனுரைபத்துரு
செப்பவல்லவார்தீதிலாசசெலவரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருவாலவாய்-திருவிராகம் பண்-கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

வீடலாலவாயிலாய்விழுமியார்கணின்கழற
பாடலாலவாயிலாய்பரவநின்றபணபனே
காடலாலவாயிலாய்கவாலிநீள்கடிமமதிற
கூடலாலவாயிலாயகுலாயதெனனகொள்கையே. (க)

படடிசைநதவலகுலாளபாவையாளோர்பாகமா
வொடடிசைநததனறியுமமுச்சியாளொருததியாக்
கொடடிசைநதவாடலாயகூடலாலவாயிலா
யெட்டிசைநதமூர்ததியாயிருநதவாறிதெனகொலோ. (உ)

குற்றநீகுணங்கணீகூடலாலவாயிலாய்
சுற்றநீபிரானுநீதொடர்நதிலஙகுசோதிநீ
கற்றநூற்கருததுநீயருத்தமினபமெனறிவை
முற்றுநீபுகழ்நதுமுனனுரைபபதெனமுகமமனே. (ங)

முதிருநீர்சசடைமுடிமுதலவநீமுழஙகழ
லதிரவீசியாடுவாயழகனீ புயஙகனீ
மதுரநீமணாளனீமதுரையாலவாயிலாய்
சதுரநீசதுமுகனகபாலமேநதுசமபுவே. (ச)

கோலமாயநீணமதிறகூடலாலவாயிலாய
பாலனாயதொண்டுசெய்துபண்டுமினறுமுனனையே
நீலமாயகண்டனேநினனையனறிநிததலுரு
சீலமாயசிநதையிற்றேறவதில்லைதேவரே. (ரு)

பொன்றயங்கிலங்கொளிநலஙகுளிநதபுனசடை
பினறயஙகவாடுவாய்பிஞஞகாபிறப்பிலீ
கொன்றையமமுடியினாய்கூடலாலவாயிலாய
நினறயங்கியாடலேநினைப்பதெனனியமமே. (சு)

ஆதியந்தமாயினாயாலவாயிலண்ணலே
சோதியநதமாயினாய்சோதியுள்ளோர்சோதியாய்
கீதம்வந்தவாய்மையாற்கிளர்தருக்கினாககலா
லோதிவந்தவாய்மையாலுணர்ந்துரைககலாகுமே (எ)

கறையிலஙகுகண்டனேகருததிலாககருஙகடற
றுறையிலஙகைமனனனைதகாதொளடரவூனறினாய
மறையிலஙகுபாடலாய்மதுரையாலவாயிலாய
நிறையிலங்குநெஞ்சினாநினைப்பதேநியமமே. (அ)

தாவணவ்விடையினாய்தலைமையாகநாடொறுங
கோவணவ்வுடையினாய்கூடலாலவாயிலாய்

தீவணம்மலர்மிசைத்திசைமுகனுமாலுநின்
றாவணம்மளக்கிலாதுளக்கமெய்யதுவாகவே. (௯)

தேற்றமில்வினைத்தொழிற்றேரருஞ்சமணரும்
போற்றிசைத்துநின்கழற்புகழ்ந்துபுண்ணியங்கொளார்
கூற்றுதைத்ததாளினாய்கூடலாலவாயிலாய்
நாற்றிசைக்குமூர்த்தியாகிநின்றதென்னநன்மையே. (௧௦)

போயநீர்வளங்கொளும்பொருபுனற்புகலியான
பாயகேள்விஞானசம்பந்தனல்லபண்பினா
லாயசொல்லின்மாலைகொண்டாலவாயிலண்ணலைத்
தீயதீரவெண்ணுவார்கள்சிந்தையாயதேவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருவானைக்கா - திருவிராகம் - பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

வானைக்காவல்வெண்மதிமல்குபுல்குவார்சடைத்
தேனைக்காவலின்மொழிதேவிபாகமாயினா
னானைக்காவிலண்ணலையபயமாகவாழ்பவ
ரேனைக்காவல்வேண்டுவார்கடேதுமேதமில்லையே. (௧)

சேறுபட்டதண்வயற்சென்றுசென்றுசேணுலா
வாறுபட்டநுண்டுறையானைக்காவிலண்ணலார்
நீறுபட்டமேனியார்நிகரில்பாதமேத்துவார்
வேறுபட்டசிந்தையார்விண்ணினண்ணல்வல்லரே. (௨)

தாரமாயமாதராளோர்பாகமாயினா
னீரமாயபுன்சடையேற்றதிங்கள்சூடினா
னாரமாயமார்புடையானைக்காவிலண்ணலை
வாரமாய்வணங்குவார்வல்வினைகண்மாயுமே. (௩)

விண்ணினண்ணுபுல்கியவீரமாயமால்விடைச்
சுண்ணவெண்ணீறாடினான்சூலமேந்துகையினா
னண்ணல்கண்ணோர்முன்றினானைக்காவுகைதொழ
வெண்ணும்வண்ணம்வல்லவர்க்கேதமொன்றுமில்லையே. (௪)

வெய்யபாவங்கைவிடவேண்டுவீர்களாண்டசீர்
மைகொள்கண்டன்வெய்யதீமாலையாடுகாதலான்
கொய்யவிண்டநாண்மலர்க்கொன்றைதுன்றுசென்னியெம்
மையன்மேயபொய்கைசூழானைக்காவுசேர்மினே. (௫)

நாணுமோர்வுசார்வுமுன்னகையுமுட்குநன்மையும்
பேணுறுத்தசெல்வமும்பேசநின்றபெற்றியா
னாணும்பெண்ணுமாகியவானைக்காவிலண்ணலார்
காணுங்கண்ணுமூன்றுடைக்கறைமிடற்றனல்லனே. (௬)

கூருமாலைநண்பகற்கூடிவல்லதொண்டர்கள்
பேருமூருஞ்செல்வமும்பேசநின்றபெற்றியான்
பாரும்விண்ணுங்கைதொழப்பாயுங்கங்கைசெஞ்சடை
யாரநீரோடேந்தினானைக்காவுசேர்மினே. (௭)

பொன்னமல்குதாமரைப்போதுதாதுவண்டினம்
மன்னமல்குதண்டுறையானைக்காவிலண்ணலைப்
பன்னவல்லநான்மறைபாடவல்லதன்மையோர்
முன்னவல்லார்மொய்கழற்றுன்னவல்லார்வினையே. (௮)

ஊனொடுண்டனன்றெனவூனொடுண்டறீதென
வானதொண்டரன்பினாற்பேசநின்றதன்மையான்
வானொடொன்றுசூடினான்வாய்மையாகமன்னிநின்
றானொடஞ்சுமாடினானைக்காவுசேர்மினே. (௯)

கையிலுண்ணுங்கையருங்கடுக்கடின்கழுக்களு
மெய்யைப்போர்க்கும்பொய்யரும்வேதநெறியையறிகிலார்
தையல்பாகமாயினானுமழலதுருவத்தானெங்க
ளையன்மேயபொய்கைசூழானைக்காவுசேர்மினே. (௧௦)

ஊழியூழிவையகத்துயிர்கடோற்றுவானொடும்
ஆழியானுங்காணகிலாவானைக்காவிலண்ணலைக்
காழிஞானசம்பந்தன்கருதிச்சொன்னபத்திவை
வாழியாகக்கற்பவர்வல்வினைகண்மாயுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பாசுரம்-பண்-கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்

வாழ்கவந்தணர்வானவரானினம்
வீழ்கதண்புனல்வேந்தனுமோங்குக
ஆழ்கதீயதெல்லாமரனாமமே
சூழ்கவையகமுந்துயர்தீர்கவே. (௧)

அரியகாட்சியராய்த்தமதங்கைசே
ரெரியரேறுகந்தேறுவர்கண்டமுங்
கரியர்காருறைவாழ்க்கையராயினும்
பெரியராரறிவாரவர்பெற்றியே. (௨)

வெந்தசாம்பல்விரையெனப்பூசியே
தந்தையாரொடுதாயிலர்தம்மையே
சிந்தியாவெழுவார்வினைதீர்ப்பரா
லெந்தையாரவரெவ்வகையார்கொலோ. (௩)

ஆட்பாலவர்க்கருளும்வண்ணமுமாதிமாண்பும்
கேட்பானபுகிலளவில்லைகிளக்கவேண்டா
கோட்பாலனவும்வினையுங்குறுகாமையெந்தை
தாட்பாலவணங்கித்தலைநின்றிவைகேட்கத்தக்கார். (௪)

ஏதுக்களாலுமெடுத்தமொழியாலுமிக்குச்
சோதிக்கவேண்டாசுடர்விட்டுளனெங்கள்சோதி
மாதுக்கநீங்கலுறுவீர்மனம்பற்றிவாழ்மின்
சாதுக்கண்மிக்கீரிறையேவந்துசார்மின்களே. (௫)

ஆடும்மெனவும்மருங்கூற்றமுதைத்துவேதம்
பாடும்மெனவும்புகழல்லதுபாவநீங்கக்

கேடுமெபிறப்புமமறுக்கும்மெனக்கேட்டீராகி
ளுடுநதிறததாாக்கருளலலதுநாட்டலாமே. (௬)

கடிசோநதபோதுமலரானகைக்கொண்டுநல்ல
படிசோந்தபால்கொணடஙகாட்டிடத்தாதைபண்டு
முடிசோநதகாலையறவெட்டிடமுககண்மூாததி
யடிசோநதவண்ணமமறிவாாசொலககேட்டுமென்றே. (௭)

வேதமமுதலவன்முதலாகவிளஙகிவையம
மேதபபடாமெயுலகததவாோததலசெய்யப்
பூகமுதலவனமுதலேமுதலாப்பொலிநத
சூதனஞெலிமாலையெனறேகலிக்கோவைசொல்லே. (௮)

பாராழிவடடமபகையானலிநதாட்டவாடிப்
பேராழியானதிடாகணடருளசெயதல்பேணி
நீராழிவிடடேறிநெஞ்சிடஙகொண்டவர்க்குப்
போராழியீநதபுகழுமபுகழுறறதனறே. (௯)

மாலாயவனுமமறைவலலநானமுகனும
பாலாயதேவாபகரிலலமுதூடடலபேணிக்
காலாயமுநநீாகடைநதாாககரிதாயெழுநத
வாலாலமுணடஙகமராககருள்செயததாமே. (௧௦)

அறறனறியநதணமதுைாதமெதாகையாக்கினுநந
தெறறெனறுமெதயவநதெளியாாகரைககோலைதெண்ணீரப்
பறறினறிபபாஙகெதிாவிரவுமபண்புநோக்கிற
பெறறெனறுயாததபெருமானபெருமானுமனறே. (௧௧)

நல்லாாகள்சோபுகலிஞானசமபநதனலல
வெலலாாகளுமபரவுமீரனேயேதுபாடல
பலலாாகளுமமதிககபபாசுரஞ்சொன்னபததும
வலலாாகளவானோருலகாளவுமவல்லரனறே. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

திருவான்மியூர் - பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

விரையாாகொன்றையினுய்விடமுண்டமிடறறினனே
யுரையாாபலபுகழாயுமைநங்கையோர்பஙகுடையாய
திரையாாதெணகடல்சூழ்திருவானமியூருறையும
மரையாவுனனையலலாலடையாதெனதாதரவே. (௧)

இடியாரேறுடையாயிமையோாதமமணிமுடியாய
கொடியாாமாமதியோடரவமமலாகொனறையினய
செடியாாமாதவிசூழ்திருவானமியூருறையும
மடிகேளுனனையலலாலடையாதெனதாதரவே. (௨)

கையாாவெண்மழுவர்கனலபோறிருமேனியனே
மையாரொணகணலலாளுமையாளவளர்மார்பினனே
செய்யாாசெங்கயலபாயதிருவான்மியூருறையு
மையாவுனனையல்லாலடையாதெனதாதரவே. (௩)

பொன்போலுஞ்சடைமேற்புனறாங்கியபுண்ணியனே
மின்போலும்புரிநூல்விடையேறியவேதியனே
தென்பால்வையமெலாந்திகழுந்திருவான்மிதன்னி
லன்பாவுன்னையல்லாலடையாதெனதாதரவே. (௪)

கண்ணாருநுதலாய்கதிர்சூழொளிமேனியின்மே
லெண்ணாவெண்பொடிநீறணிவாயெழிலார்பொழில்சூழ்
திண்ணார்வண்புரிசைத்திருவான்மியூருறையு
மண்ணாவுன்னையல்லாலடையாதெனதாதரவே. (௫)

நீதிநினையல்லாலொன்றியாதுநினைந்தறியே
னோதிநான்மறைகண்மறையோன்றலையொன்றினையுஞ்
சேதிசெதமில்லாததிருவான்மியூருறையு
மாதியுன்னையல்லாலடையாதெனதாதரவே. (௬)

வானார்மாமதிசேர்சடையாய்வரைபோலவருங்
கானாரானையினீருரித்தாயகறைமாமிடற்றாய்
தேனார்சோலைகள்சூழ்திருவான்மியூருறையு
மானாயுன்னையல்லாலடையாதெனதாதரவே. (௭)

பொறிவாய்நாகணையானொடுபூமிசைமேயவனு
நெறியாநீள்கழன்மேன்முடிகாண்பரிதாயவனே
செறியார்மாமதில்சூழ்திருவான்மியூருறையு
மறிவேயுன்னையல்லாலடையாதெனதாதரவே. (௮-௯)

குண்டாடுஞ்சமணர்கொடுஞ்சாக்கியரென்றிவர்கள்
கண்டாகாரணங்கள்கருதாதவர்பேசநின்றாய்
திண்டேர்வீதியதார்திருவான்மியூருறையு
மண்டாவுன்னையல்லாலடையாதெனதாதரவே. (௧௰)

கன்றாருங்கமுகின்வயல்சூழ்தருகாழிதனி
னன்றானபுகழான்மிகுஞானசம்பந்தனுரை
சென்றாதமிடர்தீர்திருவான்மியூர்தன்மேற்
குன்றாதேத்தவல்லார்கொடுவல்வினைபோயறுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பிரமபுரம் - பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

இறையவனீசனெந்தையிமையோர்தொழுதேத்தநின்ற
கறையணிகண்டன்வெண்டோடணிகாதினன்காலத்தன்று
மறைமொழிவாய்மையினான்மலையாளொடுமன்னுசென்னிப்
பிறையணிசெஞ்சடையான்பிரமாபுரம்பேணுமினே.

சடையினன்சாமவேதன்சிரிகோவணவன்மழுவாட்
படையினன்பாய்புலித்தோலுடையான்மறைபல்கலைநூ
லுடையவனூனமில்லியுடனாயுமைநங்கையென்னும்
பெடையொடும்பேணுமிடம்பிரமாபுரம்பேணுமினே. (௨)

மாணியைநாடுகாலனுயிர்மாய்த்தறச்செற்றுக்காளி
காணியவாடல்கொண்டான்கலந்தூர்வழிசென்றுபிச்சை

பூணியல்வாகக்கொண்டங்குடனேயுறைகங்கையோடும்
பேணியகோயின்மன்னும்பிரமாபுரம்பேணுமினே. (௩)

பாரிடம்விண்ணுமெங்கும்பயினஞ்சுபரந்துமீண்டப்
பேரிடர்த்தேவர்கணம்பெருமானிதுகாவெனலு
மோரிடத்தேகரந்தங்குமைகங்கையொடும்முடனே
பேரிடமாககொண்டபிரமாபுரமபேணுமினே. (௪)

நச்சரவச்சடைமேனளிர்திங்களுமொன்றவைத்தங்
கச்சமெழுவிடைமேலழகார்மழுவேநதிலல
விசைபகாநதுமிகவிடுமினபலியென்றுநாளும
பிசைகொளண்ணனண்ணும்பிரமாபுரமபேணுமினே. (௫)

பெற்றவன்முப்புரங்களபிழையாவண்ணமவாளியினிற்
செற்றவன்செஞ்சடையிறநிகழ்கங்கைதனைத்தரிததிட
டொற்றைவிடையினனுமைநஙகையொடுமமுடனே
பெற்றிமையாலிருநதான்பிரமாபுரமபேணுமினே. (௬)

வேதமலிநதவொலிவிழவினொலிவீணையொலி
கீதமலிநதுடனேகிளரததிகழ்பௌவமறை
யோதமலிநதுயாவானமுகடேறவொணமாலவரையான
பேதையொடுமிருநதானபிரமாபுரமபேணுமினே. (௭)

இமையவரஞ்சியோடவெதிரவாரவாதமமையினறி
யமைதருவலலரக்கனடர்ததுமலையனெறெடுப்பக
குமையதுசெய்துபாடகொறறவாளொடுநாளகொடுததிட்
டுமையொடிருநதபிரான்பிரமாபுரமுனனுமினே. (அ)

ஞாலமளித்தவனுமரியும்மடியோடுமுடி
காலமபலசெலவுங்கண்டிலாமையினறகதறி
யோலமிடவருளியுமைநஙகையொடுமமுடனு
யேலவிருந்தபிரானபிரமாபுரமேத்துமினே. (௯)

துவருறுமாடையினர்தொக்கபீலியர்நக்கரைய
ரவரவர்தன்மைகள்கண்டணுகேன்மினனருள்பெறுவீர
கவருறுசிநதையொன்றிக்கழிகாலமெலலாமபடைதத
விவரவொன்றிறைஞ்சிப்பிரமாபுரமேத்துமினே. (௧௦)

உரைதருநான்மறையோர்புகழ்நதேத்தவொண்மாதினொடும்
வரையெனவீற்றிருந்தான்மலிகின்றபிரமாபுரத
தரைசினையேததவல்லவணிசம்பநதனபத்துமவலலார்
விரைதருவிண்ணுலகம்மெதிர்கொள்ளவிருமபுவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவொற்றியூர் - பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

விடையவன்விண்ணுமண்ணுந்தொழுநின்றவனவெண்மழுவாட்
படையவனபாய்புலித்தோலுடைகோவணமபல்கரந்தைச
சடையவன்சாமவேதன்சசிதங்கியசங்கவெண்டோ
டுடையவன்னூனமிலலியுறையும்மிடமொற்றியூரே. (௧)

பாரிடம்பாணிசெய்யப்பறைக்கட்செறுபல்கணப்பேய்
சீரொடும்பாடலாடலிலயஞ்சிதையாதகொள்கைத்
தாரிடும்போர்விடையன்றலைவன்றலையேகலனா
ஊரிடும்பிச்சைகொள்வானுறையுமிடமொற்றியூரே. (உ)

விளிதருநீருமண்ணும்விசும்போடனல்காலுமாகி
யளிதருபேரருளானாகியவாதிமூர்த்தி
களிதருவண்டுபண்செய்கமழ்கொன்றையினோடணிந்த
வொளிதருவெண்பிறையானுறையுமிடமொற்றியூரே. (ங)

அரவமேகச்சதாகவசைத்தானலர்கொன்றையந்தார்
விரவிவெண்ணூல்கிடந்தவிரையார்வரைமார்பனெந்தை
பரவுவார்பாவமெல்லாம்பறைத்துப்படர்புன்சடைமே
லுரவுநீரேற்றபெம்மானுறையுமிடமொற்றியூரே. (ச)

விலகினார்வெய்யபாவம்விதியாலருள்செய்துநல்ல
பலகினார்மொந்தைதாளந்தகுணிச்சமும்பாணியாலே
யலகினால்வீசிநீர்கொண்டடிமேலலரிட்டுமுட்டா
துலகினோரேத்தநின்றானுறையும்மிடமொற்றியூரே. (ரு)

கமையொடுநின்றசீரான்கழலுஞ்சிலம்புமொலிப்பச்
சுமையொடுமேலும்வைத்தான்விரிகொன்றையுஞ்சோமனையு
மமையொடுநீண்டதிண்டோளழகாயபொற்றோடிலங்க
வுமையொடுங்கூடநின்றானுறையுமிடமொற்றியூரே. (சா)

நன்றியால்வாழ்வதுள்ளமுலகுக்கொருநன்மையாலே
கன்றினார்மும்மதிலுங்கருமால்வரையேசிலையாப்
பொன்றினார்வார்சடைப்பொடிநீறணிந்தாரழலம்
பொன்றினாலெய்தபெம்மானுறையுமிடமொற்றியூரே. (எ)

பெற்றியாற்பித்தனொப்பான்பெருமான்கருமானுரிதோல்
சுற்றியான்சுத்திசூலஞ்சுடர்க்கண்ணுதன்மேல்விளங்கத்
தெற்றியாற்செற்றரக்கனுடலைச்செழுமால்வரைக்கீ
ழொற்றியானமுற்றுமாள்வானுறையுமிடமொற்றியூரே. (அ)

திருவினார்போதினானுந்திருமாலுமோர்தெய்வமுன்னித்
தெரிவினாற்காணமாட்டாத்திகழ்சேவடிசிந்தைசெய்து
பரவினார்பாவமெல்லாம்பறையப்படர்பேரொளியோ
டொருவனாய்நின்றபெம்மானுறையுமிடமொற்றியூரே. (கூ)

தோகையம்பீலிகொள்வார்துவர்கூறைகள்போர்த்துழல்வா
ராகமச்செல்வனாரையலர்தூற்றுதல்காரணமாக
கூகையம்மாக்கள்சொல்லைக்குறிக்கொள்ளன்மினேழுலகு
மோகைதந்தாளவல்லானுறையுமிடமொற்றியூரே. (க0)

ஒண்பிறைமல்குசென்னியிறைவன்னுறையொற்றியூரைச்
சணையர்தந்தலைவன்றமிழ்ஞானசம்பந்தன்சொன்ன
பண்புனைபாடல்பத்தும்பரவிப்பணிந்தேத்தவல்லார்
விண்புனைமேலுலகம்விருப்பெய்துவர்வீடெளிதே. (க)

திருச்சிற்றம்பலம்.

### திருச்சாத்தமங்கை - பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

திருமலர்க்கொன்றைமாலைதிளைக்குமதிசென்னிவைத்தீ
ரிருமலர்க்கண்ணிதன்னோடுடனாவதுமேற்பதொன்றே
பெருமலர்ச்சோலைமேகமுரிஞ்சும்பெருஞ்சாத்தமங்கை
யருமலராதிமூர்த்தியயவந்தியமர்ந்தவனே. (௧)

பொடிதனைப்பூசுமார்பிற்புரிநூலொருபாற்பொருந்தக்
கொடியனசாயலாளோடுடனாவதுங்கூடுமே
கடிமணமல்கிநாளுங்கமழும்பொழிற்சாத்தமங்கை
யடிகணக்கன்பரவவயவந்தியமர்ந்தவனே. (௨)

நூனலந்தங்குமார்பினுகர்நீறணிந்தேறதேறி
மானனநோக்கிதன்னோடுடனாவதுமாண்பதுவே
தானலங்கொண்டுமேகந்தவழும்பொழிற்சாத்தமங்கை
யானலந்தோய்ந்தவெம்மானயவந்தியமர்ந்தவனே. (௩)

மற்றவின்மால்வரையாமதிலெய்துவெண்ணீறுபூசிப்
புற்றரவல்குலாளோடுடனாவதும்பொற்பதுவே
கற்றவர்சாத்தமங்கைநகர்கைதொழச்செய்தபாவ
மற்றவர்நாளுமேத்தவயவந்தியமர்ந்தவனே. (௪)

வெந்தவெண்ணீறுபூசிவிடையேறியவேதகீதன்
பந்தணவும்விரலாளுடனாவதும்பாங்கதுவே
சந்தமாறங்கம்வேதந்தரித்தார்தொழுஞ்சாத்தமங்கை
யந்தமாயாதியாகியயவந்தியமர்ந்தவனே. (௫)

வேதமாய்வேள்வியாகிவிளங்கும்பொருள்வீடதாகிச்
சோதியாய்மங்கைபாகநிலைதான்சொல்லலாவதொன்றே
சாதியான்மிக்கசீராற்றகுவார்தொழுஞ்சாத்தமங்கை
யாதியாய்நின்றபெம்மானயவந்தியமர்ந்தவனே. (௬)

இமையமெல்லாமிரியமதிலெய்துவெண்ணீறுபூசி
யுமையையோர்பாகம்வைத்தநிலைதானுன்னலாவதொன்றே
சமையமாறங்கம்வேதந்தரித்தார்தொழுஞ்சாத்தமங்கை
யமையவேறோங்குசீரானயவந்தியமர்ந்தவனே. (௭)

பண்ணுலாம்பாடல்வீணைபயில்வானோர்பரமயோகி
விண்ணுலாமால்வரையான்மகள்பாகமும்வேண்டினையே
தண்ணிலாவெண்மதியந்தவழும்பொழிற்சாத்தமங்கை
யண்ணலாய்நின்றவெம்மானயவந்தியமர்ந்தவனே. (௮)

பேரொழிற்றோளரக்கன்வலிசெற்றதும்பெண்ணோர்பாக
மீரொழிற்கோலமாகியுடனாவதுமேற்பதொன்றே
காரொழில்வண்ணனோடுகனகம்மனையானுங்காணா
வாரழல்வண்ணமங்கையயவந்தியமர்ந்தவனே. (௯)

கங்கையோர்வார்சடைமேலடையப்புடையேகமழு
மங்கையோடொன்றிநின்றம்மதிதான்சொல்லலாவதொன்றே
சங்கையிலாமறையோரவர்தாந்தொழுசாத்தமங்கை
யங்கையிற்சென்னிவைத்தாயயவந்தியமர்ந்தவனே. (௧௦)

மறையினார்மல்குகாழித்தமிழ்ஞானசம்பந்தன்மன்னு
நிறையினார்நீலநக்கனெடுமாநகரென்றுதொண்ட
ரறையுமூர்சாத்தமங்கையயவந்திமேலாய்ந்தபத்து
முறைமையாலேத்தவல்லாரிமையோரிலுமுந்துவரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

### திருக்குடமூக்கு-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

அரவிரிகோடனீடலணிகாவிரியார்த்தயலே
மரவிரிபோதுமவ்வனமணமல்லிகைகள்ளவிழுங்
குரவிரிசோலைசூழ்ந்தகுழகன்குடமூக்கிடமா
யிரவிரிதிங்கள்சூடியிருந்தானவனெம்மிறையே. (க)

ஓத்தரவங்களோடுமொலிகாவிரியார்த்தயலே
பூத்தரவங்களோடும்புகைக்கொண்டடிபோற்றிநல்ல
கூத்தரவங்களோவாக்குழகன்குடமூக்கிடமா
யேத்தரவங்கள்செய்யவிருந்தானவனெம்மிறையே. (உ)

மயில்பெடைபுல்கியாலமறைமேல்மடவன்னமல்கும்
பயில்பெடைவண்டுபண்செய்பழங்காவிரிப்பைம்பொழில்வாய்க்
குயில்பெடையோடுபாடலுடையான்குடமூக்கிடமா
யியலொடுவானமேத்தவிருந்தானவனெம்மிறையே. (ங)

மிக்கணைதாழ்வேங்கையுரியார்த்துமையாள்வெருவ
வக்கரவாமையேனமருப்போடவைபூண்டழகார்
கொக்கரையோடுபாடலுடையான்குடமூக்கிடமா
யெக்கரையாருமேத்தவிருந்தானவனெம்மிறையே. (ச)

வடிவுடைவாட்டடங்கண்ணுமையஞ்சவோர்வாரணத்தைப்
பொடியணிமேனிமூடவுரிகொண்டவன்புன்சடையான்
கொடிநெடுமாடமோங்குங்குழகன்குடமூக்கிடமா
யிடிபடுவானமேத்தவிருந்தானவனெம்மிறையே. (ரு)

கழைவளர்கவ்வைமுத்தங்கமழ்காவிரியார்த்தயலே
தழைவளர்மாவினல்லபலவின்கனிகடயங்கு
குழைவளர்சோலைசூழ்ந்தகுழகன்குடமூக்கிடமா
விழைவளர்மங்கையோடுமிருந்தானவனெம்மிறையே. (சு)

மலைமலிமங்கைபாகம்மகிழ்ந்தானெழில்வையமுய்யச்
சிலைமலிவெங்கணையாற்சிதைத்தான்புரமூன்றினையுங்
குலைமலிதண்பலவின்பழம்வீழ்குடமூக்கிடமா
விலைமலிசூலமேந்தியிருந்தானவனெம்மிறையே. (எ)

நெடுமுடிபத்துடையநிகழ்வாளரக்கனுடலைப்
படுமிடாகண்டயரப்பருமால்வரைக்கீழடர்த்தான்
கொடுமடறங்குதெங்குபழம்வீழ்குடமூக்கிடமா
விடுமணலெக்கர்சூழவிருந்தானவனெம்மிறையே. (அ)

ஆரெரியாழியானுமலரானுமளப்பரிய
நீரிரிபுன்சடைமேனிரம்பாமதிசூடிநல்ல

### திருச்சாத்தமங்கை - பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

திருமலர்க்கொன்றைமாலை திளைக்குமதிசென்னிவைத்தீ
ரிருமலர்க்கண்ணிதன்னோ டுடனாவதுமேற்பதொன்றே
பெருமலர்ச்சோலைமேக முரிஞ்சும்பெருஞ்சாத்தமங்கை
யருமலராதிமூர்த்தி யயவந்தியமர்ந்தவனே. (௧)

பொடிதனைப்பூசுமார்பிற் புரிநூலொருபாற்பொருந்தக்
கொடியனசாயலாளோ டுடனாவதுங்கூடுவதே
கடிமணமல்கிநாளுங் கமழும்பொழிற்சாத்தமங்கை
யடிகணக்கன்பரவ வயவந்தியமர்ந்தவனே. (௨)

நூனலந்தங்குமார்பி னுகர்நீறணிந்தேறதேறி
மானனநோக்கிதன்னோ டுடனாவதுமாண்பதுவே
தானலங்கொண்டுமேகந் தவழும்பொழிற்சாத்தமங்கை
யானலந்தோய்ந்தவெம்மா னயவந்தியமர்ந்தவனே. (௩)

மற்றவின்மால்வரையா மதிலெய்துவெண்ணீறுபூசிப்
புற்றரவல்குலாளோ டுடனாவதும்பொற்பதுவே
கற்றவர்சாத்தமங்கை நகர்கைதொழச்செய்தபாவ
மற்றவர்நாளுமேத்த வயவந்தியமர்ந்தவனே. (௪)

வெந்தவெண்ணீறுபூசி விடையேறியவேதகீதன்
பந்தணவும்விரலா ளுடனாவதும்பாங்கதுவே
சந்தமாறங்கம்வேதந் தரித்தார்தொழுஞ்சாத்தமங்கை
யந்தமாயாதியாகி யயவந்தியமர்ந்தவனே. (௫)

வேதமாய்வேள்வியாகி விளங்கும்பொருள்வீடதாகிச்
சோதியாய்மங்கைபாக நிலைதான்சொல்லலாவதொன்றே
சாதியான்மிக்கசீராற் றகுவார்தொழுஞ்சாத்தமங்கை
யாதியாய்நின்றபெம்மா னயவந்தியமர்ந்தவனே. (௬)

இமையமெல்லாமிரிய மதிலெய்துவெண்ணீறுபூசி
யுமையையோர்பாகம்வைத்த நிலைதானுன்னலாவதொன்றே
சமையமாறங்கம்வேதந் தரித்தார்தொழுஞ்சாத்தமங்கை
யமையவேறோங்குசீரா னயவந்தியமர்ந்தவனே. (௭)

பண்ணுலாம்பாடல்வீணை பயில்வானோர்பரமயோகி
விண்ணுலாமால்வரையான்மகள்பாகமும்வேண்டினையே
தண்ணிலாவெண்மதியந் தவழும்பொழிற்சாத்தமங்கை
யண்ணலாய்நின்றவெம்மா னயவந்தியமர்ந்தவனே. (௮)

பேரெழிற்றோளரக்கன் வலிசெற்றதும்பெண்ணோர்பாக
மீரெழிற்கோலமாகி யுடனாவதுமேற்பதொன்றே
காரெழில்வண்ணனோடு கனகம்மனையானுங்காணா
வாரழல்வண்ணமங்கை யயவந்தியமர்ந்தவனே. (௯)

கங்கையோர்வார்சடைமே லடையப்புடையேகமழு
மங்கையோடொன்றிநின்ற மதிதான்சொல்லலாவதொன்றே
சங்கையிலாமறையோ ரவர்தாந்தொழுசாத்தமங்கை
யங்கையிற்சென்னிவைத்தா யயவந்தியமர்ந்தவனே. (௧௦)

மறையினர்மல்குகாழித்தமிழ்ஞானசம்பந்தன்மன்னு
நிறையினர்நீலநக்கனெடுமாநகரென்றுதொண்ட
ரறையுமூர்சாத்தமங்கையயவந்திமேலாய்ந்தபத்து
முறைமையாலேத்தவல்லாரிமையோரிலுமுந்துவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்குடமூக்கு-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

அரவிரிகோடனீடலணிகாவிரியாற்றயலே
மரவிரிபோதுமௌவன்மணமல்லிகைகள்ளவிழுங்
குரவிரிசோலைசூழ்ந்தகுழகன்குடமூக்கிடமா
யிரவிரிதிங்கள்சூடியிருந்தானவனெம்மிறையே. (௧)

ஓத்தரவங்களோடுமொலிகாவிரியாற்றயலே
பூத்தரவங்களோடும்புகைக்கொண்டடிபோற்றிநல்ல
கூத்தரவங்களோவாகுழகன்குடமூக்கிடமா
யேத்தரவங்கள்செய்யவிருந்தானவனெம்மிறையே. (௨)

மயில்பெடைபுல்கியாலமறைமேல்மடவன்னமல்கும்
பயில்பெடைவண்டுபண்செய்பழங்காவிரிப்பைம்பொழில்வாய்க்
குயில்பெடையோடுபாடலுடையான்குடமூக்கிடமா
யியலொடுவானமேத்தவிருந்தானவனெம்மிறையே. (௩)

மிக்கறைதாழ்வேங்கையுரியார்த்துமையாள்வெருவ
வக்கரவாமையேனமருப்போடவைபூண்டழகார்
கொக்கரையோடுபாடலுடையான்குடமூக்கிடமா
யெக்கரையாருமேத்தவிருந்தானவனெம்மிறையே. (௪)

வடிவுடைவாட்டடங்கணுமையஞ்சவோர்வாரணத்தைப்
பொடியணிமேனிமூடவுரிகொண்டவன்புன்சடையான்
கொடிநெடுமாடமோங்குங்குழகன்குடமூக்கிடமா
யிடிபடுவானமேத்தவிருந்தானவனெம்மிறையே. (௫)

கழைவளர்கவ்வைமுத்தங்கமழ்காவிரியாற்றயலே
தழைவளர்மாவினல்லபலவின்கனிகடயங்கு
குழைவளர்சோலைசூழ்ந்தகுழகன்குடமூக்கிடமா
விழைவளர்மங்கையோடுமிருந்தானவனெம்மிறையே. (௬)

மலைமலிமங்கைபாகமகிழ்ந்தானெழில்வையமுய்யச்
சிலைமலிவெங்கணையாற்சிதைத்தான்புரமூன்றினையுங்
குலைமலிதண்பலவின்பழம்வீழ்குடமூக்கிடமா
விலைமலிசூலமேந்தியிருந்தானவனெம்மிறையே. (௭)

நெடுமுடிபத்துடையநிகழ்வாளரக்கனுடலைப்
படுமிடர்கண்டயரப்பருமால்வரைக்கீழடர்த்தான்
கொடுமடற்றெங்குதெங்குபழம்வீழ்குடமூக்கிடமா
விடுமணலெக்கர்சூழவிருந்தானவனெம்மிறையே. (௮)

ஆரெரியாழியானுமலரானுமளப்பரிய
நீரிரிபுன்சடைமேனிரம்பாமதிசூடிநல்ல

கூரெரியாகிநீண்டகுழகன்குடமூக்கிடமா
வீரிருகோவணத்தோடிருந்தானவனெம்மிறையே. (கூ)

மூடியசீவரத்தார்முதுமட்டையர்மோட்டமணா
நாடியதேவரொல்லார்நயந்தேத்தியநன்னலத்தான
கூடியகுன்றமெல்லாமுடையான்குடமூக்கிடமா
வேடலர்கொன்றைசூடியிருந்தானவனெம்மிறையே. (கo)

வெண்கொடிமாடமோங்குவிறல்வெங்குருநன்னகரா
னண்பொடுநின்றசீரானற்றமிழ்ஞானசம்பந்தனல்ல
தண்குடமூக்கமர்ந்தானடிசேர்தமிழ்பத்தும்வல்லார்
விண்புடைமேலுலகம்வியப்பெய்துவர்வீடெளிதே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

### திருவக்கரை - பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

கறையணிமாமிடற்றான்கரிகாடரங்காவுடையான்
பிறையணிகொன்றையினானொருபாகமும்பெண்ணமர்ந்தான்
மறையவன்றன்றலையிற்பலிகொள்பவன்வக்கரையி
லுறைபவனெங்கள்பிரானொலியார்கழலுள்குதுமே. (க)

பாய்ந்தவன்காலனைமுன்பணைதோளியோர்பாகமதா
வேய்ந்தவனெண்ணிறைந்தவ்விமையோர்கடொழுதிறைஞ்ச
வாய்ந்தவன்முப்புரங்களெரிசெய்தவன்வக்கரையிற்
றேய்ந்திளவெண்பிறைசேர்சடையானடிசெப்புதுமே. (உ)

சந்திரசேகரனேயருளாயென்றுதண்விசும்பி
லிந்திரனும்முதலாவிமையோர்கடொழுதிறைஞ்ச
வந்தரமூவெயிலும்மனலாய்விழவோரம்பினான்
மந்தரமேருவில்லாவளைத்தானிடம்வக்கரையே. (ங)

நெய்யணிசூலமொடுந்நிறைவெண்மழுவும்மரவுங்
கையணிகொள்கையினான்கனமேவியவாடலினான்
மெய்யணிவெண்பொடியான்விரிகோவணவாடையின்மேன்
மையணிமாமிடற்றானுறையும்மிடம்வக்கரையே. (ச)

ஏனவெண்கொம்பினொடும்மிளவாமையும்பூண்டுகந்து
கூனிளவெண்பிறையுங்குளிர்மத்தமுஞ்சூடிநல்ல
மானனமென்விழியாளொடும்வக்கரைமேவியவன்
றானவர்முப்புரங்களெரிசெய்ததலைமகனே. (ரு)

கார்மலிகொன்றையொடுங்கதிர்மத்தமும்வாளரவு
நீர்மலியுஞ்சடைமேனிரம்பாமதிசூடிநல்ல
வார்மலிமென்முலையாளொடும்வக்கரைமேவியவன்
பார்மலிவெண்டலையிற்பலிகொண்டுழல்பான்மையனே. (சா)

கானணவும்மறிமானொருகையதோர்கைமழுவாட
டேனணவுங்குழலாளுமைசேர்திருமேனியினான்
வானணவும்பொழில்சூழ்திருவக்கரைமேவியவ
னூனணவுந்தலையிற்பலிகொண்டுழலுத்தமனே. (எ)

இலங்கையர்மன்னனாகியெழில்பெற்றவிராவணனைக்
கலங்கவொர்கால்விரலாற்கதிர்பொன்முடிபத்தலற
நலங்கெழுசிந்தையனாயருள்பெற்றலுநன்களித்த
வலங்கெழுமூவிலைவேலுடையானிடம்வக்கரையே. (அ)

காமனையீடழித்திட்டவன்காதலிசென்றிரப்பச்
சேமமேயுன்றனக்கென்றருள்செய்தவெந்தேவர்பிரான்
சாமவெண்டாமரைமேலயனுந்தரணியளந்த
வாமனனுமறியாவகையானிடம்வக்கரையே. (கூ)

மூடியசீவரத்தார்முதிர்பிண்டியரென்றிவர்கள்
தேடியதேவர்தம்மாலிறைஞ்சப்படுந்தேவர்பிரான்
பாடியநான்மறையன்பலிக்கென்றுபல்வீதிதொறும்
வாடியவெண்டலைகொண்டுழல்வானிடம்வக்கரையே. (க0)

தண்புனலும்மரவுஞ்சடைமேலுடையான்பிறைதோய்
வண்பொழில்சூழ்ந்தழகாரிறைவனுறைவக்கரையைச்
சண்பையர்தந்தலைவன்றமிழ்ஞானசம்பந்தன்சொன்ன
பண்புனைபாடல்வல்லாரவர்தம்வினைபற்றறுமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருவெண்டுறை - பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

ஆதியனாதிரையனனலாடியவாரழகன்
பாதியோர்மாதினொடும்பயிலும்பரமாபரமன்
போதியலுமுடிமேற்புனலோடரவம்புனைந்த
வேதியன்மாதிமையால்விரும்பும்மிடம்வெண்டுறையே. (க)

காலனையோருதையிலுயிர்வீடுசெய்வார்கழலான்
பாலொடுநெய்தயிரும்பயின்றாடியபண்டரங்கன்
மாலைமதியொடுநீரரவம்புனைவார்சடையான்
வேலனகண்ணியொடும்விரும்பும்மிடம்வெண்டுறையே. (உ)

படைநவில்வெண்மழுவாட்பலபூதப்படையுடையான்
கடைநவின்மும்மதிலுமெரியூட்டியகண்ணுதலா
னுடைநவிலும்புலித்தோலுடையாடையினான்கடிய
விடைநவிலுங்கொடியான்விரும்பும்மிடம்வெண்டுறையே. (ங)

பண்ணமர்வீணையினான்பரவிப்பணிதொண்டர்கட்
டெண்ணமர்சிந்தையினானிமையோர்க்குமறிவரியான்
பெண்ணமர்கூறுடையான்பிரமன்றலையிற்பலியான்
விண்ணவர்தம்பெருமான்விரும்பும்மிடம்வெண்டுறையே. (ச)

பாரியலும்பலியான்படியார்க்குமறிவரியான்
சீரியலும்மலையாளொருபாகமுஞ்சேர்வைத்தான்
போரியலும்புரமூன்றுடன்பொன்மலையேசிலையா
வீரியநின்றுசெய்தான்விரும்பும்மிடம்வெண்டுறையே. (ரு)

ஊழிகளாயுலகாயொருவர்க்குமுணர்வரியான்
போழிளவெண்மதியும்புனலும்மணிபுன்சடையான்

யாழின்மொழியுமையாள்வெருவவெழில்வெண் மருப்பின்
வேழமுரித்தபிரான்விரும்புமிடம்வெண்டுறையே. (௬)

கன்றியகாலனையுமுருளக்கனல்வாயலறிப்
பொன்றமுன்னின்றபிரான்பொடியாடியமேனியினன்
சென்றிமையோர்பரவுந்திகழ்சேவடியான்புலன்கள்
வென்றவனெம்மிறைவன்விரும்புமிடம்வெண்டுறையே. (௭)

கரமிருபத்தினுங்கடுவெஞ்சினமாவெடுத்த
சிரமொருபத்துமுடையான்கனவலிசெற்றுகந்தான்
பரவவல்லார்வினைகளறுப்பாரொருபாகமும்பெண்
விரவியவேடத்தினன்விரும்புமிடம்வெண்டுறையே. (௮)

கோலமலரயனுங்குளிர்கொண்டனிறத்தவனுஞ்
சீலமறிவரிதாத்திகழ்ந்தோங்கியசெந்தழலான்
மூலமதாகிநின்றான்முதிர்புன்சடைவெண்பிறையான்
வேலைவிடமிடற்றான்விரும்புமிடம்வெண்டுறையே. (௯)

நக்குருவாயவருந்துவராடைநயந்துடையாம்
பொக்கர்கடம்முரைகளவைபொய்யெனவெம்மிறைவன்
றிக்குநிறைபுகழார்தருதேவர்பிரான்கனக
மிக்குயர்சோதியவன்விரும்புமிடம்வெண்டுறையே. (௧௦)

திண்ணமரும்புரிசைத்திருவெண்டுறைமேயவனைத்
தண்ணமரும்பொழில்சூழ்தருசண்பையர்தந்தலைவ
னெண்ணமர்பல்கலையானிசைஞானசம்பந்தன்சொன்ன
பண்ணமர்பாடல்வல்லார்வினையாயினபற்றறுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பனந்தாள்-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

கண்பொலிநெற்றியினான்றிகழ்கையிலொர்வெண்மழுவான்
பெண்புணர்கூறுடையான்மிகுபீடுடைமால்விடையான்
விண்பொலிமாமதிசேர்தருசெஞ்சடைவேதியனூர்
தண்பொழில்சூழ்பனந்தாட்டிருத்தாடகையீச்சரமே. (௧)

விரித்தவனான்மறையைமிக்கவிண்ணவர்வந்திறைஞ்ச
வெரித்தவன்முப்புரங்களியலேழுலகில்லுயிரும்
பிரித்தவன்செஞ்சடைமேனிறைபேரொலிவெள்ளந்தன்னைத்
தரித்தவனூர்பனந்தாட்டிருத்தாடகையீச்சரமே. (௨)

உடுத்தவன்மானுரிதோல்கழலுள்கவல்லார்வினைகள்
கெடுத்தருள்செய்யவல்லான்கிளர்கீதமோர்நான்மறையான்
மடுத்தவனஞ்சமுதாமிக்கமாதவர்வேள்வியைமுன்
னடுத்தவனூர்பனந்தாட்டிருத்தாடகையீச்சரமே. (௩)

சூழ்தருவல்வினையுமுடறோன்றியபல்பிணியும்
பாழ்படவேண்டுதிரேன்மிகவேத்துமின்பாய்புனலும்
போழிளவெண்மதியும்மனல்பொங்கரவும்புனைந்த
தாழ்சடையான்பனந்தாட்டிருத்தாடகையீச்சரமே. (௪)

விடம்படுகண்டத்தினிருள்வெள்வளைமங்கையொடு
நடம்புரிகொள்கையினனவனெம்மிறைசேருமிடம்
படம்புரிநாகமொடுதிரைபன்மணியுங்கொணருந்
தடம்புனல்சூழ்பனந்தாட்டிருத்தாடகையீச்சரமே. (௫)

விடையுயர்வெல்கொடியானடிவிண்ணொடுமண்ணுமெல்லாம்
புடைபடவாடவல்லான்மிகுபூதமார்பல்படையான்
தொடைநவில்கொன்றையொடுவன்னிதுன்னெருக்குமணிந்த
சடையவனூர்பனந்தாட்டிருத்தாடகையீச்சரமே. (௬)

மலையவன்முன்பயந்தமடமாதையோர்கூறுடையான்
சிலைமலிவெங்கணையாற்புரமூன்றவைசெற்றுகந்தான்
கலைமலிதண்புனலும்மதியோடரவும்மணிந்த
தலையவனூர்பனந்தாட்டிருத்தாடகையீச்சரமே. (௭)

செற்றரக்கன்வலியைத்திருமெல்விரலாலடர்த்து
முற்றுமவெண்ணீறணிந்ததிருமேனியன்மும்மையினான்
புற்றரவம்புலியினுரிதோலொடுகோவணமுந்
தற்றவனூர்பனந்தாட்டிருத்தாடகையீச்சரமே. (௮)

வின்மலைநாணரவம்மிகுவெங்கனலம்பதனாற்
புன்மைசெய்தானவர்தம்புரம்பொன்றுவித்தான்புனிதன்
நன்மலர்மேலயனுந்நண்ணுநாரணனும்மறியாத்
தன்மையனூர்பனந்தாட்டிருத்தாடகையீச்சரமே. (௯)

ஆதர்சமணரொடுமடையைந்துகில்போர்த்துழலும்
நீதருரைக்குமொழியவைகொள்ளன்மினின்மலனூர்
போதவிழ்பொய்கைதனுட்டிகழ்புள்ளிரியப்பொழில்வாய்த்
தாதவிழும்பனந்தாட்டிருத்தாடகையீச்சரமே. (௧௦)

தண்வயல்சூழ்பனந்தாட்டிருத்தாடகையீச்சரத்துக்
கண்ணயலேபிறையானவன்றன்னைமுன்காழியர்கோ
னண்ணியசெந்தமிழான்மிகுஞானசம்பந்தனல்ல
பண்ணியல்பாடல்வல்லாரவர்தம்வினைபற்றறுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருச்செங்காட்டங்குடி-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

பைங்கோட்டுமலர்ப்புன்னைப்பறவைகாள்பயப்பூரச்
சங்காட்டந்தவிர்த்தென்னைத்தவிராநோய்தந்தானே
செங்காட்டங்குடிமேயசிறுத்தொண்டன்பணிசெய்ய
வெங்காட்டுளனலேந்திவிளையாடும்பெருமானே. (௧)

பொன்னம்பூங்கழிக்கானற்புணர்துணையோடுடன்வாழு
மன்னங்காளன்றில்காள்அகன்றும்போய்வருவீர்காள்
கன்னவின்றோட்சிறுத்தொண்டன்கணபதீச்சரமேய
வின்னமுதனிணையடிக்கீழெனதல்லலுரையீரோ. (௨)

குட்டத்துங்குழிக்கரையுங்குளிர்பொய்கைத்தடத்தகத்து
மிட்டத்தாலிரைதேருமிருஞ்சிறகின்மடநாராய்

சிட்டனசீர்ச்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
வட்டவார்சடையார்க்கென்வருத்தஞ்சென்றுரையாயே. (௩)

கானருகும்வயலருகுங்கழியருகுங்கடலருகு
மீனிரியவரும்புனலிலிரைதேரும்வண்மடநாராய்
தேனமர்தார்ச்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
வானமருஞ்சடையார்க்கென்வருத்தஞ்சென்றுரையாயே. (௪)

ஆரலாஞ்சுறவமேய்ந்தகன்கழனிச்சிறகுலாத்தும
பாரல்வாய்ச்சிறுகுருகேபயிறாவிமடநாராய
சீருலாஞ்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
நீருலாஞ்சடையார்க்கென்னிலைமைசென்றுரையீரே. (௫)

குறைக்கொண்டாரிடர்தீர்த்தல்கடனன்றேகுளிர்பொய்கைத்
துறைக்கொண்டைகவர்குருகேதுணைபிரியாமடநாராய்
கறைக்கண்டன்பிறைச்சென்னிக்கணபதீச்சரமேய
சிறுத்தொண்டன்பெருமான்சீரருளொருநாள்பெறலாமே. (௬)

கருவடியபசுங்கால்வெண்குருகேயொண்கழிநாரா
யொருவடியாளிரந்தாளென்றொருநாள்சென்றுரையீரோ
செருவடிதோட்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
திருவடிதன்றிருவருளேபெறலாமோதிறத்தவர்க்கே. (௭)

கூராரலிரைதேர்ந்துகுளமுலவிவயல்வாழுந்
தாராவேமடநாராய்தமியேற்கொன்றுரையீரோ
சீராளன்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
பேராளன்பெருமான்றனருளொருநாள்பெறலாமே. (௮)

நறப்பொலிபூங்கழிக்கானலிலங்குருகேயுலகெல்லா
மறப்பலிதேர்ந்துழல்வார்க்கென்னலர்கோடலழகியதே
சிறப்புலவன்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
பிறப்பிலிபேர்பிதற்றிநின்றிழிகோவம்பெருநலமே. (௯)

செந்தண்பூம்புனல்பரந்தசெங்காட்டங்குடிமேய
வெந்தநீறணிமார்பன்சிறுத்தொண்டனவன்வேண்ட
வந்தண்பூங்கலிக்காழியடிகளையேயடிபரவுஞ்
சந்தங்கொள்சம்பந்தன்றமிழுரைப்போர்தக்கோரே. (௧௦-௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பெருவேளூர் - பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

அண்ணாவுங்கழுக்குன்றுமாயமலையவைவாழ்வார்
விண்ணோருமண்ணோருமவியந்தேத்தவருள்செய்வார்
கண்ணாவாருலகுக்குக்கருத்தானார்புரமெரித்த
பெண்ணாணாம்பெருமானார்பெருவேளூர்பிரியாரே (௧)

கருமானினுரியுடையர்கரிகாடரிமவானார்
மருமானாரிவரென்றுமடவாளோடுடனாவர்
பொருமானவிடையூர்வதுடையார்வெண்பொடிப்பூசும
பெருமானார்பிஞ்ஞகனார்பெருவேளூர்பிரியாரே (௨)

குணக்குநதென்றிசைக்கண்ணுங்குடபாலும்வடபாலுங்
கணக்கெனனவருளசெய்வாாகழிநதோர்க்குமொழிநதோர்க்கும்
வணககஞ்செய்மனத்தராய்வணஙகாதார்தமககென்றும
பிணககஞ்செய்பெருமானாபெருவேளூாபிரியாரே. (௩)

இறைக்கொண்டவளையாளோடிருகூறுயொருகூறு
மறைககணடததிறைநாவர்மதிலெய்தசிலைவலலா
கறைக்கொண்டமிடறுடையர்கனலகிளருஞ்சடைமுடிமேற்
பிறைநகொண்டபெருமானாபெருவேளூாபிரியாரே. (௪)

விழையாதாாவிழைவார்போல்விகிர்தங்கள்பலபேசிக்
குழையாதார்குழைவாாபோறகுணநலலபலகூறி
யழையாவுமலறுவுமடிவீழ்வாாதமககென்றும
பிழையாதபெருமானார்பெருவேளூாபிரியாரே. (௫)

விரித்தாாநான்மறைப்பொருளையுமையஞசவிறல்வேழ
முரிததாராமுரிபோாததுமதினமூனறுமொருகணையா
லெரிததாராமிமைபபளவிலிமையோாகடொழுதிறைஞ்சப்
பெருததாாமபெருமானாபெருவேளூாபிரியாரே. (௬)

மறப்பிலாவடிமைக்கண்மனம்வைபபார்தமக்கெல்லாஞ்
சிறப்பிலாாமதிலெய்தசிலைவல்லாரொருகணையா
லிறப்பிலார்பிணியிலலாாதமக்கெனறுநகேடிலார்
பிறபபிலாபபெருமானாபெருவேளூாபிரியாரே (௭)

எரியாரவேற்கடற்றுனையிலஙகைககோனறனைவீழ
முரியாரநததடநதோள்களடாததுகநதமுதலாளா
வரியாாவெஞசிலைபிடிததுமடவாளையொருபாகம
பிரியாதபெருமானாபெருவேளூாபிரியாரே. (௮)

சேணியனுநெடுமாலுநதிசைமுகனுஞெருவெய்திக்
காணியலபையறிவிலராயக்கனலவனாாடியிணைக்கீழ்
நாணியவாதொழுதேததநாணுமேயருள்செயது
பேணியவெமபெருமானாபெருவேளூாபிரியாரே. (௯)

புறந்தேறியுணஙகுவாாபுகையாாநததுகிலபோாப்பாா
சொற்தேறவேணடாநீாதொழுமினகள்சுடாவணண
மறந்தேருமபரிமாவுமமதகளிறுமிவையொழியப
பெறந்தேறுமபெருமானாபெருவேளூாபிரியாரே. (௧0)

பைம்பொன்சீாமணிவாரிபபலவுஞ்சேரகனியுநதி
யமபொனசெய்மடவரலாரணிமலகுபெருவேளூா
நமபன்றனகழல்பரவிநவிலகின்றமறைஞான
சமபநதனறமிழ்வலலாாககருவினைநோயசாராவே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கச்சிநெறிக்காரைக்காடு-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

வாரணவுமுலைமங்கைபங்கினராயங்கையினிற்
போரணவுமழுவொனறங்கேந்திவெண்பொடியணிவர்

காரணவுமணிமாடங்கடைநவின்றகலிக்கச்சி
நீரணவுமலர்ப்பொய்கைநெறிக்காரைக்காட்டாரே. (௧)

காரூருமணிமிடற்றார்கரிகாடருடைதலைகொண்
டூரூரன்பலிக்குழல்வாருழைமானினுரியதளர்
தேரூருநெடுவீதிச்செழுங்கச்சிமாநகர்வாய்
நீரூருமலர்ப்பொய்கைநெறிக்காரைக்காட்டாரே. (௨)

கூறணிந்தார்கொடியிடையைக்குளிர்சடைமேலிளமதியோ
டாறணிந்தாராடரவம்பூண்டுகந்தாரான்வெள்ளை
யேறணிந்தார்கொடியதனமேலெனபணிந்தார்வரைமார்பி
னீறணிந்தார்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. (௩)

பிறைநவின்றசெஞ்சடைகள்பின்றாழப்பூதங்கண்
மறைநவின்றபாடலோடாடலராய்மழுவேந்திச
சிறைநவின்றவண்டினங்கடங்கனிவாய்த்தேனகநுவு
நிறைநவின்றகலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. (௪)

அன்றாலின்கீழிருந்தங்கறம்புரிந்தவருளாளா
குன்றாதவெஞ்சிலையிற்கோளரவநாண்கொளுவி
யொன்றாதார்புரமூன்றுமோங்கெரியில்வெந்தவிய
நின்றாருங்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. (௫)

பன்மலர்கொண்டடிக்கீழ்வானோர்கள்பணிந்திறைஞ்ச
நன்மையிலாவல்லவுணர்நகர்மூன்றுமொருநொடியில
வின்மலையினாண்கொளுவிவெங்கணையாலெய்தழித்த
நின்மலனார்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. (௬)

புற்றிடைவாளரவினொடுபுனைகொன்றைமத்தமத்த
மெற்றெருழியாவலைபுனலோடிளமதியமேந்துசடைப்
பெற்றுடையாரொருபாகம்பெண்ணுடையார்கண்ணமரு
நெற்றியினார்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. (௭)

ஏழ்கடல்சூழ்தென்னிலங்கைக்கோமானையெழில்வரைவாய்த்
தாழ்விரலாலூன்றியதோர்தன்மையினார்நன்மையினா
ராழ்கிடங்குஞ்சூழ்வயலுமதில்புல்கியழகமரு
நீண்மறுகிற்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே (௮)

ஊண்டானுமொலிகடனஞ்சுடைதலையிற்பலிகொள்வர்
மாண்டார்தமெலும்பணிவர்வரியரவோடெழிலாமை
பூண்டாருமோரிருவரறியாமைப்பொங்கெரியாய்
நீண்டாருங்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. (௯)

குண்டாடிச்சமண்படுவார்கூறைதனைமெய்போர்த்து
மிண்டாடித்திரிதருவாருரைப்பனகண்மெய்யல்ல
வண்டாருங்குழலாளைவரையாகத்தொருபாகங்
கண்டாருங்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. (௧௦)

கண்ணாருங்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டுறையும்
பெண்ணாருந்திருமேனிப்பெருமானதடிவாழ்த்தி
தண்ணாரும்பொழிற்காழித்தமிழ்ஞானசம்பந்தன
பண்ணாருந்தமிழ்வல்லார்பரலோகத்திருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

திருவேட்டக்குடி - பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

வண்டிரைக்குமலர்க்கொன்றைவிரிசடைமேல்மதியரவங்
கண்டிரைக்கும்பிறைச்சென்னிக்காவாலிகழல்க
டொண்டிரைத்துத்தொழுதிறைஞ்சத்துளங்கொளிநீர்ச்சுடர்ப்பவளந்
தெண்டிரைக்கண்கொணர்ந்தெறியுந்திருவேட்டக்குடியாரே. (௧)

பாய்திமிலர்வலையோடுமீன்வாரிப்பயின்றெங்குங்
காசினியிற்கொணர்ந்தட்டுங்கைதைசூழ்கழிக்கானற்
போயிரவிற்பேயோடும்புறங்காட்டிற்புரிந்தழகார்
தீயெரிகைமகிழ்ந்தாருந்திருவேட்டக்குடியாரே. (௨)

தோத்திரமாமணலிலிங்கந்தொடங்கியவானிரைப்பால
பாத்திரமாவாட்டுதலும்பரஞ்சோதிபரிந்தருளி
யாத்தமெனமறைநால்வர்க்கறம்புரிநூலன்றுரைத்த
தீர்த்தமல்குசடையாருந்திருவேட்டக்குடியாரே. (௩)

கலவஞ்சேர்கழிக்கானல்கதிர்முத்தங்கலந்தெங்கு
மலவஞ்சேரணைவாரிக்கொணர்ந்தெறியுமகன்றுறைவாய்
நிலவஞ்சேர்நுண்ணிடையநேரிழையாளவளோடுந்
திலகஞ்சேர்நெற்றியினார்திருவேட்டக்குடியாரே. (௪)

வங்கமார்கடலலறப்பருவரையோடரவுழலச்
செங்கண்மால்கடையவெழுநஞ்சருந்துசிவமூர்த்தி
யங்கநான்மறைநால்வர்க்கறம்பொருளின்பயனளித்த
திங்கள்சேர்சடையாருந்திருவேட்டக்குடியாரே. (௫)

நாவாயபிறைச்சென்னிநலந்திகழுமிலங்கிப்பி
கோவாதநித்திலங்கள்கொணர்ந்தெறியுங்குளிர்கான
லேவாரும்வெஞ்சிலையாலெயின்மூன்றுமெரிசெய்த
தேவாதிதேவனூர்திருவேட்டக்குடியாரே. (௬)

பானிலவும்பங்கயத்துப்பைங்கானல்வெண்குருகு
கானிலவுமலர்ப்பொய்கைக்கைதல்சூழ்கழிக்கானன்
மானின்விழிமலைமகளோடொருபாகம்பிரிவரியார்
தேனிலவுமலர்ச்சோலைத்திருவேட்டக்குடியாரே. (௭)

துறையுலவுகடலோதஞ்சுரிசங்கமிடறிப்போய்
நறையுலவும்பொழிற்புன்னைநன்னீழற்கீழமரு
மிறைபயிலுமிராவணன்றன்றலைபத்துமிருபதுதோ
டிறலழியவடர்த்தாருந்திருவேட்டக்குடியாரே (௮)

அருமறைநான்முகத்தானுமகலிடநீரேற்றானு
மிருவருமாயளப்பரியவெரியுருவாய்நீண்டபிரான்
வருபுனலின்மணியுந்திமறிதிரையார்சுடர்ப்பவளத்
திருவுருவில்வெண்ணீற்றார்திருவேட்டக்குடியாரே. (௯)

இகழ்ந்துரைக்குஞ்சமணர்களுமிடும்போர்வைச்சாக்கியரும்
புகழ்ந்துரையாப்பாவிகள்சொற்கொள்ளேன்மின்பொருளென்ன
நிகழ்ந்திலங்குவெண்மணலினிறைத்தண்டப்பிறைக்கற்றை
திகழ்ந்திலங்குசெஞ்சடையார்திருவேட்டக்குடியாரே. (௧௦)

தெண்டிரைசேர்வயலுடுத்ததிருவேட்டக்குடியானைத்
தண்டலைசூழ்கலிக்காழித்தமிழ்ஞானசம்பந்த
னொண்டமிழ்நூலிவைபத்துமுணர்ந்தேத்தவல்லார்போ
யுண்டுபிலவானவரோடுபோவானத்திருப்பாரே (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருப்பிரமபுரம்-வழிமொழித்திருவிராகம்-பண்-சாதாரி

திருச்சிற்றம்பலம்

சுரருலகுநரர்கள்பயிறரணிதலமுரணழியவரணமதின்முப்
புரமெரியவிரவுவகைசரவிசைகொள்கரமுடையபரமனிடமாம்
வரமருளவரன்முறையினிரைநிறைகொள்வருசுருதிசிரவுரையினாற்
பிரமனுயரரனெழில்கொள்சரணவிணைபரவவளர்பிரமபுரமே. (௧)

தாணுமிகுவாணிசைகொடாணுவியர்பேணுமதுகாணுமளவிற்
கோணுநுதனீணயனிகோணில்பிடிமாணுமதுநாணும்வகையே
யேணுகரிபூணழியவாணியல்கொண்மாணிபதிசேணமரர்கோன்
வேணுவினையேணிநகர்காணிறிவிகாணநடுவேணுபுரமே. (௨)

பகலொளிசெய்நகமணியைமுகைமலரைநிகழ்சரணவகவுமுனிவர்க்
ககலமலிசகலகலைமிகவுரைசெய்முகமுடையபகவனிடமாம்
பகைகளையும்வகையிலறுமுகவிறையைமிகவருளநிகரிலிமையோர்
புகவுலகுபுகழவெழிறிகழநிகழலர்பெருகுபுகலிநகரே. (௩)

அங்கண்மதிகங்கைநதிவெங்கணரவங்களெழிறங்குமிதழித்
துங்கமலர்தங்குசடையங்கிநிகரெங்களிறைதங்குமிடமாம்
வெங்கதிர்விளங்குலகமெங்குமெதிர்பொங்கெரிபுலன்களைவோர்
வெங்குருவிளங்கியுமைபங்கர்சரணங்கள்பணிவெங்குருவதே. (௪)

ஆணியல்புகாணவனவாணியல்புபேணியெதிர்பாணமழைசேர்
தூணியறநாணியறவேணுசிலைபேணியறநாணிவிசயன்
பாணியமர்பூணவருண்மாணுபிரமாணியிடமேணுமுறையிற்
பாணியுலகாளமிகவாணின்மலிதோணிநிகர்தோணிபுரமே. (௫)

நிராமயபராபரபுராதனபராவுசிவராகவருளென்
றிராவுமெதிராயதுபராநினைபுராணனமராதிபதியா
மராமிசையிராவெழிறராயரபராயணவராகவுருவா
தராயனைவிராயெரிபராய்மிகுதராய்மொழிவிராயபதியே. (௬)

அரணையுறுமுரணர்பலர்மரணம்வரவிரணமதிலமலிபடைக்
கரமவிசிறுவிரகனமர்கரணனுயர்பரனெறிகொள்கரனதிடமாம்
பரவமுதுவிரவவிடல்புரளமுறுமரவையரிசிரமரியவச்
சிரமரனசரணமவைபரவவிருகிரகமமர்சிரபுரமதே. (௭)

அறமழிவுபெறவுலகுதெறுபுயவன்விறலழியநிறுவிவிரன்மா
மறையினொலிமுறைமுரல்செய்பிறையெயிறனுறவருளுமிறைவனிடமாங்
குறைவின்மிகுநிறைதையுழிமறையமரர்நிறையருளமுறையொடும்வரும்
புறவனெதிர்நிறைநிலவுபொறையனுடல்பெறவருளும்புறவமதுவே. (௮)

விண்பயிலமண்பகிரிவண்பிரமனெண்பெரியபண்புடைகொண்மால்
கண்பரியுமொண்பொழியநுண்பொருள்கடண்புகழ்கொள்கண்டனிடமா

மணபரியுமொண்பொழிய நண்புசகாபுண்பயிலவிண்படரவச்
சண்பைமொழிபணபமுனிகண்பழிசெய்பண்புகளைசண்பைநகரே. (கூ)

பாழியுறைவேழநிகர்பாழமணர்சூழுமுடலாளருணரா
வேழினிசையாழின்மொழியேழையவள்வாழுமிறைதாழுமிடமாங்
கீழிசைகொண்மேலுலகில்வாழரசுசூழரசுவாழவரனுக
காழியசில்காழிசெயவேழுலகிலூழிவளர்காழிநகரே. (க0)

நச்சரவுகச்செனவசைச்சுமதியுச்சியின்மிலைச்சொருகையான்
மெய்ச்சிரமணைச்சுலகினிச்சமிடுபிச்சையமர்பிச்சனிடமா
மச்சமதநச்சிமதமச்சிறுமியைச்செய்தவவச்சவிரதக்
கொச்சைமுரவர்க்கரபணியச்சுராகணச்சிமிடைகொச்சைநகரே. (கக)

ஒழுகலரிதழிகலியிலுழியுலகுபழிபெருகுவழியைநினையா
முழுதுடலிலெழுமயிர்கடழுவுமுனிகுழுவினொடுகெழுவுசிவனைத்
தொழுதுலகிலிழுகுமலமழியும்வகைகழுவுமுரைகழுமலநகர்ப்
பழுதிலிறையெழுதுமொழிதமிழ்விரகனவழிமொழிகண்மொழிதகையவே.

திருச்சிற்றம்பலம்

---

## ஸ்ரீகயிலாயம் - திருவிராகம் - பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

வாளவரிகோளபுலிகீளதுரிதாளின்மிசைநாளுமகிழ்வ
ராளுமவர்வேளநகர்போளயிலகோளகளிறாளிவரவிற
ரூளமர்தாளமதர்கூளியெழமீளிமிளிர்தூளிவளர்பொற்
காளமுகிலீளவிருளகீளவிரிதாளகயிலாயமலையே. (க)

புற்றரவுபற்றியகைநெற்றியதுமற்றொருகணொற்றைவிடையன்
செற்றதெயிலுற்றதுமையற்றவர்கணற்றுணைவனிற்றனகர்தான்
சுற்றுமணிபெற்றதொளிசெற்றமொடுகுற்றமிலதெற்றெனவினுய்க்
கற்றவர்கள்சொற்றொகையின்முற்றுமொளிபெற்றகயிலாயமலையே. (உ)

சிங்கவரைமங்கையர்கடங்களனசெங்கைநிறைகொங்குமலர்தூ
யெங்கள்வினைசங்கையவையிங்ககல்வங்கமொழியெங்குமுளவாய்த்
திங்களிருளைங்கவொளிவிங்கமிருதொங்கலொடுதங்கவயலே
கங்கையொடுபொங்குசடையெங்களிறைதங்குகயிலாயமலையே. (ங)

முடியசடைபிடியதொருவடியமழுவுடையர்செடியுடையதலையில்
வெடியவினைகொடியர்கெடவிடுசில்பலிநொடியமகிழடிகளிடமாம்
கொடியகுரலுடையவிடைகடியதுடியடியினொடுமிடியினதிரக்
கடியகுரனெடியமுகின்மடியவதரடிகொள்கயிலாயமலையே. (ச)

குடங்கையினுடங்கெரிதொடர்ந்தெழவிடங்கினர்படங்கொளரவ
மடங்கொளிபடர்ந்திடநடந்தருவிடங்கனதிடந்தண்முகில்போய்த்
தடங்கடல்தொடர்ந்துடனுடங்குவவிடங்கொளமிடைந்தகுரலாற்
கடுங்கலினமுடங்களைநடுங்கவரவொடுங்குகயிலாயமலையே. (ரு

ஏதமிலபூதமொடுகோதைதுணையாதிமுதல்வேதவிகிர்தன்
கீதமொடுநீதிபலவோதிமறவாதுபயில்நாதனகர்தான்
தாதுபொதிபோதுவிடவூதுசிறைமீதுதுளிகூதனலியக்
காதன்மிகுசோதிகிளர்மாதுபயில்கேதுகயிலாயமலையே. (சா

சென்றுபலவென்றுலவுபுன்றலையர்துன்றலொடுமொன்றியுடனே
நின்றமரரென்றுமிறைவன்றனடிசென்றுபணிகின்றநகர்தான்
துன்றுமலர்பொன்றிகழ்செய்கொன்றைவிரைதென்றலொடுசென்றுகமழக்
கன்றுபிடிதுன்றுகளிறென்றிவைமுனின்றகயிலாயமலையே. (எ)

மருப்பிடைநெருப்பெழுதருக்கொடுசெருச்செய்தபருத்தகளிறின்
பொருப்பிடைவிருப்புறவிருக்கையையொருக்குடனரக்கனுணரா
தொருத்தியைவெருக்குறவெருட்டலுநெருக்கெனநிருத்தவிரலாற்
கருத்திலொருத்தனையெருத்திறநெரித்தகயிலாயமலையே. (அ)

பரியதிரையெரியபுனலவலியபுலியுரியதுடைபரிசையுடையன்
வரியவளையரியகணியுருவினொடுபுரிவினவர்பிரிவினகர்தான்
பெரியவெரியுருவமதுதெரியவுருபுரிவுதருமருமையதனால்
கரியவனுமரியமறைபுரியவனுமருவுகயிலாயமலையே. (௯)

அண்டர்தொழுதண்டிபணிகண்டடிமைகொண்டவிறைதுண்டமதியோ
டிண்டைபுனைவுண்டசடைமுண்டதரசண்டவிருள்கண்டரிடமாங்
குண்டமணவண்டரவர்மண்டைகையிலுண்டுழறிமிண்டுசமயங்
கண்டவர்கள்கொண்டவர்கள்பண்டுமறியாதகயிலாயமலையே. (௧0)

அந்தண்வரைவந்தபுனறந்ததிரைசந்தனமொடுந்தியகிலுங்
கந்தமலர்கொந்தினொடுமந்திபலசிந்துகயிலாயமலைமே
லெந்தையடிவந்தணுகுசந்தமொடுசெந்தமிழிசைந்தபுகலிப்
பந்தனுரைசிந்தைசெய்வந்தவினைநைந்துபரலோகமெளிதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

### திருக்காளத்தி - திருவிராகம் - பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்.

வானவர்கடானவர்கள்வாதைபடவந்ததொருமாகடல்விடந்
தானமுதுசெய்தருள்புரிந்தசிவன்மேவுமலைதன்னைவினவி
லேனமிளமானினொடுகிள்ளைதினைகொள்ளவெழிலார்கவணினாற்
கானவர்தமாமகளிர்கனகமணிவிலகுகாளத்திமலையே. (௧)

முதுசினவிலவுணர்புரமூன்றுமொருநொடிவரையின்மூளவெரிசெய்
சதுரர்மதிபொதிசடையர்சங்கரர்விரும்புமலைதன்னைவினவி
லெதிரெதிரவெதிர்பிணையவெழுபொறிகள்சிதறவெழிலேனமுழுதக்
கதிர்மணியின்வளரொளிகொளிருளகலநிலவுகாளத்திமலையே. (௨)

வல்லைவருகாளியைவகுத்துவலியாகுமிகுதாருகனைநீ
கொல்லெனவிடுத்தருள்புரிந்தசிவன்மேவுமலைகூறிவினவிற்
பல்பலவிருங்கனிபருங்கிமிகவுண்டவைநெருங்கியினமாய்க்
கல்லதிரநின்றுகருமந்திவிளையாடுகாளத்திமலையே. (௩)

வேயனையதோளுமையோர்பாகமதுவாகவிடையேறிசடைமேற்
றூயமதிசூடிசுடுகாடினடமாடிமலைதன்னைவினவில்
வாய்கலசமாகவழிபாடுசெயும்வேடன்மலராகுநயனங்
காய்கணையினாலிடந்தீசனடிகூடுகாளத்திமலையே. (௪)

மலையின்மிசைதனின்முகில்போல்வருவதொருமதகரியைமழைபோலலறக்
கொலைசெய்துமையஞ்சவுரிபோர்த்தசிவன்மேவுமலைகூறிவினவி

லலைகொள்புனலருவிபலசுனைகள்வழியிழியவயனிலவுமுதுவேய்
கலகலெனவொளிகொள்கதிர்முத்தமவைசிந்துகாளத்திமலையே. (ரு)

பாரதம்விளங்கியபகீரதனருந்தவமுயன்றபணிகண்
டாரருள்புரிந்தலைகொள்கங்கைசடையேற்றவரன்மலையைவினவில்
வாரதரிருங்குறவர்சேவலினைமடுத்தவெரித்தவிறகிற்
காரகிலிரும்புகைவிசும்புகமழ்கின்றகாளத்திமலையே. (சு)

ஆருமெதிராதவலியாகியசலந்தரனையாழியதனு
லீருமவகைசெய்தருள்புரிந்தவனிருந்தமலைதன்னைவினவி
லாருமரவம்மொளிகொண்மாமணியுமிழ்ந்தவையுலாவிவரலாற்
காரிருள்கடிந்துகனகம்மெனவிளங்குகாளத்திமலையே. (எ)

எரியனையசுரியமயிரிராவணனையீடழியவெழில்கொள்விரலாற்
பெரியவரையூன்றியருள்செய்தசிவன்மேவுமலைபெற்றிவினவில்
வரியசிலைவேடுவர்களாடவர்கணீடுவரையூடுவரலாற்
கரியினொடுவரியுழுவையரியினமும்வெருவுகாளத்திமலையே. (அ)

இனதளவிலிவனதடியிணையுமுடியறிதுமெனவிகலுமிருவர்
தனதுருவமறிவரியசகலசிவன்மேவுமலைதன்னைவினவிற்
புனவர்புனமயிலனையமாதரொடுமைந்தருமணம்புணருநாட்
கனகமெனமலர்களணிவேங்கைகணிலாவுகாளத்திமலையே. (கூ)

நின்றுகவளம்பலகொள்கையரொடுமெய்யிலிடுபோர்வையவரு
நன்றியறியாதவகைநின்றசிவன்மேவுமலைநாடிவினவிற்
குன்றினமலிதுன்றுமொழிினறுகுளிர்சந்தின்முறிதின்றுகுலவிக
கன்றினொடுசென்றுபிடிநின்றுவிளையாடுகாளத்திமலையே. (கo)

காடதிடமாகநடமாடுசிவன்மேவுகாளத்திமலையை
மாடமொடுமாளிகைகணீடுவளர்கொசசைவயமன்னுதலைவ
ஞடுமலிநீடுபுகழ்ஞானசமபந்தனுரைநல்லதமிழின
பாடலொடுபாடுமிசைவல்லவர்கணல்லர்பரலோகமெளிதே. (கக)

திருசசிற்றமபலம

---

திருமயிலாடுதுறை - திருவிராகம் - பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம.

ஏனவெயிறாடரவோடென்புவரியாமையிவைபூணடிளையராய்க
கானவரிநீடுழுவையதளுடையபடர்சடையர்காணியெனலா
மானபுகழ்வேதியர்களாகுதியின்மீதுபுகைபோகியழகா
வானமுறுசோலைமிசைமாசுபடமூசுமயிலாடுதுறையே. (க)

அந்தணமதிசெஞ்சடையரங்கணெழில்கொன்றைபோடணிந்தழகரா
மெந்தமடிகட்கினியதானமதுவேண்டிலெழிலாபதியதாந
கந்தமலிசநதிைெடுகாரகிலும்வாரிவருகாவிரியுளால
வநததிரையுநதியெதிர்மந்தியலர்சிந்துமயிலாடுதுறையே. (உ)

தோளின்மிசைவரியரவநஞ்சழலவீக்கிமிகநோக்கரியராய்
மூளைபடுவெண்டலையிலுண்டுமுதுகாடுறையுமுதல்வரிடமாம்
பாளைபடுபைங்கமுகுசெங்கனியுதிர்த்திடநிரந்துகமழ்பூ
வாளைகுதிகொள்ளமடல்விரியமணநாறுமயிலாடுதுறையே. (ந)

ஏதமிலரியமறைமலையர்மகளாகியவிலங்குநுதலொண்
பேதைதடமார்பதிடமாகவுறைகின்றபெருமானதிடமாங்
காதன்மிகுகவ்வையொடுமல்வலவைகூடிவருகாவிரியுளான்
மாதர்மறிதிரைகள்புகலெறியவெறிகமழுமயிலாடுதுறையே. (௪)

பூவிரிகதுப்பின்மடமங்கையரகந்தொறுநடந்துபலிதேர்
பாவிரியிசைக்குரியபாடல்பயிலும்பரமர்பழமையெனலாங்
காவிரிநுரைத்திருகரைக்குமணிசிந்தவரிவண்டுகவர
மாவிரிமதுக்கிழியமந்திகுதிகொள்ளுமயிலாடுதுறையே. (௫)

கடந்திகழ்கருங்களிறுரித்துமையுமஞ்சமிகநோக்கரியராய்
விடந்திகழுமூவிலைநல்வேலுடையவேதியர்விரும்புமிடமாந் [வர்வாய்
தொடர்ந்தொளிர்கிடந்ததொருசோதிமிகுதொண்டையெழில்கொண்டது
மடந்தையர்குடைந்தபுனல்வாசமிகநாறுமயிலாடுதுறையே. (௬)

அவ்வதிசையாருமடியாருமுளராகவருள்செய்தவர்கண்மே
லெவ்வமறவைகலுமிரங்கியெரியாடுமெமதீசனிடமாங்
கவ்வையொடுகாவிரிகலந்துவருதென்கரைநிரந்துகமழ்பூ
மவ்வலொடுமாதவிமயங்கிமணநாறுமயிலாடுதுறையே. (௭)

இலங்கைநகர்மன்னன்முடியொருபதினொடிருபதுதோணெரியவிரலா
லிலங்கலிலடர்த்தருள்புரிந்தவரிருந்தவிடம்வினவுதிரேற்
கலங்கனுரையந்தியெதிர்வந்தகயமூழ்கிமலர்கொண்டுமகிழ
மலங்கிவருகாவிரிநிரந்துபொழிகின்றமயிலாடுதுறையே. (௮)

ஒண்டிறலினான்முகனுமாலுமிகநேடியுணராதவகையா
லண்டமுறவங்கியுருவாகிமிகநீண்டவரனூரதிடமாங்
கெண்டையிணைகொண்டுகெளிறுடனிருந்துகிளர்வாயறுதலைசேர்
வண்டனமணல்கிண்டிமடநாரைவிளையாடுமயிலாடுதுறையே. (௯)

மிண்டுதிறலமணரொடுசாக்கியருமலர்தூற்றமிக்கதிறலோ
னிண்டைகுடிகொண்டசடையெங்கள்பெருமானதிடமென்பரெழிலார்
தெண்டிரைபரந்தொழுகுகாவிரியதென்கரைநிரந்துகமழ்பூ
வண்டவைதிளைக்கமதுவந்தொழுகுசோலைமயிலாடுதுறையே. (௧௦)

ணந்தருமயானநிலவானமதியாததொருசூலமொடுபேய்க்
ணந்தொழுகபாலிகழலேத்திமிகவாய்த்ததொருகாதன்மையினான்
மணந்தண்மலிகாழிமறைஞானசம்பந்தன்மயிலாடுதுறையைப்
ணர்ந்ததமிழ்பத்துமிசையாலுரைசெய்வார்பெறுவர்பொன்னுலகமே.

திருச்சிற்றம்பலம்

---

திருவைகா - திருவிராகம் - பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

ாழைமிடறாககவிகோளுமிலவாகவிசைகூடும்வகையா
யழையடியாரவர்கள்யாவைசொனசொன்மகிழுமீசனிடமாந்
ாழையிளநீர்முதியகாய்கமுகின்வீழநிறைதாறுசிதறி
ாழையுதிர்வீழ்கனிகளூறிவயல்சேறுசெயும்வைகாவிலே. (௧)

ண்டமுறுமேருவரையங்கிகணைநாணரவதாகவெழிலார்
ண்டவர்தமுப்புரமெரித்தவிகிர்தன்னவன்விரும்புமிடமாம்

புண்டரிகமாமலர்கள புக்குவிளையாடுவயல்சூழ்தடமெலாம
வண்டினிசைபாடவழகார்குயின்மிழற்றுபொழிலவைகாவிலே. (உ)

ஊனமிலராகியுயர்நற்றவமெய்கற்றவையுணர்ந்தவடியார்
ஞானமிகநின்றுதொழநாளுமருள்செய்யவலநாதனிடமா
மானவயலசூழ்தருமல்குபுனல்சூழ்ந்தபொழில்கடோறுமழகார்
வானமதியோடுமழைநீண்முகில்கள்வந்தணவுமவைகாவிலே. (ங)

இன்னவுருவின்னநிறமென்றறிவதேலரிதுநீதிபலவுந்
தன்னதுருவாமெனமிகுத்ததவநீதியொடுதானமர்விட
முன்னைவினைபோமவகையினுன்முழுதுணர்ந்துமுயல்கின்றமுனிவர்
மன்னவிருபோதுமருவித்தொழுதுசேருமவயல்வைகாவிலே (ச)

வேதமொடுவேள்விபலவாயினமிகுத்துவிதியாறுசமய
மோதியுமுணர்ந்துமுளதேவர்தொழநின்றருளசெயொருவனிடமா
மேதகையகேதகைகளபுன்னையொடுஞாழலவைமிக்கவழகார்
மாதவிமணங்கமழவண்டுபலபாடுபொழிலவைகாவிலே. (ரு)

நஞ்சமுதுசெய்தமணிகண்டனமையாளுடையஞானமுதல்வன்
செஞ்சடையிடைப்புனலகர்ந்தசிவலோகனமர்கின்றவிடமா
மஞ்சுடனொடாறுபதமேழினிசையெண்ணரியவண்ணமுளவாய்
மைந்தரொடுமாதர்பலருந்தொழுதுசேரும்வயலவைகாவிலே. (சா)

நாளுமிகுபாடலொடுஞானமிகுநல்லமலர்வல்லவகையாற்
றோளினொடுகைகுளிரவேதொழுமவர்க்கருள்செய்சோதியிடமா
நீளவளர்சோலைதொறுநாளிபலதுன்றுகனிநின்றதுதிர
வாளைகுதிகொளளமதுநாறமலர்விரியுமவயலவைகாவிலே. (எ)

கையிருபதோடுமெய்கலங்கிடவிலங்கலையெடுத்தகடியோ
னையிருசிரங்களையொருங்குடனெரித்தவழகன்றனிடமாங்
கையின்மலர்கொண்டுநலகாலையொடுமாலைகருதிபபணிதம
வையகமெலாமருவிநின்றுதொழுதேத்துமெழிலவைகாவிலே. (அ)

அந்தமுதலாதிபெருமானமரர்கோனையயன்மாலுமிவர்க
ளெந்தைபெருமானிறைவனென்றுதொழநின்றருள்செயீசனிடமாஞ்
சிந்தைசெய்துபாடுமடியார்பொடிமெய்பூசியெழுதொண்டரவர்கள
வந்துபலசந்தமலர்முந்தியணையும்பதிநல்வைகாவிலே. (கூ)

ஈசனெமையாளுடையவெந்தைபெருமானிறைவனென்றுதனையே
பேசுதல்செபாவமணர்புத்தரவாசித்தமணையாவவனிடங்
தேசமதெலாமருவிநின்றுபரவித்திகழநின்றபுகழோன
வாசமலரானபலதுவியணையும்பதிநல்வைகாவிலே. (௧0)

முற்றுநமையாளுடையமுக்கண்முதல்வன்றிருவைகாவிலதனைச்
செற்றமவினர்சிரபுரத்தலைவன்ஞானசம்பந்தனுரைசெ
யுற்றதமிழ்மாலையீரைந்துமிவைவல்லவருருத்திரரெனப்
பெற்றமரலோகமிகவாழ்வர்பிரியாரவர்பெருமபுகழொடே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருமாகறல்-திருவிராகம்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

விங்குவிளைகழனிமிகுகடைசியர்கள்பாடல்விளையாடலரவ
மங்குலொடுநீளகொடிகண்மாடமலிநீடுபொழின்மாகறலுளான
கொங்குவிரிகொன்றையொடுகங்கைவளர்திங்களணிசெஞ்சடையினான்
செங்கண்விடையண்ணலடிசேர்பவர்கடீவினைகடீருமுடனே. (௧)

கலையினொலிமங்கையர்கள்பாடலொலியாடல்கவினெய்தியழகார்
மலையினிகர்மாடமுயர்நீள்கொடிகள்வீசுமொலிமாகறலுளா
னிலையினமலிவேலுனையசூலம்வலனேந்தியெரிபுன்சடையினு
ளலைகொளபுனலேந்துபெருமானடியையேத்தவினையகலுமிகவே. (௨)

காலையொடுதுந்துமிகள்சங்குகுழல்யாழ்முழவுகாமருவுசீர்
மாலைவழிபாடுசெய்துமாதவர்களேத்திமகிழ்மாகறலுளான்
றோலையுடைபேணியதன்மேலோர்சுடர்நாகமசையாவழகிதாப்
பாலையனநீறுபுனைவானடியையேத்தவினைபறையுமுடனே. (௩)

இங்குகதிர்முத்தினொடுபொன்மணிகளுந்தியெழின்மெய்யுளுடனே
மங்கையருமைந்தர்களுமன்னுபுனலாடிமகிழ்மாகறலுளான்
கொங்குவளர்கொன்றைகுளிர்திங்களணிசெஞ்சடையினானடியையே
நுங்கள்வினைதீரமிகவேத்திவழிபாடுநுகராவெழுமினே. (௪)

துஞ்சுநறுநீலமிருணீங்கவொளிதோன்றுமதுவார்கழனிவாய்
மஞ்சுமலிபூம்பொழிலின்மயில்கணடமாடமலிமாகறலுளான்
வஞ்சமதயானையுரிபோர்த்துமகிழ்வானோர்மழுவாளன்வளரு
நஞ்சமிருள்கண்டமுடைநாதனடியாரைநலியாவினைகளே. (௫)

மன்னுமறையோர்களொடுபல்படிமமாதவர்கள்கூடியுடனா
யின்னவகையாலினிதிறைஞ்சியிமையோரிலெழுமாகறலுளான்
மின்னைவிரிபுன்சடையின்மேன்மலர்கள்கங்கையொடுதிங்களெனவே
யுன்னுமவர்தொல்வினைகளொல்கவுயர்வானுலகமேறலெளிதே. (௬)

வெய்யவினைநெறிகள்செலவந்தணையுமேல்வினைகள்விட்டலுறுவீர்
மைகொள்விரிகானன்மதுவார்கழனிமாகறலுளானெழிலதார்
கையகரிகால்வரையின்மேலதுரிதோலுடையமேனியழகா
னையனடிசேர்பவரையஞ்சியடையாவினைகளகலுமிகவே. (௭)

தூசுதுகினீள்கொடிகண்மேகமொடுதோய்வனபொன்மாடமிசையே
மாசுபடுசெய்கைமிகமாதவர்களோதிமலிமாகறலுளான்
பாசுபதவிச்சைவரிநச்சரவுகச்சையுடைபேணியழகார்
பூசுபொடியீசனெனவேத்தவினைநிற்றலிலபோகுமுடனே. (௮)

தூயவிரிதாமரைகணெய்தல்கழுநீர்குவளைதோன்றமருவுண்
பாயவரிவண்டுபலபண்முரலுமோசைபயின்மாகறலுளான்
சாயவிரலூன்றியவிராவணனதன்மைகெடநின்றபெருமா
னாயபுகழேத்துமடியார்கள்வினையாயினவுமகல்வதெளிதே. (௯)

காலினலபைங்கழல்கணீண்முடியின்மேலுணர்வுகாமுறவினான்
மாலுமலரானுமறியாமையெரியாகியுயர்மாகறலுளா
னாலுமெரிதோலுமுரிமாமணியநாகமொடுகூடியுடனா
யாலுமவிடையூர்தியுடையடிகளடியாரையடையாவினைகளே. (௧௦)

கடைகணெடுமாடமிகவோங்குகமழ்வீதிமலிகாழியவர்கோ
னடையுமவ்வகையாற்பரவியரனையடிகூடுசம்பந்தனுரையான்
மடைகொள்புனலோடுவயல்கூடுபொழினயாகநல்லுளானடியையே
யுடையதமிழ்பத்துமுணர்வாரவர்கடொல்வினைகளொல்குமுடனே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருப்பட்டீச்சரம்-திருவிராகம்-பண்-சாதாரி

திருச்சிற்றம்பலம்

பாடன்மறைசூடன்மதிபல்வளையொர்பாகமதின்மூன்றொர்கணையாற்
கூடவெரியூட்டியெழில்காட்டிநிழல்கூடுபொழில்சூழ்பழசையுண்
மாடமழபாடியுறைபட்டிசரமேயகொடிகட்டவிடையா
ரேடநிலைகொண்டவரைவீடுநெறிகாட்டிவினைவீடுமவரே. (௧)

நீரின்மலிபுன்சடையர்நீளரவுகச்சையதுநச்சிலையதோர்
கூரின்மலிசூலமதுவேந்தியுடைகோவணமுமானினுரிதோல்
காரின்மலிகொன்றைவிரிதார்கடவுள்காதல்செய்துமேயநகர்தான்
பாரின்மலிசீர்பழசைபட்டிசரமேத்தவினைபற்றழியுமே. (௨)

காலைமடவார்கள்புனலாடுவதுகவ்வைகடியார்மறுகெலா
மாலைமணநாறுபழையாறைமழபாடியழகாயமலிசீர்ப்
பாலையவர்நீறுபுனைமார்பனுறைபட்டிசரமேபரவுவார்
மேலையொருமால்கடல்கள்போற்பெருகிவிண்ணுலகமாளுமவரே. (௩)

கண்ணின்மிசைநண்ணியிழிவிப்பமுகமேத்துகமழ்செஞ்சடையினான்
பண்ணின்மிசைநின்றுபலபாணிபடவாடவலபான்மதியினான்
மண்ணின்மிசைநேரின்மழபாடிமலிபட்டிசரமேமருவுவார்
விண்ணின்மிசைவாழுமிமையோரொடுடனாதலதுமேவலெளிதே. (௪)

மருவமுழவதிரமழபாடிமலிமத்தவிழவார்த்தவனையார்
பருவமழைபண்கவர்செய்பட்டிசரமேயபடர்புன்சடையினான்
வெருவமதயானையுரிபோர்த்துமையையஞ்சவருவெள்விடையினா
னுருவமெரிகழல்கடொழவுள்ளமுடையாரையடையாவினைகளே. (௫)

மறையினொலிசீதமொடுபாடுவனபூதமடமருவிவிரவார்
பறையினொலிபெருகநிகழநட்டமமர்பட்டிசரமேயபணிகூர்
பிறையினொடுமருவியதோர்சடையினிடையேற்றபுனற்றோற்றநிலையா
மிறைவனடிமுறைமுறையினேத்துமவர்தீதுதொழில்களிலராமிகவே (௬)

பிறவிபிணிமூப்பினொடுநீங்கியிமையோருலகுபேணலுறுவார்
துறவியெனுமுள்ளமுடையார்கள்கொடிவீதியழகாயதொருசீ
ரிறைவனுறைபட்டிசரமேத்தியெழுவார்கள்வினையேதுமிலவாய்
நறவவிரையாலுமொழியாலும்வழிபாடுமறவாதவவரே. (௭)

நேசமிகுதோள்வலவனாகியிறைவன்மலையைநீக்கியிடலும்
நீசனவிறல்வாட்டிவரையுற்றதுணராதநிரம்பாமதியினா
னீசனுறைபட்டிசரமேத்தியெழுவார்கள்வினையேதுமிலவாய்
நாசமறவேண்டுதலினண்ணுமெளிதாமமரர்விண்ணுலகமே. (௮)

தூயமலரானுநெடியானுமறியாரவன்றோற்றநிலையின்
னேயவகையானதனையாரதறிவாரணிகொண்மார்பினகலம்

பாயநலநீறதணிவானுமைதனோடுமுறைபட்டீச்சரமே
மேயவனதீரடியுமேத்தவெளிதாகுநலமேலுலகமே (௯)

தடுக்கினையிடுக்கிமடவார்களிடுபிண்டமதுவுண்டுழறருங்
கடுப்பொடியுடற்கயவர்கத்துமொழிகாதல்செய்திடாதுகமழ்சேர்
மடக்கயல்வயற்கொண்மழபாடிநகர்நீடுபழையாறையதனுட்
படைக்கொருகரத்தனமிகுபட்டீச்சரமேத்தவினைபற்றறுதலே (௧0)

மந்தமலிசோலைமழபாடிநகர்நீடுபழையாறையதனிற்
பந்தமுயர்வீடுநலபட்டீச்சரமேயபடர்புன்சடையனை
யந்தண்மறையோரினிதுவாழ்புகலிஞானசம்பந்தனணியார்
செந்தமிழ்களகொண்டினிதுசெப்பவலதொண்டர்வினைநிற்பதிலவே (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தேவூர்-திருவிராகம்-பண்-சாதாரி

திருச்சிற்றம்பலம்

காடுபயில்வீடுமுடையோடுகலன்மூடுமுடையாடைபுலிதோ
லேடுபலிபூணதுடைவேடமிகுவேதியர்திருந்துபதிதா
னாடகமதாடமஞைபாடவரிகோடல்கைமறிப்பநலமார்
சேடுமிகுபேடையனமூடிமகிழ்மாடமிடைதேவூரதுவே. (௧)

கோளரவுகொன்றைநகுவெண்டலையெருக்குவணிகொக்கிறகொடும்
வாளரவுதண்சலமகட்குலவுசெஞ்சடைவரத்திறைவனூர்
வேளரவுகொங்கையிளமங்கையர்கள்குங்குமம்விரைக்குமணமார்
தேளரவுதென்றறெருவெங்குநிறைவொன்றிவருதேவூரதுவே (௨)

பண்டடவுசொல்லின்மலைவல்லியுமைபங்கனெமையாளுமிறைவ
னெண்டடவுவானவரிறைஞ்சுகழலோனினிதிருந்தவிடமாம்
விண்டடவுவார்பொழிலுகுத்தநறவாடிமலர்சூடிவிரையார்
செண்டடவுமாளிகைசெறிந்துதிருவொன்றிவளர்தேவூரதுவே. (௩)

மாசின்மனநேசர்தமதாசைவளர்சூலதரன்மேலையிமையோ
ரீசன்மறையோதியெரியாடிமிகுபாசுபதன்மேவுபதிதான்
வாசமலர்கோதுகுயில்வாசகமுமாதரவர்பூவைமொழியுந்
தேசவொலிவீணையொடுகீதமதுவீதிநிறைதேவூரதுவே. (௪)

கானமுறுமானமறியானையுரிபோர்வைகனலாடல்புரிவோ
னேனவெயிறாமையிளநாகம்வளர்மார்பினிமையோர்தலைவனூர்
வானளவுசூதமிளவாழைமகிழ்மாதவிபலாநிலவிவார்
தேனமதுவுண்டுவரிவண்டுமருள்பாடிவருதேவூரதுவே. (௫)

ஆறினொடுகீறுமதியேறுசடையேறனடையார்நகர்கடான்
சீறுமவைவேறுபடநீறுசெய்தநீறனமையாளுமரனூர்
வீறுமலரூறுமதுவேறிவளர்வாயவிளைகின்றகழனிச்
சேறுபடுசெங்கயல்விளிப்பவிளவாளைவருதேவூரதுவே. (௬)

கன்றியெழுவென்றிநிகழ்துன்றுபுரமன்றவியநின்றுநகைசெ
யென்றனதுசென்றுநிலையெந்தைதனதந்தையமரின்பநகர்தான்
முன்றின்மிசைநின்றபலவின்கனிகடின்றுகறவைக்குருளைகள்
டுசன்றிசையநின்றுதுளியொன்றவினையாடிவளர்தேவூரதுவே. (௭)

ஓதமலிகின்றதென்னிலங்கையரையன்மலிபுயங்கணெரியப்
பாதமலிகின்றவிரலொன்றினிலடர்த்தபரமன்றனதிடம்
போதமலிகின்றமடவார்களடமாடலொடுபொங்குமுரவஞ்
சேதமலிகின்றகரமவ்வெனறிதொழிலாளர்புரிதேவூரதுவே. (அ)

வண்ணமுகிலன்னவெழிலண்ணலொடுசுண்ணமலிவண்ணமலர்மே
னண்ணவனுமெண்ணரியவிண்ணவர்கள்கண்ணவனலங்கொள்பதிதான்
வண்ணவனநுண்ணிடையினெண்ணரியவன்னநடையின்மொழியினார்
திண்ணவனமாளிகைசெறிந்தவிசையாழ்மருவுதேவூரதுவே. (௯)

பொச்சமமர்பிச்சைபயிலச்சமணுமெச்சமறுபோதியருமா
மொச்சைபயிலிச்சைகடிபிச்சன்மிகுநச்சரவன்மொச்சுநகர்தான்
மைச்சின்முகில்வைச்சபொழில (௧௦)

துங்கமிகுபொங்கரவுதங்குசடைநங்கனிறைதுன்றுகுழலார்
செங்கயல்கண்மங்கையுமைநங்கையொருபங்கனமர்தேவூர்தன்மேல்
பைங்கமலமங்கணிகொடிணபுகலிஞானசம்பந்தனுரைசெய்
சங்கமலிசெந்தமிழ்கள்பத்துமிசைவல்லவர்கள்சங்கையிலரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

பத்தாவதிற்குறைவு - கிலமானதிற்சோர்ந்தது

---

## திருச்சண்பைநகர்-திருவிராகம்-பண்-சாதாரி

திருச்சிற்றம்பலம்

எந்தமதுசிந்தைபிரியாதபெருமானெனவிறைஞ்சியிமையோர்
வந்துதுதிசெய்யவளர்தீயமொடுதூபமலிவாய்மையதனா
லந்தியமர்சந்திபலவர்ச்சனைகள்செய்யவமர்கின்றவழகன்
சந்தமலிகொந்தளநன்மாதினொடுமேவுபதிசண்பைநகரே (௧)

அங்கமவிரித்தியரவாமைவிரவாரமமர்மார்பிலழகன்
பங்கயமுகத்தரிவையோடுபிரியாதுபயில்கின்றபதிதான்
பொங்குபரவைத்திரைகொணர்ந்துபவளத்திரள்பொலிந்தவயலே
சங்குபுரியிப்பிதரளத்திரளிறங்கொளிகொள்சண்பைநகரே. (௨)

போழுமதிதாழுநதிபொங்கரவுதங்குபுரிபுன்சடையினன்
யாழின்மொழிமாழைவிழியேழையிளமாதினொடிருந்தபதிதான்
வாழைவளர்நாழன்மகிழ்மன்னுபுனைதுன்னுபொழின்மாடுமடலார்
தாழைமுகிழ்வேழமிகுதந்தமெனவுந்துதகுசண்பைநகரே. (௩)

கொட்டமுழவிட்டவடிவட்டணைகட்டநடமாடிகுலவும்
பட்டநுதல்கட்டுமலர்மட்டுமலிபாவையொடுமேவுபதிதான்
வட்டமதிதட்டுபொழிலுட்டமதுவாய்மைவழுவாதமொழியார்
சட்டகலையெட்டுமருவெட்டும்வளர்தத்தைபயில்சண்பைநகரே. (௪)

பணங்கெழுவுபாடலினொடாடல்பிரியாதபரமேட்டிபகவ
னணங்கெழுவுபாகமுடையாகமுடையன்பர்பெருமானதிடமா
மணங்கெழுவியாடுகொடிமாடமதினீடுவிரையார்புறவெலாந்
தணங்கெழுவியேடலர்கொடாமரையிலன்னமவளர்சண்பைநகரே. (௫)

பாலனுயிர்மேலணுவுகாலனுயிர்பாறவுதைசெய்தபரம
னாலுமயில்போலியலியாயிழைதனோடுமமர்வெய்துமிடமா

தேனுடைமாமலரன்னம்வைகுந்திருநாரையூர்மேய
வானிடையைந்துகந்தானடியேபரவாவடைவோமே (௯)

தூசுபுனைதுவராடைமேவுந்தொழிலாருடம்பினிலுண்
மாசுபுனைந்துடைநீத்தவர்கள்மயனீர்மைகேளாதே
தேசுடையீர்கள்தெளிந்தடைமின்திருநாரையூர்தன்னிற்
பூசுபொடித்தலைவரடியாரடியேபொருத்தமே. (௰)

தண்மதிதாழ்பொழில்சூழ்புகலித்தமிழ்ஞானசம்பந்தன்
ஒண்மதிசேர்சடையானுறையுந்திருநாரையூர்தன்மேற்
பண்மதியாற்சொன்னபாடல்பத்தும்பயின்றார்வினைபோகி
மண்மதியாதுபோய்வான்புகுவர்வானோரெதிர்கொளவே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

திருவலம்புரம் - பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

கொடியுடைமும்மதிலூடுருவக்குனிவெஞ்சிலைதாங்கி
யிடிபடவெய்தவமரர்பிரானடியாரிசைந்தேத்தத்
துடியிடையாளையோர்பாகமாகத்துதைந்தாரிடம்போலும்
வடிவுடைமேதிவயல்படியும்வலம்புரநன்னகரே. (௧)

கோத்தகல்லாடையுங்கோவணமுங்கொடுகொட்டியுங்கொண்டொருகை
தேய்த்தன்றனங்கனைத்தேசழித்துத்திசையார்தொழுதேத்தக்
காய்த்தகல்லாலதன்கீழிருந்தகடவுளிடம்போலும்
வாய்த்தமுத்தீத்தொழிலான்மறையோர்வலம்புரநன்னகரே. (௨)

நொய்யதோர்மான்மறிகைவிரலின்னுனைமேனிலையாக்கி
மெய்யெரிமேனிவெண்ணீறுபூசிவிரிபுன்சடைதாழ
மையிருஞ்சோலைமணங்கமழவிருந்தாரிடம்போலும்
வைகலுமாமுழவம்மதிரும்வலம்புரநன்னகரே. (௩)

ஊனமராக்கையுடம்புதன்னையுணரிற்பொருளன்று
தேனமர்கொன்றையினானடிக்கேசிறுகாலையேத்துமினோ
வானமரைந்துங்கொண்டாட்டுகந்தவடிகளிடம்போலும்
வானவர்நாடொறும்வந்திறைஞ்சும்வலம்புரநன்னகரே. (௪)

செற்றெறியுந்திரையார்கலுழிச்செழுநீர்கோலச்செஞ்சடைமே
லற்றறியாதனலாடுநட்டமணியார்தடங்கண்ணி
பெற்றறிவாரெருதேறவல்லபெருமானிடம்போலும்
வற்றறியாப்புனல்வாய்ப்புடையவலம்புரநன்னகரே. (௫)

உண்ணவண்ணத்தொளிநஞ்சமுண்டுமையோடுடனாகிச்
சுண்ணவண்ணப்பொடிமேனிபூசிச்சுடர்ச்சோதிநின்றிலங்கப்
பண்ணவண்ணத்தன்பாணிசெய்யப்பயின்றாரிடம்போலும்
வண்ணவண்ணப்பறைபாணியறாவலம்புரநன்னகரே. (௬)

புரிதருபுன்சடைபொன்றயங்கப்புரிநூல்புரண்டிலங்க
விரைதருவேழத்தினீருரிதோன்மேன்மூடிவேய்
புரைதோளரைதருபூந்துகிலாரணங்கையமர்ந்தாரிடம்போலும்
வரைதருதொல்புகழ்வாழ்க்கையறாவலம்புரநன்னகரே. (௭)

தண்டணைதோளிருபத்தினொடுந்தலைபத்துடையானை
யொண்டணைமாதுமைதானடுங்கவொருகால்விரலூன்றி
மிண்டதுதீர்த்தருள்செய்யவல்லவிகிர்தர்க்கிடம்போலும்
வண்டணைதன்னொடுவைகும்பொழில்வலம்புரநன்னகரே. (௮)

தாருறுதாமரைமேலயனுந்தரணியளந்தானுந்
தேர்வறியாவகையாலிகலித்திகைத்துத்திரிந்தேத்தப்
பேர்வறியாவகையானிமிர்ந்தபெருமானிடம்போலும்
வாருறுசோலைமணங்கமழும்வலம்புரநன்னகரே (௯)

காவியநற்றுவராடையினார்கடுநோன்புமேல்கொள்ளும்
பாவிகள்சொல்லைப்பயின்றறியாப்பழந்தொண்டருள்ளுருக
வாவியுணின்றருள்செய்யவல்லவழகரிடம்போலும்
வாவியினீர்வயல்வாய்ப்புடையவலம்புரநன்னகரே. (௧௦)

நல்லியன்மாமறையோர்புகலித்தமிழ்ஞானசம்பந்தன்
வல்லியந்தோலுடையாடையினன்வலம்புரநன்னகரைச்
சொல்லியபாடல்கள்பத்துஞ்சொல்லவல்லார்தொல்வினைபோய்ச்
செல்வனசேவடிசென்றணுகிச்சிவலோகஞ்சேர்வாரே. (௧௧)

---

திருச்சிற்றம்பலம்.

## திருப்பருதிநியமம்-பண்-பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்.

விண்கொண்டதூமதிசூடிநீடுவிரிபுன்சடைதாழப்
பெண்கொண்டமார்பில்வெண்ணீறுபூசிப்பேணார்பலிதேர்ந்து
கண்கொண்டசாயலொடேர்கவர்ந்தகள்வர்க்கிடம்போலும்
பண்கொண்டவண்டினம்பாடியாடும்பருதிநியமமே (௧)

அரவொலிவில்லொலியம்பினொலியடங்கார்புரமூன்று
நிரவவல்லார்நிமிர்புன்சடைமேனிரம்பாமதிசூடி
யிரவில்புகுந்தென்னெழில்கவர்ந்தவிறைவர்க்கிடம்போலும்
பரவவல்லார்வினைபாழ்படுக்கும்பருதிநியமமே. (௨)

வாண்முகவார்குழல்வாணெடுங்கண்வளைத்தோண்மாதஞ்ச
நீண்முகமாகியபைங்களிற்றினுரிமேனிகழ்வித்து
நாண்முகங்காட்டிநலங்கவர்ந்தநாதர்க்கிடம்போலும்
பாண்முகவண்டினம்பாடியாடும்பருதிநியமமே. (௩)

வெஞ்சுரஞ்சேர்விளையாடல்பேணிவிரிபுன்சடைதாழத்
துஞ்சிருண்மாலையுநண்பகலுந்துணையார்பலிதேர்ந்து
வஞ்சுரும்பார்குழல்சோரவுள்ளங்கவர்ந்தார்க்கிடம்போலும்
பஞ்சுரம்பாடிவண்டியாழ்முரலும்பருதிநியமமே. (௪)

நீர்புல்குபுன்சடைநின்றிலங்கநெடுவெண்மதிசூடித்
தார்புல்குமார்பில்வெண்ணீறணிந்துதலையார்பலிதேர்வா
ரேர்புல்குசாயலெழில்கவர்ந்தவிறைவர்க்கிடம்போலும்
பார்புல்குதொல்புகழால்விளங்கும்பருதிநியமமே. (௫)

வெங்கடுங்காட்டகத்தாடல்பேணிவிரிபுன்சடைதாழத்
திங்கடிருமுடிமேல்விளங்கத்திசையார்பலிதேர்வார

சங்கொடுசாயலெழில்கவர்ந்தசைவர்க்கிடம்போலும்
பைங்கொடிமுல்லைபடர்புறவிற்பருதிநியமமே. (சூ)

பிறைவளர்செஞ்சடைபின்றயங்கப்பெரியமழுவேந்தி
மறையொலிபாடிவெண்ணீறுபூசிமனைகள்பலிதேர்வா
ரிறைவளைசோரவெழில்கவர்ந்தவிறைவர்க்கிடம்போலும்
பறையொலிசங்கொலியால்விளங்கும்பருதிநியமமே. (எ)

ஆசடைவானவர்தானவரோடடியாரமர்ந்தேத்த
மாசடையாதவெண்ணீறுபூசிமனைகள்பலிதேர்வார்
காசடைமேகலைசோரவுள்ளங்கவர்ந்தார்க்கிடம்போலும்
பாசடைத்தாமரைவைகுபொய்கைப்பருதிநியமமே. (அ)

நாடினர்காண்கிலர்நான்முகனுந்திருமானயந்தேத்தக்
கூடலராடலராகிநாளுங்குழகர்பலிதேர்வார்
ஏடலர்சோரவெழில்கவர்ந்தவிறைவர்க்கிடம்போலும்
பாடலராடலராய்வணங்கும்பருதிநியமமே. (கூ)

கல்வளராடையர்கையிலுண்ணுங்கழுக்களிழுக்கான
சொல்வளமாகநினைக்கவேண்டாசுடுநீறதுவாடி
நல்வளைசோரநலங்கவர்ந்தநாதர்க்கிடம்போலும்
பல்வளர்முல்லையங்கொல்லைவேலிப்பருதிநியமமே. (க0)

பையரவம்விரிகாந்தள்விம்முபருதிநியமத்துத்
தையலொர்பாகமமர்ந்தவனைத்தமிழ்ஞானசம்பந்தன்
பொய்யிலிமாலைபுனைந்தபத்தும்பரவிப்புகழ்ந்தேத்த
வையுறவில்லைப்பிறப்பறுத்தலவலமடையாவே. (கக)

திருச்சிற்றம்பலம்

---

## திருக்கலிக்காமூர்-பண்-பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

மடல்வரையின்மதுவிம்முசோலைவயல்சூழ்ந்தழகாரும்
கடல்வரையோதங்கலந்துமுத்தஞ்சொரியுங்கலிக்காமூ
ருடல்வரையினுயிர்வாழ்க்கையாயவொருவன்கழலேத்த
விடர்தொடராவினையானசிந்துமிறைவனருளாமே. (க)

மைவரைபோற்றிரையோடுகூடிப்புடையேமலிந்தோதங்
கைவரையால்வளர்சங்கமெங்குமிகுக்குங்கலிக்காமூர்
மெய்வரையான்மகள்பாகன்றன்னைவிரும்பவுடல்வாழு
மைவரையாசறுத்தாளுமென்பரதுவுஞ்சரதமே (உ)

தூவியநீர்மலரேந்திவையத்தவர்கடொழுதேத்தக்
காவியனேர்விழிமாதரென்றுங்கவினார்கலிக்காமூர்
மேவியவீசனையெம்பிரானைவிரும்பிவழிபட்டா
லாவியுணீங்கலனாதிமூர்த்தியமரர்பெருமானே (ங)

குன்றுகள்போற்றிரையுந்தியந்தண்மணியார்தரமேதி
கன்றுடன்புல்கியாயமனைசூழ்கவினார்கலிக்காமூ
ரென்றுணரூழியும்வாழுமெந்தைபெருமானடியேத்தி
நின்றுணர்வாரைநினையகில்லார்நீசர்நமன்றமரே. (ச)

வானிடைவாண்மதிமாடந்தீண்ட மருங்கேகடலோதங்
கானிடைநீழலிற்கண்டல்வாழுங் கழிசூழ்கலிக்காழூ
ரானிடையைந்துகந்தாடினானை யமரர்தொழுதேத்த
நானடைவாம்வண மின்புதந்த நலமேநினைவோமே. (ரு)

துறைவளர்கேதகைமீதுவாசஞ் சூழ்வான்மலிதென்றல்
கறைவளருங்கடலோதமென்றுங் கலிக்குங்கலிக்காழூர்
மறைவளரும்பொருளாயினானை மனத்தாலினைந்தேத்த
நிறைவளரும்புகழெய்தும்வாதை நினையாவினைபோமே. (சு)

கோலநன்மேனியின்மாதர்மைந்தர் கொணர்மங்கிலியத்திற்
காலமும்பொய்க்கினுந்தாம்வழுவா தியற்றுங்கலிக்காழூர்
ஞாலமுந்தீவளிஞாயிறாய நம்பன்கழலேத்தி
யோலமிடாதவரூழியென்று முணராவைத்துறந்தாரே (எ)

ஊரரவந்தலைநீண்முடியா னொலிநீருலகாண்டு
காரரவக்கடல்சூழவாழும் பதியாங்கலிக்காழூர்
தேரரவல்குலம்பேதையஞ்சத் திருந்துவரைபேர்த்தா
னாரரவம்படவைத்தபாத முடையானிடமாமே. (அ)

அருவரையேந்தியமாலுமற்றை யலர்மேலுறைவானு
மிருவருமஞ்சவெரியுருவா யெழுந்தான்கலிக்காழூ
ரொருவனையானைமகள்பாகன்றன்னை யுணர்வாற்றொழுதேத்தத்
திருமருவுஞ்சிதைவில்லைசெம்மைத் தேசுண்டவர்பாலே. (கூ)

மாசுபிறக்கியமேனியாரு மருவுந்துவராடை
மீசுபிறக்கியமெய்யினாரு மறியாரவர்தோற்றங்
காசினிநீர்த்திரண்மண்டியெங்கும் வளமார்கலிக்காழூ
ரீசனையெந்தைபிரானையேத்தி நினைவார்வினைபோமே. (க0)

ஆழியுள்நஞ்சமுதாரவுண்டன் றமரர்க்கமுதுண்ண
வூழிதோறுமுணராவளித்தா னுலகத்துயர்கின்ற
காழியுள்ஞானசம்பந்தன்சொன்ன தமிழார்கலிக்காழா
வாழியெம்மானைவணங்கியேத்த மருவாபிணிதானே (கக)

திருச்சிற்றம்பலம்

---

திருவலஞ்சுழி-பண்-பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

பள்ளமதாயபடர்சடைமேற் பயிலுந்திரைக்கங்கை
வெள்ளமதாரவிரும்பிநின்ற விகிர்தன்விடையேறும்
வள்ளல்வலஞ்சுழிவாணனென்று மருவிநினைந்தேத்தி
யுள்ளமுருகவுணருமின்க ளுறுநோயடையாவே (க

காரணிவெள்ளைமதியஞ்சூடிக் கமழ்புன்சடைதன்மேற்
றாரணிகொன்றையுந்தண்ணெருக்குந் தழையுந்நுழைவித்து
வாரணிகொங்கைநல்லாளோடும் வலஞ்சுழிமேவியவ
ரூரணிபெய்பலிகொண்டுகந்த வுவகையறியோமே. (உ

பொன்னியலுந்திருமேனிதன்மேற் புரிநூல்பொலிவித்து
மின்னியலுஞ்சடைதாழவேழ வுரிபோர்த்தரவாட

மன்னியமாமறையோர்கள்போற்றுமவலஞ்சுழிவாணர்தம்மை
லுன்னியசிந்தையினீங்ககில்லார்க்குயராவாமபிணிபோமே. (௩)

விடையொருபாலொருபாலவிரும்புமெல்லியல்புல்கியதோர்
சடையொருபாலொருபாலிடங்கொடாழ்போற்றிசைப்ப
நடையொருபாலொருபாற்சிலம்புநாளுமவலஞ்சுழிசே
ரடையொருபாலடையாதசெய்யுஞ்செய்யமையறியோமே. (௪)

கையமருமமழுநாகமவீணைகலைமான்மறியேந்தி
மெய்யமருமபொடிபூசிவீசுகுழையார்தருதோடும
பையமருமரவாடலாடும்படர்சடையார்க்கிடமா
மையமருமபொழிற்சூழுமவேலிவலஞ்சுழிமாநகரே. (௫)

தண்டொடுசூலந்தழையவேந்திதையலொருபாகங்
கண்டிடுபெய்பலிபேணிநாணாகரியின்னுரிதோலா
வண்டிடுமொய்பொழில்சூழ்ந்தமாடவலஞ்சுழிமன்னியவா
தொண்டொடுகூடித்துதைந்துநின்றதொடாவைதொடாவோமே (௬)

கல்லியலும்மலையங்கைநீங்கவளைத்தவளையார்தாம
சொல்லியலும்மதின்மூன்றுஞ்செற்றசுடரானிடர்நீங்க
மல்லியலுந்திரடோளெமமாதிவலஞ்சுழிமாநகரே
புல்கியவேந்தனைப்புல்கியேத்தியிருப்பவர்புண்ணியரே. (௭)

வெஞ்சினவாளரக்கனவனையைவிறலாலெடுத்தானை
ளேருசுமோரார்திருநான்குமொன்றுமடார்தாரழுதாய
நஞ்சிருள்கண்டத்துநாதனின்றநகரனுகுமிடமபோலு
மஞ்சுலவும்பொழில்வண்டிகெண்டும்வலஞ்சுழிமாநகரே (௮)

ஏடியன்னான்முகனோநெடுமாலெனநின்றவர்காணா
கூடியகூரரியாய்நிமிர்ந்ததகுழகர்நலகேத்த
வாடியவெண்டலைகையிலேந்திவலஞ்சுழிமேயவெம்மான
பாடியநான்மறையாளர்செய்யுஞ்சரிதைபலபலவே. (௯)

குண்டருமபுத்தருங்கூறையின்றிக்குழுவார்நுரைகேட்டு
தொண்டருந்தனறெழில்பேணநின்றகழலானடலாடி
வண்டமருமபொழின்மல்குபொன்னிவலஞ்சுழிவாணனெமமான்
பண்டொருவேள்விமுனிந்துசெற்றபரிசேபகர்வோமே. (௧௦)

வாழிபெம்மானெனவேத்தைமேயவலஞ்சுழிமாநகர்மேற
காழியுண்ஞானசம்பந்தனசொன்னகருத்தின்றமிழ்மாலை
யாழியிவையகத்தேத்தவல்லாரவர்களுந்தமருங்
மூழியொருபேருமின்பமோர்க்குமுருவுமுயர்வாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாரையூர் - பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

கடலிடைவெங்கடுநஞ்சமுண்டகடவுள்விடையேறி
யுடலிடையிற்பொடிபூசவல்லானுமையோடொருபாக
னடலிடையிற்சிலைதாங்கியெய்தவம்மானடியாரமே
னடலேவினைத்தொகைதீர்த்துகந்தானிடநாரையூர்தானே. (௧)

விண்ணின்மின்னேர்மதிதுத்திநாகம்விரிபூமலர்க்கொன்றை
பெண்ணின்முன்னேமிகவைத்துகந்தபெருமானெரியாடி
நண்ணியதன்னடியார்களோடுந்திருநாரையூரானென்
றெண்ணுமினும்வினைபோகும்வண்ணமிறைஞ்சுந்நிறைவாமே. (உ)

தோடொருகாதொருகாதுசேருங்குழையானிழைதோன்றும்
பீடொருகால்பிரியாதுநின்றபிறையானமறையோதி
நாடொருகான்முனைசேரநின்றதிருநாரையூரானைப்
பாடுமினீர்பழிபோகும்வண்ணம்பயிலுய்யலாமே (௩)

வெண்ணிலவஞ்சடைசேரவைத்துவிளங்குந்தலையேந்திப்
பெண்ணிலமர்ந்தொருகூறதாயபெருமானருளார்ந்த
வண்ணன்மன்னியுறைகோயிலாகுமணிநாரையூர்தன்னை
நண்ணலமாந்துறவாக்குமின்கண்ணாடலைக்கரிசறுமே. (௪)

வானமாதிவளிநீர்நிலனுய்வழங்கும்பழியாகு
மூனமரின்னுயிர்தீங்குகுற்றமுறைவாறபிறிதின்றி
நாமனரும்பொருளாகிநின்றான்றிருநாரையூரெந்தை
கோனவனைக்குறுகக்குறுகாகொடுவல்வினைதானே. (௫)

கொக்கிறகுங்குளிர்சென்னிமத்தங்குலாயமலர்சூடி
யச்சரவோடணையார்த்துகந்தவழகன்குழகாக
நக்கமருந்திருமேனியாளன்றிருநாரையூர்மேவிப்
புக்கமரும்மனத்தோர்கட்கம்மைப்புணரும்புகருனே. (௬)

ஊழியுமின்பமுங்காலமாகியுயருந்தவமாகி
யேழிசையின்பொருள்வாழும்வாழ்க்கைவினையின்புணர்ப்பாகி
நாழிகையும்பலஞாயிறாகிநளிர்நாரையூர்தன்னில்
வாழியர்மேதகுமைந்தர்செய்யும்வகையின்விளைவாமே. (௭)

கூசமிலாதரக்கன்வரையைக்குலுங்கவெடுத்தான்றோ
ளாசமதாகியிறவூடாத்தவிரலான்கரவாதார்
பேசவியப்பொடுபேணநின்றபெரியோனிடம்போலுந்
தேசமுறப்புகழ்செய்ம்மைபெற்றதிருநாரையூர்தானே. (௮)

பூமகனும்மவனைப்பயந்தபுயலார்நிறத்தானு
மாமளவுந்திரிந்தேத்தக்காண்டலறிதற்கரியானூர்
பாமருவுங்குணத்தோர்களீண்டிப்பலவும்பணிசெய்யுந்
தேமருவுந்திகழ்சோலைசூழ்ந்ததிருநாரையூர்தானே. (௯)

வெற்றரையாகியவேடங்காட்டித்திரிவார்துவராடை
யுற்றரையோர்களுரைக்குஞ்சொல்லையுணராதெழுமின்கள்
குற்றமிலாததோர்கொள்கையெம்மானுங்குழகன்றொழிலார்ப்
பெற்றரவாட்டிவரும்பெருமான்றிருநாரையூர்சேர்வே (௧௦)

பாடியலுந்திரைசூழ்புகலித்திருஞானசம்பந்தன்
சேடியலும்புகழோங்குசெம்மைத்திருநாரையூரான்மேற்
பாடியதண்டமிழ்மாலைபத்தும்பரவித்திரிந்தாக
வாடியசிந்தையினார்க்குநீங்குமவலக்கடருனே. (௧௧

திருச்சிற்றம்பலம

## திருவாலவாய் - ஈரடிமேல்வைப்பு

திருச்சிற்றம்பலம்.

வேதவேள்வியைநிந்தனைசெய்துழ
லாதமில்லியமணொடுதேரரை
வாதில்வென்றழிக்கத்திருவுள்ளமே
பாதிமாதுடனாயபரமனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்-னாலவாயிலுறையுமெம்மாதியே. (க)

வைதிகத்தின்வழியொழுகாதவக்
கைதவமுடைக்காரமண்டேரரை
யெய்திவாதுசெயத்திருவுள்ளமே
மைதிகழ்தருமாமணிகண்டனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்-னாலவாயிலுறையுமெம்மாதியே. (உ)

மறைவழக்கமிலாதமாபாவிகள்
பறிதலைக்கையர்பாயுடுப்பார்களை
முறியவாதுசெயத்திருவுள்ளமே
மறியுலாங்கையின்மாமழுவாளனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்-னாலவாயிலுறையுமெம்மாதியே. (ங)

அறுத்தவங்கமாறாயினநீர்மையைக்
கறுத்தவாழமண்கையர்கடம்மொடுஞ்
செறுத்துவாதுசெயத்திருவுள்ளமே
முறித்தவாண்மதிக்கண்ணிமுதல்வனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்-னாலவாயிலுறையுமெம்மாதியே. (ச)

அந்தணாளர்புரியுமருமறை
சிந்தைசெய்யாவருகர்திறங்களைச்
சிந்தவாதுசெயத்திருவுள்ளமே
வெந்தநீறதணியும்விகிர்தனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்-னாலவாயிலுறையுமெம்மாதியே. (ரு)

வேட்டுவேள்விசெயும்பொருளைவிளி
மூட்டுச்சிந்தைமுரட்டமண்குண்டரை
யோட்டிவாதுசெயத்திருவுள்ளமே
காட்டிலானையுரித்தவெங்கள்வனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்-னாலவாயிலுறையுமெம்மாதியே. (சா)

அழலதோம்புமருமறையோர்திறம்
விழலதெனுமருகர்திறத்திறங்
கழலவாதுசெயத்திருவுள்ளமே
தழலிலங்குதிருவுருச்சைவனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்-னாலவாயிலுறையுமெம்மாதியே. (எ)

நீற்றுமேனியராயினர்மேலுற்ற
காற்றுக்கொள்ளவுநில்லாவமணரைத்
தேற்றிவாதுசெயத்திருவுள்ளமே
யாற்றவாளரக்கற்குமருளினாய்
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்-னாலவாயிலுறையுமெம்மாதியே. (அ)

நீலமேனியமணார்திறத்துநின்
சீலமவாதுசெய்ததிருவுள்ளமே
மாலுநான்முகனுங்காண்பரியதோர்
கோலமேனியதாகியகுன்றமே
ஞாலநின்புகழேமிகவேண்டுதென்-னாலவாயிலுறையுமெம்மாதியே. (கூ)

அன்றுமுப்புரஞ்செற்றவழகநின்
றுன்றுபொற்கழல்பேணவருங்கணத்
தென்றவாதுசெய்ததிருவுள்ளமே
கன்றுசாக்கியர்காணத்தலைவனே
ஞாலநின்புகழேமிகவேண்டுதென்-னாலவாயிலுறையுமெம்மாதியே. (க0)

கூடலாலவாய்க்கோனைவிடைகொண்டு
வாடன்மேனியமணரைவாட்டிட
மாடக்காழிச்சம்பந்தன்மதித்தவிப்
பாடல்வல்லவர்பாக்கியவாளரே (கக)

திருச்சிற்றம்பலம்

---

திருக்கயிலாயமுந் - திருவானைக்காவுந் - திருமயேந்திரமுந்
திருவாரூரும் - கூடச்சதுக்கம்

திருச்சிற்றம்பலம்

மண்ணதுவுண்டரிமலரோன்காணா
வெண்ணாவல்விரும்புமயேந்திரருங்
கண்ணதுவோங்கியகயிலையாரு
மண்ணலாரூராதியானைக்காவே (க)

வந்துமாலயன்அவர்காண்பரியார்
வெந்தவெண்ணீறணிமயேந்திரரு
கந்தவார்சடையுடைக்கயிலையாரு
மந்தணாரூராதியானைக்காவே (உ)

மாலயன்றேடியமயேந்திரருங்
காலனையுயிர்கொண்டகயிலையாரும்
வேலையதோங்குமவெண்ணாவலாரு
மாலையாரூராதியானைக்காவே. (ஙூ)

கருடனைமேறரியயனோர்காணா
வெருள்விடையேறியமயேந்திரருங்
கருடருகண்டத்தெங்கயிலையாரு
மருளாரூராதியானைக்காவே. (சு)

மதிசூதனனான்முகன்வணங்கரியார்
மதியதுசொல்லியமயேந்திரருங்
கதிர்முலைபுல்கியகயிலையாரு
மதியனாரூராதியானைக்காவே. (ரு)

சக்கரமவேண்டுமால்பிரமன்சாரா
மிக்கவர்கயிலைமயேந்திரருந்
தக்கனைத்தலையரிதழலுருவ
ரக்கணியவராரூராதியானைக்காவே. (சா)

கண்ணனுநான்முகன் காணபரியா
வெண்ணாவலவிரும்புமயேந்திரருங்
கண்ணப்பர்க்கருள்செய்தகயிலையெங்
கண்ணலாரூராதியானைக்காவே. (௭)

கடல்வண்ணனான்முகன் காணபரியா
தடவரையரக்கனைத்தலைநெரித்தார்
விடமுண்டமெய்ம்மயேந்திரரும்
மடல்விடையாரூராதியானைக்காவே (அ)

ஆதிமாலயனவர் காணபரியார்
வேதங்கடுதிசெயுமயேந்திரருங்
காதிலொருகுழையுடைக்கயிலையாரு
மாதியாரூரெந்தையானைக்காவே. (௯)

அறிவிலமணபுத்தரறிவுகொள்ளேல்
வெறியமான்கரத்தாரூர்மயேந்திரரு
மறிகடலோனயனதேடத்தானு
மறிவரியகயிலையோனானைக்காவே (௧0)

வனமாலயனவர் காணபரியா
கானமார்கயிலைநன்மயேந்திரரு
மானவாரூராதியானைக்காவை
ஞானசம்பந்தன தமிழ்சொல்லுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருப்பிரமபுரம் - ஈரடி

திருச்சிற்றம்பலம்

வரமதேகொளாவுரமதேசெயும்புரமெரித்தவன்பிரமநற்புரத்
தரனன்னாமமேபரவுவார்கள்சீர்விரவுநீள்புவியே (௧)

சேணுலாமதில்வேணுமண்ணுளோர்காணமன்றலார்வேணுநற்புரத்
தாணுவின்கழல்பேணுகின்றவராணியொத்தவரே. (௨)

அகலமார்தரைப்புகலுநான்மறைக்கிகலியோர்கள்வாழ்புகலிமாநகர்ப்
பகலசெய்வோனெதிர்ச்சகலசேகரனகலநாயகனே (௩)

துங்கமாகரிபங்கமாவடுஞ்செங்கையானிகழ்வெங்குருத்திக
ழங்கணானடித்தங்கையாற்றொழத்தங்குமோவினையே. (௪)

காணியொண்பொருட்கற்றவர்க்கீகையுடைமையோரவர்காதல்செய்யுநற்
றோணிவண்புரத்தாணியென்பவர்தூமதியினரே. (௫)

ஏந்தராவெதிர்வாய்ந்தநுண்ணிடைப்பூந்தணோதியாள்சேர்ந்தபங்கினன்
பூந்தராய்த்தொழுமாந்தர்மேனிமேற்சேர்ந்திராவினையே. (௬)

சுரபுரத்தினைத்துயர்செய்தாருகனுரஞ்சவென்றசினக்காளியைத்தருஞ்
சிரபுரத்துளானென்னவல்லவார்சித்திபெற்றவரே. (௭)

உறவுமாகியற்றவர்களுக்குமாநிதிகொடுத்துநீள்புவியிலங்குசீர்ப்
புறவமாநகர்க்கிறைவனேயெனத்தெறகிலாவினையே. (அ)

பண்புசேரிலங்கைக்குநாதனன்முடிகள்பத்தையுங்கெடநெரித்தவன்
சண்பையாதியைத்தொழுமவர்களைச்சாதியாவினையே. (௯)

ஆழியங்கைபிற்கொண்டமாலயனறிவொணாததோர்வடிவுகொண்டவன்
காழிமாநகர்க்கடவுணாமமேகற்பனகற்றவமே (க0)

விசையொன்றிலாச்சமணர்சாக்கியப்பேய்கடங்களைக்கரிசறுத்தவன்
கொச்சைமாநகர்க்கன்புசெய்பவர்குணங்கள்கூறுமினே. (கக)

கழுமலத்தினுட்கடவுள்பாதமேகருதுஞானசம்பந்தனின்றமிழ்
முழுதுமவல்லவர்க்கின்பமேதருமுக்கண்ணெம்மிறையே. (கஉ)

திருச்சிற்றம்பலம்

---

## திருவீழிமிழலை - ஈரடி

திருச்சிற்றம்பலம்

மெய்யினைத்தருநன்னிறைந்தமைப்பந்தனனனைமிழலைமாநக
ராலகீழலினமேவினனடிநகைனபாதுவாயிலரே (க)

விளங்குஞானமறைவல்லவேதியாமலகுரவளாமிழலையானடி
யுளங்கொளவாரதமையுளங்கொளவாரவினையொல்லையாசறுமே. (உ)

விசையினோடெழுபசையுநஞ்சினையசைவுசெய்தவன்மிழலைமாநக
ரிசையுமீசனைநசையின்மேவினனிசைசெயாவினையே. (௩)

வென்றிசேர்நெடுமுடிமாமதின்மிழலைமாநகர்மேவிநாடொறு
நின்றவாதிதன்னடிநினைப்பவர்துன்பமொன்றிலரே. (௪)

போதகந்தனையுரிசெய்தோன்புயநேர்வருமபொழின்மிழலைமாநக
ராதரஞ்செய்தவடிகள்பாதமலாலோர்பற்றிலமே (௫)

தக்கன்வேள்வியைச்சாடினார்மணிதொக்கமாளிகைமிழலைமேவிய
நக்கனாடிதொழுவார்மேல்வினைநாடொறுங்கெடுமே (௬)

போரணவுமுப்புரமெரித்தவன்பொழில்களசூழ்தருமிழலைமாநகர்ச்
சேருமீசனைச்சிந்தைசெய்பவர்தீவினைகெடுமே. (௭)

இரக்கமிற்றிருமிலரக்கனைநெருக்கினன்மிகுமிழலையானடி
சிரக்கொள்பூவெனவொருக்கினார்புகழ்பரக்குநீளபுவியே. (௮)

தன்றபூமகன்பன்றியானவனொன்றுமோகிலாமிழலையானடி
சென்றுபூமபுனனின்றுதூவினாநன்றுசேர்பவரே. (௯)

புத்தர்கைச்சமண்பித்தர்பொய்யகருவைவைத்தவித்தகன்மிழலைமாநகர்
சித்தம்வைத்தவரித்தலத்தினுண்மெய்த்தவரே. (க0)

சந்தமார்பொழின்மிழலையீசனைச்சண்பைஞானசம்பந்தன்வாய்நவில்
பந்தமார்தமிழப்பத்தும்வல்லவர்பத்தராகுவரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பல்லவனீச்சரம் - ஈரடி

திருச்சிற்றம்பலம்.

பரசுபாணியர்பாடலவீணையாபட்டினத்துறைபல்லவனீச்சரத்
தரசுபேணிநின்றாரிவர்தன்மையறிவாரார். (க

பட்டநெற்றியர்நட்டமாடுவர்பட்டினத்துறைபல்லவனீச்சரத்
திட்டமாயிருப்பாரிவர்தன்மையறிவாரார். (உ

பவளமேனியர்திகழுநீற்றினர்பட்டினததுறைபலலவனீசசரத்
தழகராயிருபபாரிவர்தனமையறிவாரார. (௩)

பண்ணில்யாழினாபயிலுமொநதையாபட்டினததுறைபல்லவனீசசரத
தண்ணலாயிருபபாரிவாதனமையறிவாரார. (௪)

பலிலோட்டினர்பலிகொணடுண்பவாபட்டினததுறைபல்லவனீசசரத்
தெல்லியாடடுகநதாரிவர்தனமையறிவாரார. (௫)

பசசைமேனியர்பிசசைகொள்பவர்பட்டினததுறைபல்லவனீசசரத
திசசையாயிருபபாரிவர்தன்மையறிவாரார. (௬)

பைங்கணேறறினாதிங்கள்சூடுவர்பட்டினததுறைபலலவனீசசரத
தெஙகுமாயிருப்பாரிவர்தனமையறிவாரார. (௭)

பாதஙகைதொழவேதமோதுவாபட்டினத்துறைபலலவனீசசரத
தாதியாயிருபபாரிவாதன்மையறிவாரார. (௮)

படிகொண்மேனியர்கடிகொள்கொனறையாபட்டினத்துறைபல்லவனீசசரத
தடிகளாயிருபபாரிவர்தன்மையறிவாரார். (௯)

பறைகொள்பாணியாபிறைகொளசெனனியா பட்டினததுறைபல்லவனீசச
ரத, திறைவராயிருபபாரிவாதன்மையறிவாரார். (௧௦)

வானமாள்வதறகூனமொன்றிலைமாதாபல்லவனீசசரததானை
ஞானசமபநதனறறமிழ்சொல்லவல்லவாநல்லரே (௧௧)

திருசசிறறம்பலம

---

## திருக்கழுமலம் - திருஇயமகம்

திருசசிறறமபலம

உற்றுமைசேர்வதுமெய்யினையேயுணர்வதுநின்னருண்மெய்யினையே
கற்றவர்காயவதுகாமனையேகனல்விழிகாய்வதுகாமனையே
யற்றமறைப்பதுமுன்பணியேயமாாகள்செய்வதுமுன்பணியே
பெற்றுமுகந்ததுகந்தனையேபிரமபுரததையுகநதனையே. (௧)

சதிமிகவநதசலந்தரனே தடிசிரநேர்கொளசலந்தரனே
யதிரொளிசேர்திகிரிப்படையாலமர்நதனரும்பர்துதிப்படையான்
மதிதவழ்வெற்பதுகைசசிலையேமருவிடமேற்பதுகைசசிலையே
விதியினினிட்டார்விருமபரனேவேணுபுரத்தைவிருமபரனே. (௨)

காதமரததிகழ்தோடினனேகானவனாய்க்கடிதோடினனே
பாதமதாறகூற்றுதைத்தனனேபாாத்தனுடலமபுதைததனனே
தாதவிழ்கொன்றைதரிததனனேசாரநதவினையதரிததனனே
போதமமருமுளைப்பொருளேபுகலியமர்நதபரமபொருளே. (௩)

மைத்திகழ்நஞ்சுமிழ்மாசுணமேமகிழ்நதணாசோவதுமாசுணமே
மெத்துடல்பூசுவர்மேனமதியேவேதமதோதுவர்மேன்மதியே
பொய்த்தலையோடொருமததமதேபுரிசடைவைததுமததமதே
வித்தகராகியவெங்குருவேவிரும்பியமர்ந்தனர்வெஙகுருவே. (௪)

உடன்பயில்கினறனன்மாதவனேயுறுபொறிகாய்ந்திசைமாதவனே
திடம்படமாமறைகண்டனனேதிரிகுணமேவியகண்டனனே

படங்கொளரவரைசெய்தவனேபகடுரிகொண்டரைசெய்தவனே
தொடர்ந்ததுயர்க்கொருநஞ்சிவனேதோணிபுரத்துறைநஞ்சிவனே. (ரு)

திகழுமையதும்புசைதங்கழலேதேவர்தொழுவதுந்தங்கழலே
இகழ்பவர்தாமொருமானிடமேயிருந்தனுவோடெழின்மானிடமே
மிகவருநீர்கொளுமஞ்சடையேமின்னிகர்கின்றதுமஞ்சடையே
தகவிரதங்கொளவாசுந்தரரோதக்கதராயுறைசுந்தரரே. (சூ)

ஓர்வருகண்களிணைக்கயலேயுமையவள்கண்களிணைக்கயலே
யோமருவுங்கழனாகமதேயெழில்கொளுதாசனநாகமதே
நீர்வருகொந்தளகங்கையதேநெடுஞ்சடைமேவியகங்கையதே
சேர்வருயோகதியம்பகனேசிரபுரமேயதிகம்பகனே. (எ)

ஈண்டுதுயிலமரப்பினனேயிருங்கணிடந்தடியப்பினனே
தீண்டலரும்பரிசக்கரமேதிகழ்ந்தொளிசேர்வதுசக்கரமே
வேண்டிவருந்தகைத்தலையேமிகைத்தவரோடுநகைத்தலையே
பூண்டனர்சேருமாபதியேபுறவமமர்ந்துமாபதியே (அ)

நின்மணிவாயதுநீழலையேநேசமதானவர்நீழலையே
யுன்னமனத்தெழுசங்கமதேயொளியதனோடுறுசங்கமதே
கன்னியராகவருங்களனேகடல்விடமுண்டகருங்களனே
மன்னிவரைப்பதிசண்பையதேவாரிவயன்மலிசண்பையதே. (கூ)

இலங்கையரக்கர்தமக்கிறையேயிடந்துகயிலையெடுக்கிறையே
புலன்கள்கெடவுடன்பாடினனேபொறிகள்கெடவுடன்பாடினனே
இலங்கியமேனியிராவணனேயெய்துபெயருமிராவணனே
கலந்தருள்பெற்றதுமாவசியேகாழியானடிமாவசியே. (க0)

கண்ணிகள்புண்டரிகத்தினனேகலந்திரிபுண்டரிகத்தினனே
மண்ணிகழும்பரிசேனமதேவானகமேய்வகைசேனமதே
நண்ணியடிமுடியெய்தலரோநளிர்மலிசோலையிலெய்தலரோ
பண்ணியல்கொச்சைப்பசுபதியேபசுமிகவூர்வர்பசுபதியே. (கக)

பருமதின்மதுரைமன்னவையெதிரேபதிகமதெழுதிலையவையெதிரே
வருநதியிடைமிசைவருகரனேவசையொடுமலர்கெடவருகரனே
கருதலிலிசைமுரறருமருளேகழுமலமமரிறைதருமருளே
மருவியதமிழ்விரகன்மொழியேவல்லவர்தம்மிடர்திடமொழியே (கஉ)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவேகம்பம் - திருஇயமகம்

திருச்சிற்றம்பலம்

பாயுமால்விடைமேலொருபாகனேபாவைதன்னுருமேலொருபாகனே
தூயவானவர்வேதத்துவனியேசோதிமாலெரிவேதத்துவனியே
யாயுநன்பொருளுண்பொருளாதியேயாயநீழலவரும்பொருளாதியே
காயவின்மதன்பட்டதுகம்பமேகண்ணுதற்பரமற்கிடங்கம்பமே. (க)

சடையணிந்ததுவெண்டலைமாலையேதம்முடம்பிலும்வெண்டலைமாலையே
படையிலங்கையிற்சூலமதென்பதேபரந்திலங்கையிற்சூலமதென்பதே
புடைபரப்பனபூதகணங்களேபோற்றிசைப்பனபூதகணங்களே
கடைகடோறுமிரப்பதுமிச்சையேகம்பமேவியிருப்பதுமிச்சையே. (உ)

## திருவீழிமிழலை - திருஇயமகம்.

திருச்சிற்றம்பலம்.

துன்றுகொன்றைநஞ்சடையதேதூயகண்டநஞ்சடையதே
கன்றின்மானிடக்கையதேகல்லின்மானிடைக்கையதே
யென்றுமேறுவதிடவமேயென்னிடைப்பலியிடவமே
நின்றதுமிழலையுள்ளுமேநீரெனைச்சிறிதுமுள்ளுமே. (க)

ஓதிவாயதும்மறைகளேயுரைப்பதும்பலமறைகளே
பாதிகொண்டதுமாதையேபணிகிறேன்மிகுமாதையே
காதுசேர்கனங்குழையரோகாதலார்கனங்குழையரோ
வீதிவாய்மிகும்வேதியாமிழலைமேவியவேதியா. (உ)

பாடுகின்றபண்டாரமேபத்தரன்னபண்டாரமே
சூடுகின்றதும்மத்தமேதொழுதவென்னையுன்மத்தமே
நீடுசெய்வதுந்தக்கதேநின்னைநித்திகழுந்தக்கதே
நாடுசேர்மிழலையூருமேநாகநஞ்சழலையூருமே. (ங)

கட்டுகின்றகழனாகமேகாய்ந்ததும்மதனாகமே
யிட்டமாவதிசைபாடலேயிசைந்தநூலினமர்பாடலே
கொட்டுவான்முழவம்வாணனேகுலாயசீர்மிழலைவாணனே
நட்டமாடுவதுசந்தியேநானுய்தற்கிரவுசந்தியே. (ச)

ஓவிலாதிடுங்கரணமேயுன்னுமென்னுடைக்கரணமே
யேவுசேவுநின்னொருணையேயருளினின்றபொற்றருணையே
பாவியாதுரைமெய்யிலேபயின்றநின்னடிமெய்யிலே
மேவினான்விறற்கண்ணனேமிழலைமேயமுக்கண்ணனே. (ரு)

வாய்ந்தமேனியெரிவண்ணமேமகிழ்ந்துபாடுவதுவண்ணமே
காய்ந்துவீழ்ந்தவன்காலனேகடுநடஞ்செயுங்காலனே
போந்ததெம்மிடையிரவிலேயும்மிடைகள்ளமிரவிலே
மேய்ந்ததுமிழலையென்பதேவிரும்பியேயணிவதென்பதே. (சா)

அப்பியன்றகண்ணயனுமேயமரர்கோமகனுமயனுமே
யொப்பிலின்றமரர்தருவதேயொண்கையாலமரர்தருவதே
மெய்ப்பயின்றவரிருக்கையேமிழலையீருமதிருக்கையே
செப்புமின்னெருதுமேயுமேசேர்வுமக்கெருதுமேயுமே. (எ)

தானவக்குலம்விளக்கியேதாரகைச்செலவிளக்கியே
வானடாத்தகயிலாயமேவந்துமேவுகயிலாயமே
தானெடுத்தவலரக்கனேதடமுடித்திரளரக்கனே
மேனடைச்செலவிருப்பனேமிழலைநற்பதிவிருப்பனே. (அ)

காயமிக்கதொருபன்றியேகலந்தநின்னவுருபன்றியே
யேயவிப்புவிமயங்கவேயிருவர்தாமனமயங்கவே
தூயமெய்த்திரளகண்டனேதோன்றிநின்றமணிகண்டனே
மேயவித்துயில்விலக்கணாமிழலைமேவியவிலக்கணா. (கூ)

கஞ்சியைக்குலவுகையரோகலக்கமாரமணர்கையரோ
யஞ்சவாதிலருள்செய்யநீயணைந்திடும்பரிசுசெய்யநீ
வஞ்சனேவரவும்வல்லையேமதித்தெனைச்சிறிதும்வல்லையே
வெஞ்சலின்றிவருவித்தகாமிழலைசேரும்விறல்வித்தகா. (க0)

மேயசெஞ்சடையினபபனேமிழலைமேவியவென்னப்பனே
பேயுமாசெயவிருபபனேயிசைந்தவாசெயவிருபபனே
காயவர்க்கசம்பந்தனேகாழிஞானசமபந்தனே
வாயுரைத்ததமிழ்பத்துமேவலலவாகருமிவைபத்துமே. (கக)

திருச்சிற்றமபலம்.

---

## ஸ்ரீகாழி - திருமாலைமாற்று

திருச்சிறறம்பலம்.

யாமாமாநீயாமாமாயாழீகாமாகாணாசா
காணாசாமாகாழீயாமாமாயாநீமாமாயா. (க)

யாகாயாழீகாயாகாதாயாராராதாயாயா
யாயாதாராராயாதாகாயாகாழீயாகாயா. (உ)

தாவாமூவாதாசாகாழீநாதாநீயாமாமா
மாமாயாநீதாநாழீகாசாதாவாமூவாதா. (௩)

நீவாவாயாகாயாழீகாவாவாணோவாராமே
மேராவாணோவாவாகாழீயாகாயாவாவாநீ. (௪)

யாகாலாமேயாகாழீயாமேதாவீதாயாவீ
வீயாதாவீதாமேயாழீகாயாமேலாகாயா. (௫)

மேலேபோகாமேதேழீகாலாலேகாலாணாயே
யேணாலாகாலேலாகாழீதேமேசாபோலேமே. (௬)

நீயாமாநீயேயாமாதாவேழீகாநீதானே
நேதாநீகாழீவேதாமாயாயேநீமாயாநீ. (௭)

நேணவராவிழயாசைழியேவேகதளேரியளாயுழிகா
காழியுளாயரிளேதகவேயேழிசையாழவிராவணனே. (௮)

காலேமேலேகாணீகாழீகாலேமாலேமேபூ
பூமேலேமாலேகாழீகாணீகாலேமேலேகா (௯)

வேரியுமேணவகாழியொயேயேனைநிணேமடளோர்கராதே
தேரர்களோடமணேநினையேயேயொழிகாவணமேயுரிவே. (க0)

நேரகழாமிதயாசழிதாயேனனியேனனிளாயுழிகா
காழியுளானினயேனினயேதாழிசயாதமிழாகரனே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கழுமலம்-பண்-புறநீர்மை

திருச்சிற்றமபலம.

மடமலிகொன்றைதுன்றுவாளெருக்கும்வன்னியுமத்தமுஞ்சடைமேற
படலொலிதிரைகண்மோதியகஙகைததலைவனாதம்மிடம்பகரில்
விடலொலிபரநதவெண்டிரைமுத்தமிபபிகள்கொணர்ந்துவெள்ளருவி
கடலொலியோதமோதவநதலைக்குங்கழுமலநகரெனலாமே. (க)

மின்னியவரவும்வெறிமலாபலவும்விரும்பியதிங்களுந்தங்கு
சென்னியதுடையான்றேவர்தமபெருமான்சேயிழையொடுமுறையிடமாம
பொன்னியன்மணியுமுரிகரிமருப்புஞ்சநதமுமுந்துவன்றிரைகள்
கன்னியராடக்கடலொலிமலியுங்கழுமலநகரெனலாமே. (உ)

சீருறுதொண்டர்கொண்டடிபோற்றச்செழுமலர்புனலொடுதூபந்
தாருறுகொன்றைதம்முடிவைத்தசைவனார்தங்கிடமெங்கு
மேருறுபதிகளுலகுடன்பொங்கியொலிபுனல்கொள்ளவுடன்மிதந்த
காருறுசெம்மைநன்மையான்மிக்ககழுமலநகரெனலாமே. (௩)

மண்ணினோர்தத்தவானுளார்பரசவந்தாத்தமர்கள்போற்றப்
பண்ணினொல்லாம்பலபுலவேடமுடையவர்பயிலவிடமெங்கு
மெண்ணினுன்மிக்காரியல்பினுனிறைந்தாரேந்திழையவரொடுமைந்தா
கண்ணினுலின்பங்கண்டொளிபரக்குங்கழுமலநகரெனலாமே. (௪)

சுருதியான்றலையுநாமகண்மூக்குஞ்சுடரவன்கரமுமுன்னியங்கு
பருதியான்பல்லுமிறுத்தவாக்கருளும்பரமனார்பயின்றினிதிருக்கை
யிருதினான்மறையுமங்கமோராறும்வேள்வியும்வேட்டவாஞானங்
கருதினாருலகிற்கருத்துடையார்சேர்கழுமலநகரெனலாமே. (௫)

புற்றில்வாளரவுமாமையும்பூண்டபுனிதனார்பனிமலர்க்கொன்றை
பற்றிவான்மதியஞ்சடையிடைவைத்தபடிறனார்பயின்றினிதிருக்கை [கங்
செற்றுவன்றிரைகளொன்றொடொன்றோடிச்செயிர்த்துவண்சங்கொடுவங்
கற்றுறைவரைகள்கரைக்குவந்துரைக்குங்கழுமலநகரெனலாமே. (௬)

அலைபுனற்கங்கைதங்கியசடையாரடனெடுமதிலொருமூன்றுங்
கொலையிடைச்செந்தீவெந்தறக்கண்டகுழகனார்கோயிலதென்பா
மலையின்மிக்குயர்ந்தமரக்கலஞ்சரக்குமற்றுமற்றிடையிடையெங்குங்
கலைகளித்தேறிக்கானலில்வாழுங்கழுமலநகரெனலாமே (௭)

ஒருக்கமுன்னினையாத்தக்கன்றன்வேள்வியுடைதரவுழறியபடையா
ரரக்கனைவரையாலாற்றலன்றழித்தவழகனாரமர்ந்துறைகோயில்
பரக்குமவண்புகழார்பழியவைபார்த்துப்பலபலவறங்களேபயிற்றிக்
கரக்குமாறறியாவண்மையால்வாழுங்கழுமலநகரெனலாமே (௮)

அருவரைபொறுத்தவாற்றலினானுமணிகிளர்தாமரையானு
மிருவருமேத்தவெரியுருவானவிறைவனாருறைவிடம்வினவி
லொருவரிவ்வுலகில்வாழ்கிலாவண்ணமொலிபுனல்வெள்ளமுன்பரப்பக்
கருவரைசூழ்ந்தகடலிடைமிக்குங்கழுமலநகரெனலாமே. (௯)

உரிந்துயருருவிலுடைதவிர்ந்தாருமதத்துகில்போர்த்துழல்வாருந்
தெரிந்துபுன்மொழிகள்செப்பினகேளாச்செம்மையார்நன்மையாலுறைவா
குருந்துயர்கோங்குக்கொடிவிடுமுல்லைமல்லிகைசெண்பகம்வேங்கை [ங்
கருந்தடங்கண்ணின்மங்கைமார்கொய்யுங்கழுமலநகரெனலாமே. (௧௦)

கானலங்கழனியோதம்வந்துலவுங்கழுமலநகருறைவார்மேல்
ஞானசம்பந்தனற்றமிழ்மாலைநன்மையாலுரைசெய்துநவில்வா
ரூனசம்பந்தத்துறுபிணிநீங்கியுள்ளமுமொருவழிக்கொண்டு
வானிடைவாழ்வர்மண்மிசைப்பிறவார்மற்றிதற்காணையுநமதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருவீழிமிழலை - பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்.

புள்ளித்தோலாடைபூண்பதுநாகம்பூசுசாந்தம்பொடிநீறு [யோ
கொள்ளித்தீவிளக்குக்கூளிகள்கூட்டங்காளியைக்குணஞ்செய்கூத்துடை
னள்ளற்காராமையகடுவான்மதியமேய்க்கமுட்டாழைகளானை
வெள்ளைக்கொம்பீனும்விரிபொழில்வீழிமிழலையானெனவினைகெடுமே. (௧)

இசைந்தவாறடியாரிடுதுவல்வானோரிழுகுசந்தனத்திளங்கமலப்
பசும்பொனவாசிகைமேற்பரப்புவாய்க்கரப்பாய்ப்பத்திசெய்யாதவர்பக்க
லசும்புபாய்கழனியலர்கயன்முதலோடடுத்தரிந்தெடுத்தவான்சும்மை
விசும்புதூர்ப்பனபோல்விம்மியவீழிமிழலையானெனவினைகெடுமே. (௨)

நிருத்தனாறங்கனீற்றனான்மறையனீலமார்மிடற்றனெற்றிக்க
ணொருத்தன்மற்றெல்லாவுயிர்கட்குமுயிராயளவிலன்கேடிலியுமைகோன்
திருத்தமாய்நாளுமாநீர்ப்பொய்கைசிறியவரறிவினின்மிக்க
விருத்தரையடிவீழ்ந்திடம்புகும்வீழிமிழலையானெனவினைகெடுமே. (௩)

தாங்கருங்காலந்தவிரவந்திருவர்தம்மொடுங்கூடினாரங்கம்
பாங்கினாற்றரித்துப்பண்டுபோலெல்லாம்பண்ணியகண்ணுதற்பரமர்
தேங்கொள்பூங்கமுகுதெங்கிளங்கொடிமாச்செண்பகம்வண்பலாவிலுப்பை
வேங்கைபூமகிழால்வெயிற்புகாவீழிமிழலையானெனவினைகெடுமே. (௪)

கூசுமாமயானங்கோயில்வாயிற்கட்குடவயிற்றனசிலபூதம்
பூசுமாசாந்தம்பூதிமேலோதிபாதிநற்பொங்கரவரையோன்
வாசமாம்புன்னைமௌவல்செங்கழுநீர்மலரணைந்தெழுந்தவான்றென்றல்
வீசுமாம்பொழிற்றேன்றுவலைசேர்வீழிமிழலையானெனவினைகெடுமே. (௫)

பாதியோர்மாதர்மாலுமோர்பாகர்பங்கயத்தயனுமோர்பால
ராதியாயந்தமாயினாரடிகளாரமரர்கட்கமரர்
போதுசேர்சென்னிப்புரிநூலர்பணிசெய்பூசுரர்பூமகனனைய
வேதியர்வேதத்தொலியறாவீழிமிழலையானெனவினைகெடுமே. (௬)

தன்றவம்பெரியசலந்தரனுடலந்தடிந்தசக்கரமெனக்கருளென்
றன்றரிவழிபட்டிழிச்சியவிமானத்திறையவன்பிறையணிசடைய
னின்றநாள்காலையிருந்தநாண்மாலைகிடந்தமண்மேல்வருகலியை
வென்றவேதியர்கள்விழாவறாவீழிமிழலையானெனவினைகெடுமே. (௭)

கடுத்தவாளரக்கனைக்கைலையன்றெடுத்தகாமுராஞ்சிரநெரிந்தலற
வடாத்ததேதாவிரலாலஞ்செழுத்துணைக்கவருளினன்றடமிகுநெடுவாள்
படித்தநான்மறைகேட்டிருந்தபைங்கிளிகள்பதங்களையோதப்பாடிருந்த
விடைக்குலம்பயிற்றும்விரிபொழில்வீழிமிழலையானெனவினைகெடுமே. (௮)

அளவிடலுற்றவயனொடுமாலுமண்டமண்கிண்டியுங்காணா
முளைபெரியாயமூர்த்தியைத்தீர்த்தமுக்கணமுதலவனைமுத்தைத்
தளையவிழ்கமலத்தவிசின்மேலன்னந்தன்னிளம்பெடையொடும்புல்கி
விளைகதிர்க்கவரிவீசவீற்றிருக்குமிழலையானெனவினைகெடுமே. (௯)

கஞ்சிப்போதுடையார்கையிற்கோசாரக்கலதிகள்கட்டுரைவிட்டு
வஞ்சித்தேதவிரப்பவளமுந்தநஞ்சத்தனையுண்டமரர்க்கமுதருளி
பிஞ்சிக்கேக்கதலிக்கனிவிழக்கமுகின்குலையொடும்பழம்விழத்தெங்கின்
மிஞ்சுக்கேமஞ்சுசேர்பொழில்வீழிமிழலையானெனவினைகெடுமே. (௧௦)

வேந்தர்வந்திறைஞ்சவேதியர்வீழிமிழலையுள்விண்ணிழிவிமானத்
தேய்ந்ததன்றேவியோடுறைகின்றவீசனையெம்பெருமானைத்
தோய்ந்தநீர்த்தோணிபுரத்துறைமறையோனறாமொழிஞானசம்பந்தன்
வாய்ந்தபாமாலைவாய்நவில்வாரைவானவர்வழிபடுவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

### திருவாலவாய் - பண் - புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

மங்கையர்க்கரசிவளவர்கோன்பாவைவரிவளைக்கைமடமானி
பங்கயச்செல்விபாண்டிமாதேவிபணிசெய்துநாடொறும்பரவப்
பொங்கழலுருவன்பூதநாயகனால்வேதமும்பொருள்களுமருளி
யங்கயற்கண்ணிதன்னொடுமமர்ந்தவாலவாயாவதுமிதுவே. (க)

வெற்றவேயடியாரடிமிசைவீழும்விருப்பினன்வெள்ளைநீறணியுங்
கொற்றவன்றனக்குமந்திரியாயகுலச்சிறைகுலாவிநின்றேத்து
மொற்றைவெள்விடையனும்பரார்தலைவனுலகினிலியற்கையையொழிந்திட்
டற்றவர்க்கற்றசிவனுறைகின்றவாலவாயாவதுமிதுமே. (உ)

செந்துவர்வாயாள்சேலனகண்ணாள்சிவனதிருநீற்றினைவளர்க்கும்
பந்தணைவிரலாள்பாண்டிமாதேவிபணிசெயப்பாரிடைநிலவுஞ்
சந்தமார்தரளம்பாம்புநீர்மத்தந்தண்ணெருக்கம்மலர்வன்னி
யந்திவான்மதிசேர்சடைமுடியண்ணலாலவாயாவதுமிதுவே. (ங)

கணங்களாய்வரினுந்தமியராய்வரினுமடியவர்தங்களைக்கண்டாற்
குணங்கொடுபணியுங்குலச்சிறைகுலாவுங்கோபுரஞ்சூழ்மணிக்கோயின்
மணங்கமழ்கொன்றைவாளராமதியம்வன்னிவண்கூவிளமாலை
யணங்குவீற்றிருந்தசடைமுடியண்ணலாலவாயாவதுமிதுவே. (ச)

செய்யதாமரைமேலன்னமேயனையசேயிழைதிருநுதற்செல்வி
பையரவல்குற்பாண்டிமாதேவிநாடொறும்பணிந்தினிதேத்த
வெய்யவேற்சூலம்பாசமங்குசமான்விரிகதிர்மழுவுடன்றரித்த
வையனாருமையோடின்புறுகின்றவாலவாயாவதுமிதுவே. (ரு)

நலமிலராகநலமதுண்டாகநாடவாநாடறிகின்ற
குலமிலராகக்குலமதுண்டாகத்தவம்பணிகுலச்சிறைபரவுங்
கலைமலிகரத்தன்மூவிலைவேலன்கரியுரிமூடியகண்ட
னலைமலிபுனல்சேர்சடைமுடியண்ணலாலவாயாவதுமிதுவே. (சு)

முத்தின்றாழ்வடமுஞ்சந்தனக்குழம்புநீறுந்தன்மார்பினின்முயங்கப்
பத்தியாகின்றபாண்டிமாதேவிபாங்கொடுபணிசெயநின்ற
சுத்தமார்பளிங்கின்பெருமலையுடனேசுடர்மரகதமடுத்தாற்போ
லத்தனாருமையோடின்புறுகின்றவாலவாயாவதுமிதுவே. (எ)

நாவணங்கியல்வாமஞ்செழுத்தோதிநல்லராய்நல்லியல்வாகுங்
கோவணம்பூதிசாதனங்கண்டாற்றொழுதெழுகுலச்சிறைபோற்ற
வேவணங்கியல்வாமிராவணன்றிண்டோளிருபதுநெரிதரவூன்றி
யாவணங்கொண்டசடைமுடியண்ணலாலவாயாவதுமிதுமே. (அ)

மண்ணெலாநிகழமன்னனாய்மன்னுமணிமுடிச்சோழன்றன்மகளாம்
பண்ணினேர்மொழியாள்பாண்டிமாதேவிபாங்கினாற்பணிசெய்துபரவ
விண்ணுளாரிருவர்கீழொடுமேலுமளப்பரிதாம்வகைநின்ற
வண்ணலாருமையோடின்புறுகின்றவாலவாயாவதுமிதுவே. (கூ)

தொண்டராயுள்ளார்திசைதிசைதோறுந்தொழுதுதன்குணத்தினைக்குலாவ
கண்டுநாடோறுமின்புறுகின்றகுலச்சிறைகருதிநின்றேத்தக் [க்
குண்டராயுள்ளார்சாக்கியர்தங்கள்குறியின்கணெறியிடைவாரா
வண்டநாயகன்றானமர்ந்துவீற்றிருந்தவாலவாயாவதுமிதுவே. (க0)

பன்னலம்புணருமபாண்டிமாதேவிகுலச்சிறையெனுமிவர்பணியு
மன்னலமபெறுசீராலவாயீசன்றிருவடியாங்கவைபோற்றிக்
கன்னலம்பெரியகாழிபுளஞானசம்பந்தன்செந்தமிழிவைகொண
டின்னலமபாடவல்லவரிமையோரேத்தவீற்றிருப்பவரினிதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பந்தணநல்லூர்-பண்-புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

இடறினார்கூற்றைப்பொடிசெய்தார்மதிலையிவைசொல்லியுலகெழுந்தேத்தக்
கடறினாராவர்காறறுளாராவர்காதலித்துறைதருகோயில
கொடிறனார்யாதுங்குறைவிலார்தாம்போய்க்கோவணங்கொண்டுகூத்தாடும்
படிறனார்போலும்பந்தணநல்லூர்நின்றவெம்பசுபதியாரே. (௧)

கழியுளாரெனவுங்கடலுளாரெனவுங்காட்டுளார்நாட்டுளாரெனவும்
வழியுளாரெனவுமலையுளாரெனவுமண்ணுளார்விண்ணுளாரெனவுஞ்
சுழியுளாரெனவுஞ்சுவடுதாமறியார்தொண்டர்வாய்வந்தனசொல்லும்
பழியுளார்போலும்பந்தணநல்லூர்நின்றவெம்பசுபதியாரே. (௨)

காட்டினாரெனவுநாட்டினாரெனவுங்கடுந்தொழிற்காலனைக்காலால்
வீட்டினாரெனவுஞ்சாந்தவெண்ணீறுபூசியோர்வெண்மதிசடைமேற்
சூட்டினாரெனவுஞ்சுவடுதாமறியார்சொல்லுளசொல்லுநால்வேதப்
பாட்டினார்போலும்பந்தணநல்லூர்நின்றவெம்பசுபதியாரே. (௩)

முருகினார்பொழில்சூழுலகினாரேத்தமொத்தபல்கணங்களின்றுயர்கண்
டிருகினாராகியுறுதிபோந்துள்ளமொண்மையாலொளிதிகழ்மேனி
கருகினாரெல்லாங்கைதொழுதேத்தக்கடலுணஞ்சமுதமாவாங்கிப
பருகினார்போலும்பந்தணநல்லூர்நின்றவெம்பசுபதியாரே. (௪)

பொன்னினார்கொன்றையிருவடங்கிடந்துபொறிகிளர்பூணநூல்புரள
மின்னினாருருவின்மிளிர்வதோரரவமேவுவெண்ணீறுமெய்பூசித்
துன்னினார்நால்வர்க்கறமமர்ந்தருளித்தொன்மையார்தோற்றமுங்கேடும்
பன்னினார்போலும்பந்தணநல்லூர்நின்றவெம்பசுபதியாரே. (௫)

ஒண்பொனாரனையவண்ணல்வாழ்கெனவுமுமையவள்கணவன்வாழ்கெனவு
மண்பினார்பிரியாரல்லுநண்பகலுமடியவரடியிணைதொழவே
நண்பினார்எல்லாநல்லரெனநேத்தவல்லவர்தீயரென்றேத்துமே
பண்பினார்போலும்பந்தணநல்லூர்நின்றவெம்பசுபதியாரே. (௬)

எற்றினாரேதுமிடைகொள்வாரிலலையிருநிலம்வானுலகெல்லை
தெற்றினார்தங்கள்காரணமாகச்செருமலைந்தடியிணைசேர்வான்
முற்றினார்வாழுமும்மதில்வேவமூவிலைச்சூலமுமழுவும
பற்றினார்போலும்பந்தணநல்லூர்நின்றவெம்பசுபதியாரே. (௭)

ஒலிசெய்தகுழலின்முழவமதியம்பவோசையாலாடலறாத
கலிசெய்தபூதங்கையினாலிடவேசாலிநாற்பாய்தலுமரக்கன்
வலிகொள்வாபுலியினுரிகொள்வரேனைவாழ்வுநன்றுனுமோர்தலையிற்
பலிகொள்வார்போலும்பந்தணநல்லூர்நின்றவெம்பசுபதியாரே. (௮)

சேற்றினார்பொய்கைத்தாமரையானுஞ்செங்கண்மாலிவரிருகூறாத் [மிற்
தோற்றினார்தோற்றத்தொன்மையையறியார்துணைமையும்பெருமையுந்தம்

சாற்றினார்சாற்றியாற்றலோமென்னச்சரண்கொடுத்தவர்செய்தபாவம்
பாற்றினார்போலும்பந்தணநல்லூர்நின்றவெம்பசுபதியாரே (௯-௧௦)

கலிசைபூணக்கலையொலிஓவாக்கழுமலமுதுபதிதன்னி
னலமிசையாளனபுலமிசைகேளாநற்றமிழ்ஞானசம்பந்தன்
பலவிசைபருவாய்ப்படுதலையேந்திமேவியபந்தணநல்லூர்
சொல்லியபாடல்பத்தும்வல்லவர்மேற்றொல்வினைசூழகிலாவே (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருவோமாம்புலியூர்-பண்-புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

பூங்கொடிமடவாளுமையொருபாகம்புரிதருசடைமுடியடிகள்
வீங்கிருணட்டமாடுமெம்விகிர்தர்விருப்பொடுமுறைவிடமெனவிற்
றேங்கமழ்பொழிலிற்செழுமலர்கோதிச்செறிதருவண்டிசைபாடு
மோங்கியபுகழாரோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே. (௧)

சம்பரற்கருளிச்சலந்தரன்வீயத்தழலுமிழ்சக்கரம்படைத்த
வெம்பெருமானாரிமையவரேத்தவினிதினங்குறைவிடமெனவி
லம்பரமாகியழலுமிழ்புகையினாகுதியான்மழைபொழியு
மும்பர்களேத்துமோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே. (௨)

பாங்குடைத்தவத்துப்பகீரதற்கருளிப்படர்சடைக்கரந்தநீர்க்கங்கை
தாங்குதற்றவிர்த்துத்தராதலத்திழித்ததத்துவனுறைவிடமெனவி
லாங்கெரிமூன்றுமமர்ந்துடனிருந்தவங்கையாலாகுதிவேட்கு
மோங்கியமறையோரோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே. (௩)

புற்றரவணிந்துநீறுமெய்பூசிப்பூதங்கள்சூழ்தரவூரூர்
பெற்றமொன்றேறிப்பெய்பலிகொளுமெம்பிரானவனுறைவிடமெனவிற்
கற்றநால்வேதமங்கமோராறுங்கருத்தினாருத்தியாற்றெரியு
முற்றபல்புகழாரோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே. (௪)

நிலத்தவர்வானமாள்பவர்கீழோர்துயர்கெடநெடியமாற்கருளா
லலைத்தவல்லசுரராசறவாழியளித்தவனுறைவிடமெனவிற் [௧
சலத்தினாற்பொருள்கள்வேண்டுதல்செய்யாத்தன்மையார்நன்மையான்மிக
வுலப்பில்பலபுகழாரோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே. (௫)

மணந்திகழ்திசைகளெட்டுமேழிசையுமலியுமாறங்கமைவேள்வி
யிணைந்தநால்வேதமூன்றெரியிரண்டுபிறப்பெனவொருமையாலுணருங்
குணங்களுமவற்றின்கொள்பொருள்குற்றமற்றவையுற்றதுமெல்லா
முணர்ந்தவர்வாழுமோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே. (௬-௭)

தலையொருபத்துந்தடக்கையதிரட்டிதானுடையரக்கனொண்கயிலை
யலைவதுசெய்தவன்றிறல்கெடுத்தவாதியாருறைவிடமெனவின்
மலையெனவோங்குமாளிகைநிலவுமாமதின்மாற்றலரொன்று
முலவுபல்புகழாரோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே. (௮)

கள்ளவிழ்மலர்மேலிருந்தவன்கரியோனென்றிவர்காண்பரிதாய
வொள்ளெரியுருவருமையவளோடுமுகந்தினிதுறைவிடமெனவிற்
பள்ளநீர்வாளைபாய்தருகழனிப்பனிமலர்ச்சோலைசூழாலை
[illegible]புலியூருடையவர்வடதளியதுவே. (௯)

தெள்ளியாலலாததேரரோடமணாதடுக்கொடுசீவாமுடுகருங
களளமாாயனததுககலதிகடகருளாககடவுளாருறைவிடமவினவி
னளிருளயாமநானமறைதெரிநதுநலநதிகழ்மூனறெரியோமபு
மொளளியாாவாழுமோமமாமபுலியூருடையவர்வடதளியதுவே (௧௦)

வினைதருவயலுளவெயிலசெறிபவளமேதிகணமேயபுலததிடறி
யொளிதரமலகுமோமமாமபுலியூருடையவாவடதளியானைக
களிதருநிவபபிறகாணடகுசெலவக்காழியுணஞானசமபநத
னளிதருபாடலபத்தும்வலலார்களமரலோகததிருபபாரே (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருக்கோணமாமலை - புறநீர்மை

திருச்சிற்றமபலம

நிரைகழலரவஞ்சிலமபொலியலமபுநிமலர்நீறணிதிருமேனி
வரைகெழுமகளோர்பாகமாபபுணாநதவடிவினாகொடியணிவிடையா
கரைகெழுசநதுஙகாரகிறபிளவுமளபபருஙகனமணிவரனறிக
குரைகடலோதநித்திலங்கொழிக்குஙகோணமாமலையமாந[illegible]ரே. (௧)

கடிதெனவநதகரிதனையுரிததுவவ்வுரிமேனிமேற்போா[illegible]ா
பிடியனநடையாளபெய்வளைமடநதைபிறைநுதலவ[illegible]ளாடுமுடனுயக
கொடிதெனககதறுஙகுரைகடலசூழ்நதுகொள்ள[illegible]முனிததிலஞ்சுமநது
குடிதனைநெருககிப்பெருககமாய்ததோன்றுங்கோணமாமலையமாநதாரே ()

பனிததிளநதிஙகடபைநதலைநாகமபடாச[illegible]டைமுடியிடைவைத்தாா
கனித்திளநதுவாவாய்ககாரிகைபாகமா[illegible]முனகலநதவர்மதின்மேற
றனிததபேருருவவிழிததழனாகநதாங்கியமேருவெஞசிலையாக
குனிததமோாவிலலாாகுரைகடல்சூழ்நதகோணமாமலையமாநதாரே. (௩)

பழிததிளஙகஙகைசடைமுடிவைத்துபபாஙகுடைமதனனைபபொடியா
விழிததவன்றேவிவேண்டமுனகொடுததவிமலனாகமலமாாபாதா
தெழிததுமுனனரறறுஞசெழுஙகடற்றரளஞ்செமபொனுமிபபியுஞசுமநது
கொழிததுவன்றிரைகளகரையிடைசசோககுங்கோணமாமலையமாநதாரே.

தாயினுநலலதலைவரென்றடியார்தமமடிபோறறிசைப்பார்கள்
வாயினுமனததுமருவிநினறகலாமாணபினாகாண்பலவேடா
நோயிலுமபிணியுந்தொழிலர்பானீஙகிநுழைதருநூலினர்ஞாலங
கோயிலுஞ்சுனையுங்கடலுடன்சூழ்நதகோணமாமலையமாநதாரே. (௫)

பரிநதுநன்மனததாலவழிபடுமாணிதன்னுயிர்மேல்வருங்கூறறைத
திரிநதிடாவண்ணமுதைததவறகருளுஞ்செமமையாாநமமையாளுடையார்
விரிநதுயாமௌவனமாதவிபுன்னைவேஙகைவண்செருநதிசெண்பகததின்
குருநதொடுமுல்லைகொடிவிடும்பொழில்சூழ்கோணமாமலையமாந்தாரே (௬-௭)

எடுததவன்றருக்கையிழித[illegible]ாவிரலாலேததிடவாததமாம்பேறு
தொடுததவர்செல்வந்தோ[illegible]றியபிறபபுமிறபபறியாதவர்வேளவி
தடுததவாவனபபாலவைத[illegible]தார்கருணைதன்னருட்பெருமையுமவாழ்வுங
கொடுததவர்விரும்பும்பெரு[illegible]புகழாளாகோணமாமலையமாநதாரே. (௮)

அருவராதொருகைவெண்ட[illegible]யேந்திஅகநதொறுமபலியுடன்புக்க
பெருவராயுறையுஞ்சீர்மையா[illegible]மைபபெருஙகடல்வண்ணனுமபிரம

ணிருவருமறியாவண்ணமொள்ளெரியாயுயர்ந்தவர்பெயர்ந்தனன்மாற்குங்
குருவராய்நின்றார்குறைகழல்வணங்கக்கோணமாமலையமர்ந்தாரே. (௯)

நின்றுணுஞ்சமணுமிருந்துணுந்தேருநெறியலாதனபுறங்கூற
வென்றுநஞ்சுண்ணும்பரிசினரொருபான்மெல்லியலொடுமுடனாகித்
துன்றுமொண்பவ்வமவ்வலுஞ்சூழ்ந்துதாழ்ந்துறுதிரைபலமோதிக
குன்றுமொண்கானல்வாசமவந்துலவுங்கோணமாமலையமர்ந்தாரே. (௧0)

குற்றமிலாதார்குரைகடல்சூழ்ந்தகோணமாமலையமர்ந்தாரைக்
கற்றுணர்கேள்விக்காழியர்பெருமான்கருத்துடைஞானசம்பந்த
னுற்றசெந்தமிழார்மாலையீரைந்துமுரைப்பவர்கேட்பவருயர்ந்தோரா
சுற்றமுமாகித்தொல்வினையடையார்தோன்றுவர்வானிடைப்பொலிந்தே.()

திருச்சிற்றம்பலம்.

---

## திருவெள்ளடை - பண் - அந்தாளிகுறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

சுண்ணவெண்ணீறணிமார்பிற்றோல்புனைந்
தெண்ணருமபலகணமேத்தநின்றாடுவீர்
விண்ணிலாவைம்பொழில்வெள்ளடைமேவிய
பெண்ணமர்மேனியெம்பிஞ்ஞகனீரே. (௧)

திரைபுல்குகங்கைதிகழ்சடைவைத்து
வரைமகளோடுடனாடுதிர்மல்கு
விரைகமழ்தண்பொழில்வெள்ளடைமேவிய
வரைமலவுவாளரவாடவிருந்தீரே. (௨)

அடையலர்தொன்னகர்மூன்றெரித்தன்ன
நடைமடமங்கையொர்பாகநயந்து
விடையுகந்தேறுதிர்வெள்ளடைமேவிய
சடையமாவெண்பிறைச்சங்கரனீரே. (௩)

வளங்கிளர்கங்கைமடவரலோடு
களம்படவாடுதிர்காடரங்காக
விளங்கியதண்பொழில்வெள்ளடைமேவிய
விளம்பிறைசேர்சடையெம்பெருமானே. (௪)

சுரிகுழனல்லதுடியிடையோடு
பொரிபுல்குகாட்டிடையாடுதிர்பொங்கு
விரிதருபைம்பொழில்வெள்ளடைமேவிய
வெரிமழுவாட்படையெந்தைபிரானே. (௫)

காவியங்கண்மடவாளொடுங்காட்டிடைத்
தீயகலேந்திநின்றாடுதிர்தேனமலர்
மேவியதண்பொழில்வெள்ளடைமேவிய
வாவினணிலைந்துகொண்டாடுகிந்தீரே. (௬-எ-அ-௯-௧0-௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநல்லூர்ப்பெருமணம் - பண் - அந்தாளிகுறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

நல்லூர்ப்பெருமணம்வேண்டாகழுமல
பல்லூர்ப்பெருமணம்பாட்டுமெய்யாய்தில
சொல்லூர்ப்பெருமணஞ்சூடலரோதொண்டர்
நல்லூர்ப்பெருமணமேயநம்பானே. (௧)

தருமணலோதஞ்சேர்தண்கடனித்திலம்
பருமணலாகக்கொண்டுபாவைநல்லார்கள்
வருமணங்கூட்டிமணஞ்செயுநல்லூர்ப்
பெருமணத்தானபெண்ணோர்பாகங்கொண்டானே. (உ)

அன்புறுசிந்தையராகியடியவர்
நன்புறுநல்லூர்ப்பெருமணமேவிநின்
றின்புறுமெந்தையிணையடியேத்துவார்
துன்புறுவாரல்லர்தொண்டுசெய்வாரே. ( )

வல்லியந்தோலுடையார்ப்பதுபோர்ப்பது
தொல்லியல்வேழத்துரிவிரிகோவணம்
நல்லியலார்தொழுநல்லூர்ப்பெருமணம்
புல்கியவாழ்க்கையெம்புண்ணியனார்க்கே. (ச)

ஏறுகந்தீர்கொட்டியாடிவெண்
ணீறுகந்தீர்நிரையார்விரிதேன்கொன்றை
நாறுகந்தீர்திருநல்லூர்ப்பெருமணம்
வேறுகந்தீருமைகூறுகந்தீரே. (ரு)

சிட்டப்பட்டார்க்கெளியானசெங்கண்ணே[illegible]ட்டுவப்
பட்டங்கட்டுஞ்சென்னியானபதியாவ[illegible]
நட்டங்கொட்டாடநல்லூர்ப்பெ[illegible]ருமணத்
திட்டப்பட்டாலொத்தீராலெம்பி[illegible]ரானீரே. (சு)

மேகத்தகண்டனெண்டோள[illegible]வெண்ணீற்றுமை
பாகத்தன்பாய்புலித்தோலெ[illegible]டுபந்தித்த
நாகத்தனல்லூர்ப்பெருமண[illegible]த்தானல்ல
போகத்தன்போகத்தந்தை[illegible]புரிந்தானே. (எ)

தக்கிருந்தீரன்றுதாளால[illegible]க்கனை
யுக்கிருந்தொல்கவுயாவ[illegible]ளாக்கிழிட்டு
நக்கிருந்தீர்இன்றுநல்லூ[illegible]ர்ப்பெருமணம்
புக்கிருந்தீரெமைப்பே[illegible]ாக்கருளீரே. (அ)

ஏலுந்தண்டாமரைய[illegible]னுமியல்வுடை
மாலுந்தம்மாண்பறி[illegible]ன்றிலாமறை
நாலுந்தம்பாட்டெ[illegible]ர்பாநல்லூர்ப்பெருமண
போலுந்தங்கோயி[illegible]புரிசடையார்க்கே. (கூ)

ஆதரமணொடுசாக்[illegible]யர்தாஞ்சொல்லும்
பேதைமைகேட்டு[illegible]பிணக்குறுவீர்வம்மின்
நாதனைநல்லூர்ப்பெ[illegible]ருமணமேவிய
வேதனைத்தாடொழ[illegible]டெளிதாமே. (க0)

நறும்பொழிற்காழி[illegible]ஞானசம்பந்தன்
பெரும்பதநல்லூர்ப்[illegible]பெருமணத்தானை
யுறும்பொருளாற்செ[illegible]ன்னவொண்டமிழ்வல்லார்க்
கறும்பழிபாவமவல[illegible] (கக)

திருச்சிற்றம்பலம்.

மூன்று[illegible]



திருச்சிற்றம்பலம்

## பரமசிவனுடைய

## அட்டவீரட்டானத்தலங்கள்.

---

பூமன்சிரங்கண்டியந்தகன்கோவில்புரமதிகை
மாமன்பறியல்சலந்தரன்விறகுடிமாப்பழூர்
காமன்குறுக்கையமன்கடவூரிந்தக்காசினியிற
றேமன்னுகொன்றையுந்திங்களுஞ்சூடிதன்சேவகமே.

(இதன் பொருள்)

கொன்றைப்பூமாலையுடன்சூடிய இளந்திங்களுந் தரித்துக்கொண்டருளிய பரமசிவன் வீரஞ்செலுத்தினது.—திருக்கண்டியூரில்-பிரமதேவன் சிரங்கொய்ததும்.—திருக்கோவிலூரில்-அந்தகாசுரனை யெரித்ததும்.—திருவதிகையில் - திரிபுரம் எரித்ததும்.—திருப்பறியலூரில்- தக்கன்முடி தடிந்ததும்.—திருவிறகுடியில - சலந்தரனைத் தலையரிந்ததும் - திருப்பழுவூரில - யானையையுரித்ததும்.—திருக்கொறுக்கையில - மன்மதனைத் தகனஞ்செய்ததும்.—திருக்கடவூரில் - யமனை யுதைத்ததும.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சைவசமயாசாரியராகிய

# திருநாவுக்கரசுசுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்.

இவை,

உரையாசிரியர்-வித்வான்-காஞ்சீபுரம்

சபாபதிமுதலியாரவர்கள்

ஆராய்ச்சிசெய்து பதிப்பித்த பிரதிக்கிணங்க,

திருக்கைலாசபரம்பரைப் பொம்மபுரம்

ஸ்ரீ சிவஞானபாலையதேசிகராதீனத்துச்

சிதம்பரம் - ஈசானியமடம்

ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகளவர்கள்

மாணாக்கருளொருவரான

க.வ.திருவேங்கடநாயடு அவர்களால்

பார்வையிடப்பட்டு,

காணியம்பாக்கம்

முருகேசமுதலியாரவர்கள்

குமாரர்

சண்முகமுதலியாரால்

சென்னை:

ஆறுமுகவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

1898.

சிவமயம்.

# நான்காந்திருமுறையின்

## பதிக அட்டவணை.



உ

சிவமயம்

# திருநாவுக்கரசுசுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்.

## முதற்றிருமுறை.

### திருஅதிகைவீரட்டானம் - பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

கூற்றாயினவாறுவிலக்ககிலீர்கொடுமைபலசெய்தனநானறியே
னேற்றாயடிக்கேயிரவும்பகலும்பிரியாதுவணங்குவனெப்பொழுதுந்
தோற்றாதென்வயிற்றினகம்படியேகுடரோடுதுடக்கிமுடக்கியிட
ஆற்றேனடியேனதிகைக்கெடிலவீரட்டானத்துறையம்மானே (௧)

நெஞ்சமுமக்கேயிடமாகவைத்தேனினையாதொருபோதுமிருந்தறியேன்
வஞ்சமிதொப்பதுகண்டறியேன்வயிற்றோடுதுடக்கிமுடக்கியிட
நஞ்சாகிவந்தென்னைநலிவதனைநணுகாமற்றுரந்துகரந்துமிடீ
ரஞ்சேலுமென்னீரதிகைக்கெடிலவீரட்டானத்துறையம்மானே (௨)

பணிந்தாரனபாவங்கள்பாற்றவல்லீர்படுவெண்டலையிற்பலிகொண்டுழல்வீர்
துணிந்தேயுமக்காட்செய்துவாழலுற்றாற்சுடுகின்றதுசூலைதவிர்த்தருளீர்
பிணிந்தார்பொடிகொண்டுமெய்பூசவல்லீர்பெற்றமேற்றுகந்தீர்சுற்றும்வெண்
டணிந்தீரடிகேளதிகைக்கெடிலவீரட்டானத்துறையம்மானே [டலைகொண

முன்னமடியேனறியாமையினான்முனிந்தென்னைநலிந்துமுடக்கியிடப்
பின்னையடியேனுமக்காளும்பட்டேன்சுடுகின்றதுசூலைதவிர்த்தருளீர்
தன்னையடைந்தார்வினைதீர்ப்பதன்றோதலையாயவர்தங்கடனாவதுதா
னன்னநடையாரதிகைக்கெடிலவீரட்டானத்துறையம்மானே. (௪)

காத்தாள்பவர்காவலிகழ்ந்தமையாற்கரைநின்றவர்கண்டுகொளென்றுசொல்லி
நீத்தாயகயம்புகநூக்கியிடநிலைக்கொள்ளும்வழித்துறையொன்றறியேன்
வார்த்தையிதுவொப்பதுகேட்டறியேன்வயிற்றோடுதுடக்கிமுடக்கியிட
வார்த்தார்புனலாரதிகைக்கெடிலவீரட்டானத்துறையம்மானே. (௫)

சலம்பூவொடுதூபமறந்தறியேன்றமிழோடிசைபாடன்மறந்தறியே
னலந்தீங்கிலுமுன்னைமறந்தறியேனுன்னாமமென்னாவின்மறந்தறியே
னுலந்தார்தலையிற்பலிகொண்டுழல்வாயுடலுள்ளுறுசூலைதவிர்த்தருளா
யலந்தேனடியேனதிகைக்கெடிலவீரட்டானத்துறையம்மானே. (௬)

உயர்ந்தேன்மனைவாழ்க்கையுமொண்பொருளுமொருவர்தலைகாவலிலாமையினால்
வயந்தேயுமக்காட்செய்துவாழலுற்றால்வலிக்கின்றதுசூலைதவிர்த்தருளீர்
பயந்தேயென்வயிற்றினகம்படியேபறித்துப்புரட்டியறுத்தீர்த்திடநா
னயர்ந்தேனடியேனதிகைக்கெடிலவீரட்டானத்துறையம்மானே. (௭)

அரித்தொழுகும்வெள்ளருவியையாறடைகின்றபோது
வரிக்குயில்பேடையொடாடிவைகிவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன் (ங)

பிறையிளங்கண்ணியினானைப்பெய்வளையாளொடும்பாடித்
துறையிளம்பன்மலர்தூவித்தோளைக்குளிரத்தொழுவேன்
அறையிளம்பூங்குயிலாலுமையாறடைகின்றபோது
சிறையிளம்பேடையொடாடிச்சேவல்வருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன் (ச)

ஏடுமதிக்கண்ணியானையேந்திழையாளொடும்பாடிக்
காடொடுநாடுமலையுங்கைதொழுதாடாவருவே
னுடையானுறைகின்றவையாறடைகின்றபோது
பேடைமயிலொடுங்கூடிப்பிணைந்துவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன் (ரு)

தண்மதிக்கண்ணியினானைத்தையனல்லாளொடும்பாடி
யுண்மெலிசிந்தையனாகியுணராவுருகாவருவே
னண்ணலமர்ந்துறைகின்றவையாறடைகின்றபோது
வண்ணப்பகன்றிலொடாடிவைகிவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன் (சு)

கடிமதிக்கண்ணியினானைக்காரிகையாளொடும்பாடி
வடிவொடுவண்ணமிரண்டும்வாய்வேண்டுவசொல்லிவாழ்வே
னடியிணையார்க்குங்கழலானையாறடைகின்றபோது
இடிகுரலன்னதோரேனமிசைந்துவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (எ)

விரும்புமதிக்கண்ணியானைமெல்லியலாளொடும்பாடிப்
பெரும்புலர்காலையெழுந்துபெறுமலர்கொய்யாவருவே
னருங்கலம்பொன்மணியுந்துமையாறடைகின்றபோது
கருங்கலைப்பேடையொடாடிக்கலந்துவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன் (அ)

முற்பிறைக்கண்ணியினானைமொய்குழலாளொடும்பாடிப்
பற்றிக்கயிறறுக்கில்லேன்பாடியுமாடாவருவேன்
அற்றருள்பெற்றுநின்றாரோடையாறடைகின்றபோது
நற்றுணைப்பேடையொடாரனாரைவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன் (கூ)

திங்கள்மதிக்கண்ணியானைத்தேமொழியாளொடும்பாடி
யெங்கருணல்குங்கொலெந்தையெனக்கினியென்னாவருவேன்
அங்கிளமங்கையராடுமையாறடைகின்றபோது
பைங்கிளிபேடையொடாடிப்பறந்துவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (க0)

வளர்மதிக்கண்ணியினானைவார்குழலாளொடும்பாடிக்
களவுபடாததோர்காலங்காண்பான்கடைக்கணிக்கின்றே
னளவுபடாததோரன்போடையாறடைகின்றபோது

இளமணநாகுதழுவியேறுவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (கக)

திருச்சிற்றம்பலம்.

இது திருவையாற்றிலே திருக்குளம் ஆலயமே, கயிலாயமாகச் சுவாமி தரிசனங்காட்டியபோது ஓதியருளிய பதிகம்.

---

திருவாரூர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பாடிளம்பூதத்தினானும்பவளச்செவ்வாய்வண்ணத்தானுங்
கூடிளமென்முலையாளைக்கூடியகோலத்தினானும்
ஓடிளவெண்பிறையானுமொளிதிகழ்சூலத்தினானு
மாடிளம்பாம்பசைத்தானுமாரூரமர்ந்தவம்மானே. (க)

நரியைக்குதிரைசெய்வானுநரகரைத்தேவுசெய்வானும்
விரதங்கொண்டாடவல்லானும்விச்சின்றிநாறுசெய்வானும்
முரசதிர்ந்தானைமுன்னோடமுன்பணிந்தன்பர்களேத்த
அரவரைச்சாத்திநின்றானுமாரூரமர்ந்தவம்மானே. (உ)

நீறுமெய்பூசவல்லானுநினைப்பவர்நெஞ்சத்துள்ளானு
மேறுகந்தேறவல்லானுமெரிபுரைமேனியினானு
நாறுகரந்தையினானுநான்மறைக்கண்டத்தினானும்
ஆறுசடைக்கரந்தானுமாரூரமர்ந்தவம்மானே. (ங)

கொம்புநல்வேனிலவனைக்குழையமுறுவல்செய்தானுஞ்
செம்புனல்கொண்டெயில்மூன்றுந்தீயெழக்கண்சிவந்தானும
வம்புநற்கொன்றையினானும்வாட்கண்ணிவாட்டமதெய்த
அம்பரவீருரியானுமாரூரமர்ந்தவம்மானே. (ச)

ஊழியளக்கவல்லானுமுகப்பவருச்சியுள்ளானுந்
தாழிளஞ்செஞ்சடையானுந்தண்ணமர்திண்கொடியானுந்
தோழியர்தூதிடையாடத்தொழுதடியார்களவணங்க
ஆழிவளைக்கையினானுமாரூரமர்ந்தவம்மானே. (ரு)

ஊர்திரைவேலையுள்ளானுமுலகிறந்தொண்பொருளானுஞ்
சீர்தருபாடலுள்ளானுஞ்செங்கண்விடைக்கொடியானும்
வார்தருபூங்குழலாளைமருவியுடன்வைத்தவனு
மாதிரைநாளுகந்தானுமாரூரமர்ந்தவம்மானே. (சா)

தொழற்கங்கைதுன்னிநின்றார்க்குத்தோன்றியருளவல்லானுங்
கழற்கங்கைபன்மலர்கொண்டுகாதல்கனற்றநின்றானுங்
குழற்கங்கையாளையுள்வைத்துக்கோலச்சடைக்கரந்தானு
மழற்கங்கையேந்தவல்லானுமாரூரமர்ந்தவம்மானே. (எ)

ஆயிரந்தாமரைபோலுமாயிரஞ்சேவடியானு
மாயிரம்பொன்வரைபோலுமாயிரந்தோளுடையானு
மாயிரஞாயிறுபோலுமாயிரநீண்முடியானு
மாயிரம்பேருகந்தானுமாரூரமர்ந்தவம்மானே. (அ)

வீடரங்காநிறுப்பானும்விசும்பினைவேதிதொடர
வோடரங்காகவைத்தானுமோங்கியோரூழியுள்ளானுங்

காடரங்காமகிழ்ந்தானுங்காரிகைபாகனுமனத்துள்
ஆடரங்கத்திடையானுமாரூரமர்ந்தவம்மானே. (கூ)

பையஞ்சுநாவிடநாகப்பள்ளிகொள்வானுள்ளத்தானுங்
கையஞ்சுநான்குடையானைக்காலவிரலாலடர்த்தானும்
பொய்யஞ்சுவாய்மைகள்பேசிப்புகழ்புரிந்தார்க்கருள்செய்யு
மையஞ்சிணடப்பதானுமாரூரமர்ந்தவம்மானே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவாரூர்ப்பழமொழி - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மெய்யெலாமவெண்ணீறுசண்ணித்தமேனியான்றாடொழாதே
யுய்யலாமென்றெண்ணியுறிதூக்கியுழிதந்தெனுள்ளம்விட்டுக்
கொய்யுலாமலர்ச்சோலைக்குயில்கூவமயிலாலுமாரூரரைக்
கையினாற்றொழாதொழிந்துகனியிருக்கக்காய்கவர்ந்தகள்வனேனே. (க)

என்பிருத்திநரம்புதோல்புகப்பெய்திட்டென்னையோருருவமாக்கி
யின்பிருத்திமுன்பிருந்தவினைதீர்த்திட்டென்னுள்ளங்கோயிலாக்கி
யன்பிருத்தியடியேனைக்கூழாட்கொண்டருள்செய்தவாரூரர்தம்
முன்பிருக்குமவிதியின்றிமுயல்விட்டுக்காக்கைப்பின்போனவாறே. (உ)

பெருகுவித்தென்பாவத்தைப்பண்டெலாங்குண்டர்கடஞ்சொலேகேட்டு
உருகுவித்தென்னுள்ளத்தினுள்ளிருந்தகள்ளத்தைத்தள்ளிப்போக்கி
யருகுவித்துப்பிணிகாட்டியாட்கொண்டுபிணிதீர்த்தவாரூரர்தம்
அருகிருக்குமவிதியின்றியறமிருக்கமறம்விலைக்குக்கொண்டவாறே. (ந)

குண்டனாய்த்தலைபறித்துக்குவிமுலையார்நகைநாணா*துழிதர்வேனைப்
பண்டமாப்படுத்தென்னைப்பாற்றலைதெளித்துத்தன்பாதங்காட்டித்
தொண்டெலாமிசைபாடத்தூமுறுவலருள்செய்யுமாரூரரைப்
பண்டெலாமறியாதேபனிநீராற்பாவைசெய்யப்பாவித்தேனே. (ச)

துன்னாகத்தேனாகித்துர்ச்சனவர்சொற்கேட்டுத்துவர்வாயைக்கொண்டு
என்னாகத்திரிதந்தீங்கிருகையேற்றிடவுண்டேனேழையேனான்
பொன்னாகத்தடியேனைப்புகப்பெய்துபொருட்படுத்தவாரூரரை
யென்னாகத்திருத்தாதேயேதன்போர்க்காக்கப்பட்டேனே. (ரு)

பப்போதிப்பவணனாய்ப்பறித்ததொருதலையோடேதிரிதர்வேனை
யொப்போடவோதுவித்தென்னையுள்ளத்தினுள்ளிருந்தங்குறுதிகாட்டி
யப்போதைக்கப்போதுமடியவர்கட்காரமுதாமாரூரரை
யெப்போதுநினையாதேயிருட்டறையின்மலடுகறந்தெய்த்தவாறே. (சா)

கதியொன்றுமறியாதேகண்ணழலத்தலைபறித்துக்கையிலுண்டு
பதியொன்றுநெடுவீதிபலர்காணநகைநாணாதுழிதர்வேற்கு
மதிதந்தவாரூரில்வார்தேனைவாய்மடுத்துப்பருகியுய்யும்
விதியின்றிமதியிலியேன்விளக்கிருக்கமின்மினித்தீக்காய்ந்தவாறே. (எ)

பூவையாய்த்தலைபறித்துப்பொறியற்றசமணீசர்சொல்லேகேட்டுக்
காவிசேர்கண்மடவார்கண்டோடிக்கதவடைக்குங்கள்வனேன்றன்
னாவியைப்போகாமேதவிர்த்தென்னையாட்கொண்டவாரூரரைப்
பாவியேனறியாதேபாழூரிற்பயிக்கம்புக்கெய்த்தவாறே. (அ)

---

* உழுதருவேனையென்பது - உழிதர்வேனையென நின்றது, ○ பயிக்கம்-பிச்சை.

பாரோதமேனிபவளமவனிறமேயெனகின்றாள்
காரோதமல்குங்கழிப்பாலைச்சேர்வானைக்கண்டாள்கொலோ (௮)

வானுலாந்திங்கள்வளர்புன்சடையானேயென்கின்றாள்
ஊனுலாமவெண்டலைகொண்டூரூர்பலிதிரிவானெனகின்றாள்
தேனுலாங்கோதைதிளைக்குந்திருமார்பனெனகின்றாள்
கானுலாஞ்சூழ்ந்தகழிப்பாலைச்சேர்வானைக்கண்டாள்கொலோ. (௯)

அடர்ப்பரியவிராவணனையருவரைக்கீழடர்த்தவனேயென்கின்றாள்
சுடர்ப்பெரியதிருமேனிச்சுண்ணவெண்ணீறாடவனேயெனகின்றாள்
மடற்பெரியவாலின்கீழறநால்வர்க்கன்றுரைத்தானெனகின்றாள்
கடற்கருவிசூழ்ந்தகழிப்பாலைச்சேர்வானைக்கண்டாள்கொலோ. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

### திருவேகம்பம் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

கரவாடும்வன்னெஞ்சர்க்கரியானைக்கரவார்பால்
விரவாடும்பெருமானைவிடையேறும்வித்தகனை
அரவாடச்சடைதாழவங்கையிலனலேந்தி
யிரவாடும்பெருமானையென்மனத்தேவைத்தேனே. (௧)

தேனோக்குங்கிளிமழலையுமைகேள்வன்செழும்பவளந்
தானோக்குந்திருமேனிதழலுருவாஞ்சங்கரனை
வானோக்கும்வளர்மதிசேர்சடையானைவானோர்க்கும்
ஏனோர்க்கும்பெருமானையென்மனத்தேவைத்தேனே. (௨)

கைப்போதுமலர்தூவிக்காதலித்துவானோர்கள்
முப்போதுமுடிசாய்த்துத்தொழநின்றமுதல்வனை
யப்போதுமலர்தூவியைம்புலனுமகத்தடக்கி
யெப்போதுமினியானையென்மனத்தேவைத்தேனே (௩)

அண்டமாயாதியாயருமறையோடைம்பூதப்
பிண்டமாயுலகுக்கோர்மெய்ப்பொருளாம்பிஞ்ஞகனைத்
தொண்டர்தாமலர்தூவிச்சொன்மாலைபுனைகின்ற
* இண்டைசேர்சடையானையென்மனத்தேவைத்தேனே. (௪)

ஆறேறுசடையானையாயிரம்பேரம்மானைப்
பாறேறுபடுதலையிற்பலிகொள்ளும்பரம்பரனை
நீறேறுதிருமேனிநின்மலனைநெடுந்தூவி
யேறேறும்பெருமானையென்மனத்தேவைத்தேனே. (௫)

தேசனைத்தேசங்கள்தொழநின்றதிருமாலாற்
பூசனைப்பூசனைகளுகப்பானைப்பூவினகள்
வாசனைமலைநிலநீர்தீவளியாகாசமாம்
ஈசனையெம்மானையென்மனத்தேவைத்தேனே. (௬)

நல்லானைநல்லானநான்மறையோடாறங்கம்
வல்லானைவல்லார்கள்மனத்துறையுமைந்தனைச்

---

* இண்டை-சுருக்குமாலை.

நகைவளர்கொன்றைதுன்றுநகுவெண்டலையர்நளிர்கங்கைதங்குமுடியர்
மிகைவளர்வேதகீதமுறையோடும்வல்லகறைகொண்மணிசெய்மிடறர்
முகைவளர்கோதைமாதர்முனிபாடுமாறுமெரியாடுமாறுமிவர்கைப்
பகைவளர்நாகம்வீசிமதியங்குமாறுமிதுபோலுமீசரியல்பே. (எ)

ஒளிவளர்கங்கைதங்குமொளிமாலயன்றனுடல்வெந்துவீயசுடர்நீ
றணிகிளராரவெள்ளைதவழ்சுண்ணவண்ணர்தமியாரொருவரிருவர்
களிகிளர்வேடமுண்டோர்கடமாவுரித்தவுடைதோல்தொடுத்தகலனு
ரணிகிளரன்னதொல்லையவள்பாகமாகவெழில்வேதமோதுமவரே. (அ)

மலைமடமங்கையோடும்வடகங்கைநங்கைமணவாளராகிமகிழ்வர்
தலைகலனாகவுண்டுதனியேதிரிந்துதவவாணராகிமுயல்வர்
விலையிலிசாந்தமென்றுவெறிநீறுபூசிவினையாடும்வேதவிகிர்த
ரலைகடல்வெள்ளமுற்றுமலறக்கடைந்தவழனஞ்சமுண்டவவரே (கூ)

புதுவிரிபொன்செயோலையொருகாதொர்காதுசுரிசங்கநின்றுபுரள
விதிவிதிவேதகீதமொருபாடுமோதமொருபாடுமெல்லநகுமால்
மதுவிரிகொன்றைதுன்றுசடைபாகமாதர்குழல்பாகமாகவருவா
இதுவிவர்வண்ணவண்ணமிவள்வண்ணவண்ணமெழில்வண்ணவண்ணமியல்பே.

திருச்சிற்றம்பலம்.

---

திரு அங்கமாலை - பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்.

தலையேநீவணங்காய், தலை - மாலைதலைக்கணிந்து
தலையாலேபலிதேருந்தலைவனைத், தலையேநீவணங்காய். (க)

கண்காள்காண்மின்களோ, கடல் - நஞ்சுண்டகண்டன்றன்னை
யெண்டோள்வீசிநின்றாடும்பிரான்றன்னைக், கண்காள்காண்மின்களோ. (உ)

செவிகாள்கேண்மின்களோ, சிவ - னெம்மிறைசெம்பவள
எரிபோல்மேனிப்பிரான்றிறமெப்போதுஞ், செவிகாள்கேண்மின்களோ. (௩)

மூக்கேநீமுரலாய், முது - காடுறைமுக்கணனை
வாக்கேநோக்கியமங்கைமணாளனை, மூக்கேநீமுரலாய். (ச)

வாயேவாழ்த்துகண்டாய், மத - யானையுரிபோர்த்துப்
பேய்வாழ்காட்டகத்தாடும்பிரான்றன்னை, வாயேவாழ்த்துகண்டாய். (ரு)

நெஞ்சேநீநினையாய், நிமிர் - புன்சடைநின்மலனை
மஞ்சாடுமலைமங்கைமணாளனை, நெஞ்சேநீநினையாய் (சா)

கைகாள்கூப்பித்தொழீர், கடி - மாமலர்தூவிநின்று
பைவாய்ப்பாம்பரையார்த்தபரமனைக், கைகாள்கூப்பித்தொழீர். (எ)

ஆக்கையாற்பயனென், அரன் - கோயில்வலம்வந்து
பூக்கையாலட்டிப்போற்றியென்னாதவிவ், வாக்கையாற்பயனென். (அ)

கால்களாற்பயனென், கறைக் - கண்டனுறைகோயில்
கோலக்கோபுரக்கோகரணஞ்சூழாக், கால்களாற்பயனென். (கூ)

உற்றாராருளரோ, வுயிர் - கொண்டுபோம்பொழுது
குற்றாலத்துறைகூத்தனல்லானமக், குற்றாராருளரோ. (க0)

இறுமாந்திருப்பன்கொலோ, வீசன் - பலகணத்தெண்ணப்பட்டுச்
சிறுமானேந்திதன் சேவடிக்கீழ்ச்சென்றங், கிறுமாந்திருப்பன்கொலோ. (கக)

தேடிக்கண்டுகொண்டேன், திரு - மாலொடுநான்முகனுந்
தேடித்தேடொணாத்தேவனையென்னுளே, தேடிக்கண்டுகொண்டேன். (கஉ)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கெடிலவாணர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

முளைக்கதிரிளமதியுறழ்கவெள்ளநீர்
வளைத்தெழுசடையினர்மழலைவீணையர்
திளைத்தமத்தாமான்மழுக்கையர்செய்யபொன்
கிளைத்துழித்தோன்றிடுங்கெடிலவாணரே. (க)

ஏறினாரேறினையேழைதன்னொரு
கூறினார்கூறினார்வேதமங்கமும்
ஆறினாரறிடுசடையர்பக்கமும்
நீறினவுடையினர்கெடிலவாணரே. (உ)

விடந்தழகெழுதருமிடற்றர்வெள்ளைநீ
றுடம்பழகெழுதுவர்முழுதுவெண்ணிலாப்
படர்ந்தழகெழுதருசடையிற்பாய்புனல்
கிடந்தழகெழுதியகெடிலவாணரே. (ங)

விழுமணியயிலெயிற்றம்புவெய்யதோர்
கொழுமணிநெடுவரைகொளுவிக்கோட்டினார்
செழுமணிமிடற்றினர்செய்யர்வெய்யதோர்
பெழுமணியரவினர்கெடிலவாணரே. (ச)

குழுவினர்தொழுதெழுமடியர்மேல்வினை
தழுவினகழுவுவர்பவளமேனியர்
மழுவினர்மானமறிக்கையர்மங்கையைக்
கெழுவினயோகினர்கெடிலவாணரே. (ரு)

அங்கையிலனலெரியேந்தியாறெனு
மங்கையைச்சடையிடைமணப்பர்மால்வரை
நங்கையைப்பாகமுநயப்பர்தென்றிசைக்
கெங்கையெனப்படுங்கெடிலவாணரே. (சா)

கழிந்தவர்தலைகலனேந்திக்காடுறைந்
திழிந்தவரொருவரென்றெள்கவாழ்பவர்
வழிந்திழிமதுகரமிழற்றமந்திகள்
கிழிந்ததேனுகர்தருகெடிலவாணரே. (எ)

கிடந்தபாம்பருகுகண்டரிவைபேதுறக்
கிடந்தபாம்பவளையோர்மயிலென்றையுறக்
கிடந்தநீர்ச்சடைமிசைப்பிறையுமேங்கவே
கிடந்துதானகுதலைக்கெடிலவாணரே. (அ)

வெறியுறுவிரிசடைபுரளவீசியோர்
பொறியுறுபுலியுரியரையதாகவும்

நெறியுறுகுழலுமைபாகமாகவுங்
கிறிபடவுழிதர்வர்கெடிலவாணரே. (௯)

பூண்டதேரரக்கனைப்பொருவின்மால்வரைத்
தூண்டுதோளவைபடவடர்த்ததாளினா
ரீண்டுநீர்க்கமலவாய்மேதிபாய்தரக்
கீண்டுதேன்சொரிதருங்கெடிலவாணரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

**நமச்சிவாயப்பதிகம் - பண் - காந்தாரம்**

திருச்சிற்றம்பலம்.

சொற்றுணைவேதியன்சோதிவானவன்
பொற்றுணைதிருந்தடிபொருந்தக்கைதொழக்
கற்றுணைப்பூட்டியோர்கடலிற்பாய்ச்சினு
நற்றுணையாவதுநமச்சிவாயவே (௧)

பூவினுக்கருங்கலம்பொங்குதாமரை
யாவினுக்கருங்கலமரனஞ்சாடுதல்
கோவினுக்கருங்கலங்கோட்டமில்லது
நாவினுக்கருங்கலநமச்சிவாயவே. (௨)

விண்ணுறவடுக்கியவிறகினவெவ்வழ
லுண்ணியபுகிலவையொன்றுமில்லையாம்
பண்ணியவுலகினிற்பயின்றபாவத்தை
நண்ணிநின்றறுப்பதுநமச்சிவாயவே. (௩)

இடுக்கண்பட்டிருக்கினுமிரந்தியாரையும்
விடுக்கிற்பிரானென்றுவினவுவோமல்லோம்
அடுக்கற்கீழ்க்கிடக்கினுமருளினாமுற்ற
நடுக்கத்தைக்கெடுப்பதுநமச்சிவாயவே. (௪)

வெந்தநீறருங்கலம்விரதிகட்கெலா
மந்தணர்க்கருங்கலமருமறையாறங்கந்
திங்களுக்கருங்கலந்திகழுநீண்முடி
நங்களுக்கருங்கலநமச்சிவாயவே. (௫)

சலமிலன்சங்கரன்சார்ந்தவர்க்கலா
னலமிலனாடொறுநல்குவானலன்
குலமிலராகிலுங்குலத்திற்கேற்பதோர்
நலமிகக்கொடுப்பதுநமச்சிவாயவே. (௬)

வீடினாருலகினில்விழுமியதொண்டர்கள்
கூடினாரந்நெறிகூடச்சென்றலு
மோடினேனோடிச்சென்றுருவங்காண்டலு
நாடினேனாடிற்றுநமச்சிவாயவே. (௭)

இல்லகவிளக்கதுவிருள்கெடுப்பது
சொல்லகவிளக்கதுசோதியுள்ளது
பல்லகவிளக்கதுபலருங்காண்பது
நல்லகவிளக்கதுநமச்சிவாயவே. (௮)

முன்னெறியாகிய முதல்வன் முக்கணன்
தன்னெறியே சரணாதல் திண்ணமே
அந்நெறியே சென்றங்கடைந்தவர்க்கெலாம்
நன்னெறியாவது நமச்சிவாயவே. (௯)

மாப்பிணை தழுவிய மாதொர்பாகத்தன்
பூப்பிணை திருந்தடி பொருந்தக்கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சிவாயப்பத்
தேத்தவல்லார்தமக்கிடுக்கணில்லையே (௧௦)

இது சமணர்கள் கற்றூணிற்கட்டிக் கடலிலே வீழ்த்தினபோது ஓதியருளியது.

திருச்சிற்றம்பலம்.

---

### திருப்பழனம் - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

சொன்மாலைபயில்கின்றகுயிலினங்காள்சொல்லீரே
பன்மாலைவரிவண்டுபண்மிழற்றும்பழனத்தான்
முன்மாலைநகுதிங்கள்முகிழ்விளங்குமுடிச்சென்னிப்
பொன்மாலைமார்பனென்புதுநலமுண்டிகழ்வானோ. (௧)

கண்டகங்காள்முண்டகங்காள்கைதைகாள்நெய்தல்காள்
பண்டரங்கவேடத்தான்பாட்டோவாப்பழனத்தான்
வண்டுலாந்தடமூழ்கிமற்றவனென்றளிர்வண்ணங்
கொண்டநாள்தானறிவான்குறிக்கொள்ளாதொழிவானோ. (௨)

* மனைக்காஞ்சியிளங்குருகேமறந்தாயோமதமுகத்த
பனைக்கையானுரிபோர்த்தான்பலபாடும்பழனத்தான்
நினைக்கின்றநினைப்பெல்லாமுரையாயோநிகழ்வண்டே
சுனைக்குவளைமலர்க்கண்ணாள்சொற்றூதாய்ச்சோராவாளே. (௩)

புதியையாயினியையாம்பூந்தென்றால்புறங்காடு
பதியாவதிதுவென்றுபலபாடும்பழனத்தான்
மதியாதார்வேள்விதனைமதித்திட்டமதிக்கங்கை
விதியாளனென்னுயிர்மேல்விளையாடல்விடுத்தானோ (௪)

மண்பொருந்திவாழ்பவர்க்குமாதீர்த்தவேதியர்க்கும்
விண்பொருந்துந்தேவர்க்கும்வீடுபேறாய்நின்றானைப்
பண்பொருந்தவிசைபாடும்பழனஞ்சேரப்பனையென்
கண்பொருந்தும்போழ்தத்துங்கைவிடநான்கடவேனோ. (௫)

பொங்கோதமால்கடலிற்புறம்புறம்போயிரைதேருஞ்
செங்கால்வெண்மடநாராய்செயற்படுவதறியேனு
னங்கோலவளைகவர்ந்தானணிபொழில்சூழ்பழனத்தான்
தங்கோலநறுங்கொன்றைத்தாரருளாதொழிவானோ. (௬)

துணையாரமுயங்கிப்போய்த்துறைசேருமடநாராய்
பணையாரவாரத்தான்பாட்டோவாப்பழனத்தான்
கணையாரவிருவிசும்பிற்கடியரணம்பொடிசெய்த
இணையாரமார்பனென்னெழினலமுண்டிகழ்வானோ. (௭)

---

* மனைக்காஞ்சியென்பது-வீட்டுக்குச் சமீபத்திலிருக்குங் காஞ்சிமரம்.

* கூவைவாய்மணிவரன்றிக்கொழித்தோடுங் † காவிரிப்பூம்
பாவைவாய்முத்திலங்கப்பாய்ந்தாடும்பழனத்தான்
கோவைவாய்மலைமகள்கோன்கொலவேற்றினகொடியானைப்
பூவைகாள்மழலைகாள்போகாதபொழுதுளதே. (அ)

புள்ளிமான்பொறியரவப்புள்ளுயர்த்தான்மணிநாகப
பள்ளியான்றொழுதேத்தவிருக்கின்றபழனத்தா
னுள்குவார்வினைதீர்க்குமென்றுரைப்பருலகெல்லாங்
கள்ளியேனானிவற்கென்கனவளையுங்கடவேனோ. (கூ)

வஞ்சித்தென்வளைகவர்ந்தான்வாரானேயாயிடினும்
பஞ்சிகாற்சிறகன்னம்பரந்தார்க்கும்பழனத்தா
னஞ்சிப்போய்க்கலிமெலியவழலோம்பும்அப்பூதி
குஞ்சிப்பூவாய்நின்றசேவடியாய்கோடியையே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவையாறு - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்

விடகிலேனடிநாயேன்வேண்டியக்காலியாதொன்று
மிடைகிலேனமணர்கள்தமறவுரைகேட்டலமந்தேன
றொடாகின்றேனுன்னுடையதூமலர்ச்சேவடிகாண்பா
னடைகின்றேனையாறாக்காளாய்நானுய்ந்தேனே (க)

செம்பவளத்திருவுருவர்திகழ்சோதிக்குழைக்காதா
கொம்பமருங்கொடிமருங்கிற்கோலவளையாளொருபாகா
வம்பவிழுமலர்க்கொன்றைவளர்சடைமேல்வைத்துகந்த
அம்பவளவையாறாக்காளாய்நானுய்ந்தேனே. (உ)

நணியானேசேயானேநம்பானேசெய்யபொன்னின
றுணியானேதோலானேசுண்ணவெண்ணீற்றானே
மணியானேவானவர்க்குமருந்தாகிப்பிணிதீர்க்கும்
அணியானவையாறாக்காளாய்நானுய்ந்தேனே. (ங)

ஊழித்தீயாய்நின்றாயுள்குவாருள்ளத்தாய்
வாழித்தீயாய்நின்றாய்வாழத்துவாராவாயானே
பாழித்தீயாய்நின்றாய்படர்சடைமேற்பனிமதியே
மாழித்தீயையாறாக்காளாய்நானுய்ந்தேனே. (ச)

சடையானேசடையிடையேதவழுந்தண்மதியானே
விடையானேவிடையேறிப்புரமெரித்தவித்தகனே
யுடையானேயுடைதலைகொண்டூரூரன்பலிக்குழலு
மடையானவையாறாக்காளாய்நானுய்ந்தேனே. (ரு)

---

* கூவைவாய்மணி என்பதற்குப் பூமியினிடத்திற்பொருந்திய முத்துக்கள்-அவை யாவன-யானைக்கொம்பு-பன்றிக்கொம்பு-நாகம்-பசுவின்பல-மூங்கிற்கணு- கொக்கின்கழுத்து-கற்புள்ளமாதர்கண்டம் என்னுமிவ்விடங்களிலுண்டாயிருக்கு முத்துக்களாம்.

† காவிரிப்பூம்பாவைவாய் முத்து என்பது நீர்முத்து எனக்கொள்க. அவை சங்கு இப்பி-மீன்-தாமரைமலர் என்னுமிவைகளிலுண்டாகுமுத்துக்கள். இதனை "சிறைகொள் நீர்த்தரளத் திரள்கொணித்திலத்த" என்றதிருமாளிகைத்தேவர் அருளிச்செய்ததிருவிசைப்பா உ - வது பதிகம் - ரு - வது திருப்பாடலானுமுணர்க.

நிலைவலியின்றியெங்குநிலனோடுவிண்ணுநிதனஞ்செய்தோடுபுரமூன்
றலைநலிவஞ்சியோடியரியோடுதேவரரணம்புகத்தனருளாற
கொலைநலவாளிமூளவரவங்கைநாணுமனலம்பாயநீறுபுரமா
மலைசிலைகையில்வளைவித்தவள்ளலவனுநமகோசரணே (௫)

நீலநன்மேனிசெங்கண்வளைவெள்ளெயிற்றனெரிகேசனேடிவருநாட்
காலைநன்மாலைகொண்டுவழிபாடுசெய்யுமளவின்கண்வந்துகுறுகிப்
பாலனையோடவோடப்பயமெய்துவித்தவுயிர்வவ்வுபாசமவிட்டுமக
காலனைவீடுசெய்தகழல்போலுமண்டர்தொழுதோதுசூடுகழலே (௬)

உயர்தவமிக்கதக்கனுயர்வேள்விதன்னிலவியுண்ணவந்தவிமையோர்
பயமுறுமெச்சனங்கிமதியோனுமுற்றபடிகண்டுநின்றுபயமாய்
யயனொடுமாலுமெங்களறியாமையாலிகழ்வென்றிறைஞ்சியகலச்
சயமுறுதன்மைகண்டதழல்வண்ணனெந்தைகழல்கண்டுகொள்கைசரணே. ( )

நலமலிமங்கைநங்கைவிளையாடியோடிநயனத்தலங்கள்கரமா
லுலகினையேழுமுற்றுமிருண்மூடமூடவிருளோடநெற்றியொருகண்
ணலர்தரவஞ்சிமற்றையநயனங்கைவிட்டுமடவாளிறைஞ்சமதிபோ
லலர்தருசோதிபோலவலர்வித்தவுக்கணவனுநமகோசரணே. (௮)

கழைபடுகாடுதென்றல்குயில்கூவவஞ்சுகணைபோனணைந்துபுகலு
மழைவடிவண்ணனெண்ணிமகவோனைவிட்டமலரானைதொட்டமதன
னெழில்பொடிவெந்துவீழவிமையோர்கணங்களெரிமேயனிறைஞ்சியகலத்
தழல்படுநெற்றியாற்றைநயனஞ்சிவந்ததழல்வண்ணனெந்தைசரணே. (௯)

தடமலராயிரங்கள்குறைவொன்றதாகநிறைவென்றுதன்கண்ணதனா
லுடன்வழிபாடுசெய்ததிருமாலையெந்தைபெருமானுகந்துமிகவுஞ்
சுடரடியான்முயன்றுசுழல்வித்தரக்கனிதயம்பிளந்தகொடுமை
யடல்வலியாழியாழியவனுக்களித்தவனுநமகோசரணே. (௧௦)

கடுகியதேர்செலாதுகயிலாயமீதுகருதேலுன்வீரமொழிநீ
முடுகுவதன்றுதன்மமெனநின்றுபாகன்மொழிவானைநன்றுமுனியா
விடுவிடுவென்றுசென்றுவிரைவுற்றரக்கன்வரையுற்றெடுக்கமுடிதோள்
நெடுநெடுவிற்றுவீழவிரலுற்றபாதநினைவுற்றதென்றனமனமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## பாவநாசத்திருப்பதிகம் - பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்.

பற்றற்றார்சேர்பழம்பதியைப்பாசூர்நிலாயபவளத்தைச்
சிற்றம்பலத்தெந்திகழ்கனியைத்தீண்டற்கரியதிருவுருவை
* வெற்றியூரில்விரிசுடரைவிமலர்கோனைத்திரைசூழ்ந்த
ஒற்றியூரெமுத்தமனையுள்ளத்துள்ளேவைத்தேனே. (௧)

ஆனைக்காவிலணங்கினையாரூர்நிலாயவம்மானைக்
கானப்பேரூர்க்கட்டியைக்கானூர்முளைத்தகரும்பினை
வானப்பேரார்வந்தேத்துவாய்மூர்வாழும்வலம்புரியை
மானக்கயிலைமழகளிற்றைமதியைச்சுடரைமறவேனே. (௨)

* வெற்றியூரென்பது - வைப்புத்தலத்திலொன்று.

மதியங்கண்ணிஞாயிறைமயக்கந்தீர்க்குமருந்தினை
யதிகைமூதூரரசினையையாறமர்ந்தவையனை
விதியைப்புகழைவானோர்கள்வேண்டித்தேடும்விளக்கினை
நெதியைஞானக்கொழுந்தினைநினைந்தேற்குள்ளநிறைந்ததே. (௩)

புறம்பயத்தெம்முத்தினைப்புகலூரிலங்குபொன்னினை
* உறந்தையோங்குசிராப்பள்ளியுலகம்விளக்குஞாயிறைக்
கறங்குமருவிக்கழுக்குன்றிற்காண்பார்காணுங்கண்ணானை
யறஞ்சூழதிகைவீரட்டத்தரிமானேற்றையடைந்தேனே. (௪)

கோலக்காவிற்குருமணியைக் † குடமூக்குறையும்விடமுண்ணியை
ஆலங்காட்டிலந்தேனையமரர்சென்னியாய்மலரைப்
பாலிற்றிகழும்பைங்கனியைப்பராய்த்துறையெம்பசும்பொன்னைச்
சூலத்தானைத்துணையிலியைத்தோளைக்குளிரத்தொழுதேனே. (௫)

மருகலுறையுமாணிக்கத்தைவலஞ்சுழியின்மாலையைக்
கருகாவூரிற்கற்பகத்தைக்காண்டற்கரியகதிரொளியைப்
பெருவேளூரெம்பிறப்பிலியைப்பேணுவார்கள்பிரிவரிய
திருவாஞ்சியத்தெஞ்செல்வனைச்சிந்தையுள்ளேவைத்தேனே. (௬)

எழிலாரிராசசிங்கத்தையிராமேச்சரத்தெம்மெழிலேற்றைக்
குழலார்கோதைவரைமார்பிற்குற்றாலத்தெங்கூத்தனை
நிழலார்சோலைநெடுங்களத்துநிலாயநித்தன்மணாளனை
யழலார்வண்ணத்தம்மானையன்பிலணைத்துவைத்தேனே. (௭)

மாலைத்தோன்றும்வளர்மதியைமறைக்காட்டுறையுமணாளனை
யாலைக்கரும்பினின்சாற்றையண்ணாமலையெம்மண்ணலைச்
சோலைத்துருத்திநகர்மேயசுடரிற்றிகழுந்துளக்கிலியை
மேலைவானோர்பெருமானைவிருப்பால்விழுங்கியிட்டேனே. (௮)

சோற்றுத்துறையெஞ்சோதியைத்துருத்திமேயதூமணியை
யாற்றிற்பழனத்தம்மானையாலவாயெம்மருமணியை
நீற்றிற்பொலிந்தநிமிர்திண்டோணெய்த்தானத்தெந்நிலாச்சுடரைத்
தோற்றக்கடலையடலேற்றைத்தோளைக்குளிரத்தொழுதேனே. (௯)

புத்தூருறையும்புனிதனைப்பூவணத்தெம்போரேற்றை
வித்தாய்மிழலைமுளைத்தானைவேள்விக்குடியெம்வேதியனைப்
பொய்த்தார்புரமூன்றெரித்தானைப் ‡ பொதியின்மேயபுராணனை
வைத்தேனென்றன்மனத்துள்ளே ○ மாத்தூர்மேயமருந்தையே. (௧௦)

---

* உந்தையென்பது - உறையூர். இதுவே திருமுக்கீச்சரமென்னுந்தலம்.

† குடமூக்கென்பது - கும்பகோணம்.

‡ பொதியில் என்பது பொதிகைமலை. இது வைப்புத்தலத்திற் சேர்ந்தது. இங்ஙனே பிடவூர் கோவந்தபுத்தூர் குருக்கேத்திரம் பொதிகைமலையென்னும் செய்யுளானு முணர்க. தனியே பதிகமில்லாமல் இவ்வாறு சிலபதிகங்களில் வைத்துச்சொல்லியிருப் பதினால் வைப்புத்தலமென்று முன்னோர்கள் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். தேவர்களு க்கு முனிவர்களுக்கும் பொதுஸ்தானமாயிருப்பதினால் பொதுவில் எனப்பெயர்பெற்ற மலையானது பொதியில் பொதியம் பொதிகை எனமருவி நின்றது. இந்தத்தலமுதல அநேகந்தலங்களுக் கிருந்தபதிகங்கள் இலமாய்விட்டன. அவைகளில் நூற்றெண்பதுதலம் வைப்புத்தலமென்று சொல்லப்படுகின்றது.

○ மாத்தூரென்பது - திருவாமாத்தூர்.

முந்தித்தானேமுளைத்தானைமூரிவெள்ளேறூர்ந்தானை
யந்திச்செவ்வான்படியானையரக்கனாற்றலழித்தானைச்
சிந்தைவெள்ளப்புனலாட்டிச்செஞ்சொன்மாலையடிசேர்த்தி
யெந்தைபெம்மானென்னெம்மானென்பார்பாவநாசமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

**திருப்புகலூர் - பண் - இந்தளம்.**

திருச்சிற்றம்பலம்.

செய்யர்வெண்ணூலர்கருமான்மறிதுள்ளுங்
கையர்கனைகழல்கட்டியகாலினர்
மெய்யர்மெய்ந்நின்றவர்க்கல்லாதவர்க்கென்றும்
பொய்யர்புகலூர்ப்புரிசடையாரே. (க)

மேகநல்லூர்தியர்மின்போன்மிளிர்சடைப்
பாகமதிநுதலாளையோர்பாகத்தர்
நாகவளையினர்நாகவுடையினர்
போகர்புகலூர்ப்புரிசடையாரே. (உ)

பெருந்தாழ்சடைமுடிமேற்பிறைசூடிக்
கருந்தாழ்குழலியுந்தாமுங்கலந்து
திருந்தாமனமுடையார்திறத்தென்றும்
பொருந்தார்புகலூர்ப்புரிசடையாரே. (ங)

அக்காரணிவடமாகத்தர்நாகத்தர்
நக்காரிளமதிக்கண்ணியர்நாடொறும்
உக்கார்தலைபிடித்துண்பலிக்கூர்தொறும்
புக்கார்புகலூர்ப்புரிசடையாரே. (ச)

ஆர்த்தாருயிரடுமந்தகன்றன்னுடல்
போத்தார்பிறைநுதற்பெண்ணினல்லாளுட்கக்
கூர்த்தார்மருப்பிற்கொலைக்களிற்றீருரி
போர்த்தார்புகலூர்ப்புரிசடையாரே. (ரு)

உதைத்தார்மறலியுருளவோர்காலாற்
சிதைத்தார்திகழ்தக்கன்செய்தநல்வேள்வி
பதைத்தார்சிரங்கரங்கொண்டுவெய்யோன்கண்
புதைத்தார்புகலூர்ப்புரிசடையாரே. (சு)

தூமன்சுறவந்துதைந்தகொடியுடைக்
காமன்கணைவலங்காய்ந்தமுக்கண்ணினர்
சேமநெறியினர்சீரையுடையவர்
பூமன்புகலூர்ப்புரிசடையாரே. (எ)

கருந்தார்தலையர்கடிமதின்மூன்றுந்
தெரிந்தார்கணைகள்செழுந்தழலுண்ண
விரிந்தார்சடைமேல்விரிபுனற்கங்கை
புரிந்தார்புகலூர்ப்புரிசடையாரே. (அ)

ஈண்டாரழலினிருவருங்கைதொழ
நீண்டார்நெடுந்தடுமாற்றநிலையஞ்ச

மாண்டார்தமென்புமலர்க்கொன்றைமாலையும்
பூண்டார்புகலூர்ப்புரிசடையாரே. (கூ)

கறுத்தார்மணிகண்டங்கால்விரலூன்றி
இறுத்தாரிலங்கையர்கோன்முடிபத்து
மறுத்தார்புலனைந்துமாயிழைபாகம்
பொறுத்தார்புகலூர்ப்புரிசடையாரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

## திருவாரூர் அரநெறி - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

எத்தீப்புகினுமெமக்கொருதீதிலை
தெத்தேயெனமுரன்றெம்முள *ளுழிதர்வார்
முத்தீயனையதோர்மூவிலைவேல்பிடித்
தத்தீநிறத்தாரரநெறியாரே (க)

வீரமும்பூண்பர்விசயனொடாயதோர்
தாரமும்பூண்பர்தமக்கன்புபட்டவர்
பாரமும்பூண்பர்பறைபைங்கண்மிளிர
வாரமும்பூண்பரரநெறியாரே (உ)

தஞ்சவண்ணத்தர்சடையினர்தாமுமோர்
வஞ்சவண்ணத்தர்வண்டார்குழலாளொடுந்
துஞ்சவண்ணத்தர்துஞ்சாதகண்ணார்தொழும்
அஞ்சவண்ணத்தரரநெறியாரே. (ங)

விழித்தனர்காமனைவீழ்தரவிண்ணின்
றிழித்தனர்கங்கையையேத்தினர்பாவங்
கழித்தனர்கற்சூழ்கடியரண்மூன்று
மழித்தனராரூரரநெறியாரே. (ச)

துற்றவர்வெண்டலையிற்சுருள்கோவணந்
தற்றவர்தம்வினையானவெல்லாமற
வற்றவராரூரரநெறிகைதொழ
வுற்றவர்தாமொளிபெற்றவர்தாமே (ரு)

கூடரவத்தர்குரற்கிண்கிணியடி
நீடரவத்தர்முன்மாலையிடையிருள்
பாடரவத்தர்பணமஞ்சுடைப்பைவிரித்
தாடரவத்தரரநெறியாரே. (சா)

கூடவல்லார்குறிப்பில்லுமையாளொடு
பாடவல்லார்பயின்றந்தியுஞ்சந்தியும்
ஆடவல்லார்திருவாரூரரநெறி
நாடவல்லார்வினைவீடவல்லாரே. (எ)

பாலைநக்குபனிவெண்மதிபைங்கொன்றை
மாலையுங்கண்ணியுமானவன்சேவடி
காலையுமாலையுங்கைதொழுவார்மனம்
ஆலயமாரூரரநெறியார்க்கே. (அ)

* உழிதர்வார்-சஞ்சரிப்பார், உழிதருவார் என்றபாலது-உழிதர்வா ரெனவிகாரமாயிற்று

முடிவண்ணம்வானமின்வண்ணந்தம்மார்பிற்
பொடிவண்ணந்தம்புகழூர்தியின்வண்ணம்
படிவண்ணம்பாற்கடல்வண்ணஞ்செஞ் * ஞாயி
றடிவண்ணமாரூரரநெறியார்க்கே. (௯)

பொன்னவிலபுன்சடையானடியின்னிழ
லின்னருள்சூடியெள்காதுமிராப்பகன்
மன்னவராகிமண்ணாள்வாரவர்தாந்தொழும்
அன்னவராரூரரநெறியாரே (௰)

○ பொருள்மன்னனைப்பற்றிப்புட்பகங்கொண்ட
மருள்மன்னனையெற்றிவாளுடனீந்து
கருள்மன்னுகண்டங்கறுக்கநஞ்சுண்ட
வருள்மன்னராரூரரநெறியாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

† விடந்தீர்த்ததிருப்பதிகம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

ஒன்றுகொலாமவர்சிந்தையுயர்வரை
யொன்றுகொலாமுயருமதிசூடுவ
தொன்றுகொலாமிடுவெண்டலைகையது
வொன்றுகொலாமவரூர்வதுதானே. (௧)

இரண்டுகொலாமிமையோர்தொழுபாத
மிரண்டுகொலாமிலங்குங்குழைபெண்ணாண்
இரண்டுகொலாமுருவஞ்சிறுமான்மழு
விரண்டுகொலாமவரெய்தினதாமே. (௨)

மூன்றுகொலாமவர்கண்ணுதலாவன
மூன்றுகொலாமவர்சூலத்தின்மொய்யிலை
‡ மூன்றுகொலாங்கணைகையதுவின்னாண்
மூன்றுகொலாம்புரமெய்தனதாமே. (௩)

நாலுகொலாமவர்தம்முகமாவன
நாலுகொலாஞ்சனனம்முதற்றோற்றமு
நாலுகொலாமவரூர்தியின்பாதங்கள்
நாலுகொலாமறைபாடினதாமே. (௪)

அஞ்சுகொலாமவராடரவின்படம்
அஞ்சுகொலாமவர்வெல்புலனாவன
வஞ்சுகொலாமவர்காய்ப்பட்டான்கணை
யஞ்சுகொலாமவராடினர்தாமே. (௫)

---

* ஞாயிறு அடிவண்ணம் என்பது - உதயகால சூரியனது நிறம் எனப்பொருள்கொள்.

○ பொருள்மன்னன் என்பது - குபேரன்.

† இது அப்பூதிநாயனார் புத்திரரைத் தீண்டியவிஷம் நீங்கும்படி அருளிச்செய்தது.

‡ வாயுதேவனை பாணத்தின் ஈர்க்கும் விஷ்ணு அதில் பூட்டிய அலகும் அக்கினிதேவன் அந்த அலகின் முனையில்கூர்மையுமாயிருந்ததைப்பற்றி மூன்றுகொலாங்கணையென்றருளிச்செய்தது.

ஆறுகொலாமவரங்கமபடைத்தன
வாறுகொலாமவர்தம்மகனார்முக
மாறுகொலாமவர்தார்மிசைவண்டின்கா
லாறுகொலாஞ்சுவையாக்கினாதாமே. (௬)

ஏழுகொலாமவரூழிபடைத்தன
ஏழுகொலாமவாகண்டவிருங்கடல்
ஏழுகொலாமவராளுமுலகங்கள்
ஏழுகொலாமிசையாக்கினாதாமே (௭)

எட்டுக்கொலாமவர்நிலபெருங்குண
மெட்டுக்கொலாமவாசூடுமினமல
ரெட்டுக்கொலாமவர்தோளிணையாவன
எட்டுக்கொலாந்திசையாக்கினாதாமே. (௮)

ஒன்பதுபோலவாவாசல்வகுத்தனா
ஒன்பதுபோலவர்மாாபினினூலிழை
யொன்பதுபோலவர்கோலக்குழற்சடை
யொன்பதுபோலவர்பாரிடந்தானே. (௯)

பத்துக்கொலாமவர்பாம்பின்கண்பாம்பின்பல்
பத்துக்கொலாமெயிறுநெரிந்துக்கன
பத்துக்கொலாமவர்காயப்பட்டான்றலை
பத்துக்கொலாமடியார்செய்கைதானே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

திருவாரூர் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

சூலப்படையானைச்சூழாகவீழருவிக்
கோலத்தோட்குங்குமஞ்சேர்குன்றெட்டுடையானைப்
பாலொத்தமென்மொழியாள்பங்கனைப்பாங்காய
ஆலத்தின்கீழானைநான்கண்டதாரூரே. (௧)

பக்கமேபாரிடங்கள்சூழப்படுதலையிற்
புக்கவூர்ப்பிச்சையேறறுண்டுபொலிவுடைத்தாய்க்
கொக்கிறகின்றூவல்கொடியெடுத்தகோவணத்தோ
டக்கணிந்தவம்மானைநான்கண்டதாரூரே. (௨)

சேயவுலகமுஞ்செல்சார்வுமானானை
மாயப்போர்வல்லானைமாலைதாழ்மார்பனை
வேயொத்ததோளியர்தமென்முலைமேற்றண்சாந்தின்
ஆயத்திடையானைநான்கண்டதாரூரே. (௩)

ஏறேற்றமாவேறியெண்கணமும்பின்படா
மாறேற்றாவல்லாணஞ்சேறிமயானத்தி
னீறேற்றமேனியனாய்நீள்சடைமேனீர்ததும்ப
ஆறேற்றவந்தணனைநான்கண்டதாரூரே. (௪)

தாங்கோலவெள்ளெலும்புபூண்டுதம்மேறேறிப்
பாங்கானவூர்க்கெல்லாஞ்செல்லும்பரமனார்

தேங்காவினூறுந்திருவாரூர்த்தொன்னகரிற்
பூங்கோயிலுண்மகிழ்ந்துபோகாதிருந்தாரே. (௫)

எமபட்டமபட்டமுடையானையோமதியி
னுமபட்டஞ்சோந்தநுதலானையந்திவாய்ச்
செம்பட்டுடுத்துச்சிறுமானுரியாடை
யமபட்டரைத்தானைநான்கண்டதாரூரே. (௬)

போழொத்தவெண்மதியஞ்சூடிப்பொலிந்திலங்கு
வேழத்துரிபோர்த்தான்வெள்வளையாடானெவெருவ
வூழிதீயன்னானையோங்கொலிமாபூண்டதோர
* ஆழித்தேர்வித்தகனைநான்கண்டதாரூரே. (௭)

வஞ்சனையாரார்பாடுஞ்சாராதமைந்தனைத்
துஞ்சிருளாடலுகந்தானைத்தன்றொண்டா
நெஞ்சிருளகூருமபொழுதுநிலாப்பாரித
தஞ்சுடராய்நின்றானைநானகண்டதாரூரே. (௮)

காரமுதுகொன்றைகடிநாறுதண்ணென்ன
நீரமுதுகோதையோடாடியநீண்மாபன
போரமுதமுணடாரகளுய்யப்பெருங்கடனஞ்
சாரமுதாவுண்டானைநானகண்டதாரூரே (௯)

தாடவுடுக்கையன்றாமரைப்பூஞ்சேவடியன
கோடலாவேடத்தனகொணட தோரவீணையினு
ஞாரவக்கிணகிணிக்காலன்னனோ சேடனை
யாடுநீக்கூத்தனைநான்கணடதாரூரே. (௧௦)

மஞ்சாடுகுன்றடரவூன்றிமணிவிரலாற
றுஞ்சாபபோரவாளரக்கன்றோணெரியக்கண்குருதிய
செஞ்சாந்தணிவித்துத்தன்மாரபிற்பால்வெண்ணீற
றஞ்சாந்தணிந்தானைநான்கண்டதாரூரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருவாரூர் - பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்.

காண்டலேகருத்தாகினைந்திருந்தேன்மனம்புகுந்தாய்கழலடி
பூணடுகொணடொழிந்தேன்புறம்போயினாலறையோ
வீண்டுமாடங்கணீண்டமாளிகைமேலெழுகொடிவானிளமமதி
தீண்டிவந்துலவுந்திருவாரூரமமானே. (௧)

கடமபடநடமாடினாய்களைகண்ணெனக்கொருகாதல்செய்தடி
யொடுங்கிவந்தடைந்தேனொழிப்பாய்பிழைபடவெலா
முடங்கிறான்முதுநீரயலங்கிளவாளைசெங்கயலசேலவரால்களி
றடைந்ததணகழனியணியாரூரம்மானே. (௨)

அருமணித்தடமபூண்முலையரம்பையரொடருளிப்பாடிய
யுரிமையிற்றொழுவாருருத்திரபல்கணத்தார

---

* ஆழித்தேர் - சக்கிராகாரமாயிருக்குந் தேரென அறிக.

விரிசடைவிரதிகளந்தணர்சைவர் * பாசுபதர்கபாலிகள்
தெருவினிற்பொலியுந்திருவாரூரம்மானே. (௩)

பூங்கழல்தொழுதும்பரவியும்புண்ணியா புனிதாவுன்பொற்கழ
லீங்கிருக்கப்பெற்றேனென்னகுறையுடையே
னோங்குதெங்கிலையார்கமுகிளவாழைமாவொடுமாதுளம்பல
தீங்கனிசிதறுந்திருவாரூரம்மானே. (௪)

நீறுசேர்செழுமார்பினாய்நிரம்பாமதியொடுநீள்சடையிடை
யாறுபாயவைத்தாயடியேயடைந்தொழிந்தே
னேறிவண்டொடுதும்பியஞ்சிறகூன்றவிண்டமலரிதழ்வழி
தேறல்பாய்ந்தொழுகுந்திருவாரூரம்மானே. (௫)

அளித்துவந்தடிகைதொழுமவர்மேல்வினைகெடுமென்றிவையகங்
களித்துவந்துடனேகலந்தாடக்காதலாய்க்
குளித்துமூழ்கியுந்தூவியுங்குடைந்தாடுகோதையர்குஞ்சியுட்புகத்
தெளிக்குந்தீர்த்தமறாத்திருவாரூரம்மானே. (௬)

திரியுமூவெயில்தீயெழச்சிலைவாங்கிநின்றவனேயென்சிந்தையுட்
பிரியுமாறெங்ஙனேபிழைத்தேயும்போகவொட்டேன்
பெரியசெந்நெற்பிரம்புரிகெந்தசாலிதிப்பியமென்றிவையகத்
தரியுந்தண்கழனியணியாரூரம்மானே. (௭)

பிறத்தலும்பிறந்தாற்பிணிப்பட்டுவாய்ந்தசைந்துடலம்புகுந்துநின்
றிறக்குமாறுளதேயிழித்தேன்பிறப்பினைநா
னறத்தையேபுரிந்தமனத்தனையார்வச்செற்றக்குரோதநீக்கியுன்
றிறத்தனாயொழிந்தேன்றிருவாரூரம்மானே. (௮)

முளைத்தவெண்பிறைமொய்சடையுடையாயெப்போதுமென்னெஞ்சிடங்
வளைத்துக்கொண்டிருந்தேன்வலிசெய்துபோகவொட்டேன் [கொள்ள
வுளைப்பிரிந்தவலவனைப்போய்ப்புகுந்தகாலமுங்கண்டுதன்பெடை
திளைக்குந்தண்கழனித்திருவாரூரம்மானே. (௯)

நாடினார்கமலமலரயனொடிரணியனாகங்கீண்டவ
னாடிக்காணமாட்டாத்தழலாயநம்பானைப்
பாடுவார்பணிவார்பல்லாண்டிசைகூறுபத்தர்கள்சித்தத்துள்புக்குத்
தேடிக்கண்டுகொண்டேன்திருவாரூரம்மானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவாரூர்த்திருவாதிரைத்திருப்பதிகம் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

முத்துவிதானமணிப்பொற்கவரிமுறையாலே
பத்தர்களோடுபாவையர்சூழப்பலிப்பின்னே
வித்தகக்கோலவெண்டலைமாலைவிரதிக
ளத்தனாரூராதிரைநாளாலதுவண்ணம் (௧)

நணியார்சேயார்நல்லார்தீயார்நாடோறும்
பிணிதான்தீருமென்றுபிறங்கிக்கிடப்பாரு
மணியேபொன்னேமைந்தாமணாளாவென்பார்கட்
கணியானாரூராதிரைநாளாலதுவண்ணம். (௨)

---

* பாசுபதர்-கபாலிகள் இவ்விருவகையாரும் அறுவகை உட்சமயத்தாரிற் சேர்ந்தவர்கள்

வீதிகடோறும்வெண்கொடியோடுவிதானங்கள்
சோதிகள்விட்டுச்சுடர்மாமணிகளொளிதோன்றச்
சாதிகளாயபவளமுமுத்துத்தாமங்க
ளாதியாரூராதிரைநாளாலதுவண்ணம் (௩)

குணங்கள்பேசிக்கூடிப்பாடித்தொண்டர்கள்
பிணங்கித்தம்மிற்பித்தரைப்போலப்பிதற்றுவார்
வணங்கிநின்றுவானவர்வந்துவைகலு
மணங்கொளாரூராதிரைநாளாலதுவண்ணம். (௪)

நிலவெண்சங்கும்பறையுமார்ப்பநிற்கில்லாப
பலருமிட்டகல்லவடங்கள்பரந்தெங்கும்
கலவமஞ்ஞைகாரென்றெண்ணிக்களித்துவந்
தலமராரூராதிரைநாளாலதுவண்ணம். (௫)

விம்மாவெருவாவிழியாத்தெழியாவெருட்டுவார்
தம்மாண்பிலராய்த்தரியாத்தலையான்முட்டுவா
ரெம்மானீசனெந்தையெனப்பனென்பார்கட்
கம்மானாரூராதிரைநாளாலதுவண்ணம் (௬)

செந்துவர்வாயார்செல்வனசேவடிசிந்திப்பார்
மைந்தர்களோடுமங்கையர்கூடிமயங்குவா
ரிந்திரனாதிவானவர்சித்தரெடுத்தேத்து
மந்திரனாரூராதிரைநாளாலதுவண்ணம். (௭)

முடிகள்வணங்கிமூவாதார்கண்முன்செல்ல
வடிகொள்வேய்த்தோள்வானரமங்கையர்பின்செல்லப்
பொடிகள்பூசிப்பாடுந்தொண்டர்புடைசூழ
வடிகளாரூராதிரைநாளாலதுவண்ணம். (௮)

துன்பநும்மைத்தொழாதநாள்களென்பாரு
மின்பநும்மையேத்துநாள்களென்பாரு
நும்பினெம்மைநுழையப்பணியேயென்பாரு
மன்பனாரூராதிரைநாளாலதுவண்ணம். (௯)

பாரூர்பவ்வத்தானைப்பத்தர்பணிந்தேத்தச
சீரூர்பாடலாடலறாதசெம்மாப்பார்ந்
தோரூரொழியாதுலகமெங்குமெடுத்தேத்து
மாரூரன்றனாதிரைநாளாலதுவண்ணம். (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## கோயிற்றிருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

செஞ்சடைக்கற்றைமுற்றத்திளநிலாவெறிக்குஞ்சென்னி
நஞ்சடைகண்டனாரைக்காணலாநறவநாறு
மஞ்சடைசோலைத்தில்லைமல்குசிற்றம்பலத்தே
துஞ்சடையிருள்கிழியத்துளங்கெரியாடுமாறே. (௧)

ஏறனாரேறுதம்பாலிளநிலவெறிக்குஞ்சென்னி
யாறனாராறுசூடியாயிழையாளோர்பாகர்

நாறுபூஞ்சோலைத்தில்லைநவின்றசிற்றம்பலத்தே
நீறுமெய்ப்பூசிநின்றுநீண்டெரியாடுமாறே. (௨)

சடையனாசாந்தநீற்றானனிநிலாவெறிக்குஞ்சென்னி
யுடையனாருடைதலையிலுண்பதும்பிச்சையேற்றுக்
கடிகொளபூந்தில்லைதன்னுட்கருதுஞ்சிற்றம்பலத்தே
யடிகழலார்க்கநின்றுவனலெரியாடுமாறே. (௩)

பையரவசைத்தவல்குற்பனிநிலாவெறிக்குஞ்சென்னி
மையரிக்கண்ணியாளுமாலுமோர்பாகமாகிச்
செய்யெரிதில்லைதன்னுட்டிகழ்ந்தசிற்றம்பலத்தே
கையெரிவீசிநின்றுகனலெரியாடுமாறே. (௪)

ஓதினார்வேதம்வாயாலொளிநிலாவெறிக்குஞ்சென்னிப
பூதனார்பூதஞ்சூழப்புலியுரியதளனார்தா
நாதனார்தில்லைதன்னுணவின்றசிற்றம்பலத்தே
காதில்வெண்குழைகடாழக்கனலெரியாடுமாறே. (௫)

ஒருடம்பிருவராகியொளிநிலாவெறிக்குஞ்சென்னிப
பாரிடம்பாணிசெய்யப்பயின்றவெம்பரமமூர்த்தி
காரிடந்தில்லைதன்னுட்கருதுசிற்றம்பலத்தே
பேரிடம்பெருகநின்றுபிறங்கெரியாடுமாறே. (௬)

முற்றற்ஞிசசடையமுழங்கமுகிழ்நிலாவெறிக்குஞ்சென்னி
மதக்களிற்றுரிவைபோர்த்தமைந்தனைக்காணலாகு
மத்தத்துவண்டறையுஞ்சோலைமல்குசிற்றம்பலத்தே
கத்ததோரரவமாடக்கனலெரியாடுமாறே. (௭)

மறையனாமழுவொன்றேந்திமணிநிலாவெறிக்குஞ்சென்னி
யிறைவனாரெம்பிரானாரேத்துவாரிடர்கடப்பார்
சிறைகொணீர்த்தில்லைதன்னுட்டிகழ்ந்தசிற்றம்பலத்தே
யறைகழலார்க்கநின்றுவனலெரியாடுமாறே. (௮)

விருத்தனாய்ப்பாலனாகிவிரிநிலாவெறிக்குஞ்சென்னி
நிருத்தனார்நிருத்தஞ்செய்யநீண்டபுன்சடைகடாழக்
கருத்தனார்தில்லைதன்னுட்கருதுசிற்றம்பலத்தே
யருத்தமாமேனிதன்னோடனலெரியாடுமாறே. (௯)

பாலனாய்விருத்தனாகிப்பனிநிலாவெறிக்குஞ்சென்னி
காலனைக்காலாற்காய்ந்தகடவுளார்விடையொன்றேறி
ஞாலமாந்தில்லைதன்னுணவின்றசிற்றம்பலத்தே
நீலஞ்சேர்கண்டனார்தாநீண்டெரியாடுமாறே. (௧௦)

மதியிலாவரக்கனோடிமாமலையெடுக்கநோக்கி
நெதியன்றோளெரியவூன்றிநீடிரும்பொழில்கள்சூழ்ந்த
மதியந்தோய்தில்லைதன்னுள்மல்குசிற்றம்பலத்தே
யதிசயம்போலநின்றுவனலெரியாடுமாறே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

கோயிற்றிருநேரிசை - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

பத்தனாய்ப்பாடமாட்டேன்பரமனேபரமயோகி
யெத்திறற்பத்திசெய்கேனென்னைநீயிகழவேண்டாம்
முத்தனேமுதல்வாதில்லையம்பலத்தாடுகின்ற
அத்தாவுன்னாடல்காண்பானடியனேன்வந்தவாறே (௧)

கருத்தனாய்ப்பாடமாட்டேன்காம்பனதோளிபங்கா
வொருத்தாலறியவொண்ணாதிருவுருவுடையசோதி
திருத்தமாந்தில்லைதன்னுட்டிகழ்ந்தசிற்றம்பலத்தே
நிருத்தநானாணவேண்டிநோபடவந்தவாறே (௨)

கேட்டிலேனகிளைபிரியேன்கேட்குமாகேட்டியாகின்
நாட்டினேனின்றன்பாதநடுபபடநெஞ்சினுள்ளே
மாட்டினீர்வாளைபாயுமல்குசிற்றம்பலத்தே
கூட்டமாங்குவிமுலையாள்கூடநீயாடுமாறே. (௩)

சிந்தையைத்திகைபபியாதேசெறிவுடையடிமைசெய்ய
எந்தைநீயருளிச்செய்யாயாதுநான்செய்வதேனே
செந்தியார்வேள்வியோவாத்தில்லைச்சிற்றம்பலத்தே
யந்தியும்பகலுமாடவடியிணையலசுங்கொல்லோ. (௪)

கண்டவாதிரிந்துநாளுங்கருத்தினானின்றன்பாதங்
கொண்டிருந்தாடிப்பாடிக்கூடுவன்குறிப்பினாலே
வண்டுபண்பாடுஞ்சோலைமல்குசிற்றம்பலத்தே
யெண்டிசையோருமேத்தவிறைவநீயாடுமாறே. (௫)

பார்த்திருந்தடியனேனுன்பாவுவன்பாடியாடி
மூர்த்தியேயென்பனுன்னைமூவரின்முதல்வனென்பன்
ஏத்துவாரிடர்கடீர்ப்பாய்தில்லைச்சிற்றம்பலத்துக்
கூத்தாவுன்கூத்துக்காண்பான்கூடநானவந்தவாறே. (௬)

பொய்யினைத்தவிரவிட்டுப்புறமலாவடிமைசெய்ய
ஐயநீயருளிச்செய்யாயாதியேயாதிமூர்த்தி
வையகந்தன்னின்மிக்கமல்குசிற்றம்பலத்தே
பையநுன்னாடல்காண்பான்பரமநானவந்தவாறே. (௭)

மனத்தினார்திகைத்துநாளுமாண்பலாநெறிகண்மேலே
கனைப்பரால்என்செய்கேனோகறையணிகண்டத்தானே
தினைத்தனைவேதங்குன்றாத்தில்லைச்சிற்றம்பலத்தே
யனைத்துநின்னிலயங்காண்பானடியனேன்வந்தவாறே. (௮)

நெஞ்சினைத்தூய்மைசெய்துநினைக்குமாநினைப்பியாதே
வஞ்சமேசெய்தியாலோவானவர்தலைவனேநீ
மஞ்சடைச்சோலைத்தில்லைமல்குசிற்றம்பலத்தே
யஞ்சொலாள்காணநின்றுவழகநீயாடுமாறே. (௯)

மண்ணுண்டமாலவனுமலர்மிசைமன்னினானும்
விண்ணுண்டதிருவுருவம்விரும்பினார்காணமாட்டார்
திண்ணுண்டதிருவேமிக்கதில்லைச்சிற்றம்பலத்தே
பண்ணுண்டபாடலோடுமெபரமநீயாடுமாறே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

24 திருவதிகைதிருவீரட்டானம் - பண் - கொப்பளித்ததிருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

இரும்புகொப்பளித்தயானையீருரிபோர்த்தவீசன்
கரும்புகொப்பளித்தவின்சொற்காரிகைபாகமாகச்
சுரும்புகொப்பளித்தகங்கைத்துவலைநீர்சடையிலேற்ற
அரும்புகொப்பளித்தசென்னியதிகைவீரட்டனாரே. (க)

கொம்புகொப்பளித்ததிங்கட்கோணல்வெண்பிறையுஞ்சூடி
வம்புகொப்பளித்தகொன்றைவளாச்சடைமேலும்வைத்துச்
செம்புகொப்பளித்தமூன்றுமதிலுடன்சுருங்கவாங்கி
யம்புகொப்பளிக்கவெய்தாரதிகைவீரட்டனாரே. (உ)

விடையுங்கொப்பளித்தபாய்ச்சல்விண்ணவர்பரவியேத்தச்
சடையுங்கொப்பளித்ததிங்கட்சாந்தம்வெண்ணீறுபூசி
யுடையுங்கொப்பளித்தநாகமுள்குவாருள்ளத்தென்றும்
அடையுங்கொப்பளித்தசீராரதிகைவீரட்டனாரே. (ங)

கறையுங்கொப்பளித்தகண்டர்காமவேளுருவமங்க
இறையுங்கொப்பளித்தகண்ணாரேத்துவாரிடர்கடீர்ப்பார்
மறையுங்கொப்பளித்தநாவர்வண்டுண்டுபாடுங்கொன்றை
யறையுங்கொப்பளித்தசென்னியதிகைவீரட்டனாரே. (ச)

நீறுகொப்பளித்தமார்பர்நிழறிகழ்மழுவொன்றேந்திக்
கூறுகொப்பளித்தகோதைக்கோல்வளைமாதோர்பாகம்
ஏறுகொப்பளித்தபாதமிமையவர்பரவியேத்த
ஆறுகொப்பளித்தசென்னியதிகைவீரட்டனாரே. (ரு)

வணங்குகொப்பளித்தபாதம்வானவர்பரவியேத்த
பிணங்குகொப்பளித்தசென்னிச்சடையுடைப்பெருமையண்ணல்
சுணங்குகொப்பளித்தகொங்கைச்சுரிகுழல்பாகமாக
அணங்குகொப்பளித்தமேனியதிகைவீரட்டனாரே. (சு)

சூலங்கொப்பளித்தகையர்சுடர்விடுமழுவாள்வீசி
நூலுங்கொப்பளித்தமார்பினுண்பொறியரவஞ்சேர்த்தி
மாலுங்கொப்பளித்தபாகர்வண்டுடன்பாடுங்கொன்றை
யாலுங்கொப்பளித்தகண்டத்ததிகைவீரட்டனாரே. (எ)

நாகங்கொப்பளித்தகையர்நான்மறையாயபாடி
மேகங்கொப்பளித்ததிங்கள்விரிசடைமேலும்வைத்துப்
பாகங்கொப்பளித்தமாதர்பண்ணுடன்பாடியாட
ஆகங்கொப்பளித்ததோளரதிகைவீரட்டனாரே. (அ)

பரவுகொப்பளித்தபாடல்பண்ணுடன்பத்தரேத்த
விரவுகொப்பளித்தகங்கைவிரிசடைமேவவைத்து
இரவுகொப்பளித்தகண்டரேத்துவாரிடர்கடீர்ப்பார்
அரவுகொப்பளித்தகையரதிகைவீரட்டனாரே. (கூ)

தொண்டைகொப்பளித்தசெவ்வாய்த்துடியிடைப்பாவையல்குற்
கொண்டைகொப்பளித்தகோதைக்கோல்வளைபாகமாக

வண்டுகொப்பளித்ததீந்தேன்வரிக்கயல்பருகிமாந்தக்
கெண்டைகொப்பளித்ததெண்ணீர்க்கெடிலவீரட்டனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

**திருவதிகைத்திருவீரட்டானம் - பண் - திருநேரிசை.**

திருச்சிற்றம்பலம்.

வெண்ணிலாமதியந்தன்னைவிரிசடைமேவவைத்து
வுண்ணிலாப்புகுந்துநின்றங்குணர்வினுக்குணரக்கூறி
விண்ணிலார்மீயச்சூரார்வேண்டுவார்வேண்டுவார்க்கே
யண்ணியார்பெரிதுஞ்செய்வாரதிகைவீரட்டனாரே. (௧)

பாடினார்மறைகணான்குமபாயிருள்புகுந்தெனுள்ளங்
கூடினார்கூடலாலவாயிலார்நல்லகொன்றை
சூடினார்சூடல்மேவிச்சூழ்சுடர்ச்சுடலைவெண்ணீ
றாடினாராடல்மேவியதிகைவீரட்டனாரே. (௨)

ஊனையேகழிக்கவேண்டிலுணர்மின்களுள்ளத்துள்ளே
தேனையமலர்கள்கொண்டுசிந்தையுட்சிந்திக்கின்ற
வேனையபலவுமாகியிமையவரேத்தநின்று
ஆனையினுரிவைபோர்த்தாரதிகைவீரட்டனாரே. (௩)

துருத்தியாங்குரம்பைதன்னிற்றொண்ணூற்றங்கறுவர்நின்று
விருத்திதான்றருகவென்றுவேதனைபலவுஞ்செய்ய
வருத்தியாலவல்லவாறுவந்துவந்தடையநின்ற
அருத்தியார்க்கன்பர்போலுமதிகைவீரட்டனாரே. (௪)

பத்தியாலேத்திநின்றுபணிபவர்நெஞ்சத்துள்ளார்
துத்தியைந்தலையநாகஞ்சூழ்சடைமுடிமேல்வைத்து
உத்தரமலையர்பாவையுமையவணடுங்கவன்று
அத்தியினுரிவைபோர்த்தாரதிகைவீரட்டனாரே (௫)

வரிமுரிபாடியென்றும்வல்லவாறடைந்துநெஞ்சே
கரியுரிமூடவல்லகடவுளைக்காலத்தாலே
சுரிபுரிவிரிகுழலாடுடியிடைப்பரவையல்கு
லரிவையோர்பாகர்போலுமதிகைவீரட்டனாரே. (௬)

நீதியானினைசெய்நெஞ்சேநிமலனைநித்தமாகப்
பாதியாமுமைதன்னோடும்பாகமாய்நின்றவெந்தை
சோதியாச்சுடர்விளக்காச்சுண்ணவெண்ணீறதாடி
யாதியுமீறுமானாரதிகைவீரட்டனாரே. (௭)

எல்லியும்பகலுமெல்லாந்துஞ்சுவேற்கொருவர்வந்து
புல்லியமனத்துக்கோயில்புக்கனர்காமனென்னும்
வில்லியைங்கணையினானைவெந்துகநோக்கியிட்டார்
அல்லியம்பழனவேலியதிகைவீரட்டனாரே. (௮)

ஒன்றவேயுணர்திராகிலோங்காரத்தொருவனாகும்
வென்றவைம்புலன்கடம்மைவிலக்குதற்குரியீரெல்லாம்
நன்றவனாரணனுநான்முகனடிக்காண்குற
றன்றவர்க்கரியர்போலுமதிகைவீரட்டனாரே. (௯)

தடக்கையாலெடுத்துவைத்துத்தடவரைகுலுங்கவார்த்துக்
கிடக்கையாலிடர்களோங்கக்கிளாமணிமுடிகள்சாய
முடக்கினார்திருவிரற்றன்முருகமாகோதைபாகத்
தடக்கினாரென்னையாளுமதிகைவீரட்டனாரே (௧0

திருச்சிற்றம்பலம்

திருவதிகைத்திருவீரட்டானம் - பண் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

நம்பனேயெங்கள்கோவேநாதனேயாதிமூர்த்தி
பங்கனேபரமயோகியென்றென்றேபரவிநாளுஞ்
செம்பொனேபவளக்குன்றேதிகழ்மலர்ப்பாதங்காண்பா
னன்பனேயலந்துபோனேனதிகைவீரட்டனாரே. (௧)

பொய்யினான்மிடைந்தபோர்வைபுரையுமையழுகிவீழ
மெய்யனாய்வாழமாட்டேன்வேண்டிற்றொன்றைவர்வேண்டார்
செய்யதாமரைகளன்னசேவடியிரண்டுங்காண்பான்
ஐயநானலந்துபோனேனதிகைவீரட்டனாரே. (௨)

நீதியால்வாழமாட்டேனித்தலுந்தூயனல்லேன்
ஓதியுமுணரமாட்டேனுன்னையுள்வைக்கமாட்டேன்
சோதியேசுடரேயுன்றன்றூமலர்ப்பாதங்காண்பான்
ஆதியேயலந்துபோனேனதிகைவீரட்டனாரே. (௩)

தெருளுமாதெருளமாட்டேன்றீவினைச்சுற்றமென்னும்
பொருளுளேயழுந்திநாளும்போவதோர்நெறியுங்காணேன்
இருளுமாமணிகண்டாநின்னிணையடியிரண்டுங்காண்பான்
அருளுமாறருளவேண்டுமதிகைவீரட்டனாரே. (௪)

அஞ்சினாலியற்றப்பட்டவாக்கைபெற்றதனுள்வாழும்
அஞ்சினாலடர்க்கப்பட்டிங்குழிதருமாதனேனை
யஞ்சினாலுய்க்கும்வண்ணங்காட்டினாய்க்கச்சந்தீர்ந்தேன்
அஞ்சினாற்பொலிந்தசென்னியதிகைவீரட்டனாரே. (௫)

உறுகயிறூசலபோலவொன்றுவிட்டொன்றுபற்றி
மறுகயிறூசலபோலவந்துவந்துலவுநெஞ்சம்
பெறுகயிறூசல்போலப்பிறைபுல்குசடையாய்பாதத்
தறுகயிறூசலானேனதிகைவீரட்டனாரே. (௬)

கழித்திலேன்காமவெந்நோய்காதன்மையென்னும்பாசம்
ஒழித்திலேனூன்கணோக்கியுணர்வெனுமிமைதிறந்து
விழித்திலேன்வெளிறுதோன்றவினையெனுஞ்சரக்குக்கொண்டேன்
அழித்திலேனயர்த்துப்போனேனதிகைவீரட்டனாரே. (௭)

மன்றத்துப்புன்னைபோலமரம்படுதுயரமெய்தி
யொன்றினாலுணரமாட்டேனுன்னையுள்வைக்கமாட்டேன்
கன்றியகாலன்வந்துகருக்குழிவிழுப்பதற்கே
யன்றினாலமந்திட்டேனதிகைவீரட்டனாரே. (௮)

பிணிவிடாவாக்கைபெற்றேன்பெற்றமொன்றேறுவானே
பணிவிடாவிடும்பையென்னும்பாசனத்தழுந்துகின்றேன்

றுணிவிலேன்றாயனலலேன்றா மலர்பபாதங்காண்பான்
அணியனுயறியமாட்டேனதிகைவீரட்டனாரே. (கூ)

திருவினள்கொழுநனுருந்திசைமுகமுடையகோவும்
இருவருமெழுந்துமஃழுந்துமிணையடிகாணமாட்டார
ஒருவனேயெமபிரானேயுன்திருபபாதங்காண்பான்
அருவனேயருளவேண்டுமெதிகைவீரட்டனாரே. (க௦)

திருசசிறறம்பலம்

---

திருவதிகைதிருவீரட்டானம் - பண் - திருநேரிசை.

திருசசிறறமபலம.

மடக்கினாபுலியின்றோலைமாமணிநாகங்கச்சா
முடக்கினாமுகிழ்வெண்டிஙகள்மொய்சடைக்கறறைதன்மேற்
றொடக்கினாதொண்டைசசெவவாய்ககதுடியிடைபபாவையலகு
லடக்கினாகெடிலவேலியதிகைவீரட்டனாரே. (க)

சூடினார்கங்கையாளைச்சூடியதுழனிகேட்டங
கூடினாணங்கையாளுமூடலையொழிக்கவேண்டிப
பாடினாசாமவேதமபாடியபாணியாலே
யாடினாகெடிலவேலியதிகைவீரட்டனாரே. (உ)

கொமபினாற்குழைக்கவென்றகோமகன்கோலநீரமை
நமபினாகாணலாகாவகையதோராகடலைசெய்தாா
வெம்பினார்மதிலகள்மூனறுமவிலலிடையெரித்துவீழ்த்த
வம்பினாகெடிலவேலியதிகைவீரடடனாரே. (௩)

மறிபடக்கிடநதகையாவளரிளமஙகைபாகஞ்
செறிபடக்கிடநதசெக்காச்செழுமதிககொழுநதுசூடிப்
பொறிபடக்கிடநதநாகமபுகையுமிழ்நதழலவீககிக
கிறிபடநடபபாபோலுஙகெடிலவீரட்டனாரே. (௪)

நரிவரால்கவ்வசசென்றுநற்றசையிழநததோறறந
தெரிவரான்மாலகொள்சிநதைதீர்பபதோர்சிநதைசெய்வார்
வரிவராலுகளுங்தெண்ணீாக்கழனிசூழ்பழனவேலி
யரிவரால்வயலகளசூழ்நதவதிகைவீரட்டனாரே. (௫)

புள்ளலைத்துண்டவோட்டிலுணடுபோய்பபலாசங்கொம்பின்
கள்ளலைசசுடலைவெண்ணீறணிநதவாமணிவெளளேறறுத்
துள்ளலைப்பாகன்றனனைதொடர்நதிங்கேகிடக்கின்றேனை
யள்ளலைக்கடபபித்தாளுமதிகைவீரட்டனாரே. (௬)

நீறிட்டநுதலாவேலைநீலஞ்சேர்கண்டர்மாதா
கூறிட்டமெய்யராகிக்கூறினாராறுநான்குங்
கீறிட்டதிங்கள்சூடிக்கிளாதருசடையினுளளால்
ஆறிட்டுமுடிப்பாபோலுமதிகைவீரட்டனாரே. (௭)

காணிலாாகருத்திலவாராா திருத்திலார்பொருத்தலாகார்
ஏணிலாாிறப்புமில்லார்பிறப்பிலாாதுறக்கலாகார்
நாணிலாரைவரோடுமிட்டெனைவிரவிவைத்தார்
ஆணலார்பெண்ணுமல்லாாதிகைவீரட்டனாரே. (அ-க)

தீர்த்தமாமலையைநோக்கிச்செருவலியரக்கன்சென்று
பேர்த்தலும்பேதையஞ்சப்பெருவிரலதனையூன்றிச்
சீர்த்தமாமுடிகள்பத்துஞ்சிதறுவித்தவனையன்று
ஆர்த்தவாயலறவைத்தாரதிகைவீரட்டனாரே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

௨௪ திருவதிகைத்திருவீரட்டானம் - பண் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

முன்பெலாமிளையகாலமூததிணையைகினையாதோடிக்
கண்கணவிருமினாளுங்கருத்தழிந்தருத்தமின்றிப்
பின்பகலுணங்கலட்டும்பேதைமார்போனறேனுள்ள
மன்பனுபவாழமாட்டேனதிகைவீரட்டனாரே. (௧)

கறைப்பெருங்கண்டத்தானேகாய்கதிரமனையஞ்சி
கிறைப்பெருங்கடலைக்கண்டேனீள்வரையுச்சிகண்டேன்
பிறைப்பெருஞ்சென்னியானேபிஞ்ஞகாவிவையனைத்தும
அறுப்பதோருபாயங்காணேனதிகைவீரட்டனாரே. (௨)

நாதனாரென்னநாளுநடுங்கினராயிறறங்க
ளேதங்களறியமாட்டாரிணையடிதொழுதோமென்பா
ராதனைவனொன்றெள்கியதிகைவீரட்ட னேநின
பாதனன்பரவாதுய்க்குபழவினைபரிசிலேனே. (௩)

சுடலைசேர்சுண்ணமெய்யர்சுருமபுணவிரிந்தகொன்றைப
படலைசேரலங்கன்மார்பபழனஞ்சேர்கழனித்தெங்கின்
மடலைநீர்கிழியவோடியதனிடைமணிகள்சிந்துங
கெடிலவீரட்டமேயகிளர்சடைமுடியனாரே. (௪)

மந்திரமுள்ளதாகமறிவுடலெழுநெய்யாக
இந்திரன்வேள்விதீயிலெழுந்தசோர்கொழுந்தின்வண்ணஞ்
சிந்திரமாகநோக்கித்தெருட்டுவார்தெருட்டவந்து
கந்திரமுரலுஞ்சோலைக்கானலங்கெடிலத்தாரே. (௫-௬-௭-௮-௯)

மைஞ்ஞலமனையகண்ணாள்பங்கன்மாமலையையோடி
மெய்ஞ்ஞரமபுதிரமபிலகவிசைதணிந்தரக்கன்வீழ்ந்து
கைஞ்ஞரம்பெழுவிக்கொண்டுகாதலாலினிதுசொன்ன
கின்னரங்கேட்டுகந்தார்கெடிலவீரட்டனாரே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

திருச்செம்பொன்பள்ளி - பண் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

ஊனினுள்ளுயிரைவாட்டியுணர்வினார்க்கெளியராகி
வானினுள்வானவர்க்குமறியலாகாதவஞ்சர்
நானெனிற்றானேயென்னுஞானத்தார்பத்தர்நெஞ்சுட்
டேனுமின்னமுதுமானார்திருச்செம்பொன்பள்ளியாரே. (௧)

நொய்யவர்விழுமியாருநூலினுணெறியைக்காட்டு
மெய்யவர்பொய்யுமில்லாருடலெனுமிடிஞ்சிற்றன்னில்

நெய்யமர்திரியுமாகிநெஞ்சத்துள்விளக்குமாகிச்
செய்யவாகரியகண்டாதிருச்செம்பொன்பள்ளியாரே. (௨)

வெள்ளியர்கரியர்செய்யார்விண்ணவரவர்கணெஞ்சுள்
ஒள்ளியருழியூழியுலகமதேத்தநின்ற
பள்ளியார்நெஞ்சத்துள்ளார்பஞ்சமம்பாடியாடுந்
தெள்ளியார்கள்ளந்தீர்ப்பார்திருச்செம்பொன்பள்ளியாரே. (௩)

தந்தையுந்தாயுமாகித்தானவன்ஞானமூர்த்தி
முந்தியதேவர்கூடிமுறைமுறையிருக்குச்சொல்லி
எந்தைநீசரணமென்றங்கிமையவர்பரவியேத்தச்
சிந்தையுட்சிவமதானார்திருச்செம்பொன்பள்ளியாரே. (௪)

ஆறுடைச்சடையார்போலுமன்பருக்கன்பர்போலுங்
கூறுடைமெய்யர்போலுங்கோளரவரையார்போலும்
நீறுடையழகர்போலுநெய்தலேகமழுநீர்மைச்
சேறுடைக்கமலவேலித்திருச்செம்பொன்பள்ளியாரே (௫)

ஞாலமுமறியவேண்டினன்றெனவாழலுறநீர்
காலமுங்கழியலானகள்ளத்தையொழியகில்லீர்
கோலமும்வேண்டாவாராவச்செற்றங்கள்குரோதநீக்கிச்
சீலமுநோன்புமாவார்திருச்செம்பொன்பள்ளியாரே. (௬)

புரிகாலேநேசஞ்செய்யவிருந்தபுண்டரீகத்தாரும்
எரிகாலேமூன்றுமாகியிமையவர்தொழநின்றாருந்
தெரிகாலேமூன்றுசந்தியானித்துவணங்கநின்று
திரிகாலங்கண்டவெந்தைதிருச்செம்பொன்பள்ளியாரே. (௭)

காருடைக்கொன்றைமாலைகதிர்மதியரவினோடு
நீருடைச்சடையுள்வைத்தநீதியார்நீதியுள்ளார்
பாரொடுவிண்ணுமண்ணும்பதினெட்டுக்கணங்களேத்தச்
சீரொடுபாடலானார்திருச்செம்பொன்பள்ளியாரே. (௮)

ஓவாதமறைவல்லானுமோதநீர்வண்ணன்காணு
மூவாதபிறப்பிலாருமுனிகளானார்களேத்தும்
பூவானமூன்றுமுன்னூற்றறுபதுமாகுமெந்தை
தேவாதிதேவரென்றுந்திருச்செம்பொன்பள்ளியாரே. (௯)

அங்கங்களாறுநான்குமந்தணர்க்கருளிச்செய்து
சங்கங்கள்பாடவாடுஞ்சங்கரன்மலையெடுத்தான்
அங்கங்களுதிர்ந்துசோரவலறிடவடர்த்துநின்றுஞ்
செங்கண்வெள்ளேறதேறுந்திருச்செம்பொன்பள்ளியாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கழிப்பாலை - பண் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

நங்கையைப்பாகம்வைத்தார்ஞானத்தைநாவில்வைத்தார்
அங்கையிலனலும்வைத்தார்ஆனையினுரிவைவைத்தார்
தங்கையில்வாளும்வைத்தார்தாமரைமலரும்வைத்தார்
கங்கையைச்சடையுள்வைத்தார்கழிப்பாலைச்சேர்ப்பனாரே. (௧)

விண்ணினைவிரும்பவைத்தார்வேள்வியைவேட்கவைத்தார்
பண்ணினைப்பாடவைத்தார்பத்தர்கள்பயிலவைத்தார்
மண்ணினைத்தாவநீண்டமாலினுக்கருளும்வைத்தார்
கண்ணினைநெற்றிவைத்தார்கழிப்பாலைச்சேர்ப்பனாரே. (௨)

வாமனைவணங்கவைத்தார்வாயினைவாழ்த்தவைத்தார்
சோமனைச்சடைமேல்வைத்தார்சோதியுட்சோதிவைத்தார்
ஆமனையாடவைத்தாரன்பெனும்பாசம்வைத்தார்
காமனைக்காய்ந்தகண்ணார்கழிப்பாலைச்சேர்ப்பனாரே. (௩)

அரியனவங்கம்வேதமந்தணர்க்கருளும்வைத்தார்
பெரியனபுரங்கள்மூன்றும்பேரழலுண்ணவைத்தார்
பரியதீவண்ணராகிப்பவளம்போல்நிறத்தைவைத்தார்
கரியதோர்கண்டம்வைத்தார்கழிப்பாலைச்சேர்ப்பனாரே. (௪)

கூரிருள்கிழியநின்றகொடுமழுக்கையில்வைத்தார்
பேரிருள்கழியமல்குபிறைபுனற்சடையுள்வைத்தார்
ஆரிருளண்டம்வைத்தாரறுவகைச்சமயம்வைத்தார்
காரிருள்கண்டம்வைத்தார்கழிப்பாலைச்சேர்ப்பனாரே. (௫)

உட்டங்குசிந்தைவைத்தாருள்குவார்க்குள்ளம்வைத்தார்
விட்டங்குவேள்விவைத்தார்வெந்துயர்தீரவைத்தார்
நட்டங்குநட்டம்வைத்தார்ஞாலமுநவிலவைத்தார்
கட்டங்கந்தோண்மேல்வைத்தார்கழிப்பாலைச்சேர்ப்பனாரே. (௬)

ஊனப்பேரொழியவைத்தாரோதியேயுணரவைத்தார்
ஞானப்பேரவிலவைத்தார்ஞானமுநடுவும்வைத்தார்
வானப்பேராறும்வைத்தார்வைகுந்தற்காழிவைத்தார்
கானப்பேர்காதல்வைத்தார்கழிப்பாலைச்சேர்ப்பனாரே. (௭)

கொங்கினுமரும்புவைத்தார்குற்றங்களகெடுக்கவைத்தார்
சங்கினுண்முத்தம்வைத்தார்சாம்பரும்பூசவைத்தார்
அங்கமும்வேதம்வைத்தாராலமுமுண்டுவைத்தார்
கங்குலும்பகலும்வைத்தார்கழிப்பாலைச்சேர்ப்பனாரே. (௮)

சதுர்முகன்றானுமாலுந்தம்மிலேயிகலக்கண்டு
எதிர்முகமின்றிநின்றவெரியுருவதனைவைத்தார்
பிதிர்முகன்காலன்றன்னைக்கால்தனிற்பிதிரவைத்தார்
கதிர்முகஞ்சடையில்வைத்தார்கழிப்பாலைச்சேர்ப்பனாரே. (௯)

மாலினாணங்கையஞ்சமதிலிலங்கைக்குமன்னன்
வேலினானவெகுண்டெடுக்கக்காண்டலும்வேதநாவ
னூலினானோக்கிநக்குநெடிப்பத்தோளவில்வீழக்
காலினாலூன்றியிட்டார்கழிப்பாலைச்சேர்ப்பனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கடவூர்-திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

பொள்ளத்தகாயமாயபொருளினைப்போகமாதர்
வெள்ளத்தைக்கழிக்கவேண்டில்விரும்புமின்விளக்குத்தூப

ழுள்ளொத்த திரியொன் றேற்றி யுணருமா றுணர வல்லார்
கள்ளத்தைக் கழிப்பர் போலுங் கடவூர்வீ ரட்டனாரே. (௧)

மண்ணிடைக் குரம்பை தன்னை மதித்துநீர் மையலெய்தில்
விண்ணிடைத் தருமராசன் வேண்டினால் விலக்குவாரார்
பண்ணிடைச் சுவைகள் பாடி யாடிடும் பத்தர்க் கென்றுங்
கண்ணிடை மணியர் போலுங் கடவூர்வீ ரட்டனாரே. (௨)

பொருத்திய குரம்பை தன்னுட் பொய்நடை செலுத்து கின்றீர்
ஒருத்தனை யுணர மாட்டீர் உள்ளத்திற் கொடுமை நீக்கீர்
வருத்தின களிறு தன்னை வருத்துமா வருத்த வல்லார்
கருத்தினி லிருப்பர் போலுங் கடவூர்வீ ரட்டனாரே. (௩)

பெருமலர் காலை முழுகிப் பித்தர்க்குப் பத்த ராகி
யரும்பொடு மலர்கள் கொண்டாங் கார்வத்தை யுள்ளே வைத்து
விரும்பிநல் விளக்குத் தூபம் விதியினா லிடவல் லார்க்குக்
கரும்பினிற் கட்டி போல்வார் கடவூர்வீ ரட்டனாரே. (௪)

தலக்கமே செய்து வாழ்ந்து தக்கவா றொன்று மின்றி
விலக்குவா ரிலாமை யாலே விளக்கத்திற் கோழி போன்றேன்
மலக்குவார் மனத்தி னுள்ளே காலனார் தமர்கள் வந்து
கலக்கநான் கலங்கு கின்றேன் கடவூர்வீ ரட்டனாரே. (௫)

பழியுடை யாக்கை தன்னிற் பாழுக்கே நீரிறைத்து
வழியிடை வாழ மாட்டேன் மாயமுந் தெளிய கில்லேன்
அழிவுடைத் தாய வாழ்க்கை ஐவரா லலைக்கப் பட்டுக்
கழியிடைத் தோணி போன்றேன் கடவூர்வீ ரட்டனாரே. (௬)

மாயத்தை யறிய மாட்டேன் மையல்கொண் மனத்த னாகிப்
பேயொத்துக் கூகை யானேன் பிஞ்ஞகா பிறப்பொன் றில்லீ
நேயத்தா லினைய மாட்டேன் நீதனே னீச னேனுன்
காயத்தைக் கழிக்க மாட்டேன் கடவூர்வீ ரட்டனாரே. (௭)

பற்றிலா வாழ்க்கை வாழ்ந்து பாழுக்கே நீரிறைத்தேன்
உற்றலாற் கயவர் தேறா ரென்னுங்கட் டுரையோ டொத்தேன்
எற்றுளே னென்செய் கேனா னிடும்பையால் ஞான மேதுங்
கற்றிலேன் களைகண் காணேன் கடவூர்வீ ரட்டனாரே. (௮)

சேலினே ரனைய கண்ணார் திறம்விட்டுச் சிவனுக் கன்பாய்ப்
பாலுநற் றயிர்நெய் யோடு பலபல வாட்டி யென்றும்
மாலினைத் தவிர நின்ற மார்க்கண்டர்க் காக வன்று
காலனை யுதைப்பர் போலுங் கடவூர்வீ ரட்டனாரே. (௯)

முந்துரு விருவ ரோடு மூவரு மாயி னாரும்
இந்திர னோடு தேவ ரிருடிகள் இன்பஞ் செய்ய
வந்திரு பதுகள் தோளா லெடுத்தவன் வலியை வாட்டிக்
கந்திருவங்கள் கேட்டார் கடவூர்வீ ரட்டனாரே. (௧௰)

திருச்சிற்றம்பலம்.

---

யார்த்திட்டான்முடிகள்பத்துமடர்த்துநல்லரிவையஞ்சத்
தேதெதெத்தாயென்னக்கேட்டார்திருப்பயற்றூரனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருமறைக்காடு - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

இந்திரனோடுதேவரிருடிகளேத்துகின்ற
சுந்தரமானாரபோலுந்துதிக்கலாஞ்சோதிபோலுஞ்
சந்திரனோடுகங்கையரவையுஞ்சடையுள்வைத்து
மந்திரமானார்போலுமாமறைக்காடனாரே. (௧)

தேயனநாடராகித்தேவர்கள்தேவர்போலும்
பாயனநாடறுக்கும்பத்தர்கள்பணியவம்மின்
காயனநாடுகண்டங்கதனுளாராகாளகண்டர்
மாயனநாடர்போலுமாமறைக்காடனாரே. (௨)

அறுமையிவ்வுலகுதன்னையாமெனக்கருதிநின்று
வெறுமையின்மனைகள்வாழ்ந்துவினைகளாலநலிவுணாதே
சிறுமதியரவங்கொன்றைதிகழ்தருசடையுள்வைத்து
மறுமையுமிம்மையாவார்மாமறைக்காடனாரே. (௩)

கால்கொடுத்திருகையேற்றிக்கழிநிரைத்திறைச்சிமேய்ந்து
தோல்படுத்துதிரநீராறசுவரெடுத்திரண்டுவாசல
ஏலவுடைத்தாவமைத்தங்கேழுசாலேகம்பண்ணி
மால்கொடுத்தாவிவைத்தார்மாமறைக்காடனாரே. (௪)

விண்ணினார்விண்ணின்மிக்கார்வேதங்கள்விரும்பியோதப்
பண்ணினார்கின்னரங்கள்பத்தர்கள்பாடியாடக்
கண்ணினார்கண்ணினுள்ளேசோதியாய்நின்றவெந்தை
மண்ணினார்வலங்கொண்டேத்துமாமறைக்காடனாரே. (௫)

அங்கையுள்னலுமவைத்தாராறுவகைச்சமயம்வைத்தார்
தங்கையில்வீணைவைத்தார்தம்மடியபரவைத்தார்
திங்களைக்கங்கையோடுதிகழ்தருசடையுள்வைத்தார்
மங்கையைப்பாகம்வைத்தார்மாமறைக்காடனாரே. (௬)

கீதராய்க்கீதங்கேட்டுக்கின்னரந்தன்னைவைத்தார்
வேதராய்வேதமோதிவிளங்கியசோதிவைத்தார்
ஏதராய்நட்டமாடியிட்டமாயக்கங்கையோடு
மாதையோர்பாகம்வைத்தார்மாமறைக்காடனாரே. (௭)

கனத்தினாவலியுடையகடிமதிலரணமூன்றுஞ்
சினத்தினுட்சினமாய்நின்றுதீயெழச்செற்றார்போலுந்
தனத்தினைத்தவிர்ந்துநின்றுதம்மடிபரவுவார்க்கு
மனத்தினுள்மாசுதீர்ப்பார்மாமறைக்காடனாரே. (௮)

தேசனைத்தேசன்றன்னைத்தேவர்கள்போற்றிசைப்பார்
வாசனைசெய்துநின்றுவைகலுமவணங்குமின்கள்
காசினைக்கனலையென்றுங்கருத்தினில்வைத்தவர்க்கு
மாசினைத்தீர்ப்பார்போலுமாமறைக்காடனாரே. (௯)

பிணியுடையாக்கைதன்னைப்பிறப்பறுத்துய்யவேண்டிற்
பணியுடைத்தொழில்கள்பூண்டுபத்தர்கள்பற்றினாலே
துணிவுடையரக்கனோடிச்செடுத்தலுந்தோகையஞ்ச
மணிமுடிபத்திறுத்தார்மாமறைக்காடனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருமறைக்காடு-திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

தேரையுமேல்கடாவித்திண்ணமாத்தெளிந்துநோக்கி
யாரையுமேலுணராவாணவமையானமிக்கான்றன்னைப்
பாரையும்விண்ணுமஞ்சப்பரந்ததோள்முடியடர்த்துக்
காரிகையஞ்சலென்பார்கலிமறைக்காடனாரே. (௧)

முக்கிமுனைவெகுண்டெடுத்தமுடியுடையரக்கர்கோனை
நக்கிருந்தூன்றிச்சென்னிநாண்மதிவைத்தவெந்தை
யக்கரவாமைபூண்டவழகனார்கருத்தினாலே
தெக்குநீர்த்திரைகள்மோதுந்திருமறைக்காடனாரே. (௨)

மிகப்பெருத்துலாவமிக்கானக்கொருதேர்கடாவி
யகப்படுத்தென்றுதானுமாணவமையாலமிக்கரக்கன்
உகைத்தெடுத்தான்மலையையூன்றலுமவனையாங்கே
நகைப்படுத்தருளினானாரனமறைக்காடுதானே. (௩)

அந்தரந்தேர்கடாவியாரிவனென்றுசொல்லி
யுந்தினான்மாமலையையூன்றலுமொள்ளரக்கன்
பந்தமாந்தலைகள்பத்துமவாய்கள்விட்டலறிவீழச்
சிந்தனைசெய்துவிட்டார்திருமறைக்காடனாரே. (௪)

தடுக்கவுந்தாங்கவொண்ணாத்தனிவலியுடையனாகிக்
கடுக்கவோர்தேர்கடாவிக்கையிருபதுகளாலும்
மெடுப்பனானென்னப்பண்டமெனஎடுத்தானையேங்க
அடுக்கவேவல்லனாராமணிமறைக்காடுதானே. (௫)

நாண்முடிக்கின்றசீரானடுங்கியேமீதுபோகான்
கோள்பிடித்தார்த்தகையான்கொடியன்மாவலியனென்று
நீண்முடிச்சடையார்சேருநீள்வரையெடுக்கலுற்றான்
றோண்முடிநெரியவைத்தார்தொன்மறைக்காடனாரே. (௬)

பத்துவாயிரட்டிக்கைகளுடையன்மாவலியனென்று
பொத்திவாய்த்தீமைசெய்தபொருவலியரக்கர்கோனைக்
கத்திவாய்கதறவன்றுகால்விரலூன்றியிட்டார்
முத்துவாய்த்திரைகள்மோதுமுதுமறைக்காடனாரே. (௭)

பக்கமேவிட்டகையான்பாங்கிலாமதியனாகிப்
புக்கனன்மாமலைக்கீழ்ப்போதுமாறறியமாட்டான்
மிக்கமாமதிகள்கெடவீரமுமிழந்தவாறே
நக்கனபூதமெல்லாநான்மறைக்காடனாரே. (௮)

நாணஞ்சுகையனாகிநன்முடிபத்தினோடு
பாணஞ்சுமுன்னிழந்துபாங்கிலாமதியனாகி

நீணஞ்சுதானுணாராகின்றெடுத்தானையன்று
ஏணஞ்சுகைகள்செய்தாரெழின்மறைக்காடனாரே. (௯)

கங்கைநீர்சடையுள்வைக்கக்காண்டலுமங்கையூடத்
தென்கையான்றேரைகடாவிச்சென்றெடுத்தான்மலையை
முன்கையானரம்புவெட்டிமுன்னிருக்கிசைகள்பாட
அங்கைவாளருளினானாரணிமறைக்காடுதானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிடைமருது - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

காடுடைச்சுடலைநீற்றார்கையில்வெண்டலையர்தையல்
பாடுடைப்பூதஞ்சூழப்பரமனார்மருதவைப்பிற்
றோடுடைக்கைதையோடுஞ்சூழிடங்கதனைச்சூழ்ந்த
ஏடுடைக்கமலவேலியிடைமருதிடங்கொண்டாரே. (௧)

முந்தையார்முந்தியுள்ளார்மூவர்க்குமுதல்வரானார்
சந்தியார்சந்தியுள்ளார்தவநெறிதரித்துநின்றார்
சிந்தையார்சிந்தையுள்ளார்சிவநெறியனைத்துமானார்
எந்தையாரெம்பிரானாரிடைமருதிடங்கொண்டாரே. (௨)

காருடைக்கொன்றைமாலைக்கதிர்மணியரவினோடு
நீருடைச்சடையுள்வைத்தநீதியார்நீதியாய
போருடைவிடையொன்றேறவல்லவர்பொன்னிதென்பால்
ஏருடைக்கமலமோங்குமிடைமருதிடங்கொண்டாரே. (௩)

விண்ணினார்விண்ணின்மிக்கார்வேதங்களோங்குமங்கம்
பண்ணினார்பண்ணின்மிக்கபாடலார்பாவநீக்குங்
கண்ணினார்கண்ணின்மிக்கநுதலினார்காமற்காய்ந்த
வெண்ணினாரெண்ணின்மிக்காரிடைமருதிடங்கொண்டாரே. (௪)

வேதங்களோங்குங்கொண்டுவிண்ணவர்பரவியேத்தப்
பூதங்கள்பாடியாடலுடையவன்புனிதனெந்தை
பாதங்கள்பரவிநின்றபத்தர்காட்கங்கண்மேலே
யேதங்கடீர்க்கநின்றாரிடைமருதிடங்கொண்டாரே. (௫)

பொறியரவரையிலார்த்துப்பூதங்கள்பலவுஞ்சூழ
முறிதருவன்னிகொன்றைமுதிர்சடைமுழ்கவைத்து
மறிதருகங்கைதங்கவைத்தவரெத்திசையும்
எறிதருபுனல்கொள்வேலியிடைமருதிடங்கொண்டாரே (௬)

படரொளிசடையினுள்ளார்பாய்புனலரவினோடு
கடரொளிமதியம்வைத்துத்தூவொளிதோன்றுமெந்தை
யடரொளிவிடையொன்றேறவல்லவரன்பாதங்கள்
இடரவைகெடவுநின்றாரிடைமருதிடங்கொண்டாரே. (௭)

கமழ்தருசடையினுள்ளார்கடும்புனலரவினோடுந்
தவழ்தருமதியம்வைத்துத்தன்னடிபலருமேத்த
மழுவதுவலங்கையேந்திமாதொருபாகமாகி
[illegible]பொழில்கள்சூழ்ந்தவிடைமருதிடங்கொண்டாரே. (௮

பொன்றிகழ்கொன்றைமாலைபுதுப்புனல்வன்னிமத்த
மின்றிகழ்சடையில்வைத்துமேதகத்தோன்றுகின்ற
வன்றவரணங்கலாகவனலெரியாகிநின்றார்
இன்றுடனுலகமேத்தவிடைமருதிடங்கொண்டாரே. (௯)

மலையுடன்விரவிநின்றுமதியிலாவரக்கனார்தந்
தலையுடனடர்த்துமீண்டேதலைவனாயருள்கணல்கிச்
சிலையுடைமலையைவாங்கித்திரிபுரமூன்றுமெய்தார்
இலையுடைக்கமலவேலியிடைமருதிடங்கொண்டாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

### திருப்பழனம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

ஆடினாரொருவர்போலுமலர்கமழ்குழலினாளைக்
கூடினாரொருவர்போலுங்குளிர்புனல்வளைந்ததிங்கள்
சூடினாரொருவர்போலுந்தூயநன்மறைகணான்கும்
பாடினாரொருவர்போலும்பழனத்தெம்பரமனாரே. (௧)

போவதோர்நெறியுமானார்புரிசடைப்புனிதனார்நான்
வேவதோர்வினையிற்பட்டுவெம்மைதான்விடவுங்கில்லேன்
கூவல்தானவர்கள்கேளார்குணமிலாவைவர்செய்யும்
பாவமேதீரநின்றார்பழனத்தெம்பரமனாரே (௨)

கண்டராயமுண்டராகிக்கையிலோர்கபாலமேந்தித்
தொண்டர்கள்பாடியாடித்தொழுகழற்பரமனார்தாம்
விண்டவர்புரங்களெய்தவேதியர்வேதநாவர்
பண்டையென்வினைகடீர்ப்பார்பழனத்தெம்பரமனாரே. (௩)

நீரவன்றீயினோடுநிழலவனெழிலதாய
பாரவன்விண்ணின்மிக்கபரமவன்பரமயோகி
யாரவனண்டமிக்கதிசையினோடொளிகளாகிப்
பாரகத்தமுதமானார்பழனத்தெம்பரமனாரே. (௪)

ஊழியாரூழிதோறுமுலகினுக்கொருவராகிப்
பாழியார்பாவந்தீர்க்கும்பராபரபரமதாய
ஆழியானன்னத்தானுமன்றவர்க்களப்பரிய
பாழியார்பரவியேத்தும்பழனத்தெம்பரமனாரே. (௫)

ஆலின்கீழறங்களெல்லாமன்றவர்க்கருளிச்செய்து
நூலின்கீழவர்கட்கெல்லாநுண்பொருளாகிநின்று
காலின்கீழ்க்காலன்றன்னைக்கடுக்கத்தான்பாய்ந்துபின்னும்
பாலின்கீழ்நெய்யுமானார்பழனத்தெம்பரமனாரே. (௬)

ஆதித்தனங்கிசோமனயனொடுமால்புதனும்
போதித்துநின்றுலகிற்போற்றிசைத்தாரிவர்கள்
சோதித்தாரேழுலகுஞ்சோதியுட்சோதியாகிப்
பாதிபெண்ணுருவமானார்பழனத்தெம்பரமனாரே. (௭)

காற்றனாங்காலற்காய்ந்துகாரிருள்போர்த்தவீசர்
தோற்றனார்கடலுணஞ்சைத்தோடுடைக்காதர்சோதி

ஏற்றினாரிளவெண்டிங்களிரும்பொழில்சூழ்ந்தகாயம
பாற்றினார்வினைகளெல்லாம்பழனத்தெம்பரமனாரே. (அ)

கண்ணனும்பிரமனோடுகாண்கிலராகிவந்தே
எண்ணியுந்துதித்துமேத்தவெரியுருவாகிநின்று
வண்ணநன்மலர்கடூவிவாழ்த்துவார்வாழ்த்தியேத்தப்
பண்ணுலாம்பாடல்கேட்டார்பழனத்தெம்பரமனாரே. (கூ)

குடையுடையரக்கன்சென்றுகுளிர்கயிலாயவெற்பி
னிடைமடவரலையஞ்சவெடுத்தலுமிறைவனோக்கி
விடையுடைவிகிர்தன்றானும்விரலினாலூன்றிமீண்டும்
படைகொடையடிகள்போலும்பழனத்தெம்பரமனாரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநெய்த்தானம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

காலனைவீழச்செற்றகழலடியிரண்டும்வந்தென்
மேலவாயிருக்கப்பெற்றேன்மேதகத்தோன்றுகின்ற
கோலநெய்த்தானமென்னுங்குளிர்பொழிற்கோயின்மேய
நீலம்வைத்தனையகண்டனினைக்குமாநினைக்கின்றேனே. (க)

காமனையன்றுகண்ணாற்கனலெரியாகநோக்கித்
தூபமுந்தீபங்காட்டித்தொழுமவர்க்கருள்கள்செய்து
சேமநெய்த்தானமென்னுஞ்செறிபொழிற்கோயின்மேய
வாமனைநினைந்தநெஞ்சம்வாழ்வுற்றநினைந்தவாறே. (உ)

பிறைதருசடையின்மேலேபெய்புனற்கங்கைதன்னை
யுறைதரவைத்தவெங்களுத்தமனூழியாய
நிறைதருபொருள்கள்சூழ்நின்றநெய்த்தானமென்று
குறைதருமடியவர்க்குக்குழகனைக்கூடலாமே. (ந)

வடிதருமழுவொன்றேந்திவார்சடைமதியம்வைத்துப்
பொடிதருமேனிமேலேபுரிதருநூலர்போலு
நெடிதருபொழில்கள்சூழ்நின்றநெய்த்தானமேவி
யடிதருகழல்களார்ப்பவாடுமெம்மண்ணலாரே. (ச)

காடிடமாகநின்றுகனலெரிகையிலேந்திப்
பாடியபூதஞ்சூழப்பண்ணுடன்பலவுஞ்சொல்லி
யாடியகழலர்சீரார்ந்தணெய்த்தானமென்றுங்
கூடியகுழகனாரைக்கூடுமாறறிகிலேனே. (ரு)

வானவர்வணங்கியேத்திவைகலுமலர்கடூவத்
தானவர்க்கருள்கள்செய்யுஞ்சங்கரன்செங்கணேற்றன்
றேனமர்பொழில்கள்சூழத்திகழுநெய்த்தானமேய
கூனிளமதியினானைக்கூடுமாறறிகிலேனே. (சு)

காலதிற்கழல்களார்ப்பக்கனலெரிகையில்வீசி
ஞாலமுங்குழியநின்றுநட்டமதாடுகின்ற
மேலவாமுகடுதோயவிரிசடைதிசைகள்பாய
மாலொருபாகமாகமகிழ்ந்தநெய்த்தானனாரே. (எ)

பாதித்தசடையின்மேலேபாய்புனலதனைவைத்து
அந்திப்போதனலுமாடியடிகளையாறுபுக்கார்
வந்திப்பாரவணங்கிநின்றுவாழ்த்துவாரவாயினுள்ளார்
சிந்திப்பார்சிந்தையுள்ளார்திருந்துநெய்த்தானனாரே (அ)

சோதியாய்ச்சுடருமானார்சுண்ணவெண்சாந்துபூசி
ஓதிவாயுலகமேத்தவுகந்துதாமருள்கள்செய்வார்
ஆதியாயந்தமானார்யாவருமிறைஞ்சியேத்த
நீதியாய்நியமமாகிநின்றநெய்த்தானனாரே (௯)

இலையுடைப்படைகையேந்துமிலங்கையார்மன்னன்றன்னைத்
தலையுடனடர்த்துமீண்டேதானவற்கருள்கள்செய்து
சிலையுடன்கணையைச்சேர்த்துத்திரிபுரமெரியச்செற்ற
நிலையுடையடிகள்போலுநின்றநெய்த்தானனாரே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

ௐ

## திருஐயாறு - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

கங்கையைச்சடையுள்வைத்தார்கதிர்பொறியரவும்வைத்தார்
திங்களைத்திகழவைத்தார்திசைதிசைதொழவும்வைத்தார்
மங்கையைப்பாகம்வைத்தார்மான்மறிமழுவும்வைத்தார்
அங்கையுளனலும்வைத்தாரையனையாறனாரே. (௧)

பொடிதனைப்பூசவைத்தார்பொங்குவெண்ணூலும்வைத்தார்
கடியதோர்நாகம்வைத்தார்காலனைக்காலில்வைத்தார்
வடிவுடைமங்கைதன்னைமார்பிலோர்பாகம்வைத்தார்
அடியிணைதொழவும்வைத்தாரையனையாறனாரே. (௨)

உடைதருகீளும்வைத்தாருலகங்களனைத்தும்வைத்தார்
படைதருமழுவும்வைத்தார்பாய்புலித்தோலும்வைத்தார்
விடைதருகொடியும்வைத்தார்வெண்புரிநூலும்வைத்தார்
அடைதருமருளும்வைத்தாரையனையாறனாரே. (௩)

தொண்டர்கடொழவும்வைத்தார்தூமதிசடையில்வைத்தார்
இண்டையைத்திகழவைத்தாரெமக்கென்றுமின்பம்வைத்தார்
வண்டுசேர்குழலினாளைமருவியோர்பாகம்வைத்தார்
அண்டவானவர்களேத்துமையனையாறனாரே. (௪)

வானவர்வணங்கவைத்தார்வல்வினைமாயவைத்தார்
கானிடைநடமும்வைத்தார்காமனைக்கனலாவைத்தார்
ஆனிடையைந்தும்வைத்தாராட்டுவார்க்கருளும்வைத்தார்
ஆனையினுரிவைவைத்தாரையனையாறனாரே. (௫)

சங்கணிகுழையும்வைத்தார்சாம்பல்மெய்ப்பூசவைத்தார்
வெங்கதிரெரியவைத்தார்விரிபொழிலனைத்தும்வைத்தார்
கங்குலும்பகலும்வைத்தார்கடுவினைகளையவைத்தார்
அங்கமதோதவைத்தாரையனையாறனாரே. (௬)

பத்தர்கட்கருளும்வைத்தார்பாய்விடையேறவைத்தார்
சித்தத்தையொன்றவைத்தார்சிவமதேநினையவைத்தார்

பலவுரைச்சமணரோடேபலபலகாலமெல்லாஞ்
சொலலியசெலவுசெய்தேன்சோர்வறநினைக்கபோது
மல்லிகைமருதஞ்சோலைத்திருவையாறமர்ந்ததேனை
யெல்லியும்பகலுமெல்லாநினைந்தபோதினியவாறே. (௭)

மண்ணுளார்விண்ணுளாரும்வணங்குவார்பாவம்போக
எண்ணிலாவமணரோடேயிசைந்தனையேழைநெஞ்சே
தெண்ணிலாவெறிக்குஞ்சென்னித்திருவையாறமர்ந்ததேனைக்
கண்ணினாற்காணப்பெற்றுக்கருதிநின்றுய்ந்தவாறே. (௮)

குருந்தமதொசித்தமாலுங்குலமலர்மேவினானும்
திருந்தநாடித்திருவடிதிருமுடிகாணமாட்டா
அருந்தவமுனிவர்போற்றத்திருவையாறமர்ந்ததேனைப்
பொருந்திநின்றுன்னுநெஞ்சேபோயவினைமாயுமன்றே (௯)

அறிவிலாவரக்கனோடியருவரையெடுக்கலுற்று
முறுவலித்துமைநடுங்கக்கண்டுமுதல்வனோக்கி
நிறுவிறலழியவிரலாலூன்றிநம்பாயநிலைகுலைய
அறிவினாலருள்களைசெய்தான்திருவையாறமர்ந்ததேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருவையாறு - பண் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

தானலாதுலகமில்லைச்சகமலாதடிமையில்லை
கானலாதாடலில்லைகருதுவார்தங்களுக்கு
வானலாதருளுமில்லைவார்குழன்மங்கையோடும்
ஆனலாதூர்வதில்லையையனையாறனார்க்கே. (௧)

ஆலலாலிருக்கையில்லையருந்தவமுனிவர்க்கன்று
நாலலாநெறிவதில்லைநுண்பொருளாய்ந்துகொண்டு
மாலுநான்முகனுங்கூடிமலரடிவணங்கவேலை
ஆலலாலமுதமில்லையையனையாறனார்க்கே. (௨)

நரிபுரிசுடலைதன்னினடமலால்விறலில்லைச்
சுரிபுரிகுழலியோடுந்துணையலாலிருக்கையில்லைத்
தெரிபுரிசிந்தையார்க்குத்தெளிவலாலருளுமில்லை
யரிபுரிமலர்கொண்டேத்துமையனையாறனார்க்கே. (௩)

தொண்டலாற்றுணையுமில்லைத்தோலலாதுடையுமில்லைக்
கண்டலாதருளுமில்லைக்கலந்தபின்பிரிவதில்லைப்
பண்டைநான்மறைகள்காணாப்பரிசினனென்றென்றெண்ணி
யண்டவானவர்களேத்துமையனையாறனார்க்கே. (௪)

எரியலாலுருவமில்லையேறலாலேறலில்லைக்
கரியலாற்போர்வையில்லைக்காண்டகுசோதியார்க்குப்
பிரிவிலாவமரர்கூடிப்பெருந்தகைப்பிரானென்றேத்தும்
அரியலாற்றேவியில்லையையனையாறனார்க்கே. (௫)

என்பலாற்கலனுமில்லையெருதலாலூர்வதில்லைப்
புன்புலானாறுகாட்டிற்பொடியலாற்சாந்துமில்லைத்

அன்பிலாத்தொண்டர்கூடித்தொழுதழுதாடிப்பாடும்
அன்பலாற்பொருளுமில்லையையனையாறனார்க்கே. (௬)

கீளலாலுடையுமில்லைகிளர்பொறியரவம்பைம்பூண்
டோளலாற்றுணையுமில்லைத்தொத்தலர்கின்றசோதி
வேளலாற்காயப்பட்டவீரருமில்லைமீளா
ஆளலாற்கைம்மாறில்லையையனையாறனார்க்கே. (௭)

சகமலாதடிமையில்லைத்தானலாற்றுணையுமில்லை
நகமெலாந்தேயக்கையானான்மலர்தொழுதுதூவி
முகமெலாங்கண்ணீர்மல்கமுன்பணிந்தேத்துந்தொண்டர்
அகமலாற்கோயிலில்லையையனையாறனார்க்கே. (௮)

உமையலாதுருவமில்லையுலகலாதுடையதில்லை
நமையெலாமுடையராவர்நன்மையேதீமையில்லை
கமையெலாமுடையராகிக்கழலடிபரவுந்தொண்டர்க்
கமைவிலாவருள்கொடுப்பாரையனையாறனார்க்கே. (௯)

மலையலாவிருக்கையில்லைமதித்திடாவரக்கன்றன்னைத்
தலையலானெரித்ததில்லைதடவரைக்கீழடர்த்து
நிலையிலாபுரங்கள்வேவநெருப்பலால்விரித்ததில்லை
யலையினார்பொன்னிமன்னுமையனையாறனார்க்கே (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருச்சோற்றுத்துறை - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

பொய்விராமேனிதன்னைப்பொருளெனக்காலம்போக்கி
மெய்விராமனத்தனல்லேன்வேதியாவேதநாவா
வைவராலலைக்கப்பட்டவாக்கைகொண்டயர்த்துப்போனேன்
செய்வராலுகளுஞ்செம்மைத்திருச்சோற்றுத்துறையனாரே. (௧)

கட்டராய்நின்றுநீங்கள்காலத்தைக்கழிக்கவேண்டா
எட்டவாங்கைகள்வீசியெல்லிநின்றாடுவானை
யட்டமாமலர்களைக்கொண்டேயானஞ்சாட்டவாடிச்
சிட்டராயருள்கள்செய்வார்திருச்சோற்றுத்துறையனாரே (௨)

கல்லினாற்புரமூன்றெய்தகடவுளைக்காதலாலே
யெல்லியும்பகலுமுள்ளேயேகாந்தமாகவேத்தும்
பல்லில்வெண்டலைகையேந்திப்பல்லிலந்திரியுஞ்செல்வர்
சொல்லுநன்பொருளுமாவார்திருச்சோற்றுத்துறையனாரே. (௩)

கறையராய்க்கண்டநெற்றிக்கண்ணராய்ப்பெண்ணோர்பாகம்
பிறையராயினியராகித்தனியராய்ப்பனிவெண்டிங்கட்
பிறையராய்ச்செய்ததெல்லாம்பீடராய்க்கேடில்சோற்றுத்
துறையராய்ப்புகுந்தென்னுள்ளச்சோர்வுகண்டருளினாரே. (௪)

பொந்தையைப்பொருளாவெண்ணிப்பொருக்கெனக்காலம்போனே
னெந்தையேயேகமூர்த்தியென்றுநின்றேத்தமாட்டேன்
பந்தமாய்வீடுமாகிப்பரம்பரமாகிநின்று
சிந்தையுட்டேறல்போலுந்திருச்சோற்றுத்துறையனாரே. (௫)

போத்தினிப்பிறவாவண்ணமபிதற்றுமின்பேதைபங்கன்
பாரத்தனுக்கருள்கள்செய்தபாசுபதன்றிறமே
யாரத்துவநிழிவதொத்தவலைபுனற்கங்கையேற்றுத்
தீர்த்தமாப்போதவிட்டார்திருச்சோற்றுத்துறையனாரே. (௬)

கொந்தார்பூங்குழலினாரைக்கூறியேகாலமபோன
வெந்தையெம்பிரானாய்நின்றவிறைவனையேத்தாதந்தோ
மூந்தாரவல்குலாளையுடன்வைத்தவாதிமூர்த்தி
செந்தாதுபுடைகள்சூழ்ந்ததிருச்சோற்றுத்துறையனாரே. (௭)

அங்கதிரோனவனையண்ணலாக்கருதவேண்டா
வெங்கதிரோன்வழியேபோவதற்கமைந்துகொண்மின்
அங்கதிரோனவனையுடன்வைத்தவாதிமூர்த்தி
செங்கதிரோன்வணங்குந்திருச்சோற்றுத்துறையனாரே. (௮)

ஓதியேகழிக்கின்றீர்களுலகத்தீரொருவனறன்னை
நீதியால்நினையமாட்டீர்நின்மலனெனறுசொல்லீர்
சாதியாநான்முகனுஞ்சக்கரத்தானுங்காணச்
சோதியாயச்சுடரதானார் திருச்சோற்றுத்துறையனாரே. (௯)

மற்றுநீர்மனமவையாதேமறுமையைக்கழிக்கவேண்டிற்
பெற்றதோருபாயந்தன்னாற்பிரானையேபிதற்றுமின்கள்
கற்றுவந்தரக்கன்ஓடிக்கயிலாயமலையெடுக்கச்
செற்றுகந்தருளிச்செய்தார்திருச்சோற்றுத்துறையனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருத்துருத்தி - திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

பொருத்தியகுரம்பைதன்னைப்பொருளெனக்கருதவேண்டாம
இருத்தியெப்போதுநெஞ்சுளிறைவனையேத்துமின்கள்
ஒருத்தியைப்பாகம்வைத்தங்கொருத்தியைச்சடையுள்வைத்த
துருத்தியஞ்சுடரினானைத்தொண்டனேன்கண்டவாறே. (௧)

சவைதனைச்செய்துவாழ்வான்சலத்துளேயழுந்துகின்ற
விவையொருபொருளுமல்லவிறைவனையேத்துமினறே
அவைபுரமூன்றுமெய்துமடியவர்க்கருளிச்செய்த
சுவையினைத்துருத்தியானைத்தொண்டனேன்கண்டவாறே. (௨)

உன்னியெப்போதுநெஞ்சுளொருவனையேத்துமின்றே
கன்னியையொருபாலவைத்துக்கங்கையைச்சடையுள்வைத்துப்
பொன்னியின்நடுவுதன்னுட்பூம்புனல்பொலிந்துதோன்றுந்
துன்னியதுருத்தியானைத்தொண்டனேன்கண்டவாறே. (௩)

ஊன்றலைவலியனாகியுலகத்துளுயிர்கட்கெல்லாந்
தான்றலைப்பட்டுநின்றுசார்கனலகத்துவீழ
வன்றலைத்தேவர்கூடிவானவர்க்கிறைவாவென்னுந்
தோன்றலைத்துருத்தியானைத்தொண்டனேன்கண்டவாறே. (௪)

உடறனைக்கழிக்கலுற்றவுலகத்துளுயிர்கட்கெல்லாம்
இடர்தனைக்கழிக்கவேண்டிலிறைவனையேத்துமின்றே

ஏத்துவாரேத்தநின்றவேகம்பமேவினானை
வாழ்த்துமாறறியமாட்டேன்மாலொடுமயங்கினேனே. (ச)

மையினார்மலர்நெடுங்கண்மங்கையோர்பாகமாகிக்
கையிலோர்கபாலமேந்திக்கடைதொறும்பலிகொள்வார்தாம்
எய்வதோரேனமோட்டியேகம்பமேவினாரைக்
கையினாற்றொழவல்லார்க்குக்கடுவினைகளையலாமே. (ரு)

கருவினைமருவுங்கங்கைதங்கியசடையனெங்கள்
அருவினையகலநல்குமண்ணலையமரர்போற்றுந்
திருவினைத்திருவேகம்பஞ்செப்பிடவுறையவல்ல
உருவினையுருகியாங்கேயுள்ளத்தாலுகக்கின்றேனே. (சா)

கொண்டதோர்கோலமாகிக்கோலக்காவுடையகூத்தன்
உண்டதோர்நஞ்சமாகியுலகெலாமுய்யவுண்டான்
எண்டிசையோருமேத்தநின்றவேகம்பன்றன்னைக்
கண்டுநானடிமைசெய்வான்கருதியேதிரிகின்றேனே. (எ)

படமுடையரவினோடுபனிமதியதனைச்சூடிக்
கடமுடையுரிவைமூடிக்கண்டவரஞ்சவம்ம
இடமுடைக்கச்சிதன்னுளேகம்பமேவினான்றன்
நடமுடையாடல்காணஞாலந்தானுய்ந்தவாறே. (அ)

பொன்றிகழ்கொன்றைமாலைபொருந்தியநெடுந்தண்மார்பர்
நன்றியிற்புகுந்தெனுள்ளமெள்ளவேநவிலநின்று
குன்றியிலடுத்தமேனிக்குவளையங்கண்டரெம்மை
இன்றுயில்போதுகண்டாரினியரேகம்பனாரே. (கூ)

துருத்தியார்பழனத்துள்ளார்தொண்டர்கள்பலருமேத்த
அருத்தியாலன்புசெய்வாரவர்வாக்கருள்கள்செய்தே
எருத்தினையிசையவேறியேகம்பமேவினார்க்கு
வருத்திநின்றடிமைசெய்வார்வல்வினைமாயுமன்றே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருஒற்றியூர் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

வெள்ளத்தைச்சடையுள்வைத்தவேதகீதன்றன்பாதம்
மெள்ளத்தானடையவேண்டின்மெய்தருஞானத்தீயாற்
கள்ளத்தைக்கழியநின்றார்க்காயத்துக்கலந்துநின்று
உள்ளத்துளொளியுமாகுமொற்றியூருடையகோவே. (க)

வசிப்பெனும்வாழ்க்கைவேண்டாவானவரிறைவனின்று
புசிப்பதோர்பொள்ளலாக்கையதனொடும்புணர்வுவேண்டில்
அசிர்ப்பெனுமருந்தவத்தாலான்மாவிடமதாகி
யுசிர்ப்பெனுமுணர்வுமுள்ளாரொற்றியூருடையகோவே. (உ)

தானத்தைச்செய்துவாழ்வான்சலத்துளேயழுந்துகின்றீர்
வானத்தைவணங்கவேண்டில்வம்மின்கள்வல்லீராகின்
ஞானத்தைவிளக்கையேற்றிநாடியுள்விரவவல்லார்க்
[illegible]ர்போலுமொற்றியூருடையகோவே. (உ)

காமத்துள்ழுந்திழுந்தினறு கண்டராலொருபடுறுதே
சாமத்துவேதமாகிநின்றதோர்சயமபுதன்னை
யேமத்துமிடையிராவுமேகாந்தமியம்புவார்க்கு
ஓமத்துளொள்ளியதாகுமொற்றியூருடையகோவே. (ச)

சமையமேலாறுமாகித்தானொருசயம்புவாகி
யிமையவர்பரவியேத்தவினிதினங்கிருந்தவீசன்
கமையினையுடையராகிக்கழலடிபரவுவார்க்கு
உமையொருபாகர்போலுமொற்றியூருடையகோவே. (ரு)

ஒருத்திதன்றலைச்சென்றாளைக்கரந்திட்டானுலகமேத்த
ஒருத்திக்குநல்லனாகிமறுப்படுத்தொளித்துமீண்டே
யொருத்தியைப்பாகம்வைத்தானுணர்வினாலையமுணணி
யொருத்திக்குநல்லனல்லனொற்றியூருடையகோவே. (சா)

பிணமுடையுடலுக்காகப்பித்தராய்த்திரிந்துநீங்கள்
புணர்வெனும்போகம்வேண்டாபோகலாம்பொய்யைநீங்க
நிணமுடைநெஞ்சினுள்ளானினைக்குமானினைக்கின்றாருக்கு
உணவினாடுேடிருப்பர்போலுமொற்றியூருடையகோவே. (எ)

பின்னுவார்சடையான்றன்னைப்பித்தறிலாப்பேதைமார்கள்
துன்னுவார்நரகந்தன்னுட்டொலவினைதீரவேண்டின்
மன்னுவான்மறைகளோதிமனத்தினுள்விளக்கொன்றேற்றி
யுன்னுவாருள்ளத்துள்ளாரொற்றியூருடையகோவே. (அ)

முளகுவார்போகம்வேண்டின்முயறறியரவிடர்கள்வந்தால்
எளகுவாரெள்கிநின்றங்கிதுவொருமாயமென்பார்
பள்குவார்பத்தராகிப்பாடியுமாடிநின்று
உளகுவாருள்ளத்துள்ளாரொற்றியூருடையகோவே. (கூ)

வெறுத்துகப்புலன்களைந்துமவேண்டிற்றுவேண்டுநெஞ்சே
மறுத்துகவாவச்செற்றக்குரோதங்களானமாயப்
பொறுத்துகப்புட்பகத்தேருடையானையடரவூன்றி
யொறுத்துகந்தருள்கள்செய்தாரொற்றியூருடையகோவே. (கo)

திருச்சிற்றம்பலம்.

திருவொற்றியூர் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

ஓமப்பினென்கூடடைவாளாவுள்ளத்தேதோர்கொடுமைவைத்துக்
காமமிலாமுழைபோலக்கருதிற்றேமுகக்கமாட்டேன்
பாமபின்வாய்த்தேரைபோலப்பலபலநினைக்கின்றேனை
யோமபிநீயுய்யக்கொள்ளாயொற்றியூருடையகோவே. (க)

மனமெனுந்தோணிபற்றிமதியெனுங்கோலையூன்றிச்
சினமெனுஞ்சரக்கையேற்றிச்செறிகடலோடும்போது
மதனெனும்பாறைதாக்கிமறியும்போதறியவொண்ணா
துணையுனுமுணர்வைநல்காயொற்றியூருடையகோவே. (உ)

திருச்சிற்றம்பலம்.

## ஸ்ரீகைலாயம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

கனகமாவயிரமுந்துமாமணிக்கயிலைகண்டு
முனகனாயரக்கனோடியெடுத்தலுமுமையாளஞ்ச
அனகனாய்நின்றவீசனூன்றலுமலறிவீழ்ந்தான்
மனகனாயூன்றினானேன்மறித்துநோக்கில்லையன்றே. (௧)

கதித்தவன்கண்சிவந்துகயிலைநன்மலையையோடி
யதிர்த்தவனெடுத்திடலுமரிவைதானஞ்சவீச
னெதித்தவனூன்றியிட்டாநிலையழிந்தலறிவீழ்ந்தான்
மதித்திறையூன்றினானேன்மறித்துநோக்கில்லையன்றே. (௨)

கறுத்தவன்கண்சிவந்துகயிலைநன்மலையைக்கையால்
மறித்தலுமங்கையஞ்சவானவரிறைவனக்கு
நெறித்தொருவிரலாலூன்றநெடுவரைபோலவீழ்ந்தான்
மறித்திறையூன்றினானேன்மறித்துநோக்கில்லையன்றே. (௩)

கடுத்தவன்கண்சிவந்துகயிலைநன்மலையையோடி
யெடுத்தலுமங்கையஞ்சவிறையவனிறையேநக்கு
கொடிப்பளவிரலாலூன்றநோவதுமலறியிட்டான்
மடித்திறையூன்றினானேன்மறித்துநோக்கில்லையன்றே (௪)

கன்றித்தன்கண்சிவந்துகயிலைநன்மலையையோடி
வென்றித்தன்கைத்தலத்தாலெடுத்தக [illegible] வெருவமங்கை
நன்றுத்தானக்குநாதனூன்றலுநகழ்வீழ்ந்தான்
மன்றித்தானூன்றினானேன்மறித்துநோக்கில்லையன்றே (௫)

களித்தவன்கண்சிவந்துகயிலைநன்மலையையோடி
நெளித்தவனெடுத்திடலுநேரிழையஞ்சநோக்கி
வெளித்தவனூன்றியிட்டவெற்பினாலலறிவீழ்ந்தான்
மளித்திறையூன்றினானேன்மறித்துநோக்கில்லையன்றே (௬)

கருத்தனாய்க்கண்சிவந்துகயிலைநன்மலையைக்கையால்
எருத்தனாயெடுத்தவாறேயேந்திழையஞ்சவீசன்
திருத்தனாய்நின்றவன்றிருவிரலூன்றவீழ்ந்தான்
வருத்துவானூன்றினானேன்மறித்துநோக்கில்லையன்றே. (௭)

கடியவன்கண்சிவந்துகயிலைநன்மலையையோடி
வடிவுடைமங்கையஞ்சவெடுத்தலுமருவநோக்கிச
செடிபடத்திருவிரலாலூன்றலுஞ்சிதைந்துவீழ்ந்தான்
வடிவுறவூன்றினானேன்மறித்துநோக்கில்லையன்றே (௮)

கரியத்தான்கண்சிவந்துகயிலைநன்மலையைப்பற்றி
யிரியத்தானெடுத்திடலுமேந்திழையஞ்சவீச
னெரியத்தானூன்றமுன்னநிற்கிலாதலறிவீழ்ந்தான்
மரியத்தானூன்றினானேன்மறித்துநோக்கில்லையன்றே. (௯)

கற்றனன்கயிலைதன்னைக்காண்டலுமரக்கனோடிச்
செற்றவனெடுத்தவாறேசேயிழையஞ்சவீசன

ண்டிறலரக்கனோடிச்சீகயிலாயந்தன்னை
யண்டிறலிலனுமாகியெடுத்தலுமேழையஞ்ச
ண்டிறனெரியவூன்றிமிகக்கடுத்தலறிவீழப்
ண்டிறல்கேட்டுகந்தபரமராபபாடியாரே. (கo)

திருச்சிற்றம்பலம்.

## திருக்குறுக்கை - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

ஆதியிற்பிரமனார்தாமர்ச்சித்தாரடியிணைக்கீழ்
ஓதியவேதநாவருணருமாருணரலுற்றார்
சோதியுட்சுடராய்த்தோன்றிச்சொல்லினையிறந்தார்பல்பூக்
கோதிவண்டறையுஞ்சோலைக்குறுக்கைவீரட்டனாரே. (க)

நீற்றினைநிறையப்பூசிநித்தலுநியமஞ்செய்து
ஆற்றுநீர்பூரித்தாட்டுமந்தணனைக்கொல்வான்
சாற்றுநாளற்றதென்றுதருமராசற்காய்வந்த
கூற்றினைக்குமைப்பர்போலுங்குறுக்கைவீரட்டனாரே. (உ)

தழைத்ததோராத்தியின்கீழ்த்தாபரமணலாற்கூப்பி
யழைத்தங்கேயாவின்பாலைக்கறந்துகொண்டாட்டக்கண்டு
பிழைத்ததன்றாதைதாளைப்பெருங்கொடுமழுவால்வீசக்
குழைத்ததோரமுதமீந்தார்குறுக்கைவீரட்டனாரே. (௩)

சிலந்தியுமானைக்காவிற்றிருநிழற்பந்தர்செய்து
உலந்தவணிறந்தபோதேகோச்செங்கணானுமாகக்
கலந்தநீர்க்காவிரிசூழ்சோணாட்டுச்சோழர்தங்கள்
குலந்தனிற்பிறப்பித்திட்டார்குறுக்கைவீரட்டனாரே. (ச)

ஏறுடனேழடர்த்தானெண்ணாயிரம்பூக்கொண்டு
ஆறுடைச்சடையினானையர்ச்சித்தானடியிணைக்கீழ்
வேறுமோர்பூக்குறையமெய்ம்மலர்க்கண்ணைமீண்டுக்
கூறுமோராழியீந்தார்குறுக்கைவீரட்டனாரே. (ரு)

கல்லினாலெறிந்துகஞ்சிதாமுணுஞ்சாக்கியனார்
நெல்லினார்சோறுணாமைநீள்விசும்பாளவைத்தார்
எல்லியாங்கெரிகையேந்தியெழிற்றிகழ்நட்டமாடிக்
கொல்லியாம்பண்ணுகந்தார்குறுக்கைவீரட்டனாரே. (சா)

காப்பதோர்வில்லுமம்புங்கையதோரிறைச்சிப்பாரந்
தோற்பெருஞ்செருப்புத்தொட்டுத்தூயவாய்க்கலசமாட்டித்
தீப்பெருங்கண்கள்செய்யக்குருதிநீரொழுகத்தன்கண்
கோப்பதும்பற்றிக்கொண்டார்குறுக்கைவீரட்டனாரே. (எ)

நிறைமறைக்காடுதன்னினீண்டெரிதீபந்தன்னைக்
கறைநிறத்தெலிதன்மூக்குச்சுட்டிடக்கனன்றுதூண்ட
நிறைகடன்மண்ணும்விண்ணுநீண்டவானுலகமெல்லாங்
குறைவறக்கொடுப்பர்போலுங்குறுக்கைவீரட்டனாரே. (அ)

அணங்குமைபாகமாகவடக்கியவாதிமூர்த்தி
வணங்குவாரிடர்கடீர்க்குமருந்துநல்லருந்தவத்த

கணம்புல்லர்க்கருள்கள்செய்துகாதலாமடியார்க்கென்றுங்
குணங்களைக்கொடுப்பர்போலுங்குறுக்கைவீரட்டனாரே. (கூ)

எடுத்தனனெழிறகயிலையிலங்கையாமன்னன்றன்னை
யடுதடொருவிரலாலூன்றவலறிப்போயவனும்வீழ்ந்து
விடுத்தனன்கைநரம்பாலவேதகீதங்கள்பாடக்
கொடுத்தனாகொற்றவாளுள்குறுக்கைவீரட்டனாரே. (கo)

திருச்சிற்றம்பலம்.

## திருக்குறுக்கை - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

நெடியமாலபிரமனோடுநீரொனுமபிலயங்கொள்ள
அடியொடுமுடியுங்காணாருருச்சுனறகம்புவிலலும
ஆடியுடைவேடமாகித்தூயமந்திரங்களசொலலிக்
கொடிநெடுந்தோகொடுத்தாரகுறுக்கைவீரட்டனாரே. (க)

ஆத்தமாமயனுமாலுமன்றிமறறொழிந்ததேவா
சோத்தமெம்பெருமானென்றுதொழுதுதோத்திரங்கள்சொல்லித்
தோத்தமாமட்டமிழனசீருடையேழுநாளுங்
கூத்தராய்வீதிபோந்தாரகுறுக்கைவீரட்டனாரே. (உ)

திருச்சிற்றம்பலம்.

## திருக்கோடிகா - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

நெற்றிமேற்கண்ணினானேநீறுமெய்ப்பூசினானே
கற்றைப்புன்சடையினானேகடல்விடமபருகினானே
செற்றவாபுரங்கள்மூனறுஞ்செவவழலசெலுத்தினானே
குற்றமில்குணத்தினானேகோடிகாவுடையகோவே. (க)

உகமழுகொன்றையானேகபாலங்கையேந்தினானே
டிவுடைமங்கைதனனைமாரபிலோபாகத்தானே
யடியிணைபரவநாளுமடியவாககருள்செய்வானே
கொடியணிவிழவதோவாக்கோடிகாவுடையகோவே. (உ)

நீறுமெய்ப்பூசினானேநிழறிகழ்மழுவினானே
யேறுகந்தேறினானேயிருங்கடலமுதொடடானே
யாறுமோரநான்குவேதமறமுறைதகருளினானே
கூறுமோரபெண்ணினானேகோடிகாவுடையகோவே. (ங)

காலனைக்காலாற்செறறன்றருள்புரிகருணையானே
நீலமாகண்டத்தானேநீண்முடியமரர்கோவே
ஞாலமாமபெருமையானேநளிரிளநதிங்கள்சூடுங்
கோலமாசடையினானேகோடிகாவுடையகோவே. (ச)

பூணரவாரத்தானேபுலியுரியரையினானே
காணில்வெண்கோவணமுங்கையிலோர்கபாலமேந்தி
யூணுமூரபிச்சையானேயுமையொருபாகத்தானே
கோணல்வெண்பிறையினானேகோடிகாவுடையகோவே. (ரு)

கேழல்வெண்கொம்புபூண்டகிளரொளிமார்பினானே
யேழையேனேழையேனானென்செய்கேனெந்தைபெம்மான்

மாழையொண்கண்ணினார்கள்வலைதனின்மயங்குகின்றேன்
கூழையேறுடையசெல்வாகோடிகாவுடையகோவே. (௬)

அழலுமிழங்கையானேயரிவையோர்பாகத்தானே
தழலுமிழரவமார்த்துத்தலைதனிற்பலிகொள்வானே
நிழலுமிழ்சோலைசூழநீள்வரிவண்டினங்கள்
குழலுமிழ்கீதம்பாடுங்கோடிகாவுடையகோவே. (௭)

ஏவடுசிலையினானேபுரமவையெரிசெய்தானே
மாவடுவகிர்கொள்கண்ணாள்மலைமகள்பாகத்தானே
ஆவடுதுறையுளானேயைவரால்ஆட்டப்பட்டேன
கோவடுகுற்றந்தீராய்கோடிகாவுடையகோவே. (௮)

ஏற்றநீர்க்கங்கையானேயிருநிலந்தாவினானு
நாற்றமாமலர்மேலேறுநான்முகனிவர்கள்கூடி
யாற்றலாலளக்கலுற்றார்க்கழலுருவாயினானே
கூற்றுக்குங்கூற்றனாவாய்கோடிகாவுடையகோவே (௯)

பழகநானடிமைசெய்வேன்பசுபதீபாவநாச
மழகளியானையின்றோல்மலைமகள்வெருவப்போர்த்த
அழகனேயரக்கன்றிண்டோளருவரைநெரியவூன்றுங்
குழகனேகோலமார்பாகோடிகாவுடையகோவே. (௧௰)

திருச்சிற்றம்பலம்.

---

## திருஆரூர் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

படுகுழிப்பவ்வத்தன்னபண்டியைப்பெய்தவாற்றாற்
கெடுவதிம்மனிதர்வாழ்க்கைகாண்டொறுங்கேதுகின்றேன்
முடுகுவரிருந்துளைவர்மூர்க்கரேயிவர்களோடும்
அடியனேன்வாழமாட்டேனாரூர்மூலட்டனீரே. (௧)

புழுப்பெய்தபண்டிதன்னைப்புறமொருதோலான்மூடி
யொழுக்கறாவொன்பதுவாய்பொற்றுமையொன்றுமில்லைச்
சழக்குடையிதனுளைவர்சங்கடம்பலவுஞ்செய்ய
அழிப்பனாய்வாழமாட்டேனாரூர்மூலட்டனீரே. (௨)

பஞ்சின்மெல்லடியினார்கள்பாங்கராயவர்கணின்று
நெஞ்சினைப்பலவுஞ்செய்துநினைவினையொட்டார
நஞ்சணிமிடற்றினானேநாதனேநம்பனேநான்
அஞ்சினேற்கஞ்சலென்னீராரூர்மூலட்டனீரே. (௩)

கெண்டையந்தடங்கணல்லார்தம்மையேகெழுமவேண்டிக
குண்டராயத்திரிந்தைவர்குலைத்திடக்குழியினாகக்
கண்டுநான்றரிக்ககில்லேன்காத்துக்கொள்கறைசேர்கண்டா
அண்டவானவர்கள்போற்றுமாரூர்மூலட்டனீரே. (௪)

தாழ்குழலின்சொனல்லார்தங்களைத்தஞ்சமென்று
ஏழையேனாகிநாளுமென்செய்கேனெந்தைபெம்மான்
வாழ்வதேலரிதுபோலும்வைகலுமைவர்வந்து
ஆழ்குழிப்படுக்கவாற்றேனாரூர்மூலட்டனீரே. (௫)

மாற்றமொன்றருளகில்லீர்மதியிலேன்விதியிலாமை
சீற்றமுந்தீர்த்தல்செய்யீர்சிக்கெனவுடையராகிக்
கூற்றம்போலைவர்வந்துகுலைத்திட்டுக்கோகுசெய்ய
ஆற்றவுங்கில்லேனாயேனாரூர்மூலட்டனீரே. (௬)

உயிர்நிலையுடம்பேகாலாவுள்ளமேதாழியாகத்
துயரமேயேற்றமாகத்துன்பக்கோலதனைப்பற்றிப்
பயிர்தனைச்சுழியவிட்டுப்பாழ்க்குநீரிறைத்துமிக்க
அயர்வினாலைவர்க்காற்றேனாரூர்மூலட்டனீரே. (௭)

கற்றதேலொன்றுமில்லைக்காரிகையாரோடாடிப்
பெற்றதேல்பெரிதுந்துன்பம்பேதையேன்பிழைப்பினாலே
முற்றிலாவைவர்வந்துமுறைமுறைதுயரஞ்செய்ய
அற்றுநானலந்துபோனேனாரூர்மூலட்டனீரே. (௮)

பத்தனாய்வாழமாட்டேன்பாவியேன்பரவிவந்து
சித்தத்துளைவர்தீயசெய்வினைபலவுஞ்செய்ய
மத்துறுதயிரேபோலமறுகுமென்னுள்ளந்தானும்
அத்தனேயமரர்கோவேயாரூர்மூலட்டனீரே. (௯)

தடக்கைநாலைந்துங்கொண்டுதடவரைதனைப்பற்றி
யெடுத்தவன்பேர்க்கவோடியிரிந்தனபூதமெல்லா
முடித்தலைபத்துந்தோளுமுறிதரவிறையேயூன்றி
யடர்த்தருள்செய்ததென்னேயாரூர்மூலட்டனீரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருஆரூர் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

குழல்வலங்கொண்டசொல்லாள்கோலவேற்கண்ணிதன்னைக்
கழல்வலங்கொண்டுநீங்காக்கணங்களைக்கணங்களார
அழல்வலங்கொண்டகையானருட்கதிரெறிக்குமாரூர்
தொழுவலங்கொண்டல்செய்வான்றோன்றினார்தோன்றினாரே (௧)

நாகத்தைத்தங்கையஞ்சத்தங்கையைமஞ்சையென்று
வேகத்தைத்தவிரநாகம்வேழத்தினுரிவைபோர்த்துப்
பாகத்தினிமிர்தல்செய்யாத்திங்களைமின்னென்றஞ்சி
யாகத்திலிடந்தநாகமடங்குமாரூரனார்க்கே. (௨)

தொழுதகங்குழையமேவித்தோட்டிமையுடையதொண்டர்
அழுதகம்புகுந்துநின்றாரவரவர்போலுமாரூர்
எழிலகம்வெண்முற்றமின்றியுமேகொள்வேலிப்
பொழிலகம்விளங்குதிங்கட்புதுமுகிழ்சூடினாரே. (௩)

நஞ்சிருண்மணிகொள்கண்டர்நகையிருளீமக்கங்குல்
வெஞ்சுடர்விளக்கத்தாடிவிளங்கினார்போலுமூவா
வெஞ்சுடர்முகடுதீண்டிவெள்ளிநாராசமென்ன
அஞ்சுடரணிவெண்டிங்களணியுமாரூரனாரே. (௪)

எந்தளிர்நீர்மைகோலமேனியென்றிமையோரேத்தப்
பைத்தளிர்க்கொம்பரன்னபடர்கொடிபயிலப்பட்டுத்

தஞ்சடைதனொத்தினலூதமமதோாநீர்மையாலும
அநதளிராகமபோலுமவடிவராரூரனுரே. (௫)

வானஃமவிளஙகமல்குமவளங்கெழுமதியஞ்சூடித்
தானகமழிபவநதுதாமபலிதேவாபோலும
ஊனகங்கழநதவோட்டிலுணபதுமொளிகொணஞ்சம
ஆனகமஞ்சுமாடுமடிகளாரூரனுரே. (௬)

அஞ்சணகணையினூயழலுறவன்றுநோக்கி
அஞசணைகுழலினளையமுதமாவணைநதுநக்கு
அஞ்சணையஞ்சுமாடியாடரவாட்டுவார்தாம
அஞ்சணைவேலியாரூராதரிததிடங்கொண்டாரே. (௭)

வணங்கிமுன்னமரரேத்தவல்வினையானதீரப்
பிணஙகுடைச்சடையில்வைததபிறையுடைபபெருமையணணல்
மணங்கமழோதிபாகாமதிலாவட்டத்தாடி
யணங்கொடிமாடவீதியாரூரெமமடிகளாரே. (௮)

நகலிடமபிறாகட்காகநான்மறையோாகடஙகள்
புகலிடமாகிவாழுமபுகலியிலிருவர்கூடி
யிகலிடமாகநீண்டஙகீண்டெழிலழலதாகி
யகலிடம்பரவியேததவடிகளாரூரனுரே. (௯)

ஆயிரநதிங்கள்மொய்ததவலைகடலமுதமவாங்கி
யாயிரமசுராவாழுமணிமதினமூன்றுமவேவ
வாயிரநதோளுமட்டிததாடியவசைவுதிர
வாயிரமடியுமவைததவடிகளாரூரனுரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

## திருப்புகலூர் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

பகைத்திட்டார்புரங்கண்மூன்றுமபறறிநீறுகிவீழப
புகைத்திட்டதேவாகோவேபொறியிலேனுடலநதன்னுள்
அகைததிட்டங்கதனைநாளுமைவாகொண்டாட்டவாடித
திகைததிடடேன்செய்வதென்னேதிருபபுகலூரனீரே. (௧)

மையரிமதாத்தவொண்கண்மாதரார்வலையிற்பட்டுக்
கையெரிசூலமேநதுங்கடவுளைநினையமாட்டேன்
ஐதெரிநதகமிடறநேயடைக்குமபோதாவியாாதான்
செய்வதொன்றறியமாட்டேன்திருபபுகலூரனீரே. (௨)

முபபதுமுபபததாறுமுப்பதுமிடுகுரம்பை
யபபர்போலைவாவநதுவதுதருகிதுவிடென்று
ஒப்பவேநலியலுற்றுலுய்யுமாறறியமாட்டேன்
செபபமேதிகழுமேனித்திருப்புகலூரனீரே. (௩)

பொறியிலாவழுக்கையோமபிபபொய்யினைமெய்யென்றெண்ணி
நெறியலாநெறிகள்சென்றேனீதனேநீதியேதும்
அறிவிலேனமராகோவேயமுதினைமண்ணில்வைக்குஞ்
செறிவிலேன்செய்வதென்னேதிருப்புகலூரனீரே. (௪)

அளியினார்குழலினார்களவர்களுக்கன்பதாகிக்
களியினார்பாடலோவாக்கடவூர்வீரட்டமென்னுந்
தளியினார்பாதநாளுநினைவிலாத்தகவினெஞ்சந்
தெளிவிலேன்செய்வதென்னே திருப்புகலூரனீரே. (௫)

இலவினார்மாதர்பாலேயிசைந்துநானிருந்துபின்னும்
நிலவுநாள்பலவென்றெண்ணிநீதனேநெறியுன்னை
யுலவினாருள்கமாட்டேனுன்னடிபரவுஞானஞ்
செலவிலேன்செய்வதென்னே திருப்புகலூரனீரே. (௬)

காதிலேனிரண்டுமூன்றுங்கல்வியேயில்லையென்பால்
வாய்திலேனடிமைதன்னுள்வாய்மையாறறியேனல்லேன்
பார்த்தனுக்கருள்கள்செய்தபரமனைப்பரவுவார்கள்
தீர்த்தமேதிகழும்பொய்கைத்திருப்புகலூரனீரே. (௭)

நீருமாய்த்தீயுமாகிநிலனுமாய்விசும்புமாகி
யேருடைக்கதிர்களாகியிமையவரிறைஞ்சநின்றார்
ஆவதறகரியராகியங்கங்கேயாடுகின்ற
தேவர்க்குத்தேவராவார்திருப்புகலூரனாரே. (௮)

மெய்யுளேவிளக்கையேற்றிவேண்டளவுயரத்தூண்டி
யுய்வதோருபாயம்பற்றியுகக்கின்றேனுகவாவண்ணம்
மைவரையகத்தேவைத்திரவர்களைவலியார்சாலச்
செய்வதொன்றறியமாட்டேன்திருப்புகலூரனீரே (௯)

அருவரைதாங்கினானுமருமறையாதியானு
மிருவருமறியமாட்டாவீசனாரிலங்கைவேந்தன்
கருவரையெடுத்தஞான்றுகண்வழிகுருதிசோரத்
திருவிரலசிறிதுவைத்தார்திருப்புகலூரனாரே (௰)

திருச்சிற்றம்பலம்.

---

55

## திருவலம்புரம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

தெண்டிரையோங்கியோதஞ்சென்றடிவீழுங்காலைத்
தொண்டிரைத்தண்டர்கோனைத்தொழுதடிவணங்கியெங்கும்
வண்டுகண்மதுக்கண்மாந்துவலம்புரத்தடிகடம்மைக்
கொண்டுநற்கீதம்பாடக்குழகர்தாமிருந்தவாறே. (௧)

மடுக்களில்வாளைபாயவண்டினமிரிந்தபொய்கைப்
பிடிக்களிறென்னத்தம்மிற்பிணைபயின்றணைவரால்கள்
தொடுத்தநன்மாலையேந்தித்தொண்டர்கள்பரவியேத்த
வடித்தடங்கண்ணிபாகர்வலம்புரத்திருந்தவாறே. (௨)

தேனுடைமலர்கள்கொண்டுதிருந்தடிபொருந்தச்சாத்தி
ஆனிடையஞ்சுங்கொண்டேயன்பினாலமரவாட்டி
வானிடைமதியஞ்சூடும்வலம்புரத்தடிகடம்மை
நானடைந்தேத்தப்பெற்றுநல்வினைப்பயனுற்றேனே. (௩)

முளையெயிற்றிளநல்லேனம்பூண்டுமொய்சடைகடாழ
வளையெயிற்றிளையநாகம்வலித்தரையிசையவீக்கிப

புளைகயப்போர்வைபோர்த்துப்புனலொடுமதியஞ்சூடி
வளைபயிலிளையரேத்துமவலம்புரத்தடிகடாமே. (ச)

சுருளுறுவரையின்மேலாதுளங்கிளம்பளிங்குசிந்த
இருளுறுகதிர்நுழைந்தவிளங்கதிர்ப்பசலைதிங்கள்
அருளுறுமடியரெல்லாமங்கையின்மலர்களேந்த
மருளுறுகீதங்கேட்டாரவலம்புரத்தடிகளாரே. (௫)

நினைக்கின்றேனெஞ்சுதன்னுணீண்டபுன்சடையினனே
யனைத்துடன்கொண்டுவந்தங்கன்பினாலமையவாட்டிப்
புனைக்கின்றேன்பொய்மமைதன்னைமெய்மையைப்புணரமாட்டே
னினக்குநான்செய்வதென்னேயினிவலம்புரவனீரே. (சு)

செங்கயலசேல்கள்பாய்ந்தேமபழமினியநாடித்
தங்கயத்துறந்துபோந்துதடம்பொய்கையடைந்துநின்று
கொங்கையார்குடையுங்காலைக்கொழுங்கனியழுங்கினாம
மங்கலமனையின்மிக்காரவலம்புரத்தடிகளாரே. (எ)

அருகெலாங்குவளைசெந்நெலகவிலையாமப்னெய்தல
தெருவெலாந்தெங்குமாவும்பழமவிழுமபடப்பையெல்லாம
குருகினங்கூடியாங்கேகும்மலித்திறகுலாத்தி
மருவலாமிடங்கள்காட்டுமவலம்புரத்தடிகளாரே. (அ)

கருவரையனையமேனிக்கடல்வண்ணனவனுங்காணான்
திருவரையனையபூமேற்றிசைமுகனவனுங்காணன
ஒருவரையுச்சியேறியோங்கினரோங்கிவந்து
அருமையிலெளிமையானாரவாவலம்புரவனாரே. (௯)

வாளெயிறிலங்கநக்கு வளர்கயிலாயந்தனனை
யாள்வலிகருதிச்சென்றவரக்கனைவரைக்கீழன்று
தோளொடுபத்துவாயுந்தொலைந்துடனழுந்தவூன்றி
யாண்மையுமவலியுந்தீர்ப்பாரவாவலம்புரவனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருஆவடுதுறை - திருநேரிசை

திருச்சிற்றம்பலம்.

மாயிருஞாலமெல்லாமலரடிவணங்கும்போலும்
பாயிருங்கங்கையாளைப்படர்சடைவைப்பார்போலுங்
காயிருமபொழிலகள்சூழ்ந்தகழுமலவூராக்கம்பொன்
ஆயிரங்கொடுப்பார்போலுமாவடுதுறையனாரே. (௧)

மடந்தைபாகத்தர்போலுமான்மறிக்கையார்போலுங்
குடந்தையிற்குழகர்போலுங்கொல்புலித்தோலர்போலுங்
கடைந்தநஞ்சுண்பார்போலுங்காலனைக்காய்வார்போலும்
அடைந்தவர்க்கன்பர்போலுமாவடுதுறையனாரே. (௨)

உற்றநோய்தீர்ப்பர்போலுமுறுதுணையாவார்போலுஞ்
செற்றவர்புரங்கண்மூன்றுந்தீயெழச்செறுவர்போலுங்
கற்றவர்பரவியேத்திக்கலந்துலந்தலந்துபாடும்
அற்றவர்க்கன்பர்போலுமாவடுதுறையனாரே. (௩)

மழுவமாகையாபோலுமாதவள்பாகர்போலும
எழுநுனேவேலாபோலுமென்புகொண்டணிவர்போலுந்
தொழுதெழுதாடிப்பாடித்தோத்திரமபலவுஞ்சொல்லி
யழுமவாககனபாபோலுமாவடுதுறையனுரே. (௪)

பொடியணிமெய்யாபோலுமபொஙகுவெண்ணூலர்போலுங்
கடியதோாவிடையாபோலுங்காமனைக்காய்வாபோலும
வெடிபடுதலையாபோலுமவேட்கையாறபரவுநதொண்டர்
அடிமையயளபபாபோலுமாவடுதுறையனுரே. (௫)

வக்கரனுயிரைவவவக்கண்மலர்கொண்டுபோற்றச்
சக்கரஙகொடுப்பர்போலுநதானவாதலைவாபோலுந்
துக்கமாமூடாதமமைததுயரிலேவீழ்ப்பாபோலும்
அககரையாாபபாபோலுமாவடுதுறையனுரே. (௬)

விடைதருகொடியர்போலும்வெண்புரிநூலாபோலும்
படைதருமழுவாபோலுமபாய்புலித்தோலாபோலும்
உடைதருகீளாபோலுமுலகமுமாவாபோலும்
அடைபவரிடாகடீாகருமாவடுதுறையனுரே. (௭)

முநதிவானோாகள்வந்துமுறைமையால்வணங்கியேத்த
நநதிமாகாளரென்பாாநடுவுடையாாகணிறபச்
சிநதியாதேயொழிநதாாதிரிபுரமெரிபபாபோலும
அநதிவான்மதியசூடுமாவடுதுறையனுரே. (௮)

பானமரேனமாகிபபாரிடநதிட்டமாலுந
தேனமாநதேமுமலவித்திசைமுகமுடையகோவுந்
தீனரைநதியககறுதததிருவுருவுடையாபோலும
ஆனரையேறறாபோலுமாவடுதுறையனுரே. (௯)

பாாத்தனுக்கருளவாபோலுமபடாசடைமுடியர்போலும்
ஏததுவாரிடாகடீாவினபஙகள்கொடுபபாபோலுங்
கூத்தராய்பபாடியாடிகொடுவலியரக்கன்றன்னை
யார்த்தவாயலறுவிபபாராவடுதுறையனுரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருஆவடுதுறை - திருநேரிசை.

திருசசிறறம்பலம்.

மஞ்சனேமணியுமானுயமரகதத்திரளுமானுய்
நெஞ்சுளேபுகுநதுநின்றுநினைதருநிகழ்வினுனே
துஞசுமபோதாகவநதுதுணையெனக்காகிநின்று
அஞசலென்றருளவேண்டுமாவடுதுறையுளானே. (௧)

நானுகந்துன்னைநாளுநணுகுமாகருதியேயும்
ஊனுகநதோமபுநாயேனுள்ளுறவைவாநின்றூர்
தானுகநதேயுகநததகவிலாத்தொணடனேனுன்
ஆனுகந்தேறுவானேயாவடுதுறையுளானே. (௨)

கட்டமேவினைகளானகாத்திவைநோக்கியாளா
யொட்டவேயொட்டிநாளுமுன்னையுள்வைக்கமாட்டேன்

பட்டவான்றலைகையேந்திப்பலிதிரிந்தூர்கடோறும்
அட்டமாவுருவினானேயாவடுதுறையுளானே. (௩)

பெருமைநன்றுடையதில்லையென்றுநான்பேசமாட்டேன்
ஒருமையாலுனையுள்கியுகந்துவானேறமாட்டேன்
கருமையிட்டாயவூனைக்கட்டமேகழிக்கின்றேனான்
அருமையாநஞ்சமுண்டவாவடுதுறையுளானே (௪)

துட்டனாய்வினையதென்னுஞ்சுழித்தலையகப்பட்டேனைக்
கட்டனையைவர்வந்துகலக்காமைக்காத்துக்கொள்வாய்
மட்டவிழ்கோதைதன்னைமகிழ்ந்தொருபாகம்வைத்து
அட்டமாநாகமாட்டுமாவடுதுறையுளானே. (௫)

காரழற்கண்டமேயாய்கடிமதிற்புரங்கள்மூன்றும்
ஓரழலம்பினாலேயுகைத்துத்தீயெரியமூட்டி
நீரழற்சடையுளானேநினைப்பவர்வினைகடீர்ப்பாய்
ஆரழலேந்தியாடுமாவடுதுறையுளானே. (௬)

செறிவிலேன்சிந்தையுள்ளேசிவனடிதெரியமாட்டேன்
குறியிலேன்குணமொன்றில்லேன்கூறுமாகூறமாட்டேன்
நெறிபடுமதியொன்றில்லேனினையுமாநினையமாட்டேன்
அறிவிலேனயர்த்துப்போனேனாவடுதுறையுளானே. (௭)

கோலமாமங்கைதன்னைக்கொண்டொருகோலமாய
சீலமேயறியமாட்டேன்செய்வினைமூடிநின்று
ஞாலமாமிதனுளென்னைநைவியாவண்ணநல்காய்
ஆலமாநஞ்சமுண்டவாவடுதுறையுளானே (௮)

நெடியவன்மலரினானுநேர்ந்திருபாலுநேடக்
கடியதோருருவமாகக்கனலெரியாகிநின்ற
வடிவினைவண்ணமென்றேயென்றுதாம்பேசலாகா
அடியனேனெஞ்சினுள்ளாராவடுதுறையுளானே (௯)

மலைக்குநேராயரக்கன்சென்றுறமங்கையஞ்சத்
தலைக்குமேற்கைகளாலேதாங்கினான்வலியைமாள
வுலப்பிலாவிரலாலூன்றியொறுத்தவற்கருள்கள்செய்து
அலைத்தவான்கங்கைசூடுமாவடுதுறையுளானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

58

## திருப்பருப்பதம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

கன்றினார்புரங்கள்மூன்றுங்கனலெரியாகச்சீறி
நின்றதோருருவந்தன்னானீர்மையுநிறையுங்கொண்டு
ஒன்றியாங்குமையுந்தாமுமூர்ப்பலிதேர்ந்துபின்னும்
பன்றிப்பின்வேடராகிப்பருப்பதநோக்கினாரே. (௧)

கற்றமாமறைகள்பாடிக்கடைதொறும்பலியுந்தேர்வார்
வற்றலோர்தலைகையேந்திவானவர்வணங்கிவாழ்த்த
முற்றவோர்சடையினீரையேற்றமுக்கண்ணர்தம்மைப்
பற்றினார்க்கருள்கள்செய்துபருப்பதநோக்கினாரே. (௨)

காவிலாமனத்தராகிக்கைதொழுவார்கட்கென்றும்
இரவினின்றெரியதாடியின்னருள்செயயுமெந்தை
மருவிலாபுரங்கண்மூன்றுமாட்டியவகையராகிப்
பரவுவார்க்கருள்களசெய்துபருப்பதநோக்கினரே. (ங)

கட்டிட்டதலைகையேந்திக்கனலெரியாடிச்சீறிச்
சுட்டிட்டநீறுபூசிச்சுடுபிணக்காடராகி
விட்டிட்டவேட்கையாகக்குவேறிருந்தருள்கள்செய்து
பட்டிட்டவுடையராகிப்பருப்பதநோக்கினரே (ச)

கையராய்க்கபாலமேந்திக்காமனைக்கண்ணாற்காய்ந்து
மெய்யராய்மேனிதன்மேல்விளங்குவெண்ணீறுபூசி
யுய்யராயுள்குவார்கட்குவகைகள்பலவுஞ்செய்து
பையராவரையிலார்த்துப்பருப்பதநோக்கினரே. (ரு)

வேடராய்வெய்யராகிவேழத்தினுரிவைபோர்த்து
ஓடராயுலகமெல்லாமுழிதாவருமையுந்தாமுங்
காடராய்க்கனலகையேந்திக்கடியதோர்விடைமேற்கொண்டு
பாடராய்ப்பூதஞ்சூழப்பருப்பதநோக்கினரே. (சா)

மேகம்போன்மிடற்றராகிவேழத்தினுரிவைபோர்த்து
யேகம்பமேவினர்தாமிமையவர்பரவியேத்தக்
காகம்பாகழற்ராகிக்கடியதோர்விடையொன்றேறிப்
பாகம்பெண்ணுருவமானார்பருப்பதநோக்கினரே. (எ)

பேரிடர்பிணிகடீர்க்கும்பிஞ்ஞகனெந்தைபெம்மான்
காருடைக்கண்டராகிக்கபாலமோர்கையிலேந்திச்
சீருடைச்செங்கண்வெள்ளேறேறியசெல்வர்நல்ல
பாரிடம்பாணிசெய்யப்பருப்பதநோக்கினரே. (அ)

அங்கணமாலுடையராயவைவராலாட்டுணாதே
யுங்கண்மாதீரவேணடிலுள்ளத்தாலுள்கியேத்துஞ்
செங்கணமால்பரவியேத்திச்சிவனெனநின்றசெல்வர்
பைங்கண்வெள்ளேறேறிப்பருப்பதநோக்கினரே. (கூ)

அடல்விடையூர்தியாகியரக்கன்றோளடரவூன்றிக்
கடல்விடநஞ்சமுண்டகறையணிகண்டனார்தாஞ்
சுடர்விடுமேனிதன்மேற்சுண்ணவெண்ணீறுபூசிப்
படர்சடைமதியஞ்சேர்த்திப்பருப்பதநோக்கினரே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

திருஅவளிவணல்லூர் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

தோற்றினானெயிறுகவ்வித்தொழிலுடையரக்கன்றன்னைத்
தேற்றுவான்சென்றுசொல்லச்சிக்கெனத்தவிருமென்று
வீற்றினையுடையனாகிவெடுவெடுத்தெழுந்தவன்றன்
ஆற்றலையழிக்கவல்லாரவளிவணல்லூராரே (க)

வெம்பினாரரக்கரெல்லாமிகச்சழக்காயிற்றென்று
செம்பினால்லெடுக்ககோயிற்சிக்கெனச்சிகையமென்ன

நம்பினுரென்றுசொலலிநன்மையான்மிகருநோக்கி
யம்பினுலழியவெய்தாரவளிவணலலூராரே. (உ)

கீழ்ப்படக்கருதலாமோகீர்த்தியையுள்ளதாகிற
ேருட்பெருவலியினுலேதொலைப்பனுன்மலையையென்று
வேட்படவைத்தவாறேவிதிவிதிர்த்தரக்கனவீழ்ந்து
ஆட்படக்கருதிப்புக்காரவளிவணலலூராரே. (ங)

நிலைவலமவல்லனல்லநோமையைநினையமாட்டான்
சிலைவலங்கொண்டசெல்வனசீரியகயிலைதன்னைத்
தலைவலங்கருதிப்புக்குத்தாக்கினுன்றனனையன்று
அலைகுலையாக்கிவைத்தாரவளிவணலலூராரே. (ச)

தவ்வலியொனறணுகித்தனதொருபெருமையாலே
மெய்வ்வலியுடையனென்றுமிகபபெருந்தேரையூர்ந்து
செவ்வலிகூர்விழியாறசிரமத்தாலெடுககுற்றுனை
யவ்வலிதீர்க்கவல்லாரவளிவணலலூராரே. (ரு)

நன்மைதானறியமாட்டானடுவிலாவரக்காகோமான்
வனமையேகருதிச்சென்றுவலிதனைச்செலுத்தலுற்றுக்
கன்மையான்மலையையோடிககருதிததாளெடுததுவாயால
அம்மையோவெனனவைததாரவளிவணலலூராரே. (சா)

கதமபடடபோதுவாரகளபோதுமக்கருத்திணுலே
சிதமபடடின்றநீர்களசிகககெனததவிருமெனறு
மதமபடுமனததருகிவன்மையானமிககுநோக்க
அதமபழத்துருவுசெயதாரவளிவணலலூராரே. (எ)

நாடுமிககுழிதர்கின்றநடுவிலாவரக்காகோனை
யோடுமிககென்றுசொலவியூனறினுனுகிரினுலே
பாடுமிக்குய்வனெனறுபணியநறறிறஙகளகாட்டி
யாடுமிககரவமபூண்டாரவளிவணல்லூராரே. (அ)

ஏனமாயிடநதமாலுமெழிறருமுளரியானும்
ஞானநதானுடையராகிநலமையையறியமாடடார
சேணநதானிலாவரககனசெழுவரையெடுக்கவூன்றி
ஆனநதவருள்கள்செய்தாரவளிவணலலூராரே. (கூ)

ஊக்கினுன்மலையையோடியுணாவிலாவரக்கன்றன்னைத்
தாக்கினுன்விரலினுலேதலைபததுநதகரவூன்றி
நோக்கினுனஞசத்தனனைநோனபிறவூன்றுசொலவி
யாக்கினுரமுதமாகவவளிவணலலூராரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பெருவேளூர் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

மறையணிநாவினானை மறப்பிலார்மனத்துளானைக்
கறையணிகண்டன்றன்னைக்கனலெரியாடினானைப்
பிறையணிசடையினானைப்பெருவேளூர்பேணினானை
நறையணிமலர்கொண்டேத்திநாடொறும்வணங்குவேனே. (க)

நாதனையுலகமெல்லாநம்பிரானெனவுநின்ற
பாதனும்பரமயோகிபலபலதிறத்தினாலும்
பேதனாய்த்தோன்றினானைப்பெருவேளூர்பேணினானை
யோதநாவுடையனாகியுரைக்குமாறுரைக்குற்றேனே. (௨)

குறவிதோண்மணந்தசெல்வக்குமரவேடாதையென்று
நறவிளநறுமென்கூந்தனங்கையோர்பாகத்தானைப்
பிறவியைமாற்றுவானைப்பெருவேளூர்பேணினானை
யுறவினால்வல்லனாகியுணருமாறுணர்த்துவேனே. (௩)

மைஞ்ஞவிலகண்டன்றன்னைவலங்கையின்மழுவொன்றேந்திக்
கைஞ்ஞவின்மானினோடுங்கனலெரியாடினானைப்
பிஞ்ஞகன்றன்னையந்தண்பெருவேளூர்பேணினானைப்
பொய்ஞ்ஞெகிழ்த்தன்னைமாட்டாப்பொறியிலாவறிவினேனே. (௪)

ஓடைசேர்நெற்றியானையுரிவையைமூடினானை
வீடதேகாட்டுவானைவேதநான்காயினானைப்
பேடைசேர்புறவநீங்காப்பெருவேளூர்பேணினானைக்
கூடனான்வல்லமாற்றங்குறுகுமாறறிகிலேனே. (௫)

கச்சைசேர்நாகத்தானைக்கடல்விடங்கண்டத்தானைக்
கச்சியேகம்பன்றன்னைக்கனலெரியாடுவானைப்
பிச்சைசேர்ந்துழல்வினானைப்பெருவேளூர்பேணினானை
யிச்சைசேர்ந்தமரநானுமிறைஞ்சுமாறிறைஞ்சுவேனே. (௬)

சித்தராய்வந்துதன்னைத்திருவடிவணங்குவார்கள்
முத்தனைமூர்த்தியாயமுதல்வனைமுழுதுமாய
பித்தனைப்பிறருமேத்தப்பெருவேளூர்பேணினானை
மெத்தனேயவனைநாளும்விரும்புமாறறிகிலேனே. (௭)

முண்டமேதாங்கினானைமுற்றியஞானத்தானை
வண்டுலாங்கொன்றைமாலைவளர்மதிக்கண்ணியானைப்
பிண்டமேயாயினானைப்பெருவேளூர்பேணினானை
யண்டமாமாதியானையறியுமாறறிகிலேனே. (௮)

விரிவிலாவறிவினார்கள்வேறொருசமயஞ்செய்து
வெரிவினாற்சொன்னாரேனுமெம்பிராற்கேற்றதாகும்
பரிவினாற்பெரியோரேத்தும்பெருவேளூர்பற்றினானை
மருவிநான்வாழ்த்தியுய்யும்வகையதுநினைக்கின்றேனே. (௯)

பொருகடலிலங்கைமன்னனுடல்கெடப்பொருத்திநல்ல
கருகியகண்டத்தானைக்கதிரிளங்கொழுந்துசூடும்
பெருகியசடையினானைப்பெருவேளூர்பேணினானை
யுருகியவடியரேத்துமுள்ளத்தாலுள்குவேனே. (௧௰)

திருச்சிற்றம்பலம்

---

**திருவிராமேச்சுரம் - திருநேரிசை.**

திருச்சிற்றம்பலம்.

பாசமுங்கழிக்ககில்லாவரக்கரைப்படுத்துத்தக்க
வாசமிக்கலர்கள்கொண்டுமதியினான்மால்செய்கோயில்
நேசமிக்கன்பினாலேநினைமினீர்நின்றுநாளுந்
தேசமிக்கானிருந்ததிருவிராமேச்சுரமே. (௧

முற்றினநாள்களென்றுமுடிப்பதேகாரணமா
யுற்றவன்போர்களாலேயுணாவிலாவரக்கர்தம்மைச்
செற்றமால்செய்தகோயிற்றிருவிராமேச்சுரத்தைப்
பற்றிநீபரவுநெஞ்சேபடர்சடையீசன்பாலே. (௨)

கடலிடைமலைகடம்மாலடைத்துமாலகருமமுற்றித்
திடலிடைச்செய்தகோயிற்றிருவிராமேச்சுரத்தைத்
தொடலிடைவைத்துநாவிற்சுழல்கின்றேன்றூய்மையின்றி
யுடலிடைநின்றும்பேராவைவராட்டுண்டுநானே. (௩)

குன்றுபோற்றோளுடையகுணமிலாவரக்கர்தம்மைக்
கொன்றுபோராழியம்மால்வேட்கையாற்செய்தகோயி
னன்றுபோனெஞ்சமேநீநன்மையையறிதியாயிற்
சென்றுநீதொழுதுய்கண்டாய்திருவிராமேச்சுரமே. (௪)

வீரமிக்கெயிறுகாட்டிவிண்ணுறநீண்டரக்கன்
கூரமிக்கவனைச்சென்றுகொன்றுடன்கடற்படுத்துத்
தீரமிக்கானிருந்ததிருவிராமேச்சுரத்தைக்
கோரமிக்கார்தவத்தாற்கூடுவார்குறிப்புளாரே. (௫)

ஆர்வலநம்மின்மிக்காரென்றவவ்வரக்கர்கூடிப்
போர்வலஞ்செய்துமிக்குப்பொருதவர்தம்மைவீட்டித்
தேர்வலஞ்செற்றமால்செய்திருவிராமேச்சுரத்தைச்
சேர்மடநெஞ்சமேநீசெஞ்சடையெந்தைபாலே. (௬)

வாக்கினாலின்புரைத்துவாழ்கிலாதம்மையெல்லாம்
போக்கினாற்புடைத்தவர்களுயிர்தனையுண்டுமாற்றன்
றேக்குநீர்செய்தகோயிற்றிருவிராமேச்சுரத்தை
நோக்கினால்வணங்குவார்க்குநோய்வினைநுணுகுமன்றே. (௭)

பலவுநாடீமைசெய்துபார்தன்மேற்குழுமிவந்து
கொலைவிலார்கொடியராயவரக்கரைக்கொன்றுவீழ்த்த
சிலையினான்செய்தகோயிற்றிருவிராமேச்சுரத்தைத்
தலையினால்வணங்குவார்கடாழ்வாரந்தவமதாமே. (௮)

கோடிமாதவங்கள்செய்துகுன்றினார்தம்மையெல்லாம்
வீடவேசக்கரத்தாலெறிந்துபின்னன்புகொண்டு
தேடிமால்செய்தகோயிற்றிருவிராமேச்சுரத்தை
நாடிவாழ்நெஞ்சமேநீநன்னெறியாகுமன்றே. (௯)

வன்கண்ணர்வாளரக்கர்வாழ்வினையொன்றறியார்
புன்கண்ணராகிநின்றுபோர்கள்செய்தாரைமாட்டிச்
செங்கண்மால்செய்தகோயிற்றிருவிராமேச்சுரத்தைத்
தங்கணாலெய்தவல்லார்தாழ்வராந்தலைவன்பாலே. (௧௦)

வரைகளொத்தேயுயர்ந்தமணிமுடியரக்கர்கோனை
விரையமுற்றறவொடுக்கிமீண்டுமால்செய்தகோயி
றிரைகளமுத்தாலவணங்குந்திருவிராமேச்சுரத்தை
யுரைகள்பத்தாலுரைப்பாருள்குவாரன்பினாலே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருவாலவாய் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

வேதியா வேதகீதா விண்ணவ ரண்ணா வென்றென்
றோதியே மலர்கடூவி யொருங்குநின் கழல்கள் காணப்
பாதியோர் பெண்ணை வைத்தாய் படர்சடை மதியஞ் சூடும்
ஆதியே யாலவாயி லப்பனே யருள்செயாயே. (௧)

நம்பனே நான்முகத்தாய் நாதனே ஞானமூர்த்தி
யென்பொனே யீசா வென்றென் றேத்திநா னேசற் றென்றும்
பின்பினே திரிந்து நாயேன் போத்தினிப் பிறவா வண்ணம்
அன்பனே யாலவாயி லப்பனே யருள்செயாயே. (௨)

ஒருமருந் தாகியுள்ளா யும்பரோ டுலகுக் கெல்லாம்
பெருமருந் தாகிநின்றாய் பேரமுதின் சுவையாய்க்
கருமருந் தாகியுள்ளா யாளுமவ் வல்வினைகள் தீர்க்கும்
அருமருந் தாலவாயி லப்பனே யருள்செயாயே. (௩)

செய்ப்பனி கமலபாதஞ் சேருமா றேவாதேவே
மையணி கண்டத்தானே மான்மறி மழுவொன் றேந்துஞ்
சைவனே சால ஞானங் கற்றறி விலாத நாயேன்
ஐயனே யாலவாயி லப்பனே யருள்செயாயே. (௪)

வெண்டலை கையி லேந்தி மிகவுமூர் பலிகொண் டென்று
முண்டது மில்லை சொல்லி லுண்டது நஞ்சு தன்னைப்
பண்டுனை நினைய மாட்டாப் பளகனே னுளம தார
அண்டனே யாலவாயி லப்பனே யருள்செயாயே. (௫)

எஞ்சலில் புகலி தென்றென் றேத்திநா னேசற் றென்றும்
வஞ்சக மொன்று மின்றி மலரடி காணும் வண்ணம்
நஞ்சினை மிடற்றில் வைத்த நற்பொருட் பதமே நாயேற்
கஞ்சலென் றாலவாயி லப்பனே யருள்செயாயே. (௬)

வழுவிலா துன்னை வாழ்த்தி வழிபடுந் தொண்ட னேனுன்
செழுமலர்ப் பாதங் காணத் தெண்டிரை நஞ்ச முண்ட
குழகனே கோலவில்லீ கூத்தனே மாதோர் பாகா
அழகனே யாலவாயி லப்பனே யருள்செயாயே. (௭)

நறுமலர் நீருங் கொண்டு நாடொறு மேத்தி வாழ்த்திச்
செறிவன சித்தம் வைத்துத் திருவடி சேரும் வண்ணம்
மறிகடல் வண்ணன் பாகா மாமறை யங்க மாறும்
அறிவனே யாலவாயி லப்பனே யருள்செயாயே. (௮)

நலந்திகழ் வாயி னூலாற் சருகிலைப் பந்தர் செய்த
சிலந்தியை யரச தாள வருளினா யென்று திண்ணங்
கலந்துடன் வந்து நின்றாள் கருதிநான் காண்ப தாக
அலந்தனே னாலவாயி லப்பனே யருள்செயாயே. (௯)

பொடிக்கொடு பூசிப் பொல்லாக் குரம்பையிற் புந்தி யொன்றிப்
பிடித்துநின் றாள்க ளென்றும் பிதற்றிநா னிருக்க மாட்டேன்

னெடுப்பனென்றிலங்கைக்கோன்வந்தெடுத்தலு மிருபதுதோள்
அடர்த்தனேயாலவாயிலப்பனேயருள்செயாயே (கo)

திருச்சிற்றம்பலம்

---

## திருவண்ணுமலை - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

ஓதிமாமலர்கடூவியுமையவள்பங்காமிக்க
சோதியேதுளங்குமெண்டோட்சுடர்மழுப்படையினனே
யாதியேயமரர்கோவேயணியண்ணமலையுளானே
நீதியானின்னையலலானினையுமாநினைவிலேனே. (க)

பண்டனேவென்றவின்சொற்பாவையோர்பங்கநீல
கண்டனேகார்கொள்கொன்றைக்கடவுளேகமலபாதா
வண்டனேயமரர்கோவேயணியண்ணமலையுளானே
தொண்டனேனுன்னையலலாற்சொல்லுமாசொலவிலேனே. (உ)

உருவமுமுயிருமாகியோதியவுலகுக்கெல்லாம்
பெருவினைபிறப்புவீடாய்நின்றவெம்பெருமான்மிக்க
அருவிபொன்சொரியுமண்ணாமலையுளாயண்டர்கோவே
மருவிநின்பாதமல்லான்மற்றொருமாடிலேனே (ங)

பைம்பொனேபவளக்குன்றேபரமனேபால்வெண்ணீறு
செம்பொனேமலர்செய்பாதாசீர்தருமணியேமிக்க
வம்பனேகொழித்துவீழுமணியண்ணமலையுளானே
யென்பொனேயுன்னையல்லாலேதுநானினைவிலேனே (ச)

பிறையணிமுடியினானேபிஞ்ஞகாபெண்ணோர்பாகா
மறைவலாவிறைவாவண்டார்கொன்றையாய்வாமதேவா
அறைகழலமரரேத்துமணியண்ணமலையுளானே
யிறைவனேயுன்னையல்லாலியாதுநானினைவிலேனே (ரு)

புரிசடைமுடியின்மேலோர்பொருபுனற்கங்கைவைத்துக்
கரியுரிபோர்வையாகக்கருதியகாலகாலா
அரிகுலமலிந்தவண்ணாமலையுளாயலரின்மிக்க
வரிமிகுவண்டுபண்செய்பாதநானமறப்பிலேனே (சு)

இரவியுமதியுமவிண்ணுமிருநிலம்புனலுங்காறு
முரகமாரபவனமெட்டுந்திசையொளியுருவமானா
யரவுமிழ்மணிகொள்சோதியணியண்ணமலையுளானே
பரவுநின்பாதமல்லாற்பரமநானபற்றிலேனே. (எ)

பார்த்தனுக்கன்றுநல்கிப்பாசுபதத்தையீந்தாய்
நீர்த்ததும்புலாவுகங்கைநெடுமுடிநிலாவவைத்தா
யார்த்துவந்தீண்டுகொண்டலணியண்ணமலையுளானே
தீர்த்தனேநின்றன்பாதத்திறமலாற்றிறமிலேனே. (அ)

பாலுநெய்முதலாமிக்கபசுவிலைந்தாடுவானே
மாலுநான்முகனுங்கூடிக்காண்கிலாவகையுணின்றாய்
ஆலுநீர்கொண்டல்பூகமணியண்ணமலையுளானே
வாலுடைவிடையாயுன்றன்மலரடிமறப்பிலேனே. (க)

இரக்கமொன்றியாதுமில்லாக்காலனைக்கடிந்தவெம்மா
னுரத்தினால்வரையையூக்கவொருவிரனுதியினாலே
யரக்கனைநெரித்தவண்ணாமலையுளாயமரரேறே
சிரத்தினால்வணங்கியேத்தத்திருவடிமறப்பிலேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவீழிமிழலை - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

பூதத்தின்படையர்பாம்பின்பூணினர்பூணநூலர்
சீதத்திற்பொலிந்ததிங்கட்கொழுந்தர்நஞ்சழுந்துகண்டர்
கீதத்திற்பொலிந்தவோசைக்கேள்வியர்வேள்வியாளர்
வேதத்தின்பொருளர்வீழிமிழலையுள்விகிர்தனாரே. (௧)

காலையிற்கதிர்செய்மேனிகங்குலிற்கறுத்தகண்டர்
மாலையின்மதியஞ்சேர்ந்தமகுடத்தர்மதுவும்பாலும்
ஆலையிற்பாகும்போலவண்ணித்திட்டடியார்க்கென்றும்
வேலையினமுதர்வீழிமிழலையுள்விகிர்தனாரே. (௨)

வருந்தனைசெருனவினைமுப்வழங்கினைநாளராறகி
பிருந்நாளொருளகுலவாக்கியமபினரிருவரோடும்
பொருந்தினாயிரிந்துகமபாறபொயயராமவாகட்கென்றும
விருந்தினர்திருந்துவீழிமிழலையுள்விகிர்தனாரே. (௩)

நிலையிலாவூர்மூன்றொன்றநெருப்பரிகாற்றம்பாகச்
சிலையுநாணதுவுநாகங்கொண்டவர்தேவர்தங்க
டலைபிறைபாத்தமாணபதலைமயிர்வடமும்பூண்ட
விலையிலாவேடர்வீழிமிழலையுள்விகிர்தனாரே. (௪)

மறையிடைப்பொருளர்மொட்டினமலர்வழிவாசத்தேனர்
கறவிடைப்பாலினெய்யர்கரும்பினிற்கட்டியாளர்
பிறையிடைப்பாம்புகொன்றைப்பிணையல்சேர்சடையுணீரர்
விறகிடைத்தீயர்வீழிமிழலையுள்விகிர்தனாரே. (௫)

எண்ணகத்திலலையல்லருளரல்லரிமவான்பெற்ற
பெண்ணகத்தரையர்காற்றிற்பெருவலியிருவராகி
மண்ணகத்தைவர்நீரினால்வர்தீயதனில்மூவர்
விண்ணகத்தொருவர்வீழிமிழலையுள்விகிர்தனாரே. (௬)

சந்தணிகொங்கையாளோர்பங்கினர்சாமவேதர்
எந்தையுமெந்தைதந்தைதந்தையுமாயவீசர்
அந்தியோடுதயமந்தணாளராநெய்யால்வேட்கும்
வெந்தழலுருவர்வீழிமிழலையுள்விகிர்தனாரே. (௭)

நீற்றினைநிறையப்பூசிநித்தலாயிரம்பூக்கொண்டு
வேற்றுழியொருநாளொன்றுகுறையக்கண்ணிறையவிட்ட
வாற்றலுக்காழிநல்கியவன்கொணர்ந்திழிச்சுங்கோயில்
வீற்றிருந்தளிப்பர்வீழிமிழலையுள்விகிர்தனாரே. (௮)

சித்திசெய்பவர்கட்கெல்லாஞ்சேர்விடஞ்சென்றுகூடப்
பத்திசெய்பவர்கள்பாவம்பறிப்பவரிறப்பிலாளர்

பாகமாலுடையர்போலும்பருப்பதவில்லர்போலு
நாகநாணுடையர்போலுநாகவீச்சரவனாரே. (௮)

கொக்கரைதாளம்வீணைபாணிசெய்குழகர்போலு
மக்கரையணிவர்போலுமைந்தலையரவர்போலு
வக்கரையமர்வர்போலுமாதரைமையல்செய்யு
நக்கரையுருவர்போலுநாகவீச்சரவனாரே. (௯)

வின்மையாற்புரங்கண்மூன்றும்வெந்தழல்விரித்தார்போலுந்
தன்மையாலமரர்தங்கட்டலைவராகருந்தலைவர்போலும்
வன்மையான்மலையெடுத்தான்வலியினைத்தொலைவித்தாங்கே
நன்மையாலளிப்பர்போலுநாகவீச்சரவனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கொண்டீச்சரம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

வரைகிலேன்புலன்களைந்தும்வரைகிலாப்பிறவிமாயப்
புரையிலேயடங்கிநின்றுபுறப்படும்வழியுங்காணே
னரையிலேமிளிருநாகத்தண்ணலேயஞ்சலென்னாய்
திரையுலாம்பழனவேலித்திருக்கொண்டீச்சரத்துளானே. (௧)

தொண்டனேன்பிறந்துவாளாதொல்வினைக்குழியில்வீழ்ந்து
பிண்டமேசுமந்துநைந்துபேர்வதோர்வழியுங்காணேன்
அண்டனேயண்டவாணாவறிவனேயஞ்சலென்னாய்
தெண்டிரைப்பழனஞ்சூழ்ந்ததிருக்கொண்டீச்சரத்துளானே. (௨)

கால்கொடுத்தெலும்புமூட்டிக்கதிர்நரம்பாக்கையார்த்துத்
தோலுடுத்துதிரமட்டித்தொகுமயிர்மேய்ந்தகூரை
யோலெடுத்துழைஞர்கூடியொளிப்பதற்கஞ்சுகின்றேன்
சேலுடைப்பழனஞ்சூழ்ந்ததிருக்கொண்டீச்சரத்துளானே. (௩)

கூட்டமாயைவர்வந்துகொடுந்தொழிற்குணத்தராகி
யாட்டுவார்க்காற்றகில்லேனாடரவசைத்தகோவே
காட்டிடையரங்கமாகவாடியகடவுளேயோ
சேட்டிரும்பழனவேலித்திருக்கொண்டீச்சரத்துளானே. (௪)

பொக்கமாய்நின்றபொல்லாப்புழுமிடைமுடைகொளாக்கை
தொக்குநின்றைவர்தொண்ணூற்றறுவருந்துயக்கமெய்த
மிக்குநின்றிவர்கள்செய்யும்வேதனைக்கலந்துபோனேன்
செக்கரேதிகழுமேனித்திருக்கொண்டீச்சரத்துளானே. (௫)

ஊனுலாமுடைகொளாக்கையுடையகலமாவதென்றும்
மானுலாமழைக்கணார்தம்வாழ்க்கையைமெய்யென்றெண்ணி
நானெலாமினையகாலநண்ணிலேனெண்ணமில்லேன்
தேனுலாம்பொழில்கள்சூழ்ந்ததிருக்கொண்டீச்சரத்துளானே. (௬)

சாணிருமடங்குநீண்டசழக்குடைப்பதிக்குநாதர்
வாணிகரைவர்தொண்ணூற்றறுவருமயக்கஞ்செய்து
பேணியபதியினின்றுபெயரும்போதறியமாட்டேன்
சேணுயர்மாடநீடுதிருக்கொண்டீச்சரத்துளானே. (௭)

பொய்மறித்தியற்றிவைத்துப்புலால்கமழ்பண்டம்பெய்து
பைமறிகதியறநியன்னபாங்கிலாக்குரம்பைநின்று
கைமறித்தனையவாவிகழியும்போதறியமாட்டேன்
சென்னெறிசெலவுகாணேன்றிருக்கொண்டீச்சுரத்துளானே. (௮)

பாலனாய்க்கழிந்தநாளும்பனிமலர்க்கோதைமார்தம்
மேலனாய்க்கழிந்தநாளுமெலிவொடுமூப்புவந்து
கோலனாய்க்கழிந்தநாளுங்குறிக்கோளிலாதுகெட்டேன்
சேலுலாம்பழனவேலித்திருக்கொண்டீச்சுரத்துளானே. (௯)

விரைதருகருமென்கூந்தல்விளங்கிழைவேலொண்கண்ணாள்
வெருவரவிலங்கைக்கோமான்விலங்கலையெடுத்தஞான்று
பருவரைபனையதோளுமுடிகளும்பாறிவீழத்
திருவிரலூன்றினானேதிருக்கொண்டீச்சுரத்துளானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருவாலங்காடு திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

வெள்ளநீர்ச்சடையார்போலும்விரும்புவார்க்கெளியார்போலு
முள்ளுளேயுருகிநின்றங்குகப்பவர்க்கன்பர்போலுங்
கள்ளமேவினைகளெல்லாங்கரிசறுத்திடுவார்போலு
வள்ளலம்பழனைமேயவாலங்காட்டடிகளாரே. (௧)

செந்தழலுருவார்போலுஞ்சினவிடையுடையார்போலும்
வெந்தவெண்ணீறுகொண்டுமெய்க்கணிந்திடுவார்போலு
மந்தமாம்பொழிற்பழனைமல்கியவள்ளல்போலு
மந்தமிலடிகள்போலுமாலங்காட்டடிகளாரே. (௨)

கண்ணினாற்காமவேளைக்கனலெழவிழித்தார்போலு
மெண்ணிலார்புரங்கண்மூன்றுமெரியுணச்சிரிப்பார்போலும்
பண்ணினார்முழவமோவாப்பைம்பொழிற்பழனைமேய
வண்ணலாரெம்மையாளுமாலங்காட்டடிகளாரே. (௩)

காறிடுவிடத்தையுண்டகண்டரெண்டோளார்போலுந்
தூறிடுசுடலைதன்னிற்சுண்ணவெண்ணீற்றார்போலுங்
கூறிடுமுருவார்போலுங்குளிர்பொழிற்பழனைமேய
வாறிடுசடையார்போலுமாலங்காட்டடிகளாரே. (௪)

பார்த்தனோடமர்பொருதுபத்திமைகாண்பார்போலுங்
கூர்த்தவாயம்புகோத்துக்குணங்களையறிவார்போலும்
பேர்த்துமோராவநாழியம்பொடுங்கொடுப்பார்போலுந்
தீர்த்தமாம்பழனைமேயதிருவாலங்காடனாரே. (௫)

**வீட்டினார்சுடுவெண்ணீறுமெய்க்கணிந்திடுவர்போலுங்**
**காட்டினின்றாடல்பேணுங்கருத்தினையுடையர்போலும்**
**பாட்டினார்முழவமோவாப்பைம்பொழிற்பழனைமேயா**
**ராட்டினாரரவந்தன்னையாலங்காட்டடிகளாரே.** (௬)

**தாளுடைச்செங்கமலத்தடங்கொள்சேவடியர்போலு**
**நாளுடைக்காலன்வீழவுதைசெய்தநம்பர்போலுங்**

கோளுடைப்பிறவிதீர்ப்பார்குளிர்பொழிற்பழனைமேய
வாளுடையண்ணல்போலுமாலங்காட்டடிகளாரே. (எ)

கூடினருமைதன்னோடேகுறிப்புடைவேடங்கொண்டு
சூடினர்கங்கையாளைச்சுவறிடுசடையர்போலும்
பாடினாசாமவேதமபைமபொழிற்பழனைமேயாா
ஆடினாகாளிகாணவாலங்காட்டடிகளாரே. (அ)

வெறமரைச்சமணரோடும்விலையுடைக்கூறைபோர்க்கும்
மொற்றரைச்சொற்களகொள்ளாகுணங்களையுகப்பர்போலும்
பெற்றமேயுகந்தங்கேறும்பெருமையையுடையர்போலும
மறறங்களறிவார்போலுமாலங்காட்டடிகளாரே. (கூ)

மததனுமலையெடுத்தவரக்கனைக்கரத்தோடொலக
வொத்தினாதிருவிரலாலூன்றியிட்டருள்வாபோலும்
பத்தர்தமபாவநீக்குமபைமபொழிற்பழனைமேய
அததனாஙமையாள்வாராலங்காட்டடிகளாரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

## திருக்கோவல்வீரட்டானம் - திருநேரிசை.

திருசசிற்றம்பலம்.

செத்தயேசிதமபநாயேன்செடியனேனழுக்குப்பாயும
பொத்தையேபோறறிநாளும்புகலிடமறியமாட்டே
னெத்தைநான்பற்றிநிற்கேனிருளறநோக்கமாட்டாக்
கொத்தையேன்செய்வதென்னேகோவலவீரட்டனீரே. (க)

தலைசுமநதிருகைநாற்றித்தரணிக்கேபொறையதாகி
நிலையிலாநெஞ்சநதன்னுணித்தலுமைவாவேண்டும
விலைகொடுத்தறுக்கமாட்டேன்வேண்டிற்றேவேண்டியெய்த்தேன்
குலைகொண்மாங்கனிகள்சிநதுங்கோவலவீரட்டனீரே. (உ)

வழித்தலைப்படவுமாட்டேன்வைகலுநதூய்மைசெய்து
பழிததிலேன்பாசமற்றுப்பரமநான்பரவமாட்டேன்
இழித்திலேன்பிறவிதன்னையென்னினைநதிருக்கமாட்டேன்
கொழித்துவநதலைக்குநதெண்ணீர்க்கோவலவீரட்டனீரே. (ந)

சாறறுவரைவர்வந்துசந்தித்தகுடிமைவேண்டிக்
காற்றுவாகனலபபேசிக்கண்செவிமூக்குவாயுள்
ஆற்றுவரலநதுபோனேனுதியையறியவொன்றின்றிக்
கூறறுவாவாயிற்பட்டேனகோவலவீரட்டனாரே. (ச)

தடுத்திலேனைவர்தம்மைத்தத்துவத்துயர்வுநீர்மைப்
படுத்திலேன்பரப்புநோக்கிப்பன்மலர்ப்பாதமுற்ற
வடுத்திலேன்சிந்தையாரவார்வலித்தன்புநிண்ணங்
கொடுத்திலேன்கொடியவாநான்கோவல்வீரட்டனீரே. (ரு)

மாச்செய்தகுரம்பைதன்னைமண்ணிடைமயக்கமெய்து
நாச்செய்தநாளுமைந்துநல்லனவாய்தல்வைத்துக்
காச்செய்தகாயந்தன்னுணித்தலுமைவர்வந்து
கோச்செய்துகுமைக்கவாற்றேன்கோவல்வீரட்டனீரே. (சு)

படைகள்போல்வினைகள்வந்துபற்றியென்பக்கனின்றும்
விடகிலாவாதலாலேவிகிர்தனைவிரும்பியேத்து
மிடையிலேனென்செய்கேனுனிரப்பவாதங்கட்கென்றுங்
கொடையிலேன்கொள்வதேதோநான்கோவலவீரட்டனீரே. (எ)

பிச்சிலேன்பிறவிதன்னைப்பேதையேன்பிணக்கமென்னுந்
துச்சுளேயழுந்திவீழ்ந்துதுயரமேயிடும்பைதன்னுள்
அச்சனாயாதிமூர்த்திக்கன்பனாய்வாழமாட்டாக்
கொச்சையேன்செய்வதென்னேகோவலவீரட்டனீரே. (அ)

நிணத்திடையாக்கைபேணிநியமஞ்செய்திருக்கமாட்டேன்
மணத்திடையாட்டம்பேசிமக்களேசுற்றமென்னுங்
கணத்திடையாட்டப்பட்டுக்காதலாலுன்னைப்பேணுங்
குணத்திடைவாழமாட்டேன்கோவலவீரட்டனீரே (கூ)

விரிகடலிலங்கைக்கோனைவியன்கயிலாயத்தின்கீழ்
இருபதுதோளும்பத்துச்சிரங்களுநெரியவூன்றிப்
பரவியபாடல்கேட்டுப்படைகொடுத்தருளிச்செய்தார்
குரவொடுகோங்குசூழ்ந்தகோவலவீரட்டனீரே (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநனிபள்ளி - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

முற்றுணையாயினானைமூவர்க்குமுதல்வன்றன்னைச்
சொற்றுணையாயினானைச்சோதியையாதரித்து
உற்றுணர்ந்துருகியூறியுள்கசிவுடையவர்க்கு
நற்றுணையாவர்போலுநனிபள்ளியடிகளாரே (க)

புலர்ந்தகால்பூவுநீருங்கொண்டடிபோற்றமாட்டா
வலஞ்செய்துவாயினூலால்வட்டணைப்பந்தர்செய்த
சிலந்தியையரசனாக்கிச்சீர்மைகளருளவல்லார்
நலந்திகழ்சோலைசூழ்ந்தநனிபள்ளியடிகளாரே. (உ)

எண்பதும்பத்துமாறுமென்னுளேயிருந்துமன்னிக்
கண்பழக்கொன்றுமின்றிக்கலக்கநானலக்கழிந்தேன்
செண்பகந்திகழும்புன்னைசெழுந்திரட்குரவம்வேங்கை
நண்புசெய்சோலைசூழ்ந்தநனிபள்ளியடிகளாரே (ங)

பண்ணினார்பாடலாகிப்பழத்தினிலிரதமாகிக்
கண்ணினார்பார்வையாகிக்கருத்தொடுகற்பமாகிப்
பெண்ணினாரெண்ணமாகியேழுலகனைத்துமாகி
நண்ணினார்வினைகடீர்ப்பார்நனிபள்ளியடிகளாரே. (ச)

துஞ்சிருள்காலைமாலைதொடர்ச்சியைமறந்திராதே
யஞ்செழுத்தோதினாளுமரனடிக்கன்பதாகும்
வஞ்சனைப்பாற்சோறாக்கிவழக்கிலாவமணர்தந்த
நஞ்சமுதாக்குவித்தார்நனிபள்ளியடிகளாரே. (ரு)

செம்மலர்க்கமலத்தோனுந்திருமுடிகாணமாட்டா
னம்மலர்ப்பாதங்காண்பானாழியானகழ்ந்துங்காணா

நின்மலனென்றங்கேத்து நினைப்பினையருளினானு
நம்மலமறுப்பர்போலு நனிபள்ளியடிகளாரே. (௬)

அரவத்தால்வரையைச்சுற்றியமரரோடசுரர்கூடி
யரவித்துக்கடையத்தோன்றுமாலநஞ்சமுதாவுண்டார்
விரவித்தம்மடியராகிவீடிலாத்தொண்டர்தம்மை
நரகத்தில்வீழவொட்டார்நனிபள்ளியடிகளாரே. (௭)

மண்ணுளேதிரியும்போதுவருவனபலவுங்குற்றம்
புண்ணுளேபுரைபுரையன்புழுப்பொதிபொள்ளலாக்கை. (௮-௯)

பத்துமோரிரட்டிதோளான்பாரித்துமலையெடுக்கப்
பத்துமோரிரட்டிதோள்கள்படருடம்படரவூன்றிப்
பத்துவாய்க்கீதம்பாடப்பரிந்தவற்கருள்கொடுத்தார்
பத்தர்தாம்பரவியேத்துநனிபள்ளிப்பரமனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாகைக்காரோணம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

மனைவிதாய்தந்தைமக்கள்மற்றுளசுற்றமென்னும்
வினையுளேவிழுந்தழுந்திவேதனைக்கிடமாகாதே
கனையுமாகடல்சூழ்நாகைமன்னுகாரோணத்தானை
நினையுமாவல்லீராகிலுய்யலாநெஞ்சினீரே. (௧)

வையனைவையமுண்டமாலங்கந்தோண்மேற்கொண்ட
செய்யனைச்செய்யபோதிற்றிசைமுகன்சிரமொன்றேந்துங்
கையனைக்கடல்சூழ்நாகைக்காரோணங்கோயில்கொண்ட
ஐயனைநினைந்தநெஞ்சேயம்மநாமுய்ந்தவாறே. (௨)

நிருத்தனைநிமலன்றன்னைநீணிலம்விண்ணின்மிக்க
விருத்தனைவேதவித்தைவிளைபொருண்மூலமான
கருத்தனைக்கடல்சூழ்நாகைக்காரோணங்கோயில்கொண்ட
வொருத்தனையுணர்தலானாமுய்ந்தவாநெஞ்சினீரே. (௩)

மண்டனையிரந்துகொண்டமாயனோடசுரர்வானோர்
தெண்டிரைகடையவந்ததீவிடந்தன்னையுண்ட
கண்டனைக்கடல்சூழ்நாகைக்காரோணங்கோயில்கொண்ட
அண்டனைநினைந்தநெஞ்சேயம்மநாமுய்ந்தவாறே. (௪)

நிறைபுனலணிந்தசென்னிநீணிலாவரவஞ்சூடி
மறையொலிபாடியாடன்மயானத்துமகிழ்ந்தமைந்தன்
கறைமலிகடல்சூழ்நாகைக்காரோணங்கோயில்கொண்ட
விறைவனைநாளுமேத்தவிடும்பைபோயின்பமாமே. (௫)

வெம்பனைக்கருங்கையானைவெருவவன்றுரிவைபோர்த்த
கம்பனைக்காலற்காய்ந்தகாலனைஞாலமேத்தும்
உம்பனையும்பர்கோனைநாகைக்காரோணமேய
செம்பொனைநினைந்தநெஞ்சேதிண்ணநாமுய்ந்தவாறே. (௬)

வெங்கடுங்கானத்தேழைதன்னொடும்வேடனாய்ச்சென்
றங்கமர்மலைந்துபார்த்தற்கடுசரமருளினானை

மஙகைமாரரட்லோவாமன்னுகாரோணத்தானைக்
கங்குலுமபகலுஙகாணபபெற்றுநான்களித்தவாறே. (எ)

தெற்றினாபுரங்கள்மூன்றுந்தீயினிலவிழவோரம்பாற
செறறவெஞ்சிலையாவஞ்சாசிநதையுட்சோவிலாதாா
கற்றவாபயிலுநாகைக்காரோணஙகருதியேததப்
பெற்றவாபிறநதாாமற்றுபபிறநதவாபிறந்திலரே. (அ-௯)

கருமலிகடல்சூழ்நாகைக்காரோணாகமலபாதத
தொருவிரனுதிக்குநிலலாதொண டிறலரக்கனுக்கான்
இருதிறமஙகைமாரோடெமபிரான்செமபொனாகந்
திருவடிதரித்துநிறகததிண்ணநாமுய்நதவாறே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

திருவின்னம்பர் - திருநேரிசை.

திருசசிறறமபலம.

விணணவாமகுடகோடிமிடைநதசேவடியாபோலும்
பெண்ணொருபாகாபோலுமபேடலியாணாபோலும
வண்ணமாலயனுஙகாணுமால்வரையெரியாபோலும்
எண்ணுருவனேகாபோலுமின்னமபரீசனாரே. (௧)

பன்னியமறையாபோலுமபாமபரையுடையர்போலுந
துன்னியசடையாபோலுநதூமதிமததாபோலு
மன்னியமழுவாபோலுமாதிடமகிழ்வாபோலும
எனனையுமுடையர்போலுமின்னமபரீசனாரே. (௨)

மறியொருகையாபோலுமாதுமையுடையாபோலும
பறிதலைபபிறவிநீககிப்பணிகொளவலலாபோலுஞ்
செறிவுடையஙகமாலைசோதிருவுருவாபோலும
எறிபுனறசடையாபோலுமின்னமபரீசனாரே. (௩)

விடமலிகணடாபோலுமவேள்வியையழிபபர்போலுங்
கடவுநலவிடையாபோலுங்காலனைக்காய்வாபோலும்
படமலியரவாபோலுமபாய்புலிததோலாபோலும
இடாகளைநதருள்வாபோலுமின்னமபரீசனாரே. (௪)

அளிமலாககொன்றைதுன்றுமவிர்சடையுடையர்போலுங்
களிமயிற்சாயலோடுங்காமனைவிழிப்பாபோலும்
வெளிவளருருவாபோலும்வெண்பொடியணிவாபோலும்
எளியவரடியாக்கென்றுமின்னமபரீசனாரே. (௫)

கணையமாசிலையாபோலுங்கரியுரியுடையர்போலுந்
துணையமாபெண்ணர்போலுநதூமணிக்குன்றாபோலும்
அணையுடையடியர்கூடியன்பொடுமலர்கவேும்
இணையடியுடையர்போலுமின்னமபரீசனாரே. (௬)

பொருப்பமர்புபத்தர்போலும்புனலணிசடையர்போலு
மருப்பிளவாமைதாங்குமார்பில்வெண்ணூலர்போலும்
உருத்திரமூர்த்திபோலுமுணர்விலார்புரங்கண்மூன்றும்
எரித்திடுஞ்சிலையர்போலுமின்னம்பரீசனாரே. (எ)

*காடிடமுடையார்போலுங்கடிகுரல்விளியார்போலும்*
*வேடுருவுடையார்போலும்வெண்மதிக்கொழுந்தர்போலுங்*
*கோடலர்வன்னித்தும்பைகொக்கிறகலர்ந்தகொன்றை*
*யேடமர்சடையார்போலுமின்னம்பரீசனாரே.* (அ)

*காறிடுவிடத்தையுண்டகண்டரெண்டோளர்போலு*
*நீறுடையுருவர்போலுநினைப்பினையரியர்போலும்*
*பாறுடைத்தலைகையேந்திப்பலிதிரிந்துண்பர்போலும்*
*ஏறுடைக்கொடியர்போலுமின்னம்பரீசனாரே.* (௧௦)

*ஆர்த்தெழுமிலங்கைக்கோனையருவரையடர்ப்பர்போலும்*
*பார்த்தனோடமர்பொருதுபடைகொடுத்தருள்வர்போலும்*
*தீர்த்தமாங்கங்கைதன்னைத்திருச்சடைவைப்பர்போலும்*
*ஏத்தவேழுலகும்வைத்தாரின்னம்பரீசனாரே.* (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருச்சேறை - திருநேரிசை

திருச்சிற்றம்பலம்.

*பெருந்திருவிமவான்பெற்றபெண்கொடிபிரிந்தபின்னை*
*வருந்துவான்றவங்கள்செய்யமாமணம்புணர்ந்துமன்னும்*
*அருந்திருமேனிதன்பாலங்கொருபாகமாகத்*
*திருந்திடவைத்தார்சேறைச்செந்நெறிச்செல்வனாரே.* (௧)

*ஓத்துளவாறுநோக்கியுண்மையையுணராக்குண்டர்*
*வார்த்தையைமெய்யென்றெண்ணிமயக்கில்வீழ்ந்தழுந்துவேனைப்*
*போத்தெனையாளாக்கொண்டுபிறவிவான்பிணிகளெல்லாம்*
*தீர்த்தருள்செய்தார்சேறைச்செந்நெறிச்செல்வனாரே* (௨)

*ஒன்றியதவத்துமன்னியுடையனாயுலப்பில்காலம்*
*நின்றுதன்கழல்களேத்துநீள்சிலைவிசயனுக்கு*
*வென்றிகொள்வேடனாகிவிரும்பிவெங்கானகத்துச்*
*சென்றருள்செய்தார்சேறைச்செந்நெறிச்செல்வனாரே.* (௩)

*அஞ்சையுமடக்கியாற்றலுடையனாயநேககாலம்*
*வஞ்சமில்தவத்துணின்றுமன்னியபகீரதற்கு*
*வெஞ்சினமுகங்களாகிவிசையொடுபாயுங்கங்கை*
*செஞ்சடையேற்றார்சேறைச்செந்நெறிச்செல்வனாரே.* (௪)

*நிறைந்தமாமணலைக்கூப்பிநேசமோடாவின்பாலைக்*
*கறந்துகொண்டாட்டக்கண்டுகறுத்ததன்றாதைதாளை*
*எறிந்தமாணிக்கப்போதேயெழில்கொள்தண்டீசனென்னச்*
*சிறந்தபேறளித்தார்சேறைச்செந்நெறிச்செல்வனாரே.* (௫)

*விரித்தபல்கதிர்கொள்சூலம்வெடிபடுதமருகங்கை*
*தரித்ததோர்கோலகாலபயிரவனாகிவேழம்*
*உரித்துமையஞ்சக்கண்டுமொண்டிருமணிவாய்விள்ளச்*
*சிரித்தருள்செய்தார்சேறைச்செந்நெறிச்செல்வனாரே.* (௬)

***சுற்றுமுன்னிமையோர்நின்றுதொழுதுதூமலர்கடூவி***
***மற்றெமையுய்யக்கொளென்னமன்னுவான்புரங்கண்மூன்றும்***

உற்றொருகோடியின்முன்னமொள்ளழல்வாயின்வீழச்
செற்றருள்செய்தார்சேறைச்செந்நெறிச்செல்வனாரே. (எ)

முந்தியிவ்வுலகமெல்லாம்படைத்தவன் மாலினோடும்
எந்தனிநாதனேயென் றிறைஞ்சிநின்றேத்தலசெய்ய
அந்தமிலசோதிதன்னையடிமுடியறியாவண்ணஞ்
செந்தழலானார்சேறைச்செந்நெறிசசெல்வனாரே. (அ-கூ)

ஒருவருநிகரிலாதவொண்குறலரக்கனோடிப
பெருவரையெடுத்ததிண்டோள்பிறங்கியமுடிகளிற்று
மருவியெமபெருமானென்ன மலரடிமெள்ளவாங்கித
திருவருள்செய்தாரசேறைச்செந்நெறிசசெல்வனாரே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

நெஞ்சம் ஈசனை நினைந்த - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

முத்தினை மணியைப்பொன்னை முழுமுதறபவளமேய்க்குங்
கொத்தினை வயிரமாலைகொழுந்தினை யமராசூடும
வித்தினை வேதவேள்விகேள்வியைவிளங்கநின்ற
அத்தனைநினைந்தநெஞ்சமழகிதாநினைந்தவாறே. (க)

முன்பனையுலகுககெலலாமூர்த்தியைமுனிகளேத்தும்
இன்பனையிலஙகுசோதியிறைவனையரிவையஞ்ச
வன்பனைததடக்கைவேள்க்களிற்றினையுரிததவெங்கள்
அன்பனை நினைந்தநெஞ்சமழகிதாநினைந்தவாறே. (உ)

கருமபினுமினியான்றன்னைக்காய்கதிர்ச்சோதியானை
இருங்கடலமுதந்தன்னையிறபபொடுபிறப்பிலானைப
பெருமபொருட்கிளவியானைபபெருந்தவமுனிவரேத்துமம
அருமபொனைநினைந்தநெஞ்சமழகிதாநினைந்தவாறே. (௩)

செருத்தனையருத்திசெய்துசெஞ்சாஞ்செலுத்தியூர்மேல்
கருத்தனைக்கனகமேனிககடவுளைக்கருதுமவானோர்க்
கொருததனையொருததிபாகபபொருததியுமருத்திதீரா
நிருத்தனைநினைந்தநெஞ்சநேர்படநினைந்தவாறே. (௪)

கூற்றினையுதைத்தபாதக்குழகனைமழலைவெள்ளே
றேற்றனையிமையோரேததவிருஞ்சடைக்கறறைதன்மேல்
ஆற்றனையடியரேத்துமமுதனையமுதயோக
நீற்றனைநினைந்தநெஞ்சநேர்படநினைந்தவாறே. (௫)

கருப்பனைத்தடக்கைவேழக்களிற்றினையுரித்தகண்டன்
விருப்பனைவிளங்குசோதிவியன்கயிலாயமென்னும்
பொருப்பனைபபொருப்பன்மங்கைபங்கனையங்கையேற்ற
நெருப்பனைநினைந்தநெஞ்சநேர்படநினைந்தவாறே. (௬)

நீதியானினைப்புளானைநினைப்பவர்மனத்துளானைச்
சாதியைச்சங்கவெண்ணீற்றண்ணலைவிண்ணில்வானோர்
சோதியைத்துளக்கமில்லாவிளக்கினையளக்கலாகா
ஆதியைநினைந்தநெஞ்சமழகிதாநினைந்தவாறே. (எ)

பழகனையுலகுக்கெல்லாமருப்பனைப்பொருப்போடொக்கும்
மழகளியானையின்றோல்மலைமகணடுங்கப்போர்த்த
குழகனைக்குழவித்திங்களகுளிர்சடைமருவவைத்த
அழகனைநினைந்தநெஞ்சமழகிதாநினைந்தவாறே. (அ)

விண்ணிடைமின்னொப்பானைமெய்ப்பெருமபொருளொப்பானைக்
கண்ணிடைமணியொப்பானைக்கடவிருட்சுடரொப்பானை
எண்ணிடையெண்ணலாகாவிருவரைவெருவநீண்ட
அண்ணலைநினைந்தநெஞ்சமழகிதாநினைந்தவாறே. (கூ)

உரவனைத்திரண்டதிண்டோளரக்கனையூன்றிமூன்றா
நிரவனைநிமிர்ந்தசோதிநீண்முடியமரர்தங்கள்
குரவனைக்குளிர்வெண்டிங்கட்சடையிடைப்பொதியுமைவாய்
அரவனைநினைந்தநெஞ்சமழகிதாநினைந்தவாறே. (கய)

திருச்சிற்றம்பலம்.

---

## தனித் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

தொண்டனேபட்டதென்னேதூயகாவிரியினன்னீர்
கொண்டிருக்கோதியாட்டிக்குங்குமக்குழம்புசாத்தி
இண்டைகொண்டேறநோக்கியீசனையெம்பிரானைக்
கண்டனைக்கண்டிராதேகாலத்தைக்கழித்தவாறே (க)

பின்னிலேமுன்னிலேனுன்பிறப்பறுத்தருள்செய்வானே
என்னிலேனுயிரேனுனிளங்கதிர்ப்பயலைத்திங்கட்
சின்னிலாவெறிக்குஞ்சென்னிச்சிவபுரத்தமரரேறே
நின்னலாலகளைகணாரேநீறுசேரகலத்தானே. (உ)

கள்ளனேன்கள்ளத்தொண்டாய்க்காலத்தைக்கழித்துப்போக்கித்
தெள்ளியேனாகிநின்றுதேடினேனாடிக்கண்டேன்
உள்குவாருள்கிறறெல்லாமுடனிருந்தறிதியென்று
வெள்கினேன்வெள்கினானுமவிலாவிறச்சிரித்திட்டேனே. (ங)

உடம்பெனுமனையகத்துளுள்ளமேதகளியாக
மடம்படுமுணர்நெய்யட்டியுயிரெனுந்திரிமயக்கி
இடம்படுஞானத்தீயாலெரிகொளவிருந்துநோக்கின்
கடம்பமாகாளைதாதைகழலடிகாணலாமே. (ச)

வஞ்சப்பெண்ணரங்குகோயில்வாளெயிற்றரவந்துஞ்சா
வஞ்சப்பெண்ணிருந்தசூழலவான்றவழ்மதியந்தோயும
வஞ்சப்பெண்வாழ்க்கையாளேன்வாழ்வினைவாழலுற்று
வஞ்சப்பெண்ணுறக்கமானேன்வஞ்சனேனென்செய்கேனே. (ரு)

உள்குவாருள்ளத்தானையுணர்வெனும்பெருமையானை
உள்கினேனானுங்காண்பானுருகினேனூறியூறி
எள்கினேனெந்தைபெம்மானிருதலைமின்னுகின்ற
கொள்ளிமேலெறும்பெனுள்ளமெங்ஙனங்கூடுமாறே. (சா)

மோத்தையைக்கண்டகாக்கைபோலவல்வினைகள்மொய்த்துன்
வார்த்தையைபேசலொட்டாமயக்கான்மயங்குகின்றேன்

சித்தத்தையச்சிதம்புதன்னைச்செடிகொணோய்வடிவொன்றில்லா
ஊத்தையைக்கழிக்குமவண்ணமுணராவுதாவுலகமூர்த்தி. (எ)

அங்கத்தைமண்ணுக்காக்கியார்வத்தையுனக்கேதந்து
பங்கத்தைப்போகமாற்றிப்பாவித்தேன்பரமாநின்னைச்
சங்கொத்தமேனிச்செல்வாசாதனாளேனுன்னை
யெங்குற்றாயென்றபோதாவிங்குற்றேனென்கண்டாயே. (அ)

வெள்ளநீர்ச்சடையனார்தாமினவுவார்போலவந்தென்
உள்ளமேபுகுந்துநின்றார்க்குறங்குநான்புடைகள்போந்து
கள்ளரோபுகுந்தீரென்னக்கலந்துதாமாலிக்கின்று
வெள்ளரோமென்றுநின்றார்விளங்கிளம்பிறையனாரே. (கூ)

பெருவிரலிறைதானூன்றப்பிறையெயிறிலங்கவங்காந்
தருவரையனையதோளானரக்கனன்றலறிவீழ்ந்தான்
இருவருமொருவனாயவுருவமங்குடையவள்ளல்
திருவடிசுமந்துகொண்டுகாணக்கானிரியுமாறே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

தனித் - திருநேரிசை

திருச்சிற்றம்பலம்.

மருளவாமனத்தனாகிமயங்கினேன்மதியிலாதேன்
இருளவாவறுக்குமெந்தையிணையடிநீழலென்னும்
அருளவாப்பெறுதலின்றியஞ்சிநானலமந்தேற்குப்
பொருளவாத்தந்தவாறேபோதுபோய்ப்புலர்ந்ததன்றே. (க)

மெய்ம்மையாமுழவைச்செய்துவிருப்பெனும்வித்தைவித்திப்
பொய்ம்மையாங்களையைவாங்கிப்பொறையெனுநீரைப்பாய்ச்சித்
தம்மையுநோக்கிக்கண்டுதகவெனும்வேலியிட்டுச்
செம்மையுணிற்பராகிற்சிவகதிவிளையுமன்றே. (உ)

எம்பிரானென்றதேகொண்டென்னுளேபுகுந்துநின்றிங்
கெம்பிரானாட்டவாடியென்னுளேயுழிதர்வேனை
எம்பிரானென்னைப்பின்னைத்தன்னுளேகரக்குமென்றால்
எம்பிரானென்னில்லல்லாலென்செய்கேனேழையேனே. (ங)

காயமேகோயிலாகக்கடிமனமடிமையாக
வாய்மையேதூய்மையாகமனமணியிலிங்கமாக
நேயமேநெய்யும்பாலாநிறையநீரமையவாட்டிப்
பூசனையீசனார்க்குப்போற்றவிக்காட்டினோமே. (ச)

வஞ்சகப்புலையனேனைவழியறத்தொண்டிற்பூட்டி
அஞ்சலென்றாண்டுகொண்டாயதுவுநின்பெருமையன்றே
நெஞ்சகங்கனியமாட்டேனின்னையுள்வைக்கமாட்டேன்
நஞ்சிடங்கொண்டகண்டாவென்னெனநன்மைதானே. (ரு)

நாயினுங்கடைப்பட்டேனைநன்னெறிகாட்டியாண்டாய்
ஆயிரமரவமார்த்தவமுதனேயமுதமொத்து
நீயுமென்னெஞ்சினுள்ளேநிலாவினாய்நிலாவிநிற்க
நோயவைசாருமாகினோக்கிநீயருள்செய்யாயே. (சு)

விள்ளத்தானென்றுமாட்டேன்விருப்பெனும்வேட்கையாலே
வள்ளத்தேன்போலநுன்னைவாய்மடுத்துண்டிடாமே
உள்ளத்தேநிற்றியேனுமுயிர்ப்புளேவருதியேனுங்
கள்ளத்தேநிற்றியம்மாவெங்ஙனங்காணுமாறே. (எ)

ஆசைவன்பாசமெய்தியங்குற்றேனிங்குற்றேனாய்
ஊசலாட்டுண்டுவாளாவுழந்துநானுழிதராமே
தேசனேதேசமூர்த்திதிருமறைக்காடுமேய
ஈசனேயுன்றன்பாதமேத்துமாறருளெம்மானே. (அ)

நிறைவிலேனேசமில்லேனினைவிலேன்வினையின்பாச
மறைவிலேபுறப்பட்டேறும்வகையெனக்கருளெம்மான்
சிறையிலேன்செய்வதென்னேதிருவடிபரவியேத்தக்
குறைவிலேன்குற்றந்தீராய்கொன்றைசேர்சடையினானே. (கூ)

நடுவிலாக்காலன்வந்துநணுகும்போதறியவொண்ணா
அடுவனவஞ்சுபூதமவைதனக்காற்றலாகேன
படுவனபலவுங்குற்றம்பாங்கிலாமனிதர்வாழ்க்கை
கெடுவதிப்பிறவிசீசீகிளரொளிச்சடையினீரே. (க௦)

திருச்சிற்றம்பலம்.

---

தனித்-திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

கடும்பகனட்டமாடிக்கையிலோர்கபாலமேந்தி
இடும்பலிக்கில்லந்தோறுமுழிதருமிறைவனீரே
நெடும்பொறைமலையர்பாவைநேரிழைநெறிமென்கூந்தற்
கொடுங்குழைபுகுந்தவன்றுங்கோவணமரையதேயோ. (க)

கோவணமுடுத்தவாறுங்கோளரவசைத்தவாறுந்
தீவணச்சாம்பர்பூசித்திருவுருவிருந்தவாறும்
பூவணக்கிழவனாரைப்புலியுரியரையனாரை
ஏவணச்சிலையினாரையாவரேயெழுதுவாரே. (உ)

விளக்கினாற்பெற்றவின்பமெழுக்கினாற்பதிற்றியாகுந்
துளக்கினன்மலர்தொடுத்தாற்றூயவிண்ணேறலாகும்
விளக்கிட்டார்பேறுசொல்லின்மெய்ஞ்ஞெறிஞானமாகும்
அளப்பில்கீதஞ்சொன்னார்க்கடிகடாமருளுமாறே. (ங)

சந்திரற்சடையில்வைத்தசங்கரன்சாமவேதி
அந்தரத்தமரர்பெம்மானானல்வெள்ளூர்தியான்றன்
மந்திரநமச்சிவாயவாகநீறணியப்பெற்றால்
வெந்தறும்வினையுநோயும்வெவ்வழல்விறகிட்டன்றே. (ச)

புள்ளுவரைவர்கள்வர்புனத்திடைப்புகுந்துநின்று
துள்ளுவர்சூறைகொள்வர்தூநெறிவிளையவொட்டார்
முள்ளுடையவர்கடம்மைமுக்கணானடிப்பார்நீழல்
உள்ளிடைமறைந்துநின்றங்குணர்வினாலெய்யலாமே. (ரு)

தொண்டனேன்பிறந்துவாளாத்தொல்வினைக்குழியில்வீழ்ந்து
பிண்டமேசுமந்துநாளும்பெரியதோரவாவிற்பட்டேன்

அண்டனேயமரர்கோவேயறிவனேயஞ்சலென்னாய்
தெண்டிரைக்கங்கைசூடுந்திகழ்தருசடையினானே. (௬)

பாறினாய்ப்பாவிநெஞ்சேபன்றிபோலளற்றிற்பட்டுத்
தேறிநீநினைதியாகிற்சிவகதிதிண்ணமாகும்
ஊறலேயுவாப்புநாறியுதிரமேயொழுகும்வாசல்
கூறையான்மூடக்கண்டுகோலமாகக்கருதினாயே. (௭ - ௮ - ௯)

உய்த்தகாலுதயத்தும்பருமையவணடுக்கந்தீர
வைத்தகாலரக்கன்றன்னைவான்முடிநான்குநான்குந்தான
மொய்த்தகான்முகில்வெண்டிங்கண்மூர்த்தியென்னுச்சிதன்மேல்
வைத்தகால்வருந்துமென்றுவாடிநானொடுங்கினேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

துறைநந்த - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

வென்றிலேன்புலன்களைந்தும்வென்றவர்வளாகந்தன்னுட்
சென்றிலேனதலாலேசெந்நெறியதற்குஞ்சேயேன்
நின்றுளேதுளும்புகின்றேனீசனேனீசனேயோ
இன்றுளேனாளையில்லேனென்செய்வான்றோன்றினேனே. (௧)

கற்றிலேன்கலைகள்ஞானங்கற்றவர்தங்களோடும்
உற்றிலேனதலாலேயுணர்வுக்குச்சேயனானேன்
பெற்றிலேன்பெருந்தடங்கண்பேதைமார்தமக்கும்பொல்லேன்
எற்றுளேனிறைவனேநானென்செய்வான்றோன்றினேனே. (௨)

மாட்டினேன்மனத்தைமுன்னேமறுமையையுணரமாட்டேன்
மூட்டினேன்முன்னைநாளேமுதல்வனைவணங்கமாட்டேன்
பாட்டினாய்போலநின்றுபற்றறாம்பாவந்தன்னை
ஈட்டினேன்களையமாட்டேனென்செய்வான்றோன்றினேனே. (௩)

கரைக்கடந்தோதமேறுங்கடல்விடமுண்டகண்டன்
உரைக்கடந்தோதுநீர்மையுணர்ந்திலேனதலாலே
யரைக்கிடந்தசையுநாகப்பசைப்பனையின்பவாழ்க்கைக்
கிரைக்கிடந்துருகுகின்றேனென்செய்வான்றோன்றினேனே. (௪)

செம்மைவெண்ணீறுபூசுஞ்சிவனவன்றேவதேவன்
வெம்மைநோய்வினைகடீர்க்கும்விகிர்தனுக்காவமெய்தி
அம்மைநின்றடிமைசெய்யாவடிவிலாமுடிவில்வாழ்க்கைக்
கிம்மைநின்றுருகுகின்றேனென்செய்வான்றோன்றினேனே. (௫)

பேசொடுபேசுக்கெல்லாம்பிறர்தமைப்புறமேபேசக்
கூச்சிலேனதலாலேகொடுமையைவிடுமாறோரேன்
நாசசொல்லினுளுமோர்த்துநன்மையையுணரமாட்டேன்
ஏசுளேநின்றுமெய்யேயென்செய்வான்றோன்றினேனே. (௬)

தேசனைத்தேசமாகுந்திருமாலோர்பங்கன்றன்னைப்
பூசனைப்புனிதன்றன்னைப்புணருமபுண்டரீகத்தானை
நேசனைநெருப்பன்றன்னைநிவஞ்சகத்தகன்றசெம்மை
ஈசனையறியமாட்டேனென்செய்வான்றோன்றினேனே. (௭)

## திருக்கழுமலம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

பார்கொண்டுமூடிக்கடல்கொண்டஞான்றுநின்பாதமெல்லாம்
நாலஞ்சுபுள்ளினமேந்தினவென்பர்நளிர்மதியம்
கால்கொண்டவண்கைச்சடைவிரித்தாடுங்கழுமலவர்க்
காளன்றிமற்றுமுண்டோவந்தணாழியகலிடமே. (க)

கடையார்கொடிநெடுமாடங்களெங்குங்கலந்திலங்க
உடையானுடைதலைமாலையுஞ்சூடியுகந்தருளி
விடையானுடையவவ்வேதியன்வாழுங்கழுமலத்துள்
அடைவார்வினைகளவையெனநாடொறுமாடுவரே. (உ)

திரைவாய்ப்பெருங்கடன்முத்தங்குவிப்பமுகந்துகொண்டு
நுரைவாய்நுளைச்சியரோடிக்கழுமலத்துள்ளுந்தும்
விரைவாய்நறுமலர்சூடியவிண்ணவன்றன்னடிக்கே
வரையாப்பரிசிவைநாடொறுநந்தமையாள்வனவே. (௩)

விரிக்குமரும்பதம்வேதங்களோதும்விழுமியநூல்
உரைக்கிலரும்பொருளுள்ளவர்கேட்கிலுலகமுற்றும்
இரிக்கும்பறையொடுபூதங்கள்பாடக்கழுமலவன்
நிருத்தன்பழம்படியாடுங்கழனம்மையாள்வனவே. (௪)

சிந்தித்தெழுமனமேநினையாமுன்கழுமலத்தைப்
பந்தித்தவல்வினைதீர்க்கவல்லானைப்பசுபதியைச்
சந்தித்தகாலமறுத்துமென்றெண்ணியிருந்தவர்க்கு
முந்தித்தொழுகழனாடொறுநந்தமையாள்வனவே. (௫)

நிலையும்பெருமையுநீதியுஞ்சாலவழகுடைத்தாய்
அலையும்பெருவெள்ளத்தன்றுமிதந்தவித்தோணிபுரம்
சிலையிற்றிரிபுரமூன்றெரித்தார்தங்கழுமலவர்
அலருங்கழலடிநாடொறுநந்தமையாள்வனவே. (௬)

முற்றிக்கிடந்துமுந்நீரின்மிதந்துடன்மொய்த்தமரர்
சுற்றிக்கிடந்துதொழப்படுகின்றதுசூழரவத்
தெற்றிக்கிடந்துவெங்கோன்றளந்தூன்றிவெண்டிங்கள்சூடுங்
கற்றைச்சடைமுடியார்க்கிடமாயகழுமலமே. (௭)

உடலுமுயிருமொருவழிச்செல்லுமுலகத்துள்ளே
அடையுமுனைவந்தடைந்தாரமராடியிணைக்கீழ்
நடையுமவிழவொடுநாடொறுமல்குகழுமலத்துள்
விடையோன்றணிபதநாடொறுநந்தமையாள்வனவே. (௮)

பரவைக்கடனஞ்சமுண்டதுமில்லையிப்பார்முழுதும்
கிரவிக்கிடந்துதொழப்படுகின்றதுநீண்டிருவர்
சிரமப்படவந்துசார்ந்தார்கழலடிகாண்பதற்கே
அரவக்கழலடிநாடொறுநந்தமையாள்வனவே. (௯)

கரையார்கடல்சூழிலங்கையர்கோன்றன்முடிசிதறத்
தொலையாமலரடியூன்றலுமுள்ளமவிதிர்விதிர்த்துத்
தலையாய்க்கிடந்தயர்ந்தான்றன்கழுமலங்காண்பதற்கே
அலையாப்பரிசிவைநாடொறுநந்தமையாள்வனவே. (௰)

---

திருச்சிற்றம்பலம்.

## திருக்கழுமலம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

படையார்மழுவொன்றுபற்றியகையன்பதிவினவில்
கடையார்கொடிநெடுமாடங்களோங்குகழுமலமாம்
மடைவாய்க்குருகினம்பாளைவிரிதொறும்வண்டினங்கள் -எ அ-கூ-கo)
பெடைவாய்மதுவுண்டுபேராத்திருக்கும்பெரும்பதியே. (க-உ-ந-ச-ரு-சு

திருச்சிற்றம்பலம்.

---

## ஆருயிர்த் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

எட்டாந்திசைக்குமிருதிசைக்குமிறைவாமுறையென்
றிட்டாரமரர்வெம்பூசலெனக்கேட்டெரிவிழியா
வொட்டாஅரக்கர்திரிபுரமூன்றையுமோரம்பினால்
அட்டானடிநிழற்கீழதன்றோவென்றனாருயிரே. (க)

பேழ்வாயரவினரைக்கசைத்தேற்றிப்பிறங்கிலங்கு
தேய்வாயிளம்பிறைசெஞ்சடைமேல்வைத்ததேவர்பிரான்
மூவானிளகானமுழுவுங்கொடுமண்விண்ணுமற்றும்
ஆவானடிநிழற்கீழதன்றோவென்றனாருயிரே (உ)

தரியாவெகுளியனாய்த்தக்கனவேள்விதகர்த்துகந்த
எரியாரிலங்கியசூலத்தினனிமையாதமுக்கட்
பெரியான்பெரியார்பிறப்பறுப்பானென்றுந்தன்பிறப்பை
அரியானடிநிழற்கீழதன்றோவென்றனாருயிரே. (ந)

வடிவுடைவாணெடுங்கண்ணுமையாளையோர்பான்மகிழ்ந்து
வெடிகொளரவொடுவேங்கையதள்கொண்டுமேன்மருவிப்
பொடிகொளகலத்துப்பொன்பிதிர்ந்தன்னபைங்கொன்றைபந்தார்
அடிகளடிநிழற்கீழதன்றோவென்றனாருயிரே. (ச)

பொறுத்தானமரர்க்கமுதருளிநஞ்சமுண்டுகண்டங்
கறுத்தான்கறுப்பழகாவுடையான்கங்கைசெஞ்சடைமேற்
செறுத்தான்றனஞ்சயன்சேனைகலங்கவொன்றினால்
அறுத்தானடிநிழற்கீழதன்றோவென்றனாருயிரே. (ரு)

காய்ந்தான்செற்றகரியானென்றுங்காலனைக்காலொன்றினால்
பாய்ந்தான்பணைமதின்மூன்றுங்கணையொன்றினுமொள்ளழலால்
மேய்ந்தான்வியனுலகேழும்விளங்கவிழுமியநூல்
ஆய்ந்தானடிநிழற்கீழதன்றோவென்றனாருயிரே. (சு)

உளைந்தான்செறுத்தற்கரியான்றலையையுகிரானதினால்
களைந்தான்றனைநிறையநெடுமால்கண்ணாகுருதி
வளைந்தானொருவிரலினொடுவீழ்வித்துச்சாம்பர்வெண்ணீ
றளைந்தானடிநிழற்கீழதன்றோவென்றனாருயிரே. (எ)

முந்திவட்டத்திடைப்பட்டதெல்லாமுடிவேந்தர்தங்கள்
பந்திவட்டத்திடைப்பட்டலைப்புண்பதற்கஞ்சிக்கொல்லோ
நந்திவட்டந்நறுமாமலர்க்கொன்றையுநக்கசென்னி
அந்திவட்டத்தொடியானடிசேர்ந்ததென்னாருயிரே. (அ)

மிகத்தான்பெரியதோர்வேங்கையதள்கொண்டுமெய்ம்மருவி
அகத்தான்வெருவநல்லாளைநடுக்குறுப்பானவரும்பொன்
முகத்தாற்குளிரத்திருந்தாளத்தினுலகப்பாரிசைந்த
அகத்தானடிக்கீழ்க்கீழ்தனமேறேவென்றனரும்பிமே. (கூ)

மைம்மானரவல்குற்பஞ்சயர்சிறடியாள்வெருவக்
கைம்மாவரிபிலேகாமலையட்டகடவுண்முக்கண்
எம்மானிவ்வனைதிருவருமேத்தவெரிகிமிர்க்க
அம்மானடிக்கீழ்க்கீழ்தன்மேறேவென்றனரும்பிமே (க0)

பழக்கவோருர்தியனைப்பைக்கட்பாரிடம்பாணிசெய்யக்
குழலுழுவொடுமாநடமாடியுயரிலங்கைக்
கிழவனிருபதுதோகாளுவொருவிரலாலிறுக்க
அழகனடிக்கீழ்க்கீழ்தன்மேறேவென்றனரும்பிமே (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருச்சோற்றுத்துறை - திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்.

காலையெழுந்துகடிமலர்தூயனதாங்கொணர்ந்து
மேலையமரர்விரும்புமிடம்விரையான்மலிந்த
சோலைமணங்கமழ்சோற்றுத்துறையுறைவார்சடைமேல்
மாலைமதியமன்றோவெம்பிரானுக்கழகியதே. (க)

வண்டணைகொன்றையும்வன்னியுமத்தமும்வாளரவும்
கொண்டணைசெஞ்சடைமுடியுடையான்குரைசேர்கழற்கே
தொண்டணைந்தாடியச்சோற்றுத்துறையுறைவார்சடைமேல்
வெண்டலைமாலையன்றோவெம்பிரானுக்கழகியதே. (உ)

அளக்குநெறியினனன்பர்கள்தம்மனத்தாய்ந்துகொள்வான்
விளக்குமடியவர்மேல்வினைதீர்த்திடும்விண்ணவர்கோன்
துளக்குநறுமலையணிசோற்றுத்துறையுறைவார்சடைமேல்
திளைக்குமதியமன்றோவெம்பிரானுக்கழகியதே. (ங)

ஆய்ந்தகைவாளரவத்தொடுமால்விடையேறியெங்கும்
போந்தகைமானடமாடுவர்பின்னுசடையிடையே
சேர்ந்தகைமாமலர்துன்னியசோற்றுத்துறையுறைவார்
ஏய்ந்தகைச்சூலமழுவெம்பிரானுக்கழகியதே. (ச)

கூற்றைக்கடந்ததுங்கோளரவார்த்ததுங்கோளுழுவை
நீற்றிற்றுதைந்துதிரியும்பரிசதுநாமறியோம்
ஆற்றிற்கிடந்தங்கலைப்பவலைப்புண்டசைந்ததொக்கும்
சோற்றுத்துறையுறைவார்சடைமேலதோர்தூமதியே. (ரு)

வல்லாடிநின்றுவலிபேசுவார்கோளர்வல்லசுரர்
கொல்லாடிநின்றுகுமைக்கிலும்வானவர்வந்திறைஞ்சச்
சொல்லாடிநின்றுபயில்கின்றசோற்றுத்துறையுறைவார்
வில்லாடிநின்றநிலையெம்பிரானுக்கழகியதே. (சா)

ஆயமுடையதுநாமறியோமரணத்தவரைக்
காயக்கணைசிலைவாங்கியுமெய்துந்துயக்கறுத்தான்

தூயவெண்ணீற்றினன்சோற்றுத்துறையுறைவார்சடைமேல்
பாயுமவெண்ணீர்த்திரட்கங்கையெமமானுக்கழகியதே. (எ)

அண்டரமராகடைநதெழுநதோடியநஞ்சதனை
உண்டுமதனையொடுக்கவலலான்மிக்கவுமபர்களகோன்
தொணடுபயில்கின்றசோற்றுத்துறையுறைவாசடைமேல்
இணடைமதியமன்றேயெமபிரானுக்கழகியதே. (அ)

கடன்மணிவண்ணன்கருதியநான்முகன்றானறியா
விடமணிகண்டமுடையவன்றெனனையாளுடையான்
சடரணிந்தாடியசோற்றுத்துறையுறைவாசடைமேல
படமணிநாகமன்றேயெமபிரானுக்கழகியதே. (கூ)

இலங்கைக்கிறைவனிருபதுதோளுமுடிநெரியக்
கலங்கவிரலினானூன்றியவனைக்கருத்தழித்த
அலங்கல்மழுவினன்சோற்றுத்துறையுறைவாசடைமேல
இலஙகுமதியமன்றேயெம்பிரானுக்கழகியதே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவொற்றியூர் - திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம

செற்றுக்களிற்றுரிகொளகின்றஞான்றுசெருவெண்கொமபொன்
றிறறுக்கிடநததுபோலுமிளமபிறைபாமபதனைச்
சுற்றிக்கிடந்ததுகிமபுரிபோலச்சுடரிமைக்கும
நெற்றிக்கண்மற்றதனமுதநொக்குமாலொற்றியூரனுக்கே. (க)

சொல்லக்கருதியதொன்றுண்டுகேட்கிற்றெண்டாயடைந்தார்
அலலறபடக்கண்டுபின்னென்கொடுதநியலைகொண்முநநீா
மலலறறிரைச்சங்கநிததிலஙகொண்டுவமபக்கரைக்கே
ஒலலைத்திரைகொணாநதெறறொற்றியூருறையுததமனே. (உ)

பரவைவருதிரைநீர்க்கங்கைபாயநதுக்கபலசடைமேல
அரவமணிதருகொன்றையிளநதிங்கள்சூடியதோர்
குரவநறுமலாகோஙகமணிந்துகுலாயசென்னி
உரவுதிரைகொணர்நதெற்றொற்றியூருறையுத்தமனே. (ங)

தானகங்காடரஙகாகவுடையதுதன்னடைநதா
ஊனகநாறுமுடைதலையிறபலிகொள்வதுநதான்
தேனகநாறுந்திருவொற்றியூருறைவாரவர்தாம்
தானகமேவநதுபோனகமவேண்டியுழிதாவரே. (ச)

வேலைக்கடனஞ்சமுண்டுவெள்ளேற்றெறுமவிற்றிருந்த
மாலைச்சடையார்க்குறைவிடமாவதுவாரிகுனறு
ஆலைக்கருமபொடுசெநநெறகழனியருகணைநத
சோலைத்திருவொற்றியூரையெபபோதுந்தொழுமின்களே. (ரு)

புற்றினில்வாழுமரவுக்குந்திங்கட்குங்கங்கையென்னுஞ்
சிற்றிடையாட்குஞ்செறிதருகண்ணிக்குஞ்சேர்விடமாம்
பெற்றுடையான்பெரும்பேச்சுடையான்பிரியாதெனையாள்
விற்றுடையானொற்றியூருடையான்றன்விரிசடையே. (சு)

இன்றரைக்கண்ணுடையாரெங்குமில்லையிமையமென்னும
குன்றரைக்கண்ணன்குலமகட்பாவைக்குக்கூறிட்டநாள்
அன்றரைக்கண்ணுங்கொடுத்துமையாளையும்பாகமவைத்த
ஒன்றரைக்கண்ணன்கண்டீரொற்றியூருறையுத்தமனே. (எ)

சுற்றிவண்டியாழ்செயுஞ்சோலையுங்காவுங்துணைத்திலங்கு
பெற்றிகண்டான்மற்றியாவருங்கொளவர்பிறரிடைநீ
ஒற்றிகொண்டாயொற்றியூரையுங்கைவிட்டுறுமென்றெண்ணி
விற்றிகண்டாய்மற்றிதுவொப்பதில்லிடம்வேதியனே. (அ)

சுற்றிக்கிடந்தொற்றியூரனென்சிந்தைபிரிவறியான
ஒற்றித்திரிதந்துநீயென்னசெய்தியுலகமெல்லாம
பற்றித்திரிதந்துபல்லொடுநாமென்றுகண்குழித்துக்
கெற்றித்திருப்பதல்லாலென்னசெய்யுமித்தீவினையே. (கூ)

அங்கடகடுக்கைக்குமுல்லைப்புறவமுறுவல்செய்யும
பைங்கட்டலைக்குச்சுடலைக்களிப்பருமணிசேர
கங்கைக்குவேலையாவுக்குப்புறுக்கலைநிரப்பாத்
திங்கட்குவாணந்திருவொற்றியூராதிருமுடியே. (க0)

தருக்கினவாளரக்கன்முடிபத்திறப்பாதந்தன்னால்
ஒருக்கினவாறடியேனைப்பிறப்பறுத்தாளவல்லான
நெருக்கினவானவர்தானவர்கூடிக்கடைந்தநஞ்சைப்
பருக்கினவாறென்செய்கேனொற்றியூருறைபண்டங்கனே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருப்பழனம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம

மேவித்துநின்றுவிளைந்தனவெந்துயாத்துக்கமெல்லாம்
ஆவித்துநின்றுகழிந்தனவல்லலவையறுப்பான்
பாவித்தபாவனைநீயறிவாய்பழனத்தரசே
கூவித்துக்கொள்ளுந்தனையடியேனைக்குறிக்கொள்வதே. (க)

சுற்றிநின்றார்புறங்காவலமராகடைத்தலையின்
மற்றுநின்றார்திருமாலொடுநான்முகன்வந்தடிக்கீழ்ப்
பற்றிநின்றாபழனத்தரசேயுன்பணியறிவான
உற்றுநின்றாரடியேனைக்குறிக்கொண்டருளுவதே. (உ)

ஆடிநின்றாயண்டமேழுங்கடந்துபோய்மேலவையுங்
கூடிநின்றாய்குவிமென்முலையாளையுங்கொண்டுடனே
பாடிநின்றாய்பழனத்தரசேயங்கொரபான்மதியஞ்
சூடிநின்றாயடியேனையஞ்சாமைக்குறிக்கொள்வதே. (ங)

எரித்துவிட்டாயம்பினாற்புரமூன்றுமுன்னேபடவும்
உரித்துவிட்டாயுமையாணடுக்கெய்தவொர்குஞ்சரத்தைப்
பரித்துவிட்டாய்பழனத்தரசேகங்கைவாசடைமேல்
தரித்துவிட்டாயடியேனைக்குறிக்கொண்டருளுவதே. (ச)

முன்னையுமுன்னிமுளைத்தனர்மூவரிலும்முடனே
மன்னியுமங்குமிருந்தனைமாயமனத்தவர்தள்

பன்னியநூலின்பரிசறிவாய்பழனத்தரசே
உன்னியுமுன்னடியேனைக்குறிக்கொண்டருளுவதே. (௫)

ஏய்ந்தறுத்தாயின்பனாயிருந்தேபடைத்தான்றலையைக்
காய்ந்தறுத்தாய்கண்ணினாலன்றுகாமனைக்காலனையும்
பாய்ந்தறுத்தாய்பழனத்தரசேயென்பழவினைநோய்
ஆய்ந்தறுத்தாயடியேனைக்குறிக்கொண்டருளுவதே. (௬)

மற்றுவைத்தாயங்கொர்மாதொருபாகமகிழ்ந்துடனே
உற்றுவைத்தாயுமையாளொடுங்கூடும்பரிசெனவே
பற்றிவைத்தாய்பழனத்தரசேயங்கொர்பாம்பொருகை
சுற்றிவைத்தாயடியேனைக்குறிக்கொண்டருளுவதே. (௭)

ஊரினின்றாயொன்றிநின்றுவிண்டாரையுமொள்ளழலால்
போரினின்றாய்பொறையாயுயிராவிசுமந்துகொண்டு
பாரினின்றாய்பழனத்தரசேபணிசெய்பவர்கட்
காரநின்றாயடியேனைக்குறிக்கொண்டருளுவதே. (௮)

போகம்வைத்தாய்புரிபுன்சடைமேலோர்புனலதனை
ஆகம்வைத்தாய்மலையான்மடமங்கைமகிழ்ந்துடனே
பாகம்வைத்தாய்பழனத்தரசேயுன்பணியருளால்
ஆகம்வைத்தாயடியேனைக்குறிக்கொண்டருளுவதே. (௯)

அடுத்திருந்தாயரக்கன்முடிவாயொடுதோணெரியக்
கெடுத்திருந்தாய்கிளர்ந்தார்வலியைக்கிளையோடுடனே
படுத்திருந்தாய்பழனத்தரசேபுலியினுரிதோல்
உடுத்திருந்தாயடியேனைக்குறிக்கொண்டருளுவதே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பூந்துருத்தி - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மாலினைமாலுறநின்றானைமலைமகடன்னுடைய
பாலனைப்பான்மதிசூடியைப்பண்புணரார்மதின்மேல்
போலனைப்போர்விடையேறியைப்பூந்துருத்திமகிழும்
ஆலனையாதிபுராணனைநாமடிபோற்றுவதே. (௧)

மறியுடையான்மழுவாளினன்மாமலைமங்கையோர்பால்
குறியுடையான்குணமொன்றறிந்தாரில்லைகூறிலவன்
பொறியுடைவாளரவத்தவன்பூந்துருத்தியுறையும்
அறிவுடையாதிபுராணனைநாமடிபோற்றுவதே. (௨)

மறுத்தவர்மும்மதின்மாயவொர்வெஞ்சிலைகோத்தொரம்பால்
அறுத்தனையாலதன்கீழனையாலவிடமுண்டதனைப்
பொறுத்தனைப்பூதப்படையனைப்பூந்துருத்தியுறையும்
நிறத்தனைநீலமிடற்றனையானடிபோற்றுவதே. (௩)

உருவினையூழிமுதல்வனையோதிநிறைந்துநின்ற
திருவினைத்தேசம்படைத்தனைச்சென்றடைந்தேனுடைய
பொருவினையெல்லாந்துரந்தனைப்பூந்துருத்தியுறையும்
கருவினைக்கண்மூன்றுடையனையானடிபோற்றுவதே. (௪)

தக்கன்றன்வேள்விதகர்த்தவன்சாரமதுவன்றுகொள்
மிக்கனலுமமதில்வீயவோர்வெஞ்சிலைகோத்தோரம்பால்
புக்கனன்பொன்றிகழ்ந்தன்னநேரா பூந்துருத்தியுறையும்
நக்கனைநங்களபிரான்றனைநானடிபோற்றுவதே (௫)

அருக்கடைமாலையுந்தானுமையானமுகாலமைந்த
உருவுடைமங்கையுந்தன்னொருபாலுலகாயுநின்றான்
பொருபடைவேலினன்வில்லினன்பூந்துருத்தியுறையும்
திருவுடைத்தேசமதியனையானடிபோற்றுவதே. (௬)

மன்றியுநின்றமதிலரைமாயவகைகெடுக்கக்
கன்றியுநின்றுகடுஞ்சிலைவாங்கிக்கனலம்பினால்
பொன்றியுமபோகப்பாட்டினன்பூந்துருத்தியுறையும்
அன்றியுஞ்செப்பத்பிரான்றனையானடிபோற்றுவதே (௭)

மின்னிறமிக்கவிடையுமைநங்கையோர்பாலமகிழ்ந்தான்
எந்நிறமென்றமராபெரியாரின்னந்தாமறியார்
பொன்னிறமிக்கசடையவன்பூந்துருத்தியுறையும்
என்னிறவெந்தைபிரான்றனையானடிபோற்றுவதே. (௮)

அந்தியைநல்லமதியனையார்க்குமறிவரிய
செந்தியைவாட்டுஞ்செம்பொன்னினைச்சென்றடைந்தேனுடைய
பந்தியைப்பக்கவறிவினைப்பூந்துருத்தியுறையும்
நந்தியைநங்களபிரான்றனைநானடிபோற்றுவதே. (௯)

பைக்கையும்பாந்திவிழிக்கையும்பாம்புசடையிடையே
வைக்கையுமவானிழிகங்கையுமங்கைநடுக்குறவே
மொய்க்கையரக்கனையூன்றினன்பூந்துருத்தியுறையும்
மிக்கநல்வேதவிகிர்தனைநானடிபோற்றுவதே (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநெய்த்தானம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பாரிடஞ்சாடியபல்லுயிர்வானமராகக்கருளிக்
காரடைந்தகடல்வாயுமிழ்ந்தநஞ்சமுதாகவுண்டான்
ஊரடைந்தவிவ்வுலகிற்பலிகொள்வதுநாமறியோம்
நீரடைந்தக்கரைநின்றநெய்த்தானத்திருந்தவனே. (௧)

தேய்ந்திலங்குஞ்சிறுவெண்மதியாய்நின்றிருச்சடைமேல்
பாய்ந்தகங்கைப்புனல்பன்முகமாகிப்பரந்தொழியப்
ஆய்ந்திலங்குமழுவேலுடையாயடியேற்குரைநீ
ஏய்ந்திளமங்கையுநீயுநெய்த்தானத்திருந்ததுவே. (௨)

கொன்றடைந்தாடிக்குமைத்திடுங்கூற்றமொன்றார்மதின்மேல்
சென்றடைந்தாடிப்பொருததுந்தேசமெல்லாமறியுங்
குன்றடைந்தாடுங்குளிர்பொழிற்காவிரியின்கரைமேல்
சென்றடைந்தார்வினைதீர்க்குநெய்த்தானத்திருந்தவனே. (௩)

கொட்டுமுழவரவத்தொடுகோலம்பலவணிந்து
நட்டம்பலபயின்றாடுவர்நாகமரைக்கசைத்துச்

சிட்டார் திரிபுரந் தீயெழச் செற்ற சிலையுடையான்
இட்டமுமையொடு நின்ற நெய்த்தானத் திருந்தவனே. (௪)

கொய்ம்ம மலர்க்கொன்றை துழாய்வன்னி மத்தமுங் கூவிளமும்
மெய்ம்ம மலர்வேய்ந்த விரிசடைக் கற்றை விண்ணோர் பெருமான்
மைம்ம மலர்நீல நிறங்கருங் கண்ணியோர் பான் மகிழ்ந்தான்
நின்மலனுடனிலய நெய்த்தானத் திருந்தவனே. (௫)

பூந்தார் நறுங்கொன்றை மாலையை வாங்கிச் சடைக்கணிந்து
கூர்ந்தார் விடையினை யேறிப் பல்பூதப் படைநடுவே
போந்தார் புறவிசை பாடவு மாடவுங் கேட்டருளிச்
சேர்ந்தா ருமையவளோடு நெய்த்தானத் திருந்தவனே. (௬)

பற்றின பாம்பன் படுத்த புலியுரித் தோலுடையன்
முற்றின மூன்று மதில்களை மூட்டி யெரித்தறுத்தான்
சுற்றிய பூதப் படையினன் சூலமழு வொருமான்
செற்றுநந் தீவினை தீர்க்கு நெய்த்தானத் திருந்தவனே. (௭)

விரித்த சடையினன் விண்ணவர் கோன் விடமுண்ட கண்டன்
உரித்த கரியுரி மூடி யொன்றா மதின் மூன்றுடனே
எரித்த சிலையினன் ஈடழியா தென்னை யாண்டுகொண்ட
தரித்த வுமையவளோடு நெய்த்தானத் திருந்தவனே. (௮)

தூங்கான் றுளங்கான் றுழாய்க்கொன்றை துன்னிய செஞ்சடைமேல்
வாங்கான் மதியமும் வாளரவுங் கங்கை தான் புனைந்தான்
தேங்கார் திரிபுரந் தீயெழ வெய்து தியக்கறுத்து
நீங்கா றுமையவளோடு நெய்த்தானத் திருந்தவனே. (௯)

ஊட்டினன் றனைப் பொருவா னிலமு மதிர்ய மபினன்
மாட்டினன் றன்றினை வெந்துயி ழவு மவனவர்க்குக்
காட்டினன் றன்கத மாகக் கங்கை பாய வோர் வார்சடையை
நீட்டினன் றன் திருநின்ற நெய்த்தானத் திருந்தவனே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவேதிகுடி - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

கையது காலெரி நாகங் கனல்விடு சூலமது
வெய்யது வேலைநஞ் சுண்ட விரிசடை விண்ணவர்கோன்
செய்யினில் நீல மணங்கமழுந் திருவேதிகுடி
ஐயனை யாரா வமுதினை நாமடைந் தாடுதுமே. (௧)

கைத்தலை மானம றியேந்திய கையன் கனன்மழுவன்
பொய்த்தலை யேந்திநற் பூதியணிந்து பலிதிரிவான்
செய்த்தலை வாளைகள் பாய்ந்துகளுந் திருவேதிகுடி
அத்தனை யாரா வமுதினை நாமடைந் தாடுதுமே. (௨)

முன்பின் முதல்வன் முனிவனெம் மேலை வினைகழித்தான்
அன்பனிலையில வுணர்புரம் பொடியாகச் செய்யும்
செம்பொனை நன்மலர் மேலவன் சேர் திருவேதிகுடி
அன்பனை நம்மையுடையானை நாமடைந் தாடுதுமே. (௩)

பத்தர்களுளுமறவார்பிறவியையொன்றறுப்பான்
முத்தாகண்முன்னமபணிசெய்துபாரிடமுன்னுயர்த்தான்
கொததனகொன்றைமணங்கமழுநதிருவேதிகுடி
அத்தனையாராவமுதினைநாமடைநதாடுதுமே. (௪)

ஆனனைநதேறுங்குறிகுணமாரறிவாரவாகை
மானனைநதாடமெதியுமபுனலுஞ்சடைமுடியன்
தேனனைநதாடியவண்டுபயிறிருவேதிகுடி
ஆனனைநதாடுமெழுவனைநாமடைநதாடுதுமே. (௫)

எண்ணுமெழுநதுங்குறியுமறிபவாதாமொழியப
பண்ணினிசைமொழிபாடியவானவர்தாமபணிவாா
திண்ணென்வினைகளைத்தீர்க்குமபிரான்றிருவேதிகுடி
நண்ணவரியவமுதினைநாமடைநதாடுதுமே. (௬)

ஊாநதவிடையுகநதேறியசெலவனைநாமறியோம
ஆரநதமடமொழிமங்கையோாபாகமகிழ்நதுடையான்
சோநதபுனறசடைச்செல்வபபிரானறிருவேதிகுடி
சாாநதவயலணிதண்ணமுதையடைந்தாடுதுமே. (௭)

எரியுமழுவினனெண்ணியுமநமெருருவன்றலையு
டரியுமபலியினன்றேயமுநாடுமெலலாமுடையான்
விரியுமபொழிலணிசேறுதிகழ்திருவேதிகுடி
அரியவமுதினையனபாகளோடடைநதாடுதுமே. (௮)

மையணிகண்டனமறைவிரிநாவன்மதித்துகநத
மெயபணிநிறறன்விழுமியவெண்மழுவாட்படையான்
செயயகமலமணங்கமழுநதிருவேதிகுடி
அய்யனையாராவமுதினைநாமடைநதாடுதுமே. (௯)

அருநதனைவாளரககன்முடிதோளொடுபத்திறுதத
பொருநதனைப்பொய்யாவருளனைபபூதபபடையுடைய
திருநதனைதேவாபிரான்றிருவேதிகுடியுடைய
அருநதனையாராவமுதினைநாமடைந்தாடுதுமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

41

## திருவையாறு-திருவிருத்தம்

திருச்சிறறமபலம்.

குறுவிததவாகுறறநோய்வினைகாட்டிக்குறுவித்தநோய்
உறுவிததவாவுறறநோய்வினைதீாபபானுகநதருளி
அறிவித்தவாறடியேனையையாறனடிமைக்களே
செறிவித்தவாதொணடனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (௧)

கூர்வித்தவாகுற்றநோய்வினைகாட்டியுங்கூர்வித்தநோய்
ஊர்வித்தவாவுற்றநோய்வினைதீர்பபானுகநதருளி
ஆர்வித்தவாறடியேனையையாறனடிமைக்களே
சோவித்தவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (௨)

தாக்கினவாசலமேவினைகாட்டியுநதண்டித்தநோய்
நீக்கினவாநெடுநீரினின்றேறநினைந்தருளி

ஆக்கினவாறடியேனை யையாறனடிமைக்களே
நோக்கினவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (௩)

தருக்கினான்றகவின்றியுமோடச்சலமதனால
நெருக்கினவாநெடுநீரினின்றேறநினைந்தருளி
உருக்கினவாறடியேனை யையாறனடிமைக்களே
பெருக்கினவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (௪)

இழிவித்தவாறிட்டநோய்வினை காட்டிவிடாப்படுத்துக்
கழிவித்தவாகட்டநோய்வினை தீர்ப்பான்கலந்தருளி
அழிவித்தவாறடியேனை யையாறனடிமைக்களே
தொழுவித்தவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே (௫)

இடைவித்தவாறிட்டநோய்வினை காட்டிவிடாப்படுத்து
உடைவித்தவாறுற்றநோய்வினை தீர்ப்பானுகந்தருளி
அடைவித்தவாறடியேனை யையாறனடிமைக்களே
தொடர்வித்தவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (௬)

படக்கினவாபடநின்றுபன்னாளும்படக்கினநோய்
அடக்கினவாறதுவன்றியுந்தீவினைபாவமெல்லாம
அடக்கினவாறடியேனை யையாறனடிமைக்களே
தொடக்கினவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (௭)

மறப்பித்தவாவல்லைநோய்வினை காட்டிமறப்பித்தநோய்
துறப்பித்தவாதுக்கநோய்வினை தீர்ப்பானுகந்தருளி
இறப்பித்தவாறடியேனை யையாறனடிமைக்களே
சிறப்பித்தவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே (௮)

துயக்கினவாதுக்கநோய்வினைகாட்டித்துயக்கியநோய்
இயக்கினவாறிட்டநோய்வினை தீர்ப்பானிசைந்தருளி
அயக்கினவாறடியேனை யையாறனடிமைக்களே
மயக்கினவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (௯)

கறுத்துமிட்டார்கண்டங்கங்கைசடைமேற்கரந்தருளி
இறுத்துமிட்டாரிலங்கைக்கிறைதன்னையிருபதுதோள்
அறுத்துமிட்டாரடியேனை யையாறனடிமைக்களே
பொறுத்துமிட்டாரதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. ௧0

திருச்சிற்றம்பலம்.

---

## திருவையாறு - திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம

சிந்திப்பரியன சிந்திப்பவாக்குச்சிறந்துசெந்தேன்
முந்திப்பொழிவன முத்திகொடுப்பனமொய்த்திருண்டு
பந்தித்துநின்றபழவினை தீர்ப்பனபாம்புசுற்றி
அந்திப்பிறையணிந்தாடுமையாறனடித்தலமே. (௧)

கிழித்தனவேழேழ்பிறப்புமறுத்தனவென்மனத்தே
பொழித்தனபோரெழிற்கூற்றையுதைத்தனபோற்றவர்க்காய்
இழித்தனதக்கன்கிளரொளிவேள்வியைக்கீழ்முன்சென்று
அழித்தனவாறங்கமானவையாறனடித்தலமே. (௨)

சிலம்புஞ்செறிபாடகமுஞ்செழுங்கிண்கிணித்திரளும்
அலம்புந்திருவடிகாண்கவையாறனடித்தலமே. (உ)

உற்றாரிலாதார்க்குறுதுணையாவனவோதிநன்னூல்
கற்றார்பரவப்பெருமையுடையனகாதல்செய்ய
கிற்பார்தமக்குக்கிளரொளிவானகந்தான்கொடுக்கும
அற்றார்க்கருமபொருள்காண்கவையாறனடிததலமே. (ஙூ)

வானைக்கடந்தண்டத்தப்பான்மதிப்பனமந்திரிப்பார்
ஊனைக்கழித்துய்பககொண்டருள்செய்வனவுததமர்க்கு
ஞானச்சுடராய்நடுவேயுதிப்பனநங்கையஞ்ச
ஆனையுரிததனகாண்கவையாறனடித்தலமே. (ச)

மாதிரமானிலமாவனவானவாமாமுசடடின்
மீதனமென்கழல்வெங்கச்சுவீக்கினவெநமனார்
தூதரையோடத்துரப்பனதுன்பறத்தொணடுபடடாாக்
காதரமாவனகாண்கவையாறனடிததலமே. (ரு)

பேணிதொழுமவாபொன்னுலகாளபபிறங்கருளால்
ஏணிப்படிநெறியிட்டுக்கொடுத்திமையோாமுடிமேன
மாணிக்கமொத்துமரகதம்போன்றுவயிரமன்னி
ஆணிக்கனகமுமொக்குமையாறனடிததலமே. (சு)

ஓதியஞானமுஞானபபொருளுமொலிசிறநத
வேதியர்வேதமுமவேள்வியுமாவனவிண்ணுமண்ணுஞ
சோதியுஞ்செஞ்சுடாஞாயிறுமொபபனதூமதியோ
டாதியுமாதமுமானவையாறனடிததலமே. (எ)

சுணங்குமுகத்துத்துணைமுலைபபாவைசுருமபொடுவண்
டணங்குங்குழலியணியாவளைக்கரங்கூபபிநின்று
வணங்குமபொழுதுமவருடுமபொழுதும்வண்காநதளொண்போ
தணங்குமரவிநதமொக்குமையாறனடித்தலமே. (அ)

சழலார்துயர்வெயிற்சுட்டிடுமபோதடிததொண்டாதுன்னும்
நிழலாவனவென்றுநீங்காபபிறவிநிலைகெடுத்துக்
கழலாவினைகளகழற்றுவதாலவனங்கள்தநத
அழலாரொளியனகாணகவையாறனடித்தலமே. (கூ)

வலியான்றலைபத்தும்வாய்விட்டலறவரையடர்தது
மெலியாவலியுடைக்கூற்றையுதைத்துவிணணோாகண்முனனே
பலிசோபடுகடைப்பார்த்துபபன்னாளும்பலரிகழ
வலியாகிலைநிற்குமையனையாறனடித்தலமே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கண்டியூர்- திருவிருத்தம்.

திருச்சிறறமபலம்.

வானவர்தானவர்வைகன்மலர்கொணார்ந்திட்டிறைஞ்சித்
தான்வரமால்பிரமன்னறியாததகைமையினன்
ஆனவனாதிபுராணனன்றேடியபன்றியெய்த
கானவனைக்கண்டியூரண்டவாணர்தொழுகின்றதே. (க)

வானமதியமும்வாளரவும்புனலோடுசடைத்
தானமதுவெனவைத்துழல்வானழல்போலுருவன்
கானமறியொன்றுகையுடையான்கண்டியூரிருந்த
ஊனமிலவேதமுடையானைநாமடியுள்குதுமே. (௨)

பண்டங்கறுத்ததொருகையுடையான்படைத்தான்றலையை
உண்டங்கறுத்ததுமூவொருநாடவை ஞானமும
கண்டங்கறுத்தமிடறுடையான்கண்டியூரிருந்த
தொண்டர்பிரானைக்கண்டீரண்டவாணர்தொழுகின்றதே. (௩)

முடியின்முற்றாததொன்றில்லையெல்லாமுடன்றானுடையான்
கொடியமுற்றவிடையேறியோர்கூறவளொருபாலுடையான்
கடியமுற்றவ்வினைநோய்களைவான்கண்டியூரிருந்தான்
அடியமுற்றாத்தொண்டரில்லைகண்டீரண்டவானவரே. (௪)

பற்றியொரானையுரித்தபிரான்பவளத்திரள்போல்
முற்றுமணிந்ததோர்நீறுடையான்முன்னமேகொடுத்த
கற்றங்குடையவன்றானறியான்கண்டியூரிருந்த
குற்றமிலவேதமுடையானையாமண்டர்கூறுவதே (௫)

போர்ப்பனையானையுரித்தபிரான்பொறிவாயரவம்
சேர்ப்பதுவானத்திறைகடல்சூழுலகமிதனைக்
காப்பதுகாரணமாகக்கொண்டான்கண்டியூரிருந்த
கூர்ப்புடையொள்வாண்மழுவனையாமண்டர்கூறுவதே. (௬)

அட்டதுகாலனையாய்ந்ததுவேதமாறங்கமன்று
சுட்டதுகாமனைக்கண்ணதனாலேதொடர்ந்தெரியக்
கட்டவைமூன்றுமெரித்தபிரான்கண்டியூரிருந்த
குட்டமுனமேவதப்படையனையாமண்டர்கூறுவதே (௭)

அட்டுமொளிநீரணிமதியமுமலரானவெல்லாம்
இட்டமெபொதியுஞ்சடைமுடியானிண்டைமாலையங்கைக்
கட்டமரவதுதானுடையான்கண்டியூரிருந்த
கொட்டும்பறையுடைக்கூத்தனையாமண்டர்கூறுவதே. (௮)

மாயந்தனந்நிவினைமங்கினைநோய்கணமறுமியிழத்
தேயந்தனபாவஞ்செறுக்கிலாநம்மைச்சேர்ந்தங்கைக்க
காயந்தபிரானைக்கண்டியூரெம்பிரானங்கமாதினையும்
ஆயந்தபிரானல்லனோவடியேனையாட்கொண்டவனே (௯)

மண்டிமலையையெடுத்துமத்தாகியவாசுகியைத்
தண்டியமரர்கடைந்தகடல்விடங்கண்டருளி
உண்டபிரானஞ்சொளித்தபிரானஞ்சியோடிநண்ணக்
கண்டபிரானல்லனோகண்டியூரண்டவானவனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பாதிரிப்புலியூர் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஈன்றாளுமாயெனக்கெந்தையுமாயுடன்றோன்றினராய்
மூன்றாயுலகம்படைத்துகந்தான்மனத்துள்ளிருக்க
ஏன்றானிமையவர்க்கன்பன்றிருப்பாதிரிப்புலியூர்த்
தோன்றாத்துணையாயிருந்தனன்றன்னடியோங்களுக்கே. (௧)

காய்ந்தாயனங்கனுடலம்பொடிபடக்காலனைமுன்
பாய்ந்தாயுயிர்செகப்பாதம்பணிவார்தம்பல்பிறவி
ஆய்ந்தாய்ந்தறுப்பாயடியேற்கருளாயுன்னன்பர்சிந்தை
சேர்ந்தாய்திருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௨)

பொத்தார்குரம்பைபுகுந்தைவர்நாளும்புகலழிப்ப
மத்தார்தயிர்போன்மறுகுமென்சிந்தைமறுக்கொழிவி
யத்தாவடியேனடைக்கலங்கண்டாயமரர்கடஞ்
சித்தாதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௩)

நில்லாக்குரம்பைநிலையாக்கருதியிந்நீணிலத்தொன்
றல்லாக்குழிவீழ்ந்தயர்வுறுவேனைவந்தாண்டுகொண்ட
வில்லேர்புருவத்துமையாள்கணவாவிடிற்கெடுவேன்
செல்வாதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே (௪)

கருவுற்றிருந்துன்கழலேநினைந்தேன்கருப்புவியிற்
றெருவிற்புகுந்தேன்றிகைத்தடியேனைத்திகைப்பொழிவி
யுருவிற்றிகழுமுமையாள்கணவாவிடிற்கெடுவேன்
றிருவிற்பொலிசத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௫)

வெம்மைநமன்றமர்மிக்குவிரவிவிழாப்பதன்முன்
னிம்மையுன்றாளென்றனெஞ்சத்தெழுதிவையீங்கிகழி
லம்மையடியேற்கருளுதியென்பதிங்காரறிவார்
செம்மைதருசத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே (௬)

விட்டாரபுரங்களொருநொடிவேவவோர்வெங்கணையாற்
சுட்டாயென்பாசத்தொடர்பறுத்தாண்டுகொடும்பிபம்பும்
மட்டார்குழலிமலைமகள்பூசைமகிழ்ந்தருளும்
சிட்டாதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௭)

இகழ்ந்தவன்வேள்வியழித்திட்டிமையோர்பொறையிரப்பத்
திகழ்ந்திடவன்றேவிசயமுங்கொண்டதுநீலகண்டா
புகழ்ந்தவடியேன்றன்புன்மைகடீரப்புரிந்துநல்காய்
திகழ்ந்ததிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௮)

தக்கார்வமெய்திச்சமண்டவிர்ந்துன்றனசரண்புகுந்தே
னெக்காதலெப்படியுன்றிறமல்லாலெனக்குளதே
மிக்கார்தில்லையுள்விருப்பாமிகவடமேருவென்னுந்
திக்காதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௯)

பொறித்தேரரக்கன்பொருப்பெடுப்புற்றவன்பொன்முடிதோ
ளிறத்தாளொருவிரலூன்றிட்டலறவிரங்கியொள்வாள்
குறித்தேகொடுத்தாய்கொடியேன்செய்குற்றக்கொடுவினைநோய்
செறுத்தாய்திருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

## திருநல்லூர் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அட்டுமினில்பலியென்றென்றகங்கடைதோறும்வந்து
மட்டவிழுங்குழலார்வளைகொள்ளும்வகையென்கொலோ
கொட்டியபாணியெடுத்திட்டபாதமுங்கோளரவு
நட்டநின்றாடியநாதர்நல்லூரிடங்கொண்டவரே. (௧)

பெண்ணிட்டம்பண்டையதன்றிவைபெய்பலிக்கென்றுழல்வார்
நண்ணிட்டுவந்துமனைபுகுந்தாருநல்லூரகத்தே
பண்ணிட்டபாடலராடலராய்ப்பற்றிநோக்கிநின்று
கண்ணிட்டுப்போயிற்றுக்காரணமுண்டுகறைக்கண்டரே. (௨)

படவேரரவல்குற்பாவைநல்லீர்பகலேயொருவர்
இடுவாரிடைப்பலிகொள்பவர்போலவந்தில்புகுந்து
நடவாரடிகணடம்பயின்றாடியகூத்தர்கொலோ
வடபாற்கயிலையுந்தென்பானல்லூருந்தம்வாழ்பதியே. (௩)

செஞ்சுடர்ச்சோதிப்பவளத்திரடிகழ்முத்தனைய
நஞ்சணிகண்டனல்லூருறைநம்பனைநானொருகாற்
றுஞ்சிடைக்கண்டுகனவின்றலைத்தொழுதேற்கவன்றா
னெஞ்சிடைநின்றகலான்பலகாலமுநின்றனனே. (௪)

வெண்மதிசூடிவிளங்கநின்றானைவிண்ணோர்கடொழ
நண்ணிலயத்தொடுபாடலறாநல்லூரகத்தே
திண்ணியங்கோடுநின்றான்றிரிபுரமூன்றெரித்தான்
கண்ணுளுநெஞ்சத்தகத்துமுளகழற்சேவடியே. (௫)

தேற்றப்படத்திருநல்லூரகத்தேசிவனிருந்தாற்
றோற்றப்படச்சென்றுகண்டுகொள்ளார்தொண்டர்துன்மதியால்
ஆற்றிற்கெடுத்துக்குளத்தினிற்றேடியவாதரைப்போல
காற்றிற்கெடுத்துலகெல்லாந்திரிதர்வர்காண்பதற்கே (௬)

நாட்கொண்டதாமரைப்பூந்தடஞ்சூழ்ந்தநல்லூரகத்தே
கீட்கொண்டகோவணங்காவென்றுசொல்லிக்கிறிபடத்தான்
வாட்கொண்டநோக்கிமனைவியொடுமங்கோர்வாணிகனை
ஆட்கொண்டவார்த்தையுரைக்குமன்றோவிவ்வகலிடமே. (௭)

அறைமல்குபைங்கழலார்க்கநின்றணியார்சடைமேல்
நறைமல்குகொன்றையந்தாருடையானல்லூரகத்தே
பறைமல்குபாடலனாடலனாகிப்பரிசழித்தான
பிறைமல்குசெஞ்சடைதாழநின்றாடியபிஞ்ஞகனே. (௮)

மன்னியமாமறையோர்மகிழ்ந்தேத்தமருவியெங்கும்
துன்னியதொண்டர்களின்னிசைபாடித்தொழுநல்லூர்க்
கன்னியர்தாமுங்கனவிடையுன்னியகாதலனை
அன்னியராறவராங்கணனேயருணல்கென்பரே. (௯)

திருவமர்தாமரைசீர்வளர்செங்கழுநீர்கொணெய்தல்
குருவமர்கோங்கங்குராமகிழ்செண்பகங்கொன்றைவன்னி
மருவமர்நீள்கொடிமாடமலிமறையோர்கணல்லூர்
உருவமர்பாகத்துமையவள்பாகனையுள்குதுமே. (௧௰)

செல்லேர்கொடியன்சிவன்பெருங்கோயில்சிவபுரமும்
வல்லேன்புகவுமதிலஞ்சூழிலங்கையர்காவலனைக்
கல்லார்முடியொடுதோளிறச்செற்றகழலடியா
னல்லூரிருந்தபிரானல்லனோநம்மையாள்பவனே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

தேற்றுந்தகையனதேறியதொண்டரைச்செந்நெறிக்கே
ஏற்றுந்தகையனவின்னம்பரான்றனிணையடியே. (எ)

பயம்புன்மைசேர்தருபாவந்தவிர்ப்பனபார்ப்பதிதன்
குயம்பொன்மைமாமலராகக்குலாவினகூடவொண்ணாச்
சயம்புவென்றேதகுதாணுவென்றேசதுர்வேதங்கணின்
றியம்புங்கழலினவின்னம்பரான்றனிணையடியே. (அ)

அயனொடுமாலிந்திரன்சந்திராதித்தரமரரெல்லாஞ்
சயசயவென்றுமுப்போதும்பணிவனதண்கடல்சூழ்
வியனிலமுற்றுக்கும்விண்ணுக்குநாகர்வியனகர்க்கும்
இயபரமாவனவின்னம்பரான்றனிணையடியே. (கூ)

தருக்கியதக்கன்றன்வேள்விதகர்த்தனதாமரைப்போ
துருக்கியசெம்பொனுவமனிலாதனவொண்கயிலை
நெருக்கியவாளரக்கன்றலைபத்துநெரித்தவன்றன்
இருக்கியல்பாயினவின்னம்பரான்றனிணையடியே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

### திருவாரூர் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

குலம்பலம்பாவருகுண்டர்முன்னேநமக்குண்டுகொலோ
அலம்பலம்பாவருதண்புனலாரூரவிர்சடையான்
சிலம்பலம்பாவருசேவடியான்றிருமூலத்தானம்
புலம்பலம்பாவருதொண்டர்க்குத்தொண்டராம்புண்ணியமே. (க)

மற்றிடமின்றிமனைதுறந்தல்லுணாவல்லமணர்
சொற்றிடமென்றுதுரிசுபட்டேனுக்குமுண்டுகொலோ
விற்றிடம்வாங்கிவிசயனொடன்றொருவேடுவனாய்ப்
புற்றிடங்கொண்டான்றன்றொண்டர்க்குத்தொண்டராம்புண்ணியமே ( )

ஒருவடிவின்றிநின்றுண்குண்டர்முன்னமக்குண்டுகொலோ
செருவடிவெஞ்சிலையாற்புரமட்டவன்சென்றடையாத
திருவுடையான்றிருவாரூர்த்திருமூலத்தானன்செங்கண்
பொருவிடையானடித்தொண்டர்க்குத்தொண்டராம்புண்ணியமே. (ங)

மாசினையேறியமேனியர்வன்கண்ணர்மொண்ணரைவிட்
டீசனையேநினைந்தேசறுவேனுக்குமுண்டுகொலோ
தேசனையாரூர்த்திருமூலத்தானனைச்சிந்தைசெய்து
பூசனைபூசுரர்தொண்டர்க்குத்தொண்டராம்புண்ணியமே. (ச)

அருந்தும்பொழுதுரையாடாவமணர்திறமகன்று
வருந்திநினைந்தரனேயென்றுவாழ்த்துவேற்குண்டுகொலோ
திருந்தியமாமதிலாரூர்த்திருமூலத்தானனுக்குப்
பொருந்துந்தலமுடைத்தொண்டர்க்குத்தொண்டராம்புண்ணியமே. ( )

வீங்கியதோள்களுந்தாள்களுமாய்நின்றுவெற்றரையே
மூங்கைகள்போலுண்ணுமூடர்முன்னேநமக்குண்டுகொலோ
தேங்கமழ்சோலைத்தென்னாரூர்த்திருமூலத்தானன்செய்ய
பூங்கழலானடித்தொண்டர்க்குத்தொண்டராம்புண்ணியமே. (சு)

பணணியசாத்திரப்பேய்கள்பறிதலைக்குண்டரைவிட்
டெணணில்புகழீசன்றன்னருள்பெற்றேறகுமுண்டுகொலோ
திண்ணியமாமதிலாரூரதிருமூலத்தானனெங்கள
புண்ணியனறன்னடித்தொண்டாகுத்தொண்டராம்புண்ணியமே. எ

கரபபாகணமெப்யைததலைபறிக்கச்சுகமென்னுங்குண்ட
ருரைபபனகேளாதிங்குய்யபபோநதேனுகருமுண்டுகொலோ
திருபபொலியாரூரதிருமூலத்தானன்றிருக்கயிலைப
பொருப்பனவிருப்பமாதொண்டர்கருதொண்டராமபுண்ணியமே. (அ)

கையிலிடுசோறுநின்றுண்ணுங்காதலமணரைவிட்
டுய்யுநெறிகண்டிங்குய்யபபோநதேனுக்குமுண்டுகொலோ
ஐயனணிவயலாரூரதிருமூலததானனுககுப
பொய்யன்பிலாவடிதத்தொண்டாகுதத்தொண்டராம்புண்ணியமே. (கூ)

குறறமுடையவமணாதிறமதுகையகன்றிட்
டுறறகருமஞ்செயதுய்யபபோந்தேனுககுமுண்டுகொலோ
மறறபொலிதோளானிராவணன்றனவலிவாட்டுவித்த
பொறகழலானடித்தொண்டாக்குத்தொண்டராம்புண்ணியமே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

### திருவாரூர் - திருவிருத்தம்.

திருச்சிற்றமபலம்.

வேமபினைபபேசிவிடக்கினையோமபிவினைபெருக்கித்
தூமபினைத்தூர்த்தங்கோசுறறர்துணையென்றிருந்திர்தொண்ட
ராம்பலமபூமபொய்கையாரூரமாநதானடிக்கிழறகீழ்ச்
சாமபலைப்பூசிச்சலமின்றித்தொண்டுபட்டுய்மமின்களே. (க)

ஆராய்ந்தடித்தொண்டராணிபபொனாரூரகத்தடக்கிப
பாரூரபரிபபத்தமபங்குனியுத்திரமபாறபடுத்தான்
நாரூர்நறுமலாநாதனடித்தொண்டனமபிநந்தி
நீராறறிருவிளக்கிட்டமைநீணாடறியுமன்றே. (உ)

பூமபடிமககலமபொற்படிமக்கலமென்றிவறறு
ளாமபடிமக்கலமாகிலுமாரூரினிதமாநதா
தாமபடிமக்கலமவேண்டிவரோறறமிழ்மாலைகளால்
நாமபடிமக்கலஞ்செயதுதொழுதுய்மடநெஞ்சமே. (ங)

துடிக்கின்றபாமபரையார்த்துத்துளங்காமதியணிந்து
முடித்தொண்டராகிமுனிவாபணிசெய்வதேயுமன்றிப
பொடிககொண்டுபூசிபபுகுகதொண்டர்பாதமபொறுத்தபொற்பா
லடித்தொண்டனநதியென்பானுளனாரூரமுதினுக்கே. (ச)

சுருமபுபிடித்தவாகாயப்பட்டாரங்கொரகோடலியா
விருமபுபிடித்தவரின்புறபபட்டாரிவர்கணிற்க
வரும்பவிழ்தண்பொழிலசூழணியாரூரமர்ந்தபெம்மான்
விரும்புமனத்தினையாதொன்றுநானுன்னைவேண்டுவனே. (ரு)

கொடிகொள்விதானங்கவரிபறைசங்கங்கைவிளக்கோ
டிடிவில்பெருஞ்செல்வமெய்துவரெய்தியுமுனமில்லா

வடிகளுமாரூரகத்தினராயினுமந்தவளப்
பொடிகொண்டணிவார்க்கிருளொக்குநந்திபுறப்படிலே. (சு-எ-அ-சு)

சங்கொலிப்பித்திடுமின்சிறுகாலைத்தட்டழிவிற்
குங்குலியப்புகைக்கூட்டென்றுங்காட்டியிருப்பதுதோ
ளங்குலமவைத்தவன்செங்குருதிப்புனலோடவஞ்ஞான்
றங்குலிவைத்தானடித்தாமரையென்னையாண்டனவே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

### திருநாகைக்காரோணம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

வடிவுடைமாமலைமங்கைபங்காகங்கைவார்சடையாய்
கடிகமழ்சோலைசுலவுகடனாகைக்காரோணனே
பிடிமதவாரணமேணுந்துரகநிற்கப்பெரிய
இடிகுரல்வெள்ளெருத்தேறுமிதென்னைகொலெம்மிறையே. (க)

கற்றாப்பயில்கடனாகைக்காரோணத்தெங்கண்ணுதலே
விற்றாங்கியகரமவேனெடுங்கண்ணிவியன்கரமே
நற்றாணெடுஞ்சிலைநாண்வலித்தகரநின்கரமே
செற்றார்புரஞ்செற்றசேவகமென்னைகொல்செப்புமினே (உ)

தூமென்மலர்க்கணைகோத்துத்தீவேள்விதொழிற்படுத்த
காமன்பொடிபடக்காய்ந்தகடனாகைக்காரோணநின்
னாமம்பரவிநமச்சிவாயவென்னுமஞ்செழுத்துஞ்
சாமன்றுரைக்கத்தருதிகண்டாயெங்கள்சங்கரனே. (ங)

பழிவழியோடியபாவிப்பறிதலைக்குண்டர்தங்கண்
மொழிவழியோடிமுடிவேன்முடியாமைக்காத்தென்னைக்கொண்டாய்
கழிவழியோதமுலவுகடனாகைக்காரோணவென்
வழிவழியாளாகும்வண்ணமருளெங்கள்வானவனே. (ச)

செந்துவர்வாய்க்கருங்கண்ணிணைவெண்ணகைத்தேமொழியார்
வந்துவலஞ்செய்துமாநடமாடமலிந்தசெல்வக்
கந்தமலிபொழில்சூழ்கடனாகைக்காரோணமென்று
சிந்தைசெய்வாரைப்பிரியாதிருக்குந்திருமங்கையே. (ரு)

பனைபுரைகைம்மதயானையுரித்தபரஞ்சுடரே
கனைகடல்சூழ்தருநாகைக்காரோணத்தெங்கண்ணுதலே
மனைதுறந்தல்லுணாவல்லமண்குண்டர்மயக்கநீக்கி
எனைநினைந்தாட்கொண்டாய்க்கென்னினியான்செயுமிச்சைகளே (சு)

சீர்மலிசெல்வம்பெரிதுடையசெம்பொன்மாமலையே
கார்மலிசோலைசுலவுகடனாகைக்காரோணனே
வார்மலிமென்முலையாள்பலிவந்திடச்சென்றிரந்து
ஊர்மலிபிச்சைகொண்டுண்பதுமாதிமையோவுரையே. (எ)

வங்கமலிகடனாகைக்காரோணத்தெமவானவனே
எங்கள்பெருமானொர்விண்ணப்பமுண்டதுகேட்டருளீர்
கங்கைசடையுட்கரந்தாயக்கள்ளத்தைமெள்ளவுமை
நங்கையறியிற்பொல்லாதுகண்டாயெங்கணாயகனே. (அ·க)

கருந்தடங்கண்ணியுந்தானுங்கடனாகைக்காரோணத்தான்
இருந்ததிருமலையென்றிறைஞ்சாதன்றெடுக்கலுற்றான்
பெருந்தலைபத்துமிருபதுதோளும்பிதிர்ந்தலற
இருந்தருளிச்செய்ததேதுமறந்திலனெம்மிறையே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

### திருவதிகை - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

மாசிலொள்வாள்போன்மறியுமணிநீர்த்திரைத்தொகுதி
ஊசலையாடியங்கொண்சிறையன்னமுறங்கலுற்றால்
பாசறைநீலம்பருகியவண்டுபண்பாடல்கண்டு
வீசுங்கெடிலவடகரைத்தேயெந்தைவீரட்டமே. (க)

பைங்காற்றவளைபறைகொட்டப்பாசிலைநீர்ப்படுகா
ணைங்காற்றவளைமேலாவியுயிர்ப்பவருகுலவுஞ்
செங்காற்குருகிவைசேருஞ்செறிகெடிலக்கரைத்தே
வெங்காற்குருசிலைவீரனருள்வைத்தவீரட்டமே. (உ)

அம்மலர்க்கண்ணியரஞ்சனஞ்செந்துவர்வாயிளையார்
வெம்முலைச்சாந்தம்விலைபெறுமாலையெடுத்தவர்கள்
தம்மருங்கிற்கிரங்கார்தடந்தோண்மெலியக்குடைவார்
விம்முபுனற்கெடிலக்கரைத்தேயெந்தைவீரட்டமே. (ங)

மீனுடைத்தண்புனல்வீரட்டரேநும்மைவேண்டுகின்ற
தியானுடைச்சில்குறையொன்றுளதானறுந்தண்ணெருக்கின்
தேனுடைக்கொன்றைச்சடையுடைக்கங்கைத்திரைதவழும்
கூனுடைத்திங்கட்குழவியெப்போதுங்குறிக்கொண்மினே. (ச)

ஆரட்டதேனுமிரந்துண்டகமகவன்றிரிந்து
வேரட்டமிகப்பித்திடுகின்றதால்விரிநீர்ப்பரவைச்
சூரட்டவேலவன்றாதையைச்சூழ்வயலாரதிகை
வீரட்டத்தானைவிரும்பாவருபாவவேதனையே. (ரு)

படர்பொற்சடையும்பகுவாயரவும்பனிமதியும்
சுடலைப்பொடியுமெல்லாமுளவேயவர்தூயதெண்ணீர்க்
கெடிலக்கரைத்திருவீரட்டராவர்கெட்டேனடைந்தார்
நடலைக்குநற்றுணையாகுங்கண்டீரவர்நாமங்களே. (சா)

காளங்கடந்ததொர்கண்டத்தராகிக்கண்ணார்கெடில
நாளங்கடிக்கோர்நகரமுமாகிற்குநன்கிசைந்த
தாளங்கள்கொண்டுங்குழல்கொண்டும்யாழ்கொண்டுந்தாமங்ஙனே
வேடங்கள்கொண்டுவிசும்புசெல்வாரவர்வீரட்டரே. (எ-அ-கூ-கo)

திருச்சிற்றம்பலம்.

---

### திருப்புகலூர் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தன்னைச்சரணென்றுதாளடைந்தேன்றன்னடியடையப்
புன்னைப்பொழில்புகலூரண்ணல்செய்வனகேண்மின்களோ

என்னைப்பிறப்பறுத்தென்வினைகட்டறுத்தேழ்நரகத்
தென்னைக்கிடக்கலொட்டான்சிவலோகத்திருத்திடுமே. (௯)

பொன்னைவகுத்தன்னமேனியனேபுணாமென்முலையா
டன்னைவகுத்தன்னபாகத்தனேதமியேறகிரங்காய்
புன்னைமலாத்தலைவண்டுறங்குமபுகலூரரசே
என்னைவகுத்திலையேலிடுமைபைக்கிடமயாதுசொல்லே (௨-௩)

பொன்னளவார்சடைக்கொன்றையினாய்புகலூரரசே
மன்னுளதேவர்கடேடுமருநதேவலஞ்சுழியாய்
என்னளவேயுனக்காட்பட்டிடைககலத்தேகிடப்பா
ருன்னளவேயெனக்கொன்றுமிரங்காதவுத்தமனே. (௪-௫-௬-௭-௮-௯)

ஓணபபிரானுமொளிர்மாமலர்மிசையுத்தமனுங்
காணப்பராவியுங்காண்கின்றிலாகரநாலைநதுடைத்
தோணற்பிரானைவலிதொலைத்தோன்றொலைநீாடபுகலூாக்
கோணப்பிரானைக்குறுகக்குறுகாகொடுவினையே. (௧௦)

திருசசிறறமபலம

---

## திருக்கழிப்பாலை - திருவிருத்தம்

திருசசிற்றம்பலம்.

நெய்தற்குருகுதன்பிள்ளையென்றெண்ணிநெருங்கிச்சென்று
கைதைமடலபுலகுதென்கழிப்பாலையதனுறைவாய்
பைதற்பிறையொடுபாமபுடன்வைத்தபரிசறியோ
மெய்தப்பெறிலிரஙகாதுகண்டாயநம்மிறையவனே. (௧)

பருமாமணியும்பவளமுத்தும்பரந்துநதிவரை
பொருமாலகரைமேற்றிரைகொணர்நதெற்றபபொலிநதிலங்குங்
கருமாமிடறுடைக்கண்டனெமமான்கழிபபாலையெநதை
பெருமானவனென்னையாளுடையானிபபெருநிலத்தே. (௨)

நாட்பட்டிருநதின்பமெய்தலுற்றிங்குநமன்றமரால
கோட்பட்டொழிவதன்முனநதுறவேகுளிராாதடத்துத்
தாட்பட்டதாமரைப்பொய்கையந்தண்கழிபபாலையுணணற
காட்பட்டொழிநதவன்றேவல்லமாயிவ்வகலிடத்தே (௩)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கடவூர் - திருவிருத்தம்.

திருச்சிற்றமபலம.

மருட்டுயர்தீரவன்றாச்சித்தமாணிமாாக்கணடயர்ககா
யிருட்டியமேனிவளைவாளெயிறறெரிபோலுங்குஞ்சிச்
சுருட்டியநாவில்வெங்கூற்றமபதைப்பவுதைத்தங்கனே
உருட்டியசேவடியான்கடவூருறையுத்தமனே. (௧)

பதத்தெழுமந்திரமஞ்செழுத்தோதிப்பரிவினொடு
மிதத்தெழுமாணிதனின்னுயிருண்ணவெகுண்டடர்த்த
கதத்தெழுகாலனைக்கண்குருதிப்புனலாறொழுக
வுதைத்தெழுசேவடியான்கடவூருறையுத்தமனே. (௨)

சுரப்புறுசிந்தையர்காண்டற்கரியவன்காமனையும
நெருப்புமிழ்கண்ணினனீள்புனற்கங்கையும்பொங்கரவும
பரப்பியசெஞ்சடைப்பாலவண்ணனகாலனைப்பண்டொருகா
லுரப்பியசேவடியான்கடவூருறையுத்தமனே. (௫)

மறித்திகழ்கையினன்வானவர்கோனைமனமகிழ்ந்து
குறித்தெழுமாணிதனாருயிர்கொள்வானகொதித்தசிந்தை
கறுத்தெழுமூவிலைவேலுடைக்காலனைத்தானலற
வுறுக்கியசேவடியான்கடவூருறையுத்தமனே. (௬)

குழைத்திகழ்காதினன்வானவர்கோனைக்குளிர்ந்தெழுந்து
பழககமொடர்ச்சித்தமாணிதனாருயிர்கொள்ளவந்த
தழற்பொதிமூவிலைவேலுடைக்காலனைத்தானலற
வுழக்கியசேவடியான்கடவூருறையுத்தமனே. (௭)

பாலனுக்காவன்றுபாற்கடலீந்துபணைத்தெழுந்த
வானிழற்கீழிருந்தாரணமோதியருமுனிக்காச்
சூலமும்பாசமுங்கொண்டுதொடர்ந்தடர்ந்தோடிவந்த
காலனைக்காய்ந்தபிரான்கடவூருறையுத்தனே. (௮)

படர்சடைக்கொன்றையும்பன்னகமாலைபணிகயிறா
உடைதலைக்கோத்துழன்மேனியனுண்பலிக்கென்றுழல்வோன்
சுடர்பொதிமூவிலைவேலுடைக்காலனைத்துண்டமதா
வுடறியசேவடியான்கடவூருறையுத்தமனே. (௯)

வெண்டலைமாலையுங்கங்கைக்கரோடிவிரிசடைமேல
பெண்டணிநாயகன்பேயுகந்தாடும்பெருந்தகையான்
கண்டணிநெற்றியன்காலனைக்காய்ந்துகடலில்விட
முண்டருளசெய்தபிரான்கடவூருறையுத்தமனே. (அ)

கேழலதாகிக்கிளறியகேசவன்காண்பரிதாய்
வாழிநன்மாமலர்க்கண்ணிடந்திட்டவம்மாலவற்கன்
றாழியுமீந்துவடிதிறற்காலனையன்றடர்த்து
வூழியுமாயபிரான்கடவூருறையுத்தமனே. (௯)

தேன்றிகழ்கொன்றையுங்கூவிளமாலைதிருமுடிமே
லான்றிகழைந்துகந்தாடும்பிரான்மலையார்த்தெடுத்த
கூன்றிகழ்வாளரக்கன்முடிபத்துங்குலைந்துவிழ
வூன்றியசேவடியானகடவூருறையுத்தமனே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

திருமாற்பேறு - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மாணிக்குயிர்பெறக்கூற்றைபுதைத்தனமாவலியால்
காணிக்கிரந்தவன்காண்டற்கரியனகண்டதொண்டர்
பேணிக்கிடந்துபரவப்படுவனபோர்த்துமஃதே
மாணிக்கமாவனமாற்பேறுடையான்மலரடியே. (௧)

கருடத்தனிப்பாகன்காண்டற்கரியனகாதல்செய்யின்
குருடர்க்குமுன்னேகுடிகொண்டிருப்பனகோலமல்கும்

செருடக்கடிமலாச்செலவிதன்செங்கமலககரத்தால
வருடச்சிவபபனமாறபேறுடையானமலரடியே. (உ)

திருச்சிறறம்பலம்.

---

## திருத்தூங்கானைமாடம் - திருவிருத்தம்.

திருச்சிறறம்பலம.

பொன்னாதிருவடிக்கொன்றுண்டுவிணணபபமபோற்றிசெய்யும
என்னாவிகாபப,தறகிச்சையுண்டேவிருமகூறறகல
மின்னாருமூவிலைச்சூலமென்மேறபொறிமேவுகொண்ட
துன்னாகடநதையுடதூங்கானைமாடச்சுடாககொழுந்தே. (க-உ-ங-ச)

ஆவாசிறுதொணடனென்னினைநதானென்றரும்பிணிநோய
காவாதொழியிறகலக்குமுன்மேறபழிகாதலசெய்வாா
தேவாதிருவடிநீறென்னைபபூசுசெந்தாமரையின்
பூவாாகடநதையுட்டூங்கானைமாடததெமபுண்ணியனே. (ரு-சு-எ-அ-கூ)

கடவுநதிகிரிக்கடவாதொழியக்கயிலையுறறான
படவுநதிருவிரலொன்றுவைததாப்பணிமாலவரைபோ
லிடபமபொறித்தெனையேனறுகொள்ளாயிருஞ்சோலைதிஙக
டடவுங்கடநதையுட்டூஙகானைமாடததெநதத்துவனே. (க௦)

திருச்சிறறம்பலம்.

---

## பசுபதி - திருவிருத்தம்.

திருச்சிறறமபலம.

சாமபலைப்பூசித்தரையிறபுரண்டுநின்றாள்பரவி
ஏமபலிபபாாகட்கிரங்குகண்டாயிருங்கஙகையென்னுங்
காம்பலைக்குமபணைததோளிகதிாபபூண்வனமுலைமேற
பாமபலைகருஞசடையாயெம்மையாளும்பசுபதியே (க)

உடமபைத்தொலைவிததுன்பாதநதலைவைத்தவுத்தமாகள்
இடுமபைபபடாமலிரஙகுகண்டாயிருளோடசெநதீ
யடுமபொத்தனையவழுன்மழுவாவழலையுமிழும்
படம்பொத்தரவரையாயெய்மையாளுமபசுபதியே. (உ)

தாரித்திரநதவிராவடியாாதமோற்றமென்னும
மூரித்திரைபபவ்வநீக்குகண்டாய்முன்னைநாளொருகால்
வேரிததணபூஞசுடரைஙகணைவேள்வெநதுவீழச்செநதீ
பாரித்தகண்ணுடையாயெமமையாளுமபசுபதியே. (ங)

ஒருவரைததஞ்சமென்றெண்ணாதுன்பாதமிறைஞ்சுகின்று
ராருவினைச்சுற்றமகல்விகண்டாயண்டமேயணவும
பெருவரைக்குன்றம்பிளிறபிளநதுவேய்ததோளியஞ்ச
பருவரைத்தோலுரித்தாயெமமையாளும்பசுபதியே (ச)

இடுக்கொன்றுமின்றியெஞ்சாமையுன்பதமிறைஞ்சுகின்றாக்
கடர்க்கின்றநோயைவிலக்குகண்டாயண்டமெண்டிசையுஞ்
சுடாத்திங்கள்சூடிச்சுழல்கஙகையோடுஞ்சுருமபுதுன்றி
படர்க்கொண்டசெஞ்சடையாயெம்மையாளுமபசுபதியே. (ரு)

அடலைக்கடல்கழிவானின்னடியிணையேயடைந்தார்
நடலைப்படாமைவிலக்குகண்டாய்நறுங்கொன்றைதிங்கள்
சுடலைப்பொடிச்சுண்ணமாசுணஞ்சூளாமணிகிடந்து
படரச்சுடாமகுடாவெம்மையாளும்பசுபதியே. (சா)

துறவித்தொழிலேபுரிந்தன்சுரும்படியேதொழுவார்
மறவித்தொழிலதுமாற்றுகண்டாய்மதின்மூன்றுடைய
வானவத்தொழிலைப்புரிந்தந்தாதேசெல்லுந்திரந்தோப
புறவைப்புரமெரித்தாயெம்மையாளும்பசுபதியே. (எ-அ-கூ)

பித்தத்தொருத்தசிவனெம்பிரானென்றெண்ணுந்தையுள்ளே
பித்தப்பெருக்கப்பித்தறுகின்றார்பிணிதீர்த்தருளாய்
மத்தக்களிறுரிபோர்த்தாளுமுடியுமெல்லாம்
பத்தர்பரப்பெரித்தாயெம்மையாளும்பசுபதியே. (கo)

திருச்சிற்றம்பலம்

---

111

## சரக்கறைத் திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்.

விடையும்விடைப்பெரும்பாகாவென்விண்ணப்பம்மேம்முழுவாள்
படையும்பாம்படையாய்நிறைந்தபல்பூதமும்பாய்புலித்தோ
லுடையுமுடைத்தலைமாலையுமாலைப்பிறையொடுங்கு
சடையுமிருக்குஞ்சரக்கறையோவென்றனெஞ்சமே. (க)

விருந்தாத்தடவரைபெறாவென்விண்ணப்பமேலிலங்கு
சங்கக்கலனுஞ்சரிகோவணமுந்தமருகமு
மந்திபிறையுமனல்வாயரவுமவிரவியெல்லாஞ்
சந்திருக்குஞ்சரக்கறையோவென்றனெஞ்சமே (உ)

வீந்தார்தலைகலனேந்தியென்விண்ணப்பமேலிலங்கு
சாந்தாயவெந்தவெண்ணீறுந்தகுணிச்சமும
பூந்தாமரைமேனிப்புள்ளியுழைமானதள்புலித்தோ
ருந்தாமிருக்குஞ்சரக்கறையோவென்றனெஞ்சமே. (ங)

வெஞ்சமாவேழத்துரியாயென்விண்ணப்பமேலிலங்கு
வஞ்சமாவந்தவருபுனற்கங்கையும்வானமதியும
நஞ்சமாநாகக்குசிரமாலைநகுவெண்டலை
தஞ்சமாவாழுஞ்சரக்கறையோவென்றனெஞ்சமே. (ச)

வேலைக்கடனஞ்சமுண்டாயென்விண்ணப்பமேலிலங்கு
காலற்கடந்தானிடங்கயிலாயமுங்காமர்கொன்றை
மாலைப்பிறையுமணிவாயரவுமவிரவியெல்லாம
சாலக்கிடக்குஞ்சரக்கறையோவென்றனெஞ்சமே. (ரு)

வீழிட்டகொன்றையந்தாராயெனவிண்ணப்பமேலிங்கு
சூழிட்டிருக்குநற்சூளாமணியுஞ்சுடலைநீறு
மேழிட்டிருக்குநல்லக்குமரவுமென்பாமையொடும்
தாழிட்டிருக்குஞ்சரக்கறையோவென்றனெஞ்சமே. (சா)

விண்டார்புரமூன்றுமெய்தாயென்விண்ணப்பமேலிலங்கு
தொண்டாடியதொண்டடிப்பொடிநீறுந்தொழுதுபாதங்

கண்டார்கள்கண் டிருக்குங்கயிலாயமுங்காமாகொன்றைத்
தண்டாரிருக்குஞ்சாக்கறையோவென்றனிநெஞ்சமே. (எ)

விடுபட்டியேறுகந்தேறியென்விண்ணப்பமேவிலங்கு
கொடுகொட்டிகொக்கரைதக்கைகுழல்தாளம்வீணைமொந்தை
வடுவிட்டகொன்றையுமவன்னியுமத்தமுமவாளரவும்
தடுகுட்டமாடுஞ்சாக்கறையோவென்றனிநெஞ்சமே. (அ)

வெண்டிரைக்கங்கைவிகிர்தாவென்விண்ணப்பமேவிலங்கு
கண்டிகைபூண்டுகெடிசூத்திகமேறகபாலவடங்
குண்டிகைகொக்கரைகொன்றைபிறைகுறட்பூதப்படை
தண்டிவைத்திட்டசாக்கறையோவென்றனிநெஞ்சமே. (கூ)

வேதித்தவெப மழுவாளியென்விண்ணப்பமேவிலங்கு
சோதித்திருக்குநறகுளாமணியுஞ்சுடலைநீறும்
பாதிப்பிறையுமபடுதலைத்துண்டமுமடாய்ப்புலித்தோல்
சாதித்திருக்குஞ்சாக்கறையோவென்றனிநெஞ்சமே. (கo)

விவந்தாடியகழலெந்தாயென்விண்ணப்பமேவிலங்கு
தவந்தானெடுக்கத்தலைபத்திறுத்தனைதாழ்புலித்தோல
சிவந்தாடியபொடிநீறுஞ்சிரமாலைசூடிநின்று
தவந்தானிருக்குஞ்சாக்கறையோவென்றனிநெஞ்சமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## தனித்திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

வெள்ளிக்குழைத்துணிபோலுங்கபாலத்தன்வீழ்ந்திலங்கு
வெள்ளிப்புரியன்னவெண்புரிநூலன்விரிசடைமேல
வெள்ளித்தகடன்னவெண்பிறைசூடிவெள்ளென்பணிந்து
வெள்ளிப்பொடிப்பவளப்புறம்பூசியவேதியனே. (க)

உடலைத்துறந்துலகேழுங்கடந்துலவாததுன்பக்
கடலைக்கடந்துய்யப்போயிடலாகுங்கனகவண்ணப
படலைச்சடைப்பரவைத்திரைகங்கைபனிப்பிறைவெண்
சுடலைப்பொடிகடவுட்கடிமைக்கட்டுணிநெஞ்சமே. (உ)

முன்னேயுரைத்தான்முகமனேயொக்குமிம்மூவுலகுக்
கன்னையுமத்தனுமாவாயழலவணநீயலையோ
உன்னைநினைந்தேகழியுமென்னாவிகழிந்ததற்பின்
என்னைமறக்கப்பெறுயெம்பிரானுனைவேண்டியதே. (ங)

நின்னையெப்போதுநினையலொட்டாய்நீநினையப்புகின்
பின்னையப்போதேமறப்பித்துப்போதத்தொன்றுநாடுவித்து
வுன்னையெப்போதுமறந்திட்டுனக்கினிதாவிருக்கு
மென்னையொப்பாருளரோசொல்லுவாழியிறையவனே. (ச)

முழுத்தழன்மேனித்தவளப்பொடியன்கனகக்குன்றத்
தெழிற்பெருஞ்சோதியையெங்கள்பிரானையிகழ்திர்கண்டீர்
தொழப்படுந்தேவர்தொழப்படுவானைத்தொழுதபின்னைத்
தொழப்படுந்தேவர்தம்மாற்றொழுவிக்குந்தன்றொண்டரையே. (ரு)

விண்ணகத்தான்மிக்கவேதத்துளான்விரிநீருடுத்த
மண்ணகத்தான்றிருமாலகத்தான்மருவற்கினிய
பண்ணகத்தான்பத்தர்சித்தத்துளான்பழநாயடியேன்
கண்ணகத்தான்மனத்தான்சென்னியானெங்கறைக்கண்டனே. (௬)

பெருங்கடன்மூடிப்பிரளயங்கொண்டுபிரமனும்போய்
இருங்கடன்மூடியிறக்குமிறந்தான்களேபரமும்
கருங்கடல்வண்ணன்களேபரமுங்கொண்டுகங்காளராய்
வருங்கடன்மீளநின்றெம்மிறைநல்வீணைவாசிக்குமே. (௭)

வானந்துளங்கிலென்மண்கம்பமாகிலென்மால்வரையும்
தானந்துளங்கித்தலைதடுமாறிலென்றண்கடலும்
மீனம்படிலென்விரிசுடர்வீழிலென்வேலைநஞ்சுண்
டூனமொன்றில்லாவொருவனுக்காட்பட்டவுத்தமர்க்கே. (௮)

சிவனெனுநாமந்தனக்கேயுடையசெம்மேனியெம்மான்
அவனெனையாட்கொண்டளித்திடுமாகிலவன்றனையான்
பவனெனுநாமம்பிடித்துத்திரிந்துபன்னாளழைத்தால்
இவனெனைப்பன்னாளழைப்பொழியானென்றெதிர்ப்படுமே. (௯)

என்னையொப்பாருன்னையெங்ஙனங்காண்பரியலியுன்னை
நின்னையொப்பாரநினைக்காணும்படித்தன்றுநின்பெருமை
பொன்னையொப்பாரித்தழலைவளாவிச்செம்மானஞ்செற்று
மின்னையொப்பாரமிளிருஞ்சடைக்கற்றைவேதியனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## தனித் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பவளத்தடவரைபோலுந்திண்டோள்களத்தோள்மிசையே
பவளக்குழைத்தழைத்தாலொக்கும்பல்சடையச்சடைமேல்
பவளக்கொழுந்தன்னபைம்முகநாகமந்நாகத்தொடும்
பவளக்கண்வாலமதியெந்தைசூடும்பனிமலரே. (௧)

முருகார்நறுமலரிண்டைதழுவிவண்டேமுரலும்
பெருகாரடைசடைக்கற்றையினாய்பிணிமேய்ந்திருந்த
இருகாற்குரம்பையிதுநானுடையதிதுபிரிந்தால்
தருவாயெனக்குன்றிருவடிக்கீழோர்தலைமறைவே. (௨)

மூவாவுருவத்துமுக்கண்முதல்வமிக்கூரிடும்பை
காவாயெனக்கடைதூங்குமணியைக்கையாலமரர்
நாவாயசைத்தவொலியொலிமாறியதில்லையப்பால்
தீயாயெரிந்துபொடியாகக்கழிந்ததிரிபுரமே. (௩)

பந்தித்தபாவங்களம்மையிற்செய்தனவிம்மைவந்து
சந்தித்தபின்னைச்சமழ்ப்பதென்னேவந்தமரர்முன்னாள்
முந்திச்செழுமலரிட்டுமுடிதாழ்த்தடிவணங்கும்
நந்திக்குமுந்துறவாட்செய்கிலாவிட்டநன்னெஞ்சமே. (௪)

அந்திவட்டத்திளங்கண்ணியனாறமர்செஞ்சடையான்
புந்திவட்டத்திடைப்புக்குநின்றானையும்பொய்யென்பனோ

சந்திவட்டச்சடைக்கற்றையலம்பச்சிறிதலர்ந்த
நந்திவட்டத்தொடுகொன்றைவளாவியநம்பனையே. (ரு)

உன்மத்தகமலர்சூடியுலகந்தொழச்சுடலைப்
பன்மத்தகங்கொண்டுபலகடைதோறும்பலிதிரிவான்
என்மத்தகத்தேயிரவும்பகலும்பிரிவரியான்
தன்மத்தகத்தோரிளம்பிறைசூடியசங்கரனே. (சு)

அரைப்பாலுடுப்பனகோவணச்சின்னங்களையமுண்ணல
வரைப்பாவையைக்கொண்டதெக்குடிவாழ்க்கைக்குவானிரைக்கும
இரைப்பாபடுதலையேந்துகையாமறைதேடுமெந்தாய்
உரைப்பாருரைப்பனவேசெய்தியாலெங்களுத்தமனே. (எ)

துறக்கப்படாதவுடலைத்துறந்துவெந்தூதுவரோ
டிறப்பனிறந்தாலிருவிசும்பேறுவனேறிவந்து
பிறப்பன்பிறந்தாற்பிறையணிவார்சடைப்பிஞ்ஞகன்பேர்
மறப்பன்கொலோவென்றென்னுள்ளங்கிடந்துமறுகிடுமே. (அ)

வேரிவளாயவிரைமலர்க்கொன்றைபுனைந்தனகண்
சேரிவளாயவென்சிந்தைபுகுந்தான்றிருமுடிமேல
வாரிவளாயவருபுனற்கங்கைசடைமறிவாய
ஏரிவளாவிக்கிடந்ததுபோலுமிளம்பிறையே. (கூ)

கன்னெடுங்காலம்வெதும்பிக்கருங்கடனீர்சுருங்கிப்
பன்னெடுங்காலமழைதான்மறுக்கினும்பஞ்சமுண்டென
றென்னொடுஞ்சூளறுபஞ்சனெஞ்சேயிமையாதமுக்கட்
பொன்னெடுங்குன்றமொன்றுண்டுகண்டீரிடர்படுகவிடத்தே. (கய)

மேலுமறிந்திலனான்முகன்மேற்சென்றுகீழிடந்தும
மாலுமறிந்திலன்மாலுற்றதேவழிபாடுசெய்யும
பாலன்மிசைச்சென்றுபாசம்விசிறிமறிந்தசிந்தைக்
காலனறிந்தானறிதற்கரியான்கழலடியே. (கக)

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசுசுவாமிகளருளிச்செய்த

முதற்றிருமுறை-முற்றிற்று.

சிவமயம்.

# ஐந்தாந்திருமுறையின்

## பதிக அட்டவணை.





உ

சிவமயம்.

## திருநாவுக்கரசுசுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்.

## இரண்டாந்திருமுறை

### கோயில் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

அன்னம்பாலிக்குந்தில்லைச்சிற்றம்பலம்
பொன்னம்பாலிக்குமேலுமிப்பூமிசை
என்னம்பாலிக்குமாறுகண்டின்புற
இன்னம்பாலிக்குமோவிப்பிறவியே. (க)

அரும்பற்றப்படவாய்மலர்கொண்டுநீர்
சுரும்பற்றப்படத்தூவித்தொழுமினோ
கரும்பற்றச்சிலைக்காமனைக்காய்ந்தவன்
பெரும்பற்றப்புலியூரெம்பிரானையே. (உ)

அரிச்சுற்றவினையாலடர்ப்புண்டுநீர்
எரிச்சுற்றக்கிடந்தாரென்றயலவர்
சிரிச்சுற்றப்பலபேசப்படாமுன்னம்
திருச்சிற்றம்பலஞ்சென்றடைந்துய்மினே. (ங)

அல்லலென்செயுமருவினையென்செயும்
தொல்லைவல்வினைத்தொண்டன்றானென்செயும்
தில்லைமாநகர்ச்சிற்றம்பலவனார்க்
கெல்லையில்லதோரடிமைபூண்டேனுக்கே. (ச)

ஊனிலாவியுயிர்க்கும்பொழுதெலாம்
நானிலாவியிருப்பனென்னாதனைத்
தேனிலாவியசிற்றம்பலவனார்
வானிலாவியிருக்கவும்வைப்பரே. (ரு)

சிட்டர்வானவர்சென்றுவரங்கொளும்
சிட்டர்வாழ்தில்லைச்சிற்றம்பலத்துறை
சிட்டன்சேவடிகைதொழச்செல்லுமச்
சிட்டர்பாலணுகான்செறுகாலனே. (சா)

ஒருத்தனாருலகங்கட்கொருசுடர்
திருத்தனார்தில்லைச்சிற்றம்பலவனார்
விருத்தனாரிளையார்விடமுண்டவெம்
அருத்தனாரடியாரையறிவரே. (எ)

விண்ணிறைந்ததோர்வெவ்வழலின்னுரு
எண்ணிறைந்தவிருவர்க்கறிவொணுக்
கண்ணிறைந்தகடிபொழிலம்பலத்
துண்ணிறைந்துநின்றாடுமொருவனே. (அ)

வில்லைவட்டப்படவாங்கியவுணர்தம்
வல்லைவட்டம்மதின்மூன்றுடனமாய்த்தவன்
தில்லைவட்டத்திசைகைதொழுவாரவினை
ஒல்லைவட்டங்கடந்தோடுதலுண்மையே (௯)

நாடிநாரணனுன்முகனென்றிவர்
தேடியுந்திரிந்துங்காணவல்லரோ
மாடமாளிகைசூழ்தில்லையம்பலத்
தாடிபாதமென்னெஞ்சுளிருக்கவே. (௧௦)

மதுரவாய்மொழிமங்கையோர்பங்கினன்
சதுரன்சிற்றம்பலவன்திருமலை
அதிரவார்த்தெடுத்தான்முடிபத்திற
மிதிகொள்சேவடிசென்றடைந்துய்ம்மினே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## கோயில்-திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்.

பனைக்கைமும்மதவேழமுரித்தவன்
நினைப்பவர்மனங்கோயிலாக்கொண்டவன்
அனைத்தும்வேடமாமம்பலக்கூத்தனைத்
தினைத்தனைப்பொழுதும்மறந்துய்வனோ (௧)

தீர்த்தனைச்சிவனைச்சிவலோகனை
மூர்த்தியைமுதலாயவொருவனை
பார்த்தனுக்கருள்செய்தசிற்றம்பலக்
கூத்தனைக்கொடியேன்மறந்துய்வனோ. (௨)

கட்டும்பாம்புங்கபாலங்கைமான்மறி
இட்டமாயிடுகாட்டெரியாடுவான்
சிட்டர்வாழ்தில்லையம்பலக்கூத்தனை
எட்டனைப்பொழுதும்மறந்துய்வனோ. (௩)

மாணிபாலகன்றந்தாட்டிவழிபட
நீணுலகெலாமாளக்கொடுத்தவன்
ஆணியைச்செம்பொனம்பலத்துண்ணின்ற
தாணுவைத்தமியேன்மறந்துய்வனோ. (௪)

பித்தனைப்பெருங்காடரங்காவுடை
முத்தனைமுளைவெண்மதிசூடியைச்
சித்தனைச்செம்பொனம்பலத்துண்ணின்ற
அத்தனையடியேன்மறந்துய்வனோ. (௫)

நீதியைநிறைவைமறைநான்குடன்
ஓதியையொருவர்க்குமறிவொணுச்

சோதியைச்சுடர்ச்செம்பொனினம்பலத்
தாதியையடியேன்மறந்துய்வனே. (௬)

மைகொள்கண்டனெண்டோளன்முக்கண்ணினன்
பைகொள்பாம்பரையாத்தபரமனா
செய்யமாதுறைசிற்றம்பலத்தெங்கள்
ஐயனையடியேன்மறந்துய்வனே. (௭)

முழுதும்வானுலகத்துளதேவர்கள்
தொழுதுபோற்றியுந்தூயசெம்பொன்னினால
எழுதிமேய்ந்தசிற்றம்பலக்கூத்தனை
இழுதையேன்மறந்தெங்ஙனமுய்வனே. (௮)

காருலாமலர்க்கொன்றையந்தாரனை
வாருலாமுலைமங்கைமணாளனைத்
தேருலாவியதில்லையுட்கூத்தனை
ஆரிலாவமுதைமறந்துய்வனே. (௯)

ஓங்குமாலவரையேந்தலுற்றான்சிரம்
வீங்கிவிம்முறவூன்றியதாளினன்
தேங்குநீர்வயல்சூழ்தில்லைக்கூத்தனை
பாங்கிலாத்தொண்டனேன்மறந்துய்வனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திரு அரத்துறை - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

கடவுளைக்கடலுள்ளெழுநஞ்சுண்ட
உடலுளானையொப்பாரியலாதவெம்
அடலுளானையரத்துறைமேவிய
சுடருளானைக்கண்டீர்நாந்தொழுவதே. (௧)

கரும்பொப்பானைக்கரும்பினிற்கட்டியை
விரும்பொப்பானைவிண்ணோருமறிகிலா
அரும்பொப்பானையரத்துறைமேவிய
சுரும்பொப்பானைக்கண்டீர்நாந்தொழுவதே. (௨)

பரொப்பானையெல்லாவுயிர்க்குமிறை
வேறொப்பானைவிண்ணோருமறிகிலா
ஆறொப்பானையரத்துறைமேவிய
ஊறொப்பானைக்கண்டீர்நாந்தொழுவதே. (௩)

பரம்பொப்பானைப்பகலிருணன்னிலா
இரம்பொப்பானையிளமதிசூடிய
வரம்பொப்பானையரத்துறைமேவிய
சுரம்பொப்பானைக்கண்டீர்நாந்தொழுவதே. (௪)

நெய்யொப்பானைநெய்யிற்சுடர்போல்வதோர்
மெய்யொப்பானைவிண்ணோருமறிகிலா
ஐயொப்பானையரத்துறைமேவிய
கையொப்பானைக்கண்டீர்நாந்தொழுவதே. (௫)

நெதியொப்பானைநெதியிற்கிழவனை
விதியொப்பானைவிண்ணோருமறிகிலா
அதியொப்பானையரத்துறைமேவிய
கதியொப்பானைக்கண்டாநாந்தொழுவதே. (௬)

புனலொப்பானைப்பொருந்தலார்தம்மையே
மினலொப்பானைவிண்ணோருமறிகிலா
அனலொப்பானையரத்துறைமேவிய
கனலொப்பானைக்கண்டாநாந்தொழுவதே. (௭)

பொன்னொப்பானைப்பொன்னிறச்சுடர்போல்வதோர்
மின்னொப்பானைவிண்ணோருமறிகிலா
அன்னொப்பானையரத்துறைமேவிய
தன்னொப்பானைக்கண்டாநாந்தொழுவதே. (௮)

காழியானைக்கனவிடையூருமெய்
வாழியானைவல்லோருமென்றின்னவர்
ஆழியான்பிரமற்குமரத்துறை
ஊழியானைக்கண்டாநாந்தொழுவதே (௯)

கலையொப்பானைக்கற்றார்க்கோரமுதினை
மலையொப்பானைமணிமுடியூன்றிய
அலையொப்பானையரத்துறைமேவிய
நிலையொப்பானைக்கண்டாநாந்தொழுவதே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருஅண்ணாமலை - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்.

வட்டனைமதிசூடியைவானவர்
சிட்டனைத்திருவண்ணாமலையனை
இட்டனையிகழ்ந்தார்புரமூன்றையும்
அட்டனையடியேன்மறந்துய்வனோ. (௧)

வானனைமதிசூடியமைந்தனைத்
தேனனைத்திருவண்ணாமலையனை
ஏனனையிகழ்ந்தார்புரமூன்றெய்த
ஆனனையடியேன்மறந்துய்வனோ (௨)

மத்தனைமதயானையுரித்தவெஞ்
சித்தனைத்திருவண்ணாமலையனை
முத்தனைமுனிந்தார்புரமூன்றெய்த
அத்தனையடியேன்மறந்துய்வனோ. (௩)

காற்றனைக்கலக்கும்வினைபோயறத்
தேற்றனைத்திருவண்ணாமலையனைக்
கூற்றனைக்கொடியார்புரமூன்றெய்த
ஆற்றனையடியேன்மறந்துய்வனோ. (௪)

மின்னனைவினைதீர்த்தெனையாட்கொண்ட
தென்னனைத்திருவண்ணாமலையனை

என்னனையிகழ்ந்தார்புரமூன்றெய்த
அன்னனையடியேன்மறந்துய்வனோ. (௫)

மன்றனைமதியாதவன்வேள்விமேற
சென்றனைத்திருவண்ணாமலையனை
வென்றனைவெகுண்டார்புரமூன்றையும்
கொன்றனைக்கொடியேன்மறந்துய்வனோ. (௬)

வீரனைவிடமுண்டனைவிண்ணவா
தீரனைத்திருவண்ணாமலையனை
ஊரனையுணராபுரமூன்றெய்த
ஆரனையடியேன்மறந்துய்வனோ. (௭)

கருவினைக்கடல்வாய்விடமுண்டவெந
திருவினைத்திருவண்ணாமலையனை
உருவினையுணரார்புரமூன்றெய்த
அருவினையடியேன்மறந்துய்வனோ. (௮)

அருத்தனையரவைநதலைநாகததைத்
திருததனைத்திருவண்ணாமலையனைக்
கருத்தனைக்கடியார்புரமூன்றெய்த
அருத்தனையடியேன்மறந்துய்வனோ. (௯)

அரக்கனையலறவவிரலூன்றிய
திருததனைத்திருவண்ணாமலையனை
இரக்கமாயென்னுடலுறுநோய்களைந்
துரக்கனைத்தொண்டனேன்மறந்துய்வனோ. (௧௰)

திருச்சிற்றம்பலம்.

---

திருஅண்ணாமலை - திருக்குறுந்தொகை.

திருசசிறறமபலம.

பட்டியேறுகநதேறிபபலவிலம
இட்டமாகவிரநதுண்டுழிதரும
அட்டமூர்த்தியண்ணாமலைகைதொழக்
கெட்டுபபோம்வினைகேடில்லைகாணமினே (௧)

பெற்றமேறுவர்பெய்பலிக்கென்றவா
சுற்றமாமிகுதொலபுகழாளொடும
அறறநதீர்க்குமண்ணாமலைகைதொழ
நற்றவததொடுஞானத்திருப்பரோ. (௨)

பல்லிலோடுகையேநதிப்பலவிலம்
ஒல்லைச்சென்றுணங்கல்கவர்வாரவர்
அலலறீர்க்குமண்ணாமலைகைதொழ
நல்லவாயினநமமையடையுமே. (௩)

பாடிச்சென்றுபலிக்கென்றுநின்றவர்
ஓலிப்போயினர்செய்வதொன்றென்கொலோ
ஆடிப்பாடியண்ணாமலைகைதொழ
ஓடிப்போகுநம்மேலைவினைகளே. (௪)

தேடிச்சென்றுதிருந்தடியேத்துமின
நாடிவந்தவர்நம்மையுமாட்கொள்வா
ஆடிப்பாடியண்ணாமலைகைதொழ
ஓடிப்போமதுள்ளவினைகளே. (ரு)

கட்டியொக்குங்கருமபினிடைததுணி
வெட்டிவீணைகள்பாடும்விகிர்தனூர்
அட்டமூர்த்தியண்ணாமலைமேவிய
நட்டமாடியைநண்ணநன்காகுமே. (சு)

கோணிக்கொண்டையாவேடமுன்கொண்டவர்
பாணிநட்டங்களாடும்பரமனூர்
ஆணிப்பொன்னினண்ணாமலைகைதொழப
பேணிநின்றபெருவினைபோகுமே. (எ)

கண்டந்தான்கறுத்தான்காலனாருயிர்
பண்டுகால்கொடுபாய்ந்தபரமனூர்
அண்டத்தோங்குமண்ணாமலைகைதொழ
விண்டுபோகுமமேலைவினைகளே. (அ)

மூந்திசென்றுமுப்போதுமவணங்குமின்
அந்திவாயொளியான்றனண்ணாமலை
சிநதியாவெழுவார்வினைதீர்த்திடும
கநதமாமலாசூடுங்கருத்தனே. (கூ)

மறையினனொடுமாலவன்காணகிலா
நிறையுநீர்மையுணின்றருள்செய்தவன்
உறையுமாணபினண்ணாமலைகைதொழப
பறையுநாஞ்செய்தபாவங்களானவே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

திருஆரூர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

எபபோதுமயிறையும்மறவாதுநீ
முப்போதுமபிரமன்றொழநின்றவன்
செபபோதுமபொனின்மேனிச்சிவனவன்
அப்போதைதககஞ்சலென்னுமாரூரனே. (க)

சடையின்மேலுமோர்தையலைவைத்தவா
அடைகிலாவரவையரையார்த்தவர்
படையினோதடங்கண்ணுமைபாகமா
அடைவர்போலிடுகாடராரூரரே. (உ)

விண்டவெண்டலையேகலனாகவே
கொண்டகமபலிதேருங்குழகனார்
துண்டவெண்பிறைவைத்தவிறையவா
அண்டவாணர்க்கருளுமாரூரரோ. (ங)

விடையுமேறுவர்வெண்டலையிற்பலி
கடைகடோறுந்திரியுமெங்கண்ணுதல்

உடையுஞ்சீரையுறைவதுகாட்டிடை
அடைவார்போலரங்காகவாரூரரே. (௪)

துளைக்கைவேழத்துரியுடல்போர்த்தவர்
வளைக்கையாளையோர்பாகமகிழ்வெய்தித்
திளைக்குந்திங்கட்சடையிற்றிசைமுழு
தளக்குஞ்சிந்தையர்போலுமாரூரரே. (௫)

பண்ணினின்மொழியாளையோர்பாகமா
விண்ணினாவிளங்குமமதிசூடியைச்
சுண்ணநீறுமெய்ப்பூசிச்சுடலையில்
நண்ணியாடுவர்போலுமாரூரரே. (௬)

மட்டுவார்குழலாளொடுமால்விடை
இட்டமாவுகந்தேறுமிறைவனார்
கட்டுவாங்கங்கனன்மழுமான்றனோ
டட்டமாம்புயமாகுமாரூரரே. (௭)

தோய்ந்ததிங்கள்கமழ்சடையான்கனல்
ஏந்தியெல்லியுளாடுமிறைவனார்
காய்ந்துகாமனைநோக்கினகண்ணினா
ஆய்ந்தநான்மறையோதுமாரூரரே. (௮)

உண்டநஞ்சுகண்டத்துளடக்கியங்
கிண்டைசெஞ்சடைவைத்தவியல்பினான்
கொண்டகோவணவாடையன்கூறொரி
அண்டவாணரடையுமாரூரரே. (௯)

மாலுநான்முகனும்மறிகிற்கிலா
காலனாயவனைக்கடந்திட்டுச்
சூலமான்மழுவேந்தியகையினா
ஆலமுண்டழகாயவாரூரரே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

### திருஆரூர்-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

கொக்கரைகுழல்வீணைகொடுகொட்டி
பக்கமேபகுவாயனபூதங்கள்
ஒக்கவாடலுகந்துமன்கூத்தராய்
அக்கினோடரவார்ப்பராரூரரே. (௧)

எந்தமாதவஞ்செய்தனைநெஞ்சமே
பந்தமவீடவையாயபராபரன்
அந்தமில்புகழாரூரரனெறி
சிந்தையுள்ளுஞ்சிரத்துளுந்தங்கவே. (௨)

வண்டுலாமலர்கொண்டுவளர்சடைக்
கிண்டைமாலைபுனைந்துமிராப்பகல்
தொண்டராகித்தொடர்ந்துவிடாதவர்க்
கண்டமாளவும்வைப்பராரூரரே. (௩)

துன்பெலாமறநீங்கிச்சுவததராய
என்பெலாநெககிராபபகலேத்திங்
றின்பராய்நினேந்தென்றுமிடையரு
அன்பராமவர்க்கன்பராரூரரே. (௪)

முருட்டுமெத்தையிலமுன்கிடத்தாமுனம
அரட்டரைவரையாசறுத்திட்டுநீர
முரட்டடித்தவத்தக்கன்றன்வேள்வியை
அரட்டடக்கிதனூரூரடைமினே. (௫)

எமமையாரிலலேயானுமுளேனலேன்
எமமையாருமிதுசெயவலலரே
அமமையாரெனக்கென்றென்றரற்றினேற
கமமையாரைத்தநதாராரூரையரே. (௬)

தண்டவாளியைத்தக்கன்றன்வேள்வியைச
செண்டதாடியதேவரகணடனேக்
கண்டுகணடிவள்காதலித்தன்பதாய்க்
கொண்டியாயினவாறெனறன்கோதையே. (௭)

இவணமைபபலபேசநகொடங்கினுள்
அவணமனறெனிலாரூரரனெனும
பவனிவீதிவிடங்கனேக்கணடிவள
தவணியாயினவாறென்றன்றையலே. (அ)

நீரைச்செஞ்சடைவைததநிமலனா
காரொத்தமிடறறாகனலவாயரா
ஆரத்தருநறையுமமணியாரூரைத
தூரத்தேதொழுவார்விணேதூளியே (௯)

உள்ளமேயொறுருதியுரைபபனுன்
வெளளநதாங்குவிரிசடைவேதியன
அள்ளனீரவயலாரூரமர்ந்தவெம
வள்ளல்சேவடிவாழ்த்திவணங்கிடே. (௧0)

விண்டமாலர்மேலுறைவானொடும
கொண்டல்வண்ணனுங்கூடியறிகிலா
அண்டவாணன்றனூரூரடிதொழுப
பண்டைவலவினைநில்லாபறையுமே. (௧௧)

மையுலாவியகண்டததனணட்டத்தன்
கையுலாவியசூலத்தன்கண்ணுதல்
ஐயனூரூரடிதொழுவார்க்கெலாம
உயயலாமலலலொன்றிலேகாண்மினே. (௧௨)

திருச்சிறறம்பலம்.

---

## திரு அன்னியூர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

மாறலைத்தபடுவெணடலேயினன்
நீறலைத்தசெம்மேனியனேரிழை
கூறலைத்தமெய்கோளரவாட்டிய
ஆறலைத்தசடையன்னியூரரே. (௧)

பண்டொத்தமொழியாளையோர்பாகமாய்
இண்டைச்செஞ்சடையன்னிருள்சேர்ந்ததோர்
கண்டத்தன்கரியின்னுரிபோர்த்தவன்
அண்டத்தப்புறத்தாரன்னியூரரே. (௨)

பரவிநாளும்பணிந்தவர்தம்வினை
துரவையாகத்துடைப்பவர்தம்மிடம்
குரவநாறுங்குழலுமைகூறராய்
அரவமாட்டுவார்போலன்னியூரரே. (௩)

வேதகீதர்விண்ணோர்க்குமுயர்ந்தவர்
சோதிவெண்பிறைதுன்றுசடைக்கணி
நாதர்நீதியினாலடியார்தமக்
காதியாகிநின்றாரன்னியூரரே. (௪)

எம்பிரானிமையோர்கட்கெலாம்
இன்பராகியிருந்தவெம்மீசனார்
துன்பவல்வினைபோகத்தொழுமவர்க்
கன்பராகிநின்றாரன்னியூரரே. (௫)

வெந்தநீறுமெய்பூசுநன்மேனியர்
கந்தமாமலர்சூடுங்கருத்தினர்
சிந்தையார்சிவனார்செய்யதீவண்ணர்
அந்தணாளர்கண்டீரன்னியூரரே. (௬)

ஊனையார்தலையிற்பலிகொண்டுழல்
வானைவானவர்தாங்கள்வணங்கவே
தேனையார்குழலாளையோர்பாகமா
ஆனையீருரியாரன்னியூரரே. (௭)

காலைபோய்ப்பலிதேர்வர்கண்ணார்நெற்றி
மேலைவானவர்வந்துவிரும்பிய
சோலைசூழ்புறங்காடரங்காகவே
ஆலின்கீழறத்தாரன்னியூரரே. (அ)

எரிகொண்மேனியரென்பணிந்தின்பராய்த்
திரியுமூவெயிறீயெழச்செற்றவர்
கரியமாலொடுநான்முகன்காண்பதற்
கரியராகிநின்றாரன்னியூரரே. (௯)

வஞ்சரக்கன்கரமுஞ்சிரத்தொடும்
அஞ்சுமஞ்சுமோராறுநான்குமிறப்
பஞ்சிமெல்விரலாலடர்த்தாயிழை
அஞ்சலஞ்சலென்றாரன்னியூரரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருமறைக்காடு - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

ஓதமால்கடல்பரவியுலகெலாம்
மாதரார்வலங்கொண்மறைக்காடனைக்

காதல்செய்துகருதப்படுமவர்
பாதமேத்தப்பறையுநம்பாவமே. (௧)

பூக்குந்தாழைபுறணியருகெலாம்
ஆக்கந்தானுடைமாமறைக்காடரோ
ஆர்க்குங்காண்பரியீரடியார்தம்மை
நோக்கிக்காண்பதுநும்பணிசெய்யிலே. (௨)

புன்னைஞாழல்புறணியருகெலாம்
மன்னினார்வலங்கொண்மறைக்காடரோ
அன்னமென்னடையாளையொர்பாகமாச்
சின்னவேடமுகப்பதுசெல்வமே. (௩)

அட்டமாமலர்சூடியடம்பொடு
வட்டப்புன்சடைமாமறைக்காடரோ
நட்டமாடியுநான்மறைபாடியும்
இட்டமாகவிருக்குமிடமிதே. (௪)

நெய்தலாம்பனிநிறைவயல்சூழ்தரும்
மெய்யினார்வலங்கொண்மறைக்காடரோ
தையல்பாகங்கொண்டாகவர்புன்சடைப்
பைதல்வெண்பிறைபாம்புடன்வைப்பதே. (௫)

துஞ்சும்போதுந்துயிலின்றியேத்துவார்
வஞ்சின்றிவலங்கொண்மறைக்காடரோ
பஞ்சின்மெல்லடிப்பாவைபலிகொணாந்
தஞ்சிநிற்பதுமைந்தலைநாகமே. (௬)

விண்ணுளாரவிரும்பியெதிர்கொள்வே
மண்ணுளாரவணங்குமமறைக்காடரோ
கண்ணினாலுமைக்காணக்கதவினைத்
திண்ணமாகத்திறந்தருள்செய்ம்மினே. (௭)

திருவினார்செல்வமல்குவிழாவணி
மருவினார்வலங்கொண்மறைக்காடரோ
உருவினாளுமையாளையொர்பாகமாய்
மருவினாய்கங்கையைச்சென்னிதன்னிலே. (௮)

சங்குவந்தலைக்குந்தடங்கானல்வாய்
வங்கமாரவலங்கொண்மறைக்காடரோ
கங்கைசெஞ்சடைவைப்பதுமன்றியே
அங்கையிலனலேந்தலழகிதே. (௯)

குறைக்காட்டான்விட்டதேர்குத்தமாமலை
இறைக்காட்டியெடுத்தான்றலையீரைந்தும்
மறைக்காட்டானிறையூன்றலுமவாய்விட்டான்
இறைக்காட்டாயெம்பிரானுனையேத்தவே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

### திருமறைக்காடு - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

பண்ணினேர்மொழியாளுமைபங்கரோ
மண்ணினார்வலஞ்செய்ம்மறைக்காடரோ
கண்ணினாலுமைக்காணக்கதவினைத்
திண்ணமாகத்திறந்தருள்செய்ம்மினே. (க)

ஈண்டுசெஞ்சடையாகத்துளீசரோ
மூண்டகார்முகிலின்முறிக்கண்டரோ
ஆண்டுகொண்டநீரேயருள்செய்திடும்
நீண்டமாக்கதவின்வலிநீக்குமே. (உ)

அட்டமூர்த்தியதாகியவப்பரோ
துட்டவாவான்புரஞ்சுட்டசுவண்டரோ
பட்டங்கட்டியசென்னிப்பரமரோ
சட்டவிக்கதவந்திறப்பிம்மினே. (௩)

அரியமாமறையோதியநாவரோ
பெரியவான்புரஞ்சுட்டசுவண்டரோ
விரிகொள்கோவணவாடைவிருத்தரோ
பெரியவான்கதவம்பிரிவிக்கவே. (௪)

மலையினீடிருக்கும்மறைக்காடரோ
கலைகள்வந்திறைஞ்சுங்கழலேத்தரோ
விலையின்மாமணிவண்ணவுருவரோ
தொலைவிலாக்கதவந்துணைநீக்குமே. (௫)

பூக்குந்தாழைபுறணியருகெலாம்
ஆக்குந்தண்பொழில்சூழ்மறைக்காடரோ
ஆர்க்குங்காண்பரியீரடிகேளுமை
நோக்கிக்காணக்கதவைத்திறவுமே. (௬)

வெந்தவெண்பொடிபூசும்விகிர்தரோ
அந்தமில்லவியணிமறைக்காடரோ
எந்தைநீயடியார்வந்திறைஞ்சிட
இந்தமாக்கதவம்பிணிநீக்குமே. (௭)

ஆறுசூடுமணிமறைக்காடரோ
கூறுமாதுமைக்கீந்தகுழகரோ
ஏறதேறியவெம்பெருமானிந்த
மாறிலாக்கதவம்வலிநீக்குமே. (௮)

சுண்ணவெண்பொடிபூசுஞ்சுவண்டரோ
பண்ணியேறுகந்தேறும்பரமரோ
அண்ணலாதியணிமறைக்காடரோ
திண்ணமாக்கதவந்திறப்பிம்மினே. (௯)

அரக்கனைவிரலாலடர்த்திட்டநீர்
இரக்கமொன்றிலீரெம்பெருமானீரே
சுரக்கும்புன்னைகள்சூழ்மறைக்காடரோ
சரக்கவிக்கதவந்திறப்பிம்மினே. (௰)

திருச்சிற்றம்பலம்.

## திருமீயச்சூர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

தோற்றுங்கோயிலுந்தோன்றியகோயிலும்
வேற்றுக்கோயில்பலவுளமீயச்சூர்
கூற்றம்பாய்ந்தகுளிர்புன்சடையரற்
கேற்றங்கோயில்கண்டீரிளங்கோயிலே. (க)

வந்தனையடைக்குமடித்தொண்டர்கள்
பந்தனைசெய்துபாவிக்கின்றவ்வன்
சிந்தனைதிருத்துந்திருமீயச்சூர்
எந்தமையுடையாரிளங்கோயிலே. (உ)

பஞ்சமந்திரமோதும்பரமனார்
அஞ்சவானையுரித்தனலாடுவார்
நெஞ்சம்வாழிநினைந்திருமீயச்சூர்
எந்தமையுடையாரிளங்கோயிலே. (ங)

நாறுமல்லிகைகூவிளஞ்செண்பகம்
வேறுவேறுவிரித்தசடையிடை
ஆறுகொண்டுகந்தான்றிருமீயச்சூர்
ஏறுகொண்டுகந்தாரிளங்கோயிலே. (ச)

வெவ்வவண்ணத்துநாகம்வெருவவே
கவ்வவண்ணக்கனல்விரித்தாடுவார்
செவ்வவண்ணந்திகழ்திருமீயச்சூர்
எவ்வவண்ணம்பிரானிளங்கோயிலே. (ரு)

பொன்னங்கொன்றையும்பூவணிமாலையும்
பின்னுஞ்செஞ்சடைமேற்பிறைசூடிற்று
மின்னுமேகலையாளொடுமீயச்சூர்
இன்னநாள்கலாரிளங்கோயிலே. (சா)

படைகொள்பூதத்தன்பைங்கொன்றைத்தாரினன்
சடைகொள்வெள்ளத்தன்சாந்தவெண்ணீற்றினன்
விடைகொளூர்தியினான்றிருமீயச்சூர்
இடைகொண்டேத்தநின்றாரிளங்கோயிலே. (எ)

ஆறுகொண்டசடையினர்தாமுமோர்
வேறுகொண்டதோர்வேடத்தராகிலும்
கூறுகொண்டுகந்தாளொடுமீயச்சூர்
ஏறுகொண்டுகந்தாரிளங்கோயிலே. (அ)

வேதத்தானென்பர்வேள்வியுளானென்பர்
பூதத்தானென்பர்புண்ணியன்றன்னையே
கீதத்தான்கிளருந்திருமீயச்சூர்
ஏதந்தீர்க்கநின்றாரிளங்கோயிலே. (கூ)

கடுக்கனைகயிலாயமலைதனை
எடுக்கலுற்றவிராவணனீடற
இடுக்கணின்றிவெகுண்டவன்மீயச்சூர்
இடுக்கண்டீர்க்கநின்றாரிளங்கோயிலே. (க0)

---

திருச்சிற்றம்பலம்.

### திருவீழிமிழலை - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

கரைந்துகைதொழுவாரையுங்காதலன்
வரைந்துவைதெழுவாரையும்வாட்டலன்
நிரந்தபாரிடத்தோடவர்தங்களும்
விரைந்துபோவதுவீழிமிழலைக்கே. (க)

பற்றுவெல்கொடியீசன்றனுதிரை
நாற்றஞ்சூடுவானனனாறுந்திங்களார்
நீற்றுச்சாந்தனவெள்ளைவிரவலார்
வேற்றுக்கோலங்கொள்வீழிமிழலையே. (உ)

புனைபொற்சூலத்தனபோர்விடையூர்தியான்
வினைவெனுகத்தன்வெண்மழுவாளினன்
நினையநின்றவனீசனையேயெனு
வினையிலார்தொழும்வீழிமிழலையே. (ங)

மாட்டதாமனத்துடன்வைத்தவர்
கோட்டதாக்குருக்கேத்திரத்தாபலா
பாட்டதாபழிப்பாபழிப்பலவதோர்
வேட்டதார்தொழும்வீழிமிழலையே. (ச)

எடுத்தவெல்கொடியேறுடையான்றமர்
உடுப்பர்கோவணமுண்பதுபிச்சையே
கெடுப்பதாவதுகீணின்றவல்வினை
விடுத்துப்போவதுவீழிமிழலைக்கே. (ரு)

குழலையாழ்மொழியாரிசைவேட்கையால்
உழலையாக்கையையூணுமுணாவிலீர்
தழலைநீர்மடிக்கொள்ளன்மின்சாற்றினேம்
மிழலையானடிசாரவிண்ணாள்வரே. (சா)

தீரன்றீத்திரளன்சடைத்தங்கிய
நீரனுடையநீற்றன்வண்டார்கொன்றைத்
தாரன்மாலையன்றண்ணறுங்கண்ணியன்
வீரன்வீழிமிழலைவிகிர்தனே. (எ)

எரியினாரிறையாரிடுகாட்டிடை
நரியினாரிரியாமகிழ்கின்றதோர்
பெரியனாதம்பிறப்பொடுசாதலை
விரியினார்தொழுவீழிமிழலையே. (அ)

நீண்டசூழ்சடைமேலோர்நிலாமதி
காண்டுசேவடிமேலோர்கனைகழல்
வேண்டுவாரவர்வீதிப்புகுதிலர்
மீண்டும்போவதுவீழிமிழலைக்கே. (கூ)

பாலையாழொடுசெவ்வழிபண்கொள
மாலைவானவர்வந்துவழிபடும்
மாலையாரழலந்தணராகுதி
வேலையார்தொழும்வீழிமிழலையே. (0க)

மழலையேற்றுமணாளன்றிருமலை
சுழலவார்த்தெடுத்தான்முடிதோளிறக்
கழல்கொள்காலிற்றிருவிர லூன்றலும
மிழலையானடிவாழ்கெனவிட்டதே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவீழிமிழலை - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

என்பொனேயிமையோர்தொழுபைங்கழல்
நன்பொனேநலந்தீங்கறிவொன்றிலேன்
செம்பொனேதிருவீழிமிழலையுள்
அன்பனேயடியேனைக்குறிக்கொளே. (க)

கண்ணினாற்களிகூரக்கையாற்றொழு
தெண்ணுமாறறியாதிளைப்பேன்றனை
விண்ணுளார்தொழும்வீழிமிழலையுள்
அண்ணலேயடியேனைக்குறிக்கொளே. (உ)

ஞாலமேவிசும்பேநலந்தீமையே
காலமேகருத்தேகருத்தாற்றொழும
சீலமேதிருவீழிமிழலையுள்
கோலமேயடியேனைக்குறிக்கொளே. (ங)

முத்தனேமுதல்வாமுகிழ்ம்முளை
ஒத்தனேயொருவாவுருவாகிய
சித்தனேதிருவீழிமிழலையுள்
அத்தனேயடியேனைக்குறிக்கொளே. (ச)

கருவனேகருவாய்த்தெளிவார்க்கெலாம்
ஒருவனேயுயிரப்பாயுணர்வாய்நின்ற
திருவனேதிருவீழிமிழலையுள
குருவனேயடியேனைக்குறிக்கொளே. (ரு)

காந்தனேபொழிமேலழையுங்காதலால்
ஆத்தனேயமரர்க்கயன்றன்றலை
சோந்தனேதிருவீழிமிழலையுள்
கூத்தனேயடியேனைக்குறிக்கொளே. (சா)

நீதிவானவர்நித்தநியமஞ்செய்
தோதிவானவருமமுணராததோர்
வேதியாவிகிர்தாதிருவீழியுள்
ஆதியேயடியேனைக்குறிக்கொளே. (எ)

பழகநின்னடிசூடியபாலனைக்
கழகின்மேல்வைத்தகாலனைச்சாடிய
அழகனேயணிவீழிமிழலையுள்
குழகனேயடியேனைக்குறிக்கொளே. (அ)

அண்டவானவர்கூடிக்கடைந்தநஞ்
சுண்டவானவனேயுணர்வொன்றிலேன்

விண்டவான்பொழில்வீழிமிழலையுள்
கொண்டனையடியேனைக்குறிககொளே. (௯)

ஒருத்தனாங்கலைத்தாங்கலுற்றானாம
வருத்தினாய்மஞ்சனோன்மனமன்னிய
இருத்தனைதிருவீழிமிழலையுள
அருத்தனையடியேனைக்குறிக்கொளே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருவிடைமருதூர்-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

பாசமொன்றிலராய்ப்பலபத்தர்கள்
வாசநாண்மலர்கொண்டடிவைகலும
ஈசனெம்பெருமானிடைமருதினில
பூசநாம்புகுதும்புனலாடவே. (௧)

மறையினாண்மலர்கொண்டடிவானவர்
முறையினான்முனிகள்வழிபாடுசெய்
இறைவனெம்பெருமானிடைமருதினில்
உறையுமீசனையுள்குமென்னுள்ளமே. (௨)

கொன்றைமாலையுங்கூவிளமத்தமும்
சென்றுசேரத்திகழ்சடைவைத்தவன
என்றுமெந்தைபிரானிடைமருதினை
நன்றுகைதொழுவார்வினைநாசமே. (௩)

இம்மைவானவர்செல்வம்விளைத்திடும
அம்மையேற்பிறவித்துயர்நீத்திடும்
எம்மையாளுமிடைமருதன்கழல
செம்மையேதொழுவார்வினைசிந்துமே (௪)

வண்டணைந்தனவன்னியுங்கொன்றையும
கொண்டணிந்தசடைமுடிக்கூத்தனார
எண்டிசைக்குமிடைமருதாவெனா
விண்டுபோயறுமேலைவினைகளே. (௫)

ஏறதேறுமிடைமருதீசனார
கூறுவார்வினைதீர்க்குங்குழகனார்
ஆறுசெஞ்சடைவைத்தவழகனாக்
கூறியூறியுருகுமென்னுள்ளமே. (௬)

விண்ணுளாரும்விரும்பப்படுபவர்
மண்ணுளாருமதிக்கப்படுபவர்
எண்ணினார்பொழில்சூழிடைமருதினை
நண்ணினாரைநண்ணாவினைநாசமே. (௭)

வெந்தவெண்பொடிபூசும்விகிர்தனார்
கந்தமாலைகள்சூடுங்கருத்தனார
எந்தையென்னிடைமருதினிலீசனைச்
சிந்தையானினைவார்வினைதேயுமே. (௮)

வேதமோதும்விரிசடையண்ணலார
பூதம்பாடநின்றாடுமபுனிதனார
ஏதநீக்குமிடைமருதாவென்று
பாதமேத்தப்பறையுநம்பாவமே. (௯)

கனியிலுங்கட்டிபட்டகரும்பினும்
பனிமலாக்குழற்பாவைநலலாரினும
தனிமுடிகவித்தாளுமரசினும்
இனியன்றன்னடைந்தார்க்கிடைமருதனே (௧௦)

முற்றிலாமதிசூடுமுதல்வனார
ஒற்றினாமலையாலரக்கன்முடி
எற்றினார்கொடியாரிடைமருதினைப
பற்றினாரைப்பற்றாவினைபாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிடைமருதூர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

பறையினோசையும்பாடலினோசையும
மறையினோசையுமவைகுமயலெலாம
இறைவனெங்கள்பிரானிடைமருதினில்
உறையுமீசனையுள்குமென்னுள்ளமே (௧)

மனத்துண்மாயனைமாசறுசோதியைப
புனிற்றுப்பிள்ளைவெள்ளைமதிசூடியை
எனக்குத்தாயையெமமானிடைமருதனை
நினைத்திட்டூறிநிறைந்ததென்னுள்ளமே. (௨)

வண்டணைந்தனவன்னியுமத்தமும்
கொண்டணிந்தசடைமுடிக்கூத்தனை
எண்டிசைக்குமிடைமருதாவென
விண்டுபோயறுமேலைவினைகளே. (௩)

துணையிலாமையிற்றூங்கிருட்பேய்களோ
டணையலாவதெமக்கரிதேயென
இணையிலாவிடைமாமருதிலெழு
பணையிலாகமஞ்சொல்லுந்தன்பாங்கிக்கே. (௪)

மண்ணையுண்டமால்காணான்மலரடி
விண்ணைவிண்டயன்காணான்வியன்முடி
மொண்ணைமாமருதாவென்றென்மொய்குழல
பண்ணையாயமுந்தானுமபயிலுமே. (௫)

மங்கைகாணக்கொடார்மணமாலையைக்
கங்கைகாணக்கொடார்முடிக்கண்ணியை
நங்கைமீரிடைமருதரிந்நங்கைக்கே
எங்குவாங்கிக்கொடுத்தாரிதழியே. (௬-௭-௮-௯-௧௦-௧௧.)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பேரெயில்-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

மறையுமோதுவர் மான்மறிக்கையினர்
கறைகொள்கண்டமுடைய கபாலியார்
துறையும்போகுவர் தூயவெண்ணீற்றினர்
பிறையுஞ்சூடுவர் பேரெயிலாளரே. (க)

கணக்கிலாரையுங் கற்றுவல்லாரையும்
வணக்கிலாநெறி கண்டுகொண்டாரையும்
தணக்குவார் தணிப்பார் பெரும்பொருளையும்
பிணக்குவாரவர் பேரெயிலாளரே. (உ)

சொரிவிப்பார்மழை சூழ்கதிர்த் திங்களை
விரிவிப்பார் வெயிற்பட்ட விளங்கொளி
எரிவிப்பார் தணிப்பார் பெரும்பொருளையும்
பிரிவிப்பாரவர் பேரெயிலாளரே (௩)

செறுவிப்பார் சிலையால் மதிற்றீர்த்தங்கள்
உறுவிப்பார் பவத்தார்களுள வினை
அறுவிப்பார் தவன்றியு நல்வினை
பெறுவிப்பாரவர் பேரெயிலாளரே. (௪)

மறையாரறியார் மழுவாளினார்
பறியாட்டியோரைத் தலைப்பாமயவோ
சுறறியாரவர் தூமெறியாவரிகு
பெறியாரவர் பேரெயிலாளரே. (௫)

ஒருக்குவார் குழற்செல்வன சேவடி
இருக்குவாய்மொழியாற்றனைப் பேசுவார்
சுருக்குவார் துயர் தோற்றங்களாற்றறப்
பெருக்குவாரவர் பேரெயிலாளரே. (௬)

முன்னையார் மயிலூர்தி முருகவேள்
தன்னையாரெனின் மண்ணோர் தலைமகன்
என்னையாளுமிறையவனெம்பிரான்
பின்னையாரவர் பேரெயிலாளரே (௭)

உழைத்துத் துள்ளியுமுள்ளத்துமேயுரு
இழைத்துமெந்தைபிரானென்றிராப்பகல்
அழைக்குமன்பினராயவடியவர்
பிழைப்புநீக்குவார் பேரெயிலாளரே. (௮)

நீருலாங்கிமிர் புன்சடையார் வெறு
ஏருலாவனங்கன் திறல்வாட்டிய
வாருலாவனமென்முலையாளொடும்
பேருளாரவர் பேரெயிலாளரே. (௯)

பாணியார்படுதம்பெயர்ந்தாடுவார்
தூணியார் விசயற்கருள்செய்தவர்
மாணியாய்மண்ணளந்தவனும் முகன்
பேணியாரவர் பேரெயிலாளரே (௰)

மதத்தவாளரக்கன்மணிப்புட்பகம்
சிதைக்கவேதிருமாமலைக்கீழ்ப்புக்குப
பதைத்தங்கார்த்தெடுத்தான்பத்துநீண்முடி
பிதக்கவூன்றியபேரெயிலாளரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருவெண்ணி - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

முத்தினைப்பவளத்தைமுளைத்தவெண
தொத்தினைச்சுடரைச்சுடர்போலொளிப
பித்தனைக்கொலுநஞ்சினைவானவா
நித்தனைநெருநற்கண்டவெண்ணியே. (௧)

வெண்ணித்தொன்னகர்மேயவெண்டிங்களார
கண்ணித்தாழ்த்தசடையர்கபாலியார
எண்ணித்தம்மைநினைந்திருந்தேனுக்கு
நண்ணித்திட்டமுதாயுமென்னுவுக்கே. (௨)

காற்றினைக்கனலைக்கதிர்மாமணி
நீற்றினைநினைபபார்வினைநீக்கிடுங்
கூற்றினையுதைத்திட்டகுணமுடை
வீற்றினைநெருநற்கண்டவெண்ணியே. (௩)

நல்லனைத்திகழ்நான்மறையோதியைச
சொல்லனைச்சுடரைச்சுடர்போலொளிா
கல்லனைக்கடிமாமதின்மூன்றெய்த
வில்லனைநெருநற்கண்டவெண்ணியே. (௪)

சுடரைப்போலொளிர்சுண்ணவெண்ணீற்றனை
அடருஞ்சென்னியில்வைத்தவமுதினைப
படருஞ்செஞ்சடைப்பான்மதிசூடியை
இடரைநீக்கியயான்கண்டவெண்ணியே. (௫)

பூதநாதனைப்பூம்புகலூரனைத்
தாதெனத்தவழுமமதிசூடியை
நாதனைநலலநான்மறையோதியை
வேதனைநெருநற்கண்டவெண்ணியே (௬)

ஒருத்தியையொருபாகத்தடக்கியும
பொருத்தியபுனிதனைபுரிபுனசடைக
கருத்தனைக்கறைகண்டனைக்கண்ணுதல
திருத்தனைநெருநற்கண்டவெண்ணியே (௭)

சடையனைச்சரிகோவணவாடைகொண்
டுடையனையுணாவாவினைதீர்த்திடும
படையனைமழுவாளொடுபொய்தரும
விடையனைநெருநற்கண்டவெண்ணியே. (௮)

பொருப்பனைப்புனலாளொடுபுன்சடை
அருப்பனையிளந்திங்களங்கண்ணியான்

பருப்பதம்பரவித்தொழுந்தொண்டர்கள்
விருப்பனைநெருநற்கண்டவெண்ணியே. (௯)

சூலவஞ்சனைவல்லவெஞ்சுந்தரன்
கோலமாவருள்செய்ததோர்கொள்கையால்
காலனஞ்சவுதைத்திருள்கண்டமாம
வேலைநஞ்சனைக்கண்டதுவெண்ணியே. (க0)

இலையினார்கொன்றைசூடியவீசனா
மலையினாலரக்கன்றிறலவாட்டினா
சிலையினான்மதிலெய்தவன்வெண்ணியைத்
தலையினாறதொழுவாரவினைதாவுமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கடம்பந்துறை - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றமபலம்.

முறறிலாமுலையாளிவளாகிலும
அறறநீர்க்குமறிவிலளாகிலும
கறறைச்செஞ்சடையான்கடமபந்துறைப
பெறறமூர்தியென்றாளெங்கள்பேதையே. (க)

தனகிருநததேராதன்மையராகிலும்
உனகுதீரத்தொழுதெழுமின்களோ
கனகபபுனசடையானகடம்பந்துறை
நினையவல்லவாநீள்விசும்பாள்வரே. (உ)

ஆரியநதமிழோடிசையானவன்
கூரியகுணத்தார்குறிநின்றவன்
காரிகையுடையான்கடமபநதுறைச்
சேரியலபததாசென்றடைமின்களே. (௩)

பண்ணினின்மொழிகேட்கும்பாமனை
வணணநன்மலரான்பலதேவரும்
கணணனுமமறியான்கடமபநதுறை
நண்ணநம்வினையாயினநாசமே. (௪)

மறைகொண்டமனத்தானைமனத்துளே
நிறைகொண்டநெஞ்சினுள்ளூறவைம்மினோ
கறைகண்டனுறையுங்கடம்பநதுறை
சிறைகொண்டவினைதீரத்தொழுமினே. (௫)

நங்கைபாகம்வைத்தநறுஞ்சோதியைப
பங்கமின்றிப்பணிநதெழுமின்களோ
கங்கைச்செஞ்சடையான்கடம்பந்துறை
அங்கமோதியரனுறைகின்றதே. (௬)

அரியநான்மறையாறங்கமாயைந்து
புரியன்றேவர்களேத்தநஞ்சுண்டவன்
கரியகண்டத்தினன்கடமபந்துறை
உரியவாறுநினைமடநெஞ்சமே. (௭)

விண்ணினார்கள்வியக்கப்படுவன
கண்ணினார்கடம்பூர்க்கரக்கோயிலே. (எ)

அங்கையாரழலேந்தினாடலன்
மங்கைபாடமகிழ்ந்துடன்வார்சடைக்
கங்கையானுறையுங்கரக்கோயிலைத்
தங்கையாற்றொழுவார்வினைசாயுமே. (அ)

நங்கடம்பனைப்பெற்றவள்பங்கினன்
தென்கடம்பைத்திருக்கரக்கோயிலான்
றன்கடனடியேனையுந்தாங்குதல்
என்கடன்பணிசெய்துகிடப்பதே (கூ)

பண்ணங்கொள்பாற்கடற்பாம்பணையானொடு
மண்ணங்கமழ்மலர்த்தாமரையானவன்
பிணங்கும்பேர்ழமெலாம்பெருமாற்கிடம்
கணங்கள்போற்றிசைக்குங்கரக்கோயிலே. (கo)

வரைக்கணாலெடுத்தோளுடையான்றலை
அரைக்கவூன்றியருள்செய்தவீசனார்
திரைக்குந்தண்புனல்சூழ்கரக்கோயிலை
உரைக்குமுள்ளத்தவர்வினையோயுமே (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கடம்பூர்-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

ஒருவராயிருமூவருமாயவன்
குருவதாயகுழகனுறைவிடம்
பருவரால்குதிகொள்ளும்பழனஞ்சூழ்
கருவதாங்கடம்பூர்க்கரக்கோயிலே. (க)

வன்னிமத்தம்வளரிளந்திங்களோர்
கன்னியாளைக்கதிர்முடிவைத்தவன்
பொன்னியாமலர்குபுணர்முலையாளொடும்
மன்னினான்கடம்பூர்க்கரக்கோயிலே. (உ)

இல்லக்கோலமுமிந்தவிளமையு
மல்லற்கோலமறுத்துய்யவல்லிரே
ஒல்லைச்சென்றடையுங்கடம்பூர்நகர்ச்
செல்வக்கோயிற்றிருக்கரக்கோயிலே. (ங)

வேறுசிந்தையிலாதவர்தீவினை
கூறுசெய்தகுழகனுறைவிடம்
ஏறுசெல்வத்திமையவர்தாந்தொழும்
ஆறுசேர்கடம்பூர்க்கரக்கோயிலே. (ச)

திங்கடங்கியசெஞ்சடைமேலுமோர்
மங்கைதங்குமணாளனிருப்பிடம்
பொங்குசேர்மணற்புன்னையுஞாழலும்
தெங்குசேர்கடம்பூர்க்கரக்கோயிலே. (ரு)

மலிலைஞாலத்துவாழுமுயிர்க்கெலாம்
எல்லையானபிரானிருப்பிடம்
கொல்லைமுல்லைகொழுந்தகைமல்லிகை
நல்லசேர்கடம்பூர்க்கரக்கோயிலே. (சு)

தளரும்வாளரவத்தொடுதண் மதி
வளரும்பொற்சடையாற்கிடமாவது
கிளருமபேரொலிகின்னரம்பாட்டறுக
களரியார்கடம்பூர்க்கரக்கோயிலே. (எ)

உற்றாராயுறவாகியுயிர்க்கெலாம்
பெற்றாராயபிரானுறைவிடம்
முற்றார்மும்மதிலெய்தமுதலவனா
கற்றாசோகடம்பூர்க்கரக்கோயிலே. (அ)

வெள்ளைநீறணிமேனியவாக்கெலாம்
உள்ளமாயபிரானுறைவிடம்
பிள்ளைவெண்பிறைசூடியோர்சென்னியான்
கள்வன்சேர்கடம்பூர்க்கரக்கோயிலே. (கூ)

பாபபுநீரிலங்கைக்கிறைவனவன்
உரத்தினலடுக்கல்லெடுக்கலுற
இரக்கமின்றியிறைவிரலாறலை
அரககினன்கடம்பூர்க்கரக்கோயிலே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

திருவின்னம்பர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

எனனிலாருமெனக்கினியாரிலை
என்னிலுமினியானொருவனுளன்
என்னுளேயுயிர்பபாய்பபுறம்போநதுபுக்
கென்னுளேநிற்குமின்னம்பரீசனே. (க)

மட்டுணபார்களமடந்தையாவாடகளுல்
சட்டுண்பாாகள்கருதுவதென்கொலோ
தட்டிமுட்டித்தள்ளாடித்தழுக்குழி
எட்டுமூர்த்தியரின்னம்பரீசனே. (உ)

கனலுங்கண்ணியுந்தண்மதியோடுடன்
புனலுங்கொன்றையுஞ்சூடும்புரிசடை
அனலுஞ்சூலமுமான்மறிக்கையினன்
இனலுமென்மனத்தின்னம்பரீசனே. (ந)

மழைக்கண்மாமயிலாலுமகிழ்ச்சியான்
அழைக்குந்தன்னடியார்கடமன்பினைக்
குழைக்குந்தன்னைக்குறிகொளவேண்டியே
இழைக்குமென்மனத்தின்னம்பரீசனே. (ச)

தென்னவனென்னையாளுஞ்சிவனவன்
மன்னவன்மதியம்மறையோதியான்

முன்னமன்னவன்சேரலன்பூழியான்
இன்னமின்புற்றவின்னம்பரீசனே. (௫)

விளக்கும்வேறுபடப்பிறருள்ளத்தில்
அளக்குநதன்னடியாரமனத்தன்பினைக்
குளக்குமென்னைக்குறிகொளவேணடியே
இளக்குமென்மனத்தின்னம்பரீசனே. (௬)

சடைக்கணாள்புனலாளனல்கையதோர்
கடைக்கணான்மங்கைநோக்கிமவான்மகள்
படைக்கணாறபருகபபடுவானமக்
கிடைக்கணாய்நின்றவின்னம்பரீசனே. (௭)

தொழுதுதூமலர்தூவித்துதித்துநின
றழுதுகாமுறறாற்றுகின்றாரையும்
பொழுதுபோக்கிபபுறககணிபபாரையும்
எழுதுங்கீழ்க்கணக்கினம்பரீசனே. (௮)

விரியுநதண்ணிளவேனிலில்வெண்பிறை
புரியுங்காமனைவேவப்புருவமும்
திரியுமெல்லையிலமும்மதிநீயெழுந
தெரியநோக்கியவின்னம்பரீசனே. (௯)

சனியும்வெள்ளியுந்திங்களுஞாயிறு
முனிவனாய்முடிபதுடையான்றனைக்
கனியவூன்றியகாரணமென்கொலோ
இனியனாய்நின்றவின்னம்பரீசனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்குடமூக்கு - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்.

பூவணததுவன்புண்ணியனணணியங்
காவணத்துடையானடியார்களைத்
தீவணத்திருநீறுமெய்பூசியோர
கோவணத்துடையான்குடமூக்கிலே. (௧)

பூததாடிக்கழியாதேநீர்பூமியீர்
தீத்தாடித்தியஞ்சிந்தையுள்வைம்மினோ
வேர்த்தாடுங்காளிதன்விசைதீர்கென்று
கூத்தாடியுறையுங்குடமூககிலே. (௨)

நஙகையாளுமையாளுறைநாதனார்
அங்கையாளோடறுபதந்தாழ்சடைக்
கங்கையாளவள்கன்னியெனப்படும்
கொங்கையாளுறையுங்குடமூக்கிலே. (௩)

ஓதாநாவன்திறத்தையுரைத்திரேல்
ஏதானுமினிதாகுமியமுனைச்
சேதாவேறுடையானமர்ந்தவிடம்
கோதாவிரியுறைங்குடமூக்கிலே, (௪)

நக்கரையனை நாடொறு நன்னெஞ்சே
வக்கரையுறை வானை வணங்குநீ
அக்கரையோ டரவரை யார்த்தவன்
கொக்கையுடை யான்குட மூக்கிலே. (௫)

துறவி நெஞ்சின ராகிய தொண்டர்காள்
பிறவி நீங்கப் பிதற்றுமின் பித்தராய்
மறவ னாய்ப்பார்த்தன் மேற்கணை தொட்டவெங்
குறவ னாருறை யுங்குட மூக்கிலே. (௬)

தொண்ட ராகித் தொழுது பணிமினோ
பண்டை வல்வினை பற்றற வேண்டுவீர்
விண்ட வர்புர மூன்றொரு மாத்திரைக்
கொண்ட வன்னுறை யுங்குட மூக்கிலே. (௭)

காமி யஞ்செய்து காலங் கழியாதே
ஓமி யஞ்செய்தங் குள்ளத் துணர்மினோ
சாமி யோடு சரச்சுவதி யவள்
கோமி யும்முறை யுங்குட மூக்கிலே (௮)

சிரமஞ் செய்து சிவனுக்குப் பத்தராய்ப்
பரம னைப்பல நாளும் பயிற்றுமின்
பிரமன் மாலொடு மற்றொழிந் தார்க்கெலாம்
குரவ னாருறை யுங்குட மூக்கிலே (௯)

அன்று தானரக் கன்கயி லாயத்தைச்
சென்று தானெடுக் கவுமை யஞ்சலும்
நன்று தானக்கு நவ்விர லூன்றிப்பின்
கொன்று கீதங்கேட் டான்குட மூக்கிலே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருநின்றியூர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

கொடுங்கண் வெண்டலை கொண்டு குறைவிலைப்
படுங்க ணொன்றில ராய்ப்பலி தேர்ந்துண்பர்
நெடுங்கண் மங்கைய ராடிய நின்றியூர்க்
கடுங்கைக் கூற்றுதைத் திட்ட கருத்தரே. (௧)

வீதி வேனெடுங் கண்ணியர் வெள்வளை
நீதியே கொளப் பாலது நின்றியூர்
வேத மோதி விளங்குவெண் டோட்டராய்க்
காதில் வெண்குழை வைத்தவெங் கள்வரே. (௨)

புற்றி னாரர வம்புலித் தோலமிசைச்
சுற்றி னார்சுண்ணப் போர்வைகொண் டார்சுடர்
நெற்றிக் கண்ணுடை யான்றமர் நின்றியூர்
பற்றி னாரைப் பற்றாவினைப் பாவமே. (௩)

பறையி னோசையும் பாட லினோசையு
மறையி னோசையும் மல்கிவ யலெலாம்

நிறையும்பூம்பொழில்சூழ்திருநின்றியூர்
உறையுமீசனையுள்குமென்னுள்ளமே. (௪)

சுனையுணீலஞ்சுளியுநெடுங்கணாள்
இனையனென்றென்றுமேசுவதென்கொலோ
நினையுநதண்வயல்சூழ்திருநின்றியூர்ப்
பனையினீருரிபோர்த்தபரமரே. (௫)

உரைப்பக்கேண்மினுமுச்சியுளான்றனை
நிரைப்பொன்மாமதில்சூழ்திருநின்றியூர்
உரைப்பொற்கற்றையாரிவரோவெனில்
திரைத்துப்பாடித்திரிதருசெல்வரே. (௬)

கன்றியூர்முகில்போலுங்கருங்களி
றின்றியேறலினாலிதுவென்கொலோ
நின்றியூர்ப்பதியாகநிலாயவன்
வென்றியேறுடையெங்கள்விகிர்தனே. (௭)

நிலையிலாவெள்ளைமாலயனீண்டதோர்
கொலைவிலாலெயிலெய்தகொடியவன்
நிலையினாவயல்சூழ்திருநின்றியூர்
உரையினாற்றொழுவார்வினையோயுமே. (௮)

அஞ்சியாகிலுமன்புபட்டாகிலும்
நெஞ்சமவாழிநினைநின்றியூரைநீ
இஞ்சிமாமதிலெய்திமையோர்தொழக்
குஞ்சிவான்பிறைசூடியகூத்தனே. (௯)

எளியெனுமொழியாவிலங்கைக்கிறை
களியினாற்கயிலாயமெடுத்தவன்
நெளியவூன்றவலானமர்நின்றியூர்
அளியினாற்றொழுவார்வினையலகுமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருவொற்றியூர்-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

ஒற்றியூருமொளிமதிபாம்பினை
ஒற்றியூரும்பாம்புமதனையே
ஒற்றியூரவொருசடைவைத்தவன்
ஒற்றியூர்தொழநம்வினையோயுமே. (௧)

வாட்டமென்றுரைக்குமலையான்மகள்
ஈட்டவேயிருளாடியிடுபிணக்
காட்டிலோரிகடிக்கவெடுத்ததோர்
ஓட்டைவெண்டலைக்கையொற்றியூரரே. (௨)

கூற்றுத்தண்டத்தையஞ்சிக்குறிக்கொண்மின்
ஆற்றுத்தண்டத்தடக்குமரனடி
நீற்றுத்தண்டத்தராய்நினைவார்க்கெலாம்
ஊற்றுத்தண்டொப்பர்போலொற்றியூரரே. (௩)

சுற்றும்பேய்சுழலச்சுடுகாட்டெரி
பற்றியாடுவர்பாய்புலித்தோலினர்
மற்றையூர்களெல்லாம்பலிதேர்ந்துபோய்
ஒற்றியூர்புக்குறையுமொருவரே. (௪)

புற்றிலாடரவாட்டியுமையொடு
பெற்றமேறுகந்தேறும்பெருமையான்
மற்றையாரொடுவானவருந்தொழ
ஒற்றியூருறைவானோர்கபாலியே. (௫)

போதுதாழ்ந்துபுதுமலர்கொண்டுநீர்
மாதுதாழ்சடைவைத்தமணாளனார்
ஓதுவேதியனார்திருவொற்றியூர்
பாதமேத்தப்பறையுநம்பாவமே. (௬)

பலவுமன்னங்கள்பன்மலர்மேற்றுஞ்சும்
கலவமஞ்ஞைகள்காரெனவெள்குறும்
உலவுபைம்பொழில்சூழ்திருவொற்றியூர்
நிலவினானடியேயடைநெஞ்சமே. (௭)

ஒன்றுபோலுமுகந்தவரேறிற்று
ஒன்றுபோலுமுனைத்துக்களோந்தது
ஒன்றுபோலொளிமாய திருடிற்று
ஒன்றுபோலுகந்தாரொற்றியூரரே. (௮)

படைகொள்பூதத்தர்வேதத்தர்கீதத்தர்
சடைகொள்வெள்ளத்தர்சாந்தவெண்ணீற்றினர்
உடையுந்தோலுகந்தானுறையொற்றியூர்
அடையுமுள்ளத்தவர்வினையலகுமே. (௯)

வரையினாருயர்தோளுடைமன்னனை
வரையினால்வலிசெற்றவர்வாழ்விடம்
திரையினார்புடைசூழ்திருவொற்றியூர்
உரையினாற்பொலிந்தாருயர்ந்தார்களே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பாசூர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

முந்திமூவெயிலெய்தமுதல்வனார்
சிந்திப்பார்வினைதீர்த்திடுஞ்செல்வனார்
அந்திக்கோனறனக்கேயருள்செய்தவர்
பந்திச்செஞ்சடைப்பாசூரடிகளே. (௧)

மடந்தைபாகமகிழ்ந்தமணாளனார்
தொடர்ந்தவல்வினைபோக்கிடுஞ்சோதியார்
கடந்தகாலனைக்கால்கொடுபாய்ந்தவர்
படர்ந்தநாகத்தர்பாசூரடிகளே. (௨)

நாறுகொன்றையுநாகமுந்திங்களும்
ஆறுஞ்செஞ்சடைவைத்தவமுதனார்

காறுகண்டத்தர்கையதோர்சூலத்தர
பாறினோட்டினர்பாசூரடிகளே. (௩)

வெற்றியூருறைவேதியராவர்நல
ஒற்றியேறுகந்தேறுமொருவனர
நெற்றிக்கண்ணினர்நீளரவந்தனைப
பற்றியாட்டுவர்பாசூரடிகளே. (௪)

மட்டவிழ்ந்தமலர்நெடுங்கண்ணிபால்
இட்டவேட்கையராகியிருப்பவர
நட்டோலறியேனிவர்சூழ்ச்சிமை
பட்டநெற்றியர்பாசூரடிகளே. (௫)

பல்லிலோடுகையேந்திப்பகலெலாம்
எல்லிநின்றிடுபெய்பலியேற்பவர
சொல்லிப்போய்ப்புகுமூரறியேனசொலீர
பல்குநீற்றினர்பாசூரடிகளே. (௬)

கட்டிவிட்டசடைப்பாகபாலியர
எட்டிநோக்கிவந்தில்புகுந்தவ்வவர
இட்டமாவறியேனிவர்செய்வன
பட்டநெற்றியர்பாசூரடிகளே. (௭)

வேதமோதிவந்தில்புகுந்தாரவர
காதில்வெண்குழைவைத்தகபாலியர
நீதியொன்றறியார்நிறைகொண்டனர்
பாதிவெண்பிறைப்பாசூரடிகளே. (௮)

சாம்பற்பூசுவர்தாழ்சடைகட்டுவர
ஓமபன்மூதெருதேறுமொருவனர்
தேம்பலவெண்மதிசூடுவர்தீயதோர
பாம்புமாட்டுவர்பாசூரடிகளே. (௯)

மாலினோடுமறையவன்றானுமாய்
மேலுங்கீழுமளப்பரிதாயவர
ஆலின்கீழறம்பகர்ந்தார்மிகப
பால்வெண்ணீற்றினர்பாசூரடிகளே. (௧௦)

திரியுமூவெயிலசெங்கணையொன்றினால
எரியவெய்தனரேனுமிலங்கைக்கோன
நெரியவூன்றியிட்டார்விரலொன்றினால்
பரியார்நுண்ணியர்பாசூரடிகளே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

### திருவன்னியூர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

காடுகொண்டரங்காக்கங்குல்வாய்க்கணம்
பாடமானடமாடும்பரமனார
வாடமானிறங்கொள்வாமணங்கமழ்
மாடமாமதில்சூழ்வன்னியூரரே. (௧)

செங்கணுகமனைய துதித்திரள்
அங்கையேந்தினின் றுரொரியாடுவர்
கங்கைவார்சடைமேலிடங்கொண்டவா
மங்கைபாகம்வைத்தார்வன்னியூரரே. (௨)

ஞானங்காட்டுவர்நன்னெறிகாட்டுவா
தானங்காட்டுவாதம்மடைந்தாக்கெலலாம்
தானங்காட்டிதன்றுளடைந்தாகட்கு
வானங்காட்டுவர்போலவன்னியூரரே. (௩)

இம்மையம்மையெனவிரண்டும்மிவை
மெய்ம்மைதானறியாதுவிளம்புவர்
மெய்ம்மையாளினைவாாகடமவல்வினை
வம்மின்றீரப்பாகண்டீர்வன்னியூரரே. (௪)

பிறைகொள்வாணுதற்பெய்வளைத்தோளியா
நிறையைகொளபவாநீறணிமேனியா
கறைகொளகண்டத்தா வெண்மழுவாளினா
மறைகொள்லாய்மொழிபாாவன்னியூரரே. (௫)

திளைக்குமவண்டொடுதேன்படுகொன்றையா
துளைகைகவேழததர்தோலர்சுடாமதி
முளைக்குமுறற்கதிாகண்டுநாகநா
வளைக்கும்வார்சடையார்வன்னியூரரே. (௬)

குணங்கள்தோளெட்டுமூர்த்தியிணையடி
இணங்குவாாகட்கினியருமாய்நின்றுர்
வணங்கிமாமலாகொண்டவர்வைகலும்
வணங்குவார்மனத்தார்வன்னியூரரே. (௭)

இயலுமாலொடுநான்முகன்செய்தவம்
முயலிற்காண்பரிதாய்நின்றமூர்த்திதான்
அயலெலாமன்னமேயுமந்தாமரை
வயலெலாங்கயலபாய்வன்னியூரரே. (அ-௯)

நலங்கொள்பாகனைநன்றுமுனிநிடா
விலங்கலகோத்தெடுததானதுமிக்கிட
விலங்கைமன்னனிருபதுதோளினை
மலங்கவூன்றிவைத்தாாவன்னியூரரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவையாறு-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

சிந்தைவாய்தலுளான்வந்துசீரியன்
பொந்துவார்புலால்வெண்டலைக்கையினன்
முந்திவாயதோர்மூவிலைவேல்பிடித்
தந்திவாயதோர்பாம்பரையாறரே. (௧)

பாகமாலைமகிழ்ந்தனர்பான்மதி
போகவானையினீருரிபோர்த்தவர்

கோகமாலைகுலாயதோர்கொன்றையும்
ஆகவானையஞ்சாடுமையாறரே. (உ)

நெஞ்சமென்பதோர்நீள்கயந்தன்னுளே
வஞ்சமென்பதோராவான்சுழிப்பட்டுநான்
துஞ்சும்போழ்துநின்னாமத்திருவெழுத்
தஞ்சுமதோன்றவருளுமையாறரே. (௩)

நினைக்குநெஞ்சினுள்ளார்நெடுமாமதில்
அனைத்துமொள்ளழலவாயெரியூட்டினா
பனைக்கைவேழத்துரியுடல்போர்த்தவா
அனைத்துவாயதலுளாருமையாறரே. (௪)

பரியர்நுண்ணியர்பார்த்தற்கரியவர்
அரியபாடலராடலரன்றியும்
கரியகண்டத்தாகாட்சிபிறர்க்கெலாம்
அரியாதொண்டர்க்கெளியரையாறரே. (௫)

புலரும்போதுமிலாபட்டபொற்சுடர்
மலரும்போதுகளாறபணியசசிலா
நிலரும்போதுமிலாததுமன்றியும்
அலருமபோதுமணியுமையாறரே. (௬)

பங்கமாலைக்குழலியோர்பாலநிறக்
கஙகைமாலையாக்காதன்மைசெய்தவர்
பங்கமாலைமதியமுங்கண்ணியும்
அங்கமாலையுஞ்சூடுமையாறரே. (௭)

முன்னையாறுமுயன்றெழுவீரெலாம்
பின்னையாறுபிரியெனும்பேதைகாள்
மன்னையாறுமருவியமாதவன்
தன்னையாறுதொழத்தவமாகுமே. (௮)

ஆனையாறெனவாடுகின்றான்முடி
வானையாறுவளாயதுகாண்மினோ
நானையாறுபுககேற்கவனின்னருள்
தேனையாறுதிறந்தாலேயொக்குமே. (௯)

அரக்கின்மேனியனந்தளிர்மேனியன்
அரக்கின்சேவடியாளஞ்சவஞ்சலென்
றரக்கனீரைந்துவாயுமலறவே
அரக்கினனடியாலுமையாறனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருவையாறு - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

சிந்தைவண்ணத்தராய்த்திறம்பாவணம்
முந்திவண்ணத்தராய்முழுநீறணி
சந்திவண்ணத்தராய்த்தழல்போல்வதோர்
அந்திவண்ணமுமாவரையாறரே. (௧)

மூலவண்ணத்தராய்முதலாகிய
கோலவண்ணத்தராகிக்கொழுஞ்சுடர்
நீலவண்ணத்தராகிநெடும்பளிங்
காலவண்ணத்தராவரோயாறரே. (உ)

சிந்தைவண்ணமுந்தீயதோர்வண்ணமும்
அந்திப்போதழகாகியவண்ணமும்
பந்திக்காலனைப்பாய்ந்ததோர்வண்ணமும்
அந்திவண்ணமுமாவரையாறரே. (௩)

இருளின்வண்ணமுமேழிசைவண்ணமும்
சுருளின்வண்ணமுஞ்சோதியின்வண்ணமும்
மருளுநான்முகன்மாலொடுவண்ணமும்
அருளும்வண்ணமுமாவரையாறரே. (௪)

இழுக்கின்வண்ணங்களாகியவெவ்வழல்
குழைக்கும்வண்ணங்களாகியுங்கூடியும்
மழைக்கண்மாமுகிலாகியவண்ணமும்
அழைக்கும்வண்ணமுமாவரையாறரே. (௫)

இணைடவண்ணமுமேழிசைவண்ணமும்
தொண்டர்வண்ணமுஞ்சோதியின்வண்ணமும்
கண்டவண்ணங்களாய்க்கனல்மாமணி
அண்டவண்ணமுமாவரையாறரே. (௬)

விரும்புமவண்ணமும்வேதத்தின்வண்ணமும்
கரும்பினின்மொழிக்காரிகைவண்ணமும்
விரும்புவாரவினைதீர்த்திடும்வண்ணமும்
அரும்பின்வண்ணமுமாவரையாறரே. (௭)

ஊழிவண்ணமுமொண்சுடர்வண்ணமும்
வேழவீருரிபோர்த்ததோர்வண்ணமும்
வாழித்தீயுருவாகியவண்ணமும்
ஆழிவண்ணமுமாவரையாறரே. (௮)

செய்தவன்றிருநீறணிவண்ணமும்
எய்தநோக்கரிதாகியவண்ணமும்
கைதுகாட்சியரியதோர்வண்ணமும்
ஐதுவண்ணமுமாவரையாறரே (௯)

எடுத்தவாளரக்கனதிறல்வண்ணமும்
இடர்க்கள்போற்பெரிதாகியவண்ணமும்
கடுத்தகைந்நரம்பாலிசைவண்ணமும்
அடுத்தவண்ணமுமாவரையாறரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருவாவடுதுறை - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

நிறைக்கவாலியளல்லளிந்நேரிழை
மறைக்கவாலியளல்லளிமமாதரர்
பிறைக்கவாலப்பெரும்புனலாவடு
துறைக்கவாலியோடாடியசுண்ணமே. (௧)

தவளமாமதிச்சாயலோர்சந்திரன்
பிளவுசூடியபிஞ்ஞகனெம்மிறை
அளவுகண்டிலளாவடுதண்டுறை
களவுகண்டனளொள்ளரிக்கண்ணியே. (௨)

பாதிபெண்ணொருபாகத்தன்பன்மறை
ஓதியென்னுளங்கொண்டவனொண்பொருள்
ஆதியாவடுதண்டுறைமேவிய
சோதியேசுடரேயென்றுசொல்லுமே. (௩)

காரக்கொண்மாமுகில்போல்வதோர்கண்டத்தன
வாரக்கொண்மென்முலைசேர்திருமார்பிவள்
ஆரக்கொள்கொன்றையனாவடுதண்டுறைத்
தாரக்குநின்றிவள்தாழுமாகாண்மினே. (௪)

கருகுகண்டத்தனகாயக்கதிர்ச்சோதியன்
பருகுபாலமுதேயெனும்பண்பினன்
அருகுசென்றிலளாவடுதண்டுறை
ஒருவனென்னையுடையகோவென்னுமே (௫)

குழலுங்கொன்றையுங்கூவிளமத்தமும்
தழலுந்தையலோர்பாகமாத்தாங்கினான்
அழகனாவடுதண்டுறையானெனக்
கழலுங்கைவளைகாரிகையாளுக்கே. (௬)

பஞ்சினமெல்லடிப்பாவையோர்பங்கனைத்
தஞ்சமென்றிறுமாந்திவளாளாயும்
அஞ்சுவாளல்லளாவடுதண்டுறை
மஞ்சனேறடிவளாடியமையலே. (௭)

பிறையுஞ்சூடிநற்பெண்ணோடொருகிய
மிறைபுநெஞ்சமுநீர்மையுங்கொண்டவன்
அறையும்பூம்பொழிலாவடுதண்டுறை
இறைவனென்னையுடையவனென்னுமே. (௮)

வையந்தானளந்தானுமயனுமாய்
மெய்யையக்காணலுற்றார்க்கழலாயினான்
ஐயனாவடுதண்டுறையானெனக்
கையிலவெள்வளையுங்கழலகின்றவே. (௯)

பக்கம்பூதங்கள்பாடப்பலிகொள்வான
மிக்கவாளரக்கன்வலிவீட்டினான்
அக்கணிந்தவனாவடுதண்டுறை
நக்கனென்னுமிந்நாணிலிகாண்மினே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருப்பராய்த்துறை - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

கரப்பர்காலமடைந்தவர்தம்வினை
சுருக்குமாறுவல்லார்கங்கைசெஞ்சடைப்
பரப்புநீர்வருகாவிரித்தென்கரைத்
திருப்பராய்த்துறைமேவியசெல்வரே. (௧)

மூடினார்களியானையினீருரி
பாடினாமறைநான்கினோடாறங்கம்
சேடனாதென்பராய்த்துறைச்செல்வரைத்
தேடிககொண்டடியேன்சென்றுகாணபனே. (௨)

பட்டநெறறியாபான்மதிககீற்றினர்
நட்டமாடுவாநள்ளிருளேமமும
சிட்டனார்தென்பராய்த்துறைச்செலவனா
இட்டமாயிருப்பாரையறிவரே. (௩)

முன்பெலாஞ்சிலமோழைமைபேசுவர்
எனபெலாம்பலபூண்டங்குழிதாவர்
தென்பராய்த்துறைமேவியசெல்வனார்
அன்பராயிருபபாரையறிவரே. (௪)

போதுதாதொடுகொண்டுபுனைநதுடன்
தாதவிழ்சடைசசங்கரன்பாதத்துள்
வாதைதீரக்கவென்றேததிபபராய்த்துறைச
சோதியானைத்தொழுதெழுந்துய்ம்மினே. (௫)

நலலநான்மறையோதியநம்பனைப
பல்விலவெணடலையிறபலிகொள்வனைத்
தில்லையான்றென்பராய்த்துறைச்செலவனை
வல்லையாய்வணங்கித்தொழுவாய்மையே. (௬)

நெருப்பினுற்குவிததாலொக்குநீள்சடைப்
பருபபதமதயானையுரித்தவன்
திருப்பராய்த்துறையாதிருமாபினூல
பொருபபராவியிழிபுனல்போன்றதே. (௭)

எட்டவிட்டவிடுமணலெக்காமேற
பட்டநுணடுளிபாயுமபராய்த்துறைச்
சிட்டன்சேவடிசென்றடைகிற்றிரேல
விட்டுநம்வினையுள்ளனவீடுமே. (௮)

நெருபபராய்நிமிர்ந்தாலொக்குநீள்சடை
மருபபராவளைத்தாலொககும்வாண்மதி
திருபபராய்த்துறைமேவியசெல்வனா
விருபபாயிருபபாரையறிவரே. (௯)

தொண்டுபொடியுநதூமலாதூவியும்
இண்டைகட்டியிணையடியேத்தியும்
பண்டரங்காபராய்த்துறைபபாங்கரைக
கண்டுகொண்டடியேனுய்நதுபோவனே. (௧0)

அரக்கனாற்றலழித்தவழகனைப்
பரககுநீர்ப்பொன்னிமன்னுபராய்த்துறை
இருக்கைமேவியவீசனையேத்துமின்
பொருக்ககம்வினைபோயறுங்காண்மினே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

### திருவானைக்கா-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

கோனைக்காவிக்குளிர்ந்தமனத்தராய்
தேனைக்காவியுண்ணார்சிலதெண்ணர்கள்
ஆனைக்காவிலெம்மானையணைகிலார்
ஊனைக்காவியுழிதர்வருமரே. (௧)

திருகுசிந்தையைத்தீர்த்துச்செம்மைசெய்து
பருகியூறலைப்பற்றிப்பதமறிந்
துருகிநைபவர்க்கூனமொன்றின்றியே
அருகுநின்றிடுமானைக்காவண்ணலே (௨)

துன்பமின்றித்துயரின்றியென்றுநீர்
இன்பம்வேண்டிலிராப்பகலேத்துமின்
என்பொனீசனிறைவனென்றுள்குவார்க்
கன்பனாயிடுமானைக்காவண்ணலே. (௩)

நாவானன்றுநறுமலர்ச்சேவடி
ஓவாதேத்தியுளத்தடைத்தார்வினை
காவாயென்றுதங்கைதொழுவார்க்கெலாம்
ஆவாவென்றிடுமானைக்காவண்ணலே. (௪)

வஞ்சமின்றிவணங்குமின்வைகலும்
வெஞ்சொலின்றிவிலகுமின்வீடுற
நைஞ்சுநைஞ்சுநின்றுள்குளிர்வார்க்கெலாம்
அஞ்சலென்றிடுமானைக்காவண்ணலே. (௫)

நடையைமெய்யென்றுநாத்திகம்பேசாதே
படைகள்போல்வரும்பஞ்சமாபூதங்கள்
தடையொன்றின்றியேதன்னடைந்தார்க்கெலாம்
அடையநின்றிடுமானைக்காவண்ணலே (௬)

ஒழுகுமாடத்துளொன்பதுவாய்தலுங்
கழுகரிப்பதன்முன்னங்கழலடி
தொழுதுகைகளாற்றூமலர்தூவிநின்
றழுமவர்க்கன்பனானைக்காவண்ணலே (௭)

உருளும்போதறிவொண்ணாவுலகத்தீர்
தெருளுஞ்சிக்கெனத்தீவினைசேராதே
இருளறுத்துநின்றீசனென்பார்க்கெலாம்
அருள்கொடுத்திடுமானைக்காவண்ணலே. (௮)

நேசமாகிநினைமடநெஞ்சமே
நாசமாயகுலநலஞ்சுற்றங்கள்
பாசமற்றுப்பராபரவானந்த
ஆசையுற்றிடுமானைக்காவண்ணலே. (௯)

ஓதமாகடல்சூழிலங்கைக்கிறை
கீதங்கின்னரம்பாடக்கெழுவினை
பாதமவாங்கிப்பரிந்தருள்செய்தங்கோர்
ஆதியாயிடுமானைக்காவண்ணலே. (௰)

---

திருச்சிற்றம்பலம்.

### திருப்பூந்துருத்தி - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

கொடிகொள்செல்வவிழாக்குணலையறாக்
கடிகொள்பூம்பொழிற்கச்சியேகம்பனார்
பொடிகொள்பூசியபூந்துருத்திந்நகர்
அடிகள்சேவடிக்கீழ்நாமிருப்பதே. (௧)

ஆர்த்ததோலுடைகட்டியோர்வேடனாய்ப்
பார்த்தனோடுபடைதொடுமாகிலும்
பூத்தநீள்பொழிற்பூந்துருத்திந்நகர்த்
தீர்த்தன்சேவடிக்கீழ்நாமிருப்பதே. (௨)

மாதினைமதித்தானொருபாகமாக்
காதலாற்கரந்தானசடைக்கங்கையைப்
பூதநாயகன்பூந்துருத்திந்நகர்க்
காதிசேவடிக்கீழ்நாமிருப்பதே. (௩)

மூவனாயமுதல்வனாயிவ்வுலகெலாம்
காவனாய்க்கடுங்காலனைக்காய்ந்தவன்
பூவினாயகன்பூந்துருத்திந்நகர்த்
தேவன்சேவடிக்கீழ்நாமிருப்பதே. (௪)

செம்பொனேயொக்குமேனியன்றேசத்தில்
உம்பராரவரோடங்கிருக்கிலும்
பொன்பொனார்செல்வப்பூந்துருத்திந்நகர்
நம்பன்சேவடிக்கீழ்நாமிருப்பதே. (௫)

வல்லம்பேசிவலிசெய்மூன்றூரினைக்
கொல்லம்பேசிக்கொம்புசாநூறினை
புல்லம்பேசியும்பூந்துருத்திந்நகர்ச்
செல்வன்சேவடிக்கீழ்நாமிருப்பதே. (௬)

ஒருத்தனையுலகேழுந்தொழுகின்ற
பருத்தபாம்பொடுபான்மதிகங்கையும்
பொருத்தனாகிலும்பூந்துருத்திந்நகர்த்
திருத்தன்சேவடிக்கீழ்நாமிருப்பதே. (௭)

அதிராதேவரியக்கர்விச்சாதரர்
கருத்தினாலவர்காண்பரிதாயினான்
பொருந்தநீர்வருபூந்துருத்திந்நகர்ச்
சதிரன்சேவடிக்கீழ்நாமிருப்பதே. (௮)

செதுக்கருமனத்தார்புறங்கூறினும்
கொதுக்கருக்கண்ணிலேன்பிகள்கூறினும்
பொதுவினாயகன்பூந்துருத்திந்நகர்க்
கதிபன்சேவடிக்கீழ்நாமிருப்பதே. (௯)

துடித்ததோள்வலிவாளரக்கனைப்
பிடித்தகைகளுநெரிந்துற்றனகண்ணெலாம்
பொடிக்கவூன்றியபூந்துருத்திந்நகர்ப்
படிக்கொள்சேவடிக்கீழ்நாமிருப்பதே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருச்சோற்றுத்துறை-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

கொல்லையேற்றினர்கோளரவத்தினர்
தில்லைச்சிற்றம்பலத்துறைசெல்வனார்
தொல்லையூழியர்சோற்றுத்துறையர்க்கே
வல்லையாய்ப்பணிசெய்மடநெஞ்சமே. (க)

முத்தியாகவொருதவஞ்செய்திலை
அத்தியாலடியார்க்கொன்றளித்திலை
தொத்துநின்றலர்சோற்றுத்துறையர்க்கே
பத்தியாய்ப்பணிசெய்மடநெஞ்சமே. (உ)

ஓட்டிநின்றவுடலுறுநோய்வினை
சாட்டிநின்றகழிந்தவைபோயறத்
தொட்டுநின்றுமச்சோற்றுத்துறையர்க்கே
பாடியாய்ப்பணிசெய்மடநெஞ்சமே. (ந)

ஆதியானண்டவாணர்க்கருணல்கு
நீதியானென்றுநின்மலனேயென்றும்
சோதியானென்றுஞ்சோற்றுத்துறையர்க்கே
வாதியாய்ப்பணிசெய்மடநெஞ்சமே. (ச)

ஆட்டுவாயடியேனைவினையாயின
ஓட்டுவாயொருகாதிலிலங்குவெண்
தோட்டுவாயென்றுஞ்சோற்றுத்துறையர்க்கே
நீட்டிநீபணிசெய்மடநெஞ்சமே (ரு)

பொங்கினெறெழுந்தகடனஞ்சினைப்
பங்கியுண்டதோர்தெய்வமுண்டோசொலாய்
தொங்கிநீயென்றுஞ்சோற்றுத்துறையர்க்கு
தங்கிநீபணிசெய்மடநெஞ்சமே. (சா)

ஆணிபோலநீயாற்றவலியைகாண்
ஏணிபோலிழிந்தேறியுமேங்கியும்
தோணிபாகியசோற்றுத்துறையர்க்கே
பூணியாய்ப்பணிசெய்மடநெஞ்சமே. (எ)

பெற்றமேறிலென்பேய்ப்படையாகிலென்
புற்றிலாடரவேயதுபூணிலென்
சுற்றிநீயென்றுஞ்சோற்றுத்துறையர்க்கே
பற்றிநீபணிசெய்மடநெஞ்சமே. (அ)

அல்லியானரவைந்தலைநாகணைப்
பள்ளியானறியாதபரிசெலாம்
சொல்லிநீயென்றுஞ்சோற்றுத்துறையர்க்கே
புல்லிநீபணிசெய்மடநெஞ்சமே. (கூ)

மிண்டரோடுவிரவியும்வீறிலாக்
குண்டர்தம்மைக்கழிந்துய்யப்போந்துநீ
தொண்டுசெய்தென்றுஞ்சோற்றுத்துறையர்க்கே
உண்டுநீபணிசெய்மடநெஞ்சமே. (க௦)

வாழ்ந்தவன்வலிவாளரக்கன்றனை
ஆழ்ந்துபோயலறவ்விரலூன்றினான்
சூழ்ந்தபாரிடஞ்சோற்றுத்துறையாகக்குத்
தாழ்ந்துநீபணிசெய்மடநெஞ்சமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநெய்த்தானம் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்.

கொல்லியான்குளிர்தூங்குகுற்றாலத்தான்
புல்லியார்புரமூன்றெரிசெய்தவன்
நெல்லியான்நிலையானநெய்த்தானனைச்
சொல்லிமெய்த்தொழுவார்சுடர்வாணரே. (க)

இரவனையிடுவெண்டலையேந்தியைப்
பரவனைப்படையார்மதின்மூன்றையும்
நிரவனைநிலையானநெய்த்தானனைக்
குரவனைத்தொழுவார்கொடிவாணரே (உ)

ஆனிடையைந்துமாடுவராரிருட்
கானிடைநடமாடுவர்காணமின்
தேனிடைமலர்பாயுநெய்த்தானனை
வானிடைத்தொழுவார்வலிவாணரே. (ங)

விண்டவர்புரமூன்றும்வெண்ணீறெழக்
கண்டவன்கடிதாகியநஞ்சினை
உண்டவனொளியானநெய்த்தானனைத்
தொண்டராய்த்தொழுவார்சுடர்வாணரே. (ச)

முன்கைநோவக்கடைந்தவர்நிற்கவே
சங்கியாதுசமுத்திரநஞ்சுண்டான்
நங்கையோடுநவின்றநெய்த்தானனைத்
தங்கையாற்றொழுவார்தலைவாணரே. (ரு)

சுட்டநீறுமெய்பூசிச்சுடலையுள்
நட்டமாடுவர்நள்ளிருட்பேயொடே
சிட்டர்வானவர்சேருநெய்த்தானனை
இட்டமாய்த்தொழுவாரின்பவாணரே. (சு)

கொள்ளித்தீயெரிவீசிக்கொடியதோர்
கள்ளிக்காட்டிடையாடுவர்காணமின்
தெள்ளித்தேறித்தெளிந்துநெய்த்தானனை
உள்ளத்தாற்றொழுவாரும்பர்வாணரே. (எ)

உச்சிமேல்விளங்கும்இளவெண்பிறை
பற்றியாடரவோடுஞ்சடைப்பெய்தான்
நெற்றியாரழல்கண்டநெய்த்தானனைச்
சுற்றிமெய்த்தொழுவார்சுடர்வாணரே. (அ)

மாலொடும்மறையோதியநான்முகன்
காலொடும்முடிகாண்பரிதாயினான்

சேலொடுஞ்செருசசெய்யுநெய்த்தானனை
மாலொடுநதொழுவாரவினைவாடுமே. (கூ)

வலிநதோள்வலிவாளரக்கன்றனை
நெருங்கநீள்வரையூன்றுநெய்ததானனா
புரிநதுகைநரம்போடிசைபாடலும்
பரிநதனைபபணிவாரவினைபாறுமே. (கய)

திருச்சிற்றம்பலம்.

---

திருப்பழனம் - திருக்குறுந்தொகை.

திருச்சிறறமபலம.

அருவனுபத்தியீருரிபோர்த்துமை
உருவனுமொற்றியூரபதியாகிலும்
பருவரால்வயல்சூழ்ந்தபழனத தான்
திருவினுறறிருவேண்டுமித்தேவர்ககே. (க)

வையாவந்துவணங்கிவலங்கொளுமவ
ஐயனையறியாரசிலராதாகள
பைகொளாடரவாரததபழனன்பால
பொய்யாகாலங்கள்போககிடுவாரகளே. (உ)

வண்ணமாகமுருக்கியவாசிகை
திண்ணமாகததிருச்சடைசசோத்தியே
பண்ணுமாகவேபாடுமெபழனத்தான்
எண்ணுநீரவனுயிரநாமமே. (௩)

மூர்ககப்பாம்புபிடிததததுமூசசிட
வாக்கபாம்பினைக்கண்டதுணிமதி
பாக்கபாம்பினைபபற்றும்பழனத்தான்
தாரக்கொண்மாலைசடைக்கரநதிட்டதே. (௪)

நீலமுணடமிடற்றினனோநதோா
கோலமுண்டகுணததானிறைநதோா
பாலுமுண்டுபழனன்பாலென்னிடை
மாலுமுண்டிறையென்றன்மனத்துளே. (௫)

மநதமாகவளாபிறைசூடியோா
சநதமாகத்திருச்சடைசாத்துவான்
பநதமாயினதீர்க்குமபழனத்தான்
எநதைதாய்தநதையெம்பெருமானுமே. (௬)

மாாக்கமொன்றறியாாமதியில்லிகள்
பூக்கரத்திறபுரிகிலாமூடாகள்
பார்க்கின்றுபரவுமபழனத்தான்
தாட்கணின்றுதலைவணங்காாகளே. (எ)

ஏரிஞரிமையோாகள்பணிகண்டு
தேறுவாரலர்தீவினையாளர்கள்
பாறிஞாபணிவேண்டுபழனத்தான்
கூறினுமையாளொடுங்கூடவே. (அ)

சுற்றுவார்தொழுவார்சுடர்வண்ணன்மேல
தெற்றினார்திரியும்புரமூன்றெய்தான்
பற்றினார்வினைதீர்க்கும்பழனனை
எற்றினான்மறக்கேனெம்பிரானையே. (௯)

பொங்குமாகடல்சூழிலங்கைக்கிறை
அங்கமானவிறுத்தருள்செய்தவன்
பங்கனென்னும்பழனனுமையொடும
தங்கன்றானடியேனுடையுச்சியே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருச்செம்பொன்பள்ளி - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

கானறாதகடிபொழில்வண்டினம்
தேனறாததிருச்செம்பொன்பள்ளியான்
ஊனறாததோர்வெண்டலையுட்பலி
தானறாததோர்கொள்கையன்காண்மினே (௧)

என்புமாமையும்பூண்டங்குழிதாவாக
கன்புமாயிடுமாயிழையீரினி
செம்பொன்பள்ளியுளான்சிவலோகனை
நம்பொன்பள்ளியுள்கவினைநாசமே. (௨)

வேறுகோலத்தராணலாபெண்ணலா
கீறுகோவணவைந்துகிலாடையா
தேறலாவதொன்றன்றுசெம்பொன்பள்ளி
ஆறுசூடியவண்ணலவனையே. (௩)

அருவராததோர்வெண்டலையேந்திவந்
திருவராயிடுவார்கடைதேடுவா
தெருவெலாமுழலவார்செம்பொன்பள்ளியா
ஒருவர்தாம்பலபேருளர்காண்மினே. (௪)

பூவுலாஞ்சடைமேற்புனல்சூடினான்
ஏவலாலெயின்மூன்றுமெரித்தவன்
தேவாசென்றிறைஞ்சுஞ்செம்பொன்பள்ளியான்
மூவராய்முதலாய்நின்றமூர்த்தியே. (௫)

சலவராயொருபாம்பொடுதண்மதி
கலவராவதின்காரணமென்கொலோ
திலதநீண்முடியார்செம்பொன்பள்ளியார்
குலவிலாலெயின்மூன்றெய்தகூத்தரே. (௬)

கைகொள்சூலத்தர்கட்டுவாங்கத்தினா
மைகொள்கண்டத்தராகியிருசுடர்
செய்யமேனிவெண்ணீற்றர்செம்பொன்பள்ளி
ஐயர்கையதோரைந்தலைநாகமே. (௭)

வெங்கணாகம்வெருவுறவார்த்தவர்
பைங்கணானையினீருரிபோர்த்தவர்

செங்கண்மால்விடையார்செம்பொன்பள்ளியார்
அங்கணுயடைந்தார்வினை தீர்ப்பரே. (௮)

நன்றிநாரணனுநான்முகனென்றிவர்
நின்றநீண்முடியோடடிகாணப்புற்றுச்
சென்றுகாணப்பரியான்செம்பொன்பள்ளியார்
நின்றசூழலினீளெரியாகியே (௯)

திரிபுரம்மதில்செங்கணையொன்றினால்
எரியவெய்தன்வேலோடடியிலங்கைக்கோன்
நெரியவூன்றியிட்டார்செம்பொன்பள்ளியார்
அரியவானமவரருள்செய்வரே (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

### திருக்கடவூர் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

மலைக்கொளானை மயக்கிய வல்வினை
நிலைக்கொளானைநினைப்புறுநெஞ்சமே
கொலைக்கையானையுங்கொன்றிடுமாதலால்
கலைக்கையானைக்கண்டீர்கடவூரரே (௧)

வெள்ளிமால்வரைபோலவதோரானையார்
உள்ளவாறெனையுள்புகுமானையார்
கொள்ளமாகியகோயிலுளானையார்
கள்ளவானைகண்டீர்கடவூரரே (௨)

ஞானமாகியநற்குணரானையார்
ஊனைவேவவுருக்கியவானையார்
வேனவானையுரித்துமையஞ்சவே
கானலானைகண்டீர்கடவூரரே. (௩)

ஆலமுண்டழகாயதோரானையார்
நீலமேனிநெடும்பளிங்கானையார்
கோலமாயகொழுஞ்சுடரானையார்
காலவானைகண்டீர்கடவூரரே. (௪)

அளித்தவானஞ்சுமாடியவானையார்
வெளுத்தநீள்கொடியேறுடையானையார்
எளித்தவேழத்தையேழ்குவித்தானையார்
களித்தவானைகண்டீர்கடவூரரே. (௫)

விடுத்தமால்வரைவிண்ணுறவானையார்
தொடுத்தமால்வரைதூயதோரானையார்
கடுத்தகாலனைக்காய்ந்ததோரானையார்
கடுத்தவானைகண்டீர்கடவூரரே. (௬)

மண்ணுளாரைமயக்குறுமானையார்
எண்ணுளார்பலரேத்திடுமானையார்
விண்ணுளார்பலரும்மறியானையார்
கண்ணுளானைகண்டீர்கடவூரரே. (௭)

சினக்குஞ்செம்பவளத்திரளானையார்
மனக்குமவல்வினைதீர்த்திடுமானையார்
அனைக்குமன்புடையார்மனத்தானையார்
கனைக்குமானைகண்டீர்கடவூரரே. (அ)

வேதமாகியவெஞ்சுடரானையார்
நீதியானிலனாகியவானையார்
ஓதியூழிதெரிந்துணரானையார்
காதலானைகண்டீர்கடவூரரே. (௯)

நீண்டமாலொடுநான்முகன்றானுமாய்க்
காண்டுமென்றுபுக்கார்களிருவரும்
மாண்டவாரழலாகியவானையார்
காண்டலானைகண்டீர்கடவூரரே. (௧௦)

அடுத்துவந்தவிலங்கையாமன்னனை
யெடுத்ததோள்களிறநெரித்தானையார்
கடுத்தகாலனைக்காய்ந்ததோரானையார்
கடுக்கையானைகண்டீர்கடவூரரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

### திருக்கடவூர்மயானம்-திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்.

குழைகொள்காதினர்கோவணவாடையர்
உழையர்தாங்கடவூரின்மயானத்தார்
பழையதம்மடியார்செய்யும்பாவமும்
பிழையுந்தீர்ப்பர்பெருமானடிகளே. (௧)

உன்னிவானவரோதியசிந்தையிற்
கன்னலந்தேன்கடவூரின்மயானத்தார்
தன்னைநோக்கித்தொழுதெழுவார்க்கெலாம்
பின்னையென்னார்பெருமானடிகளே. (௨)

சூலமேந்துவர்தோலுடையாடையர்
ஆலமுண்டமுதேமிகத்தேக்குவர்
காலகாலர்கடவூர்மயானத்தார்
மாலைமார்பர்பெருமானடிகளே. (௩)

இறைவனாரிமையோர்தொழுபைங்கழல்
மறவனார்கடவூரின்மயானத்தார்
அறவனாரடியாரடியார்தங்கள்
பிறவிதீர்ப்பர்பெருமானடிகளே. (௪)

கத்துகாளிகதந்தணிவித்தவர்
மத்தர்தாங்கடவூரின்மயானத்தார்
ஒத்தொவ்வாதனசெய்துழல்வாரொரு
பித்தர்காணும்பெருமானடிகளே. (௫)

எரிகொள்மேனியிளம்பிறைவைத்தவர்
கரியர்தாங்கடவூரின்மயானத்தார்

அரியரண்டதநுளோரயன்மாலுக்கும்
பெரியர்காணும்பெருமானடிகளே. (௬)

அணங்குபாகத்தராரணநான்மறை
கணங்களசேர்கடவூரின்மயானத்தார
வணங்குவாரிடர்தீர்ப்பாமயக்குறும்
பிணங்கொள்காடாபெருமானடிகளே. (௭)

அரவுகையினராதிபுராணனா
மரவுசேர்கடவூரின்மயானததார்
பரவுவாரிடாதீர்ப்பாபணிகொள்வார
பிரமன்மாற்கும்பெருமானடிகளே. (அ-௯-௧0)

திருச்சிற்றம்பலம்.

---

திருமயிலாடுதுறை - திருக்குறுந்தொகை.

திருச்சிறறம்பலம.

கொள்ளுநகாதனமைபெய்துறுங்கோல்வளை
உள்ளமுள்கியுரைக்குந்திருபபெயா
வள்ளனமாமயிலாடுதுறையுறை
வெளளநதாங்குசடையனை வேண்டியே. (௧)

சித்தநதேறுஞ்செறிவளைசிக்கெனும
பசைசநீருமென்பைங்கொடிபான்மதி
வைததமாமயிலாடுதுறையரன
கொத்தினிற்பொலிகொன்றைகொடுக்கிலே. (௨)

அண்டாவாழ்வுமமரிருக்கையும
கண்டுவீறறிருக்குநகருத்தொன்றிலோம
வண்டுசோமயிலாடுதுறையரன்
தொண்டாபாதங்கள்சூடிததுதைபிலே. (௩)

வெஞ்சினக்கடுங்காலன்விரைகிலான்
அஞ்சிறப்பும்பிறபபுமறுக்கலாம்
மஞ்சன்மாமயிலாடுதுறையுறை
அஞ்சொலாளுமைபங்கனருளிலே. (௪)

குறைவிலோங்கொடுமானிடவாழ்க்கையால
கறைநிலாவியகண்டனெண்டோளினன்
மறைவலான்மயிலாடுதுறையுறை
இறைவனீள்கழலேத்தியிருக்கிலே. (௫)

நிலைமைசொல்லுநெஞ்சேதவமென்செய்தாய்
கலைகளாயவல்லான்கயிலாயநன்
மலையன்மாமயிலாடுதுறையனம்
தலையின்மேலுமனத்துளுந்தங்கவே. (௬)

நீற்றினனிமிர்புன்சடையான்விடை
ஏற்றினனமையாளுடையான்புலன்
மாற்றினான்மயிலாடுதுறையென்று
போற்றுவாாக்குமுண்டோபுவிவாழ்க்கையே. (௭)

கோலும்புல்லுமொருகையிற்கூச்சமும்
தோலும்பூண்டுதுயரமுற்றென்பயன்
நீலமாமயிலாடுதுறையனே
நூலும்வேண்டுமோநுண்ணுணர்ந்தோர்கட்கே. (௮)

பணங்கொளாடரவல்குற்பகீரதி
மணங்கொளச்சடைவைத்தமறையவன்
வணங்குமாமயிலாடுதுறையரன்
அணங்கொர்பால்கொண்டகோலமழகிதே. (௯)

நீணிலாவரவச்சடைநேசனை
பேணிலாதவர்பேதுறவோட்டினேம
வாணிலாமயிலாடுதுறைதனைக்
காணிலார்க்குயகடுந்துயரில்லையே. (௧௦)

பருத்ததோளும்முடியும்பொடிபட
இருத்தினானவனின்னிசைகேட்டலும்
வரத்தினான்மாமயிலாடுதுறைதொழும்
கரத்தினார்வினைக்கட்டறுங்காண்மினே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கழிப்பாலை - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

வண்ணமும்வடிவுஞ்சென்றுகண்டிலள்
எண்ணிநாமங்களேத்திநிறைதிலள்
கண்ணுலாம்பொழில்சூழ்கழிப்பாலையெம்
அண்ணலேயறிவானிவடன்மையே. (௧)

மருந்துவானவருய்யநஞ்சுண்டுகந்
திருந்தவன்கழிப்பாலையுளெம்பிரான்
திருந்துசேவடிசிந்தையுள்வைத்திவள்
பரிந்துரைக்கிலுமென்சொற்பழிக்குமே. (௨)

மழலைதான்வரச்சொற்றெரிகின்றிலள்
குழலினேர்மொழிகூறியகேண்மினோ
அழகனேகழிப்பாலையெம்மண்ணலே
இகழ்வதோவெனையென்றுகொளென்னுமே. (௩)

செய்யமேனிவெண்ணீறணிவான்றனை
மையலாகிமதிக்கிலளாரையும்
கைகொள்வெண்மழுவன்கழிப்பாலையெம்
ஐயனேயறிவானிவடன்மையே. (௪)

கருத்தனைக்கழிப்பாலையுண்மேவிய
ஒருத்தனையுமையாளொருபங்கனை
அருத்தியாற்சென்றுகண்டிடவேண்டுமென்
றொருத்தியாருளமூசலதாடுமே. (௫)

கங்கையைச்சடைவைத்துமலைமகள்
நங்கையையுடனேவைத்தநாதனார்

திங்கள்சூடி திருக்கழிபபாலையான்
இங்குவாதிடுமென்றிறுமாக்குமே. (சா)

ஐயனையழகேயனலேநதிய
கையனைகறைசேர்தருகண்டனே
மையுலாம்பொழிலசூழ்கழிப்பாலையெம்
ஐயனேவிதியேயருளென்னுமே. (எ)

பத்தாகடகமுதாயபரத்தினே
முத்தனைமுடிவொனறிலாமூர்த்தியை
அத்தனையணியார்கழிபபாலையெம்
சிததனைச்செனறுசேருமாசெபபுமே. (அ-கூ)

பொனசெயமாமுடிவாளரக்கன்றலை
யைஞ்சுநான்குமொனறும்மிறுத்தானவன்
என்செயானகழிபபாலையுளெம்பிரான்
அஞ்சுமபோதுதுணையெனலாகுமே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

திருப்பைஞ்ஞீலி - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம.

மத்தமாமலர்சூடியமைநதனார்
சித்தராய்த்திரிவாரவினைதீரப்பால
பத்தாநதொழுதேத்துபைஞ்ஞீலியெம்
அத்தனைத்தொழலலவாநல்லரே. (க)

உடையாகோவணமொன்றுங்குறைவிலர்
படைகொள்பாரிடஞ்சூழ்ந்தபைஞ்ஞீலியார்
சடையிறகங்கைதரித்தசதுரரை
அடையவல்லவாக்கில்லையவலமே (உ)

விழுதுசூலத்தன்வெண்மழுவாட்படைக்
கழுதுதுஞ்சிருள்காட்டகத்தாடலான்
பழுதொன்றினறிப்பைஞ்ஞீலிப்பரமனை
தொழுதுசெலபவாதம்வினைதூளியே. (ங)

ஒன்றிமாலும்பிரமனுநதம்மிலே
நின்றசூழலறிவரியானிடம்
சென்றுபாரிடமேத்துபைஞ்ஞீலியுள்
என்றுமேவியிருந்தவடிகளே. (ச)

வேழத்தின்னுரிபோர்த்தவிகிர்தனார்
தாழச்செஞ்சடைமேற்பிறைவைத்தவர்
தாழைத்தண்பொழிலசூழ்நதபைஞ்ஞீலியார்
யாழின்பாட்டையுகந்தவடிகளே. (ரு)

குண்டுபட்டுக்குறியறியாச்சமண்
மிண்டரோடுபடுத்துய்யப்போந்துநான்
கண்டங்கார்வயல்சூழ்ந்தபைஞ்ஞீலியெம்
அண்டவாணனடியடைந்துய்ந்தனே. (சா)

வரிப்பையாடரவாட்டிமதகரி
உரிப்பைமூடியவுத்தமனுருறை
திருப்பைஞ்ஞீலிதிசைதொழுவார்கள்போய்
இருப்பர்வானவரோடினிதாகவே. (எ)

கோடல்கோங்கம்புறவணிமுல்லைமேல
பாடல்வண்டிசைகேட்கும்பைஞ்ஞீலியார்
பேடுமோணும்பிறரறியாததோர்
ஆடுநாகமசைத்தவடிகளே. (அ)

காருலாமலர்க்கொன்றையந்தாரினன்
வாருலாமுலைமங்கையோர்பங்கினன்
தேருலாம்பொழில்சூழ்ந்தபைஞ்ஞீலியெம்
ஆரிலாவமுதையடைந்துய்ம்மினே. (கூ)

தருக்கிச்சென்றுதடவரைபற்றலும்
நெருக்கியூன்றவிணைந்துசிவனையே
யரக்கன்பாடவருளுமெம்மானிடம
இருக்கைஞீலியென்பார்க்கிடரில்லையே. (க0)

திருச்சிற்றம்பலம்

---

திருவேட்களம் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

நன்றுநாடொறுநம்வினைபோயறும
என்றுமின்பந்தழைக்கவிருக்கலாம்
சென்றுநீர்திருவேட்களத்துள்ளுறை
துன்றுபொற்சடையானைத்தொழுமினே. (க)

கருப்புவெஞ்சிலைக்காமனைக்காய்ந்தவன்
பொருப்புவெஞ்சிலையாற்புரஞ்செற்றவன்
விருப்பன்மேவியவேட்களங்கைதொழு
திருப்பனாகிலெனக்கிடரில்லையே. (உ)

வேட்களத்துறைவேதியனெம்மிறை
ஆக்களேறுவரானைஞ்சுமாடுவர்
பூக்கள்கொண்டவன்பொன்னடிபோற்றினால்
காப்பர்நம்மைக்கறைமிடற்றண்ணலே. (ந)

அல்லலில்லையருவினைதானில்லை
மல்குவெண்பிறைசூடுமணாளனார்
செல்வனார்திருவேட்களங்கைதொழ
வல்லராகில்வழியதுகாண்மினே. (ச)

துன்பமில்லைதுயரில்லையாமினி
நம்பனாகியநன்மணிகண்டனார்
என்பொனாருறைவேட்களநன்னகர்
இன்பன்சேவடியேத்தியிருப்பதே. (ரு)

கட்டப்பட்டுக்கவலையில்வீழாதே
பொட்டவல்லுயிர்போவதன்முன்னநீர்

சிட்டனார்திருவேட்களங்கைதொழப்
பட்டவல்வினையாயினபாறுமே.　　　　(௬)

வட்டமென்முலையாளுமைபங்கனார்
எட்டுமொன்றுமிரண்டுமூன்றுமினார்
சிட்டன்சேர்திருவேட்களங்கைதொழு
திட்டமாகியிருமடநெஞ்சமே　　　　(௭)

நட்டமாடியநம்பனைநாடொறும்
இடடத்தாலினிதாகநினைமினோ
வட்டவார்முலையாளுமைபங்கனார்
சிட்டனார்திருவேட்களநதன்னையே.　　　　(௮)

வட்டமாமதின்மூன்றுடன்வல்லரண்
சுட்டகொள்கையராயினுஞ்சூழ்நதவர்
குட்டவல்வினைதீர்த்துக்குளிராவிக்கும்
சிட்டர்போறிருவேட்களசசெலவரே.　　　　(௯)

சேடனுருறையுஞ்செழுமாமலை
ஓடியாஙகெடுத்தான்முடிபத்திற
வாடவூன்றிமலரடிவாஙகிய
வேடனுருறைவேட்களஞ்சோமினே.　　　　(௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநல்லம் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

கொல்லத்தானமனார்தமர்வநதக்கால்
இல்லத்தார்செயலாவதெனோமைகாள்
நல்லத்தானமையாளுடையானகழல
சொல்லத்தான்வல்லிரேற்றுயாதீருமே.　　　　(௧)

பொக்கம்பேசிப்பொழுதுகழியாதே
துக்கநதீர்வகைசொல்லுவனகேண்மினோ
தக்கன்வேள்விதகர்த்ததழல்வண்ணன்
நக்கன்சேர்நல்லநண்ணுதனனமையே.　　　　(௨)

பிணிகொள்வார்குழற்பேதையர்காதலால்
பணிகண்மேவிப்பயனிலலைபாவிகாள்
அணுகவேண்டிலரனெறியாவது
நணுகுநாதனகர்திருநலலமே.　　　　(௩)

தமக்குநல்லதுதம்முயிர்போயினால
இமைக்கும்போதுமிராதிக்குரம்பைதான்
உமைக்குநல்லவன்றானுறையும்பதி
நமக்குநல்லதுநல்லமடைவதே.　　　　(௪)

உரைதளர்ந்துடலார்நடுங்காமுனம்
நரைவிடையுடையானிடநல்லமே
பரவுமின்பணிமின்பணிவார்சொடே
விரவுமின்விரவாரைவிடுமினே.　　　　(௫)

வரிப்பையாடரவாட்டிமதகரி
உரிப்பைமூடியவுத்தமனூருறை
திருப்பைஞ்ஞீலிதிசைதொழுவார்கள்போய்
இருப்பர்வானவரோடினிதாகவே. (௭)

கோடல்கோங்கம்புறவணிமுல்லைமேல
பாடல்வண்டிசைகேட்கும்பைஞ்ஞீலியார
பேடுமாணும்பிறரறியாததோர
ஆடுநாகமசைத்தவடிகளே. (அ)

காருலாமலர்க்கொன்றையந்தாரினன
வாருலாமுலைமங்கையோர்பங்கினன
தேருலாம்பொழில்சூழ்ந்தபைஞ்ஞீலியெம
ஆராவமுதையடைந்துய்ம்மினே. (௯)

தருக்கிச்சென்றுதடவரைபற்றலும்
நெருக்கியூன்றினானத்சிவனையே
யரக்கன்பாடவருளுமெம்மானிடம
இருக்கைஞீலியென்பார்க்கிடரில்லையே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

திருவேட்களம் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

நன்றுநாடொறுநம்வினைபோயறும
என்றுமின்பந்தழைக்கவிருக்கலாம்
சென்றுநீர்திருவேட்களத்துள்ளுறை
துன்றுபொற்சடையானைத்தொழுமினே. (௧)

கருப்புவெஞ்சிலைக்காமனைக்காய்ந்தவன்
பொருப்புவெஞ்சிலையாற்புரஞ்செற்றவன்
விருப்பன்மேவியவேட்களங்கைதொழு
இருப்பனாகிலெனக்கிடரில்லையே (௨)

வேட்களத்துறைவேதியனெம்மிறை
ஆக்களேறுவரானஞ்சுமாடுவர்
பூக்கள்கொண்டவன்பொன்னடிபோற்றினால்
காப்பாரம்மைக்கறைமிடற்றண்ணலே. (௩)

அல்லலில்லையருவினைதானில்லை
மல்குவெண்பிறைசூடுமணாளனூர்
செல்வனார்திருவேட்களங்கைதொழ
வல்லராகில்வழியதுகாண்மினே. (௪)

துன்பமில்லைதுயரில்லையாமினி
நம்பனாகியநன்மணிகண்டனூர்
என்பொனாருறைவேட்களநன்னகர்
இன்பன்சேவடியேத்தியிருப்பதே. (௫)

கட்டப்பட்டுக்கவலையில்வீழாதே
பொட்டவல்லுயிர்போவதன்முன்னநீர்

சிட்டனார் திருவேட்களங்கைதொழப்
பட்டவல்வினையாயினபாறுமே. (சு)

வட்டமென்முலையாளுமைபங்கனா
எட்டுமொன்றுமிரண்டுமூன்றுமயினார்
சிட்டன்சேர்திருவேட்களங்கைதொழு
திட்டமாகியிருமடநெஞ்சமே (எ)

நட்டமாடியநம்பனைநாடொறும்
இட்டத்தால்இனிதாநினைமின்னோ
வட்டவார்முலையாளுமைபங்கனார்
சிட்டனார்திருவேட்களநன்னையே. (அ)

வட்டமாமதினமூன்றுடன்வல்லரண்
சுட்டகொள்கையராயினுஞ்சூழ்தவர்
குட்டவல்வினைதீர்த்துக்குளிர்விக்கும்
சிட்டர்போர்திருவேட்களச்செல்வரே. (கூ)

சேடனுறையுஞ்செழுமாமலை
ஓடியாங்கெடுத்தான்முடிபத்திற
வாடவூன்றிமலரடிவாங்கிய
வேடனுறைவேட்களஞ்சேர்மினே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

திருநல்லம் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

கொல்லத்தானமனார்தமர்வந்தக்கால்
இல்லத்தார்செயலாவதென்னேழைகாள்
நல்லத்தானமையாளுடையானகழல
சொல்லத்தானவல்லிரேற்றுயர்தீருமே. (க)

பொக்கம்பேசிப்பொழுதுகழியாதே
துக்கந்தீரவகைசொல்லுவன்கேண்மினோ
தக்கன்வேள்விதகர்த்ததழல்வண்ணன்
நக்கன்சேர்நல்லநண்ணுதனன்மையே. (உ)

பிணிகொள்வார்குழற்பேதையர்காதலால்
பணிகண்மேவிப்பயனிலலைபாவிகாள்
அணுகவேண்டிலரனெறியாவது
நணுகுநாதனகர்திருநல்லமே. (ந)

தமக்குநல்லதுதம்முயிர்போயினால்
இமைக்கும்போதுமிராதிக்குரம்பைதான்
உமைக்குநல்லவன்றானுறையும்பதி
நமக்குநல்லதுநல்லமடைவதே. (ச)

உரைதளர்ந்துடலாநடுங்காமுனம்
நரைவிடையுடையானிடநல்லமே
பரவுமின்பணிமின்பணிவாரொடே
விரவுமின்விரவாரைவிடுமினே. (ரு)

அல்லலாகவைம்பூதங்களாட்டினும்
வல்லவாறுசிவாயநமவென்று
நல்லமேவியநாதனடிதொழ
வெல்லவந்தவினைப்பகைவீடுமே. (௬)

மாதராரொடுமக்களுஞ்சுற்றமும்
பேதமாகிப்பிரிவதன்முன்னமே
நாதன்மேவியநல்லநகர்தொழப்
போதுமின்னெழுமுன்புகலாகுமே. (௭)

வெம்மையானவினைச்சடைவீழ்ந்திரா
செம்மையாயசிவகதிசேரலாம்
சும்மையாமலர்தூவிதொழுமினோ
நம்மையாளுடையானிடநல்லமே. (௮)

காலமானகழிவதன்முன்னமே
ஏலுமாறுவணங்கிநின்றேத்துமின்
மாலுமாமலரானொடுமாமறை
நாலும்வல்லவர்கோனிடநல்லமே. (௯)

மல்லைமலங்கியதோளரக்கன்வலி
ஒல்லையிலொழித்தானுறையும்பதி
நல்லநல்லமெனும்பெயர்நாவினால்
சொல்லவல்லவர்தாநெறிசேர்வரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருஆமாத்தூர்-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

மாமாத்தாகியமாலயன்மால்கொடு
தாமாத்தேடியுங்காண்கிலாத்தாணுமுடி
ஆமாத்தூரரனேயருளாயென்றென
றேமாப்பெய்திக்கண்டாரிறையானையே. (௧)

சந்தியானைச்சமாதிசெய்வார்தங்கள்
புந்தியானைப்புத்தேளிர்தொழப்படும்
அந்தியானையாமாத்தூரழகனைச்
சிந்தியாதவர்தீவினையாளரே. (௨)

காமாத்தமமெனுங்காவலைப்பட்டுநான்
போமாதத்தையறியாதுபுலம்புவேன்
ஆமாத்தூரரனேயென்றழைத்தலும்
தேமாத்தீங்கனிபோலத்தித்திக்குமே. (௩)

பஞ்சபூதவலையிற்படுவதற்
கஞ்சிநானுமாமாத்தூரழகனை
நெஞ்சினுணினைந்தேனினைவெய்தலும்
வஞ்சவாறுகள்வற்றினகாண்மினே. (௪)

குராமனுங்குழலாளொருகூறனார்
அராமனுஞ்சடையான்றிருவாமாத்தூர்

இராமனுமவழிபாடுசெய்யீசனை
நிராமயன்றனைநாளுநினைமினே (௫)

பித்தனைபபெருநதேவாதொழுபபடும்
அத்தனையணியாமாத்தூரமேவிய
முத்தினையடியேனுண்முயறலும
பத்திவெள்ளம்பரநததுகாண்மினே. (௬)

நீறறினாதிருமேனியனேரிழை
கூறறினனகுழறகோலச்சடையிலோர்
ஆறறினனணியாமாததூரமேவிய
ஏறறினனமையாளுடையீசனே (௭)

பண்ணிறபாடலகள்பததிசெய்வித்தகாக்
கண்ணித்தாகுமமுதினையாமாததூர
சண்ணிபபானைத்தமாக்கணித்தாயதோா
கண்ணிறபாவையன்னவனகாண்மினே. (௮)

குண்டாபீலிகளகொள்ளுங்குணமிலா
மிண்டரோடெனைவேறுபடுத்துயக்
கொண்டநாதனகுளிாபுனலவீரடடத்
தண்டனரிடமாமாத்தூாகாண்மினே (௯)

வானஞ்சாடுமதியரவத்தொடு
தானஞ்சாதுடனவைததசடையிடைத
தேனஞ்சாடியதெஙகிளநீரொடும
ஆனஞ்சாடியவாமாததூரையனே. (௧௦)

விடடலையாயவிலங்கல்லெடுத்தானமுடி
அடரவோாவிரலூனறியவாமாத்தூா
இடமதாக்கொண்டவீசனுக்கெனனுளம
இடமதாகக்கொண்டின்புறறிருபபனே (௧௧)

திருசசிறறம்பலம்.

---

திருத்தோணிபுரம்-திருக்குறுந்தொகை.

திருசசிறறமபலம்.

மாதியன்றுமனைககிருவெனறக்கால்
நீதிதான்சொலநீயெனக்காரொனும்
சோதியாாதருதோணிபுரவறகுத்
தாதியாவனுனெனனுமென்றையலே. (௧)

நக்கம்வநதுபலியிடென்றார்க்கிடட
மிக்கதையலைவெள்வளைகொள்வது
தொக்கநீர்வயற்றோணிபுரவாக்குத்
தக்கதன்றுதமதுபெருமைக்கே. (௨)

கெணடைபோனயனத்திமவான்மகள்
வண்டுவார்குழலாளுடனாகவே
துண்டவான்பிறைத்தோணிபுரவனைக்
கண்டுகாமுறுகின்றனள்கன்னியே. (௩)

பாலையாழ்மொழியாளவடாழசடை
மேலளாவதுகண்டனள்விண்ணுறச
சோலையாதருதோணிபுரவறகுச
சாலநல்லளாகின்றனடையலே. (௪)

பண்ணினோமொழியாள்பலியிட்டவிப்
பெண்ணைமால்கொடுபெயவளை கொள்வது
சுண்ணமாடியதோணிபுரத்துறை
அண்ணலாருக்குச்சாலவழகிதே. (௫)

முல்லைவெணணகைமொய்குழலாயுனக்
கலலனுவதறிநதிலேசீகனித்
தொலலையார்பொழிற்றோணிபுரவறகே
நலலையாயிடுகின்றனைநங்கையே. (௬)

ஒன்றுதானறியாருலகத்தவா
நின்றுசொலலிநிகழ்ந்தநினைப்பிலர்
துன்றுவாரபொழிறறோணிபுரவாதம
கொன்றைசூடுங்குறிபபதுவாகுமே. (௭)

உறவுபேய்க்கணமுண்ப துவெண்டலை
உறைவதுமமுடவிம்லாமபணகொடி
துறைகலார்கடறறோணிபுரத்துறை
இறைவனுர்ககிவளென்கண்டன்பாவதே. (௮)

மாகயானைமருபபோாமுலையினா
போகயாவ வள்புக்கதேபுகத
தோகைபோ தருதோணிபுரவறகே
ஆகயானுமவரககினியாளதே. (௯)

இட்டமாயினசெய்வாளென்பெண்கொடி
கட்டம்பேசியகாராககன்றனைத்
துடடகக்கியதோணிபுரததுறை
அடடமூாத்திக்குவனபதுவாகியே. (௧௦)

திருச்சிறறம்பலம்.

---

திருப்புகலூர் - திருக்குறுந்தொகை.

திருசசிறறம்பலம்.

துன்னக்கோவணச்சுண்ணவெண்ணீறணி
பொன்னக்கன்னசடைப்புகலூரரோ
மின்னக்கன்னவெண்டிங்களைப்பாம்புடன்
என்னுக்கோவுடன்வைத்திட்டிருபபதே. (௧)

இறைக்குமபாம்புமெறிதருதிங்களும்
நுறைக்குங்கங்கையுநுண்ணியசெஞ்சடைப்
புறைப்பிலாதபொழிற்புகலூரரை
உரைக்குமாசொல்லியொள்வளைசோருமே. (௨)

ஊசலாமரவல்குலென்சோர்குழல்
ஏசலாம்பழிதந்தெழில்கொண்டனர்

ஓசொலாய்மகளேமுறையோவென்று
பூசலிட்டிடும்புகலூரரர்க்கே. (௩)

மின்னினேரிடையாளுமைபங்கனைத்
தன்னைநேரொப்பிலாததலைவனைப்
புன்னைக்கானற்பொழிற்புகலூரனை
என்னுளாகவைத்தின்புற்றிருப்பனே (௪)

விண்ணினார்மதிசூடியவேந்தனை
எண்ணிநாமங்களோதியெழுத்தஞ்சுங்
கண்ணினாற்கழல்காண்பிடமேதெனிற்
புண்ணியன்புகலூருமென்னெஞ்சுமே. (௫)

அண்டவாணரமுதுண்ணநஞ்சுண்டு
பண்டுநான்மறையோதியபாடலன்
தொண்டராகித்தொழுதுமதிப்பவர்
புண்டரீகத்துளார்புகலூரரே. (௬)

தத்துவந்தலைகண்டறிவாரிலைத்
தத்துவந்தலைகண்டவர்கண்டிலர்
தத்துவந்தலைநின்றவர்க்கல்லது
தத்துவனலன்றண்புகலூரனே (௭)

பெருங்கையாகிப்பிளிறிவருவதோர்
கருங்கையானைக்களிறுரிபோர்த்தவர்
வருங்கையானைமதகளிறஞ்சினப்
பொருங்கையானைகண்டார்புகலூரரே. (௮)

பொன்னொத்தநிறத்தானும்பொருகடல்
தன்னொத்தநிறத்தானுமறிகிலாப்
புன்னைத்தாதுபொழிற்புகலூரரை
என்னத்தாவெனவென்னிடையீருமே. (௯)

மத்தனாய்மதியாதுமலைதனை
எத்தினான்றிரடோண்முடிபத்திற
ஒத்தினான்விரலாலொருங்கேத்தலும்
பொத்தினான்புகலூரைத்தொழுமினே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருவேகம்பம் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

பண்டுசெய்தபழவினையின்பயன்
கண்டுங்கண்டுங்களித்திகாணெஞ்சமே
வண்டுலாமலர்ச்செஞ்சடையேகம்பன்
தொண்டனாய்த்திரியாய்துயர்தீரவே. (௧)

நச்சிநாளுநயந்தடியார்தொழ
விச்சையாலுமைமங்கைவழிபடக்
கொச்சையார்குறுகார்செறிதீம்பொழிற்
கச்சியேகம்பமேகைதொழுமினே. (௨)

ஊனிலாவியியங்கியுலகெலாம்
தானுலாவியதன்மையராகிலும்
வானுலாவியபாணிபிறங்கவெங்
கானிலாடுவர்கச்சியேகம்பரே. (௩)

இமையாமுக்கண்ணரென்னெஞ்சத்துள்ளவா
ரமையாருமறிவொண்ணாததகைமையா
ரிமையோரேத்தவிருந்தவனேகம்பனா
நமையாளுமவனைத்தொழுமின்களே (௪)

மருந்தினோடுநற்சுற்றமுமக்களும
பொருந்திநின்றெனக்காயவெம்புண்ணியன
கருந்தடங்கண்ணினாளுமைகைதொழ
இருந்தவன்கச்சியேகம்பத்தெந்தையே. (௫)

பொருளினோடுநற்சுற்றமும்பற்றிலாக
கருளுநன்மைதந்தாயவரும்பொருள
சுருள்கொள்செஞ்சடையானகச்சியேகம்பா
இருள்கெடச்சென்றுகைதொழுதேத்துமே (௬)

மூக்குவாய்செவிகண்ணுடலாகிவந்
தாக்குமைவர்தம்மாப்பையவிழ்த்தருள
நோக்குவானமைநோய்வினைவாராமே
காக்குநாயகனகச்சியேகம்பனே. (௭)

பண்ணிலோசைபழத்தினிலின்சுவை
பெண்ணொடாணெனப்பேசற்கரியவன்
வண்ணமில்லிவடிவுவேறாயவன
கண்ணினுண்மணிகச்சியேகம்பனே (௮)

திருவினாயகன்செம்மலர்மேலயன்
வெருவநீண்டவிளங்கொளிச்சோதியான்
ஒருவனாயுணர்வாயுணர்வல்லதோர்
கருவனாயகன்கச்சியேகம்பனே. (௯)

இடுகுநுண்ணிடையேந்திளமென்முலை
வடிவின்மாதர்திறமனம்வையன்மின்
பொடிகொண்மேனியன்பூம்பொழிற்கச்சியுள
அடிகளெம்மையருந்துயர்தீர்ப்பரே. (௧௦)

இலங்கைவேந்தனிராவணன்சென்றுதன்
விலங்கலையெடுக்கவிரலூன்றலும்
கலங்கிக்கச்சியேகம்பவோவென்றலும
நலங்கொளசெல்வமளித்தானெங்கணாதனே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவேகம்பம் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

பூமேலானும்பூமகள்கேள்வனும
நாமேதேவரெனாமைநடுக்குறத
தீமேவும்முருவாதிருவேகம்பா
ஆமோவல்லற்படவடியோங்களே. (௧)

அருந்திறலமரரயனமாலொடு
திருந்தநின்றுவழிபடத்தேவியோ
டிருந்தவன்னெழிலார்கச்சியேகம்பம்
பொருந்தச்சென்றுடன்பட் டெழுதுமே. (உ)

கறைகொள்கண்டத்தெண்டோளிறைமுக்கண்ணன்
மறைகொளுவினனவானவர்க்காதியான்
உறையும்பூம்பொழில்சூழ்கச்சியேகம்பம்
முறைமையாற்சென்றுமுந்தித்தொழுதுமே. (ங)

பொறிப்புலன்களைப்போக்கறுத்துள்ளத்தை
நெறிப்படுத்துநினைந்தவர்சிந்தையுள்
அறிப்புறுமமுதாயவனேகம்பம்
குறிப்பினாற்சென்றுகூடித்தொழுதுமே. (ச)

சிந்தையுட்சிவமாய்நின்றசெம்மையோ
டந்தியாயனலாய்ப்புனல்வானமாய்ப்
புந்தியாய்ப்புகுந்துள்ளநிறைந்தவெம்
எந்தையேகம்பமேத்தித்தொழுமினே. (ரு)

சாக்கியத்தொடுமற்றுஞ்சமண்படும்
பாக்கியமிலார்பாடுசெலாதுறப்
பூக்கொள்சேவடியான்கச்சியேகம்பம்
நாக்கொடேத்திநயந்துதொழுதுமே. (சா)

மூப்பினோடுமுனிவுறுத்தெந்தமை
யாப்பதன்முன்னமணியமாக்கிறை
காப்பதாயகடிபொழிலேகம்பம்
சேர்ப்பதாகநாஞ்சென்றடைந்துய்துமே. (எ)

ஆலுமாமயிற்சாயனல்லாரொடும்
சாலநீயுறுமாற்றவிர்நெஞ்சமே
நீலமாமிடற்றண்ணலேகம்பனார்
கோலமாமலர்ப்பாதமேகும்பிடே (அ)

பொய்யனைத்தையும்விட்டவர்புந்தியுண்
மெய்யனைச்சுடர்வெண்மழுவேந்திய
கையனைக்கச்சியேகம்பமேவிய
ஐயனைத்தொழுவார்க்கில்லையல்லலே (கூ)

அரக்கனற்றன்வலியுன்னிக்கயிலையை
நெருக்கிச்சென்றெடுத்தான்முடிதோணெரித்
திரக்கவின்னிசைகேட்டவனேகம்பம்
தருக்கதாகநாஞ்சார்ந்துதொழுதுமே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவெண்காடு - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

பண்காட்டிப்படியாயதன்பத்தர்க்குக்
கண்காட்டிக்கண்ணினின்றமணியொக்கும்

பெண்காட்டிப்பிறைச்சென்னிவைத்தான்றிரு
வெண்காட்டையடைந்துய்ம்மடநெஞ்சமே. (க)

கொள்ளிவெந்தழல்வீசிநின்றாடுவார்
ஒள்ளியகணஞ்சூழுமைபங்கனார்
வெள்ளியன்கரியன்பசுவேறிய
தெள்ளியான்றிருவெண்காடடைநெஞ்சமே. (உ)

ஊனைக்குமின்பமவேண்டியுழலாதே
வானைக்கும்வழியாவதுநினைமினோ
தானைக்குந்தனனடியவர்நாவினில
தேனைக்குந்திருவெண்காடடைநெஞ்சமே. (௩)

பருவெண்கோட்டுப்பைங்கண்மதவேழத்தின்
உருவங்காட்டிநின்றானுமையஞ்சவே
பெருவெண்காட்டிறைவனுறையுமிடம்
திருவெண்காடடைந்துய்ம்மடநெஞ்சமே (ச)

பற்றவன்கங்கைபாம்புமதியுடன்
உற்றவன்சடையானுயர்ஞானங்கள்
கற்றவன்கயவர்புரமோரம்பால்
செற்றவன்றிருவெண்காடடைநெஞ்சமே (ரு)

கூடினானுமையாளொருபாகமாய்
வேடனாய்விசயற்கருள்செய்தவன்
சேடனார்சிவனார்சிந்தைமேயவெண்
காடனாரடியேயடைநெஞ்சமே. (சா)

தரித்தவன்கங்கைபாம்புமதியுடன்
புரித்தபுன்சடையானகயவர்புரம்
எரித்தவன்மறைநான்கினோடாறங்கம்
விரித்தவனுறைவெண்காடடைநெஞ்சமே. (எ)

பட்டமிண்டையவைகொடுபத்தர்கள்
சிட்டனென்றுசிந்தைசெய்யவே
நட்டமூர்த்திஞானச்சுடராய்நின்ற
அட்டமூர்த்திதன்வெண்காடடைநெஞ்சமே. (அ)

பனவேடத்தினும்பிரமனும்
தானவேடமுன்றாழ்ந்தறிகின்றிலா
ஞானவேடனவிசயற்கருள்செய்யும்
கானவேடன்றன்வெண்காடடைநெஞ்சமே. (கூ)

பாலையாடுவர்பன்மறையோதுவர்
சேலையாடியகண்ணுமைபங்கனார்
வேலையார்விடமுண்டவெண்காட்டுக்கு
மாலையாவதுமாண்டவரங்கமே (க0)

இராவணஞ்செயமாமதிபற்றவை
இராவணம்முடையான்றனையுள்குமின்
இராவணன்றனையூன்றியருள்செய்த
விராவணன்றிருவெண்காடடைமினே. (கக)

திருச்சிற்றம்பலம்.

### திருவாய்மூர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

எங்கேயென்னை யிருந்திடந் தேடிக்கொண்
டங்கேவந் தடையாள மருளினார்
தெங்கே தோன்றுந் திருவாய்மூர்ச் செல்வனார்
அங்கேவாவென்று போனார தென்கொலோ. (௧)

மன்னுமாமறைக் காட்டு மணாளனார்
உன்னியுன்னி யுறங்குகின் றேனுக்குத்
தன்னைவாய்மூர்த் தலைவனா மாசொலி
என்னைவாவென்று போனார தென்கொலோ. (௨)

தஞ்சேகண்டேன் றரிக்கிலா தாரொன்றேன்
அஞ்சேலுன்னை யழைக்கவந் தேனென்றார்
உஞ்சேனென் றுகந்தேயெழுந் தோட்டந்தேன்
வஞ்சேவல்லரோ வாய்மூ ரடிகளே. (௩)

கழியக்கண்டிலேன் கண்ணெதிரே கண்டேன்
ஒழியப்போந்திலே னொக்கவே யோட்டந்தேன்
வழியிற்கண்டிலேன் வாய்மூ ரடிகட்டன்
சுழியிற்பட்டுச் சுழல்கின்ற தென்கொலோ. (௪)

ஒள்ளியாரிவ ரன்றிமற் றில்லையென்
றுள்கியுள்கி யுகந்திருந் தேனுக்குத்
தெள்ளியாரிவர் போலத் திருவாய்மூர்க்
கள்ளியாரவர் போலக் கரந்ததே. (௫)

யாதேசெய்துமி யாமலோ நீயென்னில்
ஆதேயேயு மளவில் பெருமையான்
மாதேவாகிய வாய்மூர் மருவினார்
போதேயென்றும் புகுந்ததும் பொய்கொலோ. (௬)

பாடிப்பெற்ற பரிசில் பழங்காசு
வாடிவாட்டந் தவிர்ப்பா ரவரைப்போல்
தேடிக்கொண்டு திருவாய்மூர்க் கேயென
ஓடிப்போந்திங் கொளித்தவா றென்கொலோ. (௭)

திறக்கப்பாடிய வென்னினுஞ் செந்தமிழ்
உறைப்புப்பாடி யடைப்பித்தா ருந்நின்றார்
மறைக்கவல்லரோ தம்மைத் திருவாய்மூர்ப்
பிறைக்கொள்செஞ்சடை யாரிவர் பித்தரே. (௮)

தனக்கேறாமை தவிர்கென்று வேண்டினும்
நினைத்தென்பொய்யக் கருள்செய் திடுமின்மலன்
எனக்கேவந்தெதிர் வாய்மூருக் கேயெனப்
புனற்கேபொற்கோயில் புக்கதும் பொய்கொலோ. (௯)

நீண்டவர்க்கரிய திருவடி யொன்றினால்
மீண்டவர்க்கு மிதித்தா ரரக்கனை
வேண்டிக்கொண்டேன் திருவாய்மூர் விளக்கினைத்
தூண்டிக்கொள்வ னென்றலுந் தோன்றுமே. (௧௦)

---

திருச்சிற்றம்பலம்.

## திருப்பாலைத்துறை-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

நீலமாமணிகண்டத்தர்நீள்சடைக்
கோலமாமதிகங்கையுங்கூட்டினார்
சூலமான்மழுவேந்திச்சுடர்முடிப்
பானெய்யாடுவர்பாலைத்துறையரே. (௧)

கவளமாலகளிற்றினனுரிபோர்த்தவன
தவளவெண்ணகைமங்கையோர்பங்கினர்
திவளவானவர்போற்றித்திசைதொழும்
பவளமேனியர்பாலைத்துறையரே. (௨)

மின்னினுண்ணிடைக்கண்ணியர்மிக்கெங்கும்
பொன்னினீர்மூழ்கிப்போற்றியடிதொழ
மன்னினான்மறையோடுபல்கீதமும்
பன்னினாரவர்பாலைத்துறையரே. (௩)

நீடுகாடிடமாய்நின்றபேய்க்கணங்
கூடுபூதங்குழுமிநின்றார்க்கவே
ஆடினாரழகாகியநான்மறை
பாடினாரவர்பாலைத்துறையரே (௪)

சித்தர்கன்னியர்தேவர்கடானவர்
பித்தர்நான்மறைவேதியர்பேணிய
அத்தனேநமையாளுடையாயெனும்
பத்தர்கட்கன்பர்பாலைத்துறையரே (௫)

விண்ணினார்பணிந்தேத்தவியப்புறு
மண்ணினார்மறவாதுசிவாயவென
றெண்ணினார்க்கிடமாவெழில்வானகம்
பண்ணினாரவர்பாலைத்துறையரே. (௬)

குரவனார்கொடுகொட்டியுங்கொக்கரை
விரவினார்பண்கெழுமியவீணையும்
மருவுநாண்மலர்மல்லிகைசெண்பகம்
பரவுநீர்ப்பொன்னிப்பாலைத்துறையரே. (௭)

தொடருந்தொண்டரைத்துக்கந்தொடர்ந்துவந்
தடரும்போதரனாயருள்செய்பவர்
கடலினஞ்சணிகண்டர்கடிபுனற்
படருஞ்செஞ்சடைப்பாலைத்துறையரே. (௮)

மேகந்தோய்பிறைசூடுவர்மேகலை
நாகந்தோய்ந்தவரையினர்நல்லியற்
போகந்தோய்ந்தபுணர்முலைமங்கையோர்
பாகந்தோய்ந்தவர்பாலைத்துறையரே. (௯)

வெங்கண்வாளரவாட்டிவெருட்டுவர்
அங்கணாரடியார்க்கருணல்குவர்
செங்கண்மாலயன்றேடற்கரியவர்
பைங்கணேற்றினர்பாலைத்துறையரே. (௧௦)

உரத்தினா ரக்கனாயமா மலை
நெருக்கினானை நெரித்தவன் பாடலும்
இரக்கமாவருள் செய்த பாலைத்துறை
கரத்தினாற் றொழுவார்வினை யோயுமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருநாகேச்சுரம் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

நல்லர் நல்லதோர் நாகங்கொண்டாடுவர்
வல்லர் வல்வினை தீர்க்கு மருந்துகள்
பல்லிலோடுகை யேந்திப் பலிதிரி
செல்வர் போற்றிருநாகேச்சுரவரே. (௧)

நாவலம்பெருந்தீவினில் வாழ்பவர்
மேவிவந்து வணங்கி வினையொடும்
பாவமாயின பற்றறுவித்திடுந்
தேவர் போற்றிருநாகேச்சுரவரே. (௨)

ஓதமார்கடலின் விடமுண்டவர்
ஆதியாரயனோடமரர்க்கெலாம்
மாதொர்கூறர் மழுவலனேந்திய
நாதர் போற்றிருநாகேச்சுரவரே. (௩)

சந்திரனொடு சூரியர் தாமுடன்
வந்து சீர்வழிபாடுகள் செய்தபின்
ஐந்தலையரவின் பணிகொண்டருள்
மைந்தர் போன்மணிநாகேச்சுரவரே. (௪)

பண்டோர் நாளிகழ்வான் பழிதக்கனார்
கொண்ட வேள்விக் குமண்டையதுகெடத்
தண்டமாவிதாதாவின தலைகொண்ட
செண்டர் போற்றிருநாகேச்சுரவரே. (௫)

வம்புபூங்குழன் மாதுமறுகவோர்
கம்பயானை யுரித்த கரத்தினர்
செம்பொனாரிதழிமலர்ச் செஞ்சடை
நம்பர் போற்றிருநாகேச்சுரவரே. (௬)

மானையேந்திய கையினர் மையறு
ஞானச்சோதியராதியர் நாமந்தான்
ஆனவஞ்செழுத்தோதவந் தண்ணிக்கும்
தேனர் போற்றிருநாகேச்சுரவரே. (௭)

கழல்கொள் காலினர் காலனைக் காய்ந்தவர்
தழல்கொள் மேனியர் சாந்தவெண்ணீறணி
அழகரானிழற் கீழறமோதிய
குழகர் போல் குளிர்நாகேச்சுரவரே. (௮)

வட்டமாமதின் மூன்றுடன் வல்லரண்
சுட்டசெய்கைய ராகிலுஞ் சூழ்ந்தவர்

குட்டவல்வினைதீர்த்துக்குளிர்விக்கும்
சிட்டர்போற்றிருநாகேச்சுரவரே. (௯)

ஆர்த்தன்றோன்முடிதாளுந்தொலையவே
சேர்த்தினார்திருப்பாதத்தொருவிரல்
ஆர்த்துவந்துலகத்தவராடிடும்
தீர்த்தர்போற்றிருநாகேச்சுரவரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

### திருஅதிகைவீரட்டம் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

கோணன்மாமதிசூடியோர்கோவணம்
நாணில்வாழ்க்கைநயந்தும்பயனிலை
பாணில்வீணைபயின்றவன்வீரட்டம்
காணிலல்லதென்கண்டுயில்கொள்ளுமே. (௧)

பண்ணினைப்பவளத்திரண்மாமணி
அண்ணலையமரர்தொழுமாதியைச்
சுண்ணவெண்பொடியான்றிருவீரட்டம்
நண்ணிலல்லதென்கண்டுயில்கொள்ளுமே. (௨)

உற்றவாதம்முறுநோய்களைபவர்
பெற்றமேறும்பிறங்குசடையினர்
சுற்றும்பாய்புனல்சூழ்திருவீரட்டம்
கற்கிலல்லதென்கண்டுயில்கொள்ளுமே. (௩)

முற்றுவெண்மதிசூடுமுதல்வனார்
செற்றார்வாழுந்திரிபுரந்தீயெழ
விற்றான்கொண்டெயிலெய்தவர்வீரட்டம்
கற்றலல்லதென்கண்டுயில்கொள்ளுமே. (௪)

பல்லாரும்பலதேவர்பணிபவன்
நல்லாருந்நயந்தேத்தப்படுபவன்
வில்லான்மூவெயிலெய்தவன்வீரட்டம்
கல்லேனாகிலென்கண்டுயில்கொள்ளுமே. (௫)

வண்டார்கொன்றையுமத்தம்வளர்சடை
கொண்டான்கோலமதியோடரவமும்
விண்டார்மும்மதிலெய்தவன்வீரட்டம்
கண்டாலல்லதென்கண்டுயில்கொள்ளுமே. (௬)

அரையார்கோவணவாடையனாறெலாந்
திரையாரொண்புனல்பாய்கெடிலக்கரை
விரையார்நீற்றன்விளங்குவீரட்டன்பால்
கரையேனாகிலென்கண்டுயில்கொள்ளுமே. (௭)

நீறுடைத்தடந்தோளுடைநின்மலன்
ஆறுடைப்புனல்பாய்கெடிலக்கரை
ஏறுடைக்கொடியான்றிருவீரட்டம்
கூறிலல்லதென்கண்டுயில்கொள்ளுமே. (௮)

செங்கண்மாலவிடையேறியசெல்வனார்
பைஙகணானையினீருரிபோர்த்தவர்
அஙகண்ஞாலமதாகியவீரட்டம்
கங்குலாகவென்கண்டுயிலகொள்ளுமே. (௯)

பூணுணாம்பொருநதவுடையவா
நாணுகவவளாவில்லிடையம்பினாற்
பேணூமும்மதிலெய்தவர்வீரட்டம்
காணேனுகிலென்கணடுயில்கொள்ளுமே. (௧௦)

வரையாரநதவயிரத்திரணமாணிக்கம்
திரையாரநதபுனல்பாய்கெடிலக்கரை
விரையாாநீறறனவிளங்கியவீரட்டம்
உரையேனுகிலென்கண்டுயிலகொள்ளுமே (௧௧)

உலநதாரவெண்டலையூன்கலனுகவே
வலந்தான்மிககவனவாளரககனறனைச்
சிலம்பாரசேவடியூன்றினான்வீரட்டம
புலம்பேனுகிலெனகண்டுயில்கொள்ளுமே. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

---

### திருஅதிகைவீரட்டம்-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

*எட்டுநாண்மலர்கொண்டவன்சேவடி
மட்டலரிடுவாரவினைமாயுமாற
கட்டிடதேன்கலநதன்னகெடிலவீ
ரட்டனாடிசேருமவருக்கே. (௧)

நீளமாநினைநதெண்மலரிட்டவா
கோலவலவினையுங்குறைவிப்பால்
வாளமாவிழியுங்கெடிலககரை
வேளிசூழ்நதழகாயவீரட்டரே. (௨)

களளிஞணமலரோரிருநானகுகொண
டுளகுவாரவாவல்வினையோட்டுவார
தெள்ளுநீரவயல்பாய்கெடிலக்கரை
வெளளைநீறணிமேனிவீரட்டரே. (௩)

பூங்கொத்தாயினமூன்றொடோரைநதிட்டு
வாங்கிநின்றவர்வலவினையோட்டுவார
வீங்குதண்புனலபாய்கெடிலக்கரை
வேங்கைத்தோலுடையாடைவீரட்டரே. (௪)

தேனைப்போதுகணமூன்றொடோரைநதுடன்
தானைப்போதிடுவாாவினைதீாபபவர்
மீனத்தண்புனல்பாய்கெடிலக்கரை
வேனலானையுரித்தவீரட்டரே. (௫)

---

* அஷ்டபுட்பமாவன—புன்னை-வெள்ளெருக்கு-சண்பகம் நந்தியாவர்த்தம-நீலோற்பலம் - பாதிரி - அலரி - செந்தாமரை என்னுமிவற்றின்புட்பங்களாம். இவை புலரிமுதலிய காலங்களிற்சாத்தும் அஷ்டபுட்பம். மற்றுமுள்ளவகைகளைப் புட்பவிதியிற்காண்க.

ஏழித்தொன்மலர்கொண்டுபணிந்தவர்
ஊழித்தொல்வினையோடவகற்றுவார்
பாழித்தண்புனல்பாய்கெடிலக்கரை
வேழத்தின்னுரிபோர்த்தவீரட்டரே. (சா)

உரைசெய்நூல்வழியொண்மலரிட்டிடத்
திரைகள்போல்வருவல்வினைதீர்ப்பரால்
வரைகள்வந்திழியுங்கெடிலக்கரை
விரைகள்சூழ்ந்தழகாயவீரட்டரே. (எ)

ஒலிவண்டறையொண்மலரெட்டினுற
காலையேத்தவினைகைக்கழிப்பரால்
ஆலிவந்திழியுங்கெடிலக்கரை
வேலிசூழ்ந்தழகாயவீரட்டரே. (அ)

நாரிதாங்ளிட்டமலரொட்டினால
பாரிததேத்தவல்லார்வினைபாறுவார்
பூரித்தெண்டிரைபாய்கெடிலக்கரை
வேரிசெஞ்சடைவேய்ந்தவீரட்டரே. (கூ)

அட்டபுட்பமவைகொளுமாறுகொண்
டட்டமூர்த்தியனாதிதன்பாலணைந்
தட்டமாறுசெய்கிற்பவதிகைவீ
ரட்டனாரடிசேருமவர்களே (கO)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாரையூர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

வீறுதானுடைவெற்பன்மடந்தையோர்
கூறனாகிலுங்கூன்பிறைசூடிலும்
நாறுபூம்பொழினாரையூர்நம்பனுக்
காறுசூடிலுமம்மவழகிதே. (க)

புள்ளிகொண்டபுலியுரியாடையும்
வெள்ளிகொண்டவெண்பூதிமெய்யாடலும்
நள்ளிதெண்டிரைநாரையூரானஞ்சை
அள்ளியுண்டலுமம்மவழகிதே. (உ)

வேடுதங்கியவேடமும்வெண்டலை
ஓடுதங்கியவுண்பலிகொள்கையும்
நாடுதங்கியநாரையூரானடம்
ஆடுபைங்கழலம்மவழகிதே. (ந)

கொக்கின்றூவலுங்கூவிளங்கண்ணியும்
மிக்கவெண்டலைமாலைவிரிசடை
நக்கனாகிலுநாரையூர்நம்பனுக்
கக்கினாரமுமம்மவழகிதே. (ச)

வடிகொள்வெண்மழுமானமர்கைகளும
பொடிகொள்செம்பவளம்புரைமேனியும்

நடிகொணன் மயில்சேர்திருநாரையூர்
அடிகடம்வடிவம்மவழகிதே. (ரு)

சூலமலகியகையுஞ்சுடரொடு
பாலுநெய்தயிராடியபான்மையும்
ஞாலமலகியநாரையூர்நம்பனுக்
காலநீழலுமம்மவழகிதே. (சு)

பண்ணினன் மறைபாடலொடாடலும
எண்ணிலாபுரமூன்றெரிசெய்ததும்
நண்ணினாதுயாதீர்த்தலுநாரையூர்
அண்ணலார்செய்கையம்மவழகிதே. (எ)

என்புபூண்டெருதேறியிளம்பிறை
மின்புரிநதசடைமேல்விளஙகவே
நன்பகற்பலிதேரினுநாரையூா
அன்பனுக்கதுவமமவழகிதே. (அ)

முரலுங்கின்னரமொந்தைமுழஙகவே
இரவினினறெரியாடலுநீடுவான்
நரலும்வாரிநனைநாரையூரநமபனுக்
கரவும்பூணுதலம்மவழகிதே. (கூ)

கடுக்கையஞசடையன்கயிலைம்மலை
எடுததவாளரக்கன்றலையீரைஞ்சும்
நடுகசம்வநதிறநாரையூரான்விரல்
அடுத்ததனமையுமம்மவழகிதே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

திருக்கோளிலி - திருக்குறுந்தோகை.

திருச்சிற்றம்பலம்.

மைக்கொள்கண்ணுமைபங்கினன்மான்மழு
தொக்ககையினன்செய்யதோர்சோதியன்
கொக்கமாபொழில்சூழ்தருகோளிலி
நக்கனைதொழுநம்வினைநாசமே. (க)

முத்தினைமுதலாகியமூர்த்தியை
வித்தினைவிளைவாயவிகிர்தனைக்
கொத்தலாபொழில்சூழ்தருகோளிலி
அத்தனைத்தொழநீஙகுநம்மல்லலே. (உ)

வெண்டிரைபரவைவிடமுண்டதோர்
கண்டனைக்கலநதார்தமக்கன்பனைக்
கொண்டலம்பொழிற்கோளிலிமேவிய
அண்டனைத்தொழுவார்க்கலலலிலலையே. (ந)

பலவும்வல்வினைபாறும்பரிசினல்
உலவுங்கஙகையுந்திங்களுமொண்சடை
குலவினன்குளிருமபொழிற்கோளிலி
நிலவினன்றனைநித்தனினைமினே. (ச)

அல்லலாயினதீருமழகிய
முல்லைவெண்முறுவல்லுமையஞ்சவே
கொல்லையானையுரித்தவன்கோளிலிச்
செலவன்சேவடிசென்றுதொழுமினே. (ரு)

ஆவின்பால்கொண்டளவிலருந்தவம்
பாலன்வேண்டலுஞ்செல்லென்றுபாற்கடல்
கூவினான்குளிரும்பொழிற்கோளிலி
மேவினானைத்தொழவினைவீடுமே. (சு)

சீர்த்தநன்மனையாளுஞ்சிறுவரும்
ஆர்த்தசுற்றமும்பற்றிலையாதலால்
கூத்தனாருறையுந்திருக்கோளிலி
ஏத்திநீர்தொழுமின்னிடர்தீருமே. (எ)

மாலதாகிமயங்குமனிதர்காள்
காலம்வந்துகடைமுடியாமுனம்
கோலவார்பொழிற்கோளிலிமேவிய
நீலகண்டனைநின்றுநினைமினே. (அ)

கேடுமூடிக்கிடந்துண்ணுநாடது
தேடிநீர்திரியாதேசிவகதி
கூடலாந்திருக்கோளிலியீசனைப்
பாடுமின்னிரவோடுபகலுமே (கூ)

மடுத்துமாமலையேந்தலுற்றானை
அடர்த்துப்பின்னுமிரங்கியவற்கருள்
கொடுத்தவன்னுறைகோளிலியேதொழ
விடுத்துநீங்கிடுமேலைவினைகளே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கோளிலி - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

முன்னமேநினையாதொழிந்தேனுனை
இன்னநாளுனசேவடியேத்திலேன்
செந்நெலார்வயல்சூழ்திருக்கோளிலி
மன்னனேயடியேனைமறவலே. (க)

விண்ணுளார்தொழுதேத்தும்விளக்கினை
மண்ணுளார்வினைதீர்க்குமருந்தினைப்
பண்ணுளார்பயிலுந்திருக்கோளிலி
அண்ணலாரடியேதொழுதுய்ம்மினே. (உ)

நாளுநம்முடைநாள்களறிகிலோம்
ஆளுநோய்களோரைம்பதோடாறெட்டு
ஏழமைப்பட்டிருந்துநீர்நையாதே
கோளிலியான்பாதமேகூறுமே. (ங)

விழவினோசையொலியறாத்தண்பொழில்
பழகினார்வினைதீர்க்கும்பழம்பதி

அழல்கையானமருந்திருக்கோளிலிக்
குழகனாதிருப்பாதமேசுறுமே. (ச)

மூலமாகியமூவாக்குமூர்த்தியைக்
காலனாகியகாலற்குங்காலனைக்
கோலமாம்பொழிலசூழ்திருக்கோளிலிச்
சூலபாணிதன்பாதநதொழுமினே. (ரு)

காற்றனைக்கடனஞ்சமுதுண்டவெண்
ணீற்றனைநிமிர்புன்சடையண்ணலை
ஆற்றனையமருநதிருக்கோளிலி
ஏற்றனாடியேதொழுதேததுமே. (சு)

வேதமாயவிண்ணோகடலைவனை
ஓதமன்னுயிரேத்துமொருவனைக்
கோதிவண்டறையுநதிருககோளிலிச்
சூலபாணிதன்பாதநதொழுமினே. (எ)

நீதியாற்றொழுவாாகடலைவனை
வாதையானவிடுககுமணியினைக்
கோதிவண்டறையுநதிருக்கோளிலி
வேதநாயகன்பாதம்விரும்புமே. (அ)

மாலுநான்முகனுலுமறிவொணுப்
பாலுமென்மொழியாளொருபங்கனைக்
கோலமாம்பொழில்சூழ்திருக்கோளிலி
நீலகண்டனைநித்தனினைமினே. (கூ)

அரக்கனாயவிலங்கையாமன்னனை
நெருக்கியமுடிபததிறுத்தானவற்
கிரக்கமாகியவன்றிருக்கோளிலி
அருததியாயடியேதொழுதுயமமினே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

திருப்பழையாறைவடதளி - திருக்குறுந்தொகை.

திருச்சிறறம்பலம்.

தலையெலாம்பறிக்குஞ்சமண்கையருள்
நிலையினான்மறைத்தான்மறைக்கொண்ணுமே
அலையினார்பொழிலாறைவடதளி
நிலையினனடியேநினைந்துய்ம்மினே. (க)

மூக்கினனமுரன்றோதியக்குண்டிகை
தூக்கினார்குலந்தூறுத்தேதனைக்
காக்கினனணியாறைவடதளி
நோக்கினார்க்கிலலையாலருநோய்களே. (உ)

குண்டராக்குணமில்லராக்கூறையின்
மிண்டராத்துரந்தவிமலன்றனை
அண்டராப்பழையாறைவடதளிக்
கண்டரைத்தொழுதுய்ந்தனகைகளே. (ங)

முடையரைத்தலைமுண்டிக்குமொட்டரைக்
கடையரைக்கடிந்தார்கனல்வெண்மழுப
படையனைப்பழையாறைவடதளி
உடையனைக்குளிர்ந்துள்குமென்னுள்ளமே. (௪)

ஒள்ளரிக்கணார்முன்*னமணின்றுணும்
கள்ளரைக்கடிந்த †கருப்பூறலை
அள்ளலம்புனலாறைவடதளி
வள்ளலைப்புகழத்துயர்வாடுமே. (௫)

நீதியைக்கெடநின்றமணேயுணும்
சாதியைக்கெடுமாசெய்தசங்கரன்
ஆதியைப்பழையாறைவடதளிச்
சோதியைத்தொழுவார்துயர்தீருமே. (௬)

திரட்டிரைக்கவளந்திணிக்குஞ்சமண்
பிரட்டரைப்பிரித்தபெருமான்றனை
அருட்டிறத்தணியாறைவடதளித்
தெருட்டரைத்தொழத்தீவினைதீருமே. (௭)

ஓதினத்தெழுத்தஞ்சுணராச்சமண்
‡வேதினைப்படுத்தானைவெங்கூற்றுதை
பாதனைப்பழையாறைவடதளி
நாதனைத்தொழநம்வினைநாசமே. (௮)

வாயிருந்தமிழேபடித்தாளுரு
ஆயிரஞ்சமணும்மழிவாக்கினான்
பாயிரும்புனலாறைவடதளி
மேயவன்றனைவலவினைவீடுமே. (௯)

செருத்தனைச்செயுஞ்சேணரக்கன்னுடல்
எருத்திறவிரலாலிறையூன்றிய
அருத்தனைப்பழையாறைவடதளித்
திருத்தனைத்தொழுவார்வினைதேயுமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

**திருமாற்பேறு-திருக்குறுந்தொகை.**

திருச்சிற்றம்பலம்.

பொருமாற்றின்படைவேண்டிநற்பூம்புனல
வருமாற்றின்மலர்கொண்டுவழிபடும
கருமாற்கின்னருள்செய்தவன்காண்டகு
திருமாற்பேறுதொழவினைதேயுமே. (௧)

ஆலத்தார்நிழலில்லறநால்வர்க்குக்
கோலத்தாலுரைசெய்தவன்குற்றமின்
மாலுக்காரருள்செய்தவன்மாற்பேறு
ஏலத்தான்றொழுவார்க்கிடரில்லையே. (௨)

* அமண்நின்றுஉணும்—நிருவாணமாகநின்று உண்ணுதல்.

† கருப்பூறல்—கரும்புரசம். கருப்பு-வலித்தல்விகாரம.

‡ வேது—வெப்பம்.

துணிவண்ணச்சுடராழிகொள்வானெண்ணி
அணிவண்ணத்தலர்கொண்டடியர்ச்சித்த
மணிவண்ணற்கருள்செய்தவன்மாற்பேறு
பணிவண்ணத்தவர்க்கில்லையாம்பாவமே. (௩)

தீதவைசெய்துதீவினைவீழாதே
காதல்செய்துகருத்தினினின்றவன்
மாதவர்பயில்மாற்பேறுகைதொழப்
போதுமின்வினையாயினபோகுமே. (௪)

வார்கொள்மென்முலைமங்கையோர்பங்கினன்
வார்கொண்முரசம்மறையவ்வறை
வார்கொள்பைம்பொழின்மாற்பேறுகைதொழு
வார்கள்மன்னுவர்பொன்னுலகத்திலே. (௫)

பண்டைவல்வினைபற்றறுக்குமவ்வகை
உண்டுசொல்லுவன்கேண்மினொளிகிளர்
வண்டுசேர்பொழில்சூழ்திருமாற்பேறு
கண்டுகைதொழத்தீருங்கவலையே. (௬)

மழுவலான்றிருநாமமகிழ்ந்துரைத்
தழுவலார்களுக்கன்புசெய்தின்பொடும்
வழுவிலாவருள்செய்தவன்மாற்பேறு
தொழுவலார்தமக்கில்லைத்துயரமே. (௭)

முன்னவனுலகுக்குமுழுமணிப்
பொன்னவன்றிகழ்முத்தொடுபோகமா
மன்னவன்றிருமாற்பேறுகைதொழும்
அன்னவரெமையாளுடையார்களே. (௮)

வேடனாய்விசயன்றொடுமெய்துவெங்
காடுநீடுகந்தாடியகண்ணுதல்
மாடநீடுயருந்திருமாற்பேறு
பாடுவார்பெறுவார்பரலோகமே. (௯)

கருத்தனைக்கயிலாயமலைதனைத்
தருக்கினாலெடுத்தானைத்தகர்வே
வருத்தியாரருள்செய்தவன்மாற்பேறு
அருத்தியாற்றொழுவார்க்கில்லையல்லலே. (௧௰)

திருச்சிற்றம்பலம்.

---

### திருமாற்பேறு - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

ஏதுமொன்றுமறிவிலராயினும்
ஓதியஞ்செழுத்துமுணர்வார்கட்குப்
பேதமின்றியவரவருள்ளத்தே
மாதுந்தாமுமகிழ்வர்மாற்பேறரே. (௧)

அச்சமில்லைநெஞ்சேயரனாமங்கள்
நிச்சலுந்நினையாய்வினைபோயறக்

கச்சமாவிடமுண்டகண்டாவென
வைச்சமாநிதியாவர்மாற்பேறரே. (உ)

சாத்திரமபலபேசுஞ்சழக்கர்காள்
கோத்திரமுங்குலமுங்கொண்டென்செய்வீர்
பாத்திரஞ்சிவமென்றுபணிதிரேன்
மாதநிைாக்குளருளுமாறபேறரே. (ங)

இருந்துசொல்லுவன்கேண்மின்களேழைகாள்
அருநதவநதருமஞ்செழுததோதிறைல்
பொருநதுநோய்பிணிபோகததுரபபதோர்
மருநதுமாகுவாமன்னுமாறபேறரோ. (ச)

சாற்றிச்சொல்லுவன்கேண்மின்றாணியீா
ஏறறினமேல்வருவான்கழலேத்திறைல
கூறறைநீக்கிக்குறைவறுத்தாளவதோா
மாறறிலாச்செம்பொனுவாமாற்பேறரோ. (ரு)

ஈட்டுமாநிதிசாலவிழக்கினும
வீட்டுங்காலன்விரையவழைக்கினுங
காட்டின்மாநடமாடுவாய்காவெனின்
வாட்டநீாககவும்வலலாமாறபேறரோ. (சு)

ஐயனேயரனேயென்றரற்றிறைல
உய்யலாமுலகத்தவாபேணுவர்
செய்யபாதமிரண்டுநினையவே
வையமாளவும்வைபபர்மாற்பேறரோ. (எ-அ-கூ)

உநதிச்சென்றுமலையையெடுத்தவன்
சநதுதோளொடுதாளிறவூன்றிறைை
மநதிபாய்பொழில்சூழுமாற்பேறனை
அநதமிலலதோரின்பமணுகுமே. (கo)

திருச்சிற்றமபலம்.

---

திருவரிசிற்கரைப்புத்தூர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

முத்தூரும்புனன்மொய்யரிசிற்கரைப்
புத்தூரன்னடிபோற்றியென்பாரெலாம்
பொய்த்தூரும்புலனைநதொடுபுல்கிய
மைத்தூரும்வினைமாற்றவும்வல்லரே. (க)

பிறைக்கணிச்சடையெம்பெருமானென்று
கறைக்கணித்தவர்கண்டவணக்கத்தாய்
உறக்கணித்துருகாமனத்தார்களைப்
புறக்கணித்திடும்புத்தூர்புனிதரே. (உ)

அரிசிலின்கரைமேலணியார்தரு
புரிசைநநதிருப்புத்தூர்புனிதனைப்
பரிசொடும்பரவிப்பணிவார்க்கெலாம
துரிசினன்னெறிதோன்றிடுங்காண்மினே. (ங)

வேதனைமிகுவீணையில்மேவிய
கீதனைக்கிளருந்நறுங்கொன்றையம்
போதனைப்புனல்சூழ்ந்தபுத்தூரனை
நாதனைநினைந்தென்மனநையுமே. (௪)

அருப்புப்போன்முலையாரல்லல்வாழ்க்கைமேல்
விருப்புச்சோர்விலைவிட்டுநலவிடமாய்த்
திருப்புத்தூரனைச்சிந்தைசெய்யச்செய்யக்
கருப்புச்சாற்றிலுமண்ணிக்குங்காணமினே. (௫)

பாம்பொடுமதியும்படர்புன்சடைப்
பூம்புனலும்பொதிந்தபுத்தூருளான்
நாம்பணிந்தடிபோற்றிடநாடொறும்
சாம்பலென்புதமக்கணியாகுமே. (௬)

கனலங்கைதனிலேந்திவெங்காட்டிடை
அனலங்கெய்திநின்றாடுவர்பாடுவர்
புனலஞ்செஞ்சடைமேற்பிறையுந்தரு
புனலுஞ்சூடுவர்போலும்புத்தூரரே. (௭)

காற்றினுங்கடிதாகிநடப்பதோர்
ஏற்றினுமிசைந்தேறுவர்பொன்பொலி
நீற்றினையணிவார்வினைவாய்த்தமைப்
போற்றியென்பவர்க்கன்பர்புத்தூரரே. (௮)

முன்னுமுப்புரஞ்செற்றனராயினும்
அன்னமொப்பரலந்தடைந்தார்க்கெலாம்
மின்னுமொப்பர்விரிசடைமேனிசெம்
பொன்னுமொப்பர்புத்தூரெம்புனிதரே. (௯)

செருத்தனுற்றனதேர்செலவுய்த்திடும்
கருத்தனாயக்கயிலையெடுத்தானுடல்
பருத்ததோள்கெடப்பாதத்தொருவிரல்
பொருத்தினார்பொழிலார்ந்தபுத்தூரரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

**திருக்கடுவாய்க்கரைப்புத்தூர் - திருக்குறுந்தொகை.**

திருச்சிற்றம்பலம்.

ஒருத்தனைமூவுலகொடுதேவர்க்கு
மருத்தனையடியேன்மனத்துள்ளமா
கருத்தனைக்*கடுவாய்ப்புனலாடிய
திருத்தனைப்புத்தூர்ச்சென்றுகண்டுய்ந்தேனே. (௧)

யாவருமறிதற்கரியான்றனை
மூவரின்முதலாகியமூர்த்தியை
நாவினல்லுரையாகியநாதனைத்
தேவனைப்புத்தூர்ச்சென்றுகண்டுய்ந்தேனே. (௨)

அன்பனையடியாரிடர்நீக்கியைச்
செம்பொனைத்திகழுந்திருக்கச்சியே

---

* கடுவாய்—ஒருநதியின்பெயர்.

கம்பனைக்கடவாய்க்கரைத்தென்புத்தூர்
நன்பொனைக்கண்டுநானுய்யப்பெற்றேனே. (௩)

மாதனத்தைமாதேவனைமாறிலாக்
கோதனத்திலைந்தாடியைவெண்குழைக்
காதனைக்கடவாய்க்கரைத்தென்புத்தூர
நாதனைக்கண்டுநானுய்யப்பெற்றேனே (௪)

குண்டபட்டகுற்றந்தவிர்த்தென்னையாட்
கொண்டுநற்றிறங்காட்டியகூத்தனைக்
கண்டனைக்கடவாய்க்கரைத்தென்புத்தூர
அண்டனைக்கண்டருவினையற்றேனே. (௫)

பந்தபாசமறுத்தெனையாட்கொண்ட
மைந்தனைமணவாளனைமாமலர்க்
கந்தநீர்க்கடவாய்க்கரைத்தென்புத்தூர
எந்தையீசனைக்கண்டினிதாயிற்றே. (௬)

உம்பரானையுருத்திரமூர்த்தியை
*அம்பரானையமலனையாதியைக்
கம்புநீர்க்கடவாய்க்கரைத்தென்புத்தூர
எம்பிரானைக்கண்டின்பமதாயிற்றே. (௭)

மாசர்பாசமயக்கறுவித்தெனுள்
நேசமாகியநித்தமணாளனைப்
பூசநீர்க்கடவாய்க்கரைத்தென்புத்தூர
ஈசனேயெனவின்பமதாயிற்றே. (௮)

இடவாரிட்டகவளங்கவர்ந்திரு
† கடவாயிட்டவாகட்டுரைகொள்ளாதே
கடவாய்த்தென்கரைப்புத்தூரடிகட்காட்
படவேபெற்றுநான்பாக்கியஞ்செய்தேனே. (௯)

அரக்கனாற்றலழித்தவன்பாடல்கேட்
டிரக்கமாகியருள்புரியீசனைத்
திரைகொணீர்க்கடவாய்க்கரைத்தென்புத்தூர
இருக்குநாதனைக்காணப்பெற்றுய்ந்தேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருத்தென்குரங்காடுதுறை-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

இரங்காவன்மனத்தார்களியங்குமுப்
புரங்காவலழியப்பொடியாக்கினான்
§ தரங்காடுந்தடநீர்ப்பொன்னித்தென்கரைக்
குரங்காடுதுறைக்கோலக்கபாலியே. (௧)

முத்தினைமணியைப்பவளத்தொளிர்
தொத்தினைச்சுடர்ச்சோதியைச்சோலைசூழ்

---

*அம்பர்—ஒருதலம். † கடவாய்—கடைவாய்.
§ தரங்கம் ஆடும்—தரங்காடும் என்றது.

கொத்தலர்குரங்காடுதுறையுறை
அத்தனென்னவண்ணித்திட்டிருந்ததே. (௨)

குளிர்புனற்குரங்காடுதுறையனைத்
தளிர்நிறத்தையல்பங்கனைத்தண்மதி
ஒளியனைநினைந்தேனுக்கென்னுள்ளமும்
தெளிவினைத்தெளியத்தெளிந்திட்டதே. (௩)

மணவன்காண்மலையாளொடுமங்கலக்
கணவன்காண்கலைஞானிகள்காதலெண்
குணவன்காண்குரங்காடுதுறைதனில்
அணவன்காணன்புசெய்யுமடியார்க்கே. (௪)

ஞாலத்தார்தொழுதேத்தியநன்மையன்
காலத்தானுயிர்போக்கியகாலினன்
நீலத்தார்மிடற்றான்வெள்ளைநீறணி
கோலத்தான்குரங்காடுதுறையனே. (௫)

ஆட்டினான்முன்னமணரோடென்றனைப்
பாட்டினான்றனபொன்னடிக்கின்னிசை
வீட்டினான்வினைமெய்யடியாரொடுங்
கூட்டினான்குரங்காடுதுறையனே. (௬)

மாத்தன்றான்மறையார்முறையான்மறை
ஓத்தன்றாரகன்றன்னுயிருண்டபெண்
போத்தன்றானவள்பொங்குசினந்தணி
கூத்தன்றான்குரங்காடுதுறையனே. (௭)

நாடிநந்தமராயினதொண்டர்காள்
ஆடுமின்னழுமின்றொழுமின்னடி
பாடுமின்பரமன்பயிலுமிடம்
கூடுமின்குரங்காடுதுறையனே. (௮)

தென்றனன்னெடுந்தேருடையானுடல்
பொன்றவெங்கனல்பொன்றவிழித்தவன்
அன்றவந்தகனையயிற்சூலத்தால்
கொன்றவன்குரங்காடுதுறையனே. (௯)

நற்றவஞ்செய்தநால்வர்க்குநல்லறம்
முற்றவண்மொழியாலருள்செய்தநற்
கொற்றவன்குரங்காடுதுறைதொழப்
பற்றுந்தீவினையாயினபாறுமே. (௧௦)

கடுத்ததேரரக்கன்கயிலைம்மலை
எடுத்ததோடலையிற்றலறவ்விரல்
அடுத்தலுமவனின்னிசைகேட்டருள்
கொடுத்தவன்குரங்காடுதுறையனே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருக்கோழம்பம் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

வேழம்பத்தைவர்வேண்டிற்றுவேண்டிப்போய்
ஆழம்பற்றிவீழ்வார்பலவாதர்கள்

கோழம்பத்துறைகூத்தன்குரைகழல
தாழும்பத்தர்கள்சாலச்சதுரரே. (க)

கயிலைநன்மலையாளுங்கபாலியை
மயிலியன்மலைமாதின்மணாளனைக்
குயிலபயிலபொழிற்கோழம்பமேயவென்
உயிரினைநினைந்துள்ளமுருகுமே. (உ)

வாழும்பான்மையராகியவான்செலவப
தாழும்வான்மையராகித்தம்வாயிலால
தாழும்பூமணநாறியதாழ்பொழில்
கோழம்பாவெனக்கூடியசெலவமே (ங)

பாடலாக்கிடும்பணணொடுபெணணிவள
கூடலாக்கிடுங்குன்றின்மணறகொடு
கோடல்பூத்தலாகோழம்பததுண்மகிழந
தாடுங்கூததனுக்கன்புபட்டாளன்றே. (௪)

தளிர்கொண்மேனியள்தான்மிகவஞ்சவோர்
பிளிறுவராணத்தீருரிபோர்த்தவன்
குளிர்கொணீர்வயற்கோழம்பமேவினான்
நளிர்கொணீர்சடைமேலுய்யநததே. (ரு)

நாதராவர்நமக்கும்பிறர்க்குநதாம்
வேதநாவர்விடைக்கொடியார்வெற்பில்
கோதைமாதொடுங்கோழம்பங்கோயில்கொண்
டாதிபாதமடையவல்லார்களே. (சா)

முன்னைநான்செய்தபாவமுதலறப
பின்னைநான்பெரிதும்மருள்பெறறதும
அன்னமார்வயற்கோழம்பததுள்ளமர்
பின்னலவார்சடையானைப்பிதற்றியே. (எ)

ஏழைமாரிடநின்றிருகைக்கொண்டுண்
கோழைமாரொடுங்கூடியகுற்றமாங்
கூழைபாய்வயற்கோழம்பத்தானடி
ஏழையேன்முன்மறநதங்கிருநததே. (அ)

அரவணைப்பயின்மாலயன்வநதடி
பரவனைப்பரமாம்பரஞ்சோதியைக்
குரவனைக்குரவார்பொழிற்கோழம்பத்
தரவனையொருவர்க்குணர்வொண்ணுமே (௯)

சமரசூரபன்மாவைத்தடிந்தவேற்
குமரன்றாதைநற்கோழம்பமேவிய
அமரர்கோவினுக்கன்புடைத்தொண்டர்கள்
அமரலோகமதாளுடையார்களே. (கo)

துட்டனாகிமலையெடுத்தானுங்கீழ்ப்
பட்டுவீழ்நதுபடர்ந்துயபபோயினான்
கொட்டமாறியகோழம்பத்தீசனென்
றிட்டகீதமிசைத்தவர்க்கனே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருப்பூவனூர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

பூவனூர்ப்புனிதன்றிருநாமந்தான்
நாவினூறுநூறாயிரநண்ணினார்
பாவமாயினபாறிப்பறையவே
தேவர்கோவினுஞ்செல்வர்களாவரே. (க)

என்னனென்மனையெந்தையெனாருயிர்
தன்னன்றன்னடியேன்றனமாகிய
பொன்னன்பூவனூர்மேவியபுண்ணியன்
இன்னனென்றறிவொண்ணானியற்கையே. (உ)

குற்றங்கூடிக்குணம்பலகூடாதீர்
மற்றுந்தீவினைசெய்தனமாய்க்கலாம்
புற்றராவினன்பூவனூரீசன்பேர்
கற்றுவாழ்த்துங்கழிவதன்முன்னமே. (ங)

ஆவின்மேவியவைந்தமர்ந்தாடுவான்
தூவணீறுதுதைந்தசெம்மேனியான்
மேவநூல்விரிவெண்ணியின்றென்கரைப்
பூவனூர்புகுவார்வினைபோகுமே. (ச)

புல்லமூர்தியூர்பூவனூர்பூம்புனல்
நல்லமூர்த்திநல்லூர்நணிபள்ளியூர்
தில்லையூர்திருவாரூர்சீக்காழிநல்
வல்லமூரெனவல்வினைமாயுமே. (ரு)

அனுசயப்பட்டதுவிதுவென்னாதே
கனிமனத்தொடுகண்களுநீர்மல்கிப்
புனிதனைப்பூவனூரனைப்போற்றுவார்
மனிதரிற்றலையானமனிதரே. (சா)

ஆதிநாதனமரர்களர்ச்சிதன்
வேதநாவன்வெற்பின்மடப்பாவையோர்
பாதியானும்பரந்தபெரும்படைப்
பூதநாதன்றென்பூவனூர்நாதனே. (எ)

பூவனூர்தண்புறம்பயம்பூம்பொழில்
நாவலூர்நள்ளாறுநன்னிலங்
கோவலூர்குடவாயில்கொடுமுடி
மூவலூர்முக்கண்ணனூர்காண்மினே. (அ)

ஏவமேதுமிலாவமணேதலர்
பாவகாரிகள்சொல்வலைப்பட்டுநான்
தேவதேவன்றிருநெறியாகிய
பூவனூர்புகப்பெற்றநாளின்றே. (கூ)

நாரணன்னொடுநான்முகனிந்திரன்
வாரணன்குமரன்வணங்குங்கழற்
பூரணன்றனைப்பூவனூர்மேவிய
காரணன்னெனையாளுடைக்காளையே. (க0)

மைக்கடுத்தநிறத்தரக்கன்வரை
புக்கெடுத்தலும்பூவணூரன்னடி
மிக்கடுத்தவிரல்சிறிதூன்றலும்
பக்கடுத்தபின்பாடியுய்ந்தானென்றே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருவலஞ்சுழி - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

ஓதமார்கடலின்விடமுண்டவன்
பூதநாயகன்பொற்கயிலைக்கிறை
மாதொர்பாகன்வலஞ்சுழியீசனைப்
பாதமேத்தப்பறையுநம்பாவமே. (க)

கயிலைநாதன்கறுத்தவர்முப்புரம்
எயில்கடீயெழவெல்லவல்வித்தகன்
மயில்களாலும்வலஞ்சுழியீசனைப்
பயிலகில்லார்சிலர்பாவித்தொழும்பரே. (உ)

இளையகாலமெம்மானையடைகிலாத்
துளையிலாச்செவித்தொண்டர்காணும்முடல்
வளையுங்காலம்வலஞ்சுழியீசனைக்
களைகணாகக்கருதிநீருய்ம்மினே. (ங)

நறைகொள்பூம்புனல்கொண்டெழுமாணிக்காய்
குறைவிலாதகொடுங்கூற்றுதைத்திட்டவன்
மறைகொணாவன்வலஞ்சுழிமேவிய
இறைவனையினியென்றுகொல்காண்பதே. (ச)

விண்டவர்புரமூன்றுமெரிகொளத்
திண்டிறற்சிலையாலெரிசெய்தவன்
வண்டுபண்முரலுந்தண்வலஞ்சுழி
அண்டனுக்கடிமைத்திறத்தாவனே. (ரு)

படங்கொள்பாம்பொடுபான்மதியஞ்சடை
அடங்கவாழவல்லானும்பாதம்பிரான
மடந்தைபாகன்வலஞ்சுழியானடி
அடைந்தவர்க்கடிமைத்திறத்தாவனே. (சா)

நாக்கொடுபரவுமடியார்வினை
போக்கவல்லபுரிசடைப்புண்ணியன்
மாக்கொள்சோலைவலஞ்சுழியீசன்றன்
ஏக்கொளப்புரமூன்றெரியானவே. (எ)

தேடுவார்பிரமன்றிருமாலவர்
ஆடுபாதமவருமறிகிலார்
மாடவீதிவலஞ்சுழியீசனைத்
தேடுவானுறுகின்றதென்சிந்தையே. (அ)

கண்பனிக்குங்கைகூப்புங்கண்மூன்றுடை
நண்பனுக்கெனைநான்கொடுப்பேனெனும்
வண்பொனித்தென்வலஞ்சுழிமேவிய
பண்பனிப்பொனைச்செய்தபரிசிதே. (கூ)

இலங்கைவேந்தனிருபதுதோளிற
நலங்கொள்பாதத்தொருவிரலூன்றினான்
மலங்குபாய்வயல்சூழ்ந்தவலஞ்சுழி
வலங்கொள்வாரடியென்றலைமேலவே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவாஞ்சியம் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

படையும்பூதமும்பாம்பும்புல்வாயதள்
உடையுந்தாங்கியவுத்தமனார்க்கிடம்
புடைநிலாவியபூம்பொழில்வாஞ்சியம்
அடையவல்லவர்க்கல்லலொன்றில்லையே. (க)

பறப்பையும்பசுவும்படுத்துப்பல
திறத்தவும்முடையோர்திகழும்பதி
கறைப்பிறைச்சடைக்கண்ணுதல்சேர்தரு
சிறப்புடைத்திருவாஞ்சியஞ்சேர்மினே. (உ)

புற்றிலாடரவோடப்புனன்மதி
தெற்றுசெஞ்சடைத்தேவர்பிரான்பதி
சுற்றுமாடங்கள்சூழ்திருவாஞ்சியம்
பற்றிப்பாடுவார்க்குப்பாவமில்லையே. (ங)

அங்கமாறுமருமறைநான்குடன்
தங்குவேள்வியர்தாம்பயிலுநகர்
செங்கண்மாலிடமாந்திருவாஞ்சியம்
தங்குவார்நம்மமரர்க்கமரரே. (ச)

நீறுபூசிநிமிர்சடைமேற்பிறை
ஆறுசூடுமடிகளுறைபதி
மாறுதானொருங்கும்வயல்வாஞ்சியம்
தேறிவாழ்பவர்க்குச்செல்வமாகுமே. (ரு)

அற்றுப்பற்றின்றியாரையுமில்லவர்க்
குற்றநற்றுணையாவானுறைபதி
தெற்றுமாடங்கள்சூழ்திருவாஞ்சியம்
கற்றுச்சேர்பவர்க்குக்கருத்தாவதே. (சு)

அருக்கனங்கியமனொடுதேவர்கள்
திருத்துஞ்சேவடியான்றிகழுநகர்
ஒருத்திபாகமுகந்தவன்வாஞ்சியம்
அருத்தியாலடைவார்க்கில்லையல்லலே. (எ-அ-கூ-கo)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநள்ளாறு - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

உள்ளாறாததோர்புண்டரிகத்திரள்
தெள்ளாறாச்சிவசோதித்திரளினைக்
கள்ளாறாதபொற்கொன்றைகமழ்சடை
நள்ளாறாவெனநம்வினைநாசமே. (க)

ஆரணப்பொருளாமருளாளனார்
வாரணத்துரிபோர்த்தமணாளனார்
நாரணனண்ணியேத்துநள்ளாறனார்
காரணக்கலைஞானக்கடவுளே. (௨)

மேகம்பூண்டதோர்மேருவிற்கொண்டெயில்
சோகம்பூண்டழல்சோரத்தொட்டானவன்
பாகம்பூண்டமால்பங்கயத்தாளொடு
நாகம்பூண்டுகூத்தாடுநள்ளாறனே. (௩)

மலியுஞ்செஞ்சடைவாளரவம்மொடு
பொலியும்பூம்புனல்வைத்தபுனிதனார்
நலியுங்கூற்றைநலிந்தநள்ளாறர்தம்
வலியுங்கண்டிறுமாந்துமகிழ்வனே. (௪)

உறவனாய்நிறைந்துள்ளங்குளிர்ப்பவன்
இறைவனாகிநின்றெண்ணிறைந்தானவன்
நறவநாறும்பொழிற்றிருநள்ளாறன்
மறவனாய்ப்பன்றிப்பின்சென்றமாயமே. (௫)

செக்கரங்கழிசெஞ்சுடர்ச்சோதியார்
நக்கரங்கரவார்த்தநள்ளாறனார்
வக்கரனுயிர்வவ்வியமாயற்குச்
சக்கரமருள்செய்தசதுரரே. (௬)

வஞ்சநஞ்சிற்பொலிகின்றகண்டத்தார்
விஞ்சையிற்செல்வப்பாவைக்குவேந்தனார்
வஞ்சநெஞ்சத்தவர்க்குவழிகொடார்
நஞ்சநெஞ்சர்க்கருளுநள்ளாறரே. (௭)

அல்லனென்றுமலர்க்கருளாயின
சொல்லனென்றுசொல்லாமறைச்சோதியான்
வல்லனென்றும்வல்லார்வளமிக்கவர்
நல்லனென்றுநல்லார்க்குநள்ளாறனே. (௮)

பாம்பணைப்பள்ளிகொண்டபரமனும்
பூம்பணைப்பொலிகின்றபுராணனும்
தாம்பணிந்தளப்புண்ணாத்தனித்தழல்
நாம்பணிந்தடிபோற்றுநள்ளாறனே. (௯)

இலங்கைமன்னனிருபதுதோளிற
மலங்கமால்வரைமேல்விரல்வைத்தவர்
நலங்கொள்நீற்றர்நள்ளாற்றரைநாடொறும்
வலங்கொள்வார்வினையாயினமாயுமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

### திருக்கருவிலி - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

மட்டிட்டகுழலார்சுழலில்வலைப்
பட்டிட்டும்மயங்கிப்பரியாதுநீர்
கட்டிட்டவினைபோகக்கருவிலிக்
கொட்டிட்டையுறைவான்கழல்கூடுமே. (௧)

ஞாலமல்குமனிதர்காணுடொறும்
ஏலமாமலரோடிலைகொண்டுநீர்
காலனாவருதன்முன்கருவிலிக்
கோலவார்பொழிற்கொட்டிட்டைசேர்மினே. (௨)

பங்கமாயினபேசப்பறைந்துநீர்
மங்குமாநினையாதேமலர்கொடு
கங்கைசேர்சடையான்றன்கருவிலிக்
கொங்குவார்பொழிற்கொட்டிட்டைசேர்மினே. (௩)

வாடிநீர்வருந்தாதேமனிதர்காள்
வேடனாய்விசயற்கருள்செய்தவெண்
காடனாருறைகின்றகருவிலிக்
கோடுநீள்பொழிற்கொட்டிட்டைசேர்மினே. (௪)

உய்யுமாறிதுகேண்மினுலகத்தீர்
பைகொள்பாம்பரையான்படையார்மழுக்
கையினானுறைகின்றகருவிலிக்
கொய்கொள்பூம்பொழிற்கொட்டிட்டைசேர்மினே. (௫)

ஆற்றவும்மவலத்தழுந்தாதுநீர்
தோற்றுந்தீயொடுநீர்நிலந்தூவெளி
காற்றுமாகிநின்றான்றன்கருவிலிக்
கூற்றங்காய்ந்தவன்கொட்டிட்டைசேர்மினே. (௬)

நில்லாவாழ்வுநிலைபெறுமென்றெண்ணிப்
பொல்லாவாறுசெய்யப்புரியாதுநீர்
கல்லாருமதில்சூழ்தண்கருவிலிக்
கொல்லேறூர்பவன்கொட்டிட்டைசேர்மினே. (௭)

பிணித்தநோய்ப்பிறவிப்பிரிவெய்துமா
றுணர்தலாமிதுகேண்மினுருத்திர
கணத்தினார்தொழுதேத்துங்கருவிலிக்
குணத்தினானுறைகொட்டிட்டைசேர்மினே. (௮)

நயப்புவீரிதுகேண்மின்கணாடொறும்
எம்பிரானென்றிமையவரேத்துமே
கம்பனாருறைகின்றகருவிலிக்
கொம்பனார்பயில்கொட்டிட்டைசேர்மினே. (௯)

பாருளீரிதுகேண்மின்பருவரை
பேருமாறெடுத்தானையடர்த்தவன்
கார்கொணீர்வயல்சூழ்தண்கருவிலிக்
கூர்கொள்வேலினன்கொட்டிட்டைசேர்மினே. (௧௦)

---

திருச்சிற்றம்பலம்

## திருக்கொண்டீச்சுவரம் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

கண்டபேச்சினிற்காளையர்தங்கள்பால்
மண்டியேச்சுணுமாதரைச்சேராதே
சண்டியீச்சுரவர்க்கருள்செய்தவக்
கொண்டியீச்சுரவன்கழல்கூறுமே. (௧)

சுற்றமுநதுணைநன்மடவாளொடு
பெற்றமக்களும்பேணலொழிந்தனா
குற்றமிலபுகழ்க்கொணடீசசரவனா
பற்றலாலொருபற்றுமறறிலலையே. (உ)

மாடுதானதுவில்லெனின்மானிடா
பாடுதான்செலவாரிலலைபனமாலையாற்
கூடநீசென்றுகொண்டீச்சரவனைப
பாடுமின்பரலோகத்திருததுமே. (௩)

தந்தைதாயொடுதாரமெனுநதளைப
பநதமாஙகறுததுபபயிலவெய்திய
கொநதவிழ்பொழிறகொண்டீச்சரவனைச
சிநதைசெய்ம்மினவனடிசேரவே (௪)

கேளுமின்னிளமையதுகேடுவந
தீளையோடிருமலலதுவெய்தன்முன்
கோளராவணிகொண்டீசசரவனை
நாளுமேத்திததொழுமினனகாகுமே. (௫)

வெம்புநோயுமிடரும்வெறுமையும
துன்பமுநதுயருமமெனுஞசுழவினை
கொமபனாபயிலகொண்டீசசரவனை
எம்பிரானெனவலலவாககிலலையே. (௬)

அல்லலோடருநோயிலழுநதுநீர
செல்லுமாநினையாதேகனைகுரற
கொல்லையேறுடைக்கொண்டீச்சரவனை
வல்லவாறுதொழவினைமாயுமே. (௭)

நாறுசாநதணிநன்முலைமெனமொழி
மாறிலாமலைமங்கையோர்பாகமாக்
கூறனூருறைகொண்டீச்சரநினைந
தூறுவாரதமக்கூனமொனறிலலையே (௮)

அயிலாரம்பெரிமேருவிலாகவே
எயிலாரும்பொடியாய்விழவெய்தவனை
குயிலாரும்பொழிறகொணடீச்சரவனைப
பயிலவாருமபெருமைபெறும்பாலரே. (௯)

நிலையினாவரைநின்றெடுத்தானறனை
மலையினாலடர்த்துவிறலவாட்டினனை
குலையினார்பொழிறகொண்டீச்சரவனைத
தலையினல்வணங்கத்தவமாகுமே. (௧௦)

திருச்சிறறமபலம்.

---

**திருவிசயமங்கை - திருக்குறுந்தொகை.**

திருச்சிற்றம்பலம.

குசையுமங்கையிற்கோசமுங்கொணடவவ்
வசையின்மங்கலவாசகாவாழ்த்தவே
இசையமங்கையுநதானுமொன்றாயினான்
விசையமங்கையுள்வேதியன்காண்மினே. (௧)

ஆதிநாதனடல்விடைமேலமர்
பூதநாதன்புலியதளாடையான
வேதநாதன்விசயமங்கையுளான்
பாதமோதவலலாரககிலலைபாவமே. (உ)

கொள்ளிடக்கரைக்கோவநதபுத்தூரில்
வெள்விடைக்கருள்செய்விசயமஙகை
உளளிடததுறைகினறவுருததிரன்
கிள்ளிடத்தலைபறறதயனுக்கே. (ந)

திசையுமெஙகுங்குலுஙகத்திரிபுரம்
அசையவஙகெய்திட்டாரழலூடடிஞை
விசையமங்கைவிருத்தன்புறத்தடி
விசையின்மஙகிவிழுநதனன்காலனே. (ச)

பொளளலாக்கையகத்திலைம்பூதங்கள்
கள்ளமாக்கிக்கலக்கியகாரிருள்
விள்ளலாக்கிவிசையமங்கைப்பிரானை
உள்ளநோக்கியென்னுள்ளுளுறையுமே. (ரு)

கொல்லையேற்றுக்கொடியொடுபொன்மலை
வில்லையேற்றுடையான்விசையமஙகைச்
செல்வபோற்றியெனபாருக்குத்தெனறிசை
எல்லையேறறலுமின்சொலுமாகுமே. (சு)

கணபலுக்கக்கவாலமஙகைக்கொண்டு
உணபலிக்குழலுத்தமனுள்ளொளி
வெண்பிறைக்கண்ணியானவிசயமங்கை
நண்பனைத்தொழபபெற்றதுநன்மையே. (எ)

பாணடுவின்மகன்பார்த்தனபணிசெய்து
வேணடுநலவரங்கொள்விசையமங்கை
ஆணடவன்னடியேநினைந்தாசையால
காணடலேகருத்தாகியிருபபனே. (அ)

வந்துகேண்மின்மயறீரமனிதாகாள்
வெநதநீறறன்விசயமங்கைபபிரானை
சிநதையானினைவார்களைச்சிக்கெனப்
பந்துவாங்கியுயக்கொளுஙகாண்மினே. (கூ)

இலங்கைவேந்தனிருபதுதோளிற
விலங்கலசேர்விரலான்விசயமங்கை
வலஞ்செய்வார்களும்வாழ்த்திசைப்பார்களும்
நலஞ்செய்வாரவாநன்னெறிநாடியே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநீலக்குடி - திருக்குறுந்தொகை.

திருச்சிறறம்பலம்.

வைத்தமாடுமனைவியுமக்கணீர்
செத்தபோதுசெறியார்பிறிவதே
நித்தநீலக்குடியரனைநினை
சித்தமாகிற்சிவகதிசேர்திரே. (க)

செய்யமேனியன்றேனொடுபாறயிா
நெய்யதாடியநீலக்குடியான்
மையலாய்மறவாமனததாக்கெலாம
கையிலாமலகக்கனியொக்குமே. (௨)

ஆற்றநீள்சடையாயிழையாளொரு
கூற்றன்மேனியிற்கோலமதாகிய
நீற்றனீலக்குடியுடையானடி
போற்றினரிடாபோக்கும்புனிதனே. (௩)

நாலுவேதியர்க்கின்னருணன்னிழல
ஆலனாலநஞ்சுண்டகண்டத்தமர்
நீலனீலக்குடியுறைநினமலன்
காலனாருயிாபோக்கியகாலனே. (௪)

நேசனீலக்குடியரனேயெனு
நீசராய்நெடுமால்செய்தமாயத்தால
ஈசனோாசரமெய்யவெரிந்துபோய்
நாசமானார்திரிபுரநாதரே. (௫)

கொன்றைசூடியைக்குனறமகளொடு
நின்றநீலக்குடியரனேயெனீா
என்றும்வாழ்வுகநதேயிறுமாக்குநீா
பொன்றும்போதுநுமக்கறிவொண்ணுமே. (௬)

கல்லினோடெனைப்பூட்டியமண்கையர்
ஒல்லைநீாபுகநூக்கவென்வாக்கினால்
நெல்லுநீள்வயனீலக்குடியரன்
நல்லநாமநவிற்றியுய்ந்தேனன்றே. (எ)

அழகியோமிளையோமெனுமாசையால்
ஒழுகியாவியுடலவிடுமுனனமே
நிழலதாாபொழினீலக்குடியரன்
கழலகொள்சேவடிகைதொழுதுய்ம்மினே. (அ)

கறைச்செஞ்சடைக்காய்கதிாவெண்டிங்கள
பறிபபாமபுடன்வைததபராபரன்
நெற்றிககண்ணுடைநீலக்குடியரன
சுற்றித்தேவாதொழுங்கழறசோதியே. (௯)

தருக்கிவெறபதுதாங்கியவீங்குதோள்
அரக்கனாருடலாங்கோாவிரலினால
நெரித்துநீலக்குடியரன்பின்னையும
இரககமாயருள்செய்தனனென்பரே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

திருமங்கலக்குடி - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

தங்கலப்பியதக்கன்பெருவேள்வி
அங்கலக்கழித்தாரருள்செய்தவன்
கொங்கலர்க்குழற்கொம்பனையாளொடு
மங்கலக்குடிமேயமணாளனே. (௧)

காவிரியின்வடகரைக்காணடகு
மாவிரியும்பொழின்மங்கலக்குடித்
தேவரியுமபிரமனுநதேடொணுத்
தூவெரிசசுடர்ச்சோதியுட்சோதியே. (உ)

மங்கலக்குடியீசனை மாகாளி
வெங்கதிரசசெலவன் விணணெடுமெண்ணுநேர்
சங்குசக்கர தாரிசதுமுகன்
அங்ககததியனும்மாச்சித்தாரன்றே. (ந)

மஞ்சன்வாரகடலசூழ்மங்கலக்குடி
நஞ்சமாரமுதாகநயந்துகொண்
டஞ்சுமாடலமர்நதடியேனுடை
நெஞ்சமாலயமாக்கொண்டுநின்றதே. (ச)

செல்வமலகுதிருமங்கலக்குடிச்
செல்வமல்குசிவநியமத்தராய்ச்
செல்வமல்குசெழுமறையோர்தொழச்
செலவன்றேவியொடுநதிகழ்கோயிலே. (ரு)

மன்னுசீர மங்கலக்குடிமன்னிய
பின்னுவார்சடைடபிஞ்ஞகன்றன்பெயர்
உன்னுவாருமுரைக்கவலலாகளும்
துன்னுவார்நன்னெறிதொடாவெய்தவே (சு)

மாதரராமருவும்மங்கலக்குடி
ஆதிநாயகனண்டாகணுயகன்
வேதநாயகன்வேதியாநாயகன்
பூதநாயகன்புண்ணியமூர்த்தியே. (எ)

வண்டுசோபொழில்சூழ்மங்கலக்குடி
விண்டதாதையைத்தாளறவீசிய
சண்டநாயகனுக்கருள்செய்தவன
துண்டமாமதிசூடியசோதியே. (அ)

கூசுவாரலர்குண்டர்குணமிலர்
நேசமேதுமிலாதவர்நீசாகள்
மாசர்பால்மங்கலக்குடிமேவிய
ஈசன்வேறுபடுக்கவுய்நதேனன்றே. (கூ)

மங்கலக்குடியான்கயிலைமலை
அங்கலத்தெடுக்குறறவரக்கர்கோன்
தன்காரத்தொடுதாடலைதோடகர்ந்
தங்கலைத்தழுதுய்நதனன்றானன்றே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருஎறும்பியூர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

விரும்பியூறுவிடேன்மடநெஞ்சமே
கரும்பினூறல்கண்டாய்கலநதார்க்கவன
இரும்பினூறலறாததோர்வெண்டலை
எறும்பியூர்மலையானெங்களீசனே. (க)

பிறங்குசெஞ்சடைப்பிஞ்ஞகன்பேணுசீராக்
கறங்குபூதகணமுடைக்கண்ணுதல
நறுங்குழன்மடவாளொடுநாடொறும்
எறும்பியூர்மலையானெங்களீசனே. (௨)

மருந்துவானவர்தானவர்க்கின்சுவை
புரிந்தபுன்சடைபுண்ணியன்கண்ணுதல
பொருந்துபூண்முலைமங்கைநல்லாளொடும்
எறும்பியூர்மலையானெங்களீசனே. (௩)

நிறங்கொள்கண்டத்துநின்மலனெம்மிறை
மறங்கொள்வேற்கண்ணிவாணுதல்பாகமாய்
அறம்புரிந்தருள்செய்தவெமங்கணன்
எறும்பியூர்மலையானெங்களீசனே. (௪)

நறும்பொனுண்மலர்க்கொன்றையுநாகமும்
துறும்புசெஞ்சடைத்தூமதிவைத்துவான்
உறும்பொன்மால்வரைப்பேதையோடூர்தொறும்
எறும்பியூர்மலையானெங்களீசனே. (௫)

கறும்பியூரவனைவந்துள்காயத்தில
திறம்பியூரவணமற்றும்பலவுள
குறும்பியூர்வதோர்கூட்டகத்திட்டேனை
எறும்பியூரரன்செய்தவியற்கையே. (௬)

மறந்துமற்றிதுபேரிடர்நாடொறும்
திறம்பிநீநினையேனமடநெஞ்சமே
புறஞ்செய்கோலக்குரம்பையிலிட்டெனை
எறும்பியூரரன்செய்தவியற்கையே. (௭)

இன்பமும்பிறப்பும்மிறப்பின்னொடு
துன்பமுமுடனேவைத்தசோதியான
அன்பனேயரனேயென்றரற்றுவார்க்
கின்பனாகுமெறும்பியூரீசனே. (௮)

கண்ணிறைந்தகனபவளத்திரள்
விண்ணிறைந்தவிரிசுடர்ச்சோதியான்
உண்ணிறைந்துருவாயுயிராயவன்
எண்ணிறைந்தவெறும்பியூரீசனே. (௯)

நிறங்கொல்மால்வரையூன்றியெடுத்தலும்
நறுங்குழன்மடவாணடுக்கெய்திட
மறங்கொள்வாளரக்கனவலிவாட்டினான்
எறும்பியூர்மலையெம்மிறைகாண்மினே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

**திருக்குரக்குக்கா-திருக்குறுந்தொகை.**

**திருச்சிற்றம்பலம்.**

மரக்கொக்காமெனவாய்விட்டலறிநீர
சரக்குக்காவித்திரிந்தயராதுகால
பரக்குங்காவிரிநீரலைக்குங்கரைக்
குரக்குக்காவடையக்கெடுங்குற்றமே. (௧)

கட்டாறேகழிகாவிரிபாய்வயல
கொட்டாறேபுனலூறுகுரக்குக்கா
முட்டாறுவடியேத்தமுயல்பவாக்
கிட்டாவிடரோடவெடுக்குமே. (உ)

கையனைத்துங்கலந்தெழுகாவிரி
செய்யனைத்திலுஞ்சென்றிடுஞ்செம்புனல்
கொய்யனைத்துங்கொணருங்குரங்குக்கா
ஐயனைத்தொழுவார்க்கல்லலில்லை. (ங)

மிக்கனைத்துத்திசையுமருவிகள்
புக்குக்காவிரிபோந்தபுனற்கரைக்
கொக்கினமபயில்சோலைக்குரக்குக்கா
நக்கனைநவில்வாரவினைநாசமே (ச)

விட்டுவெள்ளம்விரிந்தெழுகாவிரி
இட்டநீர்வயலெங்கும்பரந்திடக்
கொட்டமாமுழவோங்குகுரக்குக்கா
இட்டமாயிருப்பார்க்கிடரில்லையே. (ரு)

மேலைவானவரோடுவிரிகடல்
மாலுநான்முகனு முமளப்பொணுக
கோலமாளிகைக்கோயில்குரக்குக்காப
பாலராய்த்திரிவார்க்கில்லைபாவமே. (சு)

ஆலநீழலமாந்தவழகனா
காலனையுதைகொண்டகருத்தனா
கோலமஞ்ஞைகளாலுங்குரக்குக்காப
பாலருக்கருள்செய்வாபரிவொடே. (எ)

செக்கரங்கெழுசெஞ்சுடாச்சோதியா
அக்கரையரெம்மாதிபுராணனா
கொக்கினம்வயல்சேருங்குரங்குக்கா
நக்கனைத்தொழநம்வினைநாசமே. (அ)

உருகியூனகுழைந்தேத்தியெழுமினீா
கரியகண்டன்கழலடிதன்னையே
குரவநஞ்செழுங்கோயில்குரக்குக்கா
இரவுமெல்லியுமேத்தித்தொழுமினே. (கூ)

இரக்கமின்றிமலையெடுத்தான்முடி
உரத்தையொலகவடர்த்தானுறைவிடம்
குரக்கினங்குதிகொள்ளுங்குரக்குக்கா
வரத்தனைப்பெறவாலுலகாள்வரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கானூர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

திருவினாதனுஞ்செம்மலர்மேலுறை
உருவனாயுலகத்திலுயிர்க்கெலாம
கருவனாகிமுளைத்தவன்கானூரில்
பரமனாயபரஞ்சுடாகாண்மினே. (க)

பெண்டிரமக்கள்பெருந்துணைநன்னிதி
உண்டின்றேயென்றுகவன்மினேழைகாள்
கண்டுகொண்மினீர்கானூர்முளையினைப்
புண்டரீகபபொதும்பிலொதுங்கியே. (௨)

தாயத்தாரதமர்நன்னிதியென்னுமிம
மாயத்தேகிடந்திட்டுமயங்கிடேல்
காயத்தேயுளன்கானூர்முளையினை
வாயத்தாலவணங்கீர்வினைமாயவே. (௩)

குறியினின்றுண்டுகூறையிலாச்சமண்
நெறியைவிட்டுநிறைகழல்பற்றினேன்
அறியலுறறிரேறகானூர்முளையவன்
செறிவுசெய்திட்டிருபபதென்சிந்தையே. (௪)

பொத்தன்மண்சுவர்ப்பொல்லாக்குரம்பையை
மெய்த்தனென்றுவியந்திடலேழைகாள்
சித்தர்பத்தர்கள்சேர்திருக்கானூரில
அத்தன்பாதமடைதல்கருமமே. (௫)

கல்விஞானக்கலைபபொருளாயவன்
செலவமல்குதிருக்கானூரீசனை
எலலியுமபகலும்மிசைவாணவா
சொல்லிடீர்நுந்துயரங்கடீரவே. (௬)

நீரும்பாரும்நெருப்புமருக்கனும்
காருமாருதங்கானூர்முளைத்தவன்
சேர்வுமொன்றறியாதுதிகைதிகை
ஓர்வுமென்றிலரோடித்திரிவரே. (௭)

ஓமத்தோடயன்மாலறியாவணம்
வீமபபேரொளியாயவிழுபபொருள்
காமறகாய்ந்தவன்கானூர்முளைததவன்
சேமத்தாலிருபபாவதென்சிந்தையே. (௮-௯)

வன்னிகொன்றையெருக்கணிந்தான்மலை
உன்னியேசென்றெடுத்தவனொண்டிறல
தன்னைவிழததனிவிரலவைத்தவன்
கன்னிமாமதிறகானூர்க்கருததனே. (௰)

திருச்சிற்றம்பலம்

---

## திருச்சேறை - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றமபலம்.

பூரியாவரும்புண்ணியம்பொய்கெடும்
கூரிதாயவறிவுகைகூடிடும்
சீரியாரபயில்சேறையுட்செந்நெறி
நாரிபாகன்றனாமநவிலவே. (௧)

என்னமாதவஞ்செய்தனைநெஞ்சமே
முன்னுவாசடைவேதவிழுப்பொருள்
செந்நெலார்வயற்சேறையுட்செந்நெறி
மன்னுசோதிநம்பால்வந்துவைகவே. (௨)

பிறப்புமூப்புப்பெரும்பசிவான்பிணி
இறப்புநீங்கியிங்கின்பம்வந்தெய்திடுஞ்
சிறப்பர்சேறையுட்செந்நெறியான்கழல்
மறப்பதின்றிமனத்தினுள்வைக்கவே. (ங)

மாடுதேடிமயக்கினில்வீழ்ந்துநீர்
ஓடியெய்த்தும்பயனிலையூமர்காள்
சேடர்வாழ்சேறைச்செந்நெறிமேவிய
ஆடலான்றனடியடைந்துய்ம்மினே. (ச)

எண்ணிநாளுமெரியயிற்கூற்றுவன்
துண்ணெனத்தோன்றிற்றுரக்கும்வழிகண்டேன்
திண்ணன்சேறைத்திருச்செந்நெறியுறை
அண்ணலாருளரஞ்சுவதென்னுக்கே. (ரு)

தப்பில்வானந்தரணிகம்பிக்கிலென்
ஒப்பில்வேந்தரொருங்குடன்சீறிலென்
செப்பமாஞ்சேறைச்செந்நெறிமேவிய
அப்பனாருளரஞ்சுவதென்னுக்கே. (சா)

வைத்தமாடுமடந்தைநல்லார்களும்
ஒத்தொவ்வாதவுற்றார்களுமென்செய்வார்
சித்தர்சேறைத்திருச்செந்நெறியுறை
அத்தர்தாமுளரஞ்சுவதென்னுக்கே. (எ)

குலங்களென்செய்வகுற்றங்களென்செய்வ
துலங்கிநீநின்றுசோர்ந்திடனெஞ்சமே
இலங்குசேறையிற்செந்நெறிமேவிய
அலங்கனாருளரஞ்சுவதென்னுக்கே. (அ)

பழகிநீவரும்பண்டுளசுற்றமும்
விழவிடாவிடில்வேண்டியவெய்தொணா
திகழ்கொள்சேறையிற்செந்நெறிமேவிய
அழகனாருளரஞ்சுவதென்னுக்கே. (கூ)

பொருந்துநீண்மலையைப்பிடித்தேந்தினான்
வருந்தவூன்றிமலரடிவாங்கினான்
திருந்துசேறையுட்செந்நெறிமேவிய
இருந்தசோதியென்பார்க்கிடரில்லையே. (க0)

திருச்சிற்றம்பலம்.

## திருக்கோடிகா-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

சங்குலாமுன்கைத்தையலோர்பாகத்தன்
வெங்குலாமதவேழம்வெகுண்டவன்
கொங்குலாம்பொழிற்கோடிகாவாவென
எங்கிலாததோரின்பம்வந்தெய்துமே. (க)

வாடிவாழ்வதென்னாவதுமாதர்பால்
ஓடிவாழ்வினையுள்கிநீர்நாடொறும்
கோடிகாவனைக்கூறீரேற்கூறினேன்
பாடிகாவலிற்பட்டுக்கழிதிரே. (உ)

முல்லைநன்முறுவல்லுமைபங்கனார்
தில்லையம்பலத்தில்லுறைசெல்வனார்
கொல்லையேற்றினர்கோடிகாவாவென்றங்
கொல்லையேதொழுவார்க்கூனமொன்றில்லையே (ங)

நாவளம்பெறுமாறுமன்னுதல்
ஆமளஞ்சொல்லியன்புசெய்யினலால்
கோமளஞ்சடைக்கோடிகாவாவென
ஏவமின்றெனையேசும்மவவேழையே. (ச)

வீறுதான்பெறுவார்சிலராகிலும்
நாறுபூங்கொன்றைதான்மிகநல்கானேல்
கூறுமெங்கோடிகாவுளாயென்றுமால்
ஏறுவேனும்மாலேசப்படுவனே. (ரு)

நாடிநாரணனான்முகன்வானவர்
தேடியேசறவுந்தெரியாததோர்
கோடிகாவனைக்கூறாதநாளெலாம்
பாடிகாவலிற்பட்டுக்கழியுமே. (சா-எ-அ-கூ)

வரங்களால்வரையையெடுத்தானறனை
அரங்கவூன்றியருள்செய்தவப்பனார்
குரங்குசேர்பொழிற்கோடிகாவாவென
இரங்குவன்மனத்தேதங்கடாவே. (கO)

திருச்சிற்றம்பலம்.

---

### திருப்புள்ளிருக்குவேளூர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

வெள்ளெருக்கரவம்விரவுஞ்சடைப்
புள்ளிருக்குவேளூரரன்பொற்கழல்
உள்ளிருக்குமுணர்ச்சியிலாதவர்
நள்ளிருப்பர்நரகக்குழியிலே. (க)

மாற்றமொன்றறியீர்மனைவாழ்க்கைபோய்க்
கூற்றம்வந்துமைக்கொள்வதன்முன்னமே
போற்றவல்லீரேற்புள்ளிருக்குவேளூர்
சீற்றமாயினதேய்ந்தறுங்காண்மினே. (உ)

அருமறையனையாணொடுபெண்ணனைக்
கருவிடமிகவுண்டவெங்கண்டனைப்
புரிவெணூலனைப்புள்ளிருக்குவேளூர்
உருகிநைபவருள்ளங்குளிருமே. (ங)

தன்னுருவையொருவர்க்கறிவொணா
மின்னுருவனைமேனிவெண்ணீற்றனைப்
பொன்னுருவனைப்புள்ளிருக்குவேளூர்
என்னவல்லவர்க்கில்லையிடர்களே. (ச)

செங்கண்மால்பிரமற்குமறிவொணா
அங்கியின்னுருவாகியழல்வதோர்
பொங்கரவனைப்புள்ளிருக்குவேளூர்
மங்கைபாகனைவாழ்த்தவருமின்பே. (ரு)

குற்றமில்லியைக்கோலச்சிலையினால்
செற்றவர்புரஞ்செந்தழலாக்கியைப்
புற்றரவனைப்புள்ளிருக்குவேளூர்
பற்றமல்லவர்பாவம்பறையுமே. (௬)

கையினோடுகாலகட்டியுமொலாம
ஐயனைவிடனென்பதன்முன்னநீர
பொய்யிலாவரன்புள்ளிருக்குவேளூர்
மையுலாவியகண்டனைவாழ்த்துமே (௭)

உள்ளமுள்கியுகந்துசிவனென்று
வெள்ளவுள்கவினைகெடுமெய்ம்மையே
புள்ளினார்பணிபுள்ளிருக்குவேளூர்
வள்ளல்பாதமவணங்கித்தொழுமினே (௮-௯)

அரக்கனார்தலைபத்துமழிதர
நெருக்கிமாமலர்ப்பாதந்நிறுவிய
பொருப்பனூருறைபுள்ளிருக்குவேளூர்
விருப்பினாற்றொழுவார்வினைவீடுமே (௧௦)

திருச்சிற்றம்பலம்.

### திருஅன்பிலாலந்துறை-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

வானஞ்சோமதிசூடியமைந்தனை
நீநெஞ்சேகெடுவாய்நினைகிற்கிலை
ஆனஞ்சாடியையன்பிலாலந்துறைக்
கோனெஞ்செல்வனைக்கூறிடகிற்றியே. (௧)

காரணத்தர்கருத்தர்கபாலியார
வாரணத்துரிபோர்த்தமணாளனா
ஆரணப்பொருளன்பிலாலந்துறை
நாரணற்கரியானொருநம்பியே. (௨)

அன்பினானஞ்சமைந்துடனாடிய
வென்பினானையுரித்துககளைந்தவனை
அன்பிலானையம்மானையள்ளூறிய
அன்பினானினைந்தார்றிந்தார்களே. (௩)

சங்கையுள்ளதுஞ்சாவதுமெய்யுமை
பங்கனாரடிபாவியேனுய்ய
அங்கணனெந்தையன்பிலாலந்துறைச்
செங்கணாரடிசசேரவும்வல்லரே. (௪)

கொக்கிறகர்குளிர்மதிசசென்னியர்
மிக்கரக்கர்புரமெரிசெய்தவர்
அக்கரையினரன்பிலாலந்துறை
நக்குருவருநம்மையறிவரே. (௫)

வெள்ளமுள்ளவிரிசடைநந்தியைக்
கள்ளமுள்ளமனத்தவர்காண்கிலார்

அன்பிலாலந்துறையானை—அன்பிலானையெனநின்றது.

அள்ளலாவயலன்பிலாலந்துறை
உள்ளவாறறியார்சிலருமரே. (௬)

பிறவிமாயப்பிணக்கிலழுந்தினும்
உறவெலாஞ்சிந்தித்துன்னியுகவாதே
அறவனெம்பிரானன்பிலாலந்துறை
மறவாதேதொழுதேத்திவணங்குமே (௭)

நுணங்குநூலயன்மாலுமிருவரும்
பிணங்கியெங்குந்திரிந்தெய்த்துங்காண்கிலா
அணங்கனெம்பிரானன்பிலாலந்துறை
வணங்குநும்வினைமாய்ந்தறும்வண்ணமே. (௮)

பொய்யெலாமுரைக்குஞ்சமண்சாக்கியக்
கையன்மாருரைகேளாதெழுமினோ
ஐயனெம்பிரானன்பிலாலந்துறை
மெய்யன்சேவடியேத்துவார்மெய்யரே (௯)

இலங்கைவேந்தனிருபதுதோளிற்று
மலங்கமாமலைமேல்விரல்வைத்தவன்
அலங்கலெம்பிரானன்பிலாலந்துறை
வலங்கொள்வாரைவானோர்வலங்கொள்வரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பாண்டிக்கொடுமுடி-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

சிட்டனைச்சிவனைச்செழுஞ்சோதியை
அட்டமூர்த்தியையாலநிழலமா
பட்டனைத்திருப்பாண்டிக்கொடுமுடி
நட்டனைத்தொழநம்வினைநாசமே. (௧)

பிரமன்மாலறியாதபெருமையன்
தருமமாகியதத்துவனெம்பிரான்
பரமனுறைபாண்டிக்கொடுமுடி
கருமமாகத்தொழுமடநெஞ்சமே. (௨)

ஊசலாளல்லளொண்கழலாளல்லள்
தேசமாந்திருப்பாண்டிக்கொடுமுடி
நாசனேயெனுமித்தனையல்லது
பேசுமாறறியாளொருபேதையே. (௩)

தூண்டியசுடர்போலொக்குஞ்சோதியான்
காண்டலுமெளியன்னடியார்கட்குப்
பாண்டிக்கொடுமுடிமேயபரமனைக்
காண்டுமென்பவாக்கேதுங்கருத்தொணான். (௪)

நெருக்கியம்முடிநின்றிசைவானவர்
இருக்கொடும்பணிந்தேத்தவிருந்தவன்
திருக்கொடுமுடியென்றலுந்தீவினைக்
கருக்கெடுமிதுகைகண்டயோகமே. (௫-௬-௭-௮-௯-௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருவான்மியூர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

விண்டமாமலர்கொண்டுவிரைந்துநீர்
அண்டர்நாயகன்றன்னடிசூழ்மின்கள்
பண்டுநீர்செய்தபாவமபறைந்திடும்
வண்டுசேர்பொழில்வான்மியூரீசனே. (க)

பொருளுஞ்சுறறமுமபொய்ம்மையும்விட்டுநீ
மருளுமாநதரைமாறறிமயக்கறுத்
தருளுமாவல்லவாதியாயென்றலும
மருளறுத்திடும்வான்மியூரீசனே. (உ)

மநதமாகியசிநதைமயக்கறுத
தநதமிலகுணததானையடைந்துநின்
றெநதையீசனெனறேத்திடவலலிரேல
வநதுநின்றிடும்வான்மியூரீசனே. (ங)

உள்ளமுள்கலந்தேத்தவல்லார்க்கலால்
கள்ளமுள்ளவசிக்கழிவானலன்
வெள்ளமுமரவுமவிரவுஞ்சடை
வள்ளலாகியவான்மியூரீசனே. (ச)

படங்கொள்பாம்பரைப்பான்மதிசூடியை
வடங்கொணமென்முலைமாதொருகூறனைத்
தொடர்நதுநின்றுதொழுதொழுவார்வினை
மடஙகினறிடும்வான்மியூரீசனே. (ரு)

நெஞ்சிலைவாநினைக்கநினைக்குருர்
பஞ்சின்மெல்லடியாளுமைபஙகவென்
றஞ்சிநாண்மலர்தூவியழுதிரேல்
வஞசநீத்திடும்வானமியூரீசனே. (சு)

இணங்குறாலயன்மாலுமறிகிலாக்
குணங்கடான்பரவிக்குறைநதுக்கவர்
சுணங்குபூண்முலைத்தூமொழியாரவா
வணங்கினறிடுமவான்மியூரீசனே. (எ)

ஆதியும்மரனுயயன்மாலுமாய்ப
பாதிபெணணுருவாயபரமனென்
றோதியுள்குழைநதேத்தவல்லாரவா
வாதைதீர்த்திடும்வான்மியூரீசனே. (அ)

ஓட்டைமாடத்திலொன்பதுவாசலும்
காட்டில்வேவதன்முன்னஙகழலடி
நாட்டிநாண்மலர்தூவிவலஞ்செயின்
வாட்டநதீர்த்திடும்வான்மியூரீசனே. (கூ)

பாரமாகமலையெடுத்தான்றனைச்
சீரமாகத்திருவிரலூன்றினன்
ஆரவமாகவழைத்தவனேத்தலும
வாரமாயினன்வான்மியூரீசனே. (க0)

திருச்சிற்றம்பலம்.

## திருநாகைக்காரோணம் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

பாணத்தான்மதின்மூன்றுமெரித்தவன்
பூணத்தானரவாமைபொறுத்தவன
காணத்தானினியான்கடனாகைக்கா
ரோணத்தானெனநம்வினையோயுமே. (க)

வண்டலம்பியவாரசடையீசனை
விண்டலம்பணிநதேத்துமவிகிரதனைக
கண்டகங்கமழநாகைககாரோணனைக்
கண்டலுமவினையானகழலுமே. (உ)

புனையுமாமலர்கொண்டுபுரிசடை
நனையுமாமலரசூடியநம்பனைக்
கனையும்வாரகடனாகைககாரோணனை
நினையவேவினையாயினநீங்குமே (ங)

கொலலைமாலவிடையேறியகோவினை
எலலிமாநடமாடுமிறைவனைக்
கலலினாரமதினாகைக்காரோணனைச்
சொலலவேவினையானவைசோருமே (ச)

மெய்யனைவிடையூர்தியைவெண்மழுக
கையனைக்கடனாகைககாரோணனை
மையனுகியகணடனைவானவா
ஐயனைத்தொழுவாரக்கலலலில்லையே. (ரு)

அலங்கலசேரசடையாதிபுராணனை
விலஙகலமெலலியலபாகம்விருபபனைக்
கலஙகள்சேர்கடனாகைக்காரோணனை
வலங்கொள்வாரவினையாயினமாயுமே. (சா)

சினங்கொண்மாலகரிசீறியவேறினை
இனஙகொள்வானவரேத்தியவீசனைக்
கனஙகொணமாமதினாகைக்காரோணனை
மனஙகொள்வார்வினையாயினமாயுமே. (எ)

அநதமில்புகழாயிழையாரபணிந
தெநதையீசனென்றேத்துமிறைவனைக்
கநதவாரபொழினாகைக்காரோணனைச்
சிநதைசெய்யககெடுநதுயாதிணணமே. (அ)

கருவனைக்கடனாகைக்காரோணனை
இருவருக்கறிவொணாவிறைவனை
ஒருவனையுணராரபுரமூன்றெய்த
செருவனைத்தொழத்தீவினைதீருமே. (கூ)

கடலகழிதழிநாகைக்காரோணன்றன்
வடவரையெடுத்தாரத்தவரக்கனை
அடரவூன்றியபாதமணைநதாரத்
தொடரவஞ்சுநதுயக்கறுங்காலனே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

**மேலைத்திருக்காட்டுப்பள்ளி - திருக்குறுந்தொகை.**

திருச்சிற்றம்பலம்.

மாட்டுப்பள்ளிமகிழ்ந்துறைவீர்க்கெலாம்
கேட்டுப்பள்ளிகண்டீர்கெடுவீரிது
ஓட்டைப்பள்ளிவிட்டோடலுறுமுனம்
காட்டுப்பள்ளியுளான்கழல்சேர்மினே. (க)

மாடைத்தேடிமகிழ்ந்துநீர்நும்முளே
நாடிப்பொய்யெலாம்பேசிநாணின்றிக்
கூடைவிட்டுயிர்போவதன்முன்னமே
காட்டுப்பள்ளியுளான்கழல்சேர்மினே. (உ)

தேனைவென்றசொல்லாளொடுசெல்வமும்
ஊனைவிட்டுயிர்போவதன்முன்னமே
கானவேடர்கருதுங்காட்டுப்பள்ளி
ஞானநாயகனைச்சென்றுநண்ணுமே. (ங)

அருத்தமுமனையாளொடுமக்களும்
பொருத்தமில்லைபொல்லாததுபோக்கிடும்
கருத்தனைக்கண்ணுதலணல்காட்டுப்பள்ளி
திருத்தனைச்சேவடியைச்சென்றுசேர்மினே. (ச)

சுற்றமுந்துணையும்மனைவாழ்க்கையும்
அற்றபோதணையாரவரொன்றென்றே
கற்றவர்கள்கருதுங்காட்டுப்பள்ளிப்
பெற்றமேறும்பிரானடிசேர்மினே. (ரு)

அடும்புங்கொன்றையும்வன்னியுமத்தமும்
துடும்பல்செய்சடைத்தூமணிச்சோதியான்
கடம்பனாருறைகருதுங்காட்டுப்பள்ளி
உடம்பினார்க்கோருறுதுணையாகுமே. (சா)

மெய்யின்மாசுடையாருடலுழல்வார்
பொய்யைமெய்யெனப்புக்குடன்வீழ்மின்
கையினமானுடையான்காட்டுப்பள்ளியெம்
ஐயன்றன்னடியேயடைந்துய்ம்மினே. (எ)

வேலைவென்றகண்ணாரைவிரும்பிநீர்
சீலங்கெட்டுத்திகையன்மின்பேதைகாள்
காலையேதொழுங்காட்டுப்பள்ளியுறை
நீலகண்டனைநித்தனினைமினே. (அ)

இன்றுளார்நாளையில்லையெனும்பொருள்
ஒன்றுமோரார்உழிதருமூமர்காள்
அன்றுவானவர்க்காகிவிடமுண்ட
கண்டனார்காட்டுப்பள்ளிகண்டுய்ம்மினே (கூ)

எண்ணிலாவரக்கன்மலையேந்திட
எண்ணிநீண்முடிபத்துமிறுத்தவன்
கண்ணுளார்கருதுங்காட்டுப்பள்ளியைக்
கண்ணுவாரவர்தம்வினைநாசமே. (க0)

திருச்சிற்றம்பலம்.

### திருச்சிராப்பள்ளி-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

மட்டுவார்குழலாளொடுமால்விடை
இட்டமாவுகந்தேறுமிறைவனார்
கட்டுநீத்தவர்க்கின்னருளேசெயும்
சிட்டார்போலுஞ்சிராப்பள்ளிச்செல்வரே. (க)

அரியயன்றலைவெட்டிவட்டாடினா
அரியயனன்றொழுதேத்துமரும்பொருள்
பெரியவன்சிராப்பள்ளியைப்பேணுவார
அரியயன்றொழவாழ்விருப்பார்களே. (உ)

அரிச்சிராப்பகலைவராலாட்டுண்டு
சுரிச்சிராதுநெஞ்சேயொன்றுசொல்லக்கேள்
திருச்சிராப்பள்ளியென்றலுநீவினை
நரிச்சிராதுநடக்குநடக்குமே. (௩)

தாயுமாயெனக்கேதலைகணுமாய்ப
பேயனேனையுமாண்டபெருந்தகை
தேயநாதன்சிராப்பள்ளிமேவிய
நாயனுரெனநம்வினைநாசமே. (ச-ரு-சு-எ-அ-கூ-௰)

திருச்சிற்றம்பலம்.

---

### திருவாட்போக்கி-திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்.

காலபாசம்பிடித்தெழுதூதுவா
பாலகாவிருத்தாபழையானொனுர்
ஆலநீழலமர்ந்தவாட்போக்கியா
சீலமாந்தவாசெமமையுணிறபரே. (க)

விடுத்ததூதுவர்வந்துவினைகுழிப
படுத்தபோதுபயனிலைபாவிகாள்
அடுத்தகின்னரங்கேட்கும்வாட்போக்கியை
எடுத்துமேத்தியுமின்புறுமினகளே. (உ)

வந்திவ்வாறுவளைத்தெழுதூதுவா
உந்தியோடிநரகத்திடாமுனம
அந்தியின்னொளிதாங்கும்வாட்போக்கியா
சிந்தியாவெழுவார்வினைதீர்ப்பரே. (௩)

கூற்றமவந்துகுமைத்திடும்போதினல்
தேற்றமவந்துதெளிவுறலாகுமே
ஆற்றவும்மருள்செய்யும்வாட்போக்கிபால
ஏற்றுமின்விளக்கையிருணீங்கவே. (ச)

மாறுகொண்டுவளைத்தெழுதூதுவர்
வேறுவேறுபடுப்பதன்முன்னமே
ஆறுசெஞ்சடைவைத்தவாட்போக்கியார்க்
கூறியூறியுருகுமென்னுள்ளமே. (ரு)

கானமோடிக்கடிதெழுதூதுவா
தானமோர்தலைபிடியாமுன்னம
ஆனஞ்சாடியுகந்தவாட்போக்கியார்
ஊனமில்லவாக்குண்மையினிறப்பே. (சு)

பாரதுடபாசம்பிடிதெழுதூதுவா
கூரத்தவேலாறகுமைப்பதன்முன்னமே
ஆர்த்தகங்கையடக்கும்வாடபோக்கியார
கீர்த்திமைகள்கிளர்ந்துரைமின்கேளே. (எ)

நாடிவந்துநமன்றமாநலிருள
கூடிவந்துகுமைப்பதன்முன்னமே
ஆடலபாடலுகந்தவாடபோக்கியை
வாடியேத்தநமவாடடந்தவிருமே. (அ)

கட்டறுத்துக்கடிதெழுதூதுவா
பொட்டநூக்கிப்புறப்பாமுன்னமே
அட்டமாமலாசூடும்வாட்போக்கியாக
கிட்டமாகியிணையடியேத்துமே. (கூ)

இரக்கமுன்னறியாதெழுதூதுவா
பரக்கழிததவாபறுதன்முன்னமே
அரக்கனுக்கருளசெய்தவாட்போக்கியார
கரபதுங்கரபபாரவாதங்கட்கே. (கo)

திருச்சிற்றம்பலம்.

திருமணஞ்சேரி-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றமபலம.

படடநெறறியர்பாய்புலித்தோலினா
நட்டநின்றுநவில்பவாநாடொறும்
சிட்டாவாழ்திருவார்மணஞ்சேரியெம
வட்டவாசடையாரவணம்வாழ்த்துமே. (க)

துன்னுவாகுழலாளுமையாளொடெ
பின்னுவாசடைமேறபிறைவைத்தவா
மன்னுவாமணஞ்சேரிமருந்தினை
உன்னுவாவினையாயினவோயுமே. (உ)

புறறிலாடரவாடம்புனிதனா
தெறறினார்புரந்தீயெழச்செற்றவா
சுறறினாமதில்சூழ்மணஞ்சேரியார்
பற்றினாவாபறறவர்காண்மினே. (ங)

மத்தமும்மதியும்வளர்செஞ்சடை
முத்தர்முக்கணணாமுசரவமமணி
சித்தர்தீவணர்சீர்மணஞ்சேரியெம்
வித்தாதாம்விருப்பாரைவிருபபரே. (ச)

துள்ளுமான்மறிதூமழுவாளினர்
வெள்ளநீர்கரந்தாசடைமேலவர்
அள்ளலார்வயல்சூழ்மணஞ்சேரியெம்
வள்ளலார்கழல்வாழ்த்தல்வாழ்வாவதே. (டு)

நீர்பரந்தநிமிர்புன்சடையின்மேல்
ஊர்பரந்தவுரகமணிபவர்
சீர்பரந்ததிருமணஞ்சேரியார்
ஏர்பரந்தங்கிலங்குசூலத்தரே. (௬)

சுண்ணத்தர்சுடுநீறுகந்தாடலார்
விண்ணத்தம்மதிசூடியவேதியர்
மண்ணத்தம்முழவார்மணஞ்சேரியார்
வண்ணத்தம்முலையாளுமைவண்ணரே. (௭)

துன்னவாடையர்தூமழுவாளினர்
பின்னுசெஞ்சடைமேற்பிறைவைத்தவர்
மன்னுவார்பொழில்சூழ்மணஞ்சேரியெம்
மன்னனார்கழலேதொழுவாய்கருமே (௮)

சித்தர்தேவர்கண்மாலொடுநான்முகன்
புத்தர்தேரமணகையர்புகழவே
மத்தர்தாமறியார்மணஞ்சேரியெம்
அத்தனார்க்கடியார்க்கல்லலில்லையே. (௯)

கடுத்தமேனியரக்கன்கயிலையை
எடுத்தவன்னெடுநீண்முடிபத்திற
படுத்தலும்மணஞ்சேரியருளெனக்
கொடுத்தனன்கொற்றவாளொடுநாமமே. (௧௰)

திருச்சிற்றம்பலம்.

திருமருகல்-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

பெருகலாந்தவம்பேதைமைதீரலாம்
திருகலாகியசிந்தைதிருத்தலாம்
பருகலாம்பரமாயதோரானந்தம
மருகலானடிவாழ்த்திவணங்கவே. (௧)

பாடங்கொளபனுவற்றிறங்கற்றுபபோய்
நாடங்குள்ளனதடடியகாணிலீர்
மாடஞ்சூழ்மருகற்பெருமான்றிரு
வேடங்கைதொழவீடெளிதாகுமே. (௨)

சினத்தினல்வருசெய்தொழிலாமவை
அனைத்துநீங்கிநின்றுதரவாய்மிக
மனத்தினன்மருகறபெருமான்றிறம
நினைபவர்க்கில்லைநீணிலவாழ்க்கையே. (௩)

ஓதுபைங்கிளிக்கொண்பாலமுதூட்டிப
பாதுகாத்துப்பலபலகற்பித்து
மாதுதான்மருகறபெருமானுக்குத்
தூதுசொல்லவிடத்தான்றொடங்குமே. (௪)

இன்னவாறென்பதுண்டறியேனின்று
துன்னுகைவளைசோரக்கணீர்மல்கும்
மன்னுதென்மருகற்பெருமான்றிறம்
உன்னியொண்கொடியுள்ளமுருகுமே. (௫)

சங்குஞ்சோரக்கலையுஞ்சரியவே
மங்கைதான்மருகறபெருமான்வரும்
அங்கவீதியருகணையாநிற்கும்
நங்கைமீரிதற்கென்செய்கேனுமே. (௬)

காட்சிபெற்றிலளாகிலுங்காதலே
மீட்சியொன்றறியாதுமிகுவதே
மாட்சியாமருகற்பெருமானுக்குத
தாழசசிசாலவுண்டாகுமென்றையலே. (எ)

நீடுநெஞ்சுணிணை நதுகணீாமலகும்
ஓடுமாவினோடொண்கொடிமாதரார்
மாடநீண்மருகறபெருமான் வரின்
கூடுநீயெனறுகூடலிழைக்குமே. (அ)

கந்தவார்குழல்கட்டிலள்காரிகை
யந்தமாலவிடையோடுமென்பாய்மிக
வந்திடாயமருகறபெருமானென்று
சிந்தைசெயதுதிகைத்திடுங்காண்மினே. (௯)

ஆதிமாமலையனறெடுத்தானிற்றுச்
சோதியென்றலுநதொல்லருளசெய்திடும்
ஆதியான்மருகறபெருமானதிறம்
ஓதிவாழபவரும்பாக்குழும்பரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

தனித் - திருக்குறுந்தொகை.

திருச்சிறறமபலம்.

ஒனறுவெண்பிறைக்கண்ணியோர்கோவணம்
ஒன்றுகீளுமையோடுமுடுததது
ஒன்றுவெணடலையேநதியெமுள்ளத்தே
ஒன்றிநின்றங்குறையுமொருவனே. (௧)

இரண்டுமாமவாக்குள்ளனசெய்தொழில
இரண்டுமாமவாக்குள்ளனகோலங்கள்
இரண்டுமிலவிளமானை மையாளுகந்
திரண்போதுமென்சிநதையுளவைகுமே. (௨)

மூன்றுமூர்த்தியுநின்றியலுநதொழில
மூன்றுமாயினமூவிலைச்சூலத்தன்
மூன்றுகணணினன்றீதநொழின்மூன்றினன்
மூன்றுபோதுமென்சிநதையுண்மூழ்குமே. (௩)

நாலுமேன்முகனுசெற்றதுமன்னிழல்
நாலுநன்குணாந்திட்டதுமின்பமாம்
நாலுவேதஞ்சரித்ததுநன்னெறி
நாலுபோலெமகத்துறைநாதனே. (௪)

அஞ்சுமஞ்சுமோராடியரைமிசை
அஞ்சுபோலரையார்த்ததின்றத்துவம்
அஞ்சுமஞ்சுமோரோரைஞ்சுமாயவன்
அஞ்சுமாமெமகத்துறையாதியே. (௫)

ஆறுகாலவண்டுமூசியகொன்றையான்
ஆறுசூடியவண்டமுதலவனா
ஆறுகூறாமையாக்கசசமயபபொருள்
ஆறுபோலெமகத்துறையாதியே. (௬)

ஏழுமாமலையேழ்பொழிலசூழ்கடல
ஏழுபோறறுமிராவணன்கைநரம்
பேழுகேட்டருள்செய்தவன்பொறகழல்
ஏழுசூழடியேன்மனத்துள்ளவே. (௭)

எட்டுமூாததியாய்நின்றியலுநதொழில
எட்டுவான்குணத்தீசனெம்மான்றனை
எட்டுமூாத்தியுமெம்மிறையெம்முளே
எட்டுமூாததியுமெம்முளொடுஙகுமே. (௮)

ஒனபதொன்பதியானையொளிகளி
றொன்பதொன்பதுபலகணஞசூழவே
ஒன்பதாமவைதீத்தொழிவின்னுரை
ஒன்பதொத்துநின்றெனனுளொடுஙகுமே. (௯)

பததுநூறவன்வெங்கண்வெள்ளேற்றண்ணல
பத்துநூறவன்பல்சடைதோண்மிசை
பத்தியாமிலமாதலின்ஞானத்தால்
பத்தியானிடங்கொண்டதுபள்ளியே. (௧0)

திருச்சிறறமபலம்.

தனித் - திருக்குறுந்தொகை.

திருசசிறறமபலம்.

மாசிலவீணையுமாலைமதியமும்
வீசுதென்றலும்வீஙகிளவேனிலும்
மூசுவண்டறைபொய்கையும்பொன்றதே
ஈசனெநதையிணையடிநீழலே. (௧)

நமச்சிவாயவேஞானமுஙகலவியும
நமச்சிவாயவேநானறிவிச்சையும்
நமசசிவாயவேநாநவின்றேத்துமே
நமச்சிவாயவேநனனெறிகாட்டுமே. (௨)

ஆளாகாராளானவரையடைநதுய்யார
மீளாவாட்செய்துமெமமையுணிறகிலார்
*தோளாதசுரையோதொழுமபாசெவி
வாளாமாய்ந்துமண்ணாகிககழிவரே. (௩)

கடலைவாழ்வுகொணடென்செய்திாநாணிலீர்
சுடலைசோவதுசொறபிரமாணமே
கடவினஞ்சமுதுணடவாகைவிட்டால
உடலினாகிடநதூமுனிபண்டமே. (௪)

பூக்கைக்கொண்டரன்பொன்னடிபோற்றிலார்
நாக்கைக்கொணடரனுமநவிலகிலார்

* தோளாதசுரை - துவாரமிடாதசுரைக்காய்.

ஆக்கைக்கேயிரைதேடியலமந்து
காக்கைக்கேயிரையாகிக்கழிவரே. (௫)

குறிகளுமடையாளமுங்கோயிலும்
நெறிகளும்மவர்நின்றதோர்நேர்மையும்
அறியவாயிரமாரணமோதிலும்
பொறியிலீர்மனமென்கொல்புகாததே. (௬)

வாழ்த்தவாயுநினைக்கமடநெஞ்சும்
தாழ்க்கச்சென்னியுந்தந்ததலைவனைச்
சூழ்த்தமாமலர்தூவித்துதியாதே
வீழ்த்தவாவினையேனெடுங்காலமே. (௭)

எழுதுபாவைநல்லார்திறம்விட்டுநான்
தொழுதுபோகநின்றேனையுஞ்சூழ்ந்துகொண்
டுழுதசாலவழியேயுழுவான்பொருட்
டிழுதைநெஞ்சமிதென்படுகின்றதே. (௮)

நெக்குநெக்குநினைபவர்நெஞ்சுளே
புக்குநிற்கும்பொன்னார்சடைப்புண்ணியன்
பொக்கமிக்கவர்பூவுநீருங்கண்டு
நக்குநிற்பரவர்தமைநாணியே. (௯)

விறகிற்றீயினன்பாலிற்படுநெய்போல்
மறையநின்றுளன்மாமணிச்சோதியான்
உறவுகோனட்டுணர்வுகயிறறினால்
முறுகவாங்கிக்கடையமுன்னிற்குமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## தனித் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

ஏயிலானையெனிச்சையகம்படிக்
கோயிலானைக்குணப்பெருங்குன்றினை
வாயிலானைமனோன்மனியைப்பெற்ற
தாயிலானைத்தழுவுமென்னாவியே. (௧)

ஞானத்தாற்றொழுவார்சிலஞானிகள்
ஞானத்தாற்றொழுவேனுனைநானலேன்
ஞானத்தாற்றொழுவார்கடொழக்கண்டு
ஞானத்தானுனைநானுந்தொழுவனே. (௨)

முன்னைஞானமுதற்றனிவித்தினைப்
பின்னைஞானப்பிறங்குசடையனை
என்னைஞானத்திருளறுத்தாண்டவன்
தன்னைஞானத்தளையிட்டுவைப்பனே. (௩)

புழுவுக்குங்குணநான்கெனக்குமதே
புழுவுக்கிங்கெனக்குள்ளபொல்லாங்கில்லை
புழுவிலுங்கடையேன்புனிதன்றமர்
குழுவுக்கெவ்விடத்தேன்சென்றுகூடவே. (௪)

மலையேவந்துவிழினுமனிதர்காள்
நிலையினின்றீர்கலங்கப்பெறுதிரேல்

தலைவணங்கியவீசன்றமர்களை
கொலைகையானைதான்கொன்றிடுகிற்குமே. (ரு)

கற்றுக்கொள்வனவாயுளநாவுள
இட்டுக்கொள்வனபூவுளநீருள
கற்றைச்செஞ்சடையானுளனுமுளோம
எற்றுககோநமனுன்முனிவுணபதே. (சு)

மனிதர்காளிங்கேவம்மொன்றுசொல்லுகேன்
கனித்தகாறகனியுண்ணவும்வல்லிரே
புனிதன்பொற்கழலீசனெனுங்கனி
இனிதுசாலவுமேசறறவாகட்கே. (எ)

என்னையேதுமறிந்திலனெம்பிரான்
தன்னைநானுமுன்னேதுமறிந்திலேன்
என்னைத்தன்னடியானென்றறிதலும
தன்னைநானுமபிரானென்றறிந்ததேனே. (அ)

தெள்ளத்தேறித்தெளிந்துதித்திப்பதோர்
உள்ளத்தேறலமுதவொளிவெளி
கள்ளத்தேன்கடியேன்கவலைக்கடல்
வெள்ளத்தேனுக்கெவ்வாறுவிளைந்ததே. (கூ-க0)

திருச்சிற்றம்பலம்.

### காலபாராயணம்-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

கண்டுகொள்ளரியானைக்கனிவித்துப்
பண்டுநாஞ்செய்தபாழிமைகேட்டிரேல
கொண்டபாணிகொடுகொட்டிதாளங்கைக்
கொண்டதொண்டரைத்துன்னிலுஞ்சூழலே (க)

நடுக்கத்துள்ளுநகையுளுநம்பாக்குக்
கடுக்கக்கலைவடமிவார்கட்குக்
கொடுக்கக்கொள்கவெனவுரைப்பார்களை
இடுக்கண்செய்யப்பெறீரிங்குநீங்குமே. (உ)

கார்கொள்கொன்றைக்கடிமலர்க்கண்ணியான
சீர்கொணுமஞ்சிவனென்றாறறுவார
ஆர்களாகிலுமாகவவர்களை
நீர்கள்சாரப்பெறீரிங்குநீங்குமே. (ங)

சாற்றினேன்சடைநீண்முடிச்சங்கரன்
சீற்றங்காமன்கண்வைத்தவன்சேவடி
ஆறறவுங்களிப்பட்டமனத்தராய்ப்
போறறியென்றுரைப்பார்புடைபோகலே. (ச)

இறையென்சொன்மறவேனமன்றூதுவீர்
பிறையுமபாம்புமுடைப்பெருமான்றமர
நறவநாறியநன்னறுஞ்சாந்திலும்
நிறையநீறணிவாரெதிர்செல்லலே. (ரு)

வாமதேவன்வளநகர்வைகலும்
காமமொன்றிலராய்க்கைவிளக்கொடு

தாம தூபமுந தண்ணறுஞ்சாந்தமுப
ஏமமும்புனைவாரெதிரொசெலலலே (சா)

படையும்பாசமுமபற்றியகையினீர
அடையன்மினனமதீசனடியரை
விடைகொளூர்தியினனடியாரகுழாம்
புடைபுகாதுநீரபோற்றியேபோமினே. (எ)

விச்சையாவதும்வேட்கைமையாவதும்
நிச்சநீறணிவாரைநினைப்பதே
அச்சமெய்தியருகணையாதுநீர
பிச்சைபுக்கவனனபரைபபேணுமே. (அ)

இன்னங்கேண்மினிளம்பிறைசூடிய
மன்னனபாதமனததுடனேததுவார
மன்னுமஞ்செழுததாகியமநதிரம
தனனிலொனறுவலலாரையுஞ்சாரலே. (கூ)

மறறுங்கேண்மின்மனபரிபபொனறினறிச
சுறறும்பூசியநீறறொடுகோவணம்
ஒறறையேறுடையானடியேயலால
பறறொன்றிலலிகண்மேற்படைபோகலே. (க௦)

அரககனீரைநதலையுமோரதாளினால
நெருககியூனறியிட்டான்றமாநிற்கினுஞ
சுருககெனுதஙகுபபோமினகண்மறறுநீர
சுருக்கெனிறசுடரானகழல்சூடுமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

மறக்கிற்பனேயென்னும்-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

காசனைக்கனலைக்கதிரமாமணித
தேசனைபபுகழாரசிலாதெண்ணாகள
மாசினைக்கழிததாடகொளவலலவெம
ஈசனையினிநான்மறக்கிறபனே (க)

புநதிக்குவிளக்காயபுராணனைச
சநதிக்கணணடமாடுஞ்சதுரனை
அநதிவண்ணனையாரழன்மூர்த்தியை
வநதெனுள்ளங்கொண்டானைமறப்பனே. (உ)

ஈசனீசனென்றென்றுமாறறுவன்
ஈசன்றானென்மனத்திறபிரிவிலன்
ஈசன்றன்னையுமென்மனததுக்கொண்டு
ஈசன்றன்னையுமியான்மறக்கிற்பனே. (ங)

ஈசனென்னையறிநததறிந்தனன்
ஈசன்சேவடியேத்தபபெறுதலால
ஈசன்சேவடியேத்தப்பெற்றேனினி
ஈசன்றன்னையுமியான்மறக்கிற்பனே. (ச)

தேனைப்பாலினைத்திங்களைஞாயிற்றை
வானவெண்மதிசூடியமைந்தனை

வேனிலானை மெலிவுசெய்தீயழல்
ஞானமூர்த்தியைநான்மறக்கிற்பனே. (௫)

கன்னலைக்கரும்பூறியதேறலை
மின்னனைமினனனை யவுருவனைப
பொன்னனைமணிக்குன்றுபிறங்கிய
என்னனையினியான் மறக்கிறபனே. (௬)

கரும்பினைக்கட்டியைக்கநதமாமலரச்
சுருமபினைசசுடாசோதியுட்சோதியை
அருமபினிற்பெரும்போதுகொண்டாய்மலா
விருமபுமீசனைநான்மறக்கிறபனே. (௭)

துஞ்சும்போதுஞ்சுடர்விடுசோதியை
நெஞ்சுணின்றுநினைபபிக்குநீதியை
நஞ்சுகண்டத்தடககியநமபனை
வஞ்சனேனினிநான்மறக்கிற்பனே. (௮)

புதியபூவினைபபுண்ணியநாதனை
நிதியைநீதியைநித்திலக்குன்றினைக்
கதியைக்கண்டங்கறுத்தகடவுளை
மதியைமைநதனைநான்மறக்கிறபனே. (௯)

கருகுகாாமுகிலபோலவதோர்கண்டனை
உருவநோக்கியையூழிமுதலவனைப்
பருகுபாலனைபபான்மதிசூடியை
மருவுமைந்தனைநான்மறககிற்பனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## தொழற்பாலதே என்னுந் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

அண்டத்தானைபமாாதொழுபபடும
பண்டத்தானைப்பவித்திரமாநதிரு
முண்டத்தானைமுறறுறுதவிளம்பிறைத்
துணடத்தானைக்கண்டீாதொழறபாலதே. (௧)

முததொபபானைமூளைதெதழுகறபக
விததொபபானைவிளக்கிடைநேரொளி
ஒத்தொப்பானையொளிபவளததிரள்
தொத்தொப்பானைக்கணடீாதொழற்பாலதே. (௨)

பணைத்தானைப்பவளந்திரண்டதோா
வண்ணத்தானைவகையுணாவான்றனை
எண்ணத்தானையிளமபிறைபோல்வெள்ளைச்
சுண்ணத்தானைக்கண்டீாதொழற்பாலதே. (௩)

விடலையானைவிரைகமழ்தேன்கொன்றைப்
படலையானைப்பலிதிரிவான்செலும்
நடலையானைநரிபிரியாததோர்
சுடலையானைக்கண்டீாதொழற்பாலதே. (௪)

பருதியானைப்பல்வேறுசமயங்கள்
கருதியானைக்கண்டார்மனமேவிய

பிரிதியானைப் பிறரறியாததோர்
சுருதியானைக் கண்டுதொழற்பாலதே. (௫)

ஆதியானை யமரர்தொழப்படும்
நீதியானை நியமநெறிகளை
ஓதியானை யுணர்தற்கரியதோர்
சோதியானைக் கண்டுதொழற்பாலதே. (௬)

ஞாலத்தானை நல்லானை வல்லார்செயுங்
கோலத்தானைக் குணப்பெருங்குன்றினை
மூலத்தானை முதல்வனை மூவிலைச்
சூலத்தானைக் கண்டுதொழற்பாலதே. (௭)

ஆதிப்பாலட்டமூர்த்தியை யானஞ்சும்
வேதிப்பானை யெம்மேல்வினை வெந்தறச்
சாதிப்பானைத் தவத்திடை மாற்றங்கள்
சோதிப்பானைக் கண்டுதொழற்பாலதே. (௮)

நீற்றினானை நிகரில்வெண்கோவணக்
கீற்றினானைக் கிளரொளிச் செஞ்சடை
ஆற்றினானை யமரர்தமாருயிர்
தோற்றினானைக் கண்டுதொழற்பாலதே. (௯)

விட்டிட்டானைப் பெய்ஞ்ஞானத்து மெய்ப்பொருள்
கட்டிட்டானைக் கலங்குழைபாலன்பு
பட்டிட்டானைப் பகைத்தவர் முப்புரஞ்
சுட்டிட்டானைக் கண்டுதொழற்பாலதே. (௧0)

முற்றினானை யிராவணனீண்முடி
ஒற்றினானை யொருவிரலாலுறப்
பற்றினானை யோர்வெண்டலைப்பாம்பரைச்
சுற்றினானைக் கண்டுதொழற்பாலதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

இலிங்கபுராணம் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

புக்கணைந்து புரிந்தலரிட்டிலர்
நக்கணைந்து நறுமலர்கொய்திலர்
சொக்கணைந்த சுடரொளிவண்ணனை
மிக்குக்காணலுற்றாரங்கிருவரே. (௧)

அலருநீருங்கொண்டாட்டித் தெளிந்திலர்
திலகமண்டலந்தீட்டித் திரிந்திலர்
உலகமூர்த்தியொளிநிறவண்ணனைச்
செலவுகாணலுற்றாரங்கிருவரே. (௨)

ஆப்பிநீரோடலகுகைக்கொண்டிலர்
பூப்பெய்கூடைபுனைந்து சுமந்திலர்
காப்புக்கொள்ளிகபாலிதன் வேடத்தை
ஒப்பிக்காணலுற்றாரங்கிருவரே. (௩)

நெய்யும்பாலுங்கொண்டாட்டிநினைந்திலா
பொய்யும்பொக்கமும்போக்கிப்புகழ்ந்திலர்
ஐயன்வெய்யவழனிறவண்ணனை
மெய்யைக்காணலுற்றாரங்கிருவரே. (௪)

எருக்கங்கண்ணிகொண்டிண்டைபுனைந்திலா
பெருக்கக்கோவணம்பீறியுடுத்திலா
தருக்கினாற்சென்றுதாழ்சடையண்ணலை
நெருக்கிக்காணலுற்றாரங்கிருவரே. (௫)

மரங்களேறிமலாபறித்திட்டிலா
நிரம்பநீர்சுமந்தாட்டிநினைந்திலா
உரம்பொருந்தியொளிநிறவண்ணனை
நிரம்பக்காணலுற்றாரங்கிருவரே. (௬)

கட்டுவாங்கங்கபாலங்கைக்கொண்டிலா
அட்டமாங்கங்கிடந்தடிவீழ்ந்திலா
சிட்டன்சேவடிசென்றெய்திக்காணிய
பட்டங்கட்டமுற்றாரங்கிருவரே. (௭)

வெந்தநீறுவிளங்கவணிந்திலா
கந்தமாமலரிண்டைபுனைந்திலா
எந்தையேறுகந்தேறெரிவண்ணனை
அந்தங்காணலுற்றாரங்கிருவரோ. (௮)

இளவெழுந்தவிருங்குவளைம்மலர்
பிளவுசெய்துபிணைத்தடியிட்டிலா
களவுசெய்தொழிற்காமனைக்காய்ந்தவன்
அளவுகாணலுற்றாரங்கிருவரே. (௯)

கண்டிபூண்டுகபாலங்கைக்கொண்டிலா
விண்டவான்சங்கம்விம்மவாய்வைத்திலா
அண்டமூர்த்தியழனிறவண்ணனைக்
கெண்டிக்காணலுற்றாரங்கிருவரோ. (௧௦)

செங்கணானும்பிரமனுந்தம்முளே
எங்குந்தேடித்திரிந்தவாகாண்கிலா
இங்குற்றேனென்றிலிங்கத்தேதோன்றினான்
பொங்குசெஞ்சடைப்புண்ணியமூர்த்தியே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பனத்தோகை - திருக்குறுந்தோகை.

திருச்சிற்றம்பலம்.

பொன்னுள்ளத்திரள்புன்சடையின்புறம்
மின்னுள்ளத்திரள்வெண்பிறையாயிறை
நின்னுள்ளத்தருள்கொண்டிருணீங்குதல
என்னுள்ளத்துளதெந்தைபிரானிரே. (௧)

முக்கணும்முடையாய்முனிகள்பலா
தொக்கெணுங்கழலாயொருதோலினே

டக்கணம்மரையாயருளேயலா
தெக்கணும்மிலதெநதைபிரானிரே. (௨)

பனியாரவெஙகதிர்பாயபடர்புனசடை
முனியாயநீயுலகம்முழுதாளினும
தனியாய்நீசரணீசலமேபெரி
தினியாய்நீயெனக்கெநதைபிரானிரே. (௩)

மறையுமபாடுதிரமாதவாமாலினுக
குறையுமாயினைகோளரவோடொரு
பிறையுருசூடினையென்பதலாறபிரி
திறையுஞ்சொலலிலெயெநதைபிரானிரே. (௪)

பூததாரகொன்றையினுய்புலியின்னதள
ஆததாயாடரவோடனலாடிய
கூததாநின்குரையாாகழலேயல
தேததாநாவெனக்கெநதைபிரானிரே. (௫)

மைம்மாலும்மரவாபரமாபசு
மைம்மாலகணணியோடேறுமைநதாவெனும்
அம்மாலல்லதுமறறடிநாயினேற
கெம்மாலுமமிலனெநதைபிரானிரே. (௬)

வெபபத்தினமனமாசுவிளக்கிய
செபபத்தாறசிவனெனபவாதீவினை
ஒபபதீாததிடமொணகழலாறகல்ல
தெபபறறுமமிலனெநதைபிரானிரே. (௭)

திகழுஞ்சூழசுடர்வானெடுவைகலும்
நிகழுமொண்பொருளாயினநீதியென்
புகழுமாறுமலானுனபொன்னடி
இகழுமாறிலேனெநதைபிரானிரே. (௮)

கைபபறறிததிருமாலபிரமன்னுனை
எய்பபறறியறிதற்கரியாயருள்
அபபறறலலதுமறறடிநாயினேன
எபபறறுமமிலனெநதைபிரானிரே. (௯)

எநதையெம்பிரானென்றவாமேன்மனம
எநதையெமபிரானென்றிறைஞ்சித்தொழு
தெநதையெமபிரானென்றடியேதுவாா
எநதையெமபிரானென்றடிசேர்வரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

சித்தத்தொகை - திருக்குறுந்தொகை.

திருச்சிறறம்பலம்.

சிநதிப்பார்மனத்தான்சிவனசெஞ்சுடர்
அநதிவானிறத்தானணியார்மதி
முநதிச்சூடியமுக்கண்ணினுனடி
வந்திப்பாரவர்வானுலகாள்வரே. (௧)

அண்டமாரிருளூடுகடந்தும்பர்
உண்டுபோலுமோரொண்சுடரச்சுடர்
கண்டிங்காரறிவாரறிவாரெலாம்
வெண்டிங்கட்கண்ணிவேதியனென்பரே. (௨)

ஆதியாயவனாருமிலாதவன்
போதுசேர்புனைநீண்முடிப்புண்ணியன்
பாதிபெண்ணுருவாகிப்பரஞ்சுடர்ச்
சோதியுட்சோதியாய்நின்றசோதியே. (௩)

இட்டதிட்டதோரேறுகந்தேறியூர்
பட்டிதுட்டங்கனாய்ப்பலிதேர்வதோர்
கட்டவாழ்க்கையனாகிலுமவானவர்
அட்டமூர்த்தியருளென்றடைவரே (௪)

ஈறிலாக்கூறையனாகியெரிந்தவெண்
ணீறுபூசியிலாமதிசூடிலும்
வீறிலாதனசெய்யினும்விண்ணவர்
ஊறலாலருளாயென்றுரைப்பரே (௫)

உச்சிவெண்மதிசூடிலுமூனறப்
பசைவெண்டலையேந்திப்பலியேம
பிச்சையேபுகுமாகிலும்வானவர்
அச்சந்தீர்த்தருளாயென்றடைவரே (௬)

ஊரிலாயென்றொன்றாகவுரைப்பதோர்
பேரிலாயபிறைசூடியபிஞ்ஞகா
காருலாங்கண்டனேயுன்கழலடி
சேர்விலாதவர்க்குத்தீயவைதீயவே (௭)

எந்தையேயெம்பிரானேயெனவுள்கிச்
சிந்திப்பாரவர்தீவினைதீருமால்
வெந்தநீறுமெய்ப்பூசியவேதியன்
அந்தமாவளப்பாரண்டத்தார்களே. (௮)

ஏனவெண்மருப்போடென்புபூண்டெழில்
ஆனையீருரிபோர்த்தனலாடிலும்
தானவண்ணத்தனாகிலுந்தன்னையே
வானநாடர்வணங்குவர்வைகலே. (௯)

ஐயனந்தணனொடுபெண்ணுமாய்
வெய்யன்மேதகுவெண்பொடிபூசிய
மைகொள்கண்டத்தனமான்மறிக்கையினை
பைகொள்பாம்பணையார்த்தபரமனே. (௧௦)

ஒருவனாகிநின்றானிவ்வுலகெலாம்
இருவராகிநின்றார்கட்கறிகிலான்
அருவராவரையார்த்தவனார்கழல்
பரவுவாரவர்பாவம்பறையுமே. (௧௧)

ஓதவண்ணனுமொண்மலர்ச்செல்வனும்
நாதனேயருளாயென்றுநாடொறும்
காதல்செய்துகருதப்படுமவர்
பாதமேத்தப்பறையுநம்பாவமே (௧௨)

ஔவதன்மையவரவராக்கையான்
வெவ்வதன்மையனென்பதொழிமினோ
பவ்வநீண்மலர்மேலுறைவானொடு
பவ்வவண்ணனுமாய்ப்பணிவார்களே. (௧௩)

அக்குமாமையும்பூண்டனலேந்தியில
புக்குப்பல்வலிதேரும்புராணனை
நக்குநீர்கணரகம்புகேன்மினோ
தொக்கவானவராற்றொழுவானையே (௧௪)

கங்கைதங்கியசெஞ்சடைமேலிளந்
திங்கள்சூடியநிறவண்ணனார்
இங்கணுமெழில்வானமவணங்கவே
அங்கணுறைகதுவாலவன்றன்மையே. (௧௫)

நகரவெல்கொடியானொடுநன்னெஞ்சே.
நுகரநீயுனைக்கொண்டுய்ப்போகக்குறின்
மகரவெல்கொடிமைந்தனைக்காய்ந்தவன்
புகரில்சேவடியேபுகலாகுமே. (௧௬)

சரணமாம்படியார்பிறரியாவரோ
கரணந்தீர்த்துயிர்கையிலிகழ்ந்தபின்
மரணமெய்தியபின்னவைநீக்குவான்
அரணமூவெயிலெய்தவனல்லனே. (௧௭)

ஞமனென்பானரகர்க்குநமக்கெலாம்
சிவனென்பான்செழுமானமறிக்கையினான்
கவனஞ்செய்யுங்கனவிடையூர்தியான்
தமனென்றாலுங்கெடுந்தடுமாற்றமே. (௧௮)

இடபமேறியுமில்பலியேற்பவர்
அடவிகாதலித்தாடுவர்நந்தலைப்
படலம்பாம்பரையார்த்தபரமனைக்
கடவிராய்ச்சென்றுகைதொழுதுய்ம்மினே. (௧௯)

இணர்ந்துகொன்றைபொற்றாதுசொரிந்திடும்
புணர்ந்தவாளரவம்மதியோடுடன்
அணைந்தவஞ்சடையானவன்பாதமே
உணர்ந்தவுள்ளத்தவருணர்வார்களே. (௨௦)

தருமந்தான்றவந்தான்றவத்தாலவரும்
கருமந்தான்கருமான்மறிக்கையினான்
அருமந்தன்னவதிர்கழல்சேர்மினோ
சிரமஞ்சேரழற்றீவினையாளரே. (௨௧)

நமச்சிவாயவென்பாருளரேலவர்
தமச்சநீங்கத்தவநெறிசார்தலால்
அமைத்துக்கொண்டதோர்வாழ்க்கையனாகிலும்
இமைத்துநிற்பதுசாலவரியதே. (௨௨)

பற்பலகாலம்பயிற்றிப்பரமனைச்
சொற்பல்காலநின்றேத்துமின்றொல்வினை
வெற்பிறன்றோன்றியவெங்கதிர்கண்டவப்
புற்பனிக்கெடுமாறதுபோலுமே. (௨௩)

மணிசெய்கண்டத்துமான்மறிக்கையினன்
கணிசெய்வேடத்தராயவர்காப்பினால்
பணிகடாஞ்செயவல்லவர்யாவர்தம்
பிணிசெயாக்கையைநீக்குவர்பேயரே. (௨௪)

இயக்கர்கின்னரரிந்திரன்றானவர்
நயக்கநின்றவனான்முகனாழியான்
மயக்கமெய்தவன்மாலெரியாயினன்
வியக்குந்தன்மையினனெம்விகிர்தனே. (௨௫)

அரவமார்த்தனலாடியவண்ணலைப்
பரவுவாரவர்பாவப்பறைதறக்
குரவைகோத்தவனுங்குளிர்போதின்மேல்
கரவினான்முகனுங்கரியல்லரே. (௨௬)

அழலங்கையினனந்தரத்தோங்கினன்
றுழலுமூவெயிலொள்ளழலூட்டினன்
தழலுந்தாமரையானொடுதாவினன்
கழலுஞ்சென்னியுங்காண்டற்கரியனே. (௨௭)

இளமைகைவிட்டகறலுமூப்பினால்
வளமைபோய்ப்பிணியோடுவருதலால்
உளமெலாமொளியாய்மதியாயினன்
கிளமைபேகிளையாகநினைப்பனே. (௨௮)

தன்னிற்றன்னையறியுந்தலைமகன்
தன்னிற்றன்னையறியிற்றலைப்படும்
தன்னிற்றன்னையறிவிலனாயிடின்
தன்னிற்றன்னையுஞ்சார்தற்கரியனே. (௨௯)

இலங்கைமன்னனையீரைந்துபத்துமன்
றலங்கணோடுடனேசெலவூன்றிய
நலங்கொள்சேவடிநாடொறுநாடொறும்
வலங்கொண்டேத்துவார்வானுலகாள்வரே. (௩௦)

திருச்சிற்றம்பலம்

## உள்ளத் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

நீறலைத்ததோர்மேனிநிமிர்சடை
ஆறலைக்கநின்றுடுமெழுதினைத்
தேறலைத்தெளிவைத்தெளிவாயத்ததோர்
ஊறலைக்கண்டுகொண்டதெனுள்ளமே. (க)

பொந்தையைப்புக்குநீக்கப்புகுந்திடும்
தந்தையைத்தழல்போலவதோர்மேனியைச்
சிந்தையைத்தெளிவைத்தெளிவாய்த்ததோர்
எந்தையைக்கண்டுகொண்டதெனுள்ளமே. (உ)

வெள்ளத்தாவிருசையார்கள்விரும்பவே
வெள்ளத்தைச்சடைவைத்தவிகிர்தனை
கள்ளத்தைக்கழியம்மனமொன்றினின்
றுள்ளத்திலொளியைக்கண்டதுள்ளமே. (ங)

அம்மானையமுதின்னமுதேயென்று
தம்மானைத்தத்துவத்தடியார்தொழும்
செம்மானநிறம்போல்வதோர்சிந்தையுள்
அம்மானைக்கண்டுகொண்டதெனுள்ளமே. (ச)

கூறேறுமுமைபாகமோர்பாலராய்
ஆறேறுஞ்சடைமேற்பிறைசூடுவா
பாறேறுந்தலையேந்திப்பலவிலும்
ஏறேறுமெந்தையைக்கண்டதுள்ளமே. (ரு)

முன்னெஞ்சமமின்றிமூக்கராய்ச்சாகின்றார்
தந்நெஞ்சந்தமக்குத்தாமிலாதவர்
வன்னெஞ்சமமதுநீங்குதல்வல்லீரே
என்னெஞ்சிலீசனைக்கண்டதுள்ளமே. (சா)

வென்றானைப்புலனைந்துமெனநீவினை
கொன்றானைக்குணத்தாலேவணங்கிடா
நன்றாநன்மனம்வைத்திடுஞானமாம்
ஒன்றானைக்கண்டுகொண்டதெனுள்ளமே. (எ)

மருவினைமடநெஞ்சமனம்புகும்
குருவினைக்குணத்தாலேவணங்கிடும்
திருவினைச்சிந்தையுட்சிவனாய்நின்ற
உருவினைக்கண்டுகொண்டதெனுள்ளமே. (அ)

தேசனைத்திருமால்பிரமன்செயும்
பூசனைப்புணரிற்புணர்வாயதோர்
நேசனைநெஞ்சினுண்ணிறைவாய்நின்ற
ஈசனைக்கண்டுகொண்டதெனுள்ளமே. (கூ)

வெறுத்தானைம்புலனும்பிரமன்றலை
அறுத்தானையரக்கன்கயிலாயத்தைக்

தாயினுநல்லசங்கரனுக்கன்பர்
ஆயவுள்ளத்தமுதருந்தப்பெறா
பேயாபேய்முலையுண்டுயிர்போக்கிய
மாயனமாயத்துப்பட்டமனத்தரே. (கூ)

அரக்கன்வல்லரட்டாங்கொழித்தாரருள்
பெருக்கச்செய்தபிரானபெருந்தனமையை
அருத்திசெய்தறியப்பெறுகின்றிலா
கருத்திலாக்கயவக்கணத்தோாகளே. (க0)

திருச்சிற்றம்பலம்

---

## திருநாவுக்கரசுசுவாமிகளருளிச்செய்த

இரண்டாந்திருமுறை - முற்றிற்று.

சிவமயம்.

# மூன்றாந்திருமுறையின்

## பதிக அட்டவணை.



உ

சிவமயம.

திருநாவுக்கரசுசுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்.

## மூன்றாந்திருமுறை.

### கோயில் - பெரியதிருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

அரியானை யந்தணர்தஞ்சிந்தையானை யருமறையினகத்தானை யணுவையார்க்கும், தெரியாததத்துவனைத் தேனைப்பாலைத் திகழொளியைத்தேவர்கடங் கோனைமற்றைக், கரியானை நான்முகனைக் கனலைக்காற்றைக் கனைகடலைக் குலவரையைக் கலந்துநின்ற, பெரியானைப் பெரும்பற்றப் புலியூரானைப் பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. (௧)

கற்றானைக்கங்கைவாசடையான்றன்னைக்காவிரிசூழ்வலஞ்சுழியுங்கருதினானை, அற்றானையலந்தார்க்கருள்செய்வானை யாரூரும்புகுவானை யறிந்தாமன்றே, மற்றொருவன்றன்னொப்பாரில்லாதானை வானவர்களெப்பொழுது வணங்கியேத்தும், பெற்றானைப்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. (௨)

கருமானினுரியதளேயுடையாவீக்கிக் கனைகழல்கள்கலந்தொலிப்பவனல்கையேந்தி, வருமானத்திரடோள்கள்மட்டித்தாட வளர்மதியஞ்சடைக்கணிந்துமானோக்கி, அருமானவாண்முகத்தாளமர்ந்துகாண வமரர்கணமுடிவணங்கவாடுகின்ற, பெருமானைப்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. (௩)

அருந்தவர்கடொழுதேத்துமப்பன்றன்னை யமரர்கடம்பெருமானையரனைமூவா, மருந்தமரர்க்கருள்புரிந்தமைந்தன்றன்னை மறிகடலுங்குலவரையுமண்ணும்விண்ணும், திருந்தொளியதாரகையுந்திசைகளெட்டுந்திரிசுடர்களோரிரண்டும்பிறவுமாய, பெருந்தகையைப்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. (௪)

அருந்துணையையடியார்தமல்லறீர்க்குமருமருந்தையகன்ஞாலத்தகத்துட்டோன்றி, வருந்துணையுஞ்சுற்றமும்பற்றும்விட்டு வான்புலன்களகத்தடக்கிமடவாரோடும், பொருந்தணைமேல்வரும்பயனைப்போகமாற்றிப்பொதுநீக்கித் தனைநினையவல்லோர்க்கென்றும், பெருந்துணையைப்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. (௫)

கரும்பமருமொழிமடவாள்பங்கன்றன்னைக் கனவயிரக்குன்றனைய காட்சியானை, அரும்பமரும்பூங்கொன்றைத்தாரான்றன்னை யருமறையோடாறங்கமாயினானைச், சுரும்பமருங்கடிபொழில்கள்சூழ்தென்னாரூர்ச் சுடர்க்கொழுந்தைத்துளக்கிலாவிளக்கைமிக்க, பெரும்பயனைப்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. (௬)

வரும்பயனையெழுநரம்பினோசையானைவரைசிலையானவர்கள்முயன்றவாளி, அரும்பயஞ்செயவுணர்புரமெரியக்கோத்த வம்மானையலைகடனஞ்சயின்றான்றன்னைச், சுரும்பமருங்குழன்மடவார்கடைக்கணோக்கிற்றுளங்காதசிந்தையராய்த்துறந்தோருள்ளப்,பெரும்பயனைப்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. (எ)

காரானையீருரிவைப்போர்வையானைக் காமருபூங்கச்சியேகம்பன்றன்னை, யாரேனுமடியவர்கட்கணியான்றன்னை யமரர்களுக்கறிவரியவளவிலானைப், பாரோருமவிண்ணோருமபணியநட்டம்பயில்கின்றபரஞ்சுடரைப்பரனையெண்ணில, பேரானைப்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. (அ)

முற்றாதபானமதியஞ்சூடினானைமூவுலகுந்தானாயமுதல்வன்றன்னைச், செற்றார்களபுரமூன்றுஞ்செற்றான்றன்னைத் திகழொளியைமரகதத்தைத்தேனைப்பாலைக், குற்றாலத்தமர்ந்துறையுங்குழகன்றன்னைக்கூத்தாடவல்லானைக்கோனைஞானம்,பெற்றார்கள்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. (கூ)

காரொளியதிருமேனிச்செங்கண்மாலுங் கடிக்கமலத்திருந்தயனுங்காணாவண்ணம், சீரொளியதழற்பிழம்பாய்நின்றதொல்லைத்திகழொளியைச்சிந்தைதனைமயக்கந்தீர்க்கும், ஏரொளியையிருநிலனும்விசும்புமவிண்ணுமேழுலகுங்கடந்தண்டத்தப்பானின்ற, பேரொளியைப்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

## கோயில்புக்க - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

மங்குன்மதிதவழுமாடவீதிமயிலாப்பிலுள்ளாராமருகலுள்ளார் [ம்பூதூர்த்
கொங்கிற்கொடுமுடியார்குற்றாலத்தார்குடமூக்கிலுள்ளார்போய்க்கொள்ள
தங்குமிடமறியார்சாலநாளார்தருமபுரத்துள்ளார்தக்களூரார் [மே.
பொங்குவெண்ணீறணிந்துபூதஞ்சூழப் புலியூர்ச்சிற்றம்பலமே புக்கார்தா

நாகமரைக்கசைத்தநம்பர்நாள் நனிபள்ளியுள்ளார்போய்நல்லூர்த்தங்கிப்
பாகப்பொழுதெல்லாம்பாசூர்த்தங்கிப்பருப்பதத்தார்பணிருநாள்
வேதமுமவேள்விப்புகையுமோவா விரிநீர்மிழலையெழுநாட்டங்கிப
போகமும்பொய்யாப்பொருளுமானார்புலியூர்ச்சிற்றம்பலமேபுக்கார்தாமே.

துறங்காட்டியெல்லாம்விரித்தார்போலுந் தூமதியும்பாம்புமுடையார் போலும், மறங்காட்டிமும்மதிலுமெய்தார்போலுமந்திரமுந்தந்திரமுந்தாமேபோலும், அறங்காட்டியந்தணர்க்கன்றாலநீழலறமருளிச்செய்தவரனூரிக்கோள், புறங்காட்டெரியாடிபூதஞ்சூழப் புலியூர்ச்சிற்றம்பலமே புக்கார் தாமே. (௩)

வாரேறுவனமுலையாள்பாகமாகமழுவாள்கையேந்திமயானத்தாடிச்
சீரேறுதண்வயல்சூழோதவேலித்திருவாஞ்சியத்தார்திருநள்ளாறர் [ர்
காரேறுகண்டத்தார்காமற்காய்ந்தகண்விளங்குநெற்றியார்கடஞ்சுண்டா
போரேறுதாமேறிப்பூதஞ்சூழப்புலியூர்ச்சிற்றம்பலமேபுக்கார்தாமே. (௪)

காரார்கமழ்கொன்றைக்கண்ணிசூடிக் கபாலங்கையேந்திக்கணங்கள்பாட
[illegible]ராரிபிச்சைகொண்டுழலுமுத்தமராய்நின்றவொருவனார்தாம்

ர்கழல்வணங்குந்தேவதேவர்திருவாரூர்த்திருமூலட்டானமேயார்
ரார்விடையேறிப்பூதஞ்சூழப்புலியூர்ச்சிற்றம்பலமேபுக்கார்தாமே.

நார்குழையினர்கட்டங்கத்தார்கயிலாயமாமலையார்காரோணத்தார்
நாயர்மூதாதையில்லார்போலுமுதலுமிறுதியுந்தாமேபோலும்
நாயமாதாமகிழவன்றுமணமதவேளுடன்றுடனெரிகாய்ந்தார்நாள்
ர்தாழ்சடைதாழப்பூதஞ்சூழப்புலியூர்ச்சிற்றம்பலமேபுக்கார்தாமே (௬)

இறந்தார்க்குமென்றுமிறவாதார்க்குமிமையவர்க்குமேகமாய்நின்று
ன்று, பிறந்தார்க்குமென்றும்பிறவாதார்க்கும்பெரியான்றன்பெருமை
பேசிநின்று, மறந்தார்மனத்தென்றுமருவார்போலுமறைக்காட்டுறையு
ஒவாட்செல்வர், புறந்தாழ்சடைதாழப் பூதஞ்சூழப் புலியூர்ச்சிற்றம்பல
புக்கார்தாமே. (௭)

குலாவெண்டலைமாலையென்புபூண்டு குளிர்கொன்றைத்தாரணிந்து
ால்மேலேறிக், கலாவெண்களிற்றுரிவைபோர்வைமூடிக் கையோடன
ந்திக்காடுறைவார், நிலாவெண்மதியுரிஞ்சநீண்டமாடநிறைவயல்சூழ்கெ
ந்தானமேயசெல்வர், புலாலவெண்டலையேந்திப்பூதஞ்சூழப்புலியூர்ச்சிற்
மபலமேபுக்கார்தாமே. (௮)

சந்தித்தகோவணத்தர்வெண்ணூன்மார்பர்சங்கரனைக்கண்டீரோகண்
டாமிந்நாள், பந்தித்தவெள்விடையைப்பாயவேறிப் படுதலையிலென்கொ
லாவேந்திக்கொண்டு, வந்திங்கென்வெள்வளையுந்தாமுமெல்லாமணியாரூ
ன்றந்துகொள்ளக்கொள்ளப், பொன்றிமணிவிளக்குப்பூதம்பற்றப்புலியூ
ச்சிற்றம்பலமேபுக்கார்தாமே. (௯)

ர்தங்கணலலார்பரவியேத்திப் பத்திமையாற்பணிசெய்யுந்தொண்டர்தங்க
தங்கடீரவிருந்தார்போலுமெழிற்பாபுயாருடையவீசனார்தாம [ள்
வதங்களோதியோர்வீணையேந்திவிடையொன்றுதாமேறிவேதகீதர்
தங்கள்சூழ்ப்புலித்தோலவீக்கிப்புலியூர்ச்சிற்றம்பலமேபுக்கார்தாமே.

பட்டுடுத்துத்தோல்போர்த்துப்பாம்பொன்றார்த்துப் பகலனார்பாரிட
கள்சூழநட்டநு, சிட்டாய்த்தீயேந்திச்செல்வார்தம்மைத் தில்லைச்சிற்ற
பலத்தேகண்டோமிந்நாள், விட்டிலங்குசூலமேவெண்ணூலுண்டேயோ
வேதமுமவேதமேவீணையுண்டே, கட்டங்கங்கையதேசென்றுகாணீர்கறை
சாமிடற்றெங்கபாலியார்க்கே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருவதிகைவீரட்டானம் - ஏழைத்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

வெறிவிரவுகூவிளநற்றொங்கலானைவீரட்டத்தானைவெள்ளேற்றானைப்
பொறியரவினானைப்புள்ளூர்தியானைப்பொன்னிறத்தினானைப்புகழ்தக்கானை
அறிதற்கரியசீர்மாலன்றனையதியரையமங்கையமர்ந்தான்றன்னை
றிகெடிலத்தானையிறைவன்றன்னையேழையேனான்பண்டிகழ்ந்தவாறே.

வெள்ளிக்குன்றன்னவிடையான்றன்னை வில்வலான்வில்வட்டங்காய்ந்
தான்றன்னைப், புள்ளிவரிநாகம்பூண்டான்றன்னைப்பொன்பிதிர்ந்தன்னசடை
யான்றன்னை, வள்ளிவளைத்தோள்முதல்வன்றன்னைவாராவுலகருளவல்லா
ன்றன்னை, எள்கவிடுபிச்சையேற்பான்றன்னையேழையேன்பண்டிகழ்ந்
தவாறே. (௨)

முந்துயுலகம்படைத்தான்றன்னைமூவாமுதலாயமூர்த்திதன்னைச், சந்தவெண்டிங்களணிந்தான்றன்னைத் தவநெறிகள் சாதிக்கவல்லான்றன்னைச், சிந்தையிற்றீவினையடர்த்தேனைப்பாலைச் செழுங்கோயில வீரட்டமேவினானை, எந்தைபெருமானையீசன்றன்னையேழையேனான்பண்டிகழ்ந்தவாறே.

மந்திரமுமறைப்பொருளுமானான்றன்னை மதியமுஞாயிறுங்காற்றுந்தீயும், அந்தரமுமலைகடலுமானான்றன்னை யதியரையமங்கையமர்ந்தான்றன்னைக், கந்தருவஞ்செய்திருவர்கழலைக்கூப்பிக்கடிமலர்கள்பலதூவிக்காலைமாலை, இந்திரனும்வானவருந்தொழச்செல்வானையேழையேனான்பண்டிகழ்ந்தவாறே. (௪)

ஒருபிறப்பிலானடியையுணர்ந்துங் காணாருயாகதிக்குவழிதேடிப்போகமாட்டார், வரும்பிறப்பொன்றுணராதுமாசுபூசிவழிகாணாதவர்போல்வார் மனத்தனாகி, அரும்பிறப்பைப்பறிக்குமதிகையூரானம்மானமணியிணையடியையணைந்துவாழா, திருபிறப்புமவெறுவியராயிருந்தார்சொற்கேட்டேழையேனான் பண்டிகழ்ந்தவாறே. (௫)

ஆறேற்கவல்லசடையான்றன்னை யஞ்சனம்போலுமிடற்றான்றன்னைக், கூறேற்கக்கூறமரவல்லான்றன்னைக்கோல்வளைக்கைமாதராள்பாகன்றன்னை, நீறேற்கப்பூசுமகலத்தானை நின்மலன்றன்னைநிமலன்றன்னை, ஏறேற்கவேறுமாவல்லான்றன்னையேழையேனான்பண்டிகழ்ந்தவாறே. (௬)

குண்டரக்கணாயுழன்றுகையிலுண்டுகுவிமுலையார்தம்முன்னேநாணமின்றி, உண்டியுகந்தமணேநின்றார்சொற்கேட்டுடனாகியுழிதந்தேனுணர்வொன்றின்றி, வண்டுலவுகொன்றையங்கண்ணியானைவானவர்களேத்தப்படுவான்றன்னை, எண்டிசைக்குமூர்த்தியாய்நின்றான்றன்னையேழையேனான்பண்டிகழ்ந்தவாறே. (௭)

உறிமுடித்தகுண்டிகைதங்கையிற்றூக்கி யூத்தைவாய்ச்சமணர்க்கோர்குண்டாக்கனாய்க், கறிவிராவுநெய்சோறுங்கையிலுண்டுகண்டார்க்குப்பொல்லாதகாட்சியானேன், மறிதிரைநீர்ப்பவ்வநஞ்சுண்டான்றன்னைமறித்தொருகால்வல்வினையேனினைக்கமாட்டேன், எறிகெடிலநாடர்பெருமான்றன்னையேழையேனான்பண்டிகழ்ந்தவாறே. (௮)

நிறைவார்ந்தநீர்மையாய்நின்றான்றன்னை நெற்றிமேற்கண்ணொன்றுடையான்றன்னை, மறையானைமாசொன்றிலாதான்றன்னைவானவர்மேன்மலரடியைவைத்தான்றன்னைக், கறையானைக்காதார் குழையான்றன்னைக் கட்டங்கமேந்தியகையினானை, இறையானையெந்தைபெருமான்றன்னை யேழையேனான்பண்டிகழ்ந்தவாறே. (௯)

தொல்லைவான்சூழ்வினைகள்சூழப்போந்துதூற்றியேனாற்றியே சுடராய்நின்று, வல்லையேயிடர்தீர்த்திங்கடிமைகொண்டவானவர்க்குந்தானவர்க்கும்பெருமான்றன்னைக், கொல்லைவாய்க்குருந்தொசித்துக் குழலுமூதுங் கோவலனுநான்முகனுங்கூடியெங்கும்,எல்லைகாணப்பரியானையெம்மான்றன்னையேழையேனான்பண்டிகழ்ந்தவாறே. (௧௦)

முலைமறைக்கப்பட்டுநீராடப்பெண்கள்முறைமுறையானந்தெய்வமென்றுதீண்டித், தலைபறிக்குந்தன்மையர்களாகிநின்றுதவமென்றவஞ்செய்து தக்கதோரார், மலைமறிக்கச்சென்றவிலங்கைக்கோனை மதனழியச்செற்றசேவடியினானை, இலைமறித்தகொன்றையந்தாரான்றன்னையேழையேனான்பண்டிகழ்ந்தவாறே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருவதிகைவீரட்டானம் - அடையாளத்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

சந்திரனைமாகங்கைத்திரையான்மோதச்சடாமகுடத்திருத்துமேசாமவேதக்
கந்தருவம்விரும்புமேகபாலமேந்துகையனேமெய்யனேகனகமேனிப்
பந்தணவுமெல்விரலாள்பாகனாமேபசுவேறுமேபரமயோகியாமே
ஐந்தலையமாசுணங்கொண்டாடுமேயவனாகிலதிகைவீரட்டனாமே.

ஏறேறியேழுலகுமுழிதர்வானையிமையவர்கடொழுதேத்தவிருக்கின்றானை, பாறேறுபடுதலையிற்பலிகொள்வானைப்படவரவங்கட்டார்பிறப்பிலவிசுதானை, நீறேறுசெம்பவளக்குன்றொப்பானைநெற்றிமேலொற்றைக்கண்ணிறைவித்தானை, ஆறேறுசடைமுடிமேற்பிறைவைத்தானையவனாகிலதிகைவீரட்டனாமே. (௨)

முண்டத்திற்பொலிந்திலங்குமேனியானைமுதலாகிநடுவாகிமுடிவானானை, கண்டத்தில்வெண்மருப்பின்காறையானைக்கதநாகங்கொண்டாடுங்காட்சியானை, பிண்டத்தினியற்கைக்கோர்பெற்றியானைப்பெருநிலநீர்தீவெளியாகாசமாகி, அண்டத்துக்கப்பாலாயிப்பாலானையவனாகிலதிகைவீரட்டனாமே

செய்யனேகரியனேகண்டமைப்பான்கண்வெள்ளெயிற்றாடரவனேவினைகள்போக, வெய்யனேதண்கொன்றைமிலைத்தசென்னிச்சடையனேவிளங்குமழுச்சூலமேந்துங், கையனேகாலங்கள்மூன்றானேகருப்புவிற்றனிக்கொடும்பூண்காமற்காய்ந்த, ஐயனேபருத்துயர்ந்தவானேற்றானேயவனாகிலதிகைவீரட்டனாமே. (௪)

பாடுமேயொழியாமேநால்வேதமும்படர்சடைமேலொளிதிகழப்பனிவெண்டிங்கள், சூடுமேயரைதிகழத்தோலுடைபுஞ்சுற்றுமேதண்ணடைவாயுமையோர்பாகங், கூடுமேகுடமுழவம்வீணைதாளங்குறுநடையசிறுபூதமுழக்கமாக்கூத், தாடுமேயந்தகனைக்கயனைவேலேந்துமேயவனாகிலதிகைவீரட்டனாமே. (௫)

ஒழித்திடுமேயுள்குவாருள்ளத்துள்ளவுறுபிணியுஞ்செறுபகையுமொற்றைக்கண்ணால், விழித்திடுமேகாமனையும்பொடியாய்வீழவெள்ளப்புனற்கங்கைசெஞ்சடைமேல், இழித்திடுமேயேழுலகுந்தாங்குமேயியங்குந்திரிபுரங்களோரம்பினால், அழித்திடுமேயாதிமாதவத்துளானேயவனாகிலதிகைவீரட்டனாமே. (௬)

தழலோடுகொக்கரைக்கைத்தாளமொத்தக்குறட்பூதமுன்பாடத்தானாடுமே
கழலாடுதிருவிரலாற்காலனைச்செய்துநனவினகட்டிருவுநவந்தானங்காட்டுமே
எழிலாருந்தோள்வீசிநடமாடுமேயிமப்புறங்காட்டிலேமந்தோறும்
அழலாடுமேயட்டமூர்த்தியாமேயவனாகிலதிகைவீரட்டனாமே. (௭)

மாலாகிமதமிக்ககளிறுதன்னைவதைசெய்துமற்றதனினுரிவைகொண்டு, மேலாலுங்கீழாலுந் தோன்றாவண்ணம் வெம்புலாலைக்கலக்க மெய்ப்போர்த்தானே, கோலாலம்படவரைநட்டரவுசுற்றிக்குரைகடலைத்திரையலமக்கடைந்து கொண்ட, ஆலாலமுண்டிருண்டகண்டத்தானேயவனாகிலதிகைவீரட்டனாமே. (௮)

செம்பொனாற்செய்தழகுபெய்தாற்போலுஞ்செஞ்சடையெம்பெருமானேதெய்வநாறும, வம்பினுமலர்க்கூந்தலுமையாள்காதன்மணவாளனேவங்கைமழுவாளனே,நம்பனேநான்மறைகடொழநின்றானேநடுங்காதார்புரமூன்றுநடுங்கச்செற்ற, அம்பனேயண்டகோசத்துளானேயவனாகிலதிகைவீரட்டனாமே. (௯)

எழுந்ததிரை நதித்துவலைநனைந்ததிங்களிளநிலாத்திகழ்கின்ற வளர்சடையனே, கொழும்பவளச்செங்கனிவாய்க்காமக்கோட்டி கொங்கையிணையமர்பொருதுகோலங்கொண்ட,தழும்புளவேவரைமார்பில்வெண்ணூலுண்டேசாந்தமொடுசந்தனத்தினளறுதங்கி, அழுந்தியசெந்திருவுருவில் வெண்ணீற்றானேயவனதிகைவீரட்டனாமே. (௧௦)

நெடியானுநான்முகனுநேடிக்காணாநீண்டானேநேரொருவரில்லாதானே
கொடியேறுகோலமாமணிகண்டனேகொலவேங்கையதளனேகோவணனே
பொடியேறுமேனியனேயையமவேண்டிப்புவலோகந்திரியுமேபுரிநூலனே
அடியாரையமருலகமாள்விக்குமமேயவனதிகைவீரட்டனாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவதிகைவீரட்டானம் - போற்றித்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

எல்லாஞ்சிவனென்னநின்றாய்போற்றி யெரிசுடராய்நின்றவிறைவா போற்றி, கொல்லார்மழுவாட்படையாய்போற்றிகொல்லுங்கூற்றொன்றையுதைத்தாய்போற்றி,கல்லாதார்காட்சிக்கரியாய்போற்றிகற்றாரிடும்பைகளைவாய்போற்றி, வில்லால்வியனரணமெய்தாய்போற்றி வீரட்டங்காதல்விமலாபோற்றி. (௧)

பாட்டுக்குமாட்டுக்கும்பண்பாபோற்றி பல்லூழியாய படைத்தாய் போற்றி, ஓட்டகத்தேயூணுகந்தாய்போற்றியுள்குவாருள்ளத்துறைவாய் போற்றி, காட்டகத்தேயாடல்மகிழ்ந்தாய்போற்றிகாமேகமன்னமிடற்றாய் போற்றி, ஆட்டுவதோர்நாகமசைத்தாய்போற்றியலைகெடிலவீரட்டத்தாள் வாய்போற்றி. (௨)

முல்லையங்கண்ணிமுடியாய்போற்றிமுழுநீறுபூசியமூர்த்திபோற்றி, எல்லைநிறைந்தகுணத்தாய்போற்றி யேழ்நரம்பினோசைபடைத்தாய்போற்றி, சில்லைச்சிரைத்தலையிலூணாய்போற்றி சென்றடைந்தார் தீவினைகடீர்ப்பாய் போற்றி, தில்லைச்சிற்றம்பலமேயாய்போற்றி திருவீரட்டானத்தெஞ்செல்வாபோற்றி. (௩)

சாம்பலகலத்தணிந்தாய்போற்றிதவநெறிகள்சாதித்துநின்றாய்போற்றி, கூம்பித்தொழுவார்தங்குற்றேவலைக்குறிக்கொண்டிருக்குங்குழகாபோற்றி,பாம்புமதியும்புனலுந்தம்மிற்பகைதீர்த்துடன்வைத்தபண்பாபோற்றி, ஆம்பன்மலர் கொண்டணிந்தாய்போற்றி யலைகெடிலவீரட்டத் தாளவாய் போற்றி. (௪)

நீறேறுநீலமிடற்றாய்போற்றிநிழறிகழும்வெண்மழுவாள்வைத்தாய்போற்றி, கூறேறுமையொருபாற்கொண்டாய்போற்றிகோளரவமாட்டுங்குழகாபோற்றி, ஆறேறுசென்னியுடையாய்போற்றியடியவர்கட்காரமுதமானாய் போற்றி, ஏறேறவென்றுமுகப்பாய்போற்றியிருங்கெடில வீரட்டத்தெந்தாய்போற்றி. (௫)

பாடுவார்பாடலுகப்பாய்போற்றிபழையாற்றுப்பட்டீச்சுரத்தாய்போற்றி
வீடுவார்வீடருளவல்லாய்போற்றிவேழத்துரிவெருவப்போர்த்தாய்போற்றி
நாடுவார்நாடற்கரியாய்போற்றிநாகமரைக்கசைத்தநம்பாபோற்றி
ஆடுமானேந்துமுகப்பாய்போற்றியலைகெடிலவீரட்டத்தாள்வாய்போற்றி. ()

மண்டுளங்கவாடல்மகிழ்ந்தாய்போற்றிமால்கடலுமால்விசும்புமானாய்
'பாற்றி, விண்டுளங்கமும்மதிலுமெய்தாய்போற்றிவேழத்துரிமூடுமவிகிர்
ாபோற்றி, பண்டுளங்கப்பாடல்பயின்றாய்போற்றிபாரமுழுதுமாயபரமா
'பாற்றி, கண்டுளங்கக்காமனைமுனகாய்ந்தாய்போற்றிகாக்கெடிலங்கொ
ண்டகபாலிபோற்றி. (எ)

வெஞ்சினவெள்ளேற்றூர்தியுடையாய்போற்றிவிரிசடைமேல் வெள்ளமப
டைத்தாய்போற்றி, துஞ்சாப்பலிதேருந்தோன்றாய்போற்றி தொழுதகை
ன்பந்துடைப்பாய்போற்றி,நஞ்சொடுங்குங்கண்டத்துநாதாபோற்றிநான்
றையோடாறங்கமானாய்போற்றி, அஞ்சொலாள்பாகமமர்ந்தாய்போற்றிய
லகெடிலவீரட்டத்தாள்வாய்போற்றி. (அ)

சிந்தையாய்நின்றசிவனேபோற்றிசீபாப்பதஞ்சிந்தைசெய்தாய்போற்
றி, புந்தியாய்ப்புண்டரிகத்துள்ளாய்போற்றிபுண்ணியனேபோற்றிபுனிதா
'பாற்றி, சந்தியாய்நின்றசதுராபோற்றிதத்துவனேபோற்றி யென்றாதாய்
'பாற்றி, அந்தியாய்நின்றவரனேபோற்றி யலைகெடிலவீரட்டத்தாள்வாய்
'பாற்றி. (௯)

முக்கணாபோற்றிமுதல்வாபோற்றிமுருகவேடன்னைப்பயந்தாய்போ
ற்றி, தக்கணாபோற்றிதருமாபோற்றிதத்துவனேபோற்றியென்றாதாய்போ
ற்றி, தொக்கணாவென்றிருவர்தோள்கைகூப்பத்துளங்காதெரிசுடராய்நின்
றாய்போற்றி, எக்கணுங்கண்ணிலேனெந்தாய்போற்றியெறிகெடிலவீர
ட்டத்தீசாபோற்றி. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

### திருவதிகைவீரட்டானம் - திருவடித்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

அரவணையான்சிந்தித்தரற்றுமடியருமறையானசென்னிக்கணியாமடி
ரவணத்தானைகொழுதுசாருமடிசாரந்தார்கட்கெல்லாஞ்சரணாமடி
ரவுவாரபாவமறுக்குமடிபதினெண்கணங்களுமபாடுமடி
ரவுநீர்த்தெனகெடிலநாடனடிதிருவீரட்டானத்தெஞ்செல்வன்னடி. ()

கொடுவினையாரென்றுங்குறுகாவடிகுறைந்தடைந்தார்ஆழாமைக்காக்குமடி
டுமுழவெம்பாணியிற்றுமடிபடைத்தெழுந்தவெங்கூற்றைப்பாய்ந்தவடி
டுமூரணேறாந்தானகழற்சேவடிகடல்வையங்காப்பானகருதுமடி
கடுமதியங்கண்ணியணிந்தானடிநிறைகெடிலவீரட்டநீங்காவடி. (௨)

வதெழுவாரகாமம்பொய்போகாவடிவஞ்சவலைப்பாடொன்றிலலாவடி
கதொழுதுநாமேத்திக்காணுமடிகணக்குவழக்கைக்கடந்தவடி
நய்தொழுதநாமேத்தியாட்டுமடிநீள்விசும்பையூடறுத்துநின்றவடி
தய்வப்புனறகெடிலநாடன்னடிதிருவீரட்டானத்தெஞ்செல்வனனடி. (௩)

அரும்பித்தசெஞ்ஞாயிறேய்க்குமடியழகெழுதலாகாவருட்சேவடி
ருமபித்தவண்டினங்கள்சூழ்ந்தவடிசோமனையுங்காலனையுங்காய்ந்தவடி
பருமபித்தர்கூடிப்பிதற்றுமடிபிழைத்தார்பிழைப்பறியவல்லவடி
திருந்துநீர்த்தெனகெடிலநாடன்னடிதிருவீரட்டானத்தெஞ்செல்வன்னடி.

ருகாலத்தொன்றாகிநின்றவடியூழிதோறூழியுயர்ந்தவடி
பொருகழலும்பல்சிலம்பும்மார்க்குமடிபுகழ்வார்புகழ்தகையவல்லவடி
இருநிலத்தோரின்புற்றங்கேத்துமடியின்புற்றாரிட்டபூவேறுமடி
திருவதிகைத்தென்கெடிலநாடன்னடிதிருவீரட்டானத்தெஞ்செல்வன்னடி.

திருமகட்குச்செந்தாமரையாமடிசிறந்தவர்க்குத்தேனாய்விளைக்குமடி [டி
பொருளாவார்க்குப்பொன்னுரையாய்நின்றவடிபுகழ்வார்புகழ்தகையவல்லவ
உருவிரண்டுமொன்றோடொன்றொவ்வாவடியுருவென்றுணரப்படாதவடி
திருவதிகைத்தென்கெடிலநாடனடிதிருவீரட்டானத்தெஞ்செல்வனடி.

உரைமாலையெல்லாமுடையவடியுரையாலுணரப்படாதவடி
வரைமாதைவாடாமைவைக்குமடிவானவர்கடாமவணங்கிவாழ்த்துமடி
அரைமாத்திரையிலடங்குமடியகலமளக்கிற்பாரில்லாவடி
கரைமாங்கலிக்கெடிலநாடனடிகமழ்வீரட்டானக்கபாலியடி. (எ)

நறுமலராய்நாறுமலர்ச்சேவடிநடுவாயுலகநாடாயவடி
செறிகதிருந்திங்களுமாய்நின்றவடிதீத்திரளாயுள்ளேதிகழ்ந்தவடி
மறுமதியைமாசுகழுவுமடிமந்திரமுந்தந்திரமுமாயவடி
எறிகெடிலநாடர்பெருமானடிதிருவீரட்டானத்தெஞ்செல்வனடி. (அ)

அணியனவுஞ்சேயனவுமல்லாவடியடியார்கட்காரமுதமானவடி
பணியவார்க்குப்பாங்காகவல்லவடிபற்றற்றார்பற்றும்பவளவடி
மணியடிபொன்னடிமாண்பாமடிமருந்தாய்ப்பிணிதீர்க்கவல்லவடி
தணியாத்துணைக்கெடிலநாடனடிதகைசால்வீரட்டத்தலைவனடி. (௯)

அந்தாமரைப்போதலர்ந்தவடியரக்கனையுமாற்றலழித்தவடி
முந்தாகிமுன்னேமுளைத்தவடிமுழங்கழலாய்நீண்டவெம்மூர்த்தியடி
பந்தாடுமெல்விரலாள்பாகனடிபவளத்தடவரையேபோல்வானடி
வெந்தார்சுடலைநீறாடுமடிவீரட்டங்காதல்விமலனடி. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவதிகைவீரட்டானம் - காப்புத்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

செல்வப்புனற்கெடிலவீரட்டமுஞ்சிற்றேமமும்பெருந்தண்குற்றாலமும்
தில்லைச்சிற்றம்பலமுந்தென்கூடலுந்தென்னானைக்காவுஞ்சிராப்பள்ளியும்
நல்லூருந்தேவன்குடிமருகலுநல்லவர்கடாமேத்துநாரையூரும்
கல்லலகுநெடும்புருவக்கபாலமேந்திக்கட்டங்கத்தோடுறைவார்காப்புக்களே

தீர்த்தப்புனற்கெடிலவீரட்டமுந்திருக்கோவல்வீரட்டம் வெண்ணெய்ந
ல்லூர், ஆர்த்தருவிவீழ்சுனைநீரண்ணாமலையறையணிநல்லூருமரநெறியும்,
ஏத்துமிமையோர்கணேத்தநின்றவீசரிடைமருதினம்பரேகம்பமும், காத்தயங்
குசோலைக்கயிலாயமுங்கண்ணுதலான்றனுடையகாப்புக்களே. (௨)

சிறைபார்புனற்கெடிலவீரட்டமுந்திருப்பாதிரிப்புலியூர்திருவாமாத்தூர்,
துறையார்வனமுனிகளேத்தநின்றசோற்றுத்துறைதுருத்திநெய்த்தான
மும்,அறையார்புனலொழுகுகாவிரிசூழையாற்றமுதன்பழனநல்ல [க்களே.
கறையார்பொழில்புடைசூழ்கானப்பேருங்கழுக்குன்றுந்தம்முடையகாப்பு

திரையார்புனற்கெடிலவீரட்டமுந்திருவாரூர்தேவூர்திருநெல்லிக்கா
உரையார்தொழநின்றவொற்றியூருமோத்தூருமாற்பேறுமாந்துறையும்
வரையாரருவிசூழ்மாநதியுமாகாளங்கேதாரமாமேருவும்
கரையார்புனலொழுகுகாவிரிசூழ்கடம்பந்துறையுறைவார்காப்புக்களே. ()

செழுநீர்ப்புனற்கெடிலவீரட்டமுந்திரிபுராந்தகந்தென்னார்தேவீச்சரம்
கொழுநீர்புடைசூழிக்கோட்டுக்காவுங்குடமூக்குக்கோகரணங் கோலக்

உண்ணவருநஞ்சமுண்டான்றானைகாணூழித்தீயன்னான்காணுகப்பார்காணப், பண்ணாரப்பல்லியம்பாடினான்காண் பயின்றநால்வேதத்தின்பண்பினான்காண், அண்ணாமலையான்காணடியார்ட்டமடியிணைகடொழுதேத்தவருளுவான்காண், கண்ணாரக்காண்பார்க்கோர்காட்சியான்காண் காளத்தியானவனென்கண்ணுளானே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருஆமாத்தூர் - திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

வண்ணங்கடாம்பாடிவந்துநின்றுவலிசெய்துவளைகவர்ந்தார்வகையானம்மைக், கண்ணம்பானின்றெய்துகழலப்பேசிக்கடியதோர்விடையேறிக்காபாலியார், சுண்ணங்கடாங்கொண்டுதுதையப்பூசித்தோலுடுத்துநூல்பூண்டுதோன்றத்தோன்ற, அண்ணலார்போகின்றார்வந்துகாணீரழகியரேயாமாத்தூரையனாரே. (க)

வெந்தார்வெண்பொடிப்பூசிவெள்ளைமாலை விரிசடைமேற்றாஞ்சூடிவீணையேந்திக், கந்தாரந்தாமுரலாப்போகாநிற்பக் கறைசேர்மணிமிடற்றீரூரேதென்றேன், நொந்தார்போல்வந்தெனதில்லேபுக்கு நுடங்கேரிடைமடவாய்நம்மூர்கேட்கின், அந்தாமமலர்மேலளிவண்டியாழ்செய்யாமாத்தூரென்றடிகள்போயினாரே. (உ)

கட்டங்கந்தாமொன்றுகையிலேந்திக்கடியவிடையேறிக்காபாலியார், இட்டங்கடாம்பேசியில்லேபுக்கு இடும்பலியுமிடக்கொள்ளார்போவாரல்லர், பட்டிமையுமாடியுமேபேசுகின்றார் பார்ப்பாரைப்பரிசழிப்பார்போல்கின்றார்தாம், அட்டியசில்பலியுங்கொள்ளார்விள்ளாரழகியரேயாமாத்தூரையனாரே. (௩)

பசைந்தபலபூதத்தார்பாடலாடற்படநாகக்கச்சையார்பிச்சைக்கென்று, இசைந்ததோரியல்பினரெரியின்மேனியிமையார்முக்கண்ணினர்நால்வேதத்தர், பிசைந்ததிருநீற்றினர்பெண்ணோர்பாகம்பிரிவறியார்பிஞ்ஞகனார்தெண்ணீர்க்கங்கை, அசைந்ததிருமுடியராங்கைத்தீயாரழகியரேயாமாத்தூரையனாரே. (௪)

உருவுடையர்கோப்பரவியோடுமியானையொன்றூனங்குறைவில்லையூர்திவெள்ளே, திருவுடையகண்டத்தார்செந்தீவண்ணரிமையவர்கடொழுதேத்துமிறைவனார்தாம், பொருவுடையாலவரிவருமவராப்புலித்தோலுடையாகப்பூதஞ்சூழ, அருவுடையவங்கோலந்தமாலைமார்பரழகியரேயாமாத்தூரையனாரே. (௫)

வீறுடையவேறேறிநீறுபூசிவெண்டோடுபெய்திடங்கைவீணையேந்திக், கூறுடையமடவாளோர்பாகங்கொண்டு குழையாடக்கொடுகொட்டிகொட்டாவந்து, பாறுடையபடுதலையோர்கையிலேந்திப்பலிகொள்வாரல்லர்படிற்றேபேசி, ஆறுடையசடைமுடியெம்மடிகள்போலு மழகியரேயாமாத்தூரையனாரே. (௬)

கையோர்கபாலத்தர்மானின்றோலர்கருத்துடையார்நிருத்தராய்க்காண்பார்முன்னே, செய்யதிருமேனிவெண்ணீற்றாடித் திகழ்புன்சடைமுடிமேற்றிங்கள்சூடி, மெய்யொருபாகத்துமையைவைத்துமேவார்திரிபுரங்கள்வேவச்செய்து, ஐயனார்போகின்றார்வந்துகாணீரழகியரேயாமாத்தூரையனாரே.

ஒன்றாலுங்குறைவில்லையூர்தி வெள்ளேறேற்றியூருமழகோ ரேயுணரக்கூறீர், நின்றுதானென்செய்வீர்போவீராகில் நெற்றிமேற்கண்காட்டிநிறையுங் கொண்டீர், என்றுதானிவ்வகையேயிடர்செய்கின்றீரிருக்குமூரினியறிந்தோ மேகம்பமோ, அன்றித்தான்போகின்றீரடிகளோமமோ டழகியரோயாமாத்தூ ரையனாரே. (அ)

கல்லலகுதாங்கொண்டுகொளத்தியார் கடியவிடையேறிக்காணக்காண இல்லமேதாம்புகுதாவிடுமின் பிச்சையென்றருகெதிரொழுந்தேனெங்குங் காணேன், சொல்லாதேபோகின்றீருமழோது துருத்திப்பழனமோநெயத் தானமோ, அல்லலேசெய்தடிகள்போகின்றீர்தா மழகியரோயாமாத்தூரை யனாரே. (கூ)

மழுங்கலாநீறுடுமார்பர்போலுமணிமிழலைமேயமணாளர்போலும், கொழுங்குவளைக்கோதைக்கிறைவர்போலுங்கொடு கொட்டிதாள முடையார் போலும், செழுங்கயிலாயத்தெஞ்செல்வர்போலுந் தென்னதிகைவீரட்டஞ் சேர்ந்தார்போலும், அழுங்கினுரையுறவுதீர்ப்பார்போலுமழகியரோயாமாத் தூரையனாரே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

### திருப்பந்தணைநல்லூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

நோதங்கமில்லாதார் நாகம்பூண்டார் நூல்பூண்டார் நான்மேலோரா மைபூண்டார், பேய்தங்குநீள்காட்டினட்டமாடிப் பிறைசூடுஞ்சடைமே லோர்புனலுஞ்சூடி, ஏர்தங்குபைங்குழலாள்பாகங்கொண்டாரனல்கொண் டாரந்திவாயவண்ணங்கொண்டார், பாதங்கணீரேற்றார்பைங்கணேற்றார்ப லியேற்றார்பந்தணைநல்லூராரே. (க)

காடலாற்கருதாதார்கடனஞ்சுண்டார் களிற்றுரிவைமெய்போர்த்தார் கலனதாக, ஓடலாற்கருதாதாரொற்றியூரார் உறுபிணியுஞ்செறுபகையுமொ ற்றைக்கண்ணால், பீடுலாந்தனைசெயவாரிடவமொந்தைகுடமுழவங்கொ டுகொட்டிகுழலுமோங்கப், பாடலாராடலார்பைங்கணேற்றார்பலியேற்றார் பந்தணைநல்லூராரே. (உ)

பூதப்படையுடையார்பொங்குநூலார் புலித்தோலுடையினார்போற் றினார், வேதத்தொழிலார்விருப்பினூரார்விரிசடைமேல்வெண்டிங்கட்கண் ணிசூடி, ஓதத்தொலிகடல்வாய்நஞ்சமுண்டாருமபரோடம்பொன்னுலக மாண்டு, பாதத்தொடுகழலார்பைங்கணேற்றார்பலியேற்றார்பந்தணைநல்லூ ராரோ. (ங)

நீருலாஞ்சடைமுடிமேற்றிங்களேற்றார்நெருப்பேற்றார்அங்கையினிறை யுமேற்றார், ஊரொலாம்பலியேற்றாரரவமேற்றாரொலிகடல்வாய்நஞ்சமிடற் றிலேற்றார், வாருலாமுலைமடவாள்பாகமேற்றார் மழுவேற்றாரமானமறியோர் கையிலேற்றார், பாருலாம்புகழேற்றார்பைங்கணேற்றார்பலியேற்றார்பந்தணை நல்லூராரே. (ச)

தொண்டர்தொழுதேத்துஞ்சோதியேற்றார் துளங்காமணிமுடியார் தூ யநீற்றார், இண்டைச்சடைமுடியாரிமஞ்சூழ்ந்தவிடுபிணக்காட்டாடலாரோ மந்தோறும், அண்டத்துக்கப்புறத்தாராதியானாரருக்கனாயாரழலாயடியார் மேலைப், பண்டைவினையறுப்பார்பைங்கணேற்றார்பலியேற்றார்பந்தணைநல் லூராரே. (ரு)

கடமன்னுகளியானையுரிவைபோர்த்தார்கானப்பேர்காதலார்காதல்செய்து, மடமன்னுமடியார்தம்மனத்திலுள்ளார்மானுரிதோன்மிசைத்தோளார்மங்கைகாண, நடமன்னியாடுவார்நாகம்பூண்டார்நான்மறையோடாறங்கநவின்றநாவார், படமன்னுந்திருமுடியார்பைங்கணேற்றார்பலிமேற்றார்பந்தணைநல்லூராரே. (சு)

முற்றுமதிச்சடையார்மூவாரானார்மூவுலகமேத்துமுதலவரானார்
கற்றார்பரவுங்கழலார்திங்கள்கங்கையாள்காதலார்காமற்பாயந்தோளி
பற்றுமபாகத்தார்பால்வெண்ணீற்றார்பான்மையாலூழியுலகமானார்
பற்றார்மதிலெய்தார்பைங்கணேற்றார்பலிமேற்றார்பந்தணைநல்லூராரே. (எ)

கண்மருநெற்றியார்காட்டார்நாட்டார்கனமழுவாட்கொண்டதோர்கையார்சென்னிப், பெண்மருஞ்சடைமுடியார்பேரொன்றில்லார்பிறப்பிலார்இறப்பிலார்பிணியொன்றில்லார், மண்மருவருமவானவருமற்றையோருமறையவருமவந்தேத்திவணங்கியேத்தப், பண்மருமபாடலார்பைங்கணேற்றார்பலிமேற்றார்பந்தணைநல்லூராரே. (அ)

ஏறேறியேழுலகுமேத்தநின்றார்இமையவர்கள்எப்பொழுதுமிறைஞ்சநின்றார்
நீறேறுமேனியார்நீலமுண்டார்நெருப்புண்டார்அங்கையனலுமுண்டார்
ஆறேறுசென்னியாரானைஞ்சாடியனலுமிழுமைவாயரவமார்த்தார்
பாறேறுவெண்டலையார்பைங்கணேற்றார் பலிமேற்றார்பந்தணைநல்லூராரே.

கல்லூர்கடிமதில்கள்மூன்றுமெய்தார்காரோணங்காதலார்காதல்செய்து
நல்லூரார்ஞானத்தார்ஞானமானார்நான்மறையோடாறங்கநவின்றநாவார்
மல்லூர்மணிமலையின்மேலிருந்துவாளரக்கர்கோன்றலையைமாளச்செற்றுப்
பல்லூர்பலிதிரிவார்பைங்கணேற்றார்பலிமேற்றார்பந்தணைநல்லூராரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

## திருப்புன்கூர் திருநீடூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

பிறவாதேதோன்றியபெம்மான்றன்னைப்பேணாதாரவர்தம்மைப்பேணாதானைத், துறவாதேகட்டறுத்தசோதியானைத்தூநெறிக்குந்தூநெறியாய்நின்றான்றன்னைத், திறமாயவெத்திசைக்குந்தானேயாகித்திருப்புன்கூர்மேவியசிவலோகனை, நிறமாமொளியானைநீடூரானைநீதனேனென்னேநானினையாவாறே. (க)

பின்றானுமுன்றானுமானான்றன்னைப்பித்தர்க்குப்பித்தனாய்நின்றான்றன்னை
நன்றாங்கறிந்தவர்க்குந்தானேயாகிநல்வினையுந்தீவினையுமானான்றன்னைச்
சென்றோங்கிவிண்ணளவுந்தீயானானைத்திருப்புன்கூர்மேவியசிவலோகனை
நின்றுயர்நீடூர்நிலாவினானைநீதனேனென்னேநானினையாவாறே. (உ)

இல்லானையெவ்விடத்துமுள்ளான்றன்னையினியநினையாதார்க்கின்னாதானை, வல்லானைவடந்தாக்கருணவண்ணமாட்டாதார்க்கெத்திறத்துமாட்டாதானைச், செல்லாதசெந்நெறிக்கேசெல்விப்பானைத்திருப்புன்கூர்மேவியசிவலோகனை, நெல்லால்விளைகழனிநீடூரானை நீதனேனென்னேநானினையாவாறே. (ங)

கலைஞானங்கல்லாமேகற்பித்தானைக்கடுநரகஞ்சாராமேகாப்பான்றன்னைப்
பலவாயவேடங்கடானேயாகிப்பணிவார்கட்கங்கங்கேபற்றானானைச்
சிலையாற்புரமெரித்ததீயாடியைத்திருப்புன்கூர்மேவியசிவலோகனை
நிலையார்மணிமாடநீடூரானைநீதனேனென்னேநானினையாவாறே. (ச)

நோக்காதேயெவ்வளவுநோக்கினானை நுணுகாதேயாதொன்றுநுணுகினானை
ஆக்காதேயாதொன்றுமாக்கினானையணுகாதாரவர்தம்மையணுகாதானைத்
தேக்காதே,தெண்கடனஞ்சுண்டான்றன்னைத்திருப்புன்கூர்மேவியசிவலோ
கனை, நீக்காதபேரொளிசேர்நீடூரானை நீதனேனென்னேநானினையாவாறே()

பூணலாப்பூணானைப்பூசாசாந்தமுடையானைமுடைநாறுபுன்கலத்தில்
ஊணலாவூணானையொருவர்காணாவுத்தமனையொளிதிகழுமேனியானைச்
சேணுலாஞ்செழும்பவளக்குன்றொப்பானைத்திருப்புன்கூர்மேவியசிவலோ
கனை, நீணுலாமலர்க்கழனிநீடூரானைநீதனேனென்னேநானினையாவாறே.()

உரையார்பொருளுக்குலப்பிலானை யொழியாமேயெவ்வுயிருமானான்றன்னை
ப்,புரையாய்க்கனமாயாழ்ந்தாழாதானைப்புதியனவுமாய்மிகவும்பழையான்ற
ன்னைத்,திரையார்புனல்சேர்மகுடத்தானைத் திருப்புன்கூர்மேவியசிவலோக
னை, நிரையார்மணிமாடநீடூரானைநீதனேனென்னேநானினையாவாறே. (எ)

கூரரவத்தணையானுங்குளிர்தண்பொய்கைமலரவனுங்கூடிச்சென்றறிய
மாட்டார், ஆரொருவரவர்தன்மையறிவார்தேவரறிவோமென்பார்க்கெல்லா
மறியலாகாச், சீரரவக்கழலானைநிழலார்சோலைத்திருப்புன்கூர்மேவியசிவ
லோகனை,நீரரவத்தண்கழனிநீடூரானைநீதனேனென்னேநானினையாவாறே.

கையெலாநெய்பாயக்கழுத்தேகிட்டக்காணிமிதந்து நின்றுண்ணுங்கை
யார்சொன்ன,பொய்யெலாமெய்யென்றுகருதிப்புக்குப்புள்ளுவரால்கப்படா
துய்யப்போந்தேன், செய்யெலாஞ்செழுங்கமலப்பழனவேலித்திருப்புன்கூ
ர்மேவியசிவலோகனை, நெய்தல்வாழ்புனற்படப்பைநீடூரானைநீதனேனென்
னேநானினையாவாறே (கூ)

இகழுமாறெங்ஙனேயேழைநெஞ்சேயிகழாதுபரந்தொன்றாய்நின்றா
ன்றன்னை, நகழுமாவரைக்கீழிட்டரக்கர்கோனைநலனழித்துநன்கருளிச்செ
ய்தான்றன்னை, திகழுமாமதகரியினுரிபோர்த்தானைத் திருப்புன்கூர்மேவிய
சிவலோகனை, நிகழுமாவல்லானை நீடூரானைநீதனேனென்னேநானினையா
வாறே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கழிப்பாலை - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

ஊனுடுத்தியொன்பதுவாசல்வைத்துவொள்ளெலும்புதூணாவுரோம
மேய்ந்து, தானெடுத்த கூரைதவிரப்போவார்தயக்கம்பல படைத்தார்தாம
ரையினார், கானெடுத்துமாமயில்களாடுஞ்சோலைக்கழிப்பாலைமேயகபாலப்
பனார்,வானிடத்தையூடறுத்துவல்லைச்செல்லும்வழிவைத்தார்க்கவ்வழியே
போதுநாமே. (க)

முறையார்ந்தமும்மதிலும்பொடியாச்செற்றுமுன்னுமாய்ப் பின்னு
மாமுக்கண்ணெந்தை, பிறையார்ந்தசடைமுடிமேற்பாம்புகங்கைபிணக்கந்தீர்
த்துடன்வைத்தார்பெரியநஞ்சுக், கறையார்ந்தமிடற்றடங்கக்கண்ட வெந்
தைகழிப்பாலைமேயகபாலப்பனார், மறையார்ந்தவாய்மொழியான்மாயயாக்
கைவழிவைத்தார்க்கவ்வழியேபோதுநாமே. (உ)

தெளிவுண்டாக்கருதாதேநிமலன்றன்னைநினைமின்கணித்தலுநேரிழை
யாளாய, ஒளிவண்டார்கருங்குழலியுமையாடன்னையொருபாகத்தமர்ந்தடி

யாருள்கியேத்தக், களிவண்டார்க்கரும்பொழில்சூழ்கண்டலவேலிக்கழிப் பாலைமேயகபாலப்பனார், வளிவண்டாரமாயக்குரம்பைநீங்கவழிவைத்தார்க் கவ்வழியேபோதுநாமே. (௩)

பொடிநாறுமேனியர்பூதிப்பையர்புலித்தோலர்பொங்கரவர்பூணநூலர்
அடிநாறுகமலத்தராரூராதியானைஞ்சுமாடுமாதிரையினார்தாம்
கடிநாறும்பூஞ்சோலைகமழுந்தாறுங்கழிப்பாலைமேயகபாலப்பனார்
மடிநாறுமேனியிம்மாயநீங்கவழிவைத்தார்க்கவ்வழியேபோதுநாமே. (௪)

விண்ணானாய்விண்ணவர்கள்விரும்பிவந்துவேதத்தாய்கீதத்தாய்விரவி யெங்கும், எண்ணானாயெழுத்தானாய்கடலேழானாயிறையானாயெம்மிறையே யென்றுநிற்கும், கண்ணானாய்காரானாய்பாருமானாய்கழிப்பாலையுள்ளுறையுங் கபாலப்பனார், மண்ணானமாயக்குரம்பைநீங்கவழிவைத்தார்க்கவ்வழியே போதுநாமே. (௫)

விண்ணப்பவிச்சாதரர்களேத்தவிரிகதிரோனெரிசுடரான்விண்ணுமாகிப்
பண்ணப்பனப்பத்தர்மனத்துளேயும்பசுபதிபாசுபதனதேசமூர்த்தி
கண்ணப்பன்கண்ணப்பகக்கண்டுகந்தான்கழிப்பாலைமேயகபாலப்பனார்
வண்ணப்பிணிமாயயாக்கைநீங்கவழிவைத்தார்க்கவ்வழியேபோதுநாமே ()

பிணம்புல்குபீற்றற்குரம்பைமெய்யாப்பேதப்படுகின்றபேதைமீர்காள்
இணம்புல்குசூலத்தர்நீலகண்டரெண்டோளரெண்ணிறைந்தகுணத்தினாலே
கணம்புல்லன்கருத்துகந்தார்காஞ்சியுள்ளார்கழிப்பாலைமேயகபாலப்பனார்
மணம்புலகுமாயக்குரம்பைநீங்கவழிவைத்தார்க்கவ்வழியேபோதுநாமே. ()

இயல்பாயவீசனையெந்தைதந்தையென்சிந்தைமேவியுறைகின்றானை
முயல்வானைமூர்த்தியைத்தீர்த்தமானதிரியம்பகந்திரிசூலத்தன்னங்கையன்
கயல்பாயுங்கண்டல்சூழ்வுண்டவேலிக்கழிப்பாலைமேயகபாலப்பனார்
மயலாயமாயக்குரம்பைநீங்கவழிவைத்தார்க்கவ்வழியேபோதுநாமே. (௮)

செற்றதோர்மனமொழிந்துசிந்தைசெய்துசிவமூர்த்தியென்றெழுவார் சிந்தையுள்ளால், உற்றதோர்நோய்களைந்திவ்வுலகமெல்லாங் காட்டுவானு த்தமன்றானேதானெல்லாம், கற்றதோர்நூலினன்களிறுசெற்றானகழிப்பா லைமேயகபாலப்பனார், மற்றிதோர்மாயக்குரம்பைநீங்கவழிவைத்தார்க்கவ்வ ழியேபோதுநாமே. (௯)

பொருதலங்கனீண்முடியானபோரரக்கர்கோனபுட்பகந்தானபொருப் பின்மீதோடாதாக, இருநிலங்கண்டுக்கெய்தவெடுத்திடலுமேந்திழையா டானவெருவவிறைவனோக்கிக், கரதலங்களகதிர்முடியாரைஞ்சிநோடுகாலவிர லானூன்றுகழிப்பாலையார், வருதலங்கமாயக்குரம்பைநீங்கவழிவைத்தார்க் கவ்வழியேபோதுநாமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருப்புறம்பயம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

கொடிமாடநீடெருவுகூடல்கோட்டூர் கொடுங்கோளூர் தண்வளவிகண் டியூரும், நன்மாடுநன்மருகலவைகிநாளுநலமாகுமொற்றியூரொற்றியாகப் படுமாலைவண்டறையும்பழனம்பாசூர்பழையாறும்பாற்குளமுங்கைவிட்டிந் நாள், பொடியேறுமேனியராய்ப்பூதஞ்சூழப் புறம்பயம்மூமொன்றுபோ யினாரோ. (௧)

முற்றொருவர்போலமுழுநீறாடிமுளைத்திங்கள்சூடிமுந்நூலும்பூண்டு, ஒற்றொருவர்போல வுறங்குவேனைக் கைவளையையொன்றொன்றாவெண்ணுகின்றார்,மற்றொருவரில்லைத்துணையெனக்குமால்கொண்டாற்போலமயங்குவேற்குப், புற்றரவக்கச்சார்த்துப்பூதஞ்சூழப்புறம்பயநம்மூரென்று போயினாரே. (உ)

ஆகாதநஞ்சுண்டவந்திவண்ணா நந்தலைய மாசுணங்கொண்டம்பொற்றோண்மேல்,ஏகாசமாவிட்டோடொன்றேந்திவந்திட்டுத்திருவேபலியென்றார்க்கில்லேபுக்கேன்,பாகேதுங்கொள்ளார்பலியுங்கொள்ளார்பாவியேன்கண்ணுள்ளேபற்றிநோக்கிப்,போகாதவேடத்தர்பூதஞ்சூழப்புறம்பயநம்மூரென்று போயினாரே. (ங)

பன்மலிந்தவெண்டலைகையிலேந்திப்பனிமுகில்போன்மேனிப்பவந்தநாதர்
நென்மலிந்தநெய்த்தானஞ்சோற்றுத்துறைநியமந்துருத்தியுநீடூர்பாச்சில்
கன்மலிந்தோங்குகழுநீர்க்குன்றங்கடனாகைக்காரோணங்கைவிட்டிந்நாள்
பொன்மலிந்தகோதையருந்தாமுமெல்லாம்புறம்பயநம்மூரென்றுபோயினாரே.

செத்தவர்தந்தலைமாலைகையிலேந்திச்சிரமாலைசூடிச்சிவந்தமேனி
மத்தக்கத்தயானையுரிவைமூடிமடவாளவளோடுமானொன்றேந்தி
அத்தவத்தந்தேவாறுபதினமாறுநூறாயிரவாக்காட்டிப்
புத்தகங்கைக்கொண்டுபுலித்தோல்வீக்கிப்புறம்பயநம்மூரென்றுபோயினாரே.

நஞ்சடைந்தகண்டத்தர்வெண்ணீறாடிநல்லபுலியதண்மேனாகங்கட்டிப் பஞ்சடைந்தமெல்விரலாள்பாகமாகப் பராய்த்துறையேனென்றோரப்பவளவண்ணர், துஞ்சிடையேவந்து துடியுங்கொட்டத் துண்ணென்றெழுந்திருந்தேன்சொல்லமாட்டேன், புன்சடையின்மேலோர்புனலுஞ்சூடிப்புறம்பயநம்மூரென்றுபோயினாரே. (சூ)

மறியிலங்குகையர்மழுவொன்றேந்திமறைக்காடனென்றோர்மழலைபேசிச், செறியிலங்குதிண்டோண்மேனீறுகொண்டுதிரிமுண்டமாவிட்டதிலகநெற்றி, நெறியிலங்குகூந்தலார் பின்பின்சென்றுநெடுங்கண்பனிசோரநின்றுநோக்கிப், பொறியிலங்குபாம்பார்த்துப்பூதஞ்சூழப்புறம்பயநம்மூரென்றுபோயினாரே. (எ)

நில்லாதேபல்லூரும்பலிகள்வேண்டிநினைவளையார்பலிபெய்யநிறையுங்கொண்டு, கொல்லேறுங் கொக்கரையுங் கொடுகொட்டியுங்குடமூக்கிலங்கொழியக்குளிர்தண்பொய்கை, நல்லானைநல்லூரோதவிரேனென்றுநறையூரிற்றமுந்தவிர்வார்போலப்,பொல்லாதவேடத்தர்பூதஞ்சூழப்புறம்பயநம்மூரென்றுபோயினாரே. (அ)

விடையேறுநீறணிந்தோராமைபூண்டு வெண்டோடுபெய்திடங்கைவீணையேந்தித், திரையேறுசென்னிமேற்றிங்கடன்னைத்திசைவிளங்கவைத்துகந்தசெந்தீவண்ணர், அரையேறுமேகலையாள்பாகமாகவாரிடத்திலாடலமர்ந்தவையன், புரையேறுதாமேறிப்பூதஞ்சூழப்புறம்பயநம்மூரென்றுபோயினாரே. (கூ)

கோவாயவிந்திரனுள்ளிட்டாராக்குமரனும்விக்கினவிநாயகனும்
பூவாயபீடத்துமேலயனும்பூமியளந்தானும்போற்றிசைப்ப
பாவாயவின்னிசைகள்பாடியாடிப்பாரிடமுந்தாமும்பரந்துபற்றிப்
பூவார்ந்தகொன்றைபொறிவண்டார்க்கப்புறம்பயநம்மூரென்றுபோயினாரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

## திருநல்லூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

நினைந்துருகுமடியாரை நையவைத்தார் நில்லாமே தீவினைகணீங்கவைத்தார், சினந்திருகுகளிற்றுரிவைப்போர்வைவைத்தார் செழுமதியின்றளிர்வைத்தார்சிறந்துவானோர், இனந்துருவிமணிமகுடத்தேறத்துற்றவினமலர்கள்போதவிழ்ந்துமதுவாய்ப்பில்கி, நனைந்தனையதிருவடியென் றலைமேல்வைத்தார்நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (க)

பொன்னலத்தநறுங்கொன்றை சடைமேல்வைத்தார்புலியுரியினதள்வைத்தார்புனலும்வைத்தார், மன்னலத்ததிரடோண்மேன்மழுவாள்வைத்தார்வார்காதிற்குழைவைத்தார்மதியம்வைத்தார்,மின்னலத்தநுண்ணிடையாள்பாகம்வைத்தார்வேழத்தினுரிவைத்தார்வெண்ணூல்வைத்தார், நன்னலத்ததிருவடியென்றலைமேல்வைத்தார்நல்லூரெம்பெருமானார்நல்லவாறே.

தோடேறுமலர்க்கொன்றை சடைமேல்வைத்தார் துன்னெருக்கின்வடம்வைத்தார்துவலைசிந்தப், பாடேறுபடுதிரைகளெறியவைத்தார்பனிமத்தமலர்வைத்தார்பாம்பும்வைத்தார், சேடேறுதிருநுதன்மேனாட்டம்வைத்தார் சிலைவைத்தார்மலைபெற்றமகளைவைத்தார், நாடேறுதிருவடியென்றலைமேல்வைத்தார்நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (ங)

வில்லருளிவருபுருவத்தொருத்திபாகம்பொருத்தாகிவிரிசடைமேலருவிவைத்தார், கல்லருளிவருசிலையாவைத்தாரூராக்கயிலாயமலைவைத்தார்கடலூர்வைத்தார், சொல்லருளியறநால்வர்க்கறியவைத்தார்சுடுசுடலைப்பொடிவைத்தார்துறவிவைத்தார், நல்லருளாற்றிருவடியென்றலைமேல்வைத்தார் நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (ச)

விண்ணிரியுந்திரிபுரங்களெரியவைத்தார் வினைதொழுவார்க்கறவைத்தார் துறவிவைத்தார், கண்ணெரியாற்காமனையும்பொடியாவைத்தார்கடிக்கமலமலர்வைத்தார்கயிலைவைத்தார்,திண்ணெரியுந்தண்புனலுமுடனேவைத்தார்திசைதொழுதுமிசையமரர்திகழ்ந்துவாழ்த்தி, நண்ணரியதிருவடியென்றலைமேல்வைத்தார்நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (ரு)

உற்றுலவுபிணியுலகத்தெழுமைவைத்தாருயிரா வைத்தாருயிர்செல்லுங்கதிகள்வைத்தார், மற்றமரர்கணம்வைத்தாரமரர்காணாமறைவைத்தார்குறைமதியம்வளரவைத்தார், செற்றமலியாவமொடு காமலோபஞ்சிறவாதநெறிவைத்தார்துறவிவைத்தார், நற்றவர்சேர்திருவடியென்றலைமேல்வைத்தார்நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (சு)

மாறுமலைந்தாரரணமெரியவைத்தார்மணிமுடிமேலரவைத்தாரணிகொண்மேனி, நீறுமலிந்தெரியாடனிலாவவைத்தார்நெற்றிமேற்கண்வைத்தார்நிலையம்வைத்தார், ஆறுமலிந்தகழுதிரைகளெறியவைத்தாரார்வத்தாலடியமரர்பரவவைத்தார்,நாறுமலர்த்திருவடியென்றலைமேல்வைத்தார்நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (எ)

குலங்கண்மிகுமலைகடல்கண் ஞாலம்வைத்தார் குருமணிசேரரவைத்தார்கோலம்வைத்தார், உலங்கிளருமரவத்தினுச்சிவைத்தாருண்டருளின்விடம்வைத்தாரொண்டோள்வைத்தார், நிலங்கிளரும் புனல்கனலுளனிலம்வைத்தார்நிமிர்விசும்பினமிசைவைத்தார்நினைந்தார்நாள், நலங்கிளருந்திருவடியென் றலைமேல்வைத்தார்நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (அ)

சென்றுருளுங்கதிரிரண்டும்விசும்பில்வைத்தார் திசைபத்துமிருநிலத்
திறத்திருந்தவைத்தார், நின்றருளியடியமரர்வணங்கவைத்தார் நிறைதவமு
மறைப்பொருளுநிலவவைத்தார், கொன்றருளிக்கொடுங்கூற்றநடுங்கியோட
க்குறைகழற்சேவடிவைத்தார் விடையும்வைத்தார், என்தமருந்திருவடியெ
ன்றலைமேல்வைத்தார் நல்லூரெம்பெருமானார் நல்லவாறே. (கூ)

பாம்புரிஞ்சுமதிகிடந்துதிரைகளேங்கப் பனிக்கொன்றைச்சடைவைத்
தார் பணிசெய்வாரோ, ஆம்பரிசுதமக்கெல்லாமருளும்வைத்தார் சுடலைப்
பொடிவைத்தாரருமைவைத்தார், ஓம்பரிய வல்வினைநோய்தீரவைத்தாரு
மையையொருபாலவைத்தாருகந்துவானோர், நாம்பரவுமடியிணையென்றலை
மேல்வைத்தார் நல்லூரெம்பெருமானார் நல்லவாறே. (க0)

குலங்கிளரும்வருதிரைகளேழும்வைத்தார் குருமணிசேர் மலைவைத்
தார் மலைமங்கையோடு, உலங்கிளரவெடுத்தவன்றோள்முடியுநோவவொரு
விரலாலுறவைத்தாரிறைவாவென்று, புலம்பத்துமருந்தொடுபோர்வாளும
வைத்தார்புகழ்வைத்தார்புரிந்தாளாகக்கொள்ளவைத்தார், நலங்கிளருந்திரு
வடியென்றலைமேல்வைத்தார்நல்லூரெம்பெருமானார் நல்லவாறே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கருகாவூர் - திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்.

குருகாம்வயிரமாங்கூறுநாளாங்கொள்ளுங்கிழமையாங்கோளேதானும
பருகாவமுதமாம்பாலினெய்யாம்பழத்தினிரதமாம்பாட்டிற்பண்ணாம
ஒருகாலுமையாளோர்பாகனுமாமுண்ணின்றநாவிற்குரையாடியாம
கருவாயுலகுக்குமுன்னேதோன்றுங்கண்ணாங்கருகாவூரெந்ததானே. (க)

வித்தாமுளையாகும்வேரேதானும்வேண்டுருவமாகும்விரும்பிநின்ற
பத்தாமடியார்க்கோர்பாங்கனுமாம்பானிறமாம்பரஞ்சோதிதானேயாகும
தொத்தாமமரர்கணஞ்சூழ்ந்துபோற்றத்தோன்றாதென்னுள்ளத்தினுள்ளேநின்ற
கத்தாமடியேற்குக்காணாக்காட்டுங்கண்ணாங்கருகாவூரெந்ததானே. (உ)

பூத்தானாம்பூவினிறத்தானுமாம்பூக்குளால்வாசமாய்மன்னிநின்ற
கோத்தானாங்கோல்வளையாள்கூறாகுங்கொண்டசேமத்தாந்தேவனாகி
ஏத்தாதார்க்கென்றுமிடரேதுன்பமீவானுமென்னெஞ்சத்துள்ளேநின்று
காத்தானுங்காலனடையாவண்ணங்கண்ணாங்கருகாவூரெந்தைதானே. (ங)

இரவனுமெல்லினடமாடியாமெண்டிசைக்குந்தேவனுமென்னுளானும
அரவனுமல்லலறுப்பானுமாமாகாயமூர்த்திபாமானேறேறும
குரவனுங்கூறையுடுத்ததானாங்கூற்றுதவஞ்சக்குயலாகவென்றும
கரவனுங்காட்சிக்கெளியானுமாங்கண்ணாங்கருகாவூரெந்தைதானே. (ச)

படைத்தானும்பாரையிடந்தானுக்கும்பரிசொன்றறியாமைநின்றான்றானும
உடைத்தானுமொன்னார்புரங்கண்மூன்றுமொள்ளழலான்மூட்டியொருக்கிநின்று
யடைத்தானுஞ்சூலமழுவோர்நாகமசைத்தானுமானேறொன்றூர்ந்தானுங்கும்
கடைத்தானுமுள்ளமறியார்நெஞ்சிற்கண்ணாங்கருகாவூரெந்தைதானே. ()

மூலனுமூர்த்தியாமுன்னேதானுமூவாதமேனிமுக்கண்ணினானும
சீலனுஞ்சேர்ந்தாரிடர்காக்குஞ்செல்வனுஞ்செஞ்சுடர்க்கோர்சோதிதானும்
மாலனுமங்கையோர்பங்கனுமாமன்றாடியாமவானோர்தங்கட்கெல்லாம
காலனுங்காலனைக்காய்ந்தானுமாங்கண்ணாங்கருகாவூரெந்தைதானே. (சு)

அரைசேரரவனுமாலத்தானுமாதிரைநாளானுமண்டவாணோர்
திரைசேர்திருமுடித்திங்களானுந்தீவினைநாசனென்சிந்தையானும்
உரைசேருலகத்தாருள்ளானுமாமுமையாளோர்பாகனுமோதவேலிக்
கரைசேர்கடனஞ்சையுண்டானுங்கண்ணாங்கருகாவூரெந்தைதானே. (எ)

துடியானுந்துடியின் முழக்கந்தானுஞ்சொல்லுவார் சொல்லெலாஞ்சோதிப் [பானும்
படிதானும்பாவமறுப்பானுங்கும்பானீறணிமாமணிச்சோதிதானும
கொடியானுங்கூற்றையுதைத்தானுங்குன்றவனைச்சக்குபலர்க்கென்றும
கடியானுங்காட்சிக்கரியானுங்கண்ணாங்கருகாவூரெந்தைதானே. (அ)

விட்டுருவங்கிளர்கின்றசோதியானும்விண்ணவர்க்குமறியாதசூழலானும்
பட்டுருவமால்யானைத்தோல்கீண்டானும்பலபலவும்பாணிபயின்றானும்
எட்டுருவமூர்த்தியாமெண்டோளனுமென்னுச்சிமேலானெம்பிரானும
கட்டுருவங்கடியானைக்காய்ந்தானுங்கண்ணாங்கருகாவூரெந்தைதானே. ()

பொறுத்திருந்தபுள்ளூர்வானுள்ளானாகிப் புள்ளிருந்தங்குண்டேறுய்க்கவானானுய்ச், செறுத்திருந்தமும்மதில்கணமூன் றுமவெவ்வச்சிலைகுனியத்தீமூட்டுந் திண்மைதானு, மறுத்திருந்தகையானுமந்தாரல்வியிருந்தானையொருதலையைத்தெரியநோக்கிக், கறுத்திருந்தகண்டமுடையானும்போலுங்கண்ணாங்கருகாவூரெந்தைதானே. (க௦)

ஒறுத்தானையொன்னார்புரங்கள்மூன்றுமொள்ளழலைமாட்டியுடனேவைத்து
இறுத்தானைமென்னான்முடிகள்பத்துமிசைந்தானையின்னிசைகள்கேட்டா
அறுத்தானுமஞ்சுமடக்கியங்கையாகாயமந்திரமுமானானும் [னுகும்
கறுத்தானுங்காலனைக்காலால்வீழக்கண்ணாங்கருகாவூரெந்தைதானே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிடைமருதூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

சூலப்படையுடையார்தாமேபோலுஞ் சுடர்த்திங்கட் கண்ணியுடையாரபோலும், மாலைமிகுந்தொருபால்வைத்தார்போலுமந்திரமுந்தந்திரமுமானார்போலும,வேலைக்கடனஞ்சமுண்டார்போலுமேல்வினைகளுக்குமவிகிர்தர்போலும,ஏலக்கமழ்குழலாள்பாகர்போலுமிடைமருதுமேவியவீசனாரே. (க)

காராரகமழ்கொன்றைக்கண்ணிபோலுங்காரானையீருரிவைபோர்த்தார்போ
பாரார்பரவப்படுவார்போலுமபத்துப்பல்லூழியாநதார்போலும [லும
சீரால்வணங்கப்படுவாரபோலுந்திசையனைத்துமாய மற்றுமானார்போலும்
ஏரார்கமழ்குழலாள்பாகர்போலுமிடைமருதுமேவியவீசனாரே. (உ)

வேதங்கள்வேள்வியயந்தார்போலும விண்ணுலகுமண்ணுலகுமானார்போலு
பூதங்களாயபுராணர்போலுமபுகழுவளரொளியாய்நின்றார்போலும [ம
பாதம்பரவப்படுவார்போலுமபத்தர்களுக்கின்பமயந்தார்போலும
ஏதங்களானகடிவார்போலுமிடைமருதுமேவியவீசனாரே. (ங)

திணகுணத்தார் தேவாகணங்களேத்தித் திசைவணங்கச்சேவடியைவைத்தார்போலும், விண்குணத்தார்வேள்விசிதையநூறிவியன்கொண்டன்மேற்செல்விகிர்தர்போலும,பண்குணத்தார்பாடலோடாடலோவாப்பரங்குன்றமேவியபரமர்போலும், எண்குணத்தாரொண்ணுயிரவர்போலு மிடைமருதுமேவியவீசனாரே. (ச)

ஊகமுகிலுரிஞ்சுஞ்சோலைசூழ்ந்தவுயர்பொழிலண்ணாவினுறைகின்றாரும்
பாகமபனிமொழியாளபஙகராகிபபடுவெணடலையிறபலிகொள்வாருமம [ம்
மாகமுடைமும்மதிலுமெய்தார்தாமு மணிபொழில்சூழாரூருறைகின்றாரு
ஏகமபமேயாருமெல்லாமாவாரிடைமருதுமேவியவீசனாரே. (௫)

ஐயிரண்டுமொன்றும் மானார்போலு மறுமூன்றுநான்மூன்றுமானார்
போலும். செய்வினைகளைல்வினைகளானார்போலுந்திசையனைத்துமாய்நிறை
ந்தசெல்வர்போலும், கொய்மலராஙகொன்றைசசடையார்போலுங்கூத்தா
டவல்லகுழகர்போலும், எய்யவந்தகாமனையுஙகாய்ந்தார்போலுமிடைமரு
துமேவியவீசனரே. (௬)

பிரியாதகுணமுயிர்கட்கஞ்சோடஞ்சாய்ப்பிரிவுடையகுணமபேசிற்ப
த்தோடொன்றாய்,விரியாதகுணமொருகாணமேயெனபர்விரிவிலாதகுண
நாட்டததாறேயெனபர், தெரிவாயகுணமஞ்சுமஞ்சமிழைதயஞ்சுமபதமஞ்சுங
கதியஞ்சுஞ்செபபினாரும், எரியாயதாமரைமேலியங்கினாருமிடைமருதுமே
வியவீசனரே. (௭)

தோலுறபொலிந்தவுடையார்போலுஞ்சுடர்வாயரவசைத்தசோதிபோலும்
ஆலமமிர்தாகவுண்டார்போலுமடியார்கட்காரமிர்தமானார்போலும [லும்
காலனையுஙகாய்ந்தகழலார்போலுங கயிலாயந்தமமிடமாககொணடார்போ
ஏலஙகமழ்குழலாள்பாகர்போலுமிடைமருதுமேவியவீசனரே. (அ)

பைந்தளிரக்கொன்றையந்தாரார்போலும படைக்கணாள் பாகமுடையார்
அந்திவாய்வண்ணத்தழகர்போலுமணிநீலகண்டமுடையார்போலும[போலும்
வந்தவரவுஞ்செலவுமாகிமாறாதெனனுள்ளத்திருந்தார்போலும
எந்தமிடர்தீர்க்கவல்லார்போலுமிடைமருதுமேவியவீசனரே. (௯)

கொன்றையங்கூவிளமாலைதனனைக்குளிர்சடைமேலவைத்துகந்தகொள்கை
நின்றவனஙகனைநீறுநோக்கிநெருப்புருவாயநின்மலனாரும [யாரும
அன்றவரக்கனலறிவீழவருவரையைக்காலாலழுத்தினாரும
என்றுமிடுமபிசசையேறறுண்பாருமிடைமருதுமேவியவீசனரே. (க௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிடைமருதூர்-திருத்தாண்டகம்.

திருசசிறறமபலம்.

ஆறுசடைக்கணிவரஙகைததீயாழகர்படையுடையரமபொற்றோண்மேல்
நீறுதடவந்திடபமேறிநிததமபலிகொள்வாமொய்த்தபூதம [வில்
கூறுஙகுணமுடையாகோவணத்தாகோடாலவேடததாகொள்கை சொல்
ஈறுநடுவுமுதலுமாவாரிடைமருதுமேவியிடஙகொணடாரே. (க)

மங்குன்மதிவைப்பர்வானநாடர்மடமானிடமுடையர்மாதராளைப்
பஙகின்மிகவைபபர்பால்போனீறறாபளிக்குவடம்புனைவர்பாவநாசர்
சஙகுதிரையுகளுஞ்சாய்க்காடாள்வாசரிதைபலவுடையாதனமைசொல்வில்
எங்குமபலிதிரிவரெனனுணீஙகாரிடைமருதுமேவியிடஙகொண்டாரே. ()

ஆலநிழலிருப்பராகாயத்தாருவரையினுச்சியாராஞோர்பெண்ணர்
காலமபலகழித்தாராகஙறசோகண்டர்கருத்துக்குச்சேயாராதாங காணாதார்க்
கோலம்பலவுடையர்கொல்லையேற்றர்கொழுமழுவர்கோழமபமேயவீசர்[குக்
ஏவமணநாறுமீங்கோய்நீஙகாரிடைமருதுமேவியிடங்கொண்டாரே. (௩)

தேசர்திறநினைவார்சிந்தைசேருஞ்செல்வர்திருவாரூரொன்றுமுள்ளார்
வாசமலரின்கண்மானேலபோர்ப்பாம நவுங்கரியுரியர்வஞ்சககளவர் [ம்
நேசரடைந்தார்க்கடையார்தார்க்கு நிட்டுருவர்கட்டங்கர்நினைவார்க்கென்று
ஈசர்புனற்பொன்னித்தீர்த்தர்வாய்த்தவிடைமருதுமேவியிடங்கொண்டாரே.

கரப்பர்கரியமனக்கள்வர்க்குள்ளங்கரவாதேதம்மைநினையகிற்பார்பாவம்
தூரப்பர்தொடுகடலினஞ்சமுண்பார்தூயமறைமொழியாதீபாலொட்டி [ம்
நிரப்பார்புரமூன்றுநீறுசெய்வார்நீளசடையார்பாயவிடைகொண்டேங்குமைய
இரப்பரொருமையாள்வரென்னுணர்ங்காரிடைமருதுமேவியிடங்கொண்டாரே.

கொடியாரிடபத்தர்கூத்துமாடிக்குளிர்கொன்றைமேல்வைப்பார்கோலமா
பொடியாருமேனியர்பூதிப்பையர்புலித்தோலர்பொங்கரவர்பூணநூலர் [ாந்த
அடியார்குடியாவர்அந்தணாளர்ஆகுதியின்மந்திரத்தாலமார்ந்தபோற்ற
இடியார்களிற்றுரியரெவருமபோற்றவிடைமருதுமேவியிடங்கெண்டாரே.()

பச்சைநிறமுடையர்பாலர்சாலப்பழையர்பிழையெலாநீக்கியாள்வா
கச்சைச்சங்கதநாகம்பூண்டதோளர்கனலொன்றுகையேந்தியிங்கேதோறும [ர்
பிச்சைகொள்ளுங்காவாபெரியர்சாலப்பிறங்குசடைமுடியார்பேணுந்தொண்ட
இச்சைமிகவறிவரொன்றுமுள்ளாரிடைமருதுமேவியிடங்கொண்டாரே. (ஏ)

காவார்சடைமுடியர்காரோணத்தார்கயிலாயமன்னினார்பன்னுமின்சொற்
பாவார்பொருளாளர்வாளார்கண்ணிபயிலுந்திருவுருவம்பாகமேயார்
பூவார்புனலணவுபுனகூர்வாழ்வார்புரமூன்றுமொள்ளழலாக்காய்ந்ததொட்ட
ஏவார்சிலைமலையொருங்குந்தாமேயிடைமருதுமேவியிடங்கொண்டாரே. (அ)

புரிந்தார்நடத்தின்கட்பூதநாதர்பொழிலாரூர்புக்குறைவர்போந்துதம்மிற், பிரிந்தார்கல்வாயபேயுந்தாமும் பிரியாரொருநாளும்பேணுகாட்டில், எரிந்தாரனலுகப்பரேழிலோசையெவ்விடத்தும் தாமேயென்றேத்துவார்பால், இருந்தாரிமையவர்களபோற்றவென்றுமிடைமருதுமேவியிடங்கொண்டாரே. (கூ)

விட்டிலங்குமாமழுவர்வேலைநஞ்சர்விடங்கர்விரிபுனல்சூழ்வெண்காட்டுள்ளார், மட்டிலங்குதாமாலைமார்பினீற்றர்மழபாடியுள்ளுறைவார்மாகாளத்தர், சிட்டிலங்குவல்லரக்கன்கோனையன்றுசெழுமுடியுந்தோளைந்நான கடரக்காலால, இட்டிரங்கிமற்றவனுக்கீந்தார் வென்றியிடைமருதுமேவியிடங்கொண்டாரே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பூவணம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

வடிவேறுதிரிசூலந்தோன்றுந் தோன்றும் வளர்சடைமேலிளமதியந்தோன்றுந்தோன்றும்,கடியேறுகமழ்கொன்றைக்கண்ணிதோன்றுங்காதில்வெண்குழைதோடுகலந்துதோன்றும், இடியேறுகளிற்றுரிவைப்போர்வைதோன்றுமெழிறிகழுந்திருமுடியுமிலங்கித்தோன்றும்,பொடியேறுதிருமேனிபொலிந்துதோன்றும்பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (க)

ஆணாகிப்பெண்ணாயவடிவுதோன்றுமடியவர்கட்காரமுதமாகித்தோன்றும், ஊணாகவூர்திரிவானாகித்தோன்றுமொற்றைவெண்பிறைதோன்றும்பற்றார்தமமேல், சேணாகவரைவில்லாலெரித்தறோன்றுஞ் செற்றவர்தம்மெ

ழும்பின்றற்செறியச்செய்த,பூணுணுமணைநாணும்பொலிந்துதோன்றும்பொ
ழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (௨)

கல்லாலினீழலிற்கலந்து தோன்றுங்கவின்மறையோர் நால்வர்க்குநெ
றிகளன்று, சொல்லாகச்சொல்லியவாதோன்றுந்தோன்றுஞ்சூழரவுமான்
மறியுந்தோன்றுந்தோன்றும், அல்லாதகாலனைமுன்னடர்த்தவாறுமை
வகையானினைவார்பாலமர்ந்துதோன்றும், பொல்லாதபுலாலெலும்புபூணாய்
த்தோன்றும்பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (௩)

படைமலிந்தமழுவாளுமானுந்தோன்றும் பன்னிரண்டுகண்ணுடைய
பிள்ளைதோன்றும், நடைமலிந்தவிடையோடுகொடியுந்தோன்றும் நான்ம
றையினொலிதோன்றுநயனந்தோன்றும், உடைமலிந்தகோவணமுங்கீளு
ந்தோன்றுமூரல்வெண்சிரமாலையுலாவித்தோன்றும்,புடைமலிந்தபூதத்தின
பொலிவுதோன்றும் பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (௪)

மயலாகுந்தன்னடியார்க்கருளுந்தோன்று மாசிலாப்புன்சடைமேன்
மதியந்தோன்றும்,இயல்பாகவிடுபிச்சையேற்றறோன்றுமிருங்கடனஞ்சுண்
டிருண்டகண்டந்தோன்றும், கயல்பாயக்கடுங்கலுழிக்கங்கைநங்கையாயிர
மாமுகத்தினொடு வானிற்றோன்றும், புயல்பாயச்சடைவிரித்த பொற்புத்
தோன்றும்பொழிறிகழும் பூவணத்தெம்புனிதனார்க்கே. (௫)

பாராழிவட்டத்தார்பரவியிட்டபன்மலருநறும் புகையும்பரந்துதோன்
றும், சீராழித்தாமரையின்மலர்களன்னதிருந்தியமாநிறத்தசேவடிகடோன்
றும், ஓராழித்தேருடையவிலங்கைவேந்த னுடறுணித்தவிடர்பாவங்
கெடுப்பித்தன்று, போராழிமுனீந்தபொற்புந்தோன்றும் பொழிறிகழும்
பூவணத்தெம்புனிதனார்க்கே. (௬)

தன்னடியார்க்கருள்புரிந்ததகவுதோன்றுஞ்சதுமுகனைத்தலையரிந்தத
ன்மைதோன்றும், மின்னனையநுண்ணிடையாள்பாகந்தோன்றும்வேழத்தி
னுரிவிரும்பிப்போர்த்தறோன்றும், துன்னியசெஞ்சடைமேலோர்புனலும்
பாம்புந்தூயமாமதியுடனேவைத்தறோன்றும்,பொன்னனையதிருமேனிபொ
லிந்துதோன்றும் பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (௭)

செறிகழலுந்திருவடியுந்தோன்றுந் தோன்றுந்திரிபுரத்தையெரிசெய்
தசிலையுந்தோன்றும், நெறியதனைவிரித்துரைத்தநீர்மைதோன்றும் நெற்றி
மேற்கண்டோன்றும்பெற்றந்தோன்றும், மறுபிறவியறுத்தருளும்வகையுந்
தோன்றும்மலைமகளுஞ்சலமகளுமலிந்துதோன்றும், பொறியரவுமிளமதியும்
பொலிந்துதோன்றும் பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (௮)

அருப்பொட்டுமுலைமடவாள் பாகந்தோன்று மணிகிளரு முருமென்
னவடர்க்குங்கேழல், மருப்பொட்டுமணிவயிரக்கோவைதோன்றுமணமலி
ந்தநடந்தோன்றுமணியார்வைகைத், திருக்கோட்டினின்றதோர் திறமுந்
தோன்றுஞ்செக்கர்வானொளிமிக்குந்திகழ்ந்தசோதிப், பொருப்பொட்டிநி
ன்றதிண்புயமுந்தோன்றும்பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. ()

ஆங்கணைந்ததண்டிக்குமருளியன்று தன்முடிமேலலர்மாலை யளித்த
றோன்றும், பாங்கணைந்துபணிசெய்வார்க்கருளியன்றுபல்பிறவியறுத்தரு
ளும்பரிசுதோன்றும், கோங்கணைந்தகூவிளமுமத்தமுமுங் குழற்கணிந்த
கொள்கையொடுகோலந்தோன்றும், பூங்கணைவேளுருவழித்த பொற்புத்
தோன்றும் பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (௰)

ஆரொருவருள்குவாருள்ளத்துள்ளேயவ்வுருவாய்நிற்கின்றவருளுந்தோன்றும், வாருருவப்பூண்முலைநன்மங்கைதன்னைமகிழ்ந்தொருபால்வைத்துகந்தவடிவுந்தோன்றும், நீருருவக்கடலிலங்கையரக்கர்கோனைநெறுநெறெனவடர்த்திட்டநிலையுந்தோன்றும், போருருவக்கூற்றுதைத்தபொற்புந்தோன்றும்பொழிறிகழும் பூவணத்தெம்புனிதனார்க்கே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவாலவாய் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

முளைத்தானையெல்லார்க்குமுன்னேதோன்றி முதிருஞ்சடைமுடிமேன்முகிழ்வெண்டிங்கள், வளைத்தானைவல்லசுரர்புரங்கண்மூன்றும்வரைசிலையாவாசுகிமாநாணாக்கோத்துத், துளைத்தானைச்சுடுசரத்தாற்றுவளநீறாத்தூமுத்தவெண்முறுவலுமையோடாடித், திளைத்தானைத்தென்கூடற்றிருவாலவாய்ச்சிவனடியேசிந்திக்கப்பெற்றேனே. (க)

விண்ணுலகின் மேலார்கண் மேலான்றன்னை மேலாடு புரமூன்றும் பொடிசெய்தானைப், பண்ணிலவுபைம்பொழில்சூழ்பழனத்தானைப் பசும்பொன்னினிறத்தானைப்பானீற்றானை, உண்ணிலவுசடைக்கற்றைக்கங்கையாளைக்கரந்துமையோடுடனாகியிருந்தானைத், தெண்ணிலவுதென்கூடற்றிருவாலவாய்ச்சிவனடியேசிந்திக்கப்பெற்றேனே. (உ)

நீர்த்திரளைநீள்சடைமே னிறைவித்தானை நிலமருவிநீரோடக்கண்டான்றன்னைப், பாற்றிரளாய்ப்பயின்றாடவல்லான்றன்னைப் பாம்பொத்துக்கேழ்ந்தவெங்கூற்றைப்பாய்ந்தான்றன்னைக், காற்றிரளாய்மேகத்துள்ளேநின்றுகடுங்குரலாயிடிப்பானைக்கண்ணோனெற்றித், தீத்திரளைத்தென்கூடற் றிருவாலவாய்ச்சிவனடியேசிந்திக்கப்பெற்றேனே. (௩)

வானமிதுவெல்லாமுடையான்றன்னை வரியரவக்கச்சானைவன்பேய்சூழக், கானமதினடமாடவல்லான்றன்னைக் கடைக்கண்ணான்மங்கையுமைநோக்காவென்மேல், ஊனமதுவெல்லாமொழித்தான்றன்னை யுணர்வாகியடியேனதுள்ளேநின்ற, தேனமுதைத்தென்கூடற்றிருவாலவாய்ச்சிவனடியேசிந்திக்கப்பெற்றேனே. (௪)

ஊரானையுலகேழாய்நின்றான்றன்னை யொற்றைவெண்பிறையானையுமையோடென்றும், பேரானைப்பிறர்க்கென்றுமரியான்றன்னைப் பிணக்காட்டினடமாடல்பேயோடென்றும், ஆரானையமரர்களுக்கமுதீந்தானையருமறையானான்முகனுமாலும்போற்றுஞ், சீரானைத்தென்கூடற்றிருவாலவாய்ச்சிவனடியேசிந்திக்கப்பெற்றேனே. (௫)

மூவனைமூர்த்தியைமூவாமேனியுடையானைமூவுலகுந்தானேயெங்கும்
பாவனைப்பாவமறுப்பான்றன்னைப்படியெழுதலாகாதமங்கையோடும்
மேவனைவிண்ணோர்நடுங்கக்கண்டுவிரிகடலினஞ்சுண்டமுதமீந்த
தேவனைத்தென்கூடற்றிருவாலவாய்ச்சிவனடியேசிந்திக்கப்பெற்றேனே

துறந்தார்க்குத்தூநெறியாய்நின்றான்றன்னைத் துன்பந்துடைத்தாளவல்லான்றன்னை, இறந்தார்களென்பேயணிந்தான்றன்னை யெல்லிநடமாடவல்லான்றன்னை, மறந்தார்மதின்மூன்றுமாய்த்தான்றன்னைமற்றொருபற்றில்லாவடியார்க்கென்றும், சிறந்தானைத்தென்கூடற்றிருவாலவாய்ச் சிவனடியேசிந்திக்கப்பெற்றேனே. (எ)

வாயானை மனத்தானை மனத்துணின்ற கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான்றன்னைத், தூயானைத் தூவெள்ளையேற்றான்றன்னைச் சுடர்த்திங்கட்சடையானைத் தொடர்ந்துநின்றென், தாயானைத் தவமாய தன்மையானைத் தலையாயதேவாதிதேவர்க்கென்றுஞ், சேயானைத் தென்கூடற்றிருவாலவாய்ச்சிவனடியேசிந்திக்கப்பெற்றேனானே. (அ)

பகைச்சுடராய்ப்பாவ மறுப்பான்றன்னைப் பழியிலியாய்நஞ்சமுண்டமிர்தீந்தானை, வகைச்சுடராய் வல்லசுரர் புரமட்டானை வளையிலியா யெல்லார்க்குமருள்செய்வானை, மிகைச்சுடராய விண்ணவர்கண்மேலப்பாலைமேலாயதேவாதிதேவர்க்கென்றுந், திகைச்சுடரைத்தென்கூடற்றிருவாலவாய்ச்சிவனடியே சிந்திக்கப்பெற்றேனானே. (கூ)

மலையானை மாமேருமன்னினானை வளர்புன்சடையானை வானோர்தங்கள் தலையானையென்றலையினுச்சியென்றுந் தாபித்திருந்தானைத் தானேயெங்குந் துலையாகவொருவரையுமில்லாதானைத் தோன்றாதா மதின்மூன்றுந் துளாவெய்த சிலையானைத்தென்கூடற்றிருவாலவாய்ச்சிவனடியைச்சிந்திக்கப்பெற்றேனானே

தூர்த்தனைத் தோண்முடிப்பத்திறுத்தான்றன்னைத் தொன்னரம்பினின்னிசைகேட்டருளசெய்தானைப், பார்த்தனைப் பணிகண்டு பரிந்தான்றன்னைப் பரிந்தவற்குப் பாசுபதமீந்தான்றன்னை, ஆர்த்தனையடியேனுக்கன்பன்றன்னையளவிலாப் பல்லூழிகண்டு நின்ற, தீர்த்தனைத் தென்கூடற்றிருவாலவாய்ச்சிவனடியே சிந்திக்கப்பெற்றேனானே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநள்ளாறு - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

ஆதிக்கண்ணான் முகத்திலொன்றுசென்று வல்லாதசொல்லுரைக்கத் தன் கைவாளால், சேதித்த திருவடியைச் செல்லநல்லசிவலோகநெறிவகுத்துக் காட்டுவானை, மாதினையமாதோர் கூறுயினானை மாமலர்மேலயனோடு மாலுங்காணா, நாதியைநம்பியைநள்ளாற்றானை நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே

படையானைப் பாசுபதவேடத்தானைப் பண்டநயகப் பார்த்தானைப் பாவமெல்லாம், அடையாமைக்காப்பானையடியார்தங்களருமருந்தையாவாவென்றருள்செய்வானைச், சடையானைச் சந்திரனைத்தரித்தான்றன்னைச் சங்கொத்தமுத்தனையவெள்ளையேற்றின், நடையானை நம்பியைநள்ளாற்றானை நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (உ)

படவரவமொன்றுகொண்டரையிலார்த்த பராபரனைப்பைஞ்ஞீலிமேவினானை, அடலரவமாட்டிக் கட்டங்கஞ்செய முதாகவுடையானையாதியானை, மடலரவமன்னு பூங்கொன்றையானை மாமணியை மாணிக்காய்க்காலனைன்றன்னை, நடலரவஞ்செய்தானைநள்ளாற்றானை நானடியே னினைக்கப்பெற்றுய்ந்தவாறே.

கட்டங்கமொன்றுகங்கையிலேந்திக்கங்கண முங்காதில்விடுதோடிட்டுச் சுட்டங்கங்கொண்டு துதையப்பூசிச் சுந்தரனாய்ச் சூலங்கையேந்தினானைப் பட்டங்கமாலைநிறையச் சூடிப்பலகணங்கள் முந்தாமும்பரந்தகாட்டில் நட்டங்கமாடியைநள்ளாற்றானை நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. ()

உலந்தார்தமமங்கங்கொண்டுலகமெல்லா மொருகொடியிலுழல்வானையுலப்பில்செல்வம், சிலந்திதனக்கருள்செய்ததேவதேவைத்திருச்சிராப்பள்ளியெஞ்சிவலோகனைக், கலந்தார்தம்மனத்தென்றுங்காதலானைக் கச்சியேகம்பனைக்கமழ்பூங்கொன்றை, நலந்தாங்குநம்பியைநள்ளாற்றானை நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (ரு)

குலங்கெடுத்துக்கோணீக்கவல்லான்றன்னைக் குலவரையன்மடப்பாவையிடப்பாலானை, மலங்கெடுத்துமா தீர்த்தமாட்டிக்கொண்டமறையவனைப்பிறைதவழ்செஞ்சடையினானைச், சலங்கெடுத்துத்தயாமூலதன்மமென்னுந்தத்துவத்தின வழிநின்றுதாழ்ந்தார்க்கெல்லாம், நலங்கொடுக்குநம்பியைநள்ளாற்றானைநானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (௬)

பூவிரியுமலர்க்கொன்றைச் சடையினானைப்புறம்பயத்தெம்பெருமானைப்புகலூரானை, மாவிரியக்களிறுரித்தமைந்தன்றன்னை மறைக்காடுமவலிவலமுமன்னினானைத், தேவிரியத்திகழ்தக்கன்வேள்வியெல்லாஞ் சிதைத்தானையுந்தத்தவன்றன் சிரங்கொண்டானை, நாவிரியமறைநவின்றநள்ளாற்றானைநானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (௭)

சொல்லானைச்சுடர்ப்பவளச்சோதியானைத் தொல்லவுணர்புரமூன்றுமெரியச்செற்ற, வில்லானையெல்லார்க்குமேலானானைமெல்லியலாள்பாகனைவேதநான்கும், கல்லாலினீழற்கீழறங்கண்டானைக்காளத்தியானைக்கயிலைமேய, நல்லானைநம்பியைநள்ளாற்றானைநானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே

குன்றமாமுனிவன்சாபநீங்கக்குரைகழலாற் கூற்றுவனைக்குமைத்தகோனை, அன்றுகவவுணர்புரமூன்றுமவேவ வாரழலவாயோட்டியடர்வித்தானைச், சென்றுதுவேண்டிற்றொன்றீவான்றன்னைச் சிவனேயெம்பெருமானென்றிருப்பார்க்கென்றும், நன்றுகுநம்பியைநள்ளாற்றானைநானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (௯)

இறவாமேவரம்பெற்றேனென்றுமிக்கவிராவணனை யிருபதுதோணெரியவூன்றி, உறவாகியின்னிசைகேட்டிரங்கிமீண்டேயுற்ற பிணிதவிர்த்தருளவல்லான்றன்னை, மறவாதார்மனத்தென்றுமன்னினானைமாமதியமலர்க்கொன்றை வன்னிமத்தம், நறவார்செஞ்சடையானைநள்ளாற்றானைநானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருஆக்கூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

முடித்தாமரையணிந்தமூர்த்திபோலுமூவுலகுந்தாமாகிநின்றார்போலும்
கடித்தாமரையேய்ந்தகண்ணார்போலுங்கல்லலகுபாணிபயின்றார்போலும்
கொடித்தாமரைக்காடேநாடுந்தொண்டர்குற்றேவல்மகிழ்ந்தகுழகர்போலும்
அடித்தாமரைமலர்மேல்வைத்தார்போலுமாக்கூரிற்றான்றோன்றியப்பனாரே.

ஓதிற்றொருநூலுமில்லைபோலுமுணரப்படாததொன்றில்லைபோலும்
காதிற்குழையிலங்கப்பெய்தார்போலுங்கவலைப்பிறப்பிடும்பைகாப்பார்போலும்
வேதத்தோடாறங்கஞ்சொன்னார்போலும்விடஞ்சூழ்ந்திருந்தமிடற்றார்போலும்
ஆதிக்களவாகிநின்றார்போலுமாக்கூரிற்றான்றோன்றியப்பனாரே. (௨)

மையார்மலர்க்கண்ணாள்பாகர்போலுமணிநீலகண்டமுடையார்போலும்
நெய்யார்திரிசூலங்கையார்போலுநீறேறுதோளெட்டுமுடையார்போலும்
வையார்மழுவாட்படையார்போலுமவளர்ஞாயிறன்னவொளியார்போலும்
ஐவாயரவமொன்றார்த்தார்போலுமாக்கூரிற்றான்றோன்றியப்பனாரே. (௩)

வடிவிளங்குவெண்மழுவாள்வல்லார்போலும் வஞ்சக்கருங்கடனஞ்சுண்டார்போலும், பொடிவிளங்குமுந்நூல்சேர்மார்பர்போலும் பூங்கங்கைதோய்ந்தசடையார்போலும், கடிவிளங்குகொன்றையந்தாரார்போலுங்கட்டங்கமேந்திய கையர்போலும், அடிவிளங்குசெம்பொற்கழலார்போலுமாக்கூரிற்றான்றோன்றியப்பனாரே. (௪)

ஏகாசமாம்புலித்தோல்பாம்புதாழவிடுவெண்டலைகலனாவேந்தினாரும
மேகாசங்கட்டழிந்தவெள்ளிமாலைபுனலார்சடைமுடிமேற்புனைந்தார்போலும்
ஆகாசமாயவெண்ணீருந்தீயுமதியுமதிபிறந்தவிண்ணுமண்ணும
ஆகாசமெனறிவையுமானார்போலுமாககூறிற்றன்றேனறியப்பனூரே. (ரு)

மாதூரும் வாணெடுங்கண்செவ்வாய்மென்றோள் மலைமகளைமார்பத்தணைந்தார்போலும், மூதார்முத்திரைகளானார்போலுமுதலுமிறுதியுமில்லார்போலும், தீதூரநல்வினையாயினார்போலுந் திசையெட்டுந்தாமேயாஞ்செல்வர்போலும், ஆதிரைநாளாயமர்ந்தார்போலுமாக்கூறிற்றன்றேனறியப்பனூரே. (சா)

மாலயானைமத்தகத்தைக் கீண்டார்போலு மான்றோலுடையாமகிழ்ந்தார்போலும், கோலானைக்கோளுலாறகாய்ந்தார்போலுங் குழவிப்பிறைசடைமேல்வைத்தார்போலும், காலனைக்காலாறகடந்தார்போலுங்கயிலாயந்தம்மிடமாக்கொண்டார்போலும், ஆலானைந்தாடலுகப்பார்போலு மாக்கூறிற்றன்றேன்றியப்பனூரே. (எ)

கண்ணாரந்தநெற்றியுடையார்போலுங் காமனையுங்கண்ணழலாற்காய்ந்தார்போலும், உண்ணாப்பெருநஞ்சமுண்டார்போலுமூழித்தீயன்னவொளியார்போலும், எண்ணாயிரங்கோடிப்பேரார்போலுமேறேறிச்செல்லுமிறைவர்போலும், அணுருவுமாருருமேயார்போலு மாக்கூறிற்றன்றேன்றியப்பனூரே. (அ)

கடியார்தளிர்கலந்த கொன்றைமாலைகதிர்போதுதாதணிந்த கண்ணிபோலும், நெடியானுநான்முகனுந்தேடநின்றநீலநற்கண்டத்திறைவர்போலும், படியேயழல்வண்ணச்செம்பொன்மேனிமணிவண்ணந்தம்வண்ணமாவார்போலும், அடியார்புகலிடமதானார்போலுமாக கூறிற்றன்றேன்றியப்பனூரே. (கூ)

திரையானுஞ்செந்தாமரைமேலானுந் தேர்ந்தவர்கடாந்தேடிக்காணார்தானும், புரையாமெனப்படுவார்தாமேபோலும் போரேறுதாமேறிச்செல்வார்போலும், கரையாவரைவில்லேநாகநாணாக்காலத்தீயன்னகனலார்போலும், வரையாமதிலெய்த வண்ணர்போலு மாககூறிற்றன்றேன்றியப்பனூரே. (கய)

திருச்சிற்றம்பலம்.

---

### திருநாகைக்காரோணம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம.

பாரார்பரவும பழனத்தானைப் பருப்பதத்தானைப் பைஞ்ஞீலியானைச், சீரார்செழும்பவளக்குன்றொப்பானைத் திகழுந்திருமுடிமேற்றிங்கள்சூடிப், பேராயிரமுடையபெம்மான்றன்னைப் பிறர்தன்னைக்காட்சிக்கரியான்றன்னைக், காரார்கடல்புடைசூழ்ந்தநாகைக்காரோணத் தென்றுநானுங்காணலாமே. (க)

விண்ணோர்பெருமானைவீரட்டானைவெண்ணீறு மெய்க்கணிந்தமேனியானைப், பெண்ணானையாணானைப்பேடியானைப்பெருமபற்றத்தண்புலியூர்ப்பேணினானை, யண்ணாமலையானையானைந்தாடு மணியாரூர்வீற்றிருந்தவம்மான்றன்னைக், கண்ணார்கடல்புடைசூழ்ந்தநாகைக்காரோணத்தென்றுநானுங்காணலாமே. (உ)

சிறையார்வரிவண்டுதேனேபாடுந் திருமறைக்காட்டெந்தைசிவலோகனை, மறையான்றனைவாய்மூருங்கீழ்வேளூரும வலிவலமுந்தேவூருமன்னிய

ங்கே, யுறைவானையுத்தமனையொற்றியூரிற்பற்றியாள்கின்றபரமன்றன்னைக் கறையார்கடல் புடைசூழ்ந்தணாகைக் காரோணத்தெஞ்ஞான்றுங் காணலாமே. (௩)

அன்னமாம்பொய்கைசூழம்பரானை யாச்சிராமன்னகருமானைக்காவு, முன்னமேகோயிலாக்கொண்டான்றன்னைமூவுலகுந்தானாயமூர்த்திதன்னைச், சின்னமாம்பன்மலர்களன்றேசூடிச்செஞ்சடைமேல்வெண்மதியஞ்சேர்த்தினானைக், கன்னியம்புன்னைசூழ்ந்தணாகைக்காரோணத் தெஞ்ஞான்றுங் காணலாமே. (௪)

நடையுடையநல்லெருதொன்றூர்வான்றன்னை ஞானப்பெருங்கடலைநல்லூர்மேய, படையுடையமழுவாளொன்றேந்தினானைப் பனைமேயபேசும் படிறன்றன்னை, மடையிடையேவாளையுகளும்பொய்கை மருகல்வாய்ச்சோதிமணிகண்டனைக், கடையுடையநெடுமாடமோங்குநாகைக்காரோணத்தெஞ்ஞான்றுங்காணலாமே. (௫)

புலங்கொள்பூந்தேறலவாய்ப்புகலிக்கோனைப் பூம்புகார்க்கற்பகத்தைப் புன்கூர்மேய, வலங்கலங்கழனிசூழ்பணிநீர்க்கங்கை யவிர்சடைமேலாதரித் தவம்மான்றன்னை, யிலங்குதலைமாலைப்பாம்புகொண்டேகாசமிடையியங்குமீசன்றன்னைக், கலங்கற்கடல்புடைசூழ்ந்தணாகைக்காரோணத்தெஞ்ஞான்றுங்காணலாமே. (௬)

பொன்மணியைப்பூங்கொன்றைமாலையானைப் புண்ணியனைவெண்ணீறுபூசினானைச், சின்மணியமூவிலையஞ்சூலத்தானைத் தென்சிராப்பள்ளிச்சிவலோகனை, மன்மணியைவான்சுடலையூராப்பேணி வல்லெருதொன்றேறும்மறைவல்லானைக், கன்மணிகள்வெண்டிரைசூழ்ந்தணாகைக்காரோணத்தெஞ்ஞான்றுங்காணலாமே. (௭)

வெண்டலையும்வெண்மழுவுமேந்தினானை விரிகோவணமசைத்தவெண்ணீற்றானைப், புண்டலையமால்யானையுரிபோர்த்தானைப்புண்ணியனைவெண்ணீறணிந்தான்றன்னை, யெண்டிசையுமெரியாடவல்லான்றன்னை யேகம்பமேயானையெம்மான்றன்னைக், கண்டலங்கழனிசூழ்ந்தணாகைக்காரோணத்தெஞ்ஞான்றுங்காணலாமே. (௮)

சொல்லார்ந்தசோற்றுத்துறையான்றன்னைத் தொன்னாகன்னெறியாற்றார்ப்பான்றன்னை, வில்லானைமியச்சூர்மேவினானை வேதியர்கணால்வர்க்கும்வேதஞ்சொல்லிப், பொல்லாதார்தம்புரங்கண்மூன்றும்பொன்றப்பொறியரவமார்பாரப்பூண்டான்றன்னைக், கல்லாலின்கீழானைக்கழிசூழ்நாகைக்காரோணத்தெஞ்ஞான்றுங்காணலாமே. (௯)

மனைதுறந்தவல்லமணர்தங்கள்பொய்யு மாண்புரைக்குமனக்குண்டர்தங்கள்பொய்யுஞ் சினைபொதிந்தசீவரத்தர்தங்கள்பொய்யுமெய்யென்றுகருதாதேபோதுநெஞ்சே, பனையுரிவைத்தனதுடலிற்போர்த்தவெந்தையவன்பற்றேபற்றாகக்காணினல்லால், கனைகடலின்றென்கழிசூழ்ந்தணாகைக்காரோணத்தெஞ்ஞான்றுங்காணலாமே. (௧௦)

நெடியானுமலரவனுநேடியாங்கே நேருருவங்காணாமேசென்றுநின்ற, படியானைப் பாம்புரமேகாதலானைப்பாம்பரையோடார்த்தபடிறன்றன்னைச், செடிநாறும்வெண்டலையிற்பிச்சைக்கென்றுசென்றானைநின்றியூர்மேயான்றன்னைக், கடிநாறும்பூஞ்சோலையந்தணாகைக்காரோணத்தெஞ்ஞான்றுங்காணலாமே. (௧௧)

---

திருச்சிற்றம்பலம்.

## திருமறைக்காடு - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

தூண்டுசுடரனையசோதிகண்டாய்தொல்லமரர்சூளாமணிதான்கண்டாய், காண்டற்கரியகடவுள்கண்டாய்கருதுவார்க்காற்றவெளியான்கண்டாய், வேண்டுவார்வேண்டுவதேயீவான்கண்டாய்மெய்ந்நெறிகண்டாய்விரதமெல்லாம், மாண்டமனத்தார்மனத்தான்கண்டாய்மறைக்காட்டுறையுமணாளன்றானே. (க)

கைகிளரும்வீணைவல்லவனகண்டாய் காபாலிகண்டாய்திகழுஞ்சோதி, மெய்கிளருஞானவிளக்குக்கண்டாய் மெய்யடியாருள்ளத்துவித்துக்கண்டாய், பைகிளருநாகமசைத்தான்கண்டாய் பராபரனகண்டாய்பாசூரான்கண்டாய், வைகிளருங்கூர்வாட்படையான்கண்டாய மறைக்காட்டுறையுமணாளன்றானே. (உ)

சிலந்திக்கருண்முன்னஞ்செய்தான்கண்டாய் திரிபுரங்கடீவாய்ப்படுத்தான்கண்டாய், நிலந்துக்கநீர்வளிதீயானான்கண்டாய்நிரூபியரூபியுமாய்நின்றான்கண்டாய், சலந்துக்கசென்னிச்சடையானகண்டாய தாமரையான்செங்கண்மாறானேகண்டாய், மலந்துக்கமால்விடையொன்றூர்ந்தானகண்டாய்மறைக்காட்டுறையுமணாளன்றானே. (௩)

கள்ளிமுதுகாட்டிலாடிகண்டாய்காலனையுங்காலாற்கடந்தான்கண்டாய், புள்ளியுழைமானின்றோலானகண்டாய்புலியுரிசேராடைப்புனிதனகண்டாய், வெள்ளிமிளிர்பிறைமேற்சூடிகண்டாய் வெண்ணீற்றானகண்டாய்நஞ்சொடுங்கின்மேய, வள்ளிமணாளற்குத்தாதைகண்டாயமறைக்காட்டுறையுமணாளன்றானே. (௪)

மூரிமுழங்கொலிநீரானான்கண்டாய்முழுத்தழல்போன்மேனிமுதல்வன்கண்டாய், ஏரிநிறைந்தனையசெல்வனகண்டா யின்னடியார்க்கின்பம்விளைப்பானகண்டாய், ஆரியன்கண்டாய்தமிழன்கண்டாயண்ணாமலையுறையுமண்ணல்கண்டாய், வாரிமதகளிறேபோல்வான்கண்டாய்மறைக்காட்டுறையுமணாளன்றானே. (௫)

ஆடன்மால்யானையுரித்தான்கண்டாயகத்தியான்பள்ளி யமர்ந்தான்கண்டாய், கோடியான்கண்டாய்குழகனகண்டாய் குளிராரூர்க்கோயிலாக்கொண்டான்கண்டாய், நாடியநன்பொருள்களானானகண்டாய்நன்மையோடிம்மைமற்றம்மையெல்லாம, வாடியவாட்டந்தவிர்ப்பான்கண்டாய்மறைக்காட்டுறையுமணாளன்றானே. (௬)

வேலைசேர்நஞ்சமிடற்றான்கண்டாய்விண்டடவுபூங்கயிலை வெற்பனகண்டாய், ஆலைசேர்வேள்வியழித்தானகண்டாயமரர்கடாமேத்துமணாளன்கண்டாய், பானெய்சேரானைஞ்சுமாடிகண்டாய்பருப்பதத்தானகண்டாய் பரவைமேனி, மாலையோர்கூறுடையமைந்தனகண்டாய்மறைக்காட்டுறையுமணாளன்றானே. (௭)

அம்மைப்பயக்குமமிர்துகண்டாயந்தேன்றெளிகண்டா யாக்கஞ்செய்திட்டிம்மைப்பயக்குமிறைவன்கண்டாயென்னெஞ்சேயுன்னிலினியான்கண்டாய், மெய்ம்மையேஞானவிளக்குக்கண்டாய்வெண்காடன்கண்டாய் வினைகள்போக, மம்மரறுக்குமருந்துகண்டாய் மறைக்காட்டுறையு மணாளன்றானே. (௮)

மூலநோய்தீர்க்குமுதல்வன்கண்டாய் முத்தமிழுநான்மறையுமானான் கண்டாய், ஆலின்கீழ்நாலவர்க்கறத்தான்கண்டாயாதியுமந்தமுமானான்கண்டாய், பாலவிருத்தனுமானான்கண்டாய் பவளத்தடவரையேபோலவான கண்டாய், மாலைசேர்கொன்றைமலிந்தான்கண்டாய் மறைக்காட்டுறையுமணாளன்றானே. (கூ)

அயனவனுமாலுமறியாவண்ணமாரழலாய் நீண்டுகந்தவண்ணல் கண்டாய், துயரிலங்கைவேந்தன்றுலங்கவன்று சோதிவிரலாலுறைவைத்தான்கண்டாய், பெயரவர்க்குப்பேரருள்கள்செய்தானகண்டாய் பேருமபெருமபடையோடீந்தானகண்டாய், மயருறுவல்வினைநோய்தீர்ப்பானகண்டாய்மறைக்காட்டுறையுமணாளன்றானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருவாரூர் - திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்.

கைமமான்மதகளிற்றினுரிவையானகாணகறைக்கண்டன்காண் கண்ணார்நெற்றியான்காண், அமமான்காணுடரவொன்றாட்டினான்காணனலாடிகாணயிலவாயசூலத்தானகாண, எமமானகாணேழுலகுமாயினானகாணெரிசுடரோனகாணிலங்குமழுவாளனகாண, செமமானத்தொளியனனமேனியான்காணடிருவாரூரானகாணெனசிந்தையானே. (க)

ஊனேறுபடுதலையிலுணடியான்காணோங்காரன்காணூழிமுதலானான் காண், ஆனேறொன்றூர்ந்துழலுமையாறனகாணவடனகாணண்டத்துக்கப்பாலானகாண, மானேறுசரதலத்தெமமணிகணடனகாண மாதவனகாண் மாதவத்தினவிளைவானனகாண். தேனேறுமலரகொன்றைககணணியானகாணடிருவாரூரானகாணெனசிந்தையானே. (உ)

ஏவணத்தசிலையான்முப்புரமெய்தானகாணிறையவனகாண மறையவன்காணீசன்றானகாண், தூவணத்தசுடர்ச்சூலப்படையினானகாணசுடாமூன்றுங்கண்மூன்றாக்கொணடானறானகாண, ஆவணத்தாலெனறனையாட்கொண்டானகாணனலாடிகாணடியாரக்கமிர்தானனகாண், தீவணத்ததிருவுருவிற்கரியுருவன்காண்டிருவாரூரானகாணெனசிந்தையானே. (௩)

கொங்குவார்மலரககணணிகுற்றாலனகாண கொடுமழுவன்காணகொல்லைவெள்ளேற்றானகாண, எங்களபாறறுயாகெடுககுமெமபிரானகாணேழ்கடலுமேழமலையுமாயினன்காண, பொங்குமாகருங்கடனஞ்சுணடானறானகாணபொற்றூணகாண செமபவளத்திரள்போலவானகாண, செங்கணவாளரவமதியுடனவைத்தான்காணடிருவாரூரான்காணெனசிந்தையானே.

காரேறுநெடுங்குடுமிககயிலாயன்காண கறைககணடனகாணகண்ணார்நெற்றியான்காண, போரேறுநெடுங்கொடிமேலுயாத்தினனகாண புணணியன்காணெணணருமபல்குணத்தினனகாண், நீரேறுசுடர்ச்சூலப்படையினன்காணினமலனகாணிகரேதுமில்லாதானகாண, சீரேறுதிருமாலோர்பாகத்தான்காண்டிருவாரூரானகாணெனசிந்தையானே. (௫)

பிறையரவக்குறுங்கணணிச்சடையினனகாண் பிறப்பிலிகாணபெணணோடாணாயினன்காண, கறையுருவமணிமிடற்றுவெணணீற்றானகாணகழறொழுவார்பிறப்பறுக்குங்காபாலிகாண, இறையுருவககனவளையாளிமையப்பாகனகாணிருநிலனகாணிருநிலத்துக்கியல்பானான்காண், சிறையுருவதகளிவணடார்செமமையான்காணடிருவாரூரான்காணெனசிந்தையானே

தலையுருவச்சிரமாலைசூடினான்காண் டமருலகந்தலைகலனாப்பலிகொள் வான்காண், அலையுருவச்சுடராழியாக்கினான்காணவ்வாழிநெடுமாலுக்கரு ளினான்காண், கொலையுருவக்கூற்றுதைத்தகொள்கையான்காண் கூரெரிநீர் மண்ணொடுகாற்றாயினான்காண், சிலையுருவச்சரந்துரந்ததிறத்தினான்காண் டிருவாரூரான்காணென்சிந்தையானே. (எ)

ஐயன்காண்குமரன்காணாதியான்கா ணடன்மழுவாடானொன்றுபியன் மேலேந்து, கையன்காணகடற்பூதப்படையினான்காண்கண்ணெரியாலங்க ணையோனுடலகாய்ந்தான்காண், வெய்யன்காண்டண்புனலசூழ்செஞ்சடை யானகாண்வெண்ணீற்றான்காண்விசயற்கருள்செய்தான்காண், செய்யன் காண்கரியன்காணவெளியோன்றானகாண டிருவாரூரான்காணென்சிந்தை யானே. (அ)

மலைவளர்த்தமடமங்கைபாகத்தான்காண் மயானத்தான்காண்மதியஞ் சூடினானகாண, இலைவளர்த்தமலர்க்கொன்றைமாலையான்கா ணிறையவன காணெறிதிரைநீர்நஞ்சுண்டானகாண், கொலைவளர்த்தமழுவிலையசூலத்தான் காண்கொடுங்குன்றன்காணகொல்லையேற்றினான்காண், சிலைவளர்த்தசரந் துரந்ததிறத்தினான்காண் டிருவாரூரானகாணென்சிந்தையானே. (௯)

பொற்றாதுமலர்க்கொன்றைசூடினான்காணபுரிநூலனகாண்பொடியா ர்மேனியானகாண, மற்றொருந்தனக்கொப்பாரிலலாதானகாண்மறையோதிகா ணெறிநீர்நஞ்சுண்டான்காண், எற்றாலுங்குறையொன்றுமில்லாதானகாணி றையவன்காண்மறையவன்காணீசன்றானகாண், செற்றார்கள்புரமூன்றுஞ் செற்றான்றானகாண்டிருவாரூரானகாணென்சிந்தையானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருவாரூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

உயிராவணமிருந்துற்றுநோக்கியுள்ளக்கிழியினுருவெழுதி
உயிராவணஞ்செய்திட்டுன்கைத்தந்தாலுணரப்படுவாரோடொட்டிவாழ்தி
அயிராவணமேறாதானேறேறியமரர்நாடாளாதேயாரூராண்ட
அயிராவணமேயென்னெம்மானேநின்னருட்கண்ணானோக்காதாரல்லாதாரே.

எழுதுகொடியிடையாரேழைமென்றோளிளையார்கணம்மையிகழாமுன்னம்
பழுதுபடநினையேறபாவிநெஞ்சேபண்டுதானென்னோடுபகைதானுண்டோ
முழுதுலகில்வானவர்கண்முற்றுங்கூடிமுடியாலுறவணங்கிமுற்றமபற்றி
அழுதுதிருவடிக்கேபூசைசெய்யவிருக்கின்றானூர்போலுமாரூர்தானே. ()

தேரூரார்மாவூரார்திங்களூரார்திகழ்புன்சடைமுடிமேற்றிங்கள்சூடிக்
காரூராநின்றகழனிச்சாயற்கணார்ந்தமாடங்கலந்துதோன்றும
ஓரூராவுலகெலாமொப்பக்கூடியுமையாண்மணவாளாவென்றுவாழ்த்தி
யாரூராவாரூராவென்கின்றார்களமரர்கடம்பெருமானேயெங்குற்றாயே.(௩)

கோவணமோதோலோவுடையாவது கொல்லேறோவேழமோவூர்வது தான், பூவணமோபுறம்பயமோவன்றாயிற்றான் பொருந்தாதார்வாழ்க்கைதி ருந்தாமையோ, தீவணத்தசெஞ்சடைமேற்றிங்கள்சூடித் திசைநான்கும வைத்துகந்தசெந்தீவண்ணர், ஆவணமோவொற்றியோ வுமையாடாமறி யன்மற்றாராமாரூரர்தானே. (௪)

கள்ளெழுவாளரின்னம்பராரெரீபவளவண்ணர்குடமூக்கிலார்
றானே.தவளக்கையாள்பாகமாகவார்சடையார்வந்துவலஞ்சுழியார்

போந்தாரடிகள்புறம்பயத்தேபுகலூர்க்கேபோயினாபோரேறேறி
ஆய்ந்தேயிருப்பார்போயாரூர்புக்காரண்ணலார்செய்கின்றகணமாயமே. ()

கருவாகிக்குழம்பிருந்து கலித்துமூளை கருநரம்புமவெள்ளெலும்புஞ் சேர்ந்தொன்றாகி, உருவாகிப்புறப்பட்டிங்கொருத்திதன்னாலவளர்க்கப்பட் டுயிராருங்கடைபோகாரான், மருவாகிநின்னடியே மறவேனம்மான்மறித் தொருகாற்பிறப் புண்டேனமறவாவண்ணம், திருவாரூரமணவாளாதிருத் தெங்கூராசெம்பொனேகம்பனேதிகைத்திட்டேனே. (௬)

முன்னமவனுடையநாமங்கேட்டாள மூர்த்தியவனிருக்கும் வண்ணங் கேட்டாள், பின்னையவனுடையவாரூர்கேட்டாள்பெயர்த்துமவனுக்கேபிச் சியானாள், அன்னையையுமத்தனையுமன்றேநீத்தாளகன்றாளகலிடத்தாராசார த்தைத், தன்னைமறந்தாடன்னாமங்கெட்டாடலைப்பட்டாணங்கை தலைவன் றாளே. (எ)

ஆடுவாய்நீநட்டமளவிற்குன்றாவவியடுவாருமறையோரறிந்தேனுன்னைப்
பாடுவார்தும்புருவுநாரதாதிபரவுவாரமரர்களுமமரர்கோனும்
தேடுவாாதிருமாலுநானமுகனுநீண்டுவாள்மலைமகளுநகங்கையாளும்
கூடுமேநாயடியேன்செய்குற்றேவற்குறையுண்டேதிருவாரூர்குடிகொண்டார்க்கே.

நீரூருஞ்செஞ்சடையாய்நெற்றிக்கண்ணாய் நிலாத்திங்கட்டுண்டத்தாய் நின்னைத்தேடி, ஓரூருமொழியாமேயொற்றித்தெங்குமுலகமெலாந்திரிந் துநினைக்காண்பான், தேரூருநெடுவீதிபற்றிநின்றுதிருமாலுநான்முகனுந் தேர்ந்துங்காணா, தாரூராவாரூராவென்கின்றார்களமரர்கடம்பெருமானேயா ரூராயே. (௯)

நல்லூரேநன்றாகநட்டமிட்டுநறையையூர்றைப்பழையாறேபாயவேறிப், பல்லூருமபலிதிரிந்துசேற்றூர்மீதேபலாகாணத்தலையாலங்காட்டினூடே இலலார்ந்தபெருவேளூர்த் தளியேபேணியிராப்பட்டீச்சரங்கடந்துமணற் கால்புக்கு, எல்லாருந்தனிச்சாத்தங் குடியிற்காணவிழைப்பொழுதிற்றிரு வாரூர்புக்காாதாமே. (௧௦)

கருத்துத்திக்கதநாகங்கையிலேந்திக்கருவரைபோற் களியானைகதறக் கையால், உரித்தெடுத்துச்சிவந்ததன்றோல்பொருந்தமூடியுமையவளையச் சுறுத்துமொளிகொணமேனித், திருத்துருத்தி திருப்பழனந்திருநெய்த்தா னந்திருவையாறிடங்கொண்ட செல்வரிந்நாள், அரிப்பெருத்தவெள்ளேற் றையடரவேறி யப்பனாரிப்பருவமாரூராரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவாரூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

பாதித்தன்றிருவுருவிற்பெண்கொண்டானைப் பண்டொருகாற்றசமுக னையழுவித்தானை, வாதித்துத்தடமலரான்சிரங்கொண்டானைவண்கருப்புச் சிலைக்காமனுடல்கொண்டானைச், சோதிச்சந்திரனமேனிமறுச்செய்தானைச் சுடராங்கிதேவனையோர் கைக்கொண்டானை, ஆதித்தன்பற்கொண்டவம்மா ன்றன்னையாரூரிற்கண்டடியேனயர்த்தவாறே. (௧)

வெற்புறுத்ததிருவடியாற் கூற்றட்டானைவிளக்கினொளிமின்னினொளி முத்தின்சோதி, ஒப்புறுத்ததிருவுருவத்தொருவன்றன்னையோதாதேவேத முணர்ந்தான்றன்னை, அப்புறுத்தகடனஞ்சமுண்டான்றன்னையமுதுண்

டாருலந்தானுமூலவாதானை, அப்புறத்தநீரகத்தேயழலானானையாரூரிற்க ண்டடியேனயர்த்தவாறே. (உ)

ஒருகாலத்தொருதேவர்கண்கொண்டானையூழிதோறூழியுயர்ந்தான் றன்னை, வருகாலஞ்செல்காலமாயினானை வனகருப்புச்சிலைக்காமனுடலட் டானைப், பொருவேழக்களிற்றுரிவைப்போர்வையானைப் புள்ளரையனுட றன்னைப்பொடிசெய்தானை, அருவேள்விதகர்த்தெச்சன்றலைகொண்டானை யாரூரிற்கண்டடியேனயர்த்தவாறே. (௩)

மெய்ப்பால்வெண்ணீறணிந்தமேனியானை வெண்பளிங்கினுட்பதித்த சோதியானை, ஒப்பானையொப்பிலாவொருவன்றன்னை யுத்தமனைநித்திலத் தையுலகமெல்லாம், வைப்பானைக்களைவானைவருவிப்பானைவல்வினையேன் மனத்தகத்தேமன்னினானை, அப்பாலைக்கப்பாலைப்பாலானையாரூரிற்கண்ட டியேனயர்த்தவாறே (௪)

பிண்டத்திற்பிறந்ததொருபொருளைமற்றைப் பிண்டத்தைப்படைத் ததனைப்பெரியவேதத், துண்டத்திற்பணிபொருளைச்சுடுதீயாகிச் சுழல்கா லாய்நீராகிப்பாராயிற்றைக், கண்டத்திறநீதுநஞ்சமுதுசெய்துகண்மூன்று படைத்ததொருகருமபைப்பாலை, அண்டத்துக்கப்புறத்தார்தமக்குவித்தை யாரூரிற்கண்டடியேனயாததவாறே. (௫)

நீதியாய்நிலனாகிநெருப்பாய்நீராய்நிறைகாலாயிவையிற்றினியமமாகிப் பாதியாயொன்றாகியிரண்டாய்மூன்றாய்ப்பரமாணுவாய்ப்பழுத்தபண்களாகிச் சோதியாயிருளாகிச்சுவைகளாகிச்சுவைகலந்தவப்பாலாய் வீடாய்வீடின ஆதியாயந்தமாய்நின்றான்றன்னையாரூரிற்கண்டடியேனயாததவாறே.

(௬-எ-அ-௯-௰.)

திருச்சிற்றம்பலம்.

---

திருவாரூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

பொய்ம்மாயப்பெருங்கடலிற் புலம்பாநின்ற புண்ணியங்காள்தீவினை காள்திருவேநீங்கள், இம்மாயப்பெருங்கடலையரித்துத்தின்பீர்க் கில்லையேகிட ந்துதான்யானேல்வானேர், தம்மானைத்தலைமகனைத்தண்ணலாரூர்த்தடங்க டலைத்தொடர்ந்தோரையடங்கச்செய்யும், எம்மானைறனடித்தொடாவானு ழிதர்கின்றே னிடையிலேனகெடுவீர்காளிடறேன்மினமே. (க)

ஐம்பெருமாபூதங்காளொருவிர் வேண்டிற்றொருவிர்வேண்டீரீண்டிவ் வவனியெல்லாம, உம்பரமேயுமவசமேயாககவலலீரகில்லையேனுகர்போக ம்யானேல்வானேர், உம்பருமாயூழியுமாயுலகேழாகியொள்ளாரூர்நள்ளமிர் தாமவள்ளலவானேர், தம்பெருமானாய்நின்ற வரனைக்காண்பேனறடைப்ப டுவேனுக்கருதித்தருக்கேனமின்னே. (உ)

சில்லுருவிற்குறியிருத்திநித்தல்பற்றிச் செழுங்கணாேக்குமிதுவூக்க மன்றுபல்லுருவிற்றொழிலபூண்டபஞ்சபூதப்பளகீருமவசமன்றேபாரேல ல்லாம், சொல்லுருவிறசுடாமூன்றுயுருவுமூன்றாய்த்தூநயன மூன்றாகியா ண்டவாரூர், நல்லுருவிற்சிவனடியேயடைவேனுமமா னமைப்புண்ணேன் நமைத்துநீர்நடமின்களே. (௩)

உன்னுருவிற்சுவையொளியூ றோசைநாற்றத்துருப்பின குறிப்பாகு நமவீர்நுங்கள், மன்னுருவத்தியற்கைகளால்வைப்பீர்க்கைகே வையகமே

போதாதேயானேல்வானோர், பொன்னுருவைத்தென்னாரூர்மன்னுங்குன்றைப் புவிக்கெழிலாஞ்சிவக்கொழுந்தைப்புகுந்தென்சிந்தை, தன்னுருவைத்தந்தவனையெந்தைதன்னைத்தலைப்படுமவன்றலைப்படுப்பான்றருக்கேன்மின்னே. (௪)

துப்பினைமுன்பற்றறாவிறலேமிக்கசோர்வுபடுசூட்சியமே சுகமேநீங்கள், ஒப்பினையைப்பாவித்திவ்வுலகமெல்லாமுழறுமிதுகுறைமுடிப்பீராக்கிரிதேயென்றன், வைப்பினைப்பொன் மதிலாரூர்மணியைவைகன்மணாளனையெம்பெருமானை வானோர்தங்கள், அப்பனைச்செப்பிடவடைவேனுமமாறு னுமாட்டுவேனோட்டநீங்கலேயேன்மின்னே. (௫)

பொங்குமதமானமேயார்வசெற்றக்குரோதமேயுலோபமேபொறையேநீங்கள், உங்களபெருமானிலதிமையெல்லாமுழறுமதுகுறைமுடிப்பீராக்கிரிதேயானேல், அங்கமலத்தயனொடுமாலாகிமற்றுமதற்கப்பாலொன்றாகியறியவொண்ணாச், செங்கனகத்தனிக்குன்றைச்சிவனையாரூர்ச்செல்வனைச்சேர்வேனுமாறசெலுத்துவேனே. (௬)

இடர்பாவமெனமிக்கதுக்கவேட்கைவெறுப்பேயென்றனையீருமுலகையோடிக், குடைகின்றீர்குலங்கள் குலுங்கிநுங்கள்குறிநின்றதமையாதேயானேல்வானோர், அடையாததம்புரமூன்றுமெரிசெய்தானையமரர்கடம்பெருமானையரனையாரூர், உடையானைக்கடுகச்சென்றடைவேனுமமரலாட்டுவேனோட்டநீங்கலேயேன்மின்னே. (எ)

விரைந்தாளுநல்குரவே செல்வேபொல்லா வெகுட்சியேமகிழ்ச்சியேவெறுப்பேநீங்கள், நிரைந்தோடிமாநிலத்தையரித்துத்தின்பீர்க்கிலலையேநுகர்போகம யானேல்வானோர், கரைந்தோடவருநஞ்சையமுதுசெய்தகற்பகத்தைத்தற்பரத்தைத் திருவாரூரில், பரஞ்சோதிதனைக்காணப்போனபட்டேனுமபணபிறபரிந்தோடியோட்டந்துபகட்டனமின்னே. (அ)

நாள்வாயதொழிற்பஞ்சேந்திரியவஞ்சமுகரிகாண் முழுதுமிவ்வுலகையோடி, நாள்வாயுநமமுடையவமமராணைநடாத்துகின்றீர்க்கமையாதேயானேல்வானோர், நீள்வானமுகடதனைத்தாங்கிநின்றநெடுந்தூணைப்பாதாளக்கருவையாரூர், ஆளவானைக்கடுகச்சென்றடைவேனுமமாலாட்டுவேனோட்டநீங்கலேயேன் மின்னே. (கூ)

கருக்கமொடுபெருக்கநிலைநீக்கல்பற்றித்துப்பறையென றனைவீரிவ்வுலகையோடிச், செருக்கிமிகைசெலுத்தியுமசெய்கைவைகல்செய்கின்றீர்க்கமையாதேயானேனமிக்க, தருக்கிமிகவரையெடுத்தவரக்கனந்தளரவடியெடுத்தவன்றனபாடல்கேட்டு, இரக்கமெழுந்தருளியவெம்பெருமான்பாதத்திடையிலேனகெடுவீர்காளிடறேனமின்னே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

## திருஆரூர் - திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்.

நீற்றினையுநெற்றிமேலிட்டார்போலுநீங்காமேவெள்ளெலும்புபூண்டாரும், காற்றினையுங்கடிதாகநடந்தார்போலுங்கண்ணின்மேற்கண்ணொன்றுடையார்போலும், கூற்றினையுங்குரைகழலாலுதைத்தார்போலுங்கொல்புலித்தோலாடைக்குழகர்போலும், ஆற்றினையுஞ்செஞ்சடைமேல்வைத்தார்போலுமணியாரூர்த்திருமூலத்தானனாரே. (க)

பரியதோர்பாம்பரைமேலார்த்தார்போலும்பாசுபதம்பார்த்தற் களித்தார்போலும்,கரியதோர்களிற்றுரிவைபோர்த்தார்போலுங்காபாலங்கட்டங்கக்கொடியாரபோலும், பெரியதோர்மலைவில்லாவெய்தாரபோலும்போகந்தியெனனும்பெயராரபோலும், அரியதோரரணங்களட்டார்போலுமணியாரூர்த்திருமூலத்தானனாரே. (உ)

துணியுடையர்தோலுடையரெனபாரபோலுந் தூயதிருமேனிச்செல்வர்போலும்,பிணியுடையவடியாரைத்தீர்ப்பாரபோலும்பேசுவாரகெல்லாமபெரியார்போலும்,மணியுடையமாநாகமாரபபாரபோலும்வாசுகிமாநாணுகவைத்தாரபோலும்,அணியுடையநெடுவீதிநடப்பாரபோலுமணியாரூர்த்திருமூலத்தானனாரே. (௩)

ஒட்டகத்தேயூணாகவுகந்தாரபோலுமோருருவாய்த்தோன்றியுயர்ந்தார்போலும், நாட்டகத்தேநடைபலவுநவின்றாரபோலுஞானப்பெருங்கடற்கோர்நாதாபோலும், காட்டகத்திலாடலுடையாரபோலுங்காமரங்கள்பாடித்திரிவாரபோலும், ஆட்டகத்திலானைந்துகந்தாரபோலுமணியாரூர்த்திருமூலத்தானனாரே. (௪)

ஏனத்திளமருப்புப்பூண்டார்போலுமிமையவர்களேத்தவிருந்தார்போலும், கானக்கல்லாற்கீழ்நிழலாரபோலுங்கடனஞ்சமுண்டிருண்ட கண்டர்போலும,வானத்திளமதிசேர்சடையாரபோலும்வானகயிலை வெற்பின்மகிழ்ந்தார்போலும், ஆனத்துமுன்னெழுத்தாய்நின்றார்போலுமணியாரூர்த்திருமூலத்தானனாரே. (௫)

காமனையுங்கரியாகக்காய்ந்தார்போலுங்கடனஞ்சமுண்டிருண்ட கண்டர்போலும், சோமனையுஞ்செஞ்சடைமேல்வைத்தாரபோலுஞ்சொல்லாகிச்சொறபொருளாய்நின்றாரபோலும்,நாமனையும்வேதத்தாதாமேபோலுநங்கையோர்பானமகிழ்ந்தபார்போலும, ஆமனையுந்திருமுடியாதாமேபோலுமணியாரூர்த்திருமூலத்தானனாரே. (௬)

முடியார்மதியரவம்வைத்தார்போலுமூவுலகுந்தாமேயாய்நின்றார்போலும், செடியார்தலைகொண்டுழல்வார்போலுஞ்செலகத்தானகண்டசிவனாபோலும, கடியாரநஞ்சுண்டிருண்டகண்டாம்போலுங்கங்காள வேடக்கருத்தாபோலும், அடியாரடிமையுகப்பாரபோலுமணியாரூர்த்திருமூலத்தானனாரே. (௭)

இந்திரனைத்தயினிதாகவீந்தார்போலு மிமையவர்கள்வந்திறைஞ்சு மிறைவர்போலும்,சுந்தரத்தபொடிதனைத்துதைந்தார்போலுந்தூயதிருமேனித்தோன்றல்போலும், மந்திரத்தைமனத்துளேவைத்தார்போலுமாநாகநாணகவார்த்தாரபோலும், அந்தரத்தேயணியாநஞ்சுண்டாரபோலுமணியாரூர்த்திருமூலத்தானனாரே. (௮)

பிண்டத்தைக்காக்குமபிரானார்போலுமபிறவியிறவியிலாதார்போலும்
முண்டத்துமுக்கணனுடையாரபோலுமுழுநீறுபூசுமுதல்வர் போலும
கண்டத்திறையேகறுத்தார்போலுங்காளத்திகாரோணமேயாரபோலும்
அண்டத்துக்கப்புறமாய்நின்றாரபோலுமணியாரூர்த்திருமூலத்தானனாரே.

ஒருகாலத்தொன்றாகிநின்றார்போலுமூழிபலகண்டிருந்தார்போலும், பெருகாமேவெள்ளந்தவிர்த்தார்போலுமபிறப்பிடும்பைசாக்காடொன்றில்லார்போலும், உருகாதாருள்ளத்துநில்லார்போலுமுகப்பார்மனத்தென்று

நீங்கார்போலும, அருகாகவநதென்னையஞ்சலென்பாரணியாரூர்த்திருமூல த்தானனாரே. (௧௦)

நன்றாகநடைபலவுநவி[ன்றா]ர்[போ]லுமஞானப்பெருங்கடற்கோர் நாதர் போலும, கொன்றாகிகெ[ா]..கொனறுணடாரபோலுநகோளரக்காகோ னறலைகள்குறைத்தாரபோலும, சென்றூர்திரிபுரங்களெய்தார்போலும தி சையனைததுமாயனைததுமானாரபோலும, அன்றாகிலாயிரமபேரானார்போ லுமணியாரூர்த்திருமூலததானனாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவாரூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

திருமணியைத்தித்திக்குநதேனைப்பாலைத் தீங்கரும்பினின்சுவையைத் தெளிநததேறல், குருமணியைக்குழைமொநதாளமவீணைகொககரையி னசசசரையினபாணியானைப, பருமணியைப்பவளத்தைசபபசுமபொன்முத் தைபபருப்பதத்திலருங்கலத்தைபபாவந்தீர்க்கும, அருமணியையாரூரிலம மான்றனையறியாதடிநாயே[ன]..[த்த]வாறே. (௧)

பொனனேபோறதிருமேனியுடையான்றனைப பொங்குவெண்ணூ லானைபபுனிதனறன்னை, மினனனைமினனிடையாள்பாகன்றனைவேழத் தினுரிவிருமபிபபோர்த்தான்றனைத், தன்னனைதன்றொப்பாரிலலாதானை த்ததுவனையுத்தமனைத்தழலபோனமேனி, அன்னனையாரூரிலமமானறன னையறியாதடிநாயேனயாததவாறே. (௨)

ஏற்றானையேழுலகுமானான்றனனையேழ்கடலுமேழ்மலையுமானான்றன னைக், கூற்றானைககூறறமுதைததானறனனைககொடுமழுவாளகொணடேந்தோ ர்கையானறனனைக, காறறானைததீயானைநீருமாகிக்கடிகமழுமபுனசடைமே ற்கங்கைவெள்ள, ஆற்றானையாரூரிலமமானறனனையறியாதடிநாயேனயாத் தவாறே. (௩)

முநதியவல்வினைகடீர்ப்பான்றனனைமூவாதமேனிமுக்கணணினானைச் சநதிரனுமவெங்கதிருமாயினானைச்சங்கானைசசங்ககக்குழையானறனனை மநதிரமுமறைப்பொருளுமானானறனனைமறுமையுமிம்மையுமானான்றன்னை அநதரனையாரூரிலமமானறனனையறியாதடிநாயேனயாததவாறே. (௪)

பிறநெறியாயபபீடாகிப்பிஞ்ஞகனுமாய்ப்பிததனுய்ப்பத்தாமனத்தினு ள்ளே, புறநெறியாயோமமாய்ப்பெருங்காடடிலேரிபலவிடங்கட்டமாடினனைத், துறநெறியாயததூயபாயதம்தோறறமாகி நாறறமாய்நனமலாமேலுறையாநி னற, அறநெறியையாரூரிலமமானறனனையறியாதடிநாயேனயாததவாறே.

பழகியவல்வினைகளபாறறுவானைபபசுபதியைப்பாவ்னைபபாவந்தீர் க்கும், குழகனைககோளபவொனறுடுவானைககொடுமகொட்டிகொண்டேந்தோ ர்கையானறனனை, விழவனைவீரட்டமேவினானைவிணணவாகளேத்திவிரும புவானை, அழகனையாரூரிலமமானறனனையறியாதடிநாயேனயாததவாறே.

சூளாமணிசேர்முடியான்றனனைசசுணணவெண்ணீறணிநத சோதியானைக் கோள்வாயரவமசைத்தானறனனைக்கொல்புலிததோலாடைக்குழகன்றனனை நாள்வாயுமபத்தாமனத்துளானைநமபனைநக்கனைமுக்கணனை ஆள்வானையாரூரிலமமான்றன்னையறியாதடிநாயேனயாத்தவாறே. (எ)

முத்தினைமணிதன்னைமாணிக்கத்தைமூவாதகற்பகத்தின்கொழுந்து தன்னைக், கொத்தினைவயிரத்தைக்கொல்லேறூர்ந்துகோளரவொன்றாட்டுங

குழகன்றன்னைப், பத்தனைப்பத்தர்மனத்துள்ளானைப் பரிதிபோற்றிருமேனி யுடையான்றன்னை, அத்தனையாரூரிலம்மான்றன்னையறியாதடிநாயேனயர்த்தவாறே. (அ)

பையாடரவங்கையேந்தினானைப் பரிதிபோற்றிருமேனிப்பானீற்றானை, நெய்யாடுதிருமேனிநிமலன்றன்னை நெற்றிமேன்மற்றொருகண்ணிறைவித்தானைச், செய்யானைச்செம்பவளத்திரள்போல்வானைச்செஞ்சடைமேல்வெண்டிங்கள்சேர்த்தினானை, ஐயாறுமேயானையாரூரானையறியாதடிநாயேனயர்த்தவாறே. (கூ)

சீரார்முடிபத்துடையான்றன்னைத் தேசழியத்திருவிரலாற்சிதைய நூக்கிப், பேராரபெருமைகொடுத்தான்றன்னைப் பெண்ணிரண்டுமாணுமாய்நின்றான்றன்னைப், போரார்புரங்கள்புரளநூறும்புண்ணியனை வெண்ணீறணிந்தான்றன்னை, ஆரானையாரூரிலம்மான்றன்னை யறியாதடிநாயேனயர்த்தவாறே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருஆரூர் - திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்.

எம்பந்தவல்வினைநோய்தீர்த்திட்டான்காண் ஏழ்கடலு மேழுலகுமாயினான்காண், வம்புந்துகொன்றையந்தாமாலையான்காண் வளர்மதிசேர்கண்ணியன்காண் வானோர்வேண்ட, அம்பொன்றான்மூவெயிலுமெரிசெய்தான்காணனலாடியானஞ்சுமாடினான்காண், செம்பொன்செய் மணிமாடத்திருவாரூரிற்றிருமூலத்தானத்தெஞ்செல்வன்றானே. (க)

அக்குலாமரையினன்காண் அடியார்க்கென்று மாரமுதாயண்ணிக்குமையாற்றான்காண், கொக்குலாம்பீலியொடுகொன்றைமாலைக்குளிர்மதியுங் கூரரவுநீருஞ்சென்னித், தொக்குலாஞ்சடையினன்காண் தொண்டர்செல்லுந் தூநெறிகாண்வானவர்கடுதிசெய்தேத்தும், திக்கெலாநிறைந்தபுகழ்த்திருவாரூரிற்றிருமூலத்தானத்தெஞ்செல்வன்றானே. (உ)

நீரேறுசடைமுடியெந்நிமலன்றான்காண் நெற்றிமேலொற்றைக்கண்ணிறைவித்தான்காண், வாரேறுவனமுலையாள்பாகத்தான்காண் வளர்மதிசேர்சடையான்காண் மாதேவன்காண், காரேறுமுகிலனையகண்டத்தான்காண் கல்லாலின்கீழறங்கள்சொல்லினான்காண், சீரேறுமணிமாடத்திருவாரூரிற்றிருமூலத்தானத்தெஞ்செல்வன்றானே. (ங)

கானேறுகளிற்றுரிவைப்போர்வையான்காண் கற்பகங்காண் காலனையன்றுதைசெய்தான்காண், ஊனேறுமுடைதலையிற்பலிகொள்வான்காணுத்தமன்காணொற்றியூர்மேவினான்காண், ஆனேறொன்றதுவேறுமண்ணறான்காணாதித்தன்பல்லிறுத்தவாதிதான்காண், தேனேறுமலர்ச்சோலைத்திருவாரூரிற்றிருமூலத்தானத்தெஞ்செல்வன்றானே. (ச)

பிறப்பொடிறப்பென்றுமில்லாதான்காண் பெண்ணுருவோடாணுருவமாயினான்காண், மறப்படுமென்சிந்தைமருணீக்கினான்காண் வானவருமறியாதநெறிதந்தான்காண், அறப்படுபூமலர்த்தூபந்தீபநல்லநறுஞ்சாந்தங்கொண்டேந்திநாளுமவானோர், சிறப்பொடுபூசிக்குந்திருவாரூரிற்றிருமூலத்தானத்தெஞ்செல்வன்றானே. (ரு)

சங்கரன்காண் சக்கரமாற்கருள்செய்தான்காண் தருணேந்துசேகரன்காண்டலைவன்றான்காண், அங்கமலத்தயன்சிரங்களைந்திலொன்றையறுத்த

வன்காணணிபொழில்சூழையாற்றான்காண், எங்கள்பெருமான்காணென்
னிடர்கள்போகவருள்செய்யுமிறைவன்காணிமையோரேத்துஞ்,செங்கமல
வயல்புடைசூழ்திருவாரூரிற்றிருமூலத்தானத்தெஞ்செல்வன்றானே. (௬)

நன்றருளித்தீதகற்றுநம்பிரான்காணான்மறையோ டாறங்கமாயினான்
காண், மின்றிகழுஞ்சோதியன்காணாதிதான்காண் வெள்ளேறுநின்றுலவு
கொடியினான்காண், துன்றுபொழிற்கச்சியேகம்பன்றான்காண் சோற்றுத்
துறையான்காண்சோலைசூழ்ந்த, தென்றலார்மணங்கமழுந்திருவாரூரிற்றி
ருமூலத்தானத்தெஞ்செல்வன்றானே. (௭)

பொன்னலத்தநறுங்கொன்றைச் சடையினான்காண்புகலூரும் பூவண
மும்பொருந்தினான்காண், மின்னலத்தநுண்ணிடையாள்பாகத்தான்காண்
வேதியன்காண்வெண்புரிநூன்மார்பினான்காண், கொன்னலத்தமூவிலைவே
லேந்தினான்காண்கோலமாநீறணிந்தமேனியான்காண், செந்நலத்தவயல்பு
டைசூழ்திருவாரூரிற்றிருமூலத்தானத்தெஞ்செல்வன்றானே. (௮)

விண்டவர்தம்புரமூன்றுமெரிசெய்தான்காண் வேலைவிடமுண்டிருண்
டகண்டத்தான்காண், மண்டலத்திலொளிவளரவிளங்கினான்காண்வாய்மூ
ருமறைக்காடுமருவினான்காண், புண்டரிகக்கண்ணானும்பூவின்மேலைப்புத்
தேளுங்காண்பரியபுராணன்றான்காண், தெண்டிரைநீர்வயல்புடைசூழ்திரு
வாரூரிற்றிருமூலத்தானத்தெஞ்செல்வன்றானே. (௯)

செருவளருஞ்செங்கண்மாலேற்றினான்காண்டென்னானைக் காவான்கா
ண்டீயில்வீழ,மருவலர்தம்புரமூன்றுமெரிசெய்தான்காண்வஞ்சகர்பாலணு
காதமைந்தன்றான்காண், அருவரையையெடுத்தவன்றன்சிரங்கள்பத்துமை
ந்நான்குதோளுநெரிந்தலறவன்று, திருவிரலாலடர்த்தவன்காண்திருவாரூ
ரிற்றிருமூலத்தானத்தெஞ்செல்வன்றானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருஆரூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

இடர்கெடுமாறெண்ணுதியேனெஞ்சே நீவாவீண்டொளிசேர்கங்கைச்
சடையாயென்றும், சுடரொளியாயுள்விளங்குசோதியென்றுந் தூநீறுசேர்
ந்திலங்குதோளாயென்றும், கடல்விடமதுண்டிருண்டகண்டாவென்றுங்க
லைமானமறியேந்துங்கையாவென்றும், அடல்விடையாயாரமுதே யாதியெ
ன்றுமாரூராவென்றென்றேயலறாநில்லே. (௧)

செடியேறுதீவினைகடீருமவண்ணஞ் சிந்திதேநெஞ்சமே திண்ணமா
கப், பொடியேறுதிருமேனியுடையாயென்றும்புரந்தரன்றன்றோடுணித்த
புனிதாவென்றும், அடியேனையாளாக்கொண்டாயென்றுமம்மானேயாரூ
ரெம்மரசேயென்றும், கடிநாறுபொழிற்கச்சிக்கம்பாவென்றுங் கற்பகமே
யென்றென்றேகதறாநில்லே. (௨)

நிலைபெறுமாறெண்ணுதியேனெஞ்சேநீவா நித்தலுமெம்பிரானுடைய
கோயில்புக்குப், புலர்வதன்முன்னலகிட்டுமெழுக்குமிட்டுப்பூமாலைபுனைந்
தேத்திப்புகழ்ந்துபாடித், தலையாரக்கும்பிட்டுக்கூத்துமாடிச்சங்கராசயபோ
ற்றிபோற்றியென்றும், அலைபுனல்சேர்செஞ்சடையெம்மாதீயென்றுமாரூ
ராவென்றென்றேயலறாநில்லே. (௩)

புண்ணியமுநன்னெறியுமாவதெல்லாநெஞ்சமே யிதுகண்டாய்பொரு
ந்தக்கேணீ, நுண்ணியவெண்ணூல்கிடந்தமார்பாவென்றுநுந்தாதவொண்

சுடரேயென்றுநாளும், விண்ணியங்குதேவர்களும்வேதநான்கும்விரைமலர்மேனான்முகனுமாலுங்கூடி, எண்ணரியதிருநாமமுடையாயென்றுமெழிலாரூராவென்றேயேத்தாநில்லே. (௪)

இழைத்தநாளெல்லைகடப்பதென்றாலிரவினொடுபகலுமேத்தி வாழ்த்திப், பிழைத்தவெல்லாம்பொறுத்தருள்செய்பெரியோயென்றும் பிஞ்ஞகனேமைஞ்ஞவிலுங்கண்டாவென்றும், அழைத்தலறியடியேனுன்னரணங்கண்டாயணியாரூரிடங்கொண்ட வழகாவென்றும், குழற்சடையெங்கோனென்றுங்கூறுநெஞ்சேகுற்றமில்லையென்மேனான்கூறினேனே. (௫)

நீப்பரியபல்பிறவிநீக்குமவண்ணங்கினைநதிருநதேன்காணெஞ்சே நித்தமாகச், சேப்பிரியாவெல்கொடியினானேயென்றுஞ்சிவலோகநெறிதந்தசிவனேயென்றும், பூப்பிரியாநான்முகனும்புள்ளின்மேலைப்புண்டரிகக்கண்ணானும்போற்றியென்னத், தீப்பிழம்பாய்நின்றவனேசெல்வமல்குதிருவாரூராவென்றேசிந்திநெஞ்சே. (௬)

பற்றிநின்றபாவங்கள்பாற்றவேண்டிற் பாகதிக்குச்செல்வதொருபரிசுவேண்டிற், சுற்றிநின்றசூழ்வினைகள் வீழ்க்கவேண்டிற்சொல்லுகேன்கேணெஞ்சேதுஞ்சாவண்ணம், உற்றவருமுற்றதுணையுநீயேயென்றுமுன்னையல்லாலொருதெய்வமுள்கேனென்றும், புற்றரவக்கச்சார்த்தபுனிதாவென்றும் பொழிலாரூராவென்றேபோற்றுநில்லே. (௭)

மதிதருவாய்நெஞ்சமேயுய்ஞ்சுபோகவழியாவதிதுகண்டாய் வானோர்க்கெல்லாம், அதிபதியேயாரமுதேயாதியென்றுமம்மானேயாரூரெம்மையாவென்றும், துதிசெய்து துன்றுமலர்கொண்டுதூவிச் சூழும்வலஞ்செய்துதொண்டுபாடிக், கதிர்மதிசேர்சென்னியனேகாலகாலா கற்பகமேயென்றென்றேகதறுநில்லே. (அ)

பாசத்தைப்பற்றறக்கலாகுநெஞ்சேபரஞ்சோதிபாண்டரங்காபாவநாசா
தேசத்தொளிவிளக்கேதேவதேவேதிருவாரூர்த்திருமூலத்தானாவென்றும்
நேசத்தைநீபெருக்கிநேர்நின்றுள்கிநித்தலுஞ்சென்றடிமேல்வீழ்ந்துநின்று
ஏசற்றுநின்றிமையோரேறேயென்றுமெம்பெருமானென்றென்றேயேத்தாநில்லே. (௯)

புலன்களைநதாலாட்டுண்டு போதுபோக்கிப் புறம்புறமேதிரியாதேபோதுநெஞ்சே, சலங்கொள்சடைமுடியுடையதலைவாவென்றுந்தக்கன்செய்பெருவேள்விதகர்த்தாயென்றும், இலங்கையர்கோன்சிரநெரித்த விறைவாவென்றுமெழிலாரூரிடங்கொண்டவெந்தாயென்றும், நலங்கொளடியென்றலைமேல்வைத்தாயென்றுநாடோறுநவின்றேத்தாய்நன்மையாமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருஆரூர் - போற்றித்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

கற்றவர்களுண்ணுங்கனியேபோற்றி கழலடைந்தார்செல்லுங்கதியேபோற்றி, அற்றவர்கட்காரமுதமானாய்போற்றியல்லலறுத்தடியேனையாண்டாய்போற்றி, மற்றொருவரொப்பில்லாமைந்தாபோற்றி வானவர்கள்போற்றுமருந்தேபோற்றி, செற்றவர்தம்புரமெரித்தசிவனேபோற்றி திருமூலட்டானனேபோற்றிபோற்றி. (௧)

வங்கமலிகடனஞ்சமுண்டாய்போற்றிமதயானையீருரிவைபோர்த்தாய்போற்றி, கொங்கலருநறுங்கொன்றைத்தாராய்போற்றிகொல்புலித்தோலா

டைக்குழகாபோற்றி, அங்கணனேயமரர்கடம்மிறைவாபோற்றியாலமாநீழ லறஞ்சொன்னாய்போற்றி, செங்கனகத்தனிக்குன்றேசிவனேபோற்றி திருமூலத்தானனேபோற்றிபோற்றி. (௨)

மலையாண்மடந்தைமணாளாபோற்றிமழவிடையாய்நினபாதம்போற்றி போற்றி, நிலையாகவென னெஞ்சினின்றாய்போற்றிநெற்றிமேலொற்றைக்கணணுடையாய்போற்றி, இலையார்ந்தமூவிலைவேலேந்திபோற்றி யேழ்கடலுமேழ்பொழிலுமானாயபோற்றி, சிலையாலன்றெயிலெரித்த சிவனேபோற்றி திருமூலத்தானனேபோற்றிபோற்றி. (௩)

பொன்னியலுமேனியனேபோற்றிபோற்றிபூதப்படையுடையாய்போற்றிபோற்றி, மன்னியசீர்மறைநான்குமானாயபோற்றிமறியேறுகையானேபோற்றிபோற்றி, உன்னுமவர்க்குண்மையனேபோற்றிபோற்றியுலகுக்கொருவனேபோற்றிபோற்றி, சென்னிமிசைவெண்பிறையாய்போற்றிபோற்றி திருமூலத்தானனேபோற்றிபோற்றி. (௪)

நஞ்சுடையகண்டனேபோற்றிபோற்றி நற்றவனேநின்பாதம்போற்றிபோற்றி, வெஞ்சுடரோனபல்லிறுத்தவேந்தேபோற்றி வெண்மதியங்கண்ணிவிகிர்தாபோற்றி, துஞ்சிருளிலாடலுகந்தாயபோற்றிதூநீறுமெய்க்கணிந்தசோதிபோற்றி, செஞ்சடையாய்நினபாதம்போற்றிபோற்றி திருமூலத்தானனேபோற்றிபோற்றி. (௫)

சங்கரனேநினபாதம்போற்றிபோற்றி சதாசிவனேநின்பாதம்போற்றிபோற்றி, பொங்கரவாநினபாதம்போற்றிபோற்றி புண்ணியனேநின்பாதம்போற்றிபோற்றி, அங்கமலத்தயனோடுமாலுங்காணாவனலுருவாநினபாதம்போற்றிபோற்றி, செங்கமலத்திருபபாதம்போற்றிபோற்றி திருமூலத்தானனேபோற்றிபோற்றி. (௬)

வம்புலவுகொன்றைச்சடையாய்போற்றிவான்பிறையுமவாளரவுமவைத்தாய்போற்றி, கொம்பனையநுண்ணிடையாள்கூறாபோற்றிகுரைகழலாற்கூற்றுதைத்தகோவேபோற்றி, நம்புமவர்க்கருமபொருளேபோற்றிபோற்றிநால்வேதமாறங்கமானாய்போற்றி, செம்பொனேமரகதமேமணியேபோற்றிதிருமூலத்தானனேபோற்றிபோற்றி. (௭)

உள்ளமாயுள்ளத்தேநின்றாய்போற்றி யுகப்பார்மனத்தென்றுநீங்காய்போற்றி, வள்ளலேபோற்றி மணாளாபோற்றி வானவர்கோனறோடுணித்தமைந்தாபோற்றி, வெள்ளையேறேறுமவிகிர்தாபோற்றி மேலோர்க்குமேலோர்க்குமேலாய்போற்றி, தெள்ளுநீர்க்கங்கைச் சடையாய்போற்றி திருமூலத்தானனேபோற்றிபோற்றி. (௮)

பூவார்ந்தசென்னிப புனிதாபோற்றி புத்தேளிர்போற்றும பொருளேபோற்றி, தேவார்ந்ததேவர்க்குந்தேவேபோற்றிதிருமாலுக்காழியளித்தாய்போற்றி, சாவாமேகாத்தென்னையாண்டாய்போற்றிசங்கொத்தநீற்றெஞ்சதுராபோற்றி, சேவார்ந்தவெலகொடியாய்போற்றிபோற்றி திருமூலத்தானனேபோற்றிபோற்றி. (௯)

பிரமன்றன்சிரமரிந்தபெரியோய்போற்றிபெண்ணுருவோடாணுருவாய்நின்றாய்போற்றி, கரநான்குமுக்கண்ணுடையாய்போற்றி காதலிப்பார்க்காற்றவெளியாய்போற்றி, அருமந்ததேவர்க்கரசேபோற்றியன்றரக்கனைநான்குதோளுந்தாளுஞ், சிரநெரித்தசேவடியாய் போற்றிபோற்றி திருமூலத்தானனேபோற்றிபோற்றி. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருஆரூர்அரநெறி - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

பொருங்கைமதகரியுரிவைப்போர்வையானைப் பூவணமுமவலஞ்சுழியும்பொருந்தினானைக், கரும்புதருகட்டியையின்னமிர்தைத்தேனைக் காண்பரியசெழுஞ்சுடரைக்கனகக்குன்றை, யிருங்கனகமதிலாரூர்மூலத்தானத் தெழுந்தருளியிருந்தானையிமையோரேத்தும், அருந்தவனையரநெறியி லப்பன்றன்னை யடைந்தடியேனருவினைநோயறுத்தவாறே. (க)

கற்பகமுமிருசுடருமாயினானைக்காளத்திகயிலாயமலையுளானை, விற்பயிலுமதனழியவிழித்தான்றன்னை விசயனுக்குவேடுவனாய்நின்றான்றன்னைப், பொற்பமரும்பொழிலாரூர் மூலத்தானம் பொருந்தியவெம்பெருமானைப் பொருந்தாசிந்தை, அற்புதனையரநெறியிலப்பன்றன்னை யடைந்தடியேனருவினைநோயறுத்தவாறே. (உ)

பாதியொருபெண்முடிமேற்கங்கையானைப் பாசூர்பரங்குன்றமேயான்றன்னை, வேதியனைத்தன்னடியார்க்கெளியான்றன்னை மெய்ஞ்ஞானவிளக்கானைவிரையேநாறும், போதியலும்பொழிலாரூர்மூலத்தானம்புற்றிடங்கொண்டிருந்தானைப்போற்றுவார்கள், ஆதியனையரநெறியிலப்பன்றன்னை யடைந்தடியேனருவினைநோயறுத்தவாறே. (ங)

நந்திபணிகொண்டருளுநம்பன்றன்னை நாகேச்சரமிடமாநண்ணினானைச், சந்திமலரிட்டணிந்துவானோரேத்தத் தத்துவனைச்சக்கரமாற்கீந்தான்றன்னை, இந்துநுழைபொழிலாரூர்மூலத்தானமிடங்கொண்டபெருமானையிமையோர்போற்றும், அந்தணனையரநெறியிலப்பன்றன்னை யடைந்தடியேனருவினைநோயறுத்தவாறே. (ச)

சுடர்ப்பவளத்திருமேனிவெண்ணீற்றானைச் சோதிலிங்கத்தூங்கானைமாடத்தானை, விடக்கிடுகாடிடமாகவுடையான்றன்னை மிக்கரணமெரியூட்டவல்லான்றன்னை, மடற்குலவுபொழிலாரூர்மூலத்தானமன்னியவெம்பெருமானைமதியார்வேள்வி, அடர்த்தவனையரநெறியிலப்பன்றன்னை யடைந்தடியேனருவினைநோயறுத்தவாறே. (ரு)

தாயவனையெவ்வுயிர்க்குந்தன்னொப்பில்லாத் தகுதில்லைநடம்பயிலுந்தலைவன்றன்னை, மாயவனுமலரவனுமவானோரேத்த மறிகடனஞ்சுண்டுகந்தமைந்தன்றன்னை, மேயவனைப்பொழிலாரூர்மூலத்தானம்விரும்பியவெம்பெருமானையெல்லாமுன்னே, ஆயவனையரநெறியிலப்பன்றன்னை யடைந்தடியேனருவினைநோயறுத்தவாறே. (சு)

பொருளியல்நற்சொற்பதங்களாயினானைப்புகலூரும்புறம்பயமுமேயான்றன்னை, மருளியலுஞ்சிந்தையர்க்குமருந்துதன்னை மறைக்காடுஞ்சாய்க்காடுமன்னினானை, இருளியனற்பொழிலாரூர்மூலத்தானத்தினிதமரும்பெருமானையிமையோரேத்த, அருளியனையரநெறியிலப்பன்றன்னையடைந்தடியேனருவினைநோயறுத்தவாறே. (எ)

காலனைக்காலாற்காய்ந்தகடவுடன்னைக் காரோணங்கழிப்பாலைமேயான்றன்னைப், பாலனுக்குப்பாற்கடலன்றீந்தான்றன்னைப்பணியுகந்தவடியார்கட்கினியான்றன்னைச், சேலுகளுமவயலாரூர்மூலத்தானஞ்சேர்ந்திருந்தபெருமானைப்பவளமீன்ற, ஆலவனையரநெறியிலப்பன்றன்னையடைந்தடியேனருவினைநோயறுத்தவாறே. (அ)

ஒப்பொருவரில்லாத வொருவன்றன்னை யோத்தூருமுறையூருமேவி னானை, வைபபவனைமாணிக்கச்சோதியானைமாருதமுநதீவெளிநீர் மண்ணா னானைப், பெ. (௯)

பகலவன்றன்பலலுகுத்தபடிறன்றனனைப் பராய்த்துறைபைஞ்ஞீலி யிடம்பாவித்தானை, இகலவனையிராவணனையிடாசெய்தானையேத்தா தார்ம னத்தகத்துளிருளானானைப், புகழ்நிலவுபொழிலாரூர்மூலதகானம்பொருந் தியவெமபெருமானைப்போற்றாசிநதை, அகலவனையரகெறியிலப்பன்றன் னையடைநதடியேனருவினைகோயறுத்தவாறே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருஆரூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

ஒருவனாயுலகேத்தநின்றநாளோவோருருவேமூவுருவமானநாளோ, கருவனாய்க்காலனைமுன்காய்நதநாளோ காமனையுநகண்ணழலாலவிழ்தநா ளோ, மருவனாய்மண்ணுமவிண்ணுநதெரிததநாளோ மானமறிக்கையோநதி யோர்மாதோர்பாகந, திருவினாள்சேர்வதற்குமுன்னோபின்னோ திருவாரூர் கோயிலாக்கொண்டநாளே. (௧)

மலையார்பொற்பாவையொடுமகிழ்நதநாளோ வானவரைவலியமுதமூ ட்டியநாள், நிலைபேறுபெறுவித்துநினறநாளோ நினைபபரியதழறபிழமபா ய்நிமிர்நதநாளோ, அலைசாமேயலைகடனஞ்சுண்டநாளோவமராகணமபுடை சூழவிருந்தநாளோ, சிலையான்முபபுரமெரிததமுனனோபின்னோதிருவாரூர் கோயிலாககொண்டநாளே. (௨)

பாடகஞ்சேர்மெல்லடிநற்பாவையாளுநீயும்போய்ப்பார்த்தனதுபலத் தைக்காண்பான், வேடனாய்வில்வாங்கியெய்தநாளோவிண்ணவாகருநகண ணவனாய்நின்றநாளோ, மாடமொடுமாளிகைகண்மல்குதில்லை மணிதிகழும மபலததேமனனிக்கூத்தை, ஆடுவான்புகுவதறகு முனனோபினனோவணி யாரூர்கோயிலாக்கொணடநாளே. (௩)

ஓங்கியுயர்நதெழுநதுநின்றநாளோவோருகம்போலேழுகமாய்நின்றநா ளோ, தாஙகியசீர்ததலையானவானோர்செய்ததககனறன்பெருவேள்விதகர்த் தநாளோ, நீஙகியநீர்த்தாமரையானெடுமாலோடு நில்லாயெமபெருமானே யென்றங்கேத்தி, வாங்கிமதிவைபபதற்குமுன்னோபின்னோவளராரூரகோயி லாக்கொண்டநாளே. (௪)

பாலனாய்வளர்நதிலாபபான்மையானேபணிவார்கட்கங்கங்கேபற்றானே நீலமாமணிகண்டத்தெண்டோளானேநெருநலாயின்றாகிநாளையாகுஞ் சீலமேசிவலோகநெறியேயாகுஞ்சீர்மையேகூர்மையேகுணமேநல்ல கோலநீகொள்வதறகுமுன்னோபினனோகுளிராரூர்கோயிலாக்கொண்டநாளே.

திறமபலவும்வழிக்காட்டிசசெய்கைகாட்டிசசிறியையாய்பபெரியையா ய்நின்றநாளோ, மறமபலவுமுடையாரைமயக்கநீர்த்துமாமுனிவர்க்கருள் செய்தங்கிருந்தநாளோ, பிறஙகியசீர்பபிரமனறன்றலைகையேநதிபபிச்சை யேற்றுண்டுழன்றுநின்றநாளோ, அறமபலவுமுரைப்பதற்குமுன்னோபின் னோவணியாரூர்கோயிலாக்கொண்டநாளே. (௬)

நிலந்தரத்துநீண்டுருவமானநாளோ நிற்பனவுநடப்பனவுநீயேயாகிக், கலந்துரைக்கக்கற்பகமாய்நின்றநாளோகாரணத்தா னாரணனைக்கற்பித்தன் று, வலஞ்சுருக்கி வல்லசுரர்மாண்டுவீழவாசுகியைவாய்மடுத்துவானோரும்

யச், சலந்தரனைக்கொல்வதற்குமுன்னோபின்னோ தண்ணாரூர்கோயிலாக் கொண்டநாளே. (எ)

பாதத்தான்முயலகனைப்பாதுகாத்துப் பாரகத்தேபரஞ்சுடராய்நின்ற நாளோ, கீதத்தைமிகப்பாடுமடியார்க்கென்றுங்கேடிலாவானுலகங்கொடுத் தநாளோ,பூதத்தான்பொருநீலிபுனிதன்மேவிபொய்யுரையாமறைநால்வர் விண்ணோர்களென்றும்,வேதத்தைவிரிப்பதற்குமுன்னோபின்னோவிழவாரூ ர்கோயிலாக்கொண்டநாளே. (அ)

புகையெட்டும்போக்கெட்டும் புலன்களெட்டும் பூதலங்களவையெட் டும்பொழில்களெட்டும்,கலையெட்டுங்காப்பெட்டுங்காட்சியெட்டுங்கழற்சே வடியடைந்தார்களைகணெட்டும், நகையெட்டுநாளெட்டுநன்மையெட்டுநல ஞ்சிறந்தார்மனத்தகத்துமலர்களெட்டும்,திசையெட்டுந்தெரிப்பதற்குமுன் னோபின்னோதிருவாரூர்கோயிலாக்கொண்டநாளே. (௯)

ஈசனுயுலகேழுமலையுமாகியிராவணனையீடழித்திட்டிருந்தநாளோ,வா சமலர்மகிழ்தென்றலானநாளோ மதயானையுரிபோர்த்துமகிழ்ந்தநாளோ, தாதுமலர்தண்டிக்குக் கொடுத்தநாளோசகரர்களைமறித்திட்டாட்கொண்ட நாளோ, தேசமுமையறிவதற்குமுன்னோபின்னோ திருவாரூர்கோயிலாக் கொண்டநாளே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருவெண்காடு - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

தூண்டுசுடர்மேனித்தூநீறாடிசூலங்கையேந்தியோர்சுழல்வாய்நாகம் பூண்டுபொறியரவங்காதிற்பெய்து பொற்சடைகளவைதாழப்புரிவெண்ணூ லர், நீண்டுகிடந்திலங்குதிங்களசூடி நெடுந்தெருவேவந்தெனது நெஞ்சங் கொண்டார், வேண்டுநடைநடக்கும்வெள்ளேறேறிவெண்காடுமேவியவிகிர தனாரே. (௧)

பாதந்தனிப்பார்மேல்வைத்தபாதர்பாதாளமேழுருவப்பாய்ந்தபாதர்
ஏதப்படாவண்ணநின்றபாதமேழுலகுமாய்நின்றவேகபாதர்
ஓதத்தொலிமடங்கியூருண்டேறியொத்துலகமெல்லாமொடுங்கியபின
வேதத்தொலிகொண்டுவீணைகேட்பாரவெண்காடுமேவியவிகிரதனாரோ. (௨)

நென்னலையோரோடேந்திப பிச்சைக்கென்று வந்தார்க்குவந்தேனெ ன்றில்லேபுக்கேன், அந்நிலையேநிற்கின்றாரையங்கொள்ளாரருகேவருவார் போனேக்குகின்றார், நந்நிலைமையேதோநும்மூரதானேதோவென்றேனுக் கொன்றாகச்சொல்லமாட்டார், மெனமுலையாரகூடிவிரும்பியாடும்வெண்கா டுமேவியவிகிரதனாரே. (௩)

ஆகத்துமைபடக்கியாருசூடியைவாயரவசைத்தங்கானேறேறிப்
போகமபலவுடைத்தாய்பபூதஞ்சூழப் புலித்தோலுடையாப்புகுந்துநின்றார்
பாகிடுவான்சென்றேனைப்பற்றிநோக்கிப் பரிசழித்தென்வளைகவர்ந்தார பாவியேனை
மேகமுகிலுரிஞ்சுசோலைசூழ்ந்தவெண்காடுமேவியவிகிர்தனாரே. (௪)

கொள்ளைக்குழைக்காதிற்குண்டைப்பூதங் கொடிகொட்டிகொட்டிக் குனித்துபபாட, உள்ளங்கவர்ந்திட்டுப்போவார்போலவுழிதர்வர்நான்றெரி யமாட்டேன்மீண்டேன், கள்ளவிழிவிழிப்பர்காணுக்கண்ணாற்கண்ணுளார் போலேகரந்துநிற்பர், வெள்ளச்சடைமுடியர்வேதநாவர்வெண்காடுமேவிய விகிர்தனாரே. (௫)

தொட்டிலங்குசூலத்தா மழுவாளேந்திச் சுடர்க்கொன்றைத்தாரணி ந்துசுவைகள்பேசிப, பட்டிவெள்ளேறேறிப்பலியுங்கொள்ளார்பார்ப்பாரை பபரிசழிப்பாரொக்கின்றாரால், கட்டிலங்குவெண்ணீற்றர்கனலப்பேசிக்க ருத்தழித்துவளைகவர்ந்தார்காலைமாலை, விட்டிலங்குசடைமுடியாவேதநா வர்வெண்காடுமேவியவிகிர்தனாரே. (கூ)

பெண்பாலொருபாகமபேணுவாழ்க்கைக்கோணுகமபூண்பனவுநாணுஞ்சொ லலார், உண்பாருறங்குவாரொவ்வாநங்காயுண்பதுநஞ்சன்றேலோவியுண் ணார், பண்பாலவிரசடையாபற்றிநோக்கிப பாலைப்பரிசழியபபேசுகின்றார் விண்பானமதிசூடிவேதமோதிவெண்காடுமேவியவிகிர்தனாரே. (எ)

மருந்தங்களாய்மொழிவர்மங்கையோடு வானவருமாலயனுங்கூடித்தங் கள்,சுருந்தங்களாறறுதித்துதநூரோட்டித்தோத்திரங்களபலசொலலித்தூப ங்காட்டிக, கருதுங்கொலெமபெருமானசெய்குறறேவலெனபார்க்குவேண் டுமேவரங்கொடுத்து, விகிர்தங்களாநடபபர்வெளளேறேறிவெண்காடுமேவிய விகிர்தனாரே. (அ)

புள்ளானுநான்முகனும்புக்குமபோநதுங்காணார்பொறியழலாய்நின்று ன்றன்னை, உள்ளானையொன்றலலாவுருவினானையுலகுக்கொருவிளக்காய்நி ன்றானறனனைக், களளேநதுகொன்றைதூயக்காலைமூன்றுமோவாமேநின் றுதவங்கள்செய்த, வெள்ளானை வேண்டுமவரங்கொடுப்பார்வெண்காடுமே வியவிகிர்தனாரே. (கூ)

மாக்குன்றெடுத்தான்றன்மைந்தனாகிமாவேழம்வில்லாமதித்தான்றன்னை நோக்குநதுணைதேவரெல்லாநிற்கநொடிவரையின்றேவவிழித்தான்றனனைக் காக்குங்கடலிலங்கைக்கோமான்றன்னைக் கதிர்முடியுங்கண்ணுமபிதுங்கவூ ன்றி, வீக்கந்தவிர்த்தவிரலார்போலுமவெண்காடுமேவியவிகிர்தனாரே.(கo)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பழனம் - திருத்தாண்டகம்

திருச்சிறறமபலம்.

அலையார்கடனஞ்சமுண்டாரதாமே யமரர்களுக்கருள்செய்யு மாதிதா மே, கொலையாயகூற்றமுதைத்தார்தாமேகொல்வேஙகைத் தோலொனற சைத்தாரதாமே, சிலையாற்புரமூன்றெரித்தார்தாமேதீநோய்களைநதென்னை யாண்டார்தாமே, பலிதேர்ந்தழகாயபண்பர்தாமே பழனநகரெமபிரானார் தாமே. (க)

வெள்ளமொருசடை மேலேற்றார்தாமேமேலார்கண்மேலார்கண்மே லார்தாமே, கள்ளங்கடிநதென்னையாண்டார்தாமேகருத்துடையபூதப்படை யார்தாமே, உள்ளத்துவகைதருவார்தாமேயுறுநோய்சிறுபிணிகடீாபபார் தாமே, பள்ளப்பரவைநஞ்சுண்டார்தாமேபழனநகரெமபிரானார்தாமே. ()

இரவும்பகலுமாய்நின்றார்தாமேயெப்போதுமென்னெஞ்சத்துள்ளார்தாமே யரவமரையிலசைத்தார்தாமேயனலாடியங்கைமறித்தார்தாமே
குரவங்கமழுங்குற்றாலர்தாமேகோலங்கண்மேன்மேலுகப்பார்தாமே
பரவுமடியார்க்கும்பாங்கர்தாமேபழனநகரெமபிரானாதாமே. (கூ)

மாறின்மதின்மூன்றுமெய்தார்தாமேவரியரவங்கச்சாகவார்த்தார்தாமே
நீறுசேர்திருமேனிநிமலர்தாமேநெற்றிநெருப்புக்கண்வைத்தார்தாமே
ஏறுகொடுஞ்சூலக்கையார்தாமேயென்பாபரணமணிந்தார்தாமே
பாறுண்டலைபிற்பலியார்தாமேபழனநகரெம்பிரானார்தாமே. (ச)

சீரால்வணங்கப்படுவார்தாமேதிசைக்கெல்லாந்தேவாகின்றார்தாமே
ஆராவமுதமுமானார்தாமேயளவில்பெருமையுடையார்தாமே
நீரார்நியமமுடையார்தாமேநீள்வரைவில்லாகவளைத்தார்தாமே
பாரார்பரவப்படுவார்தாமேபழனநகரெமபிரானார்தாமே. (௫)

காலனுயிர்வெளவவல்லார்தாமேகடிதோடுமெவெள்ளைவிடையார்தாமே
கோலமபலவுமுகப்பார்தாமேகோணாகணாகபபூண்டார்தாமே
நீலமபொலிகதமிடற்றார்தாமேநீள்வரையினுச்சியிருப்பார்தாமே
பாலவிருத்தருமானார்தாமேபழனநகரெமபிரானார்தாமே. (௬)

ஏய்நதவுமைநங்கைபங்கர்தாமேயேழிக்கப்புறமாய்நின்றார்தாமே
ஆய்நதமலர்தூவநின்றார்தாமேயளவில்பெருமையுடையார்தாமே
தேய்நதபிறைசடைமேல்வைத்தார்தாமேதீவாயரவதனையார்த்தார்தாமே
பாய்நதபடாகங்கையேற்றார்தாமேபழனநகரெமபிரானார்தாமே. (௭)

ஓராதாருள்ளத்தினில்லார்தாமேயுள்ளூறுமன்பர்மனத்தார்தாமே
பேராதென்சிநதையிருநதார்தாமேபிறாகதென்றுநகாட்சிக்கரியார்தாமே
ஊராருமூவுலகத்துள்ளார்தாமேயுலகைநடுங்காமற்காபபார்தாமே
பாராமுழுவததிடையார்தாமேபழனநகரெமபிரானார்தாமே. (௮)

நீண்டவர்க்கோர்நெருபபுருவமானார்தாமே நேரிழையையொருபாகம வைத்தார்தாமே, பூண்டரவைபபுலித்தோன்மேலார்த்தார்தாமேபொன்னி றத்தவெள்ளச்சடையார்தாமே, ஆண்டுலகேழனைததினையுமவைத்தார்தா மேயங்கங்கேசிவமாகிநின்றார்தாமே, பாண்டவரிற்பார்த்தனுக்குப்பரிநதார் தாமேபழனநகரெமபிரானார்தாமே. (௯)

விடையேறிவேண்டுலகத் திருப்பார்தாமே விரிகதிரோன்சோற்றுத் துறையார்தாமே, புடைசூழத்தேவர்குழாத்தர்தாமேபூநதுருத்திநெய்த்தா னமேயார்தாமே, அடைவேபுனல்சூழையாற்றார்தாமேயரக்கனையுமாற்றல ழித்தார்தாமே, படையாப்பலபூதமுடையாரதாமே பழனநகரெமபிரானார் தாமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவையாறு - திருத்தாண்டகம்.

திருச்சிற்றமபலம்.

ஆரார்திரிபுரங்கணீறுநோக்குமனலாடியாரமுதேயென்றேனானே [னே
கூரார்மழுவாட்படையொன்றேநதிக்குறட்பூதப்பல்படையா னென்றேனா
பேராயிரமுடையாயென்றேனானேபிறைசூடும்பிஞ்ஞகனேயென்றேனானே
ஆராவமுதேயென்னையாறனேயென்றெனறேநானரறறினைகின்றேனே. ()

தீவாயின்முப்புரங்கணீறுநோக்குந்தீர்த்தாபுராணனேயென்றேனானே
மூவாமதிசூடியென்றேனானேமுதல்வாமுக்கண்ணனேயென்றேனானே
ஏவார்சிலையானேயென்றேனானேயிடும்பைக்கடனின்றுமேறவாங்கி
ஆவாவென்றருள்புரியுமையாறனேயெனறென்றேநானரற்றினைகின்றேனே

அஞ்சுண்ணவண்ணனே யென்றேனானேயடியார்கட் காரமுதேயென் றேனானே, நஞ்சணிகண்டனேயென்றேனானேநாவலர்கணுன்மறையேயெ ன்றேனானே, நெஞ்சுணரவுள்புக்கிருநதபோதுநிறையுமமுதமேயென்றேனா னே, அஞ்சாதேயாள்வானேயையாறனே யென்றென்றேநானரற்றினைகி ன்றேனே. (௩)

தொல்லைத்தொடுகடலேயென்றேனானே துலங்குமிளம்பிறையாயென் றேனானே, எல்லையிறைந்தானேயென்றேனானேயேழ்நரம்பினின்னிசையா யென்றேனானே, அல்லற்கடல்புக்கழுந்துவேனைவாங்கியருள்செய்தாயென் றேனானே, எல்லையாமையாறுவென்றேனானேயென்றென்றேநானரற்றினை கின்றேனே. (ச)

இணைடைச்சடைமுடியாயென்றேனானேயிருசுடர்வானத்தாயென்றே னானே, தொண்டாறறொழுப்படுவாயென்றேனானே துருத்திநெய்த்தானத் தாயென்றேனானே, கண்டங்கறுத்தானேயென்றேனானே கனலாருங்கண் ணனேயெனறேனானே, அண்டத்துக்கப்பாலாமையாறனேயென்றென்றே நானரற்றினைகின்றேனே. (ரு)

பற்றார்புரமெரித்தாயென்றேனானேபசுபதீபாண்டரங்காவென்றேனானே
கறறார்கணுவினாயென்றேனானேகடுவிடையொன்றூர்தியாயென்றேனானே
பற்றுனாநெஞ்சுளாயெனறேனானேபார்த்தற்கருள செய்தாயென்றேனானே
அறறாக்கருள்செய்யுமையாறனேயென்றென்றேநானரறறினைகின்றேனே.

விண்ணோர்தலைவனேயென்றேனானேவிளங்குமிளமபிறையாயென்றே னானே,எண்ணாரெயிலெரித்தாயெனறேனானேயேகமபமேயானேயெனறே னானே, பண்ணார்மறைபாடி யெனறேனானே பசுபதீபானீற்றுயென்றேனா னே, அண்ணாவையாறனேயென்றேனானேயெனறெனறேநானரற்றினைகி ன்றேனே. (எ)

அவனென்றுநானுன்னை யஞ்சாதேனையல்லலறுப்பானேயென்றேனா னே, சிவனெனறுநானுனனையெல்லாஞ்சொலலச்செல்வந்தருவானேயெ ன்றேனானே, பவனாகியென்னுள்ளததுளளேநின்றுபண்டைவினையறுபபா யென்றேனானே, அவனெனறேயாதியேயையாறனேயெனறென்றேநானர ற்றினைகினறேனே. (அ)

கச்சியேகமபனேயென்றேனானேகயிலாயாகாரோணாவென்றேனானே
நிச்சன்மணாளனேயெனறேனானேநினைபபார்மனத்துளாயென்றேனானே
உச்சமபோதேறேறீயென்றேனானேயுள்குவாருள்ளததாயென்றேனானே
அச்சமபிணிதீர்க்குமையாறனேயென்றென்றே நானரறறினைகின்றேனே.

வில்லாடிவேடனேயென்றேனானே வெண்ணீறுமெய்க்கணிந்தாயென் றேனானே, சொல்லாயசூழலாயென்றேனானே சுலாவாயதொன்னெறியே யெனறேனானே, எல்லாமாயென்னுயிரேயென்றேனானேயிலஙகையர்கோ ன்றோளிறுத்தாயென்றேனானே, அல்லாவினைதீரகருமையாறனேயென்றெ ன்றேநானரறறினைகின்றேனே. (கo)

திருச்சிறறம்பலம்.

திருவையாறு - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

ஓசையொலியெலாமானாய்நீயேயுலகுக்கொருவனாய்நின்றாய்நீயே
வாசமலரெலாமானாய்நீயேமலையானமருகனாய்நின்றாய்நீயே
பேசபபெரிதுமினியாய்நீயேபிரானாயடியென்மேல்வைத்தாய்நீயே
தேசவிளக்கெலாமானாய்நீயேதிருவையாறகலாதசெமபொற்சோதீ. (க)

நோக்கரிய திருமேனியுடையாய்நீயே நோவாமேநோக்கருளவல்லாய் நீயே,காப்பரியவைம்புலனுங்காத்தாய்நீயேகாமனையுங்கண்ணழலாற் காய்ந் தாய்நீயே, ஆர்ப்பரியமாநாகமார்த்தாய்நீயே யடியானென்றடியென்மேல்

வைத்தாய்நீயே, தீர்ப்பரியவல்வினைநோய்தீர்ப்பாய்நீயேதிருவையாறகலாத செம்பொற்சோதி (௨)

கனத்தகத்துக்கடுஞ்சுடராய்நின்றாய்நீயேகடல்வரைவானாகாயமானாய் நீயே, தனத்தகத்துத்தலைகலனாக்கொண்டாய்நீயேசார்ந்தாரைத்தகைந்தாளவல்லாய்நீயே, மனத்திருந்தகருத்தறிந்துமுடிப்பாய்நீயேமலர்ச்சேவடியென்மேல்வைத்தாய்நீயே. சினத்திருந்ததிருநீலகண்டனீயே திருவையாறகலாதசெம்பொற்சோதீ. (௩)

வானுற்றமாமலைகளானாய்நீயேவடகயிலைமன்னியிருந்தாய்நீயே, ஊனுற்றவொளிமழுவாட்படையாய்நீயேயொளிமதியோடரவுபுனல்வைத்தாய்நீயே, ஆனுற்றவைந்துமமர்ந்தாய்நீயேயடியானென்றடியென்மேல்வைத்தாயநீயே, தேனுற்றசொன்மடவாள்பங்கனீயேதிருவையாறகலாதசெம்பொற் சோதீ. (௪)

பெண்ணாண்பிறப்பிலியாய்நின்றாய்நீயேபெரியார்கட்கெல்லாம் பெரியாய்நீ
உண்ணவருநஞ்சமுண்டாய்நீயேயூழிமுதலவனாய்நின்றாயநீயே [யே
கண்ணாயுலகெலாங்காத்தாய்நீயேகழற்சேவடியென்மேல்வைத்தாய்நீயே
திண்ணார்மழுவாட்படையாயநீயேதிருவையாறகலாதசெம்பொற்சோதீ. ()

உற்றிருந்தவுணர்வெலாமானாய்நீயேயுற்றவர்க்கோர்சுற்றமாய் நின்றாய்நீயே
கற்றிருந்தகலைஞானமானாய்நீயேகற்றவர்க்கோர்கற்பகமாய்நின்றாய்நீயே
பெற்றிருந்ததாயவளினல்லாயநீயேபிரானாயடியென்மேல்வைத்தாய்நீயே
செற்றிருந்ததிருநீலகண்டனீயேதிருவையாறகலாதசெம்பொற்சோதீ. ()

எல்லாவுலகமுமானாய்நீயேயேகம்பமேவியிருந்தாய்நீயே
நல்லாரைநன்மையறிவாய்நீயேஞானச்சுடர்விளக்காய்நின்றாய்நீயே
பொல்லாவினைகளறுப்பாய்நீயேபுகழ்ச்சேவடியென்மேல்வைத்தாய்நீயே
செல்வாயசெல்வந்தருவாய்நீயேதிருவையாறகலாதசெம்பொற்சோதீ. (௭)

ஆவினிலைந்துமமர்ந்தாய்நீயேயளவில்பெருமையுடையாய்நீயே
பூவினிறுற்றமாய்நின்றாயநீயேபோர்க்கோலங்கொண்டெயிலெய்தாய்நீயே
நாவினடுவுரையாய்நின்றாய்நீயேநண்ணியடியென்மேல்வைத்தாய்நீயே
தேவரறியாததேவனீயேதிருவையாறகலாதசெம்பொற்சோதீ. (௮)

எண்டிசைக்குமொண்சுடராய்நின்றாய்நீயே யேகம்பமேயவிறைவனீயே, வண்டிசைக்குநறுங்கொன்றைத்தாராய்நீயேவாராவுலகருளவல்லாய்நீயே, தொண்டிசைத்துன்னடிபரவநின்றாய்நீயேதூமலர்ச்சேவடியென்மேல்வைத்தாய்நீயே, திணிசிலைக்கோர்சரங்கூட்டவல்லாய்நீயே திருவையாறகலாதசெம்பொற்சோதீ. (௯)

விண்டார்புரமூன்றுமெய்தாய்நீயே விண்ணவர்க்குமேலாகிநின்றாய்நீயே, கண்டாரைக்கொல்லுநஞ்சுண்டாய்நீயேகாலங்களூழியாய்நின்றாய்நீயே, தொண்டாயடியேனையாண்டாய்நீயே தூமலர்ச்சேவடியென்மேல்வைத்தாய்நீயே, திண்டோள்விட்டெரியாடலுகந்தாய்நீயேதிருவையாறகலாத செம்பொற்சோதீ. (௧௰)

ஆருமறியாவிடத்தாய்நீயேயாகாயந்தேரூரவல்லாய்நீயே
பேருமபெரியவிலங்கைவேந்தனபெரியமுடிபத்திறுத்தாய்நீயே
ஊருமபுரமூன்றுமட்டாய்நீயேயொண்டாமரையானுமாலுங்கூடித்
தேருமடியென்மேல்வைத்தாய்நீயேதிருவையாறகலாதசெம்பொற்சோதீ.

திருச்சிற்றம்பலம்.

## திருமழபாடி - திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

நீறேறு திருமேனி யுடையான் கண்டாய் நெற்றிமே லொற்றைக்க ணிறைத்தான் கண்டாய், கூறாக வுமைபாகங் கொண்டான் கண்டாய் கொடியவிட முண்டிருண்ட கண்டன் கண்டாய், ஏறேறி யெங்குந் திரிவான் கண்டா யேழுலகு மேழ்மலையு மானான் கண்டாய், மாறாத மமரண மாட்டான் கண்டாய் மழபாடி மன்னு மணாளன் றானே. (௧)

கொக்கிறகு சென்னி யுடையான் கண்டாய் கொல்லை விடையேறுங் கூத்தன் கண்டாய், அக்கரைமே லாட லுடையான் கண்டா யனலங்கை யேந்திய வாதி கண்டாய், அக்கொ டரவ மணிந்தான் கண்டா யடியார்கட் காரமுத மானான் கண்டாய், மற்றிருந்த கங்கைச் சடையான் கண்டாய் மழபாடி மன்னு மணாளன் றானே. (௨)

நெற்றித் தனிக்க ணுடையான் கண்டாய் நேரிழையோர் பாகமாய் நின்றான் கண்டாய், பற்றிப் பாம்பாட்டும் படிறன் கண்டாய் பல்லூர் பலிதேர் பரமன் கண்டாய், செற்றார் புரமூன்றுஞ் செற்றான் கண்டாய் செழுமா மதிசென்னி வைத்தான் கண்டாய், மற்றொருகுற் றமிலாதான் கண்டாய் மழபாடி மன்னு மணாளன் றானே. (௩)

அலையார்ந்த புனற்கங்கைச் சடையான் கண்டா யண்டத்துக் கப்பாலாய் நின்றான் கண்டாய், கொலையானைக் கூற்றங் குமைத்தான் கண்டாய் கொல்வேங்கைத் தோலொன் றுடுத்தான் கண்டாய், சிலையாற் றிரிபுரங்கள் செற்றான் கண்டாய் செழுமா மதிசென்னி வைத்தான் கண்டாய், மலையார் மடந்தை மணாளன் கண்டாய் மழபாடி மன்னு மணாளன் றானே. (௪)

உலந்தார் தமங்க மணிந்தான் கண்டா யுவகையோ டின்னருள்கள் செய்தான் கண்டாய், நலந்திகழுங் கொன்றைச் சடையான் கண்டாய் நால்வேத மாறங்க மானான் கண்டாய், உலந்தார் தலைகலனாக் கொண்டான் கண்டா யும்பரார் தங்கள் பெருமான் கண்டாய், மலர்ந்தார் திருவடியென் றலைமேல் வைத்த மழபாடி மன்னு மணாளன் றானே. (௫)

தாமரையான் றன்றலையைச் சாய்த்தான் கண்டாய் தகவுடையார் நெஞ்சிருக்கை கொண்டான் கண்டாய், பூமலரா னேத்தும் புனிதன் கண்டாய் புணர்ச்சிப் பொருளாகி நின்றான் கண்டாய், ஏமருவு வெஞ்சிலையொன் றேந்தி கண்டா யிருளார்ந்த கண்டத் திறைவன் கண்டாய், மாமருவுங் கலைகையி லேந்தி கண்டாய் மழபாடி மன்னு மணாளன் றானே. (௬)

நீராகி நெடுவரைக ளானான் கண்டாய் நிழலாகி நீள்விசும்பு மானான் கண்டாய், பாராகிப் பவ்வமே ழானான் கண்டாய் பகலாகி வானாகி நின்றான் கண்டாய், யாரேனுந் தன்னடியார்க் கன்பன் கண்டா யணுவாகி யாதியாய் நின்றான் கண்டாய், வாரார்ந்த வனமுலையாள் பங்கன் கண்டாய் மழபாடி மன்னு மணாளன் றானே. (௭)

பொன்னியலுந் திருமேனி யுடையான் கண்டாய் பூங்கொன்றைத் தாரொன் றணிந்தான் கண்டாய், மின்னியலும் வார்சடையெம் பெருமான் கண்டாய் வேழத்தி னுரிவிரும்பிப் போர்த்தான் கண்டாய், தன்னியல்பார் மற்றொருவ ரில்லான் கண்டாய் தாங்கரிய சிவந்தானாய் நின்றான் கண்டாய், மன்னிய மங்கையோர் கூறன் கண்டாய் மழபாடி மன்னு மணாளன் றானே. (௮)

ஆலாலமுண்டுகந்தவாதிகண்டா யடையலர்தம்புரமூன்றுமெய்தான்கண்டாய், காலாலக்காலனையுங்காய்ந்தான்கண்டாய் கண்ணப்பர்க்கருள்செய்தகாளைகண்டாய்; பாலாருமொழிமடவாள்பாகன்கண்டாய்பசுவேறிப்பலிதிரியுமபண்பனகண்டாய், மாலாலுமறிவரியமைந்தன்கண்டாய்மழபாடிமன்னுமணாளன்றானே. (௯)

ஒருசுடராயுலகேழுமானான்கண்டா யோங்காரத்துட்பொருளாய்நின்றான்கணடாய், விரிசுடராய்விளங்கொளியாய்நின்றான்கண்டாய் * விழவொலியுமவேள்வொலியு மானான்கணடாய், இருசுடர்மீதோடாவிலஙகைக்கோனையீடழியவிருபதுதோளிறுத்தான்கண்டாய், மருசுடரின்மாணிக்கக்குன்றுகண்டாய் மழபாடிமனனுமணாளன்றானே. (௧௦)

திருச்சிறறமபலம்.

---

## திருமழபாடி - திருத்தாண்டகம்.

திருசசிற்றம்பலம்.

அலையடுத்தபெருங்கடனஞ்சமுதாவுண்டு வயமரர்கடாநதலைகாத்தவையர்செமபொற், சிலையெடுத்துமாநாகநெருபபுக்கோத்துத் திரிபுரங்கடீயிட்டசெலவர்போலுமம, நிலையடுத்தபலமபொன்னான்முத்தானீண்டநிலாவயிரப்பலகையாற்குலையார்த்துற்ற, மலையடுத்தமழபாடிவயிரத்தூணேயென்றென்றே நானரற்றிநைகின்றேனே. (௧)

அறைகலநதகுழன்மொநதைவீணையாழ மநதரததிற்கநதருவரமாரேத்த, மறைக்லநதமநதிரமுநீருநகொண்டு வழிபட்டார்வானாளககொடுத்தியன்றே, கறைகலநதபொழிற்கச்சிக்கமபமேயகனவயிரத்திரளேணகலிசூழ்மாடம, மறைகலந்தமழபாடிவயிரத்தூணேயென்றெனறேநானரற்றிநைகின்றேனே. (௨)

உரங்கொடுக்குமிருண்மெய்யர் மூர்க்கர்பொல்லா வூத்தைவாய்ச்சமணாதமையுறவாக்கொணட, பரஙகெடுத்திங்கடியேனையாண்டுகொண்டபவளத்தின்றிரளேணபசுமபொனமுததே, புரஙகெடுத்துபபொல்லாதகாமனாகம் பொடியாகவிழித்தருளிபபுவியோர்க்கென்றும, வரங்கொடுக்குமழபாடிவயிரத்தூணேயெனறெனறேநானரற்றிநைகினறேனே. (௩)

ஊனிகநதூனுறிகையர்குணடர்பொல்லாவூத்தைவாய்ச்சமணருறவரககொண்டு,ஞானகஞ்சோநதுள்ளவயிரத்தைநண்ணாயேனைபபொருளாகவாண்டுகொண்ட, மீனகஞ்சேரவெள்ளநீர்விதியாறசூடுமவேநதனைவிண்ணவர்தமபெருமானமேக, வானகஞ்சேர்மழபாடிவயிரத்தூணேயெனறெனறேநானரறறிநைகின்றேனே. (௪)

சிரமேற்றநான்முகன்றன்றலையுமற்றைத் திருமாறன்செழுநதலையும்பொன்றச்சிநதி, உரமேற்றவிரவிபற்றகர்த்துச்சோமனொளிர்கலைகள்படவுழக்கியுயிரைநல்கி, நரையேற்றவிடையேறிநாகமபூண்டநமபியையேமறைநான்குமோலமிட்டு, வரமேற்குமழபாடிவயிரத்தூணேயென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (௫)

சினநதிருத்துஞ்சிறுபெரியார்குண்டர்தங்கள் செதுமதியார்தீவினைக்கேவிழுந்தேன்றேடிப், புனத்திருத்தும்பொல்லாதபிண்டிபேணுமபொறியி

---

* விழவொலியுமிழவொலியுமெனச் சிலபிரதியிலிருக்கின்றது.

வியேன்றனைப்பொருளாவாண்டுகொண்டு, தனந்திருத்து மவர்திறத்தை யொழியப்பாற்றித் தயாமூலதன்மவழியெனக்குநல்கி, மனநதிருத்துமழ பாடிவயிரத்தூணேயென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (சு)

சுழித்துணையாமபிறவிவழித்துக்கநீக்குந சுருளசடையெம்பெருமா னேதூயதெண்ணீர், இழிபரியபசுபாசபரிநபமைபநீககு மென றுணையே யெனனுடையபெமமான தமமான, பழிபரியநிருமாலுமயனுங்காணாபரி தியேசுருதிமுடிக்கணியாய்வாய்த்த, வழித்துணையாமழபாடிவயிரத்தூணே யென்றெனறேநானரற்றிநைகினறேனே. (எ-அ கூ-கய)

திருச்சிற்றம்பலம்.

## திருநெய்த்தானம் - திருந்நாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

வகையெலாமுடையாயுநீயேயென்றும வான்கயிலைமேவினாய்நீயேயெ ன்றும், மிகையெலாமிககாயுநீயேயென்றுமவெண்காடமேவினாய்நீயேயெ ன்றும்,பகையெலாந்தீர்த்தாண்டாயநீயேயென்றுமபாசூரமாநதாயுநீயேயெ ன்றும, திகையெலாந்தொழச்செலவாயநீயேயென்றுநின்றநெய்த்தானாவெ னனெஞ்சுளாயே. (க)

ஆரத்தவெனக்கன்பனீயேயென்றுமாதிக்கயிலாயனீயேயென்றும், கூ ர்த்தநடமாடிநீயேயென்றுங்கோடிகாமேயகுழகாவென்றும, பாரத்தநசரு ள்செய்தாய்நீயேயென்றுமபழையனூரமேவியபணபாவென்றும், தீர்த்தன சிவலோகனீயேயென்றுநின்றநெய்த்தானாவென்னெஞ்சுளாயே. (உ)

அல்லாய்ப்பகலானாய்நீயேயென்றுமாதிக்கயிலாயனீயேயென்றும,கல லாலமாநதாயுநீயேயென்றுங்காளத்திகற்பகமுநீயேயென்றும், சொலலா ய்பபொருளானாய்நீயேயென்றுஞ் சோற்றுத்துறையுறைவாயநீயேயென்று ம,செலவாய்த்திருவானாய்நீயேயென்றுநின்றநெய்த்தானாவெனனெஞ்சுளா யே. (ந)

மின்னேரிடைபங்கனீயேயென்றுமவெண்காடுமேவினாய் நீயேயென் றும், பொனனேர்சடைமுடியாய்நீயேயென்றும பூதகணநாதனீயேயென் றும, எனனுவிரத்ததாயநீயேயென்றுமேகம்பத்தெனனீசனீயேயென்றும, தென்னூர்ப்பதியுளாயநீயேயென்று நின்றநெய்த்தானாவென னெஞ்சுளா யே. (ச)

முந்தியிருந்தாயுநீயேயென்றுமுனகயிலைமேவினாயநீயேயென்றும நந்திக்கருள்செய்தாய்நீயேயென்றுநடமாடுநள்ளாறனீயேயென்றும பந்திபரியாயுநீயேயென்றுமபைஞ்ஞீலிமேவினாயநீயேயென்றும சிந்திபரியாயுநீயேயென்றுநின்றநெய்த்தானாவெனனெஞ்சுளாயே. (ரு)

தக்காரடியார்க்குநீயேயென்றுந்தலையார்கயிலாயனீயேயென்றும அக்காரமபூண்டாயுநீயேயென்றுமாக்கூரிற்றான்றோன்றிநீயேயென்றும புக்காயவேழுலகுநீயேயென்றும்புள்ளிருக்குவேளூராய்நீயேயென்றும தெக்காருமாகோணத்தானேயென்றுநின்றநெய்த்தானாவென்னெஞ்சுளாயே.

புகழுமபெருமையாய்நீயேயென்றுமபூங்கயிலைமேவினாய்நீயேயென்றும இகழுந்தலையேந்திநீயேயென்று * இராமேசுரத்தினபனீயேயென்றும

* நரஇந்திரன - நரேந்திரனெனநின்பதுபோல, இராமஈசுரமென்பது இராமேசுரமெனநின்றது.

அகழமதிலுடையாய்நீயேயென்றுமாலவாய்மேவினாய்நீயேயென்றும்
திகழமதிசூடிநீயேயென்றுநின்றநெய்த்தானாவென்னெஞ்சுளாயே. (௭)

வானவர்க்குமூத்திளையாய்நீயேயென்றும்வானக்கயிலாயனீயேயென்றும்
கானநடமாடிநீயேயென்றுங்கடவூரில்வீரட்டனீயேயென்றும்
ஊனமுடியறுத்தாய்நீயேயென்றுமொற்றியூரானீயேயென்றும்
தேனமுதானாய்நீயேயென்றுநின்றநெய்த்தானாவென்னெஞ்சுளாயே. (௮)

தந்தைதாயில்லாதாய்நீயேயென்றுந் தலையார்கயிலாயனீயேயென்றும்
எந்தாயெம்பிரானானாய்நீயேயென்றுமேகம்பத்தென்னீசனீயேயென்றும்
முந்தியமுக்கணாய்நீயேயென்றுமூவலூர்மேவினாய்நீயேயென்றும்
சிந்தையாய்த்தேறலானாய்நீயேயென்றுநின்றநெய்த்தானாவென்னெஞ்சுளாயே.

மறித்தானைவலிசெற்றாய்நீயேயென்றும்வானக்கயிலைமேவினாய்நீயேயென்றும், வெறுத்தார்பிறப்பறுப்பாய்நீயேயென்றும்வீழிமிழலையாய்நீயேயென்றும், ஒறுத்தாய்முத்தீத்தாய்நீயேயென்றும்யாவர்க்குந்தாங்கொணாநஞ்சமுண்டு, பொறுத்தாய்புலனைந்தும்நீயேயென்றுநின்றநெய்த்தானாவென்னெஞ்சுளாயே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநெய்த்தானம்-திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

மெய்த்தானத்தகம்படியுளைவர்நின்றுவேண்டிற்றுக்குறைமுடித்துவினைக்குக்கூடாம், இத்தானத்திருந்திங்ஙனுய்வானெண்ணுமிதனையொழிபிணிப்பேழையிருந்தேசே, மைத்தானநீள்நயனிபங்கன்வங்கம்வருதிரைநீர்நஞ்சுண்டகண்டன்மேய, நெய்த்தானமென்றென்றுநினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (௧)

ஈண்டாவிரும்பிறவிதுறவாவாக்கையிதுநீங்கலாம்விதியுண்டென்றுசொல்ல, வேண்டாவேநெஞ்சமேவிளம்பக்கேணீவிண்ணவர்தம்பெருமானார்மண்ணிலென்னை, ஆண்டானன்றருவரையாற்புரமூன்றெய்தவம்மானையரியயனுங்காணாவண்ணம், நீண்டானுறைதுறைநெய்த்தானமென்றுநினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (௨)

பரவிப்பலபலவுந்தேடியோடிப்பாழாங்குரம்பையிடைக்கிடந்துவாளா
குரவிக்குடிவாழ்க்கைவாழவெண்ணிக்குலைகைதவிர்நெஞ்சேகூறக்கேணீ
இரவிக்குலமுதலாவானோர்கூடியெண்ணிறந்தகோடியமரராய
நிரவிக்கரியவனைநெய்த்தானமென்றுநினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (௩)

அலையார்வினைத்திறஞ்சேராக்கையுள்ளேயகப்பட்டுள்ளாசையெனும்பாசந்தன்னுள், தலைப்பாய்க்கடையாருமவாழ்விலாழ்ந்துதளராதுநெஞ்சமேயஞ்சவேண்டா, இலையார்புனற்கொன்றையெறிநீர்த்திங்களிருஞ்சடைமேல்வைத்துகந்தானிமையோரேத்தும், நிலையானுறைநிறைநெய்த்தானமென்றுநினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (௪)

இனைத்தனையோர்பொறையிலாவுயிர்போங்கூட்டைப்பொருளென்றுமிகவுன்னிமதியாலிந்த, அனைத்துலகுமாளலாமென்றுபேசுமாங்காரந்தவிர்நெஞ்சேயமரர்க்காக, முனைத்துவருமதின்மூன்றும்பொன்றவன்றுமுடுகியவெஞ்சிலைவளைத்துச்செந்தீமூழ்க, நினைத்தபெருங்கருணையனைநெய்த்தானமென்றுநினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (௫)

மிறைபடுமிவ்வுடல்வாழ்வைமெய்யென்றெண்ணிவினையிலேகிடந்தழு ந்திவியவேனெஞ்சே, குறைவுடையார்மனத்துளான்குமரன்றாதைகூத்தாடுங்குணமுடையான்கொலைவேற்கையான், அறைகழறிருவடிமேற்சிலம்புமார்ப்பவவனிதலம்பெயரவருநடத்தினிறைவுடையானிடமாநெய்த்தானமெனநினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (௬)

பேசப்பொருளலாப்பிறவிதன்னைப்பெரிதென்றுசிறுமனத்தால்வேண்டியீண்டு,வாசக்குழன்மடவார்போகமென்னும்வலைப்பட்டுவீழாதேவருகநெஞ்சே, தூசக்கரியுரித்தான்றூநீறாடித்துதைந்திலங்குநூன்மார்பன்றொடரில்லா, நாசக்கரியவனெய்த்தானமென்றுநினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (௭)

அஞ்சப்புலனிவற்றாலாட்டுண்டுநோயக்கிடமாயவுடலின்றன்மை, தஞ்சமெனக்கருதித்தாழேனெஞ்சே தாழக்கருதுதியேற்றனைச்சேரா, வஞ்சமனத்தவர்கள்காணவொண்ணாமணிகண்டன்வானவர்தம்பிரானென்றேத்தும், நெஞ்சக்கினியவனெய்த்தானமெனநினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (௮)

பொருந்தாதவுடலகத்திற்புக்கவாவிபோமாறறிந்துநீபொல்லாவாழ்வுன்னி, இருந்தாங்கிடப்படவேண்டாநெஞ்சேயிமையவர்தம்பெருமானன்றுமையாளஞ்சக், கருந்தானமதகரியைவெருவச்சீறுங்கண்ணுதலைக்கண்டமாடக்கருத்தாமவ்வளவில், நிருத்தமாவினிதுறைநெய்த்தானமென்றுநினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (௯)

உரித்தன்றுனக்கிவ்வுடலின்றன்மையுண்மையுரைக்கின்றேன்விரதமெல்லாந், தரித்தாங்கழுக்குமனமவாளாநெஞ்சே தவமிலாச்சிந்தையாகமொன்றல்லாக்கன்னரிக்கத்தானனுடையானென்னோடேராளாவெனப்பெருமானென்னையேத்தாவிலங்கைக்கோனை, நெரித்தானைநெய்த்தானமேவினானைநினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (௰)

திருச்சிற்றம்பலம்.

## திருப்பூந்துருத்தி - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

நில்லாதநீர்சடைமேனிற்பித்தானை நினையாவென்னெஞ்சைநினைவித்தானைக், கல்லாதனவெல்லாங்கற்பித்தானைக் காணாதனவெல்லாங்காட்டினானைச், சொல்லாதனவெல்லாஞ்சொல்லியென்னைத் தொடர்ந்திங்கடியேனையாளாகக்கொண்டு, பொல்லாவென்னோய்தீர்த்தபுனிதன்றன்னைப்புண்ணியனைப்பூந்துருத்திக்கண்டேனே. (௧)

குற்றாலங்கோகரணமேவினானைக் கொடுங்கைக்கடுங்கூற்றைப்பாய்ந்தான்றன்னை, உற்றாலநஞ்சுண்டொடுங்கினானை யுணராவென்னெஞ்சையுணர்வித்தானைப், பற்றாலின்கீழங்கிருந்தான்றன்னைப்பண்ணார்ந்தவீணைப்பயின்றான்றன்னைப், புற்றரவார்த்தபுனிதன்றன்னைப்புண்ணியனைப்பூந்துருத்திக்கண்டேனே. (௨)

எனக்கென்றுமினியானையெம்மான்றன்னை யெழிலாருமேகம்பமேயான்றன்னை, மனக்கென்னும்வருவானைவஞ்சநெஞ்சினில்லானைநின்றியூர்மேயான்றன்னைத், தனக்கென்றுமடியேனையாளாக்கொண்டசங்கரனைச்சங்கவார்குழையான்றன்னைப், புனக்கொன்றைத்தாரணிந்தபுனிதன்றன்னைப் பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனே. (௩)

வெறியார்மலர்க்கொன்றைசூடினானைவெள்ளானைவந்திறைஞ்சும் வெண்காட்டானை, அறியாதஅடியேனையகப்படுத்தேயல்லற்கடனின்றுமேறவாங்கி,நெறிதானிதுவென்றுகாட்டினானைநிச்சலவிபிணிகடீர்ப்பான்றன்னைப், பொறியாடரவார்த்தபுனிதன்றன்னைப் பொய்யிலியைப் பூந்துருத்திக்கண்டேனே. (௪)

மிக்கானைவெண்ணீறுசண்ணித்தானைவிண்டார்புரமூன்றுமவேவநோக்கி, நக்கானைநான்மறைகள்பாடினானைநல்லார்கள்பேணிப்பரவநின்ற, தக்கானைத்தண்டாமரைமேலண்ணறலைகொண்டுமாத்திரைக்க ணுலகமெல்லாம், புக்கானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனே. (௫)

ஆர்த்தானைவாசுகியையரைக்கோர்கச்சாவசைத்தானையழகாயபொன்னார்மேனிப்,பூத்தானத்தான்முடியைப்பொருந்தாவண்ணம்புணர்ந்தானைப்பூங்கணையானுடலம்வேவப், பார்த்தானைப்பரிந்தானைப்பனிநீர்க்கங்கைப்படர்சடைமேற்பயின்றானைப்பதைப்பயானை, போர்த்தானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனே. (௬)

எரித்தானையெண்ணாபுரங்கண்மூன்றுமிமைப்பளவிற்பொடியாகவெழிலார்கையால், உரித்தானைமதகரியையுற்றுப்பற்றியுடையதனைக்கண்டஞ்சிநடுங்கக்கண்டு, சிரித்தானைச்சீரார்ந்தபூதஞ்சூழத்திருச்சடைமேற்றிங்களும்பாம்புநீரும், புரித்தானைப்புண்ணியனைப் புனிதன்றன்னைப்பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனே. (௭)

வைத்தானைவானோருலகமெல்லாம்வந்திறைஞ்சிமலர்கொண்டுநின்றுபோற்றும், வித்தானைவேண்டிற்றொன்றீவான்றன்னை விண்ணவர்தம்பெருமானைவினைகள்போக, உய்த்தானையொலிகங்கைசடைமேற்றாங்கியொளித்தானையொருபாகத்துமையோடாங்கே, பொய்த்தானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனே. (௮)

ஆண்டானைவானோருலகமெல்லாமந்நாளறியாததக்கன்வேள்வி,மீண்டானை விண்ணவர்களோடுங்கூடிவிரைமலர்மேனான்முகனுமாலுந்தேட, நீண்டானைநெருப்புருவமானான்றன்னை நிலையிலா மும்மதிலும்வேவவில்லைப், பூண்டானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப் பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனே. (௯)

மறுத்தானைமலைகோத்தங்கெடுத்தான்றன்னை மணிமுடியோடிருபதுதோணெரியக்காலால், இறுத்தானையெழுநரம்பினிசைகேட்டானையெண்டிசைக்குங்கண்ணானைச் சிரமேலொன்றை, அறுத்தானையமரர்களுக்கமுதீந்தானையாவர்க்குந்தாங்கொணாநஞ்சமுண்டு, பொறுத்தானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருச்சோற்றுத்துறை - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

மூத்தவனாயுலகுக்குமுந்தினானேமுறைமையா லெல்லாம்படைக்கின்றானே, ஏத்தவனாயேழுலகுமாயினானேயின்பனாய்த்துன்பங்களைகின்றானே, காத்தவனாயெல்லாந்தான்காக்கின்றானேகடுவினையேன்றீவினையைக்கண்டு

போகத், தீர்த்தவனே திருச்சோற்றுத்துறையுளானே திகழொளியேசிவனே யுன்னபயனானே. (க)

தலையவனாயுலகுக்கோர்தன்மையானே தத்துவனாய்ச்சார்ந்தார்க்கின னமுதானானே, நிலையவனாய்நின்றொப்பாரில்லாதானே நின்றுணராகக்கூற்றத் தைச் சீறிப்பாய்ந்த, கொலையவனே கொல்யானைத்தோன்மேலிட்டகூற்றுவ னேகொடிமதில்கண்மூன்றுமெய்த, சிலையவனே திருச்சோற்றுத்துறையு ளானே திகழொளியேசிவனேயுன்னபயனானே. (உ)

முற்றாதபான்மதியஞ்சூடினானே முளைத்தெழுந்தகற்பகத்தின் கொழு ந்தொப்பானே, உற்றாரென்றொருவரையுமில்லாதானே யுலகோம்புமொண் சுடரேயோதுமவேதங், கற்றானேயெல்லாக்கலைஞானமுங்கல்லாதேன்றீவி னைநோய்கண்டுபோகச், செற்றானே திருச்சோற்றுத் துறையுளானே திக ழொளியேசிவனேயுன்னபயனானே. (ங)

கண்ணவனாயுலகெலாங்காக்கின்றானே காலங்களூழிகண்டிருக்கின்றா னே, விண்ணவனாய்விண்ணவர்க்குமருள்செய்வானே வேதனாய்வேதம்விரி த்திட்டானே, எண்ணவனேயெண்ணார்புரங்கண்மூன்று மிமையாமுன்னெரி கொளுவநோக்கிநக்க, திண்ணவனே திருச்சோற்றுத்துறையுளானே திகழொ ளியே சிவனேயுன்னபயனானே. (ச)

நம்பனே நான்மறைகளாயினானே நடமாடவல்லானே ஞானக்கூத்தா, கம்பனே கச்சிமாநகருளானே கடிமதில்கண்மூன்றினையும் பொடியாவெய்த, அம்பனே யளவிலாப்பெருமையானே யடியார்கட்காரமுதேயானேறேறுஞ், செம்பொனே திருச்சோற்றுத்துறையுளானே திகழொளியேசிவனே யுன்ன பயனானே. (ரு)

ஆர்ந்தவனேயுலகெலாநீயேயாகி யமைந்தவனே யளவிலாப்பெருமை யானே, கூர்ந்தவனே குற்றாலமேயகூத்தா கொடுமழுவிலையதோர்சூலமேந்திப், போர்ந்தவனே பிரளயங்களெல்லாமாய பெம்மானென்றெப்போதும்பேசுநெ ஞ்சிற், சேர்ந்தவனே திருச்சோற்றுத்துறையுளானே திகழொளியே சிவனே யுன்னபயனானே. (சு)

வானவனாய்வண்மைமனத்தினானே மாமணிசேர்வானோர் பெருமானீ யே, கானவனாயேனத்தின் பின்சென்றானே கடியவரணங்கண்மூன்றட்டா னே, தானவனாத்தண்கயிலைமேவினானே தன்னொப்பாரில்லாத மங்கைக்கெ ன்றுந், தேனவனே திருச்சோற்றுத்துறையுளானே திகழொளியேசிவனேயு ன்னபயனானே. (எ)

தன்னவனாயுலகெலாந்தானேயாகித் தத்துவனாய்ச்சார்ந்தார்க்கின்னமு தானானே, என்னவனாயென்னிதயமேவினானே யீசனே பாசவினைகடீர்க்கு, மன்னவனே மலைமங்கைபாகமாகவைத்தவனே வானோர்வணங்கும்பொன்னி த்,தென்னவனே திருச்சோற்றுத்துறையுளானே திகழொளியேசிவனேயுன் னபயனானே. (அ)

எறிந்தானேயெண்டிசைக்குங்கண்ணானானே யேழுலகுமெல்லாமுன் னாய்நின்றானே, அறிந்தார்தாமோரிருவரறியாவண்ணமாதியுமந்தமுமாகிய ங்கே, பிறிந்தானே பிறரொருவரறியாவண்ணம்பெம்மானென்றெப்போது மேத்துநெஞ்சிற், செறிந்தானே திருச்சோற்றுத்துறையுளானே திகழொளி யேசிவனேயுன்னபயனானே. (கூ)

பிராடிகேளென்னை, ஒல்லைத்தான்றிரையேறியோதமீளுமொளிதிகழுமொற்றி யூரென்கின்றாரே. (௭)

நிலைபாடே நான்கண்டேன் தோழிகேளாய்நெருநலைநற்பகலிங்கோரடிகள் வந்து. கலைபாடுங்கண்மலருங்கலக்கநோக்கிக்கலந்து பலியிடுமேவெனங்கு காணேன், சலப்பாடேயினியொருநாட்காண்பேனாகிற்றனாகத்தென்னாகை மொடுங்குமவண்ணம், முலைபாடேபடத்தழுவிப்போகலொட்டேனொற்றியூ ருறைந்திங்கேதிரிவானையே. (௮)

மண்ணல்லைவிண்ணல்லைவலயமல்லைமலையல்லைகடலல்லைவாயுவல்லை
எண்ணல்லையெழுத்தல்லையெரியுமல்லையிரவல்லைபகலல்லையாவுமல்லை
பெண்ணல்லையாணல்லைபேடுமல்லைபிறிதல்லையானாயுமபெரியாய்நீயே
உண்ணல்லைநல்லார்கருத்தியல்லைபுணர்வரியவொற்றியூருடையகோவே

மருவுற்றமலர்க்குழலிமடவாளஞ்சமலைதுளங்கத்திரைநடுங்கச்செற்றுத் தூக்கிச், செருவுற்றவாளரக்கனவலிதானமாளத்திருவடியினிவிரலூன்றலூன்றி, உருவொற்றியங்கிருவரோடிக்காணவோங்கினவவ்வொள்ள ழலாரிங்கேவந்து, திருவொற்றியூர்மருவினனம்பெருமானார்செய்வினைகளை யின்றென்றுச் சென்றவாறே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

## திருஆவடுதுறை - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

நம்பனைநால்வேதங்கரைகண்டானை ஞானப்பெருங்கடலை நன்மைதன் னைக், கம்பனைக்கல்லாலிருந்தானறனைக்கற்பகமாயடியார்கட்கருள்செய் வானைச், செம்பொன்னைப்பவளத்தைத்திரளுமுத்தைத்திங்களைஞாயிற்றை தீயைநீரை. அம்பொன்னையாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநாயே னடைந்துய்ந்தேனே. (௧)

மின்னானைமின்னிடைச்சேருருமினானைவெண்முகிலாயெழுந்துமழை பொழிவான்றன்னைத், தன்னானைத்தன்னொப்பாரில்லாதானைத்தாயாகிப்பல் லுயிர்க்கோர்தந்தையாகி, என்னானையெந்தைபெருமான்றன்னையிருநிலமு மண்டமுமாய்ச்செக்கர்வானே, அன்னானையாவடுதண்டுறையுண்மேயவான டியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (௨)

பத்தர்கள்சித்தத்தேபாவித்தானைப்பவளக்கொழுந்தினை மாணிக்கத்தி ன, தொத்தினைத்தூநெறியாய்நின்றான்றன்னைச் சொல்லுவார்சொற்பொரு ளின்றோற்றமாகி, வித்தினைமுளைக்கிளையைவேரைச்சீரைவினைவயத்தின்ற ன்சார்வைவெய்யதீர்க்கும, அத்தனையாவடுதண்டுறையுண்மேயவரனடியே யடிநாயேனடைந்துய்ந்தேனே. (௩)

பேணியநற்பிறைதவழ்செஞ்சடையினானைப் பித்தராமடியார்க்குமுத் திகாட்டும், ஏணியையிடர்க்கடலுட்சுழிக்கப்பட்டிங்கிளைக்கின்றேற்கக்க ரைக்கேயேறவாங்கும், தோணியைத்தொண்டனேன்றூயசோதிச்சுலாவெ ண்குழையானைச்சுடர்ப்பொற்காசின், ஆணியையாவடுதண்டுறையுண்மேயவ ரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (௪)

ஒருமணியையுலகுக்கோருறுதிதன்னையுதயத்தினுச்சியையுருமானா னைப், பருமணியைப்பாலோடஞ்சாடினானைப்பவித்திரனைப்பசுபதியைப்பவ ளக்குன்றைத், திருமணியைத்தித்திப்பைத்தேனதாகித்தீங்கரும்பினின்சு

வையைத்திகழுஞ்சோதி, அருமணியையாவடுதண்டுறையுண்மேயவானடி யேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (ரு)

ஏற்றானையெண்டோளுடையான்றன்னையெல்லினடமாடவல்லான்ற னானைக், கூற்றானைக்கூற்றமுதைத்தான்றன்னைக்குரைகடல்வாய்நஞ்சுண் டகண்டன்றன்னை, நீற்றானைநீளரவொன்றார்த்தானறனைநீண்டசடைமு டிமேனீராகங்கை, ஆற்றானையாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநா யேனடைந்துய்ந்தேனே. (சு)

கைமமானமதகளிற்றையுரித்தான்றன்னைக்கடல்வரைவானாகாசமா னான்றன்னைச், செமமானப்பவளததைத்திகழுமுத்தைத்திங்களைஞாயிறறை தீயானானை, எமமானையென்மனமேகோயிலாகவிருந்தானையென புருக்கு மடியாாதஙகள், அமமானையாவடுதணடுறையுண்மேயவரனடியேயடிநாயே னடைந்துய்ந்தேனே. (எ)

மெய்யானைப்பொய்யரொடும்விரவாதானைவெள்ளடையைத்தண்ணிழ லைவெந்தீயேந்தும், கையானைக்காமனுடல்வேவக்காய்ந்தகணணானைக்கண் மூன்றுடையான்றன்னைப், பையாடரவமதியுடனேவைததசடையானைப்பா ய்புலித்தோலுடையான்றனனை, ஐயானையாவடுதண்டுறையுணமேயவரன டியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (அ)

வேண்டாமைவேண்டுவதுமில்லான்றன்னை விசயனைமுன்னசைவித்த வேடன்றன்னைத, தூணடாமைசசுடர்விடுநற்சோதியானைச்சூலப்படையா னைக்காலன்வாணாண்மாண்டோடவுதைசெய்தமைந்தனறன்னைமண்ணவரு மவிண்ணவருமவணங்கியேத்தும, ஆண்டானையாவடுதண்டுறையுண்மேய வரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (கூ)

பந்தணவுமெல்விரலாள் பாகன்றன்னைப்பாடலோடாடலபயினறான்ற ன்னைக்,கொந்தணவுநறுங்கொன்றைமாலையானைக்கோலமாநீலமிடற்றான்ற ன்னைச், செந்தமிழோடாரியனைச்சீரியானைத்திருமார்பிறபுரிவெண்ணூறிக ழபபூண்ட, அநதணனையாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநாயேன டைந்துய்ந்தேனே. (௧௦)

தரித்தானைத்தண்கடனஞ்சுண்டான்றன்னைத்தக்கன்றன்பெருவேள் விதகர்த்தான்றன்னைப, பிரித்தானைபபிறைதவழுசெஞ்சடையினானைபபெ ருவலியானமலையெடுத்தவரக்கன்றனனை, நெரித்தானைநேரிழையாள்பாகத் தானை நீசனேனுடலுறுநோயானதீர, அரிததானையாவடுதணடுறையுண்மே யவரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

## திருஆவடுதுறை - திருத்தாண்டகம்.

திருச்சிறறம்பலம்.

திருவேயென்செல்வமேதேனேவானோர் செழுஞ்சுடரேசெழுஞ்சுடர் நற்சோதிமிக்க, உருவேயெனனுறவேயெனனூனேயூனி னுள்ளமேயுள்ள த்தினுள்ளேநின்ற, கருவேயெனகறபகமேகண்ணே கண்ணிறகருமணியே மணியாடுபாவாய்காவாய், அருவாயவல்வினைநோயடையாவணணமாவடுத ண்டுறையுறையுமமாரேறே. (௧)

மாற்றேனெழுத்தஞ்சுமென்றனாவின் மறவேன்றிருவருள்கள்வஞ்சநெ ஞ்சின், னேற்றேன்பிறதெய்வமெண்ணாநாயே னெமபெருமானறிருவடியே யெண்ணினல்லால்,மேற்றானீசெய்வனகள்செய்யக்கணடுவேதனைககேயிட

ங்கொடுத்துநாளுநாளும், ஆற்றேனடியேனை யஞ்சலென்னாயாவடுதண்டு
றையுறையுமமரரேறே. (௨)

வரையார்மடமங்கைபங்காகங்கைமணவாளாவார்சடையாய்நின்றனாமம்
உரையாவுயிர்போகப்பெறுவேனாகி லுறுநோய்வந்தெத்தனையுமுற்றாலென
னே, கரையாநினைந்துருகிக்கண்ணீர்மல்கிக்காதலித்துநின்கழலேயேத்துமன்பர்க், கரையாவடியேனை யஞ்சலென்னா யாவடுதண்டுறையுறையு மமர
ரேறே. (௩)

சிலைத்தார்திரிபுரங்கடீயில்வேவச்சிலைவளைவித் துமையவளையஞ்சநோ
க்கிக், கலித்தாங்கிரும்பிடிமேற்கைவைத்தோடுங்களிறுரித்தங்காளாவெ
ங்கள்கோவே, நிலத்தாரவாதமக்கேபொறையாய்நாளுநில்லாவுயிரோம்புநீத
னேனான், அலுத்தேனடியேனையஞ்சலென்னாயாவடுதண்டுறையுறையும
மரரேறே.

நறுமாமலர்கொய்துநீரின்மூழ்கிநாடோறுநின்கழலேயேத்திவாழ்த்தி
த், துறவாததுன்பந்துறந்தேன்றன்னைச்சூழல்கிலூழ்வினைவந்துற்றாலென
னே, உறவாகிவானவர்களுற்றம்வேண்டவொலிதிரைநீர்க்கடனஞ்சுண்
டுய்யக்கொண்ட, அறவாவடியேனையஞ்சலென்னாயாவடுதண்டுறையுறையு
மமரரேறே. (௫)

கோணாணனங்கக் தோண்மேற்கொண்டு கொழுமலரானறன்சிரத்
தைக்கையிலேந்திக், காணாகளிற்றுரிவைப்போர்வைமூடிக்கங்காளவேடரா
யெங்குஞ்செல்வீர், நாணாருமக்கோவினைச்சேடனே னல்வினையுந்தீவினையு
மெல்லாமுன்னே, ஆணையடியேனை யஞ்சலென்னாயாவடுதண்டுறையுறையு
மமரரேறே. (௬)

உழையுரித்தமானுரித்தோ லாடையானே யுமையவள்தம்பெருமானேயி
மையோரேறே, கழையிறுத்தகருங்கடனஞ்சுண்டகண்டா கயிலாயமலையா
னே யுன்பாலன்பர், பிழைபொறுத்தியென்பதுவும்பெரியோய்நின்றன்கட
னன்றேபேரருளுன்பாலதன்றே, அழையுறுத்துமாமயில்களாடுஞ்சோலை
யாவடுதண்டுறையுறையுமமரரேறே. (௭)

உலந்தார்தலைகலனொன்றேந்திவானோருலகம்பலிதிரிவாயுன்பாலன்பு
கலந்தாரமனங்கவருங்காதலானேகனலாடுங்கையவனேயையாமெய்யே
மலந்தாங்குயிர்ப்பிறவிமாயக்காயம்புக்குள்ளேவிழுந்தழுந்திநாடொறுநாளும்
அலந்தேனடியேனையஞ்சலென்னாயாவடுதண்டுறையுறையுமமரரேறே. ( )

பல்லார்ந்தவெண்டலைகையிலேந்திப்பசுவேறியூரூரன்பலிகொள்வா
னே, கல்லாதமலைமகளுநீயுமெல்லாங்கரிகாட்டிலாட்டுகந்தீர்கருதீராகில்,
எல்லாருமென்றன்னை யிகழ்வார்போலு மேழையமண்குண்டர் சாக்கியர்க
ளொன்றுக, கல்லாதார்திறத்தொழிந்தேனஞ்சலென்னாயாவடுதண்டுறையு
றையுமமரரேறே. (௯)

துறந்தார்தந்தூநெறிக்கட்சென்றேனல்லேன் றுணைமாலைசூட்டநான்
றூயேனல்லேன், பிறந்தேனின்றிருவருளேபேசினல்லாற்பேசாதநாளெல்
லாம்பிறவாநாளே, செறிந்தார்மதிலிலங்கைக்கோமான்றன்னைச்செறுவரை
க்கீழடர்த்தருளிச்செய்கையெல்லாம், அறிந்தேனடியேனையஞ்சலென்னா
யாவடுதண்டுறையுறையுமமரரேறே. (௧௦)

---

திருச்சிற்றம்பலம்.

ட்டங்கன்காண் கையிற்கபாலமேந்திப், பறையோடுபல்கீதம்பாடினான்காணா
டினான்காண் பாணியாகநின்று, மறையோடுமாகீதங்கேட்டான்றான்காண்
மாகடல்சூழ்கோகரணமன்னினானே. (௬)

மின்னளந்தமேன்முகட்டின்மேலுற்றான்காண் விண்ணவர்தம்பெரு
மான்காண்மேவிலெங்கும், முன்னளந்தமூவர்க்குமுதலானான்காண் மூவிலை
வேற்சூலத்தெங்கோலத்தான்காண், எண்ணளந்தென்சிந்தையேமேவினான்
காணேவலன்காணிமையோர்களேத்தநின்று, மண்ணளந்தமாலறியாமாய
த்தான்காண்மாகடல்சூழ்கோகரணமன்னினானே. (௭)

பின்னுசடைமேற்பிறைசூடினான்காண் பேரருளன்காண் பிறப்பொ
ன்றில்லாதான்காண், முன்னியுலகுக்குமுன்னானான்காண்மூவெயிலுஞ்செ
ற்றுகந்தமுதல்வன்றான்காண், இன்னவுருவென்றறிவொ ண்ணாதான்றான்கா
ணேழ்கடலுமேழுலகுமாயினான்காண், மன்னுமடந்தையோர் பாகத்தான்
காண்மாகடல்சூழ்கோகரணமன்னினானே. (௮)

வெட்டவெடித்தார்க்கோர்வெவ்வழலன்காண் வீரன்காண்வீரட்டமே
வினான்காண், பொட்டவனங்களையுநோக்கினான்காண் பூதன்காண்பூதப்ப
டையினான்காண், கட்டக்கடுவினைகள்காத்தாள்வான்காண்கண்டன்காண்வ
ண்டுண்டகொன்றையான்காண், வட்டமதிப்பாகஞ்சூடினான்காண்மாகடல்
சூழ்கோகரணமன்னினானே. (௯)

கையாற்கயிலையெடுத்தான்றன்னைக்கால்விரலாற்றோணெரியவூன்றினா
ன்காண், மெய்யினரம்பிசையாற்கேட்பித்தாற்குமீண்டேயவற்கருள்கணல
கினான்காண், பொய்யாமனத்துப்புறம்பாவான்காண் போர்ப்படையான்கா
ண்பொருவாரில்லாதான்காண், மைகொண்மணிமிடற்றுவார்சடையான்கா
ண்மாகடல்சூழ்கோகரணமன்னினானே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவீழிமிழலை - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

போரானையீருரிவைப்போர்வையானைப் புலியதளேயுடையாடைபோ
ற்றினானைப், பாரானைமதியானைப்பகலானானைப்பல்லுயிராய்நெடுவெளியா
யப்பரந்துநின்ற, நீரானைக்காற்றானைத்தீயானானைநினையாதார்புரமெரியநினை
ந்ததெய்வத், தேரானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்
கின்றாரே. (௧)

சவந்தாங்குமயானத்துச் சாம்பலெலும்பு தலையோடுமயிர்க்கயிறுதரித்
தான்றன்னைப், பவந்தாங்குபாசுபதவேடத்தானைப்பண்டமரர்கொண்டுகந்
தவேள்வியெல்லாஞ் சுவர்ந்தானைக்கச்சியேகம்பன்றன்னைக்கழலடைந்தான்
மேற்கறுத்தகாலன்வீழச், சிவந்தானைத்திருவீழிமிழலையானைச் சேராதார்
தீநெறிக்கேசேர்கின்றாரே. (௨)

அன்றாலின்கீழிருந்தங்கறஞ்சொன்னானையகத்தியனையுகப்பானையயன்
மாறேட, நின்றானைக்கிடந்தகடனஞ்சுண்டானைநேரிழையைக்கலந்திருந்தே
புலன்களைந்தும், வென்றானைமீயச்சூர்மேவினானைமெல்லியலாடவத்தினிறை
யளக்கலுற்றுச், சென்றானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கே
சேர்கின்றாரே. (௩)

தூயானைச்சுடர்ப்பவளச்சோதியானைத்தோன்றியவெவ் வுயிர்க்குந்துணையாய்நின்ற, தாயானைச்சக்கரமாற்கீந்தான்றன்னைச் சங்கரனைச்சந்தோகசாமமோதும், வாயானைமந்திரிப்பார்மனத்துளானைவஞ்சனையாலஞ்செழுத்தும்வழுத்துவார்க்குச், சேயானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௪)

நற்றவத்தினல்லானைத்தீதாய்வந்தநஞ்சமுதுசெய்தானையமுதமுண்ட, மற்றமரருலந்தாலுமுலவாதானைவருகாலஞ்செல்காலம்வாராக்காலம், உற்றவத்தையுணர்ந்தாருமுணரலாகா வொருசுடரையிருவிசும்பினூர்மூன்றொன்றச், செற்றவனைத்திருவீழிமிழலையானைச் சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௫)

மைவானமிடற்றானையவ்வானமின்போல்வளர்சடைமேன்மதியானைமழையாயெங்கும், பெய்வானைப்பிச்சாடலாடுவானைப்பில்வாயபேய்க்கணங்களார்க்கச்சூலம், பொய்வானைப்பொய்யிலாமெய்யன்றன்னைப்பூதலமுமண்டலமும்பொருந்துமவாழ்க்கை, செய்வானைத்திருவீழிமிழலையானைச் சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௬)

மிக்கானைக்குறைந்தடைந்தார்மேவலானை வெவ்வேறாயிருமூன்றுசமயமாகிப், புக்கானையெப்பொருட்கும்பொதுவானானைப்பொன்னுலகத்தவர்போற்றும்பொருளுக்கெல்லாந், தக்கானைத்தானன்றிவேறொன்றில்லாத்தத்துவனைத்தடவரையைநடுவுசெய்த, திக்கானைத்திருவீழிமிழலையானைச் சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௭)

வானவர்கோன்றோளிறுத்தமைந்தன்றன்னைவளைகுளமுமறைக்காடுமன்னினானை, யூனவனையுயிரவனையொருநாட்பார்த்தனுயர்தவத்தினிலையறியவுற்றுச்சென்ற, கானவனைக்கயிலாயமலையினானைக்கங்கைசேர்சடையானைக்கலந்தார்க்கென்றுந், தேனவனைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௮)

பரத்தானையிப்பக்கம்பலவானானைப் பசுபதியைப்பத்தர்க்குமுத்திகாட்டும், வரத்தானைவணங்குவார்மனத்துளானைமாருதமாலெரிமூன்றும்வாயம்பீராகக்காணு, சரத்தானைச்சரத்தையுந்தன்றாட்கீழ்வைத்ததபோதனனைச்சடாமகுடத்தணிந்தபைங்கட், சிரத்தானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௯)

அறுத்தானையயன்றலைகளஞ்சிலொன்றையஞ்சாதே வரையெடுத்தவரக்கன்றோள்க, ளிறுத்தானையெழுநரம்பினிசைகேட்டானையிந்துவினைத்தேய்த்தானையிரவிதன்பற், பறித்தானைப்பகீரதற்காவானோர்வேண்டப்பரந்திழியும்புனற்கங்கைபனிபோலாகச், செறுத்தானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவீழிமிழலை - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

கயிலாயமலையுளார்காரோணத்தார்கந்தமாதனத்துளார்காளத்தியார்
மயிலாடுதுறையுளார்மாகாளத்தார்வக்கரையார்சக்கரமாற்கீந்தார்வாய்ந்த
அயில்வாயசூலமுங்காபாலமுமமருந்திருக்கரத்தாரானேறி
வெயிலாயசோதிவிளங்குநீற்றார்வீழிமிழலையேமேவினாரே. (௧)

பூதியணிபொன்னிறத்தர்பூணநூலர்பொங்கரவர்சங்கரர்வெண்குழையோர்
கேதிசரமேவினார்கேதாரத்தார்கெடிலவடவதிகைவீரட்டத்தார் [காதர்

மாதுயரந்தீர்த்தென்னையுய்யக்கொண்டார்மழபாடிமேயமணவாளனார்
வேதிகுடியுள்ளார்மீயச்சூரார்வீழிமிழலையேமேவினாரே. (௨)

அண்ணாமலையமர்ந்தாராரூருள்ளாரளப்பூராரந்தணர்கள்மாடக்கோயி
லுண்ணாழிகையாருமையாளொடுமிமையோர்பெருமானாரொற்றியூரார்
பெண்ணாகடத்துப்பெருந்தூங்கானைமாடத்தார்கூடத்தார்பேராவூரார்
விண்ணோர்களெல்லாம்விரும்பியேத்தவீழிமிழலையேமேவினாரே. (௩)

வெண்காட்டார்செங்காட்டங்குடியார் வெண்ணிநகரார்வேட்களத்தார்வேதநாவர், பண்காட்டும்வண்டார்பழனத்துள்ளார்பராய்த்துறையார் சிராப்பள்ளியுள்ளார்பண்டோர், வெண்கோட்டுக்கருங்களிற்றைப்பிளிறப்பற்றியுரித்துரிவைபோர்த்த விடலைவேடம், விண்காட்டும்பிறைநுதலியஞ்சக்காட்டிவீழிமிழலையேமேவினாரே. (௪)

புடைசூழ்ந்தபூதங்கள்வேதம்பாடப்புலியூர்ச்சிற்றம்பலத்தேநட்டமாடுவார், நடைசூழ்ந்தபுலித்தோலர்கலிக்கச்சிமேற்றளியுள்ளார் குளிர்சோலையேகம்பத்தார், கடைசூழ்ந்துபலிதேருங்கங்காளனார்கழுமலத்தார்செழுமலர்த்தார்க்குழலியோடும், விடைசூழ்ந்தவெல்கொடியார்மல்குசெல்வவீழிமிழலையேமேவினாரே (௫)

பெரும்புலியூர்விரும்பினார்பெரும்பாழியார்பெரும்பற்றப்புலியூர்மூலத்தானத்தார், இரும்புதலாரிரும்பூளையுள்ளாரேராரின்னம்பரார்ஈங்கோய்மலையாரின்சொற், கரும்பனையாளுமையோடுங்கருகாவூரார்கருப்பறியலூரார்கரவீரத்தார், விரும்பமரரிரவுபகல்பரவியேத்தவீழிமிழலையேமேவினாரே. (௬)

மறைக்காட்டார்வலிவலத்தார்வாய்மூர்மேயார் வாள்கொளிபுத்தூரார்மாகாளத்தார், கறைக்காட்டுங்கண்டனார்காபாலியார் கற்குடியார்விற்குடியார்கானப்பேரார், பறைக்காட்டுங்குழிவிழிகட்பல்பேய்சூழப்பழையனூராலங்காட்டடிகள்பண்டோர், மிறைக்காட்டுங்கொடுங்காலன்வீடப்பாய்ந்தார்வீழிமிழலையேமேவினாரே. (௭)

அஞ்சைக்களத்துள்ளாரையாற்றுள்ளாராரூரார்பேரூரழுந்தூருள்ளார்
தஞ்சத்தளிக்குளத்தார்தக்களூரார்சாந்தையயவந்திதங்கினார்தாம்
நஞ்சத்தைமிக்கமுதாவுண்டநம்பர்நாகேச்சரத்துள்ளார்நாரையூரார்
வெஞ்சொற்சமண்சிறையிலென்னைமீட்டார்வீழிமிழலையேமேவினாரே. (௮)

கொண்டலுள்ளார்கொண்டீச்சரத்தினுள்ளார்கோவலூர்வீரட்டங்கோயில்கொண்டார், தண்டலையார்தலையாலங்காட்டிலுள்ளார் தலைச்சங்கைப்பெருங்கோயில்தங்கினார்தாம், வண்டலொடுமணற்கொணரும்பொன்னிநன்னீர்வலஞ்சுழியார்வைகலின்மாடத்துள்ளார், வெண்டலைமான்கைக்கொண்டவிகிர்தவேடர்வீழிமிழலையேமேவினாரே. (௯)

அரிச்சந்திரத்துள்ளாரம்பருள்ளாரரிபிரமனிந்திரர்க்குமரியாரானார், புரிச்சந்திரத்துள்ளார் போகத்துள்ளார் பொருப்பரையன்மகளோடு விருப்பராகி, எரிச்சந்திவேட்குமிடத்தாரேமகூடத்தார்பாடத்தேனிசையார்கீதர், விரிச்சங்கையெரிக்கொண்டங்காடும்வேடர்வீழிமிழலையேமேவினாரே.

புன்கூரார்புறம்பயத்தார்புத்தூருள்ளார் பூவணத்தார்புலிவலத்தார்வலியின்மிக்க, தன்கூர்மைகருதிவரையெடுக்கலுற்றான் றலைகளொடுமலைகளனைத்தானுந்தோளும், பொன்கூருங்கழலடியோர்விரலாலூன்றிப்பொருப்பதனின்கீழ்நெரித்தருள்செய்புவனநாதர், மின்கூருஞ்சடைமுடியார்விடையின்பாகர்வீழிமிழலையேமேவினாரே. (௰௧)

---

திருச்சிற்றம்பலம்.

## திருவீழிமிழலை - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

கண்ணவன்காண் கண்ணொளிசேர் காட்சியான்காண் கந்தருவம்பாடி யிசைபயின்றாடுகின்ற, பண்ணவன்காண் பண்ணவற்றின் றிறலானான்காண் பழமாகிச் சுவையாகிப் பயக்கின்றான்காண், மண்ணவன்காண் டீயவன்காணீ ரானான்காண் வந்தலைக்கு மாருதன்காண் மழைமேகஞ்சேர், விண்ணவன்காண் விண்ணவர்க்கு மேலானான்காண் விண்ணிழிதண் வீழிமிழலையானே. (க)

ஆலைப்படுகரும்பின்சாறுபோலவண்ணிக்குமஞ்செழுத்தி னாமத்தான்காண், சீலமுடையடியார் சிந்தையான்காண் டிரிபுரமூன் றெரிபடுத்த சிலையினான்காண், பாலினொடு தயிர்நறுநெய்யாடினான்காண் பண்டரங்கவேடத்தான்காண் பலிதேர்வான்காண், வேலைவிடமுண்டமிடற்றினான்காண் விண்ணிழிதண் வீழிமிழலையானே. (உ)

தன்மையொடு வெம்மைதானாகினான்காண் சக்கரம்புட்பாகற்கருள் செய்தான்காண், கண்ணுமொருமூன்றுடையகாபாலிகாண் காமனுடலவேவித்தகண்ணினான்காண், எண்ணில்சமண்டீர்த்தென்னையாட்கொண்டான் காணிருவர்க்கெரியாயருளினான்காண், விண்ணவர்கள்போற்றவிருக்கின்றான்காண் விண்ணிழிதண் வீழிமிழலையானே. (ங)

காதிசைந்தசங்கக்குழையினான்காண் கனகமலையனையகாட்சியான்காண், மாதிசைந்தமாதவமுஞ்சோதித்தான்காண் வல்லேனவெள்ளெயிறு பூணத்தான்காண், ஆதியன்காணண்டத்துக்கப்பாலான்காணைந்தலைமாநாகநாணாக்கினான்காண், வேதியன்காண் வேதவிதிகாட்டினான்காண் விண்ணிழிதண் வீழிமிழலையானே. (ச)

நெய்யினொடுபாலிளநீராடினான்காண் நித்தன்மணவாள னெனநிற்கின்றான்காண், கையின்மழுவாளொடுமானேந்தினான்காண் காலனுயிர்காலாற் கழிவித்தான்காண், செய்யதிருமேனிவெண்ணீற்றினான்காண் செஞ்சடைமேல்வெண்மதியஞ்சேர்த்தினான்காண், வெய்யகனல்விளையாட்டாடினான்காண் விண்ணிழிதண் வீழிமிழலையானே. (ரு)

கண்டுஞ்சுங்கருநெடுமாலாழிவேண்டிக் கண்ணிடந்து சூட்டக்கண் டருளுவான்காண், வண்டுண்ணுமதுக்கொன்றைவன்னிமத்தம்வான்கங்கை சடைக்கரந்தமாதேவன்காண், பண்டங்குமொழிமடவாள்பாகத்தான்காண் பரமன்காண் பரமேட்டியாயினான்காண், வெண்டிங்களரவொடுசெஞ்சடையில் வைத்தான்காண் விண்ணிழிதண் வீழிமிழலையானே. (சா)

கற்பொலிதோட்சலந்தரனைப்பிளந்தவாழி கருமாலுக்கருள்செய்தகருணையான்காண், விற்பொலிதோள்விசயன்வலிதேய்வித்தான்காண் வேடுவனாய்ப்போர்பொருதுகாட்டினான்காண், தற்பரமாந்தற்பரமாய்நிற்கின்றான்காண் சதாசிவன்காண் டன்னொப்பாரில்லாதான்காண், வெற்பரையன் பாவைவிருப்புளான்காண் விண்ணிழிதண் வீழிமிழலையானே. (எ)

மெய்த்தவன்காண்மெய்த்தவத்தினிற்பார்க்கெல்லாம் விருப்பிலாவிருப்புமனவினையாகென்றும், பொய்த்தவன்காண்புத்தன்மறவாதோடியெறி சல்லிபுதுமலர்களாக்கினான்காண், உய்த்தவன்காணுயாகதிக்கே யுள்கினாரையுலகனைத்துமொளித்தளித்திட்டுயச்செய்யும், வித்தகன்காண்வித்தகர்தாம்விரும்பியேத்தும் விண்ணிழிதண் வீழிமிழலையானே. (அ)

சந்திரனைத்திருவடியாற்றளர்வித்தான்காண் டக்கனையுமுனிந்தெச்ச
ன்றலைகொண்டான்காண், இந்திரனைத்தோண்முறிவித்தருள்செய்தான்கா
ணீசன்காணேசன்காணினைவோர்க்கெல்லா, மந்திரமுமறைப்பொருளுமா
யினான்காண்மாலொடயன்மேலொடுகீழறியாவண்ணம், வெந்தழலின்விரி
சுடராயோங்கினான்காண்விண்ணிழிதண்வீழிமிழலையானே. (கூ)

எங்கைப்பேரீமவனத்திருக்கின்றான்கா ணெம்மான்காண்கைம்மாவி
னுரிபோர்த்தான்காண், ஓங்குமலைக்கரையன்றன்பாவையோடுமோருருவா
ய்நின்றான்காணோங்காரன்காண்,கோங்குமலர்க்கொன்றையந்தாக்கண்ணி
யான்காண்கொல்லேறுவெல்கொடிமேற்கூட்டினான்காண், வேங்கைவரிப்
புலித்தோன்மேலாடையான்காண்விண்ணிழிதண்வீழிமிழலையானே. (க0)

திருச்சிற்றம்பலம

---

திருவீழிமிழலை - திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்.

மானேறுகரமுடையவரதர்போலு மால்வரைகால்வளைவில்லாவளைத்
தார்போலுங், கானேறுகரிகதறவுரித்தார்போலுங் கட்டங்கக்கொடிதிண்டோ
ளகைக்கொண்டார்போலுந், தேனேறுதிருவிதழித்தாரார்போலுந் திருவீழி
மிழலையமர்செல்வர்போலும், ஆனேறதேறுமழகர்போலு மடியேனையாளு
டையவடிகடாமே. (க)

சமரமிகுசலந்தரன்போர்வேண்டினானைச் சக்கரத்தாற்பிளப்பித்தசது
ரர்போலும், நமனையொருகால்குறைத்தநாதர்போலு நாரணனையிடப்பாக
த்தடைத்தார்போலுங், குமரனையுமகனாகவுடையார்போலுங் குளிர்வீழிமி
ழலையமர்குழகர்போலும், அமரர்களபின்முதணஞ்சுண்டார்போலு மடி
யேனையாளுடையவடிகடாமே. (உ)

நீறணிந்ததிருமேனிநிமலர்போலு நேமிநெடுமாற்கருளிச் செய்தார்
போலும், ஏறணிந்தகொடியுடையெம்மிறைவர்போலு மெயின்மூன்றுமெ
ரிசரத்தாலெய்தார்போலும், வேறணிந்தகோலமுடைவேடர்போலுமவிய
னவீழிமிழலையுறைவிகிர்தர்போலும் ஆறணிந்தசடாமகுடத்தழகர்போலு
மடியேனையாளுடையவடிகடாமே. (ங)

கைவேழமுகத்தவனைப்படைத்தார்போலுங் கயாசுரனையவனாற்கொல்
வித்தார்போலுஞ், செய்வேள்விதக்கனைமுனிந்தார்போலுந் திங்கண்முக
ன்றன்சிரமொன்றுசிதைத்தார்போலு, மெய்வேளவிழமூத்திதலையறுத்தா
ர்போலும வியன்வீழிமிழலையிடங்கொண்டார்போலும், ஐவேளவியாறங்க
மானார்போலுமடியேனையாளுடையவடிகடாமே. (ச)

துன்னத்தின்கோவணமொன்றுடையார்போலுஞ் சுடர்மூன்றுஞ்சோ
தியுமாய்த்தூயர்போலும், பொன்னொத்ததிருமேனிப்புனிதர்போலும் பூத
கணம்புடைசூழவருவார்போலும், மின்னொத்தசெஞ்சடைவெண்பிறையார்
போலும்வியனவீழிமிழலைசேர்விமலர்போலும். அன்னத்தேரயன்முடிசே
ரடிகள்போலுமடியேனையாளுடையவடிகடாமே. (ரு)

மாலாலுமறிவரியவரதர்போலுமறவாதார்பிறப்பறுக்கவல்லார்போலு
ம், நாலாயமறைக்கிறைவரானார்போலுநாமவெழுத்தஞ்சாயநம்பர்போலும்,
வேலானைவீரியைமுன்படைத்தார்போலும வியன்வீழிமிழலையமர்விகிர்த
ர்போலும், ஆலாலமிடற்றடக்கியளித்தார்போலு மடியேனையாளுடையவ
டிகடாமே. (சா)

பஞ்சடுத்தமெல்விரலாள்பங்கர்போலும்பைந்நாகமரைக்கசைத்தபரமர்போலும், மஞ்சடுத்தமணிநீலகண்டர்போலும்வடகயிலைமலையுடையமணாளர்போலுஞ், செஞ்சடைக்கண்வெண்பிறைகொண்டணிந்தார்போலுந் திருவீழிமிழலையமர்சிவனார்போலும், அஞ்சடக்குமடியவர்கட்கணியார்போலுமடியேனையாளுடையவடிகடாமே. (௭)

குண்டரொடுபிரித்தெனையாட்கொண்டார்போலுங் குடமூக்கிலிடமாக்கிக்கொண்டார்போலும், புண்டரிகப்புதுமலராதனத்தார்போலும் புள்ளரைசைக்கொன்றுயிர்பின்கொடுத்தார்போலும், வெண்டலைப்பலிகொண்டவிகிர்தர்போலும்வியன்வீழிமிழலைநகருடையார்போலு, மண்டத்துப்புறத்தப்பாலானார்போலுமடியேனையாளுடையவடிகடாமே. (௮)

முத்தனையமுகிழ்முறுவலுடையார்போலுமொய்பவளக்கொடியனையசடையார்போலும், எத்தனையும்பத்திசெய்வார்க்கினியார்போலு மிருநான்குமூர்த்திகளுமானார்போலு, மித்திரவச்சிரவணற்குவிருப்பர்போலும் வியன்வீழிமிழலையமர்விகிர்தர்போலும், அத்தனொடுமம்மையெனக்கானார்போலுமடியேனையாளுடையவடிகடாமே. (௯)

கரியுரிசெய்துமைவெருவக்கண்டார்போலுங் கங்கையையுஞ்செஞ்சடைமேற்கரந்தார்போலும், எரியதொருகைதரித்தவிறைவர்போலுமேனத்தின்கூனெயிறுபூண்டார்போலும், விரிகதிரோரிருவரைமுனம்வெகுண்டார்போலும் வியன்வீழிமிழலையமர்விமலர்போலும், அரிபிரமர்துதிசெய்யநின்றளித்தார்போலுமடியேனையாளுடையவடிகடாமே. (௧௰)

கயிலாயமலையெடுத்தான்கதறிவீழக் கால்விரலாலடர்த்தருளிச்செய்தார்போலுங், குயிலாருமென்மொழியாள்குளிர்ந்துநோக்கக்கூத்தாடவல்லகுழகர்போலும், வெயிலாயசோதிவிளக்கானார்போலும்வியன்வீழிமிழலையமர்விகிர்தர்போலும், அயிலாருமூவிலைவேற்படையார்போலுமடியேனையாளுடையவடிகடாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

54

## திருப்புள்ளிருக்குவேளூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

ஆண்டானையடியேனையாளாக்கொண்டு வடியோடுமுடியயன்மாலறியாவண்ணம், நீண்டானைநெடுங்களமாநகரான்றன்னை நேமிவான்படையானைநீணாரவோர்க்குங், கீண்டானைக்கேதாரமேவினானைக்கேடிலியைக்கிளரொளியைக்கிளர்பொறிவாளரவோடென்பு, பூண்டானைப்புள்ளிருக்குவேளூரானைப்போற்றாதேயாற்றநாள்போக்கினேனே. (௧)

சீர்த்தானைச்சிறந்தடியேன்சிந்தையுள்ளே திகழ்ந்தானைச்சிவன்றன்னைத்தேவதேவைக், கூர்த்தானைக்கொடுநெடுவேற்கூற்றந்தன்னைக்குரைகழலாற்குமைத்துமுனிகொண்டவச்சம், போத்தானைப்பிறப்பிலியையிறப்பொன்றில்லாப்பெம்மானைக்கைம்மாவினுரிவைபேணிப், போர்த்தானைப்புள்ளிருக்குவேளூரானைப்போற்றாதேயாற்றநாள்போக்கினேனே. (௨)

பத்திமையாற்பணிந்தடியேன்றன்னைப்பன்னாட்பாமாலைபாடப்பயில்வித்தானை, எத்தேவுமேத்துமிறைவன்றன்னையெம்மானையென்னுள்ளத்துள்ளேயூறும், அத்தேனையமுதத்தையாவின்பாலையண்ணிக்குந்தீங்கரும்பையரனையாதிப், புத்தேளைப்புள்ளிருக்குவேளூரானைப் போற்றாதேயாற்றநாள் போக்கினேனே. (௩)

இருளாயவுள்ளத்தினிருளைநீக்கியிடர்பாவங்கெடுத்தேழையேனையுய்யத், தெருளாதசிந்தைதனைத்தெருட்டித்தன்போற் சிவலோகநெறியறியச்சிந்தைதந்த, அருளானையாதிமாதவத்துளானையாறங்கநால்வேதத்தப்பானின்ற, பொருளானைப்புள்ளிருக்குவேளூரானைப்போற்றாதேயாற்றநாள்போக்கினேனே. (௪)

மின்னுருவைவிண்ணகத்திலொன்றாய்மிக்குவீசுங்காற்றன்னகத்திலிரண்டாய்ச்செந்தீத், தன்னுருவின்மூன்றாய்த்தாழ்புனலினான்காய்த்தரணிதலத்தஞ்சாகியெஞ்சாத்தஞ்ச, மன்னுருவைவான்பவளக்கொழுந்தைமுத்தை வளரொளியைவயிரத்தைமாசொன்றில்லாப், பொன்னுருவைப்புள்ளிருக்குவேளூரானைப்போற்றாதேயாற்றநாள்போக்கினேனே. (௫)

அறையார்பொற்கழலார்ப்பவணியார்தில்லையம்பலத்துணடமாடுமழகன்றன்னைக், கறையார்மூவிலைநெடுவேற்கடவுடன்னைக் கடனாகைக்காரோணங்கருதினானை, இறையானையென்னுள்ளத்துள்ளேவிள்ளாதிருந்தானையேழ்பொழிலுந்தாங்கிநின்ற, பொறையானைப்புள்ளிருக்குவேளூரானைப்போற்றாதேயாற்றநாள்போக்கினேனே. (௬)

நெருப்பனையதிருமேனிவெண்ணீற்றானை நீங்காதெனுள்ளத்தினுள்ளேநின்ற, விருப்பவனைவேதியனைவேதவித்தை வெண்காடுமேவியனாரூர்த்தி நகருமேவி, யிருப்பவனையிடைமருதோடீங்கோய்நீங்காவிறையவனையெனையாளுங்கயிலையென்னும், பொருப்பவனைப்புள்ளிருக்குவேளூரானைப்போற்றாதேயாற்றநாள்போக்கினேனே. (௭)

பேராயிரம்பரவிவானோரேத்தும்பெம்மானைப்பிரிவிலாவடியார்க்கென்றும், வாராதசெல்வம்வருவிப்பானைமந்திரமுந்தந்திரமுமருந்துமாகித், தீராநோய்தீர்த்தருளவல்லான்றன்னைத் திரிபுரங்கடீயெழத்திண்சிலைகைக்கொண்ட, போரானைப்புள்ளிருக்குவேளூரானைப்போற்றாதேயாற்றநாள்போக்கினேனே. (௮)

பண்ணியனைப்பைங்கொடியாள்பாகன்றன்னைப்படர்சடைமேற்புனல்கரந்தபடிறன்றன்னை, நண்ணரியானையெனக்கெளியான்றன்னை நான்மறையினற்பொருளைநளிவெண்டிங்கட், கண்ணியனைக்கடியதோர்விடையொன்றேறுங்காரணனைநாரணனைக்கமலத்தோங்கும், புண்ணியனைப்புள்ளிருக்குவேளூரானைப்போற்றாதேயாற்றநாள்போக்கினேனே. (௯)

இறுத்தானையிலங்கையர்கோன்சிரங்கள்பத்து மொய்ந்நரம்பினின்னிசைகேட்டின்புற்றானை, யறுத்தானையடியார்தம்மருநோய்பாவமலைகடலிலாலமுண்டுகண்டங், கறுத்தானைக்கண்ணழலாற்காமனங்கஞ்சாய்ந்தானைக்கனமழுவுங்கையேயுமங்கை, பொறுத்தானைப்புள்ளிருக்குவேளூரானைப்போற்றாதேயாற்றநாள்போக்கினேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## ஸ்ரீகைலாயம் - போற்றித்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

வேற்றாகிவிண்ணாகிநின்றாய்போற்றி மீளாமேயாளென்னைக்கொண்டாய்போற்றி, யூற்றாகியுள்ளேயொளித்தாய்போற்றி யோவாதசத்தத்தொலியேபோற்றி, யாற்றாகியங்கேயமர்ந்தாய்போற்றி யாறங்கநால்வேதமானாய்போற்றி, காற்றாகியெங்குங்கலந்தாய்போற்றி கயிலைமலையானேபோற்றிபோற்.

## ஸ்ரீகைலாயம் - போற்றித்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

பொறையுடையபூமிநீரானாய்போற்றிபூதப்படையாள்புனிதாபோற்றி [ற்றி
நிறையுடையநெஞ்சினிடையாய்போற்றிநீங்காதென்னுள்ளத்திருந்தாய்போ
மறையுடையவேதம்விரித்தாய்போற்றிவானோர்வணங்கப்படுவாய்போற்றி
கறையுடையகண்டமுடையாய்போற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி.

முன்பாகிநின்றமுதலேபோற்றிமூவாதமேனிமுக்கண்ணாபோற்றி
அன்பாகிநின்றார்க்கணியாய்போற்றியாறேறுசென்னிச்சடையாய்போற்றி
என்பாகவெங்குமணிந்தாய்போற்றியென்சிந்தைநீங்காவிறைவாபோற்றி
கண்பாவிநின்றகனலேபோற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (௨)

மாலையெழுந்தமதியேபோற்றிமன்னியென்சிந்தையிருந்தாய்போற்றி
மேலைவினைகளறுப்பாய்போற்றிமேலோடுதிங்கண்முடியாய்போற்றி
ஆலைக்கரும்பினறெளிவேபோற்றியடியார்கட்காரமுதமானாய்போற்றி
காலைமுளைத்தகதிரேபோற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (௩)

உடலின்வினைகளறுப்பாய்போற்றியொள்ளெரிவீசும்பிரானேபோற்றி
படருஞ்சடைமேன்மதியாய்போற்றிபல்கணக்கூத்தப்பிரானேபோற்றி
சுடரிற்றிகழ்கின்றசோதிபோற்றிதோன்றியென்னுள்ளத்திருந்தாய்போற்றி
கடலிலொளியாயமுதேபோற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (௪)

மைசேர்ந்தகண்டமுடையாய்போற்றிமாலுக்குமோராழியீந்தாய்போற்றி
பொய்சேர்ந்தசிந்தைபுகாதாய்போற்றி போகாதென்னுள்ளத் திருந்தாய
போற்றி, மெய்சேரப்பால்வெண்ணீறாடிபோற்றி மிக்கார்களேத்தும்விளக்
கேபோற்றி, கைசேரனலேந்தியாடிபோற்றி கயிலைமலையானேபோற்றிபோ
ற்றி. (௫)

ஆறேறுசென்னிமுடியாய்போற்றியடியார்கட்காரமுதாய்நின்றாய்போற்றி
நீறேறுமேனியுடையாய்போற்றிநீங்காதென்னுள்ளத்திருந்தாய்போற்றி
கூறேறுமங்கைமழுவாபோற்றிகொள்ளுங்கிழமையேழானாய்போற்றி
காரேறுகண்டமிடற்றாய்போற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (௬)

அண்டமேழன்றுகடந்தாய்போற்றியாதிபுராணனாய்நின்றாய்போற்றி
பண்டைவினைகளறுப்பாய்போற்றிபாரோர்விண்ணேத்தப்படுவாய்போற்றி
தொண்டர்பரவுமிடத்தாய்போற்றிதொழினோக்கியாளுஞ்சுடரேபோற்றி
கண்டங்கறுக்கவும்வல்லாய்போற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (௭)

பெருகியலைக்கின்றவாறேபோற்றிபேராநோய்பேரவிடுப்பாய்போற்றி
உருகிநினைவார்தமுள்ளாய்போற்றியூனந்தவிர்க்கும்பிரானேபோற்றி
அருகிமிளிர்கின்றபொன்னேபோற்றியாருமிகழப்படாதாய்போற்றி
கருகிப்பொழிந்தோடுநீரேபோற்றிகயிலைமலையானேபோற்றிபோற்றி. (௮)

செய்யமலர்மேலான்கண்ணன்போற்றி தேடியுணராமைநின்றாய்போ
ற்றி, பொய்யாநஞ்சுண்டபொறையேபோற்றிபொருளாகவென்னையாட்கொ
ண்டாய்போற்றி, மெய்யாகவானஞ்சுகந்தாய்போற்றி மிக்கார்களேத்துங்
குணத்தாய்போற்றி, கையானைமெய்த்தோலுரித்தாய்போற்றிகயிலைமலையா
னேபோற்றிபோற்றி. (௯)

மேலவைத்தவானோர்பெருமான்போற்றிமேலாடுபுரமூன்று மெய்தா
ய்போற்றி, சீலந்தான்றென்னிலங்கைமன்னன்போற்றிசிலையெடுக்கவாயல

றவைத்தாய்போற்றி, கோலத்தாற்குறைவில்லான்றன்னையன்று கொடிதாகக்காய்ந்தகுழகாபோற்றி, காலத்தாற்காலனையுங்காய்ந்தாய்போற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## ஸ்ரீகைலாயம் - போற்றித்திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்.

பாட்டானநல்லதொடையாய்போற்றி பரிசையறியாமனின்றாய்போற்றி
சூட்டானதிங்கண்முடியாய்போற்றி தூமாலைமத்தமணிந்தாய்போற்றி
ஆட்டானஞ்சுமமர்ந்தாய்போற்றி யடங்கார்புரமெரியநக்காய்போற்றி
காட்டானைமெய்த்தோலுரித்தாய்போற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி.

அதிராவினைகளறுப்பாய்போற்றி யாலநிழற்கீழமர்ந்தாய்போற்றி
சதுராசதுரக்குழையாய்போற்றி சாம்பன்மெய்பூசுந்தலைவாபோற்றி
எதிராவுலகமமைப்பாய்போற்றி யென்றுமீளாவருள்செய்வாய்போற்றி
கதிரார்கதிருக்கோர்கண்ணேபோற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. ()

செய்யாய்கரியாய்வெளியாய்போற்றி செல்லாதசெல்வமுடையாய்போற்றி
ஐயாய்பெரியாய்சிறியாய்போற்றி யாகாசவண்ணமுடையாய்போற்றி
வெய்யாய்தணியாயணியாய்போற்றி வேளாதவேள்வியுடையாய்போற்றி
கையார்கழலார்விடங்காபோற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (௩)

ஆட்சியுலகையுடையாய்போற்றி யடியார்க்கமுதெலாமீவாய்போற்றி
சூட்சிசிறிதுமிலாதாய்போற்றி சூழ்ந்தகடனஞ்சமுண்டாய்போற்றி
மாட்சிபெரிதுமுடையாய்போற்றி மன்னியென்சிந்தைமகிழ்ந்தாய்போற்றி
காட்சிபெரிதுமரியாய்போற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (௪)

முன்னியாய்நின்றமுதல்வாபோற்றி மூவாதமேனியுடையாய்போற்றி
என்னியாயெந்தைபிரானேபோற்றி யேழினிசையேயுகப்பாய்போற்றி
மன்னியமங்கைமணாளாபோற்றி மந்திரமுந்தந்திரமுமானாய்போற்றி
கன்னியாங்கங்கைத்தலைவாபோற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி (௫)

உரியாயுலகினுக்கெல்லாம்போற்றி யுணர்வென்னுமூர்வதுடையாய்போற்றி
எரியாயதெய்வச்சுடரேபோற்றி யேசுமாமுண்டியுடையாய்போற்றி
அரியாயமரர்கட்கெல்லாம்போற்றி யறிவேயடக்கமுடையாய்போற்றி
கரியானுக்காழியன்றீந்தாய்போற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (௬)

எண்மேலுமெண்ணமுடையாய்போற்றி யேறரியவேறுங்குணத்தாய் போற்றி, பண்மேலேபாவித்திருந்தாய்போற்றி பண்ணொடியாழ்வீணைபயின்றாய்போற்றி, விண்மேலுமேலுநிமிர்ந்தாய்போற்றி மேலார்கண்மேலார்கண் மேலாய்போற்றி, கண்மேலுங்கண்ணொன்றுடையாய்போற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (௭)

முடியார்சடையின்மதியாய்போற்றி முழுநீறுசண்ணித்தமூர்த்திபோற்றி
துடியாரிடையுமையாள்பங்காபோற்றி சோதித்தார்காணாமைநின்றாய்போற்றி
அடியாரடிமையறிவாய்போற்றி யமராபதியாளவைத்தாய்போற்றி
கடியார்புரமூன்றுமெய்தாய்போற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (௮)

போற்றிசைத்துன்னடிபரவநின்றாய்போற்றி புண்ணியனே நண்ணலரியாய்போற்றி, ஏற்றிசைக்கும்வானமேலிருந்தாய்போற்றி யெண்ணுயிராறு

றுபேராய்போற்றி, நாற்றிசைக்குமவிளக்காயநாதாபோற்றி நான்முகற்கு மாற்குமரியாய்போற்றி, சாற்றிசைக்குந்திசைக்கெல்லாமவித்தேபோற்றிக யிலைமலையானேபோற்றிபோற்றி. (௯-௧௦.)

திருச்சிற்றம்பலம்

---

## திருவலம்புரம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

மண்ணளந்தமணிவண்ணர்தாமுமற்றைமறையவனும்வானவருஞ்சூழ நின்று, கண்மலிந்ததிருநெற்றியுடையாரொற்றைக்கதநாகங்கையுடையார்கா ணீரன்றே, பண்மலிந்தமொழியவருமியானுமெல்லாம்பணிந்திறைஞ்சித்த ம்முடையபின்பின்செல்ல, மண்மலிந்தவயல்புடைசூழ் மாடவீதிவலம்பு ரமேபுக்கங்கேமன்னினாரே. (௧)

சிலைநவின்றதொருகணையாற்புரமூன்றெய்ததீவண்ணர்சிறந்திமையோ ரிறைஞ்சியேத்தக், கொலைநவின்றகளியானையுரிவைபோர்த்துக்கூத்தாடித் திரிதருமக்கூத்தர்நல்ல, கலைநவின்றமறையவர்கள்காணக்காணக்கடுவிடை மேற்பாரிடங்கள்சூழக்காதன், மலைமகளுங்கங்கையுந்தாமுமெல்லாமவலம் புரமேபுக்கங்கேமன்னினாரே. (௨)

தீக்கூருந்திருமேனியொருபான்மற்றை யொருபாலுமரியுருவந்திகழ் ந்தசெல்வர், ஆக்கூரிற்றான்றோன்றிபுகுவார்போல வருவினையேன்செல்வ த்துமேயப்பாலெங்கு, நோக்காரொருவிடத்துநூலுந்தோலுந்துவந்திலங்கு ந்திருமேனிவெண்ணீறாடி, வாக்கான்மறைவிரித்துமாயம்பேசிவலம்புரமே புக்கங்கேமன்னினாரே. (௩)

மூவாதமூக்கப்பாம்பரையிற்சாத்திமூவருருவாயமுதல்வரிந்நாட், கோ வாதவெரிகணையைச்சிலைமேற்கோத்த குழகனார்குளிர்கொன்றை சூடியிங் கே, போவாரைக்கண்டடியேன்பின்பின்செல்லப்புறக்கணித்துத்தம்முடை யபூதஞ்சூழ, வாவாவெனவுரைத்துமாயம்பேசிவலம்புரமேபுக்கங்கேமன்னி னாரே. (௪)

அனலொருகையதுவேந்தியதளின்மேலேயரத்தலைமாநாக மரையிற் சாத்திப், புனல்பொதிந்தசடைக்கற்றைப்பொன்போன்மேனிப்புனிதனார்பு ரிந்தமரிறைஞ்சியேத்தச், சினவிடையைமேற்கொண்டுதிருவாரூருஞ்சிர புரமுமிடைமருதுஞ்சேர்வார்போல, மனமுருகவளைகழலமாயம்பேசிவலம் புரமேபுக்கங்கேமன்னினாரே. (௫)

கறுத்ததொருகண்டத்தார்காலன்வீழக்காலினாற்காய்ந்துகந்த காபாலி யார், முறித்ததொருதோலுடுத்துமுண்டஞ்சாத்திமுனிகணங்கள்புடை சூ ழமுற்றந்தோறுந், தெறித்ததொருவீணையராய்ச்செல்வார்தம்வாயாற்சிறுமு றுவல்வந்தெனதுசிந்தைவௌவ, மறித்தொருமான்கைக்கொண்டேமாயம்பேசிவ லம்புரமேபுக்கங்கேமன்னினாரே. (௬)

பட்டுடுத்துப்பவளம்போலமேனியெல்லாம்பசுஞ்சாந்தங்கொண்டணி ந்துபாதநோவ, இட்டெடுத்துநடமாடியிங்கேவந்தார்க்கெவ்வூரீரெம்பெரு மானென்றேனாவி, விட்டிடுமாறதுசெய்துவிரைந்துநோக்கிவேறோர்பதிபுக ப்போவார்போல,வட்டணைகள்படநடந்துமாயம்பேசிவலம்புரமேபுக்கங்கே மன்னினாரே. (௭)

பல்லாரபயிலபழனமபாசூரெனறுமபழனமபதிபழமைசொல்லிநின்றார்
நல்லாரநனிபளளியினறுவைகிநாளைபபோயவெளளாறுசேர்துமென்றார்
சொலலாரொருவிடமாததோளைககவின்சிதைதுததாராயவெநதநீறடியெங்கு
மல்லாரவயலபுடைசூழமாடவீதிவலமபுரமேபுககஙகேமன்னினாரே. (அ)

பொஙகாடாவொனறுகையிறகொணடு போரவெண மழுவேநதிபபோ
காநிறபா, தஙகாரொருவிடததாததமமேலாவநதவிததருளாததததுவததே
நினறேனெனபா, எஙகேயிவரசெயவகையொனறெனறுவராவெனசணணி
னினறகலாவேடஙகாட்டி, மஙகுணமதிதவழமாடவீதிவலமபுரமேபுககஙகே
மனனினாரே. (கூ)

செஙகணமாலபிலேபிடிததசசேனையோடுஞசேதுபநதனஞசெய்துசெ
னறுபுக்குப, பொஙகுபோரபலசெய்துபுகலாலவெனறபோராககனெடுமு
டிகளபொடியாயவிழ, அஙகொருதனதிருவிரலாலிறையேயூனறியடாதத
வற்கேயருளபுரிநதவடிகளிநநாள, வஙகமலிகடலபுடைசூழமாடவீதிவலம
புரமேபுககஙகேமனனினாரே. (க0)

திருசசிறறமபலம.

---

## திருவெண்ணி - திருத்தாண்டகம்.

திருசசிறறமபலம.

தொண்டிலஙகுமடியவாககோரநெறியினானுநதூநீறுதுதைநதிலஙகுமா
ர்பினானும, புணடரிகததயனெடுமாலகாணாவணணமபொஙகுதழறபிழமபா
யபுராணனாரும, வணடமருமலாககொனறைமாலையாருமவானவாககாநஞ
சுணடமைநதனாரும, விணடவாதமபுரமூனறுமெரிசெயதாருமவெண்ணிய
மாநதுறைநினறவிகிரதனாரே. (க)

நெருபபனையமேனிமேலவெண்ணீறடாரு நெறறிமேலொறறைககண
ணிறைவிததாரும, பொருபபனையனபடடபாவை யிடபாலாருமபூநதூரு
த்திநகாமேயபுராணனாரு, மருபபனையவெணமதியக கண்ணியாருமவளைகு
ளமுமறைககாடுமனனினாரும, விருபபுடையவடியவாதமமுளளததாரும
வெணணியமாநதுறைநினறவிகிரதனாரே. (உ)

கையுலாமுவிலைவேலேநதினாருஙகரிகாடடிலெரியாடுங கடவுளாரும,
பையுலாநாகஙகொணடாடடுவாருமபாவவாரபாவஙகளபாறறுவாரும, செ
யயுலாஙகயலபாயவயலகளசூழநததிருபபுனகூரமேவியசெலவனாரு, மெய
யெலாம வெணணீறுசணணிததாரும வெணணியமாநதுறைநின்ற விகிரத
னாரே. (ஙு)

சடையேறுபுனல்வைத்த சதுரனாருநதககனறன பெருவேளவிதகர்
செய்தாரும, உடையேறுபுலியதளமேனாககஙகடடியுணபலிககெனறூரூரினு
ழிதாவாரும, விடையேறிககயலபாயவயலகளசூழநதமயிலாடுதுறையுறை
யுமணாளனாரும, விடையேறுவெலகொடியெமவிமலனாருமவெணணியமா
நதுறைநினறவிகிரதனாரே. (ச)

மண்ணிலஙகுநீரனல்கால்வானுமாகிமறறவறறின்குணமெலாமாயநின
றாரும,பணணிலஙகுபாடலோடாடலாருமபருபபதமுமபாசூருமனனினாரு
ம, கணணிலஙகுநுதலாருஙகபாலமேநதிககடைதோறுமபலிகொள்ளுஙகா
ட்சியாரும, விணணிலஙகுவெண்மதியககணணியாரும வெணணியமாநது
றைநின்றவிகிரதனாரே. (ரு)

வீடுதனைமெய்யடியார்க்கருள்செய்வாரும்வேலைவிடமுண்டிருண்டகண்டத்தாருங், கூடலர்தம்மூவெயிலுமெரிசெய்தாருங்குரைகழலாற்கூற்றுவனைக்குமைசெய்தாரும், ஆடுமரவரைக்கசைத்தங்காடுவாருமாலமரநீழலிருந்தறஞ்சொன்னாரும், வேடுவனாய்மேல்விசயற்கருள்செய்தாரும்வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே. (௭)

மட்டிலங்குகொன்றையந்தார்மாலைசூடிமடவாளவளோடுமொன்றாய்நின்று, சிட்டிலங்குவேடத்தராகிநாளுஞ்சில்பலிக்கென்றூரூர்திரிதாவாருங், கட்டிலங்குபாசத்தால்வீசவந்தகாலன்றன்காலமறுப்பார்தாமும், விட்டிலங்குவெண்குழைசேர்காதினாரும்வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே.

செஞ்சடைக்கோர்வெண்டிங்கள்சூடினாருந்திருவாலவாயுறையுஞ்செல்வனாரும், அஞ்சனக்கண்ணுமையையொருபாகத்தாருமாறங்கநால்வேதமாயினாருங், மஞ்சடுத்தநீள்சோலைமாடவீதிமதிலாரூர்புக்கங்கேமன்னினாரும், வெஞ்சினத்தவேழமதுரிசெய்தாரும்வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே. (௮)

வளர்கிளாமாமதிசூடும்வேணியாரும்வானவர்க்காயநஞ்சுண்டமைந்தனாருங், களங்கொளவென்சிந்தையுள்ளேமன்னினாருங்கச்சியேகம்பத்தெங்கடவுளாரும், உளங்குளிரவமுதூறியண்ணிப்பாருமுத்தமிழோடெத்திசையுமன்னினாரும், விளங்கிளம்வெண்மழுவொன்றேந்தினாரும்வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே. (௯)

பொன்னிலங்குகொன்றையந்தார்மாலைசூடிப்புகலூரும்பூவணமும்பொருந்தினாருங், கொன்னிலங்குமூவிலைவேலேந்தினாருங்குளிர்ந்தசெஞ்சடையெங்குழகனாருந், தென்னிலங்கைமன்னவர்கோன்சிரங்கள்பத்துந்திருவிரலாலடர்த்தவனுக்கருள்செய்தாரு, மின்னிலங்குநுண்ணிடையாள்பாகத்தாரும்வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கற்குடி - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

மூத்தவனைவானவர்க்குமூவாமேனிமுதலவனைத்திருமறையின்மூக்கப்பாம்பொன், ஞாத்தவனையக்கரவமாரமாகவணிந்தவனைப்பணிந்தடியாரடைந்தவன்போ, டேத்தவனையிறுவரையிற்றேனையேனோர்க்கின்னமுதமளித்தவனையிடரையெல்லாங், காத்தவனைக்கற்குடியில்விழுமியானைக்கற்பகத்தைக்கண்ணாரக்கண்டேனே. (௧)

செய்யானைவெளியானைக்கரியான்றன்னைத்திசைமுகனைத்திசையெட்டுஞ்செறிந்தான்றன்னை, ஐயானைநெய்யானைச்சீரியானையணியானைச்சேயானையானஞ்சாடு, மெய்யானைப்பொய்யாதுமிலாதான்றன்னைவிடையானைச்சடையானைவெறித்தமான்கொள், கையானைக்கற்குடியில்விழுமியானைக்கற்பகத்தைக்கண்ணாரக்கண்டேனே. (௨)

மண்ணதனிலைந்தைமாநீரினான்கைவயங்கெரியின்மூன்றைமாருதத்திரண்டை, விண்ணதனிலொன்றைவிரிகதிரைத்தண்மதியைத்தாரகைகட்மின்மிக்க, எண்ணதனிலெழுத்தையேழிசையைக்காமனெழிலழியவெரியுமிழ்ந்தவிமையாநெற்றிக், கண்ணவனைக்கற்குடியில்விழுமியானைக்கற்பகத்தைக்கண்ணாரக்கண்டேனே. (௩)

நற்றவனைப்புற்றரவநாணினானைநாணாதுநகுதலையூணயந்தான்றன்னை, முற்றவனைமூவாதமேனியானைமுந்நீரினஞ்சமுகந்துண்டான்றன்னைப்பற்றவனைப்பற்றார்தம்பதிகள்செற்றபடையானையடைவார்தம்பாவம்போக்கக், கற்றவனைக்கற்குடியில்விழுமியானைக்கற்பகத்தைக்கண்ணாரக்கண்டேனே.

சங்கைதனைத்தவிர்த்தாண்டதலைவன்றன்னைச்சங்கரனைத் தழலுறுதாண்மழுவாட்டாங்கும், அங்கையனையங்கமணியாகத்தானையாகத்தோர்பாகத்தேயமரவைத்த, மங்கையனைமதியோடுமாசுணமுந்தம்மின்மருவவிரிசடைமுடிமேல்வைத்தவானிற், கங்கையனைக்கற்குடியில்விழுமியானைக்கற்பகத்தைக்கண்ணாரக்கண்டேனே. (௫)

பெண்ணவனையாணவனைப் பேடானானைப் பிறப்பிலியையிறப்பிலியைப்பேராவாணி, விண்ணவனைவிண்ணவர்க்குமேலானானைவேதியனைவேதத்தின்கீதம்பாடும், பண்ணவனைப்பண்ணில்வருபயனானானைப் பாரவனைப்பாரில்வாழுயிர்கட்கெல்லாங், கண்ணவனைக்கற்குடியில்விழுமியானைக்கற்பகத்தைக்கண்ணாரக்கண்டேனே. (௬)

பண்டானைப்பரந்தானைக்குவிந்தான்றன்னைப் பாரானைவிண்ணாயிவ்வுலகமெல்லாம், உண்டானையுமிழ்ந்தானையுடையான்றன்னை யொருவருந்தன்பெருமைதனையறியவொண்ணா, விண்டானைவிண்டார்தம்புரங்கண்மூன்றும்வெவ்வழலில் வெந்துபொடியாகிவீழக், கண்டானைக்கற்குடியில்விழுமியானைக்கற்பகத்தைக் கண்ணாரக்கண்டேனே. (௭)

வானவனைவானவர்க்குமேலானானைவணங்குமடியார்மனத்துண்மருவிப்புக்க, தேனவனைத்தேவர்தொழுகழலான்றன்னைச்செய்குணங்கள் பலவாகிநின்றவென்றிக், கோனவனைக்கொல்லைவிடையேறினானைக்குழன்முழவமியம்பக்கூத்தாடவல்ல, கானவனைக்கற்குடியில்விழுமியானைக்கற்பகத்தைக்கண்ணாரக்கண்டேனே. (௮)

கொலையானையுரிபோர்த்தகொள்கையானைக்கோளரியைக் கூரம்பாவரைமேற்கோத்த, சிலையானைச்செம்மைதருபொருளான்றன்னைத் திரிபுரத்தோர்மூவர்க்குச்செம்மைசெய்த, தலையானைத்தத்துவங்களானான்றன்னைத்தையலோர்பங்கினனைத் தன்கையேந்து, கலையானைக்கற்குடியில்விழுமியானைக்கற்பகத்தைக்கண்ணாரக்கண்டேனே. (௯)

பொழிலானைப்பொழிலாரும்புன்கூரானைப் புறம்பயனையறம்புரிந்தபுகலூரானை, எழிலானையிடைமருதினிடங்கொண்டானையீங்கோயுநீங்காதுறையுமிறைவன்றன்னை, அழலாடுமேனியனையன்றுசென்றக் குன்றெடுத்தவரக்கன்றோணெரியவூன்றுங், கழலானைக்கற்குடியில்விழுமியானைக்கற்பகத்தைக்கண்ணாரக்கண்டேனே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

## திருக்கன்றப்பூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

மாதினையோர்கூறுகந்தாய்மறைகொணாவா மதிசூடீவானவர்கடங்கட்கெல்லா, நாதனேயென்றென்றுபரவிநாளுநைந்துருகிவஞ்சகமற்றன்புகூர்ந்து,வாதனையான்முப்பொழுதும்பூநீர்கொண்டுவைகலுமறவாதுவாழ்த்தியேத்திக், காதன்மையாற்றொழுமடியார்நெஞ்சினுள்ளேகன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே. (௧)

விடிவதுமேவெண்ணீற்றைமெய்யிற்பூசிவெளுத்தமைந்தகீளொடுகோவணமுந்தற்றுச், செடிபுடையவல்வினைநோய்தீர்ப்பாயென்றுஞ்செல்கதிக்குவழிகாட்டுஞ்சிவனேயென்றுந், துடியனையவிடைமடவாள்பங்காவென்றுஞ்சுடலைதனினடமாடுஞ்சோதீயென்றுங், கடிமலர்தூய்த்தொழுமடியார்நெஞ்சினுள்ளேகன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே. (௨)

எவரேனுந்தாமாகவிலாடத்திட்டதிருநீறுஞ்சாதனமுங்கண்டாலுள்கி உவராதேயவரவரைக்கண்டபோதுகந்தடிமைத்திறநினைந்தங்குவந்துநோக்கி, யிவர்தேவரவர்தேவரென்றுசொல்லியிரண்டாட்டாதொழிந்தீசன்றிறமேபேணிக், கவராதேதொழுமடியார்நெஞ்சினுள்ளே கன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே. (௩)

இலங்காலஞ்செல்லாநாளென்றுநெஞ்சத்திடையாதே யாவர்க்கும்பிச்சையிட்டு, விலங்காதேநெறிநின்றங்கறிவேமிக்கு மெய்யன்புபுகப்பெய்துபொய்யைநீக்கித், துலங்காமெய்வானவரைக்காத்துநஞ்சமுண்டபிரானடியிணைக்கேசித்தம்வைத்துக், கலங்காதேதொழுமடியார்நெஞ்சினுள்ளேகன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே. (௪)

விருத்தனேவேலைவிடமுண்டகண்டாவிரிசடைமேல் வெண்டிங்கள்விளங்கச்சூடும், ஒருத்தனேயுமைகணவாவுலகமேத்தும் நந்தாவொண்சுடரேயடியார்தங்கள், பொருத்தனேயென்றென்றுபுலம்பிநாளும் புலனைந்துமகத்தடக்கிப்புலம்பிநோக்கிக், கருத்தினாற்றொழுமடியார்நெஞ்சினுள்ளே கன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே. (௫)

பொசியினான்மிடைந்துபுழுப்பொதிந்தபோர்வை பொல்லாதபுலாலுடம்பைநிலாசுமென்று, பசியினான்மீதூரப்பட்டேயிட்டுப்பலர்க்குதவலதுவொழிந்துபவளவாயார், வசியிலகப்பட்டுவீழாமுன்னம் வானவர்கோன்றிருநாமமஞ்சுஞ்சொல்லிக், கசிவினாற்றொழுமடியார்நெஞ்சினுள்ளே கன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே. (௬)

ஐயினான்மிடறடைப்புண்டாக்கைவிட்டு ஆவியார்போவதுமேயகத்தார்கூடி, மையினாற்கண்ணெழுதிமாலைசூட்டி மயானத்திலிடுவதன்முன்மதியஞ்சூடும், ஐயனார்க்காளாகியன்புமிக்கு அகங்குழைந்துமெய்யரும்பியடிகள்பாதங், கையினாற்றொழுமடியார்நெஞ்சினுள்ளேகன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே. (௮)

திருதிமையாலைவரையுங்காவலேவித் திகையாதேசிவாயநமவென்னுஞ்சிந்தைச், சுருதிதனைத்துயக்கறுத்துத்துன்பவெள்ளக்கடனீந்திக்கரையேறுங்கருத்தேமிக்குப், பருதிதனைப்பற்பறித்தபாவநாசாபரஞ்சுடரேயென்றென்றுபரவிநாளுங், கருதிமிகத்தொழுமடியார்நெஞ்சினுள்ளே கன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே. (௯)

குனிந்தசிலையாற்புரமூன்றெரித்தாயென்றுங்கூற்றுதைத்தகுரைகழற்சேவடியாயென்றுந், தனஞ்சயற்குப்பாசுபதமீந்தாயென்றுந் தசக்கிரிவன்மலையெடுக்கவிரலாலூன்றி, முனிந்தவன்றன்சிரம்பத்துந்தாளுந்தோளுமுரணழித்திட்டருள்கொடுத்தமூர்த்தியென்றுங், கனிந்துமிகத்தொழுமடியார்நெஞ்சினுள்ளே கன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே. (௧௰)

திருச்சிற்றம்பலம்.

### திருவானைக்கா - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

எத்தாயரெத்தந்தையெச்சுற்றத்தாரெம்மாடுசும்மாடாமேவர்நல்லார், செத்தால்வந்துதவுவாரொருவரில்லைசிறுவிறகாற்றீமூட்டிச்செல்லாநிற்பர், சித்தாயவேடத்தாய்நீடுபொன்னித்திருவானைக்காவுடையசெல்வாவென்றன், அத்தாவுன்பொற்பாதமடையப்பெற்றாலல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (க)

ஊனாகியுயிராகியதனுணின்றவுணர்வாகிப்பிறவனைத்துநீயாய்நின்றாய், நானேதுமறியாமேயென்னுள்வந்துநல்லனவுந்தீயனவுங்காட்டாநின்றாய், தேனாருங்கொன்றையனேநின்றியூராய் திருவானைக்காவிலுறைசிவனேஞானமம், ஆனாயுன்பொற்பாதமடையப்பெற்றாலல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (உ)

ஒப்பாயிவ்வுலகத்தோடொட்டிவாழ்வானொன்றலாத்தவத்தாரோடுடனேநின்று, துப்பாருங்குறையடிசிறுற்றிநின்றதுறைமறந்துதிரிவேனைக்காத்துநீவந்து, எப்பாலுநுண்ணுணர்வேயாக்கியென்னையாண்டவனேயெழிலானைக்காவாவானோர், அப்பாவுன்பொற்பாதமடையப்பெற்றாலல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (௩)

நினைத்தவர்கணெஞ்சுளாய்வஞ்சக்கள்வாநிறைமதியஞ்சடைவைத்தாயடையாதுன்பான், முனைத்தவர்கள்புரமூன்றுமெரியச்செற்றாய் முன்னானைத்தோல்போர்த்தமுதல்வாவென்றுங், கனைத்துவருமெருதேறுங்காளகண்டா கயிலாயமலையாநின்கழலேசேர்ந்தேன், அனைத்துலகுமானவனேயானைக்காவாவல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (௪)

இம்மாயப்பிறப்பென்னுங்கடலாந்துன்பத் திடைச்சுழிப்பட்டிளைப்பேனையிளையாவண்ணங், கைம்மானமனத்துதவிக்கருணைசெய்துகாதலருள்வைவைத்தாய்காணநில்லாய், வெம்மானமதகரியினுரிவைபோர்த்தவேதியனேதென்னானைக்காவுண்மேய, அம்மாநின்பொற்பாதமடையப்பெற்றாலல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (ரு)

உரையாரும்புகழானேயொற்றியூராகச்சியேகம்பனேகாரோணத்தாய், விரையாருமலர்தூவிவணங்குவார்பான் மிக்கானேயக்காலமரமொப்பூண்டாய், திரையாரும்புனற்பொன்னித்தீர்த்தமல்குதிருவானைக்காவிலுறைதேனேவானோர், அரையாவுன்பொற்பாதமடையப்பெற்றாலல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (௬)

மையாருமணிமிடற்றாய்மாதோர்கூறாய்மான்மறியுமாமழுவுமனலுமேந்துங், கையானேகாலனுடன்மாளச்செற்றகங்காளாமுன்கோபவிளைவுமானாய், செய்யானேதிருமேனியரியாய்தேவர்குலக்கொழுந்தேதென்னானைக்காவுண்மேய, ஐயாவுன்பொற்பாதமடையப்பெற்றாலல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (எ)

இலையாருஞ்சூலத்தாயெண்டோளானேயெவ்விடத்துநீயலாதில்லையென்று, தலையாரக்கும்பிடுவார்தன்மையானேதழன்மடுத்தமாமேருக்கையில்வைத்த, சிலையானேதிருவானைக்காவுண்மேய தீயாடீசிறுநோயானலிவுண்டுள்ளம், அலையாதேநின்னடியேயடையப்பெற்றாலல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (அ)

விண்ணாரும்புனல்பொதிசெஞ்சடையாய்வேதநெறியானேயெறிகடலி
னஞ்சமுண்டாய், எண்ணாருமபுகழானேயுன்னையெம்மானென்றென்றேநா
வினிலெப்பொழுதுமுன்னிக், கண்ணாரக்கண்டிருக்கக்களித்தெப்போதுங்
கடிபொழில்சூழ்தென்னானைக்காவுண்மேய, அண்ணாநின்பொற்பாதமடைய
ப்பெற்றாலல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (௯)

கொடியேயும்வெள்ளேற்றாய்கூளிபாடக்குறட்பூதங்கூத்தாடநீயுமாடி,
வடிவேயுமங்கைதனைவைத்தமைந்தாமதிலானைக்காவுளாய்மாகாளத்தாய்,ப
டியேயுங்கடலிலங்கைக்கோமான்றன்னைப்பருமுடியுந்திரடோளுமடர்த்து
கந்த, அடியேவந்தடைந்தடிமையாகப்பெற்றாலல்லகண்டங்கொண்டடியே
னென்செய்கேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## திருவானைக்கா - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

முன்னானைத்தோல்போர்த்தமூர்த்திதன்னை மூவாதசிந்தையேமனமே
வாக்கே, தன்னானையாப்பண்ணியேறினானைச்சார்தற்கரியானைத்தாதைதன்
னை, என்னானைக்கன்றினையென்னீசன்றன்னையெறிநீர்த்திரையுகளுங்காவி
ரிசூழ், தென்னானைக்காவானைத்தேனைப்பாலைச்செழுநீர்த்திரளைச்சென்று
டினேனே. (௧)

மருந்தானைமந்திரிப்பார்மனத்துளானைவளர்மதியஞ்சடையானை மகிழ்
ந்தேனுள்ளத், திருந்தானையிறப்பிலியைப்பிறப்பிலானை யிமையவர்தம்பெ
ருமானையுமையாளஞ்சக், கருந்தானமதகளிற்றினுரிபோர்த்தானைக்கணம
மவாட்படையானைப்பலிகொண்டூர், திரிந்தானைத்திருவானைக்காவுளானை
ச்செழுநீர்த்திரளைச் சென்றாடினேனே. (௨)

முற்றாதவெண்டிங்கட்கண்ணியானை முந்நீர்நஞ்சுண்டிமையோர்க்கமு
தநல்கும், உற்றானைப்பல்லுயிர்க்குந்துணையானானையோங்காரத்துட்பொரு
ளையுலகமெல்லாம, பெற்றானைப்பின்னிரக்கஞ்செய்வானைத்தன்னைப்பிரானெ
ன்றுபோற்றாதார்புரங்கண்மூன்றுஞ், செற்றானைத்திருவானைக்காவுளானைச்
செழுநீர்த்திரளைச்சென்றாடினேனே. (௩)

காராருமணிமிடற்றெம்பெருமான்றன்னைக் காதில்வெண்குழையானை
க்கமழ்பூங்கொன்றைத், தாரானைப்புலியதளினுடையானைத் தானன்றிவே
றொன்றுமில்லாஞானப், பேரானைமணியாரமார்பினானைப்பிஞ்ஞகனைத்தெ
ய்வநான்மறைகள்பூண்ட, தேரானைத்திருவானைக்காவுளானைச்செழுநீர்த்தி
ரளைச்சென்றாடினேனே. (௪)

பொய்யேதுமில்லாதமெய்யன்றன்னைப்புண்ணியனை நண்ணாதார்புரநீ
றாக, எய்தானைச்செய்தவத்தின்மிக்கான்றன்னையேறமரும்பெருமானையிட
மானேந்துங், கையானைக்கங்காளவேடத்தானைக்கட்டங்கக்கொடியானைக்க
னல்போன்மேனிச், செய்யானைத்திருவானைக்காவுளானைச்செழுநீர்த்திரளை
ச்சென்றாடினேனே. (௫)

கலையானைப்பாசுபதபாணியானைக்கனவயிரத்திரளானைமணிமாணிக்க
மலையானையென்றலையினுச்சியானைவார்தருபுன்சடையானைமயானமன்னு
நிலையானைவரியரவுநாணாக்கோத்துநினையாதார்புரமெரியவளைத்தமேருச்
சிலையானைத்திருவானைக்காவுளானைச்செழுநீர்த்திரளைச்சென்றாடினேனே.

ஆதியனையெறிமணியினோசையானை யண்டத்தார்க்கறிவொண்ணாதப் பானமிக்க, சோதியனைத்தூமறையின் பொருளானானைச் சுரும்பமருமலர்க்கொன்றைத்தொன்னூல்பூண்ட, வேதியனையறமுரைத்தபட்டன்றன்னை விளங்குமலரயன்சிரங்களைந்திலொன்றைச், சேதியனைத்திருவானைக்காவுளானைச் செழுநீர்த்திரளைச்சென்றாடினேனே. (௭)

மகிழ்ந்தானைக்கச்சியேகம்பன்றன்னை மறவாதுகழனினைந்துவாழ்த்தி யேத்திப், புகழ்ந்தாரைப்பொன்னுலகமாளவிப்பானைப் பூதகணப்படையானைப்புறங்காட்டாடல், உகந்தானைப்பிச்சையேயிச்சிப்பானையொண்பவளத்திரளையெனனுள்ளத்துள்ளே; திகழ்ந்தானைத்திருவானைக்காவுளானைச்செழுநீர்த்திரளைச்சென்றாடினேனே. (அ)

நசையானைநால்வேதத்தப்பாலானை நல்குரவுந்தீப்பிணிநோய்காப்பான்றன்னை, யிசையானையெண்ணிறந்தகுணத்தான்றன்னையிடைமருதுமீங்கோயுநீங்காதேற்றின, மிசையானைவிரிகடலுமண்ணும்விண்ணுமிகுதீயும்புனலெறிகாற்றுமாகியெட்டுத், திசையானைத்திருவானைக்காவுளானைச்செழுநீர்த்திரளைச்சென்றாடினேனே. (௯)

பார்த்தானைக்காமனுடல்பொடியாய்வீழப்பண்டயன்மாலிருவர்க்குமறியாவண்ணஞ், சீர்த்தானைச்செந்தழல்போலுருவினானைத்தேவர்கடம்பெருமானைத்திறமுன்னே,யார்த்தோடிமலையெடுத்தவிலங்கைவேந்தனாண்மையெலாங்கெடுத்தவன்றனிடர்ப்போதே, தீர்த்தானைத் திருவானைக்காவுளானைச்செழுநீர்த்திரளைச்சென்றாடினேனே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவேகம்பம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

கூற்றுவன்காண்கூற்றுவனைக்குமைத்தகோன்காண் குவலயன்காண் குவலயத்தினீரானான்காண், காற்றவன்காண்கனலவன்காண்கலிக்குமின்காண்கனபவளச்செம்மேனிகலந்தவெள்ளை, நீற்றவன்காணிலாவூருஞ்சென்னியான்காணிறையார்ந்தபுனற்கங்கைநிமிர்சடைமேல், ஏற்றவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (௧)

பரந்தவன்காண்பல்லுயிர்களாகியெங்கும் பணிந்தெழுவார்பாவமும்வினையும்போகத், துரந்தவன்காண்டூமலர்க்கண்ணியான்காண்டோற்றநிலையிறுதிப்பொருளாய்வந்த, மருந்தவன்காண்வையங்கள் பொறைதீர்ப்பான்காண்மலர்தூவிநினைந்தெழுவாருள்ளநீங்கா, திருந்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (௨)

நீற்றவன்காணீராகித்தீயானான்காணிறமுழவுந்தமருகமுமெரியுங்கையிற், றோற்றவன்காண்டோற்றக்கேடில்லாதான்காண்டுணையிலிகாண்டுணையென்றுதொழுவாருள்ளம், போற்றவன்காண்புகழ்கடனைப்படைத்தானருன்காண்பொழியரவுமவிர்சடைமேற்புனலுங்கங்கை, ஏற்றவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (௩)

தாயவன்காணுலகிற்குத் தன்னொப்பில்லாத் தத்துவன்காண்மலைமங்கைபங்காவென்பார், வாயவன்காண்வருபிறவிநோய்தீர்ப்பான்காண்வானவர்க்குந்தானவர்க்குமண்ணுளோர்க்குஞ், சேயவன்காணினைவார்க்குச்சித்தமார்ந்ததிருவடியேயுள்கிநினைந்தெழுவாருள்ளம், ஏயவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (௪)

அடுத்தானையுரித்தான்காண். (ரு)

அழித்தவன்காணெயின்மூன்றுமவில்வாயம்பாலையாறு மிடைமருது மாளவானான்காண், பழித்தவன்காணடையாரையடைவார்தங்கள்பற்றவன்காண்புற்றரவநாணினான்காண், சுழித்தவன்காண் முடிக்கங்கையடியே போற்றுந்தூயமாமுனிவர்க்காப்பார்மேனிற்க, இழித்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (சு)

அசைந்தவன்காண்டமாடிப்பாடல்பேணியழல்வண்ணத்தில் லடியுமுடியுந்தேடப், பசைந்தவன்காண்பேய்க்கணங்கள்பரவியேத்தும் பான்மையன்காண்பரவிநினைந்தெழுவார்தம்பாற், கசிந்தவன்காண்கரியினுரிபோர்த்தான்றான்காண்கடல்விடமுண்டமரர்க்கமுதமீய, இசைந்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (எ)

முடித்தவன்காணவன்கூற்றைச்சீற்றத்தீயால்வலியாதமபுரமூன்றும வேவச்சாபம், பிடித்தவன்காண்பிஞ்ஞகனும்வேடத்தான்காண் பிணையல் வெறிகமழ்கொன்றையாவுசென்னி, முடித்தவன்காண்மூவிலைநல்வேலினான்காண்முழங்கியுருமென்னத் தோன்றுமழையாய்மின்னி, இடித்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே.

வருந்தான்காணமனமுருகிநினையாதார்க்குவஞ்சன்காணஞ்செழுத்து நினைவார்க்கென்றும், மருந்தவன்காணவான்பிணிகட்கும்வல்வண்ணமவானகமு மண்ணுநம்மற்றுமாகிப், பரந்தவன்காணபடர்சடையொட்டுடையான்றான் காண்பங்கயத்தோன்றன்சிரத்தையேந்தியூரூர், இரந்தவன்காணெழிலாரும் பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (௯)

வெம்மானவுழுவையதளுரிபோர்த்தான்காண் வேதத்தின்பொருளான காணெண்ணறியமபி, விம்மாநின்றழுவார்கட்களிப்பானான்றான்காண விடையேறித்திரிவான்காணடுஞ்செய்பூதத், தம்மானகாணகவிடங்கடாங்கினான்காண் றப்புதன்காணசொற்பதமுங்கடந்துநின்ற, எம்மான்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (க௦)

அறுத்தான்காணயன்சிரத்தையமராவேண்டவாழ்கடலினஞ்சுண்டங் கணிநீர்க்கங்கை, செறுத்தான்காணடேவர்க்குந் தேவன்றான்காண்டிசையனைத்துந்தொழுதேத்தக்கலைமான்கையிற், பொறுத்தான்காணபுகலிடத்தைநலியவந்துபொருகயிலையெடுத்தவன்றன் முடிதோணெரிய, இறுத்தான்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருவேகம்பம் - திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்.

உரித்தவன்காணுரக்களிற்றையுமையாளொல்க வோங்காரத்தொருவன்காணுணர்மெய்ஞ்ஞானம், விரித்தவன்காண்விரித்தநால்வேதத்தான்காண வியனுலகிற்பல்லுயிரைவிதியினாலே, தெரித்தவன்காண சிலமுருவாய்த் தோன்றியெங்குந்திரண்டவன்காணடிரிபுரத்தைவேவவில்லால், எரித்தவன் காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே.

நேசன்காணேசர்க்குநேசந்தன்பாலில்லாத நெஞ்சத்துநீசர்தம்மைக், கூசன்காணகூசாதார்நெஞ்சுதஞ்சேகுடிகொண்ட குழகன்காணழகார்கொன்றை, வாசன்காண்மலைமங்கைபங்கன்றான்காண வானவர்களெப்பொழு

தும்வணங்கியேத்தும், ஈசன்காணெழிலாரும்பொழிலார் கச்சியேகம்பன் காணவனென்னெண்ணத்தானே. (௨)

பொறையவன்காண் பூமியேழ் தாங்கியோங்கும் புண்ணியன்காண் நண்ணிய புண்டரீகப்போதின், மறையவன்காண் மறையவனைப்பயந்தோனான்காண் வார்சடைமாசுணமணிந்து வளரும்பிள்ளைப், பிறையவன்காண் பிறைதிகழுமெயிற்றுப்பேழ்வாய்ப் பேயோடங்கிடுகாட்டெல்லியாடும், இறையவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே

பாரவன்காண் விசும்பவன்காண் பவ்வந்தான்காண் பனிவரைகளிரவினொடுபகலாய்நின்ற, சீரவன்காண் திசையவன்காண் திசைகளெட்டுஞ்செறிந்தவன்காண் சிறந்தடியார்சிந்தைசெய்யும், பேரவன்காண் பேராயிரங்களேத்தும்பெரியவன்காண் அரியவன்காண் பெற்றமூர்ந்த, ஏரவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (௪)

பெருந்தவத்தெம்பிஞ்ஞகன்காண் பிறைசூடிகாண் பேதையேன்வாதையுறுபிணியைத்தீர்க்கு, மருந்தவன்காண் மந்திரங்களாயினான்காண் வானவர்கடாம்வணங்குமாதேவன்கா, ணருந்தவத்தாராயிழையாருமையாள்பாகமமர்ந்தவன்காண் அமரர்கடாமர்ச்சித்தேத்த, இருந்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (௫)

ஆய்ந்தவன்காணருமறையோடங்கமாறு மணிந்தவன்காணரவோடென்புமாமை, காய்ந்தவன்காண் கண்ணழலாற்காமனாகங்கனன்றெழுந்த காலனுடல்பொடியாய்வீழப், பாய்ந்தவன்காண் பண்டுபலசருகாற்பந்தர்ப் பயின்றநூற்சிலந்திக்குப்பாராள்செல்வம், ஈந்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (௬)

உமையவளையொருபாகஞ்சேர்த்தினான்கா ணுகந்தொலிநீர்க்கங்கைசடையொழுக்கினான்காண், இமையவர்தங்கயிலைச்செல்வன்றான்காணில்பலிக்குச்சென்றுழலுநல்கூர்ந்தான்காண், சமையங்களவையாறினுக்குந் தலைவன்றான்காண் தத்துவன்காணுத்தமன்காண்டானேயாய, இமையவன்காணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (௭)

தொண்டுபடுதொண்டர்துயர்தீர்ப்பான்றான்காண் தூமலர்ச்சேவடியிணையென்சோதியான்கா, ணுண்டுபடுவிடங்கண்டத்தொடுக்கினான்காணொலிகடலிலமுதமமரர்க்குதவினான்காண், வண்டுபடுமலர்க்கொன்றைமாலையான்காண் வாண்மதியாய்நாண்மீனுமாயினான்காண், எண்டிசையுமெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (௮)

முந்தைகாண்மூவரினுமுதலானான்காண்மூவிலைவேன்மூர்த்திகாண்முருகவேட்குத், தந்தைகாண்டண்கடமாமுகத்தினாற்குத்தாதைகாண்டாழ்ந்தடியேவணங்குவார்க்குச், சிந்தைகாண்சிந்தாதசித்தத்தார்க்குச்சிவனவன்காண்செங்கண்மால்விடையொன்றேறும், எந்தைகாணெழிலாரும்பொழிலார்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே. (௯)

பொன்னிசையும்புரிசடையெம்புனிதன்றான்காண் பூதகணநாதன்காண்புலித்தோலாடை, தன்னிசையவைத்தவெழிலாவினான்காண் சங்கவெண்குழைக்காதிற்சதிரன்றான்காண், மின்னிசையும்வெள்ளெயிறன்றான்காண்வெகுண்டுவெற்பையெடுக்கவடியடர்ப்பமீண்டவன்றன்வாயில், இன்னிசைகேட்டிலங்கொளிவாளீந்தான்கச்சியேகம்பன்காணவனென்னெண்ணத்தானே

திருச்சிற்றம்பலம்.

## திருநாகேச்சரம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

தாயவனை வானோர்க்கு மேலோருக்குந் தலையவனை மலையவனை யுலகமெல்லா, மாயவனைச் சேயவனை யணியான்றன்னை யழலவனை நிழலவனை யறியவொண்ணா, மாயவனை மறையவனை மறையோர்தங்கண் மந்திரனைத் தந்திரனை வளராநின்ற, தீயவனைத் திருநாகேச்சரத்துளானைச் சேராதார் நன்னெறிக்கட் சேராதாரே. (க)

உரித்தானை மதவேழந் தன்னை மின்னா ரொளிமுடியெம்பெருமானை யுமையோர்பாகந், தரித்தானைத் தரியலர்தம் புரமெய்தானைத் தன்னடைந்தார் தம்வினைநோய் பாவமெல்லா, மரித்தானை யாலதன்கீழிருந்து நால்வர்க்கறமும்பொருள்வீடின்பமாறங்கம்வேதந், தெரித்தானைத் திருநாகேச்சரத்துளானைச் சேராதார் நன்னெறிக்கட் சேராதாரே. (உ)

காரானையுரிபோர்த்த கடவுடன்னைக் காதலித்து நினையாத கயவர்நெஞ்சில் வாரானை மதிப்பவர்தம் மனத்துளானை மற்றொருவர் தன்னொப்பாரொப்பிலாத ஏரானை யிமையவர்தம் பெருமான்றன்னை யியல்பாகி யுலகெலா நிறைந்துமிக்க சீரானைத் திருநாகேச்சரத்துளானைச் சேராதார் நன்னெறிக்கட் சேராதாரே.( )

தலையானை யெவ்வுலகுந் தானானானைத் தன்னுருவம் யாவர்க்கு மறியவொண்ணா நிலையானை நேசர்க்கு நேசன்றன்னை நீள்வானமுகடதனைத் தாங்கிநின்ற மலையானை வரியரவு நாணாக்கோத்து வல்லசுரர் புரமூன்று மடியவெய்த சிலையானைத் திருநாகேச்சரத்துளானைச் சேராதார் நன்னெறிக்கட் சேராதாரே.

மெய்யானைத் தன்பக்கல் விரும்புவார்க்கு விரும்பாத வரும்பாவியவர்கட்கென்றும், பொய்யானைப் புறங்காட்டிலாடலானைப் பொன்பொலிந்த சடையானைப் பொடிகொள்பூதிப், பையானைப் பைம்பையரவமசைத்தான்றன்னைப் பரந்தானைப் பவளமால்வரைபோன்மேனிச், செய்யானைத் திருநாகேச்சரத்துளானைச் சேராதார் நன்னெறிக்கட் சேராதாரே. (ரு)

துறந்தானை யறம்புரியாத் துரிசர்தம்மைத் தோத்திரங்கள் பலசொல்லி வானோரேத்த, நிறைந்தானை நீர்நிலந்தீவெளிகாற்றாகி நிற்பனவு நடப்பனவுமாயினானை, மறந்தானைத் தன்னினையாவஞ்சர்தம்மை யருசெழுந்தும் வாயங்கி லவல்லோர்க்கென்றுஞ், சிறந்தானைத் திருநாகேச்சரத்துளானைச் சேராதார் நன்னெறிக்கட் சேராதாரே. (சா)

மறையானை மால்விடையொன்றூர்தியானை மால்கடனஞ்சுண்டானை வானோர்தங்கள், இறையானை யென்பிறவித் துயர்தீர்ப்பானை யின்னமுதமன்னியசீரேகம்பத்தில், உறைவானை யொருவருமீங்கறியாவண்ணமென்னுள்ளத்துள்ளேயொளித்துவைத்த, சிறையானைத் திருநாகேச்சரத்துளானைச் சேராதார் நன்னெறிக்கட் சேராதாரே. (எ)

எய்தானைப் புரமூன்று மிமைக்கும் போதி லிருவிசும்பில் வருபுனலைத் திருவார்சென்னிப், பெய்தானைப் பிறப்பிலியைய றத்தினில்லாப் பிரமன்றன் சிரமொன்றைக்கரமொன்றினாற், கொய்தானைக் கூத்தாடவல்லான்றன்னைக் குறியிலாக்கொடியேனையடியேனாகச், செய்தானைத் திருநாகேச்சரத்துளானைச் சேராதார் நன்னெறிக்கட் சேராதாரே. (அ)

அளியானை யண்ணிக்குமானப்பாறன்னை வான்பயிரை யப்பயிரின் வாட்டந்தீர்க்குந், துளியானை யயன்மாலுந்தேடிக்காணாச் சுடரானைத் துரிசறத்

காசமாயினானை, வளரொளியைமரகதத்தினுருவினானைவானவர்களெப்பொழுதும்வாழ்த்தியேத்துங், கிளரொளியைக்கீழ்வேளூராளுங்கோவைக்கேடிலியைநாடுமவர்கேடிலாரே. (எ)

தடுத்தானைக்காலனைக்காலாற்பாய்ந்துதன்னடைந்தமாணிக்கன்றருள்செய்தானை, உடுத்தானைப்புலியதளோடாடும்பாம்பு முன்றுவாருள்ளத்தினுள்ளான்றன்னை, மடுத்தானையருநஞ்சையிடர்ப்பட்டு வானவர்கள்கூடியவத்தக்கன்வேள்வி, கெடுத்தானைக்கீழ்வேளூராளுங்கோவைக்கேடிலியைநாடுமவர்கேடிலாரே. (அ)

மாணார்மேலுயப்பணிந்தவாழ்க்கையானை மயானத்திற் கூத்தனைவாளா வோவெடையும், பூண்டானைப்புறங்காட்டிடலாடலானைப் போகதென்னுள்புகுந்திட்டுங்கொண்டான்றன்னை, ஆண்டானையரிவாரியகிரியானை யசங்கையனை மாகடலுந்தங்குகியெல்லாம் நீண்டானைக்கீழ்வேளூராளுங்கோவைக்கேடிலியைநாடுமவர்கேடிலாரே. (கூ)

முறிப்பானைப்பேர்மலையெடுத்தான்றன்முடிகிறப்புனைகைநாமவையமெடுத்துப்பாடப், பறிப்பானைக்கைச்சுறரிவாணிட்டிருளனைப்பாவிப்பனெஞ்சகத்தேபாதப்போது, பொறித்தானைப்புரம்புனைமுன்செய்தானைப்பொய்யாக்கனைப்பொய்செய்தும்போதும்போக்கி, கிறிப்பானைக்கீழ்வேளூராளுங்கோவைக்கேடிலியைநாடுமவர்கேடிலாரே. (கo)

திருச்சிற்றம்பலம்.

## திருமுதுகுன்றம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

கருமணியைக்கனகத்தின்குன்றொப்பானைக் கருத்துவார்க்காற்றவெளியான்றன்னைச், குருமணியைக்கோளரவமாட்டுவானைக்கொல்வேங்கையதளானைக்கோவணவன்றன்னை, அருமணியையடைந்தவர்கட்கமுதொப்பானையானஞ்சுமாடியைநான்பாவியேனைத், திருமணியைத்திருமுதுகுன்றுடையான்றன்னைத்தீவினையேனறியாதேதிகைத்தவாறே. (க)

காரொளியகண்டத்தெங்கடவுளானைக்காபாலி கட்டங்கமேந்தினானைப், பாரொளியைவிண்ணொளியைப்பாதாளத்தானைப்பான்மதியஞ்சூடியோர்பண்பன்றன்னைப், பேரொளியைப்பெண்பாகம் வைத்தான்றன்னைப்பேணுவார்தம்வினையைப்பேணிவாங்குஞ், சீரொளியைத்திருமுதுகுன்றுடையான்றன்னைத்தீவினையேனறியாதேதிகைத்தவாறே. (உ)

எத்திசையும்வானவர்கடொழநின்றானையேறூர்ந்தபெம்மானையெம்மான்றன்னைப், பத்தனாய்ப்பணிந்தடியேன்றன்னைப்பன்னாட்பாமாலைபாடப்பயில்வித்தானை, முத்தினையென்மணியைமாணிக்கத்தைமுளைத்தெழுந்தசெம்பவளக்கொழுந்தொப்பானைச், சித்தனையென்றிருமுதுகுன்றுடையான்றன்னைத்தீவினையேனறியாதேதிகைத்தவாறே. (ங)

ஊனகருவினுள்ளனின்றசோதியானையுத்தமனைப்பத்தர்மனங்குடிகொண்டானைக், கானதிரிந்துகாண்டியமகிழ்ந்தானைக்காரோகமிட்டானைக்கனலைக்காற்றைத், தானறிந்தடியேனையாளாகக்கொண்டுதன்னுடையதிருவடியென்றலைமேல்வைத்த, தீனக்குமமாத்திருமுதுகுன்றுடையான்றன்னைத்தீவினையேனறியாதேதிகைத்தவாறே. (ச)

தக்கனதுபெருவேள்விதகர்த்தான்றன்னைத்தாமரையானுநான்முகனுந்தானேயாகி, மிக்கதொருதீவளிநீராகாயமாய் மேலுலகுக்கப்பாலாயிப்பாலானை,

### முடிப்பதுகங்கை - பண் - கொல்லிக்கௌவாணம்.

திருச்சிற்றம்பலம்.

முடிப்பதுகங்கையுந்திங்களுஞ்செற்றதுமூவெயில்
நொடிப்பதுமாத்திரைநீறெழக்கணை நூறினார்
கடிப்பதுமேறுமென்றஞ்சுவன்றிருக்கைகளார்
பிடிப்பதுபாம்பன்றியில்லையோவெம்பிரானுக்கே. (௧)

தூறன்றியாடரங்கில்லையோசுடலைப்பொடி
நீறன்றிச்சாந்தமற்றில்லையோவிமவான்மகள்
கூறன்றிக்கூறுவதில்லையோகொல்லைச்சில்லைவெள்
ஏறன்றியேறுவதில்லையோவெம்பிரானுக்கே. (௨)

தட்டெனுந்தட்டெனுந்தொண்டர்காள்தடுமாற்றத்தை
யொட்டெனுமொட்டெனுமாநிலத்துயிர்கோறலைச்
சிட்டன்றிரிபுரஞ்சுட்டதேவர்கள்தேவனை
வெட்டெனப்பேசன்மின்றொண்டர்காளெம்பிரானையே (௩)

நரிதலைகவ்வநின்றோரிகூப்பிடநல்லிரு
ளெரிதலைப்பேய்புடைசூழவாரிருட்காட்டிடைச்
சிரிதலைமாலைசடைக்கணிந்தவெஞ்செல்வனைப்
பிரிதலைப்பேசன்மின்றொண்டர்காளெம்பிரானையே (௪)

வேயனதோளிமலைமகளைவிரும்பிய
மாயமில்மாமலைநாடனாகியமாண்பனை
யாயனசொல்லிநின்றார்களல்லலறுக்கிலும்
பேயனேபித்தனேயென்பராலெம்பிரானையே. (௫)

இறைவனென்றெம்பெருமானைவானவரேத்தப்போய்த்
துறையொன்றித்தூமலரிட்டடியிணை போற்றுவார்
மறையன்றிப்பாடுவதில்லையோமல்குவானிளம்
பிறையன்றிச்சூடுவதில்லையோவெம்பிரானுக்கே. (௬)

தாருந்தண்கொன்றையுங்கூவிளந்தனிமத்தமும்
ஆருமளவறியாதவாதியுமந்தமும்
ஊருமொன்றில்லையுலகெலாமுகப்பார்தொழப்
பேருமோராயிரமென்பராலெம்பிரானுக்கே. (௭)

அரியொடுபூமிசையானுமாதியுமறிகிலா
வரிதருபாம்பொடுவன்னிதிங்களுமத்தமும்
புரிதருபுன்சடைவைத்தவெம்புனிதற்கினி
யெரியன்றியங்கைக்கொன்றில்லையோவெம்பிரானுக்கே. (௮)

கரியமனச்சமண்காடியாடுகழுக்களால்
எரியவசணவுந்தன்மையோவிமவான்மகள்
பெரியமனந்தடுமாறவேண்டிப்பெம்மான்மதக்
கரியினுரியல்லதில்லையோவெம்பிரானுக்கே. (௯)

காய்சினமால்விடைமாணிக்கத்தெங்கறைக்கண்டத்
தீசனையூரனெட்டோடிரண்டுவிரும்பிய
வாயினசீர்ப்பகைஞானியப்பனடித்தொண்டன்றான்
ஏசினபேசுமின்றொண்டர்காளெம்பிரானையே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

திரு ஆமாத்தூர் -பண்- கொல்லிக்கௌவாணம்.

திருச்சிற்றம்பலம்.

காண்டனன்காண்டனன்காரிகையாள்தன்கருத்தனு
யாண்டனனாண்டனனாமாத்தூரெம்மடிகட்காட்
பூண்டனன்பூண்டனன்பொய்யன்றுசொல்லுவன்கேண்மின்கள்
மீண்டனன்மீண்டனன்வேதவிததல்லாதவர்கட்கே. (க)

பாடுவன்பாடுவன்பாரபதிதன்னடிபற்றிநான்
தேடுவன்தேடுவன்திண்ணெனப்பற்றிச்செறிதர
ஆடுவனாடுவனாமாததூரெமமடிகளைக்
கூடுவனகூடுவன்குறறமதற்றெனகுழிபபொடே. (உ)

காய்நதவனகாய்நதவன்கண்ணழலாலன்றுகாமனைப்
பாய்நதவன்பாய்நதவன்பாதத்தினாலனறுகூறறதை
ஆய்நதனாய்நதவனாமாத்தூரெமமடிகளார
ஏய்ந்தவனேயநதவனெமபிராட்டியைபபாகமே. (ங)

ஓாநதனனோாநதனனுள்ளத்துள்ளேநின்றவொண்பொருள்
சோாநதனன்சோாநதனன்சென்றுதிருவொற்றியூாபுக்குச்
சாாநதனன்சார்நதனன்சங்கிலிமென்றோளதடமுலை
யார்நதனனாாநதனனாமாத்தூரையனருளதே. (ச)

வென்றவனவென்றவன்வேள்வியில்விண்ணவாதங்களைச்
சென்றவன்சென்றவன்சிலபலிக்கென்றுதெருவிடை
நின்றவனின்றவனீதிநிறைநதவாதங்கள்பால
அன்றவனன்றவன்செய்யருளாமாத்தூரெமமையனே. (ரு)

காண்டவன்காண்டவன்காண்டறகரியகடவுளாய்
நீணடவனீண்டவனாரணனமுகனேடவே
யாண்டவனாண்டவனாமாததூரையுமென்னையுமாட்
பூண்டவன்பூண்டவன்மாாபிறபுரிநூல்புரளவே. (சு)

எண்ணவனெணணவனேழுலகததுயிர்தங்கட்குக்
கணணவன்கண்ணவன்காண்டுமென்பாரவர்தங்கட்குப்
பெண்ணவன்பெண்ணவன்மேனியோர்பாகமாம்பிஞ்ஞகன்
அண்ணவனண்ணவனாமாத்தூரெமமடிகளே. (எ)

பொன்னவன்பொன்னவன்பொன்னைத்தந்தென்னைப்போகவிடா
மினனவன்மின்னவன்வேதத்தினுட்பொருளாகிய
அன்னவனன்னவனாமாத்தூரையனையாாவத்தால்
என்னவனென்னவனென்மனத்தின்புற்றிருபபனே. (அ)

தேடுவன்றேடுவன்செம்மலாப்பாதங்களுடொறு
நாடுவனாடுவனாபிகமேலேயோர்நாலவிரல்
மாடுவன்மாடுவன்வன்கைபிடித்துமகிழ்நதுளே
யாடுவனாடுவனாமாத்தூரெமமடிகட்கே. (கூ)

உற்றனனுற்றவர்தம்மையொழிநதுள்ளத்துள்பொருள்
பற்றினன்பற்றினன்பங்கயச்சேவடிக்கேசெல்ல
அற்றனனற்றனனாமாத்தூர்மேயானடியார்கட்காட்
பெற்றனன்பெற்றனன்பெயர்த்தும்பெயர்த்தும்பிறவாமைக்கே. (கய)

ஐயனையத்தனையாளுடையாமாத்தூரண்ணலை
மெய்யனைமெய்யாக்குமெய்ப்பொருளானவிமலனை
மையனைமையணிகண்டனைவன்றொண்டனூரன்சொற
பொய்யொன்றுமின்றிப்புலம்புவார்பொற்கழல்சேர்வரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்காரோணம்- பண் -கொல்லிக்கௌவாணம்.

திருச்சிற்றமபலம்.

பத்தூர்புக்கிரந்துண்டுபலபதிகம்பாடிப்பாவையரைக்கிறிபேசிப்படிறுடித்திரிவீர், செத்தாரதமெலும்பணிந்துசேவேறித்திரிவீர்செல்வத்தைமறைத்துவைத்தீரெனக்கொருநாளிரங்கீர், முத்தாரமிலங்கிமிளிர்மணிவயிரக்கோவையவைபூணத்தந்தருளிமெய்க்கினிதாநாறுங், கத்தூரிகமழ்சாநதுபணித்தருளவேண்டுங்கடனாகைக்காரோணமேவியிருநதீரே. (க)

வேம்பினொடுதீங்கரும்புவிரவியெனைத்தீர்த்தீர்விருத்தினனுமைவேண்டத்துருத்திபுக்கங்கிருந்தீர்,பாமபினொடுபடாசடைகளவைகாட்டிவெருட்டிபாகட்டநாவெட்டுவேனோபலகாலுமுழன்றேன், சேமபினொடுசெஙகழுநீர்தண்கிடங்கிற்றிகழுந்திருவாரூர்புககிருநததீவண்ணர்நீரே, காமபினொடுநேத்திரங்கள்பணித்தருளவேண்டுங்கடனாகைக்காரோணமேவியிருநதீரே. (உ)

பூண்பதோரிளவாமைபொருவிடையொன்றேறிப்பொல்லாதவேடங்கொண்டெலலாருங்காணப, பாண்பேசிபபடுதலையிற்பலிகொள்கைதவிரீர்பாம்பினொடுபடர்சடைமேல்மதிவைததபண்பீர்,வீண்பேசிமடவார்கைவெள்வளைகளகொண்டன்ராவெற்பரையனமடபபாவைபொறுக்குமோசொலலீர், காண்பினியமணிமாடநிறைநதநெடுவீதிககடனாகைககாரோணமேவியிருந்தீரே. (௩)

விட்டதோர்சடைதாழவீணைவிடங்காகவீதிவிடையேறுவீர்வீணடிமையுகந்தீர், துட்டராயினபேய்களசூழநடமாடிச்சுநதராராய்த்தூமதியஞ்சூடுவதுசுவண்டே, வட்டவார்குழல்மடவார்தம்மைமயல்செய்தலமாதவமோமாதிமையோவாட்டமெலாந்தீரக்,கட்டியெமக்கீவதுதானெப்போதுசொல்லீர்கடனாகைக்காரோணமேவியிருநதீரே. (௪)

மிண்டாடித்திரிதநதுவெறுப்பனவேசெய்துவினைக்கேடுபலபேசிவேண்டியவாதிரிவீர், தொண்டாடித்திரிவேனைநதொழும்புதலைக்கேற்றுஞ்சுநதரனைகநதமுதலாடையாபரணம, பணடாரத்தேயெனக்குப்பணித்தருளவேண்டுமபண்டுதான்பிரமாணமொன்றுண்டேநுமமைக், கண்டார்க்குஙகாணபரிதாய்க்கனலாகிநிமிர்ந்தீர்கடனாகைக்காரோணமேவியிருநதீரே. (௫)

இலவவிதழ்வாயுமையோடெருதேறிப்பூதமிசைபாடவிடுபிச்சைக்கெச்சுச்சம்போது, பலவகம்புக்குழிதருவீாபட்டோடுசாநதமபணித்தருளாதிருக்கின்றபரிசென்னபடிறே, உலவுதிரைக்கடலநஞ்சையன்றமரார்வேண்டவுண்டருளிச்செய்ததுமக்கிருக்கொணாதிடவே, கலவமயிலியலவர்கணடமாடுஞ்செல்வக்கடனாகைக்காரோணமேவியிருநதீரே. (௬)

தூசுடையவகலல்குற்றூமொழியாளூடல்தொலையாதகாலத்தோர்சொற்பாட்டாய்வந்து, தேசுடையவிலங்கையர்கோன்வரையெடுக்கவடர்த்துத்திப்பியகீதம்பாடததேரொடுவாள்கொடுத்தீர், நேசமுடையடியவர்கள்வருந்தாமையருந்தகிறைமறையோருறைவீழிமிழலைதனில்நித்தல், காசருளிச்செய்தீரின்றெனக்கருளவேண்டுங்கடனாகைக்காரோணமேவியிருந்தீரே. (எ)

மாற்றமேலொன்றுரையீர்வாளாநீரிருந்தீர்வாழ்விப்பனெனவாண்டீர்வழியடியேனுமக்கு, ஆற்றவேற்றிருவுடையீர்நல்கூர்ந்தீரல்லீரணியாரூர்புகப்பெய்தவருநிதியமதனிற், றோற்றமிகுமுக்கூற்றிலொருகூறுவேண்டுந்தாரீரேலொருபொழுதுமடியெடுக்கலொட்டேன். காற்றனையகடும்பரிமாவேறுவதுவேண்டுங்கடனாகைக்காரோணமேவியிருந்தீரே. (அ)

மண்ணுலகும்விண்ணுலகுமும்மதேயாட்சிமலையரையன்பொற்பாவைசிறுவனையுந்தேறேன், எண்ணிலியுண்பெருவயிறன்கணபதியொன்றறியானெம்பெருமானிதுதகவோவியம்பியருள்செய்யீர், திண்ணெனவென்னுடல்விருத்திதாரீரேயாகிற்றிருமேனிவருந்தவேவளைக்கின்றேனுனைக், கண்ணறையன்கொடும்பாடனென்றுரைக்கவேண்டாகடனாகைக்காரோணமேவியிருந்தீரே. (கூ)

மறியேறுகரதலத்தீர்மாதிமையேலுடையீர்மாநிதியந்தருவனென்றுவல்லீராயாண்டீர், கிறிபேசிக்கீழ்வேளூர்புக்கிருந்தீரடிகேள்கிறியுமாற்படுவேனோதிருவாணையுண்டேற், பொறிவிரவுநற்புகர்கொள்பொற்சுரிகைமேலோர்பொற்பூவும்பட்டிகையும்புரிந்தருளவேண்டுங், குறிவிரவுநெய்சோறுமுப்போதும்வேண்டுங்கடனாகைக்காரோணமேவியிருந்தீரே. (கௗ)

பண்மயத்தமொழிப்பரவைசங்கிலிக்குமெனக்கும்பற்றாயபெருமானேமற்றாரையுடையேன், உண்மயத்தவுமக்கடியேன்குறைதீர்க்கவேண்டுமொளிமுத்தம்பூணாரமொண்பட்டும்பூவுங், கண்மயத்தகத்தூரிகமழ்சாந்தும்வேண்டுங்கடனாகைக்காரோணமேவியிருந்தீரென், றன்மயத்தாலணிநாவலாரூரன்சொன்னவருந்தமிழ்களிவைவல்லாரமருலகாள்பவரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

ஊர்த்தொகை - பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

காட்டூர்க்கடலேகடம்பூர்மலையேகானப்பேரூராய்
கோட்டூர்க்கொழுந்தேயழுந்தூரரசேகொழுநற்கொல்லேறே
பாட்டூர்பலருமபரவப்படுவாய்பனங்காட்டூரானே
மாட்டூரறவாமறவாதுன்னைப்பாடப்பணியாயே. (க)

கொங்கிற்குறும்பிற்குரக்குத்தளியாய்குழகாகுற்றாலா
மங்குற்றிரிவாய்வானோர்தலைவாவாய்மூர்மணவாளா
சங்கக்குழையார்செவியாவழகாவவியாவனலேந்திக்
கங்குற்புறங்காட்டாடீயடியார்கவலைகளையாயே. (உ)

நிறைக்காட்டானேநெஞ்சத்தானேநின்றியூரானே
மிறைக்காட்டானேபுனல்சேர்சடையாயனல்சேர்கையானே
மறைக்காட்டானேதிருமாந்துறையாய்மாகோணத்தானே
யிறைக்காட்டாயேயெங்கட்குன்னையெம்மான்றம்மானே. (௩)

ஆரூரத்தாவையாற்றமுதேயளப்பூரம்மானே
காரூர்பொழில்கள்புடைசூழ்புறவிற்கருகாவூரானே
பேரூருறைவாய்பட்டிப்பெருமான்பிறவாநெறியானே
பாரூர்பலரும்பரவப்படுவாய்பாசூரம்மானே. (௪)

மருகலுறைவாய்மாகாளத்தாய்மதியஞ்சடையானே
அருகற்பிணிநின்னடியார்மேலவகலவருள்வாயே

கருகற்குரலாய்வெண்ணிக்கரும்பேகானூர்க்கட்டியே
பருகப்பணியாயடியார்க்குன்னைப்பவளப்படியானே. (௫)

தாங்கூர்பிணிநின்னடியார்மேலவகலவருளாயே
வேங்கூருறைவாய்விளமர்நகராய்விடையார்கொடியானே
நாங்கூருறைவாய்தேங்கூர்நகராய்நல்லூர்நம்பானே
பாங்கூர்பலிதேர்பரனேபரமாபழனப்பதியானே. (௬)

தேனைக்காவல்கொண்டுவிண்டகொன்றைச்செழுந்தாராய்
வானைக்காவல்கொண்டுநின்றாரறியாநெறியானே
யானைக்காவிலரனேபரனேயண்ணாமலையானே
யூனைக்காவல்கைவிட்டுன்னையுகப்பாருணர்வாரே. (௭)

துருத்திச்சுடரேநெய்த்தானத்தாய்சொல்லாய்கல்லாலாய்
பருத்தியமத்துறைவாய்வெயிலாய்ப்பலவாய்க்காற்றானாய்
திருத்தித்திருத்திவந்தென்சிந்தையிடங்கொள்கயிலாயா
வருத்தித்துன்னையடைந்தார்வினைகளகலவருளாயே. (௮)

புலியூர்ச்சிற்றம்பலத்தாய்புகலூர்ப்போதாமூதூரா
பொலிசேர்புரமூன்றெரியச்செற்றபுரிபுன்சடையானே
வலிசேரரக்கன்றடக்கையைஞ்ஞான்கடர்த்தமதிசூடீ
கலிசேர்புறவிற்கடவூராளீகாணவருளாயே (௯)

கைம்மாவுரிவையம்மான்காக்கும்பலவூர்கருத்துன்னி
மைம்மாந்தடங்கண்மதுரமன்னமொழியாள்மடச்சிங்கடி
தம்மானூரன்சடையன்சிறுவனடியன்றமிழ்மாலை
செம்மாந்திருந்துதிருவாய்திறப்பார்சிவலோகத்தாரே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

## திருப்பாண்டிக்கொடுமுடி - பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

மற்றுப்பற்றெனக்கின்றிநின்றிருப்பாதமேமனம்பாவித்தேன்
பெற்றலும்பிறந்தேனினிப்பிறவாததன்மைவந்தெய்தினேன்
கற்றவர்தொழுதேத்துஞ்சீர்க்கறையூரிற்பாண்டிக்கொடுமுடி
நற்றவாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (௧)

இட்டனுமமடியேத்துவாரிகழ்ந்திட்டநாள்மறந்திட்டநாள்
கெட்டநாளிவையென்றலால்கருதேன்கிளர்புனற்காவிரி
வட்டவாசிகைகொண்டடிதொழுதேத்துபாண்டிக்கொடுமுடி
நட்டவாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (௨)

ஓவுநாளுணர்வழியுநாளுயிர்போகுநாளுயர்பாடைமேற்
காவுநாளிவையென்றலாற்கருதேன்கிளர்புனற்காவிரிப்
பாவுதண்புனல்வந்திழிபரஞ்சோதிபாண்டிக்கொடுமுடி
நாவலாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (௩)

எல்லையில்புகழெம்பிரானெந்தைதம்பிரானென்பொன்மாமணி
கல்லையுந்திவளம்பொழிந்திழிகாவிரியதன்வாய்க்கரை
நல்லவர்தொழுதேத்துஞ்சீர்க்கறையூரிற்பாண்டிக்கொடுமுடி
வல்லவாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (௪)

அஞ்சினார்க்கரணாதியென்றடியேனுநானுமிகவஞ்சினேன்
அஞ்சலென்றடித்தொண்டனேற்கருணல்கினாய்க்கழிகின்றதென்
பஞ்சின்மெல்லடிப்பாவைமார்குடைந்தாடுபாண்டிக்கொடுமுடி
நஞ்சணிகண்டாநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (௫)

ஏடுவானிளந்திங்கள்சூடினையென்பின்கொல்புலித்தோலின்மேல்
ஆடுபாம்பதரைக்கசைத்தவழகனேயந்தண்காவிரிப்
பாடுதெண்புனல்வந்திழிபரஞ்சோதிபாண்டிக்கொடுமுடிச்
சேடனேயுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (௬)

விரும்பிநின்மலர்ப்பாதமேநினைந்தேன்வினைகளும்விண்டன
நெருங்குவண்பொழில்சூழ்ந்தெழில்பெறநின்றகாவிரிக்கோட்டிடைக்
குரும்பைமென்முலைக்கோதைமார்குடைந்தாடுபாண்டிக்கொடுமுடி
விரும்பனேயுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (௭)

செம்பொனேர்சடையாய்திரிபுரந்தீயெழச்சிலைகோலினாய்
வம்புலாங்குழலாளைப்பாகமமர்ந்துகாவிரிக்கோட்டிடைக்
கொம்பின்மேற்குயில்கூவமாமயிலாடுபாண்டிக்கொடுமுடி
நம்பனேயுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (௮)

சாரணன்றந்தையெம்பிரானெந்தைதம்பிரானென்பொன்மாமணியென்று
பேரெணாயிரகோடிதேவர்பிதற்றிநின்றுபிரிகிலா
நாரணன்பிரமன்றொழுங்கறையூர்ப்பாண்டிக்கொடுமுடிக்
காரணாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (௯)

கோணியபிறைசூடியைக்கறையூர்ப்பாண்டிக்கொடுமுடி
பேணியபெருமானைப்பிஞ்ஞகப்பித்தனைப்பிறப்பில்லியைப்
பாணுலாவரிவண்டறைகொன்றைத்தாரனைப்படம்பாம்பரை
நாணனைத்தொண்டனூரன்சொல்லிவைசொல்லுவார்க்கில்லைதுன்பமே. ()

திருச்சிற்றம்பலம்.

---

### திருமுருகன்பூண்டி - பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

கொடுகுவெஞ்சிலைவடுகவேடுவர்விரவலாமைசொல்லித்
திடுகுமொட்டெனக்குத்திக்கூறைகொண்டாறலைக்குமிடம்
முடுகுநாறியவடுகர்வாழ்முருகன்பூண்டிமாநகர்வா
யிடுகுநுண்ணிடைமங்கைதன்னொடுமெத்துக்கிங்கிருந்தீரெம்பிரானீரே

வில்லைக்காட்டிவெருட்டிவேடுவர்விரவலாமைசொல்லிக்
கல்லினாலெறிந்திட்டுமோதியுங்கூறைகொள்ளுமிடம்
முல்லைத்தாதுமணங்கமழ்முருகன்பூண்டிமாநகர்வா
யெல்லைக்காப்பதொன்றில்லையாகினீரெத்துக்கிங்கிருந்தீரெம்பிரானீரே

பசுக்களேகொன்றுதின்றுபாவிகள்பாவமொன்றறியார்
* உசிர்க்கொலைபலநேர்ந்துநாடொறுங்கூறைகொள்ளுமிடம்
முசுக்கள்போற்பலவேடர்வாழ்முருகன்பூண்டிமாநகர்வா
யிசுக்கழியப்பயக்கங்கொண்டுநீரெத்துக்கிங்கிருந்தீரெம்பிரானீரே. (௩)

---

* உயிர் - உசிர் என மருவியது.

பிறைகூறையுடுத்தோர்பத்திரங்கட்டிவெட்டனராய்ச்
சூறைப்பங்கியராகிநாடொறுங்கூறைகொள்ளுமிட
மோறைவேடுவர்கூடிவாழ்முருகன்பூண்டிமாநகர்வா
யேறுகாலிற்றதில்லையாய்விடிலெத்துக்கிங்கிருநதீரெம்பிரானீரே. (௪)

தயங்குதோலையுடுத்தசங்கரசாமவேதமோதி
மயங்கியூரிடுபிச்சைகொண்டுணுமாரக்கமொன்றறியீர்
முயங்குபூண்முலைமங்கையாளொடுமுருகன்பூண்டிமாநகர்வா
யியங்கவுமிடுக்குடையாய்விடிலெத்துக்கிங்கிருந்தீரெம்பிரானீரே. (௫)

விட்டிசைப்பனகொக்கரைகொடுகொட்டித்தத்தளகங்
கொடிப்பாடுமித்துந்துமியொடுகுடமுழாநீர்மகிழ்வீ
மொட்டலர்நதுமணங்கமழ்முருகன்பூண்டிமாநகர்வா
யிட்டபிச்சைகொண்டுண்பதாகில்நீரெத்துக்கிங்கிருந்தீரெம்பிரானீரே.

வேதமோதிவெண்ணீறுபூசிவெணகோவணந்தற்றயலே
யோதமேவியவொற்றியூரையுமுத்திநீமகிழ்வீ
மோதிவேடுவர்கூறைகொள்ளுமுருகன்பூண்டிமாநகர்வா
யேதுகாரணமேதுகாவலகொண்டெத்துக்கிங்கிருநதீரெம்பிரானீரே.()

படவரவுநுண்ணேரிடைப்பணைத்தோள்வரிநெடுங்கண்
மடவரலுமைமங்கைதன்னையோர்பாகம்வைத்துகந்தீ
முடவரல்லீரிடரிலீர்முருகன்பூண்டிமாநகர்வா
யிடவமேறியும்போவதாகிலநீரெத்துக்கிங்கிருநதீரெம்பிரானீரே. (அ)

சாந்தமாகவெண்ணீறுபூசிவெண்பற்றலைகலனு
வேய்ந்தவெண்பிறைக்கண்ணிதன்னையோர்பாகம்வைத்துகநதீர்
மோந்தையோடுமுழக்கறுமுருகன்பூண்டிமாநகர்வா
யேநதுபூண்முலைமங்கைதன்னொடுமெத்துக்கிங்கிருநதீரெம்பிரானீரே.

முந்திவானவர்தாந்தொழுமுருகன்பூண்டிமாநகர்வாய்ப்
பநதணைவிரற்பாவைதன்னையோர்பாகமவைத்தவனைச்
சிநதையிற்சிவதொண்டனூரனுரைத்தனபத்துங்கொண்
டெநதம்மடிகளையேத்துவாரிடரொன்றுநதாமிலரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

கழறிற்றறிவாரென்னுஞ் சேரமான்பெருமாணயனூர் கொடுத்த திரவியங்களைப் பரிசனங்கள் தலையிலெடுப்பித்துக்கொண்டு திருமுருகன்பூண்டிக்குச்சமீபத்தில் எழுந்தருளும்போது, பரமசிவத்தின் கட்டளையினால் பூதங்கள் வேடுவர்களாகிவந்து அநதப் பரிசனங்களை யடித்துப் பொருள்களைப் பறித்துக்கொண்டுபோக, அப்போது சுந்தரமூர்த்திசுவாமிகள் இந்தப் பதிகமோதிப் பொருள்களைப் பெற்றுக்கொண்டனர்.

---

## திருப்புனல்வாயில் -பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

சித்தநீநினையென்னொடுசூளறும்வைகலு
மத்தயானையினீருரிபோர்த்தமணாளனூர்
பத்தர்தாம்பலர்பாடிநின்றாடும்பழம்பதி
பொத்திலாந்தைகள்பாட்டறாப்புனவாயிலே. (௧)

முத்தினைமாமணிதன்னைவயிரத்தைமூர்க்கனேன்
எத்தனைநாள்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே. (க)

ஐவணமாம்பகழியுடையடல்மதனன்பொடியாகச்
செவ்வணமாந்திருநயனமவிழ்செய்தசிவமூர்த்தி
மையணவுகண்டத்துவளர்சடையெம்மாரமுதை
யெவ்வணம்நான்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே. (உ)

சங்கலக்குந்தடங்கடல்வாய்விடஞ்சுடவந்தமரர்தொழ
அங்கலக்கண்டீர்த்தவ்விடமுண்டுகந்தவம்மானை
யிங்கலக்குமுடற்பிறந்தவறிவிலியேன்செறிவின்றி
யெங்குலக்கப்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே. (ங)

இங்ஙனம்வந்திடர்ப்பிறவிப்பிறந்தயர்வேனயராமே
யங்ஙனம்வந்தெனையாண்டவருமருந்தென்னாரமுதை
வெங்கனன்மாமேனியனைமான்மருவுங்கையானை
யெங்ஙனம்நான்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே. (ச)

செப்பரியவயனொடுமால்சிந்தித்துந்தெரிவரிய
அப்பெரியதிருவினையேயறியாதேயருவினையேன்
ஒப்பரியகுணத்தானையிணையிலியையணைவின்றி
யெப்பரிசுபிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே. (ரு)

வன்னாகநாண்வரைவிலங்கி * கணையரிபகழி
தன்னாகமுறவாங்கிப்புரமெரித்ததன்மையனை
முன்னாகநினையாதமூர்க்கனேனாக்கைசுமந்
தென்னாகப்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே. (சு)

வன்சயமாயடியான்மேல்வருங்கூற்றினுரங்கிழிய
முன்சயமார்பாதத்தால்முனிந்துகந்தமூர்த்திதனை
மின்செயும்வார்சடையானைவிடையானையடைவின்றி
யென்செயனான்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே. (எ)

முன்னெறிவானவர்கூடித்தொழுதேத்துமுழுமுதலை
யந்நெறியையமரர்தொழுநாயகனையடியார்கள்
செந்நெறியைத்தேவர்குலக்கொழுந்தைமறந்திங்ஙனநான்
என்னறிவான்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே. (அ)

கற்றுளவான்கனியாயகண்ணுதலைக்கருத்தார
உற்றுளனாமொருவனைமுன்னிருவர்நினைந்தினிதேத்தப்
பெற்றுளனாம்பெருமையனைப்பெரிதடியேன்கையகன்றிட்
டெற்றுளனாய்ப்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே. (கூ)

ஏழிசையாயிசைப்பயனாயின்னமுதாயென்னுடைய
தோழனுமாயான்செய்யுந்துரிசுகளுக்குடனாகி
மாழையொண்கண்பரவையைத்தந்தாண்டானைமதியிலா
ஏழையேன்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே. (கய)

வங்கமலிகடனஞ்சைவானவர்கடாமுய்ய
நுங்கியமுதவர்க்கருளிநொய்யேனைப்பொருட்படுத்துச்
சங்கிலியோடெனைப்புணர்த்ததத்துவனைச்சழக்கனேன்
எங்குலக்கப்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே. (கக)

* கணையென்பது-அம்பினிற்பூட்டிய அலகு.

எம்மானெனக்கெழுத்தப்பனேழேழ்படிகாலெமையாண்ட
பெம்மானீமப்புறங்காட்டிற்பேயோடாடல்புரிவானே
பன்மாமலர்களவைகொண்டுபலருமேத்தும்பழையனூர்
அம்மாவாலங்காடாவுன்னடியார்க்கடியேனாவேனே. (௯)

பத்தர்சித்தர்பலரேத்தும்பரமன்பழையனூர்மேய
அத்தனாலங்காடன்றனடிமைத்திறமேயன்பாகிச்
சித்தர்சித்தம்வைத்தபுகழ்ச்சிறுவனூரனொண்டமிழ்கள்
பத்தும்பாடியாடுவார்பரமனடியேபணிவாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கடவூர்மயானம் பண் பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்

மருவார்கொன்றைமதிசூடிமாணிக்கத்தின்மலைபோல
வருவார்விடைமேல்மாதோடுமகிழ்ந்துபூதப்படைசூழத்
திருமால்பிரமனிந்திரற்குந்தேவர்நாகர்தானவர்க்கும்
பெருமான்கடவூர்மயானத்துப்பெரியபெருமானடிகளே. (௧)

விண்ணோர்தலைவர்வெண்புரிநூல்மார்பர்வேதகீதத்தர்
கண்ணார்நுதலர்நகுதலையர்காலகாலர்கடவூரர்
எண்ணார்புரமூன்றெரிசெய்தவிறைவருமையோரொருபாகம்
பெண்ணாணாவார்மயானத்துப்பெரியபெருமானடிகளே. (௨)

காயும்புலியினதளுடையார்கண்டரெண்டோளர்கடவூரர்
தாயுந்தந்தைபல்லுயிர்க்குந்தாமேயாயதலைவனார்
பாயும்விடையொன்றதுவேறிப்பலிதேர்ந்துண்ணும்பரமேட்டி
பேய்கள்வாழுமயானத்துப்பெரியபெருமானடிகளே. (௩)

நறைசேர்மலரைங்கணையானைநயனத்தீயாற்பொடிசெய்த
இறையாராவரெல்லார்க்குமில்லையென்னாதருள்செய்வார்
பறையார்முழவம்பாட்டோடுபயிலுந்தொண்டர்பயின்றேத்தப்
பிறையார்சடையார்மயானத்துப்பெரியபெருமானடிகளே. (௪)

கொத்தார்கொன்றைமதிசூடிக்கோணாகங்கள்பூணாக
மத்தயானையுரிபோர்த்துமருப்புமாமைதாலியார்
பத்திசெய்துபாரிடங்கள்பாடியாடப்பலிகொள்வார்
பித்தர்கடவூர்மயானத்துப்பெரியபெருமானடிகளே. (௫)

துணிவார்கீளுங்கோவணமுந்துதைந்துசுடலைப்பொடியணிந்து
பணிமேலிட்டபாசுபதர்*பஞ்சவடிமார்பினர்கடவூர்
திணிவார்குழையார்புரமூன்றுந்தீவாய்ப்படுத்தசேவகனார்
பிணிவார்சடையார்மயானத்துப்பெரியபெருமானடிகளே. (௬)

காரார்கடலினஞ்சுண்டகண்டர்கடவூருறைவாணர்
தேராரரக்கன்போய்வீழ்ந்துசிதையவிரலாலூன்றினா

---

* பஞ்சவடியாவது-மயிர்ப்பூணநூல். இதுமாவிரதியரென்னும் உட்சமயத்தாரணிவது. மேலும் அவர்களணியும்மணி எலும்பினாலாகிய மணிகள், இவற்றைமானக்கஞ்சாற நாயனார் புராணத்து உ௯-வது திருவிருத்தத்தாலுமுணர்க.

மற்றுத்தேவரைநினைந்துனைமறவேனெஞ்சினொடுவாழவுமாட்டேன்
பெற்றிருந்துபெருந்தொழிகின்றபேதையேன்பிழைத்திட்டதையறியேன்
முற்றுநீயெனைமுனிந்திடவடியேன்கடவதென்னுனைநான்மறவேனேல்
உற்றநோயுறுபிணிதவிர்த்தருளாயொற்றியூரெனுமூருறைவானே. (எ)

கூடிநாயமலைமங்கையைநினையாய்கங்கையாயிரமுகமுடையாளைச்
சூடினாயென்றுசொலவியபுக்காற்றொழுமபனேனுக்குளசொல்லுமாமே
வாடிநீயிருந்தென்செய்திமனனேவருந்தியானுற்றவல்வினைக்கஞ்சி
யூடினாலினியாவதொன்றுண்டேயொற்றியூரெனுமூருறைவானே. (அ)

மகத்திற்புக்கதோர்சனியெனக்கானாய்மைந்தனேமணியேமணவாளா
அகத்திற்பெண்டுகள்நானொன்றுசொன்னாலழையேறபோகுருடாவெனத்தரியேன்
முகத்திற்கண்ணிழந்தெங்ஙனம்வாழ்கேனமுக்கணாமுறையோமறையோதீ
யுகைக்குநதணகடலோதமவநதுலவுமொறறியூரெனுமூருறைவானே. (௯)

ஒதம்வநதுலவுங்கரைதனமேலொற்றியூருறைசெலவனைநாளு
ஞானநதான்பரவடியுகின்றநான்மறையங்கமோதியநாவன்
சீலந்தான்பெரிதுமமிகவலலசிறுவன்வன்றொண்டனூரனுரைத்த
பாடல்பத்திவைவல்லவாதாமபோய்பயரகதிதிண்ணநண்ணுவாதாமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இது, உன்னைப்பிரிந்துபோவதில்லையென்று சங்கிலிநாச்சியாருககுச் சூளுரைசெய்து மணந்து மகிழ்ந்திருக்கையில, திருவாரூர் வீதிவிடங்கப் பெருமானுடைய திருவோலக்கத்தரிசனம செயவதறகினறி நெடுநாள் பிரிந்திருக்கினறோமே யெனனும் ஞாபகமுண்டாகப் பரமசிவத்தின திருவிளையாட்டால் முனகூறிய சூளுரையை மறந்து, திருவொற்றியூ ரெல்லையைசகடந்தவளவில நேத்திரங்களுக்குஅபாவநதோனறவருந்தித் துதிசெய்தபதிகம்.

---

## திருப்புன்கூர் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

அந்தணாளனுன்னடைக்கலமபுகுதவவனைக்காப்பதுகாரணமாக
வந்தகாலன்றனாருயிரதனைவவ்வினாய்க்குன்றன்வன்மைகண்டடியேன்
எந்தைநீயெனைநமன்றமாநலிவிலிவன்மற்றென்னடியானெனவிலக்குஞ்
சிந்தையாலவந்துன்றிருவடியடைந்தேன் செழுமபொழிறறிருபபுனகூருளானே.

வையகமுற்றுமாமழைமறந்தவயலிலநீரிலைமாநிலந்தருகோம, உய்யக்கொள்கமற்றெங்களையென்னவொளிகொள்வெண்முகிலாய்ப்பரந்தெங்கும, பெய்யுமாமழைப்பெருவெள்ளந்தவிர்த்துபபெயர்ந்துமபன்னிரு வேலிகொண்டருளுஞ், செய்கைகண்டுநின்றிருவடியடைந்தேனசெழுமபொழிற்றிருபபுன்கூருளானே. (௨)

ஏதநன்னிலமீராறுவேலியேயர்கோனுற்றவிருமபிணிதவிர்த்துக்
கோதனங்களின்பாலகறந்தாட்டககோலவெண்மணற்சிவன்றன்மேற்சென்ற
தாதைதாளறவெறிந்தசண்டிக்குனசடைமிசைமலரருளசெயக்கண்டு
பூதவாளிநின்பொன்னடியடைந்தேனபூம்பொழிற்றிருபபுன்கூருளானே. (௩)

கற்றமிழ்வலலஞானசம்பந்தனுவினுக்கரையனுனைப்போவானுங்
கற்றசூதனற்சாக்கியன்சிலந்திகண்ணபடன்கணம்புல்லனென்றிவர்கள் [ன்
குற்றஞ்செய்யினுங்குணமெனக்கருதுங்கொள்கைகண்டுநின்குரைகழலடைந்தே
பொற்றிரள்மணிக்கமலங்கள்மலரும்பொய்கைசூழ்திருப்புன்கூருளானே. (௪)

கோலமால்வரைமத்தெனநாட்டிக்கோளரவுசுற்றிக்கடைந்தெழுந்த
ஆலநஞ்சுகண்டவரமிகவிரியவமரர்கட்கருள்புரிவதுகருதி
நீலமார்கடலவிடந்தனையுண்டுகண்டத்தேவைத்தபித்தநீசெய்த
சீலங்கண்டுநின்றிருவடியடைந்தேனசெழும்பொழிற்றிருப்புன்கூருளானே. (கூ)

இயக்கர்கின்னரர்யமனொடுவருணரியங்குதீவளிகாயிறுதிங்கள்
மயக்கமிலபுலிவானரர்நாகமவசுக்கள்வானவர்தானவரெல்லாம்
அயர்ப்பொன்றின்றிநின்றிருவடியதனையர்ச்சித்தார்பெறுமாருள்கண்டு [னே.
திசைபொன்றின்றிநின்றிருவடியடைந்தேனசெழும்பொழிற்றிருப்புன்கூருளா

போர்த்தநீள்செவியாளர்ந்தனக்குப்பொழிலகொளாலநிழற்கீழறம்புரிந்து
பார்த்தனுக்கன்றுபாசுபதங்கொடுத்தருளினாய்பண்டுபகீரதன்வேண்ட
ஆர்த்துவந்திழியும்புனற்கங்கைநங்கையாளைநின்சடைமிசைக்கரந்த
தீர்த்தனேநின்றன்றிருவடியடைந்தேன்செழும்பொழிற்றிருப்புன்கூருளானே.

மூவெயில்செற்றஞான்றுய்ந்தமூவரிலிருவர்நின்றிருக்கோயிலின்வாய்தல
காவலாளரென்றேவியபின்னையொருவநீகரிகாடரங்காக
மானைநோக்கியோர்மாநடமகிழமணிமுழாமுழக்கவருள்செய்த
தேவதேவநின்றிருவடியடைந்தேனசெழும்பொழிற்றிருப்புன்கூருளானே. (அ)

அறிவினாலமிக்கவருவகைசசமையமவ்வவர்க்கங்கேயாருள்புரிந்து
எறியுமாகடலிலங்கையர்கோனைத்துலங்கமால்வரைக்கீழடர்த்திட்டுக்
குறிகொள்பாடலினின்னிசைகேட்டுக்கோலவாளொடுநாளதுகொடுத்த
செறிவுகண்டுநின்றிருவடியடைந்தேன்செழும்பொழிற்றிருப்புன்கூருளானே.

கம்பமால்களிற்றினதுரியானைக்காமனைக்காய்ந்தகண்ணுடையானைச்
செம்பொனேயொக்குந்திருவுருவானைச்செழும்பொழிற்றிருப்புன்கூருளானை
யும்பராளியையுமையவள்கோனையூரனவனரூண்டெழுள்ளத்தாலுகந்த
தன்பினாற்சொன்னவருந்தமிழைந்தோடைந்துமவல்லவாருவினையிலரே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

திருநீடூர் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

ஊர்வதோர்விடையொன்றுடையானையொண்ணுதற்றனிக்கண்ணுதலானைக்
காரதாகறைமாமிடற்றானைக்கருதலார்புரமூன்றெரித்தானை
நீரில்வாளைவராலகுதிகொள்ளுநிறைபுனற்கழனிச்செல்வநீடூர்
பாருளாரபரவித்தொழுநின்றபரமனைப்பணியாவிடலாமே. (க)

துன்னுவார்சடைத்தூமதியானைத்துயக்குறுவகைதோன்றுவிப்பானைப்
பன்னுநான்மறைபாடவல்லானைப்பார்த்தனுக்கருள்செய்தபிரானை
யென்னையின்னருளெய்துவிப்பானையேதிலார்தமக்கேதிலன்றன்னைப்
புன்னைமாதவிபோதலர்நீடூர்ப்புனிதனைப்பணியாவிடலாமே. (உ)

கொல்லுமூவிலைவேலுடையானைக்கொடியகாலனையுங்குமைத்தானை
நல்லவாநெறிகாட்டுவிப்பானைநாளுநான்முகக்கின்றபிரானை
யல்லலில்லருளேபுரிவானையாடுநீர்வயலசூழ்புனல்நீடூர்
கொல்லைவெள்ளெருதேறவல்லானைக்கூறிநாம்பணியாவிடலாமே. (௩)

தோடுகாதிடுதூநெறியானைத்தோற்றமுந்துறப்பாயவன்றன்னைப்
பாடுமாமறைபாடவல்லானைப்பைம்பொழிற்குயில்கூவிடமாடே

யாடுமாமயிலன்னமோடாடலைபுனற்கழனித்திருநீடூர்
வேடனாயபிரானவன்றன்னைவிரும்பினும்பணியாவிடலாமே. (௪)

குற்றமொன்றடியாரிலரானற்கூடுமாறதனைக்கொடுப்பானைக்
கற்றகல்வியிலும்மினியானைக்காணப்பேணுமவர்க்கெளியானை
முற்றவைஞ்சுந்துறந்திருப்பானைமூவரின்முதலாயவன்றன்னைச்
சுற்றுநீள்வயல்சூழ்திருநீடூர்த்தோன்றலைப்பணியாவிடலாமே. (௫)

காடிலாடியகண்ணுதலானைக்காலனைக்கடிந்திட்டபிரானைப்
பாடியாடும்பரிசேபுரிந்தானைப்பற்றினோடுசுற்றம்மொழிப்பானைத்
தேடிமாலயன்காண்பரியானைச்சித்தமுந்தெளிவார்க்கெளியானைக்
கோடிதேவர்கள்கும்பிடுநீடூர்க்கூத்தனைப்பணியாவிடலாமே. (௬)

விட்டிலங்கெரியார்கையினானைவீடிலாதவியன்புகழானைக்
கட்டுவாங்கந்தரித்தபிரானைக்காதிலார்கனகக்குழையானை
விட்டிலங்குபுரிநூலுடையானைவீந்தவர்தலையோடுகையானைக்
கட்டியின்கருமமோங்கியநீடூர்க்கண்டுநாம்பணியாவிடலாமே. (௭)

மாயமாயமனங்கெடுப்பானைமனத்துளேமதியாயிருப்பானைக்
காயமாயமுமாக்குவிப்பானைக்காற்றுமாய்க்கனலாய்க்கழிப்பானை
யோயுமாறுறுநோய்புணர்ப்பானையொல்லைவல்வினைகள்கெடுப்பானை
வேய்கொள்தோளுமைபாகனைநீடூர்வேந்தனைப்பணியாவிடலாமே. (௮)

கண்டமுங்கறுத்திட்டபிரானைக்காணப்பேணுமவர்க்கெளியானைத்
தொண்டரைப்பெரிதுமுகப்பானைத்துன்பமுந்துறந்தின்பினியானைப்
பண்டைவல்வினைகள்கெடுப்பானைப்பாகமாமதியானவன்றன்னைக்
கெண்டைவாளைகிளர்புனல்நீடூர்க்கேண்மையாற்பணியாவிடலாமே. (௯)

அல்லலுள்ளனதீர்த்திடுவானையடைந்தவர்க்கமுதாயிடுவானைக்
கொல்லைவல்லரவம்மசைத்தானைக்கோலமாகரியின்னுரியானை
நல்லவாக்கணியானவன்றன்னைநானுங்காதல்செய்கின்றபிரானை
யெல்லிமல்லிகையேகமழ்நீடூரேத்திநாம்பணியாவிடலாமே. (௧௦)

பேரோராயிரமும்முடையானைப்பேசினாற்பெரிதுமினியானை
நீரூர்வார்சடைநின்மலன்றன்னைநீடூர்நின்றுகந்திட்டபிரானை
யாரூரன்னடிகாண்பதற்கன்பாயாதரித்தழைத்திட்டவிம்மாலை
பாரோரும்பரவித்தொழவல்லார்பத்தராய்முத்திதாம்பெறுவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

### திருவாழ்கொளிபுத்தூர் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

தலைக்கலன்றலைமேற்றரித்தானைத்தன்னையென்னைநினைக்கத்தருவானைக், கொலைக்கையானையுரிபோர்த்துகந்தானைக்கூற்றுதைத்தகுரைசேர்கழலானை, யலைத்தசெங்கண்விடையேறவல்லானையாணையாலடியேனடிநாயேன், மலைத்தசெந்நெல்வயல்வாழ்கொளிபுத்தூர்மாணிக்கத்தைமறந்தென்னினைக்கேனே.

படைக்கட்சூலம்பயிலவல்லானைப்பாவிப்பார்மனம்பாவிக்கொண்டானைக், கடைக்கட்பிச்சைக்கிச்சைகாதலித்தானைக்காமனாகந்தனைக்கட்டழித்தானைச், சடைக்கட்கங்கையைத்தாழவைத்தானைத்தண்ணீர்மண்ணிக்கரையானைத்தக்கானை, மடைக்கணீலமலர்வாழ்கொளிபுத்தூர்மாணிக்கத்தைமறந்தென்னினைக்கேனே.

விழித்துக்கண்டனன்மெய்ப்பொருடன்னை வேண்டேன்மானிடவாழ்க்கையிதா
இழித்தேனென்றனக்குய்வகையருளாயிடைமருதுறையெந்தைபிரானே. [இல்

குற்றந்தன்னொடுகுணம்பலபெருக்கிக்கோலநுண்ணிடையாரொடுமயங்கிக்
கற்றிலேனகலைகளபலஞானங்கடியவாயினகொடுமைகள்செய்தேன்
பற்றிலாவதோர்பற்றுமற்றில்லேன்பாவியேன்பலபாவங்கள்செய்தேன்
எற்றுளேனெனக்குய்வகையருளாயிடைமருதுறையெந்தைபிரானே. (சு)

கொடுக்ககிற்றிலேனொண்பொருடன்னைக்குற்றஞ்செற்றமிவைமுதலாக
விடுக்ககிற்றிலேன்வேட்கையுஞ்சினமும்வேண்டிலும்புலனென்வசமல்ல
நடுக்கமுற்றதோர்மூப்புவந்தெய்தநமன்றமர்நரகத்திடலஞ்சி
யிடுக்கணுற்றனனுய்வகையருளாயிடைமருதுறையெந்தைபிரானே. (எ)

ஐவகையரையரவராகியாட்சிகொண்டொருகாலவர்நீங்கார
அவ்வகையவர்வேண்டுவதானாலவரவர்வழியொழுகிநான்வந்து
செய்வவகையறியேன்சிவலோகாதீவண்ணாசிவனேயெரியாடீ
யெவ்வகையெனக்குய்வகையருளாயிடைமருதுறையெந்தைபிரானே. (அ)

ஏழைமானிடவின்பினைநோக்கியிளையவர்வலைப்பட்டிருந்தின்னம
வாழைதானபழுக்குமநமக்கென்றிருந்தவலவினையுளவலைபபட்டுக்
கூழைமாந்தர்தஞ்செல்கதிப்பக்கம்போகமும்பொருளொன்றறியாதே
ஏழையேனுக்கோருய்வகையருளாயிடைமருதுறையெந்தைபிரானே. (கூ)

அரைக்குஞ்சந்தனத்தோடகிலுந்தியவனஞ்சுமந்தார்த்ததிரும்பாலு
மிரைக்குங்காவிரித்தென்கரைதன்மேலிடைமருதுறையெந்தைபிரானை
யுரைக்குமூரனொளிதிகழ்மாலையுள்ளத்தாலுகந்தேத்தவல்லார்கள
நரைப்புமூப்பொடுநடலையுமின்றிநாதன்சேவடிநண்ணுவர்தாமே. (கO)

திருச்சிற்றம்பலம்.

---

திருவேகம்பம் -பண்- தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

ஆலந்தானுகந்தமுதுசெய்தானையாதியையமரர்தொழுதேத்துஞ்
சீலந்தானபெரிதுமுடையானைச்சிந்திப்பாரவர்சிந்தையுளானை
யேலவார்குழலாளுமைநங்கையென்றுமேத்திவழிபடப்பெற்ற
காலகாலனைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (க)

உற்றவர்க்குதவும்பெருமானையூர்வதொன்றுடையானும்பர்கோனைப
பற்றினார்க்கென்றும்பற்றவன்றன்னைப்பாவிப்பார்மனம்பாவிக்கொண்டானை
யற்றமில்புகழாளுமைநங்கையாதரித்துவழிபடப்பெற்ற
கற்றைவார்சடைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (உ)

திரியுமுப்புரந்தீப்பிழம்பாகச்செங்கண்மால்விடைமேற்றிகழ்வானைக
கரியினீருரிபோர்த்துகந்தானைக்காமனைக்கனலாவிழித்தானை
வரிகொள்வெள்வளையாளுமைநங்கைமருவியேத்திவழிபடப்பெற்ற
* பெரியகம்பனையெங்கள்பிரானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (ங)

குண்டலந்திகழ்காதுடையானைக்கூற்றுதைத்தகொடுந்தொழிலானை
வண்டலம்புமலர்க்கொன்றையினானைவாளராமதிசேர்சடையானைக்

---

* காமாக்ஷியம்மையாலபூசிக்கப்பட்ட-ஏகாம்பரநாதரேபெரியகம்பர்.

கெண்டையந்தடங்கண்ணுமைநங்கைகெழுமியேத்திவழிபடப்பெற்ற
கண்டநஞ்சுடைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (௪)

வெல்லும்வெண்மழுவொன்றுடையானைவேலைநஞ்சுண்டவித்தகன்றன்னை
யல்லறீர்த்தருள்செய்யவல்லானையருமறையவையங்கமவல்லானை
யெல்லையில்புகழாளுமைநங்கையென்றுமேத்திவழிபடப்பெற்ற
* நல்லகம்பனையெங்கள்பிரானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (௫)

திங்கள்தங்கியசடையுடையானைத்தேவதேவனைச்செழுங்கடல்வளருஞ்
சங்கவெண்குழைக்காதுடையானைச்சாமவேதம்பெரிதுகப்பானை
மங்கைநங்கைமலைமகள்கண்டுமருவியேத்திவழிபடப்பெற்ற
கங்கையாளனைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே (௬)

விண்ணவர்தொழுதேத்தநின்றானைவேதந்தான்விரித்தோதவல்லானை
நண்ணினார்க்கென்றுநல்லவன்றன்னைநாளுநாமுகக்கின்றபிரானை
யெண்ணில்தொல்புகழாளுமைநங்கையென்றுமேத்திவழிபடப்பெற்ற
கண்ணுமூன்றுடைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (௭)

சிந்தித்தென்றுநினைந்தெழுவார்கள்சிந்தையிற்றிகழுஞ்சிவன்றன்னைப
பந்தித்தவினைபபற்றறுப்பானைபபாலொடானஞ்சுமாட்டுகந்தானை
யந்தமில்புகழாளுமைநங்கையாதரித்துவழிபடப்பெற்ற
கந்தவார்சடைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (௮)

வரங்கள்பெற்றுழல்வாளரக்கர்தம்வாலியபுரமூன்றெரித்தானை
நிரம்பியதக்கன்றன்பெருவேள்விநிரந்தரஞ்செய்தநிட்கண்டகனைப்
பரந்ததொல்புகழாளுமைநங்கைபரவியேத்திவழிபடப்பெற்ற
கரங்களெட்டுடைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (௯)

எள்கலின்றியிமையவர்கோனையீசனைவழிபாடுசெய்வாள்போ
லுள்ளத்துள்கியுகந்துமைநங்கைவழிபடச்சென்றுநின்றவாகண்டு
வெள்ளங்காட்டிவெருட்டிட ० வஞ்சிவெருவியோடித்தழுவவெளிப்பட்ட
† கள்ளக்கம்பனையெங்கள்பிரானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே. (௧0)

பெற்றமேறுகந்தேறவல்லானைப்பெரியவெம்பெருமானென்றெப்போதுங்
கற்றவர்பரவப்படுவானைக்காணக்கண்ணடியேன்பெற்றதென்று

---

* உருத்திரரால்பூசிக்கப்பட்டசிவலிங்கப்பெருமானுக்கு நல்ல கம்பனென்றுபெயர்.
காஞ்சிபுராணம் திருவேகம்பப்படலத்தில் ௮௮-வது செய்யுள்—
"உருத்திரனலத்தகுமொருமைபூண்டுயர்
கருத்தொடும்வழிபடு நல்லகம்பனை"
உமைநங்கையென்றுமேத்தி வழிபடப்பெற்ற நல்லகம்பனை யென்பது-ஏகாம்பரநாதனு
க்கும் நல்லகம்பனுக்கும் பேதமின்மைகாட்டுகின்றது.
० வஞ்சிவெருவி-அந்த உமையம்மைதெனப்பொருள்கொள்க.

† விஷ்ணுவினாற்பூசிக்கப்பட்ட சிவலிங்கப்பெருமானுக்குக் கள்ளக்கம்பனென்றுபெயர்.
"மருள்புரிகருத்தினன்மாயனேத்தலுங்
கருதும்பெரியகள்ளக்கம்பனை" - ௮எ-வதுபாடல்.
ஈண்டுக்கூறப்பட்ட-நல்லகம்பன்-கள்ளக்கம்பனென்னும் இரண்டுமூர்த்திகளுமேயன்றி,
பிரமனால் பூசிக்கப்பட்ட வெள்ளக்கம்பன்-என்னும் ஒருசிவலிங்கப் பெருமானுமுண்டு.
"வாலியசிந்தையான் மலர்ப்பொகுட்டனை
மேலவன்வழிபடு வெள்ளக்கம்பனை"-௮௯-வதுசெய்யுள்.

கொற்றவன்கம்பன்கூத்தனெம்மானைக்குளிர்பொழிற்றிருநாவலாரூர
னற்றமிழிவைவீரைந்தும்வல்லார்நன்னெறியுலகெய்துவர்தாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

### திருக்கோலக்கா - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

புற்றிலவாளரவார்த்தபிரானைப்பூதநாதனைப்பாதமேதொழுவார
பற்றுவான்றுணையெனக்கெளிவந்தபாவநாசனைமேவரியானை
முற்றலார்திரிபுரமொருமூன்றும்பொன்றவென்றிமால்வரையரியம்பாக்
கொற்றவில்லங்கையேந்தியகோனைக்கோலக்காவினிற்கண்டுகொண்டேனே. (க)

அங்கமாறுமமறையொருநான்குமாயநம்பனைவேய்புரைதோளி
தங்குமாதிருவுருவுடையானைத்தழலுமதிசடைமேற்புனைந்தானை
வெங்கணானையினீருரியானைவிண்ணுளார்தொழுமண்ணுளார்பரசுங்
கொங்குலாம்பொழிற்குராவெறிகமழுங்கோலக்காவினிற்கண்டுகொண்டேனே.

பாட்டகத்திசையாகிநின்றானைப்பத்தர்சித்தம்பிரிவிலியானை
○ நாட்டகத்தேவாசெய்கையுளானைநட்டமாடியைநம்பெருமானைக்
காட்டகத்துறுபுலியுரியானைக்கண்ணோர்மூன்றுடையண்ணலையடியேன
கோட்டகப்புனலார்செழுங்கழனிக்கோலக்காவினிற்கண்டுகொண்டேனே. (௩)

ஆத்தமென்றெனையாளுகந்தானையமரர்நாதனைக்குமரனைப்பயந்த
வார்த்தயங்கியமுலைமடமானைவைத்துவான்மிசைக்கங்கையைக்கரந்த
தீர்த்தனைச்சிவனைச்செழுந்தேனைத்தில்லையம்பலத்துணிறைந்தாடுங்
கூத்தனைக்குருமாமணிதன்னைக்கோலக்காவினிற்கண்டுகொண்டேனே. (ச)

அன்றுவந்தெனையகலிடத்தவர்முன்னாளதாகவென்றுவணங்காட்டி
நின்றுவெண்ணெய்நல்லூர்மிசையொளித்தநித்திலத்திரட்டொத்தினைமுத்திக்
கொன்றினான்றனையும்பிரானையருநல்லானைக்கொடச்சீறுங்
குன்றவில்லியைமெல்லியலுடனேகோலக்காவினிற்கண்டுகொண்டேனே. (ரு)

காற்றுத்தீப்புனலாகிநின்றானைக்கடவுளைக்கொடுமால்விடையானை
நீற்றுத்தீயுருவாய்நிமிர்ந்தானைநிரம்புபல்கலையின்பொருளாலே
போற்றித்தன்கழல்தொழுமவனுயிரைப்போக்குவானுயிர்நீக்கிடத்தாளாற்
கூற்றைத்தேய்ந்திடச்செய்குரைகழலானைக்கோலக்காவினிற்கண்டுகொண்டேனே. ()

அன்றயன்சிரமரிந்ததிற்பலிகொண்டமரருக்கருள்வெளிப்படுத்தானைத்
துன்றுபைங்கழலிற்சிலம்பார்த்தசோதியைச்சுடர்போலொளியானை
மின்றயங்கியவிடைமடமங்கைமேவுமீசனைவாசமாமுடிமேற்
கொன்றையஞ்சடைக்குழகனையழகாகோலக்காவினிற்கண்டுகொண்டேனே. ()

நாளுமின்னிசையாற்றமிழ்பரப்புஞானசம்பந்தனுக்குலகவர்முன்
றாளமீய்ந்தவன்பாடலுக்கிரங்குந்தன்மையாளனையென்மனக்கருத்தை
யாளும்பூதங்கள்பாடநின்றாடுமங்கணன்றனையெண்கணமிறைஞ்சுங்
கோளிலிப்பெருங்கோயிலுளானைக்கோலக்காவினிற்கண்டுகொண்டேனே. (அ)

அரக்கனாற்றலழித்தவன்பாட்டுக்கன்றிரங்கியவென்றியினானைப்
பரக்கும்பாரளித்துண்டுகந்தவர்கள்பரவியும்பணிதற்கரியானைச்

---

○ நாட்டகத்தேவரென்பதனை நாட்டுத்தேவர்கள் நாடரும் பொருளேயென்னுந்திருவாசகத்தானுமுணர்க.

சிரக்கண்வாய்செவிமூக்குயர்காயமாகித்தீவினைதீர்த்தவெம்மானைக்
குரக்கினங்குதிகொண்டுதேன்வயல்சூழுங்கோலக்காவினிற்கண்டுகொண்டேனே. ௯

கோடரம்பயில்சடையுடைக்கருமலைக்கோலக்காவுளெம்மானைமெய்ம்மானப்
பாடரங்குடியடியவர்விரும்பப்பயிலுநாவலவாரூரன்வன்றொண்ட
னாடரங்கிமுன்னறியுமந்நெறியானவின்றமிழ்மாலைவிளம்பியமாந்தா
காடரங்கெனநடமின்றனபாற்கதியுமெய்துவர்பதியவர்க்கதுவே (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## நம்பியென்றதிருப்பதிகம் - பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

மெய்யைமுற்றப்பொடிபூசியோர்நம்பிவேதநான்கும்விரித்தோதியோர்நம்பி
கையிலோர்வெண்மழுவேந்தியோர்நம்பிகண்ணுமூன்றுடையாயொருநம்பி
செய்யநம்பிசிறுசெஞ்சடைநம்பிதிரிபுரந்தீயெழச்செற்றதோர்வில்லா
லெய்தநம்பியென்னையாளுடைநம்பியெழுபிறப்புமெங்கணம்பிகண்டாயே. (௧)

திங்கணம்பிமுடிமேலடியார்பாற்சிறந்தநம்பிபிறந்தவுயிர்க்கெல்லா
மங்கணம்பியருண்மால்விசும்பாளுமமரர்நம்பிகுமரன்முதற்றேவர்
தங்கணம்பிதவத்துக்கொருநம்பிதாதையென்றுன்சரண்பணிந்தேத்து
மெங்கணம்பியென்னையாளுடைநம்பியெழுபிறப்புமெங்கணம்பிகண்டாயே. ( )

வருந்தவன்றுமதயானையுரித்தவழக்குநம்பிமுழக்குங்கடனஞ்சம்
அருந்துநம்பியமரர்க்கமுதுய்ந்தவருளென்னம்பிபொருளால்வருநட்டம்
புரிந்தநம்பிபுரிநூலுடைநம்பிபொழுதும்விண்ணுமுழுதும்பலவாகி
யிருந்தநம்பியென்னையாளுடைநம்பியெழுபிறப்புமெங்கணம்பிகண்டாயே (௩)

ஊறுநம்பியமுதாவுயிர்க்கெல்லாமுரியநம்பிதெரியம்மறையங்கங்
கூறுநம்பிமுனிவர்க்கருங்கூற்றைக்குமைத்தநம்பிகுமையாப்புலனைந்துஞ்
சீறுநம்பிதிருவெள்ளடைநம்பிசெங்கண்வெள்ளேறதேறுங்கோட்டேறுதென்று
மேறுநம்பியென்னையாளுடைநம்பியெழுபிறப்புமெங்கணம்பிகண்டாயே. (௪)

குற்றநம்பிகுறுகாரெயின்மூன்றைக்குலைத்தநம்பிசிலையாவரைகையிற்
பற்றுநம்பிபரமானந்தவெள்ளம்பணிக்குநம்பியெண்பாடுதலல்லான
மற்றுநம்பியுனக்கென்செயவல்லேன்மதியிலேன்படுவெந்துயரெல்லா
மெற்றுநம்பியென்னையாளுடைநம்பியெழுபிறப்புமெங்கணம்பிகண்டாயே. (௫)

அரித்தநம்பியடிகைதொழுவார்நோயாண்டநம்பிமுன்னையீண்டுலகங்க
டெரித்தநம்பியொருசேவுடைநம்பிசிலைபலிக்கென்றகந்தோறுமெய்வேட்ட
தரித்தநம்பிசமையங்களினம்பிதக்கனார்வேள்விபுக்கன்றிமையோரை
யிரித்தநம்பியென்னையாளுடைநம்பியெழுபிறப்புமெங்கணம்பிகண்டாயே. (௬)

பின்னைநம்புமபுயத்தானெடுமாலும்பிரமனுமென்றிவர்நாடியுங்காணா
வுன்னைநம்பியொருவர்க்கெய்தலாமேயுலகுநம்பியுரைசெய்யுமதல்லான
முன்னைநம்பிபின்னுமவார்சடைநம்பிமுழுதிவையித்தனையுந்தொகுத்தாண்ட
தென்னைநம்பியெம்பிரானாயநம்பியெழுபிறப்புமெங்கணம்பிகண்டாயே. (௭)

சொல்லைநம்பிபொருளாய்நின்றநம்பிதோற்றமீறுமுதலாகியநம்பி
வல்லைநம்பியடியார்க்கருள்செய்யவருந்தநம்பியுனக்காட்செய்யகில்லா
தல்லனம்பிபடுகின்றதென்னுடையணங்கொருபாகமவைத்தெண்கணம்போற்ற
இல்லைநம்பிபிச்சைகொள்நம்பியெழுபிறப்புமெங்கணம்பிகண்டாயே. (௮)

கருந்தடங்கண்ணிபங்கனையுயிரைக்காலகாலனைக்கடவுளைவிரும்பிச்
செருந்திபொன்மலர்திருத்தினைநகருட்சிவக்கொழுந்தினைச்சென்றடைமனனே.

நமையெலாம்பலரிகழ்ந்துரைப்பதன்முன்னமையொன்றிலாத்தேரர்புன்சமண
சமையமாகியதவத்தினாரவத்ததன்மைவிட்டொழிநன்மையைவேண்டி [ஞ்
லுமையோர்கூறனையேறுகந்தானையும்பராதியையெம்பெருமானைச்
சிமையமார்பொழிற்றிருத்தினைநகருட்சிவக்கொழுந்தினைச்சென்றடைமனனே.

நீடுபொக்கையிற்பிறவியைப்பழித்துநீங்கலாமென்றுமனத்தினைத்தெருட்டிச்
சேடெலாம்பொழிற்றிருத்தினைநகருட்சிவக்கொழுந்தினைத்திருவடியிணைத்தா
ணுடெலாம்புகழ்நாவலூராளிநம்பிவன்றொண்டனாரூரனுரைத்த
பாடலாந்தமிழ்பத்திவைவல்லார்முத்தியாவதுபரகதிப்பயனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

திருநின்றியூர் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

திருவும்வண்மையுந்திண்டிறலரசுஞ்சிலந்தியார்செய்தசெய்பணிகண்டு
மருவுகோச்செங்கணான்றனக்களித்தவார்த்தைகேட்டுநுன்மலரடியடைந்தேன்
பெருகுபொன்னிவந்துந்துபன்மணியைப்பிரானைப்பணைப்பணையுமண்ணி
த், தெருவுந்தெற்றியுமுற்றமும்பற்றித்திடப்படுந்திருநின்றியூரானே. (௧)

அணிகொளாடையம்பூணணிமாலையமுதுசெய்*தமுதம்பெறுதண்டி
யிணைகொளேழெழுநூறிரும்பனுவலீன்றவன்றிருநாவினுக்கரையன்
கணைகொள்கண்ணப்பனென்றிவர்பெறற்காதலின்னருணுகர்ந்தடைந்தேன்
றிணைகொள்செந்தமிழ்ப்பைங்கிளிதெரியுஞ்செல்வத்தென்றிருநின்றியூரானே

மொய்த்தசீர்முந்நூற்றறுபதுவேலிமூன்றுநூறுவேதியரொடுநுனக்கு
வொத்தபொன்மணிக்கலசங்களேந்தியோங்குநின்றியூரென்றுனக்களிப்பப்
பத்திசெய்தவபரசிராமற்குப்பாதங்காட்டியநீதிகண்டடைந்தேன்
சித்தர்வானவர்தானவர்வணங்குஞ்செல்வத்தென்றிருநின்றியூரானே. (௩)

இரவிநீள்சுடரெழுவதன்முன்னமெழுந்துநன்முலைக்கலசங்களேந்திச்
சுரபிபால்சொரிந்தாட்டிநின்பாதந்தொடர்ந்தவார்த்தைதிடம்படக்கேட்டுப்
பரவியுள்கிவன்பாசத்தையறுத்துப்பரமவந்துனபாதத்தையடைந்தே
னிரவிநித்திலமத்தகுசெம்பொனளிக்குந்தென்றிருநின்றியூரானே (௪)

வந்தோரிந்திரன்வழிபடமகிழ்ந்துவானநாடுநீயாளெனவருளிச்
சந்திமூன்றிலுந்தாபரநிறுத்திச்சகளிசெய்திறைஞ்சகத்தியான்றனக்குச்
சிந்துமாமணியணிதிருப்பொதியிற்சேர்வுநல்கியசெல்வங்கண்டடைந்தேன்
செந்தண்மாமலர்த்திருமகண்மருவுஞ்செல்வத்தென்றிருநின்றியூரானே. (௫)

காதுபொத்தரைக்கின்னரருழுவைகடிக்கும்பன்னகம்பிடிப்பருஞ்சீயங்
கோதின்மாதவர்குழுவுடன்கேட்பக்கோலவானிழற்கீழறம்பகர
வேதஞ்செய்தவரெய்தியவின்பம்யானுங்கேட்டுநின்னிணையடியடைந்தே
னீதிவேதியர்நிறைபுகழுலகினிலவுந்தென்றிருநின்றியூரானே. (௬)

கோடுநான்குடைக்குஞ்சரங்குலுங்கலங்கொள்பாதநின்றேத்தியபொழுதே
பீடுவிண்மிசைப்பெருமையும்பெற்றபெற்றிகேட்டுநின்பொற்கழலடைந்தேன்

---

*அமுதம்பெறுதண்டி-மோக்ஷம்பெற்றதண்டி.

பேடைமஞ்ஞையும்பிணைகளின்கன்றும்பிள்ளைக்கிள்ளையுமெனப்பிறைநுதலார்
நீடுமாடங்கண்மாளிகைதோறுநிலாவுதென்திருநின்றியூரானே. (எ-அ-கூ-கo)

திருச்சிற்றம்பலம்.

---

### திருவாவடுதுறை - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

மறையவனொருமாணிவந்தடையவாரமாயவனுயிர்நிறுத்தக், கறைகொள்
வேலுடைக்காலனைக்காலாற்கடந்தகாரணங்கண்டுகண்டடியே, னிறைவனெம்
பெருமானென்றெப்போதுமேத்திநின்றஞ்சலிசெய்து, நறைகொள்சேவ
டிக்கன்பொடுமடைந்தேனாவடுதுறையாதியெம்மானே. (க)

தெருண்டவாயிடைநூலகொண்டுசிலந்திசித்திரப்பந்தர்சிக்கெனவியற்றச்
சுருண்டசெஞ்சடையாயதுதன்னைச்சோழனாக்கியதொடர்ச்சிகண்டடியேன்[பி
புரண்டுவீழ்ந்துநின்பொன்மலர்ப்பாதம்போற்றிபோற்றியென்றன்பொடுமலம்
பருண்டென்மேல்வினைக்கஞ்சிவந்தடைந்தேனாவடுதுறையாதியெம்மானே.

திகழுமாலவனாயிரமலராலேத்துவானொருநீண்மலர்குறையப
புகழினாலவன்கண்ணிடந்திடலும்புரிந்துசக்கரங்கொடுத்தலுங்கண்டடியேன்
றிகழுநின்திருப்பாதங்களாரவிந்தேவதேவநின்றிறம்பலபிதற்றி
யகழுமவல்வினைக்கஞ்சிவந்தடைந்தேனாவடுதுறையாதியெம்மானே. (௩)

வீரத்தாலொருவேடுவனாகிவிசைத்தோர்கேழலைத்துரந்துசென்றணைந்து
போரத்தானவிசைபலநடந்தனபாய்ப்புரிந்து வாண்படைகொடுத்தல்கண்டடி
யேன்,வாரத்தாலுனநாமங்கள்பரவிவழிபட்டுனைநிறைமனனுருகி,யாவததோ
டுவந்தடியிணையடைந்தேனாவடுதுறையாதியெம்மானே. (௪)

ஓக்கமுப்புரமோடவெரிநாவவுண்ணமுன்னியவுரவானின்சரணம்
புக்குமற்றவர்பொன்னுலகாளப்புகழிலெருவினைப்பணையறிந்து
மிக்கவேசமெலிந்தொரூர்நாயேனொடுவாவிருர்தநின்னருளில்
அக்கணிந்தவெம்மானுன்னையடைந்தேனாவடுதுறையாதியெம்மானே. (ரு)

(சா-ஏ-அ-கூ-கo)

திருச்சிற்றம்பலம்.

---

### திருவலிவலம் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

ஊனங்கைத்துயிர்ப்புலன்கலங்கப்போயகார்த்துருவாகிநின்றானை
வானங்கைத்தவர்க்குமளப்பரியவள்ளலையடியார்கடம்முள்ளத்
தேனங்கைத்தமுதாகியுள்ளூறுந்தேசனைத்தினைத்தனையியானை
மானங்கைத்தலத்தேந்தவல்லானைவலிவலந்தனில்வந்துகண்டேனே. (க)

பல்லடியார்பணிக்குப்பரிவானைப்பாடியாடும்பத்தர்க்கன்புடையானைச்
செல்லடியேநெருக்கித்திறம்பாதுசேர்ந்தவர்க்கேசித்திமுத்திசெய்வானை
நல்லடியார்மனத்தெய்ப்பினில்வைப்பைநானுறுகுறையறிந்தருள்புரிவானை
வல்லடியார்மனத்திச்சையுளானைவலிவலந்தனில்வந்துகண்டேனே. (உ)

ஆழியனயன்றேயுயர்ந்தானையாதியந்தம்பணிவார்க்கணியானைக்
கூழையாகிப்பொய்யேகுடியோம்பிக்குழைந்துமெய்யடியார்குழுப்பெய்யும்
வாழியர்க்கேவழுவாநெறிகாட்டிமறுபிறப்பென்னைமாசறுத்தானை
மாழையொண்கண்ணுமையைமகிழ்ந்தானைவலிவலந்தனில்வந்துகண்டேனே.()

நீத்தானுந்திறமேதிறம்பாதுநண்ணியண்ணித்தமுதம்பொதிந்தூறும்
ஆத்தானையடியேன்றனக்கென்றுமளவிறந்தபலதேவர்கள்போற்றும
சோத்தானைச்சுடர்மூன்றிலுமொன்றித்துருவிமால்பிரமன்னறியாத
மாத்தானைமாத்தெனக்குவைத்தானைவலிவலந்தனில்வந்துகண்டேனே. (௪)

நல்லிசைஞானசம்பந்தனுநாவினுக்கரசரும்பாடியநற்றமிழ்மாலை
சொல்லியவேசொல்லியேத்துகப்பானைத்தொண்டனேனறியாமையறிந்து
கல்லியன்மனத்தைக்கசிவித்துக்கழலடிகாட்டியென்களைகளையறுக்கும
வல்லியல்வானவர்வணங்கநின்றானைவலிவலந்தனில்வந்துகண்டேனே. (௫)

பாடுமாபாடிப்பணியுமாறறியேன்பனுவுமாபனுவிற்பரவுமாறறியேன்
றேடுமாதேடித்திருத்துமாறறியேன்செலலுமாசெலலச்செலுத்துமாறறியேன்
கூடுமாறெங்ஙனமோவென்றுகூறக்குறித்துக்காட்டிக்கொணர்ந்தெனையாண்டு
வாடிநீவாளாவருந்தலென்பானைவலிவலந்தனில்வந்துகண்டேனே. (௬)

பந்தித்தவல்வினைப்பற்றறப்பிறவிப்படுகடற்பரப்புத்தவிர்ப்பானைச்
சந்தித்ததிறலார்பணிபூட்டித்தவத்தையீட்டியதம்மடியார்க்குச்
சிந்தித்தற்கெளிதாய்த்திருப்பாதஞ்சிவலோகந்திறந்தேற்றவல்லானை
வந்திப்பார்தம்மனத்தினுள்ளானைவலிவலந்தனில்வந்துகண்டேனே. (௭)

எவ்வவர்தேவரிருடிகண்மன்னரெண்ணிறந்தார்கண்மற்றெங்குநின்றேத்த
அவ்வவர்வேண்டியதேயருள்செய்துவடைந்தவர்க்கேயிடமாகிநின்றானை
யிவ்வவர்கருணையெங்கற்பகக்கடலையெம்பெருமானருளாயென்றபின்னை
வவ்வியென்னாவிமனங்கலந்தானைவலிவலந்தனில்வந்துகண்டேனே. (௮)

திரியும்முப்புரஞ்செற்றதுங்குற்றத்திறலரக்கனைச்செறுத்ததுமற்றைப்
பெரியநஞ்சமுதுண்டதுமுற்றுமபின்னையாய்முன்னமேமுளைத்தானை
யரியநான்மறையந்தணரோவாதடிபணிந்தறிதற்கரியானை
வரையின்பாவைமணாளனெம்மானைவலிவலந்தனில்வந்துகண்டேனே (௯)

ஏன்றவந்தணன்றலையினையறுத்துநிறைக்கமாலுதிரத்தினையேற்றுத்
தோன்றுதோண்மிசைக்களேபரந்தன்னைச்சுமந்தமாவிரதத்தகங்காளன்
சான்றுகாட்டுதற்கரியவனெளியவன்றன்னைத்தன்னிலாமனத்தார்க்கு
மான்றுசென்றணையாதவன்றன்னைவலிவலந்தனில்வந்துகண்டேனே. (௧௦)

கலிவலங்கெடவாரழலோம்புங்கற்றநான்மறைமுற்றனலோம்பும்
வலிவலந்தனில்வந்துகண்டடியேன்மன்னுநாவலாரூரன்வன்றொண்ட
னொலிகொளின்னிசைச்செந்தமிழ்பத்துமுள்ளத்தாலுகந்தேத்தவல்லார்போய்
மெலிவிலவானுலகத்தவரேத்தவிரும்பிவிண்ணுலகெய்துவர்தாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநள்ளாறு - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

செம்பொன்மேனிவெண்ணீறணிவானைக்கரியகண்டனைமாலயன்காணாச்
சம்புவைத்தழலங்கையினானைச்சாமவேதனைத்தன்னொப்பிலானைக்
கும்பமாகரியின்னுரியானைக்கோவின்மேல்வருங்கோவினைநங்க
ணம்பனைநள்ளாறனையமுதைநாயினேன்மறந்தென்னினைக்கேனே. (௧)

விரைசெய்மாமலர்க்கொன்றையினானைவேதகீதனைமிகச்சிறந்துருகிப்
பரசுவார்வினைபற்றறுப்பானைப்பாலொடானைஞ்சுமாடவல்லானைக் .

